Regd. No. 2 975.

ஸ்ரீ:

# ஸ்ரீராமாநுஜன் 185.

P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM.

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச் சந்தா ரூ. 5 ஜீவியச் சந்தா ரூ. 100.

ஜீவியச் சந்தாதாரர்களுக்கு பத்திரிகை சாச்வதமாக அனுப்பப்பட்டு வருவது தவிர 100 ரூபா விலையுள்ள புத்தகங்கள் உடனே அனுப்பப்படும்.

ஸ்ரீ பாருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி*—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம் வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

குரோதிஸு வைகாசிமீ 1964ஸு மேமீ

# ஸ்ரீ ராமாநுஜன் 185.







சென்னை ஸத்க்ரந்தப்ரகாசன ஸபாமூலமாக மாதந்தோறும் வெளிவரும்பத்திரிகை

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சீ P. B. அண்ணங்கராசாரியர்.

ஸம்புடம் 16 | 1964ஷ மேமீ குரோதிஷ வைகாசிமீ | ஸஞ்சிகை 5


## திருவாய்மொழி நூற்றந்தாதி—73.

அங்கமரர் பேண அவர் நடுவே வாழ்திருமாற்கு*
இங்கோர் பரிவரிலை யென்றஞ்ச—*எங்கும்
பரிவ ருளரென்னப் பயந்தீர்ந்த மாறன்*
வரிகழல்தாள் சேர்ந்தவர்வாழ் வார்.

| | |
|---|---|
| அங்கு | அந்த நித்ய விபூதியிலே |
| அமரர் | நித்ய ஸூரிகளும் முக்தர்களும் |
| பேண | மங்களாசாஸனம் பண்ணிக் கொண்டிருக்க |
| அவர் நடுவே வாழ் திரு மாற்கு | அந்த நித்ய முக்தர்களோடே வாழ்கின்ற ஸர்வேச்வரனுக்கு |
| இங்கு | இந்நிலத்திலே |
| ஓர் பரிவர் இலை என்று | பரிந்து காப்பிடுவார் ஒருவருமில்லையென்று |
| அஞ்ச | தாம் பயப்பட |
| எங்கும் பரிவர் உளர் என்ன | எவ்விடத்திலும் பரிவுள்ளவர்கள் இருக்கின்ருர்களென்று எம்பெருமான் கூற (அதனுல்) |
| பயம் தீர்ந்த மாறன் | அச்சம் தீரப்பெற்ற ஆழ்வாருடைய |
| வரி கழல் தாள் | மிக வழகிய வீரக்கழலோடே கூடின திருவடிகளை |
| சேர்ந்தவர் | அடைந்தவர்கள் |
| வாழ்வார் | உஜ்ஜீவிக்கப் பெறுவர்கள். |

* * *—கீழ்த் திருவாய்மொழியான * நங்கள் வரிவளையில் * ஓர் கோல நீல நன்னெடுங் குன்றம் வருவ தொப்பான் * என்று அநுஸந்தித்து அவனுடைய திவ்ய மங்கள விக்ரஹ வைலக்ஷண்யத்திலே திருவுள்ளம் சென்று இப்படிப்பட்ட ஸௌந்தர்ய ஸௌகுமார்யங்களுக்குக் கொள்கலமான இவ்வடிவுடனே ப்ரயோஜநாந்தரபரரான தேவர்களின் காரியம் செய்கைக்காக, பிரதிகூலர் வர்த்திக்கிற இந்த நிலத்திலே தனியே வந்தவதரித்து ஸஞ்சரிக்கின்ருனே. பரிவர் ஒருவருமில்லையே! என்ன தீங்கு நேரிடுமோ! என்று ஆழ்வார் வயிறெரிந்து பயப்பட, அதற்கு எம்பெருமான் "ஆழ்வீர்! நமக்குப் பரிகைக்கு முமுக்ஷுக்களும் முக்தரும் நித்யரும் உண்டு; ஒரு குறையுமில்லை" என்றருளிச்செய்ய, ஆழ்வார் உடனே அச்சம் தீர்ந்தாராயிற்று * அங்குமிங்கும் பதிகத்தில். இத்திருவாய்மொழியில் * கலக்கமில்லா நல்தவ முனிவர் கரைகண்டோர் துளக்கமில்லா வானவரெல்லாம் தொழுவார்கள் * என்ற பாசுரத்திஞல் ஆழ்வாருடைய அச்சம் தீர்ந்தமை அறியத்தக்கது.

இப்பாட்டுக்கு இலக்கான * அங்குமிங்கும் பதிகத்தின் முதலில் * ஆளுமாளாராழியுஞ் சங்குஞ் சுமப்பார்தாம், வாளும் வில்லுங்கொண்டு பின் செல்வார் மற்றில்லை * என்ற பாசுரத்தை நோக்குமிடத்து ஆழ்வார் பரிந்து அஞ்சினமை தெரியவரும்; மேலே * கலக்கமில்லா நல்தவ முனிவர் கரைகண்டோர், துளக்கமில்லா வானவரெல்லாந் தொழுவார்கள் * என்ற பாசுரத்தை நோக்குமிடத்து ஒருவாறு மனம் தேறினமை தெரியவரும். ... ... (73.)

## ஸ்ரீ ராமாநுஜன் சந்தா செலுத்தியவர்கள்

53. ஸ்ரீ உவே. அர்ச்சகம். R. கிருஷ்ணய்யங்கார் கும்பகோணம்.
54. ஸ்ரீ உவே. அச்சந்தவிழ்த்தான். அப்பணையங்கார்.
55. ஸ்ரீ உவே. B. நரஸிம்ஹாசாரியர் வண்டலூர்.
56. ஸ்ரீமத் பரமஹம்ஸ. அப்பன் சடகோப ராமாநுஜ ஜீயர்ஸ்வாமி ஸ்ரீ பெரும்பூதூர்.
57. ஸ்ரீமான் N. வேணுகோபால நாய்க்கர், New Delhi.
58. ஸ்ரீமான் ந. சுப்பராயப் பிள்ளை காட்டுமன்னார் கோயில்.
59. Sri. C. Krishnaswami Iyengar, Nungambakkam.
60. Sri. B. R. Purushottama Naidu, Avl., Chintadripet.
61. Sri. S. Kulasekharan Esq., Chintadripet.
62. ஸ்ரீ திருமாணிக்குழி T. D. ரங்கராமாநுஜய்யங்கார்.
63. S. ராமஸ்வாமி ஐயங்கார், Madras 24.
64. ஆமூர் கோபாலையங்கார் ஸ்வாமி, மிராசுதாரர்.

## ஓர் பரமபக்தனுடைய அற்புத கதை

அவந்திகாபுரியில் ரகுவரசர்மா என்றொரு தனிகரிருந்தார். அவர்க்கு அருமைச் செல்வப் புதல்வி யொருத்தி. அவளுக்கு எட்டாவது வயதில் விவாஹம் நடத்தினர். ஜாமாதா வித்யாப்யாஸத்தில் மிக்க ஆஸ்தை கொண்டு காசியில் வாசிக்கச் சென்றான். பல கலைகளையும் பயின்றுகொண்டு அங்கேயே பத்தெட்டு வருஷங்கள் போல இருந்து விட்டான். மாமனார் முதலானவர்கள் ஸ்வதேசத்திற்கு சீக்கிரமாகத் திரும்பி வரும்படி அடிக்கடி கடிதமெழுதிக் கொண்டிருந்தார்கள். அவனும் விரைவில் வந்துவிடுவதாக பதில் கடிதமெழுதிக் கொண்டிருந்தான். அவனுடைய பெயர் நீலமணி யென்பது. பெண்ணினுடைய பெயர் ராதா என்பது. ஜாமாதா விரைவில் ஊர்வந்து சேரப் போவதாக மாமனார் எல்லாரிடத்திலும் குதூஹலமாகச் சொல்லிக் கொண்டிருந்தார். அவனே நியாய மீமாம்ஸாதி சாஸ்த்ரங்களில் ப்ரசண்ட வித்வானாக ப்ரஸித்தி பெற்றுவிட்டான். அவனுடைய வரவை ஊரில் யாவரும் ஆதரவோடு எதிர்பார்த்திருக்கிறார்கள்.

இப்படியிருக்கையில் ப்ருந்தாவனத்திலிருந்து ஒரு பரமபக்தன் க்ஷேத்திர யாத்திரையாகச் சென்று கொண்டிருப்பவன் வழி யடைவில் அவ்வூரில் வந்து சிப்ராநதியில் நீராடிப் பட்டு பீதாம்பரங்களணிந்து கொண்டு ஜபதபங்கள் பண்ணிக் கொண்டிருந்தான். அவனுடைய பெயரும் நீலமணி யென்பதே. அவனும் சிறந்த வித்வானாயிருந்தான். அவனோடு சில பண்டிதர்கள் ஸம்ஸ்கிருதத்திலேயே ஸல்லாபம் செய்து கொண்டிருந்தார்கள். நதியில் தீர்த்தம் கொண்டு வரப்போன பெண்டுகள் யாவரும் அவனை ரகுவர சர்மாவின் ஜாமாதாவாகவே கருதிவிட்டார்கள். அரையில் காசிப்பட்டு அணிந்து கொண்டிருந்தபடியாலும் ஸம்ஸ்க்ருதத்தில் பேசிக் கொண்டிருந்தபடியாலும் ஸமீபத்தில் அவன் ஊர் வந்து சேரப் போகிறதாக ப்ரவாத மிருந்தபடியாலும் அப்படி கருத நேர்ந்துவிட்டது. அந்தப் பெண்டுகளெல்லாம் அவனுடைய மாமியார் மாமனார்களிடம் சென்று 'உங்கள் மாப்பிள்ளை வந்து விட்டாரே; உங்களுக்குத் தெரியாதா என்ன?' என்று சொல்ல, 'ஐயோ தெரியாதே; சீக்கிரத்தில் ஊர் வந்து சேருவதாகக் கடிதமெழுதியிருந்தாரேயொழிய இன்று வருவதாக எழுதவேயில்லையே; வந்துவிட்டாரா என்ன?' என்று சொல்லிக் கொண்டே

நதிக்கரைக்கு ஓடினார்கள். இவர் ஜாமாதாவா என்கிற ஸந்தேஹம் இவர்களுக்கு உண்டாகவேயில்லை; விவாஹஸமயத்தில் பார்த்தவர்களேயொழிய பிறகு பார்க்க வேயில்லை. பத்தெட்டு வருஷங்கள் ஆய்விட்ட படியாலும் அவன் பெரிய தீக்ஷை கொண்டிருந்தபடியாலும், ஊர்ப்பெண்டுகள் மாப்பிள்ளை யென்றே வந்து சொல்லி விட்டபடியாலும் காசிப்பட்டு அணிந்து பண்டிதர்களோடு பேசிக் கொண்டிருந்த படியாலும் ஸந்தேஹமுதிக்க அவகாசமில்லாதபடியாலே, ஜாமாதாவென்றே நிச்ச யித்து அருகே சென்று வணங்கி "என்ன மாப்பிள்ளை! இப்படிதானா உபேக்ஷிப்பது? இன்று வருவதாக ஒரு கார்டு போடாமல் தேசாந்தரிபோல வந்து நிற்கிறீரே? இது நியாயமா? இது எங்களை யெல்லாம் அவமானப் படுத்தினபடி யல்லவா ஆகிறது; எங்கள் மீது என்ன கோபம்?" என்கிறார்கள் மாமனார் முதலானவர்கள். அவனுக் கோ அப்போது விவாஹமே ஆகவில்லை. இவர்கள் சொல்லுவது அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. உடனே ஒரு மோட்டார்காரும் அங்கு வந்து நின்று விட்டது அவனை யழைத்துக் கொண்டு போக. அவனோ ப்ரமித்து நிற்கிறான். 'நான் உங்க ளுடைய மாப்பிள்ளையல்லேன்; வேறு ஒரு யாத்திரிகன் நான்' என்று சொல்ல நினைத்தும் அவன் அப்படி சொல்லாமல் புன் முறுவல் செய்து கொண்டு நிற்கிறான். அவனோ ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மாவினிடத்தில் பரம பக்தி வாய்ந்தவன். பொய் சூது வஞ்சனை முதலியன சிறிது மறியாதவன். அப்படியிருந்தும் ஒரு காரணார்த்தமாகத் தன்னை ஜாமாதாவாகவே இசைந்திருந்தான். கால்மணிக்குள் பல நூற்றுக்கணக் கான ஜனங்கள் நதிக்கரையில் கூடி விட்டனர். ஸகல பேர்களும் ராதையின் கணவனென்றே யெண்ணி 'என்ன அழகு! என்ன பாண்டித்யம்! என்ன விநயம்! ராதையின் பாக்கியமே பாக்கியம்!' என்று சொல்லிச் சொல்லி மகிழ்கிறார்கள். பிறகு ஜாமாதாவை மோடர் காரில் ஏற்றி வீதியார மஹோத்ஸவம் செய்வித்துத் தம் வீட்டிலே கொண்டு சேர்த்தார் மாமனார். ஜாமாதா அதிகம்பீர ப்ரக்ருதியாய் மிதபாஷியாய் ஸதாஸர்வதா க்ரந்தாவலோகனமே போதுபோக்கா யிருந்து வரு கிறார். மாமனார் தனிகராகையாலே ராஜபோக மென்னும்படியான மஹோபசாரங் களைச் செய்வித்து வருகின்றார்.

இங்ஙனே காலம் கழிகையில், ஒருநாள் இரவு பன்னிரண்டு மணிக்கு ஒருவர் வண்டியில் வந்திறங்கிக் கதவைத் தட்டினார். இடைகழித் திண்ணையில் சயனித்துக் கொண்டிருந்த மாமனார் 'யார் யார்?' என்ன, 'நான்தான் ஜாமாதா நீலமணி' என்று மறுமொழி செவிப்பட்டது. கதவைத் திறக்காமலே சிறிது ஸம்பாஷணை நடந்தது. பிறகு கதவைத் திறக்கவேண்டியதாயிற்று. திறந்து விளக்கேற்றிப் பார்க்கையில் 'இவன்தான் உண்மையான ஜாமாதா' என்று ஐயமறத் தெரிந்து கொண்டு மிகமிக அநுதாப மடைந்தார். ஐயோ! தெய்வம் நம்மை இப்படி வஞ்சித்து விட்டதே! பிறர்மீது குற்றம் சொல்லவொண்ணாதபடி ஸ்வயங்க்ருதானர்த்தமாக வன்றோ வந்து விழுந்தது! 'நான் உங்கள் ஜாமாதா வல்லேன்' என்று உள்ளே கிடக்கும் பாவி ஏன் சொல்லியிருக்கக் கூடாதென்று நெஞ்சினுள்ளேயே நிந்திக் கிறார் ரகுவர சர்மா. இன்னது செய்வதென்று தோன்றவில்லை. முடிவாக ஒரு வாறு உள்ளந்தேறி, வந்திருக்கிற உண்மை ஜாமாதாவைச் சில உறவினர்களுடன் தெருக்கோடியிலிருக்கிற தேவாலயத்திற்கனுப்பி அங்கே யிருக்கச் செய்தார். உள்ளே பள்ளி கொண்டிருக்கிற வந்தேறி ஜாமாதாவை வெளியே அழைத்து முகஞ் சிதறப் புடைக்கவேணுமென்று எண்ணினர். உள்ளிருக்கிற ஜாமாதா இந் நிகழ்ச்சியைத் தெரிந்துகொண்டுதானிருக்கிறான். ஆனாலும் க்ருஷ்ணபக்தியே வடிவெடுத்தவனாதலாலும், க்ருஷ்ண பகவான் நம்மைக் கைவிடானென்ற உறுதி யாலும் அச்சமோ கலக்கமோ எதுவுமில்லாமல் நிர்விசாரனாயிருக்கிறான். இதே க்ஷணத்தில் ஆபத் ஸகனான பகவான் ஒரு விலக்ஷண ஸம்பவத்தை விளைவிக்க லாயினன். அதாவதென்னென்னில்;

ஒரு மஹாயோகி ச்ரேஷ்டர்; அவர் பெரிய பல்லக்கில் வீற்றிருந்து ஊர்வலம் வருகிறார். ஜயவிஜயீபவ! என்று கோஷிப்பவர்கள் பல நூற்றுவர். வீதியில் பெரிய கோலாஹலமாக இந்த மஹோத்ஸவம் நடைபெறுகின்றது. தெருக்கோடியி லிருக்கிற தேவாலயத்தில் பல்லக்கைவிட்டு இறங்கினார் யோகீச்வரர். உண்மை ஜாமாதா வென்று வந்தவர் அந்தக் கோவிலில் தான் தங்கியிருக்கிறார். பல்லக்கில் வந்த யோகி வெறும்யோகியல்லர்; பெரிய வித்வானுமாவர். அவர் அங்கே சொற் பொழிவாற்றுவதாகப் பிரசுரம் செய்திருந்தபடியால் ஊரிலுள்ளோர் பெரும்பாலும் வந்து குழுமியுள்ளார்கள். வந்தவர்களெல்லாரும் இந்த உண்மை ஜாமாதாவைக் கண்டு எப்போது வந்தாயென்று குசலப்ரச்னம் பண்ணுகிறார்கள். இப்போதுதான் வந்துகொண்டே யிருக்கிறேனென்கிறான். அவன் வாசிப்பதற்குக் காசி போய்ச் சில வருஷங்களானாலும் அவனை நன்கறிந்தவர்கள் பலர் இங்கிருப்பதால், சில நாள்களுக்கு முன்பு மாப்பிள்ளையென்று வந்து சேர்ந்திருப்பவனையும் இவனையும் எண்ணிப்பார்த்து 'இதென்ன? ஒன்றும் புரியவில்லையே என்று ஒருவர்க்கொருவர் காதோடு காதாகப் பேசத் தொடங்கிவிட்டார்கள். யோகி நடத்தும் சொற்பொழிவில் ஒருவரும் உட்காரவில்லை. உட்கார்ந்தவர்களும் இதஸ்ததஃ எழுந்து போவதும் வருவதுமாயிருக்கிறார்களே யொழிய உபந்யாஸத்திற்குக் காது கொடுப்பவர் மிகச் சிலரே யாயினர். அந்த ஆலயம் முழுவதும் இருவர் நால்வராகக் கூடி மாப்பிள்ளைப் பேச்சு பேசுவதே பணியாயிருந்தனர். உபந்யாஸகரான யோகிச்ரேஷ்டர் தமது பேச்சில் எல்லாரும் அச்ரத்தை கொண்டிருப்பதை யறிந்து வருந்தி 'ஏனிப்படி என் சொற்பொழிவை அலக்ஷியம் செய்கிறீர்கள்!' என்று கேட்டனர். அவரவர்கள் தங்களுக்குள்ள அங்கபரதையைச் சொல்லிக்கொள்ள அஞ்சியும் வெள்கியுமிருந் தனர். ஒருவர் மட்டும் துணிந்து முன்வந்து "நீங்கள் யோகிச்ரேஷ்டரல்லவோ? உங்களுடைய யோக மஹிமையினால், இப்போதெங்களுக்குள்ள விசாரத்தையுணர்ந்து அதற்கொரு பரிஹாரம் சொல்லமுடியாதா?" என்றார். உண்மையில் அவர் மஹா யோகியாகையாலே யோகமஹிமையினால் உடனே விசாரச் செய்தியை யுணர்ந்து கொண்டார். வந்தேறியான மாப்பிள்ளையின் சயனக்ருஹத்தைப் பூட்டிக்கொண்டு க்ருஹ ஸ்வாமியும் அவ்வாலயத்தில் வந்து சேர்ந்திருந்தார். ஆனால் ஆலயத்தில் அவரவர்கள் பேசிக்கொண்டிருப்பதை யறிந்து வெட்கத்தினால் தலைமறைந்து வீடுவந்து சேர்ந்து விட்டார். யோகிச்ரேஷ்டர் அங்குள்ளாரை நோக்கி "நீங்கள் ராதாக்ருஷ்ணனை ஸேவித்திருக்கிறீர்களா? ராஸக்ரீடை கண்டிருக்கிறீர்களா?" என்று கேட்க, 'எங்களுக்கு அந்த பாக்கியம் எப்படி கிட்டும்?' என்று ஒவ்வொரு வரும் சொல்லிவிட, 'அப்படியாகில், அதோ அந்த வீட்டுக்குச் செல்லுங்கள்; அங்கே ராதாக்ருஷ்ண ஸேவையும் கிடைக்கும், ராஸக்ரீடாதரிசனமும் கிடைக்கும்' என்றார் யோகி. உடனே ஜனங்களெல்லாம் அந்த வீட்டுக்குத் திரும்ப, மதுரமான வேணு கான வீணா நாதங்களும் ஆடல் பாடலோசைகளும் செவிப்பட்டன. வந்தேறி ஜாமாதாவின் சயனக்ருஹத்திலிருந்தே இந்த த்வனிகள் வெளிவருவதைக் கண்ட யாவரும் ஆச்சரிய மடைந்தனர். அந்த சயனக்ருஹத்தைப் பூட்டிச் சாவியை மடியில் வைத்துக்கொண்டிருந்த வீட்டுக்காரர் பூட்டைத் திறக்கச் சாவியை யெடுக்க முயல, சாவி காணப்படவில்லை. கடைசியாகப் பூட்டை யுடைப்பதென்று பலர் கூடி முயற்சி செய்ய, அதுவும் பயன்படவில்லை. கதவின் புரையாலே பார்த்தாலோ * பல்லாயிரம் பெருந்தேவிமாரொடு பௌவமெறி துவரை, எல்லாருஞ் சூழச் சிங்கா தனத்தே யிருக்கு மிருப்பையும், * தழைகளுந் தொங்கலும் ததும்பி யெங்கும் தண்ணுமை யெக்கம் மத்தளிதாழ் பீலிக்குழல்களுங் கீதமுமாகி யெங்கும் கோவிந்தன் வருகின்ற கூட்டத்தையுங் காணநேர்கின்றது. கதவோ திறக்க முடியவில்லை. இந்நிலையில் யோகிச்ரேஷ்டரும் அங்கு வந்து சேர்ந்து பரிஸ்திதியை யுணர்ந்து 'இதோ நான் கதவு திறக்கச் செய்கிறேன் பாருங்கள்' என்று சொல்லிக்கொண்டே

அணுகும்போது கதவு தானே படீரென்று திறந்துகொண்டது. உள்ளே திவ்ய ஸுகந்த பரிமளம் அபரிமிதமாக வீசுகின்றதேயன்றி ஒரு நபருமில்லை. பொழுதும் விடிந்தது. உள்ளே யிருந்த பெண் வழக்கம்போல் நதியில் நீராடி விட்டுத் தீர்த்த கும்பத்துடனே வீட்டில் நுழைகின்றாள். உண்மை ஜாமாதாவும நீராடி வருகின்றார். "நாவலம் பெரிய தீவினில் வாழும் நங்கைமீர்களிதோரற்புதம் கேளீர்" என்கிறார்கள் பரஸ்பரம். க்ருஷ்ணகிசோர மாயாப்ரவாஹ ப்ரபாவங்களில் இஃதொன்று. ... *

## தேவப்பெருமாள் வைசாகோத்ஸவம்

வையங்கண்ட வைகாசி யுத்ஸவமென்று தேசமெல்லாம் புகழும் பெருமை வாய்ந்தது கச்சித் தேவப் பெருமாளுடைய வைசாக ப்ரஹ்மோத்ஸவம். அது ஸமீபித்து விட்டது. ஆழி மழைக்கண்ணனை வருண பகவான் இவ்வாண்டில் பரிபூர்ண கடாக்ஷம் செய்யாமையாலே தீர்த்தஸம்ருத்திக்குக் குறையென்றே சொல்ல வேணும். ஆகிலும் அத்யந்தம் ஜலஸௌகரியக் குறைவு என்று சொல்ல முடியாது. நகர பரிபாலன ஸபையாருடைய விசேஷமான ஏற்பாடுகளினால் ஸாமான்ய ஜனங்களுக்கு ஜல ஸௌகரியக் குறை எப்போதுமே கிடையாது.

15—5—64 தேதியன்று கடை வெள்ளிக்கிழமை மஹோத்ஸவம். அதாவது பிரம்மோத்ஸவத்திற்குப் பூர்வாங்கமாகத் தாயார் விசேஷ வைபவமாகக் கண்டருளும் மஹோத்ஸவம். மறுநாள் சனிக்கிழமை 16—5—64 நம்மாழ்வார் திருநக்ஷத்ர மஹோத்ஸவம் தொடக்கம். 21—5—64 வியாழக்கிழமையன்று செல்வருத்ஸவம். 22—5—64 வெள்ளிக்கிழமை அங்குராரோபணமெனகிற திருமுளைத் திருநாள். 23—5—64 சனிக்கிழமை சேனையர்கோன் மஹோத்ஸவம். 24—5—64 ஞாயிற்றுக் கிழமை த்வஜாரோஹணம். 25—5—64 நம்மாழ்வார் சாத்துமுறை. 26—5—64 செவ்வாய்க்கிழமை பெரிய திருவடி. 28—5—64 ஞாயிற்றுக்கிழமை திருத்தேர். இம்மஹோத்ஸவத்தில் உபயவேத கோஷ்டிகளும் வெகு சிறப்பாக நடைபெறுவது அநாதிகாலமாக உள்ளது. பொதுவாக ஸகல ஜனங்களுக்கும் ஆங்காங்கு போஜன வசதிகள் ஏற்பட்டே யிருக்கின்றன. திவ்ய ப்ரபந்த கோஷ்டி ஸ்வாமிகளுக்காக ஸ்ரீமான் உ.வே. A. K. ரங்காசாரியர் (Retired Railway Engineer) and K. V. Srinivasan (Cromptons) இவர்கள் பல பெரியமனிதர்களை அங்கத்தினராகக் கொண்ட ஒரு ஸபையை ஏற்பாடு செய்து அதன் மூலமாக அநேக கனதனவான்களிடம் திரவ்யமாகவும், அமுதுபடியாகவும் வசூல்செய்து கிழண்டை மாடவீதி 31, நெ. வேதவேதாந்த வைஜயந்தி பாடசாலை பவனத்தில் 1960ம் வருஷம் முதல் ஷை உத்ஸவம் 10 நாளும் இரண்டு வேளையும் மிகச்சிறந்த ததீயாராதனை நடத்தி வருவது பிரசித்தமானதே. இவ்வருஷமும் வழக்கப்படி நடக்கிறது. திவ்ய ப்ரபந்தாதிகாரிகளான ஸ்வாமிகள் எழுந்தருளியிருந்து கோஷ்டியைச் சிறப்பிக்க வேண்டுமென்பதும் கனதனவான்கள் உபகரிக்க வேணுமென்பதும் பிரார்த்தனை. .... .... *

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## "ஸ்ரீமதாண்டவன்திருநக்ஷத்திரமஹோத்ஸவஸதஸ்வைபவம்"

(நியாய வேதாந்த வித்வான் P. B. அனந்தாசாரியர், காஞ்சீ.)

ஷை ஸதஸ்ஸில் பெரும்பாலும் அந்வயித்தவனடியேன்; ஸ்ரீ உ.வே. அண்ணஸ்வாமியோடும் வர்த்திப்பவன். சில வுண்மைகளைத் தெரிவிக்க அவசியமாகி இது எழுதுகிறேன்.

ஸ்ரீ காஞ்சியில் நடந்த ஸ்ரீமதாண்டவன் திருநக்ஷத்திர மஹோத்ஸவ நிகழ்ச்சிகளைப்பற்றி ஸ்ரீ ராமாநுஜன் 184 லக்கமுள்ள ஸஞ்சிகையில் வெளிவந்திருப்பதை விரிவாக வாசித்திருக்கின்றது உலகம். இதே விஷயமாக ஒரு மஹாபுருஷர்

3 பக்கங்கொண்ட ஒரு துண்டுப் பத்ரிகை வெளியிட்டிருக்கின்றாரென்பதையும் சிலர் கண்டிருக்கக்கூடும். "திருப்பதி மடங்களின் ப்ரசம்ஸை" என்று ஒன்று ப்ரஸித்தமாக வழங்குவதுண்டு; அதைச் சிறிது விவரித்தால்தான் தெரியும். திருமலை திருப்பதியில் உடையவர் காலத்திலிருந்து பெரிய ஜீயர் ஸ்தானமும், மணவாள மாமுனிகள் காலத்திலிருந்து சிறிய ஜீயர் ஸ்தானமும் ஏற்பட்டிருக்கின்றது. அங்கு எப்போதும் சிறிய ஜீயர் ஸ்தானத்திற்கு நியமனமே யொழிய பெரிய ஜீயர் ஸ்தானத்திற்கு நியமனம் கிடையாது. ஏனென்றால் பெரிய ஜீயர் பரமபதித்தால் ஏற்கெனவே சிறிய ஜீயர் ஸ்தானத்திலிருப்பவரான சின்ன ஸ்வாமி பெரிய ஜீயர் மடத்திற்கெழுந்தருளி அந்த ஸ்தானத்தில் அமர்ந்தருள்வர். பரமபதித்த ஸ்வாமியின் திருவத்யயனந்தத்தில் பட்டாபிஷேகமென்று நடைபெறும். பிறகு சிறிய ஜீயர் ஸ்தானத்திற்கு நியமனமாக வேண்டியதாகும். சில சிறிய ஜீயர்கள் பெரிய ஜீயர் ஸ்தானம் வஹிக்கப் பெறுமலே பரமபதித்து விடுவதுமுண்டு. அப்போதும் சிறிய ஜீயர் ஸ்தானத்திற்கே நியமனமாகும். கீழ்ப்பதவியிலிருப்பவர்களுக்கு மேற்பதவியில் ஆரோஹணேச்சை ஸஹஜமாதலால் சிறிய ஜீயர் ஸ்தானத்திலிருப்பவர் பெரிய ஜீயர் ஸ்தானத்தில் அபேக்ஷை கொண்டிருப்பதும் ஸஹஜமாகும். பெரிய ஜீயர் ஸ்வாமி பரமபதித்தாலொழிய அந்த ஸ்தானம் கிடைப்பரிதென்பதை மனத்திற் கொள்வது. யாசகத்திற்குப் போகிறவர்கள் இரண்டு மடங்களுக்கும் போவர்களாம். சின்ன ஜீயர் ஸ்வாமியிடம் போகும்போது 'தேவரீர் வெகு சீக்கிரத்திலேயே பெரிய ஜீயர் பதவிக்கு எழுந்தருளவேணுமென்று திருவேங்கடமுடையான் ஸன்னிதியில் ப்ரார்த்தித்துக் கொண்டிருக்கிறேன்' என்பர்களாம். (இந்த ப்ரார்த்தனையின் பலன் எதுவென்றால், எழுந்தருளியிருக்கிற பெரிய ஜீயர் விரைவில் பரமபதித்தலேயாகும்.) இங்கே இப்படிச் சொல்லிவிட்டுக் கொஞ்சம் ஸ்ரீபாதரேணுவும் சந்தனமும் பெற்றுக்கொண்டு உடனே பெரிய ஜீயர் ஸ்வாமியிடம் சென்று, 'தேவரீர் திருக்கையால் இருபது முப்பது சின்ன ஜீயர் பட்டங்கள் ஸாதிக்க ப்ராப்தமாகவேணும்' என்பராம். சின்ன ஜீயர் பதவிக்கு எழுந்தருள்பவர்கள் உடனுக்குடனே பரமபதிக்கவேணுமென்பது இதனுல் தேறியதாகும். இப்படிப்பட்ட யாசகர்களை "ராமாய ஸ்வஸ்தி, ராவணாயஸ்வஸ்திவாதிகள்" என்று சொல்லுவது வழக்கம். கீழே நாம் மஹாபுருஷராகக் குறிப்பிட்ட வ்யக்தி இவ்வகுப்பில் சேர்ந்தவரென்பது ஜகத்ப்ரஸித்தம். யதிகள் பலரிருப்பதால் ஒவ்வொரு யதியினிடத்திலும் தாழ்த்தியும் தூக்கியும் பேசியே ஜீவித்து வருவது இந்த மஹா புருஷர்க்கு இயற்கையா யமைந்தது.

வித்வத் ஸதஸ்ஸிலோ வித்வத் கோஷ்டியிலோ இந்த மஹாபுருஷ வ்யக்திக்கு ப்ரவேச ப்ரஸக்தி யிருப்பதாக யாரும் நினையார்கள். "பாபபூரித தேஹாநாம் புண்யகார்யமரோசகம், சர்மகண்டநபக்ஷ்யாணும் சுநாம் க்ருதமரோசகம்" என்கிற ஸுபாஷிதத்தையடியொற்றி "நாய்க்குடலுக்கு நறுநெய் தொங்காதாப் போலே" என்று ஆசாரியர்கள் அருளிச் செய்திருக்கக் காண்கிறோம். அப்படிப்பட்ட வ்யக்திகளுக்கு நற்காரியம் ருசிக்கவே மாட்டாது. நற்காரியம் நடைபெறுமிடங்களில் இவை தலை காட்டவும் தகாது. தம் மனத்திலேறிக் கிடக்கும் அழுக்கையும் அழுக்காறையும் பிரகாசப் படுத்திக் கொள்ளவே தகாதவிடங்களிலும் தலைகாட்டுமிவை. வித்வத் ஸதஸ்ஸுக்கு வெகுதூரத்தில் நிற்கவேண்டிய பிராணியை உள்ளே புகவிட்டது ஏதோ தாக்ஷிண்ய வசாத்.

"வாசாடோக்தௌ வாகம்ருதே வா ஸுகவீநாம்
ஸ்தோகப்ரஜ்ஞாஸ் துல்யத்ருசோ ஹந்த பவந்தி.
கோமாயூநாம் கோகிலயூநாமபி சப்தேஷு
ஏகாகாரா மாநஸவ்ருத்திர் மஹிஷாணும்"

என்று ஸுபாஷித கௌஸ்துபத்தில் வேங்கடாத்வரியும்,

"அல்பிஷ்டோக்தௌ அத்புத ஸூக்தாவபிந்ருணும்
அல்பப்ரஜ்ஞா ஹந்த பவந்தி்ஷ்யவிசேஷா:
பேகாராவே பேர்யபிகாதே பிகநாதேபி
ஏகா வ்ருத்திச் சேதஸி ஹம்ஹோ! மஹிஷாணும்."

என்று ஸுபாஷித ஸுதாநிதியில் ஸ்ரீகாஞ்சீ ஸ்வாமியும் கூறியுள்ளதற்கு லக்ஷ்ய மான வ்யக்தி வித்வத்ஸதஸ்ஸைப் பற்றி வரையப் புகுவது மஹத்தான ஸாஹஸம் என்று பலரும் பேசிக்கொண்ட வார்த்தை இது. ததியாராதந வைபவத்தைப்பற்றி எழுதியிருக்கிறதே அதற்கு மிகவும் லாயக்கான வ்யக்தி. அதை இன்னமும் விவரித்து எழுதியிருக்கலாம். ஒவ்வொருநாளும் இன்னின்ன கறியமுதுகள், இன்னின்ன பக்ஷணங்கள், இத்தனை பாசகர்கள், கறியமுது திருத்தின அம்மையார் கள் இத்தனைவர்........இத்யாதிகளை வாட்டம் சாட்டமாக எழுதுவதில் இந்த நபர்க்கு மிக வல்லமை யுண்டு. அதைச் சிறிது காட்டியிருப்பதோடு நில்லாமல் பூர்த்தியாகக் காட்டியிருக்கலாம். நிற்க.

ஸ்ரீமதாண்டவனுச்ரமத்தில் நடந்த வித்வத்ஸதஸ்ஸைப் பற்றி ஸ்ரீராமா நுஜன் 184 ல் வெளிவந்துள்ள வியாஸத்தை உலகம் ரஸித்து வாசித்திருக்கின்றது. மானிட சாதியில் தோன்றினவர்களுக்கு வ்யக்திவிசேஷங்களில் ப்ரீத்யப்ரீதிகள் ஸஹஜம். அதை உள்ளடக்கி நிர்மத்ஸர பாவத்துடன் செய்திகளை யறிவிப்பது படித்தவர்களின் பிரகிருதி. மாச்சரியமே வடிவெடுத்த வ்யக்திகள் "நிமீலயது லோசநே ந ஹி திரஸ்க்ருதோ பாஸ்கர:" என்கிற தேசிகஸூக்திக்கு இலக்காம்படி நடந்துகொள்வதனுல் ஒரு பலனும் பெறலாகாது, விபரீதபலனே பெறலாகும் என்பது ஸமயங்களில் தெரிந்து உடனே மறந்துபோம். ப்ரக்ருத ஸதஸ்ஸின் நடை முறையை உள்ளபடி யறியாதார் மிகச் சிலரே யிருக்கக் கூடும். அந்தச் சிலருமறியு மாறு இங்கு உணர்த்துவோம்.

ஸதஸ்ஸு உபக்ரமிப்பதற்கு ஒரு ஸப்தாஹம் முந்தியே பத்ரிகையச்சிட்டு அதை ஸ்ரீமதாண்டன் தம் ஸ்ரீ கார்யம் ஸ்வாமி மூலமாக ஸ்ரீ அண்ணு ஸ்வாமிக்கு அனுப்பி "சில நாளாகத் திருமேனி பாங்கில்லை யென்பது தெரியும்; ஆனுலும் தேவரீர் எழுந்தருளியே ஸதஸ்ஸு உபக்ரமித்தாக வேணுமென்று ஆண்டவன் மநோரதம்; இன்னும் ஒருவார மிருப்பதால் மறுபடியும் ஸ்மாரயே" என்று தெரிவிக்கலாயிற்று. அப்படியே ஸதஸ்ஸு உபக்ரமத்தன்று காலையில் தகுந்த அதிகாரிகளைக்கொண்டு ஸ்மாரணம் செய்தபோது, 'நான் மிகவும் அஸ்வஸ்த தசையி லிருப்பதால் இன்றே அடியேன் விடைகொள்ள வேணுமென்கிற நிர்ப்பந்தம் வேண்டாம்; பத்து நாட்கள் நடப்பதால் ஸௌகரியமான வொருநாள் அவசியம் விடை கொள்ளுகிறேன்' என்று அண்ணு ஸ்வாமி சொல்லியனுப்பினர். ஆயினும் ஸ்ரீமதாண்டவன் பூர்வாச்ரமத்திலிருந்தே நெடுநாளாக அநுவர்த்திக்கிற வாத்ஸல் யாதிசயத்தினுல் ஸதஸ்ஸு ஆரம்பிக்கும் ஸமயத்தில் (பகல் 3 மணிக்கு) ஒரு அந் தரங்க பக்தரை அங்கு வந்திருந்த ஒரு காருடன் அனுப்பி 'இப்போது அவசியம் வந்து சிறிது அவகாசமாவது இருந்துபோகவேணும்' என்று அநுல்லங்கநீயமான நியமனத்தைப் பெறுவித்தாயிற்று. அதற்குமேல் என்ன தெரிவிக்க முடியும்? உடனே புறப்பட்டார். ஸ்வாமியினுடைய பெரிய மாப்பிள்ளையும் அடியேனும் ஸ்வாமி பாடசாலையைச் சேர்ந்த மற்றுமிருவரும் கூடவே புறப்பட்டுப் போனேம். அப்போது பூர்வாங்க பாஷணங்கள் முடிந்து நிச்சப்தமாகவேயிருந்தது. ப்ர. அ. ஸ்வாமி யதாஸ முதாசாரம் ஸங்கிஹிதரானவளவிலே ஸ்ரீமத் ஆண்டவன் குசலப்ரச்நமும் ஸ்வாஸ்த்ய ப்ரச்நமும் செய்தருளியானபிறகு ஸ்வாமி வீற்றிருந்தார். பூர்வாங்க பாஷணத்தில் ஸம்ஸ்க்ருத பாஷையில் வ்யவஹரணம் வேண்டியதில்லை யென்றும், ச்ரோதாக்க ளெல்லார்க்கும் புரியும்படியாகத் தமிழிலேயே உபந்யாஸமாகச் சொல்ல வேண்டிய

தென்றும் கோரிக்கை ஏற்பட்டிருந்ததாக அடுத்த நிகழ்ச்சியால் தெரியவந்தது. ஸ்ரீ உவே. உத்தரமேரூர் வாஸுதேவாசாரியர் ஸ்வாமி, கோழியாலம் ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமி, குளத்தூர் விஜயராகவாசாரியர் ஸ்வாமி, K. வரதாசாரியர் ஸ்வாமி, நாவல் பாக்கம் வரதாசாரியர் ஸ்வாமி, வேளியநல்லூர் ஸ்ரீநிவாஸதாதாசாரியர் ஸ்வாமி, உத்த மூர் வீரராகவாசாரியர் ஸ்வாமி, பிரம்மதேசம் ராமாநுஜாசார்ய ஸ்வாமி, ஸ்ரீகார்யம் சித்ரகூடம் விஜயராகவாசாரியர் ஸ்வாமி முதலான வித்வான்கள் ப்ரஸன்னர்களா யிருந்தனர். விஷயம் சொல்ல ஆரம்பிக்கவேணுமென்று பொதுவாக ஸாதித் தாயிற்று. ஒரு கார்யஸ்தர் ஒலி பெருக்கியைக் கொணர்ந்து ஒரு வித்வானெதிரில் வைத்தார். அவர் ஆபிமுக்யம் காட்டாமையினலோ, பிறகு ஆகட்டுமென்று ஜாடைகாட்டினமையாலோ அவ்வொலி பெருக்கியை யெடுத்து........மற்றெரு வித்வா னெதிரில் வைத்தார். அவர் சதுஸ்ஸூத்ரியில் விஷயம் சொல்லப் போவதாகப் பீடிகை கூறி ஆரம்பித்துச் சொல்லி வந்தார். பத்து நிமிஷமான பிறகு முந்தின வித்வான் திடீரென்று தாமாகவே ஏதோ சொல்ல ஆரம்பித்தார். உடனே ஒலிபெருக்கி அவரெதிரில் நகர்த்தி வைக்கப்பட்டது. அவர் ஒரு கால்மணி சொன்னர். மறுபடியும் ஒலிபெருக்கி முன்னே ஆரம்பித்த வித்வானிடம் வந்தது. பூர்வசேஷமாக ஏதோ சொல்லிக் கொண்டிருந்தார். 'அதைச் சொல்லப்போகிறேன், இதைச் சொல்லவேணுமென்று உத்தேசிக்கிறேன்' என்று ப்ரதிஜ்ஞாவாக்கியங்கள் ப்ரபல மாகத் திரும்பித் திரும்பி வருகின்றனவேயன்றி விஷயமொன்றும் வந்தபாடில்லை. ஸம்ஸ்க்ருதத்தில் சொன்னல் ஏதாவது வருமோ என்னவோ? பக்கங்களிலுள்ள விவேகிகள் 'இது என்ன பாட்டிக் கதை! இது என்ன அம்மையார் புராணம்? என்னவுமாரம்பித்தார்கள். அவர்களுக்குஅப்படியிருந்தது போலும்.

அஸ்யாமவஸ்தாயாம் அண்ணஸ்வாமி அதிககாலம் அங்கே யிருக்க முடியாத அஸ்வாஸ்த்யத்தை முன்னிட்டுச் சிறிது விஜ்ஞாபனம் செய்துவிட்டுப் போகக் கருதி ஸம்ஸ்க்ருதத்திலேயே பேசத் தொடங்கினர். என்ன பேசினரென்பது இதில் அடுத்தபடி ஸம்ஸ்க்ருதத்திலேயே வெளியாகிறது. வித்வத்ஸதஸ்ஸில் வித்வான்கள் பேசுவது ஸம்ஸ்க்ருதத்திலேதானிருக்க வேண்டுமென்பது வற்புறுத்திக் கூறப் பட்டது. சாரீரகமீமாம்ஸையில் அத்வைதவாத நிரஸந பூர்வகமாக விசிஷ்டாத்வைத ப்ரதிஷ்டாபநம் செய்யப்படுவது போலவே ஸ்ரீமந்நாராயணனே பரதேவதை யென்றும் மூதலிக்கப்படுகிற தென்பதுதான் அண்ண ஸ்வாமியின் உபந்யாஸ விஷயம். ஒரு இருபது நிமிஷம் இதைப் பேசிவிட்டு ஸ்வாமி புறப்படுமளவிலே, ஸ்ரீமதாண்டவன் ஸதஸ்யர்களை நோக்கி ஸாதித்தருளினதாவது,

> "சில வருஷங்களுக்கு முன்பு ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி வர்த்தமான ஸ்ரீவான மாமலை ஜீயர் ஸ்வாமி திருவல்லிக்கேணிக் கெழுந்தருளியிருந்தபோது ஒருநாள் மடத்தில் நடந்த மஹா கோஷ்டியில் அண்ண ஸ்வாமி * நோற்றநோன்பு திருவாய்மொழி யுபந்யாஸம் மூன்றுமணி காலம் நடத்தினர். அப்போது நானும் (பூர்வாச்ரமத்தில்) அங்குப் போயிருந்தேன். அது இன்னமும் என் காதில் ஒலித்துக் கொண்டிருக்கிறது. அதேபோல் * ஆராவமுதே திருவாய்மொழி யநுபவம் ஒருநாள் இங்கு தற்கால தேஹஸ்திலைமைக்கிணங்க ஒருமணி கால மாவது நடக்கவேணும் இது என்னுடைய பாரிப்பு" என்று.

அதை ஸ்ரீ கார்யம் ஸ்வாமியும் கொஞ்சம் விவரித்து அநுவதித்து 'ஆண்டவன் இதைப்பற்றி அடிக்கடி ஸாதித்தாகிறது; ஒருநாள் இது அவசியம் நடத்தியேயாக வேண்டும்' என்று பலருமறியச் சொல்ல; 'அதற்கென்ன? ஆ ரா வ மு து என்கிற ஐந்தெழுத்துக்கு ஐந்து மணி காலம் விஜ்ஞாபித்துக்கொள்ளுகிறேன்; பத்து நாளிருக்கிறதே." என்று ஸாதித்துவிட்டுத் திரும்பினர் அண்ண ஸ்வாமி.

॥ श्रीः ॥

## श्रीकाञ्चीपुर्याम् श्रीमत्परमहंसेत्यादि श्रीमदाण्डवन्सन्निधाने १४-३-६४ दिने
## श्रीकाञ्ची प्रतिवादिभयङ्कर अण्णङ्गराचार्यकृतः शारीरकमीमांसासारार्थविषयकः उपन्यास एषः ।

कतिपयदिनैरनारोग्यमतिमात्रमनुभवन्नेष जनः श्रीचरणानां चिरानुवृत्तप्रेमभूमनिबन्धनामाज्ञामवतंसयन्निदानीमत्रोपस्थितः । अधिकमवकाशमत्र क्षेप्तुमशक्नुवन् मदीयां वाचं शुश्रूषमाणानां श्रीचरणानां मनोरथं मनागिव परिपूर्य प्रयातुकाम इदं संक्षेपेण विज्ञापये । वस्तुतो विद्वद्वलानां श्रीचरणानामाध्यक्ष्येण विभूषिते विद्वन्मणिभिरापूरिते चास्मिन् सदसि परमगभीरमधुरया दैव्या वाण्या व्यवहारं निषिध्य जन्मभाषया व्यवहारसंविधानं नैव साम्प्रतमुत्पश्यामि । अत्रोपस्थिताः प्रायः संस्कृतज्ञा एव; अतदभिज्ञाः कतिपये स्त्रैणप्रमुखास्सन्तु नाम । विद्वत्सदसि विचार्यमाणानां शास्त्रीयविषयाणां द्राविड्या गिरा कथनेऽपि तान् असंस्कृतज्ञा नैव प्रतिपत्तुमीशते । ततश्च द्राविड्यैव व्यवहर्तव्यमिति कृतं संविधानं नाऽऽद्रिये । गैर्वाण्यैव वाण्या वक्ष्ये ।

भगवद्बादरायणप्रणीतायाः शारीरकमीमांसाया अद्वैतवादनिरसनपूर्वकं विशिष्टाद्वैतवादप्रतिष्ठापनमेव न प्रधानमुद्देश्यम् ; श्रीमन्नारायणपारम्यप्रतिष्ठापनमपि तथेति संगति मदीयविज्ञप्तिसर्वस्वम् । शारीरकमीमांसायां प्रथमाध्याय तृतीयपादे प्रथमाधिकरणे [ * द्युभ्वाद्यधिकरणे ] * मुक्तोपसृप्यव्यपदेशाच्च * भेदव्यपदेशात् * * स्थित्यदनाभ्यां च * इतीदं सूत्रत्रितयं विराजते । अत्र प्राथमिकेन सूत्रेण मुक्तिदशायां जीवात्मपरमात्मनोः प्राप्तृप्राप्यभावस्य भेदनियतस्य श्रुतौ व्यपदिश्यमानताकथनेन भेदः प्रतिष्ठापितः । द्वितीयसूत्रेण श्रुतौ जीवात्मपरमात्मनोः साक्षादेव स्वरूपभेदव्यप्रदेशोऽस्तीति सुष्ठु संदर्शितम् । तृतीयसूत्रेण जीवात्मपरमात्मनोः स्वरूपैक्यविरुद्धं हेयसंबन्धार्हत्व-तदनर्हत्वरूपस्वभाववैलक्षण्यमुक्तम् । एतावता ग्रन्थेन * ब्रह्मवेद ब्रह्मैव भवतीति मुण्डकोपनिषदुपसंहारवाक्यं जीवस्य ब्रह्मभावापत्तिरित्येतदर्थपरं ये मन्यन्ते, तेषां निरासः प्राकाश्यत । अप्राकृतदेशविशेषे परमपुरुषसायुज्यप्राप्तिरेव अपुनरावृत्तिलक्षणमोक्षपुरुषार्थ इति, तादृशपुरुषार्थप्राप्तिश्च परमपुरुषशरणवरणेनैवेति, परमपुरुषशब्दवाच्यश्च श्रियःपतिर्नारायण एवेति च परमवैदिकानां वेदान्तिनां सिद्धान्तः शारीरकमीमांसानुगृहीतः । श्रियःपतिर्नारायण एव सूत्रकारैः परं ब्रह्मेति प्रकीर्तित इत्यप्यर्थस्संगति प्रतिष्ठाप्यते । जगत्कारणवादीनि वेदान्तवाक्यानि सर्वाणि श्रीमन्नारायण एव पर्यवस्यन्तीति सूत्रकारः स्वयं सिद्धान्तितवानिति सुष्ठु प्रदर्शयामः । * अथातो ब्रह्मजिज्ञासेति ब्रह्मविचारं प्रस्तुत्य * जन्माद्यस्य यत इति द्वितीयसूत्रेण यस्माज्जगज्जन्मस्थितिलयाः प्रवर्तन्ते तद्ब्रह्मेति ब्रह्मणः प्रतिपत्त्युपायं प्रदर्शयामास । वेदान्तेषु तावत् जगत्कारणवादीनि वाक्यानि एकरूपाणि न सन्तीति, परस्परविरुद्धवत्प्रतीयन्त इति च प्रसिद्धमेतत् । कस्माच्चिदेकस्मादेव वस्तुनः जगज्जन्मस्थितिलयाः प्रवर्तन्त इति निश्चयस्तावदावश्यकः । मिथो विरुद्धैः कारणवाक्यैः कथमेष निश्चयस्सुकर इति जायमानां शङ्काम् सर्वेषां कारणवाक्यानाम् ऐककण्ठ्यप्रदर्शनेन क्रमशः परिहरति सूत्रकारः । साकांक्षाणां वचसां निराकांक्षेषु पर्यवसानं न्याय्यमिति सर्वसंप्रतिपन्नम् । एतदेव हृदि दधद्भगवान् बादरायणः ईक्षत्यादिभिरधिकरणैः सर्वेषां कारणवाक्यानां पुरुषसूक्तादिप्रतिपन्ने नारायणे पर्यवसानं प्रादर्शयत । एतदेवेह सुव्यक्तमुपपाद्यते ॥ साकांक्षनिराकांक्षभेदेन कारणवाक्यानां द्वैविध्यं प्रथमतः प्रतिपत्तव्यम् । साकांक्षवाक्यानि च पुनः द्वेधाः— (१) सामान्यशब्दघटितत्वेन विशेषप्रतिपत्तिसापेक्षाणि, (२) अनुवादरूपत्वेन पुरोवादसापेक्षाणि चेति । * सदेव सोम्येदमग्र

आसीदेकमेवाद्वितीयम् * * सेयं देवतैक्षत * इत्यादीनि वाक्यानि सामान्यशब्दघटिततया विशेषप्रतिपत्ति-साकांक्षाणीति स्पष्टम् । * यतो वा इमानि भूतानीत्यादीनि तु अनुवादरूपतया पुरोवादसाकांक्षाणीति च स्पष्टम् । साकांक्षवाक्येषु तृतीयाऽपि काचन विधा वक्तव्या भवति—अयोग्यार्थप्रतिपादकतया योग्यार्थ-प्रतिपत्तिसाकांक्षतैव सा । * मामुपास्व ; एतदेवाहं मनुष्याय हिततमं मन्ये * इति इन्द्रवाक्यादीन्येवंविधानि प्रतिपत्तव्यानि ।

एवं त्रैविध्यमापन्नानि साकांक्षाणि कारणवाक्यानि स्वातन्त्र्येण वस्तुविशेषनिर्णये अक्षमाणीति निराकांक्षैरेव वाक्यविशेषैः वस्तुविशेषनिर्णयः कर्तव्यो भवति । योग्यार्थविशेषप्रतिपादकतया वाक्यान्तर-निरपेक्षाण्येव वाक्यानि निराकांक्षाणि प्रथन्ते । * एको ह वै नारायण आसीत् न ब्रह्मा नेशानः * इत्यादीन्येव तादृशानि वाक्यानीति सारविद्भिरवधारितम् । प्रदर्शिते वाक्यविशेषे नास्ति सामान्यशब्दघटना, न चास्त्यनुवादरूपता ; नापि चास्ति अयोग्यार्थप्रतिपादकता । सद्ब्रह्मात्मदेवतादिपदसद्भावे हि सामान्य-शब्दघटितत्वशङ्का भवित्री ; नात्र तथा । यच्छब्दघटनासद्भावे हि अनुवादरूपता स्यात् ; न चात्र साऽस्ति । अथ अयोग्यार्थप्रतिपादकत्वाभावविशिष्टयोग्यार्थप्रतिपादकत्वपौष्कल्यमिह निरूपणीयमवशिष्यते । तदेव निरूपयामः । चतुस्सूत्रीसमनन्तरं पञ्चममधिकरणम्—ईक्षत्यधिकरणम् । तत्र * तन्निष्ठस्य मोक्षोपदेशात् * * गतिसामान्यात् * इति सूत्रद्वयं विशिष्यावधेयम् । साधारणेन सच्छब्देन देवताशब्देन च घटितायाः सद्विद्यायाः पुरुषसूक्तप्रतिपन्ने श्रीमन्नारायणे पर्यवसानं प्रदर्शितमुपात्तसूत्रद्वयेनेति वेदितव्यम् । * तन्निष्ठस्य मोक्षोपदेशादिति सूत्रार्थस्तु प्रथममवगन्तव्यः । तन्निष्ठस्येति तच्छब्देन सूत्रकारबुद्धिस्थ विषयवाक्यगत-सच्छब्दवाच्यं परामृश्यते ; तथाच सदुपासकस्येत्यर्थ आयातः । सदुपासकस्य मुक्तेरुपदिश्यमानत्वात् प्रकृत-सच्छब्दवाच्यं वस्तु न प्रधानं भवितुमर्हतीति सूत्रार्थो निष्पन्नः । प्रधानमेव जगत्कारणमिति वदतां निरसनं हि प्रकृतम् । पुरुषसूक्ते उत्तरनारायणे च * तमेवं विद्वानमृत इह भवति । नान्यः पन्था अयनाय विद्यते * इति, * नान्यः पन्था विद्यतेऽयनाय * इति च मोक्षोपायोपासनविषयत्वं नारायणासाधारणं श्रुतम् । अत्रापि सद्विद्याप्रकरणे * आचार्यवान्पुरुषो वेद, तस्य तावदेव चिरम्, यावन्न विमोक्ष्ये, अथ सम्पत्स्ये * इति [छान्दोग्ये] सदुपासनस्य मोक्षोपायत्वमाम्नातमस्ति । सदुपासननिष्ठस्य शरीरपातावधिको मोक्षप्राप्तौ विलम्बः, शरीरपातादूर्ध्वं मुक्तो भवतीति श्रुत्यर्थः । तेनैतेन मोक्षोपायोपासनविषयत्वरूपेण प्रत्यभिज्ञापकेन स नारायण एव इदं सदिति निश्चीयमानत्वात् प्रकृतं सत् प्रधानं न भवतीति सूत्रतात्पर्यमवसीयते । * तमेवं विद्वानमृत इह भवति । नान्यः पन्था अयनाय विद्यते, * नान्यः पन्था विद्यतेऽयनाय * इत्यादिभिर्वाक्यैः नारायणो पासनमेव मोक्षोपाय इति सुस्पष्टमवधारिते सति, * तन्निष्ठस्य मोक्षोपदेशात् * इति सूत्रयन्महर्षिः तन्निष्ठशब्देन नारायणोपासकमेव विवक्षतीति निर्धारणे कः प्रत्यूहः ॥ अथ * गतिसामान्यादितिसूत्रमपि प्रकृतार्थवैशद्यमुत्पादयति । सर्वेषां कारणवाक्यानामैकार्थ्यस्यावश्यकत्वात् * अथ पुरुषो ह वै नारायणो-ऽकामयत । प्रजास्सृजेयेति * इत्यादिषु च नारायणस्य कारणत्वश्रवणात् सद्विद्यागतयोस्सामान्ययोः सच्छब्ददेवताशब्दयोः कारणवाचिनोः नारायणाख्यदेवताविशेषे पर्यवसानमवर्जनीयमिति सर्वं समञ्जसम् ॥

---

திருநக்ஷத்திரத்திற்கு முதல்நாள் ஞாயிற்றுக்கிழமை (மேலேகண்ட நியமனப்படி) ஆராவமுதே உபந்யாஸம் பகல் 3 மணிமுதல் நடக்கப்போகிற தென்பதையும், அன்று வேறு எந்த வித்வானுடைய சொற்பொழிவுக்கும் அவகாசம் கிடைக்கா தென்பதையும், அவசியமாக யாராவது சொல்லவேண்டியதாக ஏற்பட்டால் 2-மணிக்கு மேல் 3-மணிக்குள் அது முடிவு பெறவேண்டும் என்பதையும் முதனாள் சனிக்கிழமை ஸதஸ்ஸிலேயே ஸ்ரீமதாண்டவன் தாமே சோதிவாய் திறந்து ஸாதித்தாயிற்று. அதன்படியே மறுநாள் ஞாயிற்றுக்கிழமை 3-மணிக்கு ஆராவமுதே உபந்யாஸம் ஆரம்பமாயிற்று. அப்போது தேவப்பெருமாளுக்குப் பங்குனி யுத்தரத் திருநாள் நடந்து கொண்டிருப்பதால் 6-மணிக்குமேல் திருவீதியுத்ஸவகாலமாகையினல் 5-50க்கு உபந்யாஸம் ஸசேஷமாக நிறுத்தப்பட்டது. மறுநாள் திருநக்ஷத்திரமாதலால் ஸசேஷமாகவே நின்றது. அந்தவுபந்யாஸமும் மறுநாளே அண்ணுஸ்வாமி திருக்கையினுலேயே யெழுதப்பட்டிருந்தது. அதுவும் இதில் வெளிவருகின்றது.

நிகழ்ச்சியெழுதி வெளியிட்ட மஹாபுருஷரைப்பற்றி நிகமனம் செய்வோம். 'உபயவேதாந்த வித்வான் அண்ணங்கராசாரியர் ஸ்வாமியும் ஸதஸ்ஸில் கலந்து கொண்டார்' என்றெழுதியுள்ளாரிவர். கலந்து கொள்வதாவது என்னவென்று விசாரிக்கவேணும். ஒரு விஷவைத்யன் தேள்கடி பாம்புகடி சிகித்ஸை என்று பலகை போட்டு 'தேள்கடிக்கு மந்திரித்தால் நாலணு; பாம்புகடிக்கு மந்திரித்தால் இரண்டு ரூபா' என்று விளம்பரம் செய்திருந்தான். ஒருவன் பாம்புகடியுண்டு மந்திரவாதத்திற்கு ஓடிவந்தான். பாம்புகடியென்று சொன்னுல் இரண்டுரூபா கொடுக்கவேண்டி வருமேயென்று தேள் கொட்டினதாகச் சொல்லி நாலணுவை வைத்தான். விஷவைத்யன் தேள்மந்திரம் ஜபிக்க, வேதனை குறையாமல் அதிகரிக்கவே கதறத் தொடங்கினுன். 'தேள் கொட்டிற்ரு? பாம்பு கடித்ததா? உள்ளபடி சொல்' என்கிருன் மாந்திரிகன்; தேள்தான் கொட்டிற்று; பாம்பு மந்திரத்தையும் கலந்து கொள்ளப்பா' என்கிருன் கடியுண்டவன்; அதுஸரி, நீ நாலணுவோடு இரண்டு ரூபாயையும் கலந்துகொள் என்கிருன் மருத்துவன். இம் மஹாபுருஷர் கருதுகிற கலந்துகொள்ளும்விதம் எதுவோ அறியோம். "ஆண்டவனும் கலந்துகொண்டாயிற்று" என்றெழுதி யிருக்கிறேனே யென்பர். சில மடாதிபதிகள் வித்வான்களைப் பேசச் சொல்லிவிட்டுத் தாம் உள்ளேசென்று சயனிப்பதுண்டு; அப்படியன்றிக்கே ஸதஸ்ஸைவிட்டுப் பிரியாதே கலந்துகொண்டே யிருந்தார் என்று இவர்க்கு விவக்ஷிதம்போலும். மேலே சதுஸ்ஸூத்ரியை ஒருவர் விவரித்ததைப்பற்றி யெழுதுமிவர் அதை அவர் லாகவமாகப் பேசிவிட்டாரென் றெழுதியுள்ளார். கௌரவமாகப் பேசுவது, லாகவமாகப் பேசுவது என்கிற வழக்குக்களை யறியாதாரில்லை. எளிதாகப் பேசினுரென்ன வேண்டுமிடத்து லாகவமாகப் பேசினுரென்றெழுதக் கற்றவர் இவரே போலும். "தேவரீருடைய தேவியார் மஹாஸாத்வி" என்று சொல்ல நினைத்த வொருவர் "தேவரீருடைய தேவியார் மஹா ஸ்வைரிணி" என்று சொல்லிப் பெற்ற பரிசு ப்ரஸித்தமன்ரே. இப்படிப்பட்ட வாக்மிகள் இந்நிலவுலகில் திகழ்வது விநோத ரஸிகர்களின் பாக்கிய விசேஷமே.

லாகவமாக உபந்யஸித்தவர்களோ, கௌரவமாக உபந்யஸித்தவர்களோ தம்தம் உபந்யாஸங்களை யெழுதி வெளியிடும்படி செய்தால் அப்போது உலகுக்குப் பல தத்துவங்கள் தெரியவரும். எப்படியும் ஸ்ரீரங்கநாத பத்ரிகை வெளிவருகின்றதே.

ஸ்வாதிகாரவிருத்தாஸ꠱ க்ரியா ஸ்வஹஹ ஸாஹஸாத்.

ந்யஸ்தஹஸ்நோ ஜநோ நூநம் அநுதாபேந சுத்த்யதி.

ஸ்ரீ:

# ஆராவமுதநுபவம்.

## திருக்குடந்தையாண்டவன் திருமுன்பே 22—3—64ல்

## ஸ்ரீ காஞ்சீ. ப்ர. அண்ணங்கரார்ய தாஸன் விஜ்ஞாபித்துக் கொண்டது.

ஸுதி மதுரம் மது மதுரம் த்ராக்ஷா மதுரா ஸிதாபி மதுரைவ.

மதுராதபி மதுரதரா Zபர்யாப்தாம்ருதஹரேः சுதாலஹரீ.

—அவதாரிகை—

திவ்யதேசத் தெம்பெருமான்களுக்கு விசித்திரமான திருநாமங்கள் அமைந்துள்ளன. அழகிய மணவாளன், திருவேங்கடமுடையான், பேரருளாளன், பத்தராவி, வைத்தமாநிதி, குழைக்காதன்; சௌரிப்பெருமாள், பரிமளரங்கன், புருஷோத்தமன், குடமாடுகூத்தன், ஆமருவியப்பன், வயலாலி மணவாளன், மாயக்கூத்தன், தாடாளன் ......................என்றிப்படியுள்ள விலக்ஷணமான திருநாமங்களினிடையே ஆராவமுது என்கிற திருநாமம் உண்மையில் ஆராவமுதமாகவே அமைந்துள்ளது. அபர்யாப் தாம்ருதமென்று வடமொழியில் வ்யவஹாரமிருந்தாலும் ஆராவமுது என்னும்போது உண்டாகுமினிமையின் ஏகதேசமும் அதில் உண்டாவதில்லை. 'ஆராவமுதன்' என்பதிற் காட்டிலும் 'ஆராவமுது' என்பது அதிமநோஹரமான வ்யபதேசம். அமலனாதிபிரான் முடிவில் "என்னமுதினைக்கண்ட கண்கள்" என்ற சந்தையின் சுவையறியாதார் "என்னமுதனை" என்று ஓதுவர். அதைக் கேட்கும்போது அடியேனுக்கு மிக வெறுப்பும் வெகுளியுமுண்டாகும். ஒரு சேதநவ்யக்தியென்று தோற்றுகைக்காக 'அமுதன்' என்றாலும் அமுது என்னுஞ் சொல்லிலுள்ள இனிமை அப்ரமேயம். "மருத்துவனாய் நின்ற மாமணிவண்ணா" என்றதிற் காட்டிலும் "மருந்தும் பொருளும் அமுதமுந்தானே" என்பதன்றோ மிகமிக ரஸிப்பது. அடியேன் ஒருவிசை திருக்கண்ணமங்கைக்கு விடைகொண்டிருந்தபோது 'பெருமாள் திருநாம மென்ன?' என்று கேட்க; ப்ருஹத் பஹிஸ் ஸிந்துநாதன் என்று செவிபிளக்கச் சொன்னார் பட்டாசார். திருமங்கையாழ்வார் இத்தலத்திற்குத் திருமொழி தொடங்கும்போதே பெரும்புறக்கடலை என்றருளிச் செய்ததனால் அதை ஸம்ஸ்க்ருதப்படுத்தி [பெரு—ப்ருஹத், புறம்—பஹிः, கடல்—ஸிந்து என்றாக்கி] வ்யவஹரிக்கத் தொடங்கி விட்டார்களென்று நினைத்தேன். இது பொருத்தமான மொழிபெயர்ப்புமன்று. அடியேன் மலைநாட்டுத் திருப்பதிகள் ஸேவிக்கப்போனபோது திருவண்பரிசாரத்தில் பெருமாள் திருநாமமென்னவென்று கேட்க, 'திருவாழ்மார்பனென்று உங்களாழ்வார் பாடியிருக்கிறாரே' என்றார் அர்ச்சகர். இப்படியே திருச்செங்குன்றூர்த் திருச்சிற்றாற்றில் கேட்டபோது 'இமையவரப்பனென்று உங்களாழ்வார் பாடியிருக்கிறாராமே, அதுவேதான்' என்றார். இங்ஙனே பலவிடங்களில் ஆழ்வாருகந்தருளின திருநாமமே வழங்கி வருவதாகக் கண்டேன்.

ஆராவமுதென்கிற திருநாமம் ஏற்கெனவே யிருந்ததை ஆழ்வார் அருளிச் செய்தாரா? அல்லது ஆழ்வாரருளிச் செய்தபிறகே இத்திருநாமம் வழங்கிவரத் தொடங்கியதா? என்று அடியேன விமர்சித்ததுண்டு. இங்ஙனே பல விமர்சங்கள் ப்ராப்தமாக, இவை நமக்கு நிலமல்லவென்று விட்டிட்டேன். வானமாமலையில் பெரிய தடாகத்தைச் சேற்றுத்தாமரையென்று வழங்கி வருவதும், ஒரு சோலையைத் தேனமாம்பொழிலென்று வழங்கிவருவதும், திருமோகூரில் ஏரியைத் தாளதாமரை யென்று வழங்கிவருவதும் இங்ஙனே மற்றும் பலபலவும் திவ்ய ப்ரபந்தோபஜ்ஞ மென்பதில் ஐயமில்லையன்றோ. உலகத்தை ஸாரமாகப் பிரித்தால் ப்ரமாணம்,

ப்ரமாதா, ப்ரமேயம் என்று மூவகையாகப் பிரியும். ப்ரமாணம்—ஆழ்வாரருளிச் செயல். ப்ரமாதா—அருளிச்செயலை யோதுமவர்கள். ப்ரமேயம்—அவ்வருளிச்செயலால் அநுபவிக்கப்படும் எம்பெருமான்; இம்மூன்று வகுப்பையும் அமுதாகவே ஆழ்வார் அநுபவிக்கிறார். * தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன் * என்ற திருவாய்மொழியினாலும், * நல்லவமுதம்-பரகாலன் பனுவல்களே * என்ற தனியனாலும் ப்ரமாணம் அமுதாகத் தேறிற்று. (* பக்தாம்ருதம்-த்ராவிட வேதஸாகரம் * என்ற ஸ்ரீமந்நாதமுனி ஸ்ரீஸூக்தியையுங் கொள்ளலாம்.) *வைகல் பாடவல்லார் வானோர்க்கு ஆராவமுதே * என்ற ஸ்ரீஸூக்தியினால் ப்ரமாதாக்கள் அமுதாகத் தேறினார்கள். இனி ப்ரமேயம் திவ்யதேசத் தெம்பெருமான்களாகையாலே அவர்களையும் அமுதாக அநுபவித்த விடங்கள் பலபல. * அண்டர்கோனணியரங்க னென்னமுது * அடியேன் மேவி யமர்கின்றவமுதே-திருவேங்கடத்தெம்பெருமானே * சோலைமலைக்கரசே கண்ணபுரத்தமுதே! * திருமெய்யத்தின்னமுத வெள்ளத்தை * அமுதே திருமாலிருஞ்சோலைக்கோனே * ஆராவின்னமுதைத் தென்னழுந்தையில் மன்னிநின்ற * அமுதத்தினைக் கண்ணமங்கையுள் *......... இங்ஙனே அமுதாக அநுபவித்த விடங்கள் அனேகமிருந்தாலும் அவையெல்லாம் உபபத நிரூபணீயங்களாயிருக்கு மத்தனையே. உபபத நிரபேக்ஷமாய் ஸ்வயமேவ நிரூபகமாயிருக்கும் திருநாமம் ஆராவமுதென்ப தொன்றேயாம். பேரருளாளனென்னுந் திருநாமம் தேவப்பெருமாளுக்கும் திருக்குறுங்குடிப் பெருமாளுக்கும் தருநாங்கூர்ச் செம்பொன்செய்கோயில் பெருமாளுக்கும் வழங்கும். பத்தராவியென்னும் திருநாமம் திருநின்றவூர்ப் பெருமாளுக்கும் திருக்கண்ணமங்கைப் பிரானுக்கும் வழங்கும். இங்ஙனே பல காணலாம். ஆராவமுதென்கிற திருநாமம் திருக்குடந்தைப் பெருமானுக்கே அஸாதாரணமாயுள்ளது.

திருக்குடந்தையிலீடுபட்ட ஆழ்வார்கள் பலருளரெனினும் நம்மாழ்வாருடையவும் திருமங்கையாழ்வாருடையவும் ஈடுபாடு அதிவிலக்ஷணம். நம்மாழ்வாரீடுபட்டுள்ள திருப்பதிகள் ஒரு முப்பது இருந்தாலும் திருக்குடந்தையிலீடுபாடு அப்ரதிமமென்பது பற்றிக் கேண்மின். திருவாய்மொழியின் முடிவில் * சூழ்விசும் பணிமுகிற் பதிகம் திருநாட்டி லநுபவத்தைப் பரக்கப்பேசுவது. அங்கு லீலாவிபூதியின் நினைவு வருவதற்கே ப்ரஸக்தி கிடையாது. அப்படியிருந்தும் "குடந்தையன் கோவலன் குடியடியார்க்கு—தொடர்ந்தெங்கும் தோத்திரம் சொல்லினர்" என்கிற பாசுரம் மிக வற்புதமாக அவதரித்துள்ளது. அங்குள்ள ஸூரிகள் இவர்களை உபசரிக்கும்போது "இவர்கள் திருக்குடந்தை யெம்பெருமான் திருக்குணங்களிலே ஸந்தானமாக ஈடுபட்டவர்கள்" என்று சொல்லித் தொடர்ந்து தோத்திரம் செய்ததாகச் சொல்லிற்று. திருவரங்கம், திருவேங்கடம், திருமாலிருஞ்சோலை முதலான தலங்கள் கிடக்க, அவற்றையெல்லாம் விட்டுத் திருக்குடந்தையிலீடுபாட்டை யெடுத்துரைத்துத் தோத்திரம் செய்வதாக வருளிச்செய்ததன் காரணம் ஆராயுமளவில், திவ்யப்ரபந்தங்களெல்லாம் லோபித்திருந்த காலத்தில் * ஆராவமுதே யென்கிற பதிகமொன்றுமட்டும் ஸ்ரீமந்நாதமுனிகளின் திருச்செவியிலேபட, அதிலிருந்தே நாலாயிரமும் புநரவதாரம் செய்ய ப்ராப்தமாயிற்றென்று ஐதிஹ்யமாகையினாலே ஆழ்வார்க்கும் அங்குள்ள ஸூரிகளுக்கும் பவிஷ்யத்ஜ்ஞானமிருந்தே இப்படி பாசுரம் தோன்ற நேர்ந்ததென்பது ரஹஸ்யமருமம், மேலே கோவலன் என்பதிலும் ஒரு மருமமுண்டு. அதன் விவரணம் இங்கு அநபேக்ஷிதமென்று விடுக்கப்படுகிறது. இவ்வாறாக நம்மாழ்வார்க்குத் திருக்குடந்தையிலே அபிநிவேசமிருக்கும்படியை யுணர்ந்தே திருமங்கையாழ்வார் ஸ்வப்ரபந்தாரம்பத்திலேயே * சூழ்புனல் குடந்தையே தொழுது * என்றும் * சொற்பொருளாளீர்! சொல்லுகேன் வம்மின் சூழ்புனற் குடந்தையே தொழுமின் * என்றுமருளிச்செய்த தன்றியும், சரமப்ரபந்தமான திருநெடுந்தாண்டகத்தை முடித்தருளும்

போதும் "தண்குடந்தைக் கிடந்தமாலை நெடியானை யடிநாயேன் நினைந்திட்டேனே" என்று நம்மாழ்வாரைப் போலவே திருக்குடந்தை நினைவாகவே முடித்தருளினர். அடுத்த பாசுரத்தில் ஒரு விசேஷத்தையும் அற்புதமாகக் காட்டி நின்றார். (அதாவது) * அன்னமாய் முனிவரோடு அமரரேத்த அருமறையை வெளிப்படுத்தவம்மான் * என்று, நம்மாழ்வார்க்குத் திருநாட்டில் திருக்குடந்தை நினைவுவருவதற்குறுப்பான ஐதிஹ்யத்தை முத்ராலங்கார ரீதியில் காட்டிவைத்தார். ஆசார்யஹ்ருதயத்தில் "நாதயாமுனர் போல்வாரை அன்னமென்னும்" என்றருளிச் செய்தபடி அன்னமாயும், 'நாதமுனிகள்' என்னலாம்படி முனிவராயுமுள்ள ஸ்ரீமந்நாதமுனிகளோடு கூட [அமரர் ஏத்த] திருக்குருகூரிலுள்ள நிலத்தேவர்கள் துதிக்க. [அருமறையை வெளிப்படுத்த வம்மான்] "நாதனுக்கு நாலாயிரமுரைத்தான் வாழியே" என்கிற படியே அருந்தமிழ் மறையை நம்மாழ்வார் வெளியிட்டருளினபடி காட்டிற்றாயிற்று.

திருமங்கையாழ்வார் சிறிய பெரிய திருமடல்களருளிச் செய்தவர். சிறிய திருமடலிலே தர்மார்த்தகாமங்களென்கிற மூன்றுதான் புருஷார்த்தமென்று ஸாதித்து, உடனே மோக்ஷமென்று ஒரு புருஷார்த்த முண்டென்பார் அவிவேகிகளென்று மருளிச்செய்து, அந்த அவிவேகத்தை உபபாதிப்பதாகத் தொடங்கி "ஆராவமுதமங்கெய்தி, அதில் நின்றும் வாராதொழிவ தொன்றுண்டே" என்றருளிய ஸ்ரீஸூக்தி மிகவினிது. இங்கே ஆழ்வாருடைய விவக்ஷிதம் என்னவென்றால், "இங்கேகாண இப்பிறப்பே மகிழ்வர் எல்லியுங் காலையே" என்ற நம்மாழ்வாரருளிச்செயலின்படி இங்கு அர்ச்சாவதாராநுபவத்திற்கு மேற்பட மோக்ஷாநுபவமென்பதே இல்லையாயிருக்க, அங்கே ஆராவமுதமிருப்பதாகவும், அதையே நிரந்தரமநுபவித்துக்கொண்டு இங்கிலத்திற்குத் திரும்பிவருதலின்றியே யிருப்பதாகவும் சொல்லுவது என்ன பேதைமை! ஆராவமுதநுபவம் உண்மையில் இங்கேயாயிருக்க, அங்கேயென்பது ஒரு அபத்தம்; அப்படியிருந்தாலும், அங்கு அநுபவித்தவாறே அது கசத்துப்போய் உண்மையாக இங்கு அநுபவித்துக்கொண்டிருந்த ஆராவமுதையநுபவிக்கப் பதறியோடி வரவேண்டியிருக்க "நச புநராவர்த்ததே நச புநராவர்த்ததே" என்று மீட்சியில்லையாகச் சொல்லுவது மற்றோர் அஸம்பத்தம். நியாயமாகாது. அல்பமும் அஸாரமுமான அந்த போகமெங்கே! அநல்பமும் ஸாரதமமுமான இந்த போகமெங்கே! என்று ஏசுவது இங்குத் திருமங்கையாழ்வார்க்கு விவக்ஷிதம்.

ஆஸ்திகாக்ரேஸரரான இவ்வாழ்வார் மோக்ஷபுருஷார்த்தத்தை இல்லை செய்வது நியாயமோவென்று சில பாமைகாந்திகள் சங்கிக்கக்கூடும். இங்கு * நஹி நிந்தா நியாயத்தை ஸ்மரிப்பது. அர்ச்சாவதாரப்ரசம்ஸை இங்கு விவக்ஷிதமேயொழிய மோக்ஷதூஷணம் சிறிதும் விவக்ஷிதமன்று. நம்முடைய தைத்திரீய யஜுர்வேதமுங் கூட ஆறுவது காண்டத்தின் ஆரம்பத்தில் "கோ ஹி தத் வேத? யத்யமுஷ்மிந் லோகே அஸ்தி வா ந வேதி" என்றோதிவைத்தது. 'மேலுலகில் ஒன்றுண்டோ இல்லையோ? யார் கண்டார்?' என்பது இந்த வேதவாக்கின் பொருள். இதுவும் நஹிநிந்தாந்யாயத்தினால்தான் உபபத்தியடையக் கூடியது. திருமங்கையாழ்வார் அர்ச்சாவதார ப்ரசம்ஸையைக் கருதினர். வேத புருஷன் ஒரு அல்ப ஸுகப்ரசம்ஸையைக் கருதினன். இது நிற்க.

ஆராவமுதமங்கெய்தி யென்கிற சொற் போக்கை நோக்குமிடத்து, பரமபதத்திலே ஆராவமுதம் அநுபவிக்கப் படுவதாகச் சொல்லப்பட்டிருக்கின்றதென்பதும் அதனை இவ்வாழ்வார் மறுக்கின்றாரென்பதும் தெரியவருகின்றதன்றோ. பரமபதத்தில் ஆராவமுதம் ஆநுபவிக்கப் படுவதாக எங்கு ஓதப்பட்டிருக்கின்றதென்று பார்க்கவேணும். "ரஸோ வை ஸ:; ரஸம் ஹ்யேவாயம் லப்த்வா ஆநந்தீ பவதி" என்கிற தைத்திரீயோபநிஷத்தைக் கொள்ளலாம். அதில் அமுதமென்கிற சொல் இல்லையே யென்னில்; சாந்தோக்யோப நிஷத்தில் (8-3-4) * ஏததம்ருதம் ஏததபயம்

ஏதத் ப்ரஹ்ம * என்றோதப்பட்டுள்ளது. "ஏததேவாம்ருதம் த்ருஷ்ட்வா த்ருப்யந்தி" என்றது போதுமே. சாரீரக மீமாம்ஸையில் (1-3ல்) ப்ரமிதாதிகரணம், தேவதாதிகரணம், மத்வதிகரணம் என்று முறையே மூன்று அதிகரணங்களுள்ளன. இம்மூன்றதிகரணங்களின் ப்ரமேயத்தைச் சுருக்கமாக விஜ்ஞாபித்து, "மத்வதிகரணத்தில் * மத்வாதிஷ்வஸம்பவாத் அநதிகாரம் ஜைமிநி: * என்கிற ஸூத்ரத்தைப் பூர்வபக்ஷ ஸூத்ரமாகவும் *பாவம் து பாதராயணோஸ்தி ஹி* என்கிற ஸூத்ரத்தை ஸித்தாந்த ஸூத்ரமாகவும் வியாஸர் கொண்டிருக்கிறார்; ஆனால் திருமங்கையாழ்வார் திருவுள்ளத்தால் பூர்வபக்ஷ ஸூத்ரந்தான் ஸித்தாந்த ஸூத்ரமாகக் கொள்ளப்பட்டது" என்று விரிவாக உபபாதித்தேன். ஆனால் இங்கு ஸம்க்ஷேபருசியால் அதைச்சுருக்கமாக எழுதுகின்றேன். ப்ரஹ்மவித்யைகள் பலவற்றுள் மதுவித்யையுமொன்று. (அஸௌ வா ஆதித்யோ தேவமது.) ஆதித்யனுக்கு அந்தர்யாமியாகையாலே ஆதித்யனைச் சொல்லப்படுகிற பரப்ரஹ்மத்தை மதுவாக—அமுதமாக உபாஸித்துப் பேறு பெறுவதில் வஸு முதலான தேவர்களுக்கு அதிகாரமுண்டா இல்லையா என்று ஸம்சயம் ப்ராப்தமாக, இல்லையென்று பூர்வபக்ஷம்வர, உண்டென்று ஸித்தாந்தம். (இது வியாஸருடைய மதம்.) பூர்வபக்ஷ ஸூத்ரத்தை ஸித்தாந்த ஸூத்ரமாகவே கொண்டவர் ஆழ்வார். அஸம்பவாத் என்பதற்கு ஸூத்ரகாராபிமதமான பொருள் வேறு; ஆழ்வார்க்கு அபிமதமான பொருள்வேறு. கடல் கடைகையில் உப்புச்சாறு கிளருவதெப்போதோவென்று கவிழ்தலையிட்டிருந்து, ஆவியகமே தித்திக்குமமுதமாய் தோளும் தோள்மாலையுமான ஆராவமுதைக் கண்ணெடுத்துங் காணகில்லாத இவர்கள் எம்பெருமானை மதுவாக உபாஸிக்கை அஸம்பாவிதமாகையாலே அதில் இவர்களுக்கு அதிகாரம் கிடையவே கிடையாதென்று திண்ணமாகக் கூறுகின்றாராழ்வார். இது அடியேனுடைய உல்லேகம்; ஆழ்வாருடைய அந்தரங்கத்தைத் தழுவியது. இப்படி பாஷ்யமுண்டா? தீபமுண்டா? ஸாரமுண்டா? என்கிற கேள்விகளுக்குச் செவிகொடுப்போமல்லோம். ஆக இவ்வளவும் அவதாரிகையாக விஜ்ஞாபித்தபடி; இனி பாசுரத்தில் இறங்குகிறேன்... *

ஆராவமுதே! அடியேனுடலம் நின்பாலன்பாயே*
நீராயலைந்து கரையவுருக்குகின்ற நெடுமாலே*
சீரார்செந்நெல் கவரிவீசும் செழுநீர்த் திருக்குடந்தை*
ஏரார்கோலந் திகழக்கிடந்தாய் கண்டேனெம்மானே!

அவ்வோ திவ்யதேசங்களுக்கு அவதரித்துள்ள பதிகங்களை ஒன்றுவிடாமல் பார்க்கலாம்; பதிகம் தொடங்கும்போதே அத்திருப்பதி யெம்பெருமானுடைய திருநாமத்தை வாயாரச் சொல்லி விளிக்கும் பதிகம் வேறு கிடையாது, இஃதொன்றே. * மாயக் கூத்தா வாமனா! * என்று ஒரு பதிகம் தொடங்குகிறார். ஆனால் அப்பதிகத்திற்கு ஒரு திவ்யதேசமும் இலக்கன்று. * திருவுக்குந் திருவாகிய செல்வா! * என்று ஒரு திவ்யதேசப் பதிகம் தொடங்குகிறார் கலியன். ஆனால் திருநாமத்தையிட்டு விளிக்கவில்லை. திருக்குடந்தையைப் பாடத் தொடங்கும்போதே ஆராவமுதே யென்ற விளியழகு வாசாமகோசரமன்றோ. முற்பதிகத்தின் முடிவுபாசுரம் "வானோர்க்காராவமுதே" என்று தலைக்கட்டியதனால் அந்தாதித் தொடைக்குச் சேர "ஆராவமுதே" என்று தொடங்கவேண்டிற்று என்பார் இவ்வுபந்யாஸம் கேட்க அநதிகாரிகள் என்போமித்தனை. "அடைக்காய் திருத்திநான் வைத்தேன்" என்று முடித்து * வண்ணப் பவள மென்று தொடங்கவில்லையா? * விண்ணப்பமேயென்று முடித்து * செழுநீர்த் தடத்தென்று தொடங்கவில்லையா? இவ்விடங்களில் அந்தாதித் தொடை எங்கே?

[ஆராவமுதே.] எவ்வளவு அநுபவித்தாலும் த்ருப்தி பயக்காத அம்ருதமே! என்று பொருள். இங்கு அநுபோக்தாக்கள் யார்? என்று கேள்விபிறக்க ப்ரஸக்தியேயில்லை. பக்தர்களைத் தவிர வேறு யார் அநுபவிக்கப் போகிறார்? பக்தர்களுக்கு

ஆராவமுதமே! என்றுதானே பொருளாகும். ஆனால் ஆறுயிரப்படியில் திருக்குருகைப்பிரான் பிள்ளான் அருளிச்செய்வது அதுவொரு ஆராவமுத மென்னலாம்படியுள்ளது; "உன்னோடு பிறரோடு வாசியின்றியே எல்லார்க்குமொக்க ஸர்வகாலமும் அநுபவித்தாலும் ஆராத போக்யமே!" என்றார் பிள்ளான். இதை நம்பிள்ளையீடு மிக ரஸிப்பிக்கின்றது. எம்பெருமான் தன்னுடைய போக்யதையைத் தானேயநுபவித்துக் குமிழ்நீருண்பனும். ஸ்ரீரங்கராஜஸ்தவ ஸ்ரீஸூக்திகள் கொண்டும் பாதுகா ஸஹஸ்ர ஸ்ரீஸூக்தியொன்று கொண்டும் இதை மூதலிக்கிறேன். சக்ரவர்த்தி திருமகனார் வேறு, திருவரங்கம் பெரியகோயிற் பெருமாள் வேறு என்பதில்லையன்றோ. மநுகுலமஹீபாலபரம்பரையில் ஆராத்ய தேவதையாக வந்தவரும், பட்டாபிஷேக ஸமயத்தில் ஸ்ரீவிபீஷணாழ்வானுக்குப் பரிசளிக்கப்பட்டவரும், அத்யாபி கோயிலில் ஸேவைஸாதிப்பவருமான பெருமாளும் நாராயணன்; ஆளிட்டந்தி தொழாதே ஸாக்ஷாத் ஸ்வயமே ஆராதித்த பெருமாளும் நாராயணன். தன்னைத் தானே ஆராதித்துக் கொள்வது தகுதியோ? என்று கேள்வி வரும். இதற்கு பட்டர் அருளிச்செய்கிறார்— [ஸ்வயமத விபோ! ஸ்வேந ஸ்ரீரங்கதாமநி மைதிலீரமணவபுஷா ஸ்வார்ஹாண்யாராதநாநி அஸி லம்பித:] தம்முடைய போக்யதையைத் தாமே அறிபவராய், அது பிறர்க்கு நிலமல்லாமையினாலே தம்மைத் தாமே ஆராதிக்கவேணுமென்று ஆளிடாமல் ஆராதித்தாராயிற்று. நம்பெருமாள் தம்முடைய போக்யதையிலே தாமே (தாமும்) ஈடுபட்டவரென்பதை [அக்ரே தார்க்ஷ்யேண பச்சாத் அஹிபதி சயநேந ஆத்மநா பார்ச்வயோச்ச ஸ்ரீபூமிப்யா மத்ருப்த்யா நயந சுலகநை ஸ் ஸேவ்யமாநாம்ருதௌகம்] உத்ஸவமூர்த்தியாகிய நம்பெருமாள் தம்முடைய முன்னழகையும், 'முன்னிலும் பின்னழகிய பெருமாள்!' என்றேத்தும்படியான பின்னழகையும் இரு பக்கங்களினழகையும், கண்டுகளிக்கக் குதுகலித்து எதிரே பெரியதிருவடியான வடிவத்தையும், பின்னே * அரவணைமேல் பள்ளிகொண்ட முகில் வண்ணனான வடிவத்தையுங் கொண்டு அநுபவித்தும் திருப்திபெறாதே யிருக்கும்படியைச் சொன்னாராயிற்று.

பாதுகாஸஹஸ்ரத்தில் "மநுஜத்வதிரோஹிதேந சக்யே வபுஷைகேந விரோதிநாம் நிராஸே, அபஜத் பரதாதிபேத மீசஸ் ஸ்வயமாராதயிதும் ஹி பாதுகே! த்வாம்." என்று அருளிச்செய்தது இதை யடியொற்றியே. எம்பெருமான் மானிடவுருக்கொண்டு சக்ரவர்த்தித் திருமகனாய்த் திருவவதரித்தது விரோதி நிரஸனத்திற்காகவாகில் மத்ஸ்ய கூர்ம வராஹ நரஸிம்ஹாத்யவதாரங்களிற் போல தானொருவனாகவே அவதரித்துக் காரியம் நிறைவேற்றியிருக்கலாம்; அங்ஙனன்றிக்கே பரதாதிகளாகவும் தன்னை வகுத்துக்கொண்டு திருவவதரித்தது எதற்காகவென்னில், தனக்கும் பரம போக்யமான தன்னுடைய பாதுகையைத் தானே ஆராதிக்கவேணுமென்று தனக்கு ஆசையுண்டாயிற்று; தானே ஸாக்ஷாத்தாக ஆராதித்தால் உலகம் ஏசுமேயென்று தம்பியாக வேற்றுருக்கொண்டு ஆராதித்தபடி என்பது இந்த சுலோகத்தின் கருத்து. ஆக, பிறர்க்குப் போலவே தனக்கும் ஸ்ப்ருஹணீயமாயிருக்கும்படியை உபபாதித்தோமானோம். தனக்கு மாராதவமுத மென்றதாயிற்று.

ஆராவமுதேயென்று எடுத்து ஈட்டில் ஓர் ஐதிஹ்யம் அருளிச் செய்யப்படுகிறது; "உத்தர பூமியிலே லோகஸாரங்க மஹாமுனிகள் வர்த்தியா நிற்க, இங்குத்தையானொருவன் அங்கேறச் செல்ல, 'பிள்ளாய்! தக்ஷிண பூமியில் விசேஷமென்?' என்று கேட்க, 'திருவாய்மொழி யென்றொரு ப்ரபந்தமவதரித்து சிஷ்டர்கள் பரிக்ஹித்துப் போரக் கொண்டாடிக்கொடு போரா நின்றார்கள்' என்ன, 'அதிலே உனக்குப் போவதொரு சந்தை சொல்லிக்காணாய்' என்ன, 'ஆராவமுதேயென்கிற இத்தனையும் எனக்குப் போம்' என்ன, 'நாராயணாதி நாமங்கள் கிடக்க, இங்ஙனேயுமொரு நிர்தேசமுண்டாவதே! இச்சொல்லு நடையாடுகிற தேசத்தேறப் போவோம்' என்று அப்போதே புறப்பட்டுப் போந்தார்." என்று.

[அடியேனுடலம் நின்பால் அன்பாயே] இங்கு அடியேனுடலம் என்று சொல்லியாக வேண்டிய அவசியமில்லை; என்னுடலம் என்றும் சொல்லலாம். "என்னை நெகிழ்க்கிலும் என்னுடை நன்னெஞ்சந்தன்னை" இத்யாதிகள் பலவுண்டே; ஆயினும் இங்கு அடியேனென்றது ஸ்வரூபஸித்தமான அடிமையையிட்டுச் சொன்னதன்று; போக்யதையிலே யீடுபட்டு நெஞ்சுபறியுண்டு சொல்லுகிற வார்த்தை. இதற்குமேல் 'உடலம் நின்பால் அன்பாயே' என்றது சால விசித்திரம். அன்பு என்பது ஆத்மாவின் தர்மமேயொழிய உடலின் தருமமன்று. "உடலம் ஆத்ம தர்மங் கொள்ள" என்ற ஆசார்ய ஹ்ருதய ஸூக்தி இங்கே நினைக்கத்தக்கது. இது ஆத்ம தர்மம், இது தேஹதர்மம் என்று பகுக்க வொண்ணுதபடி யாயிற்று. ஆத்மாவின் தர்மமான சேஷத்வம் எப்படி உடலினால் பிரகாசமடைகின்றதோ, அப்படியே ஆத்ம தர்மமான அன்பும் உடலில்தானே விளக்கமுறும். வடிவிலே தொடைகொள்ளலாம்படி யிருக்குமாயிற்று ஆழ்வாருடைய அன்புதான்.

[நீராயலைந்து கரைய வுருக்குகின்ற] நீர்ப்பண்டமாக்குவது அலையச் செய்வது கரையச் செய்வது உருகச் செய்வது ஆகிய இவையெல்லாம் பாசுரம் பாடும்போதன்று. இந்நிலைமைகளில் வாய்திறந்து பாடமுடியாதன்றோ. அவ்வோ நிலைமைகளை யடைந்து கிடந்து பேசமுடியாமே சிறிது போதிருந்து பின்னை தேறித் தெளிந்து ஒருவாறு பேசுகிறபடி. (இவ்விடத்திலே அநுபவிக்க வேண்டியது மிக மிகவுண்டு; இப்போதே 5-35 மணி ஆய்விட்டபடியால் மேலே செல்லுகிறேனென்று இடையில் விஜ்ஞாபித்தேன்.)

[சீரார் செந்நெல் கவரிவீசும்] பெரியாழ்வார் வரப்புவழியே கோயிலுக் கெழுந்தருளினபோது கண்ணுற்கண்ட காட்சியைப் பாடினுர்—* உரம்பெற்ற மலர்க்கமலம் உலகளந்த சேவடிபோலுயர்ந்து காட்ட, வரம்புற்ற கதிர்ச் செந்நெல் தாள்சாய்த்துத் தலைவணக்கும் தண்ணரங்கமே * என்றார். பயிர்கள் பால்கட்டுவதற்கு முன்னே வணங்காமல் வானத்தை நோக்கியிருக்கும்; பால்கட்டிக் கதிர் முற்றினவாறே தழைந்து கொடுக்கும்; அதுபோல, கல்வி ஏறப்பெறுதவர்கள் 'அஹமேவ பண்டித:' என்று வணங்கா முடிகளாய் மார்பு நெறித்துக் கிடப்பர்கள்; நன்ருகக் கல்வி முற்றினவர்கள் "நமந்தி ஸந்தஸ் த்ரைலோக்யாதபி லப்தும் ஸமுந்நதிம்" என்ற கணக்கிலே நம் ஆண்டவனைப்போலே விநயமே வடிவெடுத்திருப்பர்கள். இவர்கள் தாம் மேலேசென்று "அஹமந்ந மஹமந்ந மஹமந்நம்" என்னுமவர்களாகையாலே இவர்களைச் சீரார் செந்நெலாகச் சொல்லத்தகும். அன்றிக்கே, ஆராவமுதப் பெருமாளுக்கு அமுதுபடியாகும் சீர்மையைக்கொண்டு, பெருமாளுக்குப் பட்டாவான நிலங்களில் செந்நெற்கள் கவரி வீசும்படியை யருளிச்செய்கிறு ராழ்வாரென்று நம்பிள்ளை இன்சுவைப்பொருள் பணிக்கும்படி. அர்ச்சாவதாரப் பெருமாள்களுக்கு செல்வம்மிக்க பக்தர்கள் எத்தனை தளிகைகள் ஸமர்ப்பித்தாலும் ஸ்ரீ பண்டாரத் தளிகை இல்லையானல் பெருமாள் திருவுள்ள முகவாதென்பது உடையவர் காலத்து இதிஹாஸ விசேஷத்தாலே ப்ரஸித்தம். (இதை இங்கு ஸம்க்ஷேபமாக எழுதினபடி. நேரில் விவரித்தேன்.) அந்த ஸ்ரீ பண்டார ஸம்ருத்தியேயாயிற்று இங்கு வருணிக்கப்படுகிறது.

[செழுநீர்த் திருக்குடந்தை] ஆழ்வார் நீராயலைய, அந்த நீர் ஊரெல்லாம் வெள்ளமிட்டுச் செழுநீர்த் திருக்குடந்தையாயிற்றுப் போலும். உள்ளுக் கிடக்கும் பெருமானே நீர்புரை வண்ணன்; ஆழ்வாரோ நீராயலைந்து கரைபவர்; பாசுரமோ * ஒன்பதோடொன்றுக்கும் மூவுலகு முருகுமே * என்கிறபடியே நீராயுருக்குமது. பாசுரமோதுமவர்களோ "ஊற்றின்கண் நுண்மணல்போல் உருகாநிற்பர் நீராயே" என்னும்படி நீராயுருகுமவர்கள். இத்தனைநீரும் சேர்ந்தால் செழுநீர்த்திருக்குடந்தையாகக் கேட்க வேணுமோ?

[ஏரார்கோலம் திகழக் கிடந்தாய்] * கௌஸல்யா ஸுப்ரஜா ராம! * என்று கிடையழகிலே யீடுபட்ட கௌசிக முனிவன் * உத்திஷ்ட நரசார்தூல! * என்ற வாறே எழுந்திருந்ததில் வியப்பில்லை; எங்களிலே யொருவர் [திருமழிசைப்பிரான்] 'எழுந்திருந்து பேசு'' என்றவாறே அர்ச்சாவதார ஸமாதியையுங் குலைத்துக் கொண்டு எழுந்திருக்கப் புக்காயே! இஃதென்ன நீர்மை!. இங்கு விசிஷ்ய ஸ்ரீமதாண் டவனை நோக்கி விஜ்ஞாபித்ததாவது, திருமழிசைப் பிரானுக்காக எழுந்தானென்கிற ஐதிஹ்யம் பிற்காலத்தவர்களான நாம் சொல்லிவருவதே யொழிய ஆழ்வார் ஸ்ரீஸூக்தி ஸித்தமோ வென்று சிலர் கேட்பதுண்டு; இப்பதிகந்தன்னிலே மேலே "அசைவிலுலகம் பரவக் கிடந்தாய்'' என்றது அதை நன்ருகத் தெரிவித்தபடி யாகும். அசைவு—, முன்னடியில் * திசைவில் வீசும் செழுமாமணிகளாகச் சொல்லப் பட்ட திருமழிசைப்பிரானுக்காக அசைந்து கொடுத்தது; அதிலே உலகம் பரவக் கிடந்தாய்—அந்த நீர்மைக்கு உலகமெல்லாமீடுபடக் கிடந்தாய் என்றபடி. [கண்டே னெம்மானே!] உன்னுடைய கிடையழகு நிரந்தரம் கண்டு கொண்டிருக்கத் தக்கதா யிருக்க, சித்ரகூட பரிஸரத்திலே "ஸ மயா போதிதः ஸ்ரீமாந் ஸுகஸுப்தः" என்னும்படி யுணர்த்திவிட்டுத் தடித்த பிராட்டியைப்போ லன்றிக்கே கண்ணுரக் கண்டு களிக்கின்றேன்காண் என்ருராயிற்று. இன்று இவ்வளவோடு நிறுத்திக் கொள்ளுகிறேன் அவகாச விரஹாத்.

குறிப்பு :—ஆராவமுதேபதிகத்தில் அர்த்த பஞ்சகமும் பொலியும்படியை நிரு பிக்கத் திருச்செவி சாத்தியருளவேணுமென்கிற குதூஹலம் ஸ்ரீமதாண்டவனுக்கு மிகவுமுள்ளது. அஃது அநவகாச பராஹதமாயிற்று; ஆனாலும் அந்த நிருபணம் ஸ்ரீராமாநுஜன் 186ல் வையங்காண வெளிவரும். .... .... .... *

---

இரண்டாவது கடிதம்

## தேவஸ்தான பத்ரிகையில் கண்டதொன்று

27—4—'64ல் வெளிவந்த தேவஸ்தான பத்ரிகை கீழ்க்கண்டவாறு எழுதியுள்ளது;—

"ந்ருஸிம்ஹப்ரியா : வேதாந்த தேசிகருக்கு ஹயக்ரீவ உபாஸனையால் கவிதார்க்கிக ஸிம்ஹம் என்ற பட்டம் கிடைத்து அவர் நூற்றுக்கணக்கான நூல்கள் எழுத நேர்ந்தது. ஹயக் ரீவனை உபாஸித்தது தவறு என்று சிலர் கருதுவதாக ந்ருஸிம்ஹப்ரியா வெளியிடுகிறது. அப்படி யார் கருதுகிருர்கள் என்றும், எங்கே எழுதிவைத்திருக்கிருர்கள் என்றும் வெளியிடவில்லை. வைஷணவ ஆசார்யர்களில் யாருக்கும் உபாஸனை இல்லாமலே அவர்கள் பல நூல்கள் எழுதி ஞர்கள், தேசிகர் ஒருவர் மட்டும் காவ்யம், நாடகம், ஸம்ஸ்கிருதம், பிராகிருதம், தமிழ் ஆகிய இரண்டு மொழியிலும் எழுத நேரிட்டது உபாஸனையின் விசேஷம் என்று விவேகிகள் அறிவாராக.'' என்று தேவஸ்தான பத்ரிகை வெளியிட்டுள்ளது.

ஒரு ஸ்ரீ வைஷ்ணவர் இப்படி யெழுதுவது நியாயமாகுமா? இதில் "அப்படி யார் கருதுகிருர்கள்? எங்கே யெழுதிவைத்திருக்கிருர்கள்'' என்று கேட்டிருப்பது சரி; அந்தக் கேள்வியோடு தேவஸ்தான பத்ரிகை தன் வியாஸத்தை நிறுத்தியிருக்கலாம். காளியை யுபாஸித்த காளிதாஸருக்கு யாராவது அவத்யம் கூறுவாருண்டோ? தேசிகர் ஹயக்ரீவருடைய கடாக்ஷத் திற்குப் பாத்திரமானுர்; அவருடைய தேஜஸ்ஸினுல் ஆச்சர்ய சக்தியுண்டாகப் பெற்ருர் என்று சொல்லுவதுதான் பொருத்தமானது! இக்காலத்தில் ஸ்ரீகாஞ்சீபுரம் ஸ்வாமி நான்கு பாஷைகளி லும் 500க்கு மேற்பட்ட நூல்களை இயற்றி இன்னமும் இயற்றி வெளியிட்டு வருகிருரே, இது எந்த உபாஸனையினுல்? இந்த விசாரத்தை இவ்வளவோடு நிறுத்தி விடுவது நலம்.

தி. இ. வீரராகவ ராமாநுஜாசாரியர்.

ஸ்ரீ:

# நித்யவிபூதி லீலாவிபூதி ஸம்வாதங்கள்

— முன் தொடர்ச்சி-2 —

முந்தின வியாஸத்தின் உபக்ரமமும் உபஸம்ஹாரமும் சிறிது நினைப்பூட்டலாகிறது. ஸேநாபதியாழ்வானுடைய விஜ்ஞாபனத்தைக் கேட்டுகந்த பரவாஸுதேவனுடைய நியமனத்தைச் சிரமேற்கொண்டு திருவனந்தாழ்வான் ஸபரிவாரராய் லீலாவிபூதிக் கெழுந்தருளத் திருவுள்ளம்பற்றிக் கூரத்தாழ்வான் பட்டர் முதலாக ஸ்ரீ நிகமாந்த குருவரர் மணவாள மாமுனிகளீறாகவுள்ள ஆசாரியர்களைக் கூட்டிக்கொண்டு இவ்விபூதிக்கு வந்து சேர்ந்து திருவல்லிக்கேணியிலே பெரிய திருவோலக்கமாக விருந்து, அங்கு ஆஹூதர்களாய் உபஸ்திதர்களான வித்வான்களில் ஒருவர் ஸ்ரீ பாஷ்யார்த்தங்களை ஸாரமாக வெடுத்து உபந்யஸிக்கத் தொடங்கி ஜிஜ்ஞாஸாதிகரண - ஜந்மாத்யதிகரண - சாஸ்த்ரயோநித்வாதிகரண - ஸமந்வயாதிகரண. ஈக்ஷத்யதிகரண - ஆனந்தமயாதிகரண—அந்தரதிகரணங்களின் ப்ரமேயங்களைப் பூர்வபக்ஷஸித்தாந்தோபந்யாஸ ப்ரணாளியிலே யெடுத்துரைக்கத் திருச்செவி சாற்றியருளின எம்பெருமானார் பரம ஸந்தோஷத்துடனே உபந்யாஸகரை நோக்கி "இப்படிப்பட்ட அர்த்த விசேஷங்களை மேன்மேலும் கேட்கவேணு மென்கிற குதூஹலம் மிகவுமுள்ளது; சிலகாலம் நித்யவிபூதியை மறந்து இங்கே யிருக்க விருப்பமுள்ள தெமக்கு; மற்றும் பல ஆசாரியர்களும் கூடவந்திருப்பதால் அவர்களினுடைய ஸ்ரீ ஸூக்திகளிலிருந்தும் ஸாரமாகச் சில விஷயங்களைக் கேட்டுக் களிக்கக் காதலிக்கின்றேன்; இன்று பிரிந்து மறுபடியும் அடுத்தநாள் கூடுவோமென்று ஸாதிக்க, அன்று ஸபாவிஸர்ஜனமாயிற்றென்று முடித்திருக்கிறது. மறுபடியும் ஸபை கூடினபோது உபந்யஸிக்கப்பட்ட விஷயங்கள் இனிக் காணத்தக்கன.

உபந்யாஸகர் எம்பெருமானாரை நோக்கிக் கைகூப்பி விஜ்ஞாபிக்கிறார். ஸ்வாமிந்! ஸ்ரீ பாஷ்யத்திலிருந்து அடியேன் விஜ்ஞாபித்தவை யிருக்கட்டும். அடியேனுக்கு கீதாபாஷ்யம்போல் வேறு எதுவும் ரஸிக்கவில்லை. சில பண்டிதர்கள் திரளுமிடத்தில் ஒரு ப்ரஸ்தாவம் நிகழ்வதுண்டு. (அதாவது) மணவாள மாமுனிகள் உபதேசரத்தினமாலையில் "ஓராண்வழியா யுபதேசித்தார் முன்னோர்; ஏராரெதிராசரின்னருளால்—பாருலகில் ஆசையுடையோர்க் கெல்லாம் ஆரியர்காள்! கூறுமென்று, பேசி வரம்பறுத்தார்பின்" என்கிற பாசுரத்தினால் ச்ரத்தாளுக்களுக்கு ரஹஸ்யார்த்தங்களை முன்னோர்களைப்போல் மறைத்திடாமல் தாராளமாக உபதேசிக்கும்படி தேவரீர் பலர்க்கும் நியமித்தருளினதாக ஸாதிக்கப்பட்டுள்ளது. ஆனால், இவ்வளவு விசாலஹ்ருதயம் படைத்த தேவரீர் ரஹஸ்யார்த்தங்களை வெளியிட்டு ஒரு ரஹஸ்ய க்ரந்தமாவது ஸாதித்திருக்கலாகாதா? தேவரீர் தாமே ஸாதித்தருளியிருந்தால் பின்புள்ளார்க்கு அர்த்தங்களில் விவாதம் விளைய அவகாசமேயிராதே. ஸ்வாமி ஏன் வாளாவிருந்திட்டது? என்று பண்டிதர்கள் பேசிக்கொள்வதுண்டு; அப்போது சில பெரியார்கள் ஸாதிப்பதென்னவென்றால், "ஸ்வாமி ஏன் ஸாதித்தருளவில்லை? ஸ்வாமி தாமே மணவாள மாமுனிகளாகத் திருக்கோலம் பூண்டது இதற்காகத்தானே" என்று. அது வஸ்துஸ்திதியேயாயினும் அடியேன் ஒரு வார்த்தை விஜ்ஞாபிப்பது வழக்கம். கீதா பாஷ்யத்தை ஆழ்ந்து நோக்கினால் ஸகல ரஹஸ்யார்த்தங்களும் அதில் கையிலங்கு நெல்லிக்கனியாகக் காணலாமேயென்று. அடியேன் கீதாபாஷ்ய ஸாகரத்தில் அவகாஹித்துக் கண்டெடுத்த முத்துக்களை

ஸ்வாமி திருமுன்பே ஸமர்ப்பிக்கிறேன். கீதா பாஷ்யத்திற்கு தாத்பர்ய சந்திரிகை யென்னும் டீகை அமைந்தது தனிப்பட்டவோர் அதிசயம். "தர்மோர்த்த இவ பூர்ணஸ்ரீ: அர்த்தோ தர்ம இவ த்வயி" என்னுமாபோலே இந்த பாஷ்ய டீகைகள் இரண்டும் க்ஷீரமும் சர்க்கரையும் போலே சேர்ந்து ரஸிப்பித்து ரஸ்ய ரஹஸ்யார்த் தங்களைக் காத்தூட்டியிருக்கு மழகை என்சொல்லுவோம். ஸகல ரஹஸ்யார்த்தங் களையும் கீதாபாஷ்யமும் தாத்பர்ய சந்திரிகையும் ஸுபரிஷ்க்ருதமாக்கி யிருக்கும் படியை ஸாரமாகவெடுத்து விஜ்ஞாபிக்கிறேன் திருச்செவி சாத்தியருளவேணும்.

ரஹஸ்யார்த்த நிர்வாஹத்தில் சில விஷயங்கள் உயிராகக் கொள்ளப்படுகின்றன.

(1) ஜீவாத்மாவுக்கு ஜ்ஞாநாநந்தங்களைவிட சேஷத்வமே அந்தரங்க நிரூபகம்.

(2) ஸ்வகதஸ்வீகாரத்திற் காட்டிலும் பரகதஸ்வீகாரமே மிகச்சிறந்தது.

(3) சேதநனைப் பெறுவது எம்பெருமானுக்குப் புருஷார்த்தமேயொழிய, எம்பெருமானைப் பெறுவது சேதநனுக்குப் புருஷார்த்தமன்று.

இன்னும் சில விஷயங்களும் மருமமாக இருந்தாலும் இம்மூன்றும் முக்கிய தமங்களாகக் கருதப்படுகின்றன. மற்றவையும் இவற்றுள் அந்தர்ப்பவிக்கும். ஆக இவ்வரிய பெரிய அர்த்த விசேஷங்களை தேவரீர் கீதாபாஷ்யத்தில் தெரியவைத்திருக் கும்படியை தேவரீர் திருவுள்ளமுகக்க உபபாதிக்கிறேன். ஸ்ரீ உவே. சித்ரகூடம் வித்வான் அ. வேங்கடாசார்யஸ்வாமி ப்ரவக்தாவை உத்ஸாகப்படுத்துகிறார்.

பகவத் விஷயம் (ஈடு), ஸ்ரீவசநபூஷண வியாக்கியானம், குருபரம்பரா ப்ரபாவம் முதலான க்ரந்தங்களிலே காண்பதோரிதிஹாஸமாவது—"எம்பெருமானார் உபய வேதாந்தப்ரவசநம் நடத்தியருளா நிற்க 'ஆத்மாவுக்கு ஜ்ஞாநாநந்தங்களும் சேஷத்வமும் நிரூபகமாகச் சொல்லப்படாநின்றதே, இவற்றினுள் அந்தரங்க நிரூபகம் எது?' என்கிற ப்ரஸ்தாவம் திருவோலக்கத்திலே நிகழ, ஸ்வாமி ஸர்வஜ்ஞராயெழுந்தருளியிருக்கச் செய்தேயும் இதனை ஆசார்யமுகேந வெளியிடுவிக்க வேணுமென்று திருவுள்ளம்பற்றி, திருக்கோட்டியூர் நம்பிபக்கலிலே சென்று ஸேவித்து இதனை யறிந்து வரும்படி ஆழ்வானை யனுப்பியருள, ஆழ்வானும் திருக் கோட்டியூருக்குச் சென்று நம்பி பக்கலிலே ஆறுமாஸம் காத்திருந்து * அடியேனுள் ளானுடலுள்ளான் * (8-8-2.) என்கிற திருவாய்மொழிப் பாசுரத் துணுக்கையைப் பெற்றுக்கொண்டு எம்பெருமானாரிடம் வந்து சேர்ந்து அதை விஜ்ஞாபிக்க, மஹா நிதியான இந்தஸ்ரீஸூக்தியினுட்பொருளை ஸ்வாமி யெம்பெருமானார் திருவோலக்கத் திலே விவரித்தருளினார்." என்பதாக வுள்ளது.

அடியேனென்கிற சொல் நாலாயிர திவ்யப்ரபந்தத்தினுள் நூற்றுக்கணக் கான விடங்களிலுண்டு; நம்மாழ்வார் பாசுரம்பேசத் தொடங்கும்போதே 'அடியேன் செய்யும் விண்ணப்பமே' என்று அடியேன்சொல்லையிட்டே பேசுகிறார். இப்படி பல நூறிடங்களில் அடியேன்சொல் இருக்கவும் அவற்றையெல்லாம் விட்டுத் திருவாய்மொழியில் ஒரு மூலையிலிருக்கும் பாசுரத் துணுக்கொன்றைத் திருக்கோட்டி யூர்நம்பி எடுத்துக் கொடுத்தனுப்பியிருக்கிறார்; அது எட்டாம்பத்தின் எட்டாம் பதிகத்தின் இரண்டாம் பாட்டிலுள்ளது. அங்கேயே முதற்பாட்டின் முடிவிலும் 'ஒருவனடியேனுள்ளானே' என்று அடியேன்சொல்லுள்ளது; அதையும் விட்டு அடுத்தபாட்டினடியை யெடுத்துக் காட்டியுள்ளார். இதில் என்ன விசேஷமென்பது நுண்ணுணர்வினர் நுண்மதிக்கே கோசரமாகக் கூடிய விஷயம். (கேண்மின்;) எந்த இடத்திலும் அடியேனென்கிற சொல்லுக்கு தேஹவிசிஷ்டனான ஆத்மாவே பொரு ளாகும். *அடியேன் செய்யும் விண்ணப்பமே* என்னுமிடத்தை யெடுத்துக் கொள் வோம்; தேஹமின்றிக்கே வெறும் ஆத்மா விண்ணப்பம் செய்ய முடியாதன்றே. தேஹவிசிஷ்டனான ஆத்மாவே விண்ணப்பஞ் செய்ய முடியுமாதலால் இங்கு வெறும்

ஆத்மாவை அர்த்தமாகக் கொள்வதற்கில்லை; *அடியேன் சிறிய ஞானத்தன்* என்கிற மற்றோரிடத்தையும் (1-5-7.) எடுத்துக் கொள்வோம்; இங்கு 'ஞானத்தன்' என்று ஞானமுடைமை சொல்லியிருப்பதனால் அது தேஹத்திற்கு அஸம்பாவிதமாய் ஆத்மாவுக்கே ஸம்பாவிதமாகையாலே இங்கு அடியேனென்பது வெறும் ஆத்மாவையே சொல்லியாகவேண்டுமென்று சிலர் ப்ரமிக்கக்கூடும்; அப்படியில்லை; இங்கும் அடியேனென்கிற சொல் தேஹவிசிஷ்டனான ஆத்மாவையே சொல்லுகிறது; ஏனென்னில், "காண்பானலற்றுவன்" என்கிற க்ரியையிலே அச்சொல் அந்வயிக்க வேண்டும்; வெறும் ஆத்மா அலற்ற முடியாதாகையாலே அங்கும் தேஹவிசிஷ்டனான ஆத்மாவே அடியேன்சொல்லுக்கு அர்த்தமாக வேண்டியது அவசியமாயிற்று. இப்படி எந்தவிடத்திலும் தேஹவிசிஷ்டனான ஆத்மாவையே அடியேன்பதம் சொல்லி நிற்குமென்பது திண்ணமாயிற்று. *ஒண் சங்கதை வாளாழியானொருவனடியே னுள்ளானே* என்கிறவிடத்திலும் அப்படியே.

இனி *அடியேனுள்ளானுடலுள்ளான்* என்கிறவிடத்தில் மட்டும் அடியேனென்பதற்கு வெறும் ஆத்மாவே அர்த்தமாகவேண்டிய நிர்ப்பந்தமுள்ளது. ஆத்மாவுக்கு விசேஷண பூதமான தேஹத்திற்கு வாசகமான சொல் உடலென்பது தனிப்பட இருப்பதனால் அடியேனில் தேஹத்தைச்சேர்த்து அர்த்தங்கொள்ள வேண்டிய அவச்யமில்லை; எம்பெருமான் ஜீவாத்மாவையும் உடல்பொருளையும் அநுப்ரவேசித்திருக்குமவன்' என்று சொல்ல வேண்டுவது இங்கு விவக்ஷிதம். உடலிலுள்ளானென்பதனால் ஜடப்பொருளை அநுப்ரவேசித்திருக்குமவன் என்பது சொல்லிற்றாயிற்று. 'ஜீவாத்மாவை அநுப்ரவேசித்திருக்குமவன்' என்று விவக்ஷிதமான பொருளுக்கு *அடியேனுள்ளானென்று வாசகமிடப்பட்டிருக்கிறது. ஆத்மா அஹமர்த்தமாகையாலே என்னுள்ளானென்று சொல்லியிருக்கலாம்; அப்போதும் ஆத்மாவிலுள்ளானென்னும் பொருள் தேறிவிடும். ஆனால் ஆழ்வார் அப்படியருளிச் செய்யாமல் *அடியேனுள்ளானென்றருளிச் செய்திருக்கையாலே, ஆத்மாவென்றும் அடியேனென்றும் பர்யாயம் - (அதாவது) ஆத்மாவுக்கு சேஷத்வமே அந்தரங்க நிரூபகம் - என்பது ஆழ்வார் திருவுள்ளமாக அறுதியிடலாகிறது. சிஷ்ய கோஷ்டியில் இப்படி தேவரீர் நிர்ணயித்ததாகச் சொல்லுமைதிஹ்யம் உண்மையாயிருக்க வேண்டுமாகில் இது தேவரீருடைய திவ்யஸூக்திகளில் எங்கேயாவது ஏறி யிருக்க வேணும். இல்லையாகில் இந்த ஐதிஹ்யத்திற்கு கௌரவமில்லை. ஸ்ரீபாஷ்யத்தில் *ஜ்ஞோத ஏவ* என்கிற ஸூத்ரத்தின் விவரணத்தில் இது தெரிவிக்கப்படவில்லை. அங்கு "அயமாத்மா ஜ்ஞாத்ருஸ்வரூப ஏவ" என்று இவ்வளவே முடிவாகத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே மேலே விவரித்த ஐதிஹ்யம் யதார்த்தமாயிருக்கத் தகுதியில்லையென்று குருகுலவாஸபாக்யமில்லாதார்சிலர் வலிதாகச்சொல்லுவதுண்டு. அன்னவர்களை "எண்ணாத மானிடத்தை எண்ணாத போதெல்லாமினியவாறே" என்கிற ரீதியில் விட்டிட்டு தத்வஜிஜ்ஞாஸுக்களான ஸுக்ருதிகளுக்கு அடியேன் பலகால் மருமமுணர்த்துவதுண்டு; இந்த மஹார்த்தம் தேவரீர் திருவுள்ளத்திலே நன்கு ஊறியிருந்து கீதாபாஷ்யத்தில் தகுந்த இடத்தில் வெளியிடப்பெற்றுள்ளது. கீதையில் (7-16.) *சதுர்விதா பஜந்தே மாம் ஜநாஸ் ஸுக்ருதிநோர்ஜுந!, ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ ச பரதர்ஷப!* என்றவிடத்தில் சங்கர பாஷ்யத்தை முன்னம் நோக்கிப் பிறகு ஸ்வாமி பாஷ்யத்தை நோக்கவேணும். 'ஜ்ஞாநீ - விஷ்ணோஸ் தத்த்வவித்" என்றார் சங்கராசார்யர்; தேவரீர் அப்பொருளை ஒன்றாக எண்ணாது "பகவச் சேஷதைகரஸ ஆத்ம ஸ்வரூபவித் ஜ்ஞாநீ" என்று அருளிச் செய்தீர். இப்படி ஓரிடமன்று. ஜ்ஞாநீ என வருமிடங்களிலெல்லாம் இங்ஙனேதானருளிச் செய்தீர். ஜீவாத்மாவின் ஜ்ஞானத்திற்கு ப்ரயோஜனம் தன்னுடைய சேஷத்வத்தை யறிவதுதான் என்று தேவரீர் திருவுள்ளம் தேறுகிறது.

ஆழ்வார் ஸ்ரீஸூக்தியில் அவகாஹந மில்லாமல் இங்ஙனே யருளிச்செய்ய இயலா தென்று அடியேன் அத்யவஸித்திருக்கின்றேன்.

இடையில் எம்பெருமானார் அருளிச்செய்கிறார்—ஆழ்வானைத் திருக்கோட்டியூர் நம்பி பக்கலிலே போகவிட்டதும், அவர் அங்கு ஆறுமாஸம் காத்திருந்து நிதி கொணர்ந்தாப்போலே * அடியேனுள்ளான் பாசுரம் கொணர்ந்ததும், அதை நான் ஸதஸ்ஸில் விவரித்துக் காட்டினதும் ஏறக்குறைய ஆயிரமாண்டு ஆகிறது, அது வொரு நல்லடிக்கால்ம். அதை நீர் இப்போது நினைப்பூட்டினது ஸத்யம் மே ரோம ஹர்ஷணம். "பகவச் சேஷதைகரஸ ஆத்மஸ்வரூபவித்-ஜ்ஞாநீ" என்று நான் சொல்ல, ஆழ்வான் திருவுள்ளம் பூரித்துப் பட்டோலை கொண்ட ஸந்தர்ப்பம் நன்கு நினைவுக்கு வருகின்றது. 'பிற்காலத்தில் இதின் சுவையைக் கண்டறியப் போகிறவர் யார்?' என்று அப்போது நான் நினைத்ததுண்டு. அக்குறைதீர இன்று நீர் எடுத்து விவரித்துக் காட்டினது உமக்கே நிலமென்று நினைக்கலாயிருக்கின்றது. ஸந்தோஷம்! பரம ஸந்தோஷம்!! அடுத்த விஷயம் சொல்லும், கேட்போம்.

இனி, ஸ்வகதஸ்வீகார பரகதஸ்வீகாரங்களைப்பற்றி தேவரீர் தெளிவு பெறுத்தியிருக்கும் அழகை விஜ்ஞாபிக்கிறேன். சேதநன் தான் எம்பெருமானைப் பற்றுவதானது ஸ்வகத ஸ்வீகாரமென்றும், எம்பெருமான் தானே சேதநனை வரிப்ப தானது பரகத ஸ்வீகார மென்றும் சொல்லப்படுகிறது. அடைவே மர்க்கடகிசோர ந்யாயமென்றும் மார்ஜாரகிசோர ந்யாயமென்றும் வழங்குவர். பரகத ஸ்வீகார மென்பதன் சுவையை அறியப்பெறாதவர்கள் இது அஸம்பிரதாயப் பேச்சு' என்பர். அது கிடக்க. கீதா பாஷ்யத்தில் தேவரீர் தெளிவித்தருளின மஹார்த்தம் இது. அதில் எட்டாவது அத்யாயத்தில் பதினான்காவது ச்லோகம். "அநந்யசேதாஸ் ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யச:, தஸ்யாஹம் ஸுலப: பார்த்த! நித்யயுக்தஸ்ய யோகிந:" என்பது. *ஜ்ஞாநீது ஆத்மைவ மே மதம்* என்று பகவான் தான் தனக்கு உயிர்நிலையாகக் கொண்டாடும் ஞானியானவன் தன்னை உபாஸிக்க வேண்டியபடியையும் பேறு பெறும் பரிசையும் இனி யருளிச் செய்கிறான் கண்ணபிரான்—என்று அவதாரிகையிட்டு சுலோகத்தை வெகு அழகாக வியாக்கியானித்தருளியிருப்பது தேவரீருடைய பாஷ்ய மொன்றில்தான். இந்த சுலோகத்தின் கருத்து என்ன வென்றால், அர்ஜுநா! எவன் இடைவிடாமல் எப்போதும் வேறொன்றிலும் நெஞ்சைச் செலுத்தாதவனாய் என்னையே ஸ்மரிக்கிறானோ, என்னோடு நித்யஸம்ச்லேஷத்தை விரும்பியிருக்கின்ற அந்த பக்தனுக்கு நான் ஸுலபன்—என்பதேயாம். இதில் (தஸ்யாஹம் ஸுலப:) அவனுக்கு நான் எளியன் என்கிற பகுதிக்கு தேவரீர் பாஷ்யம் செய்தருளியிருக்கின்ற அழகை என் சொல்வோம்! பாஷ்யபங்க்திகள் வருமாறு:—

"தஸ்ய நித்யயுக்தஸ்ய - நித்யயோகம் காங்க்ஷமாணஸ்ய யோகிந:. அஹம் ஸுலப:- அஹமேவ ப்ராப்ய:,ந மத்பாவ ஐச்வர்யாதிக:- ஸுப்ராபச் ச. தத்வியோகம் அஸஹமாந: அஹமேவ தம் வ்ருணே. மத்ப்ராப்த்யநுகுண - உபாஸநவிபாக தத்விரோதி நிரஸநம் அத்யர்த்த மத்ப்ரியத்வாதிகஞ்ச அஹமேவ ததாமி இத்யர்த்த:. *ய மேவைஷ வ்ருணுதே தேந லப்ய:* இதிஹி ச்ரூயதே. வக்ஷ்யதே ச *தேஷாம் ஸதத யுக்தாநாம் பஜதாம் ப்ரீதிபூர்வ கம். ததாமி புத்தியோகம் தம் யேந மாமுபயாந்தி தே. தேஷா மேவாநுகம்பார்த்தம் அஹ மஜ்ஞாநஜம் தம:. நாசயாம்யாத்மபாவஸ்தோ ஜ்ஞாநதீபேந பாஸ்வதா* இதி.

இவ்வளவும் தேவரீருடைய கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்திகள். இவற்றின் பொருளாவது—என்னோடு எப்போதும் கூடியிருக்க வேணுமென்கிற விருப்பமுடையவனுக்கு அடையத் தகுந்தவன் நானேயாகிறேன். மிக எளிதாக அடையத்தகுந்தவனுமாகிறேன் நான்; (அதாவது) அவனுடைய பிரிவைப் பொறுக்கமாட்டாதவனாய் (அவனைப் பிரிந்து தரித்திருக்க மாட்டாதவனாய்) நானே அவனை வரிக்கிறேன்.

என்னையடைவதற்கான உபாஸனத்தின் பரிபக்குவ நிலைமையையும் அதற்குற்ற இடையூறுகள் நீங்குதலையும் என்னிடத்தில் அதிகமான ப்ரீதி முதலியவைகளையும் நானே கொடுக்கிறேன். *நாயமாத்மா ச்ருதியில் இவ்வர்த்தம் ப்ரஸித்தமாயிருப்ப தோடு இந்த கீதையிலேயே மேலே பத்தாவது அத்யாயத்தில் 10, 11 ச்லோகங்களாலும் சொல்லப்படுகிறது என்பதாம். ஸத்ஸம்பிரதாய ஸாரார்த்தம் இங்கே பொதிந் திருக்குமழகை இனி உபபாதிக்கிறேன்.

ஸ்ரீவசநபூஷணத்தில் 142 "இவன் அவனைப்பெற நினைக்கும்போது பாதகமும் விலக்கன்று" என்று அருளிச் செய்தவிடத்தில் வியாக்யானத்தில் மணவாளமாமுனிகள்—"உடமையை உடையவன் சென்று கைக்கொள்ளுமாபோலே ஸ்வாமியான அவன் தானே வந்து அங்கீகரிக்கக் கண்டிருக்கக்கடவ பரதந்திரனான இச்சேதனனான வன் தான் பலியாய் தன் ஸ்வீகாரத்தாலே ஸ்வதந்த்ரனான அவனைப்பெற நினைக்குமளவில் அவன் நினைவு கூடாதாகில் இப்படி விலக்ஷணையாயிருக்கிற ப்ரபத்தியும் தல்லாபஸாதனமாகாதென்றபடி......ஸ்வாமியாய் ஸ்வதந்த்ரனான அவன் ஸ்வம்மாய் பரதந்த்ரனாயிருக்கிற' இவனை ஸ்வேச்சையாலே பெற நினைக்குமளவில் பாதகமும் பிரதிபந்தகமாகமாட்டாதென்கை. இவையிரண்டாலும் ஸ்வகதஸ்வீகாராநுபாயத்வமும் பரகதஸ்வீகாரோபாயத்வமும் காட்டப்பட்டது." என்றருளிச் செய்திருக்கும் ஸ்ரீஸூக்திகள் மேலே காட்டிய கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்திகளையே அடியாகக் கொண்டவையென்று நன்கு புலப்படுகின்றன. (மணவாளமாமுனிகள்) தாம் முன்பு ஒரு வேஷத்தாலே கீதாபாஷ்யத்தில் வடமொழியாலே அருளிச் செய்ததை பின்பு மற்றொரு வேஷத்தாலே ஸ்ரீவசநபூஷண வியாக்யானத்தில் தென்மொழியாலே அருளிச் செய்தாரென்று அறுதியிடத் தட்டில்லை.

மேலே உதாஹரித்த கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்தியில் ஒவ்வொரு வாக்கியமும் ஸாரமானது. (*தத்வியோகம் அஸஹமாநः அஹமேவ தம் வ்ருணே*) ஞானியான சேதனனைப் பிரிந்திருப்பதை எம்பெருமான் தான் பொறுத்திருக்கமாட்டாதவனாய்த் தானே அந்த சேதனனை வரிப்பதாகக் கூறுகின்றவிதுதான் பரகத ஸ்வீகாரமென்பது. (*மத்ப்ராப்த்யநுகுணோபாஸந விபாகம் அஹமேவ ததாமீத்யர்த்த:) என்கிற இந்த வாக்கியமானது ஸ்வகதஸ்வீகாரப் பற்றாசை நன்றாகக் கழிக்கிறது. இத்தலையில் விளைவதெல்லாம் எம்பெருமானுடைய க்ருஷிபலமாக விளைகின்றதேயன்றி இவன் தலையாலே விளைவித்துக் கொள்ளுமது ஒன்றுமில்லை யென்கிற ஸத்ஸம்ப்ரதாய ஸாரார்த்தம் தெளிவிக்கப்பட்டது. இந்த இடத்தில் *நாயமாத்மா ச்ருதியையும் எடுத்துக்காட்டியருளின தேவரீர் பரகதஸ்வீகாரத்திற்கு அதுவே பிரமாணமென்று நிரூபிக்கிறமுகத்தாலே பிறருடைய குத்ஸிதவாதங்களையும் அகற்றிற்றாயிற்று.

இவ்விடத்தில் தாத்பர்ய சந்த்ரிகையில் தேசிகன் அருளிச் செய்துள்ள திவ்ய ஸூக்திகளும் தெள்ளியவே. "உக்தஸ்ய அதிவாத மாத்ரத்வசங்காவ்யுதாஸாய ச்ருதிமூலதாமாஹ * ய மேவேதி. என்றருளிச் செய்திருப்பது ஆழ்ந்து நோக்கத்தக்கது.

இவ்விஷயத்தில் ஸாரமாகத் தெரிந்துகொள்ள வேண்டியது இவ்வளவே; *த்வத்பாதமூலம் சரணம் ப்ரபத்யே* என்றும் * புகலொன்றில்லாவடியேன் உன்னடிக் கீழமர்ந்து புகுந்தேனே* என்றும் சொல்லிக்கொண்டு (அதாவது, நாம் பற்றுகிறோமாகக் காட்டிக்கொண்டு) திருவடிகளிலே விழுந்தாலும், 'இது நாம் பற்றின பற்றன்று; எம்பெருமான் தானே பற்றுவித்தானத்தனை: அவனுடைய க்ருஷி பலித்ததத்தனை' என்று உள்ளூர அநுஸந்திக்க ப்ராப்தம். இதையிட்டே பரகத ஸ்வீகார மென்கிறது.

* நாயமாத்மாச்ருதியின் பொருளில் இற்றைக்கும் தெளிவில்லாமேயிருப்பார் பலருளர். அன்னவர்கட்கு நற்றெளிவைப் பிறப்பிக்கவே இந்த கெட்டம் அமைந்

தது. இங்கே தேவரீர் ஸாதித்தது தீபம் போன்றது. இதோ பிள்ளை லோகாசாரிய ரருகே ஸேவை ஸாதிக்கின்ற வேதாந்தவாசிரியர் ஸாதித்தது ப்ரதீபம் போன்றது. தீபாதுத்பந்ந ப்ரதீபமென்பர்களே, இது இங்கு மிகத்தகும். "உக்தார்த்தே ப்ரமாணம் தர்சயதி *யமேவேதி" என்று ஸாதிக்கலாமாயிருக்க, அங்ஙனம் ஸாதித் தருளாமல் "உக்தஸ்ய அதிவாதமாத்ரத்வ சங்காவ்யுதாஸாய ச்ருதிமூலதாமாஹ—யமேவேதி." என்று (தாத்பரிய சந்திரிகையில்) ஸாதித்திருப்பதை நோக்குமளவில் இந்த பரகதஸ்வீகாரபக்ஷத்தை அதிவாதமென்று அக்காலத்தில் சிலரோ பலரோ சங்கித்துக் கொண்டிருந்தார்களென்பது தெரிய வருகின்றதன்றே. அது யதார்த்த வாதமேயொழிய அதிவாதமன்று என்று விளக்கியுங்கூட, இன்னமும் இதை அதிவாதமென்றே சொல்லிக்கொண்டும் தூஷித்துக்கொண்டுமிருந்து "தாத்பர்ய சந்த்ரிகாகாரரைத் தாங்குமவர்கள் நாங்களே" யென்றும் கூறிவருவதுதான் வியப்பு.

இங்கே வேதாந்த தேசிகர் எழுந்துநின்று ஸாதிக்கிறார்—இக்காலத்தில் இங்கிலத்தில் என்னைத் தாங்குவார் சிலரிருப்பதாக எண்ணிக்கொள்வதையும் சொல்லிக்கொள்வதையும் நானுமறிவேன். அன்னவர்கள் வெகு ஸமீப காலத்தில்தான் என்னைப் பற்றித் தெரிந்துகொண்டவர்களாய், என்மீது பரிவுகாட்டுமவர்கள் என்பதையும் நன்கு அறிவேன். என்னுடைய உக்திகளில் எந்தெந்த விஷயங்களை வபையாக வைத்திருக்கிறேனே அவற்றில் ஒன்றையும் அறியப்பெறாததோடு ஒவ்வொன்றையும் விபரீதமாகவே ப்ரவசனமும் ப்ரசாரமும் செய்துவருமவர்கள் "குரௌ வாதிஹம்ஸாம்புதாசார்ய சிஷ்யே ஜநா பக்திஹீநா யதீந்த்ராப்ரியாஸ் ஸ்யு:" என்று வானம்பிளக்க கோஷிப்பதானது தங்கள் நிலைமையைத் தாங்களே கோஷித்துக்கொள்ளுகிறபடியென்றே தத்வதர்சிகள் உணர்ந்திருப்பர்கள். எந்தெந்த அபார்த்தங்களை ஸ்ரீபாஷ்யகார ஸ்ரீஸூக்திச் சாயையிலே நான் களைந்தொழித்தேனே, அந்த அபார்த்தங்களையே சிக்கனப் பற்றிக்கொண்டு வாதிக்குமவர்கள் என்னோடு உறவு கொண்டாடுவது யானைகள் ஸிம்ஹத்தை ஸ்வகுலகூடஸ்தத்வேந கொண்டாடுமா போலேயிருந்ததத்தனை. நீர் மருமமறிந்து உபந்யஸித்து வருவதைச் செவிகுளிரக் கேட்கிறேன். மேலே சொல்லீர். என்று.

இனி, சேதநலாபம் ஈச்வரனுக்கே பேறு என்னும் பரம ரஹஸ்யார்த்தத்தில் ஸ்வாமி காட்டியருளியிருக்கும் தெளிவை உபபாதிக்கிறேன். "ப்ரஹ்மவித் ஆப்நோதி பரம்" இத்யாதி சாஸ்த்ரங்களை மேலெழப் பார்க்கும்போது 'ஈச்வரனை அடைவது சேதநனுக்குப்பேறு' என்பதாகவே தோற்றி நிற்கும். ஈச்வரனை ப்ராப்யனென்றும், சேதநனை ப்ராப்தாவென்றும் ஸ்பஷ்டமாகப் பல விடங்களிலும் சொல்லியிருக்கையாலே 'ஈச்வரலாபம் சேதநனுக்குப் புருஷார்த்தம்' என்றே க்ரஹிக்க நேரும். பிறர் இப்படியே மதமாகக் கொண்டிருக்கிறார்கள். "ஈச்வரனுக்கு சேதந லாபம் புருஷார்த்தம்" என்பது தேவரீருடைய ஸித்தாந்த ஸாரம். இதை நன்கு கண்டறிந்த ஸ்ரீ தேசிகருடைய திருவுள்ளமும் சேதநலாபம் ஈச்வரனுக்குப் பேறு என்பதேயாம். இதனை அவர் கீதாதாத்பர்ய சந்த்ரிகையில் வெகு அழகாகக் காட்டியுள்ளார். கீதையில் ஒன்பதாமத்யாயத்தின் முடிவிலுள்ள * மந்மநா பவ * என்கிற ச்லோகத்தின் தேவரீருடைய பாஷ்யத்திற்கு விவரணமெழுதுகையில்—"ஆச்ரித ஸம்ரக்ஷணம் ஸ்வலாபம் மத்வா ப்ரவர்த்ததே" என்றருளியிருப்பது ஸாரமானது. "ப்ராப்தாவும் ப்ராபகனும் ப்ராப்திக்கு உகப்பானும் அவனே" எனபது ஸ்ரீவசந பூஷண ஸ்ரீஸூக்தி. சேதநனைப் பெறுவது ஈச்வரனுக்குப் பேறு என்றால் இவ்வர்த்தம் ஹ்ருதயத்தில் அவகாஹிப்பது சிரமமேயாகும். ஆனாலும் உண்மையான ஸ்ரீ பாஷ்யாதிகாரிகளுக்கு இதுதான் ராஜமார்க்கமாகத் தோன்றும்.

"தேவரீர் ஸ்ரீபாஷ்யத்தின் முடிவில் * அநாவ்ருத்திஸூத்ரபாஷ்யத்தில் "நச பரமபுருஷஸ் ஸத்ய ஸங்கல்ப: அத்யர்த்தப்ரியம் ஜ்ஞாநிநம் லப்த்வா கதாசித்

ஆவர்த்தயிஷ்யதி" என்கிற ஸ்ரீ ஸூக்தியினால் 'சேதநலாபமே ஈச்வரனுக்குப் பேறு' என்கிற ஸத்ஸம்ப்ரதாய ரஸ்ய ரஹஸ்யப்பொருளை ஸ்தாபித்தருளினீர். அங்கே விஷயம் என்னவென்றால், மோக்ஷத்திற்குச் சென்ற சேதநன் திரும்பிவருதல் உண்டா இல்லையா? என்று விசாரம் வந்தது. ஈச்வரன் கேட்பாரற்ற ஸ்வதந்திர னாதலால் அந்த ஸ்வாதந்திரியத்தினால் முக்தாத்மாவைத் திருப்பியனுப்பிவிடக் கூடுமன்றோ என்கிற சங்கையுண்டாக, ஸூத்ரகாரர் "அநாவ்ருத்திச்சப்தாத்" என்று ஸூத்ரமியற்றினர். முக்தாத்மா ஒருநாளும் திரும்பி வருவதில்லையென்று சாஸ்த்ரம் முறையிட்டிருக்கையாலே புநராவ்ருத்தி கிடையாதென்று ஸூத்ரகாரர் சொல்லிவிட்டார். தேவரீர் இவ்வர்த்தத்தை வியாக்கியானித்தருளி ஈச்வரன் ஸ்வதந்திரனாகையாலே கேட்பாரற்று முக்தாத்மாவை மீண்டும் கீழே தள்ளிவிட நினைத்தால் என் செய்வது? என்கிற சங்கையின்மீது, 'தள்ளமாட்டானென்று சாஸ்த்ரம் சொல்லியிருக்கையாலே' என்று விடை கூறினதால் என்ன ஸமாதானம் வந்ததாகும். சாஸ்த்ரத்தையும் மீறிச்செய்வதன்றோ ஸ்வதந்த்ரக்ருத்யம். அப்படிப் பட்ட ஸ்வாதந்திரியத்தாலே ஈச்வரன் ஒன்று செய்யப்புகுந்தால் சாஸ்த்ரம் குறுக்கே நிற்குமோ? என்பதன்றோ இங்குப் பூர்வபக்ஷியின் கருத்து. அதற்குத் தினவடங்கச் சொல்லவேண்டிய ஸமாதானத்தை ஸூத்ரகாரர் சொல்லாத குறைதீர—சங்கராசாரி யரும் சொல்லாத குறைதீர தேவரீர் வெகு அழகாக அருளிச்செய்தீர்.

ஈச்வரன் ஸ்வதந்திரனே யானாலும் உன்மத்தனல்லன், மூர்க்கனல்லன், அரஸிகனல்லன், ஸத்யஸங்கல்பனென்று பேர்பெற்றவன். தன்னுடைய மநோ ரதத்திற்கு மாறுபாடாக நடந்துகொள்பவனல்லன். ஒரு சேதநனைப் பெறுவதற்கு அவன் என்னபாடு படுகிறான்? அவன் ஸ்ருஷ்டி பண்ணுவதும் அவதாரங்கள் பண்ணுவதும் சேதநரை லபிக்கைக்காகவன்றோ? எவ்வளவோ தவப்பயனாக ஒரு சேதநனை லபித்த பின்பும் ரஸிகனான பரம புருஷன் அவனை இழப்பனோ?—என்று இவ்வளவுமெழுதி தேவரீர் சங்காபரிஹாரத்தைத் தலைக்கட்டியுள்ளீர். இதில் "பரம புருஷ: ஜ்ஞாநிநம் லப்த்வா" என்கிற ஸ்ரீஸூக்திவிந்யாஸமானது தேவரீ ருடைய திருவுள்ளத்தில் திருவாய்மொழி யமுதக்கடல் அலையெறிகிறபடியை நன்கு காட்டுகிறது. கீதையில் "ஸ மஹாத்மா ஸுதுர்லப:" என்று எம்பெருமான் தானே சோதிவாய் திறந்துபணித்ததையும் உடனே உதாஹரித்தருளினீர். *எல்லாம் கண்ண னென்றிருக்கிற மஹாத்மா மிகவும் துர்லபன் என்று பகவான் தன் திருவாக்காலே சொன்னால், அப்படிப்பட்டவொரு மாஞானியை லபிக்கைக்கு அவன் எவ்வளவோ பாடுபடுகிறவன் என்பது விளங்கவில்லையா? ஆகவே சேதந லாபமே ஈச்வரனுக்குப் பேறு என்கிற ஸித்தாந்தம் தேவரீருடைய திவ்ய ஸூக்தியில் நன்கு பொலிந்த தாயிற்று. ஆகில், யத்கிஞ்சித்ஸுக்ருதகரணம், பேற்றுக்கு த்வரிக்கை இவை யெல்லாம் நம் பக்கலில் அடியோடு வேண்டாவோ என்று பிறர் க்ஷேபிக்கவருவர்கள். சைதந்ய கார்யமாக விளையுமவை நம்மால் தடுக்க வொண்ணாதவை. அவையுங்கூட நம்மால் விளைவனவல்ல என்பதை இதோ ஸேவை ஸாதிக்கும் வேதாந்தவாசிரியரே "நிதாநம் தத்ராபி ஸ்வய மகில நிர்மாண நிபுண:" என்கிற ஸ்ரீ ஸூக்தியினால் திண்மை பெறுத்தினர். ஸொத்தைப் பெற்று அநுபவித்து ஆநந்திக்க வேணு மென்கிற ஆவல் ஸ்வாமிக்கே உரியதாகவும் உள்ளதாகவும் உலகிற் காண்கிறோ மாதலால் இந்த நியாயமேயாகும் இங்கும். ஆனால் ஜீவாத்மாவாகிற இந்த ஸொத்து சைதந்யமாகிற கல்மஷத்தோடும் கூடியிருக்கையாலே சிறிது தலையாட்டவும் வாலாட்டவும் பெறுகிறது. தன்னை நன்றாக வுணரும்போது தலைமடிந்து நிற்கிறது. நிலாத் தென்றல் சந்தனம் புஷ்பம் முதலியன போலே ஸர்வாத்மநா பரதந்திரமா யிருக்கவேண்டிய ஜீவாத்மாவுக்கு சைதந்யமே இடையூறாக நிற்றலால் இதைக் கல்மஷமென்கிறதென்று நம் ஆசாரியர்கள் நிலையிட்டருளினர்கள்.

இடையில் வேதாந்த தேசிகர் ஸாரமாக ஸாதிக்கிருர்—இப்போது * அநாவ்ருத்தி ஸூத்ர ஸ்ரீபாஷ்யத்திலிருந்து எடுத்து உபந்யஸித்த விஷயம் இதரர்களின் புத்திக்குச் சிறிதும் கோசரமாகக் கூடியதன்று. "நச பரமபுருஷஃ உபஸ்திதம் ஜ்ஞாநிநம் கதாசித் ஆவர்த்தயிஷ்யதி" என்று அருளிச்செய்யலாமாயிருக்க, அங்ஙனமருளிச் செய்யாது "ஜ்ஞாநிநம் லப்த்வா" என்றதும், அந்த ஞானிக்கு அத்யர்த்தப்ரிய மென்று விசேஷணமிட்டதும் நெஞ்சால் நினைப்பரிதன்ரே. * வாரிக்கொண்டுன்னை விழுங்குவன் காணிலென்று, ஆர்வுற்ற என்னையொழிய என்னின்முன்னம் பாரித்து, தானென்னை முற்றப் பருகினுன் * என்ற திருவாய்மொழியையன்ரே பாஷ்யகாரர் நிச்சலும் சிந்தைசெய்திருந்தார். கீதாசார்யன் * ஸ மஹாத்மா ஸுதுர்லபஃ * என்றதை பாஷ்யகாரர் ஸம்வாதப்ரமாணமாக எடுத்துக்காட்டியது இங்கு ஸாரதமம். எம்பெருமான் அந்த அதிகாரியை லபிக்க எவ்வளவோ ப்ரயாஸப்படுவனென்பது நன்கு விளங்கவில்லையா? இல்லையாகில் "வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா விசிஷ்யதே" என்றன்ரே சுலோகமிட்டிருப்பன். அங்ஙனன்றிக்கே ஸுதுர்லபஃ என்றது ஆழ்ந்த கருத்தையுடையதன்ரே. இதை நன்கறிந்து உபந்யஸிக்க வல்லவர் நீரே. மேலே சொல்லும். கீதாபாஷ்யத்திலேயே இன்னும் கேட்க விருப்பம்.

(தொடரும்)

# கடிதங்கள்

## கல்லக்குரிச்சி விசேஷங்கள்

நந்தனஸு ஆனியில் கள்ளக்குரிச்சி ஸ்ரீகோவிந்தராஜப் பெருமாள் சன்னிதியில் விசேஷ சம்ப்ரோக்ஷண திருக்கோவலூர் உலகளந்த பெருமாள் எழுநதருளி கம்பீரமாக நடந்தது. அந்த சம்ப்ரோக்ஷணையை ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம் ஸ்ரீ அண்ணு ஸ்வாமி விலக்ஷண கோஷ்டியுடன் எழுந்தருளியிருந்து நிர்வஹித்தார். திருக்கோவலூர் எம்பெருமானுர் ஜீயர் ஸ்வாமியும் உடனிருந்து சம்ப்ரோக்ஷணையையும் உற்சவங்களையும் சிறப்புடன் நடத்திவைத்தார். சன்னிதியானது கோபுர மண்டபாதிகளுடன் விலக்ஷணமாக ப்ரகாசிக்கிறது. இதைப்போல் மற்ருெரு சன்னிதி நம்நாட்டில் இருக்கிறதா என்று சந்தேகம். ஆழ்வார் பாடல்பெற்ற தலம் அல்லாமல் போனுலும் அணித்தான திருக்கோவலூர் எம்பெருமானே சம்ப்ரோக்ஷண நடத்திவைத்து அந்த எம்பெருமானுடைய ஸகல வைபவங்களையும் ஸ்ரீ கோவிந்தராஜப் பெருமான் அடையும்படிசெய்து நித்ய ஸ்ரீர் நித்ய மங்களமாக ப்ரகாசிக்கின்ருர். ப்ரதி வருஷமும் ப்ரம்மோத்ஸவம் ரூ. 30,000 பெறுமான திருத்தேருடன் ஆனிப் பௌர்ணமியில் நடைபெறுகிறது, சன்னிதி நிர்வாஹம் எல்லா கைங்கர்யங்களையும் திருப்பணிகளையும் ஏகதேசத்தில் ஸ்ரீதரன் பஸ் சர்வீஸ் முதலாளியான பரம பாகவதமணி. கேசவலு நாயுடு அவர்களே நடத்தி வருகிருர்.

இவ்வாண்டில் சித்திரை மாதம் உத்திரத்தன்று விசேஷ சம்ப்ரோக்ஷண, அஷ்டபந்தன கைங்கர்யத்தின் பூர்த்தியாக சிறப்புடன் நடந்தது. திருக்கோவலூர் எம்பெருமானுர் ஜீயரும் காஞ்சி மண்டலத்திலிருந்து உபயவேத பாராயணகாரர்களும் பல ஸ்தலங்களிலிருந்து சுமார் 40 பட்டாசார்யர்களும் சம்ப்ரோக்ஷணையை சிறப்பாக நடத்திவைத்தார்கள். ஸ்ரீமான் கேசவலு நாயுடு அவர்கள் ஏகதேசத்தில் தன் திரவியத்தைக்கொண்டு சுமார் ரூ. 5,000 செலவழித்து இந்த சம்ப்ரோக்ஷணையை நிர்வஹித்தார். அவர் பல்லாண்டு பல்லாண்டாக பகவத் கைங்கர்யத்தில் ஈடுபட்டு குறையொன்றுமில்லாத கோவிந்தனை ஆண்டாள் மங்களாசாஸனம் செய்தது போல் பரிபூர்ணமாக ஸேவை ஸாதிக்கும்படி பாரிப்பு உடையவர். எல்லா பாகவதர்களும் இந்த சன்னிதியை ஒரு முறையாவது எழுந்தருளி ஸேவித்தால் ஒரு உண்மையான ஸ்ரீ வைஷ்ணவன் தன் ஏகதேச முயற்சியினுல் எவ்வளவு பெரிய கைங்கர்யத்தைச் செய்து எவ்வளவு சிறப்புடன் சன்னிதியை பரிபாலிக்கிருன் என்பது தெரியவரும். இவ்வளவுக்கும் காரணம் ஸ்ரீ நாயுடு கோவிந்தனிடம் கொண்ட பக்தியும் ஸ்ரீ காஞ்சீ அண்ணு ஸ்வாமியிடம் வைத்திருக்கிற பக்தியும் திருக்கோவலூர் ஜீயரின் ப்ரீதியுமே ஆகும். இவ்வாண்டு ப்ரம்மோத்ஸவம் ஆனி உத்தரத்தில் திருத்தேர் நடைபெறும். நித்யஸ்ரீர் நித்யமங்களம். ... ... ... *

T. A. தாதாசாரி, அட்வகேட்.

ஸ்ரீ:

# பாதுகாஸஹஸ்ர விசாரம்

— வேதாந்தசிரோமணி. T. N. C. நரஸிம்ஹாசாரியர் —

இந்த வியாஸத்தில் பாதுகாஸஹஸ்ர விசாரம் யாதும் ப்ராப்தமாகப்போகிற தில்லை. அதெல்லாம் நிச்சேஷமாக முன்னமே முடிந்துவிட்டது. ஆயினும் பாதுகா ஸஹஸ்ர விசாரமென்று மகுடம்வைத்து—பாதுகாஸஹஸ்ர மவதரித்ததைப்பற்றிப் பேசுவதாக ஒரு வியாஜங்கொண்டு பிறர் ஸதாசார்ய தூஷணங்களைச் செய்து வருவ தனால் அவற்றைக் களைந்தொழிக்கும் நமது வியாஸத்திற்கு இந்த மகுடமே யிருப்பது யுக்தமெனத் தோன்றிற்று. ஸதாசார்ய தூஷணங்களை நிரஸிப்பதும், பிறருடைய கட்டுக்கதைகளைக் களைந்தொழிப்பதுமே இந்த வியாஸத்திற்கு விஷயமென்று கொள்க. "அட்வகேட் அமுதர் ஸம்பாஷணை" என்னும் பரஸ்பர ஸல்லாபமுகத்தினால் பலபல தத்துவங்களை வெளியிடுகிறோம். .... .... ... *

---

# அட்வகேட் அமுதர் ஸம்பாஷணை.

## அமுதர் கேட்பவர்; அட்வகேட் விடையிறுப்பவர்.

அமுதர்—ராமாநுஜதயாபாத்ரம்—ஸ்ரீசைலேசதயாபாத்ரம் என்கிற தனியன் களைப்பற்றி முன்னம் கேட்கிறேன். இந்த இரண்டு சுலோகங்களையும் பார்க்கும் போது இரண்டும் ஒரேசாயலாக இருப்பதாலும், இது தவிர, நமோ ராமாநுஜார்யாய —நமச் ஸ்ரீசைலநாதாய; வாழியிராமாநுசப் பிள்ளான் வாழி திருவாய்மொழிப் பிள்ளை; தேறும்படி யுரைக்குஞ்சீர் 2. வஞ்சப்பலசமயம் மாற்றவந்தோன் வாழியே; செய்யதாமரைத்தாளிணை வாழியே. நானிலமுந்தான் வாழ நான்மறைகள் தாம் வாழ —அடியார்கள் வாழ அரங்கநகர்வாழ; இன்னமொரு நூற்றாண்டிரும்—இன்ன மொரு நூற்றாண்டிரும்—ஆக இப்படி ஒவ்வொன்றும் ஒரே சாயலாக இருப்பதாலும் ஒன்றைப்பார்த்து மற்றொன்று காப்பியடித்ததென்று நிச்சயமாகச் சொல்லும்படி யிருக்கிறதல்லவா? எதைப்பார்த்து எது காப்பியடித்ததென்கிற விசாரம் இப்போது வேண்டாம். முன்னே யிருந்த நிகழ்ச்சி ஒன்று; அதைப்பார்த்து அதே விதமாகப் பின்னே ஏற்படுத்தினது மற்றொன்று. என்று சொல்லும்படி யில்லையா? நடுநிலை யில் நின்று ஸாதிக்கவேணும். நாம் ஏகாந்தமாகப் பேசுகிறோம், உண்மை சொல்லும்.

அட்வகேட்—இதில் என்ன சந்தேகம்? ஒன்று முன்னேயிருந்தது; அதைப் பார்த்து மற்றொன்று அதேவிதமாக பெயர்களையும் விசேஷணங்களையும் மட்டும் மாறுபடுத்தி அநுஷ்டுப்புக்கு அநுஷ்டுப்பு, வெண்பாவுக்கு வெண்பா; ஆசிரியத் திற்கு ஆசிரியம்; தொங்கலுக்குத் தொங்கல் = இப்படியாக வைரக்கமலத்திற்கு ரங்கூன் டைமண்ட் போல பிறகு ஏற்பாடு செய்யப்பட்டதென்பதில் என்ன ஸந்தேகம்? விஷ்ணு கோவில்களில் சடகோபம் என்று வைத்து எல்லார் தலையிலும் சாதிப்பதைப் பார்த்தவர்கள் அதே மாதிரி சிவன் கோவிலிலும் வைத்து அதற்கு ஜடகோபுரம் என்று பேரும்வைத்து "ஜடகோபுரம் தரிச்சுக்குங்கோ" என்று தலையில் மொட்டுவதை நீரும் பார்த்து வருகின்றீரல்லவா? இந்த இமிடேஷன் எத்தனை நாளாக? என்பதையும் நீர் அறிந்திருக்கிறீரல்லவா? இப்படி எத்தனையோ இமிடே ஷன்கள் ஏற்பட்டிருக்கின்றன; தினேதினே ஏற்பட்டுக்கொண்டு மிருக்கின்றன. அதுகளிலே இது தலையானது என்பதில் என்ன சந்தேகம்? இதை நான் சொல்லித் தானா நீர் தெரிந்துகொள்ளவேண்டும்? இது சிறுவர்களுக்கும்வெட்டவெளிச்சமல்லவா?

கொண்டு பகவத் குணுநுபவம் பண்ணுகிற காலத்தில் கவிதார்க்கிக கேஸரியென்று ஆசாரியரை வருணிப்பது ஸ்வரூபவிருத்தமென்றும் அதனுல் ஸ்ரீமாந் வேங்கட நாதார்ய தனியன் வேண்டாமென்று ஒதுக்கப்பட்டு ராமாநுஜா பாத்ரத் தனியன் செய்விக்கப்பட்ட தென்றும், இதை தேசிகரே உகந்தாரென்றும் பரகாலமடத் தவர்களே எழுதிவைத்திருக்கிருர்களல்லவா? அதை தேவரீர் பார்த்திருக்கிறதா?

அட்வகேட்—தேசிகர் பகவத் விஷய ப்ரவசநம் செய்ய ஆரம்பித்தது எத்தனை யாவது வயதில்? ஸ்ரீமாந் வேங்கடநாதார்யதனியனைச் சொல்லி பகவத் விஷய காலக்ஷேபம் செய்த தேசிக சிஷ்யர்கள் எத்தனை பேர்கள்? அப்படி எத்தனை வருஷகாலம் நடந்துவந்தது? என்கிற கேள்விகளைக் கேட்டால் தலைகுனிந்து பதில் சொல்லத் திக்குமுக்கலாடி நிற்கிறோம். தேசிகருடைய எழுபதாவது வயதில் ராமாநுஜாபாத்ரத் தனியன் தோன்றினதாக எழுதிவைத்தாய் விட்டது. "த்ரிம் சத்வாரம் ச்ராவித சாரீரக பாஷ்ய:" என்று ஸங்கல்ப ஸூர்யோதய நாடகத்தில் தேசிகர் தாமே சொல்லிக்கொண்டபடி அந்த வயதுக்குள் முப்பது தடவை அவர் ஸ்ரீபாஷ்ய ப்ரவசநம் செய்திருப்பதாகத் தேறுகிறது. பகவத் விஷய ப்ரவசனமும் அத்தனை தடவை செய்திருக்க ஔசித்ய முள்ளது. அத்தனை தடவைகளிலும் கவிதார்க்கிக கேஸரியுள்ள தனியனைச் சொல்லியே பகவத் விஷய காலக்ஷேபம் நடந்ததென்பதை யாரும் அபலபிக்கவோ மறுக்கவோமுடியாமலிருக்க, அப்படி நீண்டகாலம் ஆதரிக்கப் பட்டு வந்த ஸ்ரீமான் வேங்கட தனியனை பகவத்விஷய க்ரந்த காலக்ஷேபத்திற்குத் தகாததென்று தள்ளிவிட்டு ராமாநுஜாபாத்ரத் தனியனை ஒருவர் ஸ்ருஷ்டித்தா ரென்று எழுதி வைத்திருப்பதும் சொல்லிக்கொண்டிருப்பதும் சிரிப்புக்கு இடமாகத் தானிருக்கிறது. இந்த பாத்ரத்தனியன் தேசிகனுடைய காலத்தில் தோன்றியிருக்க ஒருவிதமான உபபத்தியும் இல்லைதான். உருட்டல் மெரட்டல் செய்து நாம் காலத் தைக் கழிக்கலாமேயொழிய ருஜுவான வழியில் பதில் சொல்ல என்ன விஷய மிருக்கிறது. முக்கியமாக ஒருவிஷயம் கேளும் பாத்ரத்தனியனுக்கு அடுத்தபடி யாகச் சொல்லிவருகிற 'லக்ஷ்மீநாத ஸமாரம்பாம்' 'யோநித்ய மச்யுத' 'மாதாபிதா யுவதய:' 'பூதம்ஸரச்ச மஹதாஹ்வய' என்கிற இந்த நான்கு தனியன்கள் தென்னு சார்யர்களால் திவ்யப்ரபந்த ஸேவா காலங்களில் மாத்திரமல்லாமல் ரஹஸ்யக்ரந்த பரம்பரையிலும் உபயவேதாந்த பரம்பரையிலுங்கூட அநுஸந்திக்கப்பட்டு வருகின் றன. எமக்கு எந்த பரம்பரையிலும் இந்த ச்லோகங்கள் கிடையவே கிடையாது. இவற்றுக்குப் பிரதியாக வேறு ச்லோகங்களையே வைத்துக் கொண்டிருக்கிறோம். அப்படியிருக்க திவ்ய ப்ரபந்த ஸேவைகளில் மாத்திரம் இந்த ச்லோகங்களை யாம் சொல்லிவருவதானது 'நமக்கு அவிருத்தமானதுகளை மாற்றவேண்டாம். ஆரம் பத்திலேயே அதிகமான வித்யாஸம் காட்டவேண்டாம்' என்கிற எண்ணத்தினு லாகையாலே யாம் திவ்யப்ரபந்த ஸேவைக்கு வந்தேறிகளென்பது நிச்சிதம். முன்னேபிடித்தே *யோநித்ய மச்யுத *மாதாபிதா* தனியன்களை யாம் அநுஸந்தித்து வருபவர்களாயிருந்தால் ஸமாச்ரயணுதி பரம்பரைகளில் அந்தத் தனியன்களை விட்டிருக்கவேமாட்டோம். அந்த தனியன்களை விட்டுத் தொலைத்தவர்கள் கோவில் சண்டைக்காகத்தானே அவற்றைப் பிடித்துக்கொள்ள நேர்கின்றது. வாழி திரு நாமம் ஸேவிக்கும்போது "ஸ்ரீசைலேசத் தனியனுக்கு முன்னே மணவாள மாமுனிகளின் ஆசார்யரான திருவாய்மொழிப்பிள்ளையின் தனியனுன "நம: ஸ்ரீசைல நாதாய" என்கிற தனியன் எங்கும் நியமேந அநுஸந்திக்கப்பட்டு வருகிறது. இதைப் பார்த்து ராமாநுஜாபாத்ரத்துக்கு முன்னே தேசிகரின் ஆசார்யரான அப்பிள்ளாருடைய தனியனுக 'நமோ ராமாநுஜார்யாய' என்கிற ச்லோகம் சொல்லப் பட்டு வருகிறதெம்மால். இந்த ச்லோகம் யார் செய்தது? எப்போது செய்தது? எதற்காகச் செய்தது? என்று கேட்டால் பதில் சொல்ல முடியவில்லையே. என்ன சொல்ல முடியும்? தேசிகர் ஸ்வாசார்யருக்குத் தனியனுக ஸாதித்த ச்லோகம்

அமுதர்—தேவரீர் பிராமாணிகரே யென்றும் ஆராய்ச்சியில் வல்லவரே யென்றும் சந்தோஷிக்கிறேன். சமீபத்தில் ஒரு புத்தகத்தில் நான் பார்த்த சில விஷயங்களைச் சொல்லுகிறேன்; உலகமெல்லாம் ஒன்றுகூடித் திரண்டெழுந்து வந்தாலும் பதில்சொல்ல வாயைத் திறக்கவும் முடியாதபடி நிரூபிக்கப்படும் விஷயங்களிவை" என்று ஹெட்டிங்கு போட்டு அனேக விஷயங்கள் எழுதியிருக்கிறது. அவற்றில் ஒவ்வொன்ருக எடுத்துச்சொல்லி என் சந்தேகத்தைத் தெரிவிக்கிறேன். "மணவாளமா முனிகளுக்கு ஸ்ரீசைலேச தயாபாத்ரம் என்கிற ஒரு தனியன் தவிர வேறு தனியன் எந்த பரம்பரையிலும் கிடையாதென்பது உலகமறிந்த விஷயம். அதேமாதிரி தேசிகருக்கும் ராமாநுஜதயாபாத்ரம் என்கிற தனியன் தவிர வேறு தனியன் இல்லாமலிருந்திருக்குமானல், மணவாளமா முனிகளைவிட தேசிகர் முற்பட்டவராகையாலே தேசிகருடைய அந்த பாத்ரத்தனியன்தான் முற்பட்டதென்றும், பிற்பாடு அதைப்பார்த்தே அதே சாயலாகவே மணவாளமா முனிகளுக்கு ஸ்ரீசைலேச தயாபாத்ரத் தனியன் கற்பிக்கப்பட்டதென்றும் அநாயாஸமாகத் தேறிவிடும். எந்த பரம்பரையிலும் தேசிகருடைய தனியன் ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய ச்லோகமே யென்கிற விஷயம் ஓலேயேடுகளிலும் அச்சுப் பிரதிகளிலும் கண்ணடிபோல் தேறியிருப்பதாலும். ராமாநுஜ தயாபாத்ரத்தைச் சொல்லத் தொடங்கின இடங்களிலெல்லாம் தேசிகருடைய அவதாரஸ்தலமுள்பட அதற்குத் தடையுத்தரவுகளும், அதை மீறிச் சொன்னவர்களுக்கு தண்டனைகளும் மர்யாதாலோபங்களும் ஏற்பட்டிருப்பது அசைக்கவொண்ணுதபடி தேறியிருப்பதாலும் ராமாநுஜாபாத்ரத் தனியன் கோவில் சண்டைக்காகவே நூதனமாகக் கல்பிதமென்பது கல்வெட்டு" என்று எழுதப்பட்டிருக்கிறது. இதை தேவரீர் பார்த்திராமலிருக்க நியாயமில்லை. இதைப் பற்றி தேவரீருடைய அபிப்பிராயமென்ன? இதெல்லாம் உண்மைதானு?

அட்வகேட்—ஸ்வாமிந்! இக்கேள்விக்கு நான் என்ன சொல்லுவது? "ஸகல ஆழ்வார்களுடையவும் ஸகல ஆசார்யர்களுடையவும் திருவவதாரஸ்தலங்கள் அந்நாள் தொடங்கி இந்நாள் வரையில் ஒரே சீராகத் தென்னுசார்ய ஸம்பிரதாயமாகவே நடந்து வருவதாலும் இந்த ஸ்தலங்களில் ராமாநுஜாபாத்ரத் தனியன் ஒருநாளும் தலைகாட்டப்பெருதபடியாலும், கதாசித் குத்ரசித் தலைகாட்ட ஆரம்பித்தால் அப்போதே ஹாஹாகாரமுண்டாகித் தடைபட்டொழிகிறபடியாலும் இத்தனியன் நவீனமாகக் கல்பிதமென்பது கல்வெட்டு" என்று எழுதியிருப்பதையும் நான் பலதடவை பார்த்திருக்கிறேன். பார்த்தும் பாராததுபோல் இருந்துவிட வேண்டுமென்பதே எனது கொள்கை. ஆழ்வார்களின் மங்களாசாசனம் பெற்ற ஸகல திவ்ய தேசங்களும் ஸமீபகாலங்களில் எங்கடவர்களால் ஆக்ரமிக்கப்பட்டவைகளாக நியாயாலயரிகார்டுகள் முதலியவற்ருல் நன்ருகத் தெரியவருகிற திருவள்ளூர் முதலான ஏழெட்டு திவ்ய தேசங்கள் தவிர மற்றுள்ள ஸகல திவ்ய தேசங்களும் அநாதிகாலமாக நிர்விவாதகந்தமாய்த் தென்னுசார்யஸம்பிரதாயமாகவே வந்து கொண்டிருப்பதனுல் இவற்றில் ஸ்ரீசைலேசத் தனியன் தவிர வேறெரு தனியன் தலைகாட்டாதபடியாலும் ஸ்ரீசைலேசத் தனியனே முற்பட்டது; வேறுவிதமாக உண்மையிருக்க வழியேது? ராமாநுஜாபாத்ரத் தனியன் போட்டியாக நவீநமாகக் கற்பிக்கப்பட்டதே. தேசிகருக்குப் பரமகம்பீரமான ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய தனியன் விளங்கிக்கொண்டிருக்க ராமாநுஜா பாத்ரமென்கிற தனியன் எதற்காகத் தோன்றியது? என்கிற கேள்விக்கு நம்மடவாள் எழுதியிருப்பதெல்லாம் அத்தனியன் நவீந கல்பிதமே யென்பதை நன்ருக ஸ்தாபித்துத் தருகிறதேயொழிய வேறில்லை. ஏகாந்தத்திலும் உண்மையை மறைக்கலாமா?

அமுதர்—ஸ்வாமிந்! ஸ்ரீபரகாலமடத்தார் எழுதியிருப்பதைக் கொஞ்சம் கவனிக்கவேணும். "கவிதார்க்கிக கேஸரி" என்கிற விசேஷணம் ஸ்ரீ வைஷ்ணவாசார்ய கோஷ்டிக்குத் தகாததென்றும் (அதாவது) பகவத் விஷய க்ரந்தத்தைக்

கொண்டு பகவத் குணாநுபவம் பண்ணுகிற காலத்தில் கவிதார்க்கிக கேஸரியென்று ஆசாரியரை வருணிப்பது ஸ்வரூபவிருத்தமென்றும் அதனால் ஸ்ரீமாந் வேங்கட நாதார்ய தனியன் வேண்டாமென்று ஒதுக்கப்பட்டு ராமாநுஜா பாத்ரத் தனியன் செய்விக்கப்பட்ட தென்றும், இதை தேசிகரே உகந்தாரென்றும் பரகாலமடத்தவர்களே எழுதிவைத்திருக்கிறார்களல்லவா? அதை தேவரீர் பார்த்திருக்கிறதா?

அட்வகேட்—தேசிகர் பகவத் விஷய ப்ரவசநம் செய்ய ஆரம்பித்தது எத்தனையாவது வயதில்? ஸ்ரீமாந் வேங்கடநாதார்யதனியனைச் சொல்லி பகவத் விஷய காலக்ஷேபம் செய்த தேசிக சிஷ்யர்கள் எத்தனை பேர்கள்? அப்படி எத்தனை வருஷகாலம் நடந்துவந்தது? என்கிற கேள்விகளைக் கேட்டால் தலைகுனிந்து பதில் சொல்லத் திக்குமுக்கலாடி நிற்கிறோம். தேசிகருடைய எழுபதாவது வயதில் ராமாநுஜாபாத்ரத் தனியன் தோன்றினதாக எழுதிவைத்தாய் விட்டது. "த்ரிம்சத்வாரம் ச்ராவித சாரீரக பாஷ்ய:" என்று ஸங்கல்ப ஸூர்யோதய நாடகத்தில் தேசிகர் தாமே சொல்லிக்கொண்டபடி அந்த வயதுக்குள் முப்பது தடவை அவர் ஸ்ரீபாஷ்ய ப்ரவசநம் செய்திருப்பதாகத் தேறுகிறது. பகவத் விஷய ப்ரவசனமும் அத்தனை தடவை செய்திருக்க ஔசித்ய முள்ளது. அத்தனை தடவைகளிலும் கவிதார்க்கிக கேஸரியுள்ள தனியனைச் சொல்லியே பகவத் விஷய காலக்ஷேபம் நடந்ததென்பதை யாரும் அபலபிக்கவோ மறுக்கவோமுடியாமலிருக்க, அப்படி நீண்டகாலம் ஆதரிக்கப்பட்டு வந்த ஸ்ரீமான் வேங்கட தனியனை பகவத்விஷய க்ரந்த காலக்ஷேபத்திற்குத் தகாததென்று தள்ளிவிட்டு ராமாநுஜாபாத்ரத் தனியனை ஒருவர் ஸ்ருஷ்டித்தாரென்று எழுதி வைத்திருப்பதும் சொல்லிக்கொண்டிருப்பதும் சிரிப்புக்கு இடமாகத்தானிருக்கிறது. இந்த பாத்ரத்தனியன் தேசிகனுடைய காலத்தில் தோன்றியிருக்க ஒருவிதமான உபபத்தியும் இல்லைதான். உருட்டல் மெரட்டல் செய்து நாம் காலத்தைக் கழிக்கலாமேயொழிய ருஜுவான வழியில் பதில் சொல்ல என்ன விஷயமிருக்கிறது. முக்கியமாக ஒருவிஷயம் கேளும் பாத்ரத்தனியனுக்கு அடுத்தபடியாகச் சொல்லிவருகிற 'லக்ஷ்மீநாத ஸமாரம்பாம்' 'யோநித்ய மச்யுத' 'மாதாபிதா யுவதய:' 'பூதம்ஸரச்ச மஹதாஹ்வய' என்கிற இந்த நான்கு தனியன்கள் தென்னாசார்யர்களால் திவ்யப்ரபந்த ஸேவா காலங்களில் மாத்திரமல்லாமல் ரஹஸ்யக்ரந்த பரம்பரையிலும் உபயவேதாந்த பரம்பரையிலுங்கூட அநுஸந்திக்கப்பட்டு வருகின்றன. எமக்கு எந்த பரம்பரையிலும் இந்த ச்லோகங்கள் கிடையவே கிடையாது. இவற்றுக்குப் பிரதியாக வேறு ச்லோகங்களையே வைத்துக் கொண்டிருக்கிறோம். அப்படியிருக்க திவ்ய ப்ரபந்த ஸேவைகளில் மாத்திரம் இந்த ச்லோகங்களை யாம் சொல்லிவருவதானது 'நமக்கு அவிருத்தமானதுகளை மாற்றவேண்டாம். ஆரம்பத்திலேயே அதிகமான வித்யாஸம் காட்டவேண்டாம்' என்கிற எண்ணத்தினாலாகையாலே யாம் திவ்யப்ரபந்த ஸேவைக்கு வந்தேறிகளென்பது நிச்சிதம். முன்னேபிடித்தே *யோநித்ய மச்யுத *மாதாபிதா* தனியன்களை யாம் அநுஸந்தித்து வருபவர்களாயிருந்தால் ஸமாச்ரயணாதி பரம்பரைகளில் அந்தத் தனியன்களை விட்டிருக்கவேமாட்டோம். அந்த தனியன்களை விட்டுத் தொலைத்தவர்கள் கோவில் சண்டைக்காகத்தானே அவற்றைப் பிடித்துக்கொள்ள நேர்கின்றது. வாழி திருநாமம் ஸேவிக்கும்போது "ஸ்ரீசைலேசத் தனியனுக்கு முன்னே மணவாள மாமுனிகளின் ஆசார்யரான திருவாய்மொழிப்பிள்ளையின் தனியனான "நம: ஸ்ரீசைல நாதாய" என்கிற தனியன் எங்கும் நியமேந அநுஸந்திக்கப்பட்டு வருகிறது. இதைப் பார்த்து ராமாநுஜாபாத்ரத்துக்கு முன்னே தேசிகரின் ஆசார்யரான அப்பிள்ளாருடைய தனியனாக 'நமோ ராமாநுஜார்யாய' என்கிற ச்லோகம் சொல்லப்பட்டு வருகிறதெம்மால். இந்த ச்லோகம் யார் செய்தது? எப்போது செய்தது? எதற்காகச் செய்தது? என்று கேட்டால் பதில் சொல்ல முடியவில்லையே. என்ன சொல்ல முடியும்? தேசிகர் ஸ்வாசார்யருக்குத் தனியனாக ஸாதித்த ச்லோகம்

'யஸ்மா தஸ்மாபி:' என்கிற ச்லோகமே யென்பதும், அந்தத் தனியன்தான் எந்த காலக்ஷேபத்திலும் அநுஸந்திக்கப்பட்டு வருகிறதென்பதும் அபலபிக்க முடியாத விஷயம். அப்படிப்பட்ட பரமகம்பீரமான தனியனை விட்டுவிட்டு 'நமோ ராமாநுஜார்யாய' என்கிறவொரு ச்லோகத்தைக் கல்பித்ததானது நம:ஸ்ரீசைலநாதாய வென்னும் தனியனுக்குப் போட்டியாகவேயென்று ஒப்புக்கொள்ள வேண்டியதே யாகிறது. இதை ஒவ்வொருவரும் எளிதாக க்ரஹிக்கக் கூடுமல்லவா? ராமாநுஜா பாத்ர ச்லோக ஸ்ருஷ்டிக்குக் காரணமெழுதினதுபோல் இந்த ச்லோக சிருஷ்டிக்கும் ஒரு காரணமெழுதி வைத்திருக்கக்கூடாதா? இதைக்கொண்டும் போட்டிச் சண்டைக்கு வந்தவர்களென்பது கல்வெட்டாகத் தேறுவதை யார் தடுக்க முடியும்?

அமுதர்—'ஸர்வதேச தசாகாலேஷு' என்று தொடங்கி 'ஸ்ரீமந் ஸ்ரீரங்கச்ரிய மநுபத்ரவா மநுதிநம் ஸம்வர்த்தய' என்னுமளவும் சொல்லிவருகிற மூன்று ச்லோகங்களைத் தென்கலையார்கள்தாம் சொல்ல உரிமையுண்டு என்றும், வடகலையார்களான நாம் இந்த ச்லோகங்களை நெஞ்சால் நினைக்கவும் லஜ்ஜிக்கவேண்டுமென்றும் ஒரு புத்தகத்தில் எழுதப்பட்டிருப்பதைப் பார்த்திருக்கிறேன். இதில் தேவரீருடைய அபிப்பிராயமெப்படி? உள்ளே யிருப்பதை வெளியே கொட்டிவிடவேணும்.

அட்வகேட்—ஸ்வாமிந்! இதை ஒரு புத்தகத்தில்தானா பார்த்திருக்கிறீர்? ஒன்பது புத்தகத்திலிருக்கிற விஷயமல்லவா இது. இதைப்பற்றி அடியேன் வாயைக் கையைத் திறக்கமுடியுமா? சக்தியிருந்தால் கூசல் போடலாம், வாயார வையலாம். விஷயத்தில் வாய்திறந்து பேச முடியுமோ? மனதுக்கு ருஜுவான உண்மை தெரிந்தால், பிராமாணிகனாயிருந்தால் தவறான விஷயங்களை விட்டுத் தொலைக்க வேண்டியதே; "செட்டி சுட்டது, கைவிட்டது" என்று தன்னடையே விட்டுநீங்க வேண்டியதே. நாம் நல்ல மதத்தில் பிறந்திருக்கிறோம். ஈச்வரன் கொடுத்திருக்கிற விவேக சக்தியைக் கொண்டிருக்கிறோம். உடலுமுயிருமுள்ளவளவும் மனச்சாட்சியை மீறியே நடந்துகொண்டு போவதென்பது அருவருக்கத்தக்கதுதான். நாம் இட்டுக்கொள்ளுகிற நாமமும் கட்டிக்கொள்ளுகிற வேஷ்டியும் காசுக்கு மூதவாத படி வீண் பிடிவாதமும் துராக்ரஹமுமே கொண்டு காலத்தைக் கழிப்பது தகாது தான். ஸ்ரீரங்கம் ஸந்நிதியில் எமக்கு ராமாநுஜர் கோஷ்டிகளில் ஒருவிதமான அந்வயமும் கொடுக்கவில்லை. இது அன்றுமுதல் இன்றுவரையில் கல்வெட்டா யிருக்க எம்முடைய வாயால் "ஸ்ரீரங்கச்ரிய மநுபத்ரவா மநுதிநம் ஸம்வர்த்தய" என்றும் "ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாமபி வர்த்ததாம்" என்றும் கத்துவதானது நினைக்க நினைக்க வயிற்றெரிச்சலையே வளர்க்கிறது. "அடியார்கள் வாழ அரங்கநகர் வாழ" என்பதை யாம் விட்டுத் தொலைத்தது போலவே இவைகளையும் விட்டுத் தொலைக்காதே பற்றிக் கொண்டு மன்றாடுவது வம்புக்கும் வீம்புக்கும் மாரடிக்கிற கதையாகவே யிருக்கிறது. என்ன செய்வது? பற்றினது விடமுடியவில்லை. நம்மடவாள் பிரபந்த கோஷ்டியில் நாமும் சம்பந்தம் பெறவேணுமென்று ஆசைகொண்டு ஓயாமல் வேலைசெய்து வருகிறபடியால் இதற்கு எப்படியாவது பெலம் ஏற்படவேணுமென்று எனக்கும் அவாவுள்ளது. "ராமாநுஜாபாத்ரம் பிற்பட்ட காலத்தில் போட்டிச் சண்டைக்காகக் கற்பிக்கப்பட்டதென்பது உண்மையாயிருந்தாலும் அதை நாம் ஒப்புக்கொள்ள வேணுமென்று என்ன கட்டாயம்? அது புராதனந்தான் என்று ஸ்தாபிக்கலாகாதோ" என்று என்னைச் சிலர் கேட்கிறார்கள். மனச்சாட்சியை மீறாமல் உள்ளது உள்ளபடியே சொல்லி உண்மையை விளக்க வேண்டுமென்று உள்ளபடியே விஷயங்களைச் சொல்லி வருகிறேன். கடகாலில்லாமல் மேலே மேலே கட்டடங்கள் கட்டிக்கொண்டு போனால் என்னாகுமென்பது விவேகிகளுக்குத் தெரியாததல்லவே. அந்த உபயோகமற்ற வழிக்கு என்மனம் இசையவில்லை; ஆயினும் பாசி மூடுகிறது. ஸ்ரீமான் வேங்கட

தனியன் பரமகம்பீரமானது இருக்கும்போது இந்த ராமாநுஜாபாத்ரத்தனியனே ஏதுக்கு ஸ்ருஷ்டித்தார்களென்பதைப்பற்றி நான் ஆலோசியாமலா இருக்கிறேன். இதைக்கூட ஆலோசிக்கும் விவேகமில்லையா எனக்கு? இந்த பாத்ரத்தனியனே ஏதுக்கு ஸ்ருஷ்டித்தார்களென்றால் "பரம்பரையாக பங்கப்பட்டு வருவதற்காகத் தான் ஸ்ருஷ்டித்தார்கள்" என்று ஒரேவார்த்தையில் முடிக்கலாம். தேசிகர் காலத்தி லேயே இந்த பாத்ரத்தனியனும் தோன்றியிருந்ததே என்று ஸ்தாபிக்க வேண்டு மானல் அதற்கு எம்மடவர்கள் எப்படி எழுதி வைத்திருக்க வேணுமென்றால், ஸ்ரீமான் வேங்கடதனியனும் பாத்ரத்தனியனும் ஏககாலத்திலேயே அவதரித்த தென்றும், ஒரு தனியனே ஸ்ரீபாஷ்யாதி காலக்ஷேபத்திற்கு வைத்துக் கொண்டு மற்றொரு தனியனே ப்ரபந்தங்களுக்கு வைத்துக் கொண்டார்களென்றும் எழுதி வைத்திருக்க வேண்டும். அப்படி யெழுதியிருந்தால் நாம் ஒருவாறு தப்பித்துக் கொள்ள முடியும். பாத்ரத்தனியனே புராதனமென்று ஸ்தாபிப்பதற்காகவே எம்மடவாள் பல திருட்டு வழிகளில் நுழைய நேரிட்டது. நயனராசாரியர் தேசிகரிடத் தில் பகவத்விஷய காலக்ஷேபம் செய்தபோது பிரம்மதந்திரஸ்வதந்த்ரஜீயரும் கூடவே அந்த காக்ஷேபம் செய்ய வேண்டியிருக்க, செய்யாமல் விலகி விட்டா ரென்றும், ஏன் விலகினீரென்று தேசிகர் கேட்க, திருக்குமாரரிடத்தில் இது கால க்ஷேபம் செய்ய எனக்கு ஆசை என்று அவர் சொன்னதாகவும், அதை தேசிகர் உகந்தருளினதாகவும், பிறகு அப்படியே குமாரரிடத்தில் அந்த ஸ்வதந்திர ஜீயர் பகவத்விஷய காலக்ஷேபம் செய்ய ஆரம்பித்ததாகவும், அப்போது அவர் தேசிகர் விஷயமாக இந்த பாத்ரத்தனியனேச் செய்ததாகவும், இதை தேசிகர் முதலான யாவரும் திருச்செவிசாத்தி 'இந்த தனியன்தான் பரமஸாத்விகமாயிருக்கிறது; ஸ்ரீமாந் வேங்கடதனியன் கவிதார்க்கிககேஸரியென்று கர்ணகடோரமான பிருது சேர்ந்திருப்பதால் அது பகவத்விஷய காலக்ஷேபத்திற்கு வேண்டாம்; இதையே வைத்துக் கொள்ளுங்கள்' என்று கட்டளையிட்டதாகவும்..............இப்படி யெல்லாம் தலைகாலில்லாமல் எழுதி வைத்திருக்கிறார்கள். ஸ்ரீமான் வேங்கடதனியனே தூஷித்து, பாத்ரத்தனியனுக்கு ஓர் ஏற்றம் எழுதிவைப்பது எவ்வளவு அசட்டுத் தனம் என்பதை ஆலோசிக்க முடியாமலா நான் அட்வகேட்டென்று பெயர் சுமக் கிறேன். எனக்கு இவ்வளவு விவேகங்கூட இல்லையென்றுபலர் நினைத்திருக்கிறார்கள்.

அமுதர்—ராமாநுஜாபாத்ரத் தனியனேப் பார்த்துத் தான் அதே நடையாக ஸ்ரீசைலேசபாத்ரத் தனியன் தொடுக்கப்பட்டதென்று சொல்லலாகாதா? தேசிகன் ஸ்வாசார்யரான ராமாநுசப்புள்ளானுடைய தயைக்குப் பாத்ரபூதரென்று தெரி விக்கிற முதல் பாதமாகிய (ராமாநுஜதயாபாத்ரம்) என்பதைப்பார்த்து மணவாளமா முனிகளின் தனியனிலும் அவர் ஸ்வாசார்யரான திருவாய்மொழிப்பிள்ளையினுடைய தயைக்குப் பாத்ர பூதரென்று தெரிவிக்கிற முதல்பாதம் ஸ்ருஷ்டிக்கப்பட்டது. தேசிகனே ஜ்ஞாந வைராக்கிய பூஷணரென்று சொன்னதைப்பார்த்து மணவாளமா முனிகளே தீபக்த்யாதி குணார்ணவராகச் சொல்லிற்று. தேசிகனுக்கு ஸ்ரீமத் வேங் கடநாதார்யரென்று மற்றொரு திருநாமமிருப்பதாகச் சொல்லியிருப்பதைப் பார்த்து மணவாளமாமுனிகளுக்கும் யதீந்த்ரப்ரவணரென்று ஒரு திருநாமமிருப்பதாகச் சொல்லிவைத்திருக்கிறது. வந்தே வேதாந்த தேசிகம் என்றதைப் பார்த்து (வந்தே ரம்யஜாமாதரம் முநிம்) என்றது. ஆகவே ராமாநுஜா பாத்ரந்தான் முன்னே யிருந் தது, அதைப்பார்த்தே ஸ்ரீசைலேசபாத்ரம் அதே மாதிரியாய் தொடுக்கப்பட்டது; என்று சொன்னல் என்ன பாதகம். இதை ஆழ்ந்து பார்த்துச் சொல்லவேணும்.

அட்வகேட்—இதைப்பற்றி ஏற்கெனவே தெளிவாகச் சொன்னேன்; அடுத்த படியாகவும் சொல்லுகிறேன். தேசிகனுடைய தனியனும் மணவாளமா முனிகளு

டைய தனியனும் இருக்கட்டும். இவ்விருவர்க்கும் ஆசார்யர்களான கிடாம்பியப்புள்ளாருடையவும் திருவாய்மொழிப் பிள்ளையினுடையவும் தனியன்கள் சொல்லப்படுகிறதன்றோ; அதை யெடுத்துக் கொண்டல்லவோ நம்முடைய சாயம் அலசப்படுகிறது. இதை கவனித்துக்கேளும். மணவாளமாமுனிகளின் ஆசார்யரான திருவாய்மொழிப் பிள்ளை தேசிகனுடைய ஸமகாலத்தில் இருந்தவர். அவருடைய தனியன் "நமஃ ஸ்ரீசைலநாதாய குந்தி நகர ஜன்மநே, ப்ரஸாதலப்த பரமப்ராப்ய கைங்கர்ய சாலிநே" என்பது; வேறு தனியன் அவர்க்குக் கிடையாது. ஸமாச்ரயண பரம்பரையோ, க்ரந்த பரம்பரையோ, ஸன்னிதிகளில் ஸேவாகால பரம்பரையோ எல்லாவற்றிலும் நமஃ ஸ்ரீசைலநாதாய தனியனையே அவர்கள் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். வேறு கிடையாது. தென்கலையார் அநுஸந்தித்து வருகிற இந்தத் தனியனுடைய ஸ்தானத்தில் நம்மடவாள் அநுஸந்திக்கிற தனியன் *நமோ ராமாநுஜார்யாய* என்பது. இது அப்புள்ளார் காலத்திலேயே அவதரித்ததாக இருக்கவேண்டுமல்லவா? ஜீவதசையில் சிஷ்ய ஸம்பத்தோடு விளங்கின அப்புள்ளாருக்கு அக்காலத்தில் தனியன் அவதரியாமல் பிற்காலத்தில் ஏதுக்கவதரிக்கும். இந்த *நமோ ராமாநுஜார்யாயதனியன் தேசிகர் காலத்திலேயே அவதரிக்கவில்லையா என்ன? அப்புள்ளார்க்கு இதுதானே தனியன்? என்கிறார்கள் நம்மடவர்கள். இந்தநமோ ராமாநுஜார்யாய தனியன் அப்புள்ளாருடைய காலத்திலேயே தோன்றினதென்று தேறிவிட்டால் இதைப் பார்த்தே திருவாய்மொழிப் பிள்ளையின் தனியனை *நமஃ ஸ்ரீசைலநாதாயச்லோகமும் காப்பியடிக்கப்பட்டதென்று திண்ணமாகச் சொல்லி, இதே நியாயத்தால் தென்கலையார்களே எல்லாமும் காப்பியடித்தவர்களென்று நாம் ஊர்ஜிதமாக வாதிக்க இட முண்டாகுமே, ஐயோ, அதற்கு வழியில்லையே. கிடாம்பியப்புள்ளாரென்பவர் தேசிகனுக்கு ஆசார்யரல்லவா? அவருக்குத் தனியன் ஸாதித்தவர் தேசிகனல்லவா? தேசிகன் ஸாதித்த தனியன் ஐயோ இப்படியா அசடுவழியும்? ஸமாச்ரயணபரம்பரையிலும் க்ரந்த காலக்ஷேப பரம்பரைகளிலும் அவிச்சின்னமாக அநுஸந்திக்கப்பட்டு வருவதாய் தேசிகன் ஸாதித்ததான அப்புள்ளாருடைய தனியன் இதுவன்றே. அதைச்சொல்லுகிறேன், "யஸ்மாதஸ்மாபி ரேதத் யதிபதி கதித ப்ராக்தந ப்ரக்ரி யோத்யத்—கர்மப்ரஹ்மாவமர்ச ப்ரபவபஹுபலம் ஸார்த்தமக்ராஹி சாஸ்த்ரம், தம் விஷ்வக் பேத வித்யா ஸ்திதிபத விஷயம் ஸ்தேயபூதம் ப்ரபூதம் வந்தேயாத்ரேய ராமாநுஜ குருமநகம் வாதிஹம்ஸாம்புவாஹம்." இதுதான் அப்புள்ளாருக்கு அஸலானதனியன். ச்லோகம் எப்படியிருக்கிறது? இவ்வளவு கம்பீரமான சுலோகத்தைத் தள்ளிவிட்டு வேறொரு அநுஷ்டுப்பை யார் செய்தது? எப்போது செய்தது? எதற்காகச் செய்தது? என்பதை நாம் ஆலோசியாமலிருக்க முடியுமா? ஆராய்ச்சியில் வல்லவர்கள் இதையன்றோ வகையாக வெடுத்துக் காட்டுகிறார்கள். உண்மையில் இதுவன்றோ மிகவும் ஸாரமான விஷயம். அப்புள்ளாருடைய தனியன் *யஸ்மாதஸ்மாபிஃ* என்பதே பிராமாணிகமானது. அதுதான் நாளைக்கும் கோவில் சண்டை தவிர மற்ற விடங்களில் அநுஸந்திக்கப்பட்டுவருகிறது. அதை விட்டு விட்டு *நமோ ராமாநுஜார்யாய* என்கிற ச்லோகத்தைப் புதிதாக ஸ்ருஷ்டித்தது, *நமஃஸ்ரீசைலநாதாய* என்று தென்கலையார் சொல்லி வருகிற தனியனுக்குப் போட்டியாய் அதே அளவாக இருக்கவேணு மென்பதற்காகவே. ஸ்ரீமான் வேங்கட தனியனில் *கவிதார்க்கிக கேஸரீ* என்றிருப்பது பகவத்விஷய காலக்ஷேப கோஷ்டிக்குப் பொருத்தமாக இல்லையென்று அந்தத் தனியனைத் தள்ளி ராமாநுஜா பாத்ரத்தனியன் ஸ்ருஷ்டிக்கப்பட்டதென்று எழுதிவைத்த நம்மடவர்கள் இதற்கும் ஒரு காரணபாஸம் எழுதி வைத்திருக்க வேண்டாமா? என்ன எழுதியிருக்கிறார்கள்? என்ன எழுதமுடியும்? கைக்கபிக்கவென்று திணறிக் கிடப்பது தவிர வேறில்லையே. பட்டப்பகலில் கோட்டைவிட்ட கதையாகவன்றோ ஒவ்வொன்றுமிருக்கிறது.

அமுதர்—இவ்விஷயத்தில் கள்வம் வெட்ட வெளிச்சமாகிறது மெய்தான். ஒவ்வொரு ஆசிரியர்க்கும் கிரமமாகவுள்ள தனியன் வேறுதானென்றும், புதிதாய் போட்டிச் சண்டைக்காகக் கல்பனே செய்யப்பட்ட தனியன் வேறுதானென்றும் ஸ்பஷ்டமாக விளங்குகிறது. இப்போது இது வெகு நன்ருக விளக்கமாயிற்று. தேசிகனுடைய ஸ்ரீமான் வேங்கடதனியனே விட்டு ராமாநுஜாபாத்ரத்தனியனேக் கல்பனே செய்தார்களென்பது இப்போது நெஞ்சில் நன்ருகப் படிகிறது.

அட்வகேட்—நம்மாழ்வாருக்குத் தனியனுக *மாதா பிதா யுவதய:* என்று ஆளவந்தாரருளிச் செய்த ச்லோகம் ஏற்பட்டிருக்கிறது. ஆளவந்தாரிடத்தில் யாரும் பகை பாராட்டக் காரணமில்லே. அவரருளிச்செய்த நம்மாழ்வார் தனியனே உலகமெல்லாம் சொல்லிக்கொண்டிருக்க, நம்மடவாள் மட்டும் அதை விட்டு *யஸ்ய ஸாரஸ்வதஸ்ரோத:* என்கிற தனியனேச் சொல்லி வருகிருர்கள். "தேசிகனேடு ஸம்பந்தத்தைப் புதிதாக ஏறிட்டுக் கொண்டபோது நடந்த கூத்து இது." என்று பிறர் ஏசுவதற்கு நன்ருக இடமளிக்கிறதன்ருே இது. தேசிக ஸ்ரீஸூக்தியான தனியன் நமக்கு இருக்கும்போது வேருெருவர் ஸாதித்த தனியனே [* மாதாபிதா வென்பதை] நாம் ஏதுக்குச் சொல்லவேணுமென்று நம்மடவாள் அபிப்பிராயப்பட்டு அதை விட்டுத் தொலேத்தது சரியென்றே வைத்துக் கொள்ளுவோம். முக்கியமான ஸமாச்ரயண பரம்பரைகளிலும் க்ரந்த பரம்பரைகளிலும் *மாதாபிதா தனியனே விட்டுத்தொலேத்த நம்மடவாள் பிரபந்தம் தொடங்குகிறபோது மட்டும் அதைக் கைப்பற்றி வருகிருர்களே, இது என்ன? இதன் மருமமென்ன? என்று ஆலோசிக்க வேண்டாமா? இதுமட்டுமன்று. பாஷ்யகாரருடைய தனியனிலும் இதுவே கதிதான். *யோநித்யமச்யுத* என்கிற ச்லோகம் பாஷ்யகாரருக்குத் தனியனுகக் கூரத்தாழ்வான் ஸாதித்தது. இதையே உலகமெல்லாம் அவர்க்குத் தனியனுகச் சொல்லிவருகிறது. புது வைஷ்ணவம் கொண்டாடவந்த நம்மடவாள் அதையும் விட்டுத்தொலேத்து (ப்ரணமம் லக்ஷ்மணமுநி:) என்கிற யதிராஜ ஸப்ததி ச்லோகத்தைப் பற்றிக்கொண்டார்கள். ஸகல பரம்பரைகளிலும் இந்தத் தனியனேயே பாஷ்யகாரருக்கு நம்மடவாள் வைத்துக்கொண்டிருந்து பிரபந்தம் தொடங்கும்போது மட்டும் (யோநித்யமச்யுத) என்கிற ச்லோகத்தை கத்துகிருர்களென்ருல் விவேகியான வொருவன் இதை விமர்சிக்க வேண்டாமா? தனியன்கள் விஷயத்தில் தென்கலேயார்கள் எப்போதும் ஒரு சீராகவே யிருந்து வருகிருர்களென்பயையும், நம்மடவாள் ஒவ்வொன்றிலும் எவ்வளவு விபரீதங்கள் கொண்டிருக்கிருர்களென்பதையும் கவனிக்கும்போது வருத்தமேயுண்டாகிறது. மடத்தார் அச்சுப்போட்டிருக்கிற தனியன் புத்தகங்களே யெல்லாம் ஆராய்ந்து பார்த்தாலோ, அறுபது எழுபது வருஷங்களுக்கு முன்பு அச்சிட்ட மடத்துப் பரம்பரைத் தனியன் புத்தகத்தில் பெரிய பெருமாள், பெரிய பிராட்டியார், ஸேநாபதி, நம்மாழ்வார் முதலாக ஒவ்வொரு ஆசாரியர்க்கும் தென்கலேயார் சொல்லிவருகிற தனியன்களேயே பரம்பரைத் தனியனுக அச்சுபோட்டிருப்பதை ஸ்பஷ்டமாகக் காணலாம். "மடம் தென்கலேயா யிருந்த காலத்தில் அச்சிட்டது போலும். அதை இப்போது காட்டி என்ன லாபம்?" என்கிருர்கள் மடத்தார். மடம் வடகலேயாக மாறின பிறகு அச்சிட்டதேயொழிய தென்கலேயாயிருந்த காலத்தில் அச்சிட்டதன்று. அக்காலத்தில் அச்சுக்கூடமே ஏற்படவில்லே. மடத்துக்கு வடகலேக்கறுக்கு முற்ருத காலத்தில் அச்சிட்டதாகையால் புராதனபத்ததியாக வந்த தனியன்களே மாற்றிவிடலாகாது என்கிற ஸாத்விகமான எண்ணம் அப்போதிருந்தது. அதனுல் தனியன்கள் மாற்றப்படவில்லே. அதன் பிறகு 25 வருடம் கழித்து அச்சிட்ட புத்தகத்தில் நடுவே ஒரு கோடுபோட்டு இரண்டு பத்தியாக்கி ஒரு பத்தியில் (ஸ்ரீஸ்தநாபரணமித்யாதி) பழைய தனியன்களேயும், மற்ருெரு பத்தியில் (கமப்யாத்யம் குரும் வந்தே இத்யாதி) புதிய தனியன்களேயும் போட்டிருப்பதைப் பார்க்கலாம்.

அமுதர்—இப்படிப் போட்டால் என்ன அர்த்தம். எனக்கொன்றும் தெரியவில்லையே. எதற்காக இப்படி போடுகிறது? எது இஷ்டமோ அதைக் கொள்கவென்று அர்த்தமா? தனியனென்கிற கௌரவமே யில்லையா?

அட்வகேட்—அர்த்தமோ அனர்த்தமோ எனக்கொன்றும் தெரியாது. உள்ள சூதுகளை மட்டும் நானெடுத்துக் காட்டுகிறேன். அதற்கும் பிறகு அச்சிட்டிருக்கிற தனியன் புத்தகத்தைப்பார்த்தாலோ, நான் முதலில் காட்டின பதிப்பிலுள்ள தனியன் பத்ததியும் இல்லை; இரண்டாவதாகக் காட்டிய புத்தகத்தில் இரண்டாட்டி லூட்டின குட்டியாய் கோடிட்டு இரண்டு பத்தியில் இரண்டு வகைத் தனியன்கள் போட்டிருந்ததே அதுவும் எகிறிவிட்டது. இதில், புது வைஷ்ணவம் கொண்டாடின விதம் பரிஷ்காரமாய்க் காட்டப்பட்டு விட்டது. இதைப்பற்றி நான் மடத்து ஸ்வாமியை நேரிலேயே கேட்டேன்; "பரம்பரைத் தனியன் என்கிற கௌரவம் வேண்டாமா? மனம் போனபடி நித்யமும் தனியன்களை மாற்றிக்கொண்டே யிருப்பது மடத்திற்கு அழகா? சிஷ்யவர்க்கம் எல்லாம் மடமாகவே யிருக்குமா? சில பேர்களாவது விவேகிகள் இருக்க மாட்டார்களா? அவர்கள் என்ன நினைக்கமாட்டார்கள்?" என்று கேட்டேன். இப்படிப்பட்ட 'கேள்விகளுக்கு 'சேஷம் கோபேந பூரயேத்' தவிர வேறு பதில் ஏது? என்று சிரித்துக்கொண்டே ஸாதித்தார்.

அமுதர்—மடத்தார் (கேசவார்ய க்ருபாபாத்ரம்) என்கிறார்களே, இந்தத் தனியனுடைய செய்தி என்ன? இதுவும் இமிடேஷன் தானா?

அட்வகேட்—கிடாம்பியம்புள்ளாருக்கு க்ரமமான தனியன் பரமகம்பீரமாக இருக்க, அது எப்படி மாற்றப்பட்டதோ, தேசிகனுக்கும் பரம கம்பீரமான ஸ்ரீமான் வேங்கடதனியனிருக்க அது எப்படி மாற்றப்பட்டதோ அப்படியே ஆதிவண் சடகோபஸ்வாமிக்கும் வெகு கம்பீரமான தனியன் "ப்ரபத்யே நிரவத்யாநாம் நிஷத்யாம் குணஸம்பதாம், சரணம் பவபீதாநாம் சடகோப முநீச்வரம்." என்கிற ச்லோகமிருக்க அதைத் தள்ளி (தயாபாத்ரம்) என்கிற தனியன் சொன்னால்தான் பிரபந்தம் வாயில் நுழையும் என்று கிரஹித்துக்கொண்டு அபரிமிதமான தயாபாத்ர க்ருபாபாத்ர ஸ்ருஷ்டியன்றோ ஆய்விட்டது. ஆண்டவன் பரம்பரைத் தனியன் புத்தகங்களை யெடுத்துப்பார்த்தால் தயாபாத்ரம் இல்லாத பரம்பரையே கிடையாது. இதுவன்றோ ஆச்சரியம் வெகு அற்புதம்!

அமுதர்—சிறிது முன்பு தேவரீர் ஸாதித்த ஒரு வார்த்தை யென்னவென்றால் தேசிகனோடு ஸம்பந்தத்தைப் புதிதாக ஏறிட்டுக் கொண்டபோது நடந்த கூத்து இது" என்றும், "புது வைஷ்ணவம் கொண்டாட வந்த நம்மடவாள்" என்றும் ஸாதித்திருக்கிறது. நாம் தேசிகனோடு ஸம்பந்தத்தைப் புதிதாக ஏறிட்டுக்கொண்டோமென்று பிறர் சொல்லுவதையே தேவரீரும் சொல்லுகிறதே; அது நம்பத்தகுந்த விஷயந்தானோ?

அட்வகேட்—அதில் என்ன ஸந்தேஹம்? விஷயங்களை நீரே ஆலோசித்துப் பார்க்கலாமே. தேசிகனுடைய திருவவதார ஸ்தலத்திலும் தென்கலை ஸம்பிரதாயமே அத்யாபி விளங்கிவருகிறதே, இதற்கு என்ன காரணம்? அங்கே தேசிகனுடைய திருமண்காப்பு நூதன காலத்தில்தான் மாற்றப்பட்டதென்று ஸர்க்கார் ரிகார்டுகள் ருஜூப்படுத்துகிறதே. அதற்குத் தகுந்தாப்போல் நம்மடவர்கள் சில அசட்டுக் காரியங்கள் செய்திருக்கிறார்களே. அதாவது, தேப்பெருமாள் ஸன்னிதியில் வாஹன மண்டபத்தில் தேசிகன் ஏள்ளிருக்கச்சே திருப்புட்குழிஸ்வாமி வேகவதிக் கரையில் ஒரு தேசிகன் ஸன்னிதியை எதற்காகக் கட்டிவைத்தார்? கோவில் கட்டினதோடு நிற்காமல் அந்த தேசிகனுக்கு வீதிப்புறப்பாடு உத்ஸவாதிகளும் செய்வது நியாயமா?

Rgd. No. 2975 ஸ்ரீராமாநுஜன்

ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாய நூல்கள் கிடைக்குமிடங்கள்:—

(1) க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.

(2) M. A. KRISHNAMMAL, Advocate,
20, South Mada Street, Triplicane, Madras-5.

(3) G. ரங்கைய நாயுடு,
26, குருவப்ப செட்டி தெரு, சிந்தாத்ரிபேட்டை, மதராஸ்—2

(இவர் சென்னையில் பிரசாரம் செய்ய நியமிக்கப்பட்டவர்.)

If un-delivered please return to:

**P. B. ANNANGARACHARYA,**
L. KANCHEEPURAM.

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Satgrantha Prakasana Sabha.

Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street, L. Kancheepuram.

Regd. No. 2975.

ஸ்ரீ:

# ஸ்ரீராமாநுஜன் 179.

P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM.

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச் சந்தா ரூ. 5 ஜீவியச் சந்தா ரூ. 100.

ஜீவியச் சந்தாதாரர்களுக்கு பத்திரிகை சாச்வதமாக அனுப்பப்பட்டு வருவது தவிர 100 ரூபா விலையுள்ள புத்தகங்கள் உடனே அனுப்பப்படும்.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வார்எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி*—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம் வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

சோபகிருதுஸு கார்த்திகைமீ 1963ஸு டிசம்பர்மீ

# ஸ்ரீராமாநுஜன் 179.



சென்னை ஸத்க்ரந்தப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சி. P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 15 | 1963ஆ டிசம்பர்மீ<br>சோபகிருதுஆ கார்த்திகைமீ | ஸஞ்சிகை 11. |
|---|---|---|


## திருவாய்மொழி நூற்றந்தாதி—68.

மாயாமல் தன்னைவைத்த வைசித் திரியாலே *
தீயா விசித்திரமாய்ச் சேர்பொருளோடு—ஓயாமல் *
வாய்ந்துநிற்கும் மாயன் வளமுரைத்த மாறனைநாம் *
ஏய்ந்துரைத்து வாழுநா ளென்று.

| | |
|---|---|
| தன்னை மாயாமல் வைத்த | ஆழ்வாராகிய தம்மை அழியாதபடி இந்நிலத்திலே வைத்த |
| விசித்திரியாலே | —விசித்திரத் தன்மையினால் |
| தீ ஆம் விசித்திரமா சேர் பொருளோடு | தீ முதலான பஞ்ச பூதங்களும் (ஒன்றின் காரியம் ஒன்றுக் கில்லாதபடி வெவ்வேறுருவாய்) சேர்ந்திருக்கும் பதார்த்தங்களோடே |

| | |
|---|---|
| ஓயாமல் | —அநவரதமும் |
| வாய்ந்து நிற்கும் மாயன் | பொருந்தி நிற்கிற எம்பெருமானுடைய |
| வளம் | —விபூதி விஸ்தாரத்தை |
| உரைத்த | —அருளிச்செய்த |
| மாறனை | —ஆழ்வாரை |
| நாம் ஏய்ந்து உரைத்து வாழும் நாள் என்று | நாம் அணுகித் துதித்து வாழ்வது என்றைக்கோ? |

* * * கீழ்த்திருவாய்மொழியாகிய * ஏழையராவியில் பட்ட நலிவுக்கு ஆழ்வார் முடிந்தே போயிருக்கவேணடும்; ஆயினும் முடிந்துபோகாதபடி தம்மை வைத்து நோக்கிக் கொண்டு போருகிற ஆச்சர்யத்தைக் கண்டு தாம் விசித்திரப்பட, ஆழ்வீர்! இஃதொன்று கொண்டோ நீர் இப்படி விஸ்மயப் படுகிறது? மற்றும் நம்முடைய விசித்திரமான படிகளை யெல்லாம் காணீர்' என்று எம்பெருமான் தன்னுடைய ஆச்சர்ய ஜகதாகாரத்வத்தைக் காட்டிக் கொடுக்க, அத்தையநுபவித்து விஸ்மிதராகிறாராழ்வார் *மாயாவாமனனே யென்னுந் திருவாய்மொழியில். அஃது இப்பாசுரத்தில் அருளிச்செய்யப்பட்டதாயிற்று.

கீழ்த் திருவாய்மொழியிலே ஆழ்வார் உருவெளிப்பாட்டாலே நோவுபட்டார். அந்த நோவைப் பரிஹரிக்க எம்பெருமானால் ஆகாததன்றே! ஆனாலும் சில காரணங்களாலே அவன் திருவுள்ளம் ஒரு ஸமய விசேஷத்தை எதிர்பார்த்திருந்தபடியாலே தாமதிக்கலாயிற்று. அந்தத் திருவுள்ளத்தை ஆழ்வார் தாம் அறியாதவரல்லரே. அறிந்துவைத்துப் ஆறியிருக்குமியல்வினரல்லரே. உயிர் துறந்து முடியவேண்டும்படியான நிலைமை நேர்ந்திருக்கச்

செய்தேயும் எம்பெருமான் தம்மை முடியவொட்டாதே நடத்துகிறபடியைக் கண்டு மிகவும் ஆச்சரியப்பட்டார். இப்படியொரு ஆச்சரியமிருந்தபடியென் ! என்று எம்பெருமானையே நோக்கிக் கூற, ஆழ்வீர் ! இந்தவொரு ஆச்சரியந் தானோ என்னிடத்தில் நீர் அறிந்தது? என் விசித்திரங்களையெல்லாம் காட்டுகிறேன் பாரும் என்று சொல்லி எம்பெருமான் தன்னுடைய விருத்த விபூதித்வத்தைக் காட்டியருள, அதுகண்டு ஆழ்வார் விஸ்மிதராய்ப் பேசினார் இத் திருவாய்மொழியில் என்றதாயிற்று. ... ... ... .... (68)

---

## ஸ்ரீராமாநுஜன் சந்தா வரவுகள்

118. Sri T. V. Srinivasachar, Advocate, West Mambalam
119! ஸ்ரீ. கூரம் திருநாராயணையங்கார், ஷோலாபூர்.
120. ஸ்ரீ. A. K. ரங்காசாரியர், பல்லாவரம். (காஞ்சிபுரம்)
121. ஸ்ரீ. மேலவிடையல் R. விஜயராகவய்யங்கார்.
122. ஸ்ரீ. கூரம் துரைஸாமி ஐயங்கார், நெல்லூர் மூலபேட்டை.
123. Sri N. Veeraraghavan, avl., Chingleput.
124. ஸ்ரீ. திருவாலி. பரவஸ்து. திருவேங்கடாசாரியர்.
125. M. S. Nataraja Chettiar; Muthyalpet, Madras.
126. Sri R. Varadaraja Iyengar, New Delhi.
127. விட்டலாபுரம் V. S. வெங்கடாசாரியர், கோயில்.
128. Sri T. Varadarajan, Tirunelvely.
129. M. S. தேவராஜுலு செட்டி, வண்ணாரப்பேட்டை.
130. Sri C. R. Ramaswami Iyengar, B. A., B. L., Sevanivas, கோவை.

——:※:——

## சோளஸிம்ஹபுரத்து விசேஷங்கள்

1. திருக்கடிகைத் தக்கான் ஸன்னிதியில் சில ஸம்வத்ஸர காலமாக விசேஷத் திருப் பணிகள் நடந்துவந்து ஒருவாறு பூர்த்தியாகி 31—10—63 ரேவதி நக்ஷத்திரத்தில் ஸம்ப்ரோக்ஷணம் நடைபெற்றது. முன்னடி 5 நாள் விசேஷமான ஹோமங்களும் திவ்யப்பிரபந்த வேதபாராயணம், இதிஹாஸபுராண படனம், வித்வான்களின் உபந்யாஸங்கள் அபரிமித மான அன்னதானங்கள் முதலானவை நடைபெற்றன.

2. ஷை சோளஸிம்ஹபுரத்தில் திருமலையடிவாரத்தில் கொண்டபாளையம் என்னுமிடத் தில் சென்னை பிரபல வியாபாரியான பரமபக்தர் ஸ்ரீமான் ........................ அவர்களால் ஒரு ஸம்வத்ஸர காலமாக ஏறக்குறைய இரண்டு லக்ஷம் ரூபா செலவில் கல்யாண மண்டப மொன்று நிர்மாணிக்கப்பட்டது. இதற்கு தேவராஜ கல்யாண மண்டபமென்று பெயரிடப் பட்டுள்ளது. 21-11-63 உத்தராட நக்ஷத்திரத்தில் இந்த மண்டபத்தில் பெருமாளும் தாயாரு மெழுந்தருளி விசேஷ வைபவமாகத் திருப்ரதிஷ்டை நடந்தேறியது. விசேஷ போஜ் யாஸன நைவேத்யங்கள் உபந்யாஸங்கள் ஸங்கீதக் கச்சேரிகள் அன்னதானங்கள் அமோக மாக நடந்தன. இக்கல்யாண மண்டபத்தின் சிறப்பை அவரவர்கள் நேரில் கண்டே அறியக் கடவர்கள். இதை நிர்மாணித்த பக்தர் பொருளைப் பொருள்படுத்தாமல் செலவு செய்திருப்பது குறிப்பிடத் தக்கது. இது நீடூழி விளங்குக. ... ... ... *

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



அழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ காஞ்சீ வேத வேதாந்த வைஜயந்தீ வித்யாநிலய

# நித்ய ப்ரதக்ஷிண கைங்கர்யத்தின் நாற்பத்து நான்காவது

# வருஷ பூர்த்திக் கொண்டாட்டம்.

ஸ்ரீமதித்யாதி (வைகுண்டவாஸி) திருமலே விஞ்சிமூர் மாம்பள்ளம் ஸுதர்சநாசார்யஸ்வாமியின் சாச்வத கீர்த்தி விஜயத்வஜமாக விளங்கி வருகின்ற ஸ்ரீ வேத வேதாந்த வைஜயந்தீ வித்யா நிலயத்தின் சார்பாக 1919-ஞு ஸித்தார்த்தியாண்டு கார்த்திகைமீ ஏகாதசி சித்திரா நக்ஷத்ரத் தன்று பகவத்பாகவத க்ருபையினல் தொடங்கப்பட்டு தினந்தோறும் தவருமல் நடைபெற்றுவருகின்ற ப்ரபாத ப்ரதக்ஷிண பாராயண கைங்கரியத்தின் நாற் பத்து நான்காவது ஆண்டு நிறைவு விழா நிகழும் கார்த்திகைமீ 25உ யன்று (11-12-63) புதன்கிழமை நடைபெறுகின்றது, இதற்குப் பூர்வாங்கமாக 2-12-63 த்விதீயை முதலாக விசேஷ பாராயணங்களும் இரண்டு வேளேயும் திருவீதிவலமும் உபந்யாஸங்களும் நமது பாடசாலேயில் வழக்கம்போல் நடைபெறும். அன்பர்களனேவரும் விசேஷித்து வைதிகோத்தமர்களும் இதில் கலந்துகொண்டு களிக்கவேணுமென்று பிரார்த்திக்கப்படுகிருர்கள்.

இங்ஙனம்,

சின்ன காஞ்சீபுரம், 30-11-63.

பிரதிவாதி பயங்கரம், அண்ணங்கராசாரியர்.
V. V. V. பாடசாலாத்யக்ஷர்.

# ஆழ்வான் தனியன்

நம் ஆசார்யர்களனைவர்க்கும் தனியன்கள் ஒவ்வொரு ரீதியில் அவதரித்துள்ளது. கூரத்தாழ்வானுடைய தனியன் அவதரித்திருக்கும் விதம் உண்மையில் அதிவிலக்ஷணமானது. இத்தனியன் பட்டரருளிச் செய்ததாதலால் அவருடைய தனிப்பட்ட திருநாவீறு இதில் பொலிகின்றது. "யதுக்தயஸ் த்ரயீகண்டே யாந்தி மங்கலஸூத்ரதாம்" என்பது இத்தனியனில் உத்தரார்த்தம். ஆழ்வானுடைய ஸ்ரீஸூக்திகளானவை வேதமாகிற மாதின் கழுத்திலே திருமங்கலியமாக விளங்குகின்றனவென்று வெகு சமத்காரமாக அருளிச் செய்யப்படுகிறது. இதன் கருத்தைச் சிறிது விவரிப்போம். பெண்களுக்குத் திருமங்கலிய மில்லாத நிலைமைகள் இரண்டு. கன்னிகையாயிருக்கும் நிலைமை ஒன்று. நூலிழந்து விதவையாயிருக்கும் நிலைமை மற்றொன்று.

இவற்றுள், கன்னிகைப் பருவத்தில் பெண்களுக்குப் பல நாயகர்கள் தேறக் கூடும். எனெனில், பெண்கழுத்தில் ஒரு கைப்பாடாகத் தாலி ஏறுமளவும் பெரும்பாலும் பிரமசாரிகளும் விதுரர்களும் அவளைத் தன் மனைவியாகப் பாவித்திருக்கக் கூடும். 'இப்பெண்ணுக்கு நானே கணவனாகலாம்' என்று ஸ்வரூபயோக்யதையுடையாரெல்லாரும் நினைத்திருக்கக் கூடுமன்றோ. மற்றுள்ள விரக்தர்களும் க்ருஹஸ்தர்களும் அக் கன்னிகையைக் கண்டால் 'இவளுக்கு இன்னும் கணவன் நிச்சயிக்கப்படவில்லை' என்று ஸாதாரணமாக நினைத்துக் கொள்வார்கள். அப்பெண்ணின் கழுத்தில் தாலி ஏறிவிட்ட பின்பு, முன்பு தங்களுக்கென்று அபிமாநித்திருந்த பிரமசாரிகளும் விதுரர்களும் 'இனி இவள் அநர்ஹை' என்று நிச்சயித்துத் தாங்கள் ஆசையற்றொழிவர்கள். ஸாதாரணமாக நினைத்துக்கொண்டிருந்த மற்ற க்ருஹஸ்தர்களும் விரக்தர்களும் 'இவளுக்கு ஒரு கணவன் அமைந்துவிட்டான்' என்று நினைத்துப் போருவர்கள். இனி இரண்டாவதான வைதவ்யநிலைமையில் ஸ்த்ரீயைப் பார்க்குமவர்கள் 'இவளுக்கு ஏற்பட்டிருந்த கணவன் இறந்தொழிந்தான், இனி இவளுக்கு எப்போதும் கணவன் ஏற்படப் போகிறதில்லை' என்றெண்ணி நிற்பர்கள். ஆகவே, மாதர்கள் மங்கலநூல் இல்லாத நிலைமைகளில் பல பர்த்தாக்களை யுடையவர்களாயும் ஒரு பர்த்தாவையு முடையராகாதவர்களாயும் இருப்பர்களென்றதாயிற்று.

அதுபோல, ஆழ்வான் ஸ்ரீஸூக்திகள் அவதரிப்பதற்கு முன்பு வேதங்கள் மங்கல நூல் இல்லாத மாதரின் இரண்டு வகையான நிலைமைகளையும் உடையனவா யிருந்தன. வேதத்துக்கு ருத்ரனைப் பதியாகச் சிலர் மயங்கி அபிமானிப்பர்கள்; பிரமனைப் பதியாகப் பேதையர் சிலர் பேணுவர்கள். இங்ஙனம் பாசுபதர் முதலிய மதாந்தரஸ்தர்களால் பலபல தெய்வங்கள் பதியாக அபிமானிக்கப்பட்டும், நிரீச்வர மீமாம்ஸகாதிகளால் நாயகனே கிடையாதென்று மறுக்கப்பட்டும் கிடந்தது. ஆழ்வானுடைய பஞ்சஸ்தவம் முதலான திவ்ய ஸூக்திகள் திருவவதரித்தவுடனே 'தலையறுத்தவனும் தலையறுப்புண்டவனும் மற்றுமெவனும் வேதத்துக்கு நாயகரல்லர்; அடியோடு நாயகனே கிடையாதென்றதும் தவறு; நாயகனுண்டு, அவன் ஒருவனே; அவனுகிறுன் ஸ்ரீமந் நாராயணனே என்று கல்வெட்டாக நிஷ்கர்ஷம் ஏற்பட்டபடியால் இவருடை ஸ்ரீஸூக்திகள் வேத மாதுக்கு மங்கலநூல் போன்றன.

இதனால், ஸகலதுர்மதங்களையும் நிரஸித்துப் பரதத்வ நிர்ணயம் பண்ணவல்ல வாக் வைபவமுடையவர் கூரத்தாழ்வான் என்றதாகிறது. வஸ்துஸ்திதியில் ஸ்ரீபாஷ்யாதிகள் திருவவதரித்திருந்தாலுங் கூட ஆழ்வானுடைய பஞ்சஸ்தவங்கள் அவதரிக்கவில்லையானால் நம் எம்பெருமானார் தரிசனத்திற்கு அபரிஹார்யமான குறையே யாகுமன்றோ.

இத்தகைய தனியன் பணிப்பதற்கு பட்டர் தவிர மற்றொருவராலாகாது. இத்தனியன் ஆழ்வான் தவிர மற்றொருவர்க்கும் ஏற்காது. ... ... *

## ஆழ்வானுடைய உக்தி சாதுர்யம்

எம்பெருமானைத் துதிக்கின்ற பக்தமணிகள் தங்களுடைய பலவகையான அநுபவங் களில் விலக்ஷணமான ஓர் அநுபவத்தைக் காட்டுவதுண்டு; அதாவதென்னென்னில், எம் பெருமானை நோக்கிச் சில கேள்விகள் கேட்கிற முகத்தால் ஒருவகையான குணாநுபவம் பண்ணுவது. பொய்கையாழ்வார், நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் முதலானோர் இவ்வநு பவத்திற்கு வழிகாட்டிகளாக அமைந்தனர். பொய்கையார் முதல் திருவந்தாதியில் (69) *பாலன் தனதுருவாயேழுலகுண்டு, ஆலிலையின் மேலன்று நீ வளர்ந்த மெய்யென்பர்—ஆல ன்றுவேலை நீருள்ளதோ விண்ணதோ மண்ணதோ? சோலைசூழ் குன்றெடுத்தாய் சொல்லு.* என்று கேட்கிறார். நம்மாழ்வாருடைய வினாக்கள் பல பல. ஒன்றே கேண்மின்; பெரிய திருவந்தாதியில் *சீரால் பிறந்து சிறப்பால் வளராது, பேர் வாமனாகாக்கால் பேராளா!— மார்பாரப், புல்கி நீயுண்டுமிழ்ந்த பூமி நீரேற்பரிதே? சொல்லு நீ யாமறியச் சூழ்ந்து.* என் பது. திருமங்கையாழ்வாருடைய வினாக்களிலும் ஒன்று கேண்மின்; (பெரிய திருமொழி 7–9–7) *சேயோங்கு தண் திருமாலிருஞ்சோலை மலையுறையும் மாயா! எனக்குரையா யிது; மறை நான்கினுளாயோ? தீயோம்பு கைம்மறையோர் சிறுபுலியூர்ச் சலசயனத்தாயோ? உன் தடியார் மனத்தாயோ?* என்பது.

இந்த வினாக்களை விவரித்து அநுபவித்தால் இன்சுவை பெருகும். ஆழ்வானுடைய ஸ்தவங்களில் அதிமாநுஷ, ஸுந்தரபாஹு, வரதராஜ ஸ்தவங்களிலே வெகு ரஸகனமான கேள்விகள் அமைந்துள்ளன. திருமாலிருஞ்சோலை யழகரை நோக்கிக் கேட்கிற மூன்று கேள்விகள் அமைந்த ஒரு ச்லோகத்தை மாத்திரம் இங்கு சுருக்கமாக அநுபவிப்போம்.

> " கூஹிதஸ்வமஹிமாபி ஸுந்தர! த்வம் வ்ரஜே கிமிதி சக்ரமாக்ரமீ: ?
> ஸப்தராத்ரமததாச்ச கிம் கிரிம் ப்ருச்சதச்ச ஸுஹ்ருத: கிமச்ருத: ? "

என்பது ஸுந்தரபாஹுஸ்தவத்தில் 112-ஆம் ச்லோகம்.

இதிலுள்ள மூன்று கேள்விகளாவன :— ஸௌலப்ய ஸௌசீல்யங்களையே காட்டிப் பரத்வத்தை யொளித்து மாநுஷ்யகம் கொண்டாட வந்த விடத்திலே பரத்வம் விளங்கும்படி யான செய்கைகளையும் இடையிடையே வெளியிட்டது எதற்காக? என்பது முக்கியமான கேள்வி. அழகரே! தேவரீர் *ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவிலொருத்தி மகனாயொளித்து

வளர்ந்தது ஸ்வகிய சக்தி விசேஷங்களை யெல்லாம் மறைத்துக் கொண்டல்லவோ? அப்படி யிருந்தும், நெடுநாளாகத் திருவாய்ப்பாடியில் நடந்துவந்த தேவேந்திர ஸமாராதனையைத் தடுத்தது என்? என்பது முதற் கேள்வி. இதற்கு எம்பெருமான் (அல்லது அவனுடைய பிரதிநிதிகள்) சொல்லக்கூடிய ஸமாதானம் என்னவெனில்; பரத்பரனான தான் வளருகிற வூரிலே தேவதாந்தரத்திற்கு ஆராதனை யாவதென்? என்றிருந்தபடியாலே தடுத்ததாக.

அவ்விந்திரன் ஏழு நாள் கல்மழை பெய்வித்து ஆயர்களுக்கும் ஆநிரைகளுக்கும் பொறுக்கொணுத் தீங்கை விளைத்தபோது அவனைத் தலையறுத்துத் தொலைக்கவேண்டியிருக்க, அது செய்யாதே கோவர்த்தனமலையைக் கொற்றக் குடையாக ஏந்தி நின்றதென்? என்பது இரண்டாவது கேள்வி. 'இந்திரனது உணவைக் கொண்ட நாம் உயிரையும் கொள்ள வேணுமோ? இந்த மலையே நமக்கு ரக்ஷகமென்று நாம் அடியிலே சொன்ன சொல்லை மெய் யாக்கி இம்மலையைக் கொண்டே மழைக் கஷ்டத்தைத் தடுத்து விடுவோமாகில் அவன் கைசலித்தவாறே தானே ஓய்ந்து நிற்கிறுனென்கிற விசாலமான திருவுள்ளத்தினுல்—என்பது இதற்கு ஸமாதானம்.

ஏழு பிராயத்துச் சிறுவன் மலையெடுத்து நின்ற அதிமாநுஷசேஷ்டிதங் கண்டு ஆச்ச ரியப்பட்ட ஆயர்கள் இவனுடைய பிறப்பிலே சங்கை கொண்டு "தேவோ வா தாநவோ வா த்வம் யக்ஷோ கந்தர்வ ஏவ வா?" என்று, நீ தேவனு? தானவனு? யக்ஷனு? கந்தர்வனு? என்று கேட்ட வளவிலே *க்ஷணம் பூத்வா த்வஸௌ தூஷ்ணீம் கிஞ்சித்ப்ரணயரோஷவாந்* என்கிறபடியே—அப்படி அவர்கள் கேட்டதற்குச் சீற்றங் கொண்டதாக வுள்ளது. சீற்றங் கொள்ளும்படியாக அவர்கள் ஒன்றும் கேட்கவில்லையே! அப்படி யிருக்க சீற்றங் கொண் டது என்? என்பது மூன்ருவது கேள்வி. இடையர்களிலே கடை கெட்ட இடையனுகத் தான் வந்து பிறந்திருக்கச் செய்தே ஸஜாதீயனை விஜாதியனுக்கிக் கேள்வி கேட்பது தவருத லால் சீற்றமுண்டாயிற்றென்று ஸமாதானம். இத்தால் கண்ணபிரானுக்கு தேவத்வத்திலுங் காட்டில் கோபாலத்வமே உகப்புக்கிடமான தென்று விளங்கும். அப்படிப்பட்ட அர்த்தங் களை விளங்கச் செய்யும் கேள்விகளன்ருே இவை. ... ... *

## "துஷ்யந்தி ச ரமந்தி ச"

பகவத்கீதை பத்தாவது அத்யாயத்தில் ஒன்பதாவது ச்லோகம்—

"மச்சித்தா மத்கதப்ராணு போதயந்த: பரஸ்பரம், கதயந்தச்ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச" என்பது. இந்த ச்லோகம் பாகவத சிகாமணிகளின் அழகிய போதுபோக்கைப் பற்றிப் பகவான் [கீதாசார்யன்] பரமஸந்தோஷம் பொலியச் சொன்னது. பாகவதர்கள் இப்படி வர்த்திக்க வேணுமென்று சிக்ஷிக்கின்றதாகவும் அமைந்துள்ளது இந்த ச்லோகம். இதை நெஞ்சில் ஆவ்ருத்தி பண்ணப் பண்ண விலக்ஷணமான வோர் ஆனந்தம் பக்தர்களுக்கு உண் டாகியே தீரும். திருமழிசைப் பிரான் நான்முகன் திருவந்தாதியில் "தெரித் தெழுதி வாசித் துங் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன் போது" என்றருளிச் செய்த பாசுரம் இந்த கீதா ச்லோகத்தை யடியொற்றியே யென்று சொல்லலாம்.

கீதைக்குப் பல பாஷ்யங்கள் அவதரித்திருந்தாலும் நம் ஸ்வாமி எம்பெருமானாருளிச் செய்திருக்கும் பாஷ்யத்தின் மாதுர்யமும் காம்பீர்யமும் ஒப்புயர்வற்றது. அதிகமான விரிவு இன்றிக்கே ஸம்க்ஷிப்தமாகவே யிருந்தாலும் அர்த்தபுஷ்டி அங்யாத்ருச மென்பதை அநுபவ ரஸிகர்களே அறியமுடியும். சைலியை ஆழ்ந்து நோக்குமிடத்து எம்பெருமானாரும் மணவாள மாமுனிகளும் அபிந்நவ்யக்திகளே யென்று அறுதியிடத் தட்டில்லை. அது நிற்க.

ப்ரக்ருத ச்லோகத்தின் முடிவில் “ துஷ்யந்தி ச ரமந்தி ச ” என்றுள்ளது. க்ரியாபதங்களிரண்டுக்கும் ‘ஸந்தோஷிக்கிறார்கள்’ என்பதொன்றே பொருளாகத் தேறுகின்றது. இந்த புநருக்தி எதற்காக வென்று ஆராயும்போது பாஷ்யங்களை யெடுத்துப் பார்க்க ஆவல் கிளர்கின்றது. சங்கராசார்ய ஸ்வாமிகளின் பாஷ்யத்தைப் பார்த்தாலோ அதில், “**तुष्यन्ति–परितोषमुपयान्ति ; रमन्ति च–रतिं च प्राप्नुवन्ति, प्रियसंगत्या इव ।**” என்றுள்ளது. பரிதோஷமாவது என்ன? ரதியாவது என்ன? என்பதை நுண்ணுணர்வினர் நுட்பமாக அறிவர் போலும். இனி மத்வ பாஷ்யத்தைப் பார்த்தாலோ, இங்கு 8, 9, 10, 11 ஆகிய நான்கு ச்லோகங்களுக்கு பாஷ்யமே கிடையாது. ‘**सन्ति च भजन्तः केचिदित्याह अहमित्यादिना**” என்று எட்டாவது ச்லோகத்திற்கு அவதாரிகையிட்டு, மேல் பதினோராவது ச்லோகம் வரையில் ஸ்பஷ்டார்த்தகமென்று முடித்திட்டார். அந்த பாஷ்யத்தின் ப்ரக்ரியை பெரும்பாலும் இத்தகையதே.

இனி நம் ஸ்வாமியின் பாஷ்ய ஸூக்திகள் காண்மின் ; ‘ **[तुष्यन्ति च रमन्ति च] वक्तारः तद्वचनेन अनन्यप्रयोजनेन तुष्यन्ति । श्रोतारश्च तच्छ्रवणेन अनवधिकातिशयप्रियेण रमन्ते ।**” என்றுள்ளது. பகவத கதைகளைச் சொல்லி மகிழ்வார் சிலர் ; அவற்றைக் காதாரக் கேட்டு மகிழ்வார் சிலர். இவ்வகையான பேதத்தையிட்டு க்ரியாபத பேதம் செய்வதாக ஸ்வாமி திருவுள்ளம் பற்றுகிறார். மூலத்தில் “ **போதயந்த: பரஸ்பரம்** ” என்றிருப்பதனாலே வக்தாக்களும் ச்ரோதாக்களுமாக இரண்டு வகுப்பினர் அவசியம் தேறுகிறார்கள். அவ்விரு வகுப்பினரிடத்தும் அந்வயிக்குமாறு இரண்டு க்ரியா பதங்களை கீதாசார்யன் ப்ரயோகித்திருப்பதாக மருமம் கண்டறிந்து உரை செய்திருப்பது ஸ்வாமி ராமாநுஜர்க்குத் தன்னேற்றம்.

இந்த நுண்பொருளை ஸ்வாமி கண்டறிந்தது முன்னே நாம் காட்டிய திருமழிசைப் பிரான் பாசுரங் கொண்டே யென்னலாம். அதில், வக்த்ருத்வம் ச்ரோத்ருத்வமாகிய இரண்டும் ஆழ்வார்க்கே காலபேதேந இருப்பதாகக் காட்டப்பட்டிருக்கிறது. எங்ஙனேயென்னில்; “ தெரித்தெழுதி வாசித்தும் கேட்டும் ” என்றவதில் தெரிக்கையாவது—தெரிவிக்கை ; ப்ரவசநம் பண்ணுகை. அது ஒரு காலத்தில் ; மற்றொரு காலத்தில் பிறர் சொல்ல ச்ரவணம் செய்கையை ‘**கேட்டும்**’ என்பதனால் குறித்தனர். ஆக ஒரு வ்யக்திக்கே காலபேதத்தாலே சொல்லுவதும் கேட்பதும் ஸம்பாவிதமேயாதலால், சொல்லும்போது உண்டாகு மானந்தத்தை ‘**துஷ்யந்தி**’ என்பதனாலும், கேட்குங்காலுண்டாகு மானந்தத்தை ‘**ரமந்தி**’ என்பதனாலும் கீதாசார்யன் குறிப்பிட்டதாகக் கொள்வது சிறக்கும். ...

*

---

# நாம் இருக்கவேண்டிய விதம் யாது?

நாம் ஸ்ரீ வைஷ்ணவர்கள். நம்முடைய லக்ஷணத்தை விளக்கவந்த சாஸ்த்ரங்கள் பலமுகமாகப் பேசியுள்ளன. "யே கண்டலக்நதுலஸீநளிநாக்ஷ மாலா: யே பாஹுமூல பரிசிஹ்நிதசங்கசக்ரா:, யே வா லலாடபலகே லஸதூர்த்வபுண்ட்ரா: தே வைஷ்ணவா புவநம் ஆசு பவித்ரயந்தி." என்கிற சுலோகம் பெரும்பாலும் பலருமறிந்ததேயாகும். ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு இருக்கவேண்டிய வெளிவேஷங்களை மாத்திரம் இந்த ச்லோகம் தெரிவிக்கின்றதேயன்றி அந்த:கரணத்தில் இருக்கவேண்டிய அம்சங்களில் ஏகதேசத்தையும் தெரிவிக்கவில்லை. அவற்றைத் தெரிவிக்கின்ற ச்லோகங்களும் இதிஹாஸ புராணங்களில் மலிந்துகிடக்கின்றன.

பகவத்கீதையில் பத்தாவது அத்யாயத்தில் (ச்லோ. 5) "அஹிம்ஸா ஸமதா" என்றவிடத்தில் ஸமதா என்பதை விவரித்தருளாநின்ற நமது பாஷ்யகாரர் "ஸமதா—ஆத்மநி ஸுஹ்ருத்ஸு விபக்ஷேஷு ச ஸமமதித்வம்" என்றுரைத்தருளினர். அங்கு தாத்பர்ய சந்த்ரிகையில் தேசிகன் *ஸமமதிராத்ம ஸுஹ்ருத்விபக்ஷபக்ஷே—இதி பகவத்பராசரவசநமிஹ தத்தத்பதை: ஸ்மாரிதம்* என்றருளிச் செய்தார்.

ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் (3–7–20) *நசலதி நிஜவர்ணதர்மதோ ய: ஸமமதி ராத்ம ஸுஹ்ருத் விபக்ஷபக்ஷே, நஹரதி நச ஹந்தி கிஞ்சிதுச்சை: ஸிதமநஸம் தமவேஹி விஷ்ணு பக்தம்* என்றுள்ள சுலோக ரத்நமே இங்கு எடுத்துக் காட்டப்பட்டதாயிற்று. இதில் *ஸமமதிராத்ம ஸுஹ்ருத் விபக்ஷபக்ஷே* என்கிற இரண்டாவது பாதம் முக்கியமாகக் கணிசிக்கத் தக்கது. தன்னிடத்திலும் தன் நண்பர்களிடத்திலும் தன் பக்கலில் பகை பாராட்டுமவர்களிடத்திலும் ஒரு நிகரான புத்தியை யுடையவனாயிருப்பவன் எவனோ அவனே ஸ்ரீவைஷ்ணவன் என்று இதனால் தெரிவிக்கப்படுகின்றது. இப்படிப்பட்ட ஸ்ரீவைஷ்ணவத்வம் ப்ரஹ்லாதாழ்வான் போல்வாரிடத்தில் இருந்ததாகக் கதைகளில் கேட்டுவருகின்றோமத்தனையல்லது இக்காலத்தில் சில வ்யக்திகளிடத்திலாவது இதைக் காண முடியுமோ என்று பார்த்தால் முடியாதென்றே முடிவு கட்டவேண்டியதாகும்.

முற்காலத்தில் பட்டர் நம்பிள்ளை போல்வாருடைய சில இதிஹாஸங்களை நாம் கேட்கும்போதும் புத்தகங்களில் வாசிக்கும்போதும் 'உண்மையாக இங்ஙனே நடந்திருக்குமோ!' என்று அதிசங்கிக்குமவர்களாக நாம் இருக்கின்றோமே தவிர, 'நாமும் அந்த நடையைச் சிறிதாகிலும் அநுகரிக்க முயலவேண்டும்' என்று பாரிக்கிற அதிகாரிகள் இலரென்றே சொல்லவேண்டும்.

ஸ்ரீவசநபூஷணத்தில் "குற்றம் செய்தவர்கள் பக்கல் பொறையும் க்ருபையும் சிரிப்பும் உகப்பும் உபகாரஸ்ம்ருதியும் நடக்கவேணும்" என்றவிடத்து ஜநந்யாசார்யருடைய வியாக்கியானமான ஆய்ப்படியில்—

"பட்டர் ஒருநாள் பெருமாள் ஸந்நிதியிலே அநுஸந்தானம் பண்ணுகிற்க, சிலர் செவி பொறுக்கவொண்ணாத பருஷோக்திகள் பண்ணக்கேட்டு, சாத்தின திருவாழிமோதிரத்தையும் திருப்பரியட்டத்தையும் கொடுத்தருளி, முதலிகளைப் பார்த்து, இவர்கள் பருஷித்ததுக்கு நான் அஞ்சிக் கொடுத்தேனன்று; நாமறியாத தோஷங்களையும் பெருமாள் திருச்செவி சாத்தும்படி சொன்ன உபகாரத்தைப் பற்றக் கொடுத்தேனத்தனை.........என்றருளிச்

செய்தார்" என்று காண்கிறது. பட்டர் தம்மை தூஷித்தவர்களுக்கு பூஷண தானமும் பீதாம்பர தானமும் செய்தருளினதாக இங்ஙனே இதிஹாஸம் காண்கிறோம். இதையெல்லாம் நாம் பிறர்க்கு எடுத்துரைக்கும்போது கல்லும் கரையும்படி உரைக்கின்றோம்; கேட்பவர்களும் கண்ணுங் கண்ணீருமாயிருந்து புளகாஞ்சிதராய்க் கேட்கிறார்கள். ஆனால் அவரவர்களுடைய அநுஷ்டானம் எங்ஙனே யிராநின்றதென்று பார்த்தால் வாய்திறக்க வழியே யில்லை.

நமக்கு நைச்யாநுஸந்தானம் ஸ்வரூபம் என்றறிந்து நாம் "நீசனேன் நிறையொன்று மிலேன்" என்றும் "சீலமில்லாச் சிறியன்" என்றும் பலவாறு பாசுரங்களையும் ச்லோகங்களையும் முன்னிட்டுத் தாழ்வு சொல்லிக் கொள்ளுகிறோம். நம் வாயினால் வெளிவந்த அந்தத் தாழ்வுதன்னையே பிறரொருவர் நம்மை நோக்கி எடுத்துரைக்கத் தொடங்கினால் 'என்னையா நீச னென்கிறாய்? என்னையா நிறையொன்று மில்லாதவனென்கிறாய்? என்னையா சீலமில்லாச் சிறியனென்கிறாய்? பாவி! நீயன்றோ இப்படிப்பட்டவன்' என்று உடனே அவரை ஆயிரம் வகையாக தூஷிக்கவும் தண்டிக்கவும் தண்டிப்பிக்கவும் எழுகின்றோம். ஒவ்வொருவரும் தம்தம் அனுபவத்தில் இதை நிச்சயமாகக் காணலாம்.

சில விசேஷ காலங்களில் பெரியார்களை எழுந்தருளப்பண்ணி 'ஸ்வாமிந்! ஸ்ரீபாத தீர்த்தம் ஸாதிக்கவேணும்' என்று வேண்டுகிறோம். அதற்கு அவர்கள் 'ஐயோ! அடியேனுக்கென்ன யோக்யதையுண்டு? ஸகல விதத்திலும் அயோக்யனன்றோ அடியேன்' என்று பல படியாக நிகர்ஷாநுஸந்தானம் பண்ணுகிறார்கள். இந்த அநுஸந்தானம் உள்ளவாறு செய்கிறபடியா? அல்லது இங்ஙனே சொல்லிக் கொள்ளவேண்டுவது ஒரு உபசார வழக்கு என்று கொண்டு செய்கிறபடியா? என்று நாம் ஆலோசித்தால், அவர்களுடைய ஹ்ருதயத்தை நம்மால் தெரிந்துகொள்ளமுடியாதாயினும், அவர்கள் தாங்கள் அநுஸந்தித்த நீசத் தன்மையை நம் வாயினால் சொல்லிக்காட்டினவிடத்தும், (அதாவது நீர் மிகவும் அயோக்யர் என்று பிறர் சொன்னவிடத்திலும்) அவர்கள் உகந்தேயிருப்பர்களாயின் அப்போதுதான் அவர்களுடைய நைச்யாநுஸந்தானத்தை நாம் ஸஹ்ருதயமென்று நினைக்கலாகும்.

'அஹம் அமர்யாத:, அஹம் க்ஷுத்ர:' என்று நைச்யாநுஸந்தானம் பண்ணுமவர்கள் "த்வம் அமர்யாத: த்வம் க்ஷுத்ர: என்கிற பரோக்திகளை உகந்திருக்கின்றார்களா? என்றே நாம் பார்க்கவேண்டும். கூரத்தாழ்வான் போல்வாரான சிலரே அங்ஙனமிருந்தார்கள் என்று சொல்லவேண்டியதாகின்றது. தம்மைப் பற்றிப் பிறர் கூறும் நிகர்ஷோக்திகளைச் சிறிதும் ஸஹியாமல் உடனே பிரபலமாக ப்ரதிஸத்காரம் செய்யப் புறப்படுபவர்கள் தாங்கள் செய்துகொள்ளும் நிகர்ஷாநுஸந்தானம் அர்த்தமற்றது என்றே சொல்லவேண்டும்.

"ஒருவன் உன்னை இடது தாடையில் அறைந்தானாகில் உடனே அவனுக்கு நீ வலது தாடையை ஆதரவோடு காட்டு" என்று பிரசங்க மேடைகளில் பேசுவாரை மிக மிகக் காண்கிறோம். அப்படி அவர்கள் பேசி இப்பால் வந்தவுடனே அவரை ஒருவர் அடிப்பதாகக் கை யோங்கும்போதே என்ன நடக்கிறதென்பதையும் காணாநின்றோம்.

ஸபைகளில் சிலர் உபந்யாஸம் பண்ணி முடிக்கும்போது "ஒன்றுமறியாத நான் ஏதோ தப்பும் தவறுமாக உளறிவிட்டேன்; இதில் நல்லது ஒன்றுகூட இராது; சிறியேனை க்ஷமிக்கவேணும்" என்று கால்மணி காலம் சொல்லி முடிப்பர்கள். இதே வார்த்தையை

அவர் அயலார் வாயில் கேட்பாராகில், கோபாவேசங் கொண்டு கண்கள் சிவக்கப் பெற்று "எனக்கா ஒன்றும் தெரியாது, நானா தப்பும் தவறுமாக உளறிவிட்டேன்" என்று ஆரம்பித்து (அவரே) பிரபலமாக அட்டஹாஸங்களைச் செய்யக் காண்கின்றோம். ஆசார்ய பீடம் வஹிக்கின்ற எந்த வ்யக்தியும் தம் நிகர்ஷத்தைத் தாம் அநுஸந்திக்கிறவர்களாக இருக்கின்றார்களே யல்லது, தம்மைப்பற்றிப் பிறர் கூறும் நிகர்ஷத்தை ஆமோதிப்பவர்களாக இல்லையே! அப்படியிருப்பவர்களன்றோ ஸ்ரீ வைஷ்ணவத்வ பூர்த்தி யுடையவராவார்.

இக்காலத்தில் இப்படிப்பட்ட வ்யக்தி தேறுவது கஷ்டமாதலால் ஒருவரும் ஸ்ரீவைஷ்ணவரல்லர் என்று நாம் சொல்லவும் நினைக்கவும் தகாது. *ப்ராஹ்மண்யாம் ப்ராஹ்மணாத் ஜாதத்வம் ப்ராஹ்மண்யம்* [ப்ராஹ்மண யோநியில் பிறப்பதே ப்ராஹ்மண்யம்] என்று சொல்லுவதுபோல, *வைஷ்ணவ்யாம் வைஷ்ணவாத் ஜாதத்வம் வைஷ்ணவத்வம்* [வைஷ்ணவ யோனியில் பிறப்பதே ஸ்ரீவைஷ்ணவத்வம்] என்று சொல்ல ப்ராப்தமாகிறது.

அப்படிப்பட்ட ஸ்ரீவைஷ்ணவர்களுடையவும் திருவுள்ளம் புண்படாதபடி வர்த்திக்க வேண்டியது நமது கடமையே யாகும். ஒரு வைஷ்ணவருடைய திருவுள்ளம் கன்றினால் அதிற்காட்டிலும் அநர்த்தபீஜம் நமக்கு வேறில்லை என்கிற துணிவு பிறக்கவேணும். *

---

# சதுர்தச வித்யாபாரங்கதத்வம்

சில மஹான்களை சதுர்தச வித்யாபாரங்கதர்களென்று கொண்டாடுவதுண்டு. பதினான்கு வித்யைகளில் கைதேர்ந்தவர்கள் என்பது இதன் கருத்து. பதினான்கு வித்யைகள் எவையென்னில், நான்கு வேதங்களுக்கும் அங்கமாக அமைந்த ஆறும், உபாங்கமாக அமைந்த எட்டுங் கூடிப் பதினான்கு என்கிறது. சிக்ஷாவ்யாகரணாதிகளான ஆறங்கங்களும், மீமாம்ஸாந்யாய புராண தர்மசாஸ்த்ராதிகளான எட்டு உபாங்கங்களும் ப்ரஸித்தமானவை. இப் பதினான்கு வித்யைகளில் வல்லவர்களை சதுர்தசவித்யாபாரங்கதர்களென்று சொல்லுகிறோம். இங்ஙனே அர்த்தங் கொள்வது தவிர மற்றொரு விதம் நைஷதகாவியம் முதல் ஸர்க்கத்தில் ஸ்ரீ ஹர்ஷ மஹாகவியினால் காட்டப்பட்டிருக்கின்றது. *அதீதிபோதாசரண ப்ரசாரணை:* என்கிற சுலோகம் காண்க. அதைச் சிறிது விவரிக்கிறோம். (சதுர்தச) என்பதற்கு நான்கோடே கூடிய பத்து என்று பொருள் கொள்ளுமளவில் பதினான்கென்று தேறுகிறது. அப்படியன்றிக்கே, "चतस्रो दशाः यासां ताः विद्याः—चतुर्दशविद्याः" என்று கொள்ளுமளவில் 'நான்கு அவஸ்தைகளையுடைய வித்யைகள்' என்று பொருள் தேறும். வித்யைகளுக்கு நான்கு அவஸ்தைகள் யாவை யென்னில்; வாசிக்கப்படுதல், அறியப்படுதல், அறிந்தபடியே அநுஷ்டிக்கப்படுதல், தாம் அநுஷ்டிப்பதோடு நில்லாமல் பிறரையும் அநுஷ்டிக்கச் செய்யப் பெறுதல் ஆகிய இவையாம்.

வித்யைகளை ஏடுபார்த்து உணருகை யன்றிக்கே குருமுகமாகக் கேட்கை அத்யயனம் செய்வது. இது முதல் அவஸ்தை. வாசிப்பவர்களெல்லோரும் விஷயம் தெரிந்துகொள்ளுகிறார்களென்பதில்லாமையாலே சிரமப்பட்டுப் படித்து விஷயங்களும் தெரிந்துகொள்ளப் பெறுதல் இரண்டாமவஸ்தை. தெரிந்துகொள்வதற்கு ப்ரயோஜனம் அனுஷ்டானமே யாதலால் தெரிந்துகொள்வதோடு நில்லாமல் அனுஷ்டானமும் செய்யப் பெறுகை மூன்றும் அவஸ்தை. தான் அனுஷ்டிப்பதோடு நில்லாமல் பிறரையும் அனுஷ்டிப்பிக்கப் பெறுவது நான்காமவஸ்தை, ஆக இப்படிப்பட்ட சதுர்வித தசைகளையுடைய வித்யைகள்—சதுர்தச வித்யைகள். இப்படி ஆடூவானவொரு நிர்வாஹத்தைக் காட்டின ஸ்ரீ ஹர்ஷமஹாகவியின் மேதை மெச்சத் தகுந்தது. ... ... ... ... *

# பெரியார்களின் கடிதங்கள்

**ந்யாயசிரோமணி. கிடாம்பி. ஸ்ரீநிவாஸவரதாசாரியர். திருமலை திருப்பதி, ஸம்ஸ்க்ருத வித்யாபீடம்.**

ஸ்ரீஸ்வாமியின் தன்சரிதையில் தமது 470 க்ரந்தங்களையும் குறிப்பிட்டு விவரித்து வருகையில் ஆச்சான்பிள்ளை யஷ்டாத்யாயி யென்று எடுத்து விவரித்து வருகையில் "முடிவாக மதுரையிலுள்ள வித்வான்கள் வக்கீல்கள் மற்றும் மஹநீயர்கள் பலர் கூடி மதுரபாஷிதமென்றொரு நூலை ப்ரமாணோபபத்தி புஷ்கலமாக வெளியிட்ட பின்பு இந்த விவாதம் நிச்சேஷமாக சாந்தமாயிற்று" என்பது ஒரு வார்த்தை. நிச்சேஷமாக சாந்தமாயிற்றா? இல்லையா? என்று கேட்டால், சாந்தமாகிப் பதினன்கு வருஷமாயிற்று என்பது உண்மையே யென்று தான் இவர் இசைந்து தீரவேண்டும். மதுரபாஷிதம் வெளிவந்தபிறகு கப் சிப் வாயைத் திறக்கவில்லையே, கையை அசைக்கவில்லையே என்று கேட்டால் இல்லைதான் என்று சொல்லித் தீரவேண்டும். உரக்கச் சொல்லுமையா? இல்லை, இல்லை, இல்லை. ஏனில்லை? "வாய் திறக்க வுண்டோ வழி" என்னும்படி யிருந்ததனால் இல்லை. அப்படிச் சொல்லும்.

மற்றொரு வார்த்தை; "இங்ஙனே ப்ராமாணிகர்கள் தெளியக் கூடிய பலபல உபபத்திகள் ப்ரக்ருத விவாத விஷயமாக அடியேனெழுதிய நூல்களில் மலிந்துள்ளன; இந்த விவாதத்திற்கு ப்ரதி ஸம்பந்தியான (கீர்த்திமூர்த்தியான) புத்தூர் ஸ்வாமி நாளடைவில் ஸுப்ரஸந்ந ஹ்ருதயராய் பழைய ஸௌஹார்தத்தை அநுவர்த்திக்கச் செய்து கொண்டது மல்லாமல் பெரியவாச்சான்பிள்ளை விஷயமான ஸ்துதி நூலொன்றை யெழுதித் தரும்படி அடியேனுக்கு நியமித்து அதைத் தாம் தமது பத்ரிகையில் அச்சிட்டுப் பிரசுரமும் செய்தது பேரின்ப வெள்ளமாக முடிந்தது." என்பதாக. இங்கே நாம் கேட்கிற கேள்விகளுக்கு நேரான விடை தாருமையா. நான் மட்டும் கேட்கிற கேள்வியன்று; உலகமெல்லாம் கேட்கிற கேள்வி யென்று கொள்ளும். மதுரபாஷிதம் வெளிவந்த பின்பு உந்தையார் எத்தனை யாண்டுகள் ஜீவித்திருந்தார். அவர் வாழ்நாள் வரையில் மதுரபாஷிதத்தைப் பற்றிப் பத்ரிகையில் ப்ரஸ்தாவ லேசமாவது உண்டோ? ஏனில்லை? (ஏற்கெனவே கேட்டு முடிந்து போனதை மீண்டு மீண்டும் கேட்கிறீரே, இது நியாயமா? என்கிறீரோ? ஸரி;) அக் கேள்வியை விட்டு விட்டேன். இக்கேள்விக்கு விடைகூறும். ஸ்ரீஸ்வாமியோடு மறுபடியும் அவர் பழைய நட்பு தொடர்ந்து வரவேணுமென்று பாரித்துக் கடிதமெழுதிக் கொண்டாரே, எதற்காக? பெரியவாச்சான் பிள்ளைக்கு ஒரு ஸ்தோத்ர க்ரந்தம் எழுதித் தரவேணுமென்று ஸ்வாமிக்கு ப்ரார்த்தநாபத்ரிகை யனுப்பினரா? (தெரியாது) ஸ்வாமி யெழுதிக் கொடுத்த ஸவ்யாக்யானமான அந்த ஸ்தோத்ரத்தை அவரே தாமே அச்சிட்டுப் பிரசுரம் செய்தாரே, அது தெரியுமா? [உலகமறிந்த இவ்விஷயத்தை நானெப்படி இல்லை செய்ய முடியும்?] இப்படி பாரும். பரந்த ரஹஸ்யம் பெரியவாச்சான் பிள்ளையின் க்ருதியன்று என்று ஸ்தாபித்தவர் தான பெரியவாச்சான் பிள்ளை ஸ்துதிக்குக் கர்த்தாவாக ப்ரார்த்திக்கப்படவேண்டும். ஸ்ரீரங்காதி ஸ்தலங்களில் எத்தனை வித்வான்களில்லை? எத்தனை கவிகளில்லை? நன்றாக ஆலோசித்துப் பாரும். அவர்களையெல்லாம் விட்டு இரண்டொரு வருஷ காலம் தம்மோடு போராடின ஸ்வாமியையே எதற்காகப் பிரார்த்தித்தார்? இதை யெல்லாம் கிளறிக்கொண்டிருப்பதில் பயனில்லை யென்கிறீரோ? இது ஸரியே. அந்த பெரியவாச்சான்பிள்ளை ஸ்துதியின் தமிழ் வியாக்கியானமும் நீங்களே அச்சிட்டீர்கள். அதில் சுலோகந்தோறும் பெரியவாச்சான்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை யென்று எழுதப்பட்டுள்ளது. அது 25 விசை வந்திருக்கிறதே. சில சுலோகங்களில் நீங்கள் (பெரிய) என்பதை நீக்கி ஆச்சான்பிள்ளை யென்று அச்சிட்டிருந்தால் அதைப் பற்றிக்கொண்டு இப்போது போராடலாமே. ஸ்வாமிகூட பெரியவாச்சான்பிள்ளையை ஆச்சான்பிள்ளையென்று மெழுதியிருக்கிருர் பாருங்கள் என்னலாமே. அப்போது ஸ்புரிக்கவில்லை போலுமிது.

கிடாம்பி ஸ்ரீநிவாஸவரத தாஸன், 5—11—63,

## ஸ்ரீமதுபயவே. சோளஸிம்ஹபுரம். கோயில்கந்தாடை. சண்டமாருதம் வித்வான் பெரியப்பங்கார்ஸ்வாமியின் ஸ்ரீமுகம்

மநுஷ்ய குணங்களில் க்ருதஜ்ஞதையே மிகப் பெரிதாதலால் அடியேன் க்ருதஜ்ஞன் என்பதைமட்டும் காட்டிக்கொள்ள இச்சிறு வியாஸமெழுதுகிறேன். ஸ்வாமி ஸகலவித்யைகளையும் ஸம்பாதித்து க்ருதக்ருத்யரானபின்பு வேதாத்யயனத்தில் இறங்கினர். இளமையில் ஓதினவர்களுக்கும் பெரும்பாலும் வசப்படமாட்டாத வேதம் நம் ஸ்வாமிக்கு எப்படி வசப்பட்டதென்பதை வேதவாஸனையே யறியாத நானு எழுதுவது! வேதத்தில் மூலத்தோடு நிற்காமல் பதக்ரமங்களையும் செவ்வனே ஓதி அவ்வளவோடும் நில்லாமல் வேத பாஷ்யங்களையும் பரிசீலனை செய்து வேதலக்ஷண நூல்களையும் பரிசீலனை செய்து, அந்த லக்ஷண நூல்கள் அவ்யுத்பந்நர்களுக்காக ஏற்பட்டவையே யொழிய சாஸ்த்ரஜ்ஞானம் படைத்தவர்களுக்கு அவைகொண்டு காரியமில்லையென்று விரிவாக நிரூபணம் செய்து, வித்வான்களுக்கு உபயோகப்படும்படியான லக்ஷணநூலைத் தாமெழுதுவதாகப் பிரதிஜ்ஞை செய்து வேதாத்யயந ஸர்வஸ்வம் முதலான வடமொழி நூல்களை யெழுதிப் பிரசுரஞ் செய்த காலத்தில் பண்டிதர்களான த்ரிமதஸ்தர்களும் நிதிபெற்றதாகவே சொல்லியும் எழுதியும் உகந்திருக்க, திருக்குடந்தையில் இற்றைக்கும் வாழ்கின்ற சில பண்டிதர்கள் பொறுமையே காரணமாகப் பெரிய விவாதத்தைக் கிளப்பி ஸபை கூட்டி வாதங்கள் நடத்துவதான ஸம்பிரமங்களுங் கொண்டு நடத்தின வாதப்போர் 'கலியுகப் பாரதப்போர்' என்றன்றோ சொல்லும்படியா யிருந்தது.

ஸ்ரீராமாநுஜன் 177ல் வெளிவந்திருக்கின்ற ஏழு கடிதங்களில் ஆறுவது கடிதமெழுதிய உபயபாஷாபண்டித ரங்காசாரியர்ஸ்வாமி இதைப்பற்றி யெழுதியிருப்பதைக் கண்ணீர் பெருகின்று வாசியாதாரில்லை. அந்த வாக்கியங்கள் :—

> "பிரபலமாக நடந்த வேதலக்ஷண விவாதத்தில் ஒரு திருத்தேரை யிழுக்க நூற்றுக் கணக்கானவர் கூடுவதுபோல் ஸ்வாமியை யெதிர்த்து இழுக்குண்டாக்க இதுவரை கிளர்ந்த பண்டிதர்கள் கணக்கிலடங்கமாட்டார்கள். இப்படியிருந்தும் ஸ்வாமி யொருவராகவே அத்தனைபேர்களையும் நோக்கி கிரந்தங்கள் அருளிச்செய்து நாடு நகரமும் நன்கறியும்படி செய்தருளியிருப்பதையும் கபிஸ்தலம்ஸ்வாமி அதையெல்லாம் ஆமோதித்திருப்பதையும் அறியாதாருளரோ?" என்பவை.

இந்த வியாஸத்தில் கபிஸ்தலம் ஸ்வாமி யென்று பிரஸ்தாவித் திருப்பதைச் சிறிது விரிவாக உலகம் தெரிந்துகொள்ளவேணும். இந்த விவாதம் 1930 ஆம் வருடத்தில் வெகு பிரபலமாக நடந்தது. கடைசியாக எவ்வாறு முடிந்ததென்பதை வயது முதிர்ந்த பெரியார்கள் மறவாது அறிந்துளரெனினும் இக்காலத்தவர்கள் உள்ளபடி தெரிந்துகொள்ள வேண்டாமா? வேதலக்ஷண விசாரமாயிருந்தாலும் சாஸ்த்ரஜ்ஞர்கள் தலையிட்டு நிர்ணயிக்கவேண்டிய விஷயமாக இருந்தபடியாலே அப்போது பிரபல வித்வான்களாய் மஹாமஹோபாத்யாய பண்டிதரத்நாதி பிருதபூஷிதர்களான மஹான்கள்—அவர்கள் யாரென்று கேளுங்கள்; வடகலை ஸம்பிரதாயஸ்தர்களான வித்வான்களே அதிகம். திருப்பதியில் விளங்கின ஸ்ரீமத் கபிஸ்தலம் தேசிகாசார்யஸ்வாமி, மைஸூர் ஸம்ஸ்தான வித்வந்மணியான ஸ்ரீமத் லக்ஷ்மீபுரம் ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமி, புதுக்கோட்டை ஸம்ஸ்தானம் முதலானவைகளில் பரீக்ஷாதிகாரியாயிருந்த கனபாடி சேரங்குளம் அண்ணாத்துரை ஐயங்கார், உத்தரமேரூர் கனபாடி, ராகவாசாரியார் ஆகிய இந்த நால்வரும் வடகலை ஸம்பிரதாயஸ்தர்களாயிருந்தும் எதிரிகள் அப்ராமாணிக வழியில் விதண்டாவாதம் செய்கிறார்களென்பதை நன்குணர்ந்து கொண்டே ஸ்வாமியினுடைய வாதங்களையே கல்வெட்டாக்கி யிருக்கிறார்கள். ஸ்வாமியின் தன்சரிதையில் பக்கம் 128 முதல் 148 வரையில் வெகு விளக்க

மாக வுள்ளது. மேலே குறித்த வித்வான்கள் அக்காலத்தில் தாங்களாகவே நெஞ்சு கனிந்து எழுதி வெளியிட்ட பத்ரிகைகளெல்லாம் ஸ்வாமியின் வேதலக்ஷண விசார புஸ்தகங்களில் தேடவேண்டாமல் தன் சரிதையிலேயே காணலாம்.

வடமொழி வேத விஷயமான இந்த விசாரம் இருக்கட்டும். தென்மொழி வேதத்தில் ஒருபிரபல விசாரம் நடந்தது. (அதாவது) திருவாய்மொழியில் (3-5 4) "வம்பவிழ்கோதை பொருட்டா" என்கிற பாசுரமுள்ள தன்றோ. வேதாந்த தேசிகர் த்ரமிடோபநிஷத்தாத்பர்ய ரத்னாவளியில் *க்ராஹக்ரஸ்தேப* இத்யாதி ச்லோகத்தில் "கோதார்த் தோக்ஷாவமர்தே" என்று இந்தப் பாசுரத்தை நோக்கி ஒருவாசகமிட்டிருக்கிறார். தென்மொழியிலுள்ள கோதையென்கிற சொல்லுக்கும் வடமொழியிலுள்ள கோதா என்கிற சொல்லுக்கும் யாதொரு ஸம்பந்தமுமில்லை. வடமொழியில் கோதா என்று ஆண்டாளுக்குத் திருநாமம் பாசுரத்தில் ஆண்டாளைப்பற்றின ப்ரஸ்தாவமே கிடையாது; அதற்கு ப்ரஸக்தியுமில்லை. வம்பவிழ் கோதை யென்பது பஹுவ்ரீஹி யந்த பதம். தமிழில் அன்மொழித் தொகை யெனப்படும். நறுமணம் மிக்க குழற் கற்றையை யுடையவள், (அல்லது) நறுமணம் மிக்க பூமாலையை யணிந்தவள் என்று பொருள்படும். "அந்ய பதார்த்த ப்ரதாநோ பஹுவ்ரீஹி:" என்கிற நியமம் வட மொழியாளர்போல் தென்மொழியாளரு மிசைந்தது. வம்பவிழ் கோதையையுடைய வளான வொருத்தியை மூலத்தில் சொல்லப்படாத வொருத்தியைப் பொருளாகக் கொள்ளவேண்டும். அவள் யாவளென்னில், இங்கு எருதேழடர்த்த கதை சொல்லப் பட்டிருத்தலால் அதற்குச் சேர நப்பின்னைப் பிராட்டியையே கொள்ளவேண்டும். அவளுக்கு நீலா என்று பெயரே யொழிய கோதா என்று பெயர் கிடையாது. ஆகவே இங்கு நீலார்த்தோக்ஷாவமர்தே" என்றே ஆசிரியர் ஸாதித்திருப்பர். அப்படித் தான் ஸாதித்திருக்க வேண்டும்; கோதார்த்த என்றிருப்பது ஒரு வழியாலும் பொருந் தாது. என்று ஸ்ரீஸ்வாமி எழுதி வெளியிட்டிருந்தார். இதன்மேல் பேசுவதற்கு எள்ளளவும் இடமில்லாதிருக்கவும் வீண் மாச்சரியத்தினால் இதில் பல பண்டிதர்கள் கலந்து கொண்டு விவாதத்தை வளர விட்டார்கள். 'வம்பவிழ் கோதைதத்துவம்' 'கோதைபோலு மாராய்ச்சி' முதலிய நூல்கள் ஸ்வாமியிடமிருந்து வெளிப்பட்டவை. சாந்த: கோலாஹல:. கதம் சாந்த:? அதை நாமா சொல்லவேணும்? வாதம் எங்ஙனே சென்று முடிந்திருக்கின்ற தென்பதைப் பார்த்தால் கண்ணாடி போல் விளங்குமே.

இந்த சர்ச்சையில் ப்ரதான விஷயம் கேளீர். ஸேதுபதி ஸம்ஸ்தான மஹா வித்வான் ரா. ராகவையங்கார் ஸ்வாமியை யறியாதாரில்லை. அவர் ஒரு ஸமயம் சென்னைக்கு விஜயம் செய்திருந்தபோது திருவல்லிக்கேணியில் அவருடைய உபந்யா ஸம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அவரிடத்தில் எதிர்த்தலைப் பண்டிதர்கள் சிலர் வந்து "வம்பவிழ் கோதை பொருட்டா என்றவிடத்தில் இன்னார் இப்படி வாதிக்கிறார்; இதை தேவரீர் நிஷ்கர்ஷிக்க வேண்டும்" என்றார்கள். அதற்கு அவர் என்ன சொன்னார் தெரியுமோ? "விஷயசர்ச்சையில் உட்புகுந்து நான் விமர்சிக்கவேண்டிய அவசியமே கிடையாது; இதை சர்ச்சிப்பவர் இன்னார் என்பதே போதுமானது; அவருடைய எத்தனை வாத க்ரந்தங்களை நான் பார்த்திருக்கிறேன்! அவருடைய மதி எந்த விஷயத்தையும் ருஜுவாக க்ரஹிக்குமதேயொழிய ஒன்று கிடக்க வொன்றாக க்ரஹிப்பது அவருடைய ஜாதகத்திலேயே கிடையாதென்று நான் உறுதிகொண் டிருப்பவனாச்சே; இதை நான் எத்தனையோ சபைகளில் தெரிவித்து மிருக்கிறேனே; மத்யஸ்தர்களா யிருப்பவர்களில் ஒருவர்கூட, இதை மறுத்ததுமில்லையே" என்று ஸாதித்தார். அதற்குமேல் யாதொரு பேச்சும் எழவில்லை.

இன்னுமொரு விவாதம் கேளுங்கள். உலகப் பிரசித்தரான C. R. அவர்கள் (ராஜாஜீ) த்ரிவேணி யென்னும் ஆங்கில பத்திரிகையில், ஆண்டாளென்று ஒரு வ்யக்தி தனிப்பட கிடையாதென்றும், திருப்பாவையும் நாச்சியார் திருமொழியும்

பெரியாழ்வார்தாமே தம்மைப் பெண் பிள்ளையாகப் பாவனை செய்து எழுதியவை யென்றும் நூதனமான வொரு கொள்கையைப் பிரசுரம் செய்தபோது ப்ரமாணயுக்தி புஷ்கலமாகப் பெரியாழ்வார் திருமகள் என்றொரு நூலெழுதி வெளியிட்டார் மூன்றுவது நாளிலேயே நம் ஸ்வாமி. அதை ஆங்கிலத்திலும் மொழி பெயர்ப்பித்து அந்த த்ரிவேணி பத்ரிகையிலும் வெளியிடுவித்தார். இதை ராஜாஜீ அவர்கள் வாசித்துப் பார்த்துத் தம் உகப்பைத் தெரிவித்தார்களென்று இதுவும் தன் சரிதையில் வெளிவந்துள்ளது. [அதில் பக்கம் 404 காண்க.]

இப்படியாக ஏற்பட்ட விவாதங்கள் ஒன்ரு இரண்டா? நூற்றுக் கணக்காக வன்றோ வுள்ளன. இவற்றுள் ஒரு நூலும் லுப்தமென்ன இடமில்லாதபடி ஸ்வாமியின் சிஷ்யர்களால் அடிக்கடி மறுபதிப்பேற்றப்பட்டும் வருவது உலகின் பாக்கிய மன்றோ. ஒவ்வொன்றையும் நினைக்குங்கால் எவ்வளவு ஆச்சரிய முண்டாகிறது. கேளுங்களிதையும். "பூயிஷ்டாம் தே நமஉக்திம் விதேம" என்கிற ச்ருதி வாக்யத்தின் பரமரஸ்யமானதோர் அர்த்தத்தை ஈட்டில் நம்பிள்ளை யருளிச் செய்திருக்கிறார். அதையெடுத்து நம் ஸ்வாமி ஒரு நூலில் விரிவாக விளக்கியிருந்தார். நம்பிள்ளை ஸாதித்த மஹார்த்தம் மடத்து ஸம்ப்ரதாயஸ்தர்களுக்கும் மிக உபஜீவ்யமாயிருந்தும் அவர்களே இதில் ப்ரதித்வந்த்விகளாகக் கிளம்பி ப்ரளயம் பண்ணி விட்டார்கள். மடத்து வித்வான்களில் தலைவரும் ப்ராமாணிக பண்டிதாக்ரேஸரருமான ஸ்ரீமத் மாம்பலம் வாஸுதேவாசாரியர்ஸ்வாமி மடத்துப் பத்ரிகையிலேயே ஸ்ரீஸ்வாமியின் நிருபணந்தான் நிபுணமானதென்று கூசாமலும் அஞ்சாமலும் வெளியிட்டார். இவையெல்லாம் உலகுக்கு மறந்துபோகாதபடி வெளிவந்துலவவே இக்காலத்தில் ஸ்வாமியோடு நானும் பிரதிவாதம் செய்யக்கூடியவன்தான் என்று சிலர் கிளம்புகிறார்கள். இதுதவறன்று, நல்லதேயென்றுசொல்லி இவ்வளவோடு நிற்கின்றேனிப் போது. தனியே ஒரு நூலெழுத ஆவல்கொண்டிருக்கிறேன்.

தாஸன், சண்டமாருதம் பெரியப்பங்கார், 29—10—63.

---

மதுரைச் செந்தமிழ்ப் பத்திரிகையின் முன்னுளாசிரியரான ஸ்ரீ உவே. T. K. இராமா நுஜையங்கார் ஸ்வாமி உள்ளவாறெடுத்துரைக்கக் கேட்ட பல விஷயங்களை மூலாதாரமாகக் கொண்டு சிதம்பரம் பச்சையப்பன் கலாசாலையாசிரியரான

## P. S. ரங்காசாரியர் எழுதுவது.

அடியேன் ஸ்ரீராமாநுஜன் பத்ரிகை தோன்றியநாள் முதலாக அதனைத் தவறாது பெற்று வாசித்து மகிழ்பவர்களில் ஒருவன், அல்லது தலைவன். ஸ்ரீகாஞ்சிபுரம் ஸ்வாமியின் திவ்ய ஸூக்திகளில் நான் அசஞ்சல ப்ரதிபத்திகொண்டவன் என்பதை எதற்காகவும் அபலாபம் செய்யவேண்டிய அவசியமில்லை. 'பக்ஷபாதியானவர் எழுதுகிற வியாஸந்தானே இது' என்று பிறர் சொன்னால் அதை நான் மறுக்க நெஞ்சாலும் நினைப்பேனல்லேன். நமது தென்னாட்டில் ஸம்பிரதாயம் வல்லவர்களும் பிராமாணிகர்களுமான பெரியார் எத்தனைவருளரோ அத்தனைவரும் ஸ்ரீஸ்வாமிக்குத்தான் பக்ஷபாதிகளா யிருப்பர்களென்பதைக் குடப்பாம்பில் கையிட்டுரைப்பேன். நியாயமுள்ளவிடத்தில் பக்ஷபாதங்கொள்வது நியாயந்தானே.

ஸ்ரீஸ்வாமி வாதவிவாத நூல்களெழுதுவதில் தலையிட்டது முதலாக இன்றளவும் எத்தனை விஷயங்களில் ஆராய்ச்சிகளைச் செய்து நிர்ணயங்களை வெளியிட்டிருக்கிறார் என்பதை ஸ்வாமியின் தன்சரிதைகொண்டும் மற்றும் பல நூல்களைக்கொண்டும் பார்த்தால் அவை நூறு விஷயங்களுக்கு மேற்பட்டிருக்கு மென்பதில் எள்ளளவும் ஐயமில்லை. நூறு என்று ஒரு கணக்கா? இருநூறுமிருக்கும். அந்த நூல்களெல்லாம் உலகின் பாக்கியத்தினுல் ஒன்றுகூட அழியாமலன்றோ விளங்கிக் கொண்டிருக்

கின்றன். ஒவ்வொரு விவாதநூலும் வெற்றியுடனன்றே விளங்குகின்றன. ஸ்வாமியின் வாதநூல்களில் வெற்றியின்றித் தோல்வியுடன் தலைக்கட்டின நூல் இதோபார், இன்னதுள்ளது என்று ஒன்றை யெடுத்துக் காட்டிவிட்டாலும் போதும். ஸ்வாமியிடத்திலே தென்கலையார் வடகலையார் ஸ்மார்த்தர்கள் என்ற மூன்று வகுப்பினரும் வாதிகளாகவும் பிரதிவாதிகளாகவும் மாட்டிக்கொண் டிருக்கிறார்களென்பது ஜகத்ப்ரஸித்தம். மன்னிப்புக் கடிதங்களெழுதிக்கொண்டு கௌரவமாய் நின்றவர்கள் பலர். அதற்கு ஸங்கோசப்பட்டு ஒன்றும் பேசாமல் வாளாவிருந்தொழிந்தவர்கள் பலர். ஆந்தனையும் ப்ரதிவாதங்கள் செய்து பங்கமடைந்து நின்றவர்கள் பலர். பரந்தரஹஸ்ய விசாரம் ஏற்கெனவே 15 வருஷங்களுக்கு முன்பு பரிஷ்காரமாக முடிந்துபோன தென்பதை அடியேனுக்குப் பரமாப்தரான (மேலே குறித்த) T. K. ராமாநுஜய்யங்கார் ஸ்வாமி [சில வருஷங்களாக அண்ணாமலை யூனிவர்ஸிடியில் உயர் பதவியில் வாழ்பவர்] விவரித்துரைத்து விளக்கினபடியால் அடியேன் இதிலிறங்கத் துணிந்தேன். பரந்தரஹஸ்ய கர்த்தாவைப்பற்றின விவாதம் 15 ஆண்டுகட்கு முன்பு மிக விரிவாக நடந்து முடிந்ததாம். அப்போது எதிர்த்தலையிலிருந்து மிகவும் அதர்க்கணமான நிந்தைக்கந்தைகள் வெளிவந்ததாகவும், அப்போது ஸ்ரீ உவே. மநீஷி மாந்ய. ராவ்பகதூர் R. நரஸிம்ஹய்யங்கார் ஸ்வாமியின் தலைமையில் மதுரையில் மஹாஸபை கூடி பல வித்வான்கள் மூலமாக விவாதநிர்ணய பத்ரிகைகள் வாங்கி மதுரபாஷிதமென்கிற புஸ்தகம் மூலமாக அவற்றை வெளியிட்டபின்பு நிந்தையும் ஓய்ந்து விவாதமும் சாந்தமானதாகவும் ஸ்ரீராமாநுஜய்யங்கார்ஸ்வாமி வெகு விசதமாகத் தெரிவித்தார். நேற்று ஆவணிமாதத்தில் வெளிவந்த அஞ்ஜன பஞ்ஜன சதகோடியில் அந்த மதுரபாஷிதத்தின் மறுபதிப்பு என்று 16 பக்கம் வெளிவந்திருந்தாலும் மற்றும் பல முக்கியமான கடிதங்கள் விடுபட்டிருந்தபடியால் அவற்றையும் உலகின் வெளிச்சத்திற்காக வெளியிடவேண்டியது அவசியமென்று தோன்றி சிலவற்றை இதன்கீழ் வெளியிடுகின்றேன். கோயம்புத்தூர் அட்வகேட் ஸ்ரீ உவே. C. R. ராமஸ்வாமி ஐயங்காருடைய ஆங்கிலக்கடிதம் 8 பக்கம் அதில் வெளிவந்திருக்கிறது. அதை வாசிக்கும்போது "அச்சுவைக்கட்டியென்கோ அறுசுவையடிசிலென்கோ, நெய்ச்சுவைத்தேறலென்கோ கனியென்கோ பாலென்கேனோ?" என்கிற திருவாய்மொழிப் பாசுரந்தான் நினைவுக்கு வருகிறது. அஃதொன்று தவிர மற்ற ஸ்ரீமுகங்கள் பெரும்பாலும் இங்கு வெளியிடப்படுகின்றன. இவற்றை வாசிப்பதே பிறவிப்பெரும்பேறு.

## ஸ்ரீவில்லிபுத்தூர் ஸ்ரீ உபய வே. ரெ. வடபத்ரசாயி அரையர் ஸ்வாமி

... .... ... புத்தூர் ஸ்ரீநிவாஸையங்கார் அடியேனுக்கு வேதப்பிரான் பட்டர்மூலம் ஷோடசாத்யாயியையனுப்பி அபிப்ராயத்தை யெழுதும்படி பஹுச: சொன்னதின்பேரில் அடியேன் திருவாய்மொழிப்பிள்ளையின் பெரியாழ்வார்திருமொழி வியாக்கியானவிஷயத்தில் மாத்திரம் மனதில் தோன்றிய சில விஷயங்களை உதாஹரணங்கள்காட்டி யெழுதினேன். மற்றப்படி பரந்த ரஹஸ்யத்தைப்பற்றி ஒன்றுமே எழுதவில்லை. ஆனால் அவருக்கு ஸ்வரூபோத்போதநமாக ஜ்ஞாபயே த்வாம் நசிக்ஷயே என்றெழுதிவிட்டு, தேவர் ஸுதர்சனத்தில் * நக்ஷமாமிக்கிலக்கான அஸஹ்யாபசாரங்களான தூஷணங்களே மலிந்து கிடக்கிறது. அது, கேட்பார் செவிசுடு கீழ்மை வசவுகளோடொப்பாகும். அதிலும் * ஸமஹாத்மா ஸுதுர்லப:* * ஒரொருவருண்டாகில் * என்கிற திவ்ய ஸூக்தியை ஸார்த்தகமாக ஆக்க வந்தவதரித்த மஹானென்று பலரும் ப்ரதிபத்திபண்ணிக்கொண்டு போராநிற்கும்படி, கலிவைரிதாஸ மஹாவிபவரென்று சொல்லலாம்படி யெழுந்தருளியிருக்கும அண்ணங்கராசாரியர் ஸ்வாமி விஷயத்தில் ப்ரதிபத்தியில்லாவிட்டாலும் சிசுபாலோக்தி நாமாவளிகளை யொழித்துவிட்டு, அதிகரித்துப்போரும் விஷயங்களை மாத்திரம் பத்திரிகைகளில் எழுதிக்கொண்டு ஸுதர்சநத்தை ஸத்தர்சநமாகவாக்கிக் கொண்டுபோருவதே

நலம் என்று எழுதியிருக்கிறேன்; அடியேன் அவருக்கு ஸர்வஜ்ஞனறிய எழுதியது இவ்வளவே. அவர் இவைகளில் எதைவிட்டு எதையெழுதியிருக்கிறாரோ தெரியவில்லை. ஸ்ரீ அண்ணங்கராசாரியர் ஸ்வாமி அநுக்ரஹித்த ஸஞ்சிகைகளிரண்டும் கிடைத்து ஸேவித்தேன். அப்படிப்பட்ட வாக்பூஷண பூஷிதரான அபரராமாநுஜ திவாகரர் உதித்திருக்குங்காலத்தில் மற்றவை யாவும் திவாதாரகங்கள் போலவும் இரவிக்கெதிர் மின்மினிபோலவும் ஆகும். அடியேன் பரகாலநல்லான் ரஹஸ்யம் முதலான சில அப்ரஸித்தக்ரந்தங்களைப் பார்த்து ஸந்தேஹித்திருந்தேன். அந்த ஸந்தேஹம் தீரும்படி உத்தரம் பலவத்தரம் என்று மாமுனிவரது திவ்யஸூக்திகளை பஹுப்ரகாரமாக உபபாதித்துக்காட்டி ஸஜ்ஜந ஹ்ருதயங்களில் பேர்க்கவும் பேராதபடி அண்ணங்கராசாரியர் ஸ்வாமி கல்வெட்டாக்கிவைத்த விஷயம் மிகவும் புகழத்தக்கதே. இப்படி, * பள்ளச்சேறுவில் கயலுகளப் புள்ளுப்பிள்ளைக்கிரைதேடும் சேர்ப்பாரையில் ஸாதித்த பக்ஷிகள் எழுந்தருளியிருக்க, அடியேனுக்கென்று ஒரு விமர்சனமும் வேண்டுவதில்லையே. அண்ணங்கராசாரியர் ஸ்வாமி ஸாதித்ததெல்லாம் உபாதேயமே. அடியேன் இப்போது எழுபத்துநான்காவது வயதிலிருப்பதால் இந்த விண்ணப்பத்தில் கரக்ருததோஷங்கள் மலிந்திருக்கும். குணக்ராஹிகள் குணலேசமுண்டானால் கொள்ளப்ப்ரார்த்தித்துநிற்கிறேன். தாஸன், ஆண்டாளரையர், வடபத்ரசாயி.

## கோயம்புத்தூர் ஸ்ரீஉவே. அட்வகேட் C. R. ராமஸ்வாமி ஐயங்கார்

அடியேன் புத்தூர் வக்கீல்ஸ்வாமியின் சுதர்சனத்தை ஒரு பிரதிகூடப் பார்த்ததில்லை. அவர் அனுப்பிய ஷோடசாத்யாயி ஒன்றுதான் பார்த்தேன். அதற்கு அவருக்கு அடியேனுடைய அபிப்ராயத்தை எழுதினேன். அவர் அதை வந்துசேர்ந்ததாகக்கூடப் பதில் அளிக்க வில்லை. ஆனால் மற்றும் ராமாநுஜன் முதலிய வெளியீடுகளில் இருந்து அவர் இன்னும் வசை புராணத்தை விட்டிட்டவராகக் காணவில்லை. ஒருசமயம் சுதர்சனத்திற்குச் சந்தாதாரராகச் சேரலாமென்று தோன்றிற்று. ஆனால் வசை புராணத்தைப் படிப்பதற்காக ஏன் வீணே பொருளை செலவழிக்கவேணுமென்று தோன்றியது. தாஸன் ராமஸ்வாமி.

## E. G. நாராயணன், தமிழாசிரியன், சேதுபதி ஹைஸ்கூல், மதுரை 17-7-49

'ஸ்ரீ ராமாநுஜன்' என்ற பத்திரிகையில் ஸ்ரீகாஞ்சீ ஸ்ரீ உ.வே. ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமி வெளியிட்டருளிய "முப்பத்திரண்டு மொழி மாலை" "ஸாதுஸாத்விக ஸம்வாதம்" என்னும் இரண்டு வெளியீடுகளையும் அடியேன் பூரணமாக ஸேவிக்கும் பேறு பெற்றேன். அவற்றில், "பரந்த ரகஸியம்" என்னும் கிரந்தத்தை அருளிச்செய்தவர் ஆச்சான்பிள்ளையே யன்றி பெரியவாச்சான் பிள்ளை யல்லர் என்பதைத் தக்க பிரமாணங்கள் காட்டி ஸ்ரீ காஞ்சீஸ்வாமி நிரூபித்திருக்கின்றனர். அந்த நிரூபணம் அத்யாச்சர்யமாகவும் பரம போக்யமாகவும் நிராக்ஷேபமாகவும் உள்ளது. அதில் ஸ்ரீஸ்வாமி "க்ராந்திகஸரணி" ஒன்றைக் காட்டுகின்றனர். அதாவது—"ஒரே வ்யக்தியைப் பலவிடங்களில் நிர்த்தேசிக்கும்பொழுது முந்துற முன்னம் ஸவிசேஷநிர்த்தேசமும் பின்னர் நிர்விசேஷ நிர்த்தேசமும் செய்து போருவது கிரந்தகர்த்தாக்களின் வழிவரம்பு" என்பதாம்.

அந்த ரீதியில், விசதவாக்சிகாமணியும் கிராந்திக ஸரணியைக் கையாளுவதில் நிகரற்றவருமான நம் மணவாள மாமுனிகள் 'தத்வத்ரயவ்யாக்யான'த்தில் 'ஆச்சான் பிள்ளை' எனப் பலகால் நிர்விசேஷமாக நிர்த்தேசித்தருளுகிறார். இடையில் ஓரிடத்தில்மட்டும் ஸவிசேஷமாகப் "பெரியவாச்சான் பிள்ளையும் இப்படியிறே அருளிச் செய்தது" என நிர்த்தேசம் செய்தருளினர். இதனால், முன்னும் பின்னும் நிர்த்தேசிக்கப்பட்ட 'ஆச்சான்பிள்ளை' வேறு; இடையில் ஸவிசேஷமாக (அடை-

மொழி கொடுத்து) நிர்த்தேசிக்கப்பட்ட "பெரியவாச்சான் பிள்ளை" வேறு என்பது கையிலங்குநெல்லிக்கனியாகத் தெள்ளிதின் அறியக்கிடக்கின்றது. இஃதொன்றே அமையும் ப்ரதி பக்ஷிகள் வாய் திறக்கவும் வழியில்லாமைக்கு. இந்த ஒரே ஒரு அஸாதாரணமான ப்ரபலப்ரமாணத்திற்குப் புத்தூர் வக்கீலையங்கார்ஸ்வாமி என்ன சமாதானம் கூறப்போகின்றனரோ? தெரியவில்லை. இப்படிப் பல ப்ரமாணங்கள் ஸ்ரீஸ்வாமியால் எடுத்துக் காட்ட முடியும்; எடுத்துக்காட்டியே வருகின்றார்.

ஆதலால், ப்ரதிபக்ஷிகள் ஸ்ரீ ஸ்வாமிக்கு எதிரில் "ஈயாடுவதோ கருடற் கெதிரே? இரவிக்கெதிர் மின்மினி யாடுவதோ?" எனப் பரிகசிக்கும் நிலையை அடைவதைத் தவிர வாய்திறக்கவும் வல்லரல்லர் என்பதை ஸஹ்ருதயமாக விஜ்ஞாபயே. ஸ்ரீகாஞ்சீஸ்வாமி அபூர்வமான அற்புதவிஷயங்களை வெளியிட்டருள்வதற்குத் தூண்டுகோலாயும் காரணபூதராயுமுள்ள புத்தூர்வக்கீல்ஸ்வாமிக்கும் அடியேனுடைய க்ருதஜ்ஞதையை ஸப்ரணமம் ஆவேதனம் செய்துகொள்ளுகின்றேன். E. G. நாராயணன்.

மதுரை ஸெயின்ட்மேரீஸ் ஹைஸ்கூல் பேராசிரியரும் தமிழ்வித்வானுமான

**திரு. ரெ. வீரராகவையங்கார் ஸ்வாமி எழுதியது.** மதுரை, 17—7—49.

ஸம்ஸ்க்ருத த்ராவிடமயமான வேதாதி சாஸ்த்ரங்களின் ஆழ்ந்த நிலங் கண்டுணர்ந்த அறிவாற்றலால் அவற்றினுட் பொதிபொருளாய் இலைமறைகாய் போலப் பிறர்க்கறியலாகாதுளவாகின்ற அத்யத்புதார்த்தங்களை வாரி வழங்கும் வள்ளற்பெருந்தகையராகிய ஸ்ரீ உப. வே. அண்ணங்கராசார்யஸ்வாமியின் பரமௌதார்யத்தையும் பரமக்ருபையையும் உன்னுந்தோறும் உறுகளிசிறக்கும் சான்றோர் எல்லாரும் "கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட், டென்னாற்றுங் கொல்லோ உலகு" என்னும் பெரியார் திருவாக்கினை நினைந்து இன்புறுவதுண்டு.

இம்மஹநீயரால் லோகோபகாரமாகக் காரேய் கருணையால் வாரிவழங்கப் பெறும் அத்புதார்த்தங்களைப் பெற்றுப் புலங்கொண்டுள்ள தக்கோரெல்லாம் இவர்பால் மிகுந்த க்ருதஜ்ஞதையுடையராய் வர்த்தித்துப் போருவதும் நாடறிந்த விஷயமே. அங்ஙனன்றிச் சிலர் இவரிடத்து மாத்ஸர்யம்மிக்கவராய்த் தொடர்பற்ற மறுப்புரை வரைந்து தமது இயல்பினைப் புலப்படுத்தொழிவர். இன்னோர் போக்கிற் குச் சிட்டரெல்லாம் பரிந்திரங்கிப் போருவர். இப்பெற்றி, இம்மஹநீயர் அரும்பெரும் பொருள்களை வெளியிடும்போதெல்லாம் நியதமாக நிகழ்ந்துவருவதையும், தமது அங்வர்த்தமான விருதுக்கேற்ப வாதியர் தம் வாய் அடக்கலில் பரமரஸிகரான இந்த ஸ்வாமி, ப்ரதி பக்ஷிகள் 'இனி இத்தலை நோக்ககில்லோம்' என நாணிக் கவிழ்ந்தழியும்படி பலபடியால் ஸ்வபக்ஷஸ்தாபநம்செய்து பரமோஜ்வலராவதையும் பலரும் அறிவர். எனவே இந்த ஸ்வாமி சீரிய அர்த்தங்களை நன்கு நிலைநாட்டுதற்குத் தக்க உதவி செய்தவர்களென ப்ரதிபக்ஷிகளைக் கொள்ளுதலும் அவர்கள் பாலும் க்ருதஜ்ஞதை கொண்டாடுதலும் யுக்தமேயன்றோ.

இந்தப்படியே, ஸமீப காலததில் இந்த ஸ்வாமி ஸாதித்தருளிய பரந்தரஹஸ்யத்தின் கர்த்ருவிஷய நிஷ்கர்ஷத்தை அறிந்து பரமாநந்தத்தால் வயிறு பூரித்த ஸஹ்ருதயர் எத்தனைபேரென்கேன். இதனைப்பொறுதே மாறுரைத்து வாதிட முன்வந்தவரும் ஒருவர் உளர். அன்னாரை அடியேன் அறிந்திலேன் எனினும் அவரது மறுதலையுரையாகிய ஷோடசாத்யாயியின் வாயிலாக அன்னாரை அறிந்துகொள்ளுதல் எளிதாயிற்று. அவர் தமது ஷோடசாத்யாயியில் அண்ணங்கராசார்ய ஸ்வாமி விஷயத்தில் தமது வெகுளியைக் காண்பித்திருப்பது தெளியக் கிடக்கிறது. ஸ்ரீஸ்வாமி ஸாதித்தருளிய அர்த்த விசேஷத்தின் ப்ரகாசாதிசயத்தைச் சிறிதும் அவருரை மறைக்கவும் மாட்டிற்றிலது என்பதும் கண்டுகொள்ளக்கிடந்தது. இத்தகைய ப்ரதிவாதிகளும் ஸ்வாமி அரும்பெரும் பொருள்களை நன்கு விசதீகரிக்கைக்கு உதவுதல்பற்றி இவர்தம்போக்கிலும் ஆறுதலடைவோம். திரு. ரெ. வீரராகவன்.

அன்பர்களே! இக்கடிதங்களெல்லாவற்றிற்கும் சிகரமானது நாம் முதலில்குறித்த நண்பர், பிரபல வித்வான் T. K. ராமாநுஜய்யங்காருடைய கடிதம். அது ஏற்கெனவே சதகோடியில் (முடிவில் பக்கம் 15-ல்) வெளிவந்துவிட்டபடியால் அதை இங்கு நாம் மீண்டும் வெளியிட விரும்பவில்லை. அந்த ஸ்ரீமுகத்தின் முடிவில் "காஞ்சீஸ்வாமி வெளியிட்ட நூல்கள் வாத முறையில் வழுவாத செவ்விய நடையில் ஒன்றின்மே லொன்ருக உள்ள தூய ஏதுக்களால் ஸித்தாந்தத்தை வலியுறுத்தி நின்று எல்லாராலும் பாராட்டப்பட்டு விளங்குகின்றன. புத்தூர் வக்கீல் ஸ்வாமி வெளியீடு களோ வாத முறையினின்றும் பிறழ்ந்து பிரதி பக்ஷத்தாரை நிந்திப்பதிலும் அவர் கொள்கைக்குக் காரணம் கற்பிப்பதிலும் புகுந்து விவாத விஷயத்தை நல்ல ஏதுக்களால் நாட்டமாட்டாது நலிவுற்றன. எதிரிகள் கூறும் நிந்தையையும் பொருள் படுத்தாது அவர் கூற்றை மறுத்துத் தம் கூற்றை உலகம் புகழ நிறுவும் தம் வெளியீடுகளால் அறிதற்கரிய எத்துணேயோ வேறுபல நற்பொருள்களையும் உதவி வரும் ஸ்ரீ உப. வே. அண்ணங்கராரியர் திறத்து உலகம் கடப்பாடுடைத்து" என்று விளங்குகின்ற வாக்கியங்கள் பிராமாணிகர்களால் போற்றத்தக்கவை. மதுரபாஷி தத்தில் வெளிவந்துள்ள ஒவ்வொரு மஹானுடைய ஸ்ரீமுகமும் சொல்வடிவத்தில் வேற்றுமை கொண்டிருந்தாலும் இத்தகைய பொருளைக் கொள்ளாத ஸ்ரீமுகம் ஒன்று கூட இல்லை. தம்முடைய கக்ஷிக்கு ஆதரவு கொடுப்பாரில்லையே யென்கிற வருத்தம் ஒருபுறம்; ப்ரதிஷ்டிதர்களான ஸகலவித்வான்களும் ஸ்வாமியின் கக்ஷியையே புகழ்ந்து போற்றுகிறார்களே யென்கிற வருத்தம் மற்றொருபுறம். இவ்விருவகை வருத்தங்களும் சேர்ந்து இன்னாரினையாரென்று பாராமல் ஒவ்வொரு மஹானையும் ஆஸ்தானம் பாராமல் ஆச்ரமம் பாராமல் வாய்வந்தபடியெல்லாம் கைபோனபடியெல்லாம் நிந்திக்கச் செய்தன வென்று நன்கு விளங்குகின்றது.

இப்போதைய வாதி இதை யெல்லாம் மனமார அறிந்து வைத்தும் 'ஸ்வாமி தூஷிக்கிறார்; ஸ்வாமி நிந்திக்கிறார்' என்று விஷயமொன்று மில்லாமல் இதையே பறைசாற்றிக் கிளம்பியுள்ளார். எந்த விஷயத்திலும் இவருடைய வாதத்தை மெச்சு கிறவர் ஒருவராவது உளரா? சென்னையில் வாழும் ஸ்ரீ உ. வே. ராவ்ஸாகிப் S. ராகவையங்கார்ஸ்வாமி அறிஞர்! பஹுச்ருதர். மஹாமேதாவி. அவர் இவரைக் கண்டிக்க நிற்பதொன்றுபோராதா? திருவல்லிக்கேணியில் ஸ்ரீ உவே. பண்டிதரத்னம் திருக்கண்ணபுரம்ஸ்வாமி காஞ்சீஸ்வாமிக்கு ஆப்தரல்லரென்பது ப்ரஸித்தம். அந்த மஹானுடைய க்ஷேபத்திற்கும் இவர் பாத்திரமாயிருப்பது எவ்வளவு வருந்தத்தக்க விஷயம்! ஸ்ரீ உவே. வித்வான் காரப்பங்காடு வேங்கடாசார்யஸ்வாமியும் இவருடைய வாதத்தை ஒப்புக்கொள்ளவில்லை யென்பது இவர்தம்மாலேயே வெளியிடப்பட்டு விட்டது. இது ஒன்றே போதுமே. ஸ்ரீ உவே. V. S. (விட்டலாபுரம்) வேங்கடாசார்ய ஸ்வாமி ஸ்ரீரங்க நித்யவாஸி எவ்வளவு விவேகி! எவ்வளவு ஆராய்ச்சி நிபுணர்! இந்த மஹானும் வெறுக்க நிற்பது பெரிய துரதிர்ஷ்டமல்லவா? பல வருஷங்கள் ஸதாசார்ய ஸன்னிதியில் காலக்ஷேபம் கேட்டவரும் ஸ்ரீரங்கநித்யவாஸியுமான ஸ்ரீ உவே. திருமஞ்சனம் ஸ்வாமியின் ஸ்ரீமுகம் சதகோடியில் வெளிவந்திருப்பதை வாசியாதவர்களுண்டோ? அந்த ஸ்வாமி

"இவ்விடம் வஸந்தோத்ஸவஸமயத்தில் அவரை நேரில் ஸந்தித்தபோது மூன்று கேள்விகள் கேட்டேன், ஒன்றுக்கும் அவர் ருஜுவான வழியில் பதில் சொல்ல முன்வரவில்லை..........இவராகவே இதில் தலையிட்டுக்கொண்டு தான் தோன்றியாய் எதற்கும் கட்டுப்படாமல் எழுதிக்கொண்டு போவதனால் யாருக்கு என்ன லாபம்? என்ன நஷ்டம்? என்று சில பெரியார் ஸாதித்ததுண்டு; ஆனால் ஸம்பிரதாய க்ஷோப மென்பது பெரிய நஷ்டமாதலால் அந்த நஷ்டத்தைத் தவிர்க்க மஹான்கள் முன்வரவேண்டியது அவசியமே. .... கோயிலில் கீர்த்தி மூர்த்திகளான ஸ்ரீமதித்யாதி மெய்யுவாசார்யஸ்வாமியும், தேசி வரதாசார்யஸ்வாமி

போல்வாரான மற்றும்பல மஹான்களும் வர்ஷித்தருளின ஸம்ப்ரதாயார்த்தங் களினால் விளைந்த ஸுபிக்ஷம் நீங்காத செல்வமன்றோ இத்தலத்திற்கு. அத்தகைய இத்தலத்திலே விச்வாமித்ரஸ்ருஷ்டியான அபார்த்தங்கள் தலைகாட்டுவதானது நினைக்க நினைக்க ஆராத துயரத்தையே தருகின்றது. ஸ்ரீ உவே. பண்டிதராஜ. மெ. ஸுந்தரராஜாசார்யஸ்வாமியும் ப்ரக்ருத விஷயமாகப் பல நுண்பொருள்களை ஸாதிக்கக் கேட்டேன்........"

என்று இனையபலவும் உருகியுருகியும் உருகவுருகவும் எழுதியிருப்பன "கண்டோம் கண்டோம் கண்டோம் கண்ணுக்கினியன கண்டோம்" என்று போற்றத்தக்கவையல் லவா? ஸ்ரீரங்கவாஸிகளான மஹான்கள் 'விச்வாமித்ர ஸ்ருஷ்டியான அபார்த்தங்களிவை' என்று வெறுத்தார்களென்றால் இன்னமுமா இதை விட்டொழிக்காமல் மன்றாடுவது!

கீர்த்திமூர்த்திக ளென்னநின்ற மஹான்கள் போகட்டும். "அடியார்கள் வாழ அரங்க நகர்வாழ" என்று தேசமெல்லாம் நிச்சலும் போற்றும் அசேஷசித்த ரஞ்ஜக ரஸிக வித்வன்மஹித ரங்காஸ்தானத்தில் வீதிதோறும் காலக்ஷேப நறுமணம் கமழவில்லையா? அபிஷேகாசார்யரென்றே பேர்கொண்டு ஸதர்த்தாபிஷேகம் செய்துவருகிறார் ஒரு மஹான். திருக்கண்ணபுரம் கனபாடிஸ்வாமி ஒருபுறம் உபய வேத வேதாந்தங்களை வர்ஷித்துவருகிறார். ஒவ்வொருவரையும் நாமெடுத்துரைக்க வேணுமா? கோயில் என்று என்ன? ஆங்காங்கு திவ்யதேசங்களில் க்ரந்த பரவச னங்கள் பண்ணிப்போரும் காலக்ஷேபபரர்களுக்குக் குறைவில்லையே. ஒரு திவ்ய தேசத்திலாவது ஒரு ஸ்வாமியாவது தலைதுலுக்கக்கூடிய அர்த்தமொன்றுண்டோ இவரிடத்தில். உண்டாயின் வெளிவரட்டுமே. விச்வகுணாதர்சத்தில் ஸ்ரீரங்க க்ஷேத்ரவர்ணனத்தில் (438) "அட்டசூலாஃ கதிபயே பட்டணேஸ்மிந் ப்ரதிஷ்டிதாஃ" என்று போற்றப்பட்டு ப்ரதிஷ்டிதர்களா யிருப்பாருங்கூடச் செவியேற்கவில்லாத அர்த்தங்களன்றோ?

இதனிடையில் கடிதங்களை [அதாவது, ப்ரசம்ஸாபரங்களான மஹான்களின் ஸ்ரீமுகங்களை] வெளியிடக் கூடாதென்று ஒரு கட்டளையாம். கீழே வெளியிட்ட ஸ்ரீவில்லிபுத்தூர் வடபத்ரசாயி அரையர்ஸ்வாமியின் ஸ்ரீமுகத்தையும், கோவை அட் வகேட் C. R. ஸ்வாமியின் ஸ்ரீமுகத்தையும் பார்த்தால் எதிர்த்தலையில் கடிதங்கள் வாங்கி வெளியிட பஹுமுகமான ப்ரயத்னங்கள் நடந்தமை தெரியவரும். க்ஷண பங்குரங்களான சில கடிதங்கள் வெளியிடப்பட்டுமிருந்தன. வாதிப்ரதிவாதிகளிரு வருமே போராடிக்கொண்டிருக்க வேண்டியதென்றும், மத்யஸ்தர்களான மஹான் கள் தலையிட்டு அநீதிவாதங்களைக் களைந்து நீதிவாதங்களை நிலைநாட்டி அபிநந்தனம் செய்யலாகாதென்றும் எங்குற்ற கட்டளையோ அறியோம்.

தாமே சிலரை வசப்படுத்தி யெழுதச் செய்கிறாரென்றும், எழுதிக் கொடுக்கவு மாகிறதென்றும், ஏகதஃ ப்ரலாபஃ. ஒருவர் நாலுகால் மண்டபமொன்றைக் காட்டி இது என்னுடையதென்று சொல்லி அதை அடகுவைத்து நாலாயிரம் ரூபா கடன் வாங்கினாராம். அதைப் பொறாதவொருவன் இவரிடம் வந்து 'இதில் எனக்கு ஏதே னும் பங்குகொடுத்தால் ஸரி; இல்லையானால் இது ஏமாற்றமென்று தெரிவித்துவிடுவே னென்றானாம். 'அடா! கையிலாகாத முண்டமே! உனக்கு ஸாமர்த்தியமிருந்தால் பதினாறுகால் மண்டபத்தை அடகுவைத்துப் பதினாறாயிரம் ரூபா வாங்கே' என்றாரா மவர். இத்தகைய கதைக்கும் இங்கு இலக்கில்லை. ஒரு நிர்ப்பந்தத்திற்கோ தாக்ஷிண்யத்திற்கோ உட்பட்டு எழுதினாரொருவருமிலர். ஒருவரிருவரல்லரே. உலக மெல்லாமன்றோ உவந்துபரிந்து எழுதுகின்றது.

எழுதுவதில் சைலி ஒத்திருக்கின்றதென்று ஒரு விலபனம். இதில் ஒரு மருமம் கேளீர். ஸ்வாமியினுடைய நான்கு பாஷைப் பத்ரிகைகளும் நான்குபாஷைப் புத்தகங்களும் நாற்றிசைகளும் பரவி வருகின்றன. அவரவர்கள் அநவரதம் இவற்

றைப் படிக்கிறார்கள். அதனால், தமிழ்ப்பாஷை யொன்றில் மட்டுமேயன்று; எல்லாத் திசையினர்க்கும் எல்லாப் பாஷைகளிலும் ஸ்வாமியின் பாணியே படிந்து வரத் தொடங்கிவிட்டது. இதை யெடுத்துக்கூறுகின்ற இவரும் இந்த சைலியைத் தானே பழகிவருகின்றார். ஒரே நிதர்சனம் காட்டுகின்றேன். "இதை கவனிக்க வேண்டியது" என்று பலரு மெழுதுவர்கள். அது சுவையற்ற சொல்லென்று விட்டு "இதனைக் குறிக்கொள்க." "இது குறிக்கொள்ளத்தக்கது" என்றெழுதுபவர் ஸ்வாமியொருவரே. இதையேதான் இவரும் கையாண்டு வருகிறார். இஃதொன்றேயோ? பொருள்வகையை அநுகரிக்க இயலாதாயினும் சொல்வகையை அநுகரிக்க இயலுமே. அனைவரும் ஆசைப்பட்டு ஸ்வாமியின் எழுத்து நடையையே பின்பற்றுகிறார்கள்—பின்பற்றப் பார்க்கிறார்கள் என்பது உண்மையுரை. மற்றொருகால் வேறு சில விஷயங்கள் தெரிவிக்கவெண்ணி இப்போது நிற்கின்றேன்.

இங்ஙனம், P. S. Rangachari, Chidambaram, 1-11-63.

## தேவஸ்தான பத்ரிகையை நோக்கி உவே. பண்டித. V. S. வெங்கடாசாரியர் எழுதுகிறார். (விட்டலாபுரம்) ஸ்ரீரங்கம் 37, மேலசித்திரை வீதி.

திருப்பல்லாண்டில் ஒவ்வொருபாட்டின் முடிவும் சிறுவர்களுக்கு ஞாபகம் வைத்துக் கொள்ள முடியாதபடி பல்லாண்டு கூறுதும் - பல்லாண்டு கூறுமின் - பல்லாண்டென்மின் - பல்லாண்டுபாடுதும் - பல்லாண்டு கூறுவன் என்றிப்படி வெவ்வேறு விதமாகவருவதால் இதை நினைவு வைத்துக் கொள்வதற்காக முன்னோர்கள் தாமே "ஆதி கூறுதும் அனந்தரம் கூறுமின் அண்டமென்மின் எந்தை பாடுதும் தீயுடுத்தெந்நாள் கூறுதும் நெய்யுமல்லும் கூறுவனே" என்றொரு சந்தை இயற்றி வைத்தார்கள். இதுவும் அத்யயன பரம்பரையில் வந்திருக்கிறது. எல்லாப் புத்தகங்களிலும் அச்சிட்டுமிருக்கிறது. 'அபிநவ அகஸ்த்யர்' என்று டைடல் பெற்றவொரு பெரும் புலவர் 'எனக்குப் பொருள்படாத செய்யுள் எதுவுமே கிடையாது' என்று சொல்லிக் கொண்டிருப்பராம். அவரிடம் சென்று இச் சந்தையைச் சொல்லி இதற்குப் பொருள் சொல்ல இயலுமோ? என்று கேட்டார்களாம். இதை இருமுறை சொல்லச் சொல்லி 'ஆஹா! இது வெகு ஆச்சரியமான செய்யுள்; வேதாந்த விழுப்பொருளன்றோ இதில் அடங்கியுள்ளது; கேளுங்கள்' என்று சொல்லி உடனே பொருள் விவரிக்கப் புறப்பட்டாராம்; [ஆதி கூறுதும்] இதில் ஆதி என்னுஞ் சொல்லை இருமுறை கொள்ளவேணும். ஆதி - முதன்முதலிலே, ஆதி - ஆதிமூலப்பொருளை, கூறுமின் - சொல்லுங்கோள். அனந்தரம் கூறுமின் - அதன்பிறகு உங்களுக்கு இஷ்டமான தெய்வத்தைச் சொல்லுங்கள்; அண்டம் என்மின் - "யதண்ம் அண்டாந்தரகோசரஞ்ச யத்" என்கிற ஆளவந்தார் ஸ்ரீஸூக்தியைச் சொல்லுங்கள். எதற்காகவென்றால், அதனால் பரதெய்வம் இன்னதென்று புலப்படும். எந்தை பாடுதும்—எந்தையென்று தகப்பனருக்குப் பெயர்; அவரைப் பாடுவோம். எதற்காக? இப்படிப்பட்ட மஹார்த்தம் நமக்கு ஸ்புரிக்கும்படி அருள் செய்ததற்காக. தீயுடுத்தெந்நாள் கூறுதும் - தீயையுடுத்துக் கொள்வதாவது சிதையில் அக்நியினால் தஹனமடைவது. ச்மசானத்திலே அக்னிஸம்ஸ்காரம் பெறுகை என்றபடி. அது எந்நாள்? எந்நாள்? என்று கூறுவோம். கூவிக் கொள்ளும் காலம் இன்னுங் குறுகாதோ? என்று கதறுவோம் என்றபடி. [நெய்யும் மல்லும் கூறுவனே] ஆஸந்தியில் ஏற்றுவதற்குமுன் ஹோமம் பண்ணுவதற்காக நெய்யும், ஆஸந்தியில் ஏற்றின பிறகு உடலை மூடிக் கட்டுவதற்கு மல் பீஸும் வேண்டும் என்றபடி. கூறுவனே என்பது பிழை; கோருவனே என்றிருக்கவேண்டும். நெய்யும் மல்பீஸும் விரும்புகிறேனென்றபடி.

இப்படியாக அர்த்தம் சொல்லுகிறவர்களும் இவ்வுலகில் மலிந்துள்ளார்கள். இவர்களுக்கு மஹா மேதாவிகளென்று பெயர். ப்ரபத்தியையும் பகவத்ஸங்கல்பத்

தையும் சேர்த்து முடிபோடுவர்கள். பிராட்டியின் பெருமையாக எதையோ நினைத்து எதையோ எழுதுவர்கள், எதைத்தானெழுதட்டுமே, காசுக்குமுதவாத கஞ்சாங் கோரைக் கதையாயன்றோ முடியும். "தஸ்மிந் அஸ்தமிதே பீஷ்மே கௌரவாணும் துரந்தரே, ஜ்ஞாநாநி அல்பீ பவிஷ்யந்தி" என்கிற மஹாபாரத சுலோகம் யாவரும் கேட்டிருப்பீர் கள். பீஷ்மாசார் மறைந்துவிட்டால் ஞானங்கள் அல்பமாய் விடுமென்று இதில் சொல் லப்படுகிறது. ஞானங்கள் அற்பமாய்விடுமென்றால் என்ன தாத்பரிய மென்பதை யாரேனு மறிந்தாருளரோ? ஒரு மதிப்பன் தலையிலே கிடக்கவேணு மென்கிறார்கள் வியாக்கியான சக்ரவர்த்திகள். அதன் கருத்தைத்தா னறிவாருளரோ? இருளன் கையிலே கிடைத்த ரத்னம் விலையுயர்ந்ததாயிருந்தாலும் அது அற்பன் கையிலே கிடைத்தபடியாலே அதை மதிப்பாரில்லை. ஒன்றரையணு விலைக்குத்தான் அதுமாறும். பெடரல் கோர்ட்டு அட்வகேட்டின் வாயில் வரவேண்டிய விஷயங்கள் ஒரு முன்சீப் கோர்ட்டு வக்கீல் வாயில் வந்ததானல் விஷயத்தில் வெகு சீர்மை யிருந்தாலுங்கூட அதற்குச் செவி கொடுப்பாரில்லை. வடமொழியோ தென்மொழியோ ஒன்றும் பயிலாதவன் நான் பாஷ்யார்த்தம் சொல்லுகிறேன், பகவத் விஷயார்த்தம் பேசுகிறே னென்று கிளர்ந்தால் அதற்குக் காது கொடுப்பனே ஒரு விவேகி? பேசுபவனே எழுதுபவனே மதிப்பனுயிருக்க வேண்டாமா? மதிப்பற்றவன் என்று தெரிந்தால் அங்குக் காதையும் கண்ணையும் புகவிடுவர்களோ? பெரிய பஜார்களில், அழுகிப் போன வாழைப் பழங்களையும் வைத்துக்கொண்டு விற்பனை செய்வார்கள்; அதை வாங்கவும் ஓடிவருபவர்கள் இல்லாமற் போகவில்லையே. "இரண்டுவரி வாசித்த வுடனும் இரண்டு வார்த்தைகள் கேட்டவுடனும் தாங்கமுடியாத தலைவலி யெடுத்து முகங்கடுத்து நிற்கும்படியாகவுள்ளது நம்மெழுத்தும் நம்பேச்சும்" என்று உள்ளபடி உணர்ந்தவர்களுங்கூட 'நம்மெழுத்துக்குத்தான் கௌரவம், நம்பேச்சுக்குத்தான் மதிப்பு' என்றன்றோ மயங்கிக் கிடக்கிறார்கள். அன்னவர்களின் சிரோலிபிக் கேற்ற லிபிகள் ஓயாமல் பக்கம் பக்கமாகவும் புத்தகம் புத்தகமாகவும் வெளி வரட்டுமே. கண்கொண்டு காண்பாருண்டோ?

எந்தப் பெரியார் எது சொன்னாலும் அடுத்த க்ஷணத்திலேயே அதை மறுத்துச் சொல்லியே தீர்வதென்று கங்கணம் கட்டிக் கொண்டானொருவன். அவனைச் சுட்டிக் காட்டி ஒரு பெரியவர் "இவனுடைய தாயார் நல்ல பதிவிரதையாக வாழ்ந்தவள்" என்றாராம். எதையும் கண்டித்தே தீர்வதென்று விரதமாதலால் "என் தாயாரைப்பற்றி இவனுக்கென்ன தெரியும்" என்று தொடங்கி அவன் சொன்னதை இங்கு நாம் உதாஹரிக்கக் கூசுகிறோம். நமக்கு இன்னது அநுகூலம், இன்னது பிரதிகூலம் என்பதைச் சிறிதுமறியாமல் எதற்கும் எதிர்மூச்சுபோட்டே நிற்ப தென்று காப்புக் கட்டிக் கொண்டிருப்பவர் அந்தக் காப்பை ஆப்ரயாணம் அவிழ்க்க வேண்டா. எதையாவதெழுதிக் கொண்டே யிருக்கட்டும். ஒவ்வொன்றுக்கும் சுவைமிக்க பிரதித்வனி கிளம்பாமற் போகாது.

## இனி, கடிதங்களின் பேர்க்கவும் பேராத பெருமைகளைக் கேண்மின்.

ஸ்ரீ ராமாநுஜன் 177ல் வெளிவந்துள்ள [பெரியார்கள் எழுவரின்] ஏழு கடி தங்களும் மஞ்சாடு வரை யேழும் கடல்களேழும் போலே மதிக்கக் கூடியவை. அவற்றில் யாரையும் இகழ்ந்துரைக்குஞ் சொல் அணுவளவும் கிடையாது. உலகில் ஒரு வழக்க முண்டு; அவரவர் தாம் தாம் பேசின பேச்சுக்களோ எழுதின எழுத்துக் களோ ஸர்வாத்மநா அஸம்பத்தம் என்று உலகமறிய நிரூபிக்கப்பட்டு விட்டால் அவர்கள் விஷயங்களில் வாய்திறக்கச் சரக்கில்லாமையாலே 'என்னை வைகிறார், என்னை யடிக்கிறார், ஐயோ முதுகில் அடிதாங்க முடியவில்லையே, கபோலத்தில் கொடுத்த அறை பொறுக்க முடியவில்லையே, இடுப்பு ஒடிய உதை கொடுக்கிறாரே' என்று தான் கத்துவர்கள். வேறு என்ன பேச முடியும். இந்த ரீதியில் என்னை

மிகழ்ந்துரைக்கிறுரென்று அவர் கத்துவதும், அவரை யிகழ்ந்துரைக்கிறுரென்று இவர் கதறுவதும் அநிவார்யமாகிறது. இப்படித்தானே யெழுதியும் சொல்லியும் உய்யவேண்டும். வேறு என்ன செய்ய முடியும்? என்ன சொல்ல முடியும்?

கடிதம் 1-க்கு பதிலில் "திரௌபதி செய்தது உயரிய சரணுகதி தான் என்று கடிதத்தில் எழுதியிருப்பது அடியேனுல் மறுக்கப்படவில்லை" என்றிருப்பது எப்படி யிருக்கிறது தெரியுமோ? 'ஸாப்பிட்டோமையா ஸாப்பிட்டோம், என்ன அதற்கு?' என்கிற கதைபோலவும், 'இன்று அமாவாசை தானே, ஆமாம், இன்று கிருத்திகை தானே, ஆமாம், இன்று மரணயோகந்தானே. ஆமாம்'' என்கிற கதை போலவுந் தானிருக்கிறது. உபசார வார்த்தைகளை முக்கிய வார்த்தையாக்க ஏழேழ் பிறவி தவம் புரிந்தாலுமாகாது. பிள்ளை லோகாசாரியரும் அவருடைய திருத்தம்பி யாரும் மூலத்தில் ஸாதித்த பல விஷயங்களை உபசாரவார்த்தையாக மணவாளமா முனிகள் கண்டரவேண அருளிச் செய்கிறுர். தத்வ த்ரயத்தில் "ஜ்ஞாதாவென்ற போதே கர்த்தா போக்தா வென்னுமிடம் சொல்லிற்றுயிற்று. கர்த்ருத்வபோக்த்ருத்வங்கள் ஜ்ஞாநாவஸ்தா விசேஷங்களாகையாலே" என்பது மூலம். "கர்த்ருத்வத்தை ஜ்ஞாநாவஸ்தாவிசேஷமென்று உபசரித்தருளிச் செய்கிறுர். க்ரியாச்ரயத்வ ரூபமான கர்த்ருத்வத்தை ஜ்ஞாநாவஸ்தாவிசேஷமென்று முக்க்யமாகச் சொல்லப் போகாதிறே" என்றும், "இனி போக்த்ருத்வமாவது போகாச்ரயத்வம்; போகமாவது ஸுகதுঃக்கரூபமான அநுபவஜ்ஞானம். அது ஜ்ஞாநாவஸ்தா விசேஷம். ததாச்ரயத்வத்தை ஜ்ஞாநாவஸ்தா விசேஷ மென்கிறதும் ஔபசாரிகம்'' என்றும் விசதவாக் சிகாமணிகள் அலசிக் காட்டுகிறுர். உபசாரம் உபசாரமாகத்தான் நிற்கும். ஆசார்ய ஹ்ருதயத்தில் (88) "த்யாஜ்யோபாதியை ஆதரியார்களிறே" என்ற விடத்திலும் "ஔபாதிகமான வித்தை உபாதி யென்றது கார்யே காரணுபசாரம்'' என்றருளினர். மாமுனிகளின் திருவாக்குக்களில் ஔபசாரிகமென்னும்படியானது தேடினுலும் கிடைக்காது. மற்றையோர்களின் வாக்குக்களில் அது தேடவேண்டாதபடி கிடைக்கும். இது உலகமறிந்த நெடுவாசி. ஆக, புடவை சுரந்தது திருநாமமிறே யென்றது உபசார வார்த்தையே யென்று முதற்கடிதத்திலுள்ளது சிலாலிகிதமாயிற்று. பிறர் எழுதுவது ஒவ்வொன்றும் மதிவிப்ரமத்தா லென்பதும் குருமுகமநதீத்ய வென்பதும் செப்பேடும் கல்வெட்டு மாகாநிற்க, அழுகைக்கு அர்த்த முண்டோ? "வைஷ்ணவவுலகம் முழுவது மறியும்''—எதையறியும்? நாமூலம் லிக்க்யதே கிஞ்சித் ஸ்ரீகாஞ்சீஸ்வாமிநேதி யத்.

கடிதம் 2-க்கு பதில்—என்றதைப் பார்ப்போம். இரண்டாவது கடிதம் யாருடையது? திருமலை திருப்பதி தேவஸ்தாந ஸம்ஸ்க்ருத பாடசாலை யுபாத்யாயர் ந்யாய வேதாந்த வித்வானுடையது. அந்த மஹான் இவருடைய கந்தையைக் காணுமலே, அதில் தள்ளப்பட்ட விஷயங்களையே எழுதிவிட்டாராம். ஆங்காங்கு ஸ்ரீராமாயணுதி ப்ரவசனம் பண்ணுகிறவர்களும் ஸ்ரீவசநபூஷணுதிகாலக்ஷேப நிரதர்களும் இவருடைய சிரோலிபிகளைக் காணுமல் தானே எதையோ சொல்லிப் போதுபோக்கி வருகிறுர்கள். பூர்வாசாரியர்களுங்கூட இவருடைய லிபிகளைக் காணுமலே எதையோ எழுதி வைத்திருக்க மற்றையோர்களைப் பற்றிச் சொல்லவேணுமா? "மா முனிகள் திருவாக்கை மாத்திரம் கொண்டு பார்த்தால் விவாதாஸ்பத க்ரந்தங்களை யருளியவர் எந்த ஆச்சான் பிள்ளை யென்பதை எவராலும் நிர்ணயிக்க முடியாது'' என்று கல்வெட்டு நாட்டிவிட்டாரிவர். மேலேயும் "மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளை மாத்திரம் கொண்டு பார்த்தால் விவாதாஸ்பத க்ரந்தங்கள் நாலூராச்சான் பிள்ளை யுடையதா யிருக்கலாம் என்னும் ஸந்தேஹமே தேறி நிற்கும்; இந்த ஸந்தேஹத்தை எவ்வழியினுலும் போக்க முடியாது'' என்றெழுதப்படுகிறது. விசதவாக்சிகாமணிகளுக்கு அவிசதவாக் சிரோமணி யென்று பட்டம் சூட்டி விட்டார். போருமே போருமே. ஸம்சயாத்மா விநச்யதியே. இவர் வரையில் மாமுனிகள் ஸம்சயஜநகரேயோலும்.

வால்மீகி ராமாயணத்தை மட்டுங் கொண்டு பார்த்தால் ராமன் ராவணனை வதைத்தானா? ராவணன் ராமனை வதைத்தானா என்பது எவராலும் முடிவுகட்ட முடியாதென்று சொல்லித் திரிவாருமுளரே. அவர்களுக்குத் துணை வேண்டாமா? அபயப்ரதராஜ ஸூநுவின் வாக்கியங்களை யுதாஹரித்தவர் அபயப்ரதராஜருடைய வாக்கியங்களை ஏனையா உதாஹரிக்கவில்லை? என்று கேட்டால் தலை வணங்கி நிற்பவருடைய தலை காலில்லாத வார்த்தைகள் தலை வேதனை யத்தனை.

மூன்றாவது கடிதம் ஸ்ரீ உவே வானமாமலை வித்வான் வாத்யார் ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமியின் திருக்குமாரருடையது. கம்பீரஸம்ஸ்க்ருத வாணீமயமுமானது. இந்த வாக் ப்ரவாஹத்திலிறங்கித் திளைக்க பாக்கிய மில்லாமையானது அவரை நிந்திக்க முற்படாமைக்கு ஹேதுவாயிற்று. ஸ்ரீஸ்வாமியின் சபதம் பயனற்றதெனப்படுகிறது. குலசேகராழ்வார் குடப்பாம்பில் கையிட்டதாக சரித்திரம் கூறுகின்றது. பெருமாள் திருமொழித் தனியனும் காட்டுகின்றது. செத்த பாம்பைக் குடத்திலே யிட்டு வைத்துக் கையிட்டாரென்று சிலரும், ரப்பர் பாம்பை யிட்டுவைத்தென்று சிலரும் பேசி ஏசியுள்ளார்கள். இவர் ஸ்வாமியின் சபதம் பயனற்றதென்கிறார். சபதம் எத்தகைத் தென்பதை நினைப்பூட்டுகின்றோம்.

“எந்த எந்த க்ரந்தங்களைப் பெரியவாச்சான்பிள்ளை ஸாதித்ததாக வைணவவுலகம் முழுவதும் நிர்விவாதமாக இசைந்திருக்கின்றதோ, அந்தக்ரந்தங்களில் ஒரு க்ரந்தத்தைப் பற்றியாவது ஆச்சான்பிள்ளை ஸாதித்ததாக மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்தியுளதா? உளதாயின் இரண்டிடம் வேண்டாம், மூன்றிடம் வேண்டாம், ஒரே ஒரு இடம் காட்டினால் போதும். காட்டிவிட்டால் மணவாளமாமுனிகளின் வியாக்கியான நூல்களில் ஆச்சான்பிள்ளையென வருமிடங்களெல்லாம் ஒன்று தப்பாமல் பெரியவாச்சான் பிள்ளையையே குறிக்கின்றன என்றிசைந்து நிற்பதோடல்லாமல் அப்படி காட்டின க்ஷணம் முதலாக நாம் எழுத்துக்கருவியையோ புத்தகத்தையோ யாவச்சரீரபாதம் கையால் தொடுவதில்லை, எங்கும் உபந்யாஸமென்று வாய்திறப்பதுமில்லை என்று தீவிரமான சபதம் செய்து இஃது எழுதுகின்றோம்”—என்பது சபதப்ரகாரம்.

இதற்கு வாய்திறக்க முடியாமல் ப்ரதிசபதம் காட்டுவதாக வொரு வீண்வம்புப்பேச்சு; (அதாவது) மாமுனிகளுக்கு முற்பட்டவர்களோ நூறுவருஷத்துக்குள்ளிருந்த பிற்பட்டவர்களோ நாயனாராச்சான் பிள்ளையை ஆச்சான்பிள்ளையென்று நிர்தேசித்திருப்பதாக எவரேனும் காட்டினால்.......என்று. ரஸிகையான பெண்பிள்ளை “வீணாப்யஸந வேளாயாம் அஹம் ஆமலகஸ்தநீ” என்று சொல்ல, மஹாரஸிகனான புமாந் ‘வேதாத்யயந வேளாயாம் வார்த்தாக வ்ருஷணா வயம்” என்று கூறி அப்பெண்ணின் வாக்கை வென்றானென்று கேட்டிருந்தோம். அதுதவிர வேறொன்றுமிங்கு நினைவுக்கு வரவில்லை. கேளுங்கள், நின்று கேளுங்கள். நம்முடைய ஸம்பிரதாயத்தில் பலவாசிரியர்களிருக்க, அவர்களை இட்டெண்ணாமல் மணவாளமாமுனிகளொருவர்க்கே அநிதரஸாதாரணமான கொண்டாட்டங்கள் ஸ்ரீரங்கநாதோபஜ்ஞமாக எங்கும் நடைபெற்றுவருவது எதனால் தெரியுமோ? அவரொருவரால் விளைந்த உபகாரமே அதிசயிதம், ஸர்வாதிசயிதம், அப்ரமேயம், அபரிச்சேத்யம், அஸமாப்யதிகம், அவாங்மநஸகோசரம் என்பதனாலென்பது ஸர்வ நிர்விவாதம். அருளிச்செயல் வியாக்கியானங்கள் கிடக்கட்டும். அஷ்டாதச ரஹஸ்யம் பரந்தரஹஸ்யம் மாணிக்கமாலை முதலான ஸ்வதந்த்ரக்ரந்தங்களும் கிடக்கட்டும். ஸூத்ரத்துக்கு வ்ருத்தி க்ரந்தம்போல் மாமுனிகள் ஸாதித்திருக்கிற ரஹஸ்ய வியாக்கியானங்களானவை த்ரிபாத்விபூதியிலுங் காணக்கிடைக்காதவை. வெறும் அபிமான வார்த்தையன்றிது. கேண்மின். ஆளவந்தார் ஸாதித்த க்ரந்தங்களில் ஓராசாரியருடைய திருவாக்கையும் எடுத்துக்காட்ட ப்ரஸக்தியில்லாமற் போயிற்று. எம்பெருமானாரருளிச்செய்த ஸ்ரீபாஷ்யாதிகளில் ஆளவந்தாரொருவருடைய ஸ்ரீஸூக்திதவிர மற்றொருவருடைய

ஸ்ரீஸூக்தியையும் எடுத்துக்காட்ட ப்ரஸக்தியில்லாமல் போயிற்று. ஸ்ரீமந்நாதமுனிகளின் ஸ்ரீஸூக்தி ஓரிடத்திலிருக்கலாம். இப்படியே ஆழ்வான் பட்டர் நஞ்சீயர் நம்பிள்ளை ச்ருதப்ரகாசிகாபட்டர் பிள்ளை லோகாசார்யர் முதலானோருடைய க்ருதிகளிலும் அத்யந்தபரிமிதங்களான பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளையே யெடுத்துக்காட்ட ப்ரஸக்தி யிருந்தது. ஆர்த்தியில் "முன்னவராம் நங்குரவர் மொழிகளுள்ளப் பெற்றோம் முழுதும் நமக்கவை பொழுது போக்காகப் பெற்றோம்" என்று தாமே பணித்தபடி பூர்வாசார்யர்களின் ஸகல க்ரந்தங்களையும் கண்ட பாடஞ் செய்து அவற்றையே நித்யாநுபாவ்யமாகவுங் கொண்டு அவ்வவற்றிலிருந்து ப்ரகரணோசிதங்களான ஸூக்தி சகலங்களை ஆங்காங் கெடுத்துக் காட்டி ஈடுமெடுப்புமில்லாத வியாக்கியானங்களை யருளிச் செய்தவர் கடல் சூழ்ந்த மண்ணுலகில் வேறொருவருளரோ? பரந்த ரஹஸ்யமோ மாணிக்க மாலையோ தத்வ நிரூபணமோ தத்வ தீபமோ........இத்யாதிகள் மாமுனிகள் உதாஹரிக்கவே ப்ரகாசமும் ப்ராமாண்யமும் பெற்றன. இவற்றை மாமுனிகளுக்கு முற்பட்டவர்களும் கையாண்டதில்லை, பிற்பட்டவர்களும் கையாண்டதில்லை. உண்டெனில் எடுத்துக் காட்டலாம். எதைக் காட்டுவது? எங்கிருந்து காட்டுவது? இவர் செய்யும் சபதத்தினழகை இவரே மெச்சிக் கொள்ளவேண்டும். "த்வாதசி யன்று ஸூர்ய க்ரஹணம் பிடித்தால் பாரணை முந்தியா? தர்ப்பணம் முந்தியா?" என்று விசாரங் கொண்டு இதைப்பற்றி ஸ்ரீபாஷ்யத்திலாவது ச்ருத ப்ரகாசிகையிலாவது உபநிஷத் பாஷ்யத்திலாவது பகவத் விஷய ரஹஸ்யாதிகளிலாவது — தொலையட்டும் தர்ம சாஸ்த்ரங்களிலாவது நிர்ணயமிருப்பதாகக் காட்டிவிட்டால் இவற்றை ப்ராமாணிக க்ரந்தமாக வொப்புக்கொள்ளுகிறேன்" என்றும் இவர் சபதம் செய்யலாம். உண்மையில் இது தான் ஸாரமும் ஸாரதரமும் ஸாரதமமுமான ப்ரதிஜ்ஞை. ஸித்திக்காது என்பதற்கும் இவர் அதிகாரியன்று, ஸித்தித்துவிட்டது என்பதற்கும் இவர் அதிகாரியன்று. "சார்வரி வருஷத்தில் ஏகாதசியன்று க்ரஹணம் பிடித்தபடியாலும், விரோதிவருஷத்தில் சதுர்த்தியன்று க்ரஹணம் பிடித்தபடியாலும் எல்லாத் திதிகளிலும் க்ரஹண முண்டென்று ஸித்தித்துவிட்டது" என்பதற்கே இவரதிகாரி.

கடிதம் 4. என்பதைப்பற்றின விமர்சம். ஸ்ரீஸூக்திநிதியென்று விருது பெற்றவரும் ஒருவருடைய மாயவலையிலும் சிக்காதவரும் இயற்கையாகவே பரம ஸாத்விகருமான ஸ்ரீ உ.வே. (கரியமாணிக்கம்) வி. வி. ஐயங்கார்ஸ்வாமி 4-வது கடிதக்காரர். இவரைமயக்கி மாற்றி [ஸாம தான பேத தண்டங்களையும் செலுத்தி] ஒன்றெழுதி வாங்கிக்கொள்ளலாமென்று ஓடினார் பாவம். இங்குமங்கும் ஊடாடும் க்ருஷ்ணனை வசப்படுத்திக்கொள்ளப் பார்த்த கௌரவர்களை நோக்கி "அங்யத் பூர்ணாதபாம் கும்பாத் அங்யத் பாதாவநேஜநாத், அங்யத் குசல ஸம்ப்ரச்நாத் நசேச்சதி ஜநார்தந:" என்று உண்மையுணர்த்திய ஸஞ்ஜயரைப் போலே உணர்த்துவா ராருமில்லாமையாலே பதறியோடிப் பங்கமடைந்ததந்தோ. அது கிடக்கட்டும். இந்த வி. வி. ஐயங்கார்ஸ்வாமி பழைய விவாதத்தின் போதே ப்ரதிபக்ஷியை ஆதரித்தவர் என்பதோரழகை. ஸ்ரீராமகதை யொன்றில் விவாதம் ஏற்பட்டு 'வால்மீகி ராமாயணத்தை எடுத்துப் பார்ப்போம்' என்று ஒருவர் சொல்ல, அதற்கு "அட பைத்தியமே, ஏற்கெனவே அவர் (வால்மீகி) ராமபக்ஷபாதியாச்சே, அவர் புத்தகத்தையா எடுத்துப் பார்ப்பது' என்றாராம் மற்றொருவர். அதற்குமேல் "மஹாபாரதத்தில் கூட ராமகதை சொல்லப் படுகிறது, அதை யெடுத்துப் பார்ப்போம்" என்ன, 'அட முட்டாளே! வியாசரைவிட வால்மீகியையே ஒருபங்கு கூட்டிக்கொள்ளலாம். வியாசருக்கு "ஸஹோவாச வ்யாஸ: பாராசர்ய:" என்று பைத்தியக்காரவேதம் புகழ்ச்சியொன்று கொடுத்துவிட்டபடியால் தாம் சொன்னதே வேதவாக்கென்று செருக்கு மொன்றுண்டு அவர்க்கு; ஆகவே அந்த அசட்டுப் புத்தகங்களில் எதையும் எடுத்துப்பார்க்க வேண்டாம்; செத்தாஞ்ஜன மென்றும் சவரக்ஷண மென்றும் நானெழுதிவைத்திருப்

பலவைகளைப் பார்த்தால் கண்ணாடிபோல் விளங்கும்' என்றாராம். இதெல்லாம் கட்டுக் கதை யென்று நினைக்கிறாயோ?

பிள்ளைப் பெருமாளையங்கார் கலம்பகத்தில் "காணாத புதுமை பல காட்டுவன்" என்று தொடங்கி "நீணாகணைப்பள்ளியில் திருவரங்கத்து நெடிதாழிதுயிலும்பிரான்.... சேணுடர் யாவரையு மடிமைகொண்டு அவரவர் சிரத்திற் பொறித்துவிட்ட திருச்சக்கரப் பொறியிலாததொரு கடவுளைத் தேடியினி முன்விடுவனே" என்றுகூறித் தேடச் சென்றிருக்கிறார். யாரை? அரங்கேசனுடைய திருச்சக்கர விலச்சினையில்லாததொரு தெய்வத்தை. அது போல, இவரும் அப்போதோடு இப்போதோடு வாசியற எப்போதும் பிரதிபக்ஷியை ஆதரிக்கவிசையாத வொரு பண்டிதரைத் தேடிப்பிடிக்க அவ்வையங்காரோடு கூடவே திரியட்டும். (4வது கடிதக்காரர்) தானெழுதிய சில பதங்கள் மாறியிருப்பதாகத் தெரிகிறது என்றாராம். பல பதங்களல்ல, சில பதங்கள். மாறியிருப்பவை வாக்கியங்களல்ல, பதங்கள். அந்த மாறுதலும் திடமாகச் சொல்லப்படாதே தெரிகிற தெனப்பட்டதாம். உண்மையில் மாறுதலுண்டென்பதை நானும் கண்டறிந்தேன். (அஸல் கடிதத்தில்) விண்ணபம் என்றிருந்தது விண்ணப்பம் என்றும், 15 ஆண்டுகளாக என்றிருந்தது 15 வருடங்களாக என்றும், பரமஹம்ஸேத்யாதி என்றிருந்தது ஸ்ரீமத் பரமஹம்ஸ என்றும் மாறியிருப்பது ஸத்யமே. ஒவ்வொரு கடிதமும் இத்தகையவே யென்று விளங்குகிறதாம். எத்தகைய? என்றால், ஒருபதமிருக்க வேறொருபதம் மாற்றப் பெற்றவை என்பர். அஜய்யஃ இத்யாதிகளை அஜேயஃ இத்யாதியாக மாற்றினதற்கு எந்தப்ராயச்சித்தமோ அந்த ப்ராயச்சித்தமேயாகட்டும்.

கடிதங்களின் வரிசையில் 5வது கடிதம் திருநாராயணபுரம் ஸ்ரீமதுபயவே. வித்வான் வங்கீபுரம்—உடையவர் ஸன்னிதி ஆதீனம் ராகவாசாரியர்ஸ்வாமி யருளியது. இதைத் தொடுவதற்கே கூசுகிறார் பாவம்! "வ்ருக்ஷே வ்ருக்ஷே ச பச்யாமி சீரக்ருஷ்ண ஜினாம்பரம்" என்ற மாரீசன் "ரகாராதீநி நாமாநி த்ராஸம் ஸஞ்ஜநயந்தி மே" என்றழுததே நினைவுக்கு வருகிறது. ராமநாமம் போல் ராகவநாமமும் ரகாராதி நாமந்தானே. இந்த திருநாராயணபுரம் ஸ்வாமி ராகவாசார்யரன்றோ.

6-வது கடிதக்காரர் உபயபாஷா பண்டிதரான பத்தங்கி ரங்காசாரியர். இவர் மத்யஸ்தரல்லரென்று தள்ளப்படுகிறார். பலபல மத்யஸ்தர்கள் தன்னைப் புகழ்ந்தும் தன் கக்ஷியைப் புகழ்ந்தும் ஏராளமாக வெளியிட்டிருப்பதனால் அவற்றிலொன்றையும் காணாத இந்த உபயபாஷா பண்டிதர் எப்படி மத்யஸ்தராக முடியும்? இவ்வளவோடு விட்டுத் தொலைத்திருக்கலாமிவரை; இவர் பிரதிபக்ஷியைப் புகழ்ந்திருக்கிறாரென்று வயிற்றெரிச்சலோடு எழுதிவிட்டு, அந்த ப்ரதிபக்ஷியை தான் முன்புமட்டும் புகழவில்லை, இப்போதும் புகழ்வதாகக்கூற வந்து [அடியேன் இன்றைக்கும் பிரதிபக்ஷியின் பாண்டித்யத்தையோ உபந்யாஸத் திறமையையோ மறுக்கவில்லை] என்றெழுதப்படுகிறது. "என் கக்ஷியை இவரும் இப்போது மறுக்கிறபடியால் இவரை முன்பு நான் விளைவதறியாமல் புகழ்ந்துவிட்டாலும் இப்போது இகழ்வேனேயொழியப் புகழமாட்டேன்; மூக்கும் காதுமறுப்புண்ட சூர்ப்பணகை "தருணௌ ரூபஸம்பந்நௌ ஸுகுமாரௌ மஹாபலௌ, புண்டரீக விசாலாக்ஷௌ" என்று புகழ்ந்ததுபோலவும், ஸத்யோ வைதவ்யமடைந்த மண்டோதரி "தமஸஃ பரமோ தாதா சங்க சக்ரகதாதரஃ, ஸ்ரீவத்ஸவக்ஷா நித்யஸ்ரீஃ" என்று புகழ்ந்தது போலவும் நான் புகழ மாட்டேன்; அவர்களுக்குப் போல எனக்கும் பைத்தியம் பிடித்துவிட்டதென்று நினைக்கிறீர்களோ? என்றெழுதவேண்டி யிருக்க, இப்போதும் அடியேன் பிரதிபக்ஷியின் புகழ்ச்சியை மறுக்கவில்லை, மறைக்கவில்லை என்றெழுதுவது—தான்பரமப்ராமாணிகரென்று காட்டிக்கொள்ளவே போலும். இந்த ப்ராமாணிகத்வ மொன்றுதான் பேர்க்கவும் பேராதபடி நிலைநிற்கும். மற்றபடி அர்த்தங்களெல்லாம் ஒன்று தப்பாமல் அபார்த்தங்களே யென்று உலகில் எத்தனைவருளரோ அத்தனைவராலும் பொடிபொடியாக்கப் பட்டொழிந்தன வென்பது இன்னமும் சொல்லவேண்டுமா?

மகனுக்கு விவாஹம் செய்விக்கவேணுமென்று பலபாடுகள் பட்டுப் பல்லாயிரம் செலவழித்து விவாஹம் செய்விக்குமவர்கள் நாட்டுப்பெண் இல்லறம் நடத்தவந்து சேர்ந்தவுடனே முறத்தாலடிப்பதையும் மூஞ்சியாலடிப்பதையும் காணுகின்றோம். தேவபோக்யமாக அறுசுவை யடிசில் சமைத்தாலும் 'அதில் உப்பு கிடையாது, இதில் இரட்டை யுப்பு, தளிகை ஒன்றுகூட வாயில் வைக்க வழங்க வில்லை' என்று தூற்றுவது சில மாமனாருடைய இயல்பு. சில மாமனார்கள் இயற்கையான ஸௌஜன்யத்தாலும், நல்வார்த்தைகளினாலேயே திருத்துவது நலமென்கிற வுணர்ச்சியினாலும் குணஹீனைகளான நாட்டுப் பெண்களையும் தூக்கி வைத்துப் போற்றிப் புகழ்ந்து கொண்டாடிப் போருவர்கள். இந்த ரீதியில் தம்முடைய ஸௌஜந்யத்தால் "அச்சுப் பிழை கூட கிடையாது; இந்த புரோபாகிக்கு ஒன்றும் கிடைக்கவில்லை" என்றெழுதியவற்றை இரவும் பகலும் கண்டுகொண்டும் காட்டிக்கொண்டும் களிப்பெய்தினால் தடுப்பாராரோ? அபத்தந் தவிர வேறில்லை யென்கிற நிருபணங்கள் பெருக்காறெடுத்துப் பெருவெள்ளங்கோத்து ஊர்தோறு முகளாநிற்க, இதைப் பரிஹரித்துக் கொள்ள வகையின்றி, வபனம் பெற்ற விதவை பழைய கூந்தல் வளத்தை நினைத்து நினைத்துச் சொல்லிச் சொல்லியலற்றுவது போல அலற்றிக்கொண்டிருந்தால் இவ் விருப்புக்கு ஆலத்தி வழிப்பது தவிர வேறென் செய்வது!

**7-வது கடிதத்தின் விமர்சம்.** கடிதங்களின் மாலையில் ஏழாவது கடிதம் திருநகரி எம்பார் வித்வத் குலதிலக ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமியினுடையது. இந்த ஸ்வாமி ஜ்ஞான சீல வயோவ்ருத்தர்களில் அத்விதீயர். நம்முடைய ஸம்பிரதாயத்தில் கீர்த்தி சேஷர்களா யிருக்கும் ஸ்ரீரங்கம் கபிஸ்தலம் அனந்தாசார்ய ஸ்வாமி போல்வாரிடத்தில் காலக்ஷேபம் கேட்டவர்களில் தற்காலம் உயிர் வாழ்ந்திருப்பவர் இவரொருவரே. இந்த மஹாஸ்வாமி வெறுக்கவும் மறுக்கவும் பெற்ற அஸத் விஷயத்தை இன்னமும் பற்றிக் கொண்டு வாதாடுவது வெள்கத் தக்க விஷயமல்லவா? இந்த ஸ்வாமி ஸ்ரீ முகத்தின் முடிவில் "விஷயம் எதுவானாலும் ஸரி; விஷயத்தினுள்ளே புகுந்து நாம் பரிசீலனை செய்ய வேண்டிய அவசியமே கிடையாது; அண்ணாஸ்வாமி ஸாதித்த தென்றால் அதுவே வேதவாக்கு என்று சொல்லுவது தவிர வேறறியோம்" என்றெழுதப் பட்டிருக்கின்றதாம். இதிலிருந்து இவருடைய பக்ஷபாதம் வெளியாகிறதாம். ஆகவே எம்பார் ஸ்வாமியின் ஸ்ரீமுகம் அநாதரணீயம் - எனப்படுகிறது. கண்ணிநுண் சிறுத்தாம்பு வியாக்கியானத்தில் பெரியவாச்சான் பிள்ளை த்ரிபுரா தேவியார் வார்த்தையை உதாஹரித்தருளுகிறார். அந்த அம்மை எம்பெருமானாருபதேசங்கள் கேட்டு, சைவத்திலிருந்து வைஷ்ணவத்திற்கு மாறினாள். அவளோடே சில சைவர் வாதப் போராட வந்தார்கள். அதற்கு அந்த அம்மை சொன்னதுதான் திருநகரி எம்பார் ஸ்வாமி ஸாதித்தது. இத்தகைய பக்ஷபாதத்தின் சீர்மையும் சிறப்பு மறியாமல் அசூயையே பொங்கி எத்தனை நாடகங்கள் நடித்தாலும் வேடிக்கை பார்க்க உலகமுள்ளது.

த்ரிபுரா தேவியார் வார்த்தையைப் பெரியவாச்சான் பிள்ளை காட்டியருளின விதமாவது—

"த்ரிபுரா தேவியாரை ப்ரமாண ப்ராபல்யத்தாலேயோ எம்பெருமானே ஆச்ரயணீயனென்று நீங்கள் பற்றிற்று? என்ன; அது வொன்றுமன்று; எம்பெருமானார் காடிச்சால் மூலையில் தேவதையை ஆச்ரயித்தாராகில் அதுவே எங்களுக்கும் ஆச்ரயணீயவஸ்துவாகக் கடவது என்றாள்" என்பதாம்.

இப்படி சொன்னது ப்ரமாண கதியினுட் புகாதே பக்ஷபாதத்தினாலன்றோ. இதற்கு மேல் இவர் என்ன சொல்ல வருவரென்றால், 'எம்பெருமானாரும் இவரும் ஒன்றோ' என்ன வருவர். இது அவரவர்களின் பிரதிபத்தியைச் சார்ந்தது. இந்த க்ஷேபம் ப்ரஸங்கத்திற்குப் புறம்புபட்டதேயாகும். திருநகரி எம்பார்ஸ்வாமியின் பிரதிபத்தியை மாற்ற இவர் அநதிகாரியென்று முடிந்தது.

திருமலை திருப்பதி ஸம்ஸ்க்ருத கலாசாலை யுபாத்யாயர். நியாய வேதாந்த வித்வான். திருமலை அனந்தாண் பிள்ளை கிருஷ்ணமாசாரியர் எழுதுவது :—

## ஸ்வாபிப்ராய த்ருடீகரணம்.

விசதவாக் சிகாமணிகளான மணவாள மாமுனிகளின் திருவாக்கைக்கொண்டு, ஸ்ரீ. உ. வே. ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதீசரான ஸ்ரீ காஞ்சீஸ்வாமி, தத்வத்ரய விவரணம் பரந்தரஹஸ்யம் மாணிக்கமாலை ஜிதந்தா வியாக்யாநம் கத்யவ்யாக்யானம் என்ற இவ்வைந்தும் பெரியவாச்சான் பிள்ளையின் க்ரந்தங்களல்லவென்று தகுந்த யுக்திகளுடன் நிர்ணயித்திருக்கும் இவ்விஷயம் யார்க்கும் மறுக்கவொண்ணாத தென்பது ஸத்யமென்ற அடியேனுடைய த்ருடாத்யவஸாயம் ஸ்ரீராமாநுஜன் 177ல் கடிதம் 2ல் வெளிவந்தது. பின்பு சிலநாள் கழித்து ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சன பத்ரிகாதிப ஸ்வாமியிடமிருந்து ஸம்ரக்ஷண த்வயமும், அதன் பின்பு சிலநாள் கழித்து ஸுதர்சனம் 191-ஆம் ஸஞ்சிகையும் அடியேனுக்குக் கிடைத்தன. அவற்றைப் பார்த்தபின்பு அடியேனுடைய த்ருடாத்யவஸாயம் முன்னிலும் த்ருடமாயிற்று.

ஸம்ரக்ஷண த்வயத்தில் ஒன்றான ஸ்ரீக்ருஷ்ண ஸூரிக்ரந்த ஸம்ரக்ஷணத்தில் குறிக்கப்பட்ட விஷயங்களுக்குள் மிக முக்கியமானதாய் அடியேன் நினைத்த விஷயம்—மணவாள மாமுனிகள் தத்வத்ரயம் அசித் 27ம் சூர்ணிகா வ்யாக்யானத்தில் தத்வத்ரய ஸங்க்ரஹகாரரைப் பெரியவாச்சான் பிள்ளையென்றும், மற்ற இடங்களில் அவரையே ஆச்சான் பிள்ளை யென்றும், தத்வத்ரய விவரணகாரரை எல்லாவிடங்களிலும் ஆச்சான் பிள்ளையென்றும், பரந்தரஹஸ்யம் மாணிக்கமாலை ஜிதந்தாவ்யாக்யானம் கத்யவ்யாக்யானம் என்றிவற்றிலிருந்து ஸ்ரீஸூக்திகளை எடுக்கும்போது ஆச்சான் பிள்ளையென்றும் குறித்துள்ளதனால், இவ்விடங்களில் குறிக்கப்பட்ட ஆச்சான்பிள்ளை பெரியவாச்சான் பிள்ளையேயாவர் என்பது. இது பொருத்த மற்றதென்று அடியேனுக்குத் தோன்றியதை உபபத்திகளுடன் விண்ணப்பித்துக் கொள்ளுகிறேன். அதில் உள்ள மற்ற விஷயங்களைப் பற்றிப் பிறகு பேசலாமென்று விட்டு முக்கியமான விஷயத்தை இங்கு விஜ்ஞாபிக்கிறேன்.

ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனத்தில், சென்னை ஓரியெண்டல் மானுஸ்க்ரிப்ட் லைப்ரரியில் கிடைத்ததாக வெளியிடப்பட்ட தத்வத்ரயஸங்க்ரஹம் என்ற நூல், மணவாளமாமுனிகளால் தத்வத்ரயவ்யாக்யானத்தில் ஆச்சான்பிள்ளையின் க்ரந்தமாக அருளிச் செய்யப்பட்ட தத்வத்ரய விவரணத்திற்கு மூலக்ரந்தமாக இருக்க நியாய மில்லை என்பதும், அந்தத் தத்வத்ரயஸங்க்ரஹம் பெரியவாச்சான் பிள்ளையின் க்ருதியன்று என்பதும் சில காரணங்களைக்கொண்டு நிரூபிக்கப்படுகிறது :—

தத்வ அசித் 26ல், "இந்த தந்மாத்ராத் தந்மாத்ரோத்பத்திக்ரமம் நம்மாசார்யர்களுக்கு மிகவும் ஆதரணீயமாய்ப் போரும். அதுக்கடி 'அஷ்டௌ ப்ரக்ருதய: ஷோடச விகாரா:' என்கிற ச்ருதிக்கு ஸ்வரஸார்த்தம் ஸித்திக்கை...........இந்த க்ரமத்தை யாதவப்ரகாசாதிகளும் ஆதரித்துக் கொண்டு போந்தார்கள்" என்று மாமுனிகளின் வ்யாக்யான ஸ்ரீஸூக்தியை ஸேவிக்கின்றோம். தத்வ அசித் 27ல் ஆச்சான் பிள்ளையின் தத்வத்ரய விவரணமும் ஜீயருடைய தத்வ நிரூபணமும், ஆவரணாதிகள் கொள்ளவேணுமென்பதற்கு ஸம்வாதமாக மாமுனிகளால் எடுக்கப்படுகின்றன. அவ்விரண்டு நூல்களிலும் தந்மாத்ராத் தந்மாத்ரோத்பத்தியே ஆவரணாதி விசேஷங்களுடன் அருளிச்செயப்பட்டிருக்கிறது. புதிதாக வெளியிடப்பட்ட தத்வத்ரய ஸங்க்ரஹமோ, சிலர் பக்ஷமாகப் பிள்ளை லோகாசாரியர் தத்வ 27ல் அருளிய பூதாத் தந்மாத்ரோத்பத்தியை மட்டும் கூறுகிறது என்பது, அந்நூலில் 13—22 வரையில் உள்ள சூர்ணிகைகளில் காணப்படுகிறது. ஆசார்யர்கள் மிகவும் ஆதரித்த தந்மாத்

ராத் தந்மாத்ரோத்பத்தி எடுக்கப்படவேயில்லை. பெரியவாச்சான் பிள்ளையாயிருந்தால் தம் க்ரந்தத்தில், ஆச்சான் பிள்ளையைப் போலவும் ஜீயரைப்போலவும் தந்மாத்ராத் தந்மாத்ரோத்பத்தியை—[நம் ஆசார்யர்கள் மிகவும் ஆதரித்துப் போந்ததை] அருளிச் செய்யாமல் விட்டிடுவரோ? ஒரு காலும் விடார். ஆகையால், மாமுனிகள் இத் தத்வ த்ரயஸங்க்ரஹத்தைத் திருவுள்ளத்தில் கொண்டு தத்வ அசித் 27ல் 'பெரியவாச்சான் பிள்ளையும் இப்படியிறே அருளிச்செய்தது' என்று அருளினார் என்பது எப்படிப் பொருந்தும்? ஒருகாலும் பொருந்தாது. ஆகவே தந்மாத்ராத் தந்மாத்ரோத் பத்தியை ஆச்சான் பிள்ளையும் ஜீயரும் ஆவரணாதிகளை விவரித்து அருளினர். பிள்ளை லோகாசார்யரும் பெரியவாச்சான் பிள்ளையும் ஆவரணாதிகளை விவரியாமல் அந்த தந்மாத்ராத் தந்மாத்ரோத்பத்தியையே அருளினர் என்றே, "பெரியவாச் சான் பிள்ளையும் இப்படியிறே அருளிச்செய்தது" என்பதற்குப் பொருள் என்று நிஸ்ஸந்தேஹமாகத் தேறிற்று. நம்மாசார்யர்கள் மிகவும் ஆதரித்துப் போந்த தந்மாத்ராத் தந்மாத்ரோத் பத்தியை (சிலர் பக்ஷமாகவும்) ப்ரஸ்தாவியாத தத்வத்ரய ஸங்க்ரஹம் நாயனாராச்சான் பிள்ளையின் க்ருதியுமன்று என்றும் கொள்ளக் குறையில்லை. மாமுனிகள் 'நம்மாசார்யர்கள்' என்று கொண்டாடிய ஆசார்யர்களில் இரண்டு ஆச்சான்பிள்ளைகளும் முக்கியமானவர்களன்றோ?

மூலமாகக் கருதப்படுகிற தத்வத்ரயஸங்க்ரஹத்தில் கூறப்படுகிற பூதாத் தந்மாத்ரோத்பத்தியை ஆச்சான் பிள்ளை தத்வத்ரய விவரணத்தில் விவரித்தருளவில்லை. அதையும் ப்ரஸ்தாவித்திருக்கிறாரே யென்னில் அந்தப் பக்ஷத்திற்கும் ஆவரணாதிகள் உண்டென்று காட்டுகைக்காகவே யன்றி வேறில்லை. ஆகையால் தத்வத்ரயஸங்க்ரஹம், ஆச்சான் பிள்ளையின் தத்வத்ரய விவரணத்திற்கு மூலமன்றென்பதும் விளங்குகிறது. இன்னும் பல விடங்களை யெடுத்துக் காட்டலாம். ஸ்ரீகாஞ்சீ ஸ்வாமியின் ஒவ்வொரு திவ்யக்ரந்தமும் "யதிஹாஸ்தி ததந்யத்ர யந்நேஹாஸ்தி ந தத் க்வசித்" என்னும் முறையிலேயே அவதரித்திருப்பதனால் அவற்றால் தெளிவு பிறவாதவர்களுக்கு வேறு எதனாலும் தெளிவு பிறவாதென்பது திண்ணம். தம்முடைய வெளியீடுகளைக் காணாததனால் சிலர் வேறாக எழுதுகிறார்களென்றும் அவற்றைக் கண்டு விட்டால் தம் பக்ஷத்தையே ஆதரிப்பார்களென்றும் நினைத்திருப்பதொன்றுதான் நமக்கு வியப்பைத் தருகின்றது. தம் கொள்கைக்கு ஒரு ப்ரமாணமும் ஒரு யுக்தியும் காட்டாததோடு விபரீதமானவற்றையும் காட்டி விட்டுத் தமக்குத் தாமே ஒரு நிர்ணயத்தை எழுதிக் கொள்வது அநுசிதம்.

பிள்ளை லோகாசார்யரருளிச்செய்த தனி ப்ரணவமென்னும் ரஹஸ்யத்தில் அகாரார்த்தமான காரணத்வத்தை விவரித்தருளுகையில் உடையவர்க்குத் திருக்கோட்டியூர் நம்பி யருளிச்செய்தாரென்றும், பட்டர் நஞ்சீயர்க்கு அருளிச் செய்தாரென்றும், நம்பிள்ளை பின்பழகிய பெருமாள் ஜீயர்க்கு அருளிச் செய்தாரென்றும், பிள்ளை யெங்களாழ்வான் நடாதூரம்மாளுக்கு அருளிச் செய்தாரென்றும் ஸாதித்து வருமிடையிலே "ஆச்சான் பிள்ளை நடுவில் திருவீதிப் பிள்ளையைக் கேட்க........ அருளிச் செய்தார்" என்கிற ஸ்ரீஸூக்தி திகழ்கின்றது. பெரியவர் சிறியவர்க்கு அருளிச் செய்ததாகவே சொல்லி வருகிற இந்த பிரகரணத்தில் ஆச்சான் பிள்ளை கேட்க நடுவில் திருவீதிப்பிள்ளை யருளிச்செய்ததாக ஸாதித்திருப்பதொன்றை மட்டும் உற்று நோக்கினால் போதுமே. நெடுநாள் வேறுபட்டிருந்து பிறகு வந்து சேர்ந்து அடிபணிந்திருந்த நடுவில் திருவீதிப் பிள்ளையை ஸந்தேஹம் கேட்கிற ஆச்சான்பிள்ளை பெரியவாச்சான்பிள்ளையாக இருக்க முடியுமா? மறுபடியும் ப்ரஸக்தி விளையும்போது இன்னமும் விரிவாக விஜ்ஞாபிக்கவெண்ணித் தற்போதுநிற்கிறேன்.

தாஸன். தி. அ. க்ருஷ்ணமாசாரியன், திருமலை, 10—11—'63.

## ஸ்ரீ உவே. விட்டலாபுரம் V. S. வெங்கடாசார்யர்ஸ்வாமியின் 2-வது கடிதம்

மிகவும் வருந்த வேண்டிய விசாரம் நிகழ்ந்தது இன்னும் முடிந்தபாடில்லை. வருந்த வேண்டியதென்று ஏன் சொல்கிறேனென்றால் ஸ்ரீ காஞ்சீஸ்வாமின் நேரமும் பொருளும் பாழாவதைக் குறித்துத்தான். ஏனெனில், தான் அடையும் திரவியத்தை ஸ்ரீவைஷ்ணவத்துக்கு—எம்பெருமானார் தரிசனத்துக்கு—இன்றைய சாமான்யரும் பயன்கொள்ளுமாறு உதவும் மஹோபகாரியாவர் ஸ்வாமி. அது இப்படி பாழாவது அடியேனுக்குவருத்தம். செய்யும்காரியம் மஹத்தானது. அவர்ஜ்ஞேயமானது. பூர்வ பக்ஷிகள் யாதுகொண்டு இந்த விதண்டாவாதத்தை வளர்த்துப் போருகிறார்களோ?

த்ரௌபதி ப்ரபத்தி செய்தாள். ஒரு தடவைதான் செய்தாள். அந்த இடம் சபா மத்தியிலே வஸ்த்ரத்திற்காக அந்த சுலோகம் (சங்க சக்ர) என்றது. த்ரௌபத்யா ஸஹிதா: என்றது த்ரௌபதி பிராயச்சித்த ப்ரபத்தி இல்லை. தர்ம புத்ராதிகள் செய்த ப்ரபத்தி தர்மபுத்ராதிகள் என்றால் த்ரௌபதியும் கூடத்தான். இவைகளை தெளிவாக வ்யாக்யானம் சொல்லுகிறது. இத்தனையையும் அடியேன் தேவஸ்தான பத்ரிகையில் வெகு விளக்கமாக எழுதியாயிற்று. இதன் மேல் ஆர்த்த ப்ரபத்தி என்று ஒன்று அநவஸரமாகக் கிளம்பி வாதம் தொடருகிறது.

பகவத் குணங்களை எத்தனை உயர்த்தியாகச் சொன்னாலும் ஒக்கும் ஒக்கும் என்பவர்கள் எம்பெருமானார் தர்சனத்தின் நிழலிலே வாழ்ச்சி பெறுபவர்கள். தங்களுக்குண்டான பாண்டித்யத்தை வைத்து பகவத் குணங்களை இல்லை செய்வதிலும் இறக்குவதிலுமே பொழுது போக்குகிறவர்களை என்னவென்று நினைப்பது? ஸ்ரீ காஞ்சிஸ்வாமி ஸர்வஜ்ஞலோக குருஸூக்தி ஸர்வஸ்வ, நூல் உபகரித்துள்ளார். மந்த மதிகளும் அது கொண்டு தெளிவு பெறுகிறார்கள். ஸ்ரீவசநபூஷணமும், அதன் வ்யாக்யானமும் மறு வடிவெடுத்தது இந்த ஸர்வஸ்வம் என்றால் சற்றும் மிகையன்று.

இதுபோக பரந்த ரஹஸ்யம் பற்றி மற்றொரு வாதம். நாம் நிச்சலும் மணவாள மாமுனியே இன்னுமொரு நூற்றாண்டிரும் என்கிறோம். ஆசாரிய பரம்பரை அவரோடு சமாப்தி. பின்பு உள்ளார் தங்கள் தங்கள் ஆசாரிய வந்தனம் செய்வார்களே யன்றி ஏகோபித்த வாழித் திருநாமம் திருவாராதனத்திலே உண்டோ? ஸ்ரீ காஞ்சீஸ்வாமி மணவாளமாமுநிகளின் எடுத்துக்காட்டோடு பரந்தரஹஸ்யத்தில் ஒரு தீர்மானம ஸாதித்தார். அதை மறுக்க எவராலும் முடியாது. பின்பு 'நூறு வருஷத்துக்கு முந்தி என்றும் ஐம்பது வருஷத்துக்கு முந்தி என்றும்' சொல்வதில் பொருளுண்டோ?

பிராயத்தையிட்டும் ஞானத்தையிட்டும் உலகமெலாம் வணங்கப் பெற்றவர் ஸ்ரீ காஞ்சீஸ்வாமி. பூர்வபக்ஷியும் இதை மறுக்கவில்லை. சாஸ்திர ரீதியாக சொல்வதை அநுமானத்தைக்கொண்டு மறுக்கப் போமோ? முடியாது. மணவாள மாமுநிகளுக்கு பின்புளார் யாரும் எந்த விதமும் சொன்னாலும் அது பூர்வாசார்ய நிர்வாஹத்துக்கு ஒத்து வராவிடில் தள்ளி விடுவது தானே ஆசார்யர்களிடம் ப்ரதிபத்தி உண்டு என்றதின் அர்த்தம்?

அதற்கு விரோதயாக ஒட்டுப் போடப் பார்ப்பதும் அர்த்தமில்லாதபடி தான் சொன்னதையே சொல்வதும் வளரக்கூடிய ஸ்வரூபஜ்ஞனுக்குத் தகுமோ? தவறாக யார் எழுதினாலும் ஸ்வாமி நிர்தாக்ஷிண்யமாக உடனே கண்டிப்பவர். அடியேன் ஒருதடவை எழுதிய கடிதத்தில் முயற்சிக்கிறேன் என்று எழுதினேன். மறு தபாலில் ஒரு கார்டு கிடைத்தது. 'முயற்சிக்கிறேன் என்றது தவறு. நீ கூட இப்படி எழுதலாமா?' என்று கண்டித்திருந்தார் அடியேனை. கண்ணிநுண் சிறுத்தாம்பு அடியேனுக்கு சந்தை உண்டு. அப்படி இருந்தும் பழக்கத்தால் வந்தவினை இந்த எழுத்து. உடனே மன்னிப்பு கேட்டு விண்ணப்பித்துக் கொண்டேன். இந்நிகழ்ச்சி கல்லூரியில் படிக்கும் என் குழந்தைகளுக்கும் மிகவும் பயன்பட்டது.

இப்படி அடித்துத் திருத்துவாரை ஆத்ம பந்துவாகக்கொண்டு அடி வணங்கினால் தானே அறிவு வளர உரமிட்டதாகும்? 'விவேக முகராய் நூலுரைத்து' என்ற ஆசாரிய ஹ்ருதயம் பலித்ததாகும். தாஸன், வேங்கடதாஸன், 14-11-63.

# அறிக்கை,

16—12—63 திங்கட்கிழமையன்று

## தனுர்மாஸம் தொடக்கம்.

வழக்கப்படி சென்னை கோவிந்தப்ப நாய்க்கன் தெரு,

48 நெ. உப்பட்டூர் ஆழ்வார் செட்டியார்

ராமாநுஜ கூடத்தில்

---

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம்

அண்ணங்கராசாரியர் ஸ்வாமியின்

## திருப்பாவை காலக்ஷேபம்

தினந்தோறும் மாலை 6-மணிக்கும்

—: o :—

## ஸ்ரீவசன பூஷண காலக்ஷேபம்

காலை 7-30 மணிக்கும் நடைபெறும்.

---

15—12—63 முதல் 14—1—64 தேதிவரை

ஸ்ரீ ஸ்வாமிக்கு விலாசம் :

**48, GOVINDAPPA NAICKEN ST.,**

**MADRAS G. T.**

---

இப்படிக்கு மானேஜர், க்ரந்தமாலா ஆபீஸ்.

## ஸ்ரீஉவே. வித்வான் திருநகரி. எம்பார். ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமி

# "ப்ரதமகபளே மக்ஷிகாபாத:"

த்ரௌபதீ விவாதம் தனிச்லோக வியாக்கியான முத்ரணத்திலிருந்து தோன்றியதாகத் தெரிய வருகிறது. அந்தப் பதிப்பில் தனிச்லோக தர்ப்பண மென்றொரு விவரணம் சேர்க்கப்பட்டு அது வித்வான்களுக்கு க்ஷாரஜலமென்று ப்ரஸித்தமாக வுள்ளது. கண்ணடிக்கு வாசகமான தர்ப்பணமன்று, எள்ளும் தண்ணீரும் விடுகிற தர்ப்பணமேயிது என்று ஸ்ரீரங்கத்தில் வாழும் பல பண்டிதர்களும் பகரக் கேட்டேன். அதில் ஆதியோடந்தமாக எந்தப் பக்கமெடுத்தாலும் 'அந்தோ' ஐயோ!' என்ன வேண்டியேயிருக்கிறது. அதிலிருந்து, ஸர்வாத்மநா அபரிஹார்யங்களான அஸம்பத்தங்களை 25க்கு மேல் சததகோடியில் பண்டித ரத்னம் திருக்கண்ணபுரம் ஸ்வாமி காட்டியிருந்தாலும் 'ப்ரதம கபளே மக்ஷிகாபாத:' என்று காட்ட வேண்டியதை விட்டு அங்கு மிங்கும் தேடி யெடுக்குமாபோலே எடுத்துக் காட்டியிருப்பது 'இவ்வளவு தானே அஸம்பத்தங்கள்' என்று நினைக்கவும் சொல்லவும் இடம் தருகின்றது.

ஒருவர் எழுதத் தொடங்கும் போதே "ஸ்ரீமதே ராமாநுஜாய நமஹ" என்றெழுதுவர். அதே ரீதியில்தான் இந்த தர்ப்பணம் அமைந்திருக்கிறது. "அஹம் வேத்மி மஹாத்மாநம்'' என்பதை முதல் சுலோகமாக வெடுத்துக்கொண்டார் தனிச்லோக காரரான பெரியவாச்சான் பிள்ளை. இதற்கிட்டருளின அவதாரிகையில் "பெருமாளுடைய வைபவத்தையும் ப்ராக்ரமத்தையும் ஸஸாக்ஷிகமாக உபபாதிக்கிறான் விச்வாமித்ர மஹர்ஷி" என்றுள்ளது. இதற்குத் தர்ப்பணமே அநபேக்ஷிதம். தர்ப்பணம் தோன்றியிருக்கும் விதம் யாதெனில், "ராமனுடைய பெருமையையும் பராக்ரமத்தையும் ஸாக்ஷிகளையும் காட்டி விளக்குகிறார் விச்வாமித்ர மஹர்ஷி" என்றுள்ளது. வ்யுத்பத்தியுள்ளவர்கள் இப்படியெழுதுவர்களா? இங்கு வியாக்கியான ஸ்ரீஸூக்தி எப்படி யிருக்கிறது? அதற்கும் இந்த தர்ப்பணத்திற்கும் ஏதாவது பொருத்தமுண்டாவென்று பார்க்கவேணும். விச்வாமித்ரர் உபபாதிக்கும் விஷயம் இரண்டேயொழிய மூன்றல்ல. பெருமாளுடைய பெருமையும் பராக்ரமமுமாகிற இரண்டைத்தான் மஹர்ஷி உபபாதிக்கிறார். மூலத்தில் மஹாத்மாநம் என்றும் ஸத்யபராக்ரமம் என்றும் இவ்வளவே யிருப்பதற்குச் சேர உண்மையில் இரண்டுதான் உபபாதிக்கப்படுவது. தர்ப்பணம் சொல்லுவதோ மஹர்ஷி ராமனுடைய பெருமையையும் காட்டுகிறாராம், ராமனுடைய பராக்ரமத்தையும் காட்டுகிறாராம்; ராமனுடைய ஸாக்ஷிகளையும் காட்டுகிறாராம். அதற்கு மேல், காட்டி விளக்குகிறாராம். எதை விளக்குகிறாரென்று வினவினால் தன்னுடைய அறிவின்மையை விளக்குகிறார் என்று தான் சொல்லியாகவேண்டும். பெருமாளுடைய பெருமையையும் பராக்ரமத்தையும் ஸாக்ஷிகளையிட்டு நிரூபிக்கிறார் மஹர்ஷி என்று பெரியவாச்சான் பிள்ளை பாமரர்களுக்கும் ஸந்தேஹ முண்டாகாதபடி வெட்ட வெளிச்சமாக அருளிச் செய்திருக்க, அதற்கு எள்ளுந் தண்ணீரும் விட்டுத் தர்ப்பணம் செய்வது என்னே? இதற்கடுத்த சுலோகம் "ஊநஷோடசவர்ஷோமே" என்பது. இதன் அவதாரிகையில் "பெருமாளைப் போரவிட வேணுமென்று சக்ரவர்த்தியை யிரக்க'' என்பது பெரியவாச்சான் பிள்ளையருளிச்செயல். இங்கே தர்ப்பணம் "ஸ்ரீராமபிரானைத் தன்னுடன் போகவிட வேணுமென்று தசரதனை யாசிக்க'' என்றெழுதியுள்ளது. யாசிப்பவர் என்னுடன் வரவிட வேணுமென்று யாசிப்பரேயொழிய என்னுடன் போகவிடவேணுமென்று ஒருகாலும் யாசிக்கமாட்டார்; இது வார்த்தைப்பாடுமன்று. 'அவருடன் போகவிடு' என்று மத்யஸ்தரொருவர் சொல்லலாம். போரவிடவேணு மென்கிற மூலத்தின் பொருளுமன்றிது. போ என்னும் வினைப்பகுதியோடு (தா) தரு என்கிற துணைவினை சேர்ந்து போதரு என்றாகும். இதற்கு வருவதென்று பொருளேயல்லது போவதென்கிற பொருள் எங்குங் கிடையாது போதர என்பது போர என்று மருவிற்று. 'ஒட்டம் தரா' என்பது ஒட்டராவென்று மருவுவதுபோல. இந்த போர ப்ரயோகமும் போதர ப்ரயோகமும் தமிழ்நூற்களில் கொள்ளை கொள்ளையாகக்கிடைக்கும்."போதர்கண்டாயிங்கே போதர்

கண்டாய் போதரே னென்னாதே போதர்கண்டாய்'' என்று யசோதை கண்ணனை
யழைக்கிறாள். "வாடா, வாடா, வரமாட்டே னென்னாதே வாடா'' என்பதாக இதற்கு
அர்த்தமேயொழிய, போடா, போடா, போகமாட்டே னென்னாமல் போடா என்பதாக
அர்த்தமன்று. [எல்லாரும் போந்தாரோ போந்தார் போந்தெண்ணிக்கோள்] எல்லாரும் வந்
தார்களா? வந்தார்கள்; வந்து எண்ணிக்கொள் என்று அர்த்தமேயொழிய, எல்லாரும்
போனார்களா? போனார்கள்; போய் எண்ணிக்கொள் என்றர்த்தமன்று. "கோழியழைப்
பதன் முன்னம் குடைந்து நீராடுவான் போந்தோம்'' என்பதற்கு நீராட வந்தோமென்று
பொருளேயல்லது நீராடப்போனோமென்று பொருளன்று. முமுக்ஷுவாயிருந்தவன்
முக்தனாகிப் பரவாஸுதேவனை யணுகி "போந்தேன் புண்ணியனே உன்னையெய்தி
என் தீவினைகள் தீர்ந்தேன்'' என்றால் வந்தேன், வந்து சேர்ந்தேனென்பதேயொழிய,
போனேன், போய் நரகத்தில் விழுந்தேன் என்கிறதன்று. இப்படி எத்தனை காட்ட
வேணும், ஆயிரம் வேணுமா? பதினாயிரம் வேணுமா?

இது கிடக்கட்டும்; இராமனைத் தன்னுடன் போகவிட வேணுமென்று முனி
வன் யாசிப்பதாக எழுதுவது அஸங்கதமென்று தோன்றவில்லையே. "ராமா! நீ
முனிவருடன் போ'' என்று தந்தை சொல்லலாம். அழைக்கிறவன் என்னோடு வா
என்று அழைப்பானா? என்னோடு போ என்று அழைப்பானா? என்று இவ்வளவுகூட
ஆலோசிக்கமாட்டாமைக்கு எத்தனைகாலம் புலம்புவது?

இதற்கு அடுத்த சுலோகம் "த்ரஷ்டும் சக்யமயோத்யாயாம் நாவித்வாந் நச நாஸ்
திகஃ'' என்பது. இதற்குப் பதவுரை ஸாதிக்கிறார்—"அயோத்தியில் பண்டிதனல்லா
தவன் காணத்தக்கவனல்லன், நாஸ்திகனும் காணத்தக்கவனல்லன்'' என்று.
தக்கவன் என்று யாரைச் சொல்லுவது? தக்கவனல்லன் என்று யாரைச் சொல்லு
வது? என்று விமர்சிக்க வகையில்லையே. சக்யம் என்றும் யோக்யம் என்றும்
இரண்டு சொற்கள். இரண்டுக்கும் பொருள்வாசியுண்டு; வாசியென்றால் ஸாமான்ய
மான வாசியன்று, நெடுவாசியுண்டு. "ஸத் புருஷன் காணக்கிடைக்காதவன்''
என்ன வேண்டுமிடத்து 'ஸத்புருஷன் காணத்தக்கவனல்லன்' என்பது கல்லாதவன்
பேச்சு. (அல்லது கற்றவன் பேச்சல்ல.) காணத்தக்கது, கேட்கத் தகாதது; கேட்கத்
தக்கது, காணத் தகாதது; காணவும் தக்கது; கேட்கவும் தக்கது; காணவும் தகாதது
கேட்கவும் தகாதது என்பர் பெரியோர். [காணத் தக்கது, கேட்கத் தகாதது]
குள்ளநரி காணத்தக்கது; அதன் ஊளையிடுமொலி கேட்கத் தகாதது. [கேட்கத்
தக்கது, காணத் தகாதது] கழுதையின் கனைப்பு கேட்கத் தக்கது. அது
காணத்தகாதது. [காணவும் தக்கது கேட்கவும் தக்கது.] கருடனைக் காண்பதும்
நன்று; கருடத்வனியைக் கேட்பதும் நன்று. [காணவும் தகாது, கேட்கவும்
தகாது.] ஆந்தை கோட்டான். அயோத்தியிலுள்ள அவித்வான்களும் நாஸ்திகர்
களும் காணத்தகாதவர்களென்பவருடைய கருத்து மற்றவூர்களிலுள்ள அவித்
வான்களையும் நாஸ்திகர்களையும் கூசாமல் காணலாமென்பதே யாகவேணும்.
அயோத்தியிலுள்ள அவர்கள் என்ன பாவம் பண்ணினார்களோ? அயோத்தியில்
அறிவிலிகளும் நாஸ்திகர்களும் தேடினாலும் கிடையார்களென்கிறார் வான்மீகி; கிடை
யாமலென்ன? இருக்கிறார்கள்; ஆனால் அவர்களைக் காண்பது தகாது—ஸ்வரூப
விருத்தம் என்கிறாரிவர். 'யாகம் செய்வது எனக்கு ஸாத்யமன்று' என்கிறாரொருவர்.
'அது எனக்குத் தகாது' என்கிறார் மற்றொருவர். இப் பேச்சுக்களின் வாசியறிய
அதிகம் படிக்கவேணுமோ? "பூவும் பூசனையும் தகுமே'' என்கிற நம்மாழ்வார்
தேவதாந்தரங்களுக்குப் பூவும் பூசனையும் இட ஸாத்யமன்று என்றா திருவுள்ளம்
பற்றுகிறார். அந்தோ! என்ன ஞானம்! என்னலேகன ஸாமர்த்தியம்! இப்படிப்
பட்டவர்கள் ஆயிரக் கணக்கான பக்கங்கள் எழுதியிருப்பதாகவும், அவற்றைப்
பதினாயிரக் கணக்கான பேர்கள் மெச்சி யிருப்பதாகவும் எழுதிக் கொண்டிருக்
கட்டுமே. இவர்களுடைய கந்தைகள் காணவும் தகாதவை, கேட்கவும் தகாதவை
யென்று ஒரே வார்த்தையில் முடிப்பதன்றோ முழுதுணர் நீர்மையினார் பணி.

தாஸன். திருநகரி. எம்பார் வட்டமணி ஸ்ரீநிவாஸாசாரியன், 23—11—63.

# ஹாஸ்யக் கதைகளும் பக்திக் கதைகளும்

## 30 "தினமிரண்டு, வாரமிரண்டு பக்ஷமிரண்டு"

ஒருவர் டாக்டர் படிப்பு படித்து உயர்பதவியில் தேறினர். L.M.P., M.B.B.S' முதலான பட்டங்களெல்லாவற்றுக்கும் மேலான பட்டம் பெற்ருர். பிறகு செய்ய வேண்டியதென்ன? ப்ராக்டிஸ்செய்து பொருளீட்ட வேண்டியதுதானே. அதற்கு வழிதேடினர். ஸமீபத்தில் தனிகர்கள் வாழும்படியான ஒரு பெரிய அக்ரஹாரம் சென்று அங்கு ஒரு வீட்டில் தங்கி, தம்முடைய சிகித்ஸைத் திறமையை விளம்பரப் படுத்தினர். வீட்டு வாசலில் பெரிய போர்டு பலகைகள் மாட்டிவைத்தார். "இவ்வூரில் பெரிய டாக்டர் இன்னர் வந்திருக்கிருர்; இன்ன தெருவில் இன்ன கதவிலக்கமுள்ள வீட்டில் தங்கியிருக்கிருர்" என்று வீதிதோறும் பறைசாற்றச் செய்தார். ஏழைகளுக்கு இலவசமாக சிகித்ஸை செய்வதாகவும் விளம்பரப்படுத்தினர். மாதம் இரண்டாயிற்று. ஒரு சிறு பையன்கூட சிகித்ஸைக்கென்று வரவில்லே. அதனல் இவ்வூரில் வேறு டாக்டர்கள் இருக்கிருர்களோவென்று அவர்க்கு ஐயமுண்டாயிற்று. ஆங்காங்கு மூலே முடுக்குகளிற் சென்று விசாரிக்கச் செய்தார். வைத்தியரொருவரும் கிடையாதென்று திண்ணமாகத் தெரிந்துகொண்டார். இவர்க்கோ மிக வியப்பு உண்டாயிற்று. இவ்வளவு பெரிய ஊரில் ஒருவர்க்காவது வயிற்றுவலி தலேவலி கூடவா வராமலிருக்கும்; டாக்டரை நாடாமலிருப்பது எப்படி ஸம்பாவிதமாகும்? என்று ஆச்சரியப்பட்டார். அக்கம்பக்கத்தில் சில வைத்தியர்கள் இருக்கக்கூடுமென்றும், அவர்களிடம் சென்று சிகித்ஸைபெற்று வரக்கூடுமென்றும் எண்ணிப் பார்த்தார். அதைப்பற்றியும் விசாரணேசெய்து பார்த்ததில் 'இவ்வூருக்கு யோஜனே தூரத்தளவும் ஒரு வைத்யரும் கிடையாது' என்று தெரியவந்தது.

பிறகு இதன் மருமத்தைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்று ருசி பிறந்து, தானே அவரவர்களின் வீடுகளிற் சென்று நான் ஒரு பெரிய டாக்டர்; இவ்வூரில் ப்ராக்டிஸ் பண்ணவந்து இரண்டு மாதங்களுக்கு மேலாயிற்று; இதுவரை ஒருவர்கூட என்னிடம் ஒரு சிறிய சிகித்ஸைக்கும் வரவில்லேயே, என்ன காரணம்? இவ்வளவு பெரியவூரில் ஒருவர்க்குமேயா நோய்நொடி வராமலிருக்கும்? என்ன விஷயம்?' என்று கேட்டார். அதற்கு எல்லாரும் ஏககண்டமாக ஒரேவிதமான பதில் சொன்னுர்கள். (அதாவது) "டாக்டரே! இவ்வூரில் எங்களுக்கெல்லாம் ஒரு பெரிய குரு இருக்கிருர்; அவரிடத்தில் நாங்கள் உபதேசம் பெறுகிறவர்கள்; அந்தவுபதேசத்தின் படியே நடந்துகொண்டும் வருகிறோம்; அதனல் எங்களுக்கு ஒரு நோயும் வருவது கிடையாது. ஆகவே எங்களுக்கு சிகித்ஸாபேக்ஷையே நேருவதில்லே" என்ருர்கள். இங்ஙனம் சொல்லக்கேட்ட டாக்டர் "அது எவ்விதமான உபதேசம்? நான் அதைத் தெரிந்துகொள்ளலாமோ?" என்ன; ஆகா, நன்ருகத் தெரிந்துகொள்ளலாமென்று கூறி அதைத் தெரிவித்தார்கள்; "தினமிரண்டு; வாரமிரண்டு; பக்ஷமிரண்டு; மாஸமிரண்டு; ருது இரண்டு; அயனமிரண்டு; வருஷமிரண்டு—இதுதான் உபதேசம்" என்ருர்கள். டாக்டருக்கு இது சிறிதும் விளங்கவில்லே. பிறகு 'இந்த ஸூத்ரங்களே நீங்களே விவரிக்கவேணும்' என்று அவர்களே வேண்டிக்கொள்ள அவர்களே விவரித்தார்கள். (அது மேலே வருமாறு—)

தினமிரண்டு = போஜனமென்பது தோன்றின போதெல்லாம் செய்யலாகாது. "ருதம் த்வா ஸத்யேந பரிஷிஞ்சாமீதி ஸாயம் பரிஷிஞ்சதி, ஸத்யம் த்வர்த்தேந பரிஷிஞ்சாமீதி ப்ராத:" என்று மந்த்ரமோதின இரண்டுவேளே மட்டுமே போஜனம் செய்யவேண்டும்; இடைப்பலஹாரம், கடைப்பலஹாரம் என்பது எதுவும் கூடாது. இதுதான் தினமிரண்டு என்றதன் கருத்து. போஜனமும் நித்திரையுமாகிற விரண்டும் வ்யவஸ்திதமாயிருக்கவேணு மென்பதையும் இதற்குக் கருத்தாகக் கொள்ளலாம்,

வாரமிரண்டு=வாரத்தில் இரண்டு நாளாவது ஆலயஞ்சென்று தொழுது வரவேண்டும்; இதனல் தினப்படி சென்று தொழக்கூடா தென்பதில்லை. இரண்டுநாள் தவறவே கூடாதென்றபடி. பக்ஷமிரண்டு=இரண்டுவாரங் கூடினல் ஒரு பக்ஷமாகிறது. வாரந் தோறும் ஒரு அப்யஞ்ஜநம் [எண்ணெய் தேய்த்துக் கொள்வது] தவறலாகாதென்ற படி. மாஸமிரண்டு=இரண்டு பக்ஷங்கள் கூடினல் ஒரு மாஸமாகிறது; ஏகாதசி தோறும் உபவாஸம் தவறலாகாதென்றபடி. ருது இரண்டு=இரண்டு மாதங்கள் கூடினல் ஒரு ருதுவாகிறது. "மாஸி மாஸி க்ருஹஸ்தாநாம்" என்றபடி மாதத் திற்கொருமுறை வபனம் செய்வித்துக்கொள்ள வேண்டு மென்றவாறு. இதுவும் தேஹாரோக்யத்தில் சேர்ந்த காரியமேயன்றே. அயனமிரண்டு=ஆறுமாதங்கள் சேர்ந்தால் ஓர் அயனமாகிறது. மூன்று மாதங்களுக்கொருமுறை விரேசனங் கொள்ளவேணு மென்றபடி. ஸம்வத்ஸரமிரண்டு=சிலர் நித்யம் தேசாடனமே செய்துகொண்டிருப்பர்: சிலர் ஒருநாளும் ஊரைவிட்டுக் கிளம்பாமலே யிருப்பர். இரண்டும் பிசகு. ஆறுமாதத்திற் கொருமுறை திவ்யதேச சேவையையோ சிஷ்யாநுக்ரஹத்தையோ வியாஜமாகக் கொண்டு சிலநாள் வெளி ஸஞ்சாரமும் செய்து வர வேண்டுமென்றபடி. ஆக இந்த நியமங்களை விரதமாகக் கொண்டிருப்பவர்களுக்கு நோய்நொடி வாராது; வைத்யாபேக்ஷையிராது என்றதாயிற்று. இந்த ஸதுபதேசம் அவ்வூரில் ஸபலமாயிருப்பதுகண்டு இங்கு நம்மால் ஜீவிக்க இயலாதென்று வெளியேறிவிட்டார் டாக்டர். .... .... .... *

## 31. ஸ்ரீ வசனபூஷண காலக்ஷேப பரர்களின் கதை

ஓர் அக்ரஹாரத்தில் ஓர் பரமைகாந்தி. அவர் பெரிய குடும்பி. அவ்வூரில் வேறு யாரும் ஸ்ரீ வைஷ்ணவர்கள் கிடையாது. உபநயனம் கலியாணம் முதலானவை செய்ய வேண்டியிருந்தால் அப்படிப்பட்ட ஸந்தர்ப்பங்களில் தம்முடைய பந்துக்கள் விசேஷமாக வாழ்கிற வேறொரு நகரத்தில் சென்று நடத்திவிட்டு ஊர்வந்து சேருவர். இப்படியிருக்கையில் ஒரு ஜீயர்ஸ்வாமி சிஷ்யர்கள் நால்வருடன் அந்த அக்ரஹாரத்தில் வாஸத்தை விரும்பி வந்து சேர்ந்தார். நீர்வளம் நிலவளம் நிரம்பியது அவ்வூர்; அதனல் அங்கு வந்து சேர்ந்தார். அங்கு ஸ்ரீ வசனபூஷண ப்ரவசனம் ஆரம்பித்தருளினர். கூடவந்த நால்வரும் காலக்ஷேபம் செய்து வருகிறார்கள். இந்நால்வரில் ஒருவர் வயதில் மூத்தவர். மற்றொருவர் கல்விகளில் தேர்ச்சி பெற்ற வித்வான். இன்னொருவர் சிறந்த தனிகர். வேறொருவர் ஸத்குல ப்ரஸூதரான ஆசார்ய புருஷர். ஆக இந்நால்வரும் ஜீயர் ஸ்வாமி பக்கலில் சிஷ்யர்களாயிருந்து கொண்டு ஸ்ரீ வசனபூஷண காலக்ஷேப பரர்களாயிருந்து வருகிறார்கள். இப்படியிருக்கையில், அவ்வூர் ஸ்திரவாஸியாகச் சொல்லப்பட்ட பரமைகாந்திஸ்வாமி தம்முடைய ஒரு மகனுக்கு உபநயன முஹூர்த்தம் நடத்த நிச்சயித்தார். இதுகாறும் இவர் சுப காரியங்களை வெளியூர்சென்று நடத்திவருவது வழக்கமென்று சொல்லியிருக்கிறோம்.

இப்போது ஜீயர் ஸ்வாமியுடன் நான்கு பெரியார்கள் வந்திருப்பதால் வைதிக கோஷ்டியை அலங்கரிக்க இவர்களிருக்கிறார்களேயென்று ஸ்வக்ருஹத்திலேயே உபநயனத்தை நடத்தி விடலாமென்று நிச்சயித்து, ஜீயர் ஸ்வாமியிடம் சென்று இந்த உத்தேசத்தை விஜ்ஞாபித்து "ஸ்வாமி இந்நால்வரையும் வைதிக கோஷ்டிக்கு அனுப்பியருள்வதாக வாக்களித்தால் சிரஞ்ஜீவியின் உபநயனத்தை இவ்விடமே நடத்திவிடுகிறேன்" என்றார். அதற்கு ஜீயர் ஸ்வாமி "இதுவொரு பெரிய காரியமா? இதற்கு முன்னடியாக என் அபிப்பிராயம் கேட்க வேணுமா? எப்போது அழைத்தாலும் அவர்களையனுப்பி கோஷ்டியைச் சிறப்பாக நடப்பிக்கத் தடையில்லை" என்று பேரன்பு காட்டி ஸாதித்தருளினர். இவர் பரம ஸந்தோஷத்தோடு அங்கேயே உபநயன ஸம்விதானங்கள் செய்து, உபநயனத்திற்கு முதல் நாள் ஒரு கோஷ்டி க்ரமம் உண்டே; அதற்கு அந்த நால்வரையும் அழைத்தார். நால்வரும் உடனே புறப்பட்டு வந்துவிட்டார்கள். சந்தன மெடுக்க வேண்டிய ஸமயம் வந்தது நால்வரில் ஒருவர் வயதில் மூத்தவரென்று சொல்லியிருக்கிறோமே; அவரிடம் அக்.

பூஜையாகச் சந்தனம் கொடுக்கப்போனார். வித்வானாயிருந்த வொருவர் 'ஓய்! உமக்கு மூளையில்லையா? குட்டிச் சுவர்போல வயது ஏறிவிட்டதனால் என்ன பிரயோஜனம்; ராம சப்தங்கூட தெரியாத அவனுக்கா முதல் பூஜை பண்ணுகிறீர்? நான் பெரிய வித்வானென்பது உமக்குத் தெரியாதா?' என்று அதட்டினார். ஸரிதானென்று அவரிடம் கொடுக்கச் சென்றார்; நால்வரில் ஒருவர் நல்ல தனிகரென்று சொல்லி யிருக்கிறோமே. அவர் 'ஓய்! படித்துவிட்டதனால் பெருமை வந்துவிடுமோ? ஜன்ம தரித்ரனைத் துப்புவாருண்டோ? படித்தவனாயிருந்தாலும் பணக்காரனிடம் வந்து தானே பல்லைக் காட்டவேணும். நான் பூலோக குபேரனென்பதை நீர் கேள்விப் பட்டதே கிடையாதா? இப்படி வாரும்' என்றார். இனி நாலாமவர் ஸத்குல ப்ரஸூத ரான ஆசார்ய புருஷர். அவர் எழுந்து 'ஓய்! தலை நரைத்ததனாலும் பெருமை யில்லை; கல்விகற்றதனாலும் சிறப்பில்லை; தனிகனாய் இருப்பதனாலும் உயர்த்தி இல்லை; இந்த மண்டுக்களை யெல்லாம் உடையவர் ஸிம்ஹாஸனாதிபதிகளில் சேர்த்திருக் கிறாரா? நான் சிஷ்ய ஸம்பத்துடைய பெரிய ஆசார்ய பீடஸ்தனென்பது உமக்குத் தெரியாதா? இப்படி வாரும்' என்றார். நால்வரும் தங்கள் தங்கள் பெருமைகளைச் சொல்லிக்கொண்டு 'ஓய்! ஜாக்கிரதை! சந்தனக்கிண்ணி எகிறிவிடும்' என்கிறார்கள். இந்நால்வரும் ஸ்ரீ வசனபூஷண காலக்ஷேப பரர்களென்பதை மறக்க வேண்டாம்.

மேன் மேலும் விவாதம் வளர்ந்ததே யொழிய ஸாமரஸ்யம் ஏற்படவேயில்லை. கோஷ்டி நடைபெறாமலே ஆலத்தி வழித்து முடித்துவிட்டார்கள். பிறகு பரமை காந்தி வெகு வருத்தத்துடன் ஜீயர் ஸ்வாமியிடம் சென்று நடந்த செய்திகளை விரி வாக வுரைத்து அழுது நின்றார். ஜீயரும் வருத்தப்பட்டு 'ஸ்வாமீ! அழவேண்டாம்; நாளைக்கு ஸரியாக கோஷ்டி நடக்கும்படி செய்விக்கிறேன், போம்' என்று சொல்லி யனுப்பிவிட்டார். பிறகு நால்வரும் வந்து சேர்ந்தவாறே அவர்களை யழைத்து "அஹங்காரம் அக்நிஸ்பர்சம் போலேயென்று சொல்லியிருக்கிறது; நைச்யம் பாவிக்க வேணும்; இன்று போயிருந்து கோஷ்டியை ஒழுங்காக நடப்பித்து வாருங் கள்" என்று சொல்லி யனுப்பினார் ஜீயர். நால்வரும் உபநயன கோஷ்டிக்கு வந்து சேர்ந்தார்கள். சாத்துப்படி யெடுக்கும் ஸமயத்தில் ஒவ்வொருவரும் நைச்யம் பாவித் துக் கைகூப்பி யிருந்துவிட்டார்கள். ஒருவரும் வாங்கிக்கொள்ளவில்லை. அவரிடத்தி லாகட்டும், அவரிடத்திலாகட்டும் என்று சொல்லியே ஒவ்வொருவரும் கைகூப்பிவிட் டார்கள்....இன்றைக்கும் கோஷ்டி நடைபெறாமலே ஆலத்தி வழித்து முடித்தாயிற்று.

## 32. "ஆம் ஆம் அதுதான், அதுதான்"

ஒரு மாப்பிள்ளை மாமியாரகத்திற்குச் சென்றார். அப்போது தன் மனைவியைத் தன்னில்லத்திலேயே விட்டுவைத்துத் தான்மட்டும் சென்றிருந்தார். அங்கே மாமியார் ஒருநாள் குழக்கட்டை சமைத்துச் சாதித்தாள் மாப்பிள்ளைக்கு. அது வரையில் அவர் ஒரு நாளும் குழக்கட்டை சாப்பிட்டதேயில்லை; இப்படியொரு தின்பண்ட முள்ளதென்றுகூட அறிந்தவரல்லர். வாய்க்கு வெகுருசியாயிருந்தது. 'மாமியாரே! இது என்ன பக்ஷணம்? அபூர்வமாயிருக்கிறதே; பரம போக்யமாயிருக்கிறதே; இதன் பெயர் என்ன?' என்றார் மாப்பிள்ளை. அதற்கு மாமியார் 'இதற்குக் குழக்கட்டையென்று பெயர்' என்றாள். 'உம்முடைய பெண்ணுக்கு இது சமைக்கத் தெரியாதோ? இதுவரை ஒரு நாளும் அவள் இதைச் சமைக்கவில்லையே' என்றார். தெரியாமலென்ன? என்னைவிட நன்றாக இது சமைக்கத் தெரியுமவளுக்கு; நீர் 'சொன்னால் சமைத்து சாதிப்பள், இதற்கென்ன பிரமாதம்?' என்றாள் மாமி. ஊருக் குப் போய் இதை நித்தியமும் சமைக்கச் செய்து சாப்பிடவேணும் என்று ஆசை கொண்டார் மாப்பிள்ளை. இரண்டு நாள் பொறுத்து ஊர் போய்ச் சேர்ந்தார். குழக்கட்டை யென்கிற பெயரை மறந்துவிட்டார். எவ்வளவு சிரமப்பட்டும் அப்பெயர் நினைவுக்கு வரவேயில்லை யிவர்க்கு. 'உன்தாயார் ஒரு அற்புதமான பக்ஷணம் சமைத்துச் சாதித்தாள்; அது வெகு ருசியாயிருந்தது; அதை நீயும் சமைத்துத் தா' என்றார் தேவியாரை நோக்கி. 'அதைச் சமை என்றால் நான் எதைச் சமைக்கிறது?

அதன் பெயர் சொன்னால் சமைப்பேன் ; அது இன்னதென்றே எனக்குத் தெரிய
வில்லையே ; தெரியாமல் நானெப்படி சமைப்பது ?' என்றாளவள். அதற்கு இவன்
சொன்னான் 'நீ தினந்தோறும் ஒவ்வொரு அபூர்வமான தின்பண்டம் சமைத்துச்
சாதித்துவா ; ஒரு நாளில் அதுவும் தைவாதீனமாக வந்துவிடும் ; அப்போது நான்
சொல்லுகிறேன்' என்று. இதை மனைவி கேட்டு அப்படியே யென்று ஒப்புக்கொண்டு
நித்தியம் ஒவ்வொரு பணியாரம் சமைத்துச் சாதித்து வந்தாள். அவளுக்குக் குழக்
கட்டை பணியாரம் தெரிந்திருந்தும் அது நினைவுக்கு வாராமையினால் அதைச்
சமைத்து இடவேயில்லை. புருஷனுக்குப் பிரபலமான கோபம் உண்டாய்விட்டது ;
'நான் சொன்னதைச் சமைக்காமல் எதையோ சமைக்கிறாய் ; உனக்கு அது சமைக்க
நன்றாகத் தெரியுமென்று உன் தாய் கூடச்சொன்னாள். வேணுமென்றே பிடிவாதங்
கொண்டு அதை நீ சமைக்கவில்லை ; உன்னை யென்ன பண்ணுகிறேன் பார் !' என்று
சொல்லித் தாடையிலும் முதுகிலும் கையாலடித்தது போதாமல் ரூல்கட்டையாலும்
புடைத்தான் ; அவள் அடி தாங்கமாட்டாமல் வாசலில் ஓடிச்சென்று 'இப்படிகூட
ஒரு அநியாயமுண்டா ? அதைச் சமை, அதைச் சமை என்றால் நான் எதைச் சமைக்
கிறது ; ஏதோ எனக்குத் தெரிந்ததைச் சமைத்தேன் ; இப்படி புடைக்கிறாரே
கேட்பாரில்லையா ?' என்று தெருவிலே நின்று அலறியழுதாள். ஊரெல்லாம்
ஒன்று கூடிவிட்டது. மிகவும் பரிதாபகரமான அடி. ஒவ்வொருவரும் அவனிடம்
வந்து 'அடா ! இப்படி கூடவாடா சாதுவான பெண்ணை யடிப்பது ? உடம்பெல்லாம்
குழகட்டை குழகட்டையாக எழும்பிவிட்டதே என்றார்கள். "ஆம் ஆம், அதுதான்
அதுதான் ; அதுதான் நான் சமைக்கச் சொன்னது" என்று கத்துகிறான் புருஷன்.
எல்லாரும் சிரிக்கிறார்கள் ; அடிபட்ட பெண்ணுக்கும் சிரிப்பு வந்துவிட்டது. குழ
கட்டை குழகட்டையாக எழும்பும்படி யடிக்கவே தானே குழக்கட்டை பணியாரம்
வெளிப்பட்டதென்கிறான் புருஷன். .... .... .... *

## 33. "அடடா! வேறு தலையையன்றோ கொண்டுவைத்துவிட்டான்"

மஹா நிபுணனானவொரு நாபிதன் வெங்கடகிரி சமஸ்தான ராஜாவிடம்
இருந்துவந்தான். அவனுடைய நைபுண்யம் எப்படிப்பட்டதென்றால் பிரபு அயர்ந்து
உறங்கும்போது அவனுக்குத் தெரியாதபடியே வபனம் செய்து விடுவன். காலை
யெழுந்து கண்ணாடியில் பார்த்துக்கொள்ளும் போதுதான் வபனமாய் விட்டதாக
அறிந்துகொள்வன்; அதனால் அவனுக்குப் பரமஸந்தோஷம். அந்த ஸந்தோஷத்தி
னால் அந்த நாபிதனை வெகு ஆதரித்து வைத்துக்கொண் டிருந்தானரசன். இப்படி
யிருக்கையில் அவன் காலமாய்விட்டான். வேறு எந்த நாபிதனும் அவன்போல்
செய்யத் திறமையுள்ளவனாகக் கிடைக்கவில்லை. பிரபு வெகு சிரமப்பட்டார். ஒரு
விளம்பரம் அச்சடித்துத் தேசமெங்கும் பரவச்செய்தார்; (அதாவது) "நான் உறங்கிக்
கொண்டே யிருக்கும்போது எனக்குத் தெரியாமலே வபனம் செய்யத் திறமைபெற்ற
நாபிதனுக்கு மாதம் 200, 300 ரூ. சம்பளமளிக்கிறே"னென்று. அதையறிந்த
நாபிதர்களெல்லாரும் அந்த ஸன்மானம் பெறுவதற்கு ஆசைப்பட்டு அவ்விதமான
பழக்கம் செய்ய ஆரம்பித்துவிட்டார்கள். திருவாலங்காட்டில் ஒரு நாபிதன் இதில்
தேர்ச்சிபெற்று ராஜாவிடம் சென்று பரீக்ஷைகொடுக்கப் புறப்பட்டுக் கால்நடை
யாகவே நடந்து செல்லலுற்றான். வழியிடையில் ரேணிகுண்டா ஸமீபத்தில் 'வடமால
பேடா' என்பது ஓர் ஊர். அங்கே பெரிய குளம். குளத்தின் கரையிலே ஒருவர்
திருவேங்கடமுடையானுக்கு முடிகொடுப்பதற்காக ஐந்தாறு வருஷமாய் தீக்ஷை
வளர்த்துப் பெரிய மீசை தாடியோடு மூட்டையைத் தலையணையாக வைத்துக்கொண்டு
அயர்ந்து தூங்குகிறார். அங்கே வந்துசேர்ந்த திருவாலங்காட்டு நாபிதன் இந்த
தீக்ஷிதரிடத்திலே தன்னுடைய நைபுண்யத்தை டெஸ்ட்பார்க்க நிச்சயித்துவிட்
டான். உடனே செய்தும் முடித்துவிட்டான். தாடியுட்பட கேசங்களையெல்லாம்
சுருட்டியெடுத்துப் பையிலடைத்துக்கொண்டு புறப்பட்டுவிட்டான். தீக்ஷிதர் சில
மணிநேரம் கழித்துத் தானாக விழித்தெழுந்தார். தாடிக்காரார்கள் எழுந்திருக்கும்

போது தாடியை யுருவிக்கொண்டே யெழுந்திருப்பது வழக்கமாதலால் அவ்வழக்கத்தின்படி தாடியை யுருவிப்பார்த்தார். தாடி ஏது? உடனே மூட்டையை யவிழ்த்துக் கண்ணாடியை யெடுத்துக் காண்கிறார். கழுத்துவரையில் ஓரிடத்திலும் ஒருகேசமும் கிடையாது. அப்பய தீக்ஷிதர் சித்ரமீமாம்ஸையில் "ஸத்யோமுண்டித மத்தஹூண சுபுக ப்ரஸ்பர்த்தி நாரங்ககம்" என்றொரு சுலோகம் உதாஹரிக்கிறார். அப்போதுதான் வபனம் பண்ணப்பெற்ற ஹூணனுடைய மோவாய்க்கட்டை போலுள்ளது கிச்சிலிக்காய்—என்பது இதன்பொருள். இவ்விதமாகவே கண்ணாடிப்புறத்தில் முகத்தைக் கண்டார் திருவேங்கடமுடையானுக்கு முடிகொடுக்கச் செல்லுமந்த தீக்ஷிதர்.

மிகமிக ஆலோசிக்கிறார்; நம்முகம் இங்ஙனமாக எப்படியாய் விட்டதென்று எண்ணாதனபலவு மெண்ணுகிறார். தனக்குத் தெரியாமல் வபனம் பண்ணியிருக்க முடியவே முடியாதென்றும், கூலிபெறாமல் எவனும் வபனம் செய்யமாட்டானே யென்றும் எண்ணுகிறார். கடைசியாக என்ன முடிவு செய்தாரென்றால், 'நம்முடைய தலையைத் துருவியெடுத்துக்கொண்டுபோய் வேறொரு தலையைக் கொணர்ந்து ஒட்டவைத்துப் போய்விட்டான் எவனோபாவி' என்று முடிவுசெய்தார். வபனம் பண்ணியிருக்க ஸம்பாவிதமில்லையென்றும், இதுதான் ஸம்பாவிதமென்றும் நினைக்கும் மேதாவி யிவர்.

நம்மாழ்வார் திருவாய்மொழியில் "மருவித் தொழும் மனமே தந்தாய்" என்றருளிச் செய்தார்; முன்னிருந்த மனமன்று இப்போதுள்ள மனம்; எம்பெருமான் அதைக் கவர்ந்துசென்று வேறொரு மனத்தைக் கொணர்ந்து வைத்திட்டான் என்றாராயிற்று. இப்படியன்றோ ஆசாரியர்கள் வியாக்கியானம் செய்தருளியிருப்பது. திருமலைக்கு முடிகொடுக்கப் போகுமிந்த தீக்ஷிதர் பகவத் விஷயாதிகாரிபோலும். அப்படியே இவரும் நினைத்திட்டார். ... ... ... *

## 34. சிற்றின்பமும் பேரின்பமும் (ஓர் ஏழையின் கதை)

சாஸ்த்ரங்களில் திடநம்பிக்கையுள்ள ஆஸ்திகர்கள் இஹலோக ஸுகங்களைச் சிற்றின்பமென்று இகழ்ந்தும், பரலோக ஸுகத்தை—அதாவது நலமந்தமில்லதோர் நாட்டில் எய்தும் ஆனந்தத்தைப் பேரின்பமென்று புகழ்ந்தும் போருகிறார்கள். புண்ய பாபங்களென்பது கிடையாதென்றும் நரக ஸ்வர்க்க மோக்ஷாதிகள் கிடையாதென்றும் வாதிக்கின்ற நாஸ்திகர்கள் வேதாந்திகளால் சிற்றின்பமென்று இகழப்படுன்ற மண்ணுலக போகங்களையே பேரின்பமாகப் பேசுகின்றார்கள். இக்காலத்தில் ஆஸ்திகர்களின் குடும்பங்களில் ஜனிக்கின்றபிள்ளைகளுக்கும் நாஸ்திக்யருசியே மிகுந்துவரக் காண்கிறது. ஆனால் இது அவர்களுடைய குற்றமன்று. தாய் தந்தையர் இளமை தொடங்கியே பிள்ளைகளை ஒழுங்கான வழியில் விடாமல் தீய பழக்கமுள்ளவர்களோடு பயில விடுவதனால் அன்னவர்களுடைய பழக்கமே இப்பிள்ளைகளுக்கும் பழக்கமாய் விடுகிறது. "ஸம்ஸர்கஜா தோஷ குணா பவந்தி" என்றன்றோ பெரியோர்கள் சொல்லுவது. "சேரிடமறிந்து சேர்" என்று ஔவையாரும் கூறிவைத்தார். ஆகவே ஸஹவாஸதோஷமே நமது குடும்பப்பிள்ளைகளுக்கு அனர்த்தமாய்த் தலைக்கட்டுகிறது.

ஸஹவாஸங்கள் எப்படியிருந்தாலும் ஆங்காங்கு காலக்ஷேபங்களென்றும் உபந்யாஸங்களென்றும் நடைபெறுகின்ற விடங்களுக்காவது நமது பிள்ளைகள் சென்று கொண்டிருந்தால் நல்ல சப்தங்கள் காதில் விழவிழ, நன்மைகள் விளைந்துவர ஹேதுவாகும். நமது பத்ரிகைகளையாவது இவர்கள் படித்துவர வேண்டும். படிப்பதனால் இவர்களுக்கு நாளடைவில் க்ஷேமமுண்டாகு மென்பதும் எமது நம்பிக்கை.

மதுராபுரியில் ஓர் ஏழை யிருந்தான். அவன் எப்போதும் பிணிகளால் பீடிக்கப்பட்டு எவ்விதமான வேலையும் செய்ய வல்லமையின்றிப் பிழைக்க வழியற்று வருந்திக் கிடக்கையில் அவ்வூரிலுள்ள வொரு தருமநிதி (Charity Fund) யிலிருந்து மாதந்தோறும் அவனுக்குப் பத்துரூபாய் உதவிப்பணமாகக் கிடைக்குமாறு சில பெரியோர் செய்துவைத்தனர், அதைக்கொண்டு அவன் ஒருவாறு ஜீவித்துவந்தான்,

ஒருநாள் பின்னிரவில் அவன் ஓர் கனுக்கண்டான்—ஒரு லக்ஷம் ரூபாய் தனக்குக் கிடைத்ததாக. உடனே அக் கனவிலேயே அவன் தனது நிலைமை மாறிவிட்டதாக [ஏழைமை நீங்கிச் செல்வம் விஞ்சியவனுக] நினைத்துக்கொண்டான். இனி நாம் தருமநிதியிலிருந்து உதவிப்பணம் பெறுவது தகுதியல்லவென்றும் நிச்சயித்தான். இந்த லக்ஷம் ரூபாய்களைக்கொண்டு எவ்வளவோ பெருமையாக வாழலாமென்று பாரித்தான். அதன்பின் பங்களா எங்கே அமைத்துக் கொள்ளலாமென்றும் வேலைக்காரர்கள் எத்தனைபேர் வைத்துக்கொள்ள வேணுமென்றும் மற்றுமிவ்வாருகவே வண்டிகள் குதிரைகள் மோட்டார்கள் முதலானவை வாங்கும் விஷயமாகவும் இன்னும் பலபல விஷயமாகவும் பாரிக்கலானுன். இதுவெல்லாம் ஒரு பக்கமிருக்க கிடைத்த ஒரு லக்ஷம் ரூபாய்களைச் சேமித்து வைக்க ஆரம்பித்து, நோட்டுகளை எண்ணிக் கட்டுக் கட்டாக ஒருபக்கம் வைத்தான். ஸவரங்களின் பைகளைக் கொட்டி எண்ணத் தொடங்கினுன். இப்படி இவன் கனுக்கண்டு களித்திருக்கும்பொழுது இவனது வீட்டின் கதவு திறக்கப்பட்டது. இவனுக்கு மாதந்தோறும் உதவிப்பணம் கொணர்ந்து கொடுக்கிற தருமநிதிச் சேவகன் உள்ளேவந்து 'இதோ இந்த மாதத்தின் உதவிப்பணம் பத்துரூபாய்' என்று சொல்லி ரூபாயைக் கொடுக்க வந்தான். இத்தருணம் அவ்வேழை மனிதன் பாதிகனவும் பாதி நனவுமாயிருக்கும் நிலைமையாதலால் 'அப்பா! இனி எனக்கு உங்கள் தருமநிதிப் பணம் தேவையில்லை; என்னிடம் நிரம்ப ரூபாய்கள் இருக்கின்றன; என்பெயரை லிஸ்டில் அடித்துவிடலாம் ; நான் பெரிய பணக்காரனுய் விட்டேன்; இதோ பார்! பணப்பைகளை' என்றுன். அதுகேட்டுச் சேவகன் போய்விட்டான். தருமநிதியின் தலைவரிடம் போய் நடந்ததைச் சொல்லவே அவர் இவ்வேழையின் பெயரை லிஸ்டில் அடித்துவிட்டு அப்பணத்தை மற்றோர் ஏழைக்குக் கொடுத்துவரக் கட்டளையிட்டுவிட்டார்.

கனுக்கண்ட அவ்வேழை மனிதன் விழித்துக்கொண்டான். கண்ட கனவை மறந்து நித்தியக் கடன்களைச் செய்யத் தொடங்கினுன். அன்று அம்மாதத்தின் முதல் தேதி. மாதந்தோறும் முதல்தேதி யன்றுதான் தருமநிதியிலிருந்து அவனுக்குப் பணங் கிடைப்பது வழக்கம். பொழுதுவிடிந்து சிறிது நேரமாயிற்று. அவ்வேழை யோசிக்கலானுன்—இன்று முதல் தேதியாய்த்தே ; காலை ஆறு மணிக்கே தருமநிதிச் சேவகன் பணம் கொணர வேணுமே ; இவ்வளவு நேரமாகியும் சேவகன் ஏனே வரவில்லை! சாப்பாட்டு விடுதிக் காரனுக்கு இன்று நாம் பணம் கொடுக்க வேணுமே. வீட்டுக் குடையவன் வாடகைப்பணம் கேட்பனே ; இதுகாறும் பணம் வரவில்லையே. ஒருநாள் இன்று அச்சேகவனுக்கு வேறு வேலை ஏதாவது ஏற்பட்டிருக்கும் ; நாளை வரக்கூடும்—என்றிவ்வாறு முடிவு செய்து கொண்டு சேவகனை யெதிர்பார்த்தவனுய் அன்றைப்பொழுதைப் போக்கினுன். மறுநாளும் இப்படியே போயிற்று. மூன்ருவது நாளும் அப்படியே போயிற்று. அவ்வேழை மனிதன் பல தொல்லைகளினுல் மிகவும் பீடிக்கப்பட்டு வருந்தினுன். நான்காந்தேதி தருமநிதிக்கே நேரிற் சென்று நிதியின் தலைவரைக் கண்டான். 'தங்கள் பணத்தையே நம்பி ஜீவிப்பவனை என்னை இப்படியும் கஷ்டப்படுத்தலாமா? இன்று தேதி நான்காகியும் எனக்கு உதவிப்பணம் கிடைக்கவில்லையே; முதல்தேதி தோறும் தவருது கிடைத்து வந்த பணம் நாலுநாளாகியும் கிடைக்கா தொழிந்தமைக்குக் காரண மென்னவோ? இப்படிச் செய்யலாமா?' என்று முணுமுணுத்தான்.

அது கேட்ட நிதித் தலைவர் "அப்பா! முதல் தேதி காலை ஆறுமணிக்கு வழக்கம் போல் நிதியின் சேவகன் பணத்தோடு உன் வீடு வந்திருந்தான் ; அன்று நீ பணம் வாங்க மறுத்தாயாம். 'என்னிடத்தில் நிரம்ப ரூபாய்கள் இருக்கின்றன ; இனி உதவிப் பணம் எனக்குத் தேவையில்லை, என் பெயரை இனி நீக்கிவிடலாம்' என்று சொன்னுயாம் ; நான் உன் பெயரை லிஸ்டில் அடித்து விட்டேன். உனக்குக் கொடுக்கப்பட்டு வந்த அந்த பத்து ரூபாயை வேறொரு ஏழைக்குக் கொடுத்து வருமாறு ஏற்பாடாகி விட்டதே" என்ருர் அந்த நிதித் தலைவர். இது கேட்டு அவ்

வேழை மனிதன் மிகவும் ஆச்சரியப் பட்டான். பிறகு, தனக்கு லக்ஷம் ரூபாய் கிடைத்ததாகக் கனுக் கண்டமை நினைவுக்கு வந்தது. தூக்கத்திலே தான் பணம் வாங்க மறுத்திருக்கலாமென்று நினைத்தான். நிதித் தலைவர்க்கு இதை வெகு பரிதாபத்துடன் தெரிவித்தான். அத்தலைவரோ 'இனி இப்போது யாதுஞ் செய்ய முடியாது; மற்றெப்போதாவது ஸமயம் வாய்க்கு மளவில் உன்னைப் பற்றிப் பார்க்கலாம்' என்றார். அது கேட்டு அவ்வேழை மனிதன் மிகவும் வருத்தமுற்றான். கனவிற் கண்ட தனத்தை நம்பிக் கைகண்ட பணத்தை இழக்கலானன். இரண்டு நொடிப் பொழுதளவு கூட மகிழ்ச்சி தரமுடியாத ஸ்வப்ந தனத்தைக் கண்டு நீண்ட காலம் ஸுகாநுபவத்துக்கு உரிய பணத்தை மறுக்கலானன்.

நண்பர்களே! இந்தக் கனுக்கதையினல் நாம் தெரிந்துகொள்வதென்ன? இந்த இருள்தருமா ஞாலமாகிய ஸம்ஸாரத்தில் விஷயாந்தரங்களினல் நமக்கு நேரக் கூடிய இன்ப துன்பங்களெல்லாம் கனவிற்காணும் பொருள்கள் போன்று ஸ்வல்ப காலம் இருக்கக்கூடியவை யென்றும், அவற்றுக்கு ஆசைப்பட்டு நீண்டகாலம் நாம் அநுபவிக்கக்கூடிய மோக்ஷ ஸுகத்தைக் காலாலுதைத்துத் தள்ளுவது கூடாதென்றும் நாம் தெரிந்துகொள்வோம். நாம் கனவிற் காணும் பொருள்களும் அவற்றால் நமக்கு விளையும் பலன்களும் சுகதுக்கங்களும் சொற்பகாலமிருக்கக் கூடியவைகள். ஆதியந்தமில்லாத நித்யவஸ்துவாகிய ஜீவாத்மாக்களுக்கு ஒவ்வொரு பிறவியிலும் ஏற்படுகின்ற ஆயுட்பாகமும் அற்பம்; அதனுள் அநுபவிக்கும் பொருள்களும் சுகதுக்கங்களும் மின்னல்போல் மிளிர்ந்து மறையும். ஆகையால் அந்தமில் பேரின்பமான மோக்ஷ ஸுகத்தை நாடி ஸம்ஸார ஸுகத்திலீடுபடாமல் உயர்கதிக்கு முயற்சி செய்வதே மானிடர்களின் கடமையாகும். .... ... ... *

## 35. "க்ஷமத்வம்—தேவா தேவேஷு ச்ரயத்வம்."

ஒருவர்க்குப் பெண்கள் நால்வர். நால்வர்க்கும் விவாஹமாயிற்று. மாப்பிள்ளைகள் நால்வரும் ஒரு விசேஷத்திற்கு மாமனர் வீட்டுக்கு வந்திருக்கிறார்கள். நால்வரில் ஒருவர் தர்க்க வித்வான்; ஒருவர் வியாகரண வித்வான்; ஒருவர் அட்வகேட்; ஒருவர் வேதாத்யயந நிபுணர். மாமனருடைய க்ருஹம் மேல் அந்தஸ்து முள்ளது. தனித்தனியே ரூம்கள் இருப்பதால் ஒவ்வொரு ஜாமாதாவுக்கும் ஒவ்வொரு ரூம் விட்டிருந்தார். நால்வரும் நான்கு அறைகளிலும் இனிது வஸிக்கிறார்கள். வேதாத்யயந சீலராகச் சொல்லப்பட்ட மாப்பிள்ளை ஒரு கோவிலில் வேத பாராயணத்திற்காகப் போயிருந்து அகாலத்திலே திரும்பி க்ருஹம் வந்து சேர்ந்தார். கதவை யிடித்தும் யாவரும் நன்கு உறங்கிப் போனபடியால் கதவைத் திறக்கவில்லை. வாசல் கதவுக்கடுத்த நடையிலேயே படுத்துத் தூங்கிக் கொண்டிருக்கிறார். மேலே படுத்திருந்த தர்க்க பண்டிதரான ஜாமாதா தேஹசுத்திக்காகக் கீழே யிறங்கி வந்தார். அப்போது நள்ளிருள். கதவைத் திறந்து கொண்டு வெளியில் போகும்போது நடையில் ஷட்டகர் படுத்திருப்பதை யறியாமல் வேகமாகச் செல்லுகையில் அவருடைய காலையோ கையையோ நன்றாக மிதித்து விட்டார். அது பொறுக்கமாட்டாமல் அவர் கத்தினர். குரலினல் ஷட்டகரென்று தெரிந்துகொண்டு 'க்ஷமத்வம்' என்று சொல்லிவிட்டுச் சென்று காரியத்தை முடித்துக்கொண்டு மேலே போய்விட்டார். இவர் தூக்கத்தின் மிகுதியினல் உள்ளே சென்று படுத்துக் கொள்ளாமல் அந்த நடையிலேயே படுத்து உறங்கி விட்டார். பிறகு ஒரு மணிகாலம் பொறுத்து வியாகரண வித்வானன ஜாமாதாவுக்கும் கீழே யிறங்கி வர நேர்ந்தது. அவரும் இருட்டில் இவர் படுத்திருப்ப தறியாமல் வயிற்றை மிதித்து விட்டார். அவர் அலறினர். குரலினல் ஷட்டகரென்று தெரிந்துகொண்டு அவரும் 'க்ஷமத்வம்' என்று சொல்லிப் போய்விட்டார். (க்ஷமத்வம்) என்பதற்கு மன்னித்துக் கொள்ளும் என்று பொருள். இரு ஷட்டகர்களும் காலால் தன்னை மிதிப்பதையும், க்ஷமத்வம்

என்று சொல்லிப் போவதையும் கண்ட அந்த ச்ரோத்ரிய ஜாமாதா 'இவர்களுக்கு நாம் தகுந்த ப்ரதிக்ரியை பண்ணவிடில் இவர்களுடைய கொழுப்பு அடங்காது; வேணுமென்றே இவர்கள் இப்படி செய்தார்கள். மிதித்ததோடு நில்லாமல் த்வம் த்வம் என்று சொல்லிப் போனார்கள்; இவர்களுக்கு இந்த ஒரு த்வம் தானே தெரியும்; நமக்கு முப்பத்து நான்கு த்வம் தெரியுமாதலால் ஒரு கை பார்த்துவிடுவோமென்று கனவேகமாக மாடிமேல் ஏறிச் சென்றார். இவர் வேதம் வல்லவராகையாலே வேதத்தில் காடகத்தில் இரண்டாம் ப்ரச்னத்தில் இரண்டாமநுவாகத்தில் "தேவா தேவே ஷு ச்ரயத்வம், ப்ரதமா த்வீதீயேஷு ச்ரயத்வம்................" என்று தொடங்கி முப்பத்து நான்கு தடவை ச்ரயத்வம் ச்ரயத்வம் என்று (த்வம்) வருவதனால் அந்த வாக்யங்களை ஸ்வரத்தோடு சொல்லிக்கொண்டே ஷட்டகர்களிருவரையும் உதைத்துத் தீர்த்து விட்டார்; நீங்கள் தான் பண்டிதர்கள், உங்களுக்குத் தான் (த்வம்) தெரியுமென்று நினைத்து விட்டீர்களோ? உங்களுக்கு ஒன்று தெரிந்தால் எனக்கு எத்தனை தெரியும் பாருங்கள்' என்று சொல்லிக்கொண்டே புடைத்து விட்டுப் போய்விட்டார். பெருங்கூட்டம் கூடி விட்டது. ஒருவர்க்கும் ஒன்றும் புரியவில்லை. அடிகொடுத்த ஜாமாதா வாசல் திண்ணையில் உட்கார்ந்து கொண்டு "இவர்களுடைய படிப்பு என் படிப்புக்கு ஈடாகுமா? என்ன நினைத்து விட்டார்களிவர்கள்!" என்று ஜஞ்ஜாமாருதமாகப் பேசிக்கொண்டிருக்கிறார். யாரும் அணுக முடியவில்லை. இவ்வளவோடு போதும். .... ... ... .... ... .... *

## 36. பூசினிக்காய்த் திருடன் பிடிபட்டது.

ஒரு பெரியவர் தம்முடைய க்ருஹத்தில் பூசினிச் செடிகளை விசேஷமாகப் பயிர் செய்து வந்தார். செடி நன்றாகப் படர்ந்து க்ருஹத்தின் இறப்பின்மேல் வெகு தூரம் பரவிவிட்டது. பெரிய பெரிய காய்கள் காய்த்து விட்டன. அந்த வீட்டிலுள்ளவர்கள் திறந்த வெளியான முற்றத்தில் படுத்துக்கொண்டு அயர்ந்து தூங்குகிறார்கள். பக்கத்து வீட்டுக்காரர் இந்தப் பூசினிக்காய்களைத் திருடிக்கொண்டு போக உறுதி கொண்டார். அமாவாஸ்யையன்று புகழைக்கடை வழியாய் இறப்பின் மேலேறிச் சில காய்களை யறுத்துப் புழைக்கடைப் பக்கத்தில் தள்ளி விட்டார். தன் புத்திரனையும் துணைவனாக அழைத்துக்கொண்டு வந்திருந்தபடியால் கீழே விழுந்த காய்களை உடனுக்குடனே அவன் தன் வீட்டில் கொண்டு சேர்க்கிறான். மேலேயிருப்பவர் இன்னமும் காய்களை யறுத்துக் கொண்டிருக்கிறார். அறுத்த காய்களில் ஒரு பெரிய காய் முற்றத்தில் தொப்பென விழுந்தது. அவ்வோசை கேட்டு எல்லாரும் செய்தி யறிந்து கத்தத் தொடங்கினார்கள். திருட வந்தவர் கனவேகமாகக் குதித்துப் புழைக்கடை வழியாகவே வீடு சேர்ந்து விட்டார். சேர்ந்தவர் வீட்டிலேயே கிடக்கலாகாதா? நடு நிசியில் திருடன் திருடனென்றவாறே ஒரு க்ஷணத்தில் கூட்டம் கூடிவிடுமே. அந்தக் கூட்டத்தில் தானுமொருவராக அந்தக் கள்வர் வந்து சேர்ந்தார். திடீரென்று பூசினிக்காய் எப்படி விழுந்ததென்று அவரவர்கள் பேசிக்கொண்டிருக்கையில்' இந்தக் கள்வர் சொல்லத் தொடங்கினார் — "உங்களுக்கு விஷயம் தெரியவில்லை போலிருக்கிறது; இங்கே என்ன நடந்திருக்கிறதென்றால், இந்த காய்களைத் திருட ஒரு திருடன் வந்திருக்கவேணும்; இறப்பின்மேல் காய்கள் குறைவாகத் தென்படுகிறபடியால் சில காய்களைக் கவர்ந்தே விட்டான்; ஒரு காய் மட்டும் பின் பக்கத்தில் விழாமல் முன் பக்கத்தில் விழுந்தது. நீங்கள் எழுந்து விட்டீர்கள்; உடனே நான் பின்னால் குதித்து ஓடிப் போய் விட்டேன்" என்றார். 'கள்ளன் ஓடிப்போயிருப்பன்' என்று சொல்ல நினைத்து உள்ளபடி வாயில் வந்து விட்டது. நான் குதித்துப் போய் விட்டேனென்றார். இவருடையது பக்கத்து வீடு தானே உடனே ஒருவர் அங்கு ஓடிச் சென்றார். கவர்ந்த காய்கள் கூடத்திலே வைக்கப்பட்டிருந்ததைக் கண்டார். வீட்டுக்காரரும் பின் தொடர்ந்து ஓடி வந்தார். மேலே நடந்ததை யெழுதவேணுமோ? .... .... .... .... *

**237.** அம்ருதமென்பது தேவலோகத்திலுள்ள தென்றும் அது மானிடர்க்குக் கிடைக்க மாட்டாத தென்றும் பலர் நினைப்பதும் சொல்லுவது முண்டு. ஆனால் நிச்சலும் அமுதமுண்டு களிக்கின்ற நாம் அப்படி நினைப்பதற்கு ப்ரஸக்தி யில்லை. உலகில் நூல்களைப் பாடினவர்கள் பல்லாயிரவ ரிருந்தாலும் "தொண்டர்க்கு அமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்" என்று துணிந்து சொன்னவர் ப்ரபந்ந ஜநகூடஸ்த ரான நம்மாழ்வா ரொருவரே யன்றி மற்றொருமிலர். ஸ்ரீமந்நாதமுனிகளும் *பக்தாம்ருதம் விச்வஜநாநுமோதநம்* என்று மருமமறிந்து பேசும்படியானதன்றோ அவ்வமுதம். பிள்ளைப்பெருமாளையங்காரும் திருவரங்கக் கலம்பகத்தின் காப்புச் செய்யுள்களுள் :

"மறைப்பாற்கடலைத் திருநாவின் மந்தரத்தாற் கடைந்து
துறைப்பாற்படுத்தித் தமிழாயிரத்தின் சுவையமிழ்தம்
கறைப்பாம்பணைப்பள்ளியா னன்பரீட்டங் களித்தருந்த
நிறைப்பான்கழலன்றிச் சன்மவிடாய்க்கு நிழலில்லையே"

என்ற செய்யுளினால் நம்மாழ்வாரை அமுதமளித்த பெருவள்ளலாகவே பேசிப்போந் தார். எம்பெருமான் உப்புக் கடலைக் கடைந்து ப்ரயோஜநாந்தரபரர்களான அமரர் கட்கு அமுதமளித்தான். ஆழ்வாரோ வென்னில், வேதமாகிற பாற்கடலைக் கடைந்து அநந்ய ப்ரயோஜநர்களான அத்புத பக்தியுக்தர்கள் அநவரதம் அருந்திக் களிக்கும்படி யான திவ்யாம்ருதத்தை யநுக்ரஹித்தருளினர். இவ்வம்ருத ப்ரவாஹத்தில் கண்ட பஞ்சாம்ருதத்தை யிண்டெடுத்துக் காட்டுவோம்.

**238.** மாறன் பணித்த தமிழ் மறைக்கு ஆறங்கங் கூற வவதரித்த திருநா வீறுடைய பிரானான திருமங்கையாழ்வார் சிறிய திருமடலென்றும் பெரிய திருமட லென்றும் இரண்டு திவ்ய ப்ரபந்தங்களை யருளிச் செய்திருப்பது உலகறிய நின்றது. இவற்றுள் முக்கியமான விஷயம் என்னவென்றால், மோக்ஷமென்கிறவொரு புருஷார்த் தம் கிடையவே கிடையாது; அஃதொன்றிருப்பதாகச் சொல்லுவார் அவிவேகிகளே யொழிய விவேகிகளல்லர்; அஃது உண்டு என்று கொண்டாலும் அது அநுபவ ரஸிகர் களுக்கு உத்தமமான புருஷார்த்தமென்று கொள்ளத் தகாததே' என்று அறுதியிடுவது இதில் தலையான விஷயமாகக் காண்கிறது. ஆஸ்திகர்களில் தலைவரான திருமங்கை யாழ்வாரா இப்படியருளிச் செய்கிறாரென்று பலரும் அதிசயிக்கக் கூடும். ஒருகாலும் இப்படி யருளிச் செய்திருக்க மாட்டார் என்றும் சிலர் சொல்லக்கூடும். திருமடல்களின் தலைப்பிலேயே ஸுஸ்பஷ்டமாகக் காணுமிவ் விஷயத்தில் ஸந்தேஹமென்ன? இவ்வாழ் வார் நாஸ்திகரல்லர்; ஆஸ்திகர்களில் அக்ரேஸரர் என்பதும் அசைக்கமுடியாததே. தம் முடைய பதிகங்களுக்குப் பயன் கூறுமிடத்து "இம்மன்னு பாடல் வல்லார்க்கு இடமா கும் வானுலகே" "வெங்கதிர்ப் பரிதிவட்டத்தூடு போய் விளங்குவாரே" 'ஒளி விசும் பாள்வர்தாமே" என்றிப்படி அடிக்கடி யருளிச் செய்து போகின்றார். தம்முடைய திவ்ய ஸூக்திகளை யோதுகைக்குத் திரு நாட்டில் வாழ்ச்சியையே பலனாகக் கூறியுள்ள இவ் வாழ்வார் மோக்ஷமென்கிற புருஷாத்தமே கிடையாதென்று ஸ்தாபித்து இரண்டு திவ்ய ப்ரபந்த மருளிச் செய்தாரென்னில், இதன் கருத்தை ஆராய வேண்டும்.

**239.** சாஸ்த்ரஜ்ஞர்கள் *நஹி நிந்தாந்யாயமென்று ஒரு நியாயம் சொல்லுவர்கள். "न हि निन्दा निन्द्यं निन्दितुं प्रवर्तते; अपि तु निन्द्यादितरं प्रशंसितुम्"—நஹி நிந்தா நிந்த்யம் நிந்திதும் ப்ரவர்த்ததே, அபி து நிந்த்யாத் இதரம் ப்ரசம்ஸிதும்" என்பதே அந்த நியாயமாகும். விவேகிகள் ஒன்றை நிந்தித்தார்களாகில் அதற்கு நிந்தையில் நோக்கன்று; புகழ நினைத்த வொன்றைப் புகழ்வதிலேயே நோக்கு—என்பது இந்த ந்யாயத்தின் போக்கு. இந்த நீதியின்படி மஹான்கள் சிலவற்றை நிந்தித்தார்களாகில் நிந்தையிலே சிறிதும் தாற்பரியமின்றிக்கே உத்தேச்யமான தொன்றின் புகழ்ச்சி யிலேயே தாற்பரியமாகின்றமையை நிரம்பக் காணாநின்றோம். ப்ரகருதத்தில், மோக்ஷ புருஷார்த்த மென்பதொன்று கிடையாதென்றும் இருந்தாலும் அது அஸார மென்றும் மோக்ஷநிந்தையாகக் கூறினவிதற்கு இந்த நிந்தையில் சிறிதும் நோக்கில்லை; மோக்ஷத்

திற் காட்டிலும் மிகவும் உத்தேச்யமாக ஆழ்வார் தாம் கொண்ட திவ்ய தேசாநுபவமே மிகச் சீரியதென்று இதனைப் புகழ்வதொன்றிலேயே நோக்கெனக் கொள்ளத் தக்கதாம். இதனை ஆழ்வார் வெகு அழகாக அருளிச் செய்யும்படி காண்மின்;

240. சிறிய திருமடலில் மோக்ஷமுண்டென்பாரை அவிவேகிகளென்று கூறி வருமிடத்து "ஆராவமுதமங்கெய்தி அதில் நின்றும் வாராதொழிவதொன்றுண்டே" என்கிறார். இதன் உட்கருத்து யாதெனில்: ஆராவமுதம் உண்மையில் இந்த லீலாவிபூதியில் இருக்க அந்த நித்ய விபூதியில் அஃதிருப்பதாகவும், அங்குச் சென்றவர்கள் உண்மையான இவ்வுலகத்தாராவமுதத்தை யநுபவிக்க மறுபடியும் வரவேமாட்டார்களென்பதாகவும் சொல்லுவது பொருத்தமுடைத்தோ? ஆராவமுத மென்பது இங்குத் தானுள்ளது- என்னுமிதுவே திருமங்கை மன்னனுடைய திருவுள்ளம்.

241. தேன், வாழைப்பழம் முதலான ஐந்து வஸ்துக்களைச் சேர்த்துப் பஞ்சாமிருதமென்று சொல்லிப் புசிக்கின்றோம்நாம். ஆழ்வார்கள் கண்ட பஞ்சாமிருதம் கேளீர்; *சீரார் செந்நெற் கவரிவீசுஞ் செழுநீர்த் திருக்குடந்தையில் ஆராவமுதே! என்றும் * ஆராவமுதாயடியே னுவியகமே தித்திப்பாய் * என்றும் நம்மாழ்வாரா லழைக்கப்பட்ட அமுதம். * கொண்டல்வண்ணனன் கோவலனாய் வெண்ணெயுண்ட வாயன் என்னுள்ளங் கவர்ந்தான் அண்டர்கோனணியரங்க னென்னமுது * என்று திருப்பாணாழ்வார் கண்ட வமுதம். * அடியேன் மேவியமர்கின்ற வமுதே... திருவேங்கடத் தெம்பெருமானே!* என்று நம்மாழ்வார் திருவேங்கடத்திற் கண்ட வமுதம். * எனக்குத் தேனேபாலே கன்னலேயமுதே திருமாலிருஞ்சோலைக்கோனே* என்று நம்மாழ்வார் தாமே தெற்குத் திருமலையிற் கண்ட வமுதம். * மன்னு குறுங்குடியாய் வெள்ளறையாய் மதிள்சூழ் சோலைமலைக்கரசே! கண்ணபுரத்தமுதே! * என்று பெரியாழ்வார் திருக்கண்ணபுரத்திலே கண்ட வமுதம். ஆக இவ்வம்ருதங்கள் ஆழ்வார்களுடைய பஞ்சாம்ருதமாகும். இந்த அம்ருதாநுபவத்திற் காட்டிலுமா அந்த அம்ருதாநுபவம் சிறந்தது?

242. க்ருஷ்ணயஜுர்வேதத்தில் ஆறுவது காண்டம் ஆரம்பிக்கும் போதே "को हि तद्वेद यद्यमुष्मिन्लोकेऽस्ति वा न वेति" என்று ஓதப்படுகிறது. "பரலோகத்தில் இருக்கிறதோ இல்லையோ, யார் கண்டார்? என்கிறது. இதுவும் பரலோகத்திலில்லாமையைச் சொல்லுகிறதன்று; த்ருஷ்டபுருஷார்த்த மொன்றின் புகழ்ச்சியிலே நோக்காக இங்ஙனே ஓதிற்றென்று வியாக்கியானம் செய்கிறார்கள். வேதாந்த தேசிகனுடைய பரமத பங்கரஹஸ்யத்திலும் இது காணலாம். * இச்சுவை தவிர யான் போய் இந்திரலோகமாளுமச்சுவை பெறினும் வேண்டேன்* என்றும் *அண்டர்கோனணியரங்கன் என்னமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே* என்றும் * ஸத்யம் சபே வாரணசைலநாத! வைகுண்ட வாஸேபி ந மேபிலாஷ:* என்றும் ஆழ்வாராசாரியர்கள் சொல்லுவதுமாத்திரமன்றிக்கே, ஸ்ரீராம திவ்யசரிதாம்ருதத்தின் சுவடறிந்த திருவடியும். "स्नेहो मे परमो राजन्! त्वयि नित्यं प्रतिष्ठितः। भक्तिश्च नियता वीर! भावो नान्यत्र गच्छति—ஸ்நேஹோ மே பரமோ ராஜந்! த்வயி நித்யம் ப்ரதிஷ்டித:, பக்திச் ச நியதா வீர! பாவோ நாந்யத்ர கச்சதி." என்னக் காணாநின்றோம். சொன்னதோடு மட்டுமல்லாமல் "ஸோத்ரைவ ஹந்த! ஹநுமாந் பரமாம் விமுக்திம் புத்த்யாவதூய சரிதம் தவஸேவதேஸௌ" என்று ஆழ்வானருளிச் செய்தபடி இவ்விபூதியிலேயே யன்றோ வஸிப்பது.

243. "தத்வஜ்ஞாநாத் முக்தி:, அஜ்ஞாநாத் ஸம்ஸார:" என்பதொன்றுண்டு. இது பெரும்பாலும் ஸகல மதஸ்தர்களாலும் ஒப்புக்கொள்ளப்படுகிறது. ஆனால் இந்த வாக்யத்திற்குப் பொருள் சொல்லப் புகும்போது ஒருவர் சொல்லும் பொருளை மற்றொருவர் சொல்லுவதில்லை. தத்வஜ்ஞானமென்றால் என்ன? முக்தியென்றாலென்ன? என்னும் விசாரத்தில் பலபல மதபேதங்கள் தோன்றியுள்ளன. விசிஷ்டாத்வைத ஸித்தாந்த

ரீதியில் தத்வஜ்ஞானமென்பது இன்னது, முக்தியென்பது இன்னது, என்று நம்மவர்கள் தெரிந்துகொள்ளவேண்டும். தத்வஜ்ஞானமென்பது பற்றி மற்றொருகால் சொல்லுவோம்; ப்ரஸங்காத் இப்போது முக்தியைப் பற்றிச் சுருங்கச் சொல்லுகிறோம். 'பாஷாணகல்பதைவ முக்தி:' என்றும், 'ஆத்யந்திக து:க்கத்வம்ஸ ஏவ முக்தி:' என்றும் இப்படி பலவாறு பிறர் கூறுவர். நம்மைப் பிடித்த பீடைகளெல்லாம் விட்டுத் தொலைகைதான் மோக்ஷமென்பது பிறருடைய கொள்கையாகத் தேறுகின்றது.

244 ஒரு மஹாப்ரபு அத்வைத ஸம்பிரதாயத்தில் பரிபூர்ண ஜ்ஞானமுடைய தனது மந்த்ரியிடத்தில் 'மோக்ஷமாவது என்ன? என்பதை எனக்கு விளக்கமாகச் சொல்லவேணும்' என்று கேட்டாராம். அந்த மந்த்ரி 'இவருக்கு நாம் சாஸ்த்ரங் கொண்டு காட்டுவதைவிட அநுபவத்தையிட்டே காட்டி விடுவது நன்று' என்று நினைத்து ஒருபாயம் செய்தாராம். அதாவது, அந்த மஹாப்ரபு சயனக்ருஹத்தில் படுத்து உறங்கின பிறகு அந்த அறையை வெளியே பூட்டிக்கொண்டு அங்கேயே படுத்துக்கொண்டார் மந்த்ரி. மஹாப்ரபு மலஜலபாதையை விஸர்ஜனம் செய்யவேண்டியெழுந்து கதவைத் திறக்கப் பார்த்த போது கதவு திறக்கமுடியாமற் போகவே வெளியில் பூட்டப்பட்டிருப்பதை யறிந்து கதறத் தொடங்கினர். வெளியே கிடக்கிற மந்திரி தாம் ஒன்று மறியாதவர் போல, "கதவு பூட்டிக் கிடக்கிறதே, யார் பூட்டினர்களோ தெரியவில்லையே, இதோ பார்க்கிறேன்" என்று சொல்லி மாயஞ் செய்திருந்தார். ப்ரபுவுக்கு தேஹபாதை பொறுக்க முடியாத நிலைமையாகிக் கூக்குரலிட்டு "பூட்டு திறக்கத் திறவு கோல்கிடைக்கவில்லை யென்றல் பூட்டை யுடைத்திடு; இனி என்னல் ஒரு நொடியும் பொறுத்திருக்கமுடியாது" என்று கத்த, மந்திரி உடனே கதவைத் திறந்து விட்டார்; ப்ரபு உடனே வெளி வந்து மலஜலபாதையைக் கழித்துக் கொண்டு அப்பாடா! என்றராம். அப்போது மந்த்ரி அருகே வந்து, ப்ரபோ! இது தான் மோக்ஷமென்பது; இப்போது அப்பாடா! என்றீரே, என்ன ஸுகங்கண்டு இது சொன்னீர்? தேஹத்திலிருந்த பாதை தொலைந்ததிற் காட்டில் அபூர்வமான வொரு ஸுகம் வந்ததில்லையே; இருந்த பாதையின் நிவ்ருத்தியைத் தானே ஸுகமாகக் கருதுகின்றீர்; இது போலவே பிறப்பிறப்பு மூப்புப்பிணித் துன்பங்களினின்று நாம் விடுபடுவதற்கு மேற்பட அபூர்வமாக ஒரு ஸுகமும் வருவதன்று; ஆத்யந்திக துக்க த்வம்ஸமே மோக்ஷமென்று கொள்ளீர்' என்றராம். "பாஷாணகல்பதைவ முக்தி:" என்கிற நையாயிகாதிகளுக்கும் இதுவே கருத்தாகத் தேறும்.

245. நம்முடைய ஸித்தாந்தமோ வென்னில்; அபூர்வமாக வொரு மஹானந்த மநுபவிப்பதே மோக்ஷமென்பதாம். ஆளவந்தார் "कदाऽहमैकान्तिकनित्यकिङ्करः प्रहर्षयिष्यामि—கதாஹமைகாந்திக நித்ய கிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி" என்றருளிச் செய்தார். *ஒழிவில் காலமெல்லா முடனய் மன்னி வழுவிலாவடிமை செய்து அநுபவிக்கிற ஆனந்தம் அவரவர்களுக்கு ஆத்மைக வேத்யம். "வேதமனைத்துக்கும் வித்தாகும் கோதை தமிழ் ஐயைந்துமைந்தும்" என்னப் பட்ட திருப்பாவையில் *ஒருத்தி மகனய்ப் பாசுரத்தில்* வருத்தமுந் தீர்ந்து மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்* என்றது உயிரான வார்த்தை. வருத்தம் தீர்ந்ததோடு நில்லாமல் மகிழ்ந்து என்னும்படியான வொரு நிலைமையுண்மை காட்டப்பட்டது. நம்மாழ்வாரும் திருவாய்மொழியில் (7-5-10) *வார்த்தையறிபவர் என்ற பாட்டில் *போர்த்த பிறப்பொடு நோயொடு மூப்பொடு இறப்பிவை பேர்த்துப் பெருந்துன்பம் வேரற நீக்கி* என்றிவ்வளவு சொன்னதற்கும் மேற்பட "தன் தாளின் கீழ்ச் சேர்த்து அவன் செய்யுஞ் சேமத்தை யெண்ணி" என்றருளிச் செய்திருப்பது நோக்கத் தக்கது.

246. *तदा विद्वान् पुण्यपापे विधूय निरञ्जनः परमं साम्यमुपैति* என்றும் *ब्रह्म वेद ब्रह्मैव भवति* என்றும் இந்த ஜீவாத்மா பரமாத்மாவோடு ஐக்யம் பெறுவதாக உபநிஷத்துக்களில் சொல்லியிருக்கையாலே இவன் தனியே நின்று கைங்கரியம் பண்ணிக்களிக்கை

யென்பதற்கு அவகாசமேது? என்பர் பிறர். மேலே குறித்த ப்ரமாணங்களில் ஐக்யம் சொல்லப்பட்டிருக்கவில்லை. *ஸாம்யம் உபைதி* என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஸாம்யமாவது என்ன? ஐக்யமன்று. *उपमा यत्र सादृश्यलक्ष्मीरुल्लसति द्वयोः— உபமா யத்ர ஸாத்ருச்யலக்ஷ்மீருல்லஸதி த்வயோ:* என்கிற ஆலங்காரிகர்கள் "तद्भिन्नत्वे सति तद्गतभूयोधर्मवत्त्वं साम्यम्" என்று தெளிவாகச் சொல்லுவர்கள். இரண்டு வஸ்துக்கள் தனிப்பட இருந்து தீரவேண்டும். தன்மைகளில் பெரும்பாலு மொற்றுமையே யொழிய வஸ்துவில் ஐக்யமல்ல. 'சந்த்ரஸமம் முகம்' என்றால் சந்திரன் வேறாகவும் முகம் வேறாகவும் இருப்பதை ப்ரத்யக்ஷத்திற் காண்கிறோம். இப்படி பல த்ருஷ்டாந்தங்கள் பார்க்கலாம். ஆகவே, பரமாத்மா வேறுதத்வமாகவும் ஜீவாத்மா வேறுதத்வமாகவும் இருந்தாலொழிய *ஸாம்யமுபைதி* என்பது நிர்வஹியாது, "ब्रह्मैव भवति—ப்ரஹ்மைவ பவதி" என்றவிடத்திலுள்ள ஏவகாரத்திற்கு இவகாரத்தின் பொருள் கொள்ளவேணு மென்பதை வேதமே காட்டியிருக்கின்றது. எங்கே யென்னில்; யஜுர்வேதம் இரண்டாவது காண்டம் முதல் ப்ரச்நத்தில் 'विष्णुरेव भूत्वेमान् लोकान् अभिजयति" என்றவிடத்தில் 'விஷ்ணுரேவ' என்றதற்கு 'விஷ்ணுரிவ' [விஷ்ணுபோல] என்றே பொருள் கொள்ள வேண்டியிருப்பது பிறர்க்கும் உடன்பாடு. ஏனெனில், மேலே *இமாந் லோகாந் அபிஜயதி* என்று சொல்லியிருக்கையாலே.

247. ஸ்ரீஹர்ஷகவி இயற்றிய நைஷத காவியத்தில் இரண்டாவது ஸர்க்கத்தின் முதல் ச்லோகம் வெகு அற்புதமாக அமைந்திருக்கின்றது. நளமஹாராஜன் ஒரு தடாகத்திற்குச் சென்று ஹம்ஸபக்ஷி யொன்றைப் பிடித்துக் கொண்டான். அது விடுபடுவதற்குப் பலவாறு முயன்றும் பயன் பெறவில்லை. அரசன் மனமிரங்குமாறு பலபேசி விடுபட்டது. அதைச் சொல்லுகிறார் மஹாகவி *அதிகத்ய ஜகத்யதீச்வராத்* என்னும் (2-1.) ச்லோகத்தினால். அதில் உத்தரார்த்தம்—*वचसामपि गोचरो न यः स तमानन्दमविन्दत द्विजः* [வசஸாமபி கோசரோ ந யஸ் ஸ தமாநந்தமவிந்தத த்விஜ:] என்பது. விடுபட்ட அந்த ஹம்ஸபக்ஷியானது வாசாமகோசரமான மஹானந்தத்தை யடைந்திட்டதாக இங்குச் சொல்லப்படுகிறது. இந்தச்லோகம் சிலேடையாகவும் அமைக்கப்பட்டிருக்கிறது. ஹம்ஸபக்ஷி விடுபட்டு இன்பமெய்தினது மாத்திரம் இங்குச் சொல்லப்பட்டிருக்கவில்லை. ஒரு வேதாந்தி முக்திபெற்றுப் பேரின்பம் நுகர்வதும் இங்கு சப்த ஸந்நிவேச விசேஷங்களால் வெகு அழகாகக் காட்டப்பட்டிருக்கின்றது. 'விடுபட்டுப் பீடை தொலைந்தது' என்று இவ்வளவே சொல்லாமல் வாசாமகோசரமான ஆனந்த மடைந்தது என்றும் சொல்லியிருப்பது நல்ல தெளிவைப் பிறப்பிக்க வல்லது. *முக்திர் மோக்ஷோ மஹாநந்த:*

248. கைங்கரியம் பண்ணுவதாவது வேலை செய்வது தானே; இது துக்கரூபமாக இருக்குமேயல்லது ஆனந்த ரூபமாக இருக்குமோவென்று சிலர் சங்கிக்கக்கூடும். வேட்டையாடச் சென்ற துஷ்யந்தமஹாராஜன் கண்வருடைய ஆச்ரமத்திலே புகுந்து அங்கே சகுந்தலையைக் கண்டான்; அவளிடத்து மஹத்தான மோஹங்கொண்டான். தான் மஹாப்ரபு என்னும் நிலையையும் மறந்து அவளுக்குக் கைங்கரியம் செய்யப் பாரிக்கிறான்—*ஸம்வீஜயாமி நளிநீதள தாளவ்ருந்தை:—திருவால வட்டம் பணிமாறட்டுமா? என்கிறான். *அங்கே நிதாய கரபோரு! யதாஸுகம் தே ஸம்வாஹயாமி சரணுவுத பத்மதாம்ரௌ—அம்மா! உனது செங்கமலத் திருவடிகளை என் மடிமீது இட்டுக்கொண்டு வருடட்டுமா? என்கிறான். இந்த கைங்கரியம் செய்வதற்கு மேல் தனக்கு ஆனந்தமில்லையென்று நினைக்கிறானன்றோ. இதைத்தான் நம் ஆசாரியர்கள் (முமுக்ஷுப்படியில்) "சேஷத்வம் துக்கரூபமாகவன்றோ நாட்டில் காண்கிற தென்னில், அந்த நியமமில்லை; உகந்த விஷயத்துக்கு சேஷமாயிருக்கு மிருப்பு ஸுகமாகக் காண்கையாலே" என்ற திவ்ய ஸூக்திகளினால் வெளியிட்டருளினர்.

கிடைக்குமிடங்கள் :—

(1) க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.

(2) M. A. KRISHNAMMAL, Advocate,
20, South Mada Street, Triplicane, Madras-5.

(3) V. GOPALSWAMI,
17, பண்டி வெங்கடேச நாய்க்கன் தெரு, திருவல்லிக்கேணி.

(4) G. ரங்கைய நாயுடு,
26, குருவப்ப செட்டி தெரு, சிந்தாத்திரிபேட்டை, மதராஸ்—2
(இவர் சென்னையில் ப்ரசாரம் செய்ய நியமிக்கப்பட்டவர்.)

If un-delivered please return to:

**P. B. ANNANGARACHARYA,**
L. KANCHEEPURAM.

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Satgrantha Prakasana Sabha.
Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street, L. Kancheepuram.

Regd. No. 2975.

ஸ்ரீ:

# ஸ்ரீராமாநுஜன் 177.

P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM.

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச் சந்தா ரூ. 5 ஜீவியச் சந்தா ரூ. 100.

ஜீவியச் சந்தாதாரர்களுக்கு பத்திரிகை சாச்வதமாக அனுப்பப்பட்டு வருவது தவிர 100 ரூபா விலையுள்ள புத்தகங்கள் உடனே அனுப்பப்படும்.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி*—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம் வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

சோபகிருதுஸ்ரீ புரட்டாசிமீ 1963ஸ்ரீ அக்டோபர்மீ

# ஸ்ரீ ராமாநுஜன் 177.



சென்னை ஸத்க்ரந்தப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 15 | 1963ஸூ அக்டோபர்மீ<br>சோபகிருதுஸூ புரட்டாசிமீ | ஸஞ்சிகை 9. |
|---|---|---|


## திருவாய்மொழி நூற்றந்தாதி—66.

பாமருவு வேதம் பகர்மால் குணங்களுடன் *
ஆமழகு வேண்டப்பா டாமவற்றை—* தூமனத்தால்
நண்ணி யவனைக்காண நன்குருகிக் கூப்பிட்ட *
அண்ணலை நண்ணாரே ழையர்.

| | |
|---|---|
| பா மருவு வேதம் பகர் | சந்தங்கள் பொருந்திய வேதங்களால் பேசப்படுகிற |
| மால் | ஸர்வேச்வரனுடைய |
| குணங்களுடன் | திருக்குணங்களென்ன |
| ஆம் அழகு | நல்ல அழகென்ன |
| வேண்டப்பாடு ஆம் அவற்றை | பெருமேன்மையென்ன ஆகியவைகளை |
| தூ மனத்தால் நண்ணி | மாநஸ ஸாக்ஷாத்காரமாக அநுபவித்து |
| அவனை காண | அப்பெருமானைக் கண்ணாரக் காணவேண்டி |
| நன்கு உருகி கூப்பிட்ட | நன்றாக உள்ளமுருகி ஒவென்று ஓலமிட்ட |
| அண்ணலை | ஆழ்வாரை |
| நண்ணார் | அடிபணியாதவர்கள் |
| ஏழையர் | அவிவேகிகளாவர். |

***கீழ்த் திருவாய்மொழியாகிய *கற்பாரிராமபிரானில் அநுஸந்திக்கப்பட்ட குணங்களோடுகூட அப்பெருமானது வடிவழகும் பெருமேன்மையும் ஆழ்வாருடைய திருவுள்ளத்திற்கு விஷயமாக, அவற்றோடு கூடின அப்பெருமானைக் கண்ணாரக் காணவேணுமென்னு மாசைகிளர்ந்து கூப்பிட்ட திருவாய்மொழியாம் * பாமருமூவுலகுமென்பது. அங்ஙனம் கூப்பிட்ட ஆழ்வாரை ஆச்ரயியாதவர்கள் அறிவிலிகளான நீசரேயாவர் என்றதாயிற்று. வேண்டப்பாடாவது ஸர்வாதிகத்வம், * பாமரு மூவுலகும் படைத்த * பாமருமூவுலகுமளந்த * இத்யாதிகளால் ஸர்வாதிகத்வமும் * தாமரைக்கண்ணாவோ * தாமரைக் கையாவோ *இத்யாதிகளால் அழகும் பேசப்பட்டமை அறிக.

கீழ்த்திருவாய்மொழியாகிய * கற்பாரிராமபிரானில் பரோபதேசம் ஸ்பஷ்டமாக இல்லையாயினும் பரோபதேசத்திலேயே முழு நோக்காயிருக்கும். * கற்பாரிராமபிரானை யல்லால் மற்றுங் கற்பரோ * நாரணற்காளன்றியாவரோ * கண்ணற்காளன்றி யாவரோ * என்று இங்ஙனே பாட்டுத்தோறும் படர்க்கையாகவே அருளிச்செய்திருந்தாலும் முன்னிலையாக அருளிச்செய்வதிலேயே ஆழ்வாருடைய திருவுள்ளம் ஊன்றியிருக்கும். பாவிகாள்! இழந்துபோகிறீர்களே! என்று ஸம்ஸாரிகளை நோக்கிப் பரிதபித்துக் கூறுதலும், அப்படி இழவாதேகொள்ளுங்கள் என்று உபதேசித்தலுமே கீழ்த்திருவாய்மொழிக்கு ப்ரமேயமாயிருக்கும். அங்ஙனே பிறருடைய இழவுக்கு நொந்துபேசின ஆழ்வார் தம்மை நிரூபித்துப் பார்த்தார். பிறர் இழந்திருப்பது நாஸ்திக்யத்தாலே; அப்படிப்பட்ட இழவு தமக்கில்லையா

னும், எம்பெருமானைப் பரிபூர்ணமாக அநுபவிக்கவேணுமென்கிற விருப்பம் தமக்குக் குறையற உண்டாயிருக்கச் செய்தேயும் அவ்வநுபவம் பெறுமையினாலேயான இழவு பொறுக்க வொண்ணாதிருந்ததனால், தம்முடைய ஆர்த்தியெல்லாம் தோற்றப் பரமபத நாதனுடைய திருச்செவியளவும் படும்படியாகப் பெருமிடறு செய்து கூப்பிடுகிறார் * பாமரு மூவுலகு மென்கிற திருவாய்மொழியில் என்றதாயிற்று. .... .... (66)

—— :o:——

## ஸ்ரீராமாநுஜன் சந்தா செலுத்தியவர்கள்

109. ஸ்ரீ K. ராமஸ்வாமி ரெட்டியார், Chepauk.
110. A. S. மணிவண்ண முதலியார், Secunderabad.
111. D. Krishnamoorthi, Lakshmeepuram (Madras).
112. V. Ayengar, Bangalore.
113. Vanamamalai Venkatarangacharyar, Bombay.
114. K. S. S. Ramanujam, Calcutta.
115. Shamayyangar, Rajapalayam.
116. V. Srinivasalu Naidu, Adyar, Madras.
117. G. கன்னைய நாயுடு, Choolai, Madras.

---

## ஸ்ரீமந்நிகமாந்ததேசிக மஹோத்ஸவம்.

ஸ்ரீமத்வேதாந்த தேசிகரின் திருவவதாரம் காஞ்சீபுரியில் ஸ்ரீ தீபப்ரகாசன் ஸந்நிதியாகிய திருத்தண்காவின் பரிஸரத்திலாதலால் அததலத்தில் திருக்கோலங்கொண்டெழுந்தருளியிருக்கும் ஸ்வாமிக்குப் புரட்டாசித் திருவோணமளவாக 10 நாள் வருஷத் திருநக்ஷத்திரமகோத்ஸவம் வெகு சிறப்பாக நடந்து தலைக்கட்டிற்று. தினந்தோறும் காலை மாலைகளில் கிழக்கே தேவப்பெருமாள் மாடவீதிகளிலெழுந்தருளி நடைபெறும் இம்மஹோத்ஸவம் இடையில் சிலவாண்டுகளில் ஸாமான்யமாக நடைபெற்று வந்தது. இவ்வாண்டில் ஸ்ரீமான் உ. வே. கந்தாடை. ஸ்ரீராமதாசரதி ஐயங்காருடைய பெருமுயற்சியினால் வெகு விபவமாக நடைபெற்றது. காலை வேளைகளில் நியமேந திருப்பல்லக்கும், மாலை வேளைகளில் ஒவ்வொரு நாள் ஒவ்வொரு வாஹனமுமாக நடைபெற்றது. சாத்துமுறை நன்னாளில் தேவப்பெருமாள் ஸந்நிதிக்கெழுந்தருளி மங்களாசாஸந மஹோத்ஸவமும் வெகு சிறப்பாக நடந்தேறியது. மறுநாள் காலை விளக்கொளியெம்பெருமானோடு கூட *கந்தப்பொடிவஸந்த மஹோத்ஸவமும் விலக்ஷணமாக நடந்தது. ... ... ... ... ... *

## திருவல்லிக்கேணி வேதவேதாந்தவர்த்திநீஸபை.

தொண்ணூற்றைந்து வருடங்களுக்குமுன்பு பல ஸ்ரீவைஷ்ணவ தனதனவான்களால் திருவல்லிக்கேணியில் ஸ்தாபிக்கப்பட்டுள்ள வேதவேதாந்த வர்த்திநீஸபையை அறியாதாரில்லை. இந்த ஸபையின் வருஷக்கொண்டாட்டம் ஆவணியில் அல்லது புரட்டாசியில் நடைபெறுவது வழக்கம். இவ்வருஷத்தில் நிகழும் புரட்டாசி மாதத்தில் 25-9-63 முதல் 29—9—63 வரைஐந்துநாள் சிறப்பாக நடைபெற்றது. இது தொண்ணூற்றைந்தாமாண்டுவிழா என்று பரமசந்தோஷத்துடன் தெரிவிக்கிறோம். முந்தின நான்கு நாட்களில் ஸ்ரீவானமாமலை மடத்தில் வித்வான்களைக்கொண்டு உபந்யாஸங்கள் நடத்திவைக்கப்பட்டன. 29—9—63 ஞாயிற்றுக்கிழமையாகிய ஸமாப்திதினத்தில் ஸ்ரீ பார்த்தஸாரதிஸ்வாமி ஸந்நிதியினுள் கல்யாணமண்டபத்தில் வித்யார்த்திகளுக்கும் வித்வான்களுக்கும் ஸந்மானமளிக்கப்பட்டதுடன் உபந்யாஸமும் நடைபெற்றது. ஸ்ரீ உ. வே. (ரிடைர்ட் ஸெஷன் ஜட்ஜ்.) P. M. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமியும். ஸ்ரீ உ. வே. அட்வகேட். ஆசால் சேஷாசாரியர் ஸ்வாமியும் பொறுப்புவஹித்து இந்த ஸபையின் காரியங்களை ஒழுங்குபட நிர்வஹித்து வருவது குறிப்பிடத்தக்கது. வாழ்க வாழ்க நீடூழிவாழ்க. .... .... .... *

## நல்வார்த்தை நானூறு—முன் தொடர்ச்சி.

181. உலகில் பிரசாரத்திலிருந்து வரும் பலவகைப்பட்ட மதங்களுள் பரமபவித்திரமான விசிஷ்டாத்வைத தர்சநம் மிகச்சிறந்து விளங்குகின்றது. ப்ரமாணம், ப்ரமாதா, ப்ரமேயம் என்ற மூன்று வகுப்புகளும் நம் தர்சனத்தில் சீர்மை பெற்று விளங்குவன. திருவாய்மொழியின் உபக்ரமத்தில் * சுடர் மிகு சுருதியென்று ஆழ்வாரால் கொண்டாடப்பட்ட வேதமே நமக்கு ப்ரமாணங்களில் தலையானது. யதார்த்த ஜ்ஞான நிதிகளான ஸ்ரீமந்நாதமுனிகள் ஆளவந்தார் எம்பெருமானர் போல்வாரான மஹாசார்யர்களே ப்ரமாதாக்களில் தலைசிறந்து விளங்குபவர்கள். ஸகல சேதநசரீரகனுய் ஸமஸ்தகல்யாண குணத்மகனன ஸ்ரீமந்நாராயணனே பரதத்துவமென்றும்; அவனுடைய திருவடித் தாமரைகளில் பண்ணும் ப்ரபத்தியே பரமஹிதமென்றும், * நலமந்தமில்லதோர் நாட்டிலே நித்யாநந்த மயமான நித்ய கைங்கர்யமே பரமபுருஷார்த்தமென்றும் இங்ஙனே கூறப்படும் அர்த்த விசேஷங்களே ப்ரமேய ச்ரேஷ்டங்களாக விளங்குகின்றன. ஆக இத்தகைய ப்ரமாண ப்ரமாத்ரு ப்ரமேய வைசிஷ்ட்யமே நமமுடைய தர்சனத்தின் சிறப்புக்கு ஹேதுவாகா நின்றது.

182. இதிஹாஸ புராணுதிகளான உபப்ரும்ஹணங்களோடும், ஆழ்வாரருளிச்செயல்களோடும் கூடின வேதம் நமக்குப் பரம ப்ரமாணம. பாமவைதிகர்களென்கிற ஏற்றம் நமக்கே உரியது. ப்ரத்யக்ஷத்தாலோ அநுமானத்தாலோ அறிந்துகொள்ள முடியாத அர்த்த விசேஷங்களை யறிவிக்கும் வாங்மயமே வேதமெனப்படும். *ப்ரத்யக்ஷேணுநுமித்யா வா யஸ்தூபாயோ ந புத்யதே, யத் தம் விதந்தி வேதேந தஸ்மாத் வேதஸ்ய வேதா * என்கிற ப்ரமாணம் இங்கே அநுஸந்தேயம். வேதத்தை ப்ரமாணமாக இசையாத சார்வாக ஜைந பௌத்தாதிகள் பாஹ்யர்களெனப்படுவர். வேதத்தைப் பரம ப்ரமாணமாக இசைந்து வைத்தும், பரப்ரஹ்மம் குணசூந்யமென்றும் அலக்ஷ்மீகமென்றும் விபூதிவிரஹிதமென்றும் இங்ஙனே மனம்போனபடியெல்லாம் பேசுபவர்கள் குத்ருஷ்டிகளெனப்படுவர்கள். பாஹ்யர்களோடு குத்ருஷ்டிகளோடு ஒருவாசியில்லை யென்றருளிச் செய்கிறுர் கூரத்தாழ்வான். ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில் * பாஹ்யா: குத்ருஷ்டய இதி த்விதயேப்யபாரம் கோரம் தமஸ் ஸமுபயாந்தி ந ஹீக்ஷஸே தாந், ஜக்தஸ்ய காநநம்ருகைர் ம்ருகத்ருஷ்ணிகேப்ஸோ: காஸாரஸத்வநிஹதஸ்ய ச கோ விசேஷ:?* என்றுள்ள ச்லோகம் இங்கே காண்க. பாஹ்யர்களும் குத்ருஷ்டிகளும் துல்யோக க்ஷேபர்களென்பதற்கு அற்புதமான த்ருஷ்டாந்தம் காட்டுகிறுரிதில்; விடாய் மிகுத்துத் தண்ணீரைத் தேடியோட இரண்டு மிருகங்கள் புறப்பட்டன. அவற்றில் ஒரு மிருகமானது தடாகத்தில் புகாதே கானலைக்கண்டு பாநீயப்ரவாஹமாக மயங்கி ஓடிக்கொண்டேயிருக்கையில் புலியின் வாயிலே விழுந்து மாண்டொழிந்தது. இது இப்படியாக, மற்றொரு மிருகமானது விடாய்தீரப் பெறுவதற்கு உண்மையாகத் தண்ணீருள்ள தடாகத்திலேயே சென்று சேர்ந்தும் துறைகப்பியிழிபவே அங்குக் கிடந்த வொரு முதலையினுலே கதுவப்பட்டு மாண்டொழிந்தது. ஆக இரண்டு மிருகங்களும் தடாக ப்ரவேஶ அப்ரவேஶங்களாலே சிறிது வைலக்ஷண்யம் பெற்றிருந்தாலும் விநாசத்தில் துல்யபலமே, அதுபோலவே குத்ருஷ்டிகளும் பாஹ்யர்களும் வேதப்ராமாண்ய அங்கீகார அநங்கீகாரங்களாலே சிறிது வாசிபெற்றிருந்தாலும் விநாசத்திலே வாசியற்றவர்களே யென்றதாயிற்று. அந்த பாஹ்யர்களும் குத்ருஷ்டிகளும் கிடக்கட்டும். வேதக் கடலில் நாம் உள்ளபடி அவகாஹித்து அர்த்த ரத்னங்களைக்கொண்டு அநுபவித்து ஆனந்திக்கக்கடவோம்.

1:3. வேதம் கர்மகாண்ட மென்றும் ப்ரஹ்மகாண்ட மென்றும் இரு வகுப்பாகவுள்ளது. பூர்வபாகம் கர்மகாண்டமென்றும். உத்தரபாகம் ப்ரஹ்மகாணடமென்றும் வழங்கப்

படும். உபநிஷத்துக்களையே ப்ரஹ்மகாண்டமென்பது. பகவானுக்கு ஆராதனரூபங்களான யஜ்ஞம் முதலிய கரும விசேஷங்களை விரிவாகக் கூறும் வேதபாகம் கர்மகாண்டமென்றும், அக்கருமங்களினால் ஆராதிக்கப்படுகின்ற பகவானுடைய ஸ்வரூப ரூபகுணங்களை விரிவாகக் கூறும் வேதபாகம் ப்ரஹ்மகாண்டமென்றும் சொல்லிற்றாயிற்று. இதுவே உபநிஷத்தென்கிற பெயராலும் வழங்கும். 'உப-நிஷீததி.' என்கிற வ்யுத்பத்தி கொண்டது உபநிஷத்தென்கிற பதம். பகவானுடைய அருகேயுள்ளதென்கை. *வேதைச் ச ஸர்வைரஹமேவ வேத்ய:* என்கிற கீதையின்படி கர்மகாண்டமுங்கூட பகவானை ப்ரதிபாதிக்கவல்லதேயாயினும் அந்த ப்ரதிபாதனம் வ்யவஹிதமாயிருக்கும். உபநிஷத்து அவ்யவதாநேந ப்ரதிபாதகமாயிருக்கும்.

184. கர்மகாண்டத்தில் தோன்றும் ஶங்கைகளைப் பரிஹரிப்பதற்காக ஜைமிநியென்னும் மஹர்ஷியெழுந்து பதினாறு அத்யாயங்களோடு கூடிய ஒரு சாஸ்த்ரத்தை யியற்றினார். அதற்குப் பூர்வமீமாம்ஸையென்று பெயர். இதில் பன்னிரண்டு அத்யாயங்களே ஜைமினியால் இயற்றப்பட்டவையென்றும், மேல் நான்கு அத்யாயங்கள் காஶக்ருத்ஸ்ந மஹர்ஷியால் இயற்றப்பட்டவை யென்றும் ஒரு பக்ஷமுண்டு. இதைப்பற்றி இங்கு விசாரவிரிவு வேண்டா. *வ்ருத்திக்ரந்தே து ஜைமிந்யுபரசிததயா ஷோடஶாத்யாய்யுபாத்தா* இத்யாதியான அதிகரண ஸாராவளிச்லோகம் காண்க. "ஜைமிநீயம் ஷோடஶலக்ஷணம்" என்பது பொதுவான வார்த்தை. போதாயந வ்ருத்திக்ரந்தத்தில் பதினாறு அத்யாயங்களும் ஜைமினிப்ரோக்தமென்று கூறப்பட்டுள்ளது. (லக்ஷணமென்று அத்யாயத்திற்குப் பெயர்.) ப்ரஹ்மகாண்டமென்னும் உபநிஷத் பாகத்தில் தோன்றும் சங்கைகளைப் பரிஹரிப்பதற்காக வ்யாஸ மஹர்ஷி யெழுந்து நான்கு அத்யாயங்கள் கொண்டவொரு ஶாஸ்த்ரத்தை இயற்றினார். அதற்கே ஶாரீரகமீமாம்ஸை யென்று பெயர். உத்தரமீமாம்ஸை யென்றும் வழங்குவர். ப்ரஹ்மஸூத்ரமென்பது இதனையே. ஒவ்வோரத்யாயத்திலும் நான்கு பாதங்களுள்ளன. ஆகவே பதினாறு பாதங்கள் கொண்டது ஶாரீரகமீமாம்ஸை யென்றதாயிற்று. இதில் ஒவ்வொரு விஷயத்தைப்பற்றி சர்ச்சை செய்து நிர்ணயிக்கும் பகுதிக்கு அதிகரணமென்று பெயரிடப்பட்டுள்ளது. அப்படிப்பட்ட அதிகரணங்கள் இந்த மீமாம்ஸையில் (156) நூற்றைம்பத்தாறு உள்ளன. சில அதிகரணங்களில் ஒரே ஸூத்ரமிருக்கும். பல அதிகரணங்களில் பல ஸூத்ரங்களிருக்கும். மொத்தம் ஸூத்ரங்களின் லக்கம் (545) ஐந்நூற்று நாற்பத்தைந்து என்று கணக்கிடப்பட்டிருக்கின்றது. ஆக, நான்கு அத்யாயங்களையும், பதினாறுபாதங்களையும் நூற்றைம்பத்தாறு அதிகரணங்களையும் ஐந்நூற்று நாற்பத்தைந்து ஸூத்ரங்களையுங் கொண்டது ப்ரஹ்மஸூத்ர சாஸ்த்ரமென்றதாயிற்று.

185. தத்வஹித புருஷார்த்தங்களை நாம் தெரிந்துகொள்வதற்கு உபநிஷத்துக்களே தஞ்சமாகும். அவ்வுபநிஷத்துக்களின் பொருள்களை ஸம்ஶய விபர்யயமற நிஷ்கர்ஷித்து விளக்கக்கூடியது இந்த ப்ரஹ்மஸூத்ர ஶாஸ்த்ரமேயாதலால் வேதாந்திகளுக்கு இதுவே புகலாயிற்று. இந்த ஶாஸ்த்ரத்தின் பொருளை நிஷ்கர்ஷமாகவும் நிஷ்கல்மஷமாகவும் தெரிந்துகொண்டவர்களே வேதாந்திகளென்றும் ப்ரஹ்மஜ்ஞானிகளென்றும் சொல்லத் தகுதியுடையார். மஹர்ஷிகளியற்றிய ஸூத்ரங்களின் பொருளை நம்போல்வார் சிறிதும் அறியகில்லார்களாதலால், நம்போன்ற அல்பமதிகளிடத்தில் பரமகருணைகொண்ட பூருவர்கள் அந்த ஸூத்ரங்களின் அர்த்தத்தை விளக்கி பாஷ்யங்கள் இயற்றியுள்ளார்கள். த்வைதம் அத்வைதம் விசிஷ்டாத்வைதம் என மூன்று மதங்கள் உலக ப்ரஸித்தமாக வழங்குமவை.

## சேலமாநகரில் P. B. A. ஸ்வாமிக்குப் பொன்னுடை போர்த்தல் (ஸ்ரீசங்கரமடம்)—7-8-63



இம் மூன்று மதங்களிலும் பாஷ்யங்கள் அவதரித்துள்ளன. அத்வைத மதத்திற்காக ஶங்கராசாரிய ஸ்வாமிகள் பாஷ்யமியற்றினர். த்வைத மதத்திற்காக ஆனந்த தீர்த்தஸ்வாமிகள் (மத்வாசார்) பாஷ்யமியற்றினர். நமது விசிஷ்டாத்வைத மதத்திற்காக பகவத்ராமாநுஜாசார்யரென்கிற ஸ்வாமி யெம்பெருமானர் ஸ்ரீபாஷ்யமருளிச் செய்தார். வட இந்தியாவில் அதிக ப்ரஸித்திபெற்றுள்ள வல்லப மதம் நிம்பார்க்க மதம் முதலிய மதங்களுக்காகவும் பாஷ்யங்கள் தோன்றியுள்ளன. சைவ மதத்திற்காக நீலகண்ட பாஷ்யம் தோன்றியுள்ளது. இப்படி மற்றும் பல பாஷ்யங்களிருந்தாலும் மதத்ரயபாஷ்ய மென்று மூன்று பாஷ்யங்களே நமது நாட்டில் குலாவப்படுகின்றன. ஸ்ரீவைஷ்ணவர்களென்றும் விசிஷ்டாத்வைதிகளென்றும் பகவத்ராமாநுஜ தர்சநஸ்தர்களென்றும் வழங்கப்படுகின்ற நமக்கு ஸ்வாமியின் ஸ்ரீபாஷ்யமே ஜீவாதுவாகும். ஶங்கரபாஷ்யம் மத்வபாஷ்யம் நீலகண்டபாஷ்யம் என்பவைபோலல்லாமல் ஸ்ரீபாஷ்யமென்றே தோன்றியுள்ள ப்ரஸித்தி இதன் ஒப்பற்ற பெருமையைப் புலப்படுததுமென்று விமதர்களும் எழுதி வைத்திருக்கின்றார்கள்.

186. உபநிஷத்துக்களின் உண்மைப் பொருளை விளக்கி ஸூத்ரகாரருடைய உள்ளத்திற்கு ஒத்ததாக நிஷ்பக்ஷபாதமாய் நிரூபிக்கப்பட்டது ஸ்ரீபாஷ்யமேயென்று மேனாட்டுப் புலவர்களும் மெச்சியுள்ளார்கள். அதுநிற்க: ஸ்வாமி ஸ்ரீபாஷ்யமருளிச் செய்யத் தொடங்கும்போதே "பகவத்போதாயநக்ருதாம் விஸ்தீர்ணாம் ப்ரஹ்மஸூத்ரவ்ருத்திம் பூர்வாசார்யாஸ் ஸஞ்சிக்ஷிபு:; தந்மதாநுஸாரேண ஸூத்ராக்ஷராணி வ்யாக்யாஸ்யந்தே" என்று [முன்னோர் மொழிந்த முறை தப்பாமே வியாக்யானிப்பதாக] அருளிச் செய்திருப்பதனால்

## ஸ்ரீகாஞ்சீ P. B. A. ஸ்வாமிகளின் உபந்யாஸ கோஷ்டி, சேலம்.

வாஸவி மஹால், 1963ஆ ஆகஸ்டுமீ 8, 9 தேதிகள்.



---

ஸ்ரீபாஷ்யத்தின் ப்ராமாணிகத்வம் அசைக்கமுடியாது விளங்குகின்றது. இக்காலத்து அஸூயுக்கள் சிலர் மேலே உதாஹரித்த பங்க்தியின் மேல் வீணை விவாதத்தைக் கிளப்பி ஹம்ஹமடைந்துபோனார்களென்பது நம்முடைய சதபூஷணீவஜ்ரகுடார—தத்விஜயத்வஜ—ஶாங்கரஶிரோபூஷா—தத்விபூஷணதிக்ரந்தங்களினால் விசதமாதலால் அதனை ஈண்டு விவரித்துரைக்கின்றிலோம். ஆர்ஷவ்யாக்யாநகவசிதமாயும் அதிப்ராசீநமாயும் பரமபவித்ரமாயுமுள்ளது விசிஷ்டாத்வைதமேயென்றும், அதை நிலைநாட்டவல்ல பாஷ்யம் ஸ்ரீபாஷ்யமேயென்றும் ப்ராமாணிக வைதிகோத்தமர்களின் கொள்கை.

187. விசிஷ்டாத்வைத ஸித்தாந்த மென்னுஞ் சொல்லுக்குப் பொருள் விவரிக்கப்படுகிறது. ஸித்தாந்த மென்பதற்கு ப்ராமாணிகமாகப் பரிக்ரஹிக்கப்பட்ட அர்த்தமென்று தேர்ந்த பொருள். மதம் என்றவாறு. இரண்டாயிருக்குந்தன்மை த்விதா எனப்படும். த்வைத மென்றாலும் அதுவே பொருள். பேதம் என்றதாயிற்று. அத்தோடு (நஞ்) சேர்ந்தால் அத்வைதம் என்றாகிறது. அபேதமென்று பொருள். விசிஷ்டஸ்ய அத்வைதம்—விசிஷ்டாத்வைதம். ஸமஸ்தசேதநாசேதநவஸ்துக்களோடு கூடின ப்ரஹ்மம் ஒன்று என்று அங்கீகரிக்கப்படுவதால் இந்த தரிசனம் விஶிஷ்டாத்வைதமெனப்படுகிறது. சித்தும் அசித்துமாகிய இரண்டு தத்துவங்கள் உண்மையில் கிடையவே கிடையாதென்றும் ப்ரஹ்மமொன்றே உள்ளதென்றும் கொள்ளுகின்ற பிறருடைய மதத்தைத் தள்ளி, மூன்று தத்துவங்களும் உண்மையாகவுள்ளனவென்று கொள்ளுவதே இந்த தரிசனத்தில் ஸாரமானது.

188. ‘விசிஷ்டஸ்ய அத்வைதம்—விசிஷ்டாத்வைதம்’ என்று கொள்ளுகையன்றிக்கே, ‘விசிஷ்டம் ச விசிஷ்டம் ச விசிஷ்டே; விசிஷ்டயோ: அத்வைதம் — விசிஷ்டாத்

வைதம்' என்று கொண்டு ஸூக்ஷ்ம சிதசித்விசிஷ்ட ப்ரஹ்மத்திற்கும் ஸ்தூல சிதசித் விசிஷ்டப்ரஹ்மத்திற்கும் ஐக்கியம் கொள்ளுகை விசிஷ்டாத்வைதம்—என்பாருமுளர். இதில் உபபத்தி காண்பதரிது. விசிஷ்டஸ்ய அத்வைதமென்பதே உபபந்நமாகும். 'ப்ரஹ்ம மொன்றே ஸத்யமானது; மற்றவையெல்லாம் மித்த்யை' என்று சொல்லுகிற அத்வைதி கள் ப்ரஹ்மத்தினிடத்தில் சிதசித் விசிஷ்டத்வத்தை ஒப்புக்கொள்ளுவதில்லை. ப்ரஹ்மம் போலவே ஜகத்தும் ஸத்யமேயென்று அங்கீகரிக்கிற த்வைதிகளும் [மாத்வர்களும்] சேதநா சேதநங்களுக்கும் ப்ரஹ்மத்திற்குப் ரக்ஷ்யரக்ஷகபாவ ரூபமான ஸம்பந்தம் தவிர ஐக்யவ்யப தேசத்திற்குரிய ஸம்பந்த விசேஷமொன்றும் அங்கீகரிக்கின்றிலர். ஆகவே அவர்களும் ப்ரஹ்மத்தினிடத்தில் சிதசித்வைசிஷ்ட்யத்தை ஏற்றுக்கொள்வதில்லை யென்பது தேறிற்று. நமது ஸித்தாந்தத்திலோவென்னில், சேதநாசேதநாத்மகமான ப்ரபஞ்சத்தையும் ப்ரஹ்மத் தையும் ஸத்யமென்று கொள்வதோடு அவற்றுக்கு ஐக்யவ்யபதேசத்தை நிர்வஹிக்கக் கூடி யதான சரீர சரீரிபாவரூபமான ஸம்பந்த விசேஷத்தையும் கொள்வதனாலே, உலகத்தில் உடலுக்கும் உயிருக்கும் வேற்றுமை அபலபிக்க முடியாததாயிருக்கச் செய்தேயும் "சைத்ர: ஏக:" என்கிற வியவஹாரம் எப்படி காணப்படுகிறதோ அப்படியே இங்கும் சேதநாசேதந சரீரகமான ப்ரஹ்மத்திற்கு ஏகத்வேந வ்யபதேசமும் பரஸ்பரம் ஸ்வரூபபேதமும் பொருந் தக் குறையில்லை. இவ்வர்த்ததத்துவத்தைக் காட்டவல்லதான 'விசிஷ்டஸ்ய அத்வைதம்- விசிஷ்டாத்வைதம் என்னும் வ்யுத்பத்தியே யுக்தமானதென்று கொள்க.

189. ச்ருதிவாக்யங்களை யுற்று நோக்கினால் அவற்றில் இருவகையான பாகுபாடு காணப்படும். (1) பேதத்தையே காட்டும் சில வாக்யங்கள். (2) அபேதத்தையே காட்டும் சில வாக்யங்கள். * க்ஷரம் ப்ரதாநம் அம்ருதாக்ஷரம் ஹர: க்ஷராத்மாநாவீசதே தேவ ஏக:* *[illegible]* என்பது முதலான ச்ருதி வாக்யங்கள் சேதந—அசேதந— ஈச்வரரூப தத்வத்ரயத்தின் உண்மையைத் தெரிவிக்கும் முகத்தால்பேதத்தைக் காட்டுகின்றன. *நேஹ நாநாஸ்தி கிஞ்சந* *ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம* தத் த்வமஸி* இத்யாதிகளான ச்ருதி வாக்யங்கள் பலவகைப்பட்ட வஸ்துக்களில்லாமையைத் தெரிவிக்கும் முகத்தால் அபேதத் தைக் காட்டுகின்றன. ஆக ச்ருதிகளில் சிலவிடத்து பேதப்ரதிபாதநமும் சிலவிடத்து அபேத ப்ரதிபாதநமுமிருப்பதாகத் தேறுகையாலே பரஸ்பர விரோதம் ஸ்பஷ்டமாகிறது. விருத்த மான அர்த்தத்தைத் தெரிவிக்கையாகிற அவத்யம் ச்ருதிகளில் இடம் பெறத்தகாது. விரோதமோ உள்ளதென்று காட்டியாயிற்று. விரோதத்தைப் போக்கி ஸமந்வயம் காட்ட வேண்டிய பொறுப்பு விமர்சகுசலர்களான வைதிகர்களுக்குள்ளது. ப்ரஹ்மமொன்றுதான் ஸத்யமென்று கொள்ளுகிற அத்வைதிகள் அபேதத்தைக் காட்டும் ச்ருதிவாக்யங்களை மட்டும் முக்கியமாகப் பரிக்ரஹித்து பேதத்தைக் காட்டும் ச்ருதிவாக்யங்களை உபேக்ஷித்து விட்டார் கள். த்வைதிகளோவென்னில் பேதத்தைக் காட்டும் ச்ருதி வாக்யங்களை மட்டும் முக்கிய மாகப் பரிக்ரஹித்து அபேதத்தைக் காட்டும் ச்ருதி வாக்யங்களை உபேக்ஷித்துவிட்டார்கள்.

190. *யஸ்யாத்மா சரீரம், யஸ்ய ப்ருதிவீ சரீரம். ய ஆத்மநி திஷ்டந்* இத்யாதி வாக்யங்கள் பகவான் ப்ருதிவிமுதல் ஆத்மாவரையிலுமுள்ள ஸகல வஸ்துக்களிலும் அந்தர் யாமியாயிருக்கிறானென்பதை ப்ரதிபாதிக்கின்றன; இவற்றை த்வைதிகளும் அத்வைதிகளு மான இரு வகுப்பினரும் அறவே விட்டிட்டார்கள். ஸுபாலோபநிஷத்து முதலான அந்தர் யாமி ப்ராஹ்மணவாக்யங்களுக்கு உபய மதத்திலும் ஆதரவு கிடையாதென்பது ஸ்பஷ்டம். ஆக, த்வைதாத்வைத மதங்களிரண்டிலும் அநேக ச்ருதி வாக்யங்களை அமுக்யார்த்தங்

ளாகக் கொள்ளுதல் உபேக்ஷித்தல் இத்யாதியான பலீயஸ்ஸான தோஷமுள்ளது. இத்தகைய தோஷம் சிறிதும் தட்டப்பெறுதது விசிஷ்டாத்வைத ஸித்தாந்தமொன்றே.

191. பேத–அபேத–கடகச்ருதிகளான மூன்று வகுப்பான ச்ருதிவாக்யங்களேயும் ஒரு நிகராக ஆதரிப்பவர்கள் விசிஷ்டாத்வைதிகளேயாவர். ஒரு ச்ருதிவாக்யத்திலும் அமுக்யார்த்த கல்பனை யென்பதுகிடையாது. எங்ஙனேயென்னில், கடைசியாக எடுத்துக்காட்டப்பட்ட * யஸ்யாத்மா ஶரீரமித்யாதிகளான ச்ருதி வாக்யங்களுக்கு கடக ச்ருதிகளென்றன்றோ பெயர். பேதத்தையும் அபேதத்தையும் விரோத லேஶமுமின்றிக்கே ஸம்நவயப்படுத்திக் கொடுக்கிற * யஸ்ய ப்ருதிவீ சரீர மித்யாதிகளான ச்ருதிவாக்யங்களுக்கு கடகச்ருதிகளென்னும் பெயர் மிகப் பொருத்தமானது. *நேஹ நாநாஸ்தி கிஞ்சந* இத்யாதிகளான அத்வைத (அபேத) ச்ருதிகளினுலேற்பட்ட அபேதத்தையும் * க்ஷரம் ப்ரதாநமம்ருதாக்ஷரம் ஹர: * இத்யாதிகளான த்வைத (பேத) ச்ருதிகளினுலேற்பட்ட பேதத்தையும் பொருந்தவிடும் வழி கேண்மின். சேதநாசேதந ஈச்வரர்களான மூன்று தத்துவப் பொருள்களின் ஸ்வரூபபேதம் உண்மையாதலால் * க்ஷரம் ப்ரதாநமித்யாதி பேத ச்ருதியானது பேதத்தைச் சொல்லியிருப்பது பாங்கே. ப்ரஹ்மம் சேதநாசேதந விசிஷ்டமாய்க்கொண்டு ஒன்றேயாகிறபடியால் *ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம * இத்யாதியான அபேத ச்ருதிகளும் பொருந்தக் குறையில்லை. *யஸ்யாத்மா சரீரமித்யாதி அந்தர்யாமி ப்ராஹ்மண ச்ருதிகளானவை ஸர்வேச்வரனை ஸர்வாந்தர்யாமி யென்று தெரிவிக்கும் முகத்தால் பேதத்தையும் அபேதத்தையும் பொருந்த விடுகின்றன.

192. ஆத்மாவும் ஶரீரமும் ஒன்றல்ல, வெவ்வேறுபட்டவை. சரீரத்தில் அவயவங்களும் பலபல. ஆக அநேக வஸ்துக்களிருக்கச் செய்தேயும் ஏகத்வவ்யவஹாரம் நிகழ்ந்து வருவது ஶரீர விசிஷ்டனை ஶரீரி ஒருவன்' என்னுமபிஸந்தியாலத்தனையன்றோ. இவ்வண்ணமாகவே 'ப்ரஹ்ம ஏகமேவ' என்ற ச்ருதியும் விஶிஷ்டைக்யத்தைச் சொல்லுவதாகக் கொள்ளக்குறையில்லையே. எவஞ்ச, பேதத்திற்கும் அபேதத்திற்கும் அபாயமொன்றுமில்லை யென்றதாயிற்று. ஶரீரங்களும் ஶரீரிகளுமாகிற நாநாவஸ்து ஸத்பாவம் ப்ராமாணிகமாகையாலே அபலபிக்க வொண்ணுததே. இங்ஙனே விஶிஷ்டைக்யமும் அநுபவஸித்தமாகையாலே அபலபிக்க வொண்ணுததே. ஆக, உண்மையில் வெவ்வேறுபட்ட வஸ்துக்களும் ஶரீர ஶரீரி பாவ நிபந்தநமாகவே ஒன்ருக வழங்கப்படுவதாய் ஸித்திக்கையாலே அப்படிப்பட்ட ஶரீர ஶரீரி பாவத்தையுணர்த்துகின்ற அந்தர்யாமி ப்ராஹ்மணுதி ரூபங்களான ச்ருதி வாக்யங்களுக்கு விசிஷ்டாத்வைத மதத்தில் மிகுந்த கௌரவமுள்ளது. அத்வைதிகள் பேதச்ருதிகளை அநாதரிப்பது போலவும், த்வைதிகள் அபேதச்ருதிகளை அநாதரிப்பதுபோலவும் நாம் ஒரு வகை ச்ருதியிலும் அநாதரம் காட்டுகின்றிலோம். ஆகவே ஸர்வச்ருதிஸாமரஸ்யம் நமக்கே யொழியப் பிறர்க்கில்லை யென்பது கல்வெட்டாகத் தேறி நின்றது.

193. மதாந்தரஸ்தர்கள் ஒப்புக்கொள்ளாத பல அர்த்தங்களை நாம் ஒப்புக்கொண்டிருக்கின்றோம்; நித்யஸூரிஸத்பாவம், எம்பெருமானுடைய கல்யாணகுணுகரத்வம், திவ்ய மங்கள விக்ரஹ விசிஷ்டத்வம் முதலானவை அவை; இவற்றையெல்லாம் விட்டு சரீர சரீரிபாவத்தையே கொண்டு விசிஷ்டாத்வைதமென்று பெயரிடுவதில் என்ன விசேஷமென்னில், கேண்மின். ஸித்தாந்தத்தில் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கின்ற அர்த்த விசேஷங்களுள் ஜகச்சரீரகத்வ மென்பதே ப்ரதாநமானது. ஆனதுபற்றியே இது ப்ரதாந ப்ரதிதந்த்ரார்த்த

மெனப்படுகிறது. இதுவே ப்ரதானமென்பது எங்ஙனமென்னில்; ஸர்வ ச்ருதிகளினுடையவும் முக்கியமான அர்த்தத்தைத் தெரிவிப்பதாய், ஸர்வச்ருதிகளுக்கும் ஸாமரஸ்யத்தை நிர்வஹித்து வாதிவிஜய ப்ரயோஜகமாயிருப்பதனாலே இதற்கு ப்ராதாந்ய மென்றுணர்க. இந்த ஶரீராத்ம பாவத்தைத் தெரிந்துகொள்ளாமையினாலன்றோ பிறமதத்தவர்கள் ஸர்வ ச்ருதிஸாமரஸ்யத்தை நிர்வஹிக்கமாட்டாமல் தளருகின்றார்கள். குத்ருஷ்டிகளின் குசோத்யங்களை அவலீலயா பரிஹரித்துத் தருவது இந்த ஶரீராத்மபாவமே யென்க. இந்த ப்ரயோக ப்ரதிதந்த்ரார்த்தத்தை நன்கு தெரிந்துகொண்ட வொரு வ்யக்தி நிற்குமிடத்தில் விபதர்கள் எத்தனை பேர்கள் கூடி எவ்வளவு வாதகோலாஹலங்கள் செய்தாலும் அவர்களுக்கு பங்கமே தவிர வேறில்லையென்று மருமமறிந்த மஹாசார்யர்கள் திடமாகக் கூறுகின்றார்கள்.

194. ஸித்தாந்தத்தில் உயிரான ஶரீராத்ம பாவமே ப்ரஹ்மஸூத்ரகாரருக்கும் அபிமதம். இவ்விஷயத்தில் ஶாரீரக மீமாம்ஸை முழுவதுமே ப்ரமாணமாகக் காட்டக் கூடியதாயினும் வ்யுத்பித்ஸுக்களின் புத்தியில் ஏறுவதற்காக ஸம்க்ஷேபமாய் நிரூபித்தல் நல மென்று கருதி, அந்த ஶாரீரகமீமாம்ஸையில் ஒரு அதிகரணத்தைமட்டும் ஈண்டெடுத்துக் காட்டி ப்ராமாணிகர்களின் மனத்தில் பதியவைக்கிறோம். அதில் முதலத்யாயம் நான்காவது பாதத்தில் வாக்யாந்வயாதிகரண மென்பது ப்ரஸித்தமானது. நான்கு ஸூத்ரங்கள் கொண்டது இவ்வதிகரணம். ப்ருஹதாரண்யகத்தில் ப்ரஸித்தமான மைத்ரேயீ ப்ராஹ்மண மென்னும் பகுதியில் அம்ருதத்வோபாயமேதென்று கேட்ட மைத்ரேயியைக் குறித்து யாஜ்ஞவல்க்யருடைய விடை *ஆத்மா வா அரே த்ரஷ்டவ்ய:* என்பது. இதில் ஆத்மா என்னும் ஶப்தத்தால் குறிக்கப்பட்டவன் பரமாத்மாவா? ஜீவாத்மாவா? என்று விசாரம் ப்ரஸக்தமாக, பரமாத்மாவே யென்று நிர்ணயம் செய்வது இவ்வதிகரணத்தின் பிரமேயம். இது *வாக்யாந்வயாத்* என்கிற முதல் ஸூத்ரத்தினால் தேறியது. மைத்ரேயீ ப்ராஹ்மணத்திலுள்ள மஹாவாக்யம் ஸமஞ்ஜஸமாக அந்வயிக்க வேண்டுகையாலே அந்த வாக்யத்தில் பிரதிபாதிக்கப்பட்ட ஆத்மா கரும பலன்களை யநுபவிப்பவனான ஜீவாத்மாவாக இருக்க முடியாது; பரம புருஷனேயாக வடுக்கும்—என்று சொல்லப்பட்டதாயிற்று. இதற்குமேல் ஒரு கேள்வி எழுந்தது; அதாவது, இங்குப் பரமாத்மா விவக்ஷிதனாகில் ஜீவாத்ம வாசகமான ஆத்மா என்கிற ஶப்தத்தை ப்ரயோகிப்பானேன்? பரமாத்மாவென்றே ப்ரயோகிக்கலாகாதா? என்று. இக் கேள்விக்கு ஸூத்ரகாரரால் மேலே மூன்று ஸூத்ரங்களினால் ஸமாதானம் தெரிவிக்கப் பட்டுள்ளது. அடைவே ஆச்மரத்ய மதம், ஔடுலோமி மதம். காஶக்ருத்ஸ்நமதம் என மூவருடைய மதம் காட்டப்பட்டுள்ளது. முறையே ஸூத்ரங்கள் (1) ப்ரதிஜ்ஞாஸித்தேர்லிங்கமாச்மரத்ய:. (2) உத்க்ரமிஷ்யத ஏவம்பாவாதித்யௌடுலோமி:. (3) அவஸ்திதேரிதி காஶக்ருத்ஸ்ந: என்பன.

195. ஜீவாத்ம பரமாத்மாக்களுக்கு கார்யகாரண பாவம் ச்ருதியில் சொல்லப் பட்டிருக்கையாலே அதனால் அவர்களுக்கு அபேதம் ஏற்படுகிறது. அதைத் தெரிவிப்பதற்காகப் பரமாத்ம ஜீவாத்மாக்களுக்கு ஐக்யோக்தியுள்ளதென்று ஆச்மரத்ய மதம். கீழே காட்டிய ஆச்மரத்ய மதத்தில் ஜீவாத்மாவுக்குப் பரமாத்மாவினிடமிருந்து உத்பத்தியைக் கொள்ளுகையாலே *ந ஜாயதே ம்ரியதே வா விபஶ்சித்* இத்யாதி ப்ரமாணங்களோடு அது விரோதிக்கையாலும் மற்றும் அநேக தோஷ ப்ரஸங்கத்தாலும் ஆச்மரத்ய மதம் ஸாது

வன்றென்று கொண்ட ஔடுலோமியானவர்—முக்தி தசையில் ஜீவாத்மாவுக்குப் பரமாத்மாவோடு அபேதம் ச்ருதி ஸித்தமாயிருக்கையாலே முக்தி தசையில் பவிஷ்யத்தான ஜீவாத்ம பரமாத்ம அபேதத்தை யவலம்பித்து ஐக்யம் சொல்லிற்றாக நிர்வஹித்தார்.

196. இனி காஶக்ருத்ஸ்ந மதம். கீழே விவரித்த ஔடுலோமி மதத்தில் மோக்ஷம் வரையில் ஜீவாத்ம பரமாத்மாக்களுக்கு பேத முள்ளதென்றும் முக்தி தசையில் அபேத மென்றும் கொள்ளப்படுகிறதிது, *𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑍋𑌰𑍍𑌯𑍋𑌗𑌃 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥 𑌇𑌤𑍀𑌷𑍍𑌯𑌤𑍇। 𑌮𑌿𑌥𑍍𑌯𑍈𑌤𑌦𑌨𑍍𑌯𑌦𑍍𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌂 ஹி 𑌨𑍈𑌤𑌿 𑌤𑌦𑍍𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌤𑌾𑌂 𑌯𑌤𑌃॥* என்கிற ஸ்ரீ விஷ்ணு புராண வசன விருத்தம். வெவ்வேறு பட்ட பொருள்கள் ஒன்றோடொன்று சேருமே யொழிய ஐக்கியத்தை யடையமாட்டா வென்று இதில் ஸ்பஷ்டமாகக் கூறியிருக்கின்றதன்றோ. முக்தி தசையில் ஜீவாத்மாவுக்கு 𑌅𑌪𑌹𑌤𑌪𑌾𑌪𑍍𑌮𑌤𑍍𑌵𑌾𑌦𑌿 𑌗𑍁𑌣𑌾𑌵𑌿𑌰𑍍𑌭𑌾𑌵மே யொழிய, பரமாத்மாவோடு ஐக்யாபத்தியென்பதில்லை என்னுமிடம் (4—4—1.) *𑌸𑌂𑌪𑌦𑍍𑌯𑌾𑌵𑌿𑌰𑍍𑌭𑌾𑌵𑌾𑌧𑌿𑌕𑌰𑌣த்தில் நிர்ணயிக்கப் பட்டுள்ளது. ஆக இத்தனைக்கும் முரணாக நிர்வஹிப்பது அநுசிதம் என்று கொண்ட காஶக்ருத்ஸ்நர்—பரமாத்மா ஜீவாத்மாவினுள் அந்தராத்மாவாக இருப்பதும், ஜீவாத்மாவுக்குப் பரமாத்ம ஶரீரத்வமும் *𑌯 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿 𑌤𑌿𑌷𑍍𑌠𑌨𑍍....𑌯𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌾 𑌶𑌰𑍀𑌰𑌮𑍍* இத்யாதி ச்ருதிஸித்தமாகையாலும், ஶரீர வாசகங்களான ஶப்தங்களுக்கு ஶரீரிபர்யந்த வாசகத்வம் ஶாஸ்த்ரத்ருஷ்ட்யதிகரணஸித்தமாகையாலும் ப்ரக்ருதத்தில் ஜீவாத்மவாசியான ஆத்ம ஶப்தத்தை பரமாத்ம பர்யந்த வாசகமாக நிர்வஹிப்பதுதான் உசிதமென்று கருதினர்.

197. இங்ஙனே வரிசையாக மூன்று மதங்களை உதாஹரித்த ஸூத்ரகாரர் மேலே நான்காவது மதத்தைச் சொல்லாமையினால் காஶக்ருத்ஸ்ந மதமே ஸூத்ரகாராபிமத மென்பது நிஸ்ஸந்தேஹமாக நிர்ணயிக்கப்படுகிறது. இது விசிஷ்டாத்வைத மதத்திற்கு விஜயத்வஜமானது.

198. காஶக்ருத்ஸ்ந மதந்தான் ஸூத்ரகாராபிமத மென்பதில் எமக்கும் விப்ரதிபத்தி கிடையாது; இதை நாங்களும் இசைந்தேயிருக்கிறோம். ஆனால் (𑌅𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑍇𑌃) என்பதற்கு 'பரமாத்மாவானவர் ஜீவாத்மாவினிடத்தில் அந்தர்யாமியா யிருப்பதனாலே' என்று நீங்கள் கூறுகின்ற பொருள் ஸாதுவன்று. 'பரமாத்மா தானே ஜீவாத்மாவாக இருப்பதனாலே' என்கிற பொருள்தான் அவஸ்திதே: என்பதற்கு ஸமஞ்ஜஸமாகும். ப்ரக்ருதத்தில் ஐக்யத்தைப் பொருந்த விடவேணும்; இங்ஙனே பொருள் கூறினாலும் ஐக்யம் பொருந்தி விடுகின்றதன்றோ. காஶக்ருதஸ்நர் ஶரீராத்ம பாவத்தை யவலம்பித்தே ஐக்யத்தைப் பொருந்த விட்டாரென்று எதுக்கு ஒப்புக்கொள்ளவேண்டும்? என்கிறார்கள் அத்வைதிகள்.

199. *𑌅𑌤𑍍𑌤𑌾 𑌚𑌰𑌾𑌚𑌰𑌗𑍍𑌰𑌹𑌣𑌾𑌤𑍍* என்னும் உபக்ரம ஸூத்ரத்தைக் கொண்ட 𑌅𑌤𑍍𑌤𑍍𑌰𑌧𑌿𑌕𑌰𑌣த்தில் *𑌗𑍁𑌹𑌾𑌂 𑌪𑍍𑌰𑌵𑌿𑌷𑍍𑌟𑌾𑌵𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑍌 ஹி 𑌤𑌦𑍍𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌤𑍍* என்கிற ஸூத்ரத்தில் அநுப்ரவிஷ்டத்வஸாமாந்யவாசியாய் த்விவசநாந்தமான (ஆத்மாநௌ) என்கிற ஶப்தத்தினால் பரஸ்பர பிந்ந ஸ்வரூபஶாலிகளான ஜீவாத்ம பரமாத்மாக்களுக்கு ஹ்ருதய குஹா ப்ரவேசம் ச்ருதி ஸித்தமென்று தெரிவிக்கப்பட்டுள்ளது. இதனால் ஜீவப்ரஹ்மங்களுக்கு நிருபாதிகமான பேதமே ச்ருதிக்கு அபிமதமென்று ஸூத்ரகாரர் அபிப்ராயப்பட்டிருப்பது

## ஸ்ரீ காஞ்சீ P. B. A. ஸ்வாமியின் திருவீதிவலம்—சேலம் டவுன். (7—8—63)



ஸ்பஷ்டமாகத் தெரிய வருகிறது. ஆக ஜீவப்ரஹ்மங்களுக்கு ஶ்ருதிஸித்தமான ஸ்வரூப பேதத்திற்கு விரோதமில்லாமல் நிர்வஹிப்பது தான் ஸூத்ரகாராபிப்ரேதமென்று இசைந்து தீரவேணும். ஏவஞ்ச, ஜீவப்ரஹ்மங்களுக்கு ஸ்வரூபைக்யத்தை யவலம்பித்து நிர்வஹிக்க வந்தது அவஸ்திதேரித்யாதி ஸூத்ரம்—என்று சொல்லுவது பொருந்தமாட்டாது.

200. அவஸ்திதி: என்கிற ஶப்தமானது 'வ்ருக்ஷே வய: ஸம்திஷ்டதே; ப்ராஸாதே தேவதத்த: ஸம்திஷ்டதே' இத்யாதி வ்யவஹாரங்களிற்போல ஒரு வஸ்துவில் மற்றொரு வஸ்து இருப்பதைத்தான் சொல்லக் கடவது. *ப்ருதிவ்யாம் திஷ்டந். அப்ஸு திஷ்டந். தேஜஸி திஷ்டந். வாயௌ திஷ்டந். ஆகாஶே திஷ்டந். ஆத்மநி திஷ்டந்.* இத்யாதிகளான உபநிஷத் வாக்யங்களில் பலகால் காணப்படுகிற ஸப்தம்யந்த ப்ரயோகத்தை யடியொற்றியே (அவஸ்திதே:) என்கிற ஸௌத்ர ப்ரயோகமுள்ளதென்பதை ப்ராமாணிகர்களின் உள்ளம் க்ரஹிக்க மாட்டாததன்று. அநாயாஸமாக க்ரஹிக்கும்.

ஆக, அவஸ்திதே: என்னும் பதத்திற்கு அத்வைதிகள் கூறும் பொருள் கேவலம் அபிநிவேஶமாத்ர விஜ்ரும்பித மென்று கொள்க. ஏவஞ்ச, வாக்யாந்வயாதிகரணத்தில் விஶிஷ்டாத்வைதமே ஸித்தாந்தீகரிக்கப்பட்டதென்பது தெளிவாயிற்று. ... ... *

நல்வார்த்தை நானூறில் த்விதீய சதகம்

முற்றுப்பெற்றது.

---

ஸ்ரீ காஞ்சீ P. B. A. ஸ்வாமியின் திருவீதிவலம்—சேலம் டவுன்.
(7—8—63)



# மணவாளமாமுனிகள் மஹோத்ஸவம்.

மணவாள மாமுனிகளுக்கு மிகச்சிறப்பாக உத்ஸவம் நடைபெருத திவ்ய தேசமே கிடையாது. ஆனாலும் ஸ்ரீ காஞ்சீபுரியில் தேவப்பெருமாள் ஸன்னிதியில் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் மணவாளமாமுனிகளுக்கு நடைபெறும் மஹோத்ஸவம்போல் எந்த திவ்ய தேசத்திலும் நடவாது. மாமுனிகளின் பக்தர்கள் தங்கள் வாழ்நாளில் ஒரு ஸம்வத்ஸரமாவது ஸேவிக்கப் பெறவேணும். நாளது 14—10—63 திங்கட்கிழமை உத்ஸவாரம்பம். 23—10—63 புதன்கிழமை சாத்துமுறை. தினப்படி காலே 10-மணிமுதல் 4-மணிவரையிலும், இரவு 7-மணிமுதல் 10-30-மணிவரையிலும் ப்ரஹ்மானந்தமயமான மஹோத்ஸவமிது. சாத்துமுறையன்றிரவு தேவப்பெருமாளும் பெருந்தேவித்தாயாரும் மாமுனிகளின் ஸன்னிதிக்கெழுந்தருளிப் பெரிய திருவோலக்கமாக நடைபெறும். மறுநாள் வியாழக்கிழமை யன்று இயற்பா ஆயிரமும் ஸேவையாகி இரவு9-மணிக்கு இயல்சாத்து நடைபெறும். * பொலிக பொலிக பொலிக வென்று வாழ்த்தும்படி தொண்டரெல்லீரும் வாரீர்.

இங்ஙனம்,
பக்தகோஷ்டியார்.

# கடிதங்கள்

## 1. Sri N. VENUGOPAL, B.A., B.L.,

Assistant Director (Exhibitions) All India Handicrafts Board, Ministry of Commerce and Industry, Government of India.

ஸ்ரீமத் காஞ்சீபுரம் ப்ரதிவாதி பயங்கரம் ஸ்வாமிகள் பல்காலமாகப் பல துறைகளில் பல நூல்களை யெழுதி வருமடைவில், விவாதத்திற்கு இடமான விஷயங்களிலும் கலந்துகொண்டு சாதித்தருளிய நூல்களையும் அடியேன் வாசித்து வருபவன்.

நியாய தேவதையை கண்ணில்லாத பெருமாட்டியாகவும், அவள் கையில் தராசை வைத்திருப்பதாயும், அதைக்கொண்டு அவள் மனித தாட்சிண்யமில்லாமல் நியாயம் எது என்பதைத் தராசு மூலம் அறிந்து கொள்ளுங்கள் என்று காட்டுவதாயும் மேல் நாட்டினர் சித்தரிக்கின்றனர்.

காஞ்சீபுரம் ஸ்ரீஸ்வாமிகள் சர்ச்சை செய்து முடிவு காட்டும்போது அடியேனுக்கு இந்த உவமானமே மனதில் படும். சுவாமிகளுக்கு இது ஒரு அசாதாரணமான மேன்மையாகும். சுவாமிகள் சர்ச்சை செய்து தீர்ப்புகளைச் சாதிக்கும்போது மத, கலா அபிமானமும் ஒதுக்கித் துணிபை வெளியிடுவதாக இருக்கும். அடியேன் ஓய்ந்த நேரங்களில் சம்பிரதாய சம்பந்தமான நூல்களைப் படிப்பது வழக்கம். ஸ்ரீஸ்வாமிகள் ஸ்ரீராமாநுஜனில் 171, 172, 173 ஸஞ்சிகைகளில் த்ரௌபதியின் சரணுகதியைப் பற்றி சாதித்திருப்பவை ஆசாரியர்களின் ஹிருதயமே; அவைகளைச் சிரமேற் கொள்ளவேணும்.

"துப்புடையாரை யடைவதெல்லாம் சோர்விடத்துத் துணையாவரென்றே" என்பதே சரணுகதியின் அவசியமும் நோக்கமுமாகும். "எய்ப்பென்னை வந்து நலியும் போது அங்கேதும் நானுன்னை நினைக்கமாட்டேன், அப்போதைக் கிப்போதே சொல்லி வைத்தேன்" என்று முன்கூட்டியும் சரணுகதி செய்யலாம். அல்லது "ஒப்பிலே னாகிலும் நின்னடைந்தேன் ஆனைக்கு நீ அருள் செய்தமையால்" என்று உதாரணமும் வாதமும் காட்டி ஆபத்து வந்த சமயத்திலும் செய்யலாம்.

ஆபத்து நேர்ந்த சமயம் இந்த முறையில் வாதத்துடன்? சரணுகதி செய்திருக்கிறுள் த்ரௌபதி. பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்த திரௌபதி சரணுகதி சுலோக வியாக்கியானத்தை சேவித்தபிறகு திரௌபதி செய்தது உயரிய சரணுகதி தான் என்பதும், அந்த சரணுகதிக்குப் பலன் வஸ்திரந்தான் என்பதும் வெள்ளிடைமலை. இந்த சமயத்தில் அவளுடைய சரணுகதி மேன்மையை யநுபவித்தே 'திரௌபதி லஜ்ஜையை விட்டாள்' என்றும், 'இருகையும் விட்டேனே த்ரௌபதியைப் போலே' என்றும் பாராட்டுகள் ஏற்பட்டுள்ளன. "சரணம் புகுந்த திரௌபதிக்கு" என்ற பொய்யிலாத மணவாள மாமுனி புந்தியில் தோன்றிய ஸ்ரீஸூக்திக்குப் பிறகு ஒரு விவாதமா? துரௌபதி கோரிய மானசம்ரட்சணம் அளிக்கப்பட்டது. கஜேந்திரனைப் போல் சேவை சாதிக்கவேணுமென்று பிரார்த்திக்கவில்லையவள். அபேட்சிக்காத ஒன்று கிடைக்கவில்லையென்று ஏனே விவாதம்? கண்ணன் 'நேரில் எழுந்தருளாமற் போனேமே!' என்று பரிதாபப்பட்டது 'அடியரானூர்க்கு இரங்கும் பித்தன் அவன்' என்று அவனது மேன்மையையே காட்டி நிற்கிறது. சில அடியவர்கட்கு எல்லாங் கொடுத்தும் 'ஒன்றும் கொடுக்கவில்லையே' என்றும் பரிதாபப்படுபவனன்றோ எம்பெருமான்.

'புடவை சுரந்தது திருநாமமிறே' என்றது உபசார வார்த்தையே. வெளியூர் சென்ற வொருவன் ஒரு பெரியவரின் பேரைச் சொல்லி அவருக்கு வேண்டியவன்

என்ன, அதற்காக அங்கே அவனுக்கு உபசரிப்புகள் நடந்தால் அப்பெரியவருடைய மேன்மையைக் கொண்டாடியதுதானே. அவரையும் அவர் பெயரையும் பிரித்து 'எத்தால் நிகழ்ந்தது?' என்று அலசுவது!

காஞ்சீபுரம் சுவாமிகள் சர்ச்சைகளில் பிரவேசித்தால் தனிப்பட்ட முறையில் தாக்குவதும், கீழ்த்தரமாக எழுதுவதும் கிடையாது. சுவாமிகளின் நடையை எல்லாரும் பின்பற்றவேண்டும். பின்பற்ற ஆசைப்படவாவது வேண்டும்.

இவ்விஷயத்தில் தற்காலம் வாதியாக நிற்கும் வக்கீல் சுவாமியை அடியேன் ஒரு முறைதான் சேவித்தது. அகில இந்திய வைணவ மாநாடு சென்னையில் நடைபெற்றது. தென்னாட்டுக் கோயில்களில் திருப்பாவையுடன் திருவெம்பாவையையும் இணைத்து மகாநாடுகள் நடத்துவது கூடாதென்று கண்டித்துத் தீர்மானம் கொண்டு வந்தார். விஷயம் நியாயமே என்றாலும் இதை தென்னாட்டு வைணவமகாநாட்டில் விவாதிக்கலாம், அகில இந்திய மகாநாட்டில் வேண்டாமென்று பிரார்த்தித்தோம். வக்கீல் சுவாமிகள் இதை அங்கீகரியாமல் தன் கடமையைச் செய்ய, தீர்மானமும் இங்கு சம்பந்தமில்லையெனத் தோல்வியடைந்ததாக ஞாபகம். விவாத ப்ரியர் என்ற அபிப்பிராயம் ஏற்பட்டது. இந்த துரௌபதி விவாதமும் இந்நோக்கோடு ஏற்பட்டதோ! அப்படியாயின் அடியேன் போன்றவர்கள் இவ்வாதங்களை யெதிர்த்து எழுந்த பதில்களைப் படித்துப் பயனடைந்தோம். (19-9-63)

இங்ஙனம் :

**N. VENUGOPAL**, B.A., B.L.,
New Delhi.

## கடிதம் 2

### திருமலை திருப்பதி தேவஸ்தான ஸம்ஸ்க்ருத பாடசாலை உபாத்தியாயர் நியாய வேதாந்த வித்வான் தமிழ் வித்வான் திருமலை அனந்தாண்பிள்ளை கிருஷ்ணமாசாரியர்

பரந்தரஹஸ்யம்பிறந்தரஹஸ்யமென்னும் க்ரந்தத்தை ஸேவித்தேன். அதைப் பற்றி எழுத அடியேன் ஸர்வாத்மநா அதிகாரி யல்லேன். ஆகிலும் ஸ்ரீஸ்வாமி நியமநத்தைச் சிரமேற்கொண்டு தோன்றியதை விஜ்ஞாபித்துக் கொள்ளுகிறேன்.

விசதவாக் சிகாமணிகள் ஸ்ரீவசனபூஷணம் 5ல் சிறியவரான நடுவில் திருவீதிப் பிள்ளை பட்டரை அருளிச்செய்து அவரை வ்யாவர்த்திப்பதற்காக ஸ்ரீபராசரபட்டரைப் பெரியபட்டரென்று அருளிச் செய்ததுபோல் தத்வ 103ல் அவரே, சிறியவரான நாயனா ராச்சான் பிள்ளையை அருளிச்செய்து, அவரை வ்யாவர்த்திப்பதற்கு அவர் திருத்தகப்பனாரைப் பெரியவாச்சான் பிள்ளை யென்று அருளிச் செய்தாரென்றும்,

"நடுவில் திருவீதிப் பிள்ளை பட்டரும் ஆச்சான் பிள்ளையும்" என்று மாமுநிகள் அருளிய வார்த்தையில், பின்னவர் பெரியவாச்சான் பிள்ளையல்லர் என்பதற்கு முக்கிய காரணம் நெடுநாள் நம்பிள்ளை திறத்தில் அழுக்காறு கொண்டிருந்து கதாசித் ப்ராவண்யங் கொண்டு வந்து சேர்ந்த நடுவில்திருவீதிப் பிள்ளை பட்டர்க்கு முன்பே, நம்பிள்ளைதிருவடிகளில் ப்ராவண்யமே இயல்வாக அவதரித்த பெரியவாச்சான் பிள்ளையை அருளிச்செய்ய வேண்டியிருந்தும் அப்படிச் செய்யாமல் நடுவில் திருவீதிப்பிள்ளை பட்டர்க்குப் பின்பு (ஆச்சான் பிள்ளை யென்று) அருளியதே யென்றுகாட்டி பெரியவாச்சான்பிள்ளையை மாமுநிகள் ஆச்சான் பிள்ளையென்று

நிர்தேசிக்கமாட்டாராகையால் அவர்தாம் இருபத்திரண்டிடங்களில் ஆச்சான் பிள்ளை யென்று கூறியது நாயனாராச்சான் பிள்ளையையே என்று முடிவு கட்டி, தத்வ த்ரய விவரணம் பரந்த ரஹஸ்யம் மாணிக்க மாலை ஜிதந்தா வ்யாக்யானம் கத்ய வ்யாக்யானம் இவ்வைந்தும் பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்தவை யல்லவென்று ஸ்ரீஸ்வாமி நிரூபித்தருளியிருப்பது உண்மையில் விமர்சகர்களுக்கு ஒருபெருவிருந்தே. மாமுநிகளின் திருவாக்கைக்கொண்டு ஸித்தாந்தம் செய்த விது, யார்க்கும் மறுக்க வொண்ணாத தென்பது ஸத்யம்!

மெய்ம்மைப் பெரு வார்த்தைகளும் (விசிஷ்ய அவற்றில் 44 முதல் 50 வது வரையிலுள்ள வார்த்தைகள்) இந்த ஸித்தாந்தத்தை நன்கு ஊர்ஜிதப் படுத்து மவையே. அந்த வார்த்தைகளாவன—

(44) பரகால நல்லான் ரஹஸ்யத்தில் 54, 97, 116, 190. பக்கங்களில் ஆச்சான் பிள்ளை வார்த்தைகளை யெடுத்திருந்தும் ஒன்றுக்கும் ஆகரம் காட்டப்படவில்லை; இத்தன்மை மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளில் ஓரிடத்திலும் இடம் பெறுது. (45) ஆச்சான் பிள்ளை யென்கிற அபயப்ரதராஜஸூநுவுக்கு ப்ரஸித்தி விளைவதற்கு முன்னே பெரிய வாச்சான் பிள்ளையை ஆச்சான்பிள்ளையென்றே வ்யபதேசித்து வந்தார்க ளென்பதை மறுப்பாரார். (46) வார்த்தா மாலையெழுதிய பின்பழகிய பெருமாள்ஜீயர் யாமுநஸூநுவை யறிந்தவரேயல்லது அபயப்ரதராஜஸூநு வென்கிற யாமுநஸூநு ஸூநுவை அறிந்தவரே யல்லர். ஆகவே அவர் நாலாயிர வ்யாக்க்யாதாவான அபயப்ரத ராஜார்யரைப் பெரிய என்கிற விசேஷணமிட்டெழுத ப்ரஸக்தியேயில்லை யாயிற்று. (47) பரகால நல்லான் பெரியவாச்சான் பிள்ளையையே ஆச்சான் பிள்ளையென்று குறிப்பிட்டிருக்கிறுரென்பது தவறு. (48) இவர் பரந்த ரஹஸ்யத்திலுள்ள அர்த்தங்களை யெடுத்து அபயப்ரத ராஜஸூநு பணித்ததாக (பக்கம் 238-ல்) காட்டியிருப்பதை இன்னமும் அபலபிப்பது அநீதி; அந்த இடம் இந்த விவாதத்தை நன்கு அறுத்து விட்டது. (49) அந்த இடத்திலும் அவர் ஆச்சான்பிள்ளை யென்றே எழுதிவைத்திருந்தாராகில் வீண் விவாதத்தை இன்னமும் வளர்த்திக்கொண்டு கிடக்கலாம். தெய்வமேயன்றோ அங்கு அவர் கையால் அபயப்ரத குருஸூநுவென்று எழுதுவித்தது. (50) பரகால நல்லானில் அந்த ப்ரகரணத்தில் நிரூபிக்கப்பட்டு வரும் விஷயத்திற்கு அபயப்ரதராஜரான பெரியவாச்சான் பிள்ளையின் நூலில் நிரூபணமேதுமில்லையென்று தேறினபோதே பெரியவாச்சான் பிள்ளை ரஹஸ்யப்ரஸ்தானத்தில் விரிவானநூல் எதுவுமருளிச்செய்திலர் என்பது சிலாலிகிதமாக்கப்படவில்லையா? ஆக இந்த ஏழு வார்த்தைகள் திருக்கச்சிநம்பி யாறுவார்த்தைகளுக்கு மேற்பட்டவையே.

தி. அ. கிருஷ்ணதாஸன், திருமலை, 20-9-63.

## Letter 3

॥ श्रीः ॥

॥ श्रीमते रामानुजाय नमः ॥ ॥ श्रीमद्वरवरमुनये नमः ॥

दृढविज्ञापनम् ॥

V. S. Sundararajan, C. II, 74, Mothibagh, New Delhi, 26-9-63

....दिनद्वयात्पूर्वमवतंसिता ‘ श्रीरामानुजन् ’ पत्रिका । अन्ततः श्रीस्वामिभिरनुगृहीतं ‘ परन्दरहस्यावताररहस्यं’ समनुभूतमापादचूडम् । प्रथमत एव श्रीस्वामिपादैरुद्घोषितं शपथवचनं परमरोमहर्षणं स्मारंस्मारमधुनाऽपि न पारमधिगच्छति दासस्य मानसं विस्मयवारिनिधेः; प्रत्येति च पूर्णतया यत्प्रतिपक्षिलेखनी पूर्णविराममनुभवेदितः

परं विषयेऽस्मिन्निति । आचान्पिळ्ळैविषयोऽयं पूर्वमेव बहुशस्तत्रभवद्भिरनितरसाधारणैर्युक्तिप्रमाणपुञ्जैर्विशदीकृत एव । श्रीमतां श्रीसूक्तिततीरनुभूय प्रथममेव विपक्षिणां तूष्णीम्भावो ग्राह्योऽभवत्; स्वकार्तज्ञाविष्कारोऽपि श्रीस्वामिसन्निधौ कर्तव्य आसीत् । न केवलं तैः कर्तव्योल्लङ्घनं कृतं, परन्तु तादृशेनापि कर्मणा लोकोपकारः कारितः । अद्य वा ह्यो वा न, किन्तु सुप्रसिद्धा विपश्चिदपश्चिमा अपि पूर्वं बहुषु विषयेषु दुराग्रहवशंवदचित्ततया विपक्षतामवाप्य, श्रीस्वामिचरणैर्महान्तं लोकोपकारं कारयन्तिस्मेति सम्यग्विजानात्येव पण्डितप्रकाण्डमण्डली समस्तेऽप्यस्मद्भारतवर्षे । अधुनाऽप्येवमेव संवृत्तम् । श्रीस्वामिपादप्रतिज्ञाविघटननिपुणो न कोऽपि पण्डितम्मन्योऽद्य यावज्जगत्यां प्रादुर्बभूव , न प्रादुर्भूतोऽस्ति, नैव प्रादुर्भविष्यति । अत्यन्तमन्वर्थविरुदास्तत्रभवन्तः प्रतिवादिभीकरा इति यत्सत्यं सत्यं पुनस्सत्यमुद्धृत्य भुजमुच्यते, तथाऽपि न प्रतिवादिमात्रस्य, अपि तु समस्तस्य विश्वस्य हितकरा विलसन्ति श्रीस्वामिचरणा इतीदं करतलामलकं किल । कियन्तः परवादिमत्तेभास्स्वामिपादकण्ठीरवेण द्वन्द्वे संजाते भिन्नाश्छिन्ना भ्रष्टदन्ताश्शान्तगर्वाश्च सञ्जाता इति समुद्घोषयति श्रीस्वामिनां पुण्यचरित्रपत्रमेकैकं, वेत्ति च विश्वमखिलं विषयमिमम् । सारसंक्षेपात्मकमन्तत इदमेव सविनयं विज्ञाप्यते दासेन यद्धिशिष्य श्रीमद्वरवरमुनिदिव्यश्रीसूक्तिततिषु न श्रीस्वामिचरणसन्निभः कूलङ्कषधिषणावान्महापण्डितो राराजतेऽनेहस्यस्मिन्निति वक्षस्स्पृश्नाचष्टे दासोऽयम् । अतो निश्चप्रचं विषयेऽस्मिन्न कोऽपि पण्डितस्स्वमुखारविन्दं श्रीमतां प्रतिवादायोद्घाटयितुं मात्रयाऽप्यधिकारयुक्त इत्येव सुदृढा प्रतिपत्तिर्दासस्य । इतः परं मौनं, श्रीस्वामिसन्निधौ कृतज्ञताप्रकटनञ्चैव प्रतिपक्षिणां शरणीभवितुमर्हत इति दासोऽवधारयति ॥

इदमप्यन्ततो विज्ञापयति दासः—

(१) तत्त्वज्ञानविमूढभावभरितस्वान्ता विपक्षं श्रिताः<br>
श्रीमद्भिर्बहुधा सुयुक्तिनिचयैस्सम्बोध्यमाना जनाः ।<br>
यत्स्वीयाग्रहभावनां हि सुतरां त्यक्तुं न सज्जा भव-<br>
न्त्येतद्धन्त ! विचिन्त्य शोचति मनः, किंवाऽन्यदाचर्यताम् ॥

(२) बालानामपि बुद्धिगम्यमधुना सुस्पष्टमुद्घोषितं<br>
श्रीमत्सूक्तिकदम्बकं बुधवरैस्संसेवितं सादरम् ।<br>
संसेव्य प्रतिपक्षिणोऽपि सुतरां मूकीभवन्त्वित्यहं<br>
सम्प्रत्येमि विराममेमि च तथा स्वस्त्यस्तु सर्वत्र च ॥

**इति, वानमामलै विद्वद्वराणां वाध्यार् श्रीनिवासय्यङ्गार्यस्वामिनां सूनुः सुन्दरराजः देहलीस्थः ।**

## கடிதம் 4

### திருச்சி ஜில்லா கரியமாணிக்கத்தி லெழுந்தருளி யிருக்கும் ஸ்ரீமதுபயவே. ஸ்ரீஸூக்திநிதி. வி. வி. ஐயங்கார் ஸ்வாமி Hyderabad Campலிருந்து 23—9—63ல் விடுத்த திருமுகம்

.................................... செய்யும் விண்ணப்பம். ஆச்சான் பிள்ளை பெரிய வாச்சான் பிள்ளை விசாரம் 15 வருடங்களாக நடந்து வருகிறது. ஸ்ரீமத்பரமஹம்ஸ. அயோத்யா ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி 1911ல் அஷ்டாதச ரஹஸ்ய க்ரந்தத்தைப் பதிப்பித்தருளினர். மணவாள மாமுனிகள் ஆச்சான்பிள்ளையென்று அருளிச் செய்யு மிடங்களில் நயனாராச்சான் பிள்ளையென்றேதான் பிரதிபத்தி பண்ணி வருகிறேன். நயனாராச்சான் பிள்ளை காலத்திற்கு முன்பு விவாத க்ரந்தங்கள் மலிந்திருக்கவில்லை யென்றும் அடியேனது எண்ணம். அடியேனுக்குத் தோன்று வது இது விஷயமான சர்ச்சை அவசியமில்லையென்றே. பேசுமவர்கள் பேசிக் கொண்டே யிருப்பார்கள். இவ்விஷயம் ஸம்பிரதாயக் கொள்கைகளைப் பற்றியதல்ல. பண்டித மானிகளின் சர்ச்சைகளில் அடியேன் மிகவும் பயந்தவன். சர்ச்சையுள்ள இடத்திலிருந்து ஓடிப் போமவன். 'பரந்த ரஹஸ்யம் பிறந்த ரஹஸ்யம்' ஸேவித் தேன். அதிலுள்ள விஷயங்களை அடியேன் பிரமாணமாக ஒப்புக் கொள்ளுகிறேன்.

அனேக வருஷங்கள் லௌகிக காரியங்களில் சென்றுவிட்டன. இனியாவது ஒரு கணப்பொழுதும் வீண்போகாமல் ஆழ்வாராசாரியர்களின் ஸ்ரீஸூக்திகளி லேயே பொழுது போக்க வேணுமென்று அவா. "அஸ்து தே" என்கிற அநுக்ர ஹம் வேண்டும்.

V. V. IYENGAR.

## கடிதம் 5

அடியேன் செய்யும் விண்ணப்பம்.

### திருநாராயணபுரம் ஸ்ரீமதுபயவே. வித்வான் வங்கீபுரம் ராகவாசார்யஸ்வாமி உடையவர் ஸன்னிதி ஆதீனம்.

"பரந்த ரஹஸ்யம் பிறந்த ரஹஸ்யம்" என்கிற மகுடமிட்டு ஸ்ரீ ராமாநுஜ னில் வெளி வந்திருக்கும் வியாஸத்தைப் படிக்க ஆரம்பித்தேன் ஆரம்பத்திலேயே தீவிரமான சபத வாக்யங்களைப் படித்தேன். கண்ணில் கொஞ்சம் வேதனை இருந்த போதிலும் குதூஹலம் அதிகரித்து படித்து முடிக்குமளவும் புத்தகம் கீழ் வைக்க மனம் இணங்கவில்லை. பிரதிஜ்ஞா வாக்யம் படிக்க ஆரம்பிக்கும் போதே யஜ்ஞ மூர்த்தியுடன் உடையவர் செய்த சபதமாயிருக்கிறதே! என்று குதூஹலம் விஞ்சி, படித்து பர்யாப்தி பிறவாமல் படித்துப் படித்து ஆநந்தித்து வருகின்றேன். ஜாயமாந காலத்தில் உடையவர் கடாக்ஷமும், ஸ்ரீமணவாள மாமுனிகள் கடாக்ஷமும் இருப் பதின் காரணமாகவே தமது பதினெட்டாவது ஆண்டிலேயே திவ்யப் பிரபந்தாதி களுக்கு வியாக்கியானமிட எழுத்துக் கருவியைப் பிடித்தும், சுமார் ஐம்பத்தைந்து ஆண்டுகளாக பூர்வாசார்யர்களுடைய கிரந்த பரிசீலனத்திலும் வியாக்கியான ரசனை யிலும் உபன்யாஸங்கள் செய்வதிலும் பொழுது போக்கிக் கொண்டு வந்தும் ஸத்ஸம் பிரதாயார்த்தத்தில் நிஷ்க்ருஷ்டஜ்ஞானராயும் பரவாதி நிரஸனத்தில் வந்தால் உடைவரேயோ என்றும், குணநுபவ நிரததையில் வந்தால் ஸ்ரீ மணவாள மா முனி களேயோ என்றும் விகல்பிக்கலாம்படி எழுந்தருளியிருக்கும் மஹானுடைய உக்தி "சொல்லுமவிடு சுருதியாம்" என்றிருக்க வேண்டிய நியாய மிருக்க, மாத்ஸர் யாதி

களால் அதைக் கணிசிக்காதார் "மற்றோர்கள்" என்கிற கோஷ்டிக் கன்றோ சேர்ந்தவர்கள் என்று பாவிக்கும் குணைக பக்ஷபாதிகளான வித்வான்கள் இன்னமும் பலருளரே.

"ச்லாகநீயோஸி மே ரிபுঃ" என்றும், "யஸ்ய விக்ரம மாஸாத்ய ராக்ஷஸா நிதநம் கதா:, தம் மந்யே ராகவம் வீரம் நாராயணமநாமயம்" என்றும் இராவணனும் சொன்னான். அவனிலும் தண்ணியரானவர்களின் வாக்குக்கும், வியாஸங்கள் முதலானவைகளுக்கும் பதில் எழுதிக் கொண்டே இருப்பது மஹாத்மாக்களுடைய அருமையான அந்த காலம் வீணாக வியர்த்தமே ஆய்விடுமே என்று வருந்துகிறேன். "கேவல நாஸ்திகனைத் திருத்தலாம்; ஆஸ்திக நாஸ்திகனை ஒரு நாளும் திருத்த வொண்ணாது" என்கிற ஸ்ரீஸூக்தியை நினைக்கிறேன். ஸ்வாமி உடையவரும் "ஸாராஸார விவேகஜ்ஞாঃ கரீயாம்ஸோ விமத்ஸராঃ, ப்ரமாணதந்த்ராஸ் ஸந்தீதி க்ருதோ வேதார்த்த ஸங்க்ரஹঃ" என்று நிறுத்தி விட்டாரன்றோ !!

"கற்றோர்கள் தாமுகப்பர் கல்விதன்னி லாசையுள்ளோர், பெற்றோமென உகந்து பின்பு கற்பர், மற்றோர்கள்-மாச்சரியத்தால் இகழில் வந்ததென் நெஞ்சே !, இகழ்கை யாச்சரியமோ தானவர்க்கு" என்கிற நமது ஸ்வாமி மணவாள மாமுனிகளின் ஹிதோபதேசத்தை நினைத்து இனி மீது இப்படிப்பட்ட விஷய லேகனத்தில் விரமிப்பது நலம் என்று அடியேனுடைய நிஷ்கர்ஷாசயம்.

ஸ்ரீ வங்கீபுரம் ராகவதாஸன். 30—9—63.

## கடிதம் 6

### அஸூயையையகற்றி அனுபவிக்கவேணும்.

(ஸ்ரீ உ. வே. பத்தங்கி ரங்காசாரியர். உபயபாஷா பண்டிதர், திருவொற்றியூர் 19—9—63)

ஸ்ரீ காஞ்சீ ஸ்வாமி ஆளவந்தார் ஸ்தோத்ர ரத்ன வியாக்கியானத்தில் "த்வதீய கம்பீர மனோநுஸாரிணঃ" என்கிற பாதத்திற்கு ஸாதித்திருக்கும் அர்த்த விசேஷத்தில் ஊன்றியிருக்கும் அதிகாரி அடியேன். அதில் ஸ்வாமி ஸாதித்திருப்பது "ப்ரஹ்மவாதினோ வதந்தி" "யத்வை கிஞ்ச மநுரவதத் தத் பேஷஜம்" "ஸஹோவாச வ்யாஸঃ பாராசர்யঃ" என்கிறபடி ப்ரஹ்ம வித்துக்களின் அபிப்ராயத்தை வேதங்கள் தழுவுகின்றன வென்பது "அத யதி தே கர்மவிசிகித்ஸாவா வ்ருத்த விசிகித்ஸா வா ஸ்யாத்..... யதா தே தேஷு வர்த்தேரந். ததா தேஷு வர்த்தேதாঃ" (உனக்கு ஸந்தேஹ முண்டாகு மிடங்களில் ப்ரஹ்ம ஜ்ஞானிகளுடைய நடவடிக்கையைப் பின்சென்று நடந்து கொள்ளுதல் வேண்டும்) என்பது. ஸ்ரீ காஞ்சீ ஸ்வாமிக்கு மேற்பட்ட ப்ரஹ்மவித்தும் ப்ரஹ்மவாதியும் இருப்பதாக எண்ணியிருப்பாராருமில்லை.

சுமார் 40 வருடங்களுக்கு முன் திருநாராயணபுரத்தில் ஒரு பெரிய ஸதஸ்ஸில் பிரஸித்த வித்வானான லக்ஷ்மீபுரம் ஸ்வாமி தேசிகனுடைய யதிராஜ ஸப்ததியில் 'யதாபூத ஸ்வார்த்தா' என்கிற ச்லோகத்தில் வரும் 'த்ரிவேதீ' என்பதற்கு 'ருக்யஜுஸ் ஸாமங்க ளென்கிற வேதத்ரயம்' என்று உபந்யஸிக்க, உடனே அச்சபையில் நம் காஞ்சீ ஸ்வாமி அதே சுலோகத்திற்கு இரண்டு மணி காலம் உபந்யஸிக்கும்போது அதில் 'த்ரிவேதீ' என்பதற்கு லக்ஷ்மீபுரம் ஸ்வாமி பணித்த பொருள் விரஸமென்றும் அதன் உண்மைப் பொருளாக 'பேதச்ருதி, அபேதச்ருதி, கடகச்ருதி' என்கிற மூன்று ச்ருதிகளுமே விவக்ஷிதமென்றும் ஸாதித்து, மேலும் 'மிதோபேதம்' என்கிற ஸங்கல்ப ஸூர்யோதய ச்லோகத்தையும் கொண்டு ஸமந்வயப் படுத்தி உபந்யஸித்தருளினதைக் கேட்ட அங்குள்ள வித்வான்களனை

வரும் இவ்வர்த்தத்திற்கு உள்ளமுருகி 'ஸ்வாமி தேசிகன் திருவுள்ளம் இதுவே. ஒக்கும்! ஒக்கும்!! ஒக்கும்!!! என்று கரகோஷம் செய்து போனதல்லாமல் இவ்வித ஸூக்ஷ்மார்த்தங்கள் தேசிக ஸூக்தி ஒன்றுதப்பாமல் ஸகலமும் ஸேவித்து தரித்திருக்கும் ஸ்வாமிக்குத் தவிர வேறு ஒருவர்க்கும் ஸ்புரிக்கமாட்டாதென்று புகழ்ந்தனர் என்று அடியேன் பலகால்கேட்டு, பத்ரிகைகளிலும் வாசித்திருக்கிறேன்.

மேற்குறித்த வரலாற்றைப்போல் ஆயிரம் வரலாறுகளில் பல சிறந்த மேதாவிகள் தென்கலை, வடகலை, ஸ்மார்த்தர், உத்தமாச்ரமிகள் என்கிறவாசி யில்லாமல் ஸ்வாமியின் ஸ்ரீஸூக்திகளைப் பலவிதங்களில் புகழ்ந்து கூறியதுமன்றி யில் ஆராய்ச்சி விஷயங்களில் ஸ்வாமியின் அபிப்ராயந்தான் தலைசிறந்ததென்று கொண்டாடிப் பல பத்திரிகை வாயிலாக வெளியிட்டுள்ளனர்.

பிரபலமாக நடந்த வேதலக்ஷண விவாதத்தில் 'ஒரு திருத்தேரை யிழுக்க நூற்றுக்கணக்கானவர் கூடுவதுபோல் ஸ்வாமியை எதிர்த்து இழுக்குண்டாக்க இது வரை கிளர்ந்த பண்டிதர்கள் கணக்கிடைங்க மாட்டார்கள். இப்படியிருந்தும் ஸ்வாமி ஒருவராகவே அத்தனைபேர்களையும் நோக்கி கிரந்தங்கள் அருளிச்செய்து நாடு நகரமும் நன்கறியும்படி செய்தருளியிருப்பதையும் கபிஸ்தலம் ஸ்வாமி அதை யெல்லாம் ஆமோதித்திருப்பதையும் அறியாதாருமுளரோ?

ஸ்வாமியிடம் எதிரம்புகோத்து பதில் சொல்ல முடியாமல் திணறி க்ஷாமண பத்ரிகை யெழுதிக் கொண்டவர்கள் பலர். ஸ்வாமியிடம் ஈடுபட்டு தாமாகவே அபிநந்தனம் செய்தவர்கள் பலர்.

ஒரு நூலில் 'நல்ல பழுத்த பழங்களை கொத்துக் கொத்தாகத் தாங்கி நிற்கும் மரத்திலே தான் பல கற்கள் விழும்' என்று படித்திருக்கிறேன். அதுபோல் ஸ்வாமி யின் சிறந்த பாண்டித்யத்தையும், ஒப்புயர்வற்ற உபந்யாஸ, லேகன வைகரிகளையும் சிறந்த ஆராய்ச்சிகளையும், ஆஸேது ஹிமாசலம் பரவியிருக்கும் புகழையும் இது மாத்திரமேயன்றி சிறந்த செல்வமும் மல்கி யிருக்கிறபடியும் கண்ட பல அஸூயாளுக் கள் தாளமாட்டாமல் ஸ்வாமிக்கு இழுக்கு உண்டாக்க வேண்டு மென்று பாரிப்ப தனல் ஸ்வாமியின் அரிய நிரூபணங்களின் சிறப்பு இன்னும் மேன்மேலும் அதிகமாவதற்கே இது ஏதுவாகும் என்பது பொதுவாக ஸகல பண்டிதர்களினு டையவும் விசேஷித்து வானமாமலை வித்வான், வா. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமியி னுடையவும் லிகிதமூலமான அபிப்பிராயம்.

ஸ்வாமியின் நிரூபண சக்தியை பரீட்சை பண்ணு மதிகாரி எப்படிப்பட்டவர் களாக இருக்க வேண்டும்? மணவாள மாமுனிகளின் கிரந்தங்களை வரியடைவே கற்று வியாக்கியானங்களை ஸேவித்து பெரியோர்களிடம் காலக்ஷேபம் செய்து மனஸ்ஸில் தரித்து கேட்பவர்களுக்குத் தினவடங்க உபந்யஸிக்கும் ஆற்றல் உடைய வர்களாய் இருந்தாலன்றி முடியாது. இப்படிப்பட்ட யோக்யதைகள் இல்லாதவர் களின் பேச்சு 'ஸூர்யனிடம் களங்க முள்ளது' என்பவனுடைய பேச்சுக்கு நிகராகும். இதை மறுக்கும் ஸ்ரீ வைஷ்ணவருளரேல் முன்வரலாம்.

நல்வார்த்தை நானூறு வியாஸத்தில் எத்தனை அருமையான ஆராய்ச்சிகள்! இதற்குமேல் இல்லை என நினைத்திருந்தவர்களுக்கு 'இச் சபத வியாஸத்தை' ஸேவித்தபின் என்னே! ஆராய்ச்சியின் திறன்! இவ்வளவு ஸூக்ஷ்மமாக ஆராய்ந்து உட்புகுந்து உண்மையை விளக்கும் திறமை என்னே!! எனப் புகழ்வது தவிர வேறு நினைக்க இடமுண்டோ?

ஆஸேது ஹிமாசலம் பிரஸித்தமான ஒரு புகழ் பெற்ற ஆசாரிய ஸ்வாமி ஒரு ஞான வ்ருத்தர், வயோ வ்ருத்தர் "சபதம்" என்று மகுடமிட்டு ஒரு வியாஸம் எழுதி வெளியிட்டால் அதில் எவ்வளவு த்ருடமான அசைக்க முடியாத உண்மை யிருக்க

வேண்டுமென்பதை ஸாமான்யர், பெரிய சிறந்த பண்டிதர்கள் ஆகிய எவரும் தெரிந்து கொள்ளமாட்டார்களா?

இக்கால பண்டிதர்களில் சிலர் ஸ்ரீஸூக்திகளின் மூலம் தெரியாமலும், ஒரு வரிடமும் காலக்ஷேபம் கேளாமலும், வ்யாக்யானங்களை ஸேவியாமலும் மனஸ் ஸுக்குத் தோன்றின விஷயங்களை தான்தோன்றித் தனமாக உபந்யஸிப்பதுபோல ஒரு சிலர் 'யானே ஆராய்ச்சியில் வல்லவன்' என்று மார்பு தட்டி நுனிப்புல் மேய் வான்போல் வியாக்யானங்களை அங்கொன்று இங்கொன்றுமாக இழுத்துப் பொகட்டு கிரந்த பூரணம் செய்கின்றனர். இது கலி கோலாகல மென்று கூறலாமே தவிர வேறு ஒன்றும் சொல்லமுடியாது. பூர்வபக்ஷி சென்றமாத பத்ரிகையில் கடை சியில் பாகவத அபசார விஷயமாக சில சூர்ணைகளை எழுதி இவற்றை ஸ்வாமி தினம் அநுஸந்தானம் பண்ணக்கடவரென்கிறார். இவர்வயதென்ன? ஞானமென்ன? தன் னுடைய வியாஸத்தில் பாகவத அபசாரம் இல்லை போலவும் ஸ்வாமி தான் இப்படி யெழுதுகிறாரென்றும் உலகில் தப்பான பிரசாரம் செய்யவன்றோ இம்மாதிரி எழுது கிறார். யாரிடம் அபசாரப்பட்டார்? எப்பொழுது? எதற்காக? என்கிற விஷயங்களை இவர் அறியாதவரல்லர். இவர் குறிப்பிடும் வேங்கடார்ய சதக கிரந்தம் வெளிவந்து சுமார் ஐந்து வருஷங்களாவது இருக்கும். இதுவரை இவர் ஏன் அதை ஸகித்திருந் தார்? அப்பொழுதே இவர் ஏன் கிளர்ந்து எழவில்லை? அந்நாள் முதல் இந்த பூர்வபட்சி, ஸ்வாமியின் எத்தனை வியாஸங்களை தன் சஞ்சிகையில் வெளியிடவில்லை.

பூர்வபக்ஷி ஸ்ரீரங்கத்தில் நடந்த 'புரச்சிகையார் சபா'வின் ஒரு கொண்டாட் டத்தின்போது ஸ்வாமியின் உபந்யாஸத்தைப்பற்றி மனமுருகி எவ்வளவு தூரம் புகழ்ந்துள்ளார்? ஸ்வாமியின் உபந்யாஸத்தின் முன் பர்ஜன்யனும் தோற்றுப் போனான்' என்று எழுதி யிருக்கிறார். அதாவது ஸ்வாமியின் உபந்யாஸத்தின்போது ப்ரமாதமான இடி, மின்னல், மழை வந்ததாகவும் அப்பொழுதும் ஸ்வாமியின் திருநாவீறு சிறந்து விளங்கி கணீரென்று ஒலித்தபடியால் மழையால் குறையொன் றும் ஏற்படவில்லையென்று.

பேனாவோ ஓடுகிறது—எவ்வளவும் எழுதலாம்—க்ரமேண எழுதுவேன்.

[நல்வார்த்தை நானூறில் (164-வது பாராதான் அடியேன் அபிப்ராயம்) இதுவே சிறந்த பொன்மொழி. இதைத் தவிர வேறு எதுவும் எழுத அவசியமில்லை. அதாவது :

"164. உலகத்திலுள்ள அதிகாரிகளை மூன்று வகையாகப் பிரிக்கலாம்; 1. ஒன்று மறியாத மூடர்கள். 2. எல்லாம் நன்கு தெரிந்த விசேஷ வித்துக்கள். 3. ஸ்வல்பம் தெரிந்து எல்லாம் தெரிந்து விட்டதாக நினைத்துக் கொக்கரிக்குமவர்கள் என மூவகை. இவர்களுள், ஒன்று மறியாத மூடர்களை எளிதில் தெளிவிக்க முடியும். ஏனென்றால், அவர்கள் நல்லாரிடத்து நல்லது தெரிந்துகொள்ளவேணுமென்கிற விருப்பமுடையவர்க ளாதலால். இவர்களுக்கு மேற்பட்டவர்களான விசேஷ வித்துக்களை த்ருப்திபடுத்துவது மிகவும் எளிது. அவர்கள் பரம ரஸிகர்களாகையாலே அன்னவர்களோடு பேசுவது பரம ரஸமாயிருக்கும். சொல்லுகிற விஷயங்களை மிகவும் ரஸமாகவும் எளிதாகவும் அவர்கள் க்ரஹிக்க வல்லவர்களாதலால் அவர்களை ஆராதிப்பது மிகவுமெளிது. மூன்றுமவர்களாகத் தெரிவிக்கப்பட்டவர்களுண்டே, அவர்களைத் தெளிவிக்க ப்ரஹ்மாவாலுமாகாது. எல்லா மறிந்ததாகப் பாவனை கொண்டு எதிலும் குதர்க்கம் செய்வதும், இன்னது சொல்லி யிருக்கிறதென்று உணராமலே தூஷிப்பதும் அன்னவர்களது செயலாதலால் அவர்க ளுடைய வாழ்நாள் அப்படியே கழியவேண்டியதாகுமேயன்றி, தெளிவுபெற்றுக் களிக்க அவர்கள் பாக்கிய மற்றவர்களே. "அஜ்ஞஸ் ஸுகமாராத்யஸ் ஸுகதரமாராத்யதே விசேஷஜ்ஞ:, ஜ்ஞாநலவ துர்விதக்தம் ப்ரஹ்மாபி நரம் ந ரஞ்ஜயதி" என்றானே".

## ஆசார்ய மாலை—ஆசிரிய விருத்தம்

அன்புமிக வவதரித்த வாழ்வார் தங்கள் அரும்பொருளை யனுதினமும் சிந்தைசெய்து
நன்மை மிகு நம்புவியில் வந்துதித்த நலமிகுசீ ரண்ணங்க ராரியர்தம்
இன்பமிகு விசேடார்த்தப் பொருளையெல்லாம் எழிலுடைய திவ்யார்த்த தீபந்தன்னில்
திண்மைமிகு நலமுடன்நாம் கண்டுகொண்டு தெரியாத விழுப்பொருள்கள் தெரிகின்றோமே-
சத்தியநெறியில் சித்த நில்லாத சலமிலாப் பேதையே னடியேன்
நித்தமுமுன் றன் தீபிகையதனை நீசனேன் நெஞ்சினில் கொண்டு
தத்துவமுணர்ந்து மெய்த்துயர் நீங்கித் தரணியில் நற்புகழ் பெற்றேன்
அத்தனே! என்றும் கச்சிமாநகர்வாழ் அண்ணனே ! வாதிபீகரனே ! 2
முத்தியைத் தருநல் லத்தியங் கிரிமேல் முகிலெனப் படிந்த பெம்மானை
நித்தமும் நெஞ்சில் பரவியே போற்றும் நின்மலா ! நீசனே னுன்றன்
பக்தியைக் கொடுக்கும் பழவினையறுக்கும் பதின்மரின் தீதிலாப் பொருள்கள்
சித்தமே பதியுமாறெனக் கருளாய் செல்வனே ! வாதிபீகரனே ! 3
முன்னநல் லருளா லிங்கு வந்துதித்த மூதறிவுறை பதினாழ்வார்
இன்னருள் தன்னால் அன்னவர் பொருளை ஏற்றவர்க் கெளிய நன்னடையில்
தன்னிகரில்லாத் தனியதோருரையால் தரணியோ ருய்ந்திடும் வண்ணம்
பன்னியுதைத்தர புனிதனே ! அருளாய் பண்டிதா ! வாதிபீகரனே ! 4
மந்தரகிரியால் கடலினைக் கடைந்த மாதவன்றன் னடிபோற்றும்
சுந்தரமுனியின் தொல்லருள் தன்னால் தோத்திரப் பொருள்களை யெல்லாம்
செந்தமிழுரையால் தெளிய நன்குரைத்த செல்வனே ! எனக்கு நீயருளாய்
அந்தணர் தலைவா ! அருமறையுணர்ந்த அண்ணனே ! வாதிபீகரனே. 5
இன்பமே பயக்கு மெண்டிசை விளங்கும் வசன பூடணப் பொருளெல்லாம்
நன்மையே பயக்கும் நல்லுரையதனால் நாவலோரென்றும் நன்மகிழ
சன்மமேயென்று கருத்தினில் கொண்டு கடிதினி லுலகினோர்க்கருளி
மெய்ம்மையே பயக்கும் மெய்ப்பொருளாளா ! மேதைசால் வாதிபீகரனே ! 6

### திருச்சந்த விருத்தம்

வேதகீத நாதமெங்கும் வேணுகான மென்னவே
கோதிலா தொலிக்குமாறு நாதர்மேவு கச்சிவாழ்
தீதிலாத வாதிபீகரண்ணனார்தம் மேதையை
ஓதஞால மீதிலோத வல்லவாயர் யாவரே ? 1
செஞ்சொலாளர் வாழுநல்ல கச்சிமா நகர்தனில்
பஞ்சியன்ன மெல்லடிக்க ளுடையபதும பாவையை
நெஞ்சில் கொண்டு நித்தம்போற்றும் புனித வாதிபீகரா !
தஞ்சமென்றடைந்த வென்னை அஞ்சலென்ன வேண்டுமே. 2
கரிமாறன் ஆலிநாடன் கண்டுரைத்த வொண்பொருள்
பாரிலுய்ப வர்களுக் குரைத்த வாதிபீகரா !
சீருடன் சிறந்த செஞ்சொல் மிக்கவே விளங்கு(உ)ல
காரியன்றன் சொற்பொருள் எனக்கு நல்கவேண்டுமே. 3
பொய்கைபூதம் பேய்முதல்வர் பாடியீந்த மெய்ப்பொருள்
வைகலும் துதித்து வாழும் வாதிபீகரண்ணனே !
செய்கை நல்லதொன்றிலாத நீசனேன வடியனை
மெய்ம்மையா லுகந்துநோக்கி அருளை நல்கவேண்டுமே. 4
மங்கைபாகன் போற்றநின்ற மழிசையர் தமடிமலர்
தங்கு சிந்தை பித்தனாய வாதிபீகரண்ணனே !
கொங்கர்கோ னுகந்துதந்த தீதிலாத மொழிகளைச்
சங்கையின்றி யுணருவண்ணம் அருளை நல்கவேண்டுமே. 5
பாருநீரு மண்ணுவிண்ணு மாகிநின்ற மாதவன்
பேருமூரு மேத்திநின்ற தொண்டர்தம் மடிப்பொடி

பாருளோர்க் குரைத்த செஞ்சொல் பொருளுரைக்கு மண்ணனே!
அருமே பெறற்கலாத வருளை நல்கவேண்டுமே. 6
கோதைபாணன் விட்டுசித்தன் கூறியீந்த செஞ்சொலை
ஏதமேது மொன்றுமின்றி ஏத்தநின்ற வண்ணனே!
காதலொன்று மொன்றிலாத கடையனுன வடியனைப்
பேதையென்று போதில்கொண்டு அருளைநல்கவேண்டுமே. 7
மண்ணையுண்டு மண்ணுமிழ்ந்து மண்ணிரந்த மாயனைத்
திண்ணகாளு மெண்ணிமன்னு தேசுடன் விளங்குசீர்
அண்ணனுருரைத்தசெஞ்சொல் அருமறைப் பொருள்கணம்
மண்ண விண்ணவர் தம் சேமவைப் பென்றேத்தவல்லதே. 8
மாலின்பக்க லன்புமிக்க மாறனுதியர் பதம்
சாலவேசிறந்த வன்பு கொண்டமிக்க மாமுனி
மேலதான மந்திரத்தின் பொருளுரைத்த வண்ணமே
கோலவாதி பீகர்செய்யும் கோதிலாத திபமே. 9
கச்சிமாட வீதிவாழும் வாதிபீகர ண்ணனை
நச்சிவா ழரங்கன் சொன்ன நாவிரண் டிரண்டையும்
மெச்சியேற்கவல்லவர்கள் மாதவன்றன் பொற்பதம்
அச்சமல்ல லொன்றுமின்றி யெய்துவார்களென்றுமே. 10

V. P. ரங்காசார்யதாஸன்,
நெ. 1, நடராஜக்ராமணி 4-வது வீதி, திருவொற்றியூர்.

## கடிதம் 7

**ஸ்ரீஉவே. வித்வான் திருநகரி எம்பார் வட்டமணி ஸ்ரீநிவாஸாசார்யர் ஸ்வாமியின் திருமுகம்.**

திருவரங்கம் பெரிய கோயிலில் நடந்த மணவாள மாமுனிகள் ஸம்ப்ரோக்ஷணத்திற்கும், திருக்கண்ணபுரத்தில் நடந்த ஸ்ரீ சௌரிப் பெருமாள் ஸம்ப்ரோக்ஷணத்திற்கும் அடியேன் விடைகொண்டிருந்தேன். இந்த இரண்டு ஸ்தலங்களிலும் நம்முடைய தென்னசார்ய ஸம்பிரதாயஸ்தர்களான வித்வான்கள் நாற்றிசைகளிலிருந்தும் விசேஷமாக ஸேவை ஸாதித்தார்கள். எழுந்தருளாதவர்கள் சிலரேயிருக்கக் கூடும். மேலே சொன்ன இரண்டிடங்களிலும் பாராயணதி ஸமயங்கள் தவிர மற்றபடியான விச்ராந்தி காலங்களில் நாலு வித்வான்கள் ஒன்று சேர்ந்தால் த்ரௌபதீ வார்த்தையும் பரந்த ரஹஸ்யப் பேச்சும் தவிர வேறு எந்த பேச்சும் கிடையா தென்பதை உறுதியாகக் கூறலாம். ஒவ்வொருவர் வாக்கிலும் இது என்ன வம்பு விசாரம் என்கிற வார்த்தைதான் அதிகமாக வெளிவந்து கொண்டிருந்தது. அடியேன் ஸ்வஸ்தானம் சேர்ந்த பிறகு அங்கே ஸ்ரீராமாநுஜன் 175, 176 கிடைத்தது. அதன் முடிவில் 8 பக்கங்களை விசேஷித்துப் பார்க்க நேர்ந்தது. அதன் ப்ராரம்பம் அடியேனுடலைப் புளகாங்கித மாக்கியது. அதாவது

"தீவிரமான சபதமொன்று. நம்முடைய ஸம்பிரதாயத்தில் பெரிய வாச்சான் பிள்ளை யருளிச் செய்த க்ரந்தங்கள் ஒன்றிரண்டல்ல. பல பல வுள்ளன. எந்த க்ரந்தங்களைப் பற்றி விவாதமுள்ளதோ, (அதாவது) ஆச்சான் பிள்ளை ஸாதித்ததா? பெரியவாச்சான் பிள்ளை ஸாதித்ததா? என்கிற சச்சரவு உள்ளதோ, அந்த க்ரந்தங்களை = பரந்த ரஹஸ்யம், மாணிக்க மாலை முதலானவைகளை அறவே விட்டிடுவோம். எந்த எந்த க்ரந்தங்களைப் பெரிய வாச்சான் பிள்ளை ஸாதித்ததாக வைணவவுலகம் முழுவதும் நிர்விவாதமாக இசைந்திருக்கின்றதோ, அந்த க்ரந்தங்களில ஒரு க்ரந்தத்தைப் பற்றியாவது ஆச்சான் பிள்ளை ஸாதித்ததாக மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்தியுளதா? உளதாயின், இரண்டிடம் வேண்டாம், மூன்றிடம் வேண்டாம்; ஒரே ஒரு இடம் காட்டினுல் போதும். காட்டிவிட்டால். மணவாள மாமுனிகளின் வியாக்கியான நூல்களில் ஆச்சான் பிள்ளையென வருமிடங்களெல்லாம்—ஒன்று தப்பாமல் பெரிய வாச்சான் பிள்ளையையே குறிக்கின்றன. என்றிசைந்து நிற்ப தோடல்லாமல் அப்படி காட்டின க்ஷணம் முதலாக நாம் எழுத்துக் கருவியையோ

புத்தகத்தையோ யாவச்சரீரபாதம் கையால் தொடுவதில்லை, எங்கும் உபந்யாஸ மென்று வாய் திறப்பதுமில்லை—என்று தீவிரமான சபதம் செய்து இஃது எழுதுகின்றோம்". என்கிற பங்க்திகள் ஒரு பக்கத்தில் விஷாதத்தையும் ஒரு பக்கத்தில் ஆனந்தத்தையும் உண்டுபண்ணின விதத்தை அடியேன் என்னவென்றெழுதுவது.

பகவத் விஷயமென்று கொண்டாடப்படுகிற ஈடு முப்பத்தாறாயிரப்படியை ஸாதித்தவர் நம்பிள்ளையென்று சிலரும், வடக்குத் திருவீதிப் பிள்ளையென்று சிலரும் சொன்னால் இதில் யாராவது பிணங்குவதுண்டா? ஒருவர் ஆசார்யர், மற்றொருவர் சிஷ்யர். ஆசார்யர் ஸாதிக்க சிஷ்யர் பட்டோலை கொண்டாரென்றால் இருவரும் கர்த்தாக்களாக இருக்க என்னதடை. ஒருவர் பூர்வசிகியாயும் மற்றொருவர் அபர சிகியாயுமிருந்தாலாவது பூர்வசிகியின் பெருமையை அபஹரிக்கிறார்களேயென்று போராடலாம். இங்கு (பரந்த ரஹஸ்ய விவாதத்தில்) இருவரும் பூர்வசிகிகளே யல்லவோ? பெரியவாச்சான் பிள்ளையின் பிரபாவம் ஜகத்ப்ரஸித்தம். அவருக்கு இந்த பரந்த ரஹஸ்யத்தினாலோ மாணிக்க மாலையினாலோ மற்றொன்றினாலோ ஒரு பெருமை ஏற்படவேண்டியதில்லை. அவருடைய திருக்குமாரர் விளக்கில் கொளுத்தின தீவட்டிபோலே விளங்கினாரென்று அவர்க்குப் பெருமை ஏற்பட்டால் பித்ரு புத்ரர்களான இருவரிடத்திலும் துல்யமான ப்ரதிபத்தி பூண்டவர்கள் இதற்கு உகக்க வேண்டியது போய் இதில் பிரளயமாகப் பிணங்குவது புத்திமான்களின் காரியமா?

'இந்த க்ரந்தம் யாருடைய கிருதி' என்கிற விசாரத்தை விட்டு, மணவாள மாமுனிகளின் வியாக்கியானங்களில் அவர் ஆச்சான் பிள்ளை ஆச்சான் பிள்ளை யென்றே பலகாலும் அருளிச் செய்கிற வ்யக்தி - யாவர்? என்கிற விசாரத்தை நம் பிரதிவாதி பயங்கரம் ஸ்வாமி முக்கியமாகக் கொண்டிருக்கிறார். இது மிகவும் அவசியமான விசாரமென்பது அடியேனுடைய அபிப்ராயம். உலகில் க்ரந்த கர்த்தாக்களென்று எத்தனைவர் உளரோ, அவர்களெல்லாரைக்காட்டிலும் மணவாளமாமுனிகளுக்கு அநிதர ஸாதாரணமான ஏற்றமுண்டென்று நம் ஸ்வாமி நிருபித்திருப்பதை யாரும் ஆக்ஷேபிக்க முடியாதன்றோ. மயங்க வைத்தல் மாறுபட வுரைத்தல் முதலான வற்றில் ஒன்றுக்கும் இடமில்லாதபடி ஸாதிப்பவர் மணவாள மாமுனிகளே யென்றும், அதுகாரணமாகவே மாமுனிகள் விசதவாக்சிகாமணிகளாக வீறுபெற்றாரென்றும் உலகமெல்லாம் சொல்லுவதை மறுக்க முன்வருவாருளரோ? அப்படி பெருமைபெற்ற மாமுனிகள் சிலவிடங்களில் பெரியவாச்சான் பிள்ளையென்றும் பலவிடங்களில் ஆச்சான்பிள்ளை யென்றும் அருளிச்செய்திருந்தால் இரண்டு வ்யக்தியும் ஒருவரேதான் என்றுசொல்ல முன்வருபவர் யாராயிருக்கவேண்டும்.

சிறுபுலியூரென்கிற திவ்ய தேசத்தில் அடியேனுடைய ப்ரவசனம் அடிக்கடி நடந்து வருகிறது. பெரியாழ்வார் திருமொழிக்கு மணவாளமாமுனிகளருளிச் செய்த வியாக்கியானத்தை அங்கு சலசயனத்தெம்பெருமான் திருமுன்பே ஸேவித்துக் கொண்டிருக்கையில் "நாவகாரியம் சொல்லிலாதவர்" என்கிற திருமொழியின் முதற் பாட்டின் அரும்பதவுரையில்— "மேல் நாலு திருமொழி ஆச்சாம்பிள்ளை வியாக்கியானமாயிருக்கு மளவன்றிக்கே இப்பாட்டுத் தொடங்கி ஓரோ ப்ரதேசங்களிலே ஒரு பாட்டுத்தான் பாதி பாட்டுத்தான் இருந்த ஸ்தலங்களிலே மணவாள மாமுனிகள் ஸ்ரீஸூக்தியில் கௌரவத்தாலே சேர்த்துக்கொண்டு வ்யாக்கியானம் செய்தருளினாரென்று ஸம்பிரதாயம் கண்டு கொள்வது. இதுக்கு ஸூசகம் கடினபாகமாயிருக்கை" என்கிற பங்க்திகள் காணப்பட்டன. இவ்வரும்பதவுரைகாரர் பெரிய வாச்சான் பிள்ளையை ஆச்சான்பிள்ளையென்று கிரஹித்தவராயிருக்கலாம். அச்சிட்டவர்கள் (பெரிய) என்பதை விட்டிருக்கலாம். இப்படிப்பட்ட ஐயப்பாடுகள் மணவாள மாமுனிகள் தவிர்ந்த மற்றையோருடைய நூல்களில் விசேஷமாகக் கிடைக்கலாம். மாமுனிகள் ஸூக்திகளே ஸர்வாத்மனா நிர்மலமானவை என்றுகொண்டே பிரதிவாதிபயங்கரம் ஸ்வாமி தீவிரமான சபதம் செய்தருளியிருக்கிறார். சக்தியுள்ளவர்கள் அந்த சபதம் பங்கமடையும்படி பிரயாசைப் படவேண்டியதன்றோ அவசியம். ஸ்வாமியின் திருவுள்ளத்தில் எவ்வளவு திடமான ஸித்தாந்தமிருந்தால் "....எடுத்துக்காட்டி விட்டால் அப்படி காட்டினக்ஷணம் முதல் நான் பேனாவைத் தொடுவதில்லை, பேசவும்

முற்படுவதில்லை'' என்று இவ்வளவு தீவிரமான சபதம் வெளிவந்திருக்குமென்று உலகமெல்லாம் இதை ஆழ்ந்து கவனிக்கவேண்டாமா? இப்படி சபதம் செய்ய இந்த ஜம்பூத்வீபத்தில் வேறொருவர் முன்வர முடியுமா? ஸ்ரீ ஸ்வாமியின் நூல்களில் இப்படிப்பட்ட சபதங்களை ஒன்றிரண்டல்ல, அநேகம் கண்டிருக்கிறோமல்லவா? பார்ப்பவர்கள் 'ஸத்யம் ஸத்யம்' என்று சொல்லுவது வழக்கமேதவிர வேறுபேச்சுண்டோ?

ஸ்வாமி பேனாவைத் தொடாமலிருக்கும்படியும் பேசாமல் மௌனமாயிருக்கும்படியும் செய்துவிட வேண்டுமென்று மனப்பால் குடிப்பவர்கள் அனேகம் பேர் இருக்கிறார்களல்லவோ? அவர்களும் ஸ்வாமியின் எழுத்துக்களைக் கண்டு கண்களில் ஒற்றிக்கொள்வதும் அஞ்சலி பண்ணுவது மாயன்றோ இருக்கிறார்கள். இந்த விஷயமேயன்று, எந்த விஷயமானாலும் ஸரி; ஸ்வாமி யெழுதியதாக வெளிவந்து விட்டால் மாச்சரியமுள்ளவர்களுங் கூட அதில் பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளிற் போலவே கௌரவம் கொள்ளுகிறார்களே யொழிய வேறுண்டோ? சிலர் மறுப்பெழுதுவதென்று வந்தாலும் "இன்னமும் ஸ்வாமி ஸ்ரீஸூக்திகளை உலகம் அநுபவிக்க இடமேற்படுத்திக் கொடுக்க வந்தோம்" என்று மறைவிட மில்லாமல் சொல்லுகிறார்களே. இதைச் சிலர் எழுதியுமிருக்கிறார்களே.

அடியேன் திருநாங்கூரில் ஸ்ரீமத். தோடா ஸ்வாமி யென்று ப்ரஸித்த வித்வானாக எழுந்தருளியிருந்த (வைகுந்த விண்ணகரம்) பெரிய க்ருஷ்ணமாசாரியர் ஸ்வாமி ஸன்னிதியில் ஸ்வரூப க்ரந்தங்கள் காலக்ஷேபம் செய்து கொண்டிருந்த காலத்தில் ஒரு ஸமயம் நம்பெருமாள் ஸன்னிதியிலிருந்து ஸ்ரீமதித்யாதி கபிஸ்தலம் அனந்தாசாரியர் ஸ்வாமி, (பிரபல வித்வான்) எம்பார் கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி முதலான சில மஹான்கள் ஒன்று கூடும் ஸந்தர்ப்ப மேற்பட்டது. அப்போதே நம் அண்ணா ஸ்வாமியின் க்ரந்தங்கள் ப்ராதுர்ப்பவித்துப் பரவிக் கொண்டிருந்தன. அதுகளைப் பற்றின ப்ரசம்ஸை அந்த மஹான்களின் திரளில் நேர்ந்தபோது அவர்கள் யாவரும் ஏககண்டமாக ஸாதித்த ஸ்ரீஸூக்திகள் இன்று போல அடியேனுடைய நினைவிலிருப்பதால் ஸ்ரீ ஸ்வாமியின் க்ரந்தங்களை ஸேவிக்க நேரும்போதும், உபந்யாஸங்களைக் கேட்க ப்ராப்தமாகும் போதும் அடியேன் அவர்களுடைய ஸ்ரீஸூக்திகளை நினையாமலிருப்பதில்லை. பல ஸபைகளில் சொல்லியு மிருக்கிறேன். "உடையவர் பட்டர் மணவாள மாமுனிகள் போலவே இவரும் உலகம்போற்ற நிற்பர்" என்பதே அவர்களுடைய ஸ்ரீஸூக்தி ஸாரம்.

நியாயாலயங்களில் சில வக்கீல்களுக்கு ஒரு ப்ரஸித்தியுண்டு; அதாவது, இவர்கள் நியாயம் நிரம்பிய தாவாக்களைப் பற்றுவர்களே யொழிய, ஆயிரம் பதினாயிரம் கொடுத்தாலும் அநீதியான தாவாக்களைக் கையாளும் தொடார்கள் என்று. அப்படிப்பட்ட வக்கீல்களிடத்தில் ஜட்ஜுகளுக்குப் பெருமதிப்புண்டு. அந்த வக்கீல்கள் எதிலும் தோல்வியடைவதில்லை. இதேபோல் அண்ணாஸ்வாமியும் எந்த வாதத்தில் இறங்கினாலும் அது நியாயம் நிரம்பியே யிருக்குமென்பதும், வெற்றி பெற்றே நிற்குமென்பதும் ஐம்பது வருஷமாக உலகம் கண்ட காட்சியல்லவா இது. ஸ்வாமியின் பத்ரிகைகளிலும் புஸ்தகங்களிலும் நூற்றுக்கணக்கான விவாத நிர்ணயங்களை வாசித்து வருகிறோம். இன்னது நீதிப் பிசகு என்று ஒருவர் வாக்கிலும் வந்ததில்லை. '2—9—'63ல் திருக்கண்ணபுரத்தில் நடந்த ஸ்வாமியின் உபந்யாஸத்தின் முன்னுரையில் ஸ்ரீஉவே. சித்ரகூடம் வித்வான் அ. வெங்கடாசாரியர் ஸ்வாமி இதைத்தான் வற்புறுத்திக் கண்ணீர் பெருக நின்று பேசினார். கேட்டவர்களும் கண்ணீர் சொரிந்தார்கள்.

அடியேனுடையவும் மற்றும் பல தென்னாசார்ய ஸ்வாமிகளுடையவும் ஸித்தாந்தம் இவ்வளவே; விஷயம் எதுவானாலும் ஸரி; விஷயத்தினுள்ளே புகுந்து நாம் பரிசீலனை செய்யவேண்டிய அவசியமே கிடையாது; அண்ணாஸ்வாமி ஸாதித்ததென்றால் அதுவே வேதவாக்கு என்று சொல்லுவது தவிர வேறறியோம். 30-9-63.

**எம்பார்-ஸ்ரீநிவாஸாசார்ய தாஸன், திருநகரி:**

ஸ்ரீ:

# ஹாஸ்யக் கதைகளும் பக்திக் கதைகளும்

## 1. படிப்பில்லாத மாப்பிள்ளையின் பரிசு

ஒரு ஸம்ஸ்கிருத வித்வானுக்கு அருமையான பெண் ஒருத்தி இருந்தாள். அப்பெண்ணை நன்ருக ஸம்ஸ்கிருதம் பயின்ற ஒரு பிள்ளைக்கு விவாஹம் செய்து கொடுக்கவேணுமென்று ஆசைப்பட்டு அப்படிப்பட்ட வரனைத் தந்தை தேடிக் கொண்டிருந்தார். வெளியூரில் ஸம்ஸ்கிருத பாடசாலையில் ஸாஹித்யம் வாசித்துக் கொண்டிருந்தவொரு குமாரனுடைய தகப்பனர் ஞான லவலேசமுமில்லாத அந்த குமாரனை மிகப்பெரிய பண்டிதனைகப் பொய் சொல்லி விவாஹத்தை முடித்துக் கொண்டார். மாமனர் தம்முடைய ஜாமாதாவை மெய்யாகவே பண்டிதனென்று மருண்டு மகிழ்ந்திருந்தார். இப்படியிருக்கையில் நவராத்ரி மஹோத்ஸவம் வந்தது. மஹாநவமியன்று ஸரஸ்வதி பூஜை செய்வது வழக்கமாதலால் அந்த பண்டிகைக்கு ஜாமாதாவை வரும்படி விரும்பியிருந்தார் மாமனர். ஒரு வாரத்திற்கு முன்பே அழைப்புக் கடிதமனுப்பி யிருந்தார். வரனுடைய தகப்பனருக்கு மிகுந்த கவலை யுண்டாயிற்று. ஸரஸ்வதி பூஜையன்று சுவடிகளை யெல்லாமெடுத்துப் பரிஷ்கரித்து வைத்துப் பூஜை செய்வது வழக்கமாதலால் அந்த ஸமயத்தில் தம்முடைய குமாரனை அங்கு அனுப்பிவைத்தால் புத்தக விஷயமான பேச்சு ஏற்பட்டு இவனுடைய அறிவின்மையை யறிந்துகொண்டு மாமனர் வருந்துவரே; இதற்கு என்ன செய்வது! என்று மிகவும் கவலைப்பட்டார். கடைசியாக ஓர் முடிவு செய்துகொண்டார். குமாரனுக்கு ஸம்ஸ்கிருதத்தில் சில வார்த்தைகளை ஐந்தாறு நாட்களில் பாடம் செய்து வைத்து மாமனரகத்திற்கு அனுப்புவதாக நிச்சயித்து, அப்படியே பண்டிகைக்கு குமாரனை யனுப்புவதாக பதில் தெரிவித்து விட்டார். அன்று முதல் குமாரனுக்குப் பாடம் கற்பிக்க வாரம்பித்தார். 'பயலே! ஸரஸ்வதி பூஜையன்று மாமனர் ஓலைச் சுவடிகளை யெல்லாம் ஒவ்வொன்ருக வெடுத்துப் பிரித்துப் பழுது பார்த்துக் கட்டி வைப்பர். அப்பொழுது நீ ஒன்றும் பேசாமலிருந்தால் நன்ருயிராது; ஆகவே நான் ஸம்ஸ்கிருதத்தில் சில வார்த்தைகளைச் சொல்லி வைக்கிறேன்; இவற்றை நாலு நாளில் உருப்போட்டுக் கண்டபாடம் செய்து வைத்துக்கொண்டு அங்கே உபயோகப் படுத்துவாயாக என்றூர் தகப்பனர். குமாரன் அதற்கிசைந்தான். பிறகு பாடம் கற்பிக்கிருர். (அதாவது)

மாமனர் ஒரு சுவடியை யெடுத்துக் கட்டவிழ்க்கும்போது பயலே! கோயம் க்ரந்த:?—(இது என்ன நூல்?) என்று கேள்; அவர் "பாஷ்ய க்ரந்த:" என்றே "பகவத் விஷய க்ரந்த:" என்றே பதில் சொல்லுவர், அதைக் கேட்டவுடனே நீ "இதம் மயா அதீதம்"—இதை நான் வாசித்திருக்கிறேன் என்று சொல்லு. உன்னை அவர் பரீக்ஷிப்பரோ என்று பயப்படாதே; ஜாமாதாவாகையாலே மரியாதை தப்பிப் பரீக்ஷிக்க மாட்டார். மறுபடியும் அவர் வேறெரு சுவடியை எடுத்து அவிழ்ப்பர். அப்போதும் நீ 'கோயம் க்ரந்த:?' (இது என்ன நூல்) என்று கேள்; புத்தகத்தின் பெயரை அவர் சொல்லுவர். உடனே நீ 'இதமபி மயா அதீதம்' —இதுவும் நான் வாசித்திருக்கிறேன் என்று சொல்லு. இப்படியே அடிக்கடி கேட்பதும் சொல்லுவதுமாக இருந்து கௌரவமாய்த் திரும்பிவந்து சேர் என்று சொல்லி, 'கோயம் க்ரந்த:?, இதம் மயா அதீதம், இதமபி மயா அதீதம்'—என்கிற இந்த மூன்று வார்த்தைகளை நாலைந்து நாள் பாடம் செய்வித்துக் குமாரனை மஹாநவமியன்று மாமனரகத்திற்கு அனுப்பினர். போகிற வழி முழுதும் இந்த வார்த்தைகளையே சிந்தனை செய்துகொண்டு போய்ச் சேர்ந்தான். தகப்பனர்

சொல்லியிருந்தபடியே அங்கு மாமனார் காலை ஒன்பது மணிக்குமேல் தாள கோசங்களை யெல்லாம் சோதிக்கத் தொடங்கினார். ஜாமாதாவுக்கு ஒரு நாற்காலி கொடுத்து வீற்றிருக்கச் செய்தார். ஒரு சுவடியை யெடுத்து அவிழ்த்தவுடனே கோயம் க்ரந்தஃ? என்று கம்பீரமாய்க் கேட்டார் ஜாமாதா. மாமனார் ஆனந்தத்துடன் 'அயம் ப்ரௌடமனோரமா க்ரந்தஃ'—(இது ப்ரௌடமனோரமை) என்றார். உடனே ஜாமாதா "இதம் மயா அதீதம்" (இதை நான் வாசித்திருக்கிறேன்) என்றான். மாமனார் மிக மகிழ்ந்தார்; பிறகு மற்றொரு சுவடியை யெடுத்து அவிழ்க்க பழைய படியே கோயம் க்ரந்தஃ? என்றான் ஜாமாதா. 'அயம் ப்ராமாண்ய வாத க்ரந்தஃ' (இது ப்ராமாண்ய வாதம்) என்றார் மாமனார். அதற்கு 'இதமபி மயா அதீதம்' (இதுவும் நான் வாசித்திருக்கிறேன்) என்றான் ஜாமாதா. இப்படி வினா விடைகள் நடந்து கொண்டிருக்கையில், மாமனார், எழுதாத ஏடுகளை இனி யெழுதுவதற்காக ஸித்தப் படுத்தி வைத்திருக்குமொரு சுவடியை எடுத்தவிழ்த்தார்; அப்போதும் ஜாமாதா பழையபடியே கோயம் க்ரந்தஃ? என்றான். அதற்கு மாமனார் 'அயம் அலேக க்ரந்தஃ' —இது எழுதாத சுவடி என்றார். ப்ரௌடமனோரமா, ப்ராமாண்யவாதம் என்றாற் போலே இதுவும் ஒரு சாஸ்த்ர க்ரந்தமென்று நினைத்துக்கொண்ட ஜாமாதா முன் போலவே "இதமபி மயா படிதம்" என்றான். அதையும் தான் வாசித்திருப்பதாகத் தெரிவித்தபடி. அதுகேட்ட மாமனாருக்கு வருத்தம் தாங்க முடியவில்லை. மாப்பிள் ளையின் ஞானச் சாயம் வெளிப்பட்டுவிட்டது. இக்கதையை மேலேயும் தொடர்ந்து எழுதவேணுமோ? ... .... .... .... *

## 2. அண்ணாமலைக்கு ஹரோஹரா

திருவண்ணாமலையில் கார்த்திகை தீபம் என்பது ஒரு விசேஷ நாள். அன்று அவ்விடத்துச் சிவாலயத்தில் லக்ஷக்கணக்கான விளக்குகள் எரியுமாம். பிழைக்க வழி தேடின வொருவன் இத்திருவிளக்குத் திருப்பணியை தொண்டர்களிடத்தில் பணம் பிச்சை வாங்கி ஆயிரமிரண்டாயிர ரூபா செலவில் தானே நடத்துவதாகச் சொல்லிப் பல விடங்களில் சென்று பொருள் திரட்ட நினைத்தான். உண்மையில் அண்ணாமலை தீபத்திற்கும் இந்த பிச்சைக்கும் யாதொரு ஸம்பந்தமும் கிடையாது. பிழைப்புக்கு இதையொரு வியாஜமாகக் கொண்டானிவன். பிச்சைக்குப் புறப்பட நாள் பார்த்து நிச்சயித்து விட்டான். பிச்சைக்கு ஒருவனாகப் போவதைவிட மற்றுமொருவனைத் துணைகொண்டு இருவராகப் போவது நலமென்று தோன்றினபடியால் தன் பக்கத்து வீட்டுக்காரனைத் துணையழைத்தான். "வருமானத்தில் ஒரு ரூபாயில் 15 அணா அண்ணாமலைக்கு அர்ப்பணம் செய்து விடுகிறேன், ஒரு அணா உனக்குத் தருகிறேன்!" என்றும் சொன்னான். அவனும் இதற்கு இசைந்தான். இருவரும் புறப்பட்டார்கள். பிச்சைக்காக ஒவ்வொரு வீட்டிலும் நுழையும்போது முதல்வன் 'அண்ணாமலைக்கு' என்று சொல்ல வேண்டியதென்றும், இரண்டாமவன் 'ஹரோ ஹர' என்று பின் பாட்டுப் பாட வேண்டியதென்றும் சங்கேதம் செய்து கொண்டார்கள். இருவரும் அப்படியே சொல்லிக் கொண்டு ஊர்தோறும் வீடுதோறும் பிச்சைக்குப் போகிறார் கள், இவர்கள் உண்மையாகவே தொண்டு செய்பவர்களென்கிற நம்பிக்கை கொண்டு ஒருவரும் இல்லை யென்னாது யாவரும் யதாசக்தி பொருள் தந்து வந்தார்கள்.

ஒவ்வொரு நாளும் 20, 25, 30, 40 இப்படியாக ரூபாய்கள் கிடைத்து வந்தன. முதல்வன் ரூபாய்க்கு 15 அணா வீதம் தான் எடுத்துக் கொள்வதும் ஒரு அணா வீதம் துணைவனுக்குக் கொடுப்பதுமா யிருந்து வந்தான். முதல்வன் எடுத்துக் கொள்ளுகிற 15 அணா பங்கில் ஒரு பைசாவும் அண்ணாமலைக்குச் சேருவதில்லை யென்றும், மொத்தமும் தானே கொள்ளை யடிக்கிறானென்றும் நாளடைவில் வெளிப் பட்டு விட்டது. கூரை வீட்டில் குடியிருந்து வந்த முதல்வன் பெரிய மாட மாளிகை

கட்டிவிட்டான். லேவா தேவியும் விசேஷமாகச் செய்து வருகிறான். துணைவனுக்கு ஒரு அணா பங்கு மட்டுமே கிடைத்து வருவதால் அவன் ஜீவிப்பதற்கே போதாம லிருந்தது. ஒரு நாள் அவனுடைய மனைவி அவனைக் கேட்டாள் "நீங்களிருவரும் சேர்ந்துதானே பொருளீட்டப் போகிறீர்கள், அவர் மட்டும் பெரிய பணக்காரராக ஆய்விட்டாரே, நீர் ஒன்று மில்லாமலே யிருக்கிறீரே, என்ன காரணம்? என்று கேட்டாள். அதற்கு அவன் உள்ளபடி சொன்னான் 'அவர் அண்ணாமலைக்கு என்கிறார், நான் ஹரோஹர என்கிறேன்; அவர் 15 அணா எடுத்துக் கொள்ளுகிறார்; எனக்கு ஓரணாவே கொடுக்கிறார்; இப்படித்தான் முதலிலேயே ஒப்பந்தம்' என்றான். அது கேட்ட மனைவி, 'இப்படி கூட ஒரு அசட்டுத்தனமுண்டா? ஒருநாள் அவர் அண்ணா மலைக்கு என்னட்டும், அன்றுநீர் ஹரோஹர என்று சொல்லும்; மறுநாள் நீர் அண்ணாமலைக்கு சொல்லும், அவர் ஹரோஹர சொல்லட்டும்; இதுதான் சரியான முறை என்று தூபம் போட்டு விட்டாள் மனைவி. துணைவன் இதை கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். மறுநாள் பிச்சைக்குப் போம்போது வீட்டுப்படி யேறுவதற்கு முன்னமே இவன் அண்ணாமலைக்கு என்று கத்தத் தொடங்கினான். அப்பெரியவன் 'இது நீ சொல்லக் கூடாது, நான்தான் சொல்லுவேன்; நீ ஹரோஹரதான் சொல்ல வேண்டும்' என்று பிணங்கினான். பிணக்கம் 5 நிமிடத்தில் முற்றி விட்டது. கைச்சண்டை, குத்துச்சண்டை, குடுமிச்சண்டை பிரபலமாய் விட்டது. ஊரெல்லாம் திரண்டு விட்டது. என்ன சண்டை? ஏதுக்குச் சண்டை? என்றார்கள். துணைவன் சொல்லுகிறான், 2, 3 வருடமாய் நாங்கள் பிச்சை யெடுத்து வருகிறோம். அண்ணா மலைக்கு சொன்னால் 15 அணா வீதம் பங்கென்றும், ஹரோஹர சொன்னால் ஓரணா வீதம் பங்கென்றும் இவனாகவே ஒரு ஏற்பாடு செய்து தானே அண்ணாமலைக்கு சொல்லி, தானே பணக்காரனாகி தானே மாட மாளிகைகள் கட்டிக் கொண்டான்; நானொருநாள் நீயொருநாள் அண்ணாமலைக்கு சொல்லுவோமென்றால் கூடாதென்று அடிக்கிறான் புடைக்கிறான். இந்த நியாயத்தை நீங்களே தீர்க்கவேணும் என்றான். பின்னை என்னாகி யிருக்கு மென்பதை வாசகர்களே அறியவேண்டும். .... *

## 3. "மாப்பிள்ளை இவர்தான், கடுக்கன் இரவல்"

தீபாவளிப்பண்டிகைக்கு அழைக்கப்பட்ட மாப்பிள்ளை மாமியாரகம் சென்றார்; அவர்க்கு ஸொந்தமாகக் கடுக்கன் கிடையாது. மாமியாரகத்திற்கு டீக்காகப் போக வேணுமென்று நினைத்து தன் தோழனணிந்து கொண்டிருந்த கடுக்கனை இரவல் வாங்கி யிட்டுக் கொண்டு அந்த தோழனையும் உடனழைத்துக் கொண்டு மாமியார் வீட்டுக்குப் போனார். அங்கு இடைகழித் திண்ணையில் ரத்தின கம்பளம் விரித்து மாப்பிள்ளையை வீற்றிருக்கச் செய்தார்கள். தோழனும் கூட உட்கார்ந்தான். மாமியார் அக்கம் பக்கத்து வீடுகளிற் சென்று மாப்பிள்ளைவந்திருக்கிற பெருமையைச் சொல்லிக் கொள்ள, ஒவ்வொருத்தியாகக் காணவந்தாள். வந்தவள் 'இவர்தானோ மாப்பிள்ளை' என்ன, தோழப்பிள்ளை 'ஆமாம், மாப்பிள்ளை இவர்தான், கடுக்கன் இரவல்' என்றான். அப்படியா என்று சொல்லிவிட்டு அவள் உள்ளே போய் விட்டாள். பிறகு மாப்பிள்ளை தோழனைக் கடிந்தார்; கடுக்கன் இரவல் என்று சொல்லு வதற்காகத்தான் உன்னை யழைத்து வந்தேனோ? என்று மெதுவாகச் சீறினார். பிறகு மற்றொருத்தி வந்து 'இவர்தானோ மாப்பிள்ளை' என்ன, மாப்பிள்ளை இவர்தான் கடுக்கன் என்னுடையது என்றான் தோழன். இரவல் என்று சொன்னதற்காகச் சீறினபடியாலே அதை மாற்றிச் சொன்னான். அவளும் உள்ளே போய்விட்டாள், அப்போதும் தோழனை மாப்பிள்ளை சீறினார். மறுபடியும் ஒருத்தி வந்து 'மாப்பிள்ளை இவர்தானோ' என்ன, தோழப்பிள்ளை 'மாப்பிள்ளையும் இவர்தான் கடுக்கனும் இவருடையதுதான்' என்றான். அதற்கும் சீறினார் மாப்பிள்ளை. வேறொருத்தி வந்து கேட்க, 'மாப்பிள்ளை இவர்தான், கடுக்கன் ஸங்கதி எனக்குத் தெரியாது' என்றான்

தோழன். அதற்கும் சிறினர் மாப்பிள்ளை. மற்றுமொருத்தி வந்து கேட்க, 'மாப்பிள்ளை இவர்தான், கடுக்கன் பேச்சை யெடுத்தால் இவருக்கு கோபம் வருகிறது என்றான் தோழன். பிறகு மாப்பிள்ளை கோபம் தாங்க முடியாமல் மணைக்கட்டையை யெடுத்து அவன் மண்டைமேலெறிந்து போக விட்டு உள்ளே சென்றார். .... *

## 4. பண்டிதர்கள் மட்டும் உகக்கக் கூடிய கதை

திருக்கண்ணபுரத்தில் ஸுப்ரஸித்த வித்வானாக எழுந்தருளியிருந்த பட்டப்பா ஸ்வாமியின் பிதாமஹர் ஒரு ஆசார்ய திருநக்ஷத்திரத்தன்று இரவு 10 மணிக்குமேல் தம் திருமாளிகையினின்று ஸன்னிதிக்கு எழுந்தருளுகிறார். வழியில் வெளிச்சம் அடியோடு இல்லை. நல்ல கருக்கிருட்டு. எதிரே வருகிற வொரு ஸ்வாமி இவரெழுந் தருள்வதறியாமல் இவருடைய திருமுடியிலே இடித்துக்கொண்டார். வலுத்த நோவு உண்டாயிற்று. ஐயோ கஷ்டகாலமே என்றார். இவருடைய திருமிடற்றோசையி லிருந்து இன்னாரென்று தெரிந்துகொண்ட அவர் மிகவும் அநுதபித்து 'ஐயோ அபசாரத்துக்கு ஹேதுவாச்சுதே' என்றார். அதுகேட்ட இந்த ஸ்வாமி பொறுக்க முடியாத நோவையும் பொருள்படுத்தாமல் "அப்பா! அபசாரத்துக்கு ஹேதுவே இப்பாடு படுத்தினால் அபசாரமே யுண்டானால் அது எப்பாடு படுத்துமோ?" என்றார். இந்த வார்த்தையின் ரஸம் அவர்க்குத் தெரிய ப்ரஸக்தியில்லை. அவ்விருளிலேயே இன்னொரு வித்வான் அருகே யிருந்தார். அவர் இதை மிகவும் ரஸித்து 'ஸ்வாமின்! இந்த விலையுயர்ந்த வார்த்தையை அஸ்தானத்திலே வர்ஷிக்கிறதே' என்றாராம். உண்மையில் வித்வானான அவரைத் தெரிந்துகொண்ட இந்த ஸ்வாமி ஸாதித்தாராம் —'ரங்கஸாமீ! இச் சொல்லின் சுவையை நீயாவது தெரிந்துகொண்டாயே, போதும்' என்று. இந்த வார்த்தையின் மருமம் வித்வான்களுக்கு எளிதில் விளங்கும். மற்றை யோர்க்கும் விளங்கச் சிறிது விவரிப்போம். உலகில் அபசாரம் நேருவதென்பது ஸஹஜம். அப்போது பெரும்பாலும் பண்டிதர் பாமரர் என்கிற வாசியற எல்லாரும் "அபசாரத்துக்கு ஹேதுவாச்சே" என்று அநுதாபத்தோடு சொல்லுவது வழக்கம். இது தவறு. ஐயோ அபசாரமாச்சே என்று சொல்லவேணுமேயொழிய, அபசாரத் துக்கு ஹேதுவாச்சே என்று சொல்லக்கூடாது. ஹேதுவாவது காரணம். கார ணந்தான் இப்போது உண்டாயிற்று, கார்யமான அபசாரம் இன்னும் உண்டாக வில்லை என்றதாக ஏற்படும். இப்படி தவறாக வழங்கக்கூடாதென்பதை இந்த இதிஹாஸம் சிக்ஷிக்கும். .... .... .... ... *

## 5. "ஐநூறு நானூறு முன்னூறு இருநூறு"

ஒரு கல்விக்காரப் பயல் ஒரு மஹாப்ரபுவை யடுத்தான். பயலுக்கு எழுதப் படிக்க ஒன்றும் தெரியாது. ஆனால் வெகு தமாஷாகப் பேசுவன். அப்பேச்சில் மயங்கி பிரபு அவனோடு வெகு நேசமாக இருந்து வந்தார். அவனுக்கு மாதச் சம்பளமாக ஒன்றும் ஏற்பாடு செய்யாமல் உணவுமட்டும் அளித்துவந்து 'உனக்கு விவாஹம் வரும்போது நூறு ரூபா தருகிறேன்' என்று சொல்லி வைத்தார் பிரபு. சில நாட்களில் அவனுக்கு விவாஹம் குதிர்ப்பாடாயிற்று, 'தாங்கள் முன்பு வாக்களித்தபடி ஐநூறு ரூபா தாருங்கள்' என்றான். பயலே! பொய் சொல்லு கிறாயே, நான் ஐநூறு ரூபா தருவதாகச் சொன்னேனா? என்றார் பிரபு. நானூறு ரூபா தருவதாகச் சொன்னீர்களே அதையாவது கொடுங்கள் என்றான். மறுபடியும் பொய் சொல்லுகிறாயே என்றார் பிரபு. 'ஸரி, முன்னூறு ரூபா தருவதாகச் சொன் னீர்களே, அதையாவது கொடுங்கள்' என்றான் பையன். என்னடா இது, பொய்யே பேசுகிறாயே என்றார் பிரபு. ஸரி இருநூறு ரூபா தருவதாகச் சொன் னீர்களே, அதையாவது தாருங்கள் என்றான் பயல். இப்படி பொய்யே பேசினால்

ஒரு பைசா கூட தரமாட்டேனென்றார் பிரபு. ஸரி ஸரி, கோபம் வேண்டாம், நூறு ரூபாய்தான் தாருங்கள் என்றான் பயல். பிறகு பிரபு 'பயலே! முதலிலேயே இப்படி கேளாமல் பொய்யும் புளுகும் பேசினாயே ஏன்? இவ்வளவு பொய்யனான வுன்னை நான் எப்படி இங்கு வைத்துக் கொள்வது? என்றார் பிரபு. அதற்குப் பயல் சொல்லுகிறான்—மஹாப்ரபோ! என் வாயில் ஒரு பொய்கூட வராது; நீங்கள் சொல்லாததை நான் ஒருபோதும் சொல்ல மாட்டேன். நூறு ரூபா கொடுக்க ஒப்புக்கொண்டதாக நீங்கள் சொல்லுகிறீர்கள். 'இருநூறு ரூபா கொடுக்கிறேன்' என்று சொல்லவில்லையா? (இரு—என்னிடமிரு, நூறு ரூபா தருகிறேன் என்றதாக ஒரு பொருள். இருநூறு ரூபா கொடுக்கிறேனென்றதாக ஒரு பொருள்.) மூன் நூறு ரூபா கொடுக்கிறேனென்று சொல்லவில்லையா? (மூன்—முன்பு என்று ஒரு பொருள். மூந்நூறு ரூபாயென்று ஒரு பொருள்.) நான் நூறு ரூபா தருகிறேன் என்று சொல்லவில்லையா? (நான் நூறு என்பதைச் சேர்த்தால் நானூறாயிற்று.) ஐ நூறு ரூபா தருகிறேனென்று சொல்லவில்லையா? (ஐ என்பது ஆங்கிலம். நான் என்றபடி.) ஆகவே நானென்றும் பொய் சொல்ல வில்லையே என்றான் பயல். இதைக் கேட்ட பிரபுவுக்கு ஆனந்தம் தாங்க முடியாமற்போக "இப்பயலுக்கு 1,500 ரூபா கொடு என்று கஜாஞ்சிக்குக் கட்டளையிட்டார் பிரபு. அது கேட்ட பயல் "இதுவும் தாங்கள் ஏற்கெனவே ஒப்புக் கொண்டதுதானே என்றான். எப்படிடா? என்று பிரபு கேட்க, நூறும் இருநூறும் முந்நூறச்சா? முந்நூறும் முந்நூறும் அறுநூறச்சா; அறுநூறும் நானூறும் ஆயிரமாச்சா. ஆயிரமும் ஐநூறும் 1,500 ஆச்சா. புதிதாக நீர் என்ன கொடுக்கச் சொல்லி விட்டீர்? என்றான் பயல். பிரபுவோ ஆனந்தக் கடலில் ஆழ்ந்துவிட்டார். தன் வயிற்றிற் பிறந்த மகனுக்குப்போல் இருபதினாயிரம் ரூபா செலவில் விவாஹத்தை நடத்திவைத்து மகனுக்கும் மேலாக வளர்த்து வந்தார் பிரபு. .... *

## 6. "ஆபதர்த்தம் தநம் ரக்ஷேத்"

ஒரு ஸ்வாமி இயற்கையாக ரிக்த தசையிலிருந்தார். தம்முடைய க்ராமத்தி லிருந்து அரையோஜனை தூரத்திலுள்ள ஓர் அக்ரஹாரத்தில் ஒரு கோவிலில் திருவாராதனம் செய்து ஜீவித்துவந்தார். நித்யமும் காலையெழுந்து அங்கே போய் இரவு எட்டு மணிக்குத் திரும்பி ஸ்வக்ராமம் வந்து சேருவர். வழியில் கள்ளர் பயமிருந்தாலும் இவரிடத்தில் ஒன்றுங் கிடையாதாதலால் கள்ளர் இவரிடம் அணுகாமலேயிருந்தார்கள். நாளடைவில் இவர் துட்டுகாசு மலிந்தவராகி தனிகரானார். அப்போது "ஆபதர்த்தம் தநம் ரக்ஷேத்" என்கிற நீதிச்லோகத்தை நினைத்து பொருளை அதிகமாகச் செலவிடாமல் ரக்ஷிக்கத் தொடங்கினார். பணம் பெட்டியிலும் பண்டாபீஸ்களிலும் இருப்பதைக் காட்டிலும் கையிலேயே இருந்தால் நல்லதென்று தோன்றி கடுக்கன் மோதிரம் பொன்னரைநாண் முதலான உயர்ந்த திருவாபரணங்களைச் செய்வித்து அணிந்துகொண்டார். இரண்டாயிரம் ரூபா விலையுள்ள பூஷணங்கள் இவருடம்பில் ஏறிவிட்டன. "கள்ளர் பயமுள்ள வழியில் நாம் நித்யமும் போய்வரவேண்டியிருக்கிறதே, இதனால் ஏதாவது அபாயம் நேரிடுமே' என்கிற அச்சம் இவர்க்குத் தோன்றவேயில்லை. 'பல வருடங்களாக இல்லாத அபாயம் இப்போது புதிதாக வந்துவிடுமோ?' என்று நினைத்துவிட்டார். இவர் தம்மூரிலிருந்து பகலில் போகும்போது திருவாபரணங்கள் ஜ்வலிக்கும்படி போவதனால் அதைக் கண்டுகொண்டிருந்தவர்களுக்கு தஸ்கரபுத்தி யுண்டாகிவிட்டது. ஒருநாள் இவர் இரவில் திரும்புகையில் கள்ளர் வழிமறித்து ஸகலத்தையும் பறித்துக் கொண்டார்கள். அதனால் இவர் ஈஷத்தும் வருத்தமடையாமல் "ஆபதர்த்தம் தநம் ரக்ஷேத்" என்கிற வசனத்திற்குத் தாம் உண்மையான அர்த்தம் கண்டுபிடித்து விட்டதாக ஒவ்வொருவரிடத்திலும் பெருமையடித்துக் கொண்டார். [அது வித்வான்களே ரஸிக்கத்தக்கதாதலால்

அன்னவர்களே இங்குக் களிக்கக் கடவர்கள்.] ஆபதர்த்தம் என்பதற்கு எல்லாரும் கிரஹித்திருக்கிற பொருள் 'ஆபந்நிவாரணார்த்தம்' என்று. ஆபத்து நேர்ந்தால் தரித்ரன் அதைப் போக்கிக்கொள்வது அரிது. துட்டு காசு உள்ளவனாயிருந்தால் ஆபத்தை எளிதாகப் போக்கிக் கொள்ளலாம் என்பது விவக்ஷையாதலால் (ஆபதர்த் தம்) என்பதற்கு ஆபந்நிவாரணார்த்த மென்று விவரித்து வந்தார்கள். இவருடைய அநுபவம் அப்படியில்லையே. தனம் வந்தது காரணமாக ஆபத்து நேர்ந்தபடியால் ஆபதர்த்தம் என்பதற்கு ஆபத்து விளைவதற்காக என்கிற பொருள்தான் யுக்த மென்று இவர் பிரவசனம் செய்ய ஆரம்பித்தார். தனமுள்ளவர்கள் பலர் க்ருபணர் களாயிருந்து கொண்டு தனத்தினாலே ஆபத்தைப் போக்கிக் கொள்வதில்லை யென்ப தைப் பெரும்பாலும் கண்டுவருகிறோம். தரித்ரர்களுக்கு ஆபத்து நேராமையையும், தனிகர்களுக்கே ஆபத்து நேருவதையும் நிராக்ஷேபமாக யாவரும் ஒப்புக்கொள்ளு வர்கள். ஆகவே (ஆபதர்த்தம்) என்பதற்கு ஆபத்து விளைவதற்காக என்கிற பொருள்தான் பொருத்தமானது என்று எங்கும் அவர் உபந்யாஸம் செய்துகொண்டு "இரண்டாயிரம் ரூபா விலையுள்ள பொருள்கள் போனதற்கு நான் கொஞ்சமும் வருந்தவில்லை, இந்த மஹார்த்தம் அறியப்பெற்றதற்கு மிகமிக மகிழ்கிறேன்" என்று சொல்லிக்கொண்டு திரிந்தாராம். .... .... .... .... *

## 7. [காசு கொடாதிருந்தால் இந்தஅடி அடித்திருப்பனா?]

வஞ்சகம் செய்து ஜீவிப்பதே தொழிலாயிருக்கு மொருவன் சொக்காய் தலைப் பாகை ஜரிகை ருமால் முதலானவை இரவல் வாங்கி யணிந்துகொண்டு ஓர் இரவல் மோடர் காரில் சென்று ஒரு பெரிய ஜவுளிக்கடை வாசலில் வெகு கம்பீரமாக இறங் கினான். இவனுடைய டக்கைக் கண்ட வியாபாரி வருக வருகவென்று மரியாதை யுடன் வரவேற்றுப் பெரிய ஈஸிசேரில் வீற்றிருக்கச் செய்தான். என்னென்ன சரக்குகள் தேவையென்று வெகு விநயமாகக் கேட்டான். வஞ்சகன் தன்னோடுகூட ஒரு பெரிய வஞ்சகனைத் துணையழைத்து வந்திருந்தபடியால் அவன் இவனைப்பற்றி டம்பப் பேச்சுக்கள் பலவும் பேசிவிட்டான். அதிலிருந்து ஜவுளி வியாபாரி 'இன்று நாம் லக்ஷாதிகாரியாகப் போகிறோம்' என்று பெருமிதங் கொண்டான். மிக விலை யுயர்ந்த பட்டுச் சேலைகளையும் ஜரிகை துப்பட்டாக்களையும் ஸாதராக்களையும் சால்வை களையும் எடுத்தடுக்கி விட்டான். இடையில் வஞ்சகன் தன் துணைவனை நோக்கி செக் புத்தகம் மறவாமல் கொண்டுவந்தையா என்று கேட்பதும், அதை மறப்பேனோ வென்று அவன் பதில் சொல்லுவதாகவும் ஏகாந்தப் பேச்சுபோல் ஒரு நாடகம் காட்டிவிட்டான். வியாபாரியின் ஆனந்தமோ எல்லைகடந்து செல்லுகின்றது. பட்டிபோட உத்தரவிட்டு விட்டார் வஞ்சகர். பட்டியெழுதும் வியாபாரி, ஏதாவது சில சரக்குகளை இவர் வேண்டாமென்று சொல்லிவிடுவரோ என்கிற அச்சத்தினால் 'சரக்குகளைக் கட்டிக் கட்டி காரில் ஏற்றுங்கள்' என்றுசிப்பந்திகளுக்குக் கட்டளையிட, அவர்கள் ஒரே நொடியில் காரை மூட்டைகளால் நிரப்பிவிட்டார்கள். வஞ்சகப் பிரபுவும் வியாபாரியோடு ஏதோதோ பேசிக்கொண்டுவேறு பராக்குகளை யுண்டாக்கி மெதுவாகக் காரில் உட்கார்ந்ததும் கார் நகர ஆரம்பித்தது.

ஜவுளிக்கடை மிகப் பெரிதாதலால் கூட்டுறவினர் பலருண்டு; பிரபு காரேறும் போது செக்கு கொடுத்திருப்பரென்றே ஒவ்வொருவரும் நினைத்துவிட்டார்கள். பிறகு எவ்வளவு தொகைக்கு செக்கு கொடுத்தார்? எந்த Bankக்குக் கொடுத்தார்? என்று விசாரணை செய்கையில் யாரிடமும் செக்கு கொடுபடவில்லை யென்று வெளி யாயிற்று. 'எவ்வளவு பெரிய மனிதரவர்! கொடாமலா போயிருப்பர்' என்பார் சிலரும், 'பிறகு குமஸ்தாவிடம் அனுப்புவர்' என்பார் சிலருமாயிருக்கையில் கடைக் குத் தலைவனானவன் கார்போட்டுக் கொண்டு ஓடி அந்தக் காரைப் பிடித்து 'பிரபுக் களே! பணம் சேரவில்லையே' என்றான். பிரபு உடனே கிழிறங்கி அவனைக்

கன்னத்தில் ஓங்கி யறைந்தான். வேறென்றும் பேசாமல் கனத்த அடி கொடுத்தான். அவனே 'காசு கொடாதிருந்தால் இந்தஅடி அடித்திருப்பனோ?' என்று சொல்லிக்கொண்டே காரேறிக் கடை சென்று சேர்ந்து அங்குள்ள ஒவ்வொருவரிடத்திலும் இதையே திருப்பித் திருப்பிச் சொல்லிக்கொண்டு "இந்த அறை அறைந்தவர் செக்கு கொடாமலிருந்திருக்கமாட்டார், நீங்கள் நழுவ விட்டீர்கள்" என்று அவர்களைக் கஸறிக்கொண்டு கிடந்தான். அவன் உடனே கப்பலேறிப் போய்ச் சேர்ந்தான் ரங்கூனே சிங்கப்பூரோ. ... ... ... *

## 8. "ஹந்த சோரோபி அப்ராமாணிக:"

ஒரு ஸ்வாமி நல்ல வித்வான். சாஸ்த்ரபாண்டியத்தில் நிகரற்றவராயினும் லௌகிக ஜ்ஞானம் சிறிதுமில்லாதவர். இவர் சில ஹவ்ய கவ்ய விசேஷங்களுக்காக வெளியூர் போயிருந்தார். அங்கே வேஷ்டி உத்தரீயம் கொஞ்சம் ரூபாய்கள் சில்லறைகள் கிடைத்தன. அவற்றுடன் திரும்பி ஸ்வக்ராமம் வருகிறார். பட்டப் பகலில்தான் வருகிறார். சில கள்ளர்கள் வந்து வழிபறிக்கத் தொடங்கினார்கள். "ஹந்த! அஹந்யபி கதம் தஸ்கராச் சோரயந்தி" [அடடா, பகலிலுங்கூட திருடர்கள் வந்து அபஹரிக்கிறார்களே! இது என்ன ஆச்சரியமாயிருக்கிறதே] என்று தம்முள் தாம் வியந்து கூறுகின்றார். வந்த கள்வர்கள் இவருடைய அரை வேஷ்டி தவிர மற்றதையெல்லாம் கொள்ளை கொண்டார்கள். இவருடைய மூட்டையில் ரூபாயாக 4ரூபா இருந்தது. வந்த கள்வர்களோ மூவர். 4 ரூபாயை ஸரிஸமமாகப் பங்கிட்டுக் கொள்ள முடியாமல் சில்லரை மாற்ற வேணுமென்று பேசிக் கொண்டிருந்தார்கள். அப்போது இந்த வித்வான்ஸ்வாமி அந்த கள்ளர்களை நோக்கி உங்களுக்குச் சில்லரை வேண்டியிருக்கிறதா என்ன? எத்தனை ரூபாய்க்கு வேணும்? என்றார். 'எவ்வளவிருந்தாலும் வேண்டியதுதான், இருக்கிற சில்லரையைக் கொடுங்கள், ரூபா கொடுக்கிறோம்' என்றார்கள். ஹவ்ய கவ்யங்களில் சில்லரையாக அவர்கையில் கிடைத்தவற்றை கச்சத்திற்குள்ளே முடிபோட்டு வைத்திருந்தார். அதை யவிழ்த்து எண்ணிப் பார்த்து 'ஸரியாக நாலுரூபாய்க்கு சில்லரையிருக்கிறது, எடுத்துக் கொள்ளுங்கள், ரூபாய் கொடுங்கள்' என்று சொல்லிக் கொண்டே சில்லரைகளை யெல்லாம் அவர்களிடம் கொடுத்துவிட்டு ரூபா ரூபா என்று கையேந்தினர். மேல் நிகழ்ச்சியை என்ன சொல்லுவது! "ஹந்த! சோரோபி அப்ராமாணிக:" என்கிறார் வித்வான். கள்ளன் பொய் சொல்லமாட்டான், பொய்சொல்லுமவன் திருடமாட்டான் என்றிருந்தாராம். கள்ளன் கூட பொய் சொல்லுகிறானே யென்று ஆச்சரியமாகப் பேசிக்கொண்டே போனர். இந்த ஆச்சரியத்தில் அவர்க்குப் பணம் பறியுண்டதுக்கம் தெரியவில்லை. ... *

## 9. ஆசார்ய சிஷ்யர்களின் அற்புதமான கதை

மிகச் சிறந்த வித்வானொருவர், ஆசார்யபீடம் வஹிப்பவர், ஆஸ்தான வித்வான்கள் நால்வருடன் சிஷ்ய யாத்திரை புறப்பட்டார். கல்கத்தா மாநகரம் சென்று சேர்ந்து அவ்வூரில் தம்முடைய சிஷ்யர்களில் தலைவனான ஒரு ஸேட்டுக்குத் தம்முடைய வரவைத் தெரிவிக்க வேண்டி முதல்வரான ஆஸ்தான வித்வானை அவனிடமனுப்பினர். அவர் வந்து ஸேட்டைக் கண்டவுடனே ஒன்றும் பேசத் தோன்றாமல், திகைத்து நின்றார்; ஏனென்றால் அந்த ஸேட்டு மிகவும் ஸ்தூலகாயர். அங்கிருக்கிற வாசற்படி வழியாக அந்த ஸேட்டு போக்குவரத்து செய்ய முடியாதென்று அவருடைய எண்ணம். ஆகவே இவன் எப்படி இந்த பங்களாவினுள்ளே வந்து சேர்ந்தானென்கிற விசாரம் அந்த வித்வான் மனத்தில் தோன்றிவிட்டது. அதனால் ஒன்றும் வாய்திறவாமல் திகைத்து நின்றார். அது கண்ட ஸேட்டு 'நீர் யார்? எதற்காக வந்தீர்? ஏன் நிற்கிறீர்? என்று கேட்க, அதற்கு வித்வான் 'ஸேட்ஜீ! அதைப்பற்றி பிறகு பேசுகிறேன்; என்னுடைய பெரிய ஸந்தேஹத்தை நீ முதலில்

தீர்க்க வேணும்; இந்த பங்களா கட்டினபிறகு நீ இதனுள்ளே புகுந்திருக்க முடியாது; முன்னடியே உன்னை உள்ளே உட்காரவைத்து இது கட்டியிருக்கவேண்டும் என்று நினைக்கிறேன். இப்படித்தானு? வேறுவிதமா? சொல்லாய் சீமானே!' என்றூர். இது கேட்டவுடனே ஸேட்டுக்குக் கோபம் உண்டாயிற்று. ஏதோ சிறிது பருத்திருக்கிறுே மென்று நம்மை இப்படி பரிஹாஸம் செய்கிறுனேயிவன்! என்று சீறி 'இந்த பிராமணனை ஒரு அறையில் அடையுங்கள்' என்று கட்டளையிட்டான். அப்படியே வித்வான் அடைபட்டுக் கிடக்க. ஆசாரியர் வெகு நாழிகை எதிர்பார்த்தும், சென்ற வித்வான் வரக்காணுமல் இரண்டாவது ஆஸ்தான வித்வானை ஸேட்டிடம் போக விட்டார். அவர் வந்து வாசலிலேயே செய்தி விசாரித்து நடந்ததைத் தெரிந்து கொண்டு ஸேட்டிடம் சென்று, 'ஸேட்ஜீ! எங்களில் ஒருவன் இங்குவந்து ஏதோ தவருன கேள்வி கேட்டதாகத் தெரிகிறது. அவன் முழுமூடன்; ஏதோ வொருவித மாக இந்த பங்களாவுக்குள் நீ புகுந்தாய்விட்டது; அதைப்பற்றி இப்போது ஏன் விசாரம்? நாளைக்கு நீ மரணமடைந்து விட்டால் உன்னை எவ்வழியாலே வெளிப் படுத்துவது என்கிற விசாரமன்றூே இப்போது செய்யத் தக்கது; அதை விட்டு 'எப்படி உள்ளே புகுந்தாய்?' என்கிற வீண் விசாரத்தை அந்த மூடன் ஏதுக்குச் செய்தான்?' என்றூர். அது கேட்ட ஸேட்டு அளவிறந்த கோபம்கொண்டு அவரையும் உள்ளேயடைக்க உத்தரவிட்டான். அவரும் அடைபட்டுக் கிடக்க, ஆசாரியர் நெடு நேரம் எதிர்பார்த்துவிட்டு மூன்றூ மாஸ்தான வித்வானை ஸேட்டிடம் போக விட்டார்.

இவர் வந்து வாசலிலேயே, முன்வந்த இருவருடையவும் செய்தியை விசாரித் தறிந்து ஸேட்டிடம் வந்து, 'ஸேட்ஜீ! எங்களில் இருவர் இவ்விடம் வந்து மிக மூடத் தனமான பேச்சுகளைப் பேசினதாகக் கேட்டு மிக வருந்துகிறேன்; நீ மரணமடைந் தொழிந்த பிறகு எப்படி உன்னை வெளியிற் கொண்டுபோவதென்கிற விசாரம் ஏதுக்கு? சுவர்களை ஜாடாக இடித்துவிட்டு எளிதில் கொண்டு போகத் தடையென்ன? ஏதுக்கு வீண்விசாரம் கொண்டார் எங்கள் வித்வான்? அந்த மஹா மூடர்களை விட்டுத் தொலை' என்றூர். அது கேட்ட ஸேட்டு இன்னமும் கோபம் பொங்கி அவரையும் உள்ளே யடைக்க உத்தரவிட்டான். அவரும் அடைபட்டுக் கிடக்க, வெகு நாழிகை பொறுத்து ஆசாரியரால் அனுப்பப்பட்ட நான்காம் வித்வான் ஓடிவந்து முன்னே வந்த மூவருடையவும் செய்திகளை வாசலிலேயே விசாரித்தறிந்துகொண்டு ஸேட்டிடம் வந்து, ஸேட்ஜீ! எல்லா விஷயங்களையும் கேள்விப்பட்டேன்; என்ன அநியாயமான வார்த்தைகள்! இந்த பங்களா எவ்வளவு மநோஹரமாயிருக்கிறது! இதை யிடித்து உன்னை வெளிப்படுத்துவதென்பது ஐயோ, என்ன பேச்சு! எதற்காக இடிக்க வேண்டும்? நீ மாண்டபிறகு உன்னைக் கத்தியினுல் சதை சதையாக அறுத்தால் ஒரு புட்டுக்கூடையில் வெளியேற்ற முடியாதா? ஒரு கூடையில் முடியாதென்றூல் நாலைந்து கூடைதான் ஆகட்டுமே; நாலைந்து நிமிஷத்தில் அநாயாஸமாக வெளி யேற்றக் கூடியதாயிருக்க, சுவர்களை யிடிப்பதும் வாசற்காலைப் பேர்ப்பதுமான ஆலோசனைகள் என்ன அநியாயம்! என்றூர்.

ஸேட்டுக்குக் கோபம் தாங்கமுடியவில்லை. நால்வர்க்கும் கொடுந்தொழில் புரியக் கட்டளையிட்டான். இப்படி நால்வரும் சென்று திரும்பிவராமற் போகவே ஆசாரியர் நேராக ஓடிவந்து நால்வர் செய்தியையும் விசாரித்தறிந்து! திடுக்கிட்டு ஸேட்டிடம் ஓடி வந்து, 'அப்பா! லௌகிகமொன்று மறியாத மூடர்களின் பேச்சைப் பொருள் படுத்தலாமா நீ? உன்னைச் சதைசதையாக அறுத்துக் கூடையில் வெளி யேற்றுவதென்பது எவ்வளவு அநீதியான பேச்சு; காதால் கேட்க முடியவில்லையே; நீ மாண்டொழிந்த பிறகு இந்த பங்களா தான் ஏதுக்கு? சுவரை யிடிப்பதும் வாசலைப் பெயர்ப்பதும் ஏதுக்கு? இந்த பங்களாவோடே உன்னைப் பொசுக்கிவிட முடியாதா? பிறகு இந்த பங்களாவை ஆளத்தக்கவன் யாவனுளன்?' என்று வாயோயாமல் ஏதேதோ சொல்லிக்கொண்டிருந்தார். ஸேட்டுக்கு இன்னது செய்வதென்று தோன்றவில்லை. மேலேயும் கதை போக வேணுமோ? .... .... *

## 10. பண்டிதர்கள் உகக்கும் கதை

### "அரஸிகேஷு கவித்வ நிவேதநம் சிரஸி மாலிக மாலிக மாலிக"

ஒரு விஷ்ணுகோவிலின் வாசலில் ஒரு ஸ்ரீ வைஷ்ணவர் நிற்கிறார். அவர் அடியோடு படிப்பில்லாதவர், ஆனால் வீர வைஷ்ணவர். சைவர் முதலிய இதர மதஸ்தர்களைக்கண்டால் அருவருப்புக் கொள்வர். ஒரு அத்வைதி பக்தர் உடம்பு முழுதும் விபூதியணிந்துகொண்டு பெருமாளைஸேவிக்கக் கனவேகமாகவருகிறார். அவர்உண்மையில் விஷ்ணு பக்தியுமுடையவர். அவரை இந்த வீர வைஷ்ணவர் உள்ளே புகக்கூடாதென்று தகைந்து விட்டார். அதற்கு அவர் "பெருமாளே! என்னை ஏதுக்குத் தடை செய்கிறீர்கள்?" என்று கேட்டார். 'நீ உடம்பெல்லாம் விபூதியணிந்திருப்பதால் வீர சைவனைக் காண்கிறாய்; நீ உள்ளே போனால் எங்கள் பெருமாளை தூஷிப்பாயே யொழிய பூஷிக்கமாட்டாய்; ஆதலால் உன்னை உள்ளே விட முடியாது' என்றார் வீரவைஷ்ணவர். அதற்கு அவர் சொன்னார் 'பெருமாளே! கனவிலும் அப்படி நினையாதீர்கள், நான் ஹரி பக்தன்; உள்ளேபோய் ஹரி ஸ்துதி பண்ணுவேனே யொழிய வேறு எதுவும் செய்யமாட்டேன்' என்றார். அது கேட்ட வைஷ்ணவர், 'அப்படியானால் நீ உள்ளேபோய் என்னவென்று சொல்லுவாய்? அதைச் சொல்லு' என்றார். "ஹரயே நமঃ" என்பேன் என்றார் அந்த பண்டிதர். அதுகேட்ட வைஷ்ணவர் தம்பக்கத்திலுள்ள வைஷ்ணவர்களை நோக்கி 'பார்த்தீர்களா? பார்த்தீர்களா? இவனுக்கு எவ்வளவு கொழுப்பு! நீங்களே பாருங்கள்; ஹரியினிடத்திலே போய் ஹரியேநமঃ என்று சொல்ல வேண்டியிருக்க அப்படிச் சொல்லாமல் ஹரயேநமঃ என்பேனென்கிறானே; ஹரனுக்கு நமஸ்காரம் செய்பவனுக்கு இங்கு என்ன வேலை' என்று கத்துகிறார். அதுகேட்ட அந்த அத்வைதி வெகு விநயத்துடன் 'பெருமாளே! கொஞ்சம் நிதானித்துக் கேளுங்கள்; ஹரி-நே என்றிருந்தது, அதன்மேல் குணம் வந்தது' என்று வியாகரண ப்ரக்ரியை சொல்லத் தொடங்கினார். ஹரி சப்தம் சதுர்த்தி விபக்தியின் ஏக வசனத்தில் ஹரயே என்று எப்படி ரூபம் தேறுகிறதென்று வியாகரணம் வாசிப்பவர்களைக் கேட்டால் 'ஹரி நே என்றிருந்தது' என்று தான் சொல்ல ஆரம்பிக்கவேண்டும். ஹரி என்று ப்ரக்ருதியைச் சொன்னபடி; நே என்று ப்ரத்யயத்தைச் சொன்னபடி. இதைக்கேட்ட வீர வைஷ்ணவர்க்கு (படிப்பு முழு மோசமாகையாலே) அளவு கடந்த கோபமுண்டாயிற்று; 'ஹரி நே என்றிருந்தது' என்றதற்கு ஹரியானவர் சப்பையாக இருந்தாரென்று சொல்லுவதாக அர்த்தம் கொண்டு, 'அட படுபாவி! ஹரனுக்குத்தான் சாப்பாடு கிடையாது, அவன் நே என்றிருந்தானென்றால் தகும்; எங்கள் ஹரிக்கு என்ன குறைவு? பொங்கலும் புளியோரையும் இட்டிலியும் வடையுமாக அமுது செய்து பம் என்றிருக்கிறார். இவரை நீ (நே) என்றிருப்பதாகச் சொல்லுகிறாய்; உன்னை என்ன பண்ணினால் தீரும். அதற்குமேல் குணம் வந்தது என்கிறாய். எங்கள் ஹரி குணமில்லாமலிருந்ததே கிடையாது; அப்படியிருந்தாலன்றோ குணம் வந்தது என்ன வேணும்; நீ ரொம்ப துஷ்டன், உன்னோடு பேசுவதும் பாபமே. இங்கே நிற்காதே, ஓடிப்போ' என்று விரட்டித் தள்ளினார். உண்மையில் பக்தரும் பண்டிதருமான அவர் தம்பேச்சுக்கு மதிப்பு ஏற்படாத துக்கத்தினால் "அரஸிகேஷு கவித்வ நிவேதநம் சிரஸி மாலிக மாலிக மாலிக" என்று தெய்வத்தை நோக்கிச் சொல்லிக் கொண்டே கோவிலைப் பிரதக்ஷிணம் செய்து நமஸ்காரம் செய்து போனார்.

## 11. "ஸாப்பிட்டோமையா ஸாப்பிட்டோம்."

ஒரு ஜம்பக்காரன் நாலைந்து நண்பர்களுடன் சிற்றுண்டிச்சாலையில் புகுந்து பத்தெட்டு ரூபாய்க்கு பக்ஷணங்கள் வாங்கியுண்டு காசு கொடாமலே கிளம்பிச்

சென்றான். அவனுடைய சொக்காயையும் தலைகுட்டையையும் கண்டு மயங்கி நின்ற அந்த உணவுச் சாலைத்தலைவன் 'வேலைக்காரர்களிடம் காசு கொடுத்திருப்பன்' என்றெண்ணி வாளாவிருந்தான். பிறகு காசு கொடுபடவில்லை யென்றறிந்து ஓடிச் சென்று 'ஐயா! காசு கொடாமலே போகிறீர்களே' என்றான். பிறகு நடந்தபேச்சு,

(உண்டவன்) எதற்காகக் காசு? (உணவிட்டவன்) எங்கள் சிற்றுண்டிச் சாலையில் வந்து ஸாப்பிட்டீர்களே, அதற்காகத்தான் காசு. (உண்டவன்) என்ன ஸாப்பிட்டோம்? (உணவிட்டவன்) இட்டிலி, லட்டு, தோசை, வடை, பொங்கல், புளியோரை. (உண்டவன்) ஸாப்பிட்டோமையா ஸாப்பிட்டோம்; அதற்காக என்ன? (உணவிட்டவன்) அதற்குக் காசு கொடுங்கள். (உண்டவன்) காசு எதற்காக? (உணவிட்டவன்) பலஹாரம் ஸாப்பிட்டீர்களே அதற்காக. (உண்டவன்) என்ன பலஹாரம் ஸாப்பிட்டோம். (உணவிட்டவன்) பொங்கல், புளியோரை, லட்டு, இட்டிலி. (உண்டவன்) ஸாப்பிட்டோமையா ஸாப்பிட்டோம். அதற்காக என்ன? என்றுதானே நான் கேட்கிறேன். (உணவிட்டவன்) அதற்காகக் காசு கொடுங்களென்கிறேன். (உண்டவன்) காசு எதற்காக? (உணவிட்டவன்) எங்கள் போஜன சாலையில் வந்து ஸாப்பிட்டீர்களே? அதற்காக. (உண்டவன்) என்ன ஸாப்பிட்டோம். (உணவிட்டவன்) இவையிவை ஸாப்பிடவில்லையா? (உண்டவன்) ஸாப்பிட்டோமையா ஸாப்பிட்டோம். இல்லை யென்று யார் சொன்னது? அதற்கென்ன? ஆப்தர்களே! இந்த கதை ஓயுமா வென்று பாருங்கள். ... *

## 12. "என்னிடம் ஆமாம் ஆமாம்; அவரிடம் அல்ல அல்ல;"

கலியாண முஹூர்த்தத்திற்கு நாளிட்டுத் தரும்படி ஒரு யதாஜாதன் ஒரு புரோஹிதரிடம் வேண்டிக்கொண்டான்; அவர் ஏதோவொரு வருஷத்துப் பஞ்சாங்கத்தைத் தவறாகப் பார்த்து 'பங்குனிமீ 14உ நல்ல நாள்' என்று தெரிவித்தார். அந்த யதாஜாதன் அப்படியே குறிப்பிட்டு உற்றாருறவினர்க்கு சுப பத்திரிகை அனுப்பிவிட்டான். ஒருவர் கவனித்துப் பார்த்ததில் அந்நாள் க்ருத்திகையும் அமாவாஸ்யையும் சனிக்கிழமையும் மரணயோகமுங் கூடியிருந்தது. உடனே ஓடிவந்து 'இதென்ன, இப்படி விபரீதமான நாளை யார் உமக்கு இட்டுக் கொடுத்தது?' என்று கேட்க, அவன் உண்மையில் திதி வார நக்ஷத்ர நன்மை தீமைகள் ஒன்றுமறியாத வனாகையாலே புரோஹிதரிடம் வந்து 'தாங்களிட்டுக் கொடுத்த நாள் நல்லதன்று' என்கிறார்களே யென்றான். உடனே புரோஹிதர் பஞ்சாங்கமெடுத்துப் பார்த்தவாறே முன்பு தாம் பார்த்தது வேறொரு வருஷத்தியதென்றும் அநவதானத்தினால் தவறிப்போய் விட்டதென்றும் உண்மை தெரிந்து கொண்டார்; ஆனாலும் தமது அசட்டுத்தனத்தை ஒப்புக்கொள்ள மனமில்லாமல் ஒரு சூது செய்யத் தொடங்கினார்; "நல்ல நாளன்று என்று உன்னிடம் சொன்னவரை இங்கு அழைத்துவா, நான் எது கேட்டாலும் அவர் ஆமாம் ஆமாம் என்றே ஒப்புக்கொள்ளும்படி செய்துவிடுகிறேன் பார்" என்று சொல்லிப்போகவிட்டார். உடனே அவரையழைத்துக் கொண்டு வந்தானவன். அவரை நோக்கிப் புரோஹிதர் கேட்கிறார்;—(வினா) பங்குனிமீ 14உ அமாவாஸ்யைதானே. (விடை) ஆமாம். (வினா) அன்று க்ருத்திகைதானே. (விடை) ஆமாம்; (வினா) அன்று சனிக்கிழமைதானே. (விடை) ஆமாம். (வினா) அன்று மரணயோகந்தானே. (விடை) ஆமாம். (வினா) நான் கேட்டால் எதையும் ஆமாம் ஆமாம் என்கிறீர்; இவனிடம் போய் (அல்ல அல்ல) என்கிறீராமே, நியாயமா இது?

இதற்குமேல் அவர்க்கு ஒன்றும் பதில் சொல்லத் தோன்றவில்லை. நம்மால் இவர்க்கு பதில் சொல்லிப் பிழைக்கமுடியாதென்று சிக்கன வெண்ணி ஒன்றும்

சொல்லாமலே போய்விட்டார். விவாதங்களில் ஒன்றுமறியாத மத்யஸ்தர்களை வாய் மாளச் செய்யுமுபாயமிது: .... .... .... .... *

## 13. "இதுவும் ஒரு நல்ல யுக்திதான்"

ஒருவர்க்குத் தகப்பனுர் பரமபதமடைந்து விட்டார். சரம கைங்கர்யத்தை வெகு சிறப்பாக நடத்த வெண்ணின அவர் இரண்டாயிரம் ரூபா செலவு செய்து மிகச் சிறப்பாக நடத்தினர். முடிவில் சுபஸ்வீகாரம் நடப்பது வழக்கமாயிற்றே. அதை அவருடைய மாமனுர் விசேஷ வைபவமாக நடத்தி வைத்து நல்ல பட்டுப் பீதாம்பரம் வாங்கி ஒதி யிட்டார். கர்த்தாவானவர், சுபஸ்வீகார கோஷ்டி கலைந்து எழுந்திருக்கும்போது உபாத்யாயருடைய சொற்படி சில பெரியார்களைத் தெண்டனிட்டார். அவரவர்கள் "பிதாவினுடைய சரம கைங்கரியத்தை இவ்வளவு சிரத்தையாகவும் இவ்வளவு விஜ்ரும்பமாகவும் நடத்தினவர்கள் யாருமே கிடையாது; வெகு சிறப்பாக நடத்தினீர்; உமக்கு ஒரு குறைவுமில்லை; எல்லாருக்கும் பரமஸந்தோஷம்" என்று உபசாரமாகக் கூறினர்கள். அது கேட்ட கர்த்தா "உமக்கொரு குறைவுமில்லை யென்று நீங்கள் சொல்லுகிறீர்கள்; என் குறை உங்களுக்கு என்ன தெரியும்? என் மனதில் எவ்வளவோ குறை; இவ்வளவு விபவமாக நடந்த சரம கைங்கைர்யத்தை என் திருத்தகப்பனுர் நேரில் பார்த்து ஆனந்தப்பட நான் கொடுத்து வைக்கவில்லையே. நீங்கள் பார்த்து ஆனந்தித்ததில் எனக்கென்ன ஸந்தோஷம்? யாருக்காக நான் இவ்வளவு செலவு செய்து இத்தனை விஜ்ரும்பமாகப் பண்ணினேனே, அந்த தகப்பனுர் பார்த்துக் களிக்கக் கொடுத்து வைக்காத பாவியன்றோ நான். இந்தக் குறை எனக்கு எப்படி தீரப் போகிறது என்று சொல்லி விக்கி விக்கி யழுகிறன். இதைக் கண்டவர்கள் 'அப்பா! தகப்பனுர் இருந்து இதையெல்லாம் பார்த்து மகிழக் கொடுத்து வைக்கவில்லை யென்று அழுகிறயே, அவர் இருந்தால் இந்த சரம கைங்கரியம் நடத்த எப்படி நேரும்? அஸம்பாவிதமாகச் சொல்லுகிறயே' என்றார்கள். இதைக் கேட்ட கர்த்தா 'ஓகோ நான் உங்களை என்னமோ வென்று பார்த்தேன், நல்ல யுக்தி கண்டு பிடித்துச் சொல்லி விட்டீர்களே; பேஷ் பேஷ்! இதுவும் நல்ல யுக்திதான்' என்றனும். அதற்கு அவர்கள் 'அப்பா! இதில் யுக்தி என்ன இருக்கிறது' என்ன, அதென்ன? அப்படி சொல்லி விட்டீர்களே; தகப்பனுர் இருந்தால் அவருக்கு நான் இந்த கைங்கரியம் செய்ய முடியாதென்று நீங்கள் கண்டு பிடித்தது நல்ல ஆணித்தரமான யுக்தியல்லவா? இது எல்லாராலும் கண்டு பிடிக்க முடியுமென்று நினைக்கிறீர்களோ?' என்றனும். .... *

## 14. "அண்ணு ராதாரமண்ணு!"

மதுரைமாநகரில் ஒரு ஏழைக் குடும்பம். பரம்பரையாகவே கிருஷ்ண பக்தி குடிகொண்ட உயர்ந்த குடும்பம். தந்தையையிழந்து தாயை மாத்திரம் தஞ்சமாகக் கொண்ட ஒரு சிறு குமாரன் செல்வனென்னும் பெயருடையான் வளர்ந்துவருகிறன். ஆறேழு வயது ஆய்விட்டது. இவனுடைய படிப்புக்கு அவ்வூரில் ஒருவிதமான ஸௌகரியமும் இல்லை; ஏனெனில் சம்பளம் கட்டியே வாசிக்கவேண்டியதாக இருந்தது. சாப்பாட்டுக்கே மிகவும் சிரமப்படும் குடும்பமாதலால் சம்பளம்கட்டி வாசிப்பிக்க சக்தியற்றவளாயிருந்தாள் தாய். ஆனாலும் படிப்பிக்க வேண்டியது மிகவும் அவசியமாக இருந்ததனல் அவ்வூர்க்கு மூன்று மைல் தூரத்தில் ஒரு கிராமத்தில் ஒரு பெரியவர் தமது இல்லத்திலேயே பல பிள்ளைகளுக்கு இலவசமாய் [தருமமாக] படிப்பு சொல்லித் தருகிறரென்றறிந்த தாயானவள் குமாரனை அவ்விடம் சென்று படித்துவரும்படி கட்டளையிட்டாள்.

மூன்று மைல்தூரம் போகவேண்டியிருந்தபடியாலும் பயங்கரமான காட்டுப் பாதையாக இருந்தபடியாலும் தன்னோடு கூட அவ்விடம் வாசிக்கவரும் மாணக்கன் வேறொருவனும் இல்லாதிருந்தபடியாலும் செல்வன் தனியாய்ச் செல்வதற்கு அஞ்சி அநுதினமும் தன்னோடுகூட ஒரு சேவகனைத் துணையாக அனுப்பும்படி தாயை வேண்டினன். அதற்கு அவள் 'அப்பா! சம்பளமில்லாமல் சேவகன் துணைவருவானா? தினமும் உன்னோடு போகவும் வரவும் நாலைந்து ரூபாயாவது மாதச் சம்பளமில்லாமல் ஒருவனும் இசையமாட்டான்; இவ்வூரிலேயே உள்ள பள்ளிக்கூடத்தில் மாதம் ஒரு ரூபாய் சம்பளம் கட்ட முடியாமலன்றோ உன்னை நான் வெளியூருக்குப் போகச் சொல்லுகிறேன்; நாலைந்து ரூபாய்க்கு நான் எங்கே போவேன்? நீ எப்படியாவது தனியாகத்தான் சென்று வாசித்து வரவேண்டும்' என்றாள்.

அப்படியேயென்று தாயை வணங்கி விடைபெற்றுக்கொண்டு புறப்பட்ட செல்வன் சிறிது தூரம் சென்று உடனே திரும்பி வந்து 'அம்மா! வழி கொடிய காடாக இருக்கின்றது; ஆடுகளும் மாடுகளும் தவிர மனிதன் ஒருவனும் தென்படவில்லை; மிகவும் அச்சமாயிருக்கிறதே, நான் எப்படிச் செல்வேன்; என்று அழுது நின்றான். அதற்குத் தாய் சொன்னாள் 'குழந்தாய்! அழாதே, அஞ்சாதே, உன்னுடைய அண்ணன் ராதாரமணன் என்பவன் வழியில் இருக்கிறான்; 'அண்ணா ராதாரமணா' என்று நீ அழைக்கும்போது அவன் தவறாமல் உன்னிடம் வந்து சேருவன். அவ்வூர் எல்லையில் உன்னைக் கொண்டுவிட்டு அவன் திரும்புவான் மறுபடியும் மாலைப்பொழுதில் நீ திரும்பி இவ்விடம் வரும்போது அவ்வண்ணமே அழைத்தாயாகில் வருவான்; அவனைத் துணைகொண்டு போய்வா' என்றாள். இவள் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவிடத்தில் திடமான பக்திபூண்டவளாதலால் அந்த பரமாத்மாவையே அண்ணன் ராதாரமணனென்று குறிப்பிட்டாள். ஏழைக்கு இரங்கும் அவன் நம் குழந்தைக்கு அவசியம் துணை புரிவான் என்று நம்பியே குமாரனுக்கு இங்ஙனம் கூறினள்.

தாய் சொற்படியே திரும்பி நடந்த செல்வன் காட்டினருகிற் சென்றவாறே அச்சம் தோன்ற, 'அண்ணா ராதாரமணா!' என்று உரக்க அழைத்தான். உடனே பகவான் ஒரு சிறுவனாக வந்து இவனுக்குத் துணைபுரிந்து அவ்வூரெல்லையிலே கொண்டுசேர்த்து 'தம்பீ! போய்வருகிறேன்' என்று திரும்பி மறைந்தான். செல்வன் வாசித்துவிட்டு மாலைப்பொழுதில் திரும்புகையில் காட்டிடம் வந்தவாறே பழையபடியே 'அண்ணா ராதாரமணா!' என்றழைக்க, முன்போலவே பகவான் வந்து துணை புரிந்தான். இப்படியே தினப்படியாய் நிகழ்ந்து வருகின்றது.

நாலாறு மாதங்களுக்குப் பிறகு ஒரு நாள் உபாத்தியாயர் எல்லா மாணக்கர்களுக்கும் ஒரு கட்டளையிட்டார்: அதாவது—'நாளது ரேவதி நக்ஷத்திரத்தில் எனக்கு அறுபதாண்டு நிறைவுவிழா வருகிறது; அதற்காக நீங்களெல்லாரும் உந்தம் சக்திக்குத்தக்கபடி ஏதாவது பரிசு கொண்டு கொடுப்பது நலம் என்றார். ஒவ்வொரு மாணக்கனும் வேஷ்டியும் சால்வையும் வெள்ளிப்பாத்திரங்களும் ரூபாய்களுமாகக் கொணர்ந்து கொடுத்துக் கொண்டிருக்கிறபடியைக்கண்ட செல்வன் தானும் ஏதாவது கொணர்ந்து ஸமர்ப்பித்து உபாத்தியாயரை உகப்பிக்கவேணுமென்றெண்ணித் தன் தாயிடம் செய்தியைச் சொல்லி 'அம்மா! ஏதாவது கொடு' என்று கெஞ்சிக் கேட்டான். உண்மையில் அவளிடம் ஒன்றுமில்லாமையாலே அதை உள்ளபடி சொல்லி, குழந்தாய்! நித்யமும் நீ தனியே போகிறாயா? துணையோடு போகிறாயா? என்று கேட்டாள்; அதற்கு அவன் 'அம்மா! என்னால் தனியாகப் போக முடியுமா? நீ சொன்னபடியே அண்ணன் ராதாரமணனை யழைக்கிறேன், அவன்தான் இரண்டு வேளையும் தவறாது வந்து துணைபுரிகின்றான்' என்று கூறினன். அது கேட்ட

அவள், 'அப்படியா! இன்று போகும்போது அவனையே கேட்டுப்பார்; ஏதாவது கொடுப்பன், அதைக் கொண்டுபோய் உபாத்தியாயரிடம் கொடு' என்றாள்.

அப்படியே செய்கிறேனென்று சொல்லிப் புறப்பட்ட செல்வன் வழக்கப் படியே வழியில் அண்ணனையழைக்க, அவன் வந்து தோன்றினவாறே தனது கோரிக்கையைச் சொல்லிக் கொண்டான். அதுகேட்ட ராதாரமணன் பசும்பால் நிரம்பிய ஒரு சிறு குடுவையைச் செல்வனிடம் கொடுத்து 'செல்வா! இதிலுள்ள பாலை மாத்திரம் உபாத்தியாயருக்கு ஸமர்ப்பித்துவிட்டுக் குடுவையைத் திரும்ப வாங்கி வந்து என்னிடமேகொடு' என்று சொல்லி, துணை வந்து திரும்பிவிட்டான்.

வெறுங்கையோடுபோகாமல் இதுவாவதுகொண்டுபோகப் பெற்றோமேயென்று பெருங்களிப்புக் கொண்ட செல்வன் உபாத்தியாயரிடம் சென்று இதைப் பெற்றுக் கொள்ள வேணுமென்றான். பிறர் பலர் அநவதிகமாகக் கொணர்ந்து கொடுக்கும் சிறந்த பரிசுகளை ஆனந்தமாக வாங்கி வாங்கி வைத்துக் கொண்டிருக்கின்ற அவர் இச்சிறுவன் காட்டும் பால் குடுவையைக் கண்ணெடுத்தும் பார்க்கவில்லை. இவனு பதைக்கிறான். பிறகு இச்செல்வனது நிர்ப்பந்தம் பொறுக்கமாட்டாத அவர் ஒரு பரிசாரகனை விளித்து இந்தப் பாலை வாங்கிச் சேர்த்துக் கொண்டு குடுவையைக் கொடுத்துவிடு என்று கட்டளையிட்டார்.

அவன் செல்வனையழைத்துக் கொண்டுபோய் ஒரு பாத்திரத்தில் பாலைக் கொட்டிக்கொண்டு குடுவையைக் கொடுக்கையில் அதில் பால் அப்படியே யிருப்ப தாகக் காண்கிறது. எத்தனை தடவை கொட்டினாலும் பால் அப்படியே காண்கிறது. பல அண்டாக்கள் பாலால் நிரப்பப்பட்டு விட்டன; மேலே பாத்திரமில்லாமையினாலே அவன் மிகவும் வியந்து இவ்வதிசயத்தை உபாத்தியாயரிடம் வந்து தெரிவித்தான். அவரும் கண்டு ஆச்சர்யப்படுகிறார். விஷயம் இன்னதென்று விளங்கவில்லை! 'பையா! இந்தப்பால் எங்கிருந்து கொண்டு வந்தாய்?' என்று செல்வனையே கேட் கிறார். 'என் அண்ணன் ராதாரமணன் கொடுத்தது' என்கிறான். அண்ணனும், ராதாரமணனுமே, யாவன்? என்று விசாரிக்கையில் இவனுக்கு ஸகோதரனே கிடை யாதென்று பலரும் கூறினர். பிறகு செல்வனை விரிவாக விசாரித்ததில், முதலே பிடித்து வரலாற்றைக் கூறினன் செல்வன். 'பகவானே அவன்' என்று தெரிந்து கொண்ட உபாத்தியாயர், அன்று நடைபெறவேண்டிய ஷஷ்டியப்தபூர்த்திக் கொண்டாட்டத்தில் சிறிதும் விருப்பமற்றவராய், அந்த 'அண்ணன் ராதாரமணனை' எப்படியும் காணப்பெற வேணுமென்று ஆவல் கொண்டார். 'செல்வா! உன் அண்ணனை எனக்குக் காட்டுகிறாயா?' என்றார். வழக்கம்போல் அழைத்தால் அண்ணன் வருவானென்று நினைத்து. ஆகா, அவசியம் காட்டுகிறேன் என்றான்.

இருவருமாய்ப் புறப்பட்டு வருகிறார்கள்; வழக்கமான இடத்தில் வந்து அண்ணா ராதாரமணா!' என்றழைக்கிறான் செல்வன். அன்று ராதாரமணன் வரவேயில்லை. எத்தனை தடவை கூவியழைத்தும் வந்திலன். செல்வன் இன்று துணையோடு வந் திருப்பதனால் நாம் வந்து துணைபுரியவேண்டிய அவசியமில்லை என்று கருதினன் போலும். பக்தியற்றவரான உபாத்தியாயருக்குக் காட்சி கொடுக்கக் கருதிற்றிலன் போலும். "மஹாபாபியான நான் இருக்கிற வரையில் உன் அண்ணன் வரமாட்டா னப்பா!' என்று சொல்லிப் புலம்பிக்கொண்டே திரும்பினார் உபாத்தியாயர்.

அவர் கண்மறையச் சென்றவாறே வந்து சேர்ந்தான் ராதாரமணன். 'அண்ணா! என் உபாத்தியாயர் உன்னைக் காணவேண்டி வந்தாரே; நீ ஏன் இது வரை வரவேயில்லை? அவர் அழுதுகொண்டே போகிறாரே!' என்று சொல்லி இவனும் அழத்தொடங்கினான். இவனுடைய அபிமானத்தில் இணங்கியவர் என்ற காரணத்தினால் அவர்க்கும் காட்சி தருவோமென்றிரங்கினனெம்பெருமான். அழைத்

துக் காட்சி தந்து, செல்வனையும் வித்தியாநிதியாக அநுக்ரஹித்து மறைந்தனன். இது ஸாதாரணமான வொரு கதையாயிருந்தாலும் இதிலிருந்து பக்தர்கள் அறியக் கூடிய சாஸ்த்ரார்த்தங்கள் பலவுள்ளன. அவற்றை விவேகிகள் உயர்த்துணர வேண்டும். .... .... .... .... .... *

## 15. "எவ்வளவும் களவு செய்; எள்ளளவும் புளுகாதே"

யோகிச்ரேஷ்டரென்னும்படியான ஒரு மஹாசாரியர் ஸஞ்சாரக்ரமத்தில் ஒரு மஹாநகரத்திற்கு வந்து சேர்ந்தார். அவருடைய பிரபாவங்களைக் கண்ட பலரும் அவருடைய திருவடி பணிந்து சக்ராங்கனமும் செய்து கொண்டார்கள். நாள் தோறும் பலரும் வந்து பணிகின்றார்கள். அவ்வூரில் மிகவும் தூர்த்தனான ராமஸாமி யென்கிற ஒருவனும் வந்து பணிந்து முத்திரை பெற்றுக்கொண்டான். அவன் சூது களவு பொய் வஞ்சகம் முதலிய தீய குணங்களுக்கு ஆகரமானவன். அவனுடைய இத்தன்மையையறியாத ஆசாரியர் அவனையும் சிஷ்ய கோடியில் சேர்த்துக் கொண்டார். அவனும் நாள் தவறாமல் ஆசாரியரிடம் வருவதும் தொழுவதும் அந்த ரங்க வடிமைகள் செய்வதுமாயிருந்தான். இவனுடைய தீமைகள் ஆசாரியருக்குத் தெரியாதாகிலும் அங்குள்ள மற்றவர்களுக்கெல்லாம் நன்கு தெரியுமாதலால் ஒவ் வொருவரும் ஆசாரியரிடம் வந்து "ஸ்வாமிந்! ராமஸாமியென்கிற பயல் ஸஹவாஸத் திற்கு அடியோடு தகாதவன்; அவனை ஸ்வாமி அருகில் சேர்க்கவேகூடாது" என்று சொல்லி அவனுடைய கெட்ட குணங்களையும் தீய செயல்களையும் விரிவாக எடுத்துக் கூறினார்கள். அதுகேட்ட ஆசாரியர் அவனை எப்படியாவது திருத்திப் பணி கொள்ளத் திருவுள்ளங்கொண்டு, மறுநாள் அவன் வந்தபோது அவனோடு லோகாபி ராமமாகப் பேசிக் கொண்டிருக்கையில் 'உனக்கு என்ன தொழில்? எப்படி ஜீவனம் நடத்துகிறாய்' என்று கேட்டார். அதற்கு அவன் 'எனக்கு பித்ரார்ஜிதமான ஸொத்து விசேஷமாக இருக்கிறது, நிலம் புலம் முதலானவையுமுண்டு; தந்தை தாயர் இல்லை. மனைவி மக்களோடு சுக ஜீவனம் செய்துவருகிறேன்' என்றான். இது முழுவதும் பொய். 'தம்பிடி நாஸ்தி, தடபுடல் ஜாஸ்தி' என்கிற வகுப்பில் சேர்ந்த வன். பொய் பித்தலாடகம் களவு வஞ்சகம் முதலியவைகளினாலேயே ஜீவித்து வருபவன். இதை ஆசாரியர் நன்கு தெரிந்து கொண்டாராதலால் அவனுக்குச் சில ஹிதோபதேசங்கள் பண்ணத் தொடங்கினார். முடிவாக 'பொய் களவு இரண்டையும் விட்டுவிடு' என்றார்: அதற்கு அவன் "ஸ்வாமிந்! இவையிரண்டுமே எனக்கு ஜீவனா தாரம்; இவற்றை விட்டுவிட்டால் நான் ஜீவிப்பதெப்படி?" என்று உண்மையைச் சொல்லி விநயமாகக் கேட்டான்.

அதற்கு ஆசாரியர் "எவ்வளவும் களவு செய், எள்ளளவும் புளுகாதே" என்று சொல்லி, இவ்வுபதேசத்தை நீ திடமாகக் கைப்பற்றினால் உனக்கு ஒரு குறைவும் வராது; மிக்க நலம் பெறுவாய் என்று சொல்லிவிட்டு எழுந்து அனுட்டானத்திற்குப் போய்விட்டார். ராமசாமி அவ்வுபதேசத்தை முழுமனதுடன் நிதியாகக் கொண்டான். களவு புளுகு ஆகிய இரண்டையும் விட்டுவிட வேணுமென்றே மனமார எண்ணினான். ஆனாலும் திடீரென்று களவையும் விட்டு விட்டால் ஜீவிக்க முடியாதே! ஆதலால் மிகப் பெரிய களவு செய்து ஜீவனத்திற்குப் போதுமான பொருள் சேமித்து வைத் துக் கொண்டு பிறகு களவை அறவே விட்டு விடுவோம்; புளுகை இந்த நிமிஷத் திலேயே விட்டுவிடுவோம் என்று உறுதி செய்து கொண்டு வீடுபோய்ச் சேர்ந்தான், இனி உயிர் போவதாயிருந்தாலும் பொய் சொல்லுவதில்லையென்று திடவுறுதி கொண்டான். 'இன்றிரவு அரண்மனையில் புகுந்து வெகு தந்திரமாய் சீரிய பொருளைக் களவு செய்து ஜீவனத்திற்கு வைத்துக் கொள்வோம்; இதிலும் பொய் சொல்ல வேண்டிய அவசியம் நேர்ந்தாலும் அது சொல்வதில்லை' என்று திடம் செய்து

கொண்டான். அன்று அமாவாசையாயிருந்தபடியால் 'இன்றிரவே 12 மணிக்கு எழுந்து அரண்மனையில் திருடப் போவது' என்று நிச்சயித்து, முன்னிரவில் நன்றாகவுறங்கி நடுநிசியில் எழுந்து களவு செய்ய ராஜக்ருஹத்தை நோக்கிப் புறப்பட்டான். பல வீதிகளைக் கடந்து ஒரு பெரிய வீதியில் சேல்லலுற்றான். நல்ல கருக்கிருட்டாயிருந்தது. அரசர்கள் இராக் காலங்களில் கறுப்புடுத்துச் சோதித்தல் என்பதொன்றுண்டே; மாறு வேடம் பூண்டு நகரசோதனை செய்வது. அந்த முறையில் அரசன் பிறரறியாதபடி வீதிகளிலே உலாவுமடைவில் ஓரிடத்திலே பதுங்கி நின்றிருந்தான். மெதுவாகச் செல்லுகின்ற இக்கள்ளனைக் கண்டு அணுகிச் சென்று 'யார் நீ? எங்கே போகிறாய்?' என்று வினவினான். இவன் மெய்யே சொல்லுவதென்கிற மனத்திடமுடையவனாதலால் தன் பெயரையும் இருப்பிடத்தையும் உள்ளபடி யுரைத்து 'அரண்மனையில் திருடுவதாகப் புறப்பட்டிருக்கிறேன்' என்றான். அதற்கு மாறு வேடப் பிரபு 'அடே! நீ பித்தனா பேயனா? திருடன் திருடப் போகிறேனென்று சொல்லிக்கொண்டு போவது கூட உண்டா? அதிலும் அரண்மனையில் திருடப் போகிறேனென்கிறாயே; இப்படிகூட ஒருவன் சொல்லுவதுண்டா? என்ன சங்கதி? விளையாட்டுத் தனமாகப் பேசுகிறாயா என்ன' என்று கடிந்து கேட்டான். அதற்குக் கள்ளன் அவ்வூரில் ஆசாரியர் வந்திருப்பதையும் அவருடைய உபதேசப் பெருமைகளையும் கூறி அவரிடத்தில் தான் செய்து கொடுத்திருக்கிற சபதத்தையும் சொல்லி விளங்கச் செய்தான். பிரபுவுக்கு இவனிடத்தில் நல்ல நம்பிக்கை உண்டாய் விட்டது. ஆனாலும் கொஞ்சம் பரீக்ஷித்துப் பார்ப்போமென்றெண்ணி 'அப்பா! ராமு! திருடர்களுக்குத் துணையிருந்தால் தானே நல்லது: உனக்கு நான் துணை வருகிறேன்; என்னையும் கூட்டிக் கொள்ளுகிறாயா? எனக்கென்ன கொடுக்கிறாய்? சொல்லு' என்றான். 'நல்லது, அப்படியே துணைவனாகவா; களவில் எனக்குக் கிடைப்பதில் சரிசமமான பாதி உனக்குத் தந்து விடுகிறேன்' என்றான். பிறகு இருவரும் புறப்பட்டு அரண்மனை வாசல் சென்று சேர்ந்தார்கள். மாறுவேடப் பிரபு 'நான் கீழேயே காவல் காத்து உஷார் செய்து கொண்டிருக்கிறேன், நீ மேலே போய்க் காரியம் பார்த்து வருகிறாயா?' என்றான். அப்படியே யென்றிசைந்து வெகு பக்குவமாய் கஜானாவினுட் சேர்ந்து விட்டான். சிப்பாய்கள் துப்பாக்கியும் கையுமாய் நின்றபடியே தூங்குகிறார்கள். உள்ளே போனவன் அரசனுடைய கைப்பெட்டியை எடுத்து ஸதுபாயமாகத் திறந்து பார்க்கையில் அதில் விலையுயர்ந்த மூன்று மாணிக்கங்கள் இருந்தன. ஒவ்வொன்றும் லக்ஷம் ரூபா தாளக் கூடியது. இதை இவன் ஏற்கெனவே கேள்விப்பட்டிருந்தவன். ரத்னங்களைக் கண்டவுடனே வெகு சந்தோஷம் கொண்டான். அவை மூன்றையும் கவர்ந்தால் 'கீழே யிருக்கிற துணைவனுக்குப் பேர்பாதி கொடுப்பதாகச் சொல்லி யிருப்பதால் மூன்று ரத்னங்களை இருவர் பங்கிட்டுக்கொள்ள முடியாதே' யென்று ஆலோசித்து 'ஒரு ரத்னம் அரசனுக்கே யிருக்கட்டும்' என்று ஒன்றைப் பெட்டியிலேயே வைத்து விட்டு இரண்டை யெடுத்து இடுக்கிக் கொண்டு வேறு எந்த பொருளையும் தொடாமல் மெதுவாகக் கீழே யிறங்கி விட்டான். செய்தியை உள்ளபடியே துணைவனிடம் சொல்லி விட்டான். 'மூன்று ரத்னங்களிருந்தன; மூன்றையு மெடுத்தால் இப்போதே நாம் பங்கிட்டுக் கொள்ள முடியாதே யென்று ஒரு ரத்னத்தைப் பெட்டியிலேயே வைத்து விட்டேன்; இதோ இரண்டு ரத்னம்; ஒன்று எனக்கு, ஒன்று உனக்கு' என்று சொல்லி ஒன்றை அவனுக்குக் கொடுத்துவிட்டுத் தான் போகப் புக்கான். அதைப் பெற்றுக் கொண்ட மாறுவேடப் பிரபு மறுபடியும் அவனுடைய பெயரையும் இருப்பிடத்தையும் கேட்டெழுதிக்கொண்டு படுக்கை யறையில் சேர்ந்து விட்டார்.

நின்று கொண்டே தூங்கிப்போன சிப்பாய்கள் பிறகு கண்விழித்தவாறே கள்ளன் வந்துபோன ஜாடைகள் கண்டு திடுக்கிட்டு அரசன் ரூம் வாசலில் வந்து

மெதுவாக முறையிட்டார்கள். அரசன் அப்படியா? என்று சொல்லி மந்திரியை வரவழைத்து 'இவர்கள் ஏதோ களவு பேச்சு பேசுகிறார்கள்; என்ன போயிற்று? கவனித்துப் பார்' என்றான். அங்ஙனம் பார்க்கப்போன மந்திரி அரசனது கைப் பெட்டியைப் பார்க்கையில் அதில் ஒரு ரத்னமிருக்கக் கண்டான். மூன்று ரத்னங் கள் அதிலிருந்தது அவனுக்குத் தெரியும். வந்த கள்ளன் இரண்டு ரத்னங்களைக் கொண்டு போனானென்பது அறிந்துகொண்டான். அந்த ஒன்றை யெடுத்துத் தான் இடுக்கிக்கொண்டு அரசனிடம் வந்து 'மஹா ப்ரபோ! வெள்ளியோ தங்கமோ ஆடையோ ஆபரணமோ எதுவும் போகவில்லை; கைப்பெட்டியிலிருந்த மூன்று ரத்னங்கள் மட்டுமே களவு போயின' என்றான். அரசன் கேட்டு 'மூன்று மா போய்விட்டது? மூன்றுமா போய்விட்டது? நன்றாகப் பார்?' என்று சொல்லவும், மந்திரி 'நன்றாகப் பார்த்தேன், மூன்றும் போய் விட்டன; வந்த திருடன் ஒன்றிரண்டை வைத்துப் போவானோ?' என்று சொல்லித் தானும் துக்கிக்கத் தொடங்கினான். உடனே அரசன் மந்திரியை அவ்விடத்திலேயே உட்காரச் செய்து விட்டு, இரவு களவாட வந்த ராமஸாமியின் விலாஸம் தன்னிடமிருப் பதனால் அந்த விலாஸத்தை ஜவானிடம் சொல்லி உடனே அவனை யழைத்து வா என்று கட்டளை யிட்டனுப்பினான். அவன் ஓடிச்சென்று ராமசாமியை யெழுப்பி 'மஹாப்ரபு உங்களை யழைக்கிறார்' என்று கூப்பிட, அதுகேட்ட அவன் 'ஸரி, நாம் செய்த களவு அரசனுக்குத் தெரிந்துவிட்டதுபோலும்; அதனா லென்ன? ஸத்யம் நம்மைக் காக்குமேயல்லது கைவிடாது' என்று தைரியங் கொண்டு இரவில் கொணர்ந்த ரத்னத்தையெடுத்து இடுப்பில் மறைத்து வைத்துக் கொண்டு அரசனிடம் வந்து சேர்ந்து தொழுது கை கூப்பினான். 'நேற்றிரவு என்ன நடந்தது? உள்ளது உள்ளபடியே சொல்லு' என்றானரசன். இரவு 12 மணிக்குத் தான் வீட்டிலிருந்து புறப்பட்டது முதல் மறுபடியும் வீடுபோய்ச் சேர்ந்த வரையில் நடந்தவற்றை ஒன்று விடாமலும் ஒளிக்காமலும் சொல்லி 'பிரபுவே! நான் கவர்ந்த ரத்னம் இதோ, மேஜைமேல் வைத்துவிட்டேன்; எனக்குத் துணைவனாய் வந்த வனுக்கு நான் கொடுத்த ரத்னம் என்னால் மீட்டுக் கொடுக்க முடியாததால் தயவு செய்து என்னை மன்னியுங்கள்; அவன் யாரோ? எவ்வூரோ எங்கே போனானோ? எனக்குத் தெரியாது.' என்று சொல்லிப் பாதத்தில் விழுந்தான். அந்தத் துணை வன் உண்மையில் அரசனே யாதலாலும், அந்த ரத்னம் தன்னிடமேயிருப்பதாலும் அதை யெடுத்து மேஜைமேல் வைத்து 'மந்திரீ! மூன்றாவது ரத்தினத்தைப் பற்றி இப்போது என்ன சொல்லுகிறாய்?' என்றான். அப்போதும் மந்திரிக்கு நல்ல புத்தி பிறக்கவில்லை; 'இந்தக் கள்ளன் பொய் சொல்லுகிறான்; தாங்கள் உத்தரவு கொடுத் தால் இவன் வீட்டில் சென்று சோதனை செய்து அந்த ரத்னத்தைக் கண்டிப்பாய்க் கொண்டு வந்து விடுகிறேன்' என்றான் மந்திரி. உடனே அரசன் மந்திரியினுடைய ஆடையை அவிழ்க்கச் செய்ய, மூன்றாவது ரத்னம் தெப்பென விழுந்தது. அப்பொழுது மந்திரியின் முகநிலை 'இப்பொழுதெம் மனோராலியம்புதற் கெளிதோ?'

அரசனுக்கு ராமசாமியிடத்தில் பெருமதிப்பு உண்டாயிற்று; இவன் இனி இவ்வாயுளில் ஸத்யம் தவறமாட்டான்; நல்ல ஜீவிகை கிடைத்தால் களவும் செய்ய மாட்டான்; இவனே மந்திரி பதவிக்கு உரியன்' என்று துணிந்து பழைய கள்ள மந்திரியைச் சிறைச்சாலைக்கு அனுப்பிவிட்டு ராமஸாமியை ஸர்வாதிகாரி பதவி கொடுத்து மிகமிக ஆதரித்தான். அவன் ஆசாரியனுடைய அருளே இங்ஙனம் பலிக்கப் பெற்றதென்று நன்றியறிவு பூண்டு அவ்வாசார்யனை ராஜகுருவாக்கி இரவும் பகலும் ஸதுபதேசங்களை வளரச் செய்து கிருதயுக தர்மமாக்கி வைத்தான். *

---

கிடைக்குமிடங்கள் :—

(1) க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.

(2) M. A. KRISHNAMMAL, Advocate,
20, South Mada Street, Triplicane, Madras-5.

(3) V. GOPALSWAMI,
17, பண்டி வெங்கடேச நாய்க்கன் தெரு, திருவல்லிக்கேணி.

(4) G. ரங்கைய நாயுடு,
26, குருவப்ப செட்டி தெரு, சிந்தாத்திரிபேட்டை, மதராஸ்—2
(இவர் சென்னையில் பிரசாரம் செய்ய நியமிக்கப்பட்டவர்.)

If un-delivered please return to:

**P. B. ANNANGARACHARYA,**
L. KANCHEEPURAM.

37. Sri S.A[illegible],
8, South Mada Street,
Triplicane, MADRAS-5.

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Satgrantha Prakasana Sabha.
Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street, L. Kancheepuram.

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்

---

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாய துரந்தரர்களான ஆழ்வார்களின் திருவவ
தார காலம் நம் முன்னேர்கள் குருபரம்பராப்ரபாவாதி நூல்களில்
எழுதிவைத்திருக்கிறபடிதான் பொருத்தமானதென்று
நன்கு நிரூபிக்கும் நூல்

# ஆழ்வார்களினவதாரகால நிர்ணயம்

ஸரீஸ்வம்

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதிபயங்கரம்

அண்ணங்கராசாரியர் ஸ்வாமி

எழுதியது

**ஸ்ரீராமாநுஜன் வெளியீடு 171**

ஸ்ரீ காஞ்சீ ஸ்ரீ வேங்கடேச்வர அச்சுக்கூடம்

கிடைக்குமிடம் :—

P. B. ANNANGARACHARYA,

Editor, Granthamala, L. Kancheepuram.

30—3—63 10-11-'73.

விலை —— 60 NP

ஸ்ரீ:

பேருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்

———

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாய துரந்தரர்களான ஆழ்வார்களின் திருவவ
தார காலம் நம் முன்னோர்கள் குருபரம்பராப்ரபாவாதி நூல்களில்
எழுதிவைத்திருக்கிறபடிதான் பொருத்தமானதென்று
நன்கு நிரூபிக்கும் நூல்

# ஆழ்வார்களினவதாரகால நிர்ணயம்

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதிபயங்கரம்
*அண்ணங்கராசாரியர் ஸ்வாமி*
எழுதியது

**ஸ்ரீராமாநுஜன் வெளியீடு 171**

ஸ்ரீ காஞ்சீ ஸ்ரீ வேங்கடேச்வர அச்சுக்கூடம்

கிடைக்குமிடம் :—

**P. B. ANNANGARACHARYA,**
**Editor, Granthamala, L. Kancheepuram.**

30—3—63

விலை ——— 60 nP

ஸ்ரீ:

# ஆழ்வார்களினவதார கால நிர்ணயம்

[ஸ்ரீ காஞ்சீ. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.]

## — முதல் அதிகாரம் —

## மயிலை மாதவ தாஸர் பதிப்பாராய்ச்சி.

1. திவ்வியப் பிரபந்தப் பதிப்புகள் பல பல இருந்தாலும் "மயிலை மாதவ தாஸன் பதிப்பு" என்று தற்காலம் மிகப் பிரசித்தி பெற்றுள்ள பதிப்பைப் பற்றியே இங்கு ஆராய்ச்சி வெளியிடப்படுகின்றது. மயிலை மாதவ தாஸன் என்பவர் சிலவாண்டுகட்கு முன்பு பூதவுடல் நீத்துப் புகழுடம்பு பெற்றவர். இவர் ஸ்மார்த்த ப்ராஹ்மண வகுப்பைச் சேர்ந்தவர்; 'மயிலை மாதவ தாஸன்' என்னும் பெயரை இவர் புனைந்து கொண்டாரென்று கேள்வி. ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்திலும் அதைச் சார்ந்த நூல்களிலும் இப்பெரியார் மெய்யன்பு வாய்ந்தவரென்பது நமது நம்பிக்கை. வைணவப் புலவர்களின் காலக்ஷேப கோஷ்டிகளிலும் உபந்யாஸ கோஷ்டிகளிலும் அந்வயிக்கப் பெற்றதனால் இவர்க்கு இவ்வன்பு தோன்றியதென்று பலர் பகரக் கேட்டிருக்கை. இவர் நம்முடைய சென்னையுபந்யாஸ கோஷ்டிகளில் நெடுங்காலம் அந்வயித்திருந்தும் இவரை நாம் வெகு நாள் வரை அறியாமலேயிருந்தோம்.

2. இப்பெரியார் முதன் முதலாக நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தை நல்ல முறையில் பதிப்பித்தனர். பிறகு திருப்பாவையின் வியாக்கியானங்களான மூவாயிரப்படி ஆறாயிரப்படி முதலானவற்றையும் பதிப்பித்தனர். இக்காரியங்களை இவர் ஸ்ரீவைஷ்ணவப் பெரியார்களின் உதவிகொண்டே செய்ததாகக் கேள்வி. இவருடைய நாலாயிர திவ்யப் பிரபந்தப் பதிப்பு 1943-ஆம் ஆண்டில் முதன்முதலாக நிகழ்ந்திருக்கின்றது. பிறகு இரண்டாம் பதிப்பு 1950ல் வெளிவந்தது. மூன்றும் பதிப்பு மிகவும் ஸமீபகாலத்தில் வெளிவந்துள்ளது. அதாவது 1962 டிஸம்பரில் அச்சிடப் பெற்று (20—3—1963)ல் சென்னை கேசவப் பெருமாள் தேவஸ்தானத்தில் பல பெரியார்கள் மூலமாகக் குலாவப் பெற்று வெளிவந்துள்ளது. 'உயர்திரு. மணவி. லக்ஷ்மண முதலியார் ஸ்பெசிபிக் எண்டோமெண்ட்ஸ்' மூலம் வெளியிடப்பட்டது.

3. திவ்வியப் பிரபந்தம் மற்றைய நூல்களைப் போலல்லாமல் தமிழ் வேதமாகக் குலாவப் படுதலால் புதிய பாடங்களை மனம்போனபடி புகுத்தாமல் பூருவாசாரியர்களின் வியாக்கியானங்களுக் கிணங்கிய பழைய பாடம் ஆதரிக்கப் பட்டிருக்கின்றதாவென்று ஆராய்வதே என்போல்வாருடைய பணியாகும். மேலே குறித்த மயிலை மாதவ தாஸன் முதற் பதிப்பில் 743, 744 ஆம் பக்கங்களில் துணை நூல் அட்டவணை வெளியிடப்பட்டதில் "ஸ்ரீப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியார்......வெளியிட்டுள்ள திவ்யார்த்த தீபிகை"........'ஸ்ரீ ப்ரதி வாதி பயங்கரம் அண்ணங்கராசாரியார் வெளியிட்ட பகவத்கதை யமுதம்"......."ஸ்ரீ ப்ரதி வாதி பயங்கரம் அண்ணங்கராசாரியார் பதிப்பு ஸ்ரீவசநபூஷண ஸாரம், நித்யாநுஸந்தானம்" ஆக இப்புத்தகங்களைத் துணைகொண்டதாக" அறிவிக்கப்பட்டுள்ளது. ஆனால், நம்முடைய திவ்யார்த்த தீபிகையில் பூருவாசாரிய வியாக்கியான விருத்தங்களென்று மறுக்கப்பட்ட சில

பாடங்களும் அப்பதிப்பில் கொள்ளப்பட்டிருந்ததைக் கண்ட யாம் "இன்னின்ன பாடங்கள் திருத்தப்பட வேண்டும்" என்று அவர்க்குத் தெரிவித்திருந்தோம். அப்போது அப்பெரியார் ஆராய்ந்து பார்த்து "ஸ்வாமிகள் தெரிவித்த திருத்தங்கள் மிகவும் அவசியமானவையே; காரியஸ்தர்களின் கவனக் குறைவினுல் ஏற்பட்ட தவறு மன்னிக்கத்தக்கதே; மறு பதிப்பில் கவனிக்கச் செய்யலாகும்" என்று விடை தந்திருந்தார்.

4. இப்போதைய பதிப்பில் அப்பிழைகளெல்லாம் அருமலிருப்பதோடு புதிய பிழைகளும் புகுந்துள்ளன. அருத பழைய பிழைகளில் சில எடுத்துக்காட்டலாமென நினைத்தேன்; அநுபந்தத்தில் பல பிழைகளையுமெடுத்துக் காட்டுவேன். புதிய பிழைகள் புகுந்தது மிக வருந்தத் தக்கது. இதில் ஒன்றே காட்டுகிறேன்; திருவிருத்தம் (பா. 89) "தீவினை கட்கரு நஞ்சினை நல்வினைக் கின்னமுதை" என்பது இப்போதைய பதிப்பு. "தீவினைக் கருநஞ்சை நல்வினைக் கின்னமுதத்தினை" என்று முன்னிரண்டு பதிப்புகளிலுள்ளது. பூருவர்களின் வியாக்கியானங்களுள் ஒன்றில் இப்பாசுரத்தின் பாடத்தைப் பற்றின விசாரம் செய்யப்பட்டுள்ளது. நம்முடைய திவ்யார்த்த தீபிகை யுரையில் அதைப் பற்றி விரிவான ஆராய்ச்சி காணலாம். இப்பதிப்பில் ஸாஹஸமாகவே திருத்தம் செய்யப்பட்டு விட்டது. இங்ஙனே பல.

5. அன்பர்காள்! நாம் இவ்வாராய்ச்சிக் கட்டுரை எழுதத் தொடங்கியது முக்கியமாகப் பாடப்பிறழ்வுகளைப் பற்றியல்ல. ஸம்பிரதாய பரம்பரையிற் படிந்து ஸதாசாரியர்கள் பக்கலில் திவ்யப் பிரபந்தங்களை அதிகரிக்கப் பெறுமவர்கள் புத்தக பாடங்களினுல் ஏமாற்றமடைய மாட்டார்களென்பது நமது நம்பிக்கை. முக்கியமாக இக்கட்டுரையின் விவக்ஷிதம் இனி விவரிக்கலாகிறது. மயிலை மாதவ தாஸருடைய முன்பதிப்புகளில் ஆழ்வார்கள் திவ்ய சரித்திரம் எழுதி முடித்தவுடனே "ஆழ்வார்கள் அவதரித்த காலம்" என மகுடமிட்டு எழுதி வெளியிடப்பட்டுள்ளதாவது—

"ஆழ்வார்கள் அவதரித்த காலம். திவ்ய ஸூரி சரிதத்திலும் ஆறுயிரப்படி குருபரம் பரா ப்ரபாவத்திலும் ஆழ்வார்கள் திருவவதாரம் செய்த மாதங்களும் திருநக்ஷத்ரங்களுமே உள்ளன; யுகம் வருஷம் திதி வாரம் முதலியன காணப்படவில்லை. நம்மாழ்வார் திருவவதாரத்துக்கு மட்டும் லக்னம் உட்பட எல்லாம் ஆறுயிரப்படியில் தரப்பட்டுள்ளன. திருமங்கையாழ்வார் அவதார வருஷத்தின் பெயர் மட்டும் காணப்படுகிறது. 'மூவாயிரப் படி குருபரம்பரையில் கீழ்வருமாறுள்ளது:—பொய்கையாழ்வார் துவாபரயுகம் 862901 (=B. C. 4202 கி. மு.) சித்தார்த்தி௵ ஐப்பசி௴ சுக்லாஷ்டமி செவ்வாய்க்கிழமை திருவோணம்; பூதத்தாழ்வார் ஷை யுகம் ௵ ௴ சுக்லநவமி புதன்கிழமை அவிட்டம்; பேயாழ்வார் ஷை யுகம் ௵ ௴ சுக்லதசமி வியாழக்கிழமை சதயம்; திருமழிசைப்பிரான் ஷை யுகம் ௵ தை௴ கிருஷ்ண பிரதமை ஞாயிற்றுக்கிழமை மகம்; மதுரகவிகள் ஷை யுகம் 863879 (B. C. 3224) ஈசுவர௵ சித்திரை௴ சுக்ல சதுர்த்தி வெள்ளிக்கிழமை சித்திரை நக்ஷத்ரம்; நம்மாழ்வார் கலிபிறந்த 43-வது நாள் (B. C. 3102) பிரமாதி௵ வைகாசி௴ பௌர்ணமி வெள்ளிக்கிழமை விசாகம்; குலசேகராழ்வார் கலி 28 (B. C. 3075) பராபவ௵ மாசி௴ சுக்ல துவாதசி வெள்ளிக்கிழமை புனர்பூசம்: பெரியாழ்வார் கலி 47 (B. C. 3056) குரோதன௵ ஆனி௴ சுக்ல ஏகாதசி ஞாயிற்றுக்கிழமை சுவாதி; ஆண்டாள் கலி 98 (B. C. 3005) நள௵ ஆடி௴ சுக்ல சதுர்த்தி செவ்வாய்க்கிழமை பூரம்; தொண்டரடிப்பொடியாழ்வார் கலி 289 (B. C. 2814) பிரபவ௵ மார்கழி௴

கிருஷ்ண சதுர்த்தசி செவ்வாய்க்கிழமை கேட்டை; திருப்பாணாழ்வார் கலி 343 (B. C. 2760) துர்மதிவருஷ கார்த்திகைமீ கிருஷ்ணதுவிதியை புதன்கிழமை ரோஹிணி; திருமங்கையாழ்வார் கலி 398 (B. C. 2714) நளவருஷ கார்த்திகைமீ பௌர்ணமி வியாழக்கிழமை கிருத்திகை நக்ஷத்ரம். ஸ்ரீரங்கம் தேவஸ்தானத்தின் பழைய சரித்திரத்தைக் கூறும் "கோயிலொழுகு" என்ற நூலில் குலசேகரப் பெருமாள் கல்யப்தம் ஐம்பது வருஷத்துக்கு மேல் சேர சோழ பாண்டிய மண்டலங்களுக்குப் பிரபுவாய்த் தமது புத்ரி சோழவல்லியை அழகிய மணவாளப் பெருமாளுக்குத் திருமணம் செய்வித்துத் தமது சொத்தை ஸ்ரீதனமாகக் கொடுத்து மூன்றும் ஆவரணத்தின் தென்மேற்கில் சேனைவென்றான் திருமண்டபம் கட்டிய செய்தியும், கல்யப்தம் 105-க்கு மேல் ஸ்ரீவில்லிபுத்தூரிலே அழகிய மணவாளன் ரங்கமன்னாராக எழுந்தருளிச் சூடிக்கொடுத்த நாச்சியாரைத் திருமணம் புணர்ந்த செய்தியும், கல்யப்தம் 445-க்குமேல் ஆழ்வார் திருமங்கையாழ்வார் தினம் திருவரங்கம் திருப்பதியிலே நித்யவாசம் பண்ணிக்கொண்டு திருப்பணிகள் நடத்திய செய்தியும் கூறப்பட்டுள்ளன. பெரியாழ்வார் திருமொழியில் (344-ம் பாசுரத்தில்) கோநெடுமாறன் பற்றியும், திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியில் (1128—1137) சில பல்லவ மன்னர் பற்றியும், (1498—1507) கோச்செங்கட் சோழன் பற்றியும் வரும் குறிப்புக்கள், சிலாசாஸனங்கள், செய்யுள் நடை, இலக்கண விசேடங்கள் முதலிய பல ஆதாரங்களைக் கொண்டு ஸ்ரீமான்கள் டாக்டர் எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், பி. டி. ஸ்ரீநிவாஸ ஐயங்கார், டி. ஏ. கோபிநாதராவ், ராவ்சாஹேப் மு. ராகவையங்கார் முதலிய ஆராய்ச்சி நிபுணர்கள் ஆழ்வார்கள் காலம் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டிலிருந்து பத்தாம் நூற்றாண்டுக்குட்பட்ட ஐந்நூறு வருஷங்கள் (5th to 10th Century A. D.) என்கின்றனர். சம்ப்ரதாய ஞானமும் சரித்ர ஞானமும் ஒருங்கேவாய்க்கப்பெற்ற" ஸ்ரீவைஷ்ணவப் பேரறிஞர்களுடைய ஆராய்ச்சிக்குரிய முதற்பொருளாக இஃதுள்ளது.

6. இக்கட்டுரை மிகவும் அழகியதே; ஆனால் இவ்வளவோடு நில்லாமல் "டாக்டர் மா. இராசமாணிக்கனார்" பெயரால் "ஆழ்வார்கள்காலம்" என்னுங்கட்டுரை 18 பக்கங்கொண்டதாக வெளியிடப்பட்டுள்ளது. இது முற்றிலும் இருளும் மருளும் வடிவெடுத்தவர்கள் சிலர் எழுதியிருந்தவையும் ஏற்கெனவே [பலவாண்டுகட்கு முன்னமே] நம்மால் மறுத்தொழிக்கப் பட்டவையுமான கட்டுரைகளைப் பின்பற்றி எழுதப்பட்டதென்பதை விவேகிகள் உய்த்துணரவேணும். நம்முடைய அந்தப் பழைய மறுப்பு வியாஸத்தை இதில்மேலே வெளியிடுவோம்; அதன்பிறகு புதிய மறுப்புரையும் தருவோம். ... *

## — இரண்டாம் அதிகாரம் —

காலஞ்சென்ற மு. இராகவையங்காருடைய மருள்விளக்கம்.

7. மேலே குறித்த 'இராசமாணிக்கனார்' தமது கட்டுரையில், காலஞ்சென்ற மு. இராகவய்யங்காரவர்களின் 'ஆழ்வார்கள் காலநிலை' என்னும் புத்தகத்தை அடிக்கடி உதாஹரிக்கின்றார். அந்த ராகவையங்கார் ஜீவித்திருந்த காலத்திலேயே அவருடைய கட்டுரைகளெல்லாம் பெரும்பாலும் மதிமயக்கத்தினாலானவை யென்பதை நாம் விரிவுக்கு அஞ்சாமல் மூதலித்து 'செந்தமிழாராய்ச்சி' முதலான நூல்களை வெளியிட்டிருக்கிறோம். ஈண்டு மேலே காட்டுவதாகக் குறித்த மறுப்பு வியாஸமும் அவருடைய ஜீவிதகாலத்திலேயே வெளியிடப்

பட்டது. பிறகு அப்பெரியார் 10, 15 வருடங்களுக்குமேல் ஜீவித்திருந்தார். அவருடைய கட்டுரைகளை நாம் கண்டிக்கத்தொடங்கியது 1927ஆம் ஆண்டில். இற்றைக்கு முப்பத்தைந்து வருடங்களுக்கு மேலாயிற்றென்க.

8. அப்பெரியார் ஆழ்வார்களின் அவதார காலத்தைப்பற்றித் தவறான ஆராய்ச்சிகள் வெளியிட்டது மல்லாமல் ஆழ்வார் பாசுரங்களிற் பாடங்களையும் சில பல மாற்றியிருந்தார். அதுவும் மிகத்தவறான பணி யென்பதை நாம் நிரூபித்து வெளியிட்டிருந்தோம். அவற்றை யெல்லாம் அவர் தமது ஜீவதசையில் பலகாலம் பார்த்திருந்தவரே யல்லது ஒன்றுக்கும் மறுப்புரைக்க நெஞ்சால் நினைத்ததுமில்லை. இவ்வளவேயன்று; திருவனந்தபுரத்திலும் இராமநாதபுரத்திலும் காஞ்சீபுரத்திலும் நம்மை அவர் சந்திக்க நேர்ந்தகாலங்களில் நமது மறுப்புரைகளினால் தாம் பரம த்ருப்தியடைந்ததாகவும் கூறினர்.

9. அப்பெரியார் திருமழிசைப் பிரானருளிய நான்முகன் திருவந்தாதியில் (பா.63.) * தரித்திருந்தேனாகவே * என்னும்பாட்டில் இரண்டாமடியில் "விரித்துரைத்த வெந்நாகத் துன்னை" என்று பூர்வாசார்ய வியாக்கியான ஸித்தமான பாடத்தைத் தம்முடைய குத்ஸித வாதங்களினால் "விரித்துரைத்த என்னாகத்துன்னை" என்று திருத்தி வெளியிட்டிருந்த வியாஸம் செந் தமிழ்ப்பத்திரிகையில் நமதுபார்வைக்கு வந்தது. அப்போது நாம் நான்முகன்திருவந்தாதிக்கு திவ்யார்த்த தீபிகையுரை எழுதிக்கொண்டிருந்தோம். அதில் அப்பாட்டின் உரையிலேயே விரிவான மறுப்பெழுதி வெளியிட்டோம். அந்த மறுப்பைக்கண்ட அந்த ராகவையங்கார் மிக்க அநுதாபங்கொண்டு "பூருவாசாரியர்களிடத்து மஹாபசாரப்பட்ட வெனக்கு தேவரீருடைய க்ஷமையல்லது புகலில்லை" என்று நம்மிடம் தெரிவித்தார். அந்த மறுப்பும் இங்கெடுத்துக் காட்டப்பட வேண்டியது அவசியமென்று தோன்றுவதால் முன்னம் அது காட்டப்படுகின்றதிங்கு; [நமதுதிவ்யார்த்ததீபிகையில் வெளிவந்த மறுப்பு;—]

10. "[தாராகணப்போர் விரித்துரைத்த வெந்நாகத்துன்னை."] இக்காலத்துப் புதிய ஆராய்ச்சிக்காரர் சிலர் வெளியிட்டுள்ள "ஆழ்வார்கள் காலநிலை' என்னுமோர் புத்தகத்திலும் மதுரைச் செந்தமிழ்ப்பத்திரிகையிலும் இப்பாசுரத்தை ஆராய்ச்சிசெய்யப் புகுந்து,

> "இதன் முதலிரண்டடிகட்கு – 'நக்ஷத்ரகதியாயிருக்கிற ஜ்யோதிஸ் - சாஸ்திரத்தைச் சொன்ன திருவனந்தாழ்வானுக்கு ஆத்மாவாயிருக்கிற உன்னை' என்பது பூர்வவியாக்கியானம். இதன்படி 'தாராகணப்போர் விரித்துரைத்த' என்ற விசேடணம் ஆதிசேடனுக்கு உரியதாகும். ஆனால் அவனை இவ்வாறு விசேடிப்பதற்குரிய நேரான பொருத்தமொன்றுங் காணப்படவில்லை. ஆதிசேடன் செய்த சோதிடநூல் இன்னதென்பதுந் தெரிந்திலது. அதனால், 'வெந்நாகத்துன்னை' என்றுள்ள பாடம் 'விரித்துரைத்த வென்னாகத்துன்னை' என்றிருந்த பழம் பாடத்தினின்றும் மாறியதோ என்றுகருதஇடந்தருகின்றது. '(சோதிட நூலை) விரித்துரைத்த (என்+ஆகத்து=) எனதுநெஞ்சிடமாகவுள்ள, உன்னை' —என்பது இப்பாடப்படி பொருளாகும்.........இங்ஙனம் 'தாராகணப்போர் விரித்துரைத்த' என்பது ஆழ்வார்க்குரிய விசேடணமாயின், தம்மாற் செய்யப்பெற்ற சோதிட நூலொன்றைப் பற்றிஅவர்குறிப்பிட்டனராவர். அத்தகைய நூல் யாது என்பதஆராய்ந்து அறிதற்குரியது"

என்று எழுதியுள்ளார். இதனாற் சொல்லிற்றாகிறதென்னென்னில், பகவத்கிருபையாலும் ஸதாசார்ய கடாக்ஷத்தாலும் ஆழ்வாரருளிச் செயல்களின் உண்மைப்பொருள்களை நன்குணர்ந்து

அருளிச்செய்தவரும்; இற்றைக்குச் சற்றேறக்குறைய எண்ணூறு ஆண்டுகட்கு முன்பு ஸர்வஜ்ஞராய்ப் புகழ்பெற்று விளங்கினவருமான பெரியவாச்சான்பிள்ளை பிழையான பாடமொன்றைக் கொண்டனரென்றும், அப்பாடப்படி உரைக்கும் பொருள் பொருத்த மற்றதென்றும் சொல்லிற்றுகிறது. "வேம்நாகத்து" என்பது பெரியவாச்சான் பிள்ளை உரைசெய்தருளின பாடம்; "என் ஆகத்து" என்பது இப்புதியபுலவர் கற்பிக்கும் பாடம். பழையபாடத்திற் பொருத்தமின்மை கூறப்புகுமவர் தாங்கூறும் பாடத்தில் ஒரு பொருத்தம் காட்டித் தீரவேண்டும். ஆதிசேஷன்செய்த சோதிடநூல் இன்னதென்று தெரியவில்லை யென்னுமிவர் திருமழிசைப்பிரான் செய்த சோதிடநூல் இன்னதென்று தெரிந்துகொண்டவ ராதல்வேண்டும். "பார்க்கவம் பிருகு ருத்திர முதலிய கணித சோதிட கிரந்தங்கள் உள்ளன; இவைபோன்றதொன்றே பிருகுவமிசத்தவரான ஆழ்வார் அருளிச்செய்ததாக வேண்டும்" என்று அநுமானங் கூறுகின்றார். இத்தகைய அனுமானம் ஆதிசேஷன் பக்கல் கூடாமைக் குக் காரணமறிகின்றிலோம். வேதாங்கங்களுள் ஒன்றான ஜ்யோதிஷத்திற்கு ஆதிசேஷன் ப்ரவர்த்தகன் என்னுமிடத்தை "஬ஹாஷெ ஜ்ஸைதிஷீவிஜ்ஸா யஜுஷஜ்ஜும் யரா தமெ। தஜ நஜஜநஜஷஷ்ஜ தஜ்ஜும் ஷங்கஜ்பயெ ஹ்ஜதி = பபாஸே ஜ்யௌதிஷீ வித்யா யதுபஜ்ஞம் தராதலே, தமநந்தமநந்தஸ்ய தல்பம் ஸங்கல்பயே ஹ்ருதி" இத்யாதிகளான பல பிரமாணங்களினால் நன் கறிந்தே பூருவர்கள் மிகப்பொருத்தமாக வியாக்கியானஞ் செய்தருளினர். இவ்விஷயமாகச் சில வாண்டுகட்கு முன்னர் நாம் பலவிடங்களிலும் பல பெரியோர்களை விசாரித்து வருகை யில், மலைநாட்டில் திருவனந்த சயனத்தில் மலையாளிச் சோதிட நிபுணரொருவர் எடுத் துரைத்த ச்லோகம்மேற்குறித்தது. புராதனமான சோதிடநூலொன்றின் வியாக்கியானத்தில் மங்களச்லோகமாக அமைந்ததாமிது. ஆளவந்தாரருளிச்செய்த ஸ்தோத்ர ரத்னத்தில் திரு வனந்தாழ்வானைப் பற்றியதான *தயா ஸஹாஸீந மித்யாதி ச்லோகத்தில் *ப்ரக்ருஷ்ட விஜ்ஞாந பலைகதாமநி *என்றவிடத்து, வேதாந்த வாசிரியர் தாமியற்றிய பாஷ்யத்தில் "**पञ्चविधज्योतिस्सिद्धान्तप्रवर्तकत्वेन ज्ञानप्रकर्षोऽस्य प्रसिद्धः**" என்றெழுதியுள்ளார். இதைவிட வேறு பிரமா ணம் தேடவேண்டுமோ? ஆதிசேஷன் பஞ்சவித ஜ்யோதிஸ் ஸித்தாந்த ப்ரவர்த்தகனென் றன்றோ இந்த பாஷ்ய ஸ்ரீஸூக்தியில் விளங்க நின்றது.

இன்னமும் ஊன்றி ஆராயப்புகில் இத்தகைய ஆதாரங்கள் ஆகரத்துடன் பல கிடைக்கக் குறையில்லை. இதுநிற்க. திருமழிசைப்பிரான் பல மதங்களிலும் புகுந்து அந்தந்த மதங்கட்குச் சார்பாகப் பலநூல்களுமியற்றினரென்னும் ப்ரஸித்தியிருந்தாலும் சோதிடநூல் இயற்றியருளினராக எங்குங்கூறப்படவில்லை. அங்ஙனே ஏதேனுமொருநூல் தாம் செய்தருளியிருந்தாலும் அதனை இங்கு அநுவதித்தருளிச் செய்தற்கு ப்ரஸக்தி யொன்றுமில்லை. இவ்வண்ண மருளிச்செய்யும் வழக்கம் ஆழ்வார்களின் திவ்யப்ரபந்தங்களி லொன்றிலுமில்லை. ஆகவே 'என் ஆகத்து' என்று பாடத்தை மாறுபடுத்தல் பயனற்றது. ஸர்வஜ்ஞர்களான பூர்வாசார்யர்களின் வியாக்கியான ஸ்ரீஸூக்திகளில் அல்பஜ்ஞரான நாம குறைகூறுதற்குச் சிறிது மதிகாரமுடையோமல்லோம். பூருவர்கள் ப்ரமித்தார்களெனின் அந்த ப்ரமமே நமக்கும் தஞ்சமாகத்தக்கது. ஸ்ரீமந்நாதமுனிகள் தொடங்கி மணவாள மாமுனிகள் வரையிலுள்ள ஸதாசார்யர்களின் ஸ்ரீஸூக்திகள் வேதவாக்கினுஞ் சிறந்து பிரமாணமாவனவென்று திண்ணிதாகக் கொள்வாரது திருவடிகளே சரணம். பூருவர் களருளிச்செய்த பொருள்கட்கு முரண்படாமல் விசேஷார்த்தங்களை விவேகித்துக்கூறின்

குறையொன்றுமில்லை. இதுவே கலையறக்கற்ற மாந்தர்பணியாம். இன்னமுமிங்கு விரித்துரைக்கவேண்டும் விஷயங்களைத் தனிப்புத்தகத்தில் விரித்துரைத்தோம், கண்டு கொள்க. *

11. ஆக இவ்வளவும் நமது நான்முகன் திருவந்தாதி திவ்யார்த்ததீபிகையில் பல பதிப்புகளிலும் ஏறியுள்ளது. இதை மு. ராகவையங்கார் கடாட்சித்து மிக்க அனுதாபங்கொண்டனர். இஃது ஒன்றன்று. இங்ஙனே பலவிஷயங்களிலும் அவர் மருண்டது அப்போதே நம்மால் பிரசுரஞ் செய்யப்பட்டுள்ளது. அன்னவரது கட்டுரைகளை ஆதாரமாகக் காட்டுதல் ஏசுதற்கிடமாமத்தனை. மறைந்துபோனவர்களின் மருள் வெளிவருவதற்கு ஹேதுவாகிறது.

## மூன்றாமதிகாரம்.

— டாக்டர் ராசமாணிக்கனாராராச்சியைச் சிறிது ஆராய்தல் —

12. உயர்திரு. ராசமாணிக்கனாரவர்களின் ஆராய்ச்சித் திறமையை நோக்கின் நமக்கு நினைவுக்கு வந்ததொன்றை முன்னம் வரைகின்றோம். தொண்டரடிப்பொடியாழ்வார் அருளிச்செய்த திருமாலையில் (36)* உழைக்கன்றேபோல நோக்க முடையவர் வலையுள்பட்டு* என்றும், திருமங்கையாழ்வாரது பெரிய திருமொழியில் *மல்கியதோளும் மானுரியதளு முடையவர் தமக்குமோர்பாகம்* என்றும், (அதிலேயே) *இணங்கு திருச்சக்கரத் தெம்பெருமானார்க்கிடம்* என்றும் வருகின்ற பாசுரங்களைக் கண்டவொரு பண்டிதர் தமது ஆராய்ச்சி நூலொன்றில் அப்பாசுரங்களைக் குறிப்பிட்டு எழுதியுள்ளார்—

“ஸ்ரீராமாநுஜர் திருமங்கையாழ்வாருடைய காலத்திற்கும் தொண்டரடிப்பொடியாழ்வார் காலத்திற்கும் முன்னமே தோன்றியவர் என்பது இவற்றால் நிச்சயிக்கப்படும். ஆக, ஸ்ரீராமாநுஜர் காலத்திற்குப்பிறகும் ஆழ்வார்கள் சிலர் அவதரித்ததுண்டு என்பதை நிலைநாட்டினோமானோம்” என்று.

இப்பண்டிதர் இங்ஙனே யெழுதியது எது கொண்டென்றால், ஸ்ரீராமாநுஜரை வைணவர்கள் யாவரும் உடையவரென்றும் எம்பெருமானாரென்றுமே வழங்கி வருவதனால் மேலேயெடுத்துக் காட்டிய பாசுரங்களில் உடையவரென்றும் எம்பெருமானாரென்றும் வருவன அப்பரமாசாரியரையே குறிப்பனவென்றுகொண்டு.

13. இராசமாணிக்கனாருடைய ஆராய்ச்சியும் இத்தகைத்தாவென்று வியந்து கேட்பீர்கள். கேண்மின். “குலசேகராழ்வார்காலம்” என மகுடமிட்டு இப்பெரியார் எழுதிவருகையில் “இவர் தமது திருப்பாடலொன்றில் *ஆடிப்பாடி அரங்கவோவென்றழைக்குந் தொண்டரடிப்பொடியாட நாம் பெறில் கங்கைநீர் குடைந்தாடும் வேட்கை யென்னாவதே* என்ற அடிகளிலே தொண்டரடிப்பொடி யென்ற தொடரை ஆளுதல் இங்குக் குறிப்பிடத்தகும்; இதினின்று தொண்டரடிப்பொடியாழ்வாரைத் தம் திருவுள்ளத்துக்கொண்டு இத்தொடரை வழங்கினரோ இப்பெரியார் என்ற சங்கை தோற்றுகின்றது. இஃதன்றேல், குலசேகரப் பெருமாள் வழங்கிய தொடரை விப்பிரநாராயணரான அப்பெரியார் தம் தாஸ்யநாமமாகத் தரித்தனரெனல் வேண்டும். ஆனால்,......முற்கூறிய கருத்தே ஏற்புடையதாகின்றது” என்றெழுதியுள்ளார். இஃது எவ்வளவு ஆச்சரியமான ஆராய்ச்சியென்று ஆராய்மின். நாம் கீழேகாட்டிய ஒரு பண்டிதருடைய ஆராய்ச்சிக்கும் இதற்கும் சிறிதேனும் வாசியுண்டோ? திருமாலைபாடிய ஆழ்வார் குலசேகராழ்வாரது பாசுரத்தில் தொண்டரடிப்பொடி யென்னும் பிரயோகத்தைக் கடாட்சித்து அத்தொடரின் அழகிலீடுபட்டு அதனைத் தமக்கு வியபதேசமாகக் கொண்டாரென்று நேர்மையான நெறியில் கொள்ளக் குறையென்னோ?

14. மயிலை மாதவதாஸர் ஆழ்வார்கள் திவ்யசரித்திரமெழுதி முடித்தபின் "ஆழ்வார்கள் அவதரித்த காலம்" என மகுடமிட்டுப் புராதன நூல்களிலிருந்து தெரியவருங் காலத்தை விரிவாகத் தெரிவித்து, பிறகு "பெரியாழ்வார் திருமொழியில்" என்று தொடங்கி நவீனர்கள் எழுதியிருப்பவற்றையும் சுருக்கமாக (10 வரிகளில்) தெரிவித்து "ஸம்பிரதாய ஞானமும் சரித்ர ஞானமும் ஒருங்கே வாய்க்கப்பெற்ற ஸ்ரீவைஷ்ணவப் பேரறிஞர்கள் ஆராயவேண்டிய விஷயமிது" என்று மிகப் பொருத்தமாக முடித்திட்டார். உண்மையில் ஸ்ரீவைஷ்ணவப் பேரறிஞர்கள்தாம் இதனை ஆராயவுரியார் என்பதையும், அவர்களுக்கு ஸம்பிரதாய ஞானம் இருக்கவேண்டியது முக்கியம் என்பதையும் மாதவதாஸர் வெட்டவெளிச்சமாகக் காட்டியிருப்பதை நோக்காது தகுதியற்றவர்கள் இவ்வாராய்ச்சியில் தலையிடுவது தகாது தகாது தகாது. மு. ராகவையங்கார் ஸ்ரீவைஷ்ணவகுலத்திற் பிறந்தவராயிருந்தும் ஸம்பிரதாய ஞானம் லவலேசமுமில்லாதவராயிருந்ததனால் தடுமாறி நின்றொழிந்தார். இங்ஙனம் அநதிகாரிகளால் விளையும் க்ஷோபம் வருந்தத்தக்கது.

15. இராசமாணிக்கனார் தமது கட்டுரையை முடித்தபின், "இராமாநுசர்காலத்தினர் எனப்பட்ட திருவரங்கத்தமுதனார் நம்மாழ்வாரை முறைவகுப்பில் இறுதியில் வைக்கிறார்" என்று தொடங்கிச் சில வரிகள் வரைந்துள்ளார். அவை தமது வாக்கியங்களல்லவென்பதையும் விளக்கியுள்ளார். இப்பெரியார் பெரும்பாலும் பக்கந்தோறும் கீழே சிறு கோடிட்டுப் பிறருடைய வாசகங்களையே தாம் ஆதாரமாகக் கொண்டுள்ளமையைக் காட்டியுள்ளார். ஸ்ரீபாஷ்யகாரர் முதலான நம்பூருவாசாரியர்கள் தூர்வாதிகளின் வாதத்தைக் கண்டிக்குமிடத்து "तत् अन्धस्य जात्यन्धेन यष्टिर्दीयते—தத் அந்தஸ்ய ஜாத்யந்தேந யஷ்டிர்தீயதே." என்றனர். இடையில் குருடனானவனுக்குப் பிறவிக் குருடன் தடிகொடுத்து வழி நடத்தினவாற்றைக் காட்டினபடி. அநதிகாரிகள் பலர் கூடி எத்தனை யெழுதினாலும் அத்தனையும் தீயினில் தூசாகுமென்பதை இந்த நமது நூல் நிலைநாட்டும். இக்காலவாராய்ச்சியைப் பற்றி ஏற்கெனவே நாம் வெளியிட்டிருந்த வியாஸத்தை இந்நூலில் சேர்த்து வெளியிடுவதாகத் தெரிவித்திருந்தபடி அதை இங்கு வெளியிட்டுவிட்டுப் பிறகு இராசமாணிக்கனார்க்கு நற்றெளிவு நல்குவோம். .... ... ... ... *

— நான்காமதிகாரம் —

## ஆழ்வார்களின் கால ஆராய்ச்சியின் மேலாராய்ச்சி.

(இது நாம் முப்பது வருடங்களுக்கு முன்பெழுதி வெளியிட்டிருந்தது.)

16. ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் சிறந்த மெய்யடியார்களாகக் கொண்டாடப்படுகின்ற 'பொய்கையார் பூதத்தார் பேயார் புகழ் மழிசை யையன் அருள்மாறன் சேரலர்கோன் துய்யபட்டநாதன் அன்பர்தாள் தூளி நற்பாணன் நன்கலியன்' என்னும் ஆழ்வார்கள் பிறந்து வளர்ந்த காலம் எது? என்பதைப் பலர் ஆராயப் புகுந்து பலபல வகையாக வரைந்திருக்கின்றார்களென்பது இவ்வுலகில் பிரசித்தமானதே. இவ்வாராய்ச்சி விஷயமாகச் சிலருடைய கட்டுரைகள் அச்சிடப் பெறாது எழுத்தளவிலே நிற்கின்றன. சில வெளிவந்துள்ளன. இத்தகைய புத்தகங்களை நாம் பார்த்திருக்கின்றோம். ஒவ்வொருவர் எழுதியிருப்பதும் மிக விசித்திரமாகவே யுள்ளது. ஆழ்வார்களினுடைய வரிசைக் கிரமம் பூருவாசாரியர்களால் அநுஸந்திக்கப்பட்ட விதம் மணவாள மாமுனிகளால் உபதேச ரத்தினமாலையில் "ஈதிவர்

தோற்றத் தடைவா மிங்கு" என்று காட்டப்பட்டிரா நின்றது. புதிய ஆராய்ச்சியாளர்கள் இவ்வரிசைக் கிரமத்தையும் மாறுபடக் கூறுகின்றனர். ஆழ்வார்களெல்லார்க்கும் பிந்தியே நம்மாழ்வார் அவதரித்தாரென்றும், மதுரகவிகள் நம்மாழ்வார்க்கும் ஆசாரியரே யல்லது சிஷ்யரல்லர் என்றும், ஸ்ரீராமாநுஜரென்கிற உடையவருடைய காலத்திற்குப் பிறகும் சில ஆழ்வார்கள் தோன்றினர் என்றும் இப்புடைகளிலே அவரவர்கள் மனம்போன போக்கிலும் கைபோன போக்கிலும் எழுதிவைத்திருப்பவை மிகவும் விசித்திரமானவை.

17. சிலர், தாங்கள் மிகவும் பிராமாணிகமாக ஆராய்ச்சி செய்வதாகவும், தகுந்த சான்றுகள் காட்டுவதாகவும் கூறி, கி. பி. நாலைந்து நூற்றுண்டுகட்குப் பிறகே ஆழ்வார்கள் அவதரிக்க ஆரம்பித்தார்களென்றும், இற்றைக்கு ஏறக்குறைய ஆயிரத்தைந்நூறு ஆண்டுகட்கு முன் ஒரு ஆழ்வாரும் இருந்ததில்லை யென்றும் வரைகின்றூர்கள். ஆங்காங்குச் சில சிலாசாசனங்களும் செப்பேடுகளும் மற்றுஞ் சில ஆதாரங்களும் தங்கட்குத் துணைபுரிகின்றனவாகத் தெரிவிக்கின்றூர்கள்.

18. இருளும் மருளுமே வடிவெடுத்த இவர்களது கட்டுரைகளை நேரிய நெறியிலே களைந்தொழிக்க வேணுமென்று பல பெரியார்கள் அடியேனுக்குப் பலகாலும் தெரிவித்ததுண்டு. ஆனாலும் இந்த மறுப்புத் துறையிலிறங்க எனது மனம் சிலகாலம் இசையவில்லை; ஏனெனின், ஆழ்வார்கள் எக்காலத்தில் அவதரித்தவர்களாயினுமாகுக; பல்லாயிரம் வருடங்கட்கு முற்பட்டவர்கள் என்கிற காரணத்தினுலேயே ஒரு ஏற்றமும், சில நூற்றுண்டுகட்குள்ளாகவே தோன்றியவர்கள் என்கிற காரணத்தினுல் ஒரு தாழ்வும் எண்ணுவாரில்லை. "புராணமித்யேவ ந ஸாது ஸர்வம் நசாபி காவ்யம் நவமித்யவத்யம்" என்றூர் காளிதாஸ மகாகவி. உப்புக் கிணறுனதொன்று நாலாயிரமாண்டுகட்கு முற்பட்டதெனினும் அதில் தண்ணீரருந்தார்கள்; அமுதக் கிணறு இன்று நேற்றே தோன்றிற்றெனினும் அதனை ஆதரிக்கப் பின்வாங்குவார் ஒருவருமிருக்ககில்லார். வீடு பற்றுக்களுக்குக் குற்றமும் நற்றமும் காரணமேயல்லது பழமையும் புதுமையும் காரணமல்லவென்பது விவேகிகளுக்குத் தெரிவரிதன்று.

19. ஆனல் சிலர் சொல்லக்கூடும்; நூதனமாக அமைக்கப்படுகின்ற ஆலயங்களுக்குப் பெருமையில்லாமையும், புராதனங்களென்று புகலப்படுகின்ற ஆலயங்களுக்கே பெருமையிருப்பதும் காண்கின்றேம்; அதுபோல, திவ்வியப் பிரபந்தங்கட்கும் புராதனமென்கிற காரணத்தினுல் பெருமையுண்டாக வேணுமென்று கருதியே சிலர் ஆழ்வார்களின் காலத்தை வெகு பண்டைக் காலமென்று காட்டப் புகுந்தார்கள் என்று.

20. இந்த வாதமே பெரும்பாலும் நமது செவியில் விழுகின்றது. இதற்கு நாம் கூறும் விடையை நடுநிலைமையி லுள்ளவர்கள் குறிக்கொள்ளவேணும். ஆழ்வார்களுக்கும் அவர்களது திவ்வியப் பிரபந்தங்களுக்கும் பெருமை ஏற்பட்டிராத காலம் யாருடைய புத்திக்காவது புலப்படுகின்றதா? என்று பார்க்கவேணும். வடமொழிப் புலவர்களாகப் பிரசித்தி பெற்றிருந்த ஸ்ரீமந்நாதமுனிகள் ஆளவந்தார் ஸ்ரீராமாநுஜர் முதலான பூருவாசாரியர்கள் தாங்கள் உபநிஷத்துக்கள் முதலியவற்றுல் போதுபோக்குவதைக் காட்டிலும் திவ்வியப் பிரபந்தங்களையே ஓவாத வூணாகக் கொண்டிருந்தார்களென்பது ஒருவராலும் அபலாபம் செய்ய முடியாத விஷயம். உடையவர் காலம் இற்றைக்குச் சற்று ஏறக்குறைய ஆயிரமாண்டு ஆகிறது. அப்போது எழுந்தருளியிருந்தவரான ஸ்ரீபட்டர் [கூரத்தாழ்வான் திருக்குமாரர்]

தாம் அருளிச்செய்த ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் முதல் சதகத்தில் (41.) "பராங்குசாத்யா: ப்ரதமே புமாம்ஸ: நிஷேதிவாம்ஸோ தச மாம் தயேரந்'' என்றருளியுள்ளார். இதனால், அக்காலத்திலேயே ஆழ்வார்கள் பதின்மர்க்கும் ஸ்ரீரங்கம் கோயிலில் விக்ரஹப் பிரதிஷ்டை நடந்து முடிந்திருக்கின்றதென்பது ஸ்பஷ்டமாகத் தெரியவருகின்றது. இப்போது ஒவ்வொரு ஆழ்வாருக்கும் தனித்தனி ஆலயம் காணப்படுவது போலன்றி மிக முற்காலத்தில் ஆழ்வார்கள் பதின்மரும் ஓரிடத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டிருந்தார்களென்பது மேலெடுத்துக் காட்டிய சுலோகத்தினால் நன்கு விளங்குகின்றது. இதைச் சிறிது விவரிப்போம். ஸ்ரீரங்கதேவாலயத்திற்குள்ளிருக்கின்ற சந்திர புஷ்கரிணியை இரண்டு சுலோகங்களினால் துதித்து அதன் பிறகு (41) *பூர்வேண தாம்* என்கிற சுலோகம் இட்டிருப்பது கவனிக்கத்தக்கது. சந்திர புஷ்கரிணியின் கீழ்த் திசைப்பக்கமாக ஸ்ரீவாஸுதேவப் பெருமாள் ஸன்னிதியுள்ளது. அவ்விடத்தில்தான் ஆழ்வார்கள் பதின்மரும் [மூல விக்ரஹமாக] வீற்றிருந்த திருக் கோலங்கொண்டு ஸேவை ஸாதிக்கின்றனர். அவர்களைத் துதித்தாராயிற்று. இந்த ஸந்நிவேசம் ஸ்ரீரங்கத்தில் நாளைக்கும் ப்ரத்யக்ஷ லக்ஷ்யம். இதனால், ஆயிரமாண்டுகட்கு மிக முந்தியே ஆழ்வார்கட்கு விக்ரஹ ப்ரதிஷ்டை நடைபெற்றிருந்தமை விளங்கிற்று. புராதனர்களுக்கன்றி நவீனர்களுக்கு விக்ரஹ ப்ரதிஷ்டை ஏற்படாது.

21. இனி ஆழ்வார்களுடைய திவ்வியப் பிரபந்தங்களுக்குத் தேவாலயங்களில் பாராயணம் எக்காலத்தில் ஏற்பட்டதென்று பார்ப்போம். கம்பரென்னும் கவிசக்ரவர்த்தியானவர் உடையவர் காலத்திற்கு மிக முந்தியவர் என்று சிலரும் பிந்தியவரென்று பலரும் கூறுவர்; அது எப்படியாயினுமாகுக. அவர் இயற்றிய சடகோபரந்தாதியில்,

"அந்தமிலா மறையாயிரத் தாழ்ந்த வரும்பொருளைச்
சேந்தமிழாகத் திருத்திலனேல் நிலத்தேவர்களும்
தந்தம் விழாவு மழகுமேன்னும் தமிழார்கவியின்
பந்தம் விழாவோழுகுங் குருகூர்வந்த பண்ணவனே.''

என்று ஒரு பாசுரம் பாடியுள்ளார். ஆழ்வாருளிச்செயல் அவதரியா திருந்தால் அந்தணர்களின் கதி என்னுகுமென்றும், ஆலயங்களின் கதிதான் என்னுகுமென்றும் உருகிப் பேசுகின்றாரில். கம்பர் தாம் கட்கூடாகக் கண்ட விஷயத்தையன்றோ வரைந்துள்ளார். அக்காலத்து ஸ்ரீவைஷ்ணவ பிராமணர்கள் ஆழ்வாருளிச் செயல்கொண்டே பெருமை பெற்றிருந்ததும், தேவாலய உத்ஸவங்கள் தமிழ் வேத பாராயணத்தினாலேயே பெருமை பொலிய நின்றதுமாகிய உண்மைகளை நிஷ்பக்ஷபாதமாகக் கம்பர் காட்டியிருக்கின்றாராதலால், வெகு காலத்திற்கு முந்தியே ஆழ்வார்களுடைய திவ்யப்ரபந்தப் பெருமை உலகிற் பொலிந்து வந்ததென்பது தமிழுலகில் மறுக்கத்தகாத விஷயமாகும்.

22. திவ்வியப் பிரபந்தங்கட்குத் தமிழ்வேத மென்னும்சிறப்புப் பெயர் கம்பர் காலத்திலேயே நிகழ்ந்து வந்ததென்றால், அக்கம்பருக்குப் பிற்பட்டவர்களான சில ஸ்ரீவைஷ்ணவாசாரியர்கள் ஆழ்வார்கட்கும் அருளிச்செயல்கட்கும் ஒரு பெருமையை ஸாதிக்கவேண்டி புதிய காலத்தைப் பழைய காலமாக்கி யெழுதி வைத்திட்டார்கள் என்று வாதிப்பது சிறிதேனும் பொருத்தமுடைத்தோ? கேவலம் பொருமைப்பேச்சேயாகும்.

23. ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் ஸ்ரீமந்நாத முனிகட்கு முன்ஒரு ஆசாரியரும்வீறு பெற்று விளங்கினராக நமக்குப் புலப்படவில்லை. நம்மாழ்வார்க்கும் நாதமுனிகட்கும் இடையே

வெகுகாலம் சென்றிருக்கின்றதென்பது ஸ்ரீ வைஷ்ணவாசாரியர்களின் கொள்கை. வேதாந்ததேசிகரும் தாம் இயற்றியருளின குருபரம்பரா ஸாரமென்னும் ரஹஸ்ய நூலில் நாதமுனிகள் நம்மாழ்வாரை யோகதசையிலே ஸாக்ஷாத்கரித்து அருள் பெற்றதாகவே அருளிச்செய்துள்ளார். இதெல்லாம் பொய்யாக எழுதிவைத்தவை என்பது நவீன ஆராய்ச்சியாளர்களின் ஆதாரமற்ற வாதம். இந்த நவீனர்கள் செல்லும் வழியிலேயே நாமுஞ் சென்று பேசுவோம் சிறிது.

24. கம்பர் காலமும் ஸ்ரீமந்நாதமுனிகள் காலமும் ஒன்றேயென்று ஒருவாதமுள்ளதன்றோ? நாதமுனிகள் காலத்தில்தான் திவ்வியப் பிரபந்தங்களின் பிரசாரம் பிரபலப்பட்டதென்பது யாவருமிசைந்ததொன்று. நாதமுனிகளின் காலத்திற்குச் சில நூற்றாண்டுகட்கு முந்தியே பொய்கையார் முதலிய பதின்மரும் அவதரித்தார்கள் என்றும், நாலைந்து ஆயிரமாண்டுகட்கு முன் அவர்கள் அவதரித்ததாகக் கூறுதல் பொருந்ாதென்றும் போராடுகின்ற புதுமக்கள், திவ்வியப் பிரபந்தங்களில் காணும் சில அரசர்களின் செய்திகளைப் பிடித்துக்கொண்டு, சில சாசனங்களின் உதவியையுங் கொண்டு தங்களுடைய ஆராய்ச்சியை ஆதாரமுடையதாகச் செய்யப் பார்க்கின்றனர். இஃது ஒருவகையாலும் பயன்படாது.

25. ஆதியந்த மற்றதாகப் பெரும்பாலோரால் இசையப்பட்டுள்ள வடமொழி வேதத்திலும் காண்கின்ற பல கதைகளைப் பற்றிக்கொண்டால் அந்த வேதமும் கி. பி. இத்தனையாவது நூற்றாண்டில் தோன்றியது என்று வாதிக்க இடமேற்படும் போலும், தமக்குத் தந்தை தாயர் இன்னார் என்பதை ருஜுவான பிரமாணத்தினால் திண்ணமாகக் கண்டறிந்து நிஷ்கர்ஷிக்கமாட்டாதவர்கள் பலவகைகளாலும் அதீந்திரியமான விஷயங்களை அனுமானங்களாலும் குயுக்திகளாலும் நிர்ணயிக்கப் புகுவது ஸாஹஸமான காரியமாகும். இவர்கள் காட்டுகிற சாசனங்கள் முதலியன எவ்வளவுதூரம் நம்பத்தகுந்தவை யென்பதும் அவற்றில் இவர்களுடைய மருள்மயக்கங்கள் எப்படிப்பட்டவை யென்பதும் இவர்கள் தாங்களே ஒருவரை யொருவர் மறுத்து எழுதும் கட்டுரைகளினால் நன்கு அறியத்தக்கன. அதையும் சிறிது ஈண்டு விவரிக்கின்றோம். இவ்விஷயம் மிக முக்கியமாகக் கவனிக்கத்தக்கது.

26. “தஞ்சாவூர்—கரந்தைத் தமிழ்ச் சங்கம் வெள்ளி விழா நினைவு மலர்” என்று ஸ்ரீமான் த. வே. உமாமகேசுவரனவர்கள் (சங்கத் தலைவர்.) ஒரு புத்தகம் எழுதினார். அதில், திரு. கே. ஜி. சேஷையர் B. A. B. L. அவர்கள் (முன் உயர் நீதிமன்ற நீதிபதி. திருவனந்தபுரம்) எழுதிய கட்டுரையொன்று நம்மாழ்வார் காலவாராய்ச்சி. இதில் இப்பெரியார், ஸ்ரீமான் கோபிநாதராயர் என்பாரொருவர் ‘ஸ்ரீவைஷ்ணவரின் சரித்திரம்’ என்ற நூல் ஆங்கிலத்தில் எழுதியிருப்பதாகவும், அதில் ஆனைமலைச் சிலாசாசனமொன்றை ஆதாரமாகக் கொண்டு நம்மாழ்வார் கி. பி. ஒன்பதாவது நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தனராகக் காட்டப்பட்டிருப்பதாகவும் கூறி, அதற்கு மறுப்பு எழுதி வருகையில் அந்த கோபிநாதராயரவர்கள் சிலாசாசனத்திலுள்ள வாசகங்களின் பொருளை உள்ளபடி உணரகில்லாது மருண்டு தவறாக எழுதிவிட்டாரென்று நிரூபணம் செய்திருக்கின்றார். *மயர்வற மதிநலமருளப் பெற்றவராகத் தம்மை நினைத்துக்கொண்டு “நம்மாழ்வார் காலம் கி. பி. ஆறாவது நூற்றாண்டின் முற்பகுதியென்று கொள்ளுதல் தகும்” என்று நிகமனஞ் செய்கிறார் அப்பெரியார். திருவாளர் சிவஞானமூர்த்தியார் என்கிற மற்றொரு பெரியார் அந்த

சேஷையரவர்களது கட்டுரையையும் மறுத்து நம்மாழ்வார் காலத்தை இன்னும் இரண்டு மூன்று நூற்றாண்டுகட்கு முன்னே தள்ளலாம் என்றெழுதுகின்றார்.

27. "முள்ளைக் கொண்டே முள்ளைக் களைவது" என்னும் பழமொழியும், வத்ஸாஸுரனைக் கொண்டு கபித்தாஸுரனை மோதி இருவரையும் தொலைத்த கண்ணபிரானது சரிதையும் நமக்கு நினைவுக்கு வருகின்றன. இவர்களே யன்றோ பரஸ்பரம் வெட்டி மடிகின்றனர்.

28. இருள் தயக்கு மயக்கு மறப்பென்கிறவற்றுக் கெல்லாம் கொள்கலமாகிய நம் போலியர் தகர்க்குமளவிலே நிற்பதன்று உண்மைப் பொருள். ஆயினும் இவர்கள் சித்தாந்தம் செய்கிறபடியே ஆழ்வார்கள் மிகவும் பிற்காலத்தவர்களென்றே வைத்துக் கொள்வோம். கி. பி. ஆறுவது நூற்றாண்டிலிருந்தவர் நம்மாழ்வார் என்கிறார்கள். பதினாறுவது நூற்றாண்டிலென்றும் வைத்துக்கொள்வோம். நிகழும் நூற்றாண்டில் என்றும் வைத்துக் கொள்வோம். அருமருந்தன்ன திவ்வியப் பிரபந்தங்கள் "தொண்டர்க்கு அமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்" என்றபடி அநுபவ ரஸிகர்களுக்குத் தேனும் பாலும் நெய்யும் கன்னலு மமுதுமாக அமைந்திருக்கின்றமை அபலபிக்க முடியாத விஷயம். பதினாயிர மாண்டுகட்கு முற்பட்டவை யென்று வேறு சில நூற்கள் கிடைத்தாலும் அவற்றை ஒரு பொருளாக மதிப்பாரில்லை. திருவாய்மொழியின் ஈற்றுப் பாசுரத்தின் வியாக்கியானத்திலே (ஈடுமுப்பத் தாறாயிரப்படியில்) நம்பிள்ளை அருளியுள்ள ஒரு அற்புதமான ஸ்ரீஸூக்தி காண்மின்:

> "ஆழ்வார்க்குப் பின்பு நூறாயிரம் கவிகள் போருமுண்டாய்த்து: அவர்கள் கவிகளோடு கடலோசையோடு வாசியற்று அவற்றைவிட்டு இவற்றைப் பற்றித் துவளுகைக்கடி இவருடைய பக்தியபிநிவேசம் வழிந்து புறப்பட்ட சொல்லாகையிறே."

என்கிற இந்த ஸ்ரீஸூக்திகள் விலையுயர்ந்தவை.

29. இங்ஙனமாக நம் பூருவாசாரியர்கள் விசேஷித்து ஈடுபட்டிருத்தற்கு இலக்கான திவ்வியப் பிரபந்தங்கள் உபய விபூதிக்கும் பரம போக்யமாக அமைந்திருக்கு மழகு வேறு எந்த நூலுக்கும் அமையமாட்டாதது. இப்படிப்பட்ட திவ்வியப் பிரபந்தங்களும் இவற்றுக்கு வக்தாக்களான ஆழ்வார்களும் என்றைக்கு அவதரித்தாலென்ன? என்று விட்டிடுவர் சிலர். நாம் உண்மையைப் பலபடிசளாலும் விவரிப்போம்.

30. ஆழ்வார்களுடைய அவதாரம் எற்செனவே மஹர்ஷிகளாலும் புராணங்களிலே காட்டப்பட்டிரா நின்றது. வடமொழிப் புராணங்களில் ஸ்ரீபாகவத மென்பது மிகவும் ப்ரஸித்தமாகவும் பெருமை பெற்றதாகவும் விளங்குகின்றது. அதில் பதினோராவதி ஸ்கந்தத்தில் ஐந்தாவது அத்தியாயத்தில் 38, முதலான ச்லோகங்கள் ஸ்மார்த்தர் மாத்வர் வைஷ்ணவர் சைவர் என்னும் வாசியின்றி ஸகல ஜனங்களாலும் நிர்விவாதமாகப் பாராயணம் செய்யப்பட்டு வருகின்றன; அந்த ச்லோகங்களாவன:—

> "க்ருதாதிஷு நரா ராஜந்! கலாவிச்சந்தி ஸம்பவம்
> கலௌ கலு பவிஷ்யந்தி நாராயண பராயணா:
> க்வசித் க்வசித் மஹாபாக த்ரமிடேஷு ச பூரிச:,
> தாம்ரபர்ணீ நதீ யத்ர க்ருதமாலா பயஸ்விநீ
> காவேரீ ச மஹாபுண்யா ப்ரதீசீ ஸுரவர்த்மகா.
> யே பிபந்தி ஜலம் தாஸாம் மநுஜா மநுஜேச்வர!
> தேஷாம் நாராயணே பக்திர் பூயஸீ நிருபத்ரவா"

என்பனவாம்.

31. கலியுகத்திலும் ஸ்ரீமந்நாராயணனையே உபாயோபேயமாகக் கொண்ட பரமபக்தர்கள் சிற்சில விடங்களில் அவதரிக்கப் போகிறார்களென்றும் தமிழ் நாடுகளிலே அதாவது) தாமிரபர்ணி, க்ருதமாலை, பாலாறு, காவேரி முதலிய புண்ணிய நதிகள் பெருகுமிடங்களிலே விசேஷித்து பக்தர்கள் அவதரிக்கப் போகிறார்களென்றும் இந்த ச்லோகங்களில் கூறப்பட்டுள்ளது. மேற்கூறிய புண்ணிய நதிகளின் கரைகளிலே ஆழ்வார்கள் பதின்மர்தாம் அவதரித்துள்ளார்கள் என்பது கையிலங்கு நெல்லிக்கனியாம். முதலாழ்வார்களும் திருமழிசைப்பிரானும் பாலாற்றருகே அவதரித்தவர்கள். நம்மாழ்வாரும் மதுரகவிகளும் தாமிரபர்ணிக்கரையில் உதித்தவர்கள். பெரியாழ்வாரும் ஆண்டாளும் க்ருதமாலையருகில் அவதரித்தவர்கள். தொண்டரடிப்பொடியாழ்வார் திருப்பாணாழ்வார் திருமங்கையாழ்வார் மூவரும் காவேரிக் கரையில் தோன்றியவர்கள். ப்ரதீசீ என்பது மேலாறு; அது குலசேராழ்வாரவதாரஸ்தலத்தருகே பெருகுவதென்பர்.

32. இந்த ஸ்ரீபாகவத ச்லோகங்கள் இன்று நாமெடுத்துக்காட்டுவனவல்ல. ஆசார்யஹ்ருதயத்தில் “க்வசித் க்வசித்தென்று இவராவிர்ப்பாவம் கலியுக்கெடும்போலே ஸூசிதம்” என்றும், வேதாந்தவாசிரியர் பணித்த குருபரம்பராஸாரத்தில் “அகஸ்த்ய ஸேவிதமான தேசத்திலே அனேக தேசிகாபதேசத்தாலேஅவதரித்தருளினான்; இத்தைக்கணிசித்து *கலௌகலு பவிஷ்யந்தி......தாம்ர பர்ணீ நதீ யத்ர........என்று மஹர்ஷியருளிச் செய்தான்” என்றுமுள்ள ஸ்ரீஸூக்திகள் காணத்தக்கன. இங்ஙனே பேசிவைத்த மஹர்ஷியின் காலத்தை ஆராய்ந்த பிறகன்றோ ஆழ்வார்களின் காலத்தை ஆராயவேண்டும்.

33. இங்ஙனே மஹா முனிவர்களின் அகக்கண்ணுக்கு இலக்காகி நின்ற பேராசிரியர்கள் எக்காலத்தில் அவதரித்தவர்களானாலும் அவர்களது ஒப்புயர்வற்ற பெருமைக்கும் அவர்களது திவ்ய ஸ்ரீஸூக்திகளின் மஹிமைக்கும் ஒருவராலும் ஒருநாளும் ஒருகுறையும் சொல்லப்போகாதென்பது திண்ணம்.

34. ஸ்ரீமத் வேதாந்த தேசிகர் மிகச் சிறந்ததொரு வார்த்தையை அருளியுள்ளார். அதாவது, “ததாத்வே நூதநம் ஸர்வம் ஆயத்யாஞ்ச புராதநம்” என்பதாம். எதுவுமே தோன்றும்போது புதிதாயும் நாளடைவில் பழையதாயும் ஆய்விடுமென்பது இதன் கருத்து. இந்த ரீதியிலே நோக்குமவர்கள் காலவிசாரத்தில் சிறிதும் கைவைக்கமாட்டார்கள். (தொடரும்.)

35. முற்குறித்த திருவாளர் சேஷையரவர்கள் தமது கட்டுரையில் எழுதியுள்ள மற்றுஞ்சில விஷயங்களைப்பற்றியும் தத்துவமுணர்த்துவோமிங்கு.

> “நம்மாழ்வார் காலத்தில் சைவவைணவ சம்வாதமில்லை யென்பதற்குத் திருவாய்மொழியே சான்று பகரும். அக்காலத்தில் வைணவரும் திருநீறிட்டு வந்தார் போலும்; “கரிய மேனிமிசை வெளிய நீறு சிறிதேயிடும்” (4–5–6.) என்றும் “நீறு செவ்வேயிடக் காணில் நெடுமாலடியாரென்றோடும்” (4–4–7) என்றும் நம்மாழ்வார் கூறியிருக்கின்றார்.” என்று ஐயரவர்கள் வரைந்துள்ளார்.

நமது திருவாய்மொழி திவ்யார்த்த தீபிகை யுரையை, அல்லது பூருவாசாரியர்களின் வியாக்கியானத்தைச் சிறிதேனும் நோக்கி யிருப்பரேல் இங்ஙனம் எழுதத் துணிந்திரார்.

எமது தீபிகையுரை வாக்கியங்களை அப்படியே யிங்கெடுத்துக் காட்டுகின்றோம். “[கரியமேனி மிசை வெளிய நீறு சிறிதேயிடும்] இதற்குப் பலவகையாகப் பொருள் பணிப்பர்கள். மேலே *பெரிய கோலத் தடங்கண்ணன்* என்று திருக்கண்களின் ப்ரஸ்தாவ

மிருக்கையாலே கரியமேனிமிசை என்றது—திருக்கண்களில் கருவிழியினுடைய கறுத்த நிறத்தால் வந்த அழகுக்குமேலே என்றபடி. வெளியநீறு சிறிதேயிடும்—அஞ்சன சூர்ணத்தை மங்கலமாகச் சிறிது அணிந்து கொள்ளுகிற என்றபடி. 'வெளியம்—அஞ்சனம்' என்று பன்னீராயிரம். வேதாந்த தேசிகன் தாதபர்ய ரத்நாவளியில் இப்பாசுரத்திற்காக * கர்ப்பூரா லேப சோபே * என்றருளிச் செய்திருக்கக் காண்கையாலே, சாமளமான திருமேனியிலே பச்சைக்கருப்பூர தூளியை அணிந்து கொள்ளுகிற என்றும் பொருள் கொள்ள லாம். வெளிய என்றது வெள்ளிய என்றபடி. கரி அம்மேனிமிசை வெளிய, நீறு சிறிதேயிடும் என்று கொண்டு, கரி–குவலயாபீட யானையானது, அம்மேனிமிசை–கண்ணபிரானது அந்தத் திருமேனியிலே, வெளிய–சிறிப்பாய்ந்தவளவிலே, சிறிதே–க்ஷணகாலத்திற்குள், நீறு இடும்—அந்த யானையைப் பொடிபடுத்தின, என்றுமொரு தமிழன்."

36. இனி, * நீறு செவ்வேயிடக்காணில் * என்றவிடத்தும் எம்முடைய தீபிகையுரை வாக்கியங்களை யெடுத்துக் காட்டுகின்றோம்;—

"நீறு செவ்வேயிடக்காணில் நெடுமாலடியாரென்றோடும்=திருமாலடியார்களுக்கு பஸ்ம தாரணம் சாஸ்த்ர நிஷித்தம் என்னுமிடம் ஆழ்வாரறியாததன்று; நீறு இடுமவர்களை நெடு மாலடியாரென்று ப்ரதிபத்திபண்ண ப்ரஸக்தியில்லை; அப்படியிருக்க இங்கு அருளிச் செய்வ தற்குக் கருத்து என்னென்னில்; இங்கே ஆறுயிரப்படி யருளிச் செயல்='த்ரவ்யம் ஏதேனு மாகிலும் ஊர்த்த்வமாக இடக்காணில் நெடுமாலடியாரென்றோடும்' என்பதாம். இதனை அடியொற்றியே மற்ற வியாக்யானங்களுமுள்ளன. பஸ்மதாரணம் பண்ணினவர்களே யாயினும் அந்த பஸ்மத்தைக் குறுக்கே பூசாதே நெடுக இட்டால் 'ஊர்த்வ புண்ட்ரதாரி களிவர்கள்' என்று அவ்வளவுக்காக ப்ரதிபத்தி பண்ணுமென்றபடி. ஸ்ரீமத் வேதாந்த தேசி கன் அருளிச்செய்த ஸச்சரித்ரரக்ஷையில் ஊர்த்வ புண்ட்ரதாரண விதிப்பகுதியில் * நநு ஸமஸ்தபாகவத ஸார்த்த ஸங்க்ருஹீத...... * என்று தொடங்கி அருளிச் செய்யப்பட்டிருக் கும் விஷயங்களும் குறிக்கொள்ளத் தக்கவை. (அவற்றின் சுருக்கம் வருமாறு;) ஸகல பாகவதர்களாலும் சிரமேற்கொள்ளப்பட்ட தமிழ் வேதமாகிய திருவாய்மொழியில் 'நீறு செவ்வேயிடக்காணில் நெடுமாலடியா ரென்றோடும்.' என்கிற பாசுரத்தினால் பகவத் பக்தர் களுக்கு பஸ்மதாரணம் லக்ஷணம் போல் தெரிவிக்கப்பட்டிருக்கிறதே இது எப்படி? என்று க்ஷேபித்துக் கொண்டு சில ஸமாதானங்கள் அருளிச் செய்யப்பட்டுள்ளன; கீழே நாம் காட்டிய வகையிலே ஒரு ஸமாதானம். மற்றொரு ஸமாதானமாவது–நீறு என்னுஞ் சொல் பஸ்மத்தையே சொல்லும் என்கிற நியதியில்லை; ஆழ்வார்தாமே 'மாயன் தமரடி நீறு கொண்டு அணிய முயலில்' என்று வேறோரிடத்தில் அருளிச் செய்திருக்கையாலே பாகவதர் களின் திருவடிப் பொடியையும் பொருளாகக் கொள்ளலாமென்பதாம்.

37. பஸ்மதாரணம் பண்ணுகிறவர்கள் குறுக்கே பூசக் காண்பதொழிய ஊர்த்துவ மாக இடுவது முண்டோவென்று சிலர் முற்காலத்திலேயே சங்கித்தார்கள்; அதற்குப் பரி ஹாரமும் நம்பிள்ளை யருளிச் செய்தார். ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்;—'அவர்கள் செவ்வே யிடுவர்களோ வென்னில், அதுவுமன்றிக்கே இதுவுமன்றிக்கே மசகப்ராயராயிருப்பவர்கள் தரிப்பர்களிறே.' (அதாவது) இரண்டுங் கெட்டான் என்று சொல்லப்படுகிற சிலர் பஸ்மத் தையே ஊர்த்வ புண்ட்ரமாகவும் தரிப்பர்கள் என்றபடி. மேற்குறித்த இரண்டு விஷயங் களிலும் இன்று நாம் புதிதாக எழுதவேண்டியது ஒன்றுமில்லை யென்று நிற்கின்றோம்.

38. நம்மாழ்வார் தமது திருநெற்றியில் விஷ்ணு பாதாகாரமான திருமண்காப்பையே தாம் அணிந்து கொண்டிருந்தமையைத் திருவாய்மொழியிலேயே (1–9–10) *நெற்றியுள் நின்று என்னை யாளும் நிறை மலர்ப்பாதங்கள் சூடி* என்கிற பாசுரத்தினால் ஐயந்திரிபறக்காட்டி யிருக்க, அபார்த்தங்களுக்கு அவகாச லேசமுமில்லை யென்றுணர்க. சிவபிரான் முதலான தெய்வங்களுங்கூட விஷ்ணு பாதாகாரமான திவ்யோர்த்வ புண்ட்ரத்தையே அணிந்து கொண்டிருந்ததாக நம்மாழ்வார் அப்பாசுரத்தில் காட்டியிருக்கின்றாரென்பதையும் அறிவுடையார் கண்டு தெளிக. ... ... ... *

39. ஆக இவ்வளவும் பலவாண்டுகட்கு முன்பு நாம் எழுதி வெளியிட்டிருந்தது. இந்த ஸங்க்ரஹம் போதாமையாலே இப்போது சிறிது விரிததுரைப்போம். ... *

## — ஐந்தாவது அதிகாரம் —

### திரு. ராசமாணிக்கனார்க்கு நல்கும் நற்றெளிவு.

40. ஸ்ரீ வைஷ்ணவர்களல்லாத அந்தணர்கள் வடமொழிவேதத்தோடு நின்றார்கள். ஸ்ரீ வைஷ்ணவ ப்ராஹ்மணர்கள் [ஸ்ரீமந்நாதமுனிகள் தொடங்கி நிகழும் குரு பரம்பரையினர்கள்] உபயவேதாந்த ப்ரவர்த்தகர்களென்னும் விருதுவஹித்து உபயவேதங்களையுங் கொண்டு போது போக்கி வருகின்றார்கள். ஆயிரமாண்டுகட்கு முன்பு வாழ்ந்த ஸ்ரீபராசர பட்டரென்னு மாசிரியர் "स्वं संस्कृतद्राविडवेदसूक्तैः—ஸ்வம் ஸம்ஸ்க்ருத த்ராவிட வேத ஸூக்தை:" [ஸ்ரீரங்கராஜஸ்தவம்: 1—16] என்றருளிச் செய்தபடி வடமொழி தென்மொழி வேதங்களினால் விளங்குபவன் எம்பெருமான். இவ்வுபய வேதங்களுக்குமுள்ள ஒற்றுமையைப் பூருவாசாரியர்கள் பலவாறு பேசியுள்ளார்கள். ஆசார்ய ஹ்ருதயத்திலிருந்து சிலநுட்பங்களைத் தெரிவிப்போமிங்கு.

41. "வேதநூலிருந் தமிழ்நூல், ஆஜ்ஞை ஆணை, வசையில் ஏதமில், சுருதி செவிக்கினிய, ஓதுகின்றதுண்மை பொய்யில் பாடல், பண்டை நிற்கும் முந்தை யழிவில்லா வென்னும் லக்ஷணங்களொக்கும். (45) சொல்லப்பட்டவென்ற விதில் கர்த்ருத்வம் ஸ்ம்ருதி அத்தை ஸ்வயம்பூ படைத்தானென்றதுபோலே (46)......படைத்தான் கவியென்ற போதே இதுவும் யதாபூர்வகல்பனமாமே." (48) இம்மூன்று சூர்ணைகள் முக்கியம்.

இந்த சூர்ணைகளின் ஸாரமான கருத்து வருமாறு:—

[வேத நூல்–இருந்தமிழ் நூல்.] *வேதநூற் பிராயம் நூறு* என்ற திருமாலைப் பாசுரம் வடமொழி வேத சாஸ்த்ர மென்றது போல *இருந்தமிழ் நூற்புலவனென்கிற பெரிய திருமொழிப் பாசுரம் த்ராவிட சாஸ்த்ர மென்றது. நூல் என்றது ஸாமான்யமான சொல்லன்று; சாஸ்த்ர பர்யாயமான சிறப்புச் சொல் என்க. [ஆஜ்ஞை ஆணை] வடமொழி வேதத்தை *श्रुतिस्स्मृतिर्ममैवाज्ञा–ச்ருதிஸ் ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா * என்று பகவதாஜ்ஞா ரூபமாகச் சொன்னதுபோல *குருகூர்ச்சடகோபன் சொன்ன ஆணையாயிரம் * என்று இதனையும் ஆஜ்ஞாரூபமாகச் சொல்லிற்று. [வசையில் ஏதமில்] அதை *வசையில் நான்மறை* என்று நிர்துஷ்டமென்றது போல, இதனையும் * சடகோபன் உரைத்த ஏதமிலாயிரம் * என்றது. [சுருதி செவிக்கினிய] அதனை * சுடர்மிகு சுருதியென்று செவிக்கினிதாகச்

சொன்னதுபோல இதனையும் * வளங்குருகூர்ச் சடகோபன் பாட்டாய தமிழ்மாலை ஆயிரத்துளிப்பத்துங்கேட்டு ஆரார்வானவர்கள் செவிக்கினிய செஞ்சொல்லே * என்று ச்ராவ்யமாகச் சொல்லிற்று. [ஓதுகின்றதுண்மை பொய்யில்பாடல்] அதனை * வேதநாலோது கின்றதுண்மை * என்று யதார்த்தவாதியாகச் சொன்னதுபோல, இதனையும் *குருகூர்ச் சடகோபன் பொய்யில்பாடலாயிரம் * என்று ஸத்யவாதியாகச் சொல்லிற்று. [பண்டை நிற்கும், முந்தையழிவில்லா] அதனை * பண்டைநான்மறை * என்று அநாதியாகவும், * நிற்கும் நான்மறை * என்று அழிவற்றதாகவும் சொன்னதுபோலே இதனையும் * வண்குரு கூரவர்சடகோபன் முந்தையாயிரம் * என்று அனாதியாகவும், * சடகோபன் வாய்ந்துரைத்த அழிவில்லாவாயிரம் * என்று அழிவற்றிருக்குமதாகவும் சொல்லிற்று.

42. இங்ஙனே நிர்வஹிக்கப்பட்ட உபயவேத ஒற்றுமையில் முடிவாகச் சொல்லப் பட்ட "பண்டைநிற்கும் முந்தையழிவில்லா வென்னும்" ஸாம்யம் மிகச்சிறந்தது. வடமொழி வேதம்போலே தென்மொழி வேதமும் உத்பத்தி விநாசங்களற்றதென்க. ஆனால், அந்த வேதத்திற்குக் கர்த்தா இன்னாரென்று தெரியாமலிருப்பதுபோல இதற்கில்லையே; * குரு கூர்ச்சடகோபன் சொன்னவாயிரம் * சொல்லப்பட்டவாயிரம் * என்றிருக்கையாலே நித்யத்வமும் அபௌருஷேயத்வமும் கூடாதே என்கிற சங்கைக்கும் பரிஹாரம் காட்டப் பட்டது (46) சூர்ணையால். அந்த வேதத்தை * अनादिनिधना ह्येषा वागुत्सृष्टा स्वयंभुवा— அநாதிநிதநா ஹ்யேஷா வாகுத்ஸ்ருஷ்டா ஸ்வயம்புவா * என்று பிரமன் படைத்ததாகச் சொன்னது எப்படி ப்ரகாசகத்வ ப்ரயுக்தமோ அப்படியே இதுவுங் கொள்ளத் தக்க தென்கை. ஆழ்வார் தாமே (7–9) * என்றைக்கு மென்னையென்னும் பதிகத்தில் இதை வெளியிட்டார்.

43. இன்னமும் முக்கியமாக வொன்று (48-ல்) காட்டப்படுகிறது. (அதாவது) "படைத்தான்கவியென்ற போதே இதுவும் யதாபூர்வகல்பனமாமே" என்பது. இதன் கருத்தா வது, திருவாய்மொழியில் (3–9–10) நம்மாழ்வார் "ஒன்றியொன்றி யுகலம் படைத்தான் கவியாயினேற்கு" என்றருளிச் செய்துள்ளார். ஒன்றியொன்றி யுலகம் படைத்த பெருமானு டைய கவிஞராகத் தம்மைச் சொல்லிக் கொண்டதன் கருத்துயாதெனில்; பிரளயங் கொண்ட வுலகத்தை முன்பு போலப்படைத்த ஸர்வேச்வரனுடைய கவி நான் என்னும் பொருள்பட சொல்லியிருக்கையாலே ஒவ்வொரு ஸ்ருஷ்டியிலும் சந்திரன் ஸூரியன் முதலிய ஸகல பதார்த்தங்களும் பழையபடியே படைக்கப்படுவதுபோல இந்த திராவிட வேதமும் ஸ்ருஷ்டிதோறும் யதாபூர்வகல்பனமாய் வருமென்று காட்டினபடியாம். இக்கருத் தில்லையாயின் ஒன்றியொன்றியுலகம் படைத்தான் கவியென்று தம்மைச் சொல்லிக்கொண் டது பயனற்றதாகும்.

### சிரீவரமங்கலம்—வரகுணமங்கை.

44. வானமாமலைப்பதி சிரீவரமங்கலமென்றும், சிரீவரமங்கையென்றும் ஆழ்வாரால் பாடப்பெற்றது. ஸ்ரீவைகுண்டத்தின் அருகே வரகுணமங்கையென்கிற திருப்பதி பாடப் பெற்றது. திருக்கண்ணபுரம், திருக்கண்ணமங்கை முதலிய திருப்பதிகள் எப்படி பகவானு டைய திருநாமங்கொண்டே அமைந்தனவோ அப்படியேயாம் இவையும். * ஓராயிரமா யுலகேழளிக்கும் பேராயிரங்கொண்டதோர் பீடுடையன் * என்னப்பட்ட பகவானது பல்லாயிரம் திருநாமங்களில் ஸ்ரீவர:, வரகுண: என்பவை மிகச்சிறந்த திருநாமங்கள்.

सप्त च-தாமாநி சதம் ஸப்தச"=யாஃ என்று ஸ்தலத்திற்குப் பெயர். யாமாநி என்று பஹுவசனம்; ஸ்தலங்கள் என்றபடி. அவை எத்தனை? ஶதம் ஸப்த ச=நூறும் ஏழும்; நூற்றேழு என்றபடி. *நலமந்த மில்லதோர் நாடாகிய பரமபதம் ஒன்று தவிர மற்றைத் திருப்பதிகள் நூற்றேழேயாதலால் இங்ஙனம் கூறிற்று. நூற்றேழு என்பதை ஒரே சொல் லால் காட்டலாமாயிருக்க அங்ஙனம் காட்டாமல் [ஶதம் ஸப்த ச] நூறும் ஏழும் என்று பிரித் துக்காட்டியிருப்பதை நன்கு ஆராய்ந்தால் ஒரு விசேஷம் புலப்படும். வடநாட்டுத் திருப் பதிகளில் ஏழு ஸ்தலங்கள் பகவதாலயங்களில்லாமல் பகவத் ஸ்வரூபங்களாயும் பகவான் விபவாவதாரத்தில் உலாவினவிடங்களாயுமிருக்கையாலே இந்த வாசியைத் தெரிவிப்பதற் காகவே ஶதம் என்றும் ஸப்த என்றும் பிரித்து ஓதிற்றென்பது வெகு நுட்பமான விஷயம். சாளக்கிராமமும் நைமிசாரணியமும் பகவத் ஸ்வரூபங்களான தலங்கள். அயோத்தி வட மதுரை, துவாரகை, திருவாய்ப்பாடி திருப்பாற்கடல் இவை பகவான் உலாவின விடங்கள். நூற்றேழில் திருப்பாற்கடலை விட்டு அதன் ஸ்தானத்தில் விருந்தாவனத்தைக் கொள்வாரு முளர். ஆக ஏழு திருப்பதிகள் விபவாவதார ஸ்தலங்களென்னும் வாசியை வேதம் காட்டி யிருக்குமழகு அதிசயிக்கத்தக்கது.

45. "யா ஜாதா ஓஷதய:" என்று மேலே யெடுத்துக்காட்டிய வைதிகமான ருக்கானது ஓஷதிவாபத்தில் விநியோகிக்கப்படும் மந்த்ரமாக பாஷ்யப்ரோக்தமாயிருந்தாலும் மீமாம்ஸகர் ஆதரிக்கும் விநியோகப்ருதக்த்வந்யாயத்தாலே இவ்வர்த்தத்தையும் இனிது கொள் ளும். இந்த ருக்கின் அர்த்தமாவது, [ஓஷதய: யா:ஜாதா:] மேலே *ஶதம் யாமாநி ஸப்த ச* என்னப்பட்ட ஸ்தலங்களானவை ஸம்ஸாரிகளின் பிணியைத் தீர்க்கும் மருந்தாக ப்ராது ர்பவித்தவை. ஓஷதய: என்றது ஔஷதங்களென்றே பொருள்படும். [தேவேப்ய:] *மேலாத் தேவர்களும் நிலத்தேவரும் மேவித்தொழும்* என்ற திருவாய்மொழிப் பாசுரத்தின்படி உபய தேவர்களுக்குமாகத் தோன்றியவை. "மண்ணிலிதுபோலுநக ரில்லையெனவானவர் கள் தாம் மலர்கள் தூய் நண்ணியுறைகின்ற நகர்" என்கிற திருமங்கையாழ்வார் பாசுரப் படிக்கும் "மந்திபாய் வடவேங்கடமாமலை வானவர்கள் சந்திசெய்ய நின்றான்" என்ற திருப்பாணாழ்வார் பாசுரப்படிக்கும் தேவர்களும் வந்து தொழும் தலங்களன்றோ இவை. இவை எப்போது ப்ராதுர்ப்பவித்தவை? என்ன; [த்ரியுகம் புரா] த்ரேதா த்வாபர கலியுகங்க ளாகிற மூன்று யுகங்களுக்கும் முன்னேயென்றபடி. க்ருதயுகஸ்தலங்கள் இவை என்பது கருத்து. இந்த ஸ்தலங்கள் யாருடையவை என்ன? [பப்ரூணாம்—பப்ரூணும்.] பிபர்தீதி பப்ரு:; பிபர்தீதி பப்ரவ:=ஸகலஜகதாதார பூதர்களான பகவான்களுடையவை என்றபடி. [மநாமி] ஸந்தோஷிக்கிறேன். இத்தலங்களை யநுஸந்தித்து மகிழ்கிறேனென்கை.

46. இப்பொருள் எறிட்டுக் கூறப்படுவதாக ஒருவரும் நினையார். இந்த ருக்கு நாலா வதுகாண்டம் இரண்டாம் பிரச்னத்திலுள்ளது. இதன் முன்னே முதல் ப்ரச்நத்தில் "யஸ்த்வா ஹ்ருதா கீரிணா மந்யமாநோ மர்த்யம் மர்த்யோ ஜோஹவீமி। ஜாதவேதோ யஶோ அஸ்மாஸு தேஹி ப்ரஜாபிரக்நே அம்ருதத்வமஶ்யாம்." என்கிற ருக்கானது அர்ச்சாவதாரப்ரதிபாதக மென்பதும் பூருவர்களாலே வியாக்கியானிக்கப்பட்டுள்ளது. சிரீவரனென்னுமரசன் ஜனித்த பிறகு தோன்றிய தலம் சிரீவரமங்கலமென்றும், வரகுணனென்னுமரசன் தோன்றியபின்பு தோன்றிய தலம் வரகுணமங்கையென்றும் கூறுவது வேதமோதாதார் கூற்ற. அங்ஙனம் சாஸனம் காண்கிறதென்றால் அத்தகைய சாசனங்களெல்லாம் கல்பிதங்களென்று ஒதுக்கத் தக்கன. ஆனைமலைச்சிலாசாசனமொன்றை ஆதாரமாகக்கொண்ட திரு. கோபிநாதராய

ரவர்கள் அந்த சாசனத்திலுள்ள வாசகங்களின் பொருளை உள்ளபடியுணராது மருண்டவ ரென்று திரு. K. G. சேஷய்யர் B. A., B. L., அவர்கள் எழுதியிருப்பது Law Report எனக் கொள்ளத்தக்கது. இவர்கள் காட்டும் சாசனங்கள் அடியோடு அப்ரமாணமென் கிற கொள்கைதான் வலிதாக நிற்கும். பரமப்ரமாணமே யென்றாலும் குறையில்லை. ஆழ் வார்கள் பவிஷ்யத்ஸாக்ஷாத்காரமுள்ளவர்களென்பது ஊர்ஜிதமாகுமத்தனை. .... (5)

## ஆறாவது அதிகாரம்

### திரு. ராசமாணிக்கனார் கட்டுரை மறுப்பு.

47. "இராமாநுசர் காலத்தினர் எனப்பட்ட திருவரங்கத்தமுதனார் நம்மாழ்வாரை முறை வகுப்பில் இறுதியில் வைக்கிறார்" என்று முடிவில் காட்டியிருப்பது மருளினாலாயது. இராமாநுச நூற்றந்தாதியில் ஆழ்வார்களுக்கு முறைவகுப்பு யாதொன்றும் கொள்ளப்படவில்லை. கொள் ளப்படவேண்டிய அவசியமும் அப்பிரபந்தத்திற்கு இல்லை. ஸ்ரீராமாநுஜர் ஆழ்வார்கள் திறத்துவைத்த பக்திப் பெருங்காதல் கவியின் உள்ளத்திற்கேற்பக் கூறப்படுகிறது. * வருத் தும் புறவிருள்* என்கிற எட்டாவது பாட்டுத் தொடங்கி ஆழ்வார்களின் ப்ரஸ்தாவமுள் ளது. முறையே மூன்று பாட்டுக்களில் பொய்கை பூதம் பேயாழ்வார்கள். பிறகு (11) திருப்பாணாழ்வார். பிறகு (12) திருமழிசையாழ்வார். அதன்பிறகு (13) தொண்டரடிப் பொடியாழ்வார். அதன்பிறகு (14) குலசேகராழ்வார். அதன் பிறகு (15) பெரியாழ்வார். அதன்பிறகு (16) ஆண்டாள். அதற்கடுத்த பாசுரத்தில் (17) *தண்டமிழ்செய்த நீலனென்று திருமங்கையாழ்வார். பிறகு (18) மதுரகவிகள். பிறகு (19) நம்மாழ்வார். நம்மாழ்வாரை நூலாகிய விதனில் ஒரு நியதி கொள்ளப்படவில்லை. ஆராய்ச்சித்துறையினர்க்கு இந்நூற் றந்தாதி எவ்வகைத்துணையும் புரியாது. திருவாய்மொழிப்பிள்ளையின்னருளால் வந்த வுப தேசமார்க்கத்தைச் சிந்தைசெய்து பேசிய உபதேசரத்தினமாலையில் "ஈதிவர் தோற்றத்தடை வாமிங்கு" என்று காட்டப்பட்ட அடைவு எவராலும் மறுக்கமுடியாதென்பது திண்ணம்

48. "ஸ்ரீ தஂஸாஸூ உஹஷாஹயஹூ நாய........." இத்யாதிச்லோகம் ஸ்ரீபராசர பட்டர் அருளிச் செய்தது; தனியன்களின் வரிசையில் நியமேந அநுஸந்திக்கப்பட்டு வருகின் றது. இதில் பூதத்தாழ்வார் பொய்கையாழ்வார் பேயாழ்வார் பெரியாழ்வார் திருமழிசை யாழ்வார் குலசேகராழ்வார் திருப்பாணாழ்வார் தொண்டரடிப்பொடியாழ்வார் திருமங்கை யாழ்வார் ஸ்ரீராமாநுஜர் நம்மாழ்வார் என்று முறைவைக்கப்பட்டுள்ளது. இதைப்பற்றிக் கொண்டும் இவர்கள் அதிகமான ப்ரஸங்கங்கள் செய்யலாமே. செய்யாமலென்ன? ஒரு வர் செய்தேயிருக்கிறார். ஸ்ரீராமாநுஜர்க்குப் பிறகு நம்மாழ்வாரைப் பேசியிருக்கையாலே ராமாநுஜர்க்கும் பிற்பட்டவரே நம்மாழ்வாரென்று தெற்றென விளங்குகின்ற தென்றெழுதி யிருக்கவில்லையோ? மேலே காட்டிய சுலோகத்திற்கு நமது விரிவுரை காண்க.

49. "ஆனைமலைக் கல்வெட்டுச் செய்திகளைக் கைவிட்டு வரகுண மங்கைப்பெயர் தோன்றிய காலத்தைச் சான்றாகக் கொள்ளலாமா?" என்று அலைபாய்ந்து நிற்பவர்கள் எஞ்ஞான்றும் அலைபாய்ந்தே நிற்கக் கடவர்கள். திவ்ய ஸூரி சரிதத்தின் ப்ரஸ்தாவத்தை இவர்கள் அடிக்கடி யெடுக்கின்றனர். அதுவோ வடமொழிநூல். இவர்கட்கு அந்நூலோடு யாது தொடர்பு? அந்நூலோடு சம்பந்தப்படாமல் தோன்றியுள்ள சில தமிழ்நூல்களைக்கண்டு மருள்கின்ற விவர்கள் நகைச்சுவைக்கு இலக்காவரத்தனை. பிரம சூத்திரத்தில் விதுராதி

ரவர்கள் அந்த சாசனத்திலுள்ள வாசகங்களின் பொருளை உள்ளபடியுணராது மருண்டவ ரென்று திரு. K. G. சேஷய்யர் B. A., B. L., அவர்கள் எழுதியிருப்பது Law Report எனக்கொள்ளத்தக்கது. இவர்கள் காட்டும் சாசனங்கள் அடியோடு அப்ரமாணமென் கிற கொள்கைதான் வலிதாக நிற்கும். பரமப்ரமாணமே யென்றாலும் குறையில்லை. ஆழ் வார்கள் பவிஷ்யத்ஸாக்ஷாத்காரமுள்ளவர்களென்பது ஊர்ஜிதமாகுமத்தனை. .... (5)

## ஆறாவது அதிகாரம்

### திரு. ராசமாணிக்கனார் கட்டுரை மறுப்பு.

47. "இராமாநுசர் காலத்தினர் எனப்பட்ட திருவரங்கத்தமுதனார் நம்மாழ்வாரை முறை வகுப்பில் இறுதியில் வைக்கிறார்" என்று முடிவில் காட்டியிருப்பது மருளினாலாயது. இராமானுச நூற்றந்தாதியில் ஆழ்வார்களுக்கு முறைவகுப்பு யாதொன்றும் கொள்ளப்படவில்லை. கொள் ளப்படவேண்டிய அவசியமும் அப்பிரபந்தத்திற்கு இல்லை. ஸ்ரீராமாநுஜர் ஆழ்வார்கள் திறத்துவைத்த பக்திப் பெருங்காதல் கவியின் உள்ளத்திற்கேற்பக் கூறப்படுகிறது. * வருத் தும் புறவிருள்* என்கிற எட்டாவது பாட்டுத் தொடங்கி ஆழ்வார்களின் ப்ரஸ்தாவமுள் ளது. முறையே மூன்று பாட்டுக்களில் பொய்கை பூதம் பேயாழ்வார்கள். பிறகு (11) திருப்பாணாழ்வார். பிறகு (12) திருமழிசையாழ்வார். அதன்பிறகு (13) தொண்டரடிப் பொடியாழ்வார். அதன்பிறகு (14) குலசேகராழ்வார். அதன் பிறகு (15) பெரியாழ்வார். அதன் பிறகு (16) ஆண்டாள். அதற்கடுத்த பாசுரத்தில் (17) ஓராழ்வாரைப் பற்றின பேச்சுமில்லை. பிறகு (18) மதுரகவியாழ்வார். பிறகு (19) நம்மாழ்வார். நம்மாழ்வாரை யும் திருமங்கையாழ்வாரையும் பலகால் ப்ரஸ்தாவிப்பது இந்த நூற்றந்தாதி. தோத்திர நூலாகிய விதனில் ஒரு நியதி கொள்ளப்படவில்லை. ஆராய்ச்சித்துறையினர்க்கு இந்நூற் றந்தாதி எவ்வகைத்துணையும் புரியாது. திருவாய்மொழிப்பிள்ளையின்னருளால் வந்த வுப தேசமார்க்கத்தைச் சிந்தைசெய்து பேசிய உபதேசரத்தினமாலையில் "ஈதிவர் தோற்றத்தடை வாமிங்கு" என்று காட்டப்பட்ட அடைவு எவராலும் மறுக்கமுடியாதென்பது திண்ணம்

48. "ஹூதம்ஸரஸ்ஞ உஹதாஹ்வயஹட்டநாய........." இத்யாதிச்லோகம் ஸ்ரீபராசர பட்டர் அருளிச் செய்தது; தனியன்களின் வரிசையில் நியமேந அநுஸந்திக்கப்பட்டு வருகின் றது. இதில் பூதத்தாழ்வார் பொய்கையாழ்வார் பேயாழ்வார் பெரியாழ்வார் திருமழிசை யாழ்வார் குலசேகராழ்வார் திருப்பாணாழ்வார் தொண்டரடிப்பொடியாழ்வார் திருமங்கை யாழ்வார் ஸ்ரீராமாநுஜர் நம்மாழ்வார் என்று முறைவைக்கப்பட்டுள்ளது. இதைப்பற்றிக் கொண்டும் இவர்கள் அதிகமான ப்ரஸங்கங்கள் செய்யலாமே. செய்யாமலென்ன? ஒரு வர் செய்தேயிருக்கிறார். ஸ்ரீராமாநுஜர்க்குப் பிறகு நம்மாழ்வாரைப் பேசியிருக்கையாலே ராமாநுஜர்க்கும் பிற்பட்டவரே நம்மாழ்வாரென்று தெற்றென விளங்குகின்ற தென்றெழுதி யிருக்கவில்லையோ? மேலே காட்டிய சுலோகத்திற்கு நமது விரிவுரை காண்க.

49. "ஆனைமலைக் கல்வெட்டுச் செய்திகளைக் கைவிட்டு வரகுண மங்கைப்பெயர் தோன்றிய காலத்தைச் சான்றாகக் கொள்ளலாமா?" என்று அலைபாய்ந்து நிற்பவர்கள் என்ஞான்றும் அலைபாய்ந்தே நிற்கக் கடவர்கள். திவ்ய ஸூரி சரிதத்தின் ப்ரஸ்தாவத்தை இவர்கள் அடிக்கடி யெடுக்கின்றனர். அதுவோ வடமொழிநூல். இவர்கட்கு அந்நூலோடு யாது தொடர்பு? அந்நூலோடு சம்பந்தப்படாமல் தோன்றியுள்ள சில தமிழ்நூல்களைக்கண்டு மருள்கின்ற விவர்கள் நகைச்சுவைக்கு இலக்காவரத்தனை. பிரம சூத்திரத்தில் விதுராதி

கரண மென்று ஒன்றுள்ளது. மனைவியில்லாதவர்க்கு விதுரரென்றுபெயர். அநாச்ரமிகளுக்கு ப்ரஹ்ம வித்யாதிகார முண்டாவென்று விமர்சித்து முடிவுசெய்வது இவ்வதிகரணம். இதனையறியாத ராகவையங்காரவர்கள் மஹாபாரதத்தில் ப்ரஸித்தரான விதுரரைப்பற்றிப் பேசிவருகையில் “இப்பெரியாரைப்பற்றி வியாஸஸூத்ரத்தில் விதுராதிகரணமென்று ஓரதிகரணம் வகுக்கப்பட்டதென்றால் இவர் பெருமையை என்னென்பது!” என்றார் மன்னார்குடி வித்வத்ஸதஸ்ஸில். அப்போது “உம்முடைய பிரஸங்கங்களைத் தமிழ்நூலோடு நிறுத்திக் கொள்ளும்” என்று அவைத் தலைமை வஹித்த கீர்த்திமூர்த்தியான சிங்கப்பெருமாள் சுவாமிகள் அருளிச்செய்யக் கேட்டவர்கள் பலர் இற்றைக்குமுளர்.

50. கருடவாஹனபண்டிதரியற்றிய திவ்யஸூரிசரிதம் என்னும் காவியம் ஸ்ரீராமாநுஜர் காலத்தில் தோன்றியது. பின்பழகிய பெருமாளருளிய ஆறாயிரப்படி குருபரம்பரா ப்ரபாவத்தில் அடிக்கடி ஆதரிக்கப் பெற்றது. இந்த நவீனர்கள் செய்யும் ஆழ்வார்கள் காலவாராய்ச்சிக்கு அந்த நூல் எள்ளளவும் துணைபுரிய ப்ரஸக்தி கிடையாது அதில் ஆழ்வார்களின் சரித்திரம் “ஈதிவர் தோற்றத்தடைவாமிங்கு” எனப்பட்ட அடைவுக்கு இணங்கவே [சிறிதளவும் மாறுபாடின்றியே] அமைக்கப்பட்டுள்ளது. அதில் பன்னிரண்டாவது ஸர்க்கத்தில் அமைக்கப்பட்டுள்ள ஆண்டாள் ஸ்வயம்வரம் மட்டும் காவ்யலக்ஷணத்திற்கேற்பக் கவிபுத்திசமத்காரம் பொலிய அபூர்வமானதொரு ஸரணியில் நிபந்திக்கப்பட்டுள்ளது. ரகுவம்சம் யாதவாப்யுதயம் முதலான காவியங்களிலும் இந்த ஸரணியைக் காணலாம். அந்த ஸர்க்கத்தில்

“காஸாரஸஹித ஜஹ்ஷாஹ்வயஸக்திஸாரஸக்தாம் விரேணு கூறுபேஸவரயோகிவாஹாந ।
ஜூஸாடிரு தத்ரு கவிநா ஐயரேண யக்தாநு சுநேந்யா நுவடி நஜஹோஷ்வஜ நவஹூதஷ ॥

என்கிற சுலோகம் தொடங்கி [6, 7, 8 ஆக] மூன்று சுலோகங்களில் காணும் விஷயங்கள் சரித்திரரீதியில் ஸம்பாவிதமா? என்று காணக்கண்ணில்லையே யிவர்களுக்கு. ஆழ்வார்கள் பதின்மரும் ஆழ்வார் திருநகரியில் ஒன்றுகூடி ஒருவரையொருவர் தொழுது, நம்மாழ்வாருடைய நான்கு திவ்யப்பிரபந்தங்களையும் மற்றுள்ள ஆழ்வார்கள் திருச்செவி சாத்தி, தங்கள் பிரபந்தங்களையும் நம்மாழ்வார் திருச்செவிசாத்தும்படி பண்ணினதாகவும், ஆண்டாளுடைய இரண்டு திவ்வியப் பிரபந்தங்களையும் நம்மாழ்வார் மற்றுள்ள ஆழ்வார்களோடுங்கூடித் திருச்செவி சாத்தியுகந்தருளினதாகவுமன்றோ அந்த மூன்று சுலோகங்களில் கதை தொடுக்கப்பட்டுள்ளது. நூற்றிருபது சுலோகங்கள் கொண்ட அந்த ஸர்க்கம் முழுவதும் காவ்யரீதி நிபந்தனையேயல்லது வேறில்லை. 122 சுலோகங்கள் கொண்ட அடுத்த ஸர்க்கமும் பெரும்பாலும் அத்தகைத்தே. அழகியமணவாளனும் ஆண்டாளை ஆழ்வார் திருநகரிக்கு எழுந்தருளியே திருமணம் புணர்ந்ததாகவன்றோ அதில் கூறப்பட்டுள்ளது. இதனை ஆழ்ந்து ஆலோசிக்கமாட்டாதவிவ்வாராய்ச்சியாளர் தமது கட்டுரையின் முடிவில்

> “வரகுணமங்கைப் பெயர் தோன்றிய காலத்தையும் ஆண்டாள் திருமணத் தொடர்பாகப் பெரியாழ்வார் நம்மாழ்வாருடன் கலந்துபேசத் திருக்குருகூர் சென்றனர் என்னும் திவ்ய சூரிசரிதச் செய்தியையும் சான்றாகக்கோண்டு நம்மாழ்வார், பேரியாழ்வாராண்டாள் காலத்தவரேன்று கூறுதல் போருத்தமாகும். பேராசிரியர் கே. ஏ. நீலகண்ட சாத்திரியார் நம்மாழ்வாரையும் மதுரகவியாழ்வாரையும் கி. பி. 9ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த கடைசி ஆழ்வார்களாகக் கூறியிருத்தல் இங்கு அறியத்தகும்.”

என்றெழுதியிருப்பது “இவர் மஹாவிவேகிகளில் தலைவர்” என்று போற்றச் செய்யுமத்தனை. நீலகண்டரோ காலகூடரோ இதில் தலையிடுவதற்கு என்ன ப்ரஸக்தி?

51. இடையில் ஒரு விநோதம் காண்மின்; இந்த மயிலை மாதவதாஸன் பதிப்பில் மணவாளமாமுனிகளருளிச்செய்த திருவாய்மொழி நூற்றந்தாதி திருவாய்மொழிப் பதிக மொவ்வொன்றின் முடிவிலும் சேர்க்கப்பட்டுள்ளது. அந்த நூற்றந்தாதிக்குத் தனியன் செய்யுள்கள் இரண்டுண்டு; அவை மணவாளமாமுனிகளின் திருவடிகளால் [சிஷ்யர்களால்] இயற்றப்பட்டவை. மணவாளமாமுனிகளே இத்தனியன்களையும் இயற்றியதாக (பக்கம் 559ல்) பதிப்பித்துள்ளார்கள். (பக்கம் 561ல்) திருவாய்மொழி நூற்றந்தாதியை மணவாள மாமுனிகளருளியதாகப் பதிப்பித்த விவர்களே அந்நூலின் சிறப்புப் பாயிரங்களையும் அம்மா முனிகள் தாமே அருளியதாகப் பதிப்பித்தனரென்றால் இவர்களது ஆராய்ச்சிப் புலமையை என்னென்போம்! "இத்தனியன்களை இயற்றியவரின் பெயர் தெரியவில்லை" என்று முற் பதிப்பிலுள்ளது. இப்போது இந்த மஹா விவேகிகளுக்குத் தெரிந்துவிட்டது போலும். "ஆழ்வார்கள் காலவாராய்ச்சி செய்பவர்கள் வேறு; மேலே காட்டிய அசந்தர்ப்பப் பதிப்பினர் வேறு" என்று சொல்லிவிடலாம். இவர்களது குழுவினில் அசந்தர்ப்பந் தவிர வேறில்லை யென்பது பேர்க்கவும் பேராத சிலாசாசனமாகும்.

52. இவர்கள் காட்டும் கல்வெட்டெல்லாம் இவர்களது இருள் துயக்கு மயக்குமருள்களுக்கிட்ட கல்வெட்டே யென்று பிராமாணிகர்கள் திடமான நம்பிக்கை கொள்ளலாம்.

> 'முதல் ஆதித்தசோழன் காலத்துக் கல்வெட்டென்று கருதப்படும் திருக்கண்ணபுரம் கல்வெட்டொன்றில் ஒருவன் பெயர் சடகோபனென்று காணப்படுகின்றது. அக் கல்வெட்டின் காலம் கி. பி. 908 என்னலாம். நம்மாழ்வாருக்கு முன்னர் இப்பெயரைக் கொண்டவர் வேறு எவரும் இல்லை......"

என்றெழுதியுள்ளார் இராசமாணிக்கனார் (பக்கம் 46ல்). சடகோபரென்னும் திருநாமம் நம்மாழ்வாருக்கு அஸாதாரணமென்கிற வுணர்ச்சி இவர்க்கும் இவரைச் சார்ந்தவர்கட்கும் யதார்த்தமாக இருக்குமாகில் இக்காலவாராய்ச்சியில் இவர்கள் கைவைக்க ப்ரஸக்தியே யிராது. விஷ்ணுவாலயங்களில் பாஞ்சராத்ரம் வைகாநஸம் என்று இருவகுப்பாகவுள்ள கோவில்களெல்லாவற்றிலும் எம்பெருமானுடைய திருவடிநிலைக்கு ஸ்ரீ சடகோபனென்றே வியபதேசம் எங்குமுள்ளது. இஃது என்றைக்குத் தொடக்கமாயிற்றென்று இவ்வாராய்ச்சியைச் செய்து முடிவுகண்டபின்பன்றோ ஆழ்வார் காலத்தினாராய்ச்சியில் இவர்கள் இறங்கவேணும். "நம்மாழ்வார் அவதரித்து சடகோபனென்று திருநாமம் வஹிப்பதற்கு முன்னமேசடகோபநாமப்ரஸித்தியிருந்தது" என்று எழுத இவர்களுக்கும் கைவரவில்லை. "நம்மாழ்வார்க்கு முன்னர் இப்பெயரைக் கொண்டவர் வேறு யாருமில்லை" என்று ஐயந்திரிபற இவர்கள் கையினால் எழுதுவித்தது தெய்வமன்றோ.

53. அர்ச்சாவதாரம் எப்போது ஏற்பட்டது? அர்ச்சாவதார பகவான்களின் திருவடி நிலைக்கு ஸ்ரீ சடகோபன் (அல்லது) ஸ்ரீ சடாரி யென்கிற வியபதேசம் என்றைக்கு ஏற்பட்டது? என்று விமர்சித்து நிர்ணயிக்கவேண்டுவது மிகமுக்கியம். இதனை ஆழ்ந்து விமர்சிக்குங்கால் "படைத்தான் கவியென்றபோதே இதுவும் யதாபூர்வகல்பனமாமே" என்று நாம் கீழேயெடுத்துக்காட்டிய ஆசார்யஹ்ருதய சூர்ணை அதிவாதமன்றியே யதாபூதார்த்தவாதி யென்று வெற்றிபெற்று விளங்கும். ஸ்ரீமத்வேதாந்ததேசிகன் பணித்த பாதுகாஸஹஸ்ரத்தில் "ப்ரஜிதோவ நிக்ஷிநிவேஶஸம்நா நவி ஶ்ருதீஸஉணாய ஸோஅபிஷேகு! ய ஹவஶாவிஶதிஶௌ வாசுகாதா." என்றுள்ள ச்லோகரத்னத்தின் பொருட்சுவையையறிந்துய்ய ப்ரஸக்தியில்லை யிவர்களுக்கு.

54. இந்த விசாரங்களினிடையே ஒரு முக்கியமான விசாரம் அவசியமானது. ஸ்ரீராமாயணத்தில் சித்திரகூடத்தில் பரதாழ்வானோடுகூட வந்தவர்களில் ஒருவரான ஜாபாலி முனிவர் நாஸ்திகவாதத்தைச் செய்ய, அதற்குக் கண்டனமுரைக்கின்ற சக்ரவர்த்தி திருமகனார் "𑌯𑌥𑌾 𑌹𑌿 𑌚𑍋𑌰𑌸𑍍𑌸 𑌤𑌥𑌾 𑌹𑌿 𑌬𑍁𑌦𑍍𑌧𑌃— யதாஹி சோரஸ் ஸ ததாஹி புத்த:" என்று புத்தனையெடுத்துக் காட்டியிருப்பதை அறியாதாரில்லை. புத்தனுடைய காலத்தை எவ்விதமாக நிர்ணயித்திருக்கிறார்கள். இற்றைக்கு இரண்டாயிரத்துச் சொச்சம் வருடங்களுக்கு முன் பென்றுதானே நிர்ணயித்திருக்கிறார்கள். அந்த புத்தனை யுதாஹரித்த ஸ்ரீராமபிரானுடைய காலம கி. பி. வருடங்களுக்குச் சற்று முன்னரோ மிகவும் பின்னரோ இருக்கவேண்டும். ஸ்ரீராமாயணம் அவதரித்த காலம் கி. பி. எத்தனையாவது நூற்றாண்டாக இருக்கலாமென்பதையும் இவ்வாராய்ச்சியாளர்கள் ஆராய்ந்து முடிவு செய்க.

55. வடமொழி வேதத்தில் நூற்றுக்கணக்கான கதைகள் நடந்தனவாக ஓதப்பட்டுள்ளது; சிலவற்றை இங்கெடுத்துக் காட்டுகின்றேன். (1) முதற்காண்டம் ஐந்தாவது ப்ரச்னத்தில் "देवासुरास्संयत्ता आसन् ते देवा विजयमुपयन्तोऽग्नौ वामं वसु संन्यदधत" இத்யாதி. இக்கதை வருமாறு;— தேவர்களுமசுரர்களும் போர் புரிகையில் தேவர்கள் வெற்றிபெற்று, பின்பொருகால் நமக்குத் தோல்வி விளைந்தாலும் அப்போது உபயோகப்படட்டுமென்று விஜயலப்தமான பொருளை அக்னிதேவதையினிடத்தில் வைப்பாக வைத்திட்டனர்; அப்பொருளை அக்னி தானே கவர்ந்துகொள்ளவெண்ணி அப்புறமோடத்தொடங்கினவளவிலே அவர்கள் அவனை நலியப் பின்தொடர்ந்து பிடித்துக்கொள்ள, அப்போது அக்னி அழ, அழுததனாலுண்டான கண்ணீர் வெள்ளியென்கிற நாணயமாயிற்று; ஆகவே அந்த நாணயம் ஹவ்யகவ்யங்களில் தக்ஷிணைக்குரியதன்று; எவன் தக்ஷிணையாகக் கொடுக்கிறானோ அவனுடைய வீட்டில் ஒரு வருடத்திற்குள் அசுபம் ஏற்படும்—என்பதாம். இக்கதை எப்போது நடந்தது? கி. பி. இத்தனையாவது நூற்றாண்டில் நடந்ததென்று சிலர் சாசனம் காட்டினால் அவ்வாண்டிற்குப்பிறகே வேதம் தோன்றியதென்று கொள்ளவேணும்போலும். विश्वरूपो वै त्वाष्ट्रः पुरोहितो देवानामासीत् स्वस्रीयोऽसुराणां तस्य त्रीणि शीर्षाण्यासन्= த்வஷ்டாவுக்கு விச்வரூபனென்றொரு மகனிருந்தான்; அவன் தேவதைகளுக்குப் புரோஹிதன்; அஸுரர்களுக்கு மருமகன். அவன் மூன்று வாய்களுள்ள மூன்று தலைகளையுடையனாயிருந்தான். ஒரு வாயினால் ஸோமபானமும், மற்றொரு வாயினால் ஸுராபானமும், இன்னொரு வாயினால் அன்ன போஜனமும் செய்துகொண்டிருந்தான்........ அவனுடைய விஷமச்செயல்களைக் கண்டு கோபங்கொண்ட இந்திரன் அவனது தலைகளை வெட்டிவிட்டான். (இது மிகப் பெரிய கதையாய்ச் செல்லுகின்றது.) இந்தக் கதை எப்போது நடந்ததென்று ஆராயவேண்டும். மற்றொன்று காண்மின்; *त्वष्टा हतपुत्रो वीन्द्रँ सोममाहरत्तस्मिन्निन्द्र उपहवमैच्छत तं नोपाह्वयत पुत्रं मेऽवधीरिति स यज्ञवेशसं कृत्वा प्रासहा सोममपिबत् = இந்திரன் த்வஷ்டாவின் மகனான விச்வரூபனைக் கொன்றதனால், ஒருகால் ஸோமயாகம் பண்ணத் தொடங்கின அந்த த்வஷ்டாவானவன் இந்திரனில்லாமலே யாகம் பண்ணினான். அதில் இந்திரன் தன்னையழைக்கும்படி கோரினான். அவனை அழைக்கவேயில்லை. அதனால் சீற்றமுற்ற இந்திரன் யாகத்தைக் கெடுத்து பலாத்காரமாக ஸோமபானம் பண்ணிவிட்டான் என்பது இங்குக் கூறின கதை. இந்தக்கதை நடந்த காலத்தையும் ஆராயவேணும். தேவலோகத்தில் நடந்தான இக்கதைகளை விட்டிட்டு மநுஷ்யலோகத்துக் கதைகளைச் சிறிது காட்டுவோம்.

| | |
|---|---|
| विश्वामित्रजमदग्नी वसिष्ठेना स्पर्धेताम् | விச்வாமித்ரரும் ஜமதக்னியும் வஸிஷ்டரோடு சண்டையிட்டனர். |
| वसिष्ठो हतपुत्रोऽकामयत विन्देय प्रजाम्........ | வஸிஷ்டருடைய மகன் கொலையுண்டு போக, அவர் பிள்ளை பெற விரும்பினர். |
| मनुः पुत्रेभ्यो दायं व्यभजत् स नाभानेदिष्ठं ब्रह्मचर्यं वसन्तं निरभजत् स आगच्छत् सोऽब्रवीत् कथा मा निरभागिति न त्वा निरभाक्षमित्यब्रवीत्......... | மனு மஹர்ஷி தன் புத்திரர்கட்குப் பங்கு பிரித்தார்; அப்போது நாபாநேதிஷ்டனென்னும் புதல்வன் வேதமோதுவதற்காக வெளியே சென்றிருந்தபடியால் அவனுக்குப் பங்கு வைக்கவில்லை. அவன் வந்து எனக்கு ஏன் பங்கு வைக்கவில்லையென்று கேட்டான். அப்பா! உனக்கு நான் பங்கு வைக்காமற்போகவில்லை யென்றார் தந்தை.......... |
| नृमेधश्च परुच्छेपश्च ब्रह्मवाद्यमवदेता मस्मिन् दारावार्द्रेऽग्निं जनयाव यतरो नौ ब्रह्मीयानिति नृमेधोऽभ्यवदत् स धूममजनयत् परुच्छेपोऽभ्यवदत् सोऽग्निमजयदेष इत्यब्रवीत्........... | ந்ருமேதன் பருச்சேபனென்னுமிரண்டு ப்ரஹ்மசாரிகள் வேதமோதி மீளுகையில் நீ ப்ரஹ்மவித்தா நான் ப்ரஹ்மவித்தா என்று விவாதப்பட்டார்கள். உடனே ஒரு ஈரக்கட்டையை எடுத்துப் போட்டு இதில் நெருப்பையுண்டாக்குபவனே ப்ரஹ்மவித்தென்று கூறி, ந்ருமேதன் மந்த்ரம் கூற புகையே உண்டாயிற்று; பருச்சேபன் மந்த்ரங் கூற கணகணவென்று நெருப்பு ஜ்வலித்தது....... |

56. இங்ஙனே நூற்றுக்கணக்கான கதைகள் வேதத்தில் கருமகாண்டத்திலும் ப்ரஹ்மகாண்டத்திலுமுள்ளன. யதார்த்தவாதியான வேதம் இக்கதைகள் நடவாமலிருந்தால் கூறமாட்டாது. ஒவ்வொருகதையாக எடுத்துக்கொண்டு 'இக்கதை எப்போது நடந்தது? இக்கதை எப்போது நடந்தது?' என்று ஆராய்ந்து அவ்வவற்றுக்குக் காலம் கண்டுபிடிக்க முயலவேணும். எம்மால் கண்டுபிடிக்க முடியவில்லை என்பவர்கள் தமிழ் வேதத்தில் கூறப்படும் அரசர்களது கதைகளின் காலமும் கண்டுபிடிக்க முடியாததென்று கையொழிந்து நிற்கவேணும். இதைக்கண்டு பிடிக்க ஸாதனமிருக்கிறதே யென்னில், வஞ்சகமான ஸாதனங்களைக் கண்டு மருளவேண்டாவென்று பல்காலுங் கூறி நிற்கிறோம். ... ... *

—இதன் சேஷம் மற்றொருகால் வெளிவரும்—

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர்
எழுதிய
**ஆழ்வார்களி னவதாரகால நிர்ணயத்தில்**
முதற்பகுதி முற்றுப்பெற்றது.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரிய ரெழுதிய

பாஷாசதுஷ்டய க்ரந்தமாலைகளில்

அறுநூற்றுமுப்பத்தேழாம் நூலாகிய

# ஸர்வஜ்ஞலோககுரு ஸூக்திஸர்வஸ்வம்.

பிள்ளைலோகாசார்யரருளிய அஷ்டாதசரஹஸ்யங்களுள்
ஒன்றுன தனித்வய ரஹஸ்யத்தில்

" த்ரௌபதியும்–அந்த பெரிய ஸபையிலே துச்சாஸனனென்பானெரு
முரட்டுப்பயல் வாசாமகோசரமான பெரிய பரிபவத்தைப்பண்ண
தர்மம் ஜயிக்கிறதென்றிருந்த பர்த்தாக்கள் ஐவரும், தர்ம
மில்லை யென்றிருந்த நூற்றுவரும், தர்மாதர்ம விவே
கம் பண்ணமாட்டாத பீஷ்மத்ரோணுதிகளும்....
ஆன ஸபையிலே ப்ரபத்தியை வெளியிடப்
பிறந்த பாக்யவதியாகையாலே "

என்றுள்ள ஸ்ரீஸூக்திகளையும் மற்றும் பல திவ்ய ஸூக்திகளையும்
ஆதரிக்க பாக்யமற்றவர்களைத் தெளிவிக்கத்
தோன்றியது.

---

## ஸ்ரீராமாநுஜன் வெளியீடு 171.

---

சுபக்ருத் ஸம்வத்ஸர மீனவிசாகம்.

12—4—1963

ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே சரணம்.

# ஸர்வஜ்ஞலோககுரு ஸூக்திஸர்வஸ்வம்

ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்யர்

## த்ரௌபதீ சரணாகதி விஷயமாகச் செய்யும் நிர்ணயம்.

द्रौपदीन्याससिद्धाञ्जनाख्यं लेखं सहस्रशः। भञ्जयन् प्रादुरस्त्येष सर्वस्वाख्यो गभस्तिमान् ॥
पाञ्चाली प्राक् प्रपद्यैव प्राप स्वाभीष्टमच्युतात्। प्रपत्तेर्मोघता नैव तत्राभूदित्युदीर्यते ॥

### — முன்னுரை —

1. உத்தரராம சரிதத்தில் பவபூதிமஹாகவி பெருமாள் திருவாக்சாக வைத்துக் கூறுகின்றான்— *हाहा धिक् परगृहवासदूषणं यत् वैदेह्याः प्रशमितमद्भुतैरुपायैः। एतत्तत्पुनरपि दैवदुर्विपाकात् आलर्कं विषमिव सर्वतः प्रसृप्तम् ॥* என்று. ஒருகால் தகுந்த ஔஷதப்ரயோகத்தாலே அடங்கிப் போனது மற்றொருகால் மீண்டும் தலைகாட்டுவதுண்டு, வெறி நாய்க் கடி விஷம் இதற்கு உவமை என்பது மேலே குறித்த சுலோகத்தினாலுணரத் தக்கது. இவ்வண்ணமாகவே, த்ரௌபதீ சரணாகதி விஷயமான சில பல விசிகித்ஸைகள் சில வருஷங்களுக்கு முன்னமே ஜகதாசார்ய ஸூக்தி ஸுதாநிதி, சிங்கப்பெருமாள் திருவாக்கு வெற்றி, வேங்கடார்ய சதகம் முதலான நமது நூல்களினால் அறவே தொலைந்திருந்தும் இப்போது மீண்டும் தலைகாட்டாநின்றது. நிகழும் பங்குனித் திங்களில் வெளிவந்த ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சநம் 184-ல் (பக்கம் 600-ல்) த்ரௌபதீ ப்ரபத்திஸித்தாஞ்ஜனம் என்றொரு கட்டுரை வெளி வந்திருப்பது கண்டோம். இது இரண்டொரு வருஷங்களுக்கு முன்னமும் வெளிவந்து இப்போது மறுபதிப்பேறுவதாகச் சிலர் சொல்லக்கேட்டோம். இப்போது கண்டதைக் களைந்தொழிப்போமாக. எம்பெருமானுடைய ஜகத்ஸ்ருஷ்டி வியாபாரத்தைப் பற்றிப் பேசும் நம் ஆசாரியர்கள் "சோம்பாதிப்பல்லுருவையெல்லாம் படர்வித்த வித்தா!" என்னும் நம்மாழ்வார் பாசுரத்தைக் காட்டி "ஒருநாளும் சோம்பிக் கைவாங்காதே...." என்றருளிச் செய்கிறார்கள். அவ்வண்ணமாகவே தூஷண விமர்சநங்களில் நாம் ஒருபோதும் சோம்பிக் கைவாங்குவோமல்லோம். எழுத்தெழுத்தாக வெடுத்துக் களைந்தொழிப்போம். செத்த பாம்பையடிக்க முயல்வதாகச் சிலர் நினைத்தாலும் நினைக்க.

2. [illegible] தமது கட்டுரையின் தொடக்கத்தில் "[illegible]" என்னும் திருவடி வசனமாகிய ஸ்ரீராமாயண ச்லோகத்தைச் சிறிது மாறுபடுத்தியெழுதியுள்ளார். மாற்றப்பட்டிருக்கும் உத்தரார்த்தம் *[illegible]* என்று மறுவடிவெடுக்குமென்னத் தட்டில்லை. எந்த வியாஸத்தையும் நாம் வாசிக்கும்போது இரண்டு விஷயங்களே முக்கியமாக நோக்குவது, (1) இவர் குருமுகமாகக் கேட்டவர்தானா? (2) பிராமாணிகார்த்தங்களை மாறுபடுத்தாமல் ஆஜவத்துடன்

எழுதுபவர் தானோ? என்று. ஸூசீகடாஹந்யாயேந இவற்றை எளிதாக அறிந்துவிடலாமன்றோ. இவ்விரண்டிலும் வருந்தத் தக்க நிலைமையேயுள்ள தந்தோ! இரண்டுக்கு மிரண்டிடம் காட்டுவோம். (1) இவ்விவாத விஷயம் தனி ச்லோக வியாக்கியானத்தில் நுழைக்கப் பட்டன்றோ வெளியிடப்பெற்றுள்ளது. முன்னே * அஹம் ஸ்மராமி மத்பக்தம் நயாமி பரமாம் கதிம் * என்கிற வராஹ சரம ச்லோகத்தின் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம் அச்சிடப்பட்டுள்ளது. அதில் "ஆதிவாஹிகர்கள் கையிலே காட்டிக் கொடேன், அத்தவாளத்தலையாலே முட்டாக்கிட்டு நானே கொண்டு போகக் கடவேன்" என்றுள்ள ஸ்ரீஸூக்தியை விவரிக்கின்ற விவர் "நான் யாரென்று தெரியாமைக்காக அத்தவாளம் என்னும் மேற்கட்டித் தலைப்பாலே முட்டாக்கிட்டுக் கொண்டு, நானே அவனை யழைத்துச் செல்லுவேன்" என்றெழுதியுள்ளார். அகுருகுலக்லிஷ்டர்களுக்கு இப்படி அபார்த்தம் தோற்றுது. அத்தவாளத்தலையாலே முட்டாக்கிடுவது கொண்டு போகப்படுகிற வ்யக்திக்கேயல்லது கொண்டு போகிற தனக்கன்று. "நான் யாரென்று தெரியாமைக்காக" என்று ஹேது எழுதுவது வெகு விசித்திரம். ஆச்சரியமான ப்ரதிபையன்றோ இங்ஙனே யெழுதுவித்தது.

3. மேலே யெடுத்துக் காட்டிய ஸ்ரீஸூக்தி பெரிய திருமொழிவியாக்கியானத்தில் (3-7.) * கள்வன்கொல்யானறியேன் திருமொழியின் ப்ரவேசத்திலும் சிறிது வேறுபாடு கொண்டுள்ளது.

அங்குள்ள ஸ்ரீ ஸூக்தி வருமாறு—

"......தானே வந்து முகங்காட்டி இவளைக்கூடக் கொண்டுபோக; ஆதிவாஹிகரை வரக்காட்டிக் கொண்டுபோம் சிலரை; பெரிய திருவடியை வரக்காட்டிக் கொண்டுபோம் சிலரை; * நயாமி யென்று தானே கொண்டுபோம் சிலரை; அப்படியே தானே வந்து அத்தவாளத்தலையாலே மறைத்துக் கொண்டுபோக."

என்று. அத்தவாளத்தலையாவது உத்தரீயத்தின் தலைப்பு; அதனால் தன்னையா மறைத்துக் கொண்டுபோனான்? உள்ள ஸ்ரீஸூக்திக்கு இங்ஙனே அர்த்தமாகுமா? இவ்வர்த்தத்தில் சுவைதானுண்டா? ஸத்ஸம்ப்ரதாயஸித்த ஸதாசார்ய ஸேவை பண்ணினவர்களுக்கு இங்ஙனே அர்த்தம் தோன்றத்தான் ப்ரஸக்தியுண்டா? விமர்சவசமாக எடுத்துக்கொண்ட இரண்டில் முதலது காட்டியாயிற்று; இனி இரண்டாவது காட்டுவோம்;

4. "ப்ராமாணிகார்த்தங்களை மாறுபடுத்தாமல் ஆர்ஜவத்துடன் எழுதுபவர்தானோ?" என்கிறவிமர்சம் இரண்டாவது. இதைப்பற்றியுமொன்று கேண்மின்; (பக்கம் 602-ல்) "அவன் தூரஸ்தனானாலும் இது கிட்டி நின்றுதவும்" என்கிற முமுக்ஷுப்படி ஸூக்தியை யெடுத்துக் காட்டி "இதன் பொருளாவது, அவ்வெம்பெருமான் உதவாத தசையிலும் திருநாமம் உதவும் என்பது" என்றெழுதியுள்ளார். இது அபத்தமும் அஸம்பத்தமுமாம். "பகற் கண்ட குழியிலே இரா விழுவாரைப் போலே" என்று ஆசாரியர்கள் ஸாதிப்பதுண்டு. பகற்கண்ட குழியிலே பகலிலேயே விழுவது கிடையாதந்தோ! இது தானிங்கு விசேஷம். துடுப்பிருக்கக் கைவேக வேணுமோ? விசதவாக் சிகாமணிகளின் அற்புதமான வியாக்கியானமிருக்க, இவரெழுதும் விப்ரலம்பகமான அர்த்தம் எங்கு விலைச்செல்லும்? 'எம்பெருமான் உதவாத தசையிலும்' என்று நெஞ்சாலும் நினைக்கத் தகாதது. அவன் தூரஸ்தனானாலும் என்ற ஸ்ரீஸூக்தி அந்யூநாதிரிக்தமாக எவ்வளவு பொருளைத் தருமோ அவ்வளவே மணவாளமாமுனிகளருளிச் செய்திருப்பது. (அதாவது) "இதுக்கு வாஅஜ்ஞனவன் ஸந்நிஹிதனன்றிக்கே

தூரஸ்தனுயிருந்த காலத்திலும்" என்று. இதையடியொற்றிப் பொருள் விவரிக்கவேண்டியதை விட்டு 'அவன் தூரஸ்தனானாலும்' என்பதற்கு அவன் உதவாத உமையிலும் என்று பொருளெழுதுவது அப்ராமாணிகம். எம்பெருமான் ஸந்நிஹிதனுயிருந்தால் தான் உதவுவன், தூரஸ்தனுயிருந்தால் உதவமாட்டான் என்று இவர்கள் யாரிடம் சிக்ஷிக்கப் பெற்றார்களோ?

5. சரமச்லோகத்தில் மோக்ஷயிஷ்யாமிக்குப் பொருள்பணிக்கின்ற பிள்ளை லோகாசாரியர் "ணிச்சாலே நானும் வேண்டா, நீயும் வேண்டா, அவை தன்னடையே விட்டுப் போங்காணென்கிறன்" என்றருளிச் செய்துள்ளார். இதன் தாத்பரியத்தை எவ்வளவாகக் கொள்ள வேணுமென்பதை இவர்கள் அறிவர்களோ? கண்ணனும் வேண்டாமல் அர்ஜுநனும் வேண்டாமல் எங்ஙனே பாபங்கள் தன்னடையே விட்டுப்போம்? பூர்வார்த்தத்தாலே அதிகாரி க்ருத்யத்தையும், உத்தரார்த்தத்தாலே ஸ்வக்ருத்யத்தையும் கூறுவதாக அருளிச்செய்த பிள்ளையுலகாசிரியர் இங்கு இங்ஙனே யருளிச்செய்தால் எப்படி பொருந்துமென்று கேட்டால் குருகுலக்லிஷ்டரல்லாதார் விடைகூறவறியார். *தன்னடையே விட்டுப் போங்காணென்றதற்கு அடுத்த சூர்ணை— "என்னுடைய நிக்ரஹபலமாய் வந்தவை நானிரங்கினால் கிடக்குமோ வென்கை." என்பது இதற்கு அவதாரிகையிடுகின்ற மாமுனிகள் "இப்படியருளிச்செய்த தன் கருத்தை வெளியிடுகிறார்" என்றிட்டு,

> "பாபங்களாகின்றன — குப்பையிலாமணக்குப்போலே யெழுந்து பாம்புபோலே மிடற்றைப் பிடிப்பதொன்றன்றிறே; சேதநன் பண்ணின கர்மங்கள் க்ஷணத்வம்ஸிகளாகையாலே அப்போதே நசித்துப்போம்; அஜ்ஞானத்தையாலே கர்த்தாவான இவனும் மறந்துபோக, ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனாய் ஒன்றொழியாமல் உணர்ந்திருந்து பலப்தகாலங்களிலே தப்பாமல் நிறுத்து அநுபவிப்பிக்கிற என்னுடைய நிக்ரஹரூபமாகையாலே அந்த நிக்ரஹபலமாய் வந்தவை நிக்ரஹத்துக்கு ப்ரதிகோடியான அநுக்ரஹத்தை நான் பண்ணினால் அவ்விஷயத்தில் பின்னை கிடக்குமோவென்கை இதுக்குக் கருத்தென்றபடி."

என்று யதாவஸ்திதமான தாத்பரியத்தை விசதீகரித்தருளினாராயிற்று. நிக்ரஹத்தைப்பற்றிச் சொன்னது அநுக்ரஹத்தைப்பற்றியும் சொன்னபடியேயாம். எங்கும் உதவுபவன் ஸர்வஜ்ஞனும் ஸர்வசக்தனுமான எம்பெருமானே யொழிய அசேதநக்ரியாகலாபமன்று என்கிற தத்வார்த்தம் தெளிவாயிற்று. இந்தத் தெளிவுக்கு இவர்கள் இட்டுப் பிறந்திலர்.

6. ஆக்ருதயேவகர் ஸ்ரீவசனபூஷண அரும்பதத்தில் எம்பார்ஜீயர் ஸ்வாமி எதோ எழுதியிருப்பதாகக் காட்டி அதில் பொருந்தாமைகூறத் தொடங்கி "தனிச்லோக வியாக்கியானத்தில் பெரியவாச்சான்பிள்ளை த்ரௌபதீ சரணாகதியானது யாதொரு குறையுமற்றதென்றும், புஷ்கலமானதென்றும், அந்த சரணாகதிக்குப் பரமபுருஷன் பலனளித்தானென்றும் பலவிடங்களில் அருளியிருப்பதற்குப் பொருந்தாது" என்றெழுதியுள்ளார். இதனால் பெரியவாச்சான்பிள்ளை திருவுள்ளத்திற்கு நேர்முரணாக இவர் தாம் இக்கட்டுரையெழுதப் புகுந்தாரென்பது ஸுஸ்பஷ்டமாயிற்று. த்ரௌபதீ ப்ரபத்தி குறையற்றதென்றும் புஷ்கலமானதென்றும் அந்த ப்ரபத்திக்குப் பரமபுருஷன் பலனளித்தானென்றும் பெரியவாச்சான் பிள்ளை பலவிடங்களில் அருளியிருப்பதாகத் தாம் எழுதிமுடித்து விட்டு, மேலே இதைத் தாமே கண்டித்து வீண்க்ரந்தவிஸ்தாரம் செய்துபோகிறார் என்பதுதவிர வேறு என்ன முடிவுபெறும். உபவிஶ்ய தபோராஶே உபஶுஶ்ரூஷ தூநாத்யஹோ ॥

7. "இல்லையில்லை; மேலே '2. இனி த்ரௌபதீ ப்ரபத்திக்குக்கிடைத்தபலன்கள் யாவை? எப்போது கிடைத்தன? என்னும் கேள்விகள் எழுகின்றன' என்று தொடங்கி நான் விவரித்திருப்பவற்றையும் காணவேணும்" என்பர். காணாததொன்றில்லை; கண்டோம் கண்டோம் கண்டோம் கண்ணுக்கினியன கண்டோம். அத்தனையும் ஜாதூவாசிவாகஜாயமத்தனையென்பதை ஸூஜெணவிரிவுக்கஞ்சாமல் நிரூபிப்போம். ஓரெழுத்தையும் விடுவோமல்லோம். .... *

முன்னுரை முற்றிற்று.

---

## — இனி க்ரந்தாரம்பம். —

8. * ஸர்வஜ்ஞலோககுருநிர்மிதம் ஆர்யபோக்யம் வந்தே ஸதா வசநபூஷண திவ்ய சாஸ்த்ரம் * என்று திவ்ய சாஸ்த்ரமாகப் போற்றப்பட்ட ஸ்ரீ வசந பூஷணத்தில்—'ப்ரபத்திக்கு தேசநியமமும் காலநியமமும் ப்ரகாரநியமமும் அதிகாரி நியமமும் ஃபலநியமமுமில்லை" என்கிற சூர்ணையினால் ப்ரபத்திக்கு தேச, கால, ப்ரகார, அதிகாரி, பலன்களின் நியமமில்லாமையை ப்ரதிஜ்ஞை பண்ணி, இவற்றுள் ப்ரகார நியதியில்லாமையை உபபாதிக்கிறவிடத்திலே "த்ரௌபதி ஸ்நாதையாயன்றே ப்ரபத்தி பண்ணிற்று" என்றருளிச்செய்தும், அதற்கு மேலே அதிகாரி நியமமில்லாமையை உபபாதிக்கிற விடத்திலும் "த்ரௌபதி சரணம் புகுருகையாலே" என்றருளிச்செய்தும, அதற்குமேலே ஃபல நியமமில்லாமையை உபபாதிக்கிற விடத்திலும் "த்ரௌபதிக்குப் பலம் வஸ்த்ரம்" என்றருளிச் செய்தும் போருகையாலே த்ரௌபதியானவள் ரஜஸ்வலையாயிருக்கிற காலத்திலே எம்பெருமானை நோக்கி ப்ரபத்தி பண்ணினாளென்றும், அந்த ப்ரபத்திக்குப் பலனாகப் பெறப்பட்டது வஸ்த்ரமென்றும் ஸ்பஷ்டமாகத் தெரியவருகிறது. இங்ஙனே யருளிச்செய்த பிள்ளை லோகாசார்யர் தாமே முமுக்ஷுப்படியில் "த்ரௌபதிக்கு ஆபத்திலே புடவை சுரந்தது திருநாமமிறே" என்றருளிச் செய்திருக்கக் காண்கிறோம். இதனால் த்ரௌபதிக்கு விளைந்த வஸ்த்ரவ்ருத்தியானது அவள் திருநாமம் சொன்னதற்குப் பலன் என்றதாகத் தெரியவருகிறது. இவ்விரண்டு ஸ்ரீ ஸூக்திகளும் பரஸ்பர விருத்தமான பொருளைத் தெரிவிப்பனபோல் காண்கிறது. 'வஸ்த்ரம் ப்ரபத்திக்குப் பலன்' என்பதாக ஸ்ரீ வசநபூஷணாபிப்ராயம். அது திருநாம ஸங்கீர்த்தனத்திற்குப் பலன் என்பதாக முமுக்ஷுப்படியின் அபிப்ராயம் ப்ரபத்தியும் திருநாம ஸங்கீர்த்தனமும் வெவ்வேறு காரியங்களேயொழிய ஒரே காரியமென்னவொண்ணாது. ஆகவே, ஒரு க்ரந்தத்தில் வஸ்த்ரவ்ருத்தியை ப்ரபத்தியின் பலனாகச் சொல்லுவதும், மற்றொரு க்ரந்தத்தில் அதைத் திருநாம ஸங்கீர்த்தநத்தின் பலனாகச் சொல்லுவதும் விருத்த பாஷணமாகுமன்றோ. இந்த விரோதத்தை எங்ஙனம் பரிஹரிப்பது? என்று சங்கை.

9. இங்கே முக்கியமாக விசாரிக்கவேண்டிய விஷயம் ஒன்றே. அதாவது, மிக்க பெருஞ்சபை நடுவே த்ரௌபதியானவள் துச்சாஸநனால் பரிபவிக்கப்படுகிறபோது அந்த பரிபவ நிவ்ருத்தியை யுத்தேசித்துச் செய்த காரியம் ப்ரபத்தியா? அல்லது திருநாம ஸங்கீர்த்தநமா? என்பதே. ஒரு க்ரந்தத்தில் ப்ரபத்தி செய்ததாகச் சொல்லி, மற்றொரு க்ரந்தத்தில் திருநாமஸங்கீர்த்தனம் செய்ததாகச் சொல்லியிருந்தால் அதுதான் பரஸ்பர விருத்தமென்று சங்கிக்கக்கூடியதாகும். த்ரௌபதி செய்த காரியம் ப்ரபத்திதானென்று ஸ்ரீ வசநபூஷணத்தினால் நிஸ்ஸந்தேஹமாகத் தேறியிருக்கிறது. "ரக்ஷ மாம் சரணாகதாம்" என்ற த்ரௌபதி வசனத்தாலும் இது தேறியிருக்கிறது. முமுக்ஷுப்படியில் 'த்ரௌபதி

ப்ரபத்தி பண்ணவில்லை, திருநாம ஸங்கீர்த்தனந்தான் பண்ணினுள்' என்று அருளிச் செய்யப் பட்டிருக்கிறதாவென்று பார்க்கவேணும். அப்படி வசந வ்யக்தியிருக்குமாகில் அப்போது விரோத சங்கைக்கு இடமுண்டாகியே தீரும். ஸ்ரீ வசநபூஷணத்தில் ஸாதித்த ப்ரபத்த்ய நுஷ்டானத்தை இல்லைசெய்யும் ஸ்ரீஸூக்தியானது முமுக்ஷுப்படியில் ஓரிடத்திலும் காணப் படவில்லை. "த்ரௌபதிக்கு ஆபத்திலே புடவை சுரந்தது திருநாமமிறே" என்ற விடத் திற்கு வியாக்கியான மருளிச் செய்யாநின்ற மணவாளமாமுனிகள் "*ரக்ஷ மாம் சரணுக தாம்* என்று சரணம்புகுந்த த்ரௌபதிக்கு" என்றருளிச் செய்திருப்பதை உற்று நோக்க வேணும். அநபேக்ஷிதமாக ஓரக்ஷரமும் எழுதியருளத் திருவுள்ளம் பற்றுதவரான மாமுனி கள் "சரணம் புகுந்த த்ரௌபதிக்கு" என்றெழுதியருளினதானது, அக்காலத்திலேயே சில அல்பச்ருதர்கள் ஸ்ரீவசநபூஷண ஸூக்திக்கும் முமுக்ஷுப்படி ஸூக்திக்கும் பரஸ்பர விரோத சங்கை செய்துகொண்டிருக்கலாம்; அது ஸூதராம் அஸ்தாநே என்று காட்டியருள் வதற்காகவே. த்ரௌபதி தன்னுடைய ஆபந்நிவாரணர்த்தமாகச் செய்தது சரணுகதியே, இதில் விப்ரதிபத்தியில்லை. உபய க்ரந்தங்களும் இதில் ஏககண்டமே. இனி, வஸ்த்ர வ்ருத்தியை சரணுகதியின் பலனுக ஒரு க்ரந்தத்திலும், நாமஸங்கீர்த்தனத்தின் பலனுக மற்றொரு க்ரந்தத்திலும் அருளிச் செய்திருப்பது விருத்தந்தானே என்கிற கேள்வி எழுந்தால் இது மிகவும் பல்பஜமானது.

10. ஏனென்னில், ப்ரபத்தியின் சரீரத்திலே நாமஸங்கீர்த்தநமும் ஓர் உறுப்பா யிருக்கும். முமுக்ஷுப்படி த்வயப்ரகரணத்தில் "ப்ரபத்யே—பற்றுகிறேன்" என்றருளிச்செய்த வனந்தரம் "வாசிகமாகவும் காயிகமாகவும் பற்றினாலும் பேற்றுக்கு அழிவில்லை, * ஜ்ஞாநாந் மோக்ஷமாகையாலே மாநஸமாகக் கடவது" என்றருளிச் செய்து, அடுத்த சூர்ணையிலே "இம்மூன்றும் வேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை" என்ற விடத்து வியாக்கியானத்திலே பரந்த படி ஸ்ரீ ஸூக்தியை யுதாஹரித்து அதிகாரி பூர்த்திக்குக் கரணத்ரயமும் அபேக்ஷிதமாயிருக்கு மென்று மணவாளமாமுனிகள் நிமமித்தருளியுள்ளார். "அயமேவ உபாயபூதோ மம" என்று மனத்தினால் சிந்தித்து "ஸர்வரக்ஷக! அசரண்யசரண்ய! ஸ்ரீமந்நாராயண! த்வமேவ உபாயபூதோ மே பவ" என்று வாக்கினாலும் ப்ரார்த்தித்து, தாளுந்தடக்கையுங்கூப்பிப் பணிதல் கரணத்ரயத்தாலுமான சரணுகதியாம். கஜேந்த்ராழ்வானுடைய சரணுகதியைச் சொல்லுமிடத்து "பரமாபத மாபந்நோ மநஸாசிந்தயத் ஹரிம்" என்கையாலே அங்கு மாநஸிக ப்ரபத்திமாத்ரமே யென்று கொள்ளலாம். "நாராயணுவோ மணிவண்ணு நாகணை யாய்! வாராய் என்னுரிடரை நீக்காய், என வெகுண்டு தீராத சீற்றத்தால் சென்று" [சிறிய திருமடல்] என்றிது முதலான பல ஸூக்திகளுக்கிணங்க வாசிக ப்ரபத்தியும் கஜேந்த்ராழ் வான் பக்கலிலேயுண்டென்று கொள்வதிலும் குறையில்லை.

11. த்ரௌபதீ விஷயத்தில் "கோவிந்தேதியதாக்ரந்தத்க்ருஷ்ணு மாம் தூரவாஸிநம்" என்கிற பகவதுக்தியையும் சேர்த்துப்பார்க்கிறபோது வாசிக ப்ரபத்தியும் நேர்ந்திருக்கிற தென்பது அறுதியிடலாகிறது. "**भगवत्प्रवृत्तिविरोधि स्वप्रवृत्ति निवृत्तिः प्रपत्तिः**—[பகவத்ப்ர வ்ருத்தி விரோதி ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்திः ப்ரபத்தி:"] என்கிற நம் பூர்வாசார்யர்களின் திவ்யஸூக்தியின்படி கஜேந்த்ராழ்வானிடத்தில் "கஜ ஆகர்ஷதே தீரே" என்னப்பட்ட ப்ரவ்ருத்தியிலிருந்து ஓய்கைதான் ப்ரபத்தியென்றும், த்ரௌபதியிடத்தில் புடவையைத் தன்கையால் இறுக்கிக்கொள்ளுதலாகிற ஸ்வப்ரவ்ருத்தியிலிருந்து ஓய்கைதான் ப்ரபத்தி யென்றும் சொல்லுவதுமுண்டு. வாசிககாயிகங்கள் அந்தஸ்வட்ப்ரவ்ருத்தி நிவ்ருத்தியைத்

தெரிவிப்பனவாகுமத்தனை. நாமஸங்கீர்த்தன மென்று தனிப்பட்ட ஒரு உபாயமுண்டு; த்ரௌபதியிடத்தில் ப்ரஸ்தாவிக்கப்படுவது அதுவன்று; சரணாகதியின் ஓர் உறுப்பான நாமோச்சாரணமேயாயிற்று. அது காரியம் செய்தது என்று கூறுவதனால் ப்ரபத்தியிற் காட்டில் வேறென்று காரியஞ்செய்ததாகக் கூறினதாகாது. முமுக்ஷுப்படியில் வாச்யனான எம்பெருமானிற் காட்டில் வாசகமான திருநாமத்திற்கு ப்ராபாவமருளிச் செய்யப்புகுந்த விடமாகையாலே அதற்கு அநுகுணமாக "த்ரௌபதிக்கு ஆபத்திலே புடவை சுரந்தது திருநாமமிறே" என்றருளிச் செய்தது ரஸோக்தியில் சேரும். 'ப்ரபத்திதானே புடவை சுரந்தது' என்றுலுங்கூட, புடவை சுரத்தலாகிற பலப்ரதாநம் பரமசேதநனான ப்ரபத்தவ்யனுக்கு ஸம்பாவிதமாகுமே யல்லது அசேதநக்ரியா ரூபமான ப்ரபத்திக்கு ஸம்பவியாதென்பதை எம்பெருமானர் தொடங்கி மணவாளமாமுனிகளீறாகவுள்ள ஸகலாசார்யர்களும் ஒருமிடறாகவருளிச் செய்யக்காண்கிறோம். *கெடலிலாயிரத்துள்ளிவைபத்தும், கெடலில் வீடு செய்யும் கிளர்வார்க்கே* *தெருள்கொள்ளச் சொன்ன வோராயிரத்துளிப் பத்து, அருளுடையவன் தாளணைவிக்கும் முடித்தே* என்றிவை முதலான நிகமனப் பாசுரங்கள் பலவற்றிலும் பாசுரமே பலன்கொடுப்பதாகச் சொல்லியிருந்தாலும் பாசுரங்கேட்டு ப்ரஸந்நனான எம்பெருமான்தான் பலன் கொடுப்பவனென்பதிலே தாற்பரிய மென்று விசதமாக வியாக்கியானங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. ஆக, ப்ரபத்தியின் பலனாக வஸ்த்ரவ்ருத்தியாயிற்று என்றதனோடும் திருநாமஸங்கீர்த்தனத்தின் பலனாக வஸ்த்ர வ்ருத்தியாயிற்று என்றதனோடும் வாசியற இரண்டும் ஸமாநார்த்தகமேயொழிய ஈஷத்தும் வாசியில்லை. எந்த ஸந்தர்ப்பத்திலும் பலனளிப்பவன் எம்பெருமானே யல்லது ப்ரபத்தியுமன்று, நாமோச்சாரணமுமன்று. *"फलमत उपपत्तेः"* *[பலம் அத: உபபத்தே:] என்கிற ப்ரஹ்ம ஸூத்ரத்தின் ஸ்ரீ பாஷ்யத்தில் ஸ்வாமி யருளிச்செய்த ஸ்ரீ ஸூக்திகளிவை; "स एव हि सर्वज्ञः सर्वशक्तिर्महोदारो यागदानहोमादिभिरुपासनेन चाराधित ऐहिकामुष्मिकभोगजातं स्वस्वरूपमपवर्गं च दातुमीष्टे; न ह्यचेतनं कर्म क्षणध्वंसि कालान्तरभाविफलसाधनं भवितुमर्हति" என்று. ப்ரபத்தி பண்ணினாலும் நாமஸங்கீர்த்தநம் செய்தாலும் மற்று எது செய்தாலும் அவை எம்பெருமான் திருவுள்ளத்தில் உகப்புக்கு உறுப்பாகுமத்தனையல்லது அவை நேரே பலனளிப்பவையல்ல. த்ரௌபதீ விஷயத்தில் பலனளித்தவன் எம்பெருமானே. பலனளிக்கும்போது திருவுள்ளத்தில் உகப்பு உண்டாகியே தீரவேணும். அவ்வுகப்பு ப்ரபத்தியினாலுண்டாயிற்று என்று ஓரிடத்திலும், திருநாமோச்சாரணத்தினாலுண்டாயிற்று என்று மற்றோரிடத்திலும் சொல்லியிருந்தாலும் இதில் முரண்பாடு சிறிதும் கிடையாது; இரண்டும் ஒன்றேயன்றி வெவ்வேறுபட்டதல்ல. வர்ஷஶதம் போராடினாலும் இதுவே ஸித்தாந்தமாகத் தேறும்.

12. இதனை இன்னமும் சிறிது விவரிப்போம். த்ரௌபதீ வஸ்த்ராபஹார வ்ருத்தாந்தம் மஹாபாரதத்தில் ஸபாபருவத்தில் தொண்ணூறுமத்யாயத்தில் கூறப்பட்டுள்ளது. அதில் நாற்பத்தொன்று நாற்பத்திரண்டாவது ச்லோகங்கள்—"ज्ञातं मया वसिष्ठेन पुरा गीतं महात्मना। महत्यापदि संप्राप्ते स्मर्तव्यो भगवान् हरिः ॥ इति निश्चित्य मनसा शरणागतवत्सलम्। आकृष्यमाणे वसने द्रौपदी कृष्णमस्मरत् ॥" என்றுள்ளது. இதனால் த்ரௌபதி மாநஸிகமாக ப்ரபத்திபண்ணினளாகவே விளங்குகிறது. வஸிஷ்ட மஹர்ஷியும் "ஸ்மர்த்தவ்யோ பகவாந் ஹரி: ' என்றே சொல்லிவைத்திருந்தாராகையாலே அவருபதேசித்ததும் மாநஸிக ப்ரபத்தியே. இதற்குமேல் "சங்க சக்ர கதாபாணே!" என்று தொடங்கி ஆறு ச்லோகங்களினால் அவள் மிகவும் கதறினதாகத் தெரியவருகிறது. அங்கு முடிவில் ஊன்றிப்பார்த்தால்

“प्रपन्नां पाहि गोविन्द कुरुमध्येऽवसीदतीम्। इत्यनुस्मृत्य कृष्णं सा हरिं त्रिभुवनेश्वरम्। प्रारुदद्दुःखिता राजन् मुखमाच्छाद्य भामिनी ॥” என்கிற விடத்தில் “அநுஸ்ம்ருத்ய” என்றே சொல்லி யிருக்கையாலே அங்குள்ளதெல்லாம் நெஞ்சி லோடினதைச் சொன்னபடியே யாகிறது. “கோவிந்தேதி யதாக்ரந்தத் க்ருஷ்ணா மாம் தூரவாஸிநம்” என்கிற கண்ணபிரானுடைய நிர்வேத ச்லோகத்தில் ‘ஆக்ரந்தத்’ என்றிருக்கையாலே உரக்கக் கத்தினளென்று தெரிய வருகின்றதே யென்று சிலர் கலங்குவர்கள். உள்ளெலாமுருகிக் குரல் தழுத்து நின்றநிலை தான் ஆக்ரந்தனமாகச் சொல்லப்பட்டது. அது ப்ரபத்திநிஷ்டைக்கு சைதில்யத்தை விளை விக்கும்படியான வ்யாபாரமன்று. இவர்கள், த்ரௌபதி சரணாகதி செய்தபோது அந்த சரணா கதியோடு நில்லாமல் கோவிந்தா கோவிந்தாவென்று பன்முறையும் திருநாம ஸங்கீர்த்தனமும் செய்ததாகக் காண்கையாலே அந்த நாம ஸங்கீர்த்தநமாகிற உபாயாந்தர ஸம்பந்தத்தினால் சணற்கயிறுகண்ட ப்ரஹ்மாஸ்த்ரம் போலே ப்ரபத்தி நழுவிப்போனபடியாலே அது கார்யகரமாகாமற் போயிற்றென்றும், நாமஸங்கீர்த்தந பலமாகவே வஸ்த்ரவ்ருத்தி ஏற்பட்ட தென்றும் சொல்லுகிறார்கள். இதில் சிறிதும் ஔசித்யம் காண்கின்றிலோம். த்ரௌபதிக்கு சரணாகதி நழுவிவிட்டதென்று சொல்லுவது ஸப்ரதிபந்நமன்று. சரணாகதியினால்தான் அவள் பலன்பெற்றாளென்பது உறுதி. நாமஸங்கீர்த்தநமாகிற உபாயாந்தரத்தில் அவள் கைவைத்தாளென்றும், அதுதான் பலனளித்ததென்றும் ப்ரபத்தியானது அவளுக்கு வ்யபிசரித்துவிட்டதென்றும் சொல்லுகிற வார்த்தை ஸர்வாத்மநா அஸங்கதம்.

13. “ஆழ்வார்கள்...ப்ரபத்திபண்ணிற்றும் அர்ச்சாவதாரத்திலே” என்கிற ஸ்ரீ வசநபூஷணஸூக்தியின்படி ஆழ்வார்கள் பண்ணின ப்ரபத்தியிலும் அபரிமிதமான நாம ஸங்கீர்த்தனங்களைக் காணநின்றோம். * உலகமுண்ட பெருவாயனில் எத்தனை திருநாமங் கள் அநுஸந்திக்கப்பட்டனவென்று பார்க்குமளவில் அபரிமிதமான நாமங்கள் காணலாம். இதனால் சணல்கண்ட ப்ரஹ்மாஸ்த்ரம் போலே ஆழ்வாருடைய ப்ரபத்தி நழுவிவிட்ட தென்று சொல்லுவாருண்டோ? ப்ரபத்தி நிஷ்டர்கள் தங்களுடைய நிஷ்டையை வெளிக் காட்டக்கூடிய சப்தராசிகளை உச்சாவசமாகப் பொழிவதுண்டு; அவை ஆர்த்தியின் கனத்தைக் காட்டுவதிலே பர்யவஸித்து நிற்குமேயல்லது உபாயாந்தர ப்ரவ்ருத்தியாகி சணற் கயிற்றின் ஸ்தானத்திலே நிற்கமாட்டா. எம்பெருமானார் சரணாகதிகத்யத்திலே “சரணம் அஹம் ப்ரபத்யே” என்றவளவோடு நிற்கவில்லையே; அங்குள்ள வாக்யஸ்தபகங்கள் சணல் ஸ்தானத்திலே நிற்பனவென்று நெஞ்சாலும் நினைக்கத் தகாதே. கிம் பஹுநா? த்ரௌபதி செய்தது சரணாகதியே. அவள் மாநஹாநி நேராவண்ணம் காத்தருள வேணுமென்று இவ் வளவுக்காக ப்ரபத்திபண்ணினளேயல்லது கண்ணபிரான் ஸாக்ஷாத்தாக ஓடிவர வேணு மென்று ப்ரபத்தி செய்திலள். அவள் கோலின பலன் கைபுகுந்ததென்பதில் ஸந்தேஹ மில்லை. பட்டர் ஸஹஸ்ரநாம பாஷ்யத்தின் உபோத்காதத்தில் நாமஸங்கீர்த்தனத்தை ஸ்வதந்த்ரோபாயமாக வைத்து அருளிச்செய்திருக்கிற விஷயங்கள் தனிப்பட்டவை. ப்ரக்ரு தத்தில் த்ரௌபதி நாமஸங்கீர்த்தனத்தைத் தஞ்சமாகப் பற்றினவளல்லள். சரணாகதியைத் தான் தஞ்சமாகக் கொண்டாள். அவள் பண்ணின நாமோச்சாரணம் சரணாகதியின் உள்ளீ டானதொன்றே யொழிய வேறுபட்டதன்று. மேகம் பெய்ததனால் நெல் விளைந்தது என்று ஒருவன் சொல்லுகிறான்; தண்ணீர் பாய்ந்தபடியாலே நெல் விளைந்தது என்று மற்றொருவன் பேசுகிறான். இந்த வார்த்தைகளில் பரஸ்பர விரோத சங்கைக்கு அவகாசமுண்டோ? இதுபோலவே ப்ரபத்தியின் பலனாக வஸ்த்ரவ்ருத்தியாயிற்று என்று சொல்லுவதும்,

திருநாமம் சொன்னதின் பலனாக அதுவாயிற்று என்று சொல்லுவதும் வ்யாஹதங்களல்லவென்று கொள்ளக்கடவது. இதைச்செவ்வனே கிரஹிக்கமாட்டாதவர்கள் எத்தனை பக்கங்களெழுதினாலும் அத்தனையும் அரண்யருதிதமே யென்னத்தட்டில்லை.

14. த்ரௌபதியானவள் மஹாஸபையில் துச்சாஸநனால் பரிபவப்படுத்தப்படுகிற ஸமயத்திலே அவள் த்வாரகாநாதன் திருவடிகளிலே ப்ரபத்திபண்ணி ரக்ஷணம் பெற்றாளென்று சொல்லப்படுகிறது. ரக்ஷணமாவது என்ன? என்று ஆராயுமளவில் அநிஷ்டத்தைப் போக்கி இஷ்டத்தைத் தருகையே ரக்ஷணமென்று மஹான்கள் கூறுகின்றார்கள். இஷ்டத்தைத் தருகை அநிஷ்டத்தைத் தவிர்க்கை என்கிற இரண்டில் ஏதேனுமொன்று செய்தால் ரக்ஷணமாகாது; இரண்டும் செய்தால்தான் ரக்ஷணமாகும். ஆனால் ரக்ஷ்யபூதன் இரண்டையும் கோராமல் இரண்டத்து ஒன்றையே கோரியிருந்து அவ்வொன்றை நிறைவேற்றினால் அது ரக்ஷணமாகாதோ? என்று கேட்கவேண்டா. ஆகும். ஆனாலும் ரக்ஷணம் செய்யுமிடங்களில் அர்த்தாத் இரண்டும் ஸித்தித்தே தீரும். இராமன் விச்வாமித்ரயாகத்தை ரக்ஷித்தானென்கிறோம். விச்வாமித்திரமுனிவர் தம்முடைய வேள்விக்கு இடையூறு விளைக்கும் ராக்ஷஸர்களை வதம் செய்யவேணுமென்று [அநிஷ்ட நிவ்ருத்தியை மாத்திரம்] அபேக்ஷித்திருந்தாலும் ஸ்ரீராமபிரான் செய்தருளின ரக்ஷணமானது அநிஷ்டநிவாரண ரூபமாகவும் இஷ்டப்ராபண ரூபமாகவும் தலைக்கட்டியிருக்கின்றது. ராக்ஷஸவதம் செய்தது அநிஷ்ட நிவாரணம். யஜ்ஞம் குறையற நடந்தேறும்படிசெய்து அவபிரதம் செய்வித்தது இஷ்ட ப்ராபணம். இவ்விதமாகவே எங்கும் காணலாம். த்ரௌபதீரக்ஷணத்திலும் அநிஷ்ட நிவாரணம் இஷ்டப்ராபணம் ஆகிற இரண்டு அம்சங்களும் காணலாம். த்ரௌபதியின் அபிப்ராயத்தாலே ப்ராபணீயமான இஷ்டம் எது? நிவாரணீயமான அநிஷ்டம் எது? என்று ஆராய்ச்சி செய்யவேணும். ரஜஸ்வலையான த்ரௌபதியை துச்சாஸநன் ஸபையிலே கொண்டு நிறுத்தித் துகிலுரியத் தொடங்கினான்; அப்போது அவளுக்கு மஹத்தான துக்கமுண்டாயிற்று. அதனால் சரணாகத வத்ஸலனான துவரைப்பிரானை நோக்கிச் சரணாகதி செய்தாள். "சங்கசக்ரகதாபாணே! த்வாரகாநிலயாச்யுத!, கோவிந்த! புண்டரீகாக்ஷ! ரக்ஷமாம் சரணாகதாம்." என்று அநுஸந்தித்தாள். சரணாகதையான என்னை நீ ரக்ஷித்தருளவேணுமென்றாள். மேலும் "ஹா க்ருஷ்ண! த்வாரகாவாஸிந்! க்வாஸி யாதவநந்தந, இமாமவஸ்தாம் ஸம்ப்ராப்தாம் அநாதாம் கிமுபேக்ஷஸே?" என்றாள். இப்படிப்பட்ட துரவஸ்தையிலேயிருக்கிற அநாதையான என்னை உபேக்ஷிக்கலாகுமோ? என்றாள். இந்த ச்லோகத்தில் "த்வாரகாவாஸிந்" என்று சொல்லி உடனே 'க்வாஸி' எங்கிருக்கிறாயென்று கேட்டிருப்பதைப்பற்றி விமர்சிக்கவேணும். கண்ணன் த்வாரகையிலிருக்கிறானென்று எண்ணித்தானே த்வாரகாநிலய! என்றும் த்வாரகாவாஸிந்! என்றும் விளித்தாள். அங்ஙனம் விளித்தவள் நீ எங்கிருக்கிறாய்? என்று கேட்டதானது, * கருதரியவுயிர்க்குயிராய்க் கரந்தெங்கும் பரந்துறையுமொருதனி நாயகமான நீ இல்லாதவிடமுண்டோ? த்வாரகையில் மாத்திரமன்றே நீயிருப்பது; அங்குமிங்கு மெங்கு மிருக்கிறாயன்றோ. அப்படியிருக்கின்ற உனக்கு நான் படும் பரிபவம் தெரியாமலா இருக்கிறது? என்னுமபிப்ராயத்தை யுட்கொண்டது. இதைத்தானே அடுத்தபடி ஸ்பஷ்டமாகவும் சொல்லுகிறாள்—"கோவிந்த த்வாரகாவாஸிந்! க்ருஷ்ண கோபீஜநப்ரிய, கௌரவை: பரிபூதாம் மாம் கிம் ந ஜாநாஸி கேசவ" என்று. ஆகவே, நான் படும் பரிபவம் உனக்குத் தெரிந்திருந்தும் இதை நீ பரிஹரியாமலிருப்பது

தகுதியோ? என்றிவ்வளவே த்ரௌபதியின் வார்த்தையிலிருந்து நன்ருகத் தெரியவருகின்றது. அவளுடைய பரிபவம் மேன்மேலும் வளர்ந்து செல்லாதபடி உடனே பரிஹரிக்கப்பட்டு விட்டதென்பது ஸர்வஜநஸம்ப்ரதிபந்நமான விஷயம். ஆக, த்ரௌபதிக்கு விவக்ஷிதமான ரக்ஷணம் குறையற நடந்தேறியதென்று கொள்வதில் ஒருவிதமான விவாதமும் ஒருவர்க்கும் கிடையாது. காலக்ரமேண நடைபெற வேண்டியவையும் நடந்தே தீர்ந்தன.

15. அந்த ஸமயத்தில் கண்ணபிரான் நேரில்வந்து ஸேவை ஸாதிக்கவேணு மென்பதை த்ரௌபதி கோரியிருந்தவளல்லள். கஜேந்திராழ்வான் முதலை துணிபடவேணுமென்கிற விரோதிநிரஸநத்தைக் கருதாமல் எம்பெருமான் நேரில் எழுந்தருளி ஸேவை ஸாதித்தருள வேணுமென்பதையே அபேக்ஷித்திருந்தானென்பது "நாஹம் கலேபரஸ்யாஸ்ய த்ராணார்த்தம் மதுஸூதந, கரஸ்தகமலாந்யேவ பாதயோராப்பிதும் தவ" என்கிற கஜேந்த்ரசூர்ணிகை ... ("கஜேந்த்ரசண்டோக்தி")யாலும், "தோழுங்காதல் களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே" என்கிற திருவாய்மொழியாலும் ஸுஸ்பஷ்டம். இவ்விதமான அபேக்ஷை த்ரௌபதிக்கு இருந்ததில்லை. அந்த ஸமயத்தில் இஃது இருக்க ப்ரஸக்தியுமில்லை, கண்ணபிரான் தன்னுடைய அநிர்வசநீயமான குண விசேஷத்தினால் த்ரௌபதி பரிபவப்பட்டபோது ஐயோ! நான் நேரில்சென்று உதவப்பெற்றிலேனே!, அந்தோ! என் பிழைப்பு என்னுயிற்று' என்று துடித்ததுண்டு. இதனால் த்ரௌபதியானவள் கண்ணபிரானுடைய ஸமக்ஷ ஸமாகமனத்தை அப்போது விரும்பியிருந்தாளென்று கல்பிக்கலாகாது. வஸ்துஸ்திதி இப்படியிருக்க, ஸ்ரீ க்ருஷ்ணன் நேரில் எழுந்தருளாமைக்குக் காரணம் சரணாகதி செய்பவர்கள் புருஷகாரத்தை முன்னிட்டே பற்றவேணுமென்பது முறையென்றும், த்ரௌபதி அப்படி பற்றவில்லையென்றும அதனாலேயே அவளுடைய சரணாகதி விபலமாகி ஸ்ரீ க்ருஷ்ணன் நேரில் எழுந்தருள நேராமல் போயிற்றென்றும் இவர்கள் சொல்லிக்கொண்டிருப்பது ப்ராமாணிகமன்று. மற்றும் சிலர், ஸ்ரீருக்மிணிப்பிராட்டியானவள் சில ஔசித்யங்களை ஆலோசித்துக் கண்ணபிரானைக் கிளம்பவொட்டாமல் தன்னுடைய லீலாவிசேஷங்களாலே போகரஸங்களில் அழுந்தச்செய்துவிட்டாளென்று கூறுவர். இதெல்லாம் ஹரிகதைக்காரர்களின் ஸபாவ்யாமோஹக வ்யாஹாரவிசேஷங்களத்தனை! மஹாபாரதத்திற்கு அடியோடு பொருந்ாதவை.

16. பூர்வாசாரியர்களின் ஸ்ரீ ஸூக்திகளில் பரஸ்பர விரோதமிருப்பதாக வைத்துப் பரிஹாரமுணர்த்துவதிற் காட்டிலும் உண்மையில் பரஸ்பரவிரோதமே கிடையாதென்று கண்டறிதல் சாலச்சிறக்கும். "பரஸ்பர விரோதம் ஸ்பஷ்டமாக விளங்கும்போது அஃது இல்லையென்று எங்ஙனே சொல்லலாகும்?" என்று வாதிப்பவர்கள் ஊன்றிக்காண்க. த்ரௌபதி சரணாகதி செய்தாளென்பதை யாரும் மறுக்க முடியாது. சாஸ்த்ரஜ்ஞர்கள் "தர்மிக்ராஹக மாந ஸித்தம்" என்றொரு வார்த்தை சொல்லுவர்கள். அவ்வண்ணமாகவே இங்கும் "ரக்ஷமாம் சரணாகதாம்" என்கிற த்ரௌபதீ வசனத்தினாலேயே அவள் சரணாகதி செய்தாளென்பது ஸித்தமாயிராநின்றது. இதுபோலவே அவள் புடவை சுரக்கப் பெற்றாளென்பதும் ப்ரமாணாரூடமாயிராநின்றது. "யதநந்தரம் யத பவதி தத் தஸய காரணம்" என்கிற நியாயத்தின்படி சரணாகதி செய்தவுடனே வஸ்த்ரவிவ்ருத்தி கண்டோமாகில் இது சரணாகதியின் பலனே யென்று நிர்ணயிப்பதில் என்ன அருமை. "தர்மபுத்ராதிகளுக்குப் பலம் ராஜ்யம்" என்கிற ஸ்ரீ வசநபூஷண ஸூக்திக்கு அர்த்த விசாரம் செய்யப்புகுந்து, தர்மபுத்ராதிகள் ப்ரபத்தியினால் அடைய விரும்பின பலன் என்று அர்த்தமா? அடைந்த பலன்என்று அர்த்தமா?

என்று விகல்பித்து அடைய விரும்பின பலன் என்னவேணுமே யல்லது—அடைந்தபலன் என்னவொண்ணாது என்று இவர்களெழுதுவதும் இதற்கு ப்ரமாணங்கள் காட்ட ப்ரயாஸங் கொள்வதும் வீணான ஆயாஸம். த்ரௌபதி மாநபங்க பரிஹாரத்தை யபேக்ஷித்தாள், அதனைப்பெற்றாள். விஷயம் முடிந்தது.

17. ஸ்ரீவசநபூஷணத்தில் ப்ரபத்திக்குப் ஃபலநியமம் கிடையாதென்று ஸாதித்த பிள்ளைலோகாசார்யரின் திருவுள்ளம் என்ன? ப்ரபத்தியானது ஸகல பலன்களையும் கொடுத்துத் தீருமென்பதுதானே. அந்த ப்ரகரணத்தில் தர்மபுத்ராதிகளை எடுத்திருப்பது எதற்காக? இதற்காகத்தானே. அங்கே காட்டப்பட்டுள்ள காக, காளிய, கஜேந்த்ர, விபீஷணாதிகளிடத்திலே ப்ரபத்தியை ஸபலமாகக் கண்டிருக்கிறோமே. அதேரீதியில் த்ரௌபதியிடத்திலும் தத்ஸாபல்யம் கண்டிருக்கிறோமே. இதை இல்லைசெய்யவொண்ணுமோ? ஸ்ரீராமபிரானையும் இந்த ப்ரகரணத்தில் சேர்த்தெடுத்திருக்கிறதே. நநு, "பெருமாளுக்குப் பலம் ஸமுத்ரதரணம்" என்றும் அருளிச்செய்திருக்கிறதே; பெருமாளுக்கு அந்தபலன் ப்ரபத்தியினால் கைபுகவில்லையே! என்பார்க்குத் தெரிவிக்கப்படுகிறது. ப்ரபத்திக்கு அதிகாரி ஆகிஞ்சந்யமும் அநந்யகதித்வமுமுடையவன்" என்று ஸ்வாமி தாமே யருளிச்செய்திருப்பது ப்ரஸித்தம். ஸர்வலோக சரண்யரான பெருமாள் ப்ரபத்திக்கு அதிகாரியேயல்லர். * அஸமர்த்தம் விஜாநாதி மாமயம் மகராலய:* என்று, அனந்தரம் பெருமாள்தாமே அருளிச் செய்ததைக் கொண்டு ஈட்டிலே பெருமாள்ப்ரபத்திக்கு அதிகாரியல்லரென்று முடிக்கப்பட்டிருக்கிறது. "அஸமர்த்தம் விஜாநாதி யென்பாராகாது" என்பது ஈட்டு ஸ்ரீஸூக்தி. அப்படியிருக்க, இங்கு ஸ்வாமி பெருமாளையும் ப்ரபத்தாக்களிலே ஒருவராக எடுத்திருப்பது எதனாலே? என்கிற விசாரம் தனிப்பட்டது. இது பூருவர்களாலே சர்ச்சித்து முடிக்கப்பட்டிருக்கும் விஷயமாதலாலும் ப்ரக்ருதம் இந்த விசாரம் அநபேக்ஷிதமாகையாலும் விடப்பட்டது. த்ரௌபதிக்கு ப்ரபத்தியின் பலன்ஸித்தமாயிற்றென்பதே நூற்கொள்கை. இது மஹாபாரதத்தில் ஸுஸ்பஷ்டமென்பது பண்டே பரக்க நிரூபிதம்.

18. விசதவாக்சிகாமணிகளான மணவாளமாமுனிகளின் தெள்ளிய திவ்யஸூக்திகளுக்கு அரும்பதவிளக்கங்கள் அநபேக்ஷிதம். பூர்வாசார்ய ஸ்ரீ ஸூக்திகளோடொப்ப மதிக்கத்தக்க பெருமையில் ஏகதேசமும் அரும்பதவுரைகளுக்குக் கிடையாதென்பது சர்வித சர்வணம். ஸ்ரீமத் எம்பார் ஜீயர்ஸ்வாமிக்கும் அண்ணாவப்பங்காருக்கும் மிக முற்பட்ட மஹாமதிகளால் இயற்றப்பட்ட ஈட்டரும்பதவுரையிலேயே ஆங்காங்கு விபர்யாஸங்கள் காணும்போது, மற்றையோர்களைப்பற்றி இங்கு வக்தவ்யமொன்றுமில்லை. அண்ணாவப்பங்காருடைய திருவுள்ளத்திற்கு முரணாக எம்பார்ஜீயர் எழுதியுள்ளவிடங்கள் பலவுண்டு. விரோதமில்லாதவிடங்களில் ஸம்ப்ரதிபத்திக்கு ஸம்வாதமாகக் கொள்ளலாமத்தனை. இது வஸ்துஸ்திதி தெரிவிக்கவேண்டியதற்காக இங்கு எழுதினபடி. ப்ரக்ருதஸ்தலத்தில் அரும்பதவிளக்கத்தினால் ஸாதிக்கத்தக்கதோ பாதிக்கத்தக்கதோ எதுவுமில்லை. பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளைமாத்திரமே நாம் நிதியாகக்கொள்வோம்

19. பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீராமாயணத்தில் பல ச்லோகங்களுக்கு விசேஷார்த்த வியாக்கியானம் செய்தருளியிருப்பதுபோல, த்ரௌபதியின் சரணாகதி ச்லோகமான "சங்க சக்ரகதாபாணே" இத்யாதிக்கும் இன்சுவைமிக்க வியாக்கியான மருளிச்செய்துள்ளார்.

(விவரிக்கிறோம்). அந்தத் தனி ச்லோகத்தில் 'ரக்ஷமாம்' என்று ப்ரதீகமெடுத்து "ரக்ஷிக்கையாவது விரோதியைப்போக்குகையும் அபேக்ஷிதங்களைக் கொடுக்கையும்" என்றருளிச்செய்து மேலே சரணுகதாம் என்றதின் விவரணத்தில் "இவளுக்கு வஸ்த்ரவர்த்தநமும் சத்ருஸம்ஹாரமும் அபேக்ஷிதம்" என்று அருளிச்செய்துவைத்தார். வஸ்த்ரவர்த்தநம் உடனே பலித்தது; சத்ருஸம்ஹாரம் நாளடைவில் பலித்தது. சத்ருஸம்ஹாரத்தையும் உடனே பலிப்பிக்கவல்ல ஆற்றல் கண்ணபிரானுக்கு இருக்கச்செய்தேயும் அதை விளம்பித்து முடித்ததானது கீதாசாஸ்த்ராவதாரணம் முதலியவற்றைக் கருதியென்றும், திருவாய்மொழியை அவதரிப்பிக்க வேண்டி ஆழ்வாருடைய ப்ரபத்தியை விளம்பேந ஸபலமாக்கினது போலவே இதுவுமென்றும் பெரியார்கள் நிர்வஹித்துள்ளார்கள்.

20. பெரியவாச்சான் பிள்ளை தாமே "சங்கசக்ரகதாபாணே!" என்ற விடத்து வியாக்கியானத்தில் "* தொழுங்காதல்களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே; அப்படியே கூராழி வெண்சங்கேந்தி வந்தருளித் தனக்கு முகங்காட்டவேணுமென்று." என்றருளிச் செய்திருப்பதை நோக்கி இவர்கள் மயங்குகிறார்கள். அங்கு பிள்ளை தாமே உடனே விவரித்தருளியிருக்கிறார்; (எங்ஙனே யென்னில்;) "பின்பு இவளுக்காகவிறே*ஸ பாஞ்சஜந்யோச்யுத வக்த்ரவாயுநா * ஹ்ருதயாநி வ்யதாரயத் * என்று கலங்கச் சங்கம் வாய்வைத்ததும்—ஆழி கொண்டன்றிரவி மறைத்ததும்—கொல்லாமாக்கோல் கொலைசெய்து பாரதப்போர் எல்லாச் சேனையுமிருநிலத்தவித்ததும்." என்று. இந்த ஸ்ரீஸூக்தியினால் தேறினதென்னவென்றால், காலக்ரமேண கிடைக்கக் கூடியவற்றையே த்ரௌபதி வ்யங்க்யமாக ப்ரார்த்தித்தாளென்றும், அந்த ப்ரார்த்தனையும் க்ரமேணஸ்பலமாயிற்றென்றும் தேறிற்று. (புண்டரீகாக்ஷ!) என்றவிடத்தில் "உன் தாமரைக்கண்களால் நோக்காதொழிவதென்? என்னுடைய ஆபத்துக்கு அவலோகனதானமன்றோ அபேக்ஷிதம்" என்று வியாக்கியானம் செய்தருளியிருப்பதும் இவர்களை மயங்கப்பண்ணும். இதெல்லாம் க்ரமேண நேரவேண்டுமென்றபேக்ஷித்தபடியேயொழிய வேறில்லை. அந்த க்ஷணந்தன்னிலே நேரவேணுமென்று அபேக்ஷிக்கவும் முடியாது. ராவணவதாதிகளின்ஸூவத்தி எப்போது பலித்தது? இங்குச் சிலர் மயங்கவும் கலங்கவுங் கூடுமென்று திருவுள்ளமபற்றியே முடிவாகப் பெரியவாச்சான் பிள்ளை தாமேயருளிச்செய்த ஸ்ரீ ஸூக்திகள்— "இவளுக்கு வஸ்த்ரவர்த்தநமும் சத்ருஸம்ஹாரமும் அபேக்ஷிதம்" என்று. (ரக்ஷமாம்) என்றவிடத்து வியாக்கியானத்தில் "* அலமன்னுமடல் * இத்யாதி." என்று பெரிய திருமொழிப்பாசுரத்தை யெடுத்துக்காட்டியிருக்கிறார் பெரியவாச்சான்பிள்ளை. அப்பாசுரத்தில் தெரிவிக்கப்பட்ட காரியமே த்ரௌபதியினால் இங்கு ப்ரார்த்திக்கப்பட்ட ஸ்வரக்ஷணத்தில் சேர்ந்ததென்று காட்டியருளினபடி.

21. ஸதஸ்ஸில் பரிபூதையான த்ரௌபதிக்கு ரஜஸ்வலாவஸ்தை யென்பது நிர்விவாதமாதலால் அப்போதே கண்ணபிரான் நேராக வந்தருளி ஸேவை ஸாதிக்கவேணுமென்று அவள் கோரினளென்பது பொருந்தாது. பொருந்தாத இந்த அர்த்தத்தை ஒரு ஆசார்யருடைய ஸ்ரீ ஸூக்தியும் காட்டிக்கொடாதென்பது திண்ணம். கண்ணபிரான்நேரில் வந்து ஸேவை ஸாதிக்கவேணுமென்பதும் த்ரௌபதிக்கு நெஞ்சில் ஒரு மூலையில் அபேக்ஷிதமாயிருந்ததென்று கொண்டாலும் ப்ரக்ருதத்தில் அதனால் வருவதொரு ஹாநியில்லை.

22. "த்ரௌபதி திருநாமத்தையுஞ்சொல்லி ப்ரபத்தியையும் செய்தாள்; ஆனாலும் அவள் திருநாம ஸங்கீர்த்தனமடியாகவே பயன் பெற்றவள்; வஸ்த்ரவ்ருத்தி சரணுகதியின்

பயனாக விளைந்ததன்று" என்கிற வார்த்தை மஹாபாரதாதி ஸகலக்ரந்த விருத்தம். இந்த வார்த்தை எங்ஙனே யிராநின்றதென்னில்? ஸ்ரீராமன் அம்புகளைச் சார்ங்கத்திலே தொடுத்து அரக்கருடலில் ப்ரயோகமும் பண்ணினான்; ஆனாலும் அம்புகளை வில்லில் தொடுத்ததனால் தான் ராக்ஷஸவதம் விளைந்தது; பாணப்ரயோகம் செய்ததனால் அது விளையவில்லை—என்னுமாபோலே யிருந்தது. அதற்குமிதற்கும் எள்ளளவும் வாசிகிடையாது.

23. "ப்ரபத்திசரீரத்தில் திருநாம ஸங்கீர்த்தனம் ஓர் உறுப்பாயுள்ளதென்று நாமெழுதியிருப்பது ஒருவர்க்கும் மறுக்கமுடியாதது. திருநாமஸங்கீர்த்தனத்தைத் தனிப்பட்ட காரியமாக வைத்துப் பார்த்தாலல்லவோ இரண்டு க்ரந்தங்களுக்கும் பரஸ்பரவிரோத சங்கை உண்டாகும். நாமஸங்கீர்த்தனத்தை ப்ரபத்தியிலே அவயவைகதேசமாக இசைய வேண்டின பின்பு விரோத சங்காப்ரஸக்தி தானுமில்லையே. வஸ்த்ரவ்ருத்தி ப்ரபத்தியின் பலமன்றென்று சொல்லுவது நிராதாரமானது. எந்த ப்ரமாணத்தாலும் அது தேறாது. த்ரௌபதீ வ்ருத்தாந்தத்திற்கு முதன்மையான ப்ரமாணம் மஹாபாரதம். எந்த ஆசார்யரும் சரித்திரங்களைச் சொல்லுமிடத்து இதிஹாஸ புராணங்களை யனுஸரித்துச் சொல்லக்கடமைப்பட்டவர்களே யல்லது தாங்கள் ஸ்வதந்த்ரமாக ஒன்றும் சொல்லகில்லார். அந்த மஹாபாரதத்தில் த்ரௌபதி ப்ரபத்தி பண்ணினதும் அதனால் வஸ்த்ரவ்ருத்தி பெற்றதும் ஸ்பஷ்டமாகக் கூறப்பட்டிருக்க, வஸ்த்ரவ்ருத்தி ப்ரபத்தியின் பலமன்று" என்று சொல்லும் வார்த்தையானது மஹாபாரதம் நடையாடும் நாட்டில் விலை செல்லக்கூடியதன்று.

மஹாபாரதே ஸபாபர்வணி தொண்ணூறுமத்யாயத்தில் (42ஆம் ச்லோகத்தில்) த்ரௌபதியின் ப்ரபத்தி தெரிவிக்கப்பட்டது. 48 ஆம் ச்லோகம் வரை அவளுடைய ஆர்த்தியின் கனம் விவரிக்கப்பட்டது. உடனே * தஸ்ய ப்ரஸாதாத் த்ரௌபத்யா: க்ருஷ்யமாணே அம்பரே ததா, தத்ரூபமபரம் வஸ்த்ரம் ப்ராதுராஸீத் அநேகச: * என்று ப்ரபத்தியின் பயனாகவேபுடவை சுரந்த சரிதை பேசப்பட்டிருக்கிறது. ப்ரபத்தி விபலமாய்விட்டதென்கிற வார்த்தை மஹாபாரதத்திற்கு நெடுந்தூரத்திலே நிற்கவேண்டுமத்தனை.

24. நம்மாழ்வார் (திருவிருத்தத்தில்) "கண்ணன் வைகுந்தனோடு என்னெஞ்சினாரைக் கண்டாலென்னைச் சொல்லி அவரிடை நீரின்னஞ் செல்லீரோ" என்றும் (திருவாய்மொழியில்) * என்னெஞ்சினாருமங்கே யொழிந்தார், உழந்தினி யாரைக் கொண்டென்னுசாகோ?* என்றுமிப்புடைகளிலே அருளிச்செய்த பாசுரங்களை மேலெழப் பார்ப்பவர்கள் ஆழ்வாருடைய திருவுள்ளமானது ஆழ்வாரை விட்டுப் பிரிந்தே போய்விட்டதென்று சொல்லுவதுண்டு. நெஞ்சு பிரிந்துபோய்விட்ட பிறகு ஆழ்வார் எப்படி பாசுரம் பாடுகிறாரென்று கேட்டால் விழிப்பர்கள். நெஞ்சுக்கு விஷயாந்தர வ்யாஸங்கலேசமுமில்லை யென்பதைத் தெரிவிப்பதற்காக வாக்விந்யாஸ சமத்காரமிது வென்று அறியப்பெறுவார் சிலரே. அது போலவே, திருநாமம் சொன்னவர்களுக்குப் பலன் தப்பாது என்னுமிடத்தைத் தெரிவிப்பதற்காக "அவன் தூரஸ்தனானாலும்" இத்யாதி ஸ்ரீஸூக்திகள் அவதரித்தபடி. "பிராட்டியுமவனும் விடிலும் திருவடிகள்விடாது; திண்கழலாயிருக்கும்" என்ற முமுக்ஷுப்படி ஸ்ரீஸூக்தியே இதற்கு நிதர்சநம். உண்மையில் அவன் காரியம் செய்தானா? திருநாமம் ஸ்வதந்த்ரமாய்க் காரியம் செய்துவிட்டதா? என்று ஆர அமர விசாரிக்குமளவில் 'திருநாமத்

தால் ப்ரஸந்நனான அவன்தான் கார்யம் செய்தானென்று சொல்லிக் கைகூப்பி நிற்க வேண்டுமத்தனையே. திருநாமம் த்வாரமாகத்தான் நிற்கும். ரஹஸ்யத்ரயமீமாம்ஸா பாஷ்யத்தில் 'மந்த்ரகரணகரக்ஷணஸ்ய ஸ்வரூபேண பகவத்கர்த்ருக ரக்ஷண பர்யவஸாயித்வம்'' நிகமனம் செய்யப்பட்டிரா நின்றது. அதை நிரஸிக்க ஸர்வசக்தனான அவன் தன்னாலுமாகாது. ''பர்யவஸாயித்வேபி'' என்ற சொல்லி மேலே யெழுதியிருப்பதானது மூல ஸ்ரீஸூக்திக்குச் சேமம் செய்யவேண்டிய முறையில் அமைந்தது.

25. முமுக்ஷுப்படி ஸூக்திக்கும் ஸ்ரீ வசநபூஷண ஸூக்திக்கும் பரஸ்பர விரோத ப்ரஸங்கமே கிடையாதென்று நாம் நிர்வஹித்த கட்டளையே தஞ்சம். இங்ஙனன்றிக்கே, விரோதமுண்டுதானென்றால் அந்த விரோதம் தரிமூர்த்திகள் திரண்டு வந்தாலும் பரிஹரிக்க வொண்ணாததேயாகும். த்ரௌபதி ப்ரபத்தி பண்ணினதும், அந்த ப்ரபத்தியினால் வஸ்த்ர வ்ருத்திபெற்றதும் மஹா பாரதத்தில் பேர்க்கவும் பேராதபடி கல்வெட்டாக விளங்காநிற்க, அதைக் கண்ணழித்துச் செய்யும் விரோதபரிஹாரம் ப்ராமாணிகர்களால் ஏற்கத்தக்கதன்று. மஹாபாரதத்தில் த்ரௌபதி ப்ரபத்தி பண்ணினதாகச் சொல்லப்படவில்லை யென்று கொள்ளுகிறோமென்றும், அவள் நாமஸங்கீர்த்தனம் பண்ணினதாகவே சொல்லப்படுகிறதென்று கொள்ளுகிறோமென்றும், அந்த நாமஸங்கீர்த்தனத்தின் பலனாகவே வஸ்த்ர வ்ருத்தியாயிற்றென்று மஹாபாரதத்தின் கருத்தாகச் சொல்லிவிடுகிறோமென்றும் சொல்லப் பார்க்கில், அப்போது 'த்ரௌபதி ஸ்நாதையாயன்றே ப்ரபத்தி பண்ணிற்று'' இத்யாதி ஸ்ரீவசந பூஷண ஸூக்திகள் நிராதாரமாய் முடியும். இல்லாத விரோதமொன்றை ஏறிட்டுப் பரிஹரிக்கப்புகுந்ததன் பயன் ப்ரபல விரோத ப்ராபணமாய் முடிந்து நிற்கும்.

26. ப்ரபத்திக்குப் பலநியமமில்லையென்று அருளிச்செய்த பிள்ளை லோகாசார்யருடைய திருவுள்ளமென்னவென்று பார்க்கவேண்டியது அவசியம். எந்த பலத்தை யுத்தேசித்தும் ப்ரபத்திபண்ணலாமென்று இவ்வளவேயன்று திருவுள்ளம். மணவாளமாமுனிகள் *ஸாஹி ஸர்வத்ர ஸர்வேஷாம் ஸர்வகாம பலப்ரதா* என்கிற ஸநத்குமார ஸம்ஹிதா வசனத்தையெடுத்துக் காட்டியருளி ப்ரபத்தி ஸகல பலன்களையுமளிக்கவல்லது என்பதே ஸ்ரீ வசநபூஷண ஸூக்தியின் திருவுள்ளமாக விசதீகரித்துள்ளார். அப்படிப்பட்ட ப்ரகரணத்தில் ப்ரபந்நையாகக் கூறப்பட்டிருக்கிற த்ரௌபதிக்கு ப்ரபத்தியினால் பலனில்லை யென்றால் இது எங்ஙனே பொருந்தும்? ஒரு மருத்துவனுடைய பெருமையைப் பேசுமிடத்து 'இவர் சிகித்ஸிக்குமிடத்தில் வியாதி நியமமில்லை' என்று சொல்லி, இன்னின்ன வியாதிகளின் பரிஹாரார்த்தமாக இன்னாரின்னார் இவரிடம் வந்து பணிந்தார்களென்றும் சொல்லிவைத்தால், அப்படி வந்து பணிந்தவர்கள் யாவரும் வியாதி தீரப்பெற்றார்களென்பது அங்கு விவக்ஷிதமா? வந்தவர்கள் மரணமடைந்தார்களென்பது விவக்ஷிதமா! என்று பார்க்கவேணும். ''வியாதிகளின் பரிஹாரார்த்தமாக வந்து பணிந்ததை மாத்திரமே நான் சொல்லவல்லேன்; பிறகு அவர்கள் கதி என்னாயிற்றோ, அது தெரியாது'' என்னுமவன் மருத்துவனுடைய பெருமையைச் சொல்லுபவனாக ஆவனோ? ஒருகாலுமாகான். ''ஆரே துயருழந்தார் துன்புற்றாராண்டையார்?—நாளும்பனடந்து'' என்று பேயாழ்வார், ப்ரபத்தி பண்ணினவர்களுக்குப் பலன் தப்பிற்றில்லையென்று திண்ணமாக வருளிச் செய்கிறார்.

27. ஒரு வித்வானுடைய பெருமையைச் சொல்லவந்தவர் ''இவர் ப்ரவசனம் செய்யுமளவில் சாஸ்த்ர நியமமில்லை' என்றால் ஸகல சாஸ்த்ரங்களையும் இவர் அவலீலையாக

ப்ரவசநம் செய்துவருகிறாரென்பது விவக்ஷிதமே யொழிய, 'சாஸ்த்ரங்களை வாசிக்க இவரிடம் பலரும் வருகிறார்களத்தனை, பிறகு என்னாகிறதோ தெரியாது' என்பதன்று. அப்படிச் சொன்னால் அது அவர்பெருமையைச் சொல்லுவதாக ஒரு நாளுமாகாது, சிறுமையையே சொன்னபடியாம். இதை நன்கு குறிக்கொள்ளவேணும். ப்ரபத்திக்குப் பல நியமமில்லையென்றும், பலநியமமின்றிக்கே யொழிந்தபடி யென்னென்னில்? என்று மருளிச்செய்த பிள்ளைலோகாசார்யர் ப்ரபத்தி ஸகல பலன்களையும் வரையாதே கொடுத்துத் தீருகிறது என்கிறாரே யல்லது, வேறொன்றை விவக்ஷிக்கிறாரல்லர். பெயரிட்டுச் சில வ்யக்தி விசேஷங்களை நிர்தேசித்திருப்பதும் அவர்கள் ப்ரபத்தியினால் பேறு பெற்றார்களென்கைக்காகவே. இந்த ச்ரேணியில் ஸ்ரீராமபிரானையும் சேர்த்திருக்கிறதே யென்பது கொண்டு கலங்கவேண்டாவென்று முன்னமே சொல்லியாயிற்று. அதைப்பற்றி மீண்டும் விவரிக்கிறோம். "விஷய நியமமேயுள்ளது" என்னப்பட்ட விஷய நியம நிர்ப்பந்தத்தைக் கணிசியாமல் அஸ்தாநே ப்ரபத்தி பண்ணுவது தகாது என்பதைக் காட்டுவதற்காகவே ஸ்ரீ ராமாயணத்தில் ஸமுத்ர சரணாகதி யென்பது வந்துபுகுந்தது. யுத்தகாண்டத்தின் முதலிலேயே * ஸர்வதா ஸுஸமர்த்தோஸ்மி ஸாகரஸ்யாஸ்ய லங்கநே * என்றுவாய்விட்டுச் சொல்லியிருக்கின்ற பெருமாள் உவர்க்குழியைச் சரணம் புகவேண்டிற்றில்லை. * ஸமுத்ரம் ராகவோ ராஜா சரணம் கந்துமர்ஹதி * என்ற பக்தவசனத்திற்கு உடன் படுகின்றமைகாட்டுதல் ஒன்று. அஸ்தாநே ப்ரபத்திபண்ணினால் மநஸ்தாபந்தான் அதற்குப் பலன் என்று காட்டுதல் முக்கியமானது. அதனைக் காட்ட வேண்டியது சாஸ்த்ர க்ருத்யமுமாகையாலே அது காட்டவேண்டியே (ஸ்ரீவசநபூஷண திவ்ய சாஸ்த்ரே) பெருமாளுடைய சரணாகதியை ஊடே சேர்த்ததென்று பூருவர்களால் தத்துவம் தெரிவிக்கப்பட்டுள்ளது. பெருமாளொருவரைத் தவிர்த்து மற்றவர்கள் செய்த ப்ரபத்திகளெல்லாம் பலனோடு சந்தித்தவையே யொழிய நிஷ்ப்பலமான ப்ரபத்தி ஒன்றுகூட இல்லை.

28. "திரௌபதி ப்ரபத்தி பண்ணினது வாஸ்தவம்; அது நாமோச்சாரணமாகிற உபாயாந்தர ஸ்பர்சத்தாலே [சணல் கண்ட ப்ரஹ்மாஸ்த்ரந்யாயேந] நழுவிப்போயிற்று" என்கிற வாதமானது இந்த வாதம் செய்பவர்களாலேயே நிரஸிக்கப்பட்டொழிந்ததென்க. ப்ரபத்தி கார்யகரமாகவில்லையென்றால் அதைக் கெடுக்கவந்த நாமோச்சாரணம் மாத்திரம் எங்ஙனே கார்யகரமாகும்? ப்ரபத்திக்கு உறுப்பாகச்செய்யும் நாமஸங்கீர்த்தனத்தை சணல் போன்ற விரோதிஸ்தானத்திலே வைத்துப் பேசுமளவில் அபரிமிதமான ஆபத்துகள் நேரும். ஆழ்வார் முதலானாருடைய ப்ரபத்திக்கும் நழுவுதல் சொல்லவேண்டிவரும். "ஆழ்வார் முதலானாருடைய ப்ரபத்திகள் நழுவிவிட்டனவென்று கொண்டாலும் அதனாலுண்டாகும் குற்றம் யாதோ அறிகிலோம்" என்றெழுதியிருக்குமிவர்களுக்கு த்ரோஹமே தேறி நிற்கும். "நாராயணாவோ மணிவண்ணா நாகணையாய்!" என்று நாமோச்சாரணம் பண்ணின கஜேந்த்ராழ்வான், (மத்யத்தில்) அபரிமிதநாமோச்சாரணம் பண்ணியருளின எம்பெருமானார் ......முதலான ஸகலருடையவும் ப்ரபத்திகள் நழுவிவிட்டன வென்றே சொல்லித் தீரவேணும். நாமோச்சாரணமில்லாமல் ப்ரபத்தி செய்தவர்யாவர் ?என்று தேடிப்பிடிக்கவேணும்.

29. நம்மாழ்வாருடையவும் எம்பெருமானாருடையவும் ப்ரபத்திப்ராகாசக ஸ்ரீஸூக்திகளில் காணும் நாமோச்சாரணங்கள் ப்ரபத்திக்கு உபயுக்தங்களான குணவிசேஷங்களைத் தெரிவிப்பனவென்றும், த்ரௌபதியின் ப்ரபத்திப்ரகாசந ப்ரகரணத்திலுள்ள நாமோச்சாரணங்கள் அப்படிப்பட்டவை யல்லவென்றும் சொல்லிவிடுகிறோமென்னில்; இதற்கொரு

ஸம்ப்ரதிபந்நமான ப்ரமாணம் காட்டியே யாகவேணும். அதுகாட்ட இயலாது. "நம்மாழ்வார்போல்வாருடைய ப்ரபத்தியும் த்ரௌபதியின் ப்ரபத்தியும் துல்யமாய்விடுமா" என்றும், "அவர்களுடைய ப்ரபத்தி ப்ரகாசக ஸ்ரீஸூக்திகளிலுள்ள நாமஸங்கீர்த்தனங்களுக்கும் த்ரௌபதீ ப்ரபத்தி ப்ரகரணத்தில் காணப்படும் நாமஸங்கீர்த்தனங்களுக்கும் நெடுவாசியுண்டு" என்றும் இவர்கள் எழுதியுள்ளதைப்பற்றிச் சொல்லுகிறோம்; த்ரௌபதி நம்மாழ்வாரைப்போலே திருவாய்மொழிஸாதிக்கவில்லையென்றும், எம்பெருமானாரைப்போலே ஸ்ரீஹாஷ்யஸூத்ராதிகள் ஸாதிக்கவில்லையென்றும் ஒப்புக்கொள்வோம். த்ரௌபதியைக்காட்டிலும் அவர்கள் மிகவும் உத்துங்காதிகாரிகள் என்பதை மறுப்போமல்லோம். காகம், காளியன், கஜேந்திராழ்வான், விபீஷணாழ்வான், இளையபெருமாள் ஆகிய இவர்களையெல்லாம் பிள்ளை லோகாசார்யர் ஒரே சூர்ணையில் ஒரே ச்ரேணியில் எடுத்துக்காட்டியுள்ளார்; இவர்கள் துல்யாதிகாரிகளாவென்பதை விமர்சிக்கவேணும். ப்ரபத்தாக்கள் என்னுமம்ஶத்திலே துல்யர்களாகக் கொள்ளப்பட்டிருக்கிறார்கள். அதில் என்ன குறை?

30. ஸ்ரீ வசநபூஷணஸூக்தியும் முமுக்ஷுப்படி ஸூக்தியும் உண்மையில் பரஸ்பர விருத்தமாகத் தோன்றும்படியிருந்தால் மணவாள மாமுனிகளே விரோத சங்கையைக் கிளப்பிப் பரிஹார ப்ரகாரத்தைக் காட்டியிருப்பர். வியாக்கியானத்திற்கு இது முக்கியமான க்ருத்யம். வஸ்துத: இங்கு விரோத ப்ரஸக்தியே யில்லாமையினால்தான் மாமுனிகள் சங்கா ஸமாதானங்களில் ப்ரவர்த்திக்கவில்லை. ஆங்காங்கு விரோதம் தோன்றுமிடங்களில் ப்ரஸங்கித்துப் பரிஹாரம் காட்டியருளியே யிருக்கிறாரென்பதுவியாக்கியானங்களில்விசதம். வஸ்த்ர வ்ருத்தியை ப்ரபத்தியின் பலனாகச் சொல்லுவதும் திருநாம ஸங்கீர்த்தனத்தின் பலனாகச் சொல்லுவதும் ஈஷத்தும் விருத்தமன்று. சூர்ப்பணகையின் அங்கபங்கம் இளைய பெருமாள் செய்ததென்று ஸ்ரீராமாயண ஸித்தமாயிருக்க, ஆழ்வார்கள் அது பெருமாள் செய்ததாகவே எங்குமருளிச்செய்திருக்கக் காண்கிறோம். இங்கு நம் ஆசாரியர்களே செய்துள்ள ஶங்கா பரிஹாரங்கள் ஸுலபம். ப்ரக்ருத விவாத ஸ்தலத்தில் குருமுகமாகக் கேட்டவர்களுக்கு சங்கை யுதிக்க வழியே கிடையாது. உதித்தாலும், வஸ்த்ர வ்ருத்தியை ப்ரபத்தியின் பலனாகச் சொன்னாலென்ன? அதன் உள்ளீடான நாமஸங்கீர்த்தனத்தின் பலனாகச் சொன்னாலென்ன? என்று புத்திமான்கள் தாங்களே ஸமாஹிதராவர்கள் என்று திருவுள்ளம் பற்றியே மணவாளமாமுனிகள் விரோதோத்பாவந தத்பரிஹாரங்களில் கைவைத்திலர்.

31. முமுக்ஷுப்படியில் முதலில் "மந்த்ரத்திலும் மந்த்ரத்துக்குள்ளீடான வஸ்துவிலும் மந்த்ரப்ரதனான ஆசார்யன் பக்கலிலும் ப்ரேமம் கனக்கவுண்டானால் கார்யகரமாவது" என்றருளிச்செய்து வைத்து, மேலே "சொல்லும் க்ரம மொழியச் சொன்னாலும் தன்ஸ்வரூபம் கெட நில்லாது" என்றருளிச் செய்கிறார்; முந்தின ஸ்ரீஸூக்தியில் நிர்ப்பந்த விசேஷம் காட்டப்பட்டது; பிந்தின ஸ்ரீஸூக்தியில் அஃதில்லாமை காட்டப்பட்டது. இவை பரஸ்பர விருத்தங்களல்லவா வென்று அல்பச்ருதர்கள் சங்கிப்பதுண்டு. இங்கே இவர்கள் பரிஹாரமுணர்த்த வெழுந்தால் உலகுக்கு மிகமிக உபகரித்ததாகும்.

## இடையில் அன்பர்களுக்கு அறிவிப்பு.

32. இப்போது நாம் எழுதி வருகிற இந்த மறுப்பானது ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சன பத்ரிகையைக் குறித்து மட்டுமல்ல. சில பல வருஷங்களுக்கு முன்பு ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டி

யில் இந்த விவாதம் இன்னாரால் கிளப்பப்பட்டதென்பதை அறியாதாரில்லை. கீர்த்தி மூர்த்தியாய் விளங்கும் ஸ்ரீமத். வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியர் ஸ்வாமியின் ஷஷ்டி யப்தபூர்த்தி ஸமயத்தில் வெளியிடப்பட்ட நினைவுமலரில் வெளியிட விரும்பப்பட்டு அதில் அச்சேறின வியாஸம் பிறகு பதின்மூன்றாண்டுகட்குப் பின்னர் பக்தன் பத்ரிகையிலும் அதே ரீதியாகப் பிரசுரமாகி, நம்முடைய பல நூல்களினால் மறுவாய் திறக்க இடமில்லாதபடி மறுத்தொழிக்கப்பட்டது. திருவல்லிக்கேணியில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ. உ. வே. பண்டித ரத்னம் திருக்கண்ணபுரம் ஸ்ரீநிவாஸாசார்யஸ்வாமியினாலும் த்ரௌபதீ ப்ரபத்தி ஸாபல்ய மென்னும் விரிவான நூலினால் கண்டிக்கப்பட்டொழிந்தது. இப்படி ஶதஶ꞉ ஸஹஸ்ரஶ꞉ ஶிஷ்டக்ருதமான விஷயத்தில் ஸுதர்சந பத்ராதிபர் தலையிடப்புக்கது மிகவும் அநவஸரம். இவர் * உந்மத்தப்ரலாபீய꞉ வர்ணா꞉ * என்கிற ரீதியில் எழுதியிருப்பதாக ஏற்கெனவே ப்ரவாதம் பரவியிருந்தது. அவரவர்கள் தாம் தாம் எழுதுவதை ஸுஸிதமாகவும் அற்புத மாகவும் நினைப்பது எங்கும் ஸஹஜமே. இவர் தாம் தலையிட்டு எழுதுவதைத் தடுப்பாரில்லை. ஆனால் ஏற்கெனவே விரிவான நூல்களினால் வெளி வந்துள்ள விஷயங்களைக் கண்டிக்க நினைப்பவர் அந்த (நமது) நூல்களில் கண்ட விஷயங்களையெல்லாம் ஒன்று விடாமல் நன்கு ஆராய்ந்து அவற்றுக்கு உசிதமான ஸமாதானங்களைத் தெரிவித்து எழுதினால் அது போற்றத் தக்கதாகும். இப்போது நாம் நூதனமாக ஒன்றும் எழுதினோமல்லோம். இவ்விஷயங்கள் நமது நூல்களில் பலகாலும் பரவியுள்ளன. அவற்றையெல்லாமெடுத்து நினைப்பூட்டின வளவேயிங்கு. இவற்றுக்கெல்லாமிவர் அடைவே லக்கமிட்டு விடையிறுக்கட்டும்.

33. த்ரௌபதீ ப்ரபத்தி ஸித்தாஞ்ஜன மென்று பெயரிட்டு இவரெழுதியதில்—“10. இவ்விடத்தில் ஓர் ஐயம் ஏற்படக்கூடும்; அசேதநமான திருநாமம் எப்படிப் புடைவை சுரக்க முடியும்? அத்திருநாம ஸங்கீர்த்தனத்தால் உகந்த பரம புருஷன் தானே பலனையளிக்க முடியும். அப்படியிருக்கும்போது......இது எப்படி ஒட்டும்? இது ரஸோக்தியாகத்தானே யிருக்கமுடியும்? என்னும் ஐயம் ஏற்படக்கூடும்.” என்று ஶங்கையைக் கிளப்பி மேலே “இங்கு ஒரு தர்ம ஸூக்ஷ்மத்தையறியவேண்டும்” என்று தொடங்கி ஏதோ எழுதியுள்ளார். அந்த தர்ம ஸூக்ஷ்மத்தை அடுத்தபடியாக ஆராய்வோம். ‘ஐயம் எழக்கூடும்’ என்று இவர் கிளப்பினது ஐயமன்று; அசைக்கமுடியாத ஸித்தாந்தத்தையே இவர் பூர்வபக்ஷமாக்கி யுள்ளார். கீழே (பாரா 11 ல்) நாம் எடுத்துக்காட்டியுள்ள ஸ்ரீபாஷ்ய ஸ்ரீஸூக்தியில் “நஹ்யேதே நாம ஸங்கீர்த்தநமாத்ரேண காருண்ய ஹாநி ... ஸஹித ... இதி” என்று வெட்டொன்று துண்டிரண்டாக வருளப்பட்ட விஷயத்தை இவர் ஶங்கையாகவைத்து, அதன் மேலே தாம் ஏதோ தரும ஸூக்ஷ்மம் கண்டவராகக் காட்டிக்கொள்வது உசிதஜ்ஞர்களை யும் மயக்காது.

34. அந்த தர்மஸூக்ஷ்மத்தையும் பார்ப்போம். “ஒரு குடும்பத்தலைவன்” என்று ஆரம்பித்து அநுவதிக்கவும் தகாத அசட்டு த்ருஷ்டாந்த மொன்றை யெழுதியுள்ளார். * ஜகதேககுடும்பிநே * என்று போற்றப்பட்ட ஸர்வேச்வரனுடைய குடும்பத்தில் சேர்ந்தவர் இன்னார், சேராதவரின்னாரென்று நிர்ணயிக்க இவரார்கொல்? த்ரௌபதி திருநாம ஸங்கீர்த்தனமாகிற உபாயாந்தரத்தைப்பற்றிவிட்டதாக நெஞ்சால் நினைப்பதும் அவத்யமா யிருக்க இதனை யெழுதியும் வைப்பது, அதிலும் பரம பவித்திரமான பூர்வாசார்ய க்ரந்த ரத்னத்திலே இத்தகைய அஸமஞ்ஜ ஸோக்திகளைச் சேர்ப்பது, அநீதி! அநீதி!! அநீதி!!!.

35. ஸ்ரீவசநபூஷணத்தில் (8) "உபாயத்துக்குப் பிராட்டியையும் த்ரௌபதியையும்... போலே யிருக்கவேண்டும்......த்ரௌபதி லஜ்ஜையை விட்டாள்" என்றவிடத்தில் மணவாள மாமுனிகள் "துச்சாஸநன் ஸபாமத்யே துகிலையுரிகிற வளவில் லஜ்ஜாவிஷ்டையாய்க்கொண்டு தானொருதலை இடுக்குகையன்றிக்கே இரண்டு கையும் விடுகை.........மஹாபத்ஸையிலே 'இவ்வளவில் க்ருஷ்ணனே ரக்ஷகன்' என்று மஹாவிச்வாஸம் பண்ணி" என்றருளிச்செய் திருக்கையாலே அவள் உத்தமவூபந்நையேயல்லது உபாயாந்தரபரிக்ஹம் பண்ணினவ ளல்லள். தனித்வயமென்னும் ரஹஸ்யத்தில் "வூபத்தியை வெளியிடப்பிறந்த பாக்யவதி" என்று கொண்டாடப்பட்ட விவளைப்பற்றி மனம்போனபடி யெழுதுவது மஹாபசாரம்.

36. ஸாரமான வார்த்தை இது கேளீர். திருமங்கையாழ்வார் "நாராயணா வென்னும் நாமம் குலந்தரும் செல்வந்தந்திடும்.......பெற்றதாயினு மாயின செய்யும்" என்கிற பாசுரத்தினால் எல்லாப் பலன்களையும் திருநாமமே தந்துவிடு மென்றருளிச் செய்தார். பேயாழ்வார் தமது திருவந்தாதியில் "தேசுந்திறலும் திருவு முருவமும் மாசில் குடிப்பிறப்பும் மற்றவையும் பேசில்—வலம்புரிந்த வான்சங்கங் கொண்டான் பேரோத, நலம்புரிந்து சென்றடையும் நன்கு" என்கிற பாசுரத்தினால் திருநாமமோதின வளவிலே இப்பேறுகளெல்லாம் வூப்தமாகு மென்றருளிச்செய்தார். இவ்விரண்டு பாசுரங்களுக்குமுள்ளவாசியை அறிஞர் ஆழ்ந்து அறிவர். குலம் முதலியவற்றைத் திருநாமமே கொடுத்து விடுமென்ற கலியன் பாசுரத்தின் கருத்தைப் பேயார் பாசுரங்கொண்டு நிர்வஹித்துக் கொள்ளவேணும். வூபத்தி பலனளித்தது, திருநாமம் பலனளித்தது, திருவாய்மொழி பலனளித்தது, தேசவாஸம் பலனளித்தது என்று எங்ஙனே சொன்னாலும் இவற்றால் வூஸந்நனை எம்பெருமான் பலனளித்தான் என்றதாகுமேயல்லது வேறொன்றுமாகாது. இத்தத்துவத்தை யுணர்ந்து தெளிவுடன் வாழ்வது. .... .... (*)

ச்லோ ॥ पुंसो दिष्टहतस्य मुद्गरहतिर्हास्या यथा स्यात्तथै-
वैतद्ग्रन्थविलेखनं च भवतीत्याहुर्विपश्चित्तमाः ।
तस्मादद्य विरम्य, भाविसमये दुर्वादकोलाहलो
भूयस्स्याद्यदि तर्हि वज्रपरशुं संदर्शयिष्यामि भोः ॥

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதிபயங்கரம்

அண்ணங்கராசாரியர்

எழுதிய

ஸர்வஜ்ஞலோககுரு ஸூக்திஸர்வஸ்வத்தில்

முதல்பரிசேதம் முற்றுப்பெற்றது.

Regd. No. 2975.

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் 169

P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM.

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச் சந்தா ரூ. 5 ஜீவியச் சந்தா ரூ. 100.

ஜீவியச் சந்தாதாரர்களுக்கு பத்திரிகை சாச்வதமாக அனுப்பப்பட்டு வருவது தவிர 120 ரூபா விலையுள்ள புத்தகங்கள் உடனே அனுப்பப்படும்.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல்வாழி *
தாழ்வாதுமில்குரவர் தாம்வாழி*—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம் வாழி *
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

சுபகிருது௵ தைமீ 1963௵ ஜனவரி–பிப்ரவரிமீ

# சின்ன காஞ்சிபுரம் க்ரந்தமாலா ஆபீஸ்

# ஸ்ரீமத் P. B. அண்ணங்கராசாரியார் ஸ்வாமிகளின்

## பதிப்பு நூல்களுக்குச் சுருக்கமான விளம்பரம்.

---

1 நாலாயிர திவ்யப்பிரபந்தம் முழுமைக்கும் விரிவான திவ்யார்த்த தீபிகையுரை. தனித்தனியாகவாங்கினால் 65 ரூ. ஒரே தடவையில் 60 ரூ.

2 உபதேசரத்தினமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி, ஆர்த்திப்பிரபந்தம், ஞானஸாரம், பிரமேயஸாரம், ஸப்தகாதை இவற்றின் உரையும் சேர்ந்து நித்தியாநுஸந்தானம் முழுமைக்கும் விளக்கவுரை ரூ. 3-50.

3. முகுந்தமாலை தொடங்கி, ஆளவந்தார் எம்பெருமானார் கூரத்தாழ்வான் பட்டர் கூரநாராயண ஜீயர் மணவாள மாமுனிகள் தச்சிஷ்யர்கள் வரையில் ஸாதித்த பெரிய சிறிய ஸகல ஸ்தோத்ரங்களுக்கும் உரை தனித்தனியாக வாங்கினால் 25 ரூ. ஏககாலத்திலானால் 20 ரூ.

4. ஹயக்ரீவ ஸ்தோத்ரம், கோதாஸ்துதி, பரமார்த்த ஸ்துதி, வைராக்ய பஞ்சகம் ந்யாஸதசகம், பகவத் தியான ஸோபானம், தசாவதார ஸ்தோத்ரம், யதோக்தகாரி, அஷ்டபுஜ, காமாஸிகா ஸ்தோத்ரங்கள் ஆகிய தேசிக ஸ்தோத்ரங்களுக்கு விரிவுரை 4 ரூ. தேசிக ரஹஸ்யம் (1 To 16)ரூ 1.

5. ஆழ்வார்கள் வைபவம், ஸகல பூர்வாசார்ய ப்ரபாவம், அத்திகிரி வைபவம், ஆழ்வார்கள் அநுபவித்த பகவத் கதைகள், நரஸிம்ஹாவதார சரிதம், அபூர்வ ராமாயணம், ஸ்ரீஜயந்தி மலர் இவை யெல்லாம் சேர்ந்து ரூ. 5

6. வான்மீகி ராமாயண வசனம், (உத்தரகாண்ட முட்பட எளிய வசன நடை) ரூ. 8.

7. நாலாயிர திவ்யப்பிரபந்தம் மூலம் மட்டும். பல வகை யநுபந்தங்களுடன் சிறந்த பயிண்டு ரூ. 8.

8. பகவத் ராமாநுஜ க்ரந்தமாலை. உடையவர் அருளிச்செய்த ஸகல க்ரந்தங்களும் ஒரே ஸம்புடம் சிறந்த பயிண்டு. தேவநாகர லிபி ரூ. 15.

9. பகவத் விஷயம் ஈடுமுப்பத்தாறாயிரப்படி (பூர்த்தியாக இரண்டு ஸம்புடம். நித்யகாலக்ஷேபத்திற்கு. ரூ. 25.

10. ஷை தெலுங்கு லிபி ரு. 25.

11. ஸ்ரீ வரவர முநீந்த்ர க்ரந்தமாலை (மணவாள மாமுனிகளருளிச் செய்த நான்கு ரஹஸ்யங்களின் வியாக்கியானங்கள் ஒரே ஸம்புடம்; மிகச் சிறந்த பயிண்டு. தெலுங்கு லிபி ரூ. 8.

12. ஸகல பூர்வாசார்யஸ்தோத்ரமாலை நாகரலிபிரூ.3.

13. ஷை தெலுங்கு லிபி ரூ. 2

14. வேதாந்த தேசிக ஸகல ஸ்தோத்ராவளீ (தேவநாகர லிபி ரூ 3.

15 ஷை தெலுங்கு லிபி ரூ. 3-25.

16. யாதவாப்யுதயம், ஹம்ஸஸந்தேசம், ஸுபாஷித நீவி, ஸங்கல்ப ஸூர்யோதயம் (இவை நான்கும் ஒரு ஸம்புடம் தேவநாகரி லிபி) ரூ. 6.

17, தத்வடீகை; நிக்ஷேபரக்ஷை, ஸச்சரித்ராக்ஷை, ஸ்ரீபாஞ்சராத்ராக்ஷை ரூ. 6.

18. தானே யெழுதிய தன் சரிதை P. B. A. ஜீவிய சரிதம் ரூ 2.

19 த்ரமிடோப நிஷத் ப்ரபாவ ஸர்வஸ்வம் (எம்பெருமானார் ஸூக்திகள் திவ்ய ப்ரபந்தங்களை யடியொற்றியவையென்று நிரூபிப்பது ரூ. 2

20. ஸத்ஸம்ப்ரதாயஸுதாநிதி (ஸம்ஸ்க்ருத நூல், தேவநாகரலிபி. தென்னாசார்ய ஸம்ப்ரதாய ஸகலார்த்த விசேஷங்களுங் கொண்டது. ரூ, 2.

21. கம்பரின்பக்கவித் திரட்டு. கம்பராமாயணம் 1, 2 காண்டங்களிலிருந்து தொகுத்த மிகச் சிறந்த பல பாடல்கள் பதவுரை பொழிப்புரையுடன் ரூ. 2,

22. பிள்ளைப்பெருமாளையங்காருடைய அஷ்டப்பிரபந்தத்திற் சேர்ந்த நூற்றெட்டுத் திருப்பதி யந்தாதி விளக்கவுரையுடன் ரூ. 1.

23. ஷை திருவேங்கடமாலை—விளக்கவுரைரூ. 1-50.

24. பலவகை விமர்ச நூல்களும் விவாத நூல்களுமான சிறுநூல்கள் நூறு ரூ. 10.

25. சங்கத் தமிழ் மாலை முப்பது ரூ. 1

26 திருப்பாவை ஜீயர் 0—50

27 வேதாந்த தேசிக வைபவம் ரூ 1

28 திருவல்லிக்கேணி யுபந்யாஸ மாலை ரூ 2

29 பகவத் கீதா ஸர்வஸ்வம் ரூ 1

30 மதுரோபந்யாஸமாலை. 11 உபந்யாஸங்கள் கொண்டது ரூ 1

31 ஸ்ரீதேசிக ஸஹஸ்ரநாம விமர்சம், விமர்சபரீக்ஷா விமர்சநம் (அல்லது) ஸ்ரீரங்கநாத பாதுகா ஸமீக்ஷா ரூ. 1

32 அத்புதோபந்யாஸமாலை (14 உபந்யா.) ரூ. 1

33 அர்ச்சாவதார வைபவம் ஸ்ரீமஹாவிஷ்ணு ஸாம்ராஜ்யம் ரூ 1

34 த்ரமிடாத்ரேய தர்சந விமர்சம் ரூ 1

35 தயிரவப் பாடத் திருத்த மறுப்பு முதலியன 0-50

36 கூரத்தாழ்வானும் சோழராஜனும் 0-50

37 கலியனும் கண்ணனும். ஸ்வாபதேச பரமார்த்தம். ஸ்வாபதேச ஆவச்யகதை. கோதை தமிழ்ச் சுவையமுதம். ஸாரார்த்த ஸங்க்ரஹம் ஆக பஞ்சாமிருதமானவை 1 ரூ

38 சிங்கப்பெருமான் திருவாக்கு வெற்றி த்ரைபதீ ப்ரபத்தி முதலான பல விஷயங்களின் மிக விரிவான விளக்கம் ரூ 1    ஷை பிற்பகுதி ரூ 1

39 ஸ்ரீவேங்கடார்ய சதகம் 116 சுலோகங்கள் உரையுடன் ரூ 1

40 பிரபந்த ஸார தத்வ ஸாரம் ரூ 1

41 சாடு ச்லோக சதகம் உரையுடன் ரூ 1

42 ஸ்ரீக்ருஷ்ண குணசேஷ்டிதாநுபவம் ரூ 1

43 அபூர்வ ராமாயணம் இராமனுடைய பதினாறு குணவிவரணம் ரூ 1–8

44 மணவாள மாமுனிகளின் வாத்ஸல்ய நிரூபணம் அணா 6

45 பட்டர் ஆழ்வான் ஆளவந்தார் ஸ்ரீஸூக்தி பரிஷ்காரம் அணா 8

46 நித்யாநுஷ்டான பத்ததி அணா 6

47 உபந்யாஸத்ரயம் அணா 10

48 வைதிக லௌகிக மஹநீய மண்டலி 100 பெரியார்களின் திருவுருவப் படங்கள் கொண்டது ரூ 1.

# ஸ்ரீ ராமாநுஜன் 169.

சென்னை ஸத்க்ரந்தப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 15 | 1963௵ ஜனவரீ௴<br>சுபக்ருத்௵ தைமீ௴ | ஸஞ்சிகை 1 |
|---|---|---|


## திருவாய்மொழி நூற்றந்தாதி-58

பொன்னுலகு பூமியெல்லாம் புள்ளினங்கட்கே வழங்கி *
என்னிடரை மாலுக் கியம்புமென*—மன்னுதிரு
நாடு முதல்தூது நலகிவிடும் மாறனையே *
நீடுலகீர்! போய்வணங்கும் நீர்.

| | | | |
|---|---|---|---|
| பொன் உலகு பூமி எல்லாம் | நித்யவிபூதி லீலாவிபூதியாகிய எல்லாவற்றையும் | மன்னு திருநாடு முதல் | நித்யவைகுண்டம் முதலான இடங்களில் |
| புள் இனங்கட்கே வழங்கி | பறவைக்கணங்களுக்கே கொடுப்பதாகச்சொல்லி | தூது நல்கி விடும் | பக்ஷிகளை தூதாக விரும்பிப்போக விட்டருளின |
| என் இடரை மாலுக்கு இயம்பும் என | (நீங்கள்) எனது துயரை எம்பெருமானிடம் சென்று சொல்லுங்கோளென்று | மாறனையே நீடு உலகீர் | ஆழ்வாரையே பெரிய உலகத்தவர்களே! |
| | | நீர் போய் வணங்கும் | நீங்கள் சென்று வணங்குங்கள். |

* பொன்னுலகாளீரோ புவனிமுழுதாளீரோ * என்று தொடங்குந் திருவாய்மொழியில், புள்ளினங்களைநோக்கி 'உங்களுக்கு உபயவிபூதியையும் வழங்குகிறேன், திருநாட்டிலோ அந்தர்யாமித்வத்திலோ எங்கேயாவது எம்பெருமானைக்கண்டு பிடித்து நீங்கள் எனது பிரிவாற்றாமையை அப்பெருமானுக்கு அறிவிக்கவேணும்' என்றுசொல்லித் தூது விட்ட ஆழ்வாரையே அனைவரும் வணங்கவேணுமென்றாராயிற்று.

* பொன்னுலகாளீரோ வென்னும் திருவாய்மொழிக்கு இரண்டுபடியாக ஸங்கதியருளிச் செய்வர்கள் பூருவர்கள். கீழ்த் திருவாய்மொழியில் * அனைத்துலகு முடைய அரவிந்தலோசனனைத் தினைத்தனையும் விடாள் * என்றதை நோக்குங்கால், பராங்குச நாயகிக்குத் திருக்கோளூரெம்பெருமானோடே ஸம்ச்லேஷம் விளைந்ததாகத் தெரிகின்றது; * திருக்கோளூர்க்கே ஒல்கியொல்கி நடந்து எங்ஙனே புகுங்கொலொசிந்தே* என்றதை நோக்குங்கால், பராங்குசநாயகி திருக்கோளூர் சென்று சேர்ந்திருக்கமாட்டாளென்றதாகத் தெரிகின்றது. சென்று சேர்ந்து ஸம்ச்லேஷம் விளைந்ததாகக் கொண்டால், ஸம்ச்லேஷத்திற்கு அடுத்தபடி விச்லேஷம் ப்ராப்தமாகையாலே பிரிவு உண்டாகி ஆற்றாமையாலே அவனைக் குறித்துச் சில பக்ஷிகளைத் தூதுவிடுகிறாள் இத்திருவாய்மொழியில் என்று ஸங்கதியாகிறது. திருக்கோளூர்க்குச்சென்று சேரவேயில்லையென்று கொண்டாலும் தூதுவிடுகைக்கு எளிதாகவே ப்ரஸக்தியுண்டாயிற்றதாகிறது.

ஆறாயிரப்படி ஸ்ரீஸூக்தி காண்மின்:—"இப்படி திருக்கோளூரிலே யெழுந்தருளின பிராட்டியோடுள்ள சிரகால ஸம்ச்லேஷ ஜநித அநவதிகாநந்த மஹார்ணவாந்தர் நிமக்நனான எம்பெருமான் அந்த ஆனந்த வெள்ளம் தனக்கு அஸாத்ம்யமானவாறே அது ஸாத்மிக்கைக்காக விச்லேஷித்து நெடுங்கால மெழுந்தருளாதிருந்தவாறே தத்விச்லேஷத்தாலே அத்யந்தம் அவஸந்நையான பிராட்டி தன்னுடையவாற்றாமையாலே அவனைக் குறித்துச் சில பக்ஷிகளைத் தூதாக விடுகிறாளென்றுமாம். திருக்கோளூரிலே போய்ப் புகவேணுமென்று புறப்பட்ட இப்பிராட்டி தன்னுடைய அவஸாதத்தாலே பின்னைப் போக க்ஷமையன்றியே அங்கே உத்யானத்திலேயிருந்து எம்பெருமானைக் குறித்து தூதப்ரேஷணம் பண்ணுகிறாளென்றுமாம்."

ஈட்டு ஸ்ரீஸூக்தி:—"பன்னிரண்டாண்டு தண்ணீர்த் தரும்பறக் கலந்து பிரிந்த பிராட்டியைப் போலே அங்கே புக்கு நெடுங்காலம் அவனையநுபவித்துப் பிரிந்து தூது விடுகிறாள் என்று பிள்ளான். புறப்பட்டவள் முடியப்போக மாட்டாதே நகரோபவனத்திலே கிடந்து தூதுவிடுகிறாள் என்று பட்டரருளிச் செய்யும்படி."

கீழே * துவளில் மாமணிமாடமென்கிற திருவாய்மொழியாதியாக இத்திருவாய்மொழியளவும் நாற்பது பாசுரங்களும் ஸ்திரீபாவனை நெடுக அநுவர்த்தித்தே வருகின்றமை உணர்க. தோழிபாசுரமாக ஒருபதிகமும், தாய்பாசுரமாக இரண்டுபதிகங்களும் தலைவி பாசுரமாக இப்பதிகமும்.

* சில பறவைகளை எம்பெருமான்பக்கலிலே தூதுபோக விடுகையாகிற இது—சில பாகவதர்களைக் குறித்துப் புருஷகாரக்ருத்யம் செய்யும்படி ப்ரார்த்திக்கையாம். பகவத் விஷயத்தில் அந்வயிப்பிக்குமவர்களைப் பக்ஷிகளாக ப்ரதிபத்திபண்ணுகிறதென்று ஸ்வாபதேசார்த்த மறிவது. பறவையானது இரண்டு சிறகுகளாலே உயர்கதியை அடையுமா போலே ஞானம் அனுட்டான மென்ற இரண்டினால் உயர்கதியை அடைகின்றவர்களான மஹான்களே பக்ஷிகளாக மறைத்துப் பேசப்படுகின்றார்கள். ஆசார்யர்கள், ஸப்ரஹ்மசாரிகள் [உடன் கல்வி பயின்றவர்கள்], புத்திரர்கள், சிஷ்யர்கள் ஆகிய இவர்கள் தூதுவிடப்படுகின்றவர்களாக ஆங்காங்கு ஸந்தர்ப்பத்திற்குத் தக்கவாறு கொள்க.

திருவாய்மொழியாயிரத்திலும் தூதுவிடும் பதிகங்கள் நான்கில் இது மூன்றாவது. எம்பெருமானுடைய வியூஹநிலையை நோக்கி [அஞ்சிறைய மடநாரையில்] முதல் தூது விடப்பட்டதென்றும், விபவாவதாரத்தை நோக்கி [வைகல் பூங்கழிவாயில்] இரண்டாந்தூது விடப்பட்டதென்றும், பரத்வத்தையும் அந்தர்யாமித்வத்தையும் நோக்கி [இப்பதிகத்தினால்] மூன்றாந் தூது விடப்படுகிறதென்றும் ஆசாரியர்கள் நிரூபித்துக் காட்டியருள்வர்கள். ஆசார்யஹ்ருதயத்தில் "தம்பிழையும் சிறந்த செல்வமும்" இத்யாதியாகவுள்ள சூர்ணையும் அவ்விடத்து வியாக்கியானமும் இங்கு உணரத்தக்கன.

இந்தத்தூதில் *தன் மன்னுநீள் கழல்மேல் தண்டுழாய் நமக்கன்றி நல்கான்* என்று ஆச்ரிதரோடு ஒரு நீராகக் கலந்திருக்கையாகிற ஐகரஸ்யமென்னும் குணம் வெளியிடப்படுகிறது. இப்பதிகத்தில் * மூன்னுலகங்களெல்லாம் படைத்த முகில்வண்ணன் கண்ணன் என்னலங்கொண்ட பிரான் தனக்கு * என்கிற பாசுரம் உயிராயிருக்கும். எம்பெருமான் அடியார்களோடு ஒரு நீராகக் கலந்து பரிமாறுகையாகிற ஐகரஸ்ய முடையனானும் தான்

படைத்த ஜகத்தின் பரப்பை ரக்ஷிக்கிற பராக்காலே அந்த ஐகரஸ்யத்தை மறந்து என்னை நினையாதிருக்கிறானத்தனை; அத்தையறிவிக்கவே, [அதாவது * தன் மன்னுநீள் கழல்மேல் தண்டுழாய் நமக்கன்றிநல்கான் * என்று உறுதி கொண்டிருக்கைக்கு உறுப்பானவரல்லீரோ நீர் என்று உணர்த்தவே] கடுக வந்து சேர்வனென்று தூது விடப்படுகிறது.

இதில் *வானவர்கோனைக் கண்டு யாமிதுவோ தக்கவாறென்னவேண்டும்* என்ற பாசுரத்தையும் * எங்குச் சென்றாகிலுங் கண்டு இதுவோ தக்கவாறென்மின்* என்கிற பாசுரத்தையும் உயிராகக் கொண்டு இத்திருவாய்மொழி—பரத்வத்திலும் அந்தர்யாமித்வத்திலும் தூதுவிட்டபடியாமென்பர். ... ... ... ... *

---

## புத்தாண்டு பிறப்பு.

அன்பிற்சிறந்த ஆரியர்காள்! நமது ஸ்ரீராமாநுஜன் பதினான்கு பிராயங்களை இனிது கடத்தி இப்போது பதினைந்தாவது பிராயத்தில் அடியிடுகின்றது. இதுகாறும் இதனை அபிநிவேசத்தோடு ஆதரித்த நீங்கள் இனியும் அங்ஙனமே ஆதரிப்பீர்களென்பதில் ஐயமேது? ஆயினும் பிரார்த்திக்க வேண்டுவது நமது கடமையாதலால் முன்போலவும் முன்னிற்காட்டிலும் அதிகமாகவும் ஆதரிக்கவேணுமென்று விநயமுடன் வேண்டிக்கொள்ளுகிறோம். ஸர்வஜ்ஞனான எம்பெருமானும் நமது வேண்டுகோட் பாசுரங்களைக் கேட்டு உவந்தே காரியஞ்செய்தருள்கின்றானென்னும்போது உங்கள் பக்கலிலே வேண்டிக்கொள்ள வேண்டியதும் முறைமையன்றோ.

ப்ராஸங்கிகமாக மற்றுஞ்சில விஷயங்களையும் விஜ்ஞாபிக்க ப்ராப்தமாகிறது. நம்முடைய க்ரந்தமாலா கார்யாலயத்திலிருந்து ஸ்ரீராமாநுஜனென்னும் இத்தமிழ்ப்பத்திரிகை போலவே வைதிகமநோஹரா என்னும் ஸம்ஸ்க்ருத பத்ரிகையும், ஸ்ரீராமாநுஜபத்ரிக. என்னும் தெலுங்கு பத்ரிகையும் நெடுநாளாகவே மாதந்தோறும் வெளிவந்துகொண்டிருக்கின்றனவென்பதை அறியாதார் மிகச்சிலரேயிருக்கக்கூடும். வைதிகமநோஹராவில் ஸம்ஸ்க்ருத பாஷாவியாஸங்கள் மட்டுமன்றியே ஹிந்தீபாஷாவியாஸங்களும் கலந்து வெளிவருகின்றன. தெலுங்கு பத்ரிகையில் சிலகாலமாக திவ்யப்பிரபந்த வியாக்கியானங்களையே வெளியிட்டு வருகிறோம். இதில் சென்றமாதத்தோடு முதலாயிரம் பூர்த்தியாகி வெளிவந்துவிட்டது. பாசுரங்களைப் பூர்த்தியாக அச்சிட்டு ப்ரதிபதார்த்தடீகையும் தாத்பர்யஸாரமும் தெலுங்கு பாஷையில் பதிப்பித்து வருகிறோம். நிகழும் தைமாதத்திலிருந்து திருவாய்மொழிடீகை தொடக்கமாகிறது. ஸ்ரீவைஷ்ணவர்களுக்கெல்லாம் ஜீவாதுவான திவ்யப்ரபந்தார்த்தரஸங்களைத் தெலுங்கு நாட்டினரும் இழவாமல் அநுபவிக்கவேணுமென்கிற குதூஹலத்தினால் இஃது அச்சிடப்பட்டு வருகிறது. நாம் தமிழில் திவ்யப்ரபந்த திவ்யார்த்ததீபிகை எழுதினதுபோல் விரிவாகவன்றிக்கே ஸாரமாகவும் சுருக்கமாகவும் எழுதப்படுகிறது இந்த தெலுங்கு டீகை. திவ்யப்ரபந்தரஸாநுபோக்தாக்களுக்கு இது பர்யாப்தமேயாகும்.

இந்த தெலுங்குப் பதிப்பு தனித்தனிப் புத்தகமாக விற்பனை செய்யப்படுவதில்லை. மொத்தம் 30 ரூ. முன்பணமாகச் செலுத்துபவர்களுக்கு நாலாயிரத்திற்கும் பூர்த்தியாக டீகை மாதந்தோறும் நூறு நூறு பாசுரம் வீதம் அனுப்பப்பட்டுவரும். ஏற்கெனவே அச்சாகியுள்ள முதலாயிரம் டீகையும் உடனே பெறுவிக்கப்படும்.

ஆந்திரதேசத்தவர்கள் திவ்யப்பிரபந்தார்த்தங்களை இழவாதபடிக்கு இங்ஙனம் தெலுங்கு பதிப்பு நடத்திவருவதுபோலவே வட இந்தியாவிலுள்ள பக்தர்களும் இதை இழவாதபடிக்கு ஸம்ஸ்க்ருத பாஷையிலும் ஹிந்திபாஷையிலும் திவ்யப்ரபந்த வியாக்கியானங்கள் தேவநாகரலிபியில் அச்சிட்டு வெளியிடப்பட்டு வருகின்றன வென்பது உலகம் பரவியேயிருக்கின்றது. இவ்விரண்டு பாஷைகளிலும் முதலாயிரம் பூர்த்தியாகி வெளிவந்துவிட்டது. ஸம்ஸ்க்ருத பாஷையில் இரண்டு ஸம்புடமும், ஹிந்திபாஷையில் இரண்டு ஸம்புடமும் ஆக நான்கு ஸம்புடங்கள் வெளிவந்துவிட்டன. இவை சிறந்த பயிண்டுடன் கிடைக்கும். ஸ்ம்ஸ்க்ருத பாகத்தின் விலை (இரண்டு ஸம்புடங்கட்கு) 15 ரூ. ஹிந்திபாகத்தின் விலை (இரண்டு ஸம்புடங்கட்கு) 16 ரூ.

அந்தந்த பாஷைகளில் அதிகாரிகளான பக்த பாகவதர்கள் இவற்றையெல்லாம் உவப்புடன் ஆதரிக்கவேணுமென்று கேட்டுக்கொண்டு நிற்கிறோம். கூடியமட்டில் ஆப்தர்களுக்குத் தெரிவித்து ப்ரசாரமும் செய்ய ப்ரார்த்தனை. ... .... *

## ஒரு முக்கியவார்த்தை.

ஸ்ரீராமாநுஜன் நெ. 168. மார்கழிமாதத்தில் வெளியிடப்பட்டது. அப்போது நாம் சென்னையிலிருந்தோம். காஞ்சியில் இருந்த கார்யஸ்தர் கவனித்தே அனுப்பியிருக்கின்றார். ஆயினும் சில விலாஸங்களுக்கு அனுப்பத்தவறிவிட்டதுபோல் தெரிகிறது. எமக்குக் கிடைக்கவில்லையென்று தெரிவித்த சில சந்தாதாரர்களுக்கு அனுப்பினோம். அப்படி கிடைக்கப்பெறாதவர்கள் இன்னுஞ் சிலர் இருந்தால் உடனே தெரிவிக்கக் கோருகிறோம்.

# திருநாராயணபுரத்தில் விசேஷம்.

மேல்கோட்டை என்று வழங்கப்படும் திருநாராயணபுரத்தில், நிகழும் தைமாதத்தின் 4. 5, 6 தேதிகளில் மிகச்சிறந்த விசேஷமொன்று நடைபெற்றது. நம்முடைய விசிஷ்டாத்வைத ஸித்தாந்த க்ரந்தங்களில் வேதாந்தவாதாவளி யென்னும் நூல்மாலையைப் பற்றிக் கேள்விப்படாத வைணவர்கள் விசேஷமாக இருக்கமாட்டார்கள். வித்வத்கோஷ்டிகளில் மிகப் பிரஸித்தமான க்ரந்தமாலை இது. மைஸூர் அனந்தாழ்வார் ஸ்வாமி யென்றும் மண்டயம் அனந்தாழ்வார் ஸ்வாமி யென்றும் ப்ரக்யாதராய் எழுந்தருளியிருந்த மஹாவித்வத்ஸார்வபௌமர் சதுச்சாஸ்திரங்களிலும் அலங்கார ஸாஹித்யாதிகளிலும் கரைசண்டவர். விசேஷித்து நியாயவேதாந்தங்கள் இந்த ஸ்வாமிக்கு அஸாதாரணச் செல்வமெனத்தகும். இந்த மஹான் நாற்பது ஸம்வத்ஸரம் மட்டுமே இவ்விபூதியை அலங்கரித்தெழுந்தருளியிருந்தார். அவர் திருநாட்டுக்கெழுந்தருளி ஒரு நூறாண்டு பூர்த்தியாயிற்றிப்போது.

அந்த ஸ்வாமியின் பௌத்திரரான ஸ்ரீ. உ. வே. M. A. ஸ்ரீனிவாஸன் என்று ப்ரஸித்தரான மஹாபுருஷர் சிறந்த உத்யோக பதவிகளை வஹித்து இப்போது விச்ராந்தராயிருப்பவர். இவர் ஸரஸ்வதீகடாக்ஷத்தையும் லக்ஷ்மீகடாக்ஷத்தையும் விசேஷித்துப் பெற்றவர். ஆஸ்திகர்களில் தலைவருமாவர். இவர் தம் பிதாமஹரான அனந்தாழ்வார் ஸ்வாமியின் பெருமைகளை நன்குணர்ந்து அம்மஹானுடைய அப்ரதிம கீர்த்திக்கு நித்யஸ்மாரகமாகத் திருநாராயணபுரத்தில் ஒரு மஹாமண்டபம் ஏற்படுத்த மனோரதித்து ஏழெட்டாயிரம் ரூபா

செலவில் மிகச்சிறிதும் மிகப்பெரிதுமன்றியே ஒரு திருமண்டபம் அமைத்தார். அதில் மூன்றுநாளைய சடங்குகள் சிறப்பாக நடத்தப்பட்டன. முதல் நாளில் வாஸ்துசாந்தி ஹோமாதிகள் நடந்தன. இரண்டாநாளில் திருநாராயணப்பெருமாளெழுந்தருளித் தீர்த்த விநியோகாதி கோஷ்டிகள் நடைபெற்றன. மூன்றுநாளில் வித்வத்ஸதஸ்ஸு நடத்திவைக் கப்பட்டது. இதற்காக நமக்கு ஆஹ்வானம் வந்திருந்தபடியால் ஸதஸ்ஸு நடந்தவன்று மட்டும் போயிருந்து கூடியிருந்து குளிர்ந்துவந்தோம்.

ஸதஸ்ஸின் வரலாற்றைப்பற்றிச் சிறிது தெரிவிக்க விரும்புகிறோம். தைமீ 6வ அன்று மாலை 4-மணிமுதல் இரவு 8-மணி வரை ஸதஸ்ஸு நடந்தேறியது. திருநாராயண புரத்திலேயே ஸ்திரவாஸமாக எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. எதிராஜ ஜீயர்ஸ்வாமிகள் அக்ராஸனம் வஹித்தருளினர்கள். மைஸூரிலிருந்தும் பெங்களூரிலிருந் தும் சில வித்வான்களும் பெரியார்களும் எழுந்தருளியிருந்தார்கள். உள்ளூர் வித்வான்க ளும் உபஸ்திதர்களாயிருந்தார்கள். அக்ராஸநாதிபதி ஸ்வாமியின் கம்பீரமான முன்னுரை முடிவு பெற்றவுடன் முன்னம் ஸ்ரீ. உ. வே. பண்டிதபூஷண கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி தாம் இயற்றிய சில சுலோகங்களை வாசித்து ஸதஸ்ஸைத் தொடங்கிவைத்தார். பிறகு அவ்வூர் ஸம்ஸ்க்ருத காலெஜ் ப்ரின்ஸிபால் ஸ்ரீ உவே. வித்வான் மண்டயம் ஆழ் வார்ஸ்வாமி அனந்தாழ்வார் ஸ்வாமியின் வித்யாப்ரபாவத்தைப்பற்றிப் பேசினர். பிறகு ஸ்ரீ உ. வே. வித்வான், ஸ்ரீரங்கம் ஸம்பத்குமாராசார்ய ஸ்வாமி, ஸ்ரீ உ. வே. நியாயவித்வான், எம்பார் நரஸிம்ஹாசாரியர் ஸ்வாமி, மைஸூரிலிருந்து வந்திருந்த மீமாம்ஸாசிரோமணி E. S. வரதாசாரியர் ஸ்வாமி, ஸ்ரீ உ. வே. வேதாந்தவித்வான் சேஷாசார்யஸ்வாமி முதலான வர்கள் அனந்தாழ்வாருடைய ப்ரஜ்ஞாப்ரகர்ஷத்தையும் மேதாவிலாஸத்தையும் பற்றியே சிறப்பாகப் பேசினர்கள்.

பிறகு அக்ராஸனாதிபதிகளான ஸ்ரீ ஜீயர்ஸ்வாமிகள் அடியேனும் ஏதாவது பேச வேணுமென்று நியமித்தருள, அடியேனும் சிறிதுபேசி ஸத்தைபெற நேர்ந்தது. அடியே னுடைய இளமையில், காஞ்சீபுரத்திற்கடுத்த மாமண்டூரில் **ஸ்ரீமத் குரவி விஜயராகவாசாரியர்** ஸ்வாமி யென்றொரு வித்வான் எழுந்தருளியிருந்தார். அவர் எப்போதும் 'அழகிய மணவாளா!' என்று கர்ணசராவ்யமாக உரக்க உரைத்துக்கொண்டிருப்பராதலால் அந்த ஸ்வாமிக்கு அழகிய மணவாளா என்றே யாவருமறிந்த திருநாமம். அவர் (ப்ரஸ்துத) அனந்தாழ்வார் ஸ்வாமியின் அந்தேவாஸிகளில் ஒருவர். அவர் காஞ்சியிலேயே பெரும்பாலும் ஸ்ரீஜகத்குரு காதிஸ்வாமி திருமாளிகையில் எழுந்தருளியிருப்பர். அப்போது அடியேன் ஊநஷோடசவர்ஷ: என்னும் படி யிருந்தவன். அக்கிழவர் அனந்தாழ்வார் ஸ்வாமியின் பெருமைகளை அடிக்கடி ஸாதித்துக் கொண்டிருப்பர். அடியேன் அவரிடம் கேட்ட வரலாறுகளை நெடுநாளைக்கு முன்னமே அடியேன் நடத்திவந்த ப்ரஹ்மவித்யா பத்ரிகையில் எழுதி வெளியிட்டிருந்தேன். அது 27—3—1951ல் வெளியிடப்பட்ட அடியேனுடைய ஷஷ்டியப்தபூர்த்தி நினைவுமலரிலும் வெளியிடப் பட்டிருக்கின்றது. அதை இங்குப் பதிப்பிக்கிறேன்;

## ஸ்ரீமத் திருமலை அனந்தாண்பிள்ளை மண்டயம் அனந்தாழ்வார் ஸ்வாமி வைபவம்.

இந்த மஹான் [கி. பி. 1822-ஆ ஏப்ரல் மாதத்தில்] சகாப்தம் 1745, ஸ்வபாநு ஸம்வத்ஸரம் பங்குனித் திங்களில் ஆச்லேஷா நக்ஷத்திரத்தில் மண்டயத்தில் ஜனித்து திரு

நாராயணபுரத்தில் ஸ்வீகாரம் வந்தவர். இவர் ஆதிசேஷனுடைய அநுக்ரஹத்தினால் அவதரித்தாரென்றும் ஆனது பற்றியே ஆதிசேஷனுடைய திருநாமம் இவர்க்கு இடப்பட்டதென்றும் சொல்லுகிறார்கள். ஜ்யோதிஷ்மதீலதையின் தைலம் உண்பித்து மேதையின் அபிவிருத்தி செய்விக்கப் பெற்றவரிவர் என்றும் கூறுகிறார்கள். மைஸூரில் ஸ்ரீ கூளீபாளாசார்யரிடத்தில் இவர் சாஸ்த்ரங்கள் பயின்றார். தமது ஜநகபிதாவாகிய ஸ்ரீ. மஹாபாஷ்ய சிங்கராசாரியர் ஸ்வாமி ஸந்நிதியில் ஸ்ரீ பாஷ்ய பகவத் விஷயாதி க்ரந்தங்களை அதிகரித்தார். மைஸூர் இலாகாவைச் சேர்ந்த 'ச்ரவண பௌ கொளா' என்னுமிடத்திற்கு அருகிலுள்ள ஒரு ஜைந மடத்தில் அந்த மடாதிபதிக்குப் பாடப்ரவசநம் செய்யும்பொருட்டு இவர் அழைக்கப்பட்டு எழுந்தருளியிருந்தார். ப்ரஹ்மஸூரி பண்டிதரென்கிற அந்த மடாதிபதிக்கு இவர் மூன்று வருஷ காலம் ஸாஹித்ய சாஸ்த்ர பாடங்கள் கற்பித்துக் கொண்டிருந்தார். அப்போது அவ்விடத்துப் புஸ்தகசாலையிலிருந்த ஸௌகத, ஆர்ஹத மதக்ரந்தங்களையெல்லாம் நன்கு ஆராய்ச்சி செய்ய இவர்க்கு அவகாசம் ஏற்பட்டு அவற்றிலும் நிரம்பிய நைபுண்யம் பெற்றார்.

இவருடைய பாண்டித்யப்ரஸித்தி மிகவும் ஓங்கி வளர்ந்தது. மைஸூரில் பரகால மடாதிபதியாக எழுந்தருளியிருந்த ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீ ஸ்ரீநிவாஸ ப்ரஹ்ம தந்த்ரஸ்வாமிகள் ஒருகால் திருநாராயணபுர மஹோத்ஸவத்திற்கு எழுந்தருளியிருந்து இவருடைய ஒப்புயர்வற்ற வைதுஷ்யத்தைக் கடாக்ஷித்து வியந்து இவரைத் தமது மடத்தில் ஆஸ்தாந பண்டிதாக்ரேஸரராக வரித்துக்கொண்டார். அப்போது இவர்க்கு வயது 27. அப்போதே இவர் சதுச்சாஸ்த்ர பாரங்கதராய் வாக்யார்த்தம் சொல்லுவதில் ஒப்பற்றவராய் க்ரந்தங்கள் எழுதுவதிலும் நிகரற்றவராய் விளங்கிப் பெரும்புகழ் படைத்தார். ஸ்ரீ பரகால ஸ்வாமியோடு யாத்திரையாகவும் இவர் எழுந்தருளியிருந்து ஆங்காங்கு மதாந்தரஸ்த வித்வான்களை வாதில் வென்று பலரைத் திருத்தியும் பணி கொண்டார். அப்போதிருந்த மைஸூர் மஹாராஜரும் இவரை மிகச்சிறப்பாக ஸன்மானித்தார்.

இந்த மஹான் அனேக வேதாந்த வாதக்ரந்தங்களையும் அலங்கார க்ரந்தங்களையும் தர்க்க சாஸ்த்ரத்தில் வாதக்ரந்தங்களையும் செய்தருளியிருக்கிறார். இவர் இயற்றியருளின வேதாந்த வாதாவளியில் பரிசயமின்றிக்கே ஸ்ரீ பாஷ்யாதிக்ரந்தங்களை நிர்வஹிப்பவர்கள் வேதாந்திகளாகக் கருதப்படுவதில்லை. எனவே, இவருடைய வாதக்ரந்தங்களில் பரிபூர்ண அவகாஹநம் பெற்றவர்களுக்கே வேதாந்த மருமங்கள் விளங்குமென்பது ஸர்வநிர்விவாதம்.

இந்த ஸ்வாமி நாற்பது திருநக்ஷத்ரமே இந்த விபூதியில் எழுந்தருளியிருந்தார். இவர் எம்பெருமானாரை ஸாக்ஷாத்கரித்தவர் என்று ஒரு ஐதிஹ்யம சொல்லிப்போருவர்கள்; மாயாவாதிகளுக்கு முக்கிய க்ரந்தமாகிய [பஹூநதீயவஹூாவஹூாஸஹிதமான] அத்வைதஸித்தியென்னும் க்ரந்தத்திற்குக் கண்டனமாக ந்யாயபாஸ்கரமென்கிற மிகச்சிறந்த க்ரந்தத்தை இந்த ஸ்வாமி செய்தருள ஆரம்பித்து முதல்பரிச்சேதம் எழுதி முடித்தவன்று மிகப்ரபல வித்வான்களான சில அத்வைதிகள் இதையறிந்துவந்து வாதப் போருக்கழைத்துப் பலவகையான குத்ஸித வாதங்களைப் பண்ணினர்களாம். அப்போது பரகால மடத்தில் வித்வான்களாயிருந்த சில ஸ்ரீவைஷ்ணவர்களும் "ஸ்ரீமத் வரவரமுநி ஸம்ப்ரதாயஸ்தராயிருக்கின்ற இவரை நம் ஸம்ப்ரதாயஸ்தராக ஆக்கிக்கொள்வதற்கு இதுவே நல்ல ஸமயம்" என்று பார்த்து அவர்கள் ஸ்ரீமத் வரவரமுநி விஷயமான தூஷணைகளைப் பொழிந்து இவருடைய திருவுள்ளத்

திலே மிகவும் காலுஷ்யத்தையுண்டு பண்ணினர்களாம். இவ்விரண்டு வகையான ஸம்பவங்களால் இந்த ஸ்வாமி மிகவும் திருவுள்ளம் கலங்கித் திருக்கண்வளர்ந்தருளுகையில் அன்றிரவு கனவிலே ஆதிசேஷன் முதலிலே எம்பெருமானாராகவும் பிறகு மணவாளமாமுனிகளாகவும் இவர்க்கு ஸேவை ஸாதித்து நல் தெளிவு பிறப்பித்ததாக ப்ரஸித்தம்.

இவ்விஷயத்திற்கு ப்ரத்யபிஜ்ஞாபகமாகவே அந்த ந்யாய பாஸ்கரத்தில் அன்று எழுதத்தொடங்கிய இரண்டாவது பரிச்சேதத்தின் உபக்ரமத்தில்,

“𑌶𑍇𑌷𑌃 𑌶𑍍𑌰𑍀𑌮𑌾𑌨𑍍 𑌨𑌿𑌗𑌮𑌮𑌕𑍁𑌟𑍀𑌯𑍁𑌗𑍍𑌮𑌰𑌕𑍍𑌷𑌾𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤𑌃
𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌰𑌾𑌮𑌾𑌵𑌰𑌜𑌮𑍁𑌨𑌿𑌤𑌾𑌂 𑌰𑌮𑍍𑌯𑌜𑌾𑌮𑌾𑌤𑍃𑌤𑌾𑌂 𑌚 ।
𑌵𑌿𑌨𑍍𑌦𑌨𑍍 𑌦𑍃𑌪𑍍𑌯𑌦𑍍𑌵𑌿𑌮𑌤𑌪𑌟𑌲𑍀𑌪𑌾𑌟𑌨𑍋𑌦𑍍𑌦𑌾𑌮𑌸𑍂𑌕𑍍𑌤𑌿𑌃
𑌭𑍂𑌯𑌾𑌦𑍍𑌭𑌵𑍍𑌯𑌪𑍍𑌰𑌥𑌿𑌤𑌮𑌹𑌿𑌮𑌾 𑌶𑍍𑌰𑍇𑌯𑌸𑍇 𑌭𑍂𑌯𑌸𑍇 𑌨𑌃 ॥

**शेषः श्रीमान् निगममकुटीयुग्मरक्षाप्रवृत्तः श्रीमद्रामावरजमुनितां रम्यजामातृतां च ।**
**विन्दन् दृप्यद्विमतपटलीपाटनोद्दामसूक्तिः भूयाद्भव्यप्रथितमहिमा श्रेयसे भूयसे नः ॥”**

என்கிற ச்லோகத்தை நிவேசிப்பித்தருளினர்.

மற்றும் இவருடைய வைபவங்கள் இன்னமும் விரிவாக அறிய வேண்டியவை பலவுள; அவை, இவருடைய பாகிநேயரான பெங்களூர் (Late) கல்கிஸிம்ஹம் நரஸிம்ஹாசாரியர் ஸ்வாமி வெளியிட்டிருக்கிற வைபவப்ரகாசிகையிலிருந்து அறியத்தக்கன, இந்த வைபவ ஸங்க்ரஹம் அதிலிருந்தும் தொகுக்கப்பட்டது. ... ... [ஆக இந்த சுருக்கமான வைபவம் ஏற்கெனவே பல வருஷங்களுக்கு முன்பு அடியேன் எழுதி வெளியிட்டிருந்தது.]

மேலே குறித்த வைபவஸங்க்ரஹத்திலுள்ள விஷயங்களை அடியேன் சிறிது விவரித்துப் பேசினேன். அடியேன் அதிபால்யத்தில் ஸ்ரீ ஜகத்குரு காதிஸ்வாமியோடுகூட ஹைதராபாத் சென்று அங்கு ஸீதாராம்பாக்கில் வாழ்கையில் திருநாராயணபுரம் பண்டயம் ஆழ்வார்ஸ்வாமி யென்கிற ப்ரஸித்தரான வித்வத்ஸார்வபௌமரிடத்தில் அடியேன் (ஆஸ்தித) அனந்தாழ்வார் ஸ்வாமியின் வேதாந்தவாதாவளியில் தலைபெற்ற ஸித்தாந்த ஸித்தாஞ்ஜநமென்னும் க்ரந்தத்தை வாசிக்கநேர்ந்தது. அப்போது அந்த ஆழ்வார்ஸ்வாமி பாட ப்ரவசநத்திற்கு முன்னும பின்னும் அனந்தாழ்வார் ஸ்வாமியைப்பற்றிச் சிலபேசிக் கண்ணுங் கண்ணீருமாயிருப்பர். அப்போதே பிடித்து அடியேனுக்கு அனந்தாழ்வார் ஸ்வாமி பக்கலிலே ஹார்த்மானவொரு ஆவர்ஜ்யமுண்டாகியிருந்தது. முன்னம் ஆஸ்தாவித்த ‘அழகியமணவாளர்’ ஸ்வாமியினால் அந்த ஆவர்ஜ்யம் அபிவிருத்தி செய்யப்பட்டிருந்தது. அதை அடியேன் மேலே குறித்த வித்வத்ஸதஸ்ஸில் விளங்கச்செய்துகொள்ள எதிர்பாராத அவகாசமொன்று கிடைத்ததற்கு மிகவும் அநுமோதித்து அடியேனுடைய சிற்றுரையை முடித்துக்கொண்டேன்.

பிறகு, அவ்வூரில் ஸர்வப்ரஸித்த வித்வச்சிகாமணியாக எழுந்தருளியிருந்த ஜக்கு வேங்கடாசார்யஸ்வாமியின் திருக்குமாரர் அனந்தாழ்வார் அருளிச்செய்திருந்த லோகோத்தரமான சதச்லோகமொன்றை கண்டரவமாகவும் ஸாவதாநமாகவும் வாசித்து ஸதஸ்யர்களை மிகவும் ரஞ்ஜிப்பித்தார். பிறகு, அக்ராஸநாதிபதிகளான ஜீயர்ஸ்வாமிகள் “மதுரேண ஸமாபயேத்” என்கிறபடிக்குச் சேர ஸமயோசிதமான மதுரோக்திகளைப் பொழிந்து ஸதஸ் ஸமாபனம் செய்தருளியாயிற்று. ... ... ... ... *

## பெங்களூரில் உபந்யாஸம்

அடியேன் திருநாராயணபுரத்திலிருந்து மறுநாள் பெங்களூர் விடைகொள்ள நேர்ந்தது. அவ்விடத்திலுள்ள சில ஸஹ்ருதய ஸுஹ்ருந்மணிகள் சாமராஜபேட்டையிலுள்ள கர்ணாடக ஸாஹித்ய பரிஷத்து ஹாலில் கீதாரஸம் என்னுமோர் உபந்யாஸம் செய்ய ஏற்பாடு செய்தனர். அவ்விடத்திலுள்ள சில பல லௌகிக மஹநீயர்களின் அநுரோதத்தினால் இது அநிவார்யமாயிருந்தது. அவர்கள் ஆங்கிலபாஷையில் வெளியிட்டிருந்தவொரு விளம்பரம்—

The President & Members of

Yoga Centre Bangalore-4.

*cordially invite you to attend the tecture by*

**His Holiness Jagdacharya Simhasandista Mahavidwan**

Sri Sri P. B. ANNANGRACHARYA of Kanchee.

on

"GEETHA RASA"

*on Wednecday the 23rd Jan. 1963 at 6 p. m. at Kannada Sahitya Parishat Hall, Harding Road, Chamarajapet, Baugalore-18.*

Hon'ble Sri B. VAIKUNTA BALIGA, B.A., B.L.

(Speaker, Mysore Legislative Assembly)

Presdes.

**M. V. KRISHNA MURTHY**
Conuener.

**A. R A. ACHARYA**
Genral Secletary.

PROGRAMME

| | | |
|---|---|---|
| 1 | Invocation | |
| 2 | Welcome | by Dr. Acharya |
| 3 | Introdsction of His Holiness | by Sri M. V. Krishna Murthy |
| 4 | Swamiji Speaks | "Geeth Rasa" |
| 5 | Conclusion Speech | by President |
| 6 | Vote of Thanks | by Sri Chand Ratna Mohta |

இந்த புரோக்ராம்படியே 23-1-63 புதன்கிழமையன்று மாலையில் இவ்வுபந்யாஸம் நடைபெற்றது. அப்போதைய படமொன்று அடுத்தபேஜில் காணத்தக்கது.

## ஆந்திரப் பிராந்தஸூர்யாஸ்தமயம்.

ஆந்திரப்ராந்தத்தில் விஜயநகரத்தில் ஸ்ரீமத் உ. வே. வெங்கடராமாசாரியர் ஸ்வாமியென்று ப்ரஸித்தரான உபய வித்வந்மணி யெழுந்தருளியிருந்தார். அந்த ப்ராந்தத்தில் இந்த ஸ்வாமியிடத்தில் ஸாமாந்ய சாஸ்த்ரங்களையும் ஸ்ரீபாஷ்யபகவத்விஷயாதிகளையும் ஸேவித்து வ்யாபகர்களான வித்வான்கள் பலருளர். இந்த மஹான் எண்பது திருநக்ஷத்திரம் வாழ்ந்திருந்து நேற்று மார்கழித்திங்கள் முடிவில் ஸ்வஸ்தானத்திலேயே திருநாட்டுக்கெழுந்தருளினர். இவருடைய ஸ்தானத்தைப் பூர்த்திசெய்யவல்ல வித்வான் இல்லாமையாலே இது அத்யந்த சோசநீயம். ஆனாலும் இவருடைய வித்யார்த்திகளான வித்வான்கள் சிலருளர்.



சுபக்ருத் ஆண்டு மார்கழி முப்பதும் திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்தஸாரதிஸ்வாமி ஸந்நிதியில் திருப்பாவை கோஷ்டியின் காட்சி



சுபக்ருத்ஸ்ரீ மார்கழி முப்பதும் திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்தஸாரதிஸ்வாமி ஸன்னிதியில் திருப்பாவை கோஷ்டியின காட்சி

காஞ்சீபுரம் க்ரந்தமாலா ஆபீசில் கிடைக்கக்கூடிய P. B. A. பதிப்பு நூல்கள் யாவும் சென்னை வாஸிகளுக்கு தபால் செலவு இல்லாமல் கிடைப்பதற்கு திருவல்லிக்கேணி தென்னண்டை மாடவீதி, 21 கெ. M. A. கிருஷ்ணம்மாள், B.A., B.L. இடம் புத்தகசாலையொன்று அமைக்கப்பட்டிருக்கிறது. ஸத்க்ரந்தப்ரகாசன ஸபையார்.

# உபந்யாஸஸப்தகம்

ஸ்ரீகாஞ்சி P. B. அண்ணங்கராசாரியர்

## 1. மதியும் விதியும்.

விதியானது எவராலும் கடக்க முடியாத தெனப்படும். "தைவம் திஷ்டம் பாக தேயம் பாக்யம் ஸ்த்ரீ நியதிர் விதி:" என்று அமரகோசமாதலால் தைவத்திற்கே விதி யென்று பெயர். ஒவ்வொரு பிராணிக்கும் ஜனிக்கும்போதே ஆயுள் முதலானவற் றில் ஒருவிதமான தைவஸங்கல்பம் ஏற்பட்டுவிடுகிறது. அதுதான் விதியென்பது. அந்த விதிப்படியேதான் எதுவும் நடைபெற்றுவரும். அது பழுதுபடமாட்டாது. விதிக்குமாறாக எதுவும் நடைபெறாது. "லலாடலிகிதா ரேகா பரிமார்ஷ்டும் ந சக்யதே." என்கிற வசனம் யாவருமறிந்தது. 'தலையெழுத்து ஒருவராலும் தவிர்க்க முடியாதது' என்பது இதன் கருத்து.

உண்மையில் தைவபலமென்பது எல்லாவற்றினும் மேம்பட்டதாதலால் அது அநிவார்யமென்பது மறுக்க முடியாததே. ஆனால் "மதியினால் விதியை வெல்ல முடியும்" என்பது நுண்ணறிவாளர்களின் முதுமொழியாகக் காண்கிறது. இதற்குச் சேர இதிஹாஸ புராணங்களிற் கதைகளும் பல காணப்படுகின்றன. சில கேண்மின்.

ஸாவித்ரியினால் தனக்கு ஸத்தியவானோடு விவாஹம் நிச்சயிக்கப்பட்டது. இதையறிந்த நாரதமுனிவர் 'ஸத்யவானுடைய ஆயுள் மிகவும் குறுகியுள்ளது; அவனை மணந்து கொண்டால் ஸாவித்திரி நீண்டகாலம் வாழமுடியாது; எப்படியாவது இந்த விவாஹத்தை நிறுத்தி வேறு தீர்க்காயுஸ்ஸான வொரு வரனுக்கு இவளை விவாஹம் செய்து கொடுப்பதே நலம்' என்று தெரிவித்தார். ஸாவித்ரி இதற்குச் சிறிதும் உடன்படவில்லை. விவாஹம் மாநஸிகமென்றும் வாசிகமென்றும் காயிகமென்றும் மூவகைப்படும். இன்னவரனை விவாஹம் செய்துகொள்ள வேணுமென்று நெஞ்சால் நினைப்பது மாநஸிக விவாஹம். அதனை வெளிப்படையாகப் பேசி முடித்துக்கொள் வது வாசிகவிவாஹம். அநுஷ்டான பர்யந்தமாக முடித்துக்கொள்வது காயிக விவாஹம். பிராமாணிகர்களுக்கு இம்மூன்றும் துல்யமேயன்றி இவற்றுள் வாசி கிடையாது. இன்னானை மணந்து கொள்வதென்று நெஞ்சால் நினைத்த வாறே அது நடந்தேறியதுதான். அதை மாற்றி வேறுவிவாஹம் செய்து கொள்வதென்பது விதவா விவாஹ பர்யாயமேயாகும். உத்தமியான ஸாவித்ரி இதனை எங்ஙனம் இசையவல்லள்? ஏற்கெனவே பதியாக வரிக்கப்பட்ட ஸத்யவானைத் தவிர்த்து வேறொருவனை நெஞ்சாலும் நினையேனென்று உறுதி கொண்டாள். என் தலையெழுத்துப்படி ஆகட்டு மென்று கூறி அவனையே மணம்புணர்ந்து வாழ்ந்து வந்தாள். ஒரு ஸம்வத்ஸரத்திற்குள் ஸத்யவானுக்கு மரணம் அணித்தாயிற்று. ஸாவித்ரி யமனை நேரில் கண்டு பேசித் தனது வாக்சாதுர் யத்தினால் யமனை யீடுபடுத்தித் தான் தீர்க்க ஸுமங்கலியாக வாழப்பெற்றாள். இக் கதை மஹாபாரதத்தில் வநபர்வாவின் முடிவில் வெகு அழகாகச் சொல்லப்பட்டிருக் கின்றது. இக்கதையைச் சிறிது விரிவாகக் கேண்மின்;—

மத்ர தேசத்தரசன் அச்வபதி யென்பவன் ஸாவித்ரீ தேவதையின் உபாஸ னையினால் ஒரு மகளைப் பெற்று அவளுக்கு ஸாவித்ரி யென்றே பெயரிட்டு வளர்த்து வர, அவளுக்கு விவாஹ யோக்யமான வயஸ்ஸுவந்தும் அவளது தேஜஸ்ஸு அப்ரதிமமாய் ஒருவர்க்கும் அணுக வொண்ணுதபடி யிருந்ததனால் அவளை ஒருவரும் மனைவியாக வரியாதிருக்க, பிதாவானவர் 'பெண்ணே! நீயே சென்று உனக்குத்

தகுந்த வரனை ஸ்வயம்வரமாக லபிக்கக் கடவை' என்று கட்டளையிட்டு மந்திரிகளுடன் அவளைத் தேரின்மேலேற்றி யனுப்ப, அவளும் தந்தையிட்ட கட்டளையின்படி பல தேசங்களிலும் சென்றுபார்த்துத் தனக்கேற்ற வொருவரனை நிர்ணயித்துக்கொண்டு தந்தையிடம் திரும்பி வந்தாள். அப்போது நாரத மஹர்ஷியும் தந்தையும் உடன் வீற்றிருந்தனர், இவள் எங்குப்போய் வருகிறாள்? என்ன செய்தி?' என்று முனிவர் கேட்க; ஸாவித்ரியே சொல்லத் தொடங்கினாள்:—ஸால்வதேசத்தரசனான த்யுமத் ஸேனன் கண்ணில்லாதவனும் ராஜ்ய மிழந்தவனுமாயிருக்கின்றானே; அவனுடைய அருமைப்புதல்வன் ஸத்யவானென்பவன், அவனை நான் கணவனாக வரித்துவந்திருக் கிறேனென்றாள். இது கேட்டவுடனே நாரதமுனிவர் 'அந்த ஸத்யவான் மஹா குணசாலி யென்பதில் ஐயமில்லை; ஆனால் அவனது ஆயுள்முடிவு இன்னும் ஒரு ஸம்வத்ஸரத்தினுள்ளே யாம்' என்று தெரிவிக்க, அரசன் மகளை நோக்கி 'அம்மா ஸாவித்ரி! முனிவர் சொல்வதைக் கேட்டாயன்றோ; அல்பாயுஸ்ஸான அவனை விட்டு வேறு கணவனைத் தேடிக்கொள்' என்று சொல்ல, அதற்கு ஸாவித்ரி சிறிதும் உடன்படாமல் 'என் விதிப்படியாகட்டும்; மாநஸிகமான விவாஹம் முடிந்துவிட்ட பிறகு இனி அதனை மாற்றிக்கொள்வதென்பது நடவாத காரியம்' என்று சொல்ல, அரசனும் நாரத முனிவருடைய அநுமதியைப் பெற்றுக் கொண்டு ஸாவித்ரியின் விவாஹத்தை நிறைவேற்றுவதாகப் பரிஜந பரிவார புரோஹிதாதிகளுடன் புறப் பட்டு அரண்யத்தில் தாய் தந்தையோடு வாஸஞ்செய்து கொண்டிருக்கின்ற ஸத்ய வானுக்கு முறைப்படி விவாஹம் செய்து கொடுத்து வந்தனன்.

ஸத்தியவான் ஸாவித்திரியோடு இல்லற வாழ்க்கையை நடத்திவருகிறான்; ஸாவித்திரி ஸர்வாபரணங்களையும் கழற்றிவிட்டு மரவுரியையும் காஷாயத்தையு மணிந்து கொண்டு பதிசுச்ரூஷையில் ஊன்றி யிருந்தாள். இப்படி காலம் சென்று கொண்டிருக்கையில் நாரதமுனிவர் சொல்லியிருந்த நாள் குறுகினதை நெஞ்சிற் கொண்டாள். கணவனுடைய மரணம் நான்கு நாளில் நேரப்போகிற தென்றறிந்து முன்னமே யொரு த்ரிராத்ர வ்ரதத்தை யனுட்டித்து முடித்தாள். அந்த நாளும் அணுகிவிட்டது. ஸத்யவாந் கோடாலிப்படையை யெடுத்துக் கொண்டு வழக்கம் போல் வனஞ்சென்றான். அன்று ஸத்யவான் வனமேகி உணவுப்பொருள்களை சேகரித்துக்கொண்டு விறகு வெட்டப் புகுகையில் மரணக்குறிகள் தோன்றத் தொடங்கின. உடனே அவன் தனக்குண்டான கிலேசங்களைச் சொல்லிக் கொண்டு ஸாவித்ரியின் மடியில் தலைவைத்துத் தரையில் படுத்துக் கொண்டான். நாரதமுனிவர் சொன்னபடி கணவனது மரணகாலம் ப்ராப்தமாய்விட்ட தென்றறிந்த ஸாவித்ரி மிகவும் சோகித்திருக்கையில் பாசமும் கையுமாக அங்கு வந்து நின்ற யமனையும் கண்டு மெல்லவெழுந்து கைகூப்பி நின்று 'உம்மைப் பார்த்தால் அமாநுஷ தேவதை யாகக் காண்கிறது; நீர் யார்? இவ்விடம் எதற்காக வந்தீர்?' என்று விநயமாய்க் கேட்க; அதற்கு அவர் 'அம்மா ஸாவித்ரி! நீ சிறந்த பதிவிரதையாதலால் உன்னோடு பேசுகிறேன். நான் யமன்; உனது கணவனுடைய வாழ்நாள் முடிந்துவிட்டபடியால் அவனுயிரைக் கொண்டுபோக வந்திருக்கிறேன், பெரும்பாலும் எனது கிங்கரர்களே வந்து இக்காரியம் செய்து போவது வழக்கம். ஆயினும் உன் கணவன் பரமதார்மிக னாகையாலே அவர்கள் இவனை யணுக சக்தரல்ல ரென்று நானே வர நேர்ந்தது' என்று சொல்லிக் கொண்டே ஸத்யவானுயிரைக் கவர்ந்து கொண்டு தென்திசை நோக்கிச் செல்லலுற்றான். ஸாவித்ரியானவள் மிக்க வருத்தத்துடன் யமனைப் பின் சென்றாள். அதுகண்ட யமன் 'அம்மா ஸாவித்ரி! நீ என்னோடு கூட வருவதில் பயனில்லை; திரும்பிச்செல்; கணவனுக்குச் செய்யவேண்டிய ஈமக்கடன்களை முறைப் படி நிறைவேற்றப் பார்' என்றான். அப்போதும் ஸாவித்ரி மீளாமல், கணவனுயிர் செல்லுமிடத்தே என்னுயிரும் செல்லத்தக்கதன்றோ வென்று சில தருமநுட்பங்களைச் சொன்னாள்; அவைகேட்ட யமன் மிகமகிழ்ந்து 'அம்மா! உனது கணவனுயிரைத் தவிர்த்து வேறு வேண்டிய வரம் என்பால் பெற்றுப் போ' என்றான். 'கண்கெட்டு

வனத்தில் கிலேசப்படுகின்ற எனது மாமனர் கண்பெற்று வாழ அருள்புரிக' என்று கோரினள். யமனும் அங்ஙனமே யாகுக வென்று அருள் செய்தவிடத்தும் ஸாவித்ரி மீளாமலே பின்னையும் தொடர்ந்தாள். அம்மா! வீணகசிரமப்பட்டு என்னைப் பின் தொடராதே; திரும்பிச் செல்' என்று யமன் சொல்லவும் திரும்பாமலே மற்றும் பல தருமநுட்பங்களைப் பேசிக்கொண்டே பின்தொடர்ந்தாள். அப்பேச்சுக்களுக்கு மிகமகிழ்ந்த யமன் 'கணவனுயிரைத்தவிர்த்து வேறொரு வரம் பெற்றுப்போ' என்றான். 'ராஜ்யப்ரஷ்டரான என் மாமனர் ராஜ்யம் பெற்று இனிது வாழவேணுமென்று கோரி, அங்ஙனமே வரம் பெற்றும் மீளாமலே மேலும் பலதருமஸூக்ஷ்மங்களைப் பேசிக் கொண்டே பின்தொடர்ந்தாள்; தன் தந்தைக்கு நூறு புத்திரர்கள் பிறக்கவேணுமென்று வரம்பெற்றாள். பின்னையும் பின்தொடர்ந்து இனிதாகப் பேசிக்கொண்டுபோய், தனக்கு ஸத்யவானிடத்தில் நூறு புத்திரர்கள் பிறக்கவேணுமென்று வரம் கேட்டாள். யமன் மெய்மறந்து அந்த வரத்தையும் கொடுத்து ஸத்யவானுடைய உயிரையும் தந்து போயினன். மதியினல் விதியை வென்று விட்டாளன்றோவிவள்.

மார்க்கண்டேயன் பதினாறுபிராயமே வாழும் விதியுடையனயிருந்து வைத்தும் தேவதா ஸமாராதன பலத்தினல் விதியைக்கடந்து நீண்ட ஆயுள்பெற்றமை கேள்விப்படுகின்றோம். இங்ஙனே பலபல கதைகளினல் விதியை மதியால் வெல்லலாமென்பது திண்மை பெறுகின்றது. மதியிலாதவர்களே விதிக்கு வசப்பட்டிருப்பர்கள். அன்னவர்களில் கம்ஸனைத் தலைவனக நினைப்பது. .... .... .... (1)

## 2. பகவான் இருக்குமிடங்கள்

சிறுவர்கள் பள்ளிக்கூடம் செல்ல ஆரம்பிக்கும் போது ஒருவர்க்கொருவர் ஸம்பாஷணை செய்கையில் பல விநோதப்பேச்சுக்களைப் பேசிக்கொள்வதுண்டு. அவற்றுள் ஒரு விநோதப் பேச்சு—'இராமா! கடவுள் இருக்குமிடத்தை நீ சொல்லுவாயானல் உனக்கு ஓரணு தருவேன்' என்று கண்ணன் சொல்ல, அதற்கு இராமன் 'கண்ணு கடவுள் இல்லாதவிடத்தை நீ சொல்லுவாயானல் உனக்கு இரண்டணு தருவேன்.' என்றான் என்பது. இதனல், எம்பெருமான் எங்கும் நிறைந்த பரம்பொருள் என்கிற வுணர்ச்சி இளம்பிராயம் தொடங்கியே நம்மவர்களது நெஞ்சிற் பதிந்திருப்பதாகத் தெரியவருகின்றது. *அந்தர் பஹிச்ச தத்ஸர்வம் வ்யாப்ய நாராயணஸ் ஸ்தித:* என்று வேதாந்தபரிசயம் செய்த பிறகு பெரியார்களுக்கு உண்டாகக் கடவதான உணர்ச்சி சிறுவர்களுக்கு உண்டாகிறதென்றால் இதற்குக் காரணம் உயர்குடிப் பிறப்பே யென்னவேணும். ஸத்குல ப்ரஸூதி யென்பது மஹாஸுக்ருத பலங்களில் தலையானது. உயர்குடியிற் பிறந்தவர்களுக்கு ஆஸ்திக்யம் முதலான சிறந்த குணங்கள் இயற்கையிலேயே தோன்றுகின்றன. எங்குமுளன் கண்ணனென்ற வுணர்ச்சி முற்காலத்தில் ப்ரஹ்லாதாழ்வானுக்குத் தோன்றி யிருந்ததாக இதிஹாஸ புராணங்களினலறிகிறோம். அவ்வுணர்ச்சி ஆஸ்திக குடும்பங்களில் ஒவ்வொரு சிறுவர்க்கும் உண்டாகி வருவதாகக் காண்கிறோம். இளம்பிராயத்திலுள்ள வுணர்ச்சி மேன்மேலும் வளர வேண்டுவது ப்ராப்தமாயிருக்க, இக்காலத்தவர்களுக்கு வயது முற்றமுற்ற இளம்பிராயவுணர்ச்சிக்கு எதிரிடையான வுணர்ச்சியே உன்மேஷமடைவதாகக் காண்கிறது. 'எம்பெருமான் எங்குமுளன்' என்பதற்கு எதிராக எம்பெருமானெங்குமிலன், எம்பெருமானே யிலன்' என்கிற பிரசாரமே முற்றுகின்றது.

'எம்பெருமான் எங்கும் நிறைந்தபொருளாகில் கோவில்களிற் சென்று தொழ வேண்டுவதேன்? ப்ரஹ்லாதன் எந்த கோயிலுக்குப் போனன்?' என்றிப்படிப்பட்ட கேள்விகளைக் கேட்க முன்வருகிறார்கள் நவநாகரிகர்கள். காற்று எங்கும் நிறைந்த பூதமாயிருக்க அதற்காக விசிறியைத் தேடுவதேன்? நூறுமாயிரமும் செலவுசெய்து

எலெக்ட்ரிக் பங்காக்கள் போட முயல்வதேன்? என்று அவர்கள் ஆராய்ச்சி செய்ய வேண்டும். "அக்நௌ திஷ்டதி விப்ராணாம் ஹ்ருதி திஷ்டதி யோகிநாம். ப்ரதிமாஸு அப்ரபுத்தாநாம் ஸர்வத்ர ஸமதர்சிநாம்." என்கிறார்கள் மஹர்ஷிகள். இந்தச்லோகத்தின் பொருள்யாதெனில்; பகவான் அந்தணர்களுக்கு அக்நியிலுள்ளான்; யோகிகளுக்கு உள்ளத்தே யுள்ளான்; அறிவிலிகளுக்குப் பிரதிமைகளிலுள்ளான்; ஸமதர்சிகளுக்கு ஸர்வத்ரவுள்ளான்—என்பதாம்.

அந்தணர்களுக்கு பகவான் அக்நியிலிருக்கிறானென்றால் என்ன கருத்தென்னில் "குளித்து மூன்றனலை யோம்புங் குறிகொளந்தணமை" என்று திருமாலையில் தொண்டரடிப் பொடியாழ்வாரருளிச் செய்கிறபடி அந்தணர்கள் தங்களுக்குரியதான நித்யகர்மா நுஷ்டானத்தில் நிரதர்களாயிருந்தால்— * "வர்ணாச்ரமா சாரவதா புருஷேண பர: புமாந், விஷ்ணு ராராத்யதே, பந்தா நாந்யஸ் தத்தோஷகாரக: * "எனப்பட்ட பகவதாராதந நிரதர்களா யிருந்தால் அதன் மூலமாக பகவத் தர்சனம் கிடைக்குமென்றவாறு.

யோகிகளுக்கு ஹ்ருதயத்திலிருக்கிறானென்றதன் கருத்து—*மார்வமென்பதோர் கோயிலமைத்து மாதவனென்னுந் தெய்வத்தை நாட்டி, ஆர்வமென்பதோர் பூவிட வல்லார்க்கு* என்று பெரியாழ்வா ரருளிச் செய்தபடி ஜிதேந்திரியர்களாய் தியானம் செய்யவல்லவர்களுக்கு அந்த தியானத்தின் மூலமாகவே பகவத் தரிசனம் கிடைக்குமென்பதேயாம்.

அப்ரபுத்தர்களுக்கு ப்ரதிமைகளி லிருக்கிறானென்றது—அர்ச்சாமூர்த்திகளில் ஆழங்காற்பட்டு * உலகமேத்துங் கண்டி யூரரங்கம் மெய்யம் கச்சி பேர் மல்லையென்று மண்டினாருய்யலல்லால் மற்றையார்க் குய்யலாமே * என்ற திருமங்கையாழ்வாரருளிச் செயலில் திடநம்பிக்கை கொண்டு திவ்யதேச ப்ராவண்யமே போது போக்காயிருப்பார்க்கு அதன் மூலமாகவே பகவத் தர்சனம் எளிதாகு மென்றபடி.

ப்ரபுத்தர்களோடு அப்ரபுத்தர்களோடு வாசியற அனைவர்க்கும் அர்ச்சையே தஞ்சமாயிருக்க "அப்ரபுத்தாநாம் ப்ரதிமாஸு" என்று சொல்லியிருக்கிறதே, இதுவென்? ப்ரதிமைகளி லீடுபட்டிருந்த ஆழ்வார்களும் நாதயாமுநயதிவராதிகளான பூர்வாசார்யர்களும் அப்ரபுத்தர்களோ? என்று கேள்வி பிறக்கும். இதைப் பற்றிப் பூர்வாசார்ய ஸ்ரீஸூக்தியே ஒன்றுள்ளது; அதைப் பற்றிப் பிறகு பேசுவோம்.

இனி, * ஸர்வத்ர ஸமதர்சிநாம் * என்றுள்ளது. அக்நிகார்யமும் வேண்டாமல் ஹ்ருதயத்தில் தியானமும் வேண்டாமல் அர்ச்சையில் ஆழங்காற் படுதலும் வேண்டாமல் ப்ரஹ்லாதாழ்வானைப் போன்றிருப்பார்க்கு எங்கும் பகவத் தர்சனம் கிடைக்குமென்றபடி. ... .... ... .... ... (2)

## 3. கண்ணபிரானும் குசேலமுனிவரும்

ஸத்யஸங்கல்பனான எம்பெருமான் இந்நிலவுலகில் அவதாரங்கள் செய்யாமலே தன்னுடைய ஸங்கல்ப சக்தியினாலேயே எதையும் செய்து தலைக்கட்டிவிட முடியும். * நாட்டில் பிறந்து படாதன பட்டு மனிசர்க்காய்* என்று நம்மாழ்வாரருளிச் செய்கிறபடி கர்மவச்யர்களான நம்போல்வாரும் படாத கஷ்டங்களை அகர்மவச்யனான தான் பட்டு எதற்காக இந்நிலத்தில் வந்து பிறக்கவேணும்? எத்தனை அஸுர ராக்ஷஸர்களைக் கொல்ல வேணுமானாலும் *"விச்வம் தியைவ விரசய்ய நிசாய்ய பூயஸ் ஸஞ்ஜஹ்ருஷ:" * என்று ஆழ்வானருளிச் செய்த கணக்கிலே ஸங்கல்ப மாத்ரத்தாலே அது செய்யமுடியாதா? ஸாதுபரித்ராணம் எவ்வளவு பண்ண வேணுமானாலும் "நந்வஸ்தி விச்வபரிபாலநஜாகருகஸ் ஸங்கல்ப ஏவ" என்று தேசிகனருளிச் செய்கிறபடி ஸங்கல்

பத்தாலே பண்ணமுடியாதா? எதற்காக மனிசரும் மற்றும் மூற்றுமாய் மாயப்பிறவி பிறந்து வருந்த வேண்டும்? என்று பலர் கேட்பதுண்டு. இதற்கு நம் பூருவாசாரியர்கள் ஆச்சரியமான ஸமாதானத்தை அருளிச் செய்தேயுள்ளார்கள் துஷ்க்ருத் விநாசநம் ஒருவாறு ஸங்கல்பஸாத்யமானாலும் ஸாது பரித்ராணம் ஸங்கல்ப ஸாத்ய மாகாதென்று ஸ்வாமி யெம்பெருமானர் அந்தரதிகரண ஸ்ரீபாஷ்யத்தில் வ்யக்தமாக அருளிச் செய்துள்ளார். முடிவாகத் தேர்ந்த பொருள் யாதெனில், எம்பெருமான் ஸங்கல்ப சக்தியாலே செய்தருளுமளவில் ஸாது பரித்ராண துஷ்க்ருத் விநாசாதி ரூபங்களான காரியங்கள் ஒருவாறு நிறைவேறி விடுகின்றனவென்று கொண்டாலும் தன்னுடைய அற்புதமான திவ்ய கல்யாண குணங்களை வெளியிட ப்ராப்தமே யாகாது; திருக்கல்யாண குண ப்ரகாசனமே எம்பெருமானுக்கு ப்ரதானமான உத்தேசயம். அதனை ஸங்கல்பத்தால் நிறைவேற்றவே முடியாது, அதற்காகவே அவதாரங்கள் செய்து போருவது—என்பதே. இதையே பட்டர் "குணபரீவாஹாத்மநாம் ஜந்மநாம்" என்ற ஸ்ரீஸூக்தியினால் வெளியிட்டருளினர். நீர் நிரம்பின காலத்தில் ஏரிகளுக்குக் கலுங்கல் எடுத்து விடாவிட்டால் எப்படி தரிப்பு அரிதோ, அப்படியே குணபுஷ்கலனான எம்பெருமானுக்கும் அவதாரங்கள் செய்யாவிடில் குணங்களைக் கொண்டு தரிப்பு அரிது என்பது காட்டப்பட்டது. இது தோன்றவே ஸ்ரீராமாயணத்தின் ஆரம்பமே "கோ ந்வஸ்மிந் ஸாம்ப்ரதம் லோகே குணவாந் கச் ச வீர்யவாந்" இத்யாதி குண ப்ரச்நமாகவே நிகழ்ந்திருக்கின்றது. ஸ்ரீராமாயணாதி இதிஹாஸ புராண ப்ரவசனம் செய்தருளும் மஹான்களும் கதா ஸந்தர்ப்பங்களில் முக்கியமான நோக்கு வையாதே ஆங்காங்கு ஆவிஷ்க்ருதமாகின்ற திருக்குணங்களிலேயே தாங்களுருகி ச்ரோதாக்களையும் உருக்குகின்றார்கள்.

*ராமராவணயோர் யுத்தம் ராமராவணயோரிவ* என்னும்படி இராமனுக்கும் இராவணனுக்கும் ப்ரபல யுத்தம் நடந்ததென்று இதைப் பல ஸர்க்கங்களால் வான்மீகி முனிவர் பெருக்கிப் பேசினாலும் *பொல்லா வரக்கனைக் கிள்ளிக் களைந்தானை யென்று பேசலாம் படியான மஹாவீரன் ஒரு புழுவோடே போராடினதில் வியப்பார் ஆரேனுமுளரோ? அந்த ஸந்தர்ப்பத்தில் "சசால சாபஞ்ச முமோச வீர:" என்னும்படி நிசாசரர்கோமான் நிலைகலங்கி நின்றபோது "இன்று போய் நாளை வா" என்று பெருமாள் திருவுள்ளமிரங்கி விடைகொடுத்துவிட்டாரே! இந்த திருக்குணம் என்னே என்னே! என்று இதற்கு உருகுகிறார்களே தவிர, சரமாரி பொழிந்த சேவகத்திற்கு உருகுவார் ஒருவருமிலரே. கூரத்தாழ்வான் அதிமாநுஷஸ்தவத்தில்—"யத் தாத்ரு சாகஸமரிம் ரகுவீர வீக்ஷ்ய" என்ற ச்லோகத்தினால் இந்தத் திருக்குணத்திற்கு உருகும் திறம் மரங்களுமிரங்கும் வகையன்றோ அமைந்துளது. திருநாவீறுடைய பிரானை திருமங்கையாழ்வார் *சுரிகுழற் கனிவாய்த் திருவினைப் பிரித்த கொடுமையிற் கடுவிசை யரக்கன்* என்னும்படி நின்ற மஹாபாபியான இராவணனை உடனே தொலைத் தொழித்துத் திரும்பவேண்டியிருக்க, 'ரணார்திதஸ் த்வம்' என்று திருவுள்ளத்தில் புண்பாடு காட்டுவதும், ('ஆச்வாஸ்ய' என்று) உடம்புக்குத் தேற்றரவு செய்துகொள் என்பதும், 'கச்சாநுஜாநாமி' என்று வீட்டுக்குச் செல்ல விடை கொடுப்பதும் குணரஸிகர்களின் நெஞ்சை நீராயுருக்கக் கேட்க வேணுமோ?

ஸ்ரீராமாவதாரத்தில் காட்டின திருக்குணங்களிற் காட்டிலும் மிகச் சீரியவை க்ருஷ்ணவதாரத்தில் காட்டின திருக்குணங்கள். நம்மாழ்வார் *பிறந்தவாறும் வளர்ந்தவாறும்* என்று சொல்லி ஆறு மாஸம் மோஹித்திருந்தது இவ்வவதாரத்திலே யன்றோ. க்ருஷ்ணவதாரத்தில் எந்த கதாஸந்தர்ப்பத்தை யெடுத்துக் கொண்டாலும் ஆச்சரியமான திருக்குணம் விளங்கியே தீரும். இளம்பிராயக் கதைகள் நிற்க. யௌவன பிராயக்கதைகளில் குசேல முனிவர் வந்து சேருங் காலத்துக் கதை மிக ரமணீயமானது. இது ஸ்ரீபாகவதம் தசமஸ்கந்தத்தில் 80, 81 அத்யாயங்களில் உள்ளது. குசேலோபாக்கியானம் அறியாதாரில்லை, அனைவருமறிந்ததே.

குசேல முனிவரை நோக்கிக் கண்ணபிரான் கூறும் வார்த்தைகளில் ஒன்றையே இங்கெடுத்துக்கொண்டு ரஸாநுபவம் செய்ய விரும்புகிறோம்.

கண்ணனைக் காணச்சென்ற குசேலர் கையில் அவல் கொண்டு போயிருக்கிறார். அதுவும் அவருடைய கந்தைத்துணியில் தங்காமல் கொட்டிப்போய்ச் சில கணங்களே தங்கியிருக்கலாயிற்று. அதையும் கொடுக்க லஜ்ஜித்திருக்கிறார். கண்ணபிரானே "கிமுபாயநமாநீதம் ப்ரஹ்மந் மே பவதோ க்ருஹாத்"=ஐயா! உம் அகத்திலிருந்து எனக்கு என்ன உபஹாரம் கொணர்ந்தீர்? என்று மடிபிடித்துக் கேட்கிறான். இன்னது கொணர்ந்தேனென்று கூறுவதற்கு நா எழும்பவில்லை. கொணர்ந்த அற்ப வஸ்துவை என்னவென்று கூறுவது? என்னவென்று கொடுப்பது! என்று தடுமாறி நிற்கிறார் பாவம்! அந்த ஸங்கோசத்தை யறிந்து கொண்ட கண்ணபிரான் அப்போது கூறுகின்றான்—"அண்வப்யுபாஹ்ருதம் பக்தை: ப்ரேம்ணா பூர்யேவ மே பவேத், பூர்யப்யபக்தோபஹ்ருதம் ந மே தோஷாய கல்பதே" என்று. பக்திமான்கள் அணுவளவு இட்டாலும் அது அன்பின் கனத்தாலே என் புத்திக்கு மிகப் பெரிதாகவே தோற்றும்; அன்பிலாதார் மிகக்கனக்க இட்டாலும் அதனால் நெஞ்சு கனியேன்—என்பது இந்த ச்லோகத்தின் பொருள். இதனால், பகவான் பக்தர்களிடத்துக் கடுகையும் மலையாகக் கொள்ளுமியல்வினன் என்பது பெறப்படும்.

கீதையில் ஒன்பதாமத்யாயத்தில் கூறியுள்ள "பத்ரம் புஷ்பம் பலம் தோயம்" என்ற ச்லோகமும் இந்த ப்ரகரணத்தில் கண்ணனால் பூர்த்தியாகக் கூறப்பட்டிருக்கின்றது. அந்த ச்லோகத்தின் கடைசி பாதம் "அச்நாமி ப்ரயதாத்மந:" என்பது. இவ்விடத்து கீதாபாஷ்யத்தில் எம்பெருமானார் அருளிச் செய்வதாவது—"மநோரதபத தூரவர்த்தி ப்ரியம் ப்ராப்யேவ அச்நாமி" என்று. அவாப்த ஸமஸ்தகாமனான எனக்கும் கிடைக்கமாட்டாததான வொரு ப்ரியவஸ்து கிடைத்தாற்போல் அநுபவிக்கிறேனென்று எம்பெருமான் சொல்லுவதாக பாஷ்யமுள்ளது. ஸம்ஸ்க்ருதஜ்ஞர்கள் அவ்விடத்து பாஷ்யபங்க்தியையெடுத்து ஸேவித்தால் கண்ணநீரைப் பெருக்காமலிருக்க முடியாது. அணுவையும் அமிதமாகக் கொள்ளும் பரிசு தனக்குள்ளதென்பதைக் கண்ணபிரான் இங்கு [குசேல கதையில்] மேலே வெகு ரஸமாகக் காட்டுகிறான். குசேலரை நோக்கிக் கண்ணன் இங்ஙனே சொல்லச் செய்தேயும் அவர் வெட்கத்தினால் அவலைக் கொடுக்கவேயில்லை. கண்ணன் தானாகவே அவருடைய சதச்சித்ரமான உத்தரீய முடிப்பைப் பிடித்திழுக்க, சில அவல்துளிகளே கைப்பட்டனவாம். ஆனாலும் "அண்வபி பூர்யேவ மே பவேத்" என்று கீழே சொன்னது ப்ரத்யக்ஷமாக வேணுமே; அதற்காக, அந்த அவல் கணங்களும் கண்ணன் கைப் பற்றினவாறே முஷ்டியளவாக ஆயிற்றாம். அதை அமுதுசெய்ய, அவ்வளவிலும் அது ஓய்ந்ததில்லை; மற்றொரு முஷ்டியாகவும் பெருகிற்றாம். இவ்வதிசயம் (ஸ்ரீபாகவதத்தில்) "இதி முஷ்டிம் ஸக்ருஜ் ஜக்த்வா த்விதீயம் முஷ்டிமாததே." என்பதனால் தெரிவிக்கப்படுகிறது.

எவ்வளவு இட்டாலும் த்ருப்தி யடையாதே 'என்ன கொடுத்தாய்! உன்னைப் போன்ற கருபண சிரோமணியும் உலகிலுண்டோ?' என்று தூற்றும் நம்போல்வாரைப் போலன்றியே அல்பஸந்துஷ்டன் எம்பெருமான்—என்னும் இம்மஹா குணத்தை எம்பெருமான் தன்னுடைய உக்திகளாலும் நடத்தைகளாலும் விளங்கக் காட்டிக்கொண்டிருப்பதை அஸூயை யின்றிக்கே அநுபவிக்குங் குடியிலே ஜன்மாந்தர ஸஹஸ்ர நற்றவப்பயனாக நாம் பிறந்திருக்கிறோம். இத்தகைய மஹாகுணத்தை ஒருவர் எடுத்துரைத்தால் "கேசவனைப்பாடவும் நீ கேட்டேகிடத்தியோ" என்கிறபடியே ஆனந்தமாகக் கேட்டுக் கொண்டிருக்க வேண்டுவது பக்தியுக்தர்களின் லக்ஷணம். கண்ணபிரான் அர்ஜுநனுக்கு கீதை முழுவதும் உபதேசித்து விட்டு முடிவில் "இதம் தே நாதபஸ்காய..."=நான் உனக்குச் சொன்ன இந்த பரமகுஹ்ய

மான சாஸ்த்ரத்தை அதபஸ்கனுக்குச் சொல்லாதே, அபக்தனுக்குச் சொல்லாதே, அசுச்ரூஷுவுக்குச் சொல்லாதே. என்னிடத்தில் அஸூயையுள்ளவனுக்குச் சொல்லாதேயென்று கட்டளையிடுகிறான்; இங்கு "ந ச மாம் யோப்யஸூயதி" என்றவிடத்திற்கு நம் பாஷ்யகாரர் பாஷ்யமிட்டருளுகிறார்; காணக் கண்ணாயிரம் வேண்டும்; கேட்கக் காதாயிரம் வேண்டும்; நவில நாவாயிரம் வேண்டும்; 'என்னுடைய ஸ்வரூபத்தையும் என்னுடைய ஐச்வர்யத்தையும் என்னுடைய குணங்களையும் ஒருவர் எடுத்துரைத்தால் அவற்றில் தோஷாவிஷ்கரணம் செய்பவனே என்னிடத்தில் அஸூயை கொண்டவன்; அவனுக்கு நீ ஒன்றும் சொல்லாதே. என்று கண்ணபிரான் கட்டளையிடுவதாக ஸ்வாமி பாஷ்யம் செய்தருளுகிறார். பகவத் குண கீர்த்தனம் பண்ணினால் அதில் தோஷாவிஷ்கரணம் செய்பவர் யார்? "கேட்பார் செவி சுடு கீழ்மை வசவுகளே வையும் சேட்பால் பழம் பகைவன் சிசுபாலன்" என்று நம்மாழ்வாரால் விசேஷிக்கப் பெற்ற சிசுபாலன் போல்வார்—என்று இதுவரையில் எண்ணியிருந்தோம். அது தவறு; எம்பெருமானார் தர்சனத்திலேயே ஜனித்து, எம்பெருமானை அநவதிகாதிசயாஸங்க்யேய கல்யாண குணைகதாநனென்றும் இசைந்து வைத்து, "நம் போல்வாரிடத்து நம: என்கிற உக்தி மாத்ர முண்டானாலும் அது எம்பெருமானுக்கு ப்ரீதியுண்டாகிறது" என்று இந்த மஹாகுணத்தைச் சொன்னவாறே கண்கள் சிவந்து தாபம் மிகுந்து விவாத யுத்தஸந்நத்தர்களாகின்றார்களே சில மஹாநுபாவர்கள். அவர்களே *மத்குணேஷு கதிதேஷு தோஷமாவிஷ்கரோதி யென்ற எம்பெருமானார் திவ்ய ஸூக்திக்கு இலக்கானவர்களென்று திண்ணமாக எண்ணத்தட்டுண்டோ?

"ப்ரீதிஷ்டாம் தே நமஉக்திம் விதேம." என்கிற வாக்யம் ஈசாவாஸ்யாதிகளான உபநிஷத்துக்களில் உள்ளதாகையாலும் தேசிகாதிகளால் பகவத் பரமாகவே வ்யாக்யாத மாகையாலும்இது எம்பெருமானைப் பற்றியதன்றென்று வாய்திறக்க வழியில்லை. 'தே ப்ரீதிஷ்டாம் நம உக்திம்' என்று அந்வயித்து, நம: என்கிற உக்தி மாத்ரமும் அவன் திருவுள்ளத்தாலே கனத்ததாகிறது என்று அர்த்தம் செய்தால் இது எம்பெருமானுக்குப் பொருந்தாத குணமென்று சொல்லமுடியுமா? சப்தசக்தியால லப்யமாகாது என்ன முடியுமா? எதுவும் முடியாது. எம்பெருமானுடைய திருவுள்ளத்திற்கும் இயல்பிற்கும் மிக விணங்கினதாய் பகவத் குணாதிசய குதூஹலிகளுக்குப் பரமானந்த ஸந்தோஹஸகதாயகமாய் சப்தஸ்வரஸத: ப்ராப்தமுமாயிருக்கின்ற இந்த மஹார்த்தம் நம்பிள்ளை ஸ்ரீஸூக்திகளுள் மஹாநிதியானது. இதனைப் பல பகவத் கதைகள் நன்கு நிரூபிக்கின்றன. குசேல கதை கேட்டீர்கள்; விதுரகதையும் கேண்மின்.

## 4. கண்ணனும் விதுரனும்

பாண்டவர்க்காய்த் தூதுசென்ற கண்ணபிரான் விதுரர் திருமாளிகையிலே புக்கவாறே "முன்னமே துயின்றருளிய முதுபயோததியோ. பன்னகாதிபப்பாயலோ பச்சையாலிலையோ, சொன்ன நால்வகைச் சுருதியோ கருதி நீ யெய்தற்கு, என்ன மாதவம் செய்ததிச் சிறுகுடிலென்றான்" (வில்லிபாரதம்) என்றபடி பலவிதமாக நைச்யாநுஸந்தானம் செய்து விதுரர் கண்ணனுக்கு ஏதோவுண்ணக் கொடுத்தார். கண்ணனும் அதனைப் பரமானந்தமாகவுண்டான் என்று உலகம் சொல்லி வருகிறது. இவ்விடத்தை மஹாபாரதத்தில் எழுதுகின்ற வ்யாஸபகவான் எங்ஙனே யெழுதினரென்று சிறிது பார்ப்போம். விதுரர் அன்னமிட்டாரென்பதைச் சொல்லுமிடத்து "விதுரோந்நமுபாஹரத்" என்று சொன்ன வியாஸர், கண்ணன் அதனை யமுது செய்தானென்பதைச் சொல்லுமிடத்து "விதுராந்நாநி புபுஜே சுசீநி குணவந்தி ச" என்றார். "அப்திர் லங்கித ஏவ வாநரபடை:" என்ற ரீதியிலே நின்று புராணப்ரஸங்கம் செய்து போருமவர்கள் 'விதுரர் அன்னமிட்டார்; அது பரம பரிசுத்தமாயும் பரம போக்யமாயு மிருந்தபடியாலே அதனைக் கண்ணனமுது செய்தான்' என்றிவ்வளவே

சொல்லிப் போவார்கள். விதுரர் அன்னமிட்டாரென்பதைச் சொல்லும்போது "அந்நம் உபாஹரத்" என்று ஏகவசந ப்ரயோகம் செய்த முனிவர் உடனே கண்ண னமுதுசெய்ததைச் சொல்லுமிடத்து 'அந்நாநி புபுஜே' என்று பஹுவசநப்ர யோகம் செய்ததேன்? என்று ஆராய்ந்து நிதியெடுத்து ஊட்டவல்லவர்கள் மிகச் சிலரே. விதுரர் அன்னமிட்டபோது அது மிகவும் அல்பமாயிருந்ததென்பதைக் காட்ட அங்கு ஏகவசநப்ரயோகம் பண்ணினர். அதுதானே 'அண்வபி ப்ரேம்ணு பூர்யேவ மே பவேத்'' என்ற கண்ணபிரானுடைய திருக்கைத் தலத்தில் சேர்ந்த வாறே அநல்பமாய் விட்டதென்பதைக் காட்ட அங்கு 'அந்நாநி புபுஜே' என்று பஹுவசநப்ரயோகம் பண்ணினர்—என்று மருமமறிந்து எடுத்துரைக்க வல்லவர்கள் யாராயிருக்க வேண்டும்? பகவத்குணஸாகரத்தில் நன்கு படிந்தவர்களாய் பகவா னுடைய விசேஷ கடாக்ஷத்திற்குப் பாத்ரபூதர்களாய் அவனுடைய திருக்குணங் களையே ஜ்வரஸந்நிபதிதரைப் போலே வாய் வெருவுமவர்களாயிருக்க வேண்டும்.

"இக்கருத்தை யுட்கொண்டுதான் வியாஸர் சுலோகமியற்றினரோ? ஏதோ ச்லோகம் கூடுகிறபடி சொல்லி வைத்தார்; அதற்கு இப்படி விசேஷார்த்தம் சொல்லு வது குநிஷ்டை'' என்று ஸஹஸா சொல்லிவிட வல்லவர்கள் எங்கும் பரம்பியுள்ளார் களென்பதை நாமறிவோம். 'விதுரோந்நமுபாஹரத்' என்றதற்குப் பொருந்த 'புபுஜே விதுராந்நம் தத்' என்று ச்லோகமியற்ற அருமையில்லை. "ஜாமாதா வேத்தி நோ பிதா........வ்யாக்க்யாதா வேத்தி நோ கவி:" என்ற கணக்கிலே வ்யாஸர் இவ் விசேஷப்பொருளைக் கருதிற்றிலர் என்றே கொண்டாலும் இந்த இன்சுவைப் பொரு ளைக் கொள்ளக் குறைவில்லாதபடியன்றோ வசநஸந்தர்ப்பம் அமைந்திருக்கின்றது. பகவானுடைய ஆச்சரியமான குணவிசேஷமன்றோ குன்றிலிட்ட விளக்காகின்றது இப்பொருட்சுவையில்.

"கண்காணநிற்கில் ஆணையிட்டு விலக்குவர்களென்று கண்ணுக்குத் தோற் ருதபடி நின்று'' (ஸ்ரீவசநபூஷணம்) என்கிறபடியே கட்கிலியான எம்பெருமானை நாம் ஸாக்ஷாத்கரித்து அநுபவித்து ஆனந்திக்க பாக்கியம் பண்ணிற்றிலோம். "கோவிந் தன் குணம்பாடி ஆவிகாத்திருப்பேனே'' என்று ஆண்டாளருளிச் செய்த கட்டளை யிலே குணநுபவம் பண்ணிப் போதுபோக்க நிற்கிறோ மத்தனை. இந்த குணகீர்த் தனமும் எம்பெருமானர் தர்சனஸ்தர்களுக்கும் சிலர்க்கு அஸஹ்யமாகிற தென்றால் இதனில் மிக்கோர் வியப்புண்டோ? பக்தனிட்ட அல்பமான அன்னம் ஸ்வீகர்த் தாவின் திருவுள்ளத்தால் அநல்பமாயிற்று என்று ஒரு குணரஸிகர் உபந்யஸித்தால் இதில் அநுபபத்திகளைக் கூற வழிதேடுவாருளரோ? *தே பூயிஷ்டாம் நமஉக்திம்* என்னுமன்வயத்தைப் பழிக்கப்பார்க்குமவர்கள் இங்கு வாளாவிருப்பர்களோ? 'நாம் கனக்க இட்டாலும் கூட அதில் குற்றங்குறைகண்டு தள்ளுகிறவனன்றோ பகவான்' என்பதையே ரஸகநமாகக் கொண்டு இதனையே சிஷ்ய கோஷ்டிகளுக்கு ப்ரவசனம் செய்து க்ருதக்ருத்யராமவர்களை நிரோதிப்பாராருமிலரே. .... .... (4)

## 5. "பங்கதிக்தஸ்து ஜடிலோ பரத :—"

ஸ்ரீராமாயண வியாக்கியானங்களுள் ஸ்ரீகோவிந்தராஜீயம் மிகச் சிறந்த வியாக்கியானமாகக் குலாவப்படுகிறது. ஸ்மார்த்த மாத்வப்ரப்ருதிகளும் இந்த வியாக் கியானத்தை மெச்சுகிறார்களென்று தெரியவருகிறது. கோவிந்தராஜர் என்னும் பெரியார் செய்த வியாக்கியானமாதலால் கோவிந்தராஜீய மென்று பேர் பெற்றிருக்கிறது. சில விடங்களில் இவர் பூருவர்களின் வியாக்கியான ஸர ணியை மறந்து வேறாக வியாக்கியை செய்திருப்பது முண்டென்று அடியேனுடைய ஆராய்ச்சியில் தோன்றியதைச் சிறிது விஜ்ஞாபித்துக் கொள்ளுகிறேன். இதனால் கோவிந்தராஜீயத்திற்கு ஒரு மறுப்பு எழுதுவதாக ஒருவருமெண்ணத் தகாது.

பெருமாள் இராவணஸம்ஹாரம் செய்து தலைக் கட்டிப் புஷ்பகவிமானத்தில் திருவயோத்திக்கு மீண்டெழுந்தருளும்போது பரத்வாஜருடைய ஆச்ரமத்தில் ஆதித்த்யம் ஸ்வீகரிக்கத் தங்கினரன்றே. அப்போது பரதாழ்வானுடைய நிலைமையை பரத்வாஜ முனிவர் கூறுகின்றார்—"பங்கதிக்தஸ்து ஜடிலோ பரதஸ் த்வாம் ப்ரதீக்ஷதே" என்று. இங்கு பரதாழ்வானுக்கு பங்கதிக்த : என்று விசேஷணம் கொடுக்கப்பட்டிருக்கிறது. சேறு பூசப்பெற்றவன் என்றபடி. பரதாழ்வான் எதனாலே சேறு படிந்தவனானென்று ஜிஜ்ஞாஸை பிறக்குமே; இதற்கு கோவிந்தராஜர் இரண்டு வகையாக எழுதியுள்ளார். பரதாழ்வான் சடை புனைந்திருப்பதனால் ஸ்நானம் செய்வதே கிடையாது. அதனால் உடம்பெல்லாம் புழுதியேறிக் கிடக்கிறது. * கதம் நு அபரராத்ரேஷு ஸரயூமவகாஹதே * என்கிற லக்ஷ்மணவசனத்தில் பாதாழ்வான் ஸரயுவிலிறங்கி ஸ்நானம் செய்வதாகத் தெரியவருகிறதேயென்னில், அது நித்ய ஸ்நானபரமன்று; கதாசித் செய்யப்படுகிற நைமித்திக ஸ்நானத்தைச் சொன்னதாகலாம்—என்பது முதல் வகை. இனி இரண்டாம் வகையாவது - பரதாழ்வான் மண்தரையிலேயே சயனிப்பவனாகையாலே சேறுபடிந்த மேனியனாயினன் என்பதாம்.

பரதாழ்வான் நாடோறும் த்ரிஷவணஸ்நானமும் செய்திருக்கக்கூடும்; நித்யஸ்நானமும் செய்யாதிருந்தனன் என்பதை யாவரும் த்ருப்தியுடன் அங்கீகரிப்பர்களாவென்று ஆலோசிக்க வேண்டியிருக்கிறது. தரைக்கிடை கிடப்பதனால் 'பாம்ஸுதிக்த:' என்று சொல்லத் தகுமேயொழிய பங்கதிக்த : என்று சொல்ல ஔசித்யமிருக்குமாவென்பதும் ஆலோசிக்கத் தக்கது. * கங்குலும் பகலும் கண்துயிலறியாள் கண்ணநீர் கைகளாலிறைக்கும் * என்னும்படியான நிலைமையே பரதாழ்வானுடைய நிலைமையாதலால் அருவி சோருங்கண்ணீரைப் பெருக்கித் தரைக்கிடை கிடப்பதனால் சேறுபடிந்த மேனியனாகிறான். ஸ்ரீ குலசேகராழ்வார் * ஏறடர்த்ததும் ஏனமாய் நிலங்கிண்டதும் * என்ற பாட்டில் * வண் பொன்னிப் பேராறு போல் வருங் கண்ணநீர் கொண்டு அரங்கன் கோயில் திருமுற்றம் சேறு செய் தொண்டர் * என்றருளிச் செய்திருக்கிறார். அப்பாசுரத்திற்கும் பங்கதிக்தஃ என்பதற்கும் ஒரு சேர்த்தியிருப்பதாகப் பூருவர்கள் திருவுள்ளம் பற்றுகிறார்கள். அது ஆசார்யஹ்ருதயத்தில் (127ல்) வ்யக்தம்.

ப்ரஸங்காத் ஸ்ரீகோவிந்தராஜரைப்பற்றிச் சிலவார்த்தைகள் சொல்லுகிறேனிங்கு. இவருடைய காலம் ஐந்நூறு வருஷங்களுக்குக் கீழ்ப்பட்டது; மணவாள மாமுனிகளுக்குப் பிற்பட்டவர். பெரியவாச்சானபிள்ளையின் வியாக்கியானங்களையும் ஈடு முப்பத்தாறாயிரப்படியையும் மணவாளமாமுனிகளின் ரஹஸ்ய வியாக்கியானங்களையும் நன்றாக ஸேவித்தவர். அவற்றிலுள்ள இன்சுவைப் பொருள்களை அப்படியப்படியே ஸம்ஸ்க்ருதப்படுத்தியுள்ளார். இதைத் தாமே தம்முடைய வியாக்கியான உபக்ரமத்தில் "பூர்வாசார்யக்ருதப்ரபந்த ஜலதேஸ் தாத்பர்ய ரத்நாவலீஃ க்ராஹம் க்ராஹம்" என்கிற ச்லோகத்தினால் வெளியிட்டிருக்கிறார். அயோத்யா காண்டம் 113 ஆம் ஸர்க்கம் 18, 19-ஆம் ச்லோகங்களின் வியாக்கியானத்திலும் மற்றும் சில விடங்களிலும் இவர் தம்மை ஸ்ரீமத் வரவரமுனி ஸம்ப்ரதாயஸ்தராக விளங்கக் காட்டிக் கொண்டவர். அது நிற்க, இவருடைய வியாக்கியானத்தில் பெரிய வாச்சான்பிள்ளை முதலானோருடைய ஸ்ரீஸூக்திகளை மொழி பெயர்த்து எழுதியுள்ள பாகங்களில் [விஷயத்தை க்ரஹிக்கமாட்டாத முத்ராபகர்களால்] அச்சுத்தவறுகள் ஏறியிருக்கின்றன. அத்தவறுகள் எல்லாப் பதிப்புகளிலும் ஒரே ரீதியாகவேயிருக்கிறது. ஓரிடம் காட்டுகிறேனிங்கு; திருப்பாவை (2) *பாற்கடலுள் பையத்துயின்ற பரமன்* என்றவிடத்து ஆறாயிரப்படியில் "[கௌஸல்யா ஸுப்ரஜாராம!] உண்ணப்புக்கு வாயை மறப்பாரைப் போலே, வந்த காரியத்தை மறந்தான்; ஒரு திருவாட்டி பிள்ளை பெறும்படியே! என்கிறான்" என்கிற ஸ்ரீஸூக்தியுள்ளது. இந்த பங்க்திகளை மொழிபெயர்த்த கோவிந்தராஜர் (பால-23-2.) "போஜநகாலே விஸ்ம்ருதமுகோ முநிராஸீத்"

என்று எழுதிவைத்தார். 'உண்ணப்புக்கு வாயை மறப்பாரைப் போலே' என்ற தமிழ்வாக்கியத்திற்கு நேரான ப்ரதிச்சந்தமிது. உண்பதற்கு உட்கார்ந்தவன் இலையிலுள்ள பக்ஷ்யவர்க்கங்களை யெடுத்து உண்ணவேண்டியிருக்க அதைவிட்டு அந்த பக்ஷ்யங்களின் ஸௌஷ்டவாதிகளை வர்ணித்துக் கொண்டு கிடப்பதுமுண்டு. அப்படியே விச்வாமித்ரனும் தன் வேள்வியை மறந்து *என்ன நோன்பு நோற்றாள் கொலோ இவனைப் பெற்ற வயிறுடையாள்!* என்று பெற்றவளைக் கொண்டாடத் தொடங்கிவிட்டானென்று ஆசாரியர்களின் வியாக்கியானம். அதை மொழி பெயர்த்த விதில் (போஜநகாலே) என்பதும் (விஸ்ம்ருதமுக:) என்பதும் அருளிச்செயல் வியாக்கியானச் சுவடறியாதார்க்குப் பொருள் படாமையினாலே, பொழுது விடியும் போது போஜநப்ரஸக்தி ஏதென்று மயங்கி "போதநகாலே விஸ்மித முகঃ" என்று திருத்தி விட்டார்கள். இத்தகைய விஷயங்கள் பலவுள. .... .... *

## 6. கீதாபாஷ்யமும்—தாத்பர்யசந்த்ரிகையும்

இக்காலத்தில் பகவத் கீதையின் அருமையை யறியாதார் இல்லை. எந்த மதத்தினரும் கீதையில் விசேஷமான ஆதரவு காட்டுகிறார்கள். பலர் தங்கள் சொக்காய் ஜோப்பியிலேயே கீதையை ஸதா வைத்துக்கொண்டிருப்பதையும் பார்க்கின்றோம். எழுதக் கற்றவர்கள் பெரும்பாலும் கீதைக்கு வியாக்கியான மெழுதியே க்ருதக்ருத்யர்களாகிறார்கள். தற்காலம் உலகில் எத்தனை பாஷைகள் நடையாடுகின்றனவோ அத்தனை பாஷைகளிலும் கீதைக்குப் பல்லாயிரக் கணக்கில் வியாக்கியானங்கள் தோன்றியிருப்பதாக விமர்சகுசலர்கள் சொல்லுகிறார்கள். ஒவ்வொரு பாஷையிலும் உள்ள வியாக்கியானங்கள் எண்ணிறந்தவை என்கிறார்கள். பிற்காலத்தவர்கள் எழுதிய வியாக்கியானங்கள் கிடக்கட்டும். புராதனர்களாய் வைதிகர்களென்று கொண்டாடப்பட்டவர்களான ஆதிசங்கராசார்ய ஸ்வாமி போன்ற மஹான்களால் இயற்றப்பட்ட வியாக்கியானங்களும் பல இருப்பதாகத் தெரிகிறது. அவற்றுள் 'மதத்ரய பாஷ்யம்' என்று குலாவப்படுவன சங்கரபாஷ்யமும் ராமாநுஜ பாஷ்யமும் மத்வ பாஷ்யமுமாகும். இம்மூன்று பாஷ்யங்களும் டீகைகளோடுங்கூட ஒன்று சேர்த்து தேவநாகரலிபியில் பல வருஷங்களுக்கு முன்பு சென்னை ஆனந்தா அச்சுக்கூடத்தில் வெகு நேர்த்தியாக அச்சிடப்பட்டிருப்பதால் இவற்றை ஏககாலத்தில் அநுபவிக்க விரும்புமவர்களுக்கு வெகு ஸௌகரிய முண்டாகி யிருக்கின்றது.

இவற்றுள் மத்வாசார்யருடைய பாஷ்யம் மிகவும் சுருக்கமாகவுள்ளது. அவருடைய ப்ரஹ்மஸூத்ர பாஷ்யமே அதிஸம்க்ஷிப்த மென்னும்போது கீதாபாஷ்யத்தைப்பற்றிச் சொல்லவேண்டாவே. இம்மஹாசார்யர் பல பல அபூர்வமான உபநிஷத் ப்ரமாணங்களை மேற்கோளாக எடுத்துக் காட்டுகிறாரென்பது இவருடைய பாஷ்யத்திற்குள்ள விசேஷமாகும். சங்கரபாஷ்யத்தின் பெருமை உலகறிந்ததே.

பகவத் ராமாநுஜ பாஷ்யத்தை அநுபவிக்க அநுபவிக்க, அதனுடைய அருமை பெருமைகள் 'நெஞ்சால் நினைப்பரிதால்' என்ன வேண்டியதாகிறது. நமது ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்திற்கு கீதாபாஷ்யம் ஒரு சிறந்த மஹாநிதி யென்றே சொல்ல வேண்டும். இதற்கு வேதாந்த தேசிகனுடைய டீகையான தாத்பர்ய சந்த்ரிகை அவதரிக்க வில்லையாகில் இது அவதரித்தும் நிஷ்ப்பலமே யென்று சொல்ல வேண்டியதாகும். தேசிகனுடைய ஸகல க்ரந்தங்களுக்குள்ளும் கீதாபாஷ்ய தாத்பர்ய சந்த்ரிகை தனிப்பட்ட பெருமைவாய்ந்த தென்றால் இது மிகையாகாது. கீதாபாஷ்யத்திற்கு அந்யூநாநதிரிக்தமான டீகையன்றோ தாத்பர்ய சந்த்ரிகை. பாஷ்யத்தின் அருமை பெருமைகளை இந்த டீகையினாலேயே அறியவேண்டியதாகிறது. மூலத்திற்கு ஸம்பந்தப்படாமல் ஸ்வதந்திரமாகப் பல விஷயங்களை வளர்த்தி க்ரந்தத்தைப் பெருக்குகிற முறை இதில் அடியோடு கிடையாது. அபேக்ஷித விஷயங்களை

விடாமலும் அநபேக்ஷித விஷயங்களைத் தொடாமலும் அற்புதமாக எழுதப்பட்ட டீகையன்றோ இது. கீதா பாஷ்யத்திலும் இந்த சந்த்ரிகையிலுமுள்ள ரஸகனமான விசேஷங்களை வரிசையாக வெடுத்துக்காட்டி அபூர்வமான வியாஸங்களை யெழுதி உபகரிக்கவல்ல மஹான்களுக்கு பரிச்ரமத்திற்குத் தக்க பரிசு அளிக்க வேணுமென்றும் நாம் குதூஹலம் கொண்டிருக்கிறோம். அன்னவர்களுக்கு வழிகாட்டியாக ஒரு விஷயமிங்கெடுத்துக் காட்டுகிறோம். இந்தவகையில் அவர்கள் எழுதவேண்டுமென்று)

கீதை பத்தாவது அத்யாயத்தில் பத்தாவது ச்லோகம்—

"தேஷாம் ஸததயுக்தாநாம் பஜதாம் ப்ரீதிபூர்வகம்,
ததாமி புத்தியோகம் தம் யேந மாமுபயாந்தி தே" என்பது.

இங்கு 'பஜதாம் ப்ரீதி பூர்வகம்' என்பதற்கு எப்படிப்பட்ட பண்டிதர்களுடைய புத்தியிலும் 'ப்ரீதி பூர்வகம் பஜதாம்' என்கிற அந்வயம் தோன்றுமேயொழிய வேறுவிதமான அந்வயம் தோன்றவே மாட்டாது. பஜிப்பதாவது வந்தடைவது; வந்தடைகிறவர்களெல்லாருமே ப்ரீதியோடு வந்தடைகிறார்களென்று சொல்ல முடியாது. அப்ரீதியோடு வந்தடைபவர்களும் இருக்கக் கூடுமாதலால் அப்படிப்பட்டவர்களை வ்யாவர்த்திக்கைக்காக 'ப்ரீதிபூர்வகம் பஜதாம்' என்று சொல்லிற்று—என்பதாகப் பொருள் கூறவல்ல பண்டிதர்களே எங்கும் நிறைந்துள்ளார்கள். சங்கராசார்ய ஸ்வாமிகளின் பாஷ்யத்திலும் 'ப்ரீதி பூர்வகம் பஜதாம்' என்கிற அந்வயந்தான் காட்டப்பட்டது. 'ஸ்நேஹத்தோடு பஜிக்கின்றவர்களுக்கு' என்று பொருள் கூறப்பட்டுள்ளது.

ஸ்வாமி ராமாநுஜரோ வென்னில்; அப்பொருளைக் கண்டனம் செய்யாமலும் அப்படிப் பொருள் கொள்ளுகிற விதம் ஒன்றிருப்பதாகக் கூடக் காட்டிக் கொள்ளாமலும் "தமேவ புத்தியோகம் ப்ரீதிபூர்வகம் ததாமி" என்று ஆச்சரியமான அந்வயக்ரமத்தைக் காட்டி பாஷ்ய மிட்டருளினர். பூர்வார்த்தத்திலுள்ள பதத்தை உத்தரார்த்தத்தில் அந்வயிப்பதென்பது அஸம்பாவிதமுமன்று. அபூர்வமுமன்று. "பஜதாம் ப்ரீதி பூர்வகம் ததாமி" என்று ஸ்வாமி அந்வயித்த விது அதிசயிக்கக் கூடியதன்று, ஆச்சரியப்படக் கூடியதன்று. ஆனாலும் இங்ஙனே யந்வயம் வித்வான்களுக்கும் ஸ்புரிக்க மாட்டாது. 'பஜதாம் ப்ரீதிபூர்வகம்' என்று பூர்வார்த்தம் முடிந்தபடியாலே 'ப்ரீதி பூர்வகம் பஜதாம்' என்கிற அந்வயமே யாவர்க்கும் ஸ்வரஸமாகத் தோன்றக்கூடியது. கீழே ஒன்பதாமத்யாயத்தில் (29) *ஸமோஹம் ஸர்வபூதேஷு* என்ற ச்லோகத்தில், "யே பஜந்தி து மாம் பக்த்யா" என்ற விடத்தில் 'பக்த்யா பஜந்தி என்றிருப்பதனாலே அங்குப் போலவே இங்கும் 'ப்ரீதிபூர்வகம் பஜதாம்' என்றிருப்பது யுக்தந்தானென்று க்ரஹிப்பதற்கே பண்டிதர்கள் ஸஜ்ஜர்களாயிருக்கிறார்கள். சங்கராசார்ய ஸ்வாமிகளும் அப்படித் தானே க்ரஹித்தார்கள். ஸ்வாமி யெம்பெருமானாருடைய மேதை விலக்ஷணமாக ப்ரஸரித்தது. ப்ரீதிபூர்வகம் என்பதை பக்தர்களின் க்ரியையில் அந்வயிப்பதைவிட எம்பெருமானுடைய க்ரியையிலே அந்வயிப்பது ரஸவத்தரம் என்பது தோன்றவே அப்படி அந்வயித்து பாஷ்ய மிட்டருளினர்.

மஹாஜ்ஞாநநிதியான சங்கராசார்ய ஸ்வாமிகள் காட்டியிருக்கிற அந்வயத்தைத் தள்ளி இங்ஙனே விலக்ஷணாந்வயம் காட்டினதால் என்ன லாபம் கிடைக்கிறதென்று கௌதஸ்குதர்கள் கேட்கக்கூடுமே. இதற்கு நம்போல்வாரால் என்ன விடை கூற முடியும்? ஸாமாந்யமாக கீதாபாஷ்யத்தை ஸேவித்துக் கொண்டு போமவர்கள், 'இங்குப் பிறர்களின் அந்வயக்ரமம் வேறு; ஸ்வாமியின் அந்வயக்ரமம் வேறு' என்பதைக் கூட க்ரஹிப்பதில்லை. சிலர் க்ரஹித்தாலும் இதிலுள்ள ரஸ விசேஷம் இன்ன தென்பதை அடியோடு க்ரஹிக்க சக்தராவதில்லை.

இவ்விடத்தில் ஸ்வாமி தேசிகன் தாத்பர்ய சந்த்ரிகையில் நிதியெடுத்துக் கொடுத்தருளுகிறார். சங்கராசார்யஸ்வாமிகள் 'ப்ரீதி பூர்வகம் பஜதாம்' என்று அந்வயித்திருக்கவும் ஸ்வாமி இப்படி விலக்ஷணாந்வயம் செய்தருளியிருப்பதற்கு யாது காரணம்? இதில் என்ன விசேஷம்? என்று ஆராய்ந்தார் தேசிகன். ஆராய்ச்சியில் தேறினதை அழகாக எழுதி வைத்திருக்கிறார். "ப்ரீதி பூர்வக மித்யஸ்ய பஜநாந்வயே ப்ரயோஜநம் மந்தம்; ததாமீத்யநேந அந்வயேது .........பரமோதாரத்வாதி பகவத் குண கண ப்ரகாசநேந மஹத் ப்ரயோஜந மித்யபிப்ராயேண ப்ரீதிபூர்வகம் ததாமீதி அந்வய உக்தः" என்பன சந்த்ரிகா ஸ்ரீஸூக்திகள். இதனால் தெரிவிக்கப்படுகிறதென்ன வென்றால், (ப்ரீதி பூர்வகம் பஜதாம்) என்று அந்வயிப்பதில் அநுபபத்தியொன்றும் சொல்ல முடியாது; ஆனால் அவ்வந்வயத்திற் காட்டிலும் ப்ரீதி பூர்வகம் ததாமி யென்னுமந்வயத்தில் அதிசயித்த ப்ரயோஜனமுள்ளது. அதாவது எம்பெருமானு டைய பரமோதாரத்வம் முதலான திருக்குணங்களை வெளியிடுவதுதான்—என்ற தாயிற்று. உலகத்தில் தானம் செய்பவர்கள் வெறுப்புடனும் அழுகையுடனும் கொடுப்பதுமுண்டாகையால் எம்பெருமான் அப்படி கொடுப்பவனல்லன்: ஸத்பாத் ரத்தில கொடுக்கப்பெற்றோமே! என்று உள்ளம் பூரித்துக் கொண்டே கொடுப்பவன்-என்று இப்படிப்பட்ட மஹா குணம் இவ்வந்வயத்தில் தேறுகையாலே இதுதான் ஆதரிக்கத்தக்க அந்வயம் என்று காட்டியருளினாராயிற்று.

ஸ்வாமி பாஷ்யகாரர் 'ப்ரீதிபூர்வகம் ததாமி' என்று அந்வயித்ததற்கு முக்கிய மான காரணம் நம்மாழ்வார் ஸ்ரீஸூக்தியேயாகும். திருவாய்மொழியில் (8-7-8) * அறியேன் மற்றருள் * என்றபாட்டில் "அருள்செய்வர் செய்வார்கட்கு உகந்து" என்றுள்ளது. எம்பெருமான் தானருள் செய்ய நினைத்தவர்கட்கு உகந்து அருள் செய்வதாக ஆழ்வாரருளிச் செய்ததற்கு இணங்கியிருக்க வேணுமென்று திருவுள்ளம் பற்றியே ஸ்வாமி விலக்ஷணாந்வயம் காட்டியருளினாரென்பதை ஸம்ப்ரதாய பரம்பரை யிற் படிந்து கேட்டு அறியவல்லார் சில பாக்யாதிகர்கள். இது நிற்க. தேசிகனுடைய டீகையிலிருந்து ஒரு ந்யாயசிக்ஷணமும் செய்யப்பட்டதாகிறது. அதாவது, எந்த அந்வயத்தில் பகவத் குணாதிசயம் விளங்குகிறதோ அந்த அந்வயந்தான் சிறந்ததாகக் கொள்ளத்தக்க தென்பதாம். நிர்க்குண ப்ரஹ்மவாதிகளான பிறர் எம்பெருமா னுக்கு ஒரு குணாதிசயம் தேறவேணுமென்று நெஞ்சாலும் நினைக்கமாட்டாதவர்களா கையாலே அவர்கள் ஸ்வகுல கூடஸ்தர் காட்டின அந்வயத்தையே (ப்ரீதி பூர்வகம் பஜதாம் என்பதையே) பற்றிக் கொண்டு மன்றாடுவர்கள். அவர்கள் அந்த அந்வயத் திற்கே பலம் கட்டக் கடமைப்பட்டவர்கள். ப்ரீதி பூர்வகம் ததாமியென்னு மந்வயத் தில் ஸ்வாரஸ்யாதிசயமிருக்கிறதென்று எவ்வளவு காட்டினாலும் அவர்கள் ஈடுபடப் போகிறதில்லை. ஈடுபடாமை மாத்திரமேயன்று; ராமாநுஜர் தாந்தோன்றியாக அந்வயித்துப் பொருள் கூறினாரென்று தூஷிக்கவும் தலைப்படுவர்கள். சங்கரா சார்யர் காட்டின அந்வயக்ரமம் மந்த ப்ரயோஜநகம் என்றாவது, ராமாநுஜர் காட்டின அந்வயக்ரமம் ரஸவத்தரந்தானென்றாவது அவர்கள் ஒரு நாளும் இசையப் போகிற தில்லையன்றோ. ஆனாலும், பகவத் ராமாநுஜருடைய மேதை விலக்ஷணமேயென்று நெஞ்சினுள்ளே நினையாதிரார்கள். அவர்கள் அப்படி நினையாதொழியினும் நமக்கு ஒரு ஹானியுமில்லையன்றோ. [ப்ரஸங்காத் நினைவுக்கு வந்ததொன்று சொல்லக் கேண்மின்.]

இவ்வண்ணமாகவே * பூயிஷ்டாம் தே நமஉக்திம் விதேம * என்ற ச்ருதியிலும் 'பூயிஷ்டாம் நம உக்திம் தே விதேம' என்று காட்டு மந்வயம் அதுஷ்டமேயாகிலும் மந்தப்ரயோஜநகம்; தே பூயிஷ்டாமென்று கொள்ளுமந்வயத்தில் பகவத்குணாதிசயப்ர காசநேந ப்ரயோஜநாதிசயமுண்டு. பகவத் குணாதிசய அஸஹிஷ்ணுக்களுக்கு இவ்வந்வயம் ரஸிக்க விரகில்லை. அல்பத்தையும் அநல்பமாக நினைத்தருள்பவன் எம்பெருமானென்று தேறுவதே இங்கு குணாதிசயம். .... .... 6

# 7. ஸம்ப்ரதாய ஸங்கேதங்களின் விவரணம்

நம்முடைய பூருவாசாரியர்கள் கம்பீரமாகச் சில ஸ்ரீஸூக்திகளையருளிச் செய்து வைக்கின்றனர். அவை ஸங்கேதச் சொற்களாக வழங்குகின்றன. அவற்றின் பொருள்கள் ஆங்காங்கு வியாக்கியானங்களினால் தெரியவரும். அப்படிப்பட்ட ஸ்ரீஸூக்திகளில் சில காட்டி விவரிக்கிறோமிங்கு.

— பண்டை நாளில் பிறவி —

இதுவொரு ஸங்கேதமாய்ப் பரமபோக்யமான ஸ்ரீஸூக்தி. ஆசார்யஹ்ருதயத்தில் (81) "பண்டைநாளில் பிறவி உண்ணுட்டுத்தேசிறே" என்று வருகிறது. திருவாய்மொழியில் ஒன்பதாம்பத்தில் இரண்டாம்பதிகம் * பண்டைநாளாலே நின் திருவருளும்* என்று தொடங்குவது. அதில் முதல் மூன்று பாசுரங்களில் வரிசையாக ஒரு விலக்ஷண விஷயம் சொல்லப்படுகிறது. முதற்பாட்டில் "நின்கோயில் சீய்த்துப் பல்படிகால் குடி குடிவழிவந் தாட்செய்யுந் தொண்டர்" என்கிறது. இரண்டாம் பாட்டில் "உன் பொன்னடிக்கடவாதே வழிவருகின்றவடியர்" என்கிறது. மூன்றும் பாட்டில் "தொடர்ந்து குற்றேவல்செய்து தொல்லடிமை வழிவருந்தொண்டர்" என்கிறது. இவற்றால், ஆத்மாவின் இயற்கை வடிவமான தாஸ்யத்திற்கு விரோதியான அஹங்காரம் குடிபுகாததாய், கைங்கரியத்திற்கு அநுரூபமான குடிப்பிறவி இவ்வளவு விசதமாக வேறு எந்த பதிகத்திலுங் காணப்படவில்லை. இச்சிறப்பைத் திருவுள்ளம்பற்றிப் பூருவர்கள் "பண்டை நாளில் பிறவி" என்று ஒரு ஸங்கேதமிட்டனர். *பண்டை நாளாலே யென்கிற பதிகத்தில் பலகாலும் சிறப்பித்துக் கூறப்படுகிற பிறவி என்றபடி.

— ஐந்து நகர்கள் —

தென்னகர், நன்னகர், மாநகர், நீணகர், பெருநகர் என்று ஐந்து நகர்கள் ஆசார்ய ஹ்ருதயம் மூன்றும் ப்ரகரணத்தில் குறிக்கப்படுகின்றன. தென், நன், மா, நீள், பெரு என்று விசேஷணங்களில் பேதமொழிய, நகர் என்பதே ஐந்திடங்களிலும் விசேஷ்யம். மேலே குறித்த விசேஷணங்கள் பொதுவாகச் சிறப்பையே தெரிவிக்கும். எவ்வூருக்குத் தென்னகரென்று பெயர்? எவ்வூருக்கு மாநகரென்று பெயர்?... என்று கேட்டால் பாசுரங்களின் உபஸ்திதியும் விசேஷாநுபவமுமில்லாதவர்கள் விடையிறுக்க முடியாது.

(1) மலைநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்றான திருவல்லவாழென்னும் திருப்பதியைப்பற்றி நம்மாழ்வாரருளிச்செய்த *மானேய்நோக்குப் பதிகத்தில் ஈற்றுப் பாசுரத்தில் "ஆயிரத்துள்ளிவைபத்தும் திருவல்லவாழ்ச் சேமங்கொள் தென்னகர்மேல்" என்றருளிச்செய்திருக்கையாலே திருவல்லவாழ்க்குத் தென்னகரென்று ஸங்கேதமிட்டனர்.

(2) ஒப்பிலியப்பன் ஸன்னிதியென்கிற திருவிண்ணகர்ப்பதிக்கு இட்டருளின திருவாய்மொழியில் (6-3-2)* தெண்டிரைப்புனல்சூழ் திருவிண்ணகர் நன்னகரே* என்றருளிச் செய்திருக்கையாலே திருவிண்ணகர்க்கு நன்னகரென்று ஸங்கேதமிட்டனர்.

(3) தென் திருப்பேரைத் திருப்பதிக்கு இட்டருளின *வெள்ளைச்சுரிசங்கு' பதிகத்தில் *ஏர்வளவொண்கழனிப் பழனத் தென் திருப்பேரெயில் மாநகரே* என்றருளிச் செய்திருக்கையாலே தென் திருப்பேரைக்கு மாநகரென்று ஸங்கேதமிட்டனர். (ஆசார்யஹ்ருதயகாரர்).

(4) திருவாறன் விளையென்னும் மலைநாட்டுத்திருப்பதிக்கு இட்டருளின *இன்பம் பயக்கவென்னும் பதிகத்தில் "திருவாறன்விளை யென்னும் நீணகரமதுவே" என்றருளிச் செய்திருக்கையாலே திருவாறன்விளைக்கு நீணகரென்று ஸங்கேத மிட்டனர்.

(5) சோழநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்றான அப்பக்குடத்தான் ஸன்னிதிக்குத் திருமங்கையாழ்வாரிட்டருளின *கையிலங்காழி சங்கன்* என்னும் பதிகத்தில் *பெருவரை மதில்கள் சூழ்ந்த பெருநகர் அரவணைமேல்* என்றருளிச் செய்திருக்கையாலே அத்தலத்திற்குப் பெருநகரென்று ஸங்கேதமிட்டனர். ஆக இவ்வைந்து ஸங்கேதங்களும் மிக அற்புதமானவை.

— உறையிலிடாதவர் —

திருமழிசைப்பிரானுக்கு இதுவொரு ஸங்கேதத் திருநாமம். (ஆசார்யஹ்ருதயம்—155.) எதை உறையிலிடாதவர்? என்று கேள்வி பிறக்கும். உறையிலிடுவதென்கிற வழக்கு கத்தியைப் பற்றியதாதலால், உருவின வாளை உறையிலிடாதவர் என்பதாகும். *வாள் வீசும் பரகாலன் கலிகன்றி* என்கிறபடியே திருமங்கையாழ்வார்க்குக் கத்தி நிரூபமாக வுண்டே யல்லது திருமழிசைப்பிரானுக்குக் கத்தியிருந்ததாக ப்ரஸித்தியில்லையே; ஆகவே உருவினவாளை உறையிலிடாதவரென்று திருமழிசைப்பிரானை எப்படிச் சொல்லலாம்? என்று சிலர் சங்கிக்கக்கூடும். 'உருவினவாளை உறையிலிடாதவர்' என்பதற்கு ஸ்வாப தேசார்த்தரீதியில் பொருள் கொள்ளவேணும். ப்ரதிபக்ஷிகளை நிரஸிப்பதற்காகவே கத்தியை உறையிலிடாமல் கையிலே கொண்டிருப்பது வீரர்களின் வழக்கம். அப்படியே, தேவதாந்தரங்களுக்குப் பரத்வஞ் சொல்லுகிற ப்ரதிபக்ஷிகளை நிரஸித்து ஸ்ரீமந்நாராயண பரத்வத்தை ஸ்தாபித்து வெற்றி பெறுவதற்கு எப்போதும் ஸன்னத்தராயிருப்பவர் இவ்வாழ்வார்—என்பது பற்றியே இவர்க்கு உறையிலிடாதவரென்று திருநாமஸங்கேதமாயிற்று. இவர் பிரபந்தம் தொடங்கும் போதே *நான்முகனை நாராயணன் படைத்தான்; நான்முகனும் தான் முகமாய்ச் சங்கரனைத் தான் படைத்தான்* என்றார். இடையில், *பொல்லாத தேவரைத் தேவரல்லாரைத் திருவில்லாத் தேவரைத் தேறேன்மின் தேவு* (2434) என்றார். முடிவில் *இனியறிந்தே னீசற்கும் நான்முகற்குந் தெய்வம், இனியறிந்தே னெம்பெருமானுன்னை* என்றார். திருச்சந்த விருத்தத்திலுமிப்படியே பல பாசுரங்கள் காணலாம்; *காணிலு முருப்பொலார் செவிக்கினாத கீர்த்தியார், பேணிலும் வரந்தரமிடுக்கிலாத தேவரை, ஆணமென்றடைந்துவாழு மாதர்காள்!* என்றும், *வந்தவாணனீரைஞ் ஞூறு தோள்களைத் துணித்த நாள், அந்த வந்த வாகுலம் அமரரேயறிவரே* என்றுமுள்ள பல பாசுரங்கள் காண்க.

— புஷ்ப த்யாக போக மண்டபங்கள் —

'கோயில் திருமலை பெருமாள்கோயில்' என்ற மூன்று திவ்ய தேசங்களையே நூற்றெட்டுத் திருப்பதிகளுள் தலையாகக் கொண்டு எங்கும் வழங்கிவருகிறார்கள். இம்மூன்று திருப்பதிகட்குத் தலைமையுண்டானதற்கு யாது காரணமென்னில், நம்மாழ்வார் தமது முதற்பிரபந்தமாகிய திருவிருத்தத்தில் இம்மூன்று திவ்யதேசங்களை மாத்திரமே மங்களா சாஸனம் செய்தருளியதுதான் காரணம். இம்மூன்று திவ்ய தேசங்களைப் புஷ்ப த்யாக போகமண்டபங்களென்றும் பூருவர்கள் ஸங்கேதித்ததுண்டு. (ஆசார்யஹ்ருதயம்—85.) புஷ்பமண்டபமென்பது திருமலை; த்யாக மண்டபமென்பது பெருமாள் கோயிலென்கிற காஞ்சி; போகமண்டபமென்பது கோயில். எங்ஙனேயென்னில் நம்மாழ்வார் திருமலை விஷயமாக அருளிச்செய்த *ஒழிவில்காலப் பதிகத்தில்* வானவா வானவர்கோனொடுஞ்சிந்து பூமகிழும் திருவேங்கடம்* என்று அருளிச் செய்திருக்கை

யாலே திருமலை புஷ்பமண்டபமெனப்பட்டது *வேகவத்யுத்தரே தீரே புண்யகோட்யாம் ஹரிஸ் ஸ்வயம், வரதஸ் ஸர்வ பூதாநாம் அத்யாபி பரித்ருச்யதே* என்கிற புராண வசனப்படியே வேண்டுவார் வேண்டின படியே தியாகம் செய்யும் வரதன் எழுந்தருளியிருக்குமிடமாகையாலே பெருமாள்கோயில் த்யாகமண்டபமெனப்பட்டது. *பொங்கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுஞ்சோராமேயாள்கின்ற வெம்பெருமானுறையுமிடமான திருவரங்கம் பெரிய கோயிலானது *தெண்ணீர்ப் பொன்னி திரைக்கையாலடிவருடப் பள்ளிகொள்ளும்* என்கிறபடியே திவ்யபோக ஸ்தானமாயிருக்கையாலே போகமண்டபமெனப்பட்டது.

— தூது மொழிந்து நடந்து வந்தவர்கள் —

இது வொரு அற்புதமான ஸங்கேதம். இந்த ஸங்கேதங்களெல்லாம் ஆசார்ய ஹ்ருதயம் தவிர வேறு எந்த நூலில் இடம்பெறும்! திருமழிசைப்பிரான் தமது திருவந்தாதியில் "என்மதிக்கு விண்ணெல்லாமுண்டோவிலை" என்றார்; உண்மையில் அழகிய மணவாளப் பெருமாள் நாயனாருடைய மதிக்கு உபய விபூதியும் விலையாகப் போராது. "தூது மொழிந்து நடந்து வந்தவர்கள்" என்னுமிந்த ஸ்ரீஸூக்தியிலே, தூது மொழிந்தவர், தூது நடந்தவர், தூது வந்தவர் என்று யோஜனை செய்து மூன்று வ்யக்தி விசேஷங்களைப் பொருளாக வுணரவேணும். தூது மொழிந்தவர்—சக்ரவர்த்தி திருமகனார். தூது நடந்தவர்—பாண்டவ தூதப்பெருமாள். தூது வந்தவர்—திருவடி. இந்த நிர்தேசங்கள் அருளிச்செயற் சந்தைகளிலிருந்து கொள்ளப்பட்டன. *மூன்னோர் தூது வானரத்தின் வாயில் மொழிந்து* என்கிற பாசுரத்தில் தூது மொழிந்த வராகச் சொல்லப் பெற்றுப் பிராட்டிக்குத் தூது மொழியைத் திருவடிவாயிலே சொல்லிவிட்டவர்—சக்ரவர்த்தி திருமகனார். தூது நடந்தவர்—"கோதில் செங்கோல் குடை மன்னரிடை நடந்த தூதா" என்கிற பாசுரத்தில் தூது நடந்தவராகச் சொல்லப்பட்டு பாண்டவர்க்குத் தூதுபோன கண்ணபிரான். தூது வந்தவர்—*ஒதமா கடலைக் கடந்தேறி ...... தூது வந்த குரங்குக்கே* என்கிற பாசுரத்தில் தூது வந்த வராகச் சொல்லப்பெற்று "தாஸோஹம் கோஸலேந்த்ரஸ்ய" என்று இலங்கையில் வந்து சேர்ந்தவர் திருவடி. ஆக, தூது மொழிந்தவரென்று இராம பிரானையும், தூது நடந்தவரென்று கண்ணபிரானையும் தூது வந்தவரென்று ஹனுமானையும் நிர்தேசிக்கப் பொருத்தமாயிற்று. இம்மூவரும் செய்த செய்கைகள் அடுத்த ஸங்கேத ஸ்ரீஸூக்தியில் காணத்தக்கன.

— ஸம்யக் ஸகுண ஸஹ போஜநம் —

ஸம்யக் போஜநம், ஸகுணபோஜநம், ஸஹபோஜநம் என்று யோஜித்து, மேலே நிர்தேசிக்கப்பட்ட மூவரும் மூன்றுவிதமான போஜனங்கள் செய்தமை கூறப்படுகின்றது. ஆசாரப்ரதாநரான பெருமாள் மதங்காச்ரமத்தில் சபரிபக்கலிலே எழுந்தருளினபோது அங்கு ஒரு விலக்ஷணமான போஜனம் செய்ததாக ஸ்ரீராமாயணத்தில் சொல்லப்படுமிடத்து *சபர்யா பூஜிதஸ் ஸம்யக் ராமோ தசரதாத்மஜ:* என்றார் வான்மீகி முனிவர். இது வொரு மருமமான வார்த்தை. 'சபர்யா ஸம்யக் பூஜித:' என்றதனால் தெரிவிக்கப்பட்ட ஸம்யக் போஜனத்தின் பரிசை ஆசார்ய ஸேவையில் பழுத்தவர்கள் அறியுமத்தனை. தூது மொழிந்தவர் ஸம்யக் போஜனம் பண்ணினமை சொல்லிற்றாயிற்று. இனி தூது நடந்தவனுடைய ஸகுண போஜனம் கேண்மின். பாண்டவர்களுக்காகத் தூது நடவாநின்ற கண்ணபிரான் விதுரர் திருமாளிகை யேற எழுந்தருளி அங்குச் செய்தருளின போஜனத்தை முனிவர் சொல்லுமிடத்து "விதுராந்நாநி புபுஜே சுசீநி குணவந்தி ச" என்று சொல்லியிருக்கையாலே *குணவந்தி யென்பதில் நோக்காக ஸகுணபோஜன மெனப்பட்டது. தூது நடந்த

கண்ணன் செய்த ஸகுணபோஜனமிது. இனி, தூது வந்தவனுடைய ஸஹ போஜநம் நுட்பமாக அறியத்தக்கது. பெருமாள் திருவயோத்திக்கு மீண்டருளும் போது பரத்வாஜாச்ரமத்திலே தங்க வேண்டியதாயிற்று. அப்போது திருவடியை நந்திக்ரா மத்திற்குச் செய்தி சொல்ல அனுப்பிவிட்டார் பெருமாள். அங்குச் சென்ற திருவடி மீண்டும் பெருமாளிடம் வந்ததாக வான்மீகத்திலில்லை. புராணாந்தரத்தில் திருவடி திரும்பி வந்ததாகவும், அப்போது பெருமாள் அமுது செய்து கொண்டிருந்ததாகவும், திருவடியையும் கூடக்கொண்டு ஓரிலையிலேயே அமுது செய்ததாகவும் கூறப்பட் டுளது. "உபகாராய ஸுக்ரீவோ ராஜ்யகாங்க்ஷீ விபீஷண:, நிஷ்காரணாய ஹநுமாந் தத்துல்யம் ஸஹ போஜநம்" என்கிற பிரமாண வசனமும் காட்டப்படுகிறது. பெரிய திருமொழியில் (5—8—2) *வாதமாமகன் மற்கடம் விலங்கு* என்ற பாசுரத்தின் நமது திவ்யார்த்த தீபிகையிலே இது பற்றின விரிவு காணத்தக்கது. ஆக, தூது மொழிந்தவருடைய ஸம்யக் போஜநமும், தூது நடந்தவருடைய ஸகுண போஜந மும், தூது வந்தவரோடே ஸஹபோஜநமும் சொல்லிற்றாயிற்று.

— ஐவரில் நால்வரில் மூவரில் முற்பட்டவர்கள் —

இதுவும் ஒரு விலக்ஷணமான ஸங்கேத ஸ்ரீஸூக்தி. ஐவரில் முற்பட்டவர், நால்வரில் முற்பட்டவர், மூவரில் முற்பட்டவர் என்று யோஜிக்க வேணும். ஐவரென் பது பஞ்சபாண்டவர்களை; அவர்களில் முற்பட்டவர் தருமபுத்திரர். நால்வரென்பது தசரதபுத்திரர்கள் நால்வரை; அவர்களில் முற்பட்டவர்—பெருமாள். மூவரென்பது—ஆளவந்தார் திருவடிகளிலே ஆச்ரயித்து ஸப்ரஹ்மசாரிகளாயும் உடையவர்க்கு ஆசாரி யர்களாயும் பிரஸித்தர்களான பெரிய நம்பி, திருக்கோட்டியூர் நம்பி, பெரிய திருமலை நம்பி என்று நம்பிகளென்று வியபதேசிக்கப்பட்டவர்களான மூவரை; இம்மூவரில் முற்பட்டவர் பெரியநம்பி. ஆக ஐவரில் முற்பட்ட தருமபுத்திரரும், நால்வரில் முற் பட்ட பெருமாளும், மூவரில் முற்பட்ட பெரிய நம்பியும் செய்தகாரியங்கள் எவை யென்னில்; அவை "ஸந்தேஹியாமல் ஸஹஜரோடே புரோடாசமாகச் செய்த புத்ரக்ருத்யம்" என்ற அடுத்த ஸ்ரீஸூக்தியின் வியாக்கியானங் கொண்டு அறியத் தக்கன.

இங்ஙனே அற்புதமான ஸங்கேத ஸ்ரீஸூக்திகள் மலிந்தது ஆசார்ய ஹ்ருதய திவ்ய சாஸ்த்ரம். .... ... ... .... (7)

ஸ்ரீகாஞ்சி பிரதிவாதி பயங்கரம்
அண்ணங்கராசாரியர் எழுதிவரும்
உபந்யாஸக ஸௌபாக்யத்தில் உபந்யாஸ ஸப்தகம்
முற்றுப்பெற்றது.

## பெங்களூர் மகாநகரத்தில் உபந்யாஸ ப்ரவர்த்தக ஸமாஜம்



ஸ்ரீராமாநுஜன்• 169 ஆகிய இந்த ஸஞ்சிகை வெளிவருவதற்குச் சில காரணங்களினால் தாமதமேற்பட்டு விட்டது. 170 நெ. இந்த பிப்ரவரியிலேயே வெளிவரும்.

# பதின்மர் பாடும் பெருமாள் !

திருவரங்கம் பெரிய கோயிலில் மார்கழித் திருவத்யயன மஹோத்ஸவத்தில் அரையர் ஸேவை யென்பது மிகமிக வதிசயம் பெற்றது. சில சில பாசுரங்களின் பொருள்களை 'அபிநயத்தால் காட்டுவது, வியாக்கியான பங்க்திகளைச் செவிக்கினிதாக ஸேவிப்பது, பாசுரங்களைத் தாளமிட்டு இசைபாடுவது....ஆக இத்தகைய ப்ரகாரங்கள் தவிர,

> மண்டல மெல்லாம் விளங்கவே மாணுருவாய் மாவலியை
> வஞ்சித்து நெஞ்சுருக்கி மண்ணளந்த பெருமாள் !
> தெண்டிரைக் கடல்கடைந்து தெள்ளமுதில் வருந்
> திருவை மார்பில் வைத்தருளும் தேவெங்கள் பெருமாள் !
> வண்டணியு மகிழ்மாற னெண்ட மிழின்சை கொண்டு
> வரியரவிலே துயிலும் மணவாளப் பெருமாள் !
> கொண்டல் தவழ் சோலை சூழ் கோயில் வாழும் நம்பெருமாள்
> தெய்வ சிகாமணி !

என்றிப்படி கட்டியங்கள் ஸேவிக்கு மழகு மிக வற்புதம்! மிகமிக வற்புதம்!! மேலே குறித்த விதமாகப் பெரிய வாக்கியங்கள் ஸேவிப்பது தவிர, சிறு துணுக்கைகளாக ஸேவிப்பதும் வெகு ரஸ்யமாயிருக்கும்.

> பொய்கையார்பரவும் பெருமாள் ! பூதத்தார் போற்றும் பெருமாள் !
> பேயாழ்வார் பாடும்பெருமாள் ! பத்திசாரரேத்தும் பெருமாள் !
> பராங்குசன் பணியும் பெருமாள் ! போதமிகு குலசேகர னேத்தும் பெருமாள் !
> பட்டர்பிரான் பரவும் பெருமாள் ! பட்டன்கோதையேத்தும் பெருமாள் !
> பத்தரடிப் பொடி பாடும் பெருமாள் ! பாணனர் பரவியேத்தும் பெருமாள் !
> பரகாலன் பொங்கிப் போற்றும் பெருமாள் ! பதின்மர் பாடும் பெருமாள் !

என்றிப்படி பகர முதலதாக வைத்து ஏத்தும்போது கேட்கச் செவியாயிரம் வேண்டும்.

முற்காலத்தில் அரையர்களிலே யொருவர் திருமலைக்கு எழுந்தருளினராம். அப்போது அங்கு எழுந்தருளியிருந்த பெரிய சிறிய ஜீயர் ஸ்வாமிகள் அரையரை அநுவர்த்தித்து 'எங்கள் அப்பனையும் சற்றுப் பாடவல்லீரோ?' என்று வேண்ட, உடனே அரையர் அதற்கென்ன குறை? என்று சொல்லிக் கட்டியம் கூறத் தொடங்கி "பதின்மர் பாடும் பெருமாள்! பாவங்கள் தீர்க்கும் பெருமாள்!" என்று ஏத்தப்புக, அது கேட்ட ஜீயர் ஸ்வாமிகள் "பதின்மர் பாடும் பாக்கியம் எங்கள் அப்பனுக்கு இல்லையே, சோழியன் கெடுத்தானே" என்றார்களாம். சோழியன் என்றது தொண்டரடிப்பொடி யாழ்வாரை; அவர் அரங்கமாநகருளானை யன்றி வேறு எத்தலத்துப் பெருமாளையும் பாடினரல்லர்; "அண்டர் கோனணியரங்கனென்ன முதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணவே" என்று விரதம் காட்டிய திருப்பாணாழ்வாருங்கூட "விரையார் பொழில் வேங்கடவன்" என்றும் "மந்திபாய் வட வேங்கடமாமலை, வானவர்கள் சந்தி செய்ய நின்றான்" என்றும் திருவேங்கடமுடையானைப் பாடினர். தொண்டரடிப்பொடிகள் ஒருவர் மட்டும் திருவேங்கடவனைப் பாடிற்றிலர். ஆகவே "பதின்மர் பாடும் பெருமாள்" என்பது அரங்கநாதனுக்கே அஸாதாரணமாயிற்று. இனி, பொய்கை யாழ்வார் முதல் திருமங்கையாழ்வாரளவும் ஒவ்வோராழ் வாரையுமெடுத்துக் கொண்டு ஒவ்வொருவருடையவும் ஒவ்வொரு பாசுரத்தை மட்டுங்கொண்டு அரங்கனை யநுபவிப்போம்.

1. பொய்கையார்; முதல்திருவந்தாதி. (பா. 6.) [* ஒன்று மறந்தறியேன் *]
"அன்று கருவரங்கத்துட் கிடந்து கைதொழுதேன் கண்டேன், திருவரங்கமேயான்

திசை" = அறிவு நடை யாடுகைக்கு யோக்யதையே யில்லாத காலத்திலே கருக் குழியிலிருந்துகொண்டே திருவரங்கத்திற் பள்ளிகொள்ளும் பெரிய பெருமாளுடைய படிகளை யெல்லாம் ஸாக்ஷாத்கரித்தவனாய் திசைநோக்கித் தொழுவதுமானேன் என்கை. இதன் கருத்தாவது, நான் கர்ப்பவாஸம் செய்யும்போதே பிடித்துத் திருவரங்கத் தரவணையிற் பள்ளிகொள்ளும் பெருமாளால் நிர்ஹேதுகமாகக் கடாக்ஷிக்கப்பெற்று; தன்னுடைய ஸ்வரூபரூபகுண விபூதி சேஷ்டிதங்களை யெல்லாம் அவன் தானே விசத விசததர விசததமமாகக் காட்டிக்கொடுக்கக் கண்டு "ஜாயமாநம் ஹி புருஷம் யம் பச்யேத் மதுஸூதந:, ஸாத்விகஸ் ஸ து விஜ்ஞேயஸ் ஸ வை மோக்ஷார்த்த சிந்தக:" [கருவிலே திருமாலால் கடாக்ஷிக்கப் பெறுபவன் எவனோ அவனே முமுக்ஷுவாவான்] என்கிறபடியே சுத்த ஸாத்விகனாய் அப்பெருமானுடைய திருக்கல்யாண குணம் முதலியவற்றை ஸ்வயம் அநுபவிப்பதும் பிறர்க்கு எடுத்து உபதேசிப்பதுமாக இவற்றையே காலக்ஷேபமாகக் கொண்டிருக்கின்றேனென்று திருவரங்கநாதனுடைய பெருமையையும் தம்முடைய பெருமையையும் கூறினாராயிற்று. முதலாழ்வார்கள் மூவரும் அயோநிஜர்களென்று ப்ரஸித்தர். இவர்களுக்கு கர்ப்பவாஸப்ரஸக்தியே கிடையாது; அப்படியிருக்க "அன்று கருவரங்கத்துள் கிடந்து" என்று எங்ஙனே கூறினர்? அடுத்த பூதத்தாழ்வாரும் "அன்று கருக்கோட்டியுட் கிடந்து கைதொழுதேன் கண்டேன், திருக்கோட்டியெந்தை திறம்" என்றருளிச் செய்தனரே; இவை எங்ஙனே பொருந்தும்? என்று சங்கை தோன்றும் மிங்கு. கேண்மின்; "திண்டாவழும்புஞ் செந்நீரும் சீயு நரம்பும் செறி தசையுமாய் வேண்டா நாற்றம்" மிக்கிருக்கிற கர்ப்பத் தும்பையில் நின்றும் ஆழ்வார் பிறந்தாரென்று கொள்ள வேண்டிய அவசியமில்லை. எவ்விடத்தில் நின்று அவதரித்தாரோ அவ்விடமே கர்ப்பஸ்தானமாகும். இவ்வாழ்வாருடைய வாழித் திருநாமத்தில் "வனசமலர்க் கருவதனில் வந்தமைந்தான் வாழியே" என்றிருப்பதும் இவ்வர்த்தத்தை வற்புறுத்தும். 'நான் இவ்விருள் தருமா ஞாலத்தில் வந்து தோன்றுவதற்கு முன்னமே பெரிய பெருமாளுடைய கடாக்ஷம் பெற்றவன்' என்று கூறுவதே யாயிற்று இங்கு விவக்ஷிதம். நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்துள் பொய்கையாழ்வாருடைய திருவந்தாதியே முதற் பிரபந்தம்; அதனில் முதன் முதலாகப் பாடப் பெற்ற தலம் திருவரங்கமே என்பது இங்குக் குறிக்கொள்ளத்தக்கது.

2. பூதத்தாழ்வார்; இரண்டாந் திருவந்தாதி. (பா. 28.) *மனத்துள்ளான் வேங்கடத்தான் மாகடலான், மற்றும் நினைப்பரிய நீளரங்கத்துள்ளான்* அரங்கத்துள்ளானை நினைக்கும்போதே "நினைப்பரிய" என்று விசேஷணமிடுகிறார். இவ்விசேஷணம் அரங்கத்திலும் சேரும், அரங்கத்துள்ளானிலும் சேரும். திருவரங்கத்தை நினைப்போமென்று தொடங்கினால், * கங்கையிற் புனிதமாய காவிரியை நினைப்பதா? *ஆராமஞ் சூழ்ந்தவரங்கம் * என்னும்படியான வண்டினமுரலுஞ்சோலை மயிலினமாலுஞ் சோலை கொண்டல் மீதணவுஞ் சோலை குயிலினங்கூவுஞ் சோலைகளை நினைப்பதா? ஸப்தப்ராகாரத் திருவீதி கோபுர மண்டபாதிகளை நினைப்பதா? * அஜஸ்ர ஸஹஸ்ர கீதிஸேகோத்ததிவ்யநிஜ ஸௌரபமான திருப்புன்னையை நினைப்பதா? ஸ்ரீதிவ்ய மாணிக்ய பூஷாமஞ்ஜூஷாயாஸ் துல்யமான ஸ்ரீரங்காந்தர்மந்திரத்தை நினைப்பதா! என்று தோன்றுமே எதையும் நினைக்க முடியாதபடியே கிடக்கும். இனி அரங்கத்துள்ளானை நினைப்போமென்று தொடங்கினாலோ 'நினைப்பரியன்' என்று நினைக்கலாமத்தனை.

3. பேயாழ்வார்; மூன்றாந் திருவந்தாதி. (62) * விண்ணகரம் வெஃகா விரிதிரை நீர் வேங்கடம்....தேனார் திருவரங்கம். * தேனார் திருவரங்க மென்பதற்குத் தேன் பொருந்திய திருவரங்கம் என்று பொருள். தேன் எங்குள்ளது? என்று கேட்டால் திருவரங்கச் சோலைகளிலுள்ளது என்னலாம். திருவரங்கத்தின் கர்ப்பக்ருஹத்திலேயே யுள்ளது என்னப் பொருந்தும். திருமங்கையாழ்வார் "உளங்கனிந்திருக்கு

மடியவர் தங்கள் உள்ளத்துளூறிய தேன்" என்று எம்பெருமானையே தேனாக வருளிச் செய்தார். வேதாந்தத்தில் மது வித்யையில் அஸௌ வா ஆதித்யோ தேவமது" என்று எம்பெருமானையே மதுவாக வோதிற்று. * எனக்குத் தேனே பாலே கன்னலே யமுதே * என்று அநுபவரஸிகர்கள் எம்பெருமானையேயாயிற்றுத் தேனாக வநுபவிப்பது. அப்படிப்பட்ட தேனார் திருவரங்கமென்க.

4. **திருமழிசைப்பிரான்; நான்முகன் திருவந்தாதி** (3) * பாலிற்கிடந்ததுவும் பண்டரங்கம் மேயதுவும்........யான றிந்தவாறு ஆரறிவார்? * = திருவரங்கம் பெரிய கோயிலில் உபயகாவேரீ மத்யத்தில் "பொன்னி சூழரங்கமேய பூவைவண்ண! மாய!" என்று அவனுடைய வடிவழகிலும் ஆச்சரிய குணசேஷ்டிதங்களிலும் ஈடுபட்டு 'இஃது என்ன போக்யதை! இஃது என்ன ஸௌலப்யம்!' என்று வாய் வெருவுகின்றவன் நானொருவனேயன்றி வேறு யாருமிலர் என்கை. இத்தால் முந்தின முதலாழ்வார்களின் ஈடுபாட்டை இல்லை செய்வதன்று; தம்முடைய ஈடுபாட்டின் கனத்தை மட்டும் தெரிவித்தவாறு. ஆசார்யஹ்ருதயத்தில் 'உறையிலிடாதவர்' என்று இவ்வாழ்வார்க்கு வ்யபதேசமிட்டருளினர். எம்பெருமானுடைய பரத்வஸ்தாபனத்திற்காக உருவினவாளை உறையிலிடாதவர் என்பது அதன் பொருள். அப்படி இவ்வாழ்வார் ஸ்தாபிக்கத் தொடங்கின பரத்வம் திருச்சந்த விருத்தத்தில் * காணிலு முருப்பொலார் * குந்தமோடு சூலம் வேற்கள் * வண்டுலாவு கோதை மாதர் * என்னும் பாசுரங்களில் வீறு பெற்றிருக்கின்றது. அதைப் பேசத் தொடங்கியது திருவரங்கத்திலேயாயிற்று. "மோடியோடிலச்சையாய சாபமெய்தி முக்கணன், கூடுசேனை மக்களோடு கொண்டு மண்டி வெஞ்சமத்தோட, வாணனாயிரங் கரங்கழித்த வாதிமால். பீடு கோயில் கூடுநீர் அரங்கமென்ற பேரதே" என்கிற (திருச்சந்த விருத்தப்) பாசுரத்தை யநுஸந்திப்பது.

5. **நம்மாழ்வார்; திருவிருத்தம்.** (28) * தண்ணந்துழாய் வளைகொள்வது....வள்வாயலகால் புள் நந்துழாமே பொருநீர்த் திருவரங்காவருளாய் * இது வொரு சமத்காரமான வருணனை. திருவரங்கத்தில் திருக்காவேரியின்கரையில் நத்தையென்கிற ஜந்து கிடக்க, அதனைச் சில பறவைகள் கூர்மையான வாயலகால் கொத்திக் கிளறிக்கொண்டிருக்க, அதனால் அந்த நத்தை துன்புறுவதைக் கண்ட திருக்காவேரி 'நம்மை யடுத்ததொரு பிராணி இங்ஙனே துன்புற்றிருக்க நாம் கண்டு கொண்டிருக்கத் தகுமோ?' என்றெண்ணி உடனே அலைவரிசையைக் கரைமீது பரப்பி அந்த நத்தையைத் தன்னுள்ளே யிழுத்துக் கொண்டு உயிர்ப்பிச்சையளித்துக் காப்பாற்றுவதாகக் கூறப்பட்டதிங்கு. காவிரிநீர் அலைமோதுவது இயற்கையாயினும் அதற்கொரு காரணம் கற்பித்ததனால் இங்குப் பெறுவிக்கப் படும் பொருள் யாதெனில்; திருவரங்கநாதனே! உன்னுடைய நாட்டுக்கு உறுப்பான தண்ணீரும் தன்னை யடைந்த பொருளை எதிரி கவர்ந்து நலிவு படுத்தாதபடி திரைக்கையாற் பொருது காத்திடுகின்றதே; உனக்கு மட்டும் அது இயல்பாகாதோ? அடுத்தாரை ரக்ஷிக்குந் தன்மை அசேதநத்திற்கே யிருக்கும்போது பரமசேதநனான வுனக்கு அது மிகவும் இருக்க வேண்டாவோ? எனக்குறிப்பித்தபடி.

6. **குலசேகராழ்வார்; பெருமாள் திருமொழி.** இவ் வாழ்வார்க்குத் திருவரங்கம் பெரிய கோயிலிலுள்ள ஈடுபாட்டைப்பற்றிப் பேசத்தானவதுண்டோ? "குஷ்யதே யஸ்ய நகரே ரங்கயாத்ரா திநேதிநே, தமஹம் சிரஸா வந்தே ராஜாநம் குலசேகரம்." என்று ப்ரஸித்தமான இவருடைய தனியனை நினைப்பூட்டுவதொன்றே போதுமே. பெருமாள் திருமொழியில் முதலிட்டு மூன்று பதிகங்களினால் பெரிய பெருமாளையும் திருவரங்கத்தையும் ஸ்ரீரங்கநாத பக்தர்களையும் இவ்வாழ்வார் அநுபவிக்குந் திறன் ஈடுமெடுப்பு மில்லாதது. ஒரே பாசுர மனுபவிப்போமிங்கு. முதற்பதிகத்தில் இரண்டாம் பாட்டில் "கடியரங்கத் தரவணையிற் பள்ளிகொள்ளும்



சுபக்ருத்ஸூ மார்கழி முப்பதும் திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்தஸாரதிஸ்வாமி ஸன்னிதியில் திருப்பாவை கோஷ்டியின் காட்சி

மாயோனை மணத்தூணே பற்றிநின்று என் வாயார வென்று கொலோ வாழ்த்து நாளே !" என்றருளியது அநுபவ ரஸிகர்களுக்கு அற்புதமானது. அழகிய மணவாளன் ஸன்னிதியில் கர்ப்பக்ருஹத்தண்டையிலிருக்கும் இரண்டு தூண்களுக் குத் திருமணத்தூண் என்பது ஸம்ப்ரதாயத் திருநாமம்.

இதனை பட்டர் வடமொழியில் ஆமோதஸ்தம்ப மென்று மொழிபெயர்த்தருளினர். ஆமோதமாவது பரிமளம். மண மென்பது மதுவே. வேதாந்தங்களில் "ஸர்வ கந்தஃ" என்னப்பட்ட எம்பெருமானுடைய ஸௌகந்த்யம் இரு தூணாக வடிவெடுத்ததுபோலும். 'மணத்தூணருகில் நின்றுகொண்டு' என்னுமல் 'மணத் தூணே பற்றி நின்று' என்றதன் மருமமான கருத்தை ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் பட்டர் வெளியிட்டருளினர். எங்ஙனேயென்னில்; 'சேஷசய லோசநாம்ருத நதீரயா குலித லோலமாநாநாம், ஆலம்ப மிவாமோத ஸ்தம்பத்வய மந்தரங்கமபியாமஃ இந்த ச்லோகத்தின் கருத்து;—அழகிய மணவாளனுடைய திருக்கண்ணோக்கமாகிற அமுத வாற்றின் பெரு வெள்ளமானது அநுபவிக்க இழிந்தவர்களை ஒருமித்து நிலைநின்று அநுபவிக்கவொட்டாமல் தூக்கித்தள்ளி அசைக்குமளவில், அவர்கள் கைப்பிடிப்பாகப் பற்றிக்கொண்டு நிற்பதற்கு நாட்டப்பட்ட தூண்களாமிவை. ஆலங்காரிக ஸமயத்தின் படி உத்ப்ரேக்ஷா வ்யஞ்ஜகமான இவசப்தம் இங்கு பிரயோகிக்கப்பட்டிருக்கையாலே இது உத்ப்ரேக்ஷித்தபடியேயல்லது தத்வார்த்த ப்ரதிபாதனமன்றேயென்று சிலர் நினைக்கக்கூடும். அங்ஙனமன்று; "கிமிவ ஹி மதுராணும்" இத்தியாதி ஸ்தலங்களிற் போல இங்கும் இவகாரம் வாக்யாலங்காரமாகவே கொள்ளத்தகும். உத்ப்ரேக்ஷை யாகக் கொண்டாலும் குறையில்லை. "பற்றி நின்று" என்றருளிச்செய்த ஆழ்வாருடைய திருவுள்ளம் இங்ஙனே யிருக்கக்கூடுமென்று உல்லேகித்து அருளிச்செய்ததாகக் கொண்டாலும் குறையில்லை. இவ்வாழ்வாருடைய அநுபவத்தில் "வன்பெரு வானகமுய்ய அமரருய்ய மண்ணுய்ய மண்ணுலகில் மனிசருய்ய, துன்பமிகு துயரகல அயர்வொன்றில்லாச் சுகம் வளர அகமகிழுந் தொண்டர் வாழ, அன்பொடு தென் திசை நோக்கிப் பள்ளிகொள்ளு மணியரங்கன் திருமுற்றத்தடியார் தங்கள், இன்ப மிகு பெருங்குழுவு கண்டு யானு மிசைந்துடனே யென்றுகொலோ இருக்கு நாளே !" என்னும் பாசுரத்தினுற் செய்த மானஸாநுபவம் மிகவிலக்ஷணமானது. விண்ணவர்களும் மண்ணவர்களும் விலக்ஷண ஸ்ரீவைஷ்ணவர்களும் வாழவும் பாவங்கள் நீங்கிப் புண்ணியங்கள் செழிக்கவுமாகக் குடதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம் நீட்டி வடதிசை பின்பு காட்டித் தென்திசை யிலங்கை நோக்கிப் பள்ளி கொண்டருளாநின்ற பெரியபெருமாள் ஸன்னிதித் திருமுற்றத்திலே திளைக்கின்ற பாகவதர்களின் திரளிலே சேர்ந்து அடியேனும் திளைத்து வாழப்பெறுவது என்றோ வென்று தம்முடைய பாரிப்பை விளங்கக் காட்டினர்.

7. **பெரியாழ்வாரும் திருமொழியும் :** திருவரங்கம் பெரிய கோயிலை யநுபவிக் கும் பதிகங்கள் மூன்று பணித்தும் பல துணுக்கைப் பாசுரங்கள் பணித்தும் போந்த இவ்வாழ்வார் அதிமாநுஷசேஷ்டிதங்களையும் சில அபூர்வ இதிஹாஸங்களையும் ஸ்ரீரங்கநாதன் பக்கலிலே அநுஸந்திக்கும்படியைக் காணு நின்றோம். சிலவற்றை யெடுத்துக் காட்டுகிறோமிங்கு. "சீமாலிக னவனோடு தோழமைக் கொள்ளவும் வல்லாய், சாமாறவனை நீயெண்ணிச் சக்கரத்தால் தலை கொண்டாய்" என்கிற அபூர்வ கதையை ஸ்ரீரங்கநாதன் பக்கலிலேயே அநுஸந்தித்தாரென்னுமிடம் "ஆமாறறியும் பிரானே! அணியரங்கத்தே கிடந்தாய்!" என்கிற மூன்றாமடியினுல் விள்ங்கா நின்றது. "ஆமையாய்க் கங்கையாய் ஆழ்கடலாய் அவனியாய் அருவரைகளாய், நான்முகனாய் நான்மறையாய் வேள்வியாய்த் தக்கணையாய்த் தானுமானான்" என்கிற [ஹரிவம்ச ப்ரஸித்தமான] அபூர்வகதையையும் "சேமமுடை நாரதனார் சென்று சென்று துதித்திறைஞ்சக்கிடந்தான் கோயில்....புனலரங்கமே" என்று ஸ்ரீரங்கநாதன் திறத்



சுபக்ருத்ஹூ மார்கழி முப்பதும் திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்தஸாரதிஸ்வாமி ஸன்னிதியில் திருப்பாவை கோஷ்டியின் காட்சி

திலேயே அநுஸந்தித்தாராயிற்று. *மாதவத்தோன் புத்திரன்போய் மறிகடல்வாய் மாண்டானை ஓதுவித்த தக்கணையா உருவுருவே கொடுத்தது, *பிறப்பகத்தே மாண்டொழிந்த பிள்ளைகளை நால்வரையும் இறைப்பொழுதில் கொணர்ந்து கொடுத்தது,* மருமகன்றன் சந்ததியை உயிர்மீட்டது ஆகிய அதிமாநுஷகதைகள் மூன்றையும் திருவரங்கத் திருமொழியிலேயே பேசிவைத்தார்.

ஆண்டாளும் திருமொழியும்: நாச்சியார் திருமொழியில் *தாமுகக்கும் தங்கையில்* என்னும பதிகத்திற் காணும் ஆண்டாளுடைய அநுபவம் வேறெங்குங் காணக்கிடைக்க மாட்டாதது. அரங்கனுடைய வடிவழகு, பரத்வம், ஸௌலப்யம், ஸௌசீல்யம், ப்ரணயித்வம் முதலான முக்கியமான திருக்குணங்களெல்லாம் இத்திருமொழியில் அநுபவிக்கப்படுகின்றன. "என்னரங்கத்தின்னமுதர் குழலழகர் வாயழகர் கண்ழகர் கொப்பூழிலெழு கமலப்பூவழகர்" என்கிற பாசுரம் அழகிலேயீடுபட்டுப் பேசினது. *பொங்கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுஞ் சோராமே ஆள்கின்ற வெம்பெருமான், செங்கோலுடைய திருவரங்கச் செல்வனார்* என்னும் பாசுரம் பரத்வத்திலீடுபட்டுப் பேசினது "நல்லார்கள் வாழும் நளிரரங்க நாகணையான் இல்லாதோம் கைப்பொருளும் எய்துவானொத்துளனே" என்ற பாசுரம் ஸௌசீல்யத்திலீடுபட்டுப் பேசினது. *உண்ணாதுறங்காது* பாசிதூர்த்துக் கிடந்த பார்மகட்கு, *கண்ணாலங்கோடித்த* என்கிற மூன்று பாசுரங்களும் ப்ரணயித்வத்திலீடுபட்டுப் பேசியவை.

8. தொண்டரடிப் பொடியாழ்வாரும், திருமாலையும்: "திருமாலையறியாதவன் திருமாலையறியான" என்றொரு பழமொழியுண்டு. திருமாலையென்கிற திவ்வியப் பிரபந்தம் எவர்க்குத் தெரியாதோ அவர்க்குத் திருமால தெரியாது என்பது பொருள். இதில் தள்ளத் தக்க பாசுரம் எது? கொள்ளத் தக்க பாசுரம் எது? என்று விபஜிக்க முடியுமோ? *மேம்பொருள் போகவிட்டுக்கு மேலிற் பாட்டுக்களைப் பரமஸாரமாகக் கொண்டது ஸ்ரீவசநபூஷண திவ்ய சாஸ்த்ரம். இவ்வாழ்வார் தொண்டரடிப் பொடியென்று தாம் வஹித்த திருநாமத்திற்குச் சேர, தொண்டர்களின் பெருமையை நூல்வழி கடவாமே பேசின அவ்வைந்து பாசுரங்களும் அரங்கனடியார்க்கு அநவரதம் அநுஸந்தேயங்கள்.

9. திருப்பாணாழ்வாரும், அமலனாதிபிரானும்: இந்த மகுடத்தின்கீழ் நாம் என்ன பேசுவது? "காட்டவே கண்டபாத கமலம் நல்லாடை யுந்தி, தேட்டரு முதரபந்தம் திருமார்வு கண்டம் செவ்வாய், வாட்டமில் கண்கள் மேனி முனி யேறித் தனி புகுந்து, பாட்டினால் கண்டு வாழும் பாணர்தாள் பரவினோமே." என்கிற தனியனை நினைந்து நைந்துள் கரைந்துருகி நிற்கிறோமத்தனை.

10. திருமங்கையாழ்வாரும் பெரிய திருமொழியும்: "பதியே பரவித்தொழும் தொண்டர்தமக்குக் கதியே" என்று தாமே அருளிச் செய்தபடி திருப்பதிகள் பலவற்றிலும் தட்டித் திரிந்த இவ்வாழ்வார் "அணியார் பொழில் சூழரங்க நகரப்பா! துணியேனினி நின்னருளல்லதெனக்கு" என்று தமது பெரிய திவ்யப்பிரபந்தத்தைத் தலைக்கட்டினராதலால் *வான் திகழுஞ் சோலை மதிளரங்கர் வண்புகழ் மேல் ஆன்ற தமிழ் மறைகளாயிரமும்* என்று திருவாய் மொழியாயிரத்திற்குக் கூறிய பெருமை திருமொழியாயிரத்திற்கும் ஒக்குமென்று கொள்ளக் குறையில்லை. ... ... *

பதின்மர் பாடும் பெருமாள் போற்றி!

49 உள்ளுறை பொருள் விளக்கு. மேகம், ஹம்ஸம், கிளி, குயில், மயில் முதலான இருபதுக்கு ஸ்வாபதேசார்த்தங்கள் ரூ. 1

50 க்ஷேத்ரதீர்த்த யாத்திரா விளக்கு 0—75

---

## P. B. A. பதிப்பு நூல் தொகுதி நெ. 1

### இதில் சேர்த்து ஒரே ஸம்புடமாக பயிண்டு செய்யப்பட்டவை

1 பரந்தரஹஸ்யம், மாணிக்கமாலை

2 ஆச்சான்பிள்ளை யாறு ரஹஸ்யம்

3 ஆச்சான் பிள்ளை யஷ்டாத்யாயி

4 ஸ்ரீராமாயண ஸௌரபம். (நாலாயிர வியாக்கியானங்களில் ஸ்ரீராமாயண சுலோகங்களுக்குப் பூருவாசாரியர்களருளிய விசேஷவுரை கொண்டது)

5 ஐதிஹ்ய நிர்வாஹ ரத்தினமாலை. (நாலாயிர வியாக்கியானங்களிலுள்ள ஐதிஹ்ய நிர்வாஹங்கள்)

6 முமுக்ஷுப்படி ஸாரார்த்த தீபிகை

7 ஸ்ரீவசநபூஷண தாத்பரியஸாரம்

8 ஆசார்ய ஹ்ருதயப் பதவுரை

9 தக்ஷிணோத்தரயாத்ரா விசேஷம். (தென்னாடும் வடநாடும் யாத்திரை செய்ய விரும்புமவர்களுக்கு மிகவும் ஸௌகரியமளிக்கும் நூல்.)

10 நைச்சியாநுஸந்தானம். (மூன்று தத்துக்குப் பிழைத்த அருவினை நோயித்யாதி ஆசார்ய ஹ்ருதயஸூக்தி விவரண பரமானது.)

11 நப்பின்னை யவதார ரஹஸ்யம்

12 ஞானஸார ப்ரமேயஸார ஸப்தகாதை யுரைகள்

13 நரஸிம்ஹாவதார ஹேது நிர்ணயம், விபவாவதார சோகதத்வம்

14 முப்பத்திரண்டு மொழிமாலை, ஸாதுஸாத்விக ஸம்வாதம். மாமுனிவன் மேற்கோள் விளக்கு. (இம்மூன்றும் ஸ்ரீவைஷ்ணவ மஹாநிதி)

15 அங்கண்மா ஞாலத்தமுது. ஆக 15 கொண்ட ஒரு ஸம்புடத்தின் விலை ரூ. 15 (இவை தனித் தனியாகவும் சில கிடைக்கும்.)

## P. B. A. பதிப்புநூல் தொகுதி நெ2.

1 பூர்வாசார்ய வைபவம். (ஸ்ரீமந்நாத முனிகள் தொடங்கி வேதாந்த தேசிகன் மணவாளமாமுனிகள் வரையிலுள்ள ஸகலாசாரியர்களுடையவும் வைபவம்.

2 வரதன் ஸன்னிதி வரலாறு (தேவப்பெருமாள் ஸன்னிதியைப் பற்றி நவீனர் எழுதிய தப்பான விஷயங்களை ப்ரமாண புரஸ்ஸரமாகக் கண்டித்தெழுதிய 16 அத்யாயங்கள் கொண்டது.)

3 ஸத்ஸம்ப்ரதாயார்த்த ஸாரநிதி (தென்னாசார்ய ஸம்பிரதாயத்தின் ஸகலார்த்தங்களையும் திருமண் காப்பு ஆகாரங்களையும் விரிவாக விளக்குவது.)

4 ஸத்ஸம்ப்தாய பாஸ்கரன் (பிரதிபக்ஷிகளின் பல துர்வாதங்களை 116 பாராக்களால் கண்டித்தது.

5 பன்னிரு திங்களநுபவம். (பன்னிரண்டு மாதங்களிலும் அவதரித்த ஆழ்வாராசாரியர்களைப் பற்றின விசேஷார்த்த சிந்தனைகள்.)

6 அறுபத்திரண்டு உபந்யாஸமாலை

7 எம்பெருமானாரறுபத்திரண்டு, சாரீரகமீமாம்ஸையறுபத்திரண்டு, பகவத்கீதை யறுபத்திரண்டு.

8 அறுபத்துமூன்று உபந்யாஸமாலை

9 சக்ரவர்த்தி திருமக னறுபத்துநான்கு. அறுபத்துநான்கு நன்மொழிகள், அறுபத்துநான்கு நல்வார்த்தைகள்

10 நான் கண்ட நல்லது, திவ்யார்த்த தீபிகைச் சிறப்பு ஆக 10 கொண்ட ஸம்புடம் 10 ரூ.

(இவை தனித்தனியாகவும் கிடைக்கும்.)

## P. B. A. பதிப்பு ஸங்கீர்ண ஸம்புடம் நெ. 3

1 முகுந்தமாலை உரை

2 ஸ்தோத்ர ரத்ன வுரை

3 ஐப்பசித் திருமூல மலர்

4 ராமாநுஜ தயாபாத்ர சரித்திரம்

5 ஷை ஸம்ஸ்க்ருத பாஷை நாகரலிபி

6 ஜகதாசாரிய ஸூக்தி ஸுதா நிதி

7 கோபால ஸம்பாஷணை

8 வேதாந்தவாரியரும், அண்ணங்கராரியரும்

9 பதபாட பரித்ராணம். (வேதவிசார பரமான வடமொழி நூல்.) ஆக இவ்வொன்பதுங் கொண்ட ஒரு ஸம்புடத்தின் விலை ரூ. 6-75.

---

# NOTICE

## Sri Vaishnava Sampradaya Granthas,

*P. B. ANNANGARACHARYA. (Editor) Granthamala, Kancheepuram.*

All the publications of Sri Vaishnava Sampradaya Granthas in the three languages of Tamil, Telugu and Sanskrit are available in Granthamala Office. We have published explanatory meanings to all the Divyaprabandas of Alwars. We have also published commentaries to all Sthothrapatas of Acharyas, as well as the texts of Purvacharyas' works. Some have been publishned also in English. Catalogues of the above works in each of the above languages are available. Those desiring to get copies may write to the address given above.

கிடைக்குமிடங்கள் :—

(1) க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சிபுரம்.
(2) P. B. A.
ஸ்ட்ராட்டன் முத்தியாமுதலி தெரு, மதராஸ்—1
(3) G. ரங்கைய நாயுடு,
26, குருவப்ப செட்டி தெரு, சிந்தாத்திரிபேட்டை, மதராஸ்—2
(இவர் சென்னையில் பிரசாரம் செய்ய நியமிக்கப்பட்டவர்.)

If un-delivered please return to:
**P. B. ANNANGARACHARYA,**
L. KANCHEEPURAM.

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Satgrantha Prakasana Sabha.
Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street, L. Kancheepuram.

# ஸ்ரீ வைஷ்ணவலக்ஷணம்

(ப்ர—அ.)

9-X-74.

ஸ்ரீ வைஷ்ணவ லக்ஷணத்தை விளக்கவந்த சாஸ்த்ரங்கள் பலவும் பலமுகமாகப் பேசியுள்ளன. "யே கண்டலக்நதுலஸீநளிநாக்ஷமாலா : யே பாஹுமூலபரிசிஹ்நிதசங்கசக்ரா :, யே வா லலாடபலகே லஸதூர்த்வபுண்ட்ரா : தே வைஷ்ணவா புவநம் ஆசு பவித்ரயந்தி" என்கிற சுலோகம் பெரும்பாலும் பலருமறிந்ததேயாகும். ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு இருக்கவேண்டிய வெளிவேஷங்களை மாத்திரம் இந்தச்லோகம் தெரிவிக்கின்றதேயன்றி அந்த : கரணத்தில் இருக்கவேண்டிய அம்சங்களில் ஏகதே சத்தையும் தெரிவிக்கவில்லை. அவற்றைத் தெரிவிக்கின்ற ச்லோகங்களும் இதிஹாஸ புராணங்களில் மிக மலிந்துகிடக்கின்றன.

பகவத்கீதையில் பத்தாவது அத்தியாயத்தில் (ச்லோ. 5) "அஹிம்ஸா ஸமதா" என்ற விடத்தில் ஸமதா என்பதை விவரித்தருளா நின்ற நமது பாஷ்யகாரர், "ஸமதா—ஆத்மநி ஸுஹ்ருத்ஸு விபக்ஷேஷு ச ஸமமதித்வம்" என்று உரைத்தருளினர். அங்கு தாத்பர்ய சந்த்ரிகையில் தேசிகன் *ஸமமதிராத்ம ஸுஹ்ருத்விபக்ஷபக்ஷே — இதி பகவத்பராசரவசந மிஹ தத்தத்பதை : ஸ்மாரிதம் * என்றருளிச் செய்தார்.

ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் (3-7-20) * நசலதி நிஜவர்ணதர்மதோ ய : ஸமமதி ராத்ம ஸுஹ்ருத் விபக்ஷபக்ஷே, நஹரதி நச ஹந்தி கிஞ்சிதுச்சை : ஸிதம்நஸம் தமவேஹி விஷ்ணுபக்தம் * என்றுள்ள சுலோக ரத்நமே இங்கு எடுத்துக் காட்டப்பட்டதாயிற்று. இதில் * ஸமமதிராத்மஸுஹ்ருத் விபக்ஷபக்ஷே * என்கிற இரண்டாவது பாதம் முக்கியமாகக் கணிசிக்கத்தக்கது. தன்னிடத்திலும் தன் நண்பர்களிடத்திலும் தன் பக்கலில் பகை பாராட்டு மவர்களிடத்திலும் ஒரு நிகரான புத்தியை யுடையவனாயிருப்பவன் எவனோ அவனே ஸ்ரீவைஷ்ணவன் என்று இதனால் தெரிவிக்கப்படுகின்றது.

இப்படிப்பட்ட ஸ்ரீ வைஷ்ணவத்வம் ப்ரஹ்லாதாழ்வான் போல்வாரிடத்தில் இருந்ததாகக் கதைகளில் கேட்டுவருகின்றோமத்தனையல்லது இக்காலத்தில் சில வ்யக்திகளிடத்திலாவது இதைக் காண முடியுமோ என்று பார்த்தால் முடியாதென்றே முடிவுகட்டவேண்டியதாகும்.

முற்காலத்தில் பட்டர் நம்பிள்ளை போல்வாருடைய சில இதிஹாஸங்களை நாம் கேட்கும் போதும் புத்தகங்களில் வாசிக்கும் போதும் 'உண்மையாக இங்ஙனே நடந்திருக்குமா !' என்று அதிசங்கிக்குமவர்களாக நாம் இருக்கின்றோமே தவிர, 'நாமும் அந்த நடையைச் சிறிதாகிலும் அநுகரிக்க முயலவேண்டும்' என்று பாரிக்கிற அதிகாரிகள் இலரென்றே சொல்லவேண்டும்.

ஸ்ரீவசந பூஷணத்தில் "குற்றம் செய்தவர்கள் பக்கல் பொறையும் க்ருபையும் சிரிப்பும் உகப்பும் உபகாரஸ்ம்ருதியும் நடக்கவேணும்" என்ற விடத்து ஜநந்யாசார்யருடைய வியாக்கியானமான ஆய்ப்படியில் —

"பட்டர் ஒருநாள் பெருமாள் ஸந்நிதியிலே அநுஸந்தானம் பண்ணுகிற்க, சிலர் செவி பொறுக்க வொண்ணாத பருஷோக்தி பண்ணக் கேட்டு, சாத்தின திருவாழிமோதிரத்தையும் திருப்பரியட்டத்தையும் கொடுத்தருளி, முதலிகளைப்பார்த்து, இவர்கள் பருஷித்ததுங்கு நான் அஞ்சிக் கொடுத்தேனன்று ; நாமறியாத தோஷங்களையும் பெருமாள் திருச்செவி சாத்தும்படி சொன்ன உபகாரத்தைப் பற்றக் கொடுத்தேனத்தனை.........என்றருளிச் செய்தார்" என்று காண்கிறது. பட்டர் தம்மை தூஷித்தவர்களுக்கு பூஷண தாநமும் பீதாம்பர தாநமும் செய்தருளியதாக இங்ஙனே இதிஹாஸம் காண்கிறோம். இதை யெல்லாம் நாம் பிறர்க்கு எடுத்துரைக்கும்போது கல்லும் கரையும்படி உரைக்கின்றோம் ; கேட்பவர்களும் கண்ணுங் கண்ணீருமாயிருந்து புளகாஞ்சிதராய்க் கேட்கிறார்கள். ஆனால் அவரவர்களுடைய அனுஷ்டானம் எங்ஙனே யிராநின்றதென்று பார்த்தால் வாய்திறக்க வழியேயில்லை.

நமக்கு நைச்யா நுஸந்தாநம் ஸ்வரூபம் என்றறிந்து நாம் "நீசனேன் நிறையொன்றுமிலேன்" என்றும் "சீலமில்லாச் சிறியன்" என்றும் பலவாறு பாசுரங்களையும் ச்லோகங்களையும் முன்னிட்டுத் தாழ்வு சொல்லிக்கொள்ளுகிறோம். நம் வாயினால் வெளி வந்த அந்தத் தாழ்வுதன்னையே பிறரொருவர் நம்மை நோக்கி எடுத்துரைக்கத் தொடங்கினால் 'என்னையா நீச னென்றாய்? என்னையா நிறையொன்று மில்லாதவனென்றாய்? என்னையா சீலமில்லாச் சிறியனென்றாய்? பாவி! நீயன்றோ இப்படிப்பட்டவன்' என்று உடனே அவரை ஆயிரம் வகையாக தூஷிக்கவும் தண்டிக்கவும் தண்டிப்பிக்கவும் எழுகின்றோம். ஒவ்வொருவரும் தம்தம் அனுபவத்தில் இதை நிச்சயமாகக் காணலாம்.

சில விசேஷ காலங்களில் பெரியார்களை எழுந்தருளப்பண்ணி 'ஸ்வாமிந்! ஸ்ரீபாத தீர்த்தம் ஸாதிக்கவேணும்' என்று வேண்டுகிறோம். அதற்கு அவர்கள் 'ஐயோ! அடியேனுக்கென்ன யோக்யதை யுண்டு? ஸகல விதத்திலும் அயோக்யனன்றோ அடியேன்' என்று பலபடியாக நிகர்ஷாநு ஸந்தானம் பண்ணுகிறார்கள். இந்த அநுஸந்தானம் உள்ளவாறு செய்கிறபடியா? அல்லது இங்ஙனே சொல்லிக் கொள்ள வேண்டுவது ஒரு உபசார வழக்கு என்று கொண்டு செய்கிறபடியா? என்று நாம் யோசித்தால், அவர்களுடைய ஹ்ருதயத்தை நம்மால் தெரிந்து கொள்ளமுடியாதாயினும், அவர்கள் தாங்கள் அநுஸந்தித்த நீசத்தன்மையை நம் வாயினால் சொல்லிக்காட்டின விடத்தும், (அதாவது நீர் மிகவும் அயோக்கியர் என்று பிறர் சொன்ன விடத்திலும்) அவர்கள் உகந்தேயிருப்பார்களாயின் அப்போது தான் அவர்களுடைய நைச்யாநு ஸந்தானத்தை நாம் ஸஹ்ருதயமென்று நினைக்கலாகும்.

'அஹம் அமர்யாத:, அஹம் க்ஷுத்ர:' என்று நைச்யாநு ஸந்தானம் பண்ணுமவர்கள் "த்வம் அமர்யாத:, த்வம் க்ஷுத்ர:" என்கிற பரோக்திகளை உகந்திருக்கிறார்களா? என்றே நாம் பார்க்கவேண்டும். கூரத்தாழ்வான் போல்வாரான சிலரே அங்ஙன மிருந்தார்கள் என்றே சொல்லவேண்டியதாகின்றது. தம்மைப்பற்றிப் பிறர் கூறும் நிகர்ஷோக்திகளைச் சிறிதும் ஸஹியாமல் உடனே பிரபலமாக ப்ரதிஸத்காரம் செய்யப்புறப்படுமவர்கள் தாங்கள் செய்துகொள்ளும் நிகர்ஷாநு ஸந்தானம் அர்த்தமற்றது என்றே சொல்லவேண்டும்.

"ஒருவன் உன்னை இடது தாடையில் அறைந்தானாகில் உடனே அவனுக்கு நீ வலது தாடையை ஆதரவோடு காட்டு" என்று பிரஸங்க மேடைகளில் பேசுவாரை மிக மிகக் காண்கிறோம். அப்படி அவர்கள் பேசி இப்பால் வந்தவுடனே அவரை ஒருவர் அடிப்பதாகக் கையோங்கும்போதே என்ன நடக்கிறதென்பதையும் காணு கின்றோம்.

ஸபைகளில் சிலர் உபந்யாஸம் பண்ணி முடிக்கும்போது "ஒன்றுமறியாத நான் ஏதோ தப்பும் தவறுமாக உளறிவிட்டேன்; இதில் நல்லது ஒன்றுகூட இராது; சிறியேனை க்ஷமிக்கவேணும்" என்று கால்மணி காலம் சொல்லி முடிப்பார்கள். இதேவார்த்தையை அவர் அயலார் வாயில் கேட்பாராகில் கோபாவேசங் கொண்டு கண்கள் சிவக்கப்பெற்று "எனக்கா ஒன்றும் தெரியாது, நானா தப்பும் தவறுமாக உளறிவிட்டேன்" என்று ஆரம்பித்து (அவரே) பிரபலமாக அட்டஹாஸங்களைச் செய்யக் காண் கின்றோம். ஆசார்ய பீடம் வஹிக்கின்ற எந்த வ்யக்தியும் தம் நிகர்ஷத்தைத் தாம் அநுஸந்திக்கிறவர்களாக இருக்கின்றார்களேயல்லது, தம்மைப்பற்றிப் பிறர் கூறும் நிகர்ஷத்தை ஆமோதிப்பவர்களாக இல்லையே? அப்படிப்பட்டவர்களன்றோ ஸ்ரீ வைஷ்ணவத்வ பூர்த்தி யுடையவராவர்.

இக்காலத்தில் இப்படிப்பட்ட வ்யக்தி தேறுவது கஷ்டமாதலால் ஒருவரும் ஸ்ரீ வைஷ்ணவரல்ல* என்று நாம் சொல்லவும் நினைக்கவும் தகாது. *ப்ராஹ்மண்யாம் ப்ராஹ்மணாத் ஜாதத்வம் ப்ராஹ்மண்யம் * [ப்ராஹ்மண யோநியில் பிறப்பதே ப்ராஹ்மண்யம்] என்று சொல்லுவதுபோல, * வைஷ்ணவ்யாம் வைஷ்ணவாத் ஜாதத்வம் வைஷ்ணவத்வம் * [வைஷ்ணவ யோனியில் பிறப்பதே ஸ்ரீ வைஷ்ணவத்வம்] என்று சொல்ல ப்ராப்தமாகிறது.

அப்படிப்பட்ட ஸ்ரீ வைஷ்ணவர்களுடையவும் திருவுள்ளம் புண்படாதபடி வர்த்திக்க வேண்டியது நமது கடமையே யாகும். ஒரு வைஷ்ணவருடைய திருவுள்ளம் கன்றினால் அதிற்காட்டிலும் அநர்த்தபீஜம் நமக்கு வேறில்லை என்கிற துணிவு பிறக்கவேணும். ... ... ...

# எம்பெருமானாரும் - காளியமர்த்தனமும்.

(ப்ர—அ.)

* ஹே ராமாநுஜ! ஹே ஜகத்த்ரயகுரோ! ஹே புண்டரீகாக்ஷ! மாம் ஹே கோபீ ஜநநாத! பாலய பரம் ஜாநாமி நத்வாம் விநா * என்ற முகுந்த மாலை சுலோகத்தில் ராமாநுஜனென்றழைக்கப்பட்ட கண்ணபிரானுடைய திருநாமத்தைக் கொண்ட எம்பெருமானார் கண்ணபிரான் செய்த செயல்களையெல்லாம் ஒருவாறு செய்தருளி யிருக்கிறாரென்று பரக்க நிரூபிக்கிற ப்ரகார மொன்றுண்டு. கண்ணபிரானுடைய சேஷ்டிதங்களுள் காளியமர்த்தனமுமொன்றாதலால் அதனை எம்பெருமானார் செய்தருளிய விதம் ஈண்டு நிரூபிக்கப் படுகிறது.

யமுனையாற்றில் ஓர் மடுவிலிருந்துகொண்டு அம்மடு முழுவதையும் தன் விஷாக்கினியினால் கொதிப்படைந்த நீருள்ளதாக்கிப் பெருங்கேடு விளைத்த காளியனென்னுங் கொடிய நாகத்தைக் கண்ணபிரான் கொழுப்படக்கினனென்பது காளியமர்த்தன வரலாறு. இவ்வரலாற்றை வேதாந்த தேசிகன் யாதவாப் யுதயத்தில் கூறுமிடத்து நான்காவது ஸர்க்கத்தில் (ச்லோ. 125.) *விவிதமுநிஜநோப ஜீவ்ய தீர்த்தா விகமித ஸர்ப்பகணா பரேண பும்ஸா, அபஜத யமுநா விசுத்திமக்ர்யாம் சமித பஹிர்மத ஸம்ப்லவா த்ரயீவ * என்கிற ச்லோகத்தினால் கூறினர். ஆசார்ய ஸார்வபௌமரான ஸ்வாமி ராமாநுஜர் செய்தருளின செயலையே கண்ணபிரான் செய்த செயலுக்கு உவமையாகக் காட்டியருளினர். எங்ஙனே யென்னில், ஐந்தலை வாய்நாகமாகிய காளியன் யமுனையாற்றைக் கலக்கிக் கெடுத்ததானது—விஷவாக்குக்களான புறமதத்தவர்கள் மனம் போனபடியெல்லாம் கூறும் தவறான பொருள்களாலே வேதங்களைக் கெடுத்தபடியாம். அந்தக் கெடுதியைக் கண்ணபிரான் நீக்கி எமுனையை எல்லாரும் இனிமையாகப் பருகும்படி செய்ததானது—ஸ்வாமி ராமாநுஜர், பிறர் கூறின தவறான பொருள்களை யகற்றி நல்ல பொருள்களை வெளியிட்டு வேதத்தை ஸத்துக்களுக்கு உபஜீவ்யமாக ஆக்கினபடியாம். யமுனையாற்றின் ஸ்தானத்தில் வேதம் கொள்ளப்பட்டது; காளியன் ஸ்தானத்தில் குதர்க்கவாதிகள் கொள்ளப்பட்டார்கள்; கண்ணனுடைய ஸ்தானத்தில் ஸ்வாமி யெம்பெருமானார் கொள்ளப்பட்டார். * தூய பெருநீர் யமுனைத் துறைவனை * என்னும்படி யமுனையாறு இடையறாத பகவத் ஸம்பந்தத்தை யுடையதாயிருந்ததுபோல, வேதமும் பகவத் ஸம்பந்தத்தை நியதமாக வுடையதாயிருக்கையாலே வேதத்தை யமுனையாற்றின் ஸ்தானத்தில் கொள்வது பொருந்தும். குதர்க்கவாதிகளை காளியன் ஸ்தானத்தில் கொள்வதற்கான பொருத்தம் இனி உபபாதிக்கப்படுகிறது.

காளியன் ஐந்து தலைகளாலும் நஞ்சை உமிழ்ந்து நாசத்தை விளைத்தானென்று புராணங் கூறும். அப்படியே குதர்க்கவாதிகளும் ஐந்து விதமான துர்வாதங்களாலே பரமார்த்த நாசத்தை விளைவிக்கின்றனர். எங்ஙனே யென்னில் ;

1. ஈச்வரனென்று ஒருவனைக் கொள்வது கூடாது; ஈச்வரனேயில்லை—என்பது ஒரு குத்ஸிதவாதம்.

2. ஈச்வரனுளனென்று இசைந்தாலும் அவன் அநுமாநத்தினால் ஸித்திப்பவனேயன்றி சாஸ்திரத்தால் ஸித்திப்பவனல்லன் என்பது மற்றொரு குத்ஸிதவாதம்.

3. சாஸ்திரங்களைக் கொண்டே ஈச்வரனை அங்கீகரித்தும் அவனுக்குக் குணங்களும் விக்ரஹமும் இல்லையென்று வாதித்தல் வேறொரு குத்ஸிதவாதம்.

4. ஈச்வரன் ஒருவனே யென்பதில்லை, பலபல ஈச்வரர்களுளரென்று பல தெய்வங்களுக்கு ஈச்வரத்வம் காட்டி வாதித்தல் இன்னுமொரு குத்ஸிதவாதம்.

5. பிரபஞ்சமே கிடையாது, எல்லாம் சூனியம் என்று ஸர்வ சூன்யவாதம் பண்ணுகை ஸர்வோத்துங்கமான குத்ஸிதவாதம்.

ஆக இப்படிப்பட்ட ஐவகையான அபார்த்த வாதங்களினால் வேதத்தைக் கெடுத்த குதர்க்க வாதிகள் காளிய ஸ்தானத்திலே கொள்ளப்படுவது பொருந்தும். இக்கெடுதல்களையெல்லாம் நம் ஆசார்ய ஸார்வபௌமர் ஸதர்த்த நிரூபணங்களினாலே போக்கி யருளினர்.

இங்கே மற்றொரு விசேஷமும் காணலாம். * வாய்த்த காளியன்மேல் நடமாடிய கூத்தனார் * என்று சூடிக்கொடுத்த சுடர்க்கொடி பணித்தபடி காளியன் தலையிலே கண்ணபிரான் அடியிட்டு நடனம் புரிந்தாப்போல, ஸ்வாமி யெம்பெருமானாருடைய ஸம்பந்த ஸம்பந்தமுடைய நாம் * நாவலிட்டுழிதருகின்றோம் நமன்தமர் தலைகள் மீதே * என்று திருமாலை முதற் பாசுரத்தில் தொண்டரடிப்பொடி யாழ்வாரருளிச் செய்த கணக்கிலே யமகிங்கரர்களின் தலையிலே அடியிட்டுக் கூத்தாடப் பெறுவோம். "ததங்யமத துர்மதஜ்வலிதசேதஸாம் வாதிநாம் சிரஸ்ஸு நிஹிதம் மயா பத மதகூணம் லக்ஷ்யதாம்" என்ற யதிராஜஸப்ததிஸூக்தியும் காண்க இந்த உபந்யாஸம் நாலைந்து நாள் விவரிக்கத்தகும்,

எம்பெருமானார் திருவடிகளே சரணம்,

கிருஷ்ணகிரியில் ஸ்ரீமதி வெங்கடலக்ஷ்மியம்மாவின்
மாடமாளிகையில் ஆழ்வார் திரு நகரி, கோயில்
ஸ்வாமிகளின் அருளிச்செயல் கோஷ்டி.



ஸ்ரீ:

உபந்யாஸகர்களுக்கு உபகாரகமான வெளியீடுகளில் நெ. 39

# நான்கு தூதுகளின் மருமம்

ஸ்ரீகாஞ்சீ ஜகதாசார்யஸிம்ஹாஸநாதிபதி. அண்ணங்கராசாரியர்

நம்மாழ்வார் திருவாய்மொழியில் எம்பெருமான் திறத்துத் தூதுவிடும் பதிகங்கள் நான்கு. அவையாவன —முதற்பத்தில் *அஞ்சிறையமடநாரை. ஆறும்பத்தில் * வைகல் பூங்கழிவாயும் * பொன்னுலகாளீரும். ஒன்பதாம்பத்தில் * எங்கானலகங்கழிவாய். ஆக இந்த நான்கு பதிகங்களிலும் தூதுவிடுகிறது பொதுவாக எம்பெருமானைக் குறித்தேயாகிலும், பாசுரங்களிலே உட்புகுந்து ஆராயுங்கால் சில விசேஷங்கள் தெரியும்.

எம்பெருமான் பரவ்யூஹ விபவ அந்தர்யாமி அர்ச்சாவதாரரூபேண ஐவகைப்பட்டிருக்கையாலே அந்த ஐந்து நிலைமைகளிலும் தூதுவிடுகிறாரென்பது சொற்போக்கில் காணக்கிடக்கின்றது. (1) *அஞ்சிறையமடநாரையில் *கடலாழி நீர் தோற்றி அதனுள்ளே கண் வளரு மடலாழியம்மானைக் கண்டக்காலிது சொல்லி * என்று அருளிச் செய்கையாலே அப்பதிகம் வ்யூஹநிலையில் தூதுவிடுவதாகும். கடலாழி நீர் தோற்றி அதனுள்ளே கண் வளருகைதானே வ்யூஹாவஸ்தையென்பது. (2) இனி * வைகல்பூங்கழிவாயில் * மாறில் போரரக்கன் மதிள் நீறெழச் செற்றுகந்த ஏறு சேவகனார்க்கு * என்று இலங்கையெரித்த இராமபிரானிடம் செல்லும்படி தூதுவிடுகையாலே அப்பதிகம் விபவாவதாரத்தில் தூதுவிடுவதாகும். ராமாவதாரம் விபவாவதாரங்களுள் ஒன்றுதலால். இப்பதிகம் மலைநாட்டிலுள்ள திருவண்வண்டூர்த் திருப்பதி விஷயமாகையாலே இது அர்ச்சாவதாரத்தில் தூதுவிடுகிறபடியல்லவோ வென்று சங்கிக்கவேண்டா; மேலேயெடுத்துக்காட்டிய பாசுரத்தின் பண்பு நோக்கி 'இது விபவாவதாரத்தில் விடும் தூது' என்கை மிகப் பொருந்தும். இனி (3) * பொன்னுலகாளீரில் பரத்வத்திலும் அந்தர்யாமித்வத்திலும் தூது விடப்படுவதாக விளங்குகின்றது. இப்பதிகத்தில் * மாமதுவார் தண்டுழாய் முடி வானவர்கோனைக் கண்டு, யாமிதுவோ தக்கவா றென்ன வேண்டும்* என்கையாலே வானவர்கோன்—பரமபதநிலயனான பரவாஸுதேவனாகையாலே அவன்பால் தூதுவிடுவதென்பது விளங்கிற்று. இப்பதிகந்தன்னிலேயே * எங்குச் சென்றாகிலுங்கண்டு இதுவோ தக்கவா றென்மினே * என்னும் பாசுரமுள்ளது, அப்பெருமான் எங்கேனும் தன்னை யொளித்துக் கொண்டு கிடந்தாலும் அங்கும் புகுந்து சொல்லுமாறு தூதுவிடப்படுகையாலே அந்தர்யாமித்வத்தில் தூதும் இப்பதிகத்திலேயே காணலாயிராநின்றது. (4) இனி * எங்கானலகங்கழிவாயென்னும் பதிகத்தில் * திருமூழிக்களத்தார்க்கே * என்று திருமூழிக்களமென்கிற திருப்பதியில் தூதுவிடுகையாலே இப்பதிகம் அர்ச்சாவதாரத்தில் தூதுவிடுவதாகும். ஆக, தூதுவிடும்பதிகங்கள் நான்குக்கும் எம்பெருமானுடைய பரவ்யூஹ விபவாந்தர்யாமி அர்ச்சாவதார நிலைகள் ஐந்தும் விஷயமென்பது விளக்கப்பட்டது.

ஓரிடத்தில் தூது விட்டுக் காரியமாகவில்லை யென்றால் மற்றோரிடத்தில் தூதுவிடுவது எதற்காக? என்றொரு கேள்வி பிறக்கும். எம்பெருமான் அனந்த கல்யாண குணநிதி யாகையாலே, ஒரு குணம் பழுதுபட்டாலும் மற்றொரு குணம் பலிக்கப்பெறலாமே; அக்குணமும் விபலமானாலும் வேறொரு குணம் பயன் பெறுவிக்கத் தகுமே என்கிற நசை ஸம்பாவிதமாகையால் பலகால் தூதுவிடத் தகும். தூதுவிடும் பதிக்மோவ்வொன்றுக்கும் ஒவ்வொரு திருக்குணத்தை விளங்கச் செய்வதிலே நோக்கா யிருக்குமென்றதாயிற்று. இதனை அடைவே விவரிப்போம்.

## முதல் தூதின் விவரணம்

முதல் தூதாகிற * அஞ்சிறையமடநாரையில் * என் பிழைத்தாள் திருவடியின் தகவினுக்கு * என்று எம்பெருமானைக் கேட்குமாறு சொல்லியனுப்புகையாலே அப்பெருமானுடைய க்ஷமாகுணத் தைப் பற்றாசாகக் கொண்டு இத்தூது விடுவதாக விளங்குகின்றது. மேலெடுத்த பாசுரத்தின் கருத்தா வது [திருவடியின் தகவினுக்கு என் பிழைத்தாள்] ஸ்வாமியான தேவரீருடைய கருணைக்குப் போதும் படி என்ன பிழை செய்தாள்? என்றவாறு. உண்மையில் தான் பிழை செய்தது உண்டாகிலும் எம்பெருமானது பொறுமையின் பெருமையைக் காணுமிடத்து 'அதன் வயிறு நிறையுமாறு நாம் பிழை செய்யவில்லையே. நாம் செய்த பிழை அக்குணத்திற்கு எந்த மூலைக்கு? அதன் வயிற்றிற்கு ஒரு கவளத் திற்கும் போதாதே' என்று நினைக்கவேண்டும்படியாக இருத்தலால் இங்ஙனஞ் சொல்லக் குறையில்லை யென்க. இங்கே ஈடுமுப்பத்தாறாயிரப்படி ஸ்ரீ ஸூக்தி காண்மின் ;—"என் குற்றத்தைப் பார்த்து தமிக்க நினைத்தாராகில்,..............ஸ்வாமிகளான தம் பொறை வயிறுநிறைய எங்களால் குற்றஞ் செய்யப் போமோ? என்னுங்கோள்" என்பதாம். எத்தனை பிழைகள் செய்திருந்தாலும் ஒரு நொடிப் பொழுதில் அவற்றைக் கபளீகரிக்கவல்ல திருக்குணம் அப்பெருமான் பக்கலில் இருக்க, பிழையென்று வாய்திறக்கவும் வழியுண்டோவென்று கருத்து.

ஸ்ரீராமபிரான் வாலியை வதைத்து ஸுக்ரீவமஹாராஜர்க்கு முடிசூட்டிக் கிஷ்கிந்தைக்குப் போக விட்டு வர்ஷாகாலம் முடிந்தவாறே இலங்கைக்குப் புறப்படப் படை திரட்டிக்கொண்டு வருமாறு நியமித்துவிட்டுத் தானும் மால்யவானிலே காலங்கழியாநிற்க, நாளடைவிலே மாரிகாலமும் முடிந்தும் ஸுக்ரீவன் காமபரவசனாய்க் கிடந்து வாராதேயிருக்க, பெருமாள் சீறிச்சிவந்து இளையபெருமாளை யனுப்பி நாணொலியெழுப்பி அச்சமுறுத்த, அப்போது தாரை எழுந்துவந்து கேட்கிறாள்—* கிம் கோப மூலம் மநுஜேந்த்ரபுத்ர !* என்கிறாள். இங்ஙனே சீறிவருவதற்குக் காரணமென்? என்பது இவளுடைய கேள்வி. கோபத்திற்குக் காரணம் தெரியாமையில்லையே யிவளுக்கு; நன்றாகத் தெரிந்திருந்தும் கிம் கோபமூலம்? என்றதன் கருத்து என்னவெனில்; உங்களுடைய க்ஷமாகுணத்தை நம்பியன்றோ நாங்கள் பராக்காயிருந்தது, அப்படி விச்வஸிக்கத்தக்க க்ஷமையையுடையீர்களான நீங்கள் சீறலாமோ? என்ப தன்றோ தாரையின் கேள்விக்குக் கருத்து. அதுபோலவே இங்குமென்க. ஆக, முதல் தூதில் * என் பிழைத்தாள் திருவடியின் தகவினுக்கு* என்கிற பாசுரம் உயிராகக் கொள்ளப்பட்டு, க்ஷமா குணம் பற்றாசாக விடுவது இந்தத் தூது என்று தேறிற்று. க்ஷமாகுணத்தை அவனுக்கு நினைப்பூட்டுமாறு தூதுவிடப்பட்டதென்க.

இதற்குமேல் ஒரு கேள்வி பிறக்கும்; க்ஷமாகுணம் தனக்குள்ள தென்பதை எம்பெருமான்றான் அறியானோ? இத்தலை நினைப்பூட்டவேண்டிய அவசியம் என்கொல்? என்று. இக்கேள்விக்கு ஆழ்வார் ஸ்ரீஸூக்தியிலிருந்தே நன்கு ஸமாதானம் கிடைக்கின்றது. * என்பிழைத்தாள் திருவடியின் தகவி னுக்கு * என்றதற்கு முன்னே * என் பிழையே நினைந்தருளி அருளாத திருமாலார்க்கு * என்றிருக்கை

யாலே, தம்முடைய பிழைகள் அப்பெருமானுடைய க்ஷமாகுணத்தை மறப்பித்ததாகத் தெரிவித்தவாறு. ஆகவே அக்குணத்தை நினைப்பூட்டவேண்டுவது அவசியமாயிற்று. [என்பிழையே நினைந்தருளி] எனது பிழைகளை மாத்திரம் நினைந்தாரேயல்லது பிழை பொறுக்கவல்ல தமது க்ஷமாகுணத்தை நினைந்தாரில்லையே; அதனை மறந்தாப்போலே எனது பிழைகளையும் மறக்கலாகாதோ? என்னுங்கோளென்கிறாள். [அருளாத திருமாலார்க்கு] பிழையுடையார் பக்கலிலே அருள் செய்யாவிடின் இவர் எங்ஙனம் திருமாலாக இருக்கமுடியும்? அநுக்ரஹமே வடிவெடுத்தவளென்றும் நிக்ரஹமென்பதைக் கனவிலும் கண்டறியாதவளென்றும் புகழ்பெற்றவளான பிராட்டிக்கு அவர் மணவாளராகில் அவளது உபதேசத்தின்படி நடக்கவேண்டியவரன்றோ; * ந கச்சிந்நாபராத்யதி = பிழை செய்யாதவனே உலகில் இல்லை* என்று நிரூபிக்கின்ற பிராட்டியோடே அவர் தாம் ஸம்பந்தம் பெற்றுவைத்து இங்ஙனே பிழை கண்டு உபேக்ஷித்தல் தகுதியோ? இத்தன்மையைப் பிராட்டியறிந்தாளாகில் அவள் தானும் உமது முகத்திலே விழியாள் என்று சொல்லுங்கோள்-என்றிவ்வளவும் அருளாத திருமாலார்க்கு என்ற சொற்செறிவிலே அடங்கும்.

## இனி இரண்டாந்தூதின் விவரணம்

இரண்டாந்தூதாகிய *வைகல் பூங்கழிவாயில் * புணர்த்தபூந்தண்டுழாய்முடி நம்பெருமானைக் கண்டு புணர்த்த கையினராய் அடியேனுக்கும் போற்றுமினே* என்பது உயிரான பாசுரம். எம்பெருமான் திருமுடியில் தனிமாலையிட்டிருப்பது தாம் ஆர்த்தரக்ஷண தீக்ஷிதர் என்பதைக் காட்டுதற்காகவேயன்றோ; அன்றாகில் திருவபிஷேகத்திலே அவர் வளையம் வைக்கவேணுமோ? ஸ்வாமின்! தேவரீர் ஆர்த்தரக்ஷண தீக்ஷிதராயிருந்துவைத்து ஆர்த்தியே வடிவெடுத்த பராங்குச நாயகியை இப்படி உபேக்ஷித்திருத்தல் தகுதியோவென்று கேளுங்கோள் என்று சொல்லித் தூது விடுகையாலே, அப்பெருமானுடைய ஆர்த்தரக்ஷண தீக்ஷிதத்வமென்னுங் குணத்தைப் பற்றாசாகக் கொண்டு இந்தத் தூதுவிடுவதாக விளங்குகின்றது. அன்றியும் இப்பதிகத்தில் * கைகொள் சக்கரத் தென்கனிவாய்ப் பெருமானைக்கண்டு கைகள் கூப்பிச் சொல்லீர் * என்றும் கறங்குசக்கரக் கைக் கனிவாய்ப் பெருமானைக்கண்டு இறங்கிநீர் தொழுதுபணியீர் * என்றும் சொல்லுகையாலே அருளார் திருச் சக்கரத்தால் அகல் விசும்பும் நிலனும் இருளார் வினைகெடச் செங்கோல் நடாவுதிர் என்கிற திருவிருத்தப் பாசுரத்தின்படியே திருவாழியாழ்வானும் ஜகத்ரக்ஷண தீக்ஷிதனுகையாலே அந்தப் பாசுரங்கள் கொண்டும் எம்பெருமானுடைய ரக்ஷண தீக்ஷையை நினைப்பூட்டித் தூது விடுகிறதாகவுங் கொள்ளலாம். இயற்கையாகவே ரக்ஷாதீக்ஷிதனுயிருக்குமவன் தனக்கு அஸாதாரணமான அக்குணத்தை மறந்திடுவனோ? அதை நினைப்பூட்டவேண்டிய அவசியம் என்கொல்? என்று கேள்விபிறக்கும்; இக்கேள்விக்கும் ஆழ்வார் ஸ்ரீஸூக்தியிலிருந்தே ஸமாதானம் கிடைக்கின்றது. சிறந்த செல்வம் மல்கு திருவண்வண்டூருறையும் என்றருளிச் செய்திருக்கையாலே திருவண்வண்டூரின் ஐச்வர்யச் சிறப்பைக் கண்டு கால்தாழ்ந்து தம்முடைய ரக்ஷாதீக்ஷையை மறந்திருப்பர் என்று தெரிவித்தவாறு. ஆர்த்தரக்ஷண தீக்ஷிதரான நீர் மற்றொன்றில் கால்தாழத்தகுமோ? என்று விண்ணப்பஞ் செய்யுங்கோள் என்று சொல்லித் தூதுவிடுகிறபடி. இப்பதிகத்தில் வேத வேள்வி யொலிமுழங்குந் தண் திருவண் வண்டூர்* என்றும் சொல்லுகையாலே, வேதவொலி கேட்பதிலும் வேள்வியொலி கேட்பதிலும் பராக்காலே தம்முடைய ரக்ஷா தீக்ஷையை மறந்திருப்பர்; வேதவொலியை நீர் கேட்கும்போதெல்லாம் அந்த வேதங்களில் முறையிடப்படுகிற உம்முடைய ரக்ஷா தீக்ஷை உமக்கு நினைவுக்கு வரவில்லையா? அதை மறக்க விரகுண்டோவென்று கேளுங்கோள் என்கிறதாகவுமாம். * விடலில் வேத வொலி முழங்குந் தண்திருவண்வண்டூர் * என்ற பாசுரமும் இதற்குப் பாங்காகும்.

## இனி, மூன்றாந்தூதின் விவரணம்

* பொன்னுலகாளீரோ வென்கிற திருவாய்மொழி மூன்றாந்தூது. இதில், * தன் மன்னுநீள்கழல் மேல் தண்டுழாய் நமக்கன்றி நல்கான் * என்கிற பாசுரம் உயிரானது. * தோளிணைமேலும் நன் மார்பின் மேலும் சுடர் முடிமேலும் தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழாயுடையம்மான் * என்கிறபடியே திருத்தோள் முதலான பல அவயவங்களிலும் அவர் திருத்துழாய் அணிந்துகொள்வர்; எதை ஆர்க்குக் கொடுத்தாலும் அடிமேலணிந்து கொள்ளுமது அடியார்களுக்கேபாகையாலே, திருவடிகளில் சாத்தின திருத்துழாயை நமக்கன்றி மற்றையோர்க்குத் தந்திடமாட்டார் என்று இங்கு அறிவிக்கப்படுகிறது. ஐகரஸ்ய மென்கிற குணமிது. அதாவது, அடியார்களோடு ஏகரஸனுகை. சேஷியான தன்னுடைய ப்ரஸாதத்தை சேஷபூதர்களுக்குக் கொடுத்தே தீரவேணுமென்று கொண்டிருக்கை தான் இக்குணமாவது. இது பற்றாசாகத் தூதுவிடுகிறாரிதில். இக்குணத்தை நினைப்பூட்டவேண்டும்படி இதனை எம்பெருமான் மறந்தது எதனாலென்னில்; அக்காரணந்தன்னை ஆழ்வாரே அருளிச் செய்கிறார்—*மூன்னுலகங்களெல்லாம் படைத்த முகில் வண்ணன் கண்ணன் என்னலங்கொண்ட பிரான் தனக்கு* என்று. தன்னால் படைக்கப்பட்ட ஜகத்தின் பரப்பை ரக்ஷிக்கிற பராக்காலே அடியார்களோடு தனக்குண்டான ஐகரஸ்யத்தை மறந்து நம்மை நினையாதிருந்தானித்தனை என்று தெரிவித்தவாறு. ஆக, ஜகத்ரக்ஷணபராக்காலே மறப்பிக்கப்பட்ட ஐகரஸ்யம் பற்றாசாக விடப்பட்டது மூன்றாந்தூது என்றதாயிற்று.

## இனி நான்காந்தூதின் விவரணம்

* எங்கானலகங்கழிவாயில், *தக்கிலமே கேளீர்கள்—செக்கமலத்தலர்போலுங் கண்கைகால் செங்கனிவாய், அக்கமலத்திலைபோலுந் திருமேனியடிகளுக்கே * என்றும் * பூந்துழாய் முடியார்க்குப் பொன்னாழிக்கையாருக்கு * என்றும் ஸௌந்தரியம் பேசப்பட்டுத் தூதுவிடுகையாலே வடிவழகை யுணர்த்திவிட்ட தூது இது என்று தெரிய வருகின்றது. பிரிந்தார்க்கு ப்ராணன் கொண்டிருக்கவொண்ணாத படியான தன் வடிவழகை மறந்து நம்மை நினையாதிருந்தார் திருமூழிக்களத்தார்; இவ்வழகியவடிவைப் பிரிந்தார் தரிப்பரோ வென்று அவ்வழகையறிவித்துவிட்டால் வாராதிரார் என்று கொண்டு அதை யறிவிக்கிறபடி. தம் வடிவழகைத் தாம் அறியாரோ? இவருணர்த்தவேண்டும்படி மறந்திருக்கைக்குக் காரணமென்? என்னில் ; இதுவும் அப்பதிகத்திலேயே ஆழ்வாரால் தெரிவிக்கப்பட்டது; * தமரோடங்குறைவார்க்கு * என்பதனால்; தம்மையுகந்த பாகவதர்களோடு சேர்ந்து வாழ்கிற பெருமாளாகையாலே அந்த பாகவதர்களோடுண்டான சேர்த்தியில் இனிமையாலே தம் ஸௌந்தரியத்தை மறந்துகிடப்பதாகத் தெரிவிக்கப்பட்டது. ஆக, தமரோட்டை வாஸம் மறப்பித்த ஸௌந்தர்யத்தை யுணர்த்திவிடுவது நாலாந்தூது என்றதாயிற்று.

ஆக இவ்வளவு விஷயங்களும், " தம்பிழையுஞ் சிறந்தசெல்வமும் படைத்தபரப்பும் தமரோட்டை வாஸமும் மறப்பித்த க்ஷமா தீக்ஷா ஸாரஸ்ய ஸௌந்தர்யங்களையுணர்த்தும் வ்யூஹ விபவபரத்வத்வயார்ச்சைகள் தூதுநாலுக்கும் விஷயம் '' என்ற ஆசார்யஹ்ருதய சூர்ணையில் (156) அற்புதமாக அடங்கியிருக்குமாறு காண்க.

தூதுவிடும் பிரகரணங்களில் இரண்டு வகையான விஷயங்கள் ஆராயத்தக்கவையுண்டு; தூதுக்கு இலக்கான எம்பெருமானைப் பற்றியவைகளும், தூதனுப்பப்படுகிற பறவைகளின் விஷயங்களும். இவற்றில், எம்பெருமானைப் பற்றிய விஷயங்கள் இப்போது விவரிக்கப்பட்டன. பக்ஷிகளைப் பற்றின விஷயங்கள் உள்ளுறை பொருள் விளக்கில் அடியேனால் விவரிக்கப்பட்டுள்ளன. ... *

# ந. நி. வியாஸம்

பத்திரிகைகளில் சில விஷயங்களின் கீழே (ந. நி.) என்று பிரசுரிப்பர்கள். நமது நிருபர் என்பது அதன் பொருள். ஆப்தர்களாயிருப்பவர்கள் செய்திகளை யறிவிப்பர்கள். அதை பிராமாணிகமாகக் கொண்டு பத்திராதிபர் வெளியிடுவர். அதில் ஏதாவது மாறுபாடு இருந்து தடஸ்தர்கள் தெரிவித்தால் உடனே திருத்துவர்கள். அந்த முறையிலேயே இந்த ந. நி. வியாஸம் வெளியிடப்படுகிறது.

## "தூது நாலுக்கும் விஷயம்"

ஸ்ரீ வானமாமலை மடம், திருவல்லிக்கேணி. (28-9-'62) 8–20 *to* 9-30 *P. M.*

(1) ஆழ்வார் முதலிலே சொல்லும்போது 'மதிநலம்' என்று சொல்வதை பட்டருக்கு முன் பூர்வாசார்யர்கள் ஞானமும் பக்தியும் என்று வ்யாக்யானம் பண்ணினார்கள்; பட்டர் பக்தி ரூபமான ஞானம் என்று அர்த்தம் பண்ணினார். அப்படி எம்பெருமானிடத்தில் அருள் பெற்று சாதித்த திருவாய்மொழியை ஞானம் அநுட்டானமுள்ள ஆசார்யனிடத்திலே முறைப்படி அதிகரிக்கவேணும்; அதன்படி சொல்லவேணும் என்ற வழியை வகுத்து வைத்திருக்காள். (2) இந்தத் திருவாய்மொழியிலே ஆழ்வார் நாலிடத்திலே தூதுவிடுகிறார். இந்த நாலு தூதுகளுக்கும் இன்னது விஷயம் என்பதைத்தான் இன்று அடியேனுக்கு விஷயமாகப் போட்டிருப்பது. (3) முறைப்படி ஆசாரியரிடத்திலே கேட்ட அர்த்தங்களைச் சொல்லவேணுமென்று ஆத்திலிருந்து புறப்படுகிறதற்கு சற்று முன் 5-30 மணிக்கு வானமாமலை மடத்திலிருந்து அனுப்பப்படுவதாக ஒரு நாலு பக்கத்தில் வியாஸம் அடியேனுக்குக் கிடைத்தது. அந்த வியாஸத்தைப்பற்றி என்னுடைய அபிப்பிராயத்தை இன்று இங்கு நான் தெரிவிக்கவேணுமென்று லெடரில் கண்டிருந்தது, பாவ கர்ப்பிதமாகப்பட்டதால் இங்கு விண்ணப்பிக்கிறேன். அடியேனுக்கு அப்படி பட்டதே தவறாயிருக்கலாம். என் அபிப்பிராயத்தை இங்கே தெரிவிக்க வேணுமென்றதால் என் அபிப்பிராயம் என்னவோ அதை இங்கே சொல்லுகிறேன். (4) இந்த நாலு பக்கம் பத்திரிகையை இங்கிருந்து ஒருத்தரும் அனுப்பவில்லையென்று தெரிகிறது. யார் அனுப்பினாரென்று தெரியும். அந்த வியாஸத்திலே ஒவ்வொரு தூதுக்கும் ஸங்கதி காட்டியிருக்கிறது. பகவானுக்கு அநேக கல்யாணகுணங்கள் என்பதைச் சொல்லி அதில் ஒரு குணத்தைப்பற்றிக்கொண்டு தூதுவிடுகிறார்; அது பழுதாய்ப்போயிடுத்து. ஆகையினாலே மற்றொரு குணத்தைப் பற்றிக்கொண்டு தூதுவிடுகிறார் என்று ஹேது காட்டப்பட்டிருக்கு. (5) அந்த பங்க்திகளை அப்படியே வாசிக்கிறேன்.–"ஓரிடத்தில் தூதுவிட்டுக்காரியமாகவில்லையென்றால் மற்றோரிடத்தில் தூதுவிடுவது எதற்காக? என்றொரு கேள்வி பிறக்கும். எம்பெருமான் அனந்த கல்யாணகுணநிதியாகையாலே ஒரு குணம் பழுதுபட்டாலும் மற்றொரு குணம் பலிக்கப்பெறலாமே; அக்குணமும் விபலமானாலும் வேறொரு குணம் பயன் பெறுவிக்கத் தகுமே என்கிற நசை ஸம்பாவிதமாகையால் பலகால் தூதுவிடத் தகும்" என்பதாம், இங்கே எழுந்தருளியிருக்கிற பெரியோர்களெல்லாம் கவனிக்கவேணும். பூர்வாசார்யர்கள் இந்தமாதிரி ஸங்கதியைச் சொல்லியிருக்காளா? எம்பெருமானுடைய ஒரு குணம் பழுதாப்போயிடுத்து. அதனாலே இன்னொரு குணத்தைப்பற்றினார் தூதுவிடறார் என்னு சொல்லலாமா என்பதைப் பார்க்கவேணும். இந்த ஸங்கதி சொல்லியிருக்கவில்லை. சொல்லத் தகாது என்பதை இங்கே ஆதாரங்களோடே நிரூபணம் பண்ணுகிறேன். அதிலே ஏதாவது உபபத்தியிருந்தால் பெரியவாள் சொல்லவேணும். (6) இந்த வியாஸம் எழுதினவர் பிராமாணிகமாகச் சொல்வதானால் இந்த மாதிரி பெரியவாளுள்ள ஸதஸ்ஸுக்கு வரட்டும்; நான் நிரூபணம் பண்ணுகிறேன். அப்படியில்லை; பூர்வாசாரியாள் சொன்னபடிதான் சொல்லியிருக்கிறது சரி என்று நிரூபித்துவிட்டால், அடியேன் தெண்டனிட்டு நிற்க ஆட்சேபணையில்லை. (7) இதற்கு நான் ஒன்றும் பதில் எழுதத் தயாராயில்லை. அதற்குப் பிராமாணிகமாக பதில் எழுதுவது என்றில்லாமல் வேறுவிதத்தில் எழுதுவது என்று வரும். ஆகையினாலே நான் பதில் எழுதத் தயாராயில்லை.

(8) ஆழ்வார் 'நோற்ற நோன்பிலேன்'—என்று ஆரம்பித்து வரிசையாக நான்கு திருவாய்மொழிகளிலே சரணாகதி பண்ணினார். இதற்கு ஸங்கதி ஸ்பஷ்டமாகக் காட்டப்பட்டிருக்கிறது : அதுபோலேயில்லை இங்கே தூதுவிடுகிற இடத்திலே. 'அஞ்சிறைய மடநாராய்' என்னு முதல் பத்திலே தூதுவிடுகிறார். அப்புறம் அதற்கடுத்தபடி ஆறாம் பத்திலே "வைகல் பூங்கழிவாய்' என்ற தூது வருகிறது. அதற்கடுத்தபடி "பொன்னுலகாளீரோ" என்கிற தூது 6-ம் பத்து கடைசியிலே வருகிறது. "எங்கானலகங்கழிவாய்" என்ற நாலாந்தூது 9-ம் பத்திலே வருகிறது. சரணாகதியைப் போலே ஆழ்வார் அடுத்

தடுத்து நாலு திருவாய்மொழியிலே தூதுவிடவில்லை. சரணாகதிக்கு ஸங்கதி சொல்லச்சேயும் கூட முதலிலே "நோற்ற நோன்பிலேன்" என்று வானமாமலை யெம்பெருமானிடத்திலே சரணாகதி பண்ணுகிறார். அடுத்தபடியாக திருக்குடந்தை யாராவமுதனிடத்திலே பண்ணுகிறார். இப்படி பண்ணி யெம்பெருமான் கிட்டலே, அதுவரையில் தரித்திருக்கவேண்டியிருக்கு. உன்னுடைய குணானுபவம் பண்ணும்படியான பலம் கொடு என்று பிரார்த்திக்கிறார். அங்கேயுங்கூட எம்பெருமானைக் குறைசொல்ல வில்லை. சாஸ்திரங்களிலே சிசுபாலன் முதலானோர் விஷயத்திலே இன்ன யுகத்திலே. இன்ன இடத்திலே உனக்கு நல்ல கதி கொடுக்கிறேன் என்று நீ ஸங்கல்பித்திருக்கிறாய். அதுபோலே இங்கேயில்லாவிட்டால் திருக்குடந்தையில் கொள்வது என்று சங்கல்பமோ இப்போதில்லாமல் போனால் அப்போது என்று ஸங்கல்பமோ? என்றுதான் ஆழ்வார் அடுத்த சரணாகதியைச் செய்கிறதாக ஸங்கதியைக் காட்டியிருக்கு; தூதுகளுக்கு அந்தமாதிரி ஸங்கதியை அப்படி எந்த ஆசார்யாளாவது காட்டியிருக்காளா என்று பார்க்கணும். 'அஞ்சிறையமடநாராயிலே' தூதுவிடுகிறார்; இந்த இடத்திலே தன்னுடைய தோஷங்களை யெல்லாம் பார்த்துத்தான் எம்பெருமான் கிட்ட வில்லையென்னு நினைத்து என்னுடைய தோஷங்கள் நிறையத்தானிருக்கட்டும். இதைப்பார்த்து ஸேவை ஸாதிக்காமலிருக்கலாமா. உன்னுடைய குணங்களைக்கொண்டு அருள்புரியக்கூடாதா? அபராத ஸஹிஷ்ணுத்வம் என்ற குணமுள்ளவனாயிற்றே என்று அபராத ஸஹிஷ்ணுத்வமென்கிற குணத்தை அனுபவிக்கிறார்.

(9) அவிஜ்ஞாதா, ஸஹஸ்ராம்சு: என்று ஸஹஸ்ரநாமத்திலே இரண்டு திருநாமம். அவிஜ்ஞாதா என்றதற்கு ஆச்ரிதர்களுடைய தோஷங்களையறியாதவரென்று அர்த்தம். ஸஹஸ்ராம்சு : என்றால் எல்லாவற்றையும் அறிய வல்லவர் என்று அர்த்தம். இந்த அர்த்தங்கள் மாறிப்போச்சோ என்று இந்த திருவாய்மொழியிலே வ்யாக்யானம் பண்ணுகிறாள். எல்லாவற்றையும் அறிய வல்லவனல்ல, ஆச்ரிதர் தோஷங்களையே அறிபவன் என்றாய்விட்டாயோ என்று.

(10) இதேமாதிரி 'வைகல் பூங்கழிவாயிலே தீக்ஷா என்ற குணத்தையனுபவிக்கிறார். 'பொன்னுல' காளீரில் ஸாரஸ்யம் என்ற குணம் அனுபவிக்கப்படுகிறது. 'எங்கான லகங்கழிவாயி'லே ஸௌந்தர்யம் என்ற குணமனுபவிக்கப்படுகிறது. இந்த நான்கிலும் முறையே வியூஹம் விபவாவதாரம், பரத்வம் அந்தர்யாமி இரண்டும் சேர்த்து, அர்ச்சாவதாரம் இந்த நிலையிலே தூதுவிடுகிறார் என்பது காட்டப் பட்டது.

(11) இதனுடைய விவரணத்திற்கு நான் இப்போது போகவில்லை. இப்போது அபராதஸஹிஷ்ணுத்வம் என்ற குணம் பழுதாய்ப் போயிடுத்து ஆகையினாலே ஸாரஸ்ய குணத்தைப் பற்றினார். அதுவும் பழுதாய்ப்போயிடுத்து ஆகையினாலே ஸௌந்தர்யத்தைப்பற்றினார் என்று சொல்வது ஆழ்வார் திருவுள்ளத்துக்குச் சேருமா, பூர்வாசார்யாள் வ்யாக்யானப் போக்குக்கு ஒத்ததா என்பது விசாரம். வாஸ்தவத்திலே "அஞ்சிறைய மடநாராயிலே தூதுவிட்டார். எம்பெருமான் வந்துவிட்டான். அடுத்த திருவாய்மொழியிலே ஆச்சரியமாக அநுபவித்திருக்கிறார். சக்ரவர்த்தித் திருமகன் "தசவர்ஷ ஸஹஸ்ராணி தசவர்ஷசதானி" எழுந்தருளியிருக்கான்; போதுமே விபவாவதாரத்தை முடித்துக்கொண்டு பரமபதத்திற்கு எழுந்தருளிவிடலாமே என்று உணர்த்துகிற ஸந்தர்ப்பம் லக்ஷ்மணனுக்கு யாரையும் உள்ளேவிடக்கூடாது, விட்டால் உன்னுறவை விட்டுவிடுவேன் என்று ஸங்கல்பித்திருக்கான். துர்வாஸ மஹரிஷி வருகிறார். உள்ளே போகவேணுமென்கிறார். விட்டால் எம்பெருமான் தன்னுடைய ப்ராதா என்ற ப்ரீதியை விட்டுவிடுவான். விடாவிட்டால் மஹர்ஷி சபிப்பார். எம்பெருமானுக்கே அவத்யம் மஹர்ஷி சாபம் பலிக்கவேணுமென்று ஸங்கல்பித்தவனாகையினாலே அந்த சாபத்திற்குக் கட்டுப்பட்டிருப்பான். ஆகையினாலே துர்வாசரை விட்டுவிடுகிறார். பிறகு சக்ரவர்த்தி திருமகனிடம்...'ப்ரதிஜ்ஞாம் பரிபாலய' என்று என்னிடத்திலே ப்ரீதியைப் பார்க்காதே. உன்னுடைய ஸத்ய ஸங்கல்பமென்கிற குணத்திற்கு அவத்யம் வரக்கூடாது. ஆகையினால் உன்னுடைய ப்ரதிக்ஞையைக் காப்பாற்று. என்னை விட்டுவிட்டால் பாதகமில்லை என்று லக்ஷ்மணன் சொல்றார். இந்த இடத்திலே ஏதாவது ஒரு வ்யாஜம் வைத்து பெருமாளிடத்திலேயிருந்து விலகிவிடவேணுமென்கிற எண்ணத்தோடே சொன்னவரன்னு இளையபெருமாள். அப்பெருமாளுடைய குணத்திற்கு அவத்யம் வரக்கூடாது என்னுமதை முக்கியமாக வைத்துக்கொண்டிருக்கார் என்பது பார்க்கப்படறது. அப்படியிருக்கச்சே ஆழ்வார் ஒரு குணம் பழுதாப்போயிடுத்து ஆகையினாலே மற்றொரு குணத்தைப் பற்றுகிறேனென்னு சொல்லுகிறார் என்று சொல்வது ஒத்துக்கொள்ளக்கூடியதா என்று நீங்களே சொல்லணும்.

(12) நாலு தூதுக்கும் இந்த வ்யாஸத்திலே காட்டியிருக்கிற ஹேது பொருந்தாது என்றால், உண்மையிலே ஹேது என்ன என்று கேட்கலாம், அதற்கு ஆசாரியாள் சொல்லியிருக்கிறதைச் சொல்லுகிறேன். இந்த தூதுகளுக்குக் காரணம் ஸம்ச்லேஷ, விச்லேஷங்கள். எம்பெருமானோடே மானஸாநுபவம் பண்ணுவது ஸம்ச்லேஷம். அந்த ஸமயத்திலே பூர்ணமாக எம்பெருமானோடே அநுபவிக்கிறார். அப்போ பாஹ்யேந்த்ரியங்களாலேயும் அநுபவிக்கவேணும் என்று கண்ணைத் திறந்து பார்த்து ஸேவித்து கைகளாலே எம்பெருமான் திருவடிகளைப் பிடித்துக்கொள்ள வேணுமென்ற அநுபவங்களைச் செய்யணும் என்கிற அவா ஏற்படறது. கண்ணைத் திறந்து பார்க்கிறார். அந்த எம்பெருமான் விஷய

மாகவில்லை. இதுதான் விச்லேஷம். இதை நன்கு முதல் ச்ரிய:பதிப்படியிலே சொல்லியிருக்கு.
இந்த ஸம்ச்லேஷ விச்லேஷங்கள் மாறி மாறி வரும். விச்லேஷ தசையிலே பெண்மையையடைந்து
தூதுவிடுகிறார் என்பதுதான் ஆசாரியாள் சொல்லியிருக்கிற அர்த்தம். மணவாள மாமுனிகளும் தூது
நாலுக்கும் விஷயமான ஆசார்ய ஹ்ருதயசூர்ணிகை வ்யாக்யானத்திலே இத்தைத்தான் ஸாதிச்சிருக்கிறார்.
அந்தந்த திருவாய்மொழியை யநுபவித்துப் பார்த்தா இது நன்கு ஏற்படும். 'அஞ்சிறைய மடநாராய்'க்கு
முன்னே விச்லேஷம் என்பது ஸ்பஷ்டமாய் தெரியறது. 'வைகல் பூங் கழிவாய்'க்கு முன்னே 4-ம்
பத்து கடைசியிலேயே விச்லேஷம் ஏற்படுகிறது. ஸ்பஷ்டமா பேசியிருக்கார். 5-ம் பத்து பூராவும்
விச்லேஷம்தான். 6-ம் பத்திலே தூதுவிடுகிற வரையிலும் அதே நிலைதான். இந்த தசையிலே தவிக்
கிறார். ஸம்ஸாரிகளோடே சேருவோம் என்று பார்க்கிறார். அவர்கள் கூட்டு பிடிக்கவில்லை. அவர்
களுக்கு பரதத்வ ஞானமில்லாமையினால்தான் அவர்களப்படியிருக்கிறார்களென்று நினைத்துப் பரதத்
வோபதேசம் செய்கிறார். அது முடிந்து தாங்காதே தூது விடுகிறார் என்று ஸங்கதியைப் பார்க்கலாம்.
இதேமாதிரி பொன்னுலகாளீருக்கு முன்னால் விச்லேஷ தசைதான். (13) ஆக ஆழ்வாருடைய திருவுள்
ளமும், அதை விளக்கின பூர்வாசார்யாள் வியாக்யானப் போக்கும் ஒருவிதம். இந்த வியாஸப் போக்கு
தனி. இத்தோடே நிறுத்திக்கொள்கிறேன்.

## மேலே குறித்த ந. நி. வியாஸத்தின் விமர்சம்.

நமது நிருபர் வியாஸத்தில் கண்ட உபந்யாஸம் மிகவும் அநவஸரமாகத் தோன்றியதென்பதில்
ஐயமில்லை. அன்று நடத்தவேண்டியதாகக் குறிப்பிட்டிருந்த உபந்யாஸத்தை ஒழுங்கான முறையில்
நடத்துவதற்கு வழியில்லாமற் போகவே இங்ஙனே ஒரு விரஸமான உபந்யாஸத்தை ஒரு மணி
காலம் செய்து ஏதோ பெரிய விவாதம் நேர்ந்துவிட்டதுபோல் விஷயப் போக்கை யறியாத சில ச்ரோ
தாக்களுக்கு வீணான கலக்கத்தையுண்டாக்கி, உயர்ந்த விஷயத்தை அதமபக்ஷம் நான்கு மணி காலம்
அநுபவிக்கக் கண்ட அவகாசத்தைப் பாழ்படுத்தியது மிக்க பரிதாபம். அந்த வீண்வம்பு உபந்யாஸத்
தைப் பொருள்படுத்தி நாம் ஏதும் எழுத அவசியமில்லை. ஆனால் அதில் ஸ்ரீமத் காம்பீர்யம்பொலிய

> "இதற்கு நான் ஒன்றும் பதில் எழுதத் தயாராயில்லை; அதற்குப் பிராமாணிகமாக பதில்
> எழுதுவது என்றில்லாமல் வேறு விதத்தில் எழுதுவது என்று வரும்; ஆகையினாலே
> நான் பதில் எழுதத் தயாராயில்லை"

என்று இவ்வண்ணமாகப் பல பங்க்திகள் புகுத்தப்பட்டிருப்பதாலும், க்ரந்தவாஸனையே யில்லாத
சிலரை வஞ்சித்து வீணான புத்திபேதத்தை யுண்டாக்கியிருப்பதாலும், திருவல்லிக்கேணி முதலான
விடங்களில் பிராமாணிகர்களும் மத்யஸ்தர்களுமான விவேகிகளுக்குப்பஞ்சமில்லாமையினாலும் ஒவ்வொரு
பங்க்தியையுமெடுத்து அலசியலசித் தொலைப்பதாக ஸங்கல்பித்துக் கொண்டு இதனை யெழுதுகின்றேன்.

என்னுடைய எந்த வியாஸத்தைப் பற்றி இப்போது அநாவச்யக சர்ச்சை கிளர்ந்திருக்கின்றதோ
அந்த வியாஸம் அனைவரும் வாசிக்க இத்துடன் சேர்க்கப்பட்டுள்ளது. இஃது ஏதேனும் விவாதத்திற்
காக வெளியிடப்பட்டதா? லோகாபிராமமாக வெளியிடப்பட்டதா? என்பதைக் கண்ணுடையார்
காணவேணும். இதனை ஒரு காலக்ஷேபஸதஸ்ஸில் எடுத்துக் கொண்டு வம்புப் பேச்சுக்களைப் பேசிப்
போது போக்க என்ன ப்ரஸக்தி? வாதப்ரதிவாத முறையோ கண்டன மண்டன முறையோ இதில்
எள்ளளவேனும் காணப்படுவதுண்டோ? உலகமெல்லாமறிந்து சிலவிடங்களிலுள்ள சிலர் மட்டு
மறியாத [அல்லது மறந்துபோன] ஒருண்மையை முன்னம் தெரிவிக்கிறேனிங்கு. நம்மாழ்வாருடைய
நான்கு தூதுகளைப்பற்றின இந்த வியாஸமானது இன்று நேற்று எழுதப்பட்டதன்று; நமது ஸ்ரீராமா
நுஜன் பத்ரிகையில் பன்னிரண்டு வருஷங்களுக்கு முன்பு பிரசுரம் செய்யப்பட்டு உலகம் பரவியுள்ளது;
அதாவது விக்ருதி ஸ்ரீ ஆடி மாதத்தில் (10—8—1950-ல்) 23 லக்கமுள்ள ஸ்ரீராமாநுஜனில் வெளி
வந்துள்ளது. என்னுடைய ஷஷ்ட்யப்த பூர்த்திக்கு எட்டு மாதங்களுக்கு முன்னே வெளிவந்தது.

இப்போது "இதற்கு நான் ஒன்றும் பதிலெழுதத் தயாராயில்லை" என்று தெரிவிக்கிறஸ்வாமி
சில மாதங்களுக்கு முன்பு ஒரூரில் இதே விஷயத்தை [தூதுநாலுக்கும் விஷயமென்பதை] தமக்கு
உபந்யாஸ விஷயமாகக் கொடுத்திருந்தார். அது விளம்பரப் பத்ரிகையில் வெளிவந்திருந்தது. அதைக்
கண்ட சில பெரியார்கள் 'இவ்விஷயம் ஏற்கெனவே ஸ்ரீராமாநுஜனில் வெளிவந்திருக்கின்ற' தென்பதை
ஸ்மரித்து அந்த பத்ரிகையைத் தேடியெடுத்துக் கொண்டு உபந்யாஸ ஸமயத்தில் கோஷ்டிக்குச் சென்
றார்கள். இவரும் உபந்யாஸமாரம்பித்து விட்டார். பத்ரிகையிலுள்ளதை ஒன்று தப்பாமல் அப்படி
யப்படியே பாடம் ஒப்பிப்பதுபோலவே ஒப்பித்தார். இப்போது எந்த நான்கு வரிகளைப்பற்றி இவர்
ஆட்சேபம் செய்கிறாரோ இவற்றையும் விடாமலே ஒப்பித்துவிட்டார். உபந்யாஸம் முடிந்துவிட்டது.
அப்போதே அந்த ராமாநுஜன் பத்ரிகையை அங்கிருந்த ச்ரோதாக்கள் சிலர் வாசித்துப் பார்க்க விரும்பி
வாங்கிக் கொண்டுபோய்த் திருப்பிக் கொடாததனால் பத்ரிகையை யிழந்தவர் நமக்கெழுதினார் அதில்
சில பிரதிகள் அனுப்பவேணுமென்று. [கீழே விவரித்த நிகழ்ச்சியையும் அவரே தெரிவித்திருந்தார். அது

நிற்க.] மிகவும் ஆப்தரான அவருடைய கோரிக்கையின் படி சில பிரதிகளை யெடுத்தனுப்புவோமென்று பார்க்கையில் ஆபீஸ் காபியான ஒரு பிரதி தவிர வேறொன்றும் கிடைத்திலது. அப்போது அந்த ஆப்தர்க்கு இதைத் தெரிவித்தாயிற்று. துர்லபமாய்ப் போன பழைய வியாஸங்களை மறு பதிப்புச் செய்கிறமுறையில் ஸமீப காலத்தில் மறு பதிப்புச் செய்யப்பட்டதிது. இத்துடன் சேர்ந்திருக்கிற "ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணம், எம்பெருமானும் காளிய மர்த்தனமும்" என்னுமிரண்டு வியாஸங்களும் சில வருஷங்களாகவே துர்லபமாய் விட்டன வென்பது பற்றியே இப்போது மறு பதிப்புச் செய்யப்பட்டன. நான்கு தூதுகளின் மருமம் என்கிற ப்ரகிருத வியாஸம் தமிழில் மட்டுமன்றியே நமது தெலுங்கு மாஸிக பத்திரிகையிலும் (நெ. 17ல்) வெளிவந்துள்ளது. ஸம்ஸ்கிருத பாஷையில் இன்றுதான் எழுதப்பட்டது. இது வைதிக மநோஹரா வென்கிற நமது ஸம்ஸ்கிருத மாஸ பத்திரிகையில் விரைவில் வெளிவரும். அது நிற்க, இந்தத் தூது விஷயம் ஆசார்ய ஹ்ருதயத்தில் விளங்குமதேயொழிய நாம் தொடுத்ததன்று; இதையும் வியாஸத்தின் முடிவில் எழுதியே யிருக்கின்றேன்.

இதில் பிராமாணிகர்கள் ஆக்ஷேபிக்கக் கூடிய விஷயம் ஈஷத்துமில்லை யென்பதை விரிவுக்கு அஞ்சாமல் நிரூபிக்கிறேனிதோ. பெரிய நான்கு பக்கங்கள் நிரம்பக் கொண்ட இந்த எனது வியாஸத்தில் ஒரு நாலு வரிகள் இவருடைய ஆக்ஷேபத்திற்கு விஷயமாகத் தெரிவிக்கப்படுகிறது. அதாவது, ஓரிடத்தில் தூதுவிட்டுக் காரியமாகவில்லை யென்றால் மற்றோரிடத்தில் தூதுவிடுவது ஏன்? என்றொரு கேள்வி பிறக்கு மென்று வைத்து அதற்கு ஸமாதானமாக 'ஒரு குணம் பழுது பட்டாலும் மற்றொரு குணம் பலிக்கப் பெறலாமோ? என்னும் நசை ஸம்பாவிதமாகையால் பலகால் தூதுவிடத்தகும்' என்றெழுதியிருக்கின்றேன். இங்கு இவர் என்ன அநுபபத்தி கூறுகின்றாரென்பதை விவேகிகள் மனதில் வாங்கிக் கொள்ள வேணும். பகவத் குணம் பழுதுபடுவதான பேச்சு வரலாமோ? அமோகமான பகவத் குணம் எப்படி பழுதுபடும்? என்று அட்டஹாஸம் செய்கிறாரிவர். பகவத் விஷய வாஸனையே அறியாதாரும் இங்ஙனே ஆக்ஷேபிக்க முன்வர மாட்டார்கள். சங்கைக்கும் வஸ்துஸ்திதிக்கும் யாதொரு ஸம்பந்தமும் கிடையாது. பகவத் குணங்கள் எஞ்ஞான்றும் எங்கும் பழுது படா வென்பது திண்ணம். பழுதுபட்டு விட்டதாக இங்கு யாரும் எழுதியிருக்கவில்லை. பழுதுபடுமோ வென்கிற சங்கையைக் காட்டினேனத்தனை. அந்த சங்கையைத் தடுக்க யாராலும் முடியாது. ஆழ்வார்க்கும் ஆழ்வார்போல்வாரான பக்தர்களுக்கும் எவ்வெவ்விடங்களில் எவ்வெவ்விதமான சங்கைகள் தோன்றியிருக்கின்றன வென்பதை எடுத்துரைக்கின்றேன் கேளீர். நான் காட்டுகிற சங்கை வேறு விஷயத்திலல்ல; பகவத் குணத்திலேயே. குணங்களிலேயே.

இவர் அஞ்ஜலி பண்ணி நிற்கும்படி தெரிவிக்கிறேன் கேண்மின். திருவாய் மொழி எட்டாம் பத்தின் முதற்பதிகம் தேவிமாராவார். இதற்கு ஆறாயிரப்படி முதல் ஈடுவரையிலுள்ள வியாக்கியானங்களில் என்ன அவதாரிகை; மணவாள மாமுனிகளின் நூற்றந்தாதிப் பாசுர மென்ன? ஆசார்ய ஹ்ருதய ஸ்ரீஸூக்தி என்ன? என்று சிறிது பார்க்கவேணும். (ஆறாயிரப்படி) "ஏழில் திருவாய் மொழியிலே மநோரதித்தபடி பெருமையாலே அத்யந்தம் அவஸந்நராய் எம்பெருமானுடைய ஆச்ரிதவாத்ஸல்யாதி குணங்களை அதிசங்கை பண்ணும்படி கலங்கி."—இதுவேதான் மற்றுள்ள வியாக்கியானங்களிலும் விசதமாகவுள்ளது. ஈட்டில் விசேஷ ஸ்ரீஸூக்தி காண்மின்;—"குணஜ்ஞானத்தாலே ஜீவிக்குமவர் குணங்களிலே அதிசங்கை பண்ணினால் ஜீவிக்கமாட்டாரே; இவர் தம்மை நாமிழக்க வொண்ணாது; இவரை ஸமாதானம் பண்ணும் விரகு ஏதோவென்று பார்த்து 'வாரீர்! நீர் கண்டதெல்லாவற்றிலும் அதிசங்கை பண்ணுகிறதென்?... நீர் இங்ஙனே அதிசங்கை பண்ணவேண்டா' என்று... இவருடைய அதிசங்கையைத் தீர்த்து ஸமாதானம் பண்ண ஸமாஹிதராய்" என்று. பாசுரத்திலேயே "அறிவொன்றும் சங்கிப்பன் வினையேன்" என்று அஸக்ருத் அருளிச் செய்திருப்பதே போதுமானது. அசோகவனத்தில் பிராட்டி *க்யாத: ப்ராஜ்ஞ: க்ருதஜ்ஞச் ச ஸாநுக்ரோசச் ச ராகவ:, ஸத்வ்ருத்தோ நிரநுக்ரோசச் சங்கே மத்பாக்ய ஸம்க்ஷயாத்* என்று சொல்லிப் புலம்பியதை இங்கெடுத்துக்காட்டி வியாக்கியானம் செய்தருளினது மல்லாமல் "இத் திருவாய் மொழிக்கு ஆளவந்தாரருளிச் செய்யும் ச்லோகமிது" என்று மருளிச்செய்தார் நம்பிள்ளை. பகவத் குணத்தில் அதிசங்கையென்றால் என்ன? குணம் பழுதாய்விட்டதோ வென்று நினைப்பதுதான்; வேறொன்றுமன்று. இப்படி நினைப்பதானது 'கடலிலே நீர் வற்றிற்று' என்று நினைப்பது போன்றதேயாம்; இதையறிந்து வைத்தே சங்கிக்கைக்கு அடி இன்னதென்பதைப் பிராட்டி தெரிவிக்குமிடத்து "சங்கே மத்பாக்யஸம்க்ஷயாத்" என்றாள். அதுவே தான் ஆழ்வார்பாசுரமும் *அறிவொன்றும் சங்கிப்பன் வினையேன்* என்று.

இனி திருவாய்மொழி நூற்றந்தாதிப் பாசுரம்—"தேவனுறை பதியில் சேரப் பெருமையால், மேவுமடியார் வசனும் மெய்ந்நிலையும், யாவையும் தானும் நிலையும் சங்கித்து" என்பதாம். இவையெல்லாவற்றுக்கும் சிகரமாக ஆசார்யஹ்ருதயமே கேளீர் (4-8.) "கலக்கமும் சங்கையும் அச்சமும் தீர" என்று *தேவிமாராவாரில் ஆழ்வார் கலங்கினார், சங்கித்தார், அஞ்சினார் என்று மூன்று காட்டப்பட்டுள்ளது. அவற்றுள் சங்கையை விவரித்தருளா நின்ற மணவாள மாமுனிகள் "எம்பெருமானுடைய

ஆச்ரித பாரதந்த்ர்ய மாகிற குணத்திலும் ஸர்வப்ரகாரித்வமாகிற ஸ்வரூபத்திலும் பண்ணின சங்கை'' என்று விவரித்தருளினர்.

ஸ்ரீவசந பூஷணத்தில் (366.) ''ஸ்வதோஷா நுஸந்தானம் பயஹேது; பகவத்குணா நுஸந்தானம் அபய ஹேது; பயாபயங்களிரண்டும் மாறுடில் அஜ்ஞதையேஸித்திக்கும்'' என்கிற இரண்டு சூர்ணை களினால் என்ன ஸாதித்தார்; அடுத்த சூர்ணையினால் *நலிவானின்ன மெண்ணுகின்றாய் *ஆற்றங்கரை வாழ்மரம்போலஞ்சுகின்றேன்* என்கிற பாசுரங்களுக்கு அடியென்னென்னில்?'' என்பதனால் என்னஸாதிக்கிறார்? என்பதைப் பகுத்துணர ஆற்றலுள்ளவர்கள் இந்த ஆக்ஷேபத்தைச் செய்ய முன் வருவதற்கு நியாயமேயில்லை. ஈண்டு விவரித்துரைக்கக் கேளீர். எம்பெருமானுடைய தயை, க்ஷாந்தி முதலான திருக்குணங்கள் பழுது படமாட்டா வென்பதை வற்புறுத்துவன முன்னிரண்டு சூர்ணைகள். நம்மாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் பகவத் குணம் பழுதுபட்டு விட்டதாக முடிவு செய்து கொண்டு கிலேசிக்கிறபடியை யெடுத்துக் காட்டுவது பிந்தின சூர்ணிகை. பகவத் குணம் பழுது பட்டுவிட்டதாக நினைத்துப் பேசுகை பொருந்துமோ வென்று பிள்ளை லோகாசாரியர்தாம் எழுவித்த பூர்வபக்ஷத்திற்கு என்ன பரிஹார முணர்த்தப் பட்டது? என்பதையும் தெரிந்துகொள்ளவேண்டும். ''ப்ரஜை தெருவிலே இடறித் தாய் முதுகிலே குத்துமாபோலே' என்றும், ''ப்ரஜையைக் கிணற்றின் கரையில் நின்றும்வாங்கா தொழிந்தால் தாயே தள்ளினளென்னக் கடவதிறே'' என்றும் இரண்டு லௌகிக நிதர்சனங்களைக் காட்டிப் பரிஹாரமுணர்த்தப்பட்டது. ஆசார்ய ஹ்ருதயத்திலும் காட்டுகிறோம் காண்மின்; (4-7.) ''பாத மகலகில்லாத தம்மை அகற்று மவற்றின் நடுவேயிருத்தக் கண்டு நலிவான் சுமடு தந்தாய் ஒவென்று ஸாதநபலமான ஆக்ரோசத்தோடே பழியிட்டுக் கங்குலும் பகலும் அடைவற்ற ஆர்த்தியை கோயில் திருவாசலிலே முறைகெட்ட கேள்வியாக்கித் தேற்ற வொண்ணாதபடி தோற்று'' என்பது மூலம். இங்கு மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளின் போக்யதையை என்னென்போம். நினைந்து நைந்து உள்கரைந்துருகிச் சொல்லித் தாமும் அழுது பிறரையும் அழச் செய்ய சக்தியற்றவர்கள் ''ஆழ்வார் *அகற்றநீ வைத்த மாயவல்லைம்புலன்களாமவை நன்கறிந்தனன் என்று ரொம்ப அழகாகச் சொல்றார். இங்கே பகவத் குணம் பழுது பட்டதாகப் பார்க்கப்படுகிறது. இதை மணவள மாமுனிகள் வியாக்கியானம் ஸ்பஷ்டமாய்க் காட்றது. ஆழ்வார் தம்மைக் கெடுப்பதற்காகவே எம்பெருமான் படாதபாடும் படுத்துவதாகச் சொல்லப்படுகிறது. ஆனால் இங்கு இப்படிச் சொல்ரு'' என்று இன்னது சொன்னோமென்று தாமுமறியாதே தமருமறியாதபடிக்கு எதையோ சொல்லிப் போதைப் போக்கு வாருண்டே; அதே கதை தான். வேறு கதை என்ன இருக்கு? நிற்க.

ப்ரக்ருதத்தில் ஒவ்வொருகுணத்தை நம்பி ஒவ்வொரு தூதுவிடுகின்ற ஆழ்வார் பகவத்குணம் பழுதுபட்டு விட்டதாகத் தாம் நினைக்கவுமில்லை, சொல்லவுமில்லை. அப்படி நாமும் எழுதியிருக்க வில்லை. ஸம்பாவிதமான அதிசங்கையை ப்ரஸ்தாவித்திருக்கிறோமத்தனை. இந்த சங்கை அருளிச் செயல்களில் விசேஷமாக வுண்டென்பதையும் காட்டினோம். குணம்பழுதுபடுமோ வென்கிற சங்கை மட்டுமன்றிக்கே பழுதுபட்டு விட்டதாக நிச்சயமும் ஆழ்வார்க்கு இருக்கும் படியையும் ஸ்ரீவசநபூஷண ஆசார்யஹ்ருதயங்களைக்கொண்டு சிலா சாஸனமாகக் காட்டினோம், இதற்கு மேல் இவருடைய ஆக்ஷேபம் இன்னமு முண்டாகில் உரைத்திடுக. ''பகவத் குணம் பழுது படுமோ வென்கிற சங்கை வேறிடங்களில் இருப்பது உண்மையே; தூதுவிடும் ப்ரகரணத்தில் ஆசார்ய ஸ்ரீஸூக்தி ஸித்தமாக இல்லை யாதலால் இதுதான் ஆக்ஷேபம்'' என்றால் அது அசட்டு வார்த்தையாகும். *பின்னானார் வணங்குஞ் சோதி திருமூழிக்களத்தானாய்* என்று ஆழ்வார் ஸாதித்திருக்கையாலே திருமூழிக்களமொன்று மட்டும் பின்னானார் வணங்குஞ் சோதியே யொழிய, மற்றைத் திருப்பதிகளுக்கு அது சொல்லத்தகாது என்பார் திரளிலே சேர்க்க வேண்டியதாகும்.

இது கேண்மின். தூது நாலுக்கும் விஷயம் வகுக்கின்ற ஆசார்ய ஹ்ருதய சூர்ணையில் க்ஷமை முதலான நான்கு திருக் குணங்களை எம்பெருமான் மறந்து போனதாகவும், அவற்றை ஆழ்வார் தூது முகத்தாலே நினைப்பூட்டுவதாகவும் [மூலத்திலேயே] அருளிச் செய்யப்படுகிறது. அநுதய ஸம்சய விபர்யய விஸ்ம்ருதிகளாகிற அஜ்ஞான ப்ரபேதங்களில் லவலேசமுமற்றவனான எம்பெருமான் மறந்து போனதாகச் சொல்லுவதும், அதை ஆழ்வார் நினைப்பூட்டுவதாகச் சொல்லுவதும் எங்ஙனே பொருந் தும்? என்று கேட்க ஒரு ஸதஸ்யர்க்கும் தோன்ற வில்லையே. கேட்டால் அழகாக ஸாதித்தாகு மென்பதில் ஐயமில்லை. அப்படி ஸாதிக்க வல்லவர் ''ஒரு குணம் பழுது பட்டாலும் மற்றொரு குண மாவது கார்யகரமாகலாமே யென்று நினைத்து'' என்கிற வாக்கியத்தில் தோன்றுகிற அநுபபத்தியையும் அழகாகக் களைந்தொழிக்க சக்தராவரே. இதை நன்கு குறிக்கொண்மின். பகவத் குணங்களில் ஞானம் என்பதுதான் தலையானது. பகவான் என்பதைத் திடமாக நிரூபிக்க வல்ல ஆறு திருக் குணங் களில் ஞானந்தானே முதன்மையானது. அந்த ஞானத்தின் ஸ்வரூபத்தை பட்டர் யுகபதநிசமக்ஷ:... கரதலவதசேஷம் பச்யஸி ஸ்வப்ரகாசம் ததவரணமமோகம் ஜ்ஞாநமாம்நாஸிஷு ஸ்தே என்கிற ச்லோக ரத்னத்தினால் விசதீகரித்தருளினார். ஏவம்விதமான ஞானம் மறப்புள்ளவனுக்கு ஸம்பாவிதமேயன்று. ஜ்ஞான பௌஷ்கல்ய முடையவனிடத்தில் மறப்பு தலைகாட்டாது; மறப்புள்ள

வனை புஷ்கல ஜ்ஞான னென்னப் போகாது. "ஸாமாநாதிகரண்யம் ஹி தேஜஸ் திமிரயோஃ குத:?" என்று மாக கவி சொன்ன கணக்கிலே இவையிரண்டும் ஸாமா நாதி கரண்யத்தை ஸஹிக்க: மாட்டாதவை, க்ஷமாதீக்ஷாதி குண சதுஷ்டயத்தை மறந்தா னெம்பெருமானென்ற போதே அவனுடைய ஞான மென்கிற சிறந்த குணம் பழுதுபட் டொழிந்த தென்பது தவிர வேறு என்ன சொல்லிற்றாகும்? சோதி வாய் திறந்து பணித்தருள வேணும். மற்று மொன்று கேண்மின் ;

எம்பெருமான் ஜகத்ஸ்ருஷ்டியை அடுத்தடுத்துச் செய்து வருகிற படியை யருளிச் செய்யா நின்ற ஆழ்வார் * ஊழிதோறும் தன்னுள்ளே படைத்து * என்றும், * சோம்பாது இப்பல்லுருவையெல்லாம் படர்வித்த வித்தா!* என்றும், * ஒன்றியொன்றி யுலகம் படைத்தானென்றும், * பொருளென்றிவ்வுலகம் படைத்தவன் * என்றும் இப்படி பலவாறாக அருளிச் செய்திருக்கிறார். இச்சொற்றொடர்களின் சுவைமிகுதியைக் கண்ட நம் மணவாளமாமுனிகள் ஆசார்யஹ்ருதய வியாக்கியானத்திலே [94] "பண்ணினக்ருஷிகள் தப்பினாலும் சோம்பிக் கை வாங்காதே பின்னையும் க்ருஷிதன்னையே பண்ணும் கர்ஷகனைப்போலே கல்பந்தோறும் ஸ்ருஷ்டிக்கச் செய்தே ஸபலமாகாதிருக்க முசியாதே மிகவுமொருப்பட்டு என்றேனுமொருநாள் ப்ரயோஜநப்படுமென்று க்ருபையை உகந்து ஜகத்ஸ்ருஷ்டியைப் பண்ணி" என்றருளிச் செய்துள்ளார். இந்த ஸ்ரீஸூக்தியால் ஸ்பஷ்டமாகவும் ஸுஸ்பஷ்டமாகவும் தெரிய வருவதென்னவென்றால், எம்பெருமான் ஏதோவொரு ப்ரயோஜனத்தை விரும்பி ஜகத்ஸ்ருஷ்டியைச் செய்கிறானென்றும், அந்த ப்ரயோஜனம் கைகூடாமலே பழுதுபட்டுப் போகிறதென்றும், 'இப்படியே கைகூடாமலே போய்விடுமா? என்றேனுமொருநாள் கைகூடமாட்டாதா' என்கிற நசையாலே மேன்மேலும் ஸ்ருஷ்டியை உகந்து நடத்தி வருகிறானென்றும் ஸ்பஷ்டமாகத் தெரிய வருகிறது இதிலிருந்து திடமானதொரு விஷயமென்னவென்னில், அவாப்தஸமஸ்தகாமனாகவும் ஸத்யஸங்கல்பனாகவுமோதப்பட்ட எம்பெருமானுடைய மிகச்சிறந்த அந்த குணம் பழுதுபட்டொழிந்தது என்பதேயன்றோ. "ஒரு குணம் பழுதுபட்டாலும் மற்றொரு குணம் கார்யகரமாகாதா?" என்று ஆழ்வார் எண்ணினதாக நாமெழுதியிருப்பது. ஈண்டு நாமுதாஹரித்த பல ஸ்ரீஸூக்திகளாலும், அவ்வோ குணங்கள் பழுதுபட்டு விட்டதாகவே முடிவு கட்டப்பட்டிருப்பதாகத் தேறுகிறதென்பதை உணர வல்லவர்கள் இதற்கெல்லாம் அழகாகஸாதித்தருளவேணுமென்று பிரார்த்தித்துத் தெளிவு பெறுக.

இந்த ப்ரஸங்கத்தில் ஒரு ரஹஸ்யார்த்தம் நாமெடுத்துக்காட்ட வேண்டியதாகிறது. அரும்பெரும் பொருள் கேண்மின். தத்வத்ரயத்தில்—(162) "இதுக்கு ப்ரயோஜனம் கேவலலீலை" என்னும் சூர்ணையினால் எம்பெருமான் பண்ணிப்போருகிற ஜகத்ஸ்ருஷ்டிக்கு இன்னது ப்ரயோஜனமென்று அருளிச் செய்கிற பிள்ளைலோகாசார்யர் ப்ரஹ்மஸூத்ரகாரருடைய *நப்ரயோஜநவத்த்வாத். லோகவத்து லீலா கைவல்யம்* என்கிற ஸூத்ரங்களினால் நிர்ணீதமானவர்த்தத்தையருளிச் செய்தார். அதை விசதவாக் சிகாமணிகள் அடைவுபட வியாக்கியானித் தருளிவிட்டு உடனே 'ஆனால்' என்று தொடங்கி அற்புதமாகவருளிச் செய்திருக்கும் விஷயம் கேளீர்.

> "ஆனால் * சென்று சென்றாகிலுங்கண்டு சன்மங்கழிப்பானெண்ணி ஒன்றியொன்றி யுலகம் படைத்தான் * என்றும் * உய்யவுலகு படைத்து * என்றும் * விசித்ரா தேஹஸம்பத்திரீச்வராய நிவேதிதும்...* என்றும்* மாயவன் தன்னை வணங்கவைத்த கரணமிவை* என்றும்... சேதநருடைய உஜ்ஜீவனம் ப்ரயோஜனமாக ஜகத் ஸ்ருஷ்டி பண்ணினானென்று சொல்லுகிற இவ் வசனங்களுக்கு வையர்த்த்யம் வாராதோவென்னில், வாராது. எங்ஙனேயென்னில்......"

இத்யாதிகள் அருளிச் செய்துள்ளார். இது ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளில் ஆழ்ந்தவர்களுக்கொழிய ஸம்ஸ்கிருத வேதாந்தத்தில் மட்டும் நிஷ்ணாதர்களுக்கு நிலமல்லாத விஷயம். * விசித்ரா தேஹஸம்பத்திரீச்வராய நிவேதிதும்* என்கிற ப்ரமாணம் ஸம்ஸ்க்ருதத்திலிருந்தாலும் ஸூத்ரகாரர் இதையுபஜீவித்து ஓர் அர்த்த நிர்ணயம் பண்ணினாரில்லை. *லீலா கைவல்யம்* என்று முடித்துப்போனார். அவர்க்கும் ஒரு அவத்யம் சொல்லவொண்ணாதபடி அவரையும் காக்கவேணுமென்று திருவுள்ளம் பற்றிய மணவாள மாமுனிகள் "ஆனால்" இத்யாதியான மேலே உதாஹரித்த வாக்ய ச்ரேணியில் "நினைத்தபடி செய்யவல்ல சக்திமானாகையாலே ஸகலாத்மாக்களையும் யுகபதேவ [ஏக காலத்திலேயே] முக்தராக்க வல்லவனாயிருக்கச் செய்தேயும்...ஆத்மாக்களை கருமத்தை வ்யாஜீகரித்துக் கைகழியவிட்டு சாஸ்த்ர மர்யாதையிலே வரவர அங்கீகரிப்பனென்றிருக்கிறவிது லீலாரஸேச்சையாலேயிறே" என்றருளிச்செய்து இவ்வர்த்தமும் *லீலாகைவல்யமென்றதிலேயே சொருகியிருப்பதாகக் காட்டியருளினவிது மாமுனிகளுக்கே அஸாதாரணமான மேதாப்ரதிபாவிலஸிதமத்தனை. இங்கே விவேகிகள் விவேசிக்க வேண்டிய விஷயம் ஒன்றே. ஸகலாத்மாக்களையும் யுகபதேவ முக்தராக்குவதற்கிடான சக்தியும் கருணையும் எம்பெருமானுக்கு இருக்கச் செய்தேயும் இக்குணவிசேஷங்களைத் தானே பழுதுபடச் செய்தானென்பது ஸித்தித்தே தீரும். எம்பெருமானை லீலா ரஸேச்சுவாக வைத்தபோதே பல திருக்கல்யாண குணங்கள் பழுதுபட்டொழிந்த படியையறிவதில் அருமையுண்டோ? *வைஷம்ய நைர்க்ருண்யே ந ஸாபேக்ஷத்வாத்* என்கிற ஸூத்ரத்தில் 'ஸாபேக்ஷத்வாத்' என்றதையும், *நிம்நோந்நதஞ்ச கருணஞ்ச ஜகத் விசித்ரம் கர்ம வ்யபேக்ஷ்ய ஸ்ருஜதஸ் தவ ரங்கசேஷிந்!, வைஷம்யநிர்க்ருணதயோர் ந கலு

ப்ரஸக்திஸ் தத் ப்ரஹ்மஸூத்ரஸசிவாச் ச்ருதயோ க்ருணந்தி* என்ற பட்டர் ஸ்ரீஸூக்தியையும், (தத்வத்ரயே 178) "சிலரை ஸுகிகளாகவும் சிலரை து:க்கிகளாகவும் ஸ்ருஷ்டித்தால் ஈச்வரனுக்கு வைஷம்ய நைர்க்ருண்யங்கள் வாராதோவென்னில்; கர்மமடியாகச் செய்கையாலும் மண் தின்ற ப்ரஜையை நாக்கிலே குறியிட்டு அஞ்சப்பண்ணும் மாதாவைப்போலே ஹிதபரனாய்ச் செய்கையாலும் வாராது" என்கிற பிள்ளை லோகாசார்ய ஸ்ரீஸூக்தியையும் உள்ளபடி நிர்வஹிககப் புக்கால் எம்பெருமானுடைய பலதிருக்குணங்கள் பழுதுபட்டனவாக இசைந்து தீர வேண்டியது கடமையாகும். அவன் ஹிதபரனாய்ச் செய்யுமிடத்தில் ப்ரியபரத்வைகாந்திகங்களான க்ஷமாவாத்ஸல்ய காருண்யாதிகள் பழுது பட்டுத் தீரா தொழியவழி ஏது?

பகவத் குணங்கள் பழுது படுகையாவது என்ன? என்பதை முன்னம் நிஷ்கர்ஷித்துக் கொள்ள வேணும். ஸ்வரூபாச்ரிதங்களாய் ஸ்வரூபாவிநாபூதங்களான அவை ஒருகாலும் பழுது படமாட்டா. "வ்யவஸ்தா யா சைஷா நநு வரத ஸா ஆவிஷ்க்ருதிவசாத்" என்று ஆழ்வானருளிச் செய்த கட்டளையிலே, சில திருக்குணங்கள் சில ஸமயங்களில் பிரகாசிக்கவும் சில ஸமயங்களில் அஸத்கல்பமாயிருக்கவும் ப்ராப்தமாகிறது. இத்தனையே. ஆழ்வான் திவ்யதம்பதிகளுக்கு ஸர்வஜ்ஞத்வம் பழுது படுவதாக ஒரு வார்த்தையருளிச் செய்கிறார். பிராட்டிதிறத்திலே ஒரு அஜ்ஞானத்தைக் கூறி, ஆனாலும் ஸர்வஜ்ஞத்வஹாநியில்லை யென்று ஸமர்த்திக்கிறார் *தேவி! த்வந்மஹிமாவதிர் ந ஹரிணா* என்கிற ஸ்ரீஸ்தவச்லோகத்திலே. அவர்தாமே எம்பெருமான் திறத்திலே ஒரு அஜ்ஞானத்தைக் கூறி ஸர்வஜ்ஞத்வஹாநியை இல்லை செய்ய முடியாமல் அதைத் திடப்படுத்துகிறார் (வரதராஜஸ்தவே) *உபாலம்போயம் போ: ச்ரயதி பத ஸார்வஜ்ஞ்யமபி தே யதோதோஷம் பக்தேஷு இஹ வரத! நைவாகலயஸி* என்று. இதை மறுக்கவல்லாருளரோ? இவர்தாமே எடுத்துக்காட்டின ஈட்டு ஸ்ரீஸூக்தியில் [*என்பிழையே நினைந்தருளி* என்ற விடத்து] "அவிஜ்ஞாதாவாகை தவிர்ந்து *ஸஹஸ்ராம்சு:* என்கிறபடியே இப்போது தோஷத்தில் ஸர்வஜ்ஞராயாயிற்றிருக்கிறது" என்பதில் எம்பெருமான் அஜ்ஞனாயிருக்க வேணுமென்கிற ஆசை ஆழ்வார்க்கு உள்ளதாக ஸ்பஷ்டமாய்க்காட்டப் பட்டிருக்கு. ஸர்வஜ்ஞத்வம் பழுது படவேணுமென்கிற ஆசையன்றோ ஆழ்வார்க்கு இங்கு பர்யவஸித்து நிற்கிறது. கிணறு வெட்டப்புக பூதம் புறப்பட்ட தென்கிற கதையாய் இங்ஙனே பகவத் குணப்பழுது பாடுகள் ஒன்றின்மேலொன்றாகப் புறப்பட்டுக் கொண்டேயிருக்கு மென்பதை பிராமாணிகர்கள் அறிய வேணும். இவை யெல்லாம் ரஸோக்திகளே யொழிய வேறல்ல வென்னில், வழிக்கு வந்து சேர்ந்ததாக முடிந்தது.

ஸாரமான வார்த்தை கேளீர். நானெழுதியது தவறாகவேயிருக்கட்டும். அதைப்பற்றி இவருக் கென்ன? 'அதென்ன அப்படி கேட்கிறாய்? நீ தப்பாக எழுதினால் அதை விமர்சிக்க எனக்குக் கடமையில்லையோ?' என்று கேட்பீர். ஏனில்லை? தாராளமாகவுண்டு. அன்று செய்வதாக ஏற்றுக் கொண்ட உபந்யாஸத்தை அறவே விட்டிட்டு இந்த வீண் வம்பு ப்ரஸங்கம் எதற்காக? "நான் சொல்ல வேண்டிய விஷயங்களை யெல்லாம் நீ பத்ரிகை மூலமாகப் பிரசுரம் செய்து ஸதஸ்யர்களுக்கும் விநியோகித்து அவர்களும் விஷயத்தைத் தெரிந்துகொண்டான பிறகு பிஷ்டபேஷணமும் சர்வித சர்வணமுமாக நான் பேசக் கூடியது என்ன இருக்கிறது? நான் பேசுமளவுக்கு நீ வைக்கவில்லையே; எதையோ பேசி முடிக்க வேண்டியிருந்தது; இதில் எனக்குத் தோன்றிய அநுபபத்தியைப் பேசி ஒருவாறு மணியையோட்டினேன்; ஒரு மணிக்கு மேலும் சொன்னேன்" என்பீர்.

உண்மை இதுதான். இதனை யாவரும் தெரிந்து கொண்டாயிற்று. இது மிகவும் பரிதாபமே. என்னுடைய உண்மையான பரிதாபத்தை இங்குத் தெரிவியாமலிருக்க முடியவில்லை. தெரிவிக்கிறேன். தூது நாலுக்கும் விஷயமென்றவிதில் பதின்மூன்று விஷயங்களுள்ளன. பரத்வாதிகள் ஐந்து; பிழை, சிறந்த செல்வம், படைத்த பரப்பு, உத்தம ரோட்டைவாஸம் என்பவை நான்கு. க்ஷமை தீக்ஷை ஸாரஸ்யம் ஸௌந்தர்யம் என்பவை நான்கு. ஆக பதின்மூன்று விஷயங்களைப் பற்றிப் பேசப் புகுந்தால் கொள்ளமாளாவின்பவெள்ளமாக *ஆண்டுகள் நாள் திங்களாய்* என்ற கணக்கிலே எத்தனையோ காலம் பேசலாமே, முக்கியமாக க்ஷமை முதலிய நான்கு திருக்குணங்களை மட்டும் பற்றிக் கொண்டு, என் பத்ரிகையில் அடியோடு தொடாத விஷயங்களைத் தாழாதே சார்ங்க முதைத்த சரமழை போல் பெய்து ஸபையைக் கிடுகிடாய்க்கச் செய்திருக்கலாமே. நான் எக்கேடு கெட்டாலென்ன? என்னுடைய நான்கு பக்கப் பத்ரிகை எத்தனை குற்றம் மலிந்திருந்தால்தானென்ன? நான்கு பக்கங்களுள் நான்கு வரிகளில் மட்டுந்தானே இவருக்கு ஆசங்கை. அதையெடுத்து "இது பூர்வாசார்ய வியாக்கியானங்களில் காணாத விஷயமாகையாலே அநாதரணீயம்" என்று ஒரு பேச்சுப் பேசி முடித்துவிட்டு, ப்ராப்தமான உபந்யாஸத்தை ஒழுங்காக நடத்திப் பரிசு பெற்றிருக்கலாமேயிவர். இங்ஙனே சொல்லாதாருண்டோ? உபந்யாஸத்தை அழகாக முடித்துவிட்டு முடிவில் இந்த ப்ரஸங்கத்தையெடுத்துக் கொண்டு கிள்ளிக்களைந்திருக்கலாமே. அப்போது ஸதஸ்யர்களுக்கு எவ்வளவு ஆனந்தமாக இருந்திருக்கும்! "இன்றைய உபந்யாஸம் அத்விதீயம்" என்று பலரும் மெச்சியிருப்பார்களே. இந்த மெச்சுதலை அநியாயமாக இழந்தது வருந்தத் தக்கதேயன்றோ.





ஹ்ருஷீகேசத்தில் ஸ்ரீலஸ்ரீ. சிவானந்த ஸரஸ்வதீஸ்வாமிகள் ஜகதாசார்யருக்கு வ்யாக்யாநவாசஸ்பதி பிருதபத்ரிகை யளிக்கும் காட்சி. *(5-11-1960.) 10-P. M.*

**அவருடைய உபந்யாஸத்தில் வெளிவந்த விஷயங்கள் யாவும் ப்ரக்ருதத்திற்கு உபயோகமற்றவை யென்பதையும் பூருவாசாரியர்களின் திருவுள்ளக் கருத்தை இறையுமறியாமையினு லென்பதையும் இனி மூதலிக்கிறேன்.**

ந. நி. வியாஸத்தில் கண்ட உபந்யாஸத்தை அதில் 1, 2, 3... என்று வரிசையாக லக்கங்கள் இட்டிருக்கிறவடைவிலேயே உதறித் தள்ளுகிறேன் காண்மின். (1) மதி நலம் என்பதற்குப் பூருவர்களின் நிர்வாஹத்தையும் பட்டர் நிர்வாஹத்தையும் இங்கே எடுத்துக்காட்டினது அவகாசத்தை வீண் படுத்திக் கொண்ட சுஷ்கவாக் ப்ரபஞ்ச மத்தனே. சென்னையில் கீர்த்திமூர்த்தியான ப்ரபல அட்வொகேட் ஸ்ரீ T. R. ராமச்சந்திரய்யர் என்பவர் ஸுப்ரஸித்தர். இவர் காஞ்சீபுரம் தென்னுசார்யதர்சன வக்கீலாக வுமிருந்தவர். பரம ஆஸ்திகர். இவர் தார்மிக உபந்யாஸங்களும் செய்வதுண்டு. ஒருகால் இவர் தேவப் பெருமானை ஸேவிக்கக் காஞ்சீபுரம் வந்திருந்தார். அங்கே ஆப்தர்கள் இம் மஹானை ஓர் உபந்யாஸஞ் செய்ய வேண்டினர். அதற்கிணங்கி உபந்யாஸஞ் செய்கையில் அவர் தம்மைப்பற்றி ஒரு நிகழ்ச்சி தெரிவித்தார். அதாவது, தாம் ஒரு பெரிய வழக்கில் வாதிக்க இசைந்திருந்தாராம். அந்த வழக்கு ஒரு நாள் பதினெட்டாவது கேஸாகப் போட்டிருந்ததாம். இன்று இது இயரிங்குக்கு வராதென்று எண்ணித் தாம் கட்டு பாராமலேயிருந்து விட்டாராம். ஜட்ஜ் மற்ற வழக்குகளை ஒருவாறு முடித்திட்டுப் பிற்பகலில் இந்த வழக்கை யெடுத்துக் கொண்டாராம். இவர்தாம் கட்டுபாராமையினாலே ஒன்றும் பேச முடியாமல், வழக்கை ஒத்திப் போடக் கேட்கவும் முடியாமல் ஓர் உபாயம் செய்தாராம்;— அந்த வழக்கில் தாம் ப்ரதிவாதி தரப்பில் வக்கீலாக இருந்தாராம். ப்ரதிவாதிகள் இருபது நபர்களாம். இவர்தாம் ஆர்க்யுமெண்டு செய்ய ஆரம்பித்து ஒவ்வொரு ப்ரதிவாதியின் பெயரை வாசிப்பது, அவர் தகப்பனுர் பெயரை வாசிப்பது, வீட்டுக் கதவிலக்கம் சொல்லுவது, அவருடைய ஸ்திரசர ஆஸ்திகளைப் பற்றி விவரிப்பது... இப்படியாக மணிக் கணக்கில் பேசி வந்தாராம். ஜட்ஜுக்கு விஷயம் புரிந்து விட்டதாம்; தாமே வழக்கை ஒத்திப் போட்டுவிட்டு எழுந்து சென்றுராம். இது உண்மையாக நடந்ததோ அன்றோ அறியோம். ராமசந்திரய்யரவர்கள் இதை வெகு ரஸமாகப் பேசினுர். ஸதஸ்யர்கள் இதை ஓர் அதிசயமாகவே கேட்டு மகிழ்ந்தார்கள். இது நாம் நாற்பது வருஷங்களுக்கு முன்பு கேட்டதாயினும், இதைப் பொருத்தமாக ஸ்மரிக்கச் செய்யும்படியான உபந்யாஸம் இவருடையதே யென்று திண்ணமாக எண்ணலாயிற்று.

மேலே (10) என்று லக்கமிட்ட பாராவைப் பாருங்கள்—திருவாய்மொழியில் நான்கு பதிகங்களையெடுத்துக்காட்டி இவை வ்யூஹவிபவ பரத்வ அந்தர்யாமி அர்ச்சைகளில் தூதுவிட்டவை யென்று சொல்லிவிட்டு, மேலே அதை அழகாக விவரித்து ச்ரோதாக்களை ரஞ்ஜிப்பிக்க வேண்டியிருக்க, அதை விட்டு (11) "இதனுடைய விவரணத்திற்கு இப்போது நான் போகவில்லை" என்று முடித்திட்டார். ஏன் போகவில்லை? என்று கேட்க ஒருவர்க்கும் தோன்றவில்லை. யாவரும் குதூஹலத்தோடு எதிர்பார்க்கும் ப்ரதானமான விஷயத்தை அறவே விட்டிட்டுக் காடுபாய்ந்து பேசினது எதற்காகவோ? கீழே குறிப்பிட்ட ராமசந்திரய்யர் நிகழ்ச்சியில் அந்த வழக்கு அன்று இயரிங்குக்கு வராதென்கிற எண்ணமும், கட்டுபார்க்க வில்லை யென்பதும் காரணமாக விளங்கிற்று. இங்கு எது காரணமோ? நமது நூலுக்கு இந்த ஒரு கேள்விதான் சிகரமானது. இக்கேள்வி அடுத்தடுத்து வரும்.

"திருவாய்மொழியை ஞான மனுட்டான முள்ள ஆசார்யனிடத்திலே முறைப்படி அதிகரிக்க வேணும், அதன்படி சொல்ல வேணும்" என்றது யாவரும் இசையத்தக்கதே. அதை இப்போது ப்ரஸ்தாவிக்க ப்ரஸக்தியென்ன? அப்படி முறைப்படி அதிகரித்து முறைப்படி சொல்லுபவர் தாமே யென்றும், பிறர் அல்லர் என்றும் தெரிவிப்பது ப்ரக்ருதத்தில் ப்ரயோஜனமாக இருக்க வேண்டும். வேறு இருக்க ப்ரஸக்தியில்லை. இங்கு நாம் உண்மையை விவரித்தேயாக வேண்டும். இவருடைய ப்ரவசனங்களுக்கு நம்முடைய திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகை முதலான ஐந்நூறு நூல்கள் மூலாதாரமே யொழிய வேறொரு ஆசார்யோபதேசம் மூலமன்று என்பதை சபதமிட்டுரைப்போம். இவருடைய திருமாளிகையில் ஸரஸ்வதி பீடங்களில் திகழ்வது நம்முடைய நூல்களேயல்லது வேறு எந்த நூலுமல்ல என்பதையும் சபதமிட்டுரைப்பேன். 'அட இழவே!' என்று இனி அவற்றை யெடுத்து ஒளித்து வைக்க முயன்றுல் அதைத் தடுப்பாரில்லை. நம் முடைய நூல்கள் பத்தெட்டு அல்ல; 50, 60 அல்ல, 100, 200 அல்ல, 500-க்கு மேற்பட்டவை. அவையே இவர்க்கு ஜீவநாதாரம். அந்த நூல்களில் இவருடைய இயற்கையான கௌரவப்ரதிபத்தி எத்தகைத்து? என்பதை உலகம் உள்ளபடி யுணர்ந்தே யிருக்கின்றது. அதை நினைப்பூட்டுகிறேன். 6, 7 வருஷங்களுக்கு முன்பு இவர் சில அபார்த்தங்களை யெழுதி, அவற்றை நாம் மறுக்க வேண்டிய ஆவச்யகதை ஏற்பட்டு இவர் நம்மோடு ப்ரதித்வந்த்வி பாவத்தை யடைந்தாரென்பது நிற்க. அதற்குமுன் "நித்யாபிவாஞ்சித பரஸ்பரநீச பாவை:" என்றும் "ஹரிபக்த தாஸ்ய ரஸிகா: பரஸ்பரம் க்ரயவிக்ரயார்ஹதயா ஸமீக்ஷதே" என்றுமுள்ளபடி பரஸ்பரம் அக்ருத்ரிமஸௌஹார்த்தத்தின் மேலெல்லையில் இருந்தவர்களே யென்பது நிர்விவாதம். சித்தம் விஷம நிலைக்குச் செல்லாமல் ஸமநிலையிலிருந்த அக்காலத்தில் நம்முடைய நூல்களில் இவருடைய அந்தரங்கப்ரதிபத்தி எவ்விதமாக இருந்ததென்பதை தடஸ்தர்கள் எளிதாக வறிந்து கொள்ள இவருடைய அக்காலத்து வியாஸமொன்றை ஈண்டெடுத்துக் காட்டுகிறேன். நம்பிள்ளை பெரிய வாச்சான் பிள்ளைகளின் திவ்யஸூக்திகளால் உலகம் கொள்ளுமுபகாரத்தை அடியேனுடைய திவ்யார்த்த

தீபிகை முதலிய நூல்களினால் தற்கால முள்ளவர்கள் யாவரும் கொள்வதாக எழுதியுள்ளார். அந்த ஸ்ரீமுகம் உலகம் பரவியுள்ள தானாலும் நினைப்பூட்டும் முறையில் இங்கே எடுத்துக்காட்டலாகிறது.

10-3-1951 ல் ஹைகோர்ட் ஜட்ஜ் ஒருவருடைய கோரிக்கையின்படி இவரெழுதி வெளியிட்ட ஸ்ரீமுகம்

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## "ஜகதாசார்யர்"

பெரியவாச்சான் பிள்ளை அநுக்ரஹித்த ஸகல அருளிச்செயல்களின் வ்யாக்யாநங்களையும், ஸ்ரீராமாயணத்தில் பல பல ச்லோகங்களுக்கு இன்சுவையே வடிவெடுத்த வ்யாக்யானங்களையும் ஸ்தோத்ரரத்நாதி வ்யாக்யாநங்களையும் அனுபவிக்குங்கால் ஸ்ரீ வைஷ்ணவ உலகத்திற்கு இம்மஹான் செய்த மஹோபகாரங்கள் அதிப்ரஸித்தங்களென்று உபபாதித்துச் சொல்லவும் வேண்டுமோ?

மணவாள மாமுனிகள் 'வள்ளல் வடக்குத் திருவீதிப் பிள்ளை' என்று அருளிச் செய்திருக்கிறார். ஸமகாலத்திலவர்களை யொழிய, பின்புள்ளாரும் அறிந்து உஜ்ஜீவிக்கும்படி ஈடுமுப்பத்தாறாயிரம் என்னும் க்ரந்தத்தை உபகரித்த ஔதார்யத்தையே புகழ்ந்து வள்ளல் என்றும், ஆழ்வார் ஊருநாடு முலகமும் தம்மைப் போலிருக்கும்படி திருவாய்மொழிபாடினாற்போல் இவர் நாடறிய ஈடுநன்குரைத்தது என்றும் கொண்டாடுகிறார்.

இவ்வாறு தாமும், தமக்கு நயநத்வயமான சிஷ்யர்கள் முகமாகவும் ஸ்ரீ வைஷ்ணவ உலகத்திற்குப் பரமோபகாரத்தைச் செய்தருளிய ஜகதாசார்யரான நம்பிள்ளையின் திருவவதாரமே ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதிபதியா யெழுந்தருளியிருக்கிற காஞ்சீப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமி என்னும் விஷயம் உலகறிந்ததேயாம்.

நம்பிள்ளை ஸகல சாஸ்த்ரங்களையும் வரியடைவே கற்றறிந்து அந்தப்பாண்டித்யம் முழுவதையும் அருளிச் செயலுபந்யாஸங்களிலே உபயோகப்படுத்தி வந்தவர் என்பது ப்ரஸித்தம். பெரியவாச்சான் பிள்ளை வடக்குத் திருவீதிப் பிள்ளை ஆகிய இம்மஹான்களின் அருளிச்செயல் வ்யாக்யாநங்களிலே ஸகல சாஸ்த்ரார்த்தங்களையும் நாமனுபவிக்கிறோம்.

நம் ப்ரதிவாதிபயங்கரம் ஸ்வாமி உபந்யாஸங்களிலும், பெரியவாச்சான் பிள்ளையைப் போலவே உபகரித்த திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகை என்னும் அருளிச்செயல் வ்யாக்யானங்களிலும் பஞ்சஸ்தவம் முதலான ஸ்தோத்ர வ்யாக்யானங்களிலும் ஸகல சாஸ்த்ரார்த்தங்களையும் ப்ரத்யக்ஷமாக அனுபவிக்கும்படி பாக்யம் பெற்றுள்ள நமக்கு ஸ்ரீ ஸ்வாமியின் அவதாரத் தன்மை ப்ரத்யக்ஷஸித்தம்.

ஸ்ரீ ஸ்வாமி இவ்வுலகில் எண்ணிறந்த ஷஷ்டி அப்தபூர்த்தி மஹோத்ஸவங்களைக் கண்டருளி ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீயை ப்ரவசன முகங்களாலும் க்ரந்த முகங்களாலும் ஓங்கித் தழைக்கச்செய்து எழுந்தருளியிருக்க ஸ்ரீ பார்த்தஸாரதி அருள்க.

**வெங்கடாசாரி**, காரப்பங்காடு. 10-3-1951.

இங்ஙனே இவரெழுதியுள்ளாரென்பதை யெடுத்துக் காட்டுவதனால் நமக்கொரு புதிய பெருமை விளையப்போகிறதில்லை. உலகம் போற்றும் புகழாளரான பல பல பெருமக்கள் எழுதிப் பிரசுரம் செய்திருப்பவற்றுள் இஃது ஏகதேசமல்லவா? உண்மையில் * நீசனேன் நிறையொன்றுமிலேன் * என்று அந்தக்கரண ஸாக்ஷிகமாக அநுஸந்தித்திருக்கு மடியேன் இத்தகைய புகழுரைகளை எதிர்பார்ப்பவனுமல்லேன்; இவற்றால் ஒரு பெருமையடைபவனுமல்லேன். இவருடைய உண்மையான சித்தவ்ருத்தி எத்தகைத்து? இப்போதைய மாத்ஸர்ய நிபந்தனமான சொல்வகை எத்தகைத்து? என்பதை நம்மவர்கள் தெரிந்துகொள்வதற்காகவே இஃது இங்கு எடுத்துக் காட்டப்பட்டது. அடியேனை பூஷிப்பதோ தூஷிப்பதோ இரண்டுக்கும் இவர் அதிகாரியல்லர் என்பதே தத்வவித்துக்களின் பேச்சு.

உலகில் ஏதோ தாக்ஷிண்யத்திற்காகவும் ஸௌஜந்யத்திற்காகவும் புகழுரைகள் எழுதித்தர வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுவதுண்டு. அதனால் அப்படி யெழுதவேண்டியதாயிற்று என்று சொல்லலாம். அதற்குச் சேர எப்படி எழுதவேண்டுமென்றால்,

> இவரை நான் நன்றாக அறிவேன்; நல்ல ஞானி, நல்ல விவேகி உலகத்திற்காக உழைப்பவர். ஆங்காங்கு உபந்யாசங்கள் செய்து வருகிறார். காஞ்சியில் பாடசாலையொன்று நடத்தி வருகிறார். நம்பிள்ளை ஸன்னிதியும் ஏற்படுத்தியிருக்கிறார். மிகவும் குணசாலி. இவர் நீடூழி வாழவேண்டும்.

என்று இந்த வகையிலே யெழுதியிருக்கவேண்டும். இப்படியெழுத இவர் மனம் இசையவில்லை. எழுதத் தொடங்கும்போதே பெரியவாச்சான்பிள்ளையின் மஹோபகாரத்தை ப்ரஸ்தாவித்தார். உடனே வடக்குத் திருவீதிப்பிள்ளையும் நம்பிள்ளையும் செய்தருளின உபகாரங்களை விவரித்தார். "அந்த ஜகதாசாரியரே இந்த ஜகதாசார்யர் என்பது நமக்கு ஸ்பஷ்டமாகத் தெரியவருகிறது" என்றார். உண்மையாக

நெஞ்சிலேயிருந்த கனிவுதானே இங்ஙனமெழுதச் செய்தது. கனிவுமட்டுமன்று; நம்முடைய நூல்களினு லடைந்த மஹோபகாரத்தின் க்ருதஜ்ஞதாதிசயமுமாகும். "பவிஷ்யத்தில் இப்படியாகுமென்று தெரியாமற் போயிற்றே'' யென்று இப்போது மிகவும் அநுசயிப்பர், சில தேவதைகள் சிலர்க்குத் தலைகால் தெரியாமல் வரங்களைக் கொடுத்துவிட்டுப் பிறகு கிலேசிப்பதுண்டு. அங்கு அவரவர்கள் கோரமாகச் செய்த தவங்களை ஹேதுவாகச் சொல்ல இடமுள்ளது. இங்கு யாரும் தவஞ்செய்ததில்லை. "மாமாரதய கேசவ!'' என்று ஒரு தெய்வம் கேட்டுக்கொண்டதுபோல நாம் கோரினதுமில்லை. தாமுகந்து எழுதின தத்தனையன்றோ. அதற்குத் தக வர்த்திக்கவேணு மென்பதறிந்திலரந்தோ!

ந. ஸி. வியாஸத்தில் கண்ட இவரது உபந்யாஸத்தின் முடிவில் இவர் பேசியுள்ளதாவது, "ஆழ்வாருடைய திருவுள்ளமும் அதை விளக்கின பூர்வாசார்யாள் வியாக்யானப் போக்கும் ஒருவிதம்; இந்த வியாஸப் போக்கு தனி; (இத்தோடே நிறுத்திக்கொள்ளுகிறேன்)'' என்று. ஆழ்வார் திருவுள்ள மின்னது, பூர்வாசாரியர்களின் வியாக்யானப் போக்கு இத்தகைத்து என்று ஆழ்ந்து அறியவல்லார் பேசவேண்டியதை இவரா பேசிவிடுவது! *இதனில் மிக்கோரயர்வுண்டே! *லவணவணிஜ: கர்ப்பூரோத்கம் கிமித்யபிமந்வதே? என்கிற யதிராஜஸப்ததி ஸூக்திதான் இங்கு நமக்கு நினைவுக்கு வருவது

ஒரு நிகழ்ச்சி கேண்மின். சில வருடங்களுக்கு முன்பு இவரைச் சிலர் ஞானஸார ப்ரமேயஸாரங்களின் பொருளுரைக்கும்படி கேட்டுக்கொண்டார்கள். அப்பிரபந்தங்களுக்குப் பிள்ளை லோகஞ்சீயருரையேயுள்ளது. அதனால் இவருக்குத் திருப்தி ஏற்படாமற் போகவே "இவற்றுக்கு ஸ்வாமியின் வியாக்கியானம் அச்சாகியிருக்கிறதோ'' வென்று கண்ணால் கண்டவர்களையெல்லாம் கேட்டுக்கொண்டு அலைந்தார் பாவம்! அப்போது அவற்றுக்கு அடியேனுடைய வியாக்கியானம் வெளிவராமல்தானிருந்தது. அப்போது பலரும் அடியேனிடம் வந்து "அலைகிறாரே பாவம்! அதை வெளியிடக்கூடாதா?'' என்று சொல்லிக்கொள்ள, உடனே (ஒரு வாரத்தில்) அதை வெளியிட்டேன். இதை இப்போதாக நான் கற்பனையாக எழுதிக்கொள்ளுகிறேனல்லேன்; 27—8—59ல் வெளியிட்ட ஸ்ரீவேங்கடார்யசதகத்தின் முன்னுரையில் (பக்கம் 4-ல்) இதனை உலகமறிய வெளியிட்டிருக்கிறேன். அவ்விடத்துப் பங்க்திகள்.

"ஞானஸார ப்ரமேயஸார வியாக்கியான ப்ரஸ்தாவம்

உண்மையாக வொருவிஜ்ஞாபனம். வாஸ்தவமாய் அடியேன் வியாக்கியானங்களும் உபந்யாஸங்களுமெழுதிவெளியிடுவது இந்த ஸ்வாமிபோன்ற அதிகாரிகளுக்காகவேயன்றி வேறில்லை. நாலைந்து வருடங்களுக்கு முன்பு ஒரு சாரிடியில் இவரை ஞானஸாரம் ப்ரமேயஸாரம் சொல்லும்படி கோரினர்களாம். அப்போது அவ்விரண்டு நூல்களுக்கு அடியேன் வியாக்கியானமெழுதியிருக்கவில்லை. அதனால் இவர்க்கு மிகவும் சிரமம் ஏற்பட்டு "இதற்கு அவர் எழுதவில்லையோ?'' என்று கண்டபேர்களையும் கேட்டுக்கொண்டிருந்தாராம். பலர் அடியேனிடம் வந்து "இப்படி அலைகிறாரே; எழுதி வெளியிடக்கூடாதா?'' என்றார்கள். முன்னமே எழுதியிருக்க வேண்டியதுதான்; இதோ ஆகிறது'' என்று சொல்லி அடுத்த வாரத்திலேயே அவருடைய கவலை தீரும்படி அவ்விரண்டு நூல்களுக்கும் உரையெழுதி அச்சிட்டு வெளியிட்டேன்; அவர்க்கும் அனுப்பினேன். இவற்றால் பொதுவாக உலகுக்கு உபகாரம் செய்கிறோமென்று அடியேன் நினைப்பதில்லை. இவரைப்போன்ற ப்ரவசநகர்த்தாக்களுக்கு உபகாரம்—மஹோபகாரம் செய்து வருவதாகவே மகிழ்ந்துவருகிறேன். இவ்வுபகாரம் இவரிடத்திலும் இவர்போல்வாரிடத்திலும் விசேஷித்து ஸபலமாகிறதென்றால் இதனால் அடியேனுக்கு எவ்வளவானந்தமென்பதை அந்தர்யாமியேயறிவன்.''

அன்பர்காள்! ஸ்ரீவேங்கடார்யசதகத்தின் ப்ரஸ்தாவம் வந்துவிட்டபடியால் (இது மூன்று வருடங்களுக்கு முன்பு எழுதி வெளியிட்டது.) அதன் முன்னுரையில் வெளியிட்டுள்ள இதையும் காட்ட வேண்டியதாகிறது;

"நாவல்பாக்கம் பண்டித ராமாநுஜாசார்ய ப்ரேமலேகம்

10. ஸ்ரீபெரும்பூதூர் ஸம்ஸ்க்ருத காலேஜில் ந்யாயோபாத்யாயராகவிருந்து விச்ராந்தராயிருக்கின்ற ஸ்ரீ உ.வே. நாவல்பாக்கம் க்ருஷ்ணஸ்வாமி தாதாசார்யருடைய திருக்குமாரர் ஸ்ரீராமாநுஜாசார்யரென்பவர் நல்ல பண்டிதர்; சிறந்த விவேகி. சென்னை அரசாங்க லைப்ரெரியில் பண்டிதராக விருந்தவிவர் சில வருடங்களாகப் பூனா நகரத்து லைப்ரெரியில் உயர்ந்த பதவியில் இருந்து வருகிறார். இவர் சென்னையிலிருந்த காலத்தில் ஆங்காங்கு நடக்கும் உபந்யாஸங்களுக்குப் போவராம். [இவர் அப்போது எனக்கு ஸம்ஸ்க்ருத பாஷையில் எழுதிய கடிதத்திலிருந்தே இது எழுதுகிறேன். இவருடைய கடிதங்கள் பல கிடைப்பதுண்டு. ஒவ்வொன்றும் அக்ருத்ரிமமாயும் ஹார்தபக்தி ப்ரதிபிகையாயுமிருக்கும். இவருடைய ஒரு கடிதத்திலுள்ள விஷயமிது:—

"அடியேன் விராமமுள்ள காலங்களில் ஆங்காங்கு நடக்கும் உபந்யாஸங்களுக்குப் போவேன். ஒவ்வொருவரும் தேவரீருடைய புத்தகங்களையே உபயோகப்படுத்திக்கொள்வதை நன்றாகவறிந்தேன். அப்படி அடியேனும் உபயோகப்படுத்திக்கொள்ள விரும்பியே இந்த

விண்ணப்பமெழுதுகிறேன். தேவரீருடைய பத்திரிகைகளோ க்ரந்தங்களோ எல்லாம் அடியேனுக்கு நியமேந கிடைத்து வரும்படி அநுக்ரஹிக்கப் பிரார்த்திக்கிறேன்.'' என்பது''

இந்த ப்ரேமலேகம் அச்சாகி வெளிவந்ததும் இதைக்கண்ட அந்த பண்டிதர் நமக்கு எழுதியிருந்த தாவது—''தேவரீருடைய ஸ்ரீகோசம் அடியேனை *யதார்த்தவாதி பஹுஜநத்வேஷீ * என்னும்படி யாக்கிவிட்டாலும் அடியேன் அந்தரங்கஸாக்ஷ்யத்தை அபலபியாதவனென்பதுபற்றிப் பல மஹான் களுக்கு உகப்பு ஏற்பட்டிருப்பதனுல் அடியேன் அதையே பரம புருஷார்த்தமாகக் கொண்டு மகிழ் கிறேன்'' என்று. அந்த பண்டிதர் இற்றைக்கும் பூனாநகரத்திலேயே அந்த பதவியிலேயே முன்னேற்ற மடைந்து திகழ்கின்றார். நிற்க.

அடியேனுடைய உபந்யாஸ வெளியீடுகள் பலவற்றில் தலைமேல் ''உபந்யாஸகஸௌபாக்யம்'' என்றும், ''உபந்யாஸகர்களின் மஹோபகாரார்த்தமாக வெளியிடும் பிரசுரங்களில்......செ.'' என்றும் வெளியிட்டு வருவது வழக்கம். அதை அயுக்தமாக இதுகாறும் யாரும் கொள்ளவில்லை. இவரும் இவர் போல்வாரும் இங்ஙனே பிரசுரங்கள் வெளியிட்டுக் கொண்டால் எம்போல்வார் ஆமோதிப்பவர்களே யொழிய ஆக்ஷேபிக்கவோ வருந்தவோ ப்ரஸக்தியேயிராது. நான்கு தூதுகளின் மருமம் என்கிற ப்ரக்ருதவ்யாஸமும் ''உபந்யாஸகர்களுக்கு உபகாரகமான வெளியீடுகளில் செ. 39.'' என்கிற மகுடம் புனைந்தே வெளிவந்துள்ளது. உபந்யாஸகாநாம் உபகார நிஷ்ணுதனை அடியேன் செய்யவேண்டிய கடமையைச் செய்தேன். அதாவது, 27—9—62ல் அடியேனுடைய உபந்யாஸம் (ஸ்ரீ வானமாமலை மடத்தில்) நடந்தபோதே இப்பத்ரிகையைப் பிரசுரம் செய்தேன். மறுநாளும் பிரசுரம் செய்வித்தேன். இவர்க்குத் தபால்மூலமாக அனுப்பியது நாமல்ல; இதைப்பற்றி ஸபையில் அபிப்ராயம் தெரிவிக்க வேணுமென்று நாம் கேட்டுக்கொள்ள ப்ரஸக்திலேசமுமில்லை. விஷயத்தைவிட்டு விலகி வம்புப்பேச்சுக் களால் காலயாபனம் செய்துபோகைக்காக இவரே யிட்டுக்கொண்ட அவதாரிகையிது என்பதை அறியாதாரில்லை. 'நம்முடைய உபந்யாஸத்திற்கு இவனென்ன உபகாரம் செய்வது!' என்கிற சித்த விகாரமே இத்தனை பாரதத்திற்கு பீஜமாயிற்று. அந்த நமது (4 பக்கம்) பத்ரிகையில் தொடாத பல பலவிஷயங்களைச் சொல்லி ஸபையை ரஞ்ஜிப்பித்திருக்கலாம். அதற்குச் சரக்கில்லாத குறைக்கு அந்தோ! நாம் என் செய்வது!

ஆழ்வார் பலகால் தூதுவிடுவதற்கு ஹேதுவை நாம் தெரிவித்திருக்கிறவிதம் பூர்வா சார்ய ஸ்ரீஸூக்திவிருத்தம்—என்று இவர் பேசியதைப்பற்றி நாம் பலபல உணர்த்த வேண்டியதுண்டு. சில வுணர்த்துகிறோம். பூருவா சாரியர்கள் ஸாதித்திருப்பதை மறுத்து 'அது துஷ்டம்' என்று தோற்றும்படி யெழுதினுல் அதைப் பூர்வா சார்யஸூக்தி விருத்த மென்னலாமே யொழிய, அவர்கள் எழுதியருளாத விஷயங்களை சாஸ்த்ரவிரோத மின்றிக்கே யெழுதினுல் அதைப் பூர்வாசார்யஸூக்தி விருத்த மென்பது தவறு. * தம் பெரிய போதமுடன்* என்று மணவாளமாமுனிகளால் மருமமாக விசேஷிக்கப் பெற்ற வாதிகேஸரி ஜீயர்பால் இக்குற்ற மேறும். ''இது காலமயக்குத்துறை'' என்று நம்பிள்ளையருளிச் செய்து வைக்க, ''அக்காலங் கொலோ புயற்காலங்கொலோ வென்கையாலே இது கால மயக்குத் துறையன்று'' என்று மறுத்தெழுதி வைக்கிற ஸாஹஸிகர் அந்த ஜீயர் ஒருவரேயாவர். இங்ஙனே பல பல விடங்கள் எடுத்துக்காட்டியிருக்கிறேன் திவ்யார்த்த தீபிகாதிகளில். திருவாய் மொழியில் * பொருளென்றிவ்வுலகம் படைத்தவன் * என்ற விடத்து ''ஸம்ஸாரிகளான வாத்மாக்களினுடைய ஸம்ருத்தியே நமக்கு ப்ரயோஜனமென்று பார்த்து'' என்பது ஆறுயிரப்படி. நஞ்சீயரும் நம் பிள்ளையும் மணவாளமா முனிகளும் ''பலகால் ஸ்ருஷ்டிக்க விததமாகா நின்றாலும் என்றேனுமொரு நாள் ப்ரயோஜ நப்படு மென்று கருதி'' என்றருளிச் செய்கிறார்கள். ''எதிராசர் பேரருளாலவதரித்த ஆறுயிரப் படிக்கு விருத்தமாக இவர்கள் எழுதிவைத்தார்கள்'' என்று இவர் தூஷிக்க வேண்டியதே.

இதில் இவர் அஞ்ஜலி செய்து நிற்கும்படியான விஷயமொன்று கேளீர். சில வருஷங்களுக்கு முன் திருப்பாவைக்கு விபுலமான ஸம்ஸ்க்ருத வியாக்யான மொன்று எழுதி வெளியிட்டிருந்தேன்; அதற்கு இவருடைய மதிப்புரை தினமணிச் சுடரில் பிரசுரமாகியுள்ளது. *கனைத்திளங்கற்றெருமை* என்கிற பாட்டுக்கும் அடுத்த * புள்ளின்வாய் கீண்டான் பாசுரத்திற்கும் பூருவாசாரியர்களொருவரும் காட்டாத ஸங்கதியை நாம் விபுலமாகக்காட்டியிருக்கிறோமென்று அதை மிகமிகமெச்சி அவரெழுதிய தாவது,

> ''...வருமாறு அவதாரிகை அருளிச்செய்திருக்கிறார்கள். ''நம் கண்ணுண்டாகில் தானே வருகிறானென்று கிடக்கிறாளொருத்தியை எழுப்புகிறாள்'';—''மனத்துக்கினியானைப் பாடவும் என்று இவள் சொன்ன பாசுரத்தை அசல் மாளிகையிலே கிடப்பாளொரு பெண் பிள்ளை கேட்டு, நம் அபராதம் தீர இவர்களுக்கு வார்த்தை சொல்லுவோமென்று இங்கு ராமவிருத்தாந்தம் சொன்னாருண்டோ? என்ன, ''ராம விருத்தாந்தமும் சொன்னோம்; க்ருஷ்ண விருத்தாந்தமும் சொன்னோம்'' என்கிறார்கள். ஜநங்யாசாரியரும் இக்கருத்தையே தமது வியாக்யானத்தில் இங்கு வெளியிட்டிருக்கிறார். இங்கு அண்ணங்கராசாரிய ஸ்வாமியின் வியாக்கியானம் வெகு ரஸமாயும் விரிவாயும் அமைந்துள்ளது. அதன் சுருக்கம்: 'கனைத்திளங்கற் றெருமை' என்பது கீழ்ப்பாசுரம். அங்கு ஸ்ரீகிருஷ்ணன் பாடப்படாமல் ஸ்ரீராமன் மட்டும் 'மனத்துக் கினியான்' என்று போற்றப்பட்டுள்ளான். இதனுல் கோகுலத்தில் கோபிகை

களுக்குள் பெரிய கலகம் நேர்ந்தது; கிருஷ்ணனை விட ராமன் மனத்துக் கினியானோ? நம் தேவதையை விட்டு மற்றொரு தேவதையைப் பாடினால் குற்றமாகாதோ? என்று. இச்சமயத்தில் ஸ்ரீராமன் ஸ்ரீக்ருஷ்ணன் இவ்விருவருடையவும் உண்மையை உணர்ந்த ஒரு கோபிகை 'ராமன் யார்? கிருஷ்ணன் யார்? இருவரும் ஒருவர் தானே?' என்று ஆதாரங் காட்டிச்சொல்ல மற்ற கோபிகைகளும் கலக்கந்திர்ந்து அதற்கிசைந்தவர்களாய் இரு வகுப்பினராய்ப் பிரிந்து கிருஷ்ண சரிதத்தையும் ராம சரிதத்தையும் இப்பாசுரத்தில் சேர்த்துப் பாடுகிறார்கள். என்று. இவ்விஷயம் ரஸிகர்களுக்கு வெகு ரஸமானது என்பது கூறுமலேயே விளங்கும். ஸம்ஸ்க்ருத பாஷா பரிசயம் பெற்றுள்ளவர்களுக்கு இந்த வியாக்யானம் மிகவும் பயன்படும்.

காரப்பங்காடு—வெங்கடாச்சாரியார்.'' என்று.

ஒரு பூருவா சாரியரும் ஸாதிருத்தருளாத ஸங்கதியை நாம் இட்டிருப்பதாக விவரித்து விட்டார். உடனே இவர் என்ன எழுத வேண்டும்? 'இவர் தாந்தோன்றியாக வொரு ஸங்கதி வைக்கிறார்' என்று எழுத வேண்டும். அல்லது 'பூருவர்களின் ஸங்கதி ஒரு விதம்; இவர் இடுகிற ஸங்கதி ஒரு விதம் என்றெழுதியிருக்கலாம். "இங்கு...ஸ்வாமியின் வியாக்கியானம் வெகு ரஸமாயும் விரிவாயும் அமைந்துள்ளது'' என்று உபக்ரமத்திலும், ''இவ்விஷயம் ரஸிகர்களுக்கு வெகு ரஸமானது என்பது கூறுமலே விளங்கும்'' என்று உபஸம்ஹாரத்திலும் எழுதியுள்ளார். அப்போதிருந்த மனப்பான்மையும் இப்போதைய மனப்பான்மையும்' அத்யந்த வைஷம்யங்கொண்டதென்பது கூறுமலே விளங்குமல்லவா? நமது திருப்பாவை ஸம்ஸ்க்ருதவியாக்கியானத்தில் வெகு ரஸமிருப்பதாகக்கண்டு சுவைத்து வெளியிட்டவிவர், இப்போது தம்மை அரஸிகராக உலகம் க்ரஹிக்கும்படி நடந்து கொண்டது அலுப்த மூர்த்தந்யலிபிக்ரமத்வாத் என்பது தவிர வேறொன்றும் நானறியேன். ஒரே வார்த்தை; இவர் பேனாவைப் பிடித்து எழுதியது அதிஸ்வல்பம். அதை இரண்டு வகுப்பாகப் பிரிக்கலாம். ஸஹ்ருதயமான ப்ராவண்யத்தோடு அடியேனுடைய உக்திகளைப் புகழ்ந்தெழுதியவை ஒரு வகுப்பு. பூர்வாசார்ய ஸூக்திவிருத்தமாக எழுதி அடியேனிடம் மறுப்புப் பெற்றவை மற்றொரு வகுப்பு. இவை, தயிரரவப் பாடத் திருத்த மறுப்பு, சிங்கப் பெருமாள் திருவாக்கு வெற்றி, ஜகதாசார்ய ஸூக்திஸுதாநிதி, ஸ்ரீவேங்கடார்ய சதகம் முதலான நமது பல நூல்களில் விசதம். இவை காருள்ளளவும் கடல் நீருள்ளளவும் வேத முள்ளளவும் வேதவிதனுள்ளளவும் அழியாதவையென்று பல வித்வான்கள் பேசிக் கொள்ளும் வார்த்தை. ப்ரக்ருதம் இந்த நூலை நாமெழுதிக்கொண்டிருக்கையில் யாத்ருச்சிகமாக வந்து சேர்ந்து இவற்றையெல்லாம் வாசித்துப் பார்த்தவொரு வித்வான் *ம்ருதஸ்ய தந்தசூகஸ்ய மாரணேச்சா முஹுர் முஹு: ...பரிஹாஸாய கேவலம் * என்று சொல்லிச் சென்றார்.

(3) முறைப்படி ஆசார்யரிடத்திலே கேட்ட அர்த்தங்களைச் சொல்ல வேணு மென்று திருமாளிகையிலிருந்து புறப்பட்டதாக எழுதுகிறார். இங்கே நமக்கு இரண்டு விவக்ஷிதம். 1. தாம் உத்தேசித்தபடி நிறைவேற்றிக்கொள்ள என்ன தடை ஏற்பட்டது? ஏதேனும் அபசகுனமாயிற்றோ? யாரேனும் தும்பினாருண்டோ? இந்தக் கேள்வி அடுத்தடுத்து வரும். யாரேனுமொருவர் நேரில் கேட்டு விடைபெற்று த்ருப்தியடைந்தால் போதும். "பாவகர்ப்பிதமாகப் பட்டதால் இங்கு விண்ணப்பிக்கிறேன்'' "யார் அனுப்பினாரென்று தெரியும்'' இத்யாதிவார்த்தைகளையிட்டுக் காடு பாய்ந்தது இவர்க்குத் தகவேதகாது. இதைப்பற்றி அடியேன் எத்தனை தடவை யெழுதினாலும் புநருக்தி தோஷம் வாராது; பிக்ஷைக்கு வந்த வொருவரிடத்திலே 'இன்று நம் அகத்தில் மார்ஜாரப்ரஸூதி; அதனால் பிக்ஷையிடுவதற்கில்லை' என்றாராம் ஒரு நிபுணர். அதைக்கேட்ட பிக்ஷுகர் "அப்படியா? இது அடியேனுக்குத் தெரியாது; இன்னும் பத்து நாளைக்கு ஸௌகரியமில்லை போலும்'' என்று சொல்லிக்கொண்டே போய்விட்டாராம். இங்ஙனே பலகதைகளை நினைப்பூட்டும் நிகழ்ச்சியன்றோ நடந்துள்ளது. 2. இனி இரண்டாவது விவக்ஷிதம் கேண்மின். முறைப்படி ஆசார்யரிடத்திலே கேட்ட அர்த்தம் ஏதோ தம்மிடம் இருப்பதாகக் காட்டுமிதுபற்றி அம்மனே அப்பூச்சி காட்டுகின்றாரென்ன வேண்டுமத்தனை. ஆசார்யரிடத்தில் முறைப்படி கேட்டிருந்தால் சிங்கப்பெருமாள் திருவாக்கு வெற்றி, ஸ்ரீ வெங்கடார்ய சதகம் முதலான நமது பல நூல்கள் தோன்ற ப்ரஸக்தியேயிராது. த்ரௌபதியின் ப்ரபத்தி பலிக்கவில்லையென்று எந்த ஆசார்யரிடத்தில் கேட்டாரோ? இளையபெருமாள் அஸத்யவாதியென்று எந்த மஹாகுரு உபதேசித்தாரோ? நப்பின்னைப் பிராட்டியின் உண்மை ஸ்வரூபத்தை உபதேசிக்க ஒரு குரு கிடைக்கவில்லையா? கப்யாஸச்ருதியின் பொருளுக்கும் அருளிச்செயல்களுக்குமுள்ள ஒற்றுமை நயத்தையுணர்த்த ஒருதேசிகர் நேர்பட்டிலரே!; மந்தோதரி இராமனைப் பார்த்துப் பேசினாளென்று எந்த ஆசிரியர் போதித்தனரோ? ஸ்ரீவசநபூஷண வியாக்கியானத்தில் மணவாள மாமுனிகள் "கட்டிலே வைத்தபோதோடு காட்டிலே விட்டபோதோடு வாசியற'' என்றருளிச்செய்திருந்த ஸ்ரீஸூக்தியில் (கட்டிலே) என்பதைக் (கட்டிலிலே) என்று வாசித்துவிட்டு விளைத்த க்ஷேபத்திற்கு எந்த ஆசார்யோபதேசம் மூலமோ? இப்படி எத்தனை கேள்வி கேட்பதந்தோ!

நாற்றுப்பதினாறு சுலோகங்களும் பொழிப்புரையுங்கொண்ட நமது ஸ்ரீவேங்கடார்ய சதகம் பல மடாதிபதிகளால் மெச்சப்பட்டது. அதைக் கண்டபாடஞ்செய்து பரீக்ஷை கொடுத்த வித்யார்த்திகளுக்குப் பரிசு வழங்கினவர்களும் பலர். அந்த சதகத்தில் எழுதாத விஷயமில்லை. வடமொழியறியாதார்க்குத் தென்மொழியில் (இமே) வெளியிட்டிருக்கிற பொழிப்புரை பரமோபகாரகம். அதில் 106

111 முதல் 116 வரையிலுள்ள (ஆக) ஏழு சுலோகங்களின் பொழிப்புரை ரஸவத்தரமென்று பலர் புகழ்வதனால் அதை மட்டும் இங்கு அநுவதிக்கிறேன்.

106. ஸ்வாமிந்! தேவரீர் எழுதியதாக அடியேன் கண்ணில்படும் எழுத்து எதுவானாலும்ஸரி; அதுவெல்லாம் நியமேந ஏதாவதொரு குற்றத்திற்குக் கொள்கலமாயிருக்கும்படி அந்தோ! பாழுந்தெய்வம் செய்து வைக்கிறது. அங்கெல்லாம் அடியேன் வாத்ஸல்யத்தினால் குற்றம் காணாமலும் கண்டாலும் அதைக் காட்டாமலும் இருந்துவிடலாம். ஆனால் அப்படியிருந்துவிட முடிகிறதில்லை; தவறான அர்த்தங்கள் உலகில் பரவினால் மஹத்தான க்ஷோபமுண்டாகுமாதலால் உபேக்ஷித்துவிட லாகாதன்றோ. 111. சிக்கதேவராயர்க்கு வாத்ஸல்ய குணமும் தெரியாது; அதைப்பற்றின சர்ச்சையும் ஸுதராம் தெரியாது· அப்படியிருந்தும் இந்த சர்ச்சையை அதில் வீணாக ஏறிட்டுப் புகவிட்டு அப்ராமாணிகார்த்தங்களை நிரப்பியருளிற்று. அதைக்கண்டவுடனே உபேக்ஷித்திருக்க முடியாமல் அடியேன் எழுத வேண்டியதை மிக விரிவாக எழுதி **மணவாள மாமுனிகளின் வாத்ஸல்ய விவரணம்** என்னும் நூலையெழுதி அம்ருத லஹரியில் வெளியிட்டேன்; அதனைப் பண்டிதவுலகம் சிரமேற்கொண்டுள்ளது. தவிர. அடியேனுடைய வைதிகமநோஹரா வென்னும் ஸம்ஸ்க்ருத பத்ரிகையில் ஸித்தாந்த ஸௌபாக்யமென்று வெளியிட்டுவரும் ஸ்வகீய க்ரந்தத்திலும் (பக்கம் 68-ல்) **“ஸயூத்த்யாநாம் ஏகதேசிநாம் அல்பிஷ்ட வாதவிசேஷ ப்ரத்யாக்க்யாநம்”** என்று மகுடமிட்டு மிக விரிவாக (5 பக்கங்கள்) எழுதி யிருக்கிறேன். [அது வைதிக மநோஹரா தெ. 105-ல் காணத்தக்கது.] 112. மணவாள மாமுனிகளை தூஷிக்கப் பிறந்த சில கருவிலே திருவிலாதாருடைய முகோல்லாஸத்தையே பரம புருஷார்த்தமாகக்கோலி ஸத்ஸம்ப்ரதாய விபரீதமாக வெழுதி நிற்பதும் அதன் பலனை யநுபவிப்பதும் அந்தோ! சோசநீயம். 113, 114. தேவரீருடைய வியாஸங்களில் மேற்கோள்களாக எடுத்தாளப்படும் சுலோகங்களோ வாக்யங்களோ எல்லாம் விபரீதம்! விபரீதம்! விபரீதம்! என்று உடனுக்குடனே விளக்கி வருபவனடியேன். மேலே குறித்த வாத்ஸல்ய வியாஸத்தில் * ஔத்ஸுக்ய பூர்வமுபஹ்ருத்ய * என்கிற தயாசதக ஸூக்தியை அபத்தமாக மேற்கொண்டது. இளையபெருமாள் அஸத்யவாதியென்று ஸ்தாபிக்க வெழுந்த வியாஸத்தில் * ஆசசக்ஷே ஸத்பாவம் * இத்யாதி ச்லோகத்தை மேற்கொண்டவிடத்து “பரதாயாப்ரமேயாய” என்பதை “பரதாய மஹாத்மநே” என்று விவக்ஷிதார்த்த விபரீதமாக மாற்றினது........ இங்ஙனம் மருண்டவிடங்கள் பலபல, அவற்றுள் தலையான மருள் ஒன்று முக்கியமாக ரஸிகர்கள் குறிக்கொள்ளத்தக்கது. அதைக்காட்டி இந்நூல் முடிக்கப்படுகிறது. (அதாவது)

115. ஸமீப காலத்தில் திருவல்லிக்கேணிவாஸியான ஒரு மஹான் வெளியிட்ட திருவருளென்ற நூலிலுள்ளதை அப்படியேயெடுத்துக் காட்டுகிறேன். “பண்டிதர்களுக்குள் முக்கியமாக ஸமரஸப்பான்மை ஏற்படவேணும். அதனால்தான் உலகுக்கு க்ஷேமம் விளையும். ஒரு பண்டிதர் எடுத்துக்கூறும் விஷயம் ரஸகனமாயிருந்தால் அதை மற்ற பண்டிதர்களும் பிராமாணிக புத்தியோடு ஆதரிக்க முன்வரவேணும். அவர் கூறுவதை நாம் எதற்காக ஒப்புக்கொள்ளவேண்டும்? என்று நினைப்பது பண்டிதர்களுக்கு உற்றதன்று. ஒரு சிறு விஷயம் சொல்லுகிறேன். திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தஸாரதி பக்த ஸமாஜத்தின் வெளியீடாக நேற்று மார்கழி முடிவில் **திருப்பாவை மலர்** ஒன்று வெளிவந்திருக்கின்றது. இது ஸ்ரீகாரப்பங்காடு ஸ்வாமியின் மேற்பார்வையில் வெளிவந்ததாகத் தெரியவருகின்றது. இதில் ஆரம்பத்தில் “பெரியவாச்சான் பிள்ளை திருப்பாவைக்கு அருளிச்செய்த வியாக்கியானத்தின் அவதாரிகை” அச்சிடப்பட்டிருக்கின்றது. இவ்வவதாரிகையில் பெரியதோர் சொற்பிழை காஞ்சிபுரம் ஸ்வாமிகளால் எடுத்துக்காட்டப்பட்டு உலகமெல்லாம் பரவியிருக்கின்றது. அதில் “ச்ரிய: பதியாய்” என்று தொடக்கமுள்ள (4) வாக்யவரிசையில் “தானும் ப்ராப்த யௌவனனாய் அவர்களுக்கும் யௌவனம் வந்து தலைகாட்டினவாறே” என்று பெரியவாச்சான் பிள்ளை ஸாதித்திருந்த ஸ்ரீஸூக்தி. ஆனால் இதை அச்சிட்டவர்கள் “யௌவனம் வந்து தலைகாட்டினவாறே” என்கிற ஸ்ரீஸூக்தியின் சுவையையறியாமல் “யௌவனம்வந்து தலைக்கட்டினவாறே” என்று விரஸமாக அச்சிட்டு வைத்தார்கள். இப்படி பலபதிப்புகள் ஏறிவிட்டன. ஆங்காங்கு ப்ரவசனம் செய்கிறவர்களும் கவனிப்பு இல்லாமல் அப்படியே சொல்லி வருகிறார்கள். யௌவனம் வந்து தலைக்கட்டிற்றென்றால் கிழத்தனம் வந்துசேர ஆரம்பமாகிவிட்டதென்று பொருள்படுமே தவிர வக்தாவுக்கு உத்தேச்யமான பொருள் கிடைக்காது. “யுவதிச்ச குமாரிணீ” என்கிற பிரமாணச் சாயையிலே (யௌவனம் வந்து தலைகாட்டினவாறே) என்று வெகு ரஸமான பங்க்தியை பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்திருக்க, அது நேர்விபரீதமாக அச்சாகிவிட்டது. இதை காஞ்சீபுரம் ஸ்வாமி இளமையிலேயே ஸ்ரீரங்கத்தில் அரையர் ஸேவையிலிருந்து க்ரஹித்து திருத்தம் வெளியிட்டிருக்கிறார். அப்படி வெளியிட்டிருப்பது ஒரு தடவையல்ல; பலதடவை. இதை உலகமெல்லாம் வாசித்துக் களித்திருக்கும்போது ஸ்ரீமத் காரப்பங்காடு ஸ்வாமி வாசிக்கவில்லையென்று நினைக்கமுடியுமா? இந்த ரஸத்தை அவருடைய திருவுள்ளம் க்ரஹித்திருக்கமாட்டாதா? அவ்வளவு அரஸிகரா அவர்? மேலே காட்டின திருத்தத்தை மிகவும் க்ருதஜ்ஞதாநுஸந்தானத்தோடு அந்த ஸ்வாமி வெளியிட்டி-

ருக்க வேண்டாமா? அவரும் (யௌவனம்வந்து தலைக்கட்டினவாறே) என்று பழைய அபத்த பாடத்தையே ஆதரித்திருக்கிறாரென்றால் இதை நாம் என்னவென்று சொல்லுவது. தமையனுக்கும் தம்பிக்கும் மனஸ்தாபம் ஏற்பட்டால் அதைத் தாயாரிடத்திலே காட்டுவதுண்டா? தமையனார் ஆதரிக்கிற தாயாரை நாமும் ஆதரிப்பதா என்று தம்பி நினைத்து அந்தத் தாயாரிடத்திலே குற்றங்குறைகள் கூற அவன் தலைப்படலாமா? (யௌவனம்வந்து தலைக்கட்டினவாறே என்கிற பாடந்தான் ஸரி. என்றாவது, (தலைக்கட்டினவாறே என்றுமிருக்கலாம், தலைகாட்டினவாறே என்றுமிருக்கலாம்) என்றாவது காரப்பங்காடு ஸ்வாமியின் திருவுள்ளம் நினைக்குமா? ஆனால் தாம் பிடித்தபிடியையே ஸ்தாபிக்கவேண்டி (யௌவனம் வந்து தலைக்கட்டினவாறே) என்றுதானிருக்கவேணும் என்று இனிமேல் ஸ்தாபித்தெழுத நேர்ந்துவிடும். இது போலவே, த்ரௌபதியை விபசாரியென்று தாம் ஏற்கெனவே எழுதிவிட்டபடியால் இதைக் கிளறினால் "அவள் ப்ரஷ்டை, துஷ்டை, ஜெஷ்டை" என்றெல்லாமெழுத நேர்ந்துவிடுமே; இந்த மஹாபசாரத்திற்கு நாமே காரணமானதாக ஆய்விடுமே என்று அடியேன் பயப்பட்டு இதை வளர்த்தாமல் நிறுத்துகிறேன்" என்பது. 116. "யௌவனம்வந்து தலைகாட்டின" என்கிற பாடமே ரஸ்யமாயினும் 'தலைக்கட்டின' என்கிற பாடம் புராதனமாகக் காண்கையாலே அதனை விலக்குவது தகாதென்கிற எண்ணத்தினால் தலைகாட்டின பாடத்தை நான் கொள்ளவில்லையென்று ஸாதிக்குமானால் தயிரரவும்பாட கல்பனையைத் தவிர்க்கவேணும். இது புராதனமன்றே." என்றிவ்வளவும் எழுதி வெளியிடப்பட்டுள்ளது.

பழைய பாரதத்தின் அநுவாதம் போதும். இனி முக்கியமாகச் சில விஷயங்களை யெழுதி இந்நூலை நிகமிப்பது நலம். ஆனாலும் விவக்ஷிதங்களை உபேக்ஷிக்க மனமில்லை. கீழ்க்கண்ட அநுவாதத்தில் தயிரரவும் பாடகற்பனை முடிவாக வந்து விழுந்தது. (தயிரரவும்) என்கிறவொரு பாடம் எங்கும் கண்டறியாதது. யாரோவொருவர் ஒரு வியாஸமெழுதித் தர வேணுமென்று கேட்க, ஒரு விஷயமும் தோன்றாமையாலே 'அப்பா! இப்போது ஒன்றும் ஸ்புரிக்கவில்லை' என்று ஓரே பேச்சில் முடித்து விடலாமாயிருக்க, தமக்கு நிலமல்லாத தொன்றிலே கை வைத்து "தயிரரவம் கேட்டிலையோ என்கிற பாடம் வியாக்கியானத்திற்குச் சேராது, தயிரரவும் என்றிருந்தால் தான் வியாக்கியானத்திற்குச் சேரும் என்று ஸாஹஸமாக எழுதியது எந்த ஆசார்யோபதேசங் கொண்டோ? இவர் சொல்லுவதோ எழுதுவதோ எதுவும் ஆசார்யரிடத்திலே முறைப்படி கேட்டுத் தானே. போதுமே காம்பீர்யம். இன்னமுமா உலுக்கிக் குலுக்க வேணும்? இதற்கு மேல் தாங்காது.

இனி (6) என்பதை யெடுத்துக்கொள்வோம்.

"இந்த வியாசம் எழுதினவர் ப்ராமாணிகமாகச் சொல்வதானால் இந்தமாதிரி பெரியவாளுள்ள ஸதஸ்ஸுக்கு வரட்டும், நான் நிரூபணம் பண்ணுகிறேன்............
ஸரியென்று நிரூபித்துவிட்டால் அடியேன் தெண்டனிட்டுநிற்க ஆட்சேபணையில்லை,"

என்று சொல்லப்பட்டுள்ளது. வாத விவாத ப்ரஸக்தியோ கண்டன மண்டன ஸமாசாரமோ லவலேசமுமில்லாத நமது பத்திரிகையைப்பற்றி இத்தனை ஆரவாரம் அநவஸரமென்று முகப்பிலேயே விவரிக்கப் பட்டுள்ளது. அதற்குமேல் வாதத்திற்கு வரவேணுமென்றும், அதிலும் "இந்தமாதிரி பெரியவாளுள்ள ஸதஸ்ஸுக்கு வரவேணும்" என்றும் அழைப்பது என்ன திருவுள்ளத்தினாலோ? பலகாலும் தோல்வியடைந்த ஸுக்ரீவ மஹாராஜர் வாலியைச் சண்டைக்கு அழைத்ததாகக் கதை வாசிக்கிறோம். அவனுடைய ஒரு முஷ்டி ப்ரஹாரத்தையும் தாங்கமாட்டாத விவன் அவனைச் சண்டைக்கழைத்தது ஒரு பெரிய அவஷ்டம்பத்தினாலென்பதையும் வாசிக்கிறோம். அப்படி இவர்க்கும் ஏதேனும் மஹாதவஷ்டம்பம் கிடைத்திருக்கக் கூடுமென்றே ஊஹிக்கிறேன். யாருடைய அவஷ்டம்பம் கிடைத்தாலும் மணவாளமாமுனிகளின் அவஷ்டம்பம் இவர்க்குக் கிடைக்கக் கனவிலும் ப்ரஸக்தியில்லை. "பெருங்கேழலார் தம் பெருங்கண் மலர்ப் புண்டரீகம் நம்மேலொருங்கே பிறழ வைத்தாரிவ்வகாலம்" என்று ஆழ்வார் திருவிருத்தத்தில் அருளிச்செய்த கணக்கிலே மணவாளமாமுனிகளின் திவ்யகடாக்ஷாம்ருத தாரா ஸேகம் அடியேனுக்கு அஸாதாரணமாதலால் எந்த ஸமயத்திலும் எந்த க்ஷணத்திலும் எந்த ஸ்தலத்திலும் ஒரு நிபந்தனையையும் விசாரியாமல் 'ஸ்வாமி நியமனம்' என்பதொன்றையேகொண்டு வந்து நிற்கத் தடையில்லை. ஸ்வாமியளிக்கும் ஸ்ரீஸூக்தியமுத வெள்ளத்தைச் செவியாரப் பருகிப் போவேனத்தனை. திருவல்லிக்கேணியில் பண்டித ரத்னமாக விளங்கும் ஸ்ரீமத் திருக்கண்ணபுரம் ஸ்வாமிபோல்வார் கேட்டு ஆனந்தித்தால் போதுமானது.

"ஸரியென்று நிரூபித்துவிட்டால் அடியேன் தெண்டனிட்டு நிற்க ஆட்சேபணையில்லை"

என்பது ஒரு சபதமாகுமா? ஸ்வரூப ப்ராப்தமான காரியமன்றோவிது அடியேன் இப்படிப்பட்ட சபதங்கள் செய்வதில்லை. அடியேனுடைய பல நூல்களையு மெடுத்துப் பார்க்கலாமே; "என்னுடைய உக்தி அஸாதுவென்று தேறிற்றாகில் யாவஜ்ஜீவம் பேனாவைத் தொடுவதில்லை யென்று தீவிரமான சபதம் செய்கிறேன்" என்றுதான் அடியேனெழுதுவது. இதை இந்நூலிலேயே மேலே விசதமாகக் காணலாம். அத்தகைய சபதத்தை இவர் செய்தால் அது, ப்ரஹ்மசாரி "நான் க்ருஹிணியைவிட்டு விடுகிறேன்" என்றும், அத்ரைவர்ணிகன் "நான் வேதாத்யயனத்தை விட்டுவிடுகிறேன்" என்றும் சபதம் செய்வதோடொக்குமாதலால் தீர்க்கதரிசியான விவர் அத்தகைய சபதத்தில் புகாமல், தெய்

புண்கிறேன் பாலுண்கிறேன் பாயஸமுண்கிறேன் லட்டு ஸாப்பிடுகிறே னென்றுற் போன்ற சபதம் செய்தது நன்றே என்ன வேணும்.

(7) "அதற்கு ப்ராமாணிகமாக பதில் எழுதுவது என்றில்லாமல் வேறு விதத்தில் எழுதுவது என்று வரும்" என்கிருர். யார் எழுதுவது ப்ராமாணிகம், யார் எழுதுவது அப்ரமாணிகம் என்பதை ஸ்ரீமத் பண்டிதரத்னம் ஸ்வாமிபோல்வார்நிஷ்கர்ஷிக்க வல்லவரென்று நிற்கிறேன். இனி (8) லக்கமுள்ள பகுதியைப்பற்றி விரிவாக எழுதவேண்டியதுண்டு.

"ஆழ்வார் * நோற்ற நோன்பிலேனென்று ஆரம்பித்து வரிசையாக நான்கு திருவாய்மொழிகளிலே சரணுகதி பண்ணினுர்...... இங்கே தூது விடுகிற இடத்தில் அதுபோலே இல்லை......"

இத்யாதி யாகவுள்ளவாக்யங்களை விமர்சிக்கிறோம்.* மிக்க விறைநிலையும் மெய்யாமுயிர்நிலையும்* இத்யாதியான தனியனிற் கூறியபடியே திருவாய்மொழியாயிரத்திற்கும் அர்த்த பஞ்சகமே ப்ரமேயமென்று நம் ஆசார்யர்கள் அறுதியிட்டுள்ளார்கள். ஆசார்ய ஹ்ருதயத்தில் "இருபதிலே விசதமாக்கி எண்பதிலே பரப்புகையாலே" என்பது உயிரான ஸ்ரீஸூக்தி. நூறு பதிகங்களுள் இருபது பதிகங்கள் அர்த்த பஞ்சகத்தை விசதமாக விளக்குவனவென்றும், சேஷித்த எண்பது பதிகங்கள் அதை விஸ்தரிப்பன வென்றும் தெரிவித்தபடி. ஐந் நான்கு இருபது ஆதலால் * ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோ ரூபம் * இத்யாதியான ஒவ்வோரர்த்தமும் நான்கு நான்கு பதிகங்களிலே விசதீகரிக்கப்படுவனவாக வைத்து, "உயர் திண் ணணை ஒன்று - பயி லேறு கண் கரு-வீடு சொன்னு லொருக் கொண்ட - நோற்றநாலும் - எம்மா வொழிவில் நெடு வேயென்கிற இருபதிலே" என்கிற சூர்ணையினுல் அந்த இருபது பதிகங்கள் இன்னின்னவையென்று காட்டப்பட்டது. "நோற்ற நாலும்" என்பதில் விவக்ஷிதங்களாய் உபாயபரங்களான நான்கு பதிகங்கள் மட்டுமே வரிசையாக அமைந்துள்ளன. மற்ற பதிகங்கள் யாவும் ஒன்றோடொன்று ஸம்பந்தப்படாமல் தூர தூரத்தில் வெவ்வேறிடங்களில் விளங்குவன. * உயர்வறவுயர் நலம் எங்கே? * திண்ணன் வீடு எங்கே? * அணைவதரவணை எங்கே? * ஒன்றுந்தேவு எங்கே? இப்படியே முழுவதும் பார்த்துக் கொள்க. இத்தால் என்ன தெரிவித்தோமானோம்? நோற்ற நாலும் வரிசையாயிருப்பதோடு, மற்றவை விலகி விலகியிருப்பதோடு ஒருவாசியில்லையென்பது ஸ்பஷ்டமாகத் தெரிய வருகின்றதென்று தெரிவித்தோமானோம். தசகங்களின் அவ்யவஹிதத்வ வ்யவஹிதத்வங்களைக் கொண்டு ஸாதகபாதகம் எதுவும் நிரூபிக்க முடியாதென்பதைத் திடமாக வுணர்த்தினோமானோம். வ்யவதாந அவ்யவதானங்கள் ஸர்வாத்மநா அப்ரயோஜகங்களென்பதை இன்னமும் நெஞ்சிலேபட நிரூபிக்கிறோம்.

ஆசார்யஹ்ருதயத்தில் "பாட்டுக்கு க்ரியையும் பத்துக்குக் கருத்தும்போலே நூற்றுக்கு உபதேசப் பத்து" என்பது ஒரு சூர்ணை. இதனுல் ஒவ்வொரு பத்திலும் ஒவ்வொரு பதிகம் உபதேச பரமாக அமைந்துள்ளதாய் அறிகிறோம். சில பத்துக்களில் உபதேச பரங்களான பதிகங்கள் ஒன்றுக்கு மேற்படவும் இருந்தாலுங்கூட, பத்துத்தோறும் ஒரு பதிகம் நியமேந இருந்து தீருமென்பது விவக்ஷிதம். உபதேசத்திற்கு ஹேது ஞாலத்தார்பந்தபுத்தியும் அநர்த்தங்கண்டுஆற்றுமையும் மிக்க க்ருபையும் என்பது தெரிந்ததே. *பயனன்ருகிலும் பாங்கல்லராகிலும் செயல் நன்ருகத் திருத்திப்பணிகொள்வானென்று மதுரகவி சொன்னசொல்லை நோக்குமிடத்து, உபதேசம் உடனே ஸபலமாகாதொழிந்தாலும் என்றேனுமொருநாள் ஸபலமாகாதோவென்கிற நசையினுல்தான் பலகாலுமுபதேசித்தருளிற்று என்பது விளங்கும். இவ்வண்ணமாகவே தூது விஷயத்திலும் நாமெழுதியது அசைக்கவொண்ணுததே.

இதற்குமேல் ஒரு முக்கியமான விசாரம்; ஆழ்வாருடைய ஒவ்வொரு தூதும் ஸபலமாயிற்ரு இல்லையா? என்பது. இந்த விசாரம் வாத விவாத கோஷ்டியில் செய்யத்தகாது; ரஸிக கோஷ்டியிலே செய்யத்தக்கது. தூதுவிடுகையென்று பேர்மாத்திரமாய் குணுநுபவந்தானே உறைத்திருப்பது. "தூதப்ரேஷணவ்யாஜத்தாலே தம்முடைய ஆற்ருமையை யறிவிக்கிறு"ரென்றுதான் ஈட்டு ஸ்ரீஸூக்தியுமுள்ளது. பாசுரம் காண்கிறபடியே கொண்டு பேசுவோம். * அஞ்சிறையமடநாரையில் கண்ட பக்ஷிகளையும் தூதுவிட்டார்; எம்பெருமான் ஆனைக்குதவ வந்தாப்போலே அரைகுலையத் தலைகுலைய ஓடிவந்தான்; பிறகு என்னுயிற்று? ஆழ்வார் நைச்யா நுஸந்தானம்பண்ணி அகலப்பார்த்தார். எம்பெருமான் வெகு பரிச்ரமப்பட்டுச் சிலபல கதைகளைச் சொல்லித் தன் சீலத்தினுல் ஆழ்வாரைச் சேர்த்துக் கொண்டான். ஏவஞ்ச, * அஞ்சிறையமடநாரைக்கு அபராத ஸஹத்வமாகிற குணுநுபவத்திலே நோக்கு, * வளவேழுலகுக்கு சீலகுணுநுபவத்திலே நோக்கு என்று இவ்வளவே கொள்ள வேண்டும். * வைகல் பூங்கழிவாயில் இரண்டாந்தூது விட்டார். பிறகு என்னுயிற்று? திருவாய்மொழி நூற்றந்தாதி ஸேவித்தால் தெரியும்; * மின்னிடையார் சேர்கண்ணன் மெத்தென வந்தானென்று தள்ளிக் கதவடைத்தாராழ்வார், அதுவும் ஒரு சிறந்த குணுநுபவமாகவே கொள்ளப்பட்டது. இங்கே பட்டருடைய ஸ்ரீஸூக்திகள் பரம போக்யம். "[கழகமேறேல் நம்பீ!] இவ்விடத்தே பட்டரருளிச் செய்வதொரு வார்த்தையுண்டு!—ஸமஸ்தகல்யாண குணாத்மகனுய் உபய விபூதியுக்தனுய் ஸர்வாதிகனுய் ஸர்வநியந்தாவாயிருக்கிற ஸர்வேச்வரன் நாலிடைப் பெண்களிருந்த விடத்தே புக்கல்லது நிற்க மாட்டாத செல்லாமை விளைய, அவர்கள் நீ இங்குப் புகுராதே கொள் என்ன, விலங்கிட்டாப் போலே பேரவும் திரியவும் மாட்டாதே தடுமாறி நின்ருனென்கிற ஸௌசீல்யம் தங்களையுமிவர்களையு மொழிய ஆரறிந்து கொண்டாட வ்யாஸாதிகள் எழுதியிட்டு வைத்துப் போனுர்களோ! என்றருளிச்செய்வர்." நிற்க. இனி, *பொன்னுலகாளீரில் மூன்ருந் தூது. பின்னை என்னுயிற்று.

இதுவும் நூற்றந்தாதியால் விசதம். பரம பதத்தளவுஞ் சென்று கேட்கும்படி ஆர்த்தத்வநியைப்பண்ணி அழுது தீர்த்தார். இனி * எங்கானலகங்கழி வாயில் நான்காந்தூது. பின்னை என்னாயிற்று! இதுவும் நூற்றந்தாதியால் விசதம். * அவன் பால்விட்ட தூதர் மறித்துவரப் பற்றா மனத்தால் அறப்பதறிச் செய்ய திருநாவாயில் செல்ல நினைந்தான் மாறன் மையலினால் செய்வறியாமல்.

"தூதுவிட்டழைத்தார்; எம்பெருமான் உடனே பதறியோடிவந்தான்; ஆழ்வார் * அந்தாமத் தன்பு * வீற்றிருந்தேழுலகு * இருந்தும் வியந்து... இப்பதிகங்களிற் போலே ஆச்சரியமாகக் கலந்து பரிமாறினார் என்னும்படி கண்டிலோம்; தாம் ஓடப் பார்ப்பதும், அவனை யோட்டப் பார்ப்பதும், விண்ணெல்லாங் கேட்கவழுவதும், தாமே மூட்டைகட்டிக் கொண்டு பயணஞ் செய்யப் பார்ப்பதுமாய் வந்துவிழுந்ததத்தனை. ஆனாலும் குணானுபவத்தில் இவையெல்லாம் ப்ரணாளீபேதங்களத்தனையேயாம்: இதைத்தான் ஆழ்வான் ஸாரமாகவருளிச் செய்தார் * **பக்திப்ரபாவ பவதத்புதபாவபந்த ஸந்துக்ஷித ப்ரணயஸார ரஸௌகபூர்ண:*** என்று. கண்ணன் அர்ஜுநனுக்குப் பண்ணின கீதோபதேசம் ஸபலமாயிற்றா இல்லையா? என்று விசாரிக்கத் தொடங்கினார்கள். * ஸ்திதோஸ்மி கதஸந்தேஹ: கரிஷ்யே வசநம் தவ * என்றானாகையினாலே ஸபலமாயிற்றென்றார்கள் சிலர். "உபதேசத்தின் பலம் ஸித்திக்கப்பெறாமையாலே உபதேசம் ஸப்ரயோஜனமாய்த்தில்லை" என்று நிஷ்கர்ஷித்தருளினார் மணவாளமாமுனிகள். எவ்விடத்தில்? "முடிவில் அப்ரிய மென்றது" என்றவிடத்தில். இங்ஙனே ப்ரஸக்தாநுப்ரஸக்தமாகப் பல விஷயங்கள் தெரிவிக்க வேண்டியவையுண்டு. அது மற்றொருகாலாகும்.

(11) லக்கமுள்ள பகுதியில் உத்தரஸ்ரீராமாயண கதையை விவரித்திருப்பது அகாண்டே அஸ்தாநே ப்ரஸங்கம். * அஞ்சிறைய மடநாரைக்கு அடுத்ததான * வளவேழுலகு திருவாய்மொழியின் அவதாரிகைக்கு இது உபயுக்தமாகையால் ஈட்டில் இது விவரிக்கப்பட்டது நன்று, மிகநன்று. தூது நாலுக்கும் விஷய மென்னுமிதிலே இதைக் கொண்டு புகுத்தியது கேவலம் போதைப் போக்க வென்பதில் என்னஸந்தேஹம். ஸ்ரீராமாயணப்ரவசனத்தில் மூலம் வாசிப்பவர் கிஷ்கிந்தாகாண்டம் வாசிக்கிறார். அர்த்தம் உபந்யஸிப்பவர் பாதுகாபட்டாபிஷேகம் சொல்லுகிறார். ஸர்க்கம் முடிந்தவுடனே "இத்யார்ஷே ஆதிகாவ்யே ராமாயணே கிஷ்கிந்தாகாண்டே" என்று மூல காரர் வாசிக்க, "அட பாவமே, நீ ஸுந்தரகாண்டம் வாசிக்கிறாயென்று நினைத்தன்றோ நான் பாதுகாபட்டாபிஷேகம் சொல்லுகிறேன்" என்றாராம் உபந்யாஸகர். ச்ரோதாக்கள் சொன்னார்களாம்—"நீங்கள் எது சொன்னாலென்ன? ராமாயணத்தைவிட்டு பாரதத்திற்கோ பாகவதத்திற்கோ போகவில்லையே" என்று. இவ்வண்ணமாகவே ஈட்டிலுள்ள கதையையே கூறினாரென்று களிப்போம்.

(12) "நாலு தூதுக்கும் இந்த வியாஸத்திலே காட்டியிருக்கிற ஹேது பொருந்தாது என்றால் உண்மையிலே ஹேது என்ன? என்று கேட்கலாம். அதற்கு ஆசாரியாள் சொல்லியிருக்கிறதைச் சொல்லுகிறேன். இந்த தூதுகளுக்குக்காரணம் ஸம்ச்லேஷ, விச்லேஷங்கள்"

என்றிருப்பது அஸாது, இப்படி எந்த ஆசாரியரும் சொல்லியிருக்கவில்லை, சொல்லவும் மாட்டார். விச்லேஷத்தில் தூதுவிடுவதுண்டேயல்லது ஸம்ச்லேஷத்தில் தூதுவிடுவதை எங்கும் கண்டிலோம். இனி ஸம்ச்லேஷவிச்லேஷங்களென்றது கைப்பிசகு, தூதுக்குக் காரணம் விச்லேஷம் என்றேன்—என்னில், இது அசடுபிசடான வாக்யார்த்த மெனப்படும். விச்லேஷம் தூதுவிடுகைக்கு மட்டும் காரணமன்று. விச்லேஷமுண்டான போதெல்லாம் தூதுவிட்டதுமில்லை. விச்லேஷத்தால் கிலேசப்படுகிற பதிகங்கள் எத்தனை? என்று கேட்டால் சொல்ல முடியுமா இவரால்? பலகால் நடந்து துவண்டு கேட்டறிய வேண்டுமர்த்தங்களை நாம் எழுதி வைப்பதும் தகாது. லக்கம் (8-ல்) "அங்கேயுங்கூட எம்பெருமானைக் குறைசொல்லவில்லை" என்கிறார். இதற்கு என்ன அர்த்தமோ? என்ன அநர்த்தமோ? தெரியவில்லை. எம்பெருமானுக்குக் குறை சொல்லுமிடங்களும் எம்பெருமானுடைய குணங்களுக்குக் குறை சொல்லுமிடங்களும் பல பலவுண்டு. * கடியன் கொடியன் நெடியமால்—உனக்கேலும் பிழை பிழையே* ஒரு நான்று தடிபிணக்கே—இதுவோ பொருத்தமே!—* குறைசொல்லி விட்டால் என்ன குடிகெட்டுப்போய்விடும்? கண்ணபிரானைத் தாம்பாலே கட்டியடிக்கவும் *என் குட்டனே முத்தம்தா * என்று குலாவவும் அதிகாரம் பெற்றிருந்தாள் யசோதைப் பிராட்டி; அவ்வண்ணமாகவே ஆழ்வார்களும் நிறை கூறவும் குறை கூறவும் அவ்யாஹதமான அதிகாரம் பெற்றவர்களல்லரோ? *தெள்ளியீர் தேவரில் (ஓ! துள்ளுநீர்) என்றவிடத்தில் பெரியவாச்சான் பிள்ளைவியாக்கியானம் ஸேவித்தாரில்லையே "(ஓ!) படுகொலை படுகொலை படுகொலை யென்கிறாள்" என்பது ஸ்ரீஸூக்தி; சௌரிப் பெருமாளைக் கொலை பாதகரென்று தாய் சொல்லுவதாகப் பெரியவாச்சான் பிள்ளை பொருள் பணிக்கிறார். தாய் கூறுகிறாளே யொழிய மகள் கூறினதாக இல்லையே! என்பரிவர். விசேஷார்த்தங்களெல்லாம் வெளிவரட்டும். ரஸிகர்களுக்கு நாம் சொல்லுகிறோம்; மூலத்தில் படுகொலை யென்னுஞ் சொல் கிடையாது. ஓ! என்றிவ்வளவேயுள்ளது. அருளிச்செயற்கடலில் ஓ வென்பது எத்தனையிடங்களில் இல்லை. *படைத்தபற்பநாபா ஓ; அளந்தபற்பபாதா ஓ! தாமரைககண்ணா ஓ, தாமரைக்கையா ஓ! ஒருவில்வலவா ஓ! முதல்வா ஓ! என்று பலபலவுமுண்டே; அங்கெல்லாம் இங்ஙனே பொருளருளிச் செய்யக் கண்டதுண்டோ? தெள்ளியீர் நிலைமைக்குத் தகுதியாகவன்றோ பெரியவாச்சான் பிள்ளை விலக்ஷணமாக வியாக்கியானித் தருளினர். இந்த படுகொலை படுகொலை ஏட்டளவிலே நில்லாமல் கோயில் திருவத்யயநோத்ஸவத்திலே

* தெள்ளியீர் வியாக்கியானம் ஸேவிக்கு மரையர் எதிரே ஸேவை ஸாதிக்கும் அழகிய மணவாளனை நோக்கி இரு கைகளையும் விரித்து ஓ படிகொலே! படிகொலே!! என்று பெருமிடறு செய்து கத்துவர்; அப்போது பெருமாள் திருமுகத்தை நோக்கினால் ஹாஹா! என்ன விகாஸம்! என்ன மந்த ஹாஸம்!!

'நமக்குக் குறைகூறுவாருண்டா? நமக்கு குணஹாநி சொல்லுவாருண்டா? நம்மைத் தடியெடுத்துத் தகர்ப்பாருண்டா? நம்மைக் கதவடைத்துத் தள்ளுவாரும் கழுத்தைப் பிடித்துத் தள்ளுவாருமுண்டா?' என்று அவன் பெருநகையோடே ப்ரதீக்ஷித்து, மநோரதித்தபடியே இவையெல்லாம் பெற்றுப் பெரும்பேறு பெற்றுனையிருக்க "அங்கேயும் ஒரு குறைசொல்லிற்றில்லை" என்று கூறுமவர்கள் பகவத் விஷயத்திற்குப் பதின்காதவழி தூரத்திலே நிற்க வேண்டுமத்தனை. குறை சொல்லும் முகத்தாலே நிறையே சொல்லி வைத்தார்களென்பது நிஷ்க்ருஷ்ட பரமார்த்தம். இந்த நிஷ்கர்ஷம் எங்குமுண்டு, எவர்க்குமுண்டு. முடிவில் "இத்தோடே நிறுத்திக்கொள்ளுகிறேன்" என்கிற பல்லவி தான் பரமரஸம். தம் கையில் கிடைத்த நான்கு பக்கக் காகிதத்தைப் பூர்த்தியாக வாசித்துவிட்டு "இத்தோடு நிறுத்திக் கொள்ளுகிறேன்" என்கிற பல்லவியைப் பாடியிருந்தால் எவ்வளவோ அழகாக இருந்திருக்குமே. ஆனால் எவ்வளவோ அர்த்த விசேஷங்களை அடியேன் முகமாக உபகரிக்க வெண்ணின தெய்வத்தின் சக்தி அப்ரமேயம். "தேந விநா த்ருணாக்ரமபி நசலதி கலு."

ப்ரதிவாதி பயங்கர ஸூரிகுலே மஹிதே ஸுக்ருதைர் யதபூஜ் ஜநநம்.
மம தத் ஸபலம் கலயந்தி சிராத் ஸுதியோ பஹவ:, கலயந்து சிரம்,
வானமாமலை மடத்தினுட்புறத் துச்சசப்த லவ லேசமின்றியே,
சொன்னதெப்படி பலிர்வரும்? வராதென்று கொண்டது பழுத்த திங்ஙனே.

---

முடிவில் ஓர் அறிவிப்பு. "தூது நாலுக்கும் விஷயமென்பது பற்றி ஸம்ஸ்க்ருத வியாஸ மொன்று இன்றுதானெழுதப்பட்டது; இது வைதிகமநோஹராவில் விரைவில் வெளிவரும்" என்று கீழே (பக்கம் 12. முதல் பாராவில்) எழுதியிருக்தோமல்லவா? அது அப்படியே வெளிவந்துவிட்டது. மேலே ப்ரஸ்தாவிக்கும் விசிஷ்டாத்வைத விஜயத்வஜம் வெளிவந்த வைதிகமநோஹரா 132 ல் தான் முகப்பு வியாஸமாக அது வெளிவந்துள்ளது. ஸம்ஸ்க்ருதரஸிகர்கள் அதை வாசித்து இன்புறுக.

---

## தானேயெழுதிய தன் சரிதையின் தொடர்ச்சி

[தானேயெழுதிய தன் சரிதை 1957-ஆம் வருடத்தில் வெளியிடப்பட்டு முடிந்தது. அதன் பிறகு அதன் தொடர்ச்சியாகப் பலவும் தெரிவிக்க வேண்டியவையுண்டு. ப்ரக்ருத விஷயோபயோகியாகச் சில முக்கியமான செய்திகள் தெரிவிக்கப்படுகின்றன.]

### "வம்புச் சண்டைக்கு வரமாட்டேன், வந்தசண்டையை விடமாட்டேன்."

அடியேனுக்கு நெடுநாளாக ஒரு பழக்க வழக்க முள்ளது; ஸம்ஸ்க்ருதத்திலோ ஹிந்தியிலோ தெலுங்கிலோ தமிழிலோ வெளிவரும் பத்ரிகைகளில் என் கண்ணில் பட்டவரையில் காதில் விழுந்த வரையில் தவறான விஷயங்கள் இருப்பதாகத் தோன்றினால் (அதாவது) நம்முடைய பூருவாசாரியர்களின் திருவுள்ளத்திற்கு இணங்காத விஷயங்களையும் அப்பேராசிரியர்கட்கு நிந்தனையான விஷயங்களையும் கண்டால் ஸஹித்திருக்கும் வன்மையில்லாமையினால் அவற்றை மறுத்தொழித்தே தீருவதென்று.

ஸ்ரீ ராமாயணத்தில் பெருமாள் திறலைப்பற்றிச் சொல்லுமிடத்து [அயோ. 2-36.] *யதா வ்ரஜதி ஸங்க்ராமம் க்ராமார்த்தே நகரஸ்ய வா, கத்வா ஸௌமித்ரி ஸஹிதோ நாவிஜித்ய நிவர்த்ததே* என்று சக்ரவர்த்தி பக்கலிலே அயோத்யாவாஸிகள் சொல்லுவதாகச் சொல்லிவைத்தார் வான்மீகி முனிவர். பெருமாள் இளைய பெருமாளோடு கூட யுத்தத்திற்குச் செல்வதாகவும், செல்லுந்தோறும் வெற்றியின்றிக்கே மீள்வதில்லையாகவும் கூறியபடி. மஹாவீரரான பெருமாள் செய்யும் யுத்தம் தெரிந்ததே. அடியேன் செய்வது வாத யுத்தம். அவர் 'ஸௌமித்ரி ஸஹிதோ வ்ரஜதி'—இளையபெருமாளைத் துணைகொண்டு செல்வர்; அடியேனுக்கோ ஒரு துணைவருமில்லை; *கலையுங் கரியும் பரிமாவும் திரியுங் கானம் கடந்து போய்ச், சிலையுங் கணையுந் துணையாகச் சென்றான் வென்றிச் செருக்களத்து* என்று திருமங்கையாழ்வார் திருவாய்மலர்ந்தருளினபடியே பெருமாளுக்குச் சிலையும் கணையும் போலே அடியேனுக்குக் கலமும் காகிதமுமே துணை. இந்நாள்வரையில் அடியேன் தவறாக ஒன்று எழுதினேனென்று ஒருவர் நிரூபித்ததில்லை. அயுக்தமான அர்த்தங்களைக் கண்டித்து யுக்தமான அர்த்தங்களை ஸ்தாபிக்கும் விஷயத்தில் மதாந்தரஸ்தர்கள் ஸயூத்யர்கள் என்னும் வாசிபாராதே 'அபார்த்தத்தை

வெளியிட்டவர்' என்பதொன்றே ஹேதுவாக வ்யாபரிப்பவனடியேன். அடியேனெழுதுமவற்றை மறுத்தொழிக்க வேணுமென்னு மாசை பலர்க்குத் தோன்றுவதே கிடையாது; எதனாலே? வாய்திறக்க வழியில்லையென்கிற நிச்சயத்தினால். அடியேனுடைய பலபல வாதநூல்கள் பிரதிவாதம் தோன்றப் பெறுமலே விளங்கி வருகின்றனவென்பதை உலகமறியும். வாய்திறக்க வழியில்லையென்கிற நிச்சயம் சிலர்க்கு இருந்துங்கூட "அலுப்தமூர்த்தந்ய விபிக்ரமா:" என்று அடியேன் பலகால் எழுதியிருக்கிற படி தவிர்க்கவொண்ணாத தலைவிதியினாலே சிறிது பிரதிவாதம் செய்ய முன்வந்து பங்கப்பட்டு அநுசயத்தோடே கையொழிந்து அஞ்சலிபண்ணி நின்றமையும் ப்ரஸித்தம்.

இங்ஙனம் "உலகமறியும்" என்றும் "ப்ரஸித்தம்" என்றும் அடியேனெழுதிப்போவதை ஸ்ரீமத் கம்பீரஸூக்தியென்று சிலர் நினைக்கவுங்கூடும். முக்கியமாகச் சில நிகழ்ச்சிகளை இங்கு உணர்த்துகிறேன். அத்வைதி வாவதூகர்களில் ஒருவரான ப்ரஹ்மஸ்ரீ ம. ம. அனந்தகிருஷ்ண சாஸ்திரிகளென்பவர் ஏழெட்டு வருடங்களுக்கு முன்பு சததூஷணீ க்ரந்தத்திற்குக் கண்டனம் போல் சதபூஷணி யென்றொரு நூல் வெளியிட்டு அதை என்னிடம் நேரில் கொணர்ந்து கொடுத்து "இதன் விலை 20 ரூ. இதை நீங்கள் அன்புடன் கொடுக்கவேணும்" என்றார். அப்போதே அப்புத்தகத்தைப் பிரித்துப் பரீக்ஷாரூபமாகச் சில சில விடங்களை வாசித்துப் பார்த்ததில் இது க்ஷணபங்குரமான புத்தகமென்று திடமாகத் தோன்றியதனால் அந்த சாஸ்திரிகளை நோக்கி "சதபூஷணீ வஜ்ரகுடார மென்கிற மறுப்பு நூல் விரைவில் வெளிவரக் காண்பீர்'' என்றேன். 'கண்டனமெழுதுவதற்கு என் புத்தகம் வேண்டியதுதானே, அதற்காகவாவது விலை கொடுத்து வாங்கிக்கொள்ளுங்கள்'' என்றார் சாஸ்திரிகள். இதற்காக ஒரு காசும் கொடுக்கமாட்டேனென்றேன். உடனே புத்தகத்தை யெடுத்துக்கொண்டு விரைந்து சென்றவர் மறுபடியும் திரும்பிவந்து புத்தகத்தைக் கொடுத்துப் போனார். ஏற்கெனவே அவரிடத்தில் நான் பிரதிஜ்ஞை பண்ணினபடி இரண்டு வாரத்திற்குள்ளாகவே சததூஷணீ பூஷண மென்று மறுபெயருடைய சதபூஷணீவஜ்ரகுடாரத்தை வெளியிட்டேன். அதில் நான் விபுலமாக நிரூபித்ததென்னவென்றால் "இந்த சாஸ்திரிகள் சததூஷணியைப் பார்த்தவரேயல்லர்; பார்க்க யோக்கியதையுடையவருமல்லர்; ஸ்வமத பரமதங்களை யறியாதவரிவர்; இன்னின்ன விடங்களிலே இவருடைய ப்ரமப்ரமாத விப்ரலிப்ஸைகளைக் காணலாம்'' என்பதே.

அதற்கு அவர் சில மாதங்கள் பொறுத்து ஒரு பதில் நூல் [வஜ்ரகுடார பரீக்ஷா என்பது] எழுதி வெளியிட்டார். அதற்கு உடனே வஜ்ரகுடார விஜயத்வஜ மென்னும் கண்டன நூலெழுதி வெளியிட்டேன். அத்தோடு அவர் சாந்தராயினர். இதில் ஒரு முக்கிய விஷயம் உலகம் குறிக்கொள்ள வேணும். அந்த விஜயத்வஜத்தின் முடிவில் மூன்று சுலோகங்கள் எழுதி முடித்தேன்; அவையாவன—

శతభూషణీప్రబన్ధాత్ ప్రత్యాఖ్యేయా అశీతి సంఖ్యాకాః ।
విషయా విన్యస్తా ఇహ నైతేష్వేకమపి స ప్రతిక్షేప్తా ॥
ప్రామాణికైర్వచోభిః ప్రత్యాచక్షీత యది తతస్సత్యమ్ ॥
యావజ్జీవమహం స్యాం లేఖనసంన్యాసరచనయా ధన్యః ॥
న్యాయ్యం ప్రత్యాఖ్యానం భూషణ్యకృతేతి పీఠపతివర్యైః ॥
నారాయణస్మృతిశ్చేత్క్రియేత, జితమేవ భూషణీకర్త్రా ॥

இந்த சுலோகங்களின் சுருக்கமான பொருள்கேண்மின்; சதபூஷணி யெழுதிய சாஸ்த்ரிகள் பதில் சொல்லித் தீரவேண்டிய எண்பது விஷயங்களை இங்குப் பொறித்திருக்கிறேன். இவ்வெண்பது விஷயங்களுள் ஒன்றுக்குக்கூட சாஸ்த்ரிகள் மறுப்புரைக்க முடியாது. பிராமாணிகமாக மறுப்புரைத்துவிட்டால் நான் ஜீவித்திருக்கிறவரையில் பேனாவைக் கையில் எடுக்க மாட்டேன், [இது என்னுடைய தீவிரமான சபதம்.] சாஸ்திரிகள் பிராமாணிகமாக எழுதினாலுங்கூட நான் 'இது அப்ராமாணிகம்' என்று சொல்லி சபதத்தை நிறைவேற்றாமலிருக்கவுங் கூடுமாதலால் அதற்கு இடமில்லாதபடி மூன்றாம் சுலோகமியற்றி சதபூஷணீகாரர் பிராமாணிகமாகத்தான் எழுதியிருக்கிறாரென்று ஜகத்குரு பீடாதிபதிகள் எழுதி நாராயண ஸ்ம்ருதி : என்று கையெழுத்திட்டுப் பிரசுரம் செய்துவிட்டால் என்னுடைய தோல்வியை ஒப்புக்கொண்டு சபதத்தை நிறைவேற்றி விடுகிறேன் என்று மூன்றாவது சுலோகத்தில் தெரிவித்திருக்கிறேன். சாஸ்திரிகள் இதையாவது எளிதாக நிறைவேற்றியிருக்கலாம். இதற்கும் அவர்க்கு ஸௌகரியமில்லாமல் போயிற்றென்பதை உலகமறியவேணும்,

இவர்க்குப் பிறகு ப்ரஹ்மஸ்ரீ. போலஹப் ஸ்ரீராம சாஸ்த்ரிகள் கிளம்பினார். இவர் மைலாபூர் ஸம்ஸ்க்ருத காலேஜில் சாஸ்த்ரப்ரவசநகர்த்தா. இவர் த்ரமிடாத்ரேயதர்சநம் என்றொரு ஸம்ஸ்க்ருத நூல் வெளியிட்டிருந்தார். அதில் ஸ்ரீராமாநுஜர் மோசக்காரர் என்று சொல்லி, போதாயநவ்ருத்தி

யென்று ஒரு க்ரந்தமே இல்லாமலிருக்க அது இருப்பதாக வைத்து ஸ்ரீபாஷ்யமாரம்பித்தது வஞ்சனை என்றும், **த்ரமிடபாஷ்யகாரர்** என்று இவர்கள் சொல்லுவது நம்மாழ்வாரையேயல்லது வேறொருவரையல்ல என்றும் இத்யாதிகளான பல தவறான விஷயங்களைப் பொறித்திருந்தார். இதற்கு **சாங்கர சிரோபூஷா** என்னும் பெயரால் மறுப்பு நூல் வெளியிட்டேன். பிறகு வெகுநாள் வாளாவிருந்து கடிதமெழுதுகிற ஸரணியில் தம்முடைய அபிப்ராயத்தை விளக்குவதாகச் சில ஸைடுகள் எழுதியனுப்பினார். அந்த ஸமயம் நாம் டில்லியிலிருந்தோம். அங்கிருந்தே அதற்கும் மிக விரிவான மறுப்பு எழுதியனுப்பி அதை அம்ருத லஹரியில் வெளியிட்டிருக்கிறோம். அவ்வளவோடு அவரும் சாந்தரானார். இவருக்காக நாமெழுதி வெளியிட்ட **சாங்கரசிரோபூஷா**வுக்கு 15—2—59 தினமணிச் சுடரில் வெளிவந்த மதிப்புரையை இதன்கீழ் வெளியிடுகிறோம். அது சுருக்கமாக இருந்தாலும் இருதரப்பு விஷயங்களையும் வெகு நன்றாக விவரித்துக் காட்டியிருப்பதால் வாசகர்களுக்கு மிகவும் பயன்படும். மதிப்புரையெழுதியவர் T. G. S. என்று கையெழுத்திட்டிருக்கிறார். அவர் தடஸ்தராய் நிஷ்பக்ஷபாதராய் ஆழ்ந்து ஆராய்கிற ஆற்றலுள்ளவரென்று அப்போது பலர் மிகவுகந்தார்கள்

## சாங்கரசிரோபூஷா – மதிப்புரை.

## 15—2—1959 தேதியுள்ள தினமணிச்சுடர் அநுபந்தத்தில் வெளிவந்தது.

"[இயற்றியவர் : ஸ்ரீ காஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியார். ஸம்ஸ்கிருத நூல். கிடைக்குமிடம். வைதிக மனோஹரா ஆபீஸ், விஷ்ணு காஞ்சீபுரம்.] 'த்ரவிடாத்ரேயதர்சனம்' என்கிற ஒரு ஸம்ஸ்கிருதநூல் மயிலை ஸம்ஸ்கிருத கல்லூரி புரொபஸர் போலஹம் ஸ்ரீ ராமசாஸ்திரிகளால் இயற்றப்பட்டு வெளியாகியிருந்தது. அதில், பகவத் ராமானுஜருடைய ஸ்ரீபாஷ்யத்தின் தொடக்கத்தில் "பகவத் போதாயநக்ருதாம்" என்று தொடங்கி எழுதப்பட்டிருக்கும் விஷயம் பொய்யானதென்று நிரூபணம் செய்ய முயற்சி கொள்ளப்பட்டிருக்கின்றது. அதாவது, வியாஸர் இயற்றிய ப்ரஹ்மசூத்திரத்திற்கு போதாயனரென்னும் முனிவர் வ்ருத்தியென்னும் பெயரால் விரிவான வியாக்கியானமெழுதியிருந்ததாகவும், அந்த விரிவுரையைச் சுருக்கி டங்கர், த்ரமிடர் முதலானோர் உரை செய்திருந்ததாகவும் கூறி, ஆக இப்பூருவர்களின் கொள்கையையொட்டி ஸ்ரீ ராமாநுஜர் தாம் ஸூத்ரபாஷ்யம் இயற்றுவதாய்ப் பிரதிக்ஞை செய்யப்பட்டது. இதனால் பகவத்ராமானுஜருடைய ஸ்ரீ பாஷ்யம் புராதன மஹரிஷிகளின் மதத்தை யனுசரித்தே தோன்றியதென்பதாகத் தெரிவிக்கப்பட்டதாயிற்று.

மேலேகுறித்த த்ரவிடாத்ரேய தர்சனமெழுதிய போலஹம் சாஸ்திரிகள், ராமாநுஜ பாஷ்யம் மஹாரிஷிகளின் நூல்களைப் பின்பற்றித் தோன்றியதென்பதை ஏற்காதவராய், போதாயனரென்னும் மஹரிஷி ப்ரஹ்ம சூத்திரத்திற்கு வ்ருத்தி கிரந்தமென்று ஒரு வியாக்யானம் செய்ததே கிடையாதென்றும் ராமானுஜ மதமென்பது நூதனமாகவுண்டானதே யல்லது புராதனமான ஒரு நூலையும் மூலமாகக் கொண்டதன்று என்றும். ராமானுஜ மதம் நூதனமென்பதை வேதாந்ததேசிகரும் யதிராஜ ஸப்ததியில் ஒப்புக்கொண்டேயிருக்கிறாரென்றும் ஆளவந்தார் முதலான ஸ்ரீ வைஷ்ணவ ஆசாரியர்கள் குருகூர்ச் சடகோபனென்கிற நம்மாழ்வாரையே த்ரவிடாசார்யராகக் கொண்டவர்களென்றும், நம்மாழ்வாருடைய திருவாய்மொழியையே த்ரவிடபாஷ்யமென்று இவர்கள் வழங்கிவந்தார்களென்றும் எழுதி வைத்திருக்கிறார்.

ஷை சாஸ்திரிகளின் நூலில் கண்ட ஒவ்வொரு விஷயத்தையும் காஞ்சீபுரம் அண்ணங்கராசாரிய ஸ்வாமிகள் தமது இந்த நூலில் தக்க பிரமாணங்களைக் கொண்டு ஆராய்ந்து, கண்டனம் செய்து பகவத் ராமானுஜ மதம் புராதனமே என்பதை ஸ்தாபித்திருக்கின்றார். ப்ரம்ம சூத்திரத்திற்கு போதாயன முனிவர் வ்ருத்தியென்கிற வியாக்யானம் செய்ததுண்டென்பதை சங்கர பகவத்பாதாளுடைய பாஷ்யத்தின் வியாக்யானங்களைக் கொண்டும் மற்றும் அத்வைத மதத்தலைவர்களின் நூல்களைக் கொண்டும் ஸ்தாபித்திருக்கிறார். வேதாந்த தேசிகர் ராமானுஜமதத்தை நவீனமென்று ஒப்புக்கொண்டிருக்கிறாரென்பது மருள் என்று விவரித்துக் காட்டியிருக்கிறார். காஷ்மீரமண்டலத்தில் சாரதா பீடத்தில் சேமிக்கப்பட்டிருந்த போதாயன விருத்தியுரையை ஸ்ரீ ராமானுஜரும் கூரத்தாழ்வானும் வெகு பரிச்ரமப்பட்டுப் பார்வையிட்டு வந்த வரலாறுகளை தக்க ஆதாரங்களுடன் எடுத்துக் காட்டியிருக்கின்றார். ஆளவந்தார் முதலானவர்கள் நம்மாழ்வாரையே த்ரமிடாசாரியராகக் கொண்டார்களென்கிற வாதத்தை விசேஷமாகக் கண்டித்திருக்கின்றார்.

ஆக, 74 பாராக்கள் கொண்ட பத்து பரிச்சேதங்களையுடைய சாங்கர சிரோபூஷா என்னுமிந்த நூல், ஸ்ரீ வைஷ்ணவர்களின் கொள்கைகளைத் திடமாக ஸ்தாபித்திருக்கிறது. ஸம்ஸ்கிருத நடையானது அரிய பெரிய விஷயங்களையும் எளிதாகப் புரிந்துகொள்ளும்படி வெகு லலிதமாக அமைந்திருக்கிறதென்பது விசேஷமாகக் குறிப்பிடத்தக்கது. த்ரிமதஸ்தர்களும் உகந்து வாசிக்கக்கூடிய நூல் இது"

—டி. ஜி. எஸ்.

## இதுதான் தினமணிச்சுடரில் வெளிவந்த மதிப்புரை

வாதப்ரதிவாதங்களில் நாம் எவ்விதமாக நடந்துகொள்கிறோமென்பதை தடஸ்தாகள் ஒருவாறு தெரிந்துகொள்வதற்காகவே இங்கு நாம் ஷெ மதிப்புரையை வெளியிடலானோம். 1959, 60, 61 ஆகிய மூன்று வருடங்களில் வெளியிடப்பட்ட வாத விவாத நூல்களைப்பற்றி இங்கு விவரிக்க விரும்புகின்றிலோம். அவை நம்முடைய ஸ்ரீராமாநுஜனிலும் வைதிமனோஹராவிலும் விசதமாகையாலும் ஸங்கிஹித விஷயங்களாகையாலும் பலர்க்கும் நினைவிருக்குமென்பது பற்றியே இங்கு விவரிக்கவில்லை. நிகழும் 62 ஆம் வருஷத்தில் ஸெப்டம்பரிலும் அக்டோபரிலும் இரண்டு சர்ச்சைகள் நேர்ந்திருப்பதை நம்மவர்கள் யாவரும் உணரவேண்டியது அவசியமென்று இங்கு சுருக்கமாக ப்ரஸ்தாவிக்கிறேன்.

வட இந்தியாவில் சாஸ்த்ரார்த்தமஹாரதீ என்று விருது கொண்ட மாதவாசாரிய ரென்பவர் ஒரு பண்டிதர். இவர் உத்தராதி ஸ்ரீவைஷ்ணவர். ஸ்ரீவானமாமலை மடத்து ஆச்ரயணமுள்ளவராகத் தாமே எழுதிக்கொள்ளுகிறார். அஸ்மதாசார்யரான ஸ்ரீப்ரதிவாதி பயங்கரம் ஜகத்குரு காஞ்சிஸ்வாமி ஸன்னிதியில் வேதாந்தக்ரந்த மதிகரித்தவர். இவர் ஸஹவாஸ தோஷத்தினால் ஸ்ரீவைஷ்ணவ மதத்தில் படையெடுக்கத் தொடங்கியிருக்கிறார். பட்டர் "த்ரயோ தேவாஸ் துல்யாஸ் த்ரிதயமித மத்வைத மதிகம் த்ரிகாதஸ்மாத் தத்வம் பரமிதி" என்கிற சுலோகத்தில் எந்த மூன்று மதங்களை யெடுத்துக் களைந்திருக்கிறாரோ அந்த மதங்களை உயிர்ப்பிக்க இவர் பாடுபடுகிறார். இவர் லோகாலோக மென்று ஒரு ஹிந்திபாஷா (மாஸிக) பத்ரிகை நடத்தத்தொடங்கியிருக்கிறார். அதில் ஐந்தாறு ஸஞ்சிகைகளில் தமது துர்வாதங்களை வெளியிட்டிருந்தார். அவற்றை நாம் சென்ற மாதத்தில்தான் கவனிக்க நேர்ந்தது. அவற்றைப் பூர்த்தியாகக் கண்டித்து லோகாலோகாவலோகநம் என்றொரு சிறுநூல் (வடமொழியில்) எழுதி நமது வைதிகமநோஹராவில் (நெ. 131 ல்) சென்ற வாரத்தில்தான் வெளியிட்டோம். தனிப் புத்தகமாகவும் இதுகிடைக்கும். 60 பைஸா ஸ்டாம்பு அனுப்புகிறவர்களுக்கிது கிடைக்கும்.
மேலே குறித்த விவாதத்திற் காட்டிலும் மிகப் பிரபலமான வொரு விவாதமும் நம்மவர்கள் அவசியம் தெரிந்துகொள்ள வேண்டியதுண்டு. இதைப்பற்றி நாம் 15 - 10 - 62 ம் தேதியில் அம்ருதலஹரியில் வெளியிட்டிருக்கிறோம். வெளி வந்து உலகம் பரவியிருக்கின்றது. அதுகாண்மின்:—

## 15—10—62-ல் அம்ருதலஹரியில் வெளிவந்ததொரு வியாஸம்

## ப்ரஹ்மவித்யாபத்ரிகையும்—அதர்க்கணச் செயலும். P. B. A.

கும்பகோணத்தில் அத்வைதஸபா என்றொரு ஸபை ஸ்தாபிக்கப்பட்டிருப்பதாகவும். அந்த ஸபையின் மூலமாக ப்ரஹ்மவித்யா என்னும் பெயரால் புஸ்தக ரூபமான வொரு பத்ரிகை வெளியிடப்பட்டு வருவதாகவும் ஸமீபகாலத்தில் நமக்குத் தெரியவந்தது. இது மாஸிக பத்ரிகையா? அல்லது த்ரைமாஸிக பத்ரிகையா? அல்லது வார்ஷிக பத்ரிகையா? என்பது தெரிந்துகொள்ள முடியவில்லை. ஸௌகர்யமானபோது வெளியிடப்படும் பத்ரிகையென்று காண்கிறது. சென்ற 1961 ஆண்டின் ஏப்ரல்மீ முதல் டிஸம்பர் வரைக்கும் சேர்த்து ஒரு சிறு புத்தகம் வெளியிடப் பட்டுள்ளது. Vol. 14. No. 2. 3. 4. என்று லக்கமிடப் பெற்றுள்ளது இது. இதில் வட மொழியில் 5 வியாஸங்களும், தென்மொழியில் 4 வியாஸங்களும் வெளிவந்திருக்கின்றன. இதனால் இப் பத்ரிகையில் உபய பாஷா வியாஸங்களும் வெளியிடப்பட்டு வருகின்றன போலும் என்று அநுமானிக்கலாகிறது.

உலகத்தில் பல மதங்கள் தோன்றி யிருக்கின்றன. எல்லா மதங்களையும் தோன்றுவித்தவன் எம்பெருமானே யென்பது பெரியோர்களின் கொள்கை. "வணங்குந் துறைகள் பல பலவாக்கி மதிவிகற்பால் பிணங்கும் சமயம் பலபலவாக்கி அவையவை தோறு அணங்கும் பல பலவாக்கி நின் மூர்த்தி பரப்பி வைத்தாய்" என்று திருவிருத்தத்தில் நம்மாழ்வாரருளிச்செய்த பாசுரம் மேற்குறித்த கொள்கையை வற்புறுத்துகின்றது. அவரவர்கள் தம் தம் மதக் கொள்கைகளைப் பரவச் செய்து தாம் தாம் முன்னேற்றமடையக் கருதுவது நன்றேயன்றித் தீதன்று. தம் தம் மதத்திலுள்ள இன்சுவைப் பொருள்களை பைடுத்துரைத்து விவேகிகளின் உள்ளத்தை உகப்பிக்க உரிமை யுடையார்களேயாவர் உலகத்தினர்யாவரும். ஆனால் ஆசார்யபீடத்தையலங்கரித்து லோகமாந்யர்களாக விளங்கும் ஆசார்ய ஸார்வபௌமர்களை அவஹேலையாகவும் அநுவாதத்திற்கும் அநர்ஹமாகவும் நிந்திப்பதென்பது பாமரக்ருத்யமே யொழிய விவேகிக்ருத்யமாகாது. ஒருவர் தம்முடைய மனைவியின் கற்பு முதலிய நலங்களைக் குறித்து எவ்வளவும் பேசலாம். ஆனால் அதையொரு வியாஜமாகக் கொண்டு பிற மாதர்களைப் பலவாறு நிந்திப்பது பாங்கன்று என்பதை நாம் சொல்லவேணுமோ?

சமயக் கோட்பாடுகளில் குற்றங்குறைகளிருப்பதாகத் தோன்றினால் அவற்றை எவ்வளவும் எடுத்துரைக்கலாம்; அதைவிட்டு (அல்லது) அவ்வளவோடு நில்லாமல் மூவுலகும் போற்ற நின்ற பேராசிரியர்களைப் பெயர் குறித்து ஸ்வஸஜாதியர்களும் வெறுக்கும்படியாகவும் அருவருக்கும்படியாகவும் அஸஹ்ய தூஷணங்களைப் பரப்பி ஏடுகளை நிரப்புவதென்பது அஸஹ்யாபசாரத்தினுங் கொடியது.

மேலே குறித்த ப்ரஹ்மவித்யா பத்ரிகையின் ஒரு ஸஞ்சிகை மட்டுமே நமது பார்வைக்கு வந்தது. அதுவும் மஹதா ப்ரயாஸேந கிடைத்தது. கும்பகோணம் அத்வைத ஸபையார் வெளியிடும் இப்பத்ரிகை ஸ்வகோஷ்டிகளில் மட்டுமே ப்ரசாரம் செய்யப்படுவதாகவும், மதாந்தரஸ்த பண்டிதர்களின் பார்வைக்கு இலக்காகாதபடி வெகு ஜாகரூகதையுடன் காக்கப்படுவதாகவும் தெரியவருகிறது. அச்சேறின பத்ரிகை ரஹஸ்யமாகவே இருந்துவிட முடியாதன்றோ. அதனால் சில ஸ்ரீவைஷ்ணவர்களின் கண்ணில்பட்டு, அதில் ஆளவந்தார் எம்பெருமானார் நிகமாந்த மஹாகுரு நடாதூரம்மாள் முதலிய பூர்வாசார்யர்களைப் பற்றி உக்ரதூஷணைகளிருப்பதாகத் தெரியவந்து நமக்குத் தெரிவித்தார்கள். அவர்களுக்கும் அந்தப் பத்ரிகை ஸொந்தமாகக் கிடைக்கவில்லையாம். மறைத்து மறைத்து வைத்துக் கொண்டிருந்தவர்களிடத்து ச்ரமப்பட்டுப் பார்வையிட்டு "......இந்த நிந்தாக்ரந்தி தேவரீர்களுக்குக் கிடைக்கவில்லையோ?" என்று கேட்டிருந்தார்கள். உண்மையில் அது நமக்குக் கிடைத்திராமையால், ஸஹ்ருதய ஸஹ்ருந்மணிகள் பலர் அவச்யமாகத் தெரிவித்ததன் மேல் நாம் அப்பத்ரிகையை ஸம்பாதிக்க முயன்றோம். ஸத்யமாய் இரண்டுமாஸ காலம் பாடுபட்டு அதனை ஸம்பாதித்தோம். 26-9-62ல் அது நமக்குக் கிடைத்தது. கொடுத்தவரும் ஒரு வாரத்திற்குள் இதை நமக்குத் திருப்பித் தரவேணுமென்று சொல்லியே கொடுத்தார்.

இப்பத்ரிகைக்கு வருடசந்தா 5 ரூ. என்றும், ப்ரத்யேக ஸஞ்சிகை ஒன்றுக்கு 1-8-0 விலை யென்றும், இது இன்னவிடத்தில் கிடைக்குமென்றும் பிரசுரம் செய்யப்பட்டிருக்கின்றதே யொழிய, கிடைக்க வழி கிடையாது. இப்பத்ரிகையின் அதர்க்கணச் செயலை சிறிது விவரிக்கக் கேண்மின். மேலே குறிப்பிட்ட இதழில் விசிஷ்டவாதஸங்கரஹமென்று ஒரு ஸம்ஸ்க்ருத வியாசம் வெளி வந்திருக்கின்றது. இது ஸசேதமாக நிற்கிறது. பதினாறு பக்கம் மட்டுமே இப்போது வெளிவந்துள்ளது. இதற்கு விசிஷ்டாத்வைஷபஞ்ஜன மென்றும் பெயராம். ஆளவந்தார் எம்பெருமானார் வேதாந்தவாசிரியர் நடாதூரம்மாள் முதலான ஆசிரியர்கள் உலகை வஞ்சிக்க வைதிக வேஷம் பூண்டு வந்தவர்களென்றும். வேதாந்த வாக்கியங்களுக்கு விசிஷ்டாத்வைத பரத்வத்தை ஏறிட்டுரைத்து லோக க்ஷோபத்தை யுண்டாக்கினவர்கள் என்றும், இவர்கள் ப்ரத்யக்ஷவநர்களென்றும்......இப்படி பலபல உபாலம்பங்கள் மலிந்தது இச்சுவடி. எழுதினவர் ராமகிருஷ்ண: என்றிவ்வளவே காண்கிறது. அவருடைய குலகோத்ர க்ராமாதிகள் எதுவும் தெரிவிக்கப் படவில்லை. "நஞ்சுடைமை தானறிந்து நாகம் கரந்துறையும்." அவர் நிந்தைகளினால் சுவடியை நிரப்பியிருந்தாலும் நமக்கு விஷயமே ப்ரதானமாதலால் அவருடைய சுவடியை ப்ரத்யக்ஷரம் கண்டித்து ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தின் ப்ராமாணிகத்வத்தையும் பரம பாவநத்வத்தையும் விளக்கி விசிஷ்டாத்வைத விஜயத்வஜ மென்கிற ஸம்ஸ்கிருத நூல் எழுதி வருகிறோம். இதன் முதற்பகுதி வெளியாகி யிருக்கின்றது. தேவநாகரலிபி. வேண்டுபவர்கள் 60 நயாபைஸா ஸ்டாம்பு அனுப்பிப் பெற்றுக்கொள்வது. —P. B. ANNANGARACHARYA, L. Kancheepuram

# திருப்பாவை ஜீயர்

நமது ஸ்ரீராமாநுஜன் 162ல் (ஸமீபகாலத்தில்) திருப்பாவை ஜீயர் என்றொரு சிறு நூல் 20 பக்கம் கொண்டது வெளியிடப்பட்டது. அதைப்பற்றியும் திருவல்லிக்கேணி வானமாமலை மடத்தில் அதையே மகுடமாகவிட்டு ஏதோ பேச்சு வெளிவந்ததென்று புரட்டாசி முதலில் கேள்விப்பட்டோம். "அப்படிப்பட்ட அர்த்த விசேஷங்களை வர்ஷித்து ரஸிகர்களை உகப்பிக்க இவர் பாக்யஹீநராயிருந்தாலும் அருமருந்தாகக் கிடைத்த விஷயங்களையாவது ரஸிக்கக்கூடாதா? அதற்குக் குறையும் கூறவேணுமா?" என்று இவரைச் சேர்ந்தவர்களே பலரும் சொல்லிக்கொண்டதனால் அதைப்பற்றி நாம் ஒன்றும் பிரஸ்தாவித்திலோம். ஆனாலும் உலகில் ரஸிகர்கள் ஆங்காங்கு இருப்பதால் ஒரு மஹாரஸிக பண்டிதருடைய வியாஸம் இதுபற்றியது 15—10—'62 தேதியுள்ள தேவஸ்தான பத்திரிகையில் வெளிவரக் கண்டோம். அஃது இங்கு உபஹரிக்கப்படுகிறது.

# கோதை தமிழும் திருப்பாவை ஜீயரும்

[விட்டலாபுரம் வி. எஸ். வெங்கடாசாரியர், ஸ்ரீரங்கவாஸி]

சொல்தான் மனிதனுக்குள்ள பெருஞ்செல்வம். அது வசனம் கவி என்று இரண்டுவிதம். மானிடர் அனைவரினும் வீரனுக்குத்தான் தனிப்பெருமை. அதுபோல, பாடல்தான் பேச்சில் தனிப்பட்டு விளங்குகிறது. கார்லைல் என்னும் ஆங்கிலப் பேரறிஞர் பாடல்தான் பெருமையாய் விளங்குகிறது என்கிறார். எல்லா விஷயங்களையும் கவிதையாகவே காணலாம். அரியபெரிய விஷயங்கள் கூட கவிதை வடிவமாயே நன்குகத் தெரிகிறது. "கேட்டார் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும் வேட்பமொழிவதாம் சொல்" என்கிறது குறள். இதற்குமேல் யாதும் சர்ச்சிக்க வேண்டியதில்லை.

இனி பகவத் ஸம்பந்தமான இலக்கியங்களைப் பார்ப்போம். ராமாயணம் (ராமகதை) காவ்யம்; அதிலும் ஆதி காவ்யமாய் விளங்குகிறது. ஆதியிலேயே ராமகதை வசநமாயல்லாமல் காவியமாக எழுதப்பட்டது. வைஷ்ணவர்களுக்கு உயிர்நாடியாய் விளங்கும் திவ்யப் பிரபந்தம் தமிழ்ப் பாடலாகத் திகழ்கிறது. பூர்வாசார்யர்கள் அருளிய ஸ்தோத்ரங்கள் யாவும் சுலோக ரூபமாகவே உள்ளன. இவற்றில் ஸ்ரீராமாநுஜர் ஒருவர் மட்டுமே தம்முடைய பெரிய ஸ்தோத்ரத்தை கத்யமாய் வசன நடையில் அருளிச்

செய்தார். அவருடைய கிரந்தங்கள் பாஷ்யங்களும் வாதங்களுமாக இருப்பவை கூட கவிதா ரஸம் நிரம்பியவை. யாவருக்கும் கவிதா ரஸம் கவிதையான செய்யுளில்தான் பக்குவமாகிறது. ராமாநுஜருக்குள்ள கவிதா ரஸம் பலருக்கும் அரிதான (வசன நடை) கத்யத்தில் அமைந்தது. ராமாநுஜருடைய கத்ய த்ரயம், அதிலுள்ள பகவத்வர்ணநம் முதலியவை தனி அநுபவம்; தனியாக ஒரு பெரிய கட்டுரை எழுதி அனுபவிக்க வேண்டியது.

கவியின் பாட்டாக அமைந்த பாடல்களில் ஊன்றி அநுபவித்து முக்குளி போடுபவர்கள்தான் பாக்யசாலிகள். ஆழ்ந்த படிப்பும், ஆராய்ச்சி நிறைந்த வாழ்வுமுள்ளவர்களே கவிதா ரஸத்தில் மூழ்கிக் கரையேறுவர். கவிதா ரஸாநுபவம் இயற்கையாக அமையப் பெறுதவர்கள் ரஸிகனுன வித்வானிடம் சென்று கேட்டு ரஸம் யாதென்று உணரவேண்டும். இத்தனை காலமும் நமக்கு பெருகி வந்துள்ளது காவ்ய ரஸம். இந்தக் கால வெள்ளத்தை சற்றுப் பின்நோக்கி ஆராய்ந்தால் மநுஷ்ய வர்க்கத்தின் வளர்ச்சி ராஸிக்யம் இரண்டோடு அதை அழித்துவரும் சோம்பலையும்கூட நன்கு உணரலாம். வைஷ்ணவ தத்வத்தில் சரம சுலோகம் என்பது பெரிய மந்திரம். அது வராஹ சரம சுலோகம் ராம சரம சுலோகம் கிருஷ்ண சரம சுலோகம்—என மூன்று. வராஹநாயனுர் வார்த்தையை விட ராமனுடைய வார்த்தை மிருது; அதைவிட எளிதாகிறது கண்ணன் (கீதாசார்யன்) வார்த்தை. திவ்யப் பிரபந்த பாடல்கள் யாவற்றிலும் ஆண்டாள் திருப்பாவை கீதா சரம சுலோகம் போன்றது.

வையம் குருடன்றே மாமறை நூல் பொய்யன்றே
அய்யனுரைத்த தமிழ் யாரறிவர் — வையத்துக்கு
ஊன்றுகோல் எந்தை எதிராசர் உத்தரித்த
மூன்றுகோல் காண்பதற்கு முன்.

ராமாநுஜரைப் பற்றி பல பாடல்கள் பல பல ஞானிகள் பாடினுலும் இந்த ஒரு வெண்பாவைக் கொண்டே ராமாநுஜரை நாம் எப்போதும் ஸேவிக்க வேண்டும்.

திவ்யப் பிரபந்த வியாக்யாநங்களில் ஆங்காங்கு ராமாநுஜர் காட்டின அர்த்த விசேஷங்கள் கலந்துள்ளன. அந்த அர்த்த விசேஷங்களை அநுஸரித்தே பிற்பட்ட ஆசார்யர்கள் பல வியாக்யாநங்கள் எழுதினர். வைஷ்ணவப் பயிர் நன்ருக விளைந்து இன்றைக்கும் உலகம் விஷ்ணு வைபவத்தால் வாழக் காரணம் ராமாநுஜர் ஸூசகமாகக் காட்டிக் கொடுத்த அர்த்த விசேஷங்களே.

ராமாநுஜருடைய பெருமையை இப்படிச் சொல்லுவது அநுபவிப்பது அவருக்கு முற்பட்ட நாதயாமுநாதிகளான பூர்வர்களைக் குறை கூறியதாகாது.

நாநல மென்னும் நலனுடைமை அந்நலம்
யாநலத் துள்ள தூஉம் அன்று. —என்று குறள்.

இதனை மெய்ப்பிக்கப் பிறந்தவர்கள் சிலர். மஹாவித்துவான் அண்ணங்கராச்சார்ய ஸ்வாமி நாநலம் படைத்தாரில் ஒருவர். படிப்பு பேச்சு எழுத்து—என்ற முத்திறமும் அவரிடம் முதிர்ந்து காண்கிறது. திருப்பாவையை அவர் இதுவரை முப்பதாயிரம் தரம் பல கோஷ்டிகளில் கோயில்களில் ஸேவித்து முப்பது வருஷத்துக்கு மேலாக பெரியவாச்சான் பிள்ளை முதலானுரின் வியாக்கியாநங்களை விளக்கி உபந்யஸித்த அநுபவம் உள்ளடங்காமல் ததும்பி வழிவதாக 5, 6 விதமாய் வியாக்யாநங்களும் தாமே எழுதி வெளியிட்டாயிற்று. அவற்றிலிருந்து கடைசியாகக் கிளம்பியது திருப்பாவை ஜீயர் என்னும் கிரந்தம். திருப்பாவையைப்பற்றி ஸ்வாமி யெழுதிய கிரந்தங்கள் அதற்குப் பல ஆபரணங்கள் அணிவித்தாற்போல, இப்போது கடைசியாக எழுதின திருப்பாவை ஜீயர் என்னும் கிரந்தம் பொன்மேல் பூ வைப்பதாக ஆபரணமணிவித்துப் பூ சூட்டியதாயிற்று. திருப்பாவை முழுவ தையும் ராமாநுஜ வைபவமாக அமைக்கும் இந்த நூல் ஆண்டாள் திருவுள்ளத்துக்குப் பாங்காகவே பலித்தது.

சமீபத்தில் சென்னையில் ஒரு வித்வானிடம் உபந்யாஸம் கேட்டேன். திருப்பாவைக்கு மார்கழி நோன்புதான் லக்ஷ்யம். அது சரணுகதி சாஸ்திரம். வேறுவிதமாகச் சிலர் சொல்லுவது பூர்வாசார்யர்களின் திருவுள்ளத்துக்கு ஒவ்வாது — என்று போயிற்று உபந்யாஸம். இது அண்ணங்கராச்சார்யரைத் தாக்கும் பேச்சு என்றே உணர்ந்தேன். இது அந்த வித்வானுக்குள்ள பண்டிதக் காய்ச்சலும் மறதியுமாகிறது. திருப்பாவைக்கு நாலைந்து வியாக்யாநங்கள் உண்டு, அவை அனைத்திலும் ஒன்றையே யாவரும் சிறப்பாகக் கொள்கின்றனர். அண்ணங்கராச்சார்யரும் ராமாநுஜர் ஸ்தாபித்த ஸிம்ஹாஸநாதிபதிகளின் ஒரு கிளையான அஷ்டதிக் கஜ பரம்பரையில் அவதரித்தவர். அவருடைய வித்தையை அவர் பேச்சுத் தவிர புஸ்தகங்களாலும் பத்திரிகைகளாலும் அறியலாம், அவரைத் திருமங்கை மன்னனுயும் உடையவராயும் நம்பிள்ளையாயும் மணவாள மாமுனிகளாயும் மதித்து பல்லாண்டு பாடுகிறவர்கள் பல்லாயிரவர் உண்டு. அழகெனும் அழகும் ஓர் அழகு பெற்றதே — என்றபடி ஆழ்வார்களின் அருளிச் செயலுக்கு அழகு செய்தவர்களில் அண்ணங்கராச்சார்யரும் ஒருவர். (V. S. வெங்கடாசாரியர். விட்டலாபுரம்.)

## உபஸம்ஹாரம்.

இந்த ஸ்ரீராமாநுஜன் ஸஞ்சிகை இங்ஙனே அமையுமென்று நாம் எதிர்பார்க்கவில்லை. "துர்விஜ்ஞாந ஸ்வஹ்ருதயமஹோ தைவமத்ரப்ரமாணம்" என்ற பாதுகாஸஹஸ்ரஸூக்திப்படி தைவ ஹ்ருதயமே ப்ரமாணமாக முடிவுபெற்றது.

ஸ்ரீவைஷ்ணவதாஸன் **ஸ்ரீகாஞ்சி. அண்ணங்கராசாரியன்.**

# இராவணனுடைய ஆசாரியர்கள்

பிடித்த பிடி விடாமையில் மூர்க்கனும் முதலையும் ஒரு வகுப்பு என்கிருர்கள். மூர்க்கனுக்கு உலகமெல்லாங்கூடி உபதேசஞ் செய்தாலும், சிறிதும் பயன்படுவதில்லை. இராவணனுக்கு எத்தனை பேர்கள் இதமுரைத்தனர்? எவ்வெவ்விதமாக உபதேசங்கள் தந்தனர்? அதன் பலன் என்னுயிற்று என்பது உலகுக்குத் தெரிந்திருந்தாலும் விசதமாக ஈண்டு நிரூபிக்கப்படுகிறது. ரஸிகர் களிக்க.

1. இராமபிரான் கரதூஷணுதி வதம் செய்து முடித்தவுடனே அகம்பனன் ஜனஸ்தானத்தினின்றும் இலங்கைக்குச் சென்று இராவணனுக்குச் செய்தி கூற, அவன் துயரமும் கோபமுமுற்றுத் தன் தேரின் மேலேறித் தண்டகாரணியத்தில் வசிக்கும் தாடகா புத்திரனை மாரீசனிருப்பிடம் வந்தான். மாரீசனல் முறைப்படி மரியாதை செய்யப்பெற்றவவன் அகம்பனனிடத்தில் தான் கேள்விப்பட்ட செய்திகளைக் கூறி, இராமனுக்குத் தீங்கு விளைவிக்கத் தான் வந்திருப்பதாகச் சொல்லி, அதற்கு நீ துணைபுரிய வேண்டுமென்ருன். உடனே மாரீசன் அவனுக்கு இதமுரைக்கத் தொடங்கினன். "அப்பா ராவணு! உனக்கு இந்த துர்ப்புத்தியை யுண்டாக்கினவன் யாவன்? உனக்கு நண்பன் போலவிருந்து உண்மையிற் பகைவனுகி உன்னைக் குடும்பத்தோடுங் கெடுக்க நினைத்து உனக்கு இந்த துர்ப் புத்தியை விளைத்தவன் யாவன்? உன்னுடைய மேன்மைகளைப் பொறுக்கமுடியாமல் உன்னையும் அரக்கர் குலத்தையும் அடியோடு பாழாக்கவெண்ணியே இப்படிப்பட்ட விபரீத புத்தியை எவனே உனக்கு உண்டாக்கிவிட்டான். அவனைப் பரம சத்துருவென்று நீ நினைக்க வேண்டுமே. ராவணு! இராமனுடைய பெருமையை நீ அறியாய். ராக்ஷஸ வேட்டையாடுவதில் நிகரற்ற பராக்ரமசாலியான ராமனுகிற சிங்கத்தை நீ வலுவில் சென்று சண்டைக் கிழுத்தாயாகில் நீயும், ராக்ஷச குலமும் பூண்டற்றுப்போய் யமன் வாயில் விழவேநேரும். லங்கேச்வரா! நீ மனத் தெளிவுபெற்று லங்கைக்குத் திரும்பிச்சென்று மறுபடியும் இத்தகைய துர்ப்புத்தி சிறிதும் உண்டாகப்பெறுமல் இனிது வாழ்வாயாக!" என்று கல்லும் கரையும்படி இதமான சொற்களைச் சொல்லிப் போக விட்டனன்.

2. இங்ஙனே இதமுரைக்கப்பெற்ற இராவணன் இலங்கைக்கு மீண்டு சென்றபின் அங்குவந்து சேர்ந்த சூர்ப்பணகையின் சொற்களால் மனந் திரியப்பெற்று, மறுபடியும் மாரீசனிடமே ஓடிவந்து பழையபடியே தன்னெண்ணத்தைக் கூறி இதற்கு நீ துணைபுரிந்தே யாகவேணும் என்று மிகவும் நிர்ப்பந்தித்தான். அப்போது மீண்டும் மாரீசன் மிக விரிவாக ஹிதோபதேசஞ் செய்தனன். "அரக்கர் தலைவனே! நீ சாரர்களையனுப்பிச் சத்துருக்களின் பலாபலங்களைத் தெரிந்துகொள்ளவில்லை; இராமன் சௌர்யவீர்ய பராக்ரமநிதி யென்பதையும், தேவாதி தேவனென்பதையும் நீ தெரிந்துகொள்ளவில்லை. ஐயோ! உனக்கேன் இப்படி விபரீத புத்தியுண்டாயிற்று? நீ நினைக்கிறபடி இராமனிடத்தில் ஹேயகுணம் சிறிதுமில்லையே; அவன் ஸமஸ்தகல்யாண குணக்கடல் காண். அரக்கர் குலத்தை வேரோடு பிடுங்கியழிக்கும் வல்லமை வாய்ந்த இராமனிடம் அபசாரபுத்தி கொள்ளாதே. இராமனது பராக்கிரமமும், தேஜஸ்ஸும் அளவிட முடியாதவை. எரிகிற நெருப்பை அணுக நினைப்பதுமுண்டோ? உனக்கு உயிரின்மேல் பற்றிருக்குமாகில், இன்பமாக இன்னமும் வாழவேணுமென்றிருப்பாயாகில் இராமனுக்குக் கெடுதிசெய்ய நெஞ்சிலும் நினையாதே. எதிர்த் தலையிலுள்ள சக்தி விசேஷங்களை உள்ளபடி தெரிந்துகொள்ள உனக்கு சக்தியில்லையே. அவ்விராமனிடம் நான் பட்ட பாடுகளை நெஞ்சால் நினைக்கும்போதும் உடல் நடுங்குகின்றதப்பா! இராமனுக்கு

எள்ளளவும் தீங்குசெய்ய நினைத்தல் தகாது. என் பேச்சை மீறி நடந்தாயாகில் உனக்குக் கேடு விளைந்தேதீரும். ராவணா! எங்குப் பார்த்தாலும் எனக்கு ராம மயமாகவே காண்கிறது. பலவாயிரம் ராமமூர்த்திகளைக் காண்பதுபோலுள்ளதப்பா. அவ்விராமனது அம்புகளினின்று நான் எப்படியோ தப்பிப் பிழைத்து இனி ஒருகாலும் அப் பெருமானிடத்து அபசாரப் படலாகாதென்று உறுதிகொண்டு தவக்கோலம் பூண்டு காலங்கழித்து வருகிறேனப்பா. நான் எப்பொழுதும் ராமனை நினைத்தே திகில்பட்டுக்கொண்டிருப்பதால் "ர" என்னுமெழுத்தை முதலிற்கொண்ட ரத்னம், ரதம் முதலான பேர்களுங்கூட எனக்குப் பயத்தை விளைவிக்கின்றனகாண். அவ்விராமனது பிரபாவம் என்னொருவனுக்கே தெரியும். நீ உயிரோடிருக்க விரும்புவாயாயின் இராமனது பிரஸ்தாவத்தையுங்கூட என்னிடம் செய்ய வேண்டா. எங்கும் ப்ரியமான வார்த்தைகளைச் சொல்லுவார் பலர் கிடைப்பர்கள்; அப்ரியமாயும் ஹிதமாயுமுள்ள பேச்சைச் சொல்லுவாருமிலர், கேட்பாருமிலர். நான் சொல்லும் ஹிதம் உன் நெஞ்சிற் படவில்லையே. ராவணா! நீ ராமனுடன் விரோதப்படுவாயாயின் நிச்சயமாக உன் பந்துமித்திரர்களுடன் மாண்டுபோவாய். ஐயோ! ராக்ஷச வீரர்கள் ராமபாணங்களால் அடியுண்டு தரையில் வீழ்வதை நீ காணப்போகின்றனை; லங்காபுரம் முழுதும் ராமபாணங்களால் சூழப்பட்டு அக்கினிச் சுவாலைகள் நாற்புறமும் நிரம்பப்பெற்று வீடுகளெல்லாம் நீறாகப்போவதை நீ காணப்போகின்றனை. [இத்யாதிகள் மாரீசோபதேசங்கள்.]

3. மாரீசனுடைய உபதேசத்திற் கடுத்தபடி பிராட்டியின் உபதேசம் இராவணனுக்குக் கிடைத்திருக்கிறது. இதுவும் பல தடவைகளில் கிடைத்தது. சிலவுபதேசங்கள் கேண்மின்; ராவணா! ராமன் ஆகாசத்திலுள்ள சந்திரனைக் கீழே விழத்தள்ளவும், கடல் முழுவதையும் வற்றச் செய்யவும் வல்லவன். உனக்கு ஆயுள் முடிந்துவிட்டதனாலேயே அவரிடத்தில் பகையுண்டாயிற்றுனக்கு; உனது லங்காபுரி விரைவில் விதவையாகப்போகின்றபடியால்தான் இராமனைப் பலவாறு இகழ்ந்து பேசுகின்றாய்; மஹாதேஜஸ்வியும் தைவ சக்தி வாய்ந்தவனுமான இராமன் கரதூஷணாதிகளான பதினாலாயிரம் ராக்ஷசர்களை அவலீலையாகப் பொடிபடுத்தினவன் காண்; அந்த ரகு குல ராமன் உன்னையும், உன்னைச் சேர்ந்தவர்களையும் ஒரு நொடிப் பொழுதில் வதைக்க வல்லவன் காண். (இது ஆரணியகாண்டவுபதேசம்; இனி ஸுந்தரகாண்ட வுபதேசம்.) இராவணா! இவ்விலங்கா புரியில் எல்லாச் சரக்குகளையும் கொண்டு சேர்த்து வைக்கின்றனையே, உனக்கு நல்ல வுபதேசங்கள் செய்யவல்ல ஸத்புருஷர்களைக் கொண்டு சேர்த்து வைத்துக்கொள்ளவில்லையா? ஸத்துக்கள் இருந்தும் அவர்களை நீ அநுவர்த்திக்கவில்லை போலும். உனக்குள்ள விபரீதபுத்தி இதை நன்றாகக் கோட் சொல்லித் தருகின்றதே. ராவணா! நீ இவ்விலங்கையில் சுகமாக வாழ விரும்புவாயாயின், பயங்கரமான சாவை விரும்பாதிருப்பாயாயின் இராமனை நண்பனாகச் செய்துகொள்; அவர் தம்மிடம் உறவு கொண்டாடி வருபவர்களை ஒருபோதும் கெடுக்கமாட்டார். நானும் உனக்காக அவரை வேண்டி உன் பிழையைப் பொறுத்தருளும்படி செய்வேன். ராக்ஷஸாதமா! ஜனஸ்தானத்திலுள்ள அரக்கரனைவரும் இராமனால் மாண்டொழிந்ததை யறிந்து நீ அவரோடு எதிர்நின்று போர்புரிய வல்லமையற்றுப் பல வஞ்சகங்கள் செய்தனை; சார்ங்கமென்னும் வில்லாண்ட அவருடைய வில் நாணொலியை விரைவில் கேட்பாய்! இராமனாகிற கருடன் ராக்ஷஸ ஸர்ப்பங்களை அவலீலையாகக் கவர்ந்து கொல்ல வல்லவன். புலிகளினெதிரே புல்லிய நாய் நிற்க மாட்டாதவாறுபோல, அவ்விராம லக்ஷ்மணர்களின் முன்னிலையில் நீ நிற்கவும் மாட்டாதவன். இராம பாணங்களுக்கு இலக்காகித் தொலையவேண்டுவதுதான் உனது தலைவிதிபோலும் [இத்யாதிகள் ஸீதாபிராட்டியின் உபதேசமொழிகள்.]

4. பிராட்டியின் உபதேசத்திற்குப் பிறகு மாருதியின் உபதேசம் இராவணனுக்குக் கிடைத்திருக்கிறது. ராக்ஷஸேச்வரா! உனது நண்பனான சுக்ரீவன் உனக்குச் சொல்லி யனுப்பிய இத வசனங்கள் பலவுண்டு. நானுமுரைக்கிறேன் கேளாய்! வாயுதேவனின் புதல்வனும் அநுமனென்பவனுமான நான் சீதைக்காக நூறு யோசனை விஸ்தாரமுடைய கடலைக் கடந்து இவ்விடம் வந்திருக்கிறேன். தவ வொழுக்கங்களிற் சிறந்து நீதி சாஸ்திரங்களையு முணர்ந்து கீர்த்திபெற்று விளங்குகின்ற நீ நன்று செய்தாயல்லை. உன்னைப்போன்ற புத்தி சாலிகள் செய்ய முயற்சிகொள்ளமாட்டாத காரியத்தைச் செய்தாயே. ஸ்ரீ ராமலக்ஷ்மணர்கள் சீறிச் சிவந்து நிற்பர்களேல் அவர்கள் தொடுக்கும் அம்புகளின் முன்பு நிற்க வல்லவன் தேவர்களிலும், அசுரர்களிலும், மற்றுள்ளார்களிலும் எவனுமில்லையென்று உணருவாயாக. ராவணா! இராமனுக்குக் கெடுதிசெய்து சுகம்பெற விரும்புவாருமுளரோ? இராமனிடம் நீ கொண்ட பகையை விட்டிட்டாயாகில் உனக்கு நல்லகாலமுண்டு. இல்லையேல் குலத்தோடும் விநாசமடைவாய். இராமனைச் சாமானிய மனிதனென்று நினையாதேகொள்; உன்னைப் படாத பாடும் படுத்தின வாலியை ஒரே பாணத்தினால் முடித்திட்டவனென்று கேட்டிலையோ? நான் ராம பக்ஷபாதத்தினால் சொல்லுபவனல்லேன்; நடுநிலைமை வாய்ந்து உனது ஹிதத்தைக் கோரிச் சொல்லுகிறேனிவ்வளவும். ராவணா! தேவேந்திரனையினும், முப்புரங்களை யெரித்த முக்கண்ணனையினும் அவனது தந்தையான பிரமதேவனேயாயினும், இவர்களனைவரும் ஒன்று கூடியாயினும் இராமனுக்குச் சிறிதளவும் தீங்கிழைக்க முடியாதுகாண்; இராமன் எவனை நிக்ரஹிக்கத் திருவுள்ளம் பற்றுகிறானோ அவனை அநுக்ரஹிக்க ஒருவனாலுமாகாது. இத்யாதிகள் அநுமனால் கிடைத்த உபதேச நன்மொழிகள்.

5. இதற்குப் பிறகு விபீஷணாழ்வானால் இராவணனுக்குக் கிடைத்த வுபதேசங்கள் அளவு கடந்தவை. அவை ஒரு தடவையல்ல. பலதடவை கிடைத்திருக்கின்றன. "இராமன் மஹா பராக்ரமசாலி; தருமமூர்த்தி; அவனோடு வீண் விரோதம் நமக்குத் தகாது; அவனிடம் அபசார க்ஷாமணம் செய்துகொண்டால் நாம் நாசமடையாமல் நெடுங்காலம் வாழலாம். எவ்வளவு ஆலோசித்தாலும் நமக்குத் தோல்வியேயொழிய வெற்றியுண்டாக இடமேயில்லை. நம்முடைய ராக்ஷச வீரர்களான மந்திரிகள் உன்னுடைய முகமலர்ச்சிக்காக ஏதோ அஸம்பத் தங்களைப் பேசி உன்னை மயக்குகின்றனர். உனக்கு நேரவிருக்கும் கஷ்ட நிஷ்டூரங்களை நன்கறிந்து நான் உனக்குரைக்கும் இதமொழிகள் அந்தோ! உன் செவியிற் புகவில்லையே. இம்மூவுலகிலும் எங்குச் சென்றாலும் விடாது தொடர்ந்து கொல்லக்கூடிய ராமபாணங்கள் இலங்கையிற் புகாவண்ணம் தடை செய்யக்கூடிய நல்லுபாயத்தை எவ்வளவு உரைத்தும் கேட்கமாட்டேனென்கிறாயே. ராவணா! நீண்ட உடலும் கொடிய விஷமுமுள்ள ராம த்வேஷ மென்கிற ஓர் பெரிய ஸர்ப்பம் உன்னைச் சுற்றிக்கொண்டு கிடக்கிறது. ராவணா! நான் உனது மேன்மையை விரும்பி நன்றாக ஆலோசித்து உனக்கு நன்மை பயக்கக்கூடிய இதவசனங்களைக் கூறியும் எள்ளளவும் உனக்குப் பயன்படவில்லை. ராம பாணங்களால் உனக்கு நேரப்போகிற அனர்த்தங்களை நன்கறிந்து சகிக்க முடியாமல் இவ்வளவுமுரைத்தேன். (இத்யாதிகள்)

6. பிறகு சுகஸாரணர்களின் உபதேசமும் இராவணனுக்குக் கிடைத்திருக்கின்றது. இவர்கள் ராவணனாலேயே அனுப்பப்பட்டு ராமசேனைகளை வந்து பார்த்து வியப்படைந்து அவனிடம் மீண்டு சென்று கூறுகின்றனர்; ராவணா! ராமனது உருவத்தையும் படைகளையும் பார்க்கில் அவனொருவனே இலங்கை முழுவதையும் நாசஞ்செய்ய வல்லவனென்று திண்ண மாகத் தோன்றுகின்றது. தேவர்களாலும் அசுரர்களாலும், அல்லது ஒன்றுசேர்ந்த தேவாசுரர் களாலும் ராம லக்ஷ்மணர்களை எதிர்க்க முடியாது. அவர்களை வென்றுவிடலாமென நீ நினைப்பது வீணான நசையே. அவர்களோடு நீ விரோதம் வைத்துக்கொண்டது போதும்; வீண் கோபத்தை அடக்கிக்கொண்டு க்ஷமை வேண்டுவதொன்றே தக்கது. (இத்யாதிகள்)

7. சுகஸாரணர்களின் உபதேசத்திற்குப் பிறகு ராவணனுக்குத் தன் தாயான கைகஸியும் அவித்தனென்னும் பெருங் கிழவனான மந்திரியும் உபதேசம் செய்ததாகத் தெரிய

வருகிறது. ஆனால் இவ்வுபதேசமானது மற்ற வுபதேசங்களைப்போலே வான்மீகி முனிவரால் நேர்கொடு நேரே வெளியிடப்படவில்லை; விபீஷணன் மனைவியான ஸரமை அவ்வுபதேசங்களைத் தான் தன் காதால் கேட்டதாக ஸீதையினிடம் வந்து கூறுவதாய் (யுத்த காண்டம், ஸர்க்கம் 34ல்) தெரிவிக்கப்பட்டிருக்கின்றது. தாயும் மந்திரிக் கிழவனுமான அவ்விருவரும் 'ராவணா! நீ ராமனுக்குத் தகுந்த மரியாதைகளுடன் சீதையைக் கொண்டுபோய்ச் சமர்ப்பித்துவிடு; அப்படி நீ செய்யாவிடில் உனக்கும் உன்னைச் சேர்ந்தவர்கட்கும் பெரிய அனர்த்தம் விளையும்' இத்யாதிகள் சொன்னதாகத் தெரிவிக்கப்பட்டுள்ளது.

8. அதற்குப் பிறகு மால்யவானுடைய உபதேசம் வலிமிக்கது. இவன் ராவணனுக்குப் பாட்டனோடுகூடப் பிறந்தவனென்றும் மதியிற் சிறந்தவனென்றும் கூறப்பட்டுளது. இவன் உரைத்ததாவது "அரக்கர் கோமானே! ஓரரசன் தன் விரோதியின் வலிமையைக்காட்டிலும் குறைந்த வலிமையுள்ளவனாயிருந்தாலும் ஸம பலனாயிருந்தாலும் அந்த விரோதியோடு தான் நட்புக் கொள்ளவேண்டும்; எதிரியினும் விஞ்சிய வலிமையுடையவனாய் இருந்தால்தான் விரோதம் பாராட்டலாம். இவ்விஷயம் நீதி சாஸ்திர ஸித்தமாதலால் துர்ப்பலனான நீ பலவானான ராமனுடன் பகை பாராட்டுவது பொருந்தாது. தேவ ரிஷிகள் கந்தருவர் முதலான யாவரும் இராமனுக்கே வெற்றியைக் கோருகின்றனர். ராவணா! நீ தேவ தானவர்கள் யக்ஷ கந்தருவர்கள் முதலிய உயர்ந்தோரால் மரணம் நேராதிருக்கும்படி வரம் பெற்றனையே யன்றி மானிடர்களையும் வானரர்களையும் மதித்தாயல்லை. இப்போது மஹா பராக்கிரமசாலிக ளான மானிடர்களும் வானரர்களும் கரடிகளும் கொண்டைமுசுக்களும் இங்குவந்து கர்ஜிக்கும் படியாய்விட்டது. இவர்களால் உனக்கு மரணம் தடுக்கமுடியாததே. இந்த ராமன் கேவலம் மானிடனல்லன். விஷ்ணுதேவனே அரக்கர்களைக் கொல்ல மானிடவுருவம் தாங்கி வந்திருக் கின்றனனென்று உணர்வாயாக. ஆகவே நீ எதிரம்பு கோப்பதைவிட்டு வணக்கங்கொண்டே வாழக்கடவை." என்று.

9. இவ்வுபதேசங்களுக்கெல்லாம் இராவணனுடைய மறுமொழி என்னவென்பதை நாம் விவரிக்கவேணுமோ? கடைசியாக மால்யவானுக்குச் சொன்ன மறுமொழியை மாத்திரம் இங்குத் தெரிவிப்போம். (யுத்தகாண்டம் முப்பத்தாறுவது ஸர்க்கங் காண்க) ராவணனுக்கு விநாசகாலம் சமீபித்துவிட்டதனால் மால்யவான் சொன்ன ஹிதமான வார்த்தைகளை ஏற்றுக் கொள்ளாமல் மிகுந்த கோபத்துடன் மறுமொழி கூறுகிறான்' என்று வான்மீகி முனிவர் அவதாரிகையிடுகின்றார். அவன் கூறின மறு மொழியாவது— "கிழவனே! ராமன் ஓர் மானிடனாகையால் அற்ப பலமுடையவன். குரங்குகளைத் துணைகொண்டவனாதலால் நிஜ பல மில்லாதவன், தந்தையால் துரத்தப்பட்டு வந்தவனாதலால் ராஜ்யமில்லாதவன். நானோ ராக்ஷஸ ராஜன். தேவர்களையும் நடுங்கச் செய்பவன்; எல்லாவித பராக்கிரமங்களினாலும் குறையற் றிருக்கின்றேன். இப்படிப்பட்ட என்னை நீ குறைவாகப் பேசினது உனது மூர்க்கத்தனம். இராமன் ஏதோ கடலில் அணை கட்டிவிட்டானென்றால் இதில் என்ன வியப்பு? அவன் இங்கு வந்து உயிரோடு திரும்பப்போகிறதில்லை; நான் ஒருவரையும் வணங்கப் பிறந்தவனல்லேன்" என்று இந்த வார்த்தைகளையே மீண்டும் மீண்டும் மொழிந்தொழிந்தான் இராவணன்.

10. மஹாவீர மஹாசூரர்களானோர் திரள்திரளாக மாய்ந்து முடிந்துபோவதைக் கண்டுங் கூட அவன் விதியின் பயனையே பெற்றொழிந்தான். பிறருடைய உபதேசங்களும் பயன்படவில்லை; தான் கட்கூடாகக் கண்ட பெருமைகளும் பயன்படவில்லை. மதியைக்காட்டிலும் விதியே வலிதென்று தேறிற்று. ஆனால் விதியை மதியால் வெல்லலாம். ஸாவித்ரியின் உபாக்கியானம் முதலியவற்றால் அது விளங்குகின்றது. அத்தகைய விலக்ஷணமான மதி சில மஹாபாக்யசாலி களுக்கே வாய்க்கும். .... .... ... ...

# எம்பெருமானுடைய ஒரு குணநுபவம்.

எம்பெருமானைப் பற்றிப் பலபல நூல்கள் அவதரித்தது அவன்றன் திருக்குணங்களை யநுபவித்து நாம் மகிழ்வதற்கேயாம். அப்பெருமான் தான் திருவவதாரம் செய்ததும் தனது திருக்குணங்களை வெளியிடுவதற்கேயன்றி மற்றொன்றுக்காகவன்றென்று நம் ஆசாரியர்கள் திருவுள்ளம்பற்றுகின்றார்கள். பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் *குணபரீவாஹாத்மநாம் ஜந்ம நாம்* என்றருளிச் செய்திருப்பதன் கருத்து இதுவே.

எம்பெருமானுடைய திருக்குணங்கள் எண்ணிறந்தவை. அவற்றுள் சில திருக்குணங்களுக்கே நாம் பெயர் அறிவோம். அத்திருக்குணங்களில் சீலமென்னுங் குணம் முதன்மை பெற்றதாகும். இக்குணமே ஸௌசீல்யமென்றும் வழங்கப்பெறும். இந்த சீல குணத்திற் காட்டிலும் வாத்ஸல்யகுணம் சிறந்ததன்றோ? என்பர் சிலர்; வாத்ஸல்ய குணத்திற் காட்டிலும் காருண்யம் மேம்பட்டதல்லவா? என்பர் மற்றுஞ்சிலர்.

உண்மையில், எம்பெருமானது திருக்குணங்களில் ஏற்றத் தாழ்வு காண இயலாது. ஒவ்வொரு திருக்குணமும் அநுபவரஸிகர்களால் அநுபவிக்கப்படும்போது இதுவே ஒப்புயர்வற்ற குணம்—இதுவே தலைமை பெறுங் குணம் என்றே கருதப்படும். ஆனாலும் ஆழ்வார்களும் ஆசாரியர்களும் அப்பெருமானது சீலகுணத்தில் அதிகமாக ஆழங்காற் பட்டிருப்பதால் அத்திருக்குணத்தைப் பற்றிச் சிறிது விரிவாகப் பேசி யநுபவிக்கக் குதூஹலங்கொண்டு எழுகின்றோம். குணநுபவத்திற்கென்று அமைந்த நூல்களுள் ஸ்ரீராமாயணம் தலைமைபெற்றதென்பது விவாத மற்ற விஷயம். இங்கு முதன் முதலாக அதிற் செல்லுகிறோம்.

ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்தின் ஆரம்பம் எப்படி யமைந்திருக்கின்றதென்றால், தேவலோகத்திலிருந்து நாரதமஹர்ஷியானவர் நான்முகக் கடவுளின் நியமனத்தினால் வால்மீகி மஹர்ஷியின் ஆச்ரமத்திற்கு வந்துசேர, அந்த நாரத முனிவரை வால்மீகி முனிவர் வணங்கி வழிபட்டு "கோந்வஸ்மிந் ஸாம்ப்ரதம் லோகே குணவாந் கச்ச வீர்யவாந்?" என்று தொடங்கி ஒரு பதினாறு திருக்குணங்களைச் சொல்லி, இத்திருக்குணங்கள் அமைந்த ஒரு மனிதன் இப்போது இவ்வுலகிலுள்ளனாயின் எனக்குச் சொல்லி யருளவேணும்; உம்மிடத்தில் இதைக் கேட்டறிய எனக்கு மிகவும் ஆவலுள்ளது—என்று விண்ணப்பஞ்செய்கிறார். அதன்மேல் அந்த நாரத முனிவர் மிகமகிழ்ந்து விடைகூறத் தொடங்கி "இக்ஷ்வாகுவம்சத்திற் பிறந்து ஸ்ரீராமனென்ற திருநாமம் பெற்றவன் ஒருவனுளன்; அவன் உலகம் நிறைந்த புகழாளன்; அளவற்ற சக்தி வாய்ந்தவன்; அவனது திருக்குணங்கள் என்னாலெடுத்துரைக்க முடியா; அவனே கோஸல ராஜன் திருமகளான கௌஸல்யா தேவியின் வயிற்றிற் பிறந்த தசரதபுத்திரன்; கடல்போல் மஹாகம்பீரன்; மஹா வீரன்; மிக்க பொறுமையாளன்; ஸத்யசீலன்' என்றுரைத்து உடனே அவனது புனிதமான சரிதையையும் சுருக்கமாக உபதேசித்து முடிக்கிறார். பிறகு தம்மிடம் நேராக வந்த நான்முகக் கடவுளின் அநுக்ரஹத்தையும் பெற்ற வால்மீகிமுனிவர் இராமாயணத்தை இயற்றி முடித்தார்—என்பதாக ஆரம்பத்தில் தெரிவிக்கப்பட்டுள்ளது. நாரதமுனிவரை நோக்கி வால்மீகிமுனிவர் கேட்ட திருக்குணங்கள் எண்ணிக்கையில் பதினாறாக அமைந்திருப்பதனால் "ஸ்ரீராமசந்திரன்" என்று சந்திரனாகக் கூறப்படுகின்றவனுடைய பதினாறுகலைகளோ இவை! என்னலாம்படியுள்ளன அத்திருக்குணங்கள்.

வான்மீகிமுனிவர் நாரதமுனிவரிடம் உபதேசங் கேட்ட பிறகே இராமனைத் தெரிந்து கொண்டாரென்று சொல்வதற்கில்லை. முன்னமே அவர் ஸ்ரீராமமந்த்ரத்தை இடைவிடாது அநுஸந்தானம் செய்துகொண்டிருந்தவரென்றும், நான்முகன் தன்னுலகில் சதகோடி ப்ரவிஸ்தரமானதொரு ராமாயணத்தை இயற்றி நாரதர் முதலிய முனிவர்களுக்கு அதை ப்ரவசனஞ் செய்து, ராமபக்தரான வான்மீகிமுனிவரைக்கொண்டு இங்கிலவுலகத்திலும் ஸ்ரீராம கதையைச் சுருக்கமாக ப்ரவர்த்தனம் செய்வதற்காக வான்மீகியின் ஆச்ரமத்திற்கு நாரதரையனுப்பினனென்றும் வரலாறு காண்பதால் நாரதமுனிவரை நோக்கி வான்மீகிமுனிவர் விண்ணப்பஞ் செய்த திருக்குணங்களானவை இராமபிரானது சரிதைகளில் தேறிய குணங்களேயன்றி வேறல்லவென்பது நன்கு அறியத்தக்கது.

பகவான் இராமனுக இங்கிலவுலகில் திருவவதாரம் செய்தருளினது தன்னுடைய திருக்குணங்களை வெளியிடுவதற்காகவேயென்றும், ராவணஸம்ஹாரம் முதலியவை வியாஜமாத்திரமான பிரயோஜனங்களென்றும் தத்துவமுள்ளது.

நாரதமுனிவரை நோக்கி வான்மீகி முனிவர் கேட்ட கேள்விகளில். கோ குணவான் என்பது முதற்கேள்வி. சிறந்த குணங்களையுடையவன் யாவன்? என்று பொதுவாகக் கேட்பதாகச் சிலர் இதற்குப் பொருள் கொள்வர். அப்படி யன்று; சிறப்பாக ஒவ்வொரு குணத்தைத் மெடுத்துக்கூறுமிந்த பிரகரணத்தில் குணவாந் என்கிற விதுவும் குறிப்பிட்ட வொரு குணயுதைக் கூறுவதே யன்றி, பொதுவாக 'நல்ல குணங்களையுடையவன் யாவன்?' என்று கேட்கிற படியன்று. அங்ஙனம் பலர் நினைத்திருப்பது தவறு.

ஆளவந்தார் தம்முடைய ஸ்தோத்ர ரத்னத்தில் எம்பெருமானுடைய பல திருக்குணங்களை யமைத்து ஒரு ச்லோகமருளிச்செய்துள்ளார்; அது *வசீ வதாந்ய:* என்கிற பதினெட்டாவது ச்லோகம். அதில் "வசீ வதாந்ய:" என்று இரண்டு குணங்களைக் கூறியான பிறகு குணவாந் என்று கூறி, அதன்பிறகு ருஜு: சுசி: என்று தொடங்கிப் பத்தெட்டு குணங்களைக் கூறி, முடிவில் "ஸமஸ்த கல்யாண குணும்ருதோததி:" என்று கூறப்பட்டுள்ளது. இதனல் இந்த ச்லோகத்தில் மூன்ருவது சொல்லாகவுள்ள குணவாந் என்பதற்கு [முன்னும் பின்னும் சொல்லப்பட்ட விசேஷகுணங்கள் போலவே] ஒரு விசேஷகுணமே பொருளாகக் கொள்ளப்படவேண்டுமென்பது தேறிநின்ற விஷயம்.

அந்தக் குணம் எதுவென்னில்; ஸௌசீல்ய குணமென்று பூருவாசாரியர்கள் திருவுள்ளம் பற்றியுள்ளார்கள். தன் மேன்மை பாராமல் தாழ்ந்தவர்களோடும் புரையறக் கலந்து பரிமாறும் சீல குணத்திற்கே ஸௌசீல்ய மென்று மறுபெயர்; எல்லாக் குணங்களிற்காட்டிலும் இக்குணம் மிகச் சிறந்ததாதலால் இதற்கு குணம் என்றே சிறப்புப் பெயர் கொடுக்கப்பட்டது. ப்ரக்ருதம் வால்மீகியின் வினவில் கோ குணவாந்? என்றுள்ளதானது—சீலகுணமுடையவன் யாவன்? (அதாவது) தன் மேன்மையைச் சிறிதும் கணிசியாமல் தாழ்ந்தவர்களோடும் கலந்து பரிமாறுகின்றவன் யாவன்? என்று கேள்வி கேட்டபடியாகின்றது. இத்திருக்குணத்திற்குச் சேர நாம் அநுஸந்திக்கக்கூடிய சரிதைகளைக் கேண்மின்:

ஸ்ரீமந்நாராயணமூர்த்தி இங்கிலவுலகில் திருவவதரித்தாரென்கிற விதுவே சீலகுணத்தின் பரீவாஹமாகவுள்ளது. கூரத்தாழ்வான் அதிமாநுஷ ஸ்தவத்தில் பத்தாவது ச்லோகம் 'சீல: க ஏஷ தவ ஹந்த* என்று தொடங்குகின்ருர். அந்தோ! இது என்ன சீலகுணம்! இதை எடுத்துப் பேச யாரால் முடியும்! என்கிருர்; அந்த சீலகுணத்தை எதுகொண்டு நிரூபிக்கிரு

ரென்னில், *அத்ராவதீர்ய நநு லோசநகோசரோபூ:* என்பதே அந்த ச்லோகத்தில் உயிரான வார்த்தை. கட்கிலியான வெம்பெருமான் ஆஸுரப்ரக்ருதிகளிடையே வந்து அவர்களுடைய கட்புலனுக்கும் இலக்காகித் திருவவதரித்தா னென்பதை நினைக்கும்போதே 'அந்தோ! இது என்ன சீலம்! குணமறிந்து உகக்கமாட்டாதே எதிரம்பு கோப்பதுஞ் செய்யாநின்ற அரக்கர் அசுரர்போன்ற மனிசரிடையே வந்து பிறக்கும்படியான இந்த சீலகுணத்தை என்னவென்று சொல்லுவது?' என்று உருகுகிறார் கூரத்தாழ்வான்.

பிறந்தவாறும்! என்று சொல்லி ஆழ்வார் ஆறுமாஸம் மோஹித்திருக்கும்படியான பகவானது திருவவதாரத்தை நினைத்தவாறே இது என்ன சீலகுணம்! என்று உருகவேண்டியது தவிர வேறில்லை யன்றோ.

அவதாரம் என்ற வட சொல்லுக்கு மேலிருந்து கீழேயிறங்குவது என்று பொருள். பரமபதமாகிய மேல்நிலத்திலிருந்து நிலவுலகமாகிய கீழ்நிலத்திற்கு வந்தானென்பதை அவதார சப்தார்த்தமாக நினைக்கவேண்டா. மேலான தனது நிலைமைகளை விட்டிட்டுக் கீழான நிலைமைகளை ஏற்றுக்கொண்டதே அவதாரமெனப்படுகிறது. ஒருவர் கண்ணுக்கும் புலப்படாதவன், எல்லாவிடங்களிலுமுள்ளவன், எல்லாக்காலத்திலுமுள்ளவன், எல்லாப்பொருள்களாகவுமுள்ளவன் என்கிற இவை பகவானுடைய மேலான நிலைமைகள். இத்தகைய நிலைமைகளை அறவே விட்டு இவற்றுக்கு எதிரிடையான தாழ்ந்த நிலைமைகளை ஏற்றுக்கொண்டல்லவோ பகவான் வந்து பிறந்தருளிற்று!

ஒருவருடைய கண்ணுக்கும் புலப்படாதிருந்தவன் அரக்கரசுரர்போல்வார் கண்ணுக்கும் புலப்பட்டான்; எல்லாவிடங்களிலுமுளனானவன் 'இப்போது அயோத்தியிலுளன், இப்போது சித்திரக்கூடத்திலுளன், இப்போது பஞ்சவடியிலுளன், இப்போது கிஷ்கிந்தையிலுளன், இப்போது கடற்கரையிலுளன் என்னும்படியாகி, ஓரிடத்திலிருக்கும்போது மற்றோரிடத்தில் இலனென்று நினைக்கும்படியாயினன். எக்காலத்திலுமுளனானவன் ஒரு குறிப்பிப்பிட்ட காலத்திலேயே இராமனாகவிருந்து மற்றைக் காலத்தில் இலனாயினன் என்று நினைக்கும்படி போயினன்.

*நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய்ச் சீரார் சுடர்களிரண்டாய்ச் சிவனாய் அயனானாய் —தாயாய்த் தந்தையாய் மக்களாய் மற்றுமாய் முற்றுமாய்* என்று ஆழ்வார்கள் அநுஸந்திக்கிறபடி எல்லாப் பொருள்களுமாகவுளனானவன் இராமன் என்கிற வொரு பெயர்க்கு மாத்திரம் பொருளாக விருந்தனன். ஆக இங்ஙனே உயர்ந்த நிலைமைகளை விட்டுத் தாழ்ந்த நிலைமைகளை ஏறிட்டுக்கொண்டு வந்து பிறந்தவாறு என்னே! என்று ஈடுபடும்படி யாக்குகின்றது அவனது சீலகுணம். இதுவும் சீலகுணத்தின் காரியமாகக் கொள்ளப்படுகிறது.

இராமபிரானுடைய சீலகுணத்திற்கு விசேஷித்த இலக்கு குஹப்பெருமாள் போல்வார். திருமங்கையாழ்வார் தமது பெரிய திருமொழியில் (5—8—1.) *ஏழையேதலன் கீழ்மகனென்னாதிரங்கி* என்று தொடங்கியுள்ள பாசுரத்தில் இந்த சீலகுணம் மிகவற்புதமாக அனுபவிக்கப் பட்டிருக்கின்றது. கங்கையில் ஓடம் விடுபவனும் ஆயிரம் ஓடங்கட்குத் தலைவனும் கங்கைக் கரையிலுள்ள ச்ருங்கிபேரபுரத்திற்கு அதிபதியுமாகிய ஒரு வேடர்தலைவன் குஹனென்பவன். இவனிடத்திற்கு இராமபிரான் பிராட்டியோடும் இளையவனோடு மெழுந்தருளிய பொழுது இவன் அப்பிரானுடைய வடிவழகில் ஈடுபட்டுப் பரிந்து திருமேனிக்காவல் செய்த விதம் வெகு ஆச்சரியமானது. [அது, ஸ்ரீவசநபூஷணம்—247-ல் காணத்தக்கது.]

பெருமாள் ச்ருங்கிபேரபுரத்திலே யெழுந்தருளி இளைய பெருமாள் பாங்காக அமைத்த பர்ணசயனத்திலே பிராட்டியோடு பள்ளிகொண்டருளாநிற்க, இச் சேர்த்திக்கு என்ன தீங்கு விளையுமோ வென்று அதிசங்கைகொண்ட இளையபெருமாள் முதுகிலிட்ட அம்பறுத்தூணியும் கையிற்பிடித்த வில்லுமாய் 'நடையாடும் மதிள் போலே' உலாவிக்கொண்டு நிற்க, இதைக் கண்ட குஹப்பெருமாள் 'ஒரு தம்பி தாயைக் கொண்டு பெருமாளை நாட்டிலிருந்து காட்டிலே துரத்தினன்; இத் தம்பி தனியிடத்திலே என்செய்யப் பார்க்கிறனோ!' என்று அவ்விளைய பெருமாளிடத்திலும் அதிசங்கை கொண்டு 'இவன் அப்படி ஏதேனுமொரு தீங்கு செய்யில் இவனையே முடித்துவிடுவது' என்று தானும் வில்லுமம்புமாய்க் கொண்டு நின்றதாக ஸ்ரீராமாயணத்திற் காண்கிறது.

ஆனல் இது எந்த ஸமயத்தில் நடந்ததோ அந்த ஸமயத்தில் வான்மீகிமுனிவரால் சொல்லப்படவில்லை; பிறகு பரதாழ்வான் சித்திரகூடஞ் செல்லப் புறப்பட்டு வருமளவில் அப்பரதனோடு குஹன் தானே இதைச் சொல்லுவதாக அமைக்கப்பட்டுள்ளது. [அயோத்யா காண்டம். 87.வது ஸர்க்கம் 23, 24 ச்லோகங்கள் காண்க.]

தொட்டிற்பருவமேபிடித்து இராமபிரான் மீது அளவுகடந்த அன்பு கொண்டிருக்கின்ற இளையபெருமாள்மேலும் அதிசங்கை தோன்றிப் பெருமாளிடத்தில் பரிவுகாட்டின இக் குஹனுடைய அன்பை என்ன வென்று சொல்லுவது! இவனுக்கு இவ்வளவான அன்பு இருந்தது பற்றியே பெருமாள் இவனிடத்தில் முதன் முதலாகத் தம்முடைய சீலகுணத்தைக் காட்டியருளினர்.

குஹனுடைய தாழ்வை 'ஏழை ஏதலன் கீழ்மகன் என்னதிரங்கி' என்றார் திருமங்கையாழ்வார். பெருமாள் குஹனைக் கைவிடுகைக்கு இவ் விழிகுணங்களில் ஒரொன்றே அமைவதாயிருக்க, அவை பலவுமுளவென்று கண்டும் அருட் கடலான பெருமாள் குஹனிடம் உபேக்ஷை கொள்ளாம லிருந்ததோடு அளவு கடந்தும் கலந்து பரிமாறினர்.

க்ஷத்ரிய ஜாதியில் ஸூர்யகுலத்தில் இக்ஷ்வாகு வம்சத்தில் திருவவதரித்தவனும் சக்ரவர்த்தியின் திருக்குமாரனும் ஸகலைச்வர்ய ஸம்பன்னனும் மஹா புத்திமானும் பகைவரிடத்தும் அன்பு கொள்பவனுமாகிய இராமபிரான் குஹனை நோக்குங்கால், இவன் இழிவான வேடச் சாதியனென்றும் அதனல் பகுத்தறிவில்லாத அவிவேகி யென்றும் அச்சாதிக்கு இயல்பான கொடுமையினல் எல்லாவுயிர்களோடும் பகைமை கொள்பவனென்றும் இப்படிப்பட்ட தன்மைகளைக்கண்டு இகழ்ச்சி கொள்ள வேண்டியிருந்தும் தனது பெருமைக் குணங்களையும் பாராமல் அவனுடன் கலந்து பரிமாறினவிதம் எத்தகைத்தென்னில், "சீரணிந்த தோழமை கொண்டது மோரடையாளம்" என்ற திருவடி வாக்கில் 'சீரணிந்த தோழமை' என்று வரும்படியாக வன்றோ கலந்தது.

குஹனுடைய அளவுகடந்த அன்பைக்கண்டு பெருமாள் அவனோடு தோழமை கொண்டாரா? அல்லது, பெருமாள் சீரணிந்த தோழமை கொண்டதற்காகக் குஹன் அன்பு பாராட்டினனா? என்று ஒரு கேள்வி பிறந்தால், எம்பெருமான் திருவுள்ளத்திற்கே தெரிய வெளிதான இவ்விஷயத்தில் நாம் என்ன விடை யிறுப்பது.

பெருமாள் கங்கைக்கரை சேர்ந்தவுடனே அதனைக் கேள்விப்பட்ட குஹன் தன்னினத்தாரோடு பெருமாளிடம் வந்து சேர்ந்தனனென்பதைக் கூறுகின்ற வான்மீகி முனிவர் "தத்ர ராஜா குஹோ நாம ராமஸ்ய ஆத்மஸமஸ் ஸகா" என்கிறார். குஹனைப்பற்றி முதன்

முதலாக ப்ரஸ்தாவம் செய்யும்போதே 'ராமஸ்ய ஆத்மஸமஸ் ஸகா' என்று கூறியிருப்பது மிக மிக வியக்கத்தக்கது. இராமனுடைய உயிர்த்தோழனான குஹன் இராமனது வரவைக் கேள்விப்பட்டு வந்து சேர்ந்தானென்று கூறியிருப்பதனால் இவ்விருவர்க்கும் தோழமை முன்னே பிடித்தேயுள்ளதுபோல் தோன்றுகிறது. குஹன் வரும்போதே இராமனைத் தழுவிக்கொண்டதாகவும் சொல்லப்படுகிறது—*தம்ஆர்த்தஸ் ஸம்பரிஷ்வஜ்ய குஹோ ராகவமப்ரவீத்* என்ற மேல் ச்லோகத்தினால்.

ஆனால் ஆழ்வார்களருளிச்செயலினாலும் கம்பருடைய வாக்கினாலும் இந்தத் தோழமை அப்போதுதான் தோன்றியதென்று நன்கு தெரிகின்றது. "குகனோடும் கங்கைதன்னில் சீரணிந்த தோழமை கொண்டது மோரடையாளம்" என்பது பெரியாழ்வார் திருவாக்கு. கம்பராமாயணம் விபீடணனடைக்கலப்படலத்தில்—

"குகனொடு மைவரானோம் முன்பு. பின் குன்றுசூழ்வான்
மகனொடு மறுவரானோம் எம்முழை யன்பின்வந்த
அகனமர் காதலைய! நின்னொடு மெழுவரானோம்
புகலருங் கானந்தந்து புதல்வரார் பொலிந்தானுந்தை."

என்ற செய்யுள் மிக இன்சுவையுடைத்து. இதன்கருத்தாவது; நகரில் நான்குபேர் நாங்கள் தசரதாத்மஜர்களாகப் பிறந்தோம்; நான்கு புத்திரர்கள் பிறந்தவளவிலும் த்ருப்திபெறாத தயரதன் இன்னமும் புத்திரர்கள் வேண்டியே எங்களைக் காட்டுக்கனுப்பினன்; 'நீங்களிருவரும் காடு சென்று இன்னமுஞ் சில தம்பிமார்களைச் சம்பாதித்துக்கொண்டு வாருங்கள்' என்றே எங்களைக் கானகம் போகவிட்டனன்; அப்படியே நாங்கள் பல தம்பிகளைச் சம்பாதித்துக் கொண்டோம்; கங்கைக் கரையில் குகனைத் தம்பியாகப் பெற்றோம்; பம்பைக் கரையிலே சுக்ரீவனைத் தம்பியாகப் பெற்றோம்; விபீடணா! கடற் கரையிலே உன்னைத் தம்பியாகப் பெற்றோம். ஆக, நம் தந்தை ஏழு பிள்ளைகளைப் பெற்றானாயினன்—என்பதாம். இங்ஙனம் கூறுகின்ற இராமன், குகனிடத்தும் சுக்ரீவனிடத்தும் விபீடணனிடத்தும் கூடப்பிறந்த தம்பியினிடத்திற்போலத் தான் அன்பு பாராட்டுபவன் என்பதை யன்றோ வெளியிட்டானாகிறான். மேலும் இங்கு தசரதனை எந்தை என்னாமல் உந்தை யென்றதும் உற்று நோக்கத்தக்கது. விபீஷணனது தந்தையாகவே யன்றோ தசரதன் கூறப்பட்டனன். இதனால், பெருமாள் விபீடணனிடத்துப் புரையறக் கலந்த தன்மை புலனாகும்.

இங்கு ஒரு சிறிய சங்கை தோன்றக் கூடியதுண்டு; அதாவது—"ஹீநப்ரேஷ்யம் ஹீநஸக்யம் ஹீநகேஹ நிஷேவணம்" என்று உப பாதகங்களிலே படிக்கப்பட்டுள்ளது; நீசர்களுக்குப் பணிவிடை செய்வது, நீசர்களோடு தோழமை கொள்ளுவது, நீசர் மனைகளிலே சென்றிருப்பது ஆகியவை பாதகங்களாகச் சொல்லப் படாநிற்க, இவற்றைப் பெருமாள் செய்யலாமோ? செய்தவிது ஓர் ஏற்றமாகுமோ? என்று. கேண்மின்; நம்மைப் போன்றவர்கள் இவை செய்தால் கிறக்கேடாம். உயர்ந்தாரில் ஒப்பற்ற பெருமாள் இவை செய்தால் அவருடைய பெருமை இன்னமும் பொலிந்து தோன்றுமத்தனை. பாண்டவதூதன், பார்த்தஸாரதி என்பன போன்ற திருநாமங்களெல்லாம் அவருடைய பெருமையைக் குன்றிவிட்ட விளக்காக்குமவையன்றோ?

இராமபிரானுடைய சீலகுணம் விளங்கின விடங்களை யெடுத்துக் காட்டுகின்ற வேதாந்த தேசிகன் தயாசதகத்தில் "நிஷாதாநாம் நேதா கபிகுலபதி: காபி சபரீ" என்னும்

ச்லோகத்தில் சபரியையும் எடுத்துக்காட்டியிருக்கையாலே சபரியைப்பற்றியும் சிறிது சொல்லுவோ மிங்கு.

வான்மீகி ராமாயணத்திலும் கம்ப ராமாயணத்திலும், பெருமாள் சபரியிடம் கலந்து பரிமாறின வரலாறு விசேஷித்து ஸ்பஷ்டமாகக் கூறப்படவில்லையாயினும் இதர ராமாயணங்களிலுள்ளதைக் கொண்டோ, வான்மீகி ராமாயணத்தையே ஆழ்ந்து நோக்கியோ நம் ஆசாரியர்கள் அருளிச் செய்துள்ள விசேஷம் குறிக்கொள்ளத்தக்கது. ஸ்ரீவசனபூஷணத்தில் (233) "பெருமாள் ஸ்ரீ சபரி கையாலே அமுது செய்தருளினர்" என்ற விடத்து வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகள்—"ரகுகுலதிலகராய் ஆசாரப்ரதாநரான பெருமாள் *சபர்யா பூஜிதஸ் ஸம்யக் ராமோ தசரதாத்மஜ; *என்னும்படி வேடுவிச்சியாய்வைத்தே குருசுச்ரூஷையிலே பழுத்து ஜ்ஞாநாதிகையாய் தன்நாவுக்கு இனிதாயிருந்த பல மூலாதிகளெல்லாம் இங்குத்தைக் கென்று ஸஞ்சயித்துக்கொண்டு வரவுபார்த்திருந்த ஸ்ரீசபரி, தன் ஆகாரானுகுணமாகத் தன் கையாலே அமுது செய்யப்பண்ண அதிஸந்துஷ்டராய் அமுது செய்தார்" என்றருளிச்செய்துள்ள ஸ்ரீஸூக்திகள் விசேஷித்து அநுஸந்திக்கத்தக்கவை. இதில் "தன்னாவுக்கு இனிதாயிருந்த" என்கிற வார்த்தையை மாமுனிகள் மூலப்ரமாண மின்றி அருளிச்செய்யார். வான்மீகி (ஸம்க்ஷேபத்தில்) "சபர்யா பூஜிதஸ் ஸம்யக்" என்ற விடத்து ஸம்யக் என்பதில் உள்ளுறையும் பொருளே இது என்று கொள்ளலாம்.

அவளிடத்தில் பெருமாள் இவ்வளவு கலந்து பரிமாறக் காரணமென்ன? என்று சிலர் விமர்சிக்கவும் நேரும். கேண்மின்; குஹனோடு கலந்து பரிமாறினபோது அவன் சில உணவுப் பொருள்களைக் கொணர்ந்து கொடுத்து இவற்றைத் திருவுள்ளம்பற்றி யருளவேணுமென்று வேண்டினன்; அதற்குப் பெருமாள் சொன்ன மறுமொழி—(வால்மீகி. அயோ-50.)

"யத்த்விதம் பவதா கிஞ்சித் ப்ரீத்யா ஸமுபகல்பிதம்,
ஸர்வம் தததநுஜாநாமி ந ஹி வர்த்தே ப்ரதிக்ரஹே.
....அச்வாநாம் காதநேநாஹமர்த்தீ நாந்யேந கேநசித்,
ஏதாவதாத்ர பவதா பவிஷ்யாமி ஸுபூஜித:"

என்பது. 'நான் இந்த வனவாஸத்தில் யாரிடத்திலும் ஏதும் பெற்றுக்கொள்வதில்லை யென்று விரதம் கொண்டிருக்கிறேன்; இதோ நமது தேர்க் குதிரைகள் விடாய்த்திருக்கின்றன; அவற்றுக்கு வேண்டிய உணவுகளையே நான் விரும்புபவன்' என்று சொல்லி அவற்றைத் தாம் கைப்பற்றாமலே இருந்துவிட்டார் பெருமாள். இங்கு பெருமாள் "நஹி வர்த்தே ப்ரதிக்ரஹே" [நான் தானம் வாங்கக்கூடாதென்று வைத்துக்கொண்டிருக்கிறேன்] என்பது அவசியம் சொல்லியாகவேண்டிய வார்த்தையோ? குகன் மதுபர்க்கம் முதலிய சில வுணவுப் பொருள்களைக் கொணர்ந்து கொடுக்க வந்தானே யல்லது தன தான்ய வஸ்த்ராதிகளொன்றும் கொடுக்க வந்திலன். அவை கொடுக்கவந்தால் அப்போது 'நான் ப்ரதிக்ரஹம் பண்ணுவதில்லை' என்று சொல்லி மறுக்க நியாயமுண்டு. தேன் முதலிய காட்டுணவுப் பொருள்களையே கொடுக்க வந்தபோது "நஹி வர்த்தே ப்ரதிக்ரஹே" என்று சொல்லி மறுத்ததானது அவச்யம் ஆராயத் தக்கதன்றோ? குகனிடம் இப்படிச் சொன்னவிவரே சபரியிடம் மறுத்துக் கூறாமல் 'அர்ச்சிதோஹம் த்வயா பக்த்யா" என்று உகந்து கூறி அவளுடைய ஸமர்ப்பணையை ஏற்றுக்கொண்டார். இது எதனாலென்னில், கீழே நாமெடுத்துக் காட்டியுள்ள ஸ்ரீவசநபூஷண வியாக்யான

ஸ்ரீஸூக்தியில் "குரு சுச்ரூஷையிலே பழுத்து ஜ்ஞாநாதிகையாய்" என்று மருமமாக வருளிச் செய்திருப்பதை இங்கு விவரிக்கிறோம். சபரியிடம் மிகச் சிறந்ததொரு தருமம் குருசுச்ரூஷை என்பது இருந்தது. இதைக் கபந்தன் பெருமாளுக்குத் தெரிவித்தனன். "ச்ரமணீ சபரீ நாம காகுத்ஸ்த! சிரஜீவிநீ, த்வாம்து தர்மே ஸ்திதா நித்யம்" என்றும் "ச்ரமணீம் தர்மநிபுணம் அபிகச்ச" என்றுமுள்ள கபந்தன் வார்த்தைகளில் தர்மசப்தத்தினுல் கூறப்பட்டது குரு சுச்ரூஷாதர்மமேயாகும். பெருமாளும் சபரியைக் கண்டவுடனே க்ஷேமம் வினவுகையில் "கச்சித் தே குருசுச்ரூஷா ஸபலா சாருபாஷிணி!" என்று உன்னுடைய குருசுச்ரூஷை நிறை வேறியதா வென்று கேட்டிருக்கிறுர். அவளும் தான் செய்த குருசுச்ரூஷையைப் பற்றி ஆனந்தமாக விடை கூறியிருக்கின்றுள். "இங்கு என்னுடைய பணிவிடைகளைக்கொண்ட ஆசாரியர்கள் திருநாடு சென்றிருக்கின்றுர்கள். அவர்களது திருவடிவாரஞ் செல்ல எனக்கு அனுமதி தரவேணும்" என்றும் கோரியிருக்கிறுள். இத்தகைய தருமம் குகனிடத்து இல்லாமைபற்றியே அவன் தந்த வுணவுகளைத் திருவுள்ளம் பற்றவில்லை என்பதாகப் பேராசிரியர்களின் நிர்வாஹம்.

இங்குச் சிலர் வேறுகக் கூறவருவர்; எங்ஙனே யென்னில்; குகன் சபரியைப் போல் பழம் கொடுத்திருந்தானுகில் பெருமாள் அதை ஸ்வீகரித்தேயிருப்பர். அவன் பழம் கொடுக்க வில்லை யென்பது அந்த பிரகரணத்தில் ஸ்பஷ்டமாகத் தெரிகிறது. ஆகவே குகனிடம் பெற்றுக் கொள்ளாமைக்கும் சபரியிடம் பெற்றுக்கொண்டமைக்கும் இங்குக் கூறிய காரணம் யுக்த மானதன்று என்பர். அவர்கள் 'நஹி வர்த்தே ப்ரதிக்ரஹே" என்று குகனிடம் இராமபிரான் கூறியுள்ளதை நன்கு ஆராயவேணும். "குகனே! நீ காய்கனி ஏதாவது கொணர்ந்து கொடுத் தால் ஸ்வீகரிக்கிறேன்" என்றுவது பெருமாள் கூறியிருக்க வேண்டுமே. அங்ஙனம் கூறுது, தான் ஊர் திரும்பிச் சென்று சேருகிறவரையில் ஒருவரிடத்திலும் ஒன்றுமே பெற்றுக்கொள்வ தில்லையென்று ஒரு விரதம் கொண்டிருப்பதாகப் பொருள் படும்படிகூறியது ஏதோ தட்டுக் கழிக்கிறபடியாகவன்றே காண்கிறது. உணவைக் கைக்கொள்ளும்படியான அதிகாரபூர்த்தி குஹனிடம் இல்லையென்பதே பெருமாளுடைய திருவுள்ளம். அக்கருத்தைப் பெருமாள் செவ் வனே தெரிவியாமல் 'நஹிவர்த்தே ப்ரதிக்ரஹே' என்று கபடமாகக் கூறிக் கழித்தது அவ ருடைய பெருங்குணத்திற்குக் குறையன்றே என்று சிலர் சங்கிக்கக்கூடும். இதற்குச் சமாதான மாவது, "நஹி வர்த்தே ப்ரதிக்ரஹே" என்று பெருமாள் கூறியது 'யாரிடத்திலும் எதுவும் நான் வாங்கிக்கொள்ளமாட்டேன்' என்றே பொருள்படவேணு மென்கிற நிர்ப்பந்தமில்லை. 'உன்னிடத்தில் வாங்கிக்கொள்ள எனக்கு ப்ரியமில்லை' என்று சொல்லுவதாகவும் பொருள் படும். அப்படி விருப்பமில்லாமைக்குக் காரணம் கீழே நாம் விவரித்ததே.

வேதாந்ததேசிகன் ஸங்கல்பஸூர்யோதயத்தில் ஆறுவது அங்கத்தில், விவேகன் ஆனந்தமாகப் பாடுவதாய்வைத்து அற்புதமானவொரு ச்லோகமியற்றி யுள்ளார்; "பகவதி பரத்வாஜே புக்திஸ் ததா சபரீக்ருஹே' என்பது அதன் முதற்பாதம். பெருமாள் பரமபவித்ர மான பரத்வாஜாச்ரமத்தில் அமுது செய்தாரென்று கேள்விப்படுவதுபோலவே சபரி திரு மாளிகையிலும் அமுது செய்ததாகக் கேள்விப்படுகிறோம்; இது என்ன நீர்மை! என்று ஈடு பட்டுக் கூறியுள்ளார். அதுவும் இங்கு அநுஸந்தேயம்.

ஃ ஃ ஃ ஃ

கூரத்தாழ்வான் அதிமாநுஷஸ்தவத்தில் (ச்லோ. 27.) "கோயம் குண: கதரகோடி கத: கியாந் வா கஸ்ய ஸ்துதே: பதம் அஹோ பத கஸ்ய பூமி:!" என்றொரு குணவிசேஷத்தை யெடுத்துரைத்து மாய்ந்துபோகிறுர். அதாவது, [யத் தாத்ருசாகஸமரிம் ரகுவீர! வீக்ஷ்ய விச்ரம்யதாமிதி முமோசித முக்த்தமாஜௌ.] போர்க்களத்தில் "சசால சாபஞ்ச முமோச வீர:" என்னும்படியே நிலைகலங்கி நின்ற இராவணனை நோக்கி 'இன்றுபோய் நாளைவா' என்று பெருமாள் கூறி விடைகொடுத் தனுப்பினதுண்டே, இது மிகச் சிறந்ததொரு குணமாகக் குலாவப்படுகின்றது. "சுரி குழற் கனிவாய்த் திருவினைப் பிரித்த கொடுமையிற் கடுவிசை யரக்கன்" என்று திருமங்கையாழ்வார் அருளியபடியும், "பஞ்செனச் சிவக்கு மென்கால்

பாவையைப் பிரித்தபாவி வஞ்சன்" என்று கம்பர் கூறியபடியும் மஹாபாதகிகளில் தலைவனை அவனை ஒரு நொடியிலே வதஞ்செய்து தொலைக்கவேண்டியிருக்க. அங்ஙனம் தொலைத்திடாமல் "கச்சாநுஜாநாமி ரஹோர்திதஸ் த்வம் ப்ரவிச்ய ராத்ரிஞ்சரராஜ லங்காம், ஆச்வாஸ்ய நிர்யாஹி" என்று விடைகொடுத்துப் போகவிட்ட பெருந்தகையாளனது இக்குணம் ஸ்ரீ ராமாயணத்திற் காணும் ஸகல குணங்களினும் மிக மேம்பட்டதாகும்.

அஷ்டாதச ரஹஸ்யத்தில் தனித்வய மென்னும் ரஹஸ்யத்தில் "கோந்வஸ்மிந்....குணவாந்" என்பதை யெடுத்து விவரித்தருளுகையில்—"சீலவத்தையாகிறது அபிஷேகவிக்னம் பிறந்ததென்று வெறுப்பின்றியே *வநவாஸோ மஹோதய:* என்று காடேறப் புறப்பட்டுப் போவது, *ஆவாஸம் த்வஹமிச்சாமி* என்று ரிஷிகள் பக்கலிலே சென்று தாழநிற்பது, *கிங்கரௌ ஸமுபஸ்த்திதௌ* என்பது, ஜன்மவ்ருத்தங்களில் குறைய நிற்கிறவர்களை *உகந்த தோழனீ* என்பது, இப்படிகளாலே சீலவத்தையை மூதலித்தது" என்கிற ஸ்ரீஸூக்தி யுள்ளது. அதையும் சற்று விவரிப்போமிங்கு.

"ஜன்மவ்ருத்தங்களில் குறைய நிற்கிறவர்களை உகந்த தோழன் நீ என்பது" என்றதை விரிவாக உலகமறியும். மற்றைய விரண்டு விஷயங்களை இங்கு விவரிப்போம். தசரத சக்ரவர்த்தி இராமபிரானை ஒரு தடவைக் கிரண்டு தடவையாக அழைத்து 'உனக்கு ராஜ்யம் தந்தேன், முடிசூட ஸன்னுஹம் செய்' என்று சொல்லிவிட்டு, அப்படியே ஸன்னுஹங்கள் செய்து முடிந்தபின் பெண் பெண்டாட்டியின் வார்த்தைக்கு இசைந்து நின்று 'உனக்கு நாடில்லை. காடுதான்' என்று சொல்ல, அப்போது சிறிதும் மனவேதனையின்றிக்கே நாட்டை யாள்வதிற் காட்டிலும் காடு சென்று உறைவதே எனக்குப் பரமானந்தம்' என்று உள்ளம் பொங்கிக் கூறியது மஹா குணம் என்று ஆசிரியர் திருவுள்ளம் பற்றுகிறார்.

இவ்விஷயத்தைக் கம்பர் கூறுமிடத்து, (அயோத். கைகே. 108)

"இப்பொழுதெம்மனோராலியம்புதற் கெளிதோ ? யாருஞ்
செப்பருங்குணத்திராமன் திருமுகச் செவ்வி நோக்கின்
ஒப்பதே முன்பு பின்பவ் வாசகமுரைக்கக் கேட்ட
அப்பொழுதலர்ந்த செந்தாமரையினை வென்றதம்மா."

என்றார். 'உனக்கு நாடில்லை; காடுதான் நீ செல்லவேண்டும்' என்று சொன்னபோது இராமபிரானது திருமுகக் கமலத்தில் தோன்றிய விகாஸத்தை அப்பொழுது கட்கூடாகக் கண்டவர்கள் சொல்லவேண்டுமேயல்லது நாமா அதைச் சொல்ல வல்லோம் !' என்று கைவிட்டவர், ஆகிலுஞ் சொல்லுவோமென்று ஒருவாறு சொல்லுகின்றார். காடு செல்வா யென்கிற சொல் செவிப்படுவதற்கு முன்னே இராமனது முகம் தாமரைபோன்றிருந்ததாம் ; அச்சொல் செவிப்பட்டதும் தாமரையை வென்று விளங்கிற்றாம் இதனால் காடு செல்வதைப் பற்றிச் சங்கடமில்லையென்பது மாத்திரமேயன்றி அளவுகடந்த ஆனந்தமுமுண்டாயிற் றென்றவாறு. அவ்வளவு ஆனந்தம் எதற்காக வென்னில்; நாட்டில் அரசனாகிச் சிங்காசனத்து வீற்றிருந்தால் பரத்வகுண மொன்றையே காட்டமுடியுமே யல்லது சீலகுணத்தைக் காட்ட அவகாசமே நேரிடாது. அதிகமாக அக்குணத்தைக் காட்டுதற்கென்றே அவதாரம் செய்த தனக்கு அக்குணம் மிகமிக விளங்குதற்குரிய வனவாஸமேயன்றோ ஆனந்த கந்தமாகும். ஆனதுபற்றியே 'வநவாஸோ மஹோதய :' என்றனன்.

இக்குணம் ராமாவதாரத்திற்காட்டிலும் க்ருஷ்ணவதாரத்தில் மிக மிக விளங்கினபடியால் அவ்வவதார சேஷ்டிதங்களிலும் சிலவற்றை யநுபவிப்போமடுத்தபடியாக. .... *

## வஸுதேவதேவகிகளின் தௌர்ப்பாக்யமும் நந்தகோபயசோதைகளின் ஸௌபாக்யமும்

வஸுதேவதேவகிகள் கண்ணபிரானை மகனைப் பெறப்பெற்ற பாக்யசாலிகளேயானு லும் அவனது திவ்யாத்புத சேஷ்டிதங்களில் ஏகதேசமும் அநுபவிக்கப்பெற்றிலர்கள். *பிள்ளை செய்வன காணுத் தெய்வத் தேவகி புலம்பிய புலம்பலைக் குலசேகராழ்வார் கல்லுங் கரையப் பேசியுள்ளார்.

1. என்வாயிடை நிறையத் தாலொலித்திடும் திருவினையில்லாத் தாயரில் கடையாயின தாயே.
2. ஆனையிற்கிடந்த கிடக்கை கண்டிடப்பெற்றிலே னந்தோ! கேசவா கெடுவேன் கெடுவேனே.
3. நந்தன் பெற்றனன் நல்வினையில்லா நங்கள் கோன் வசுதேவன் பெற்றிலனே.
4. அளவில் பிள்ளைமை யின்பத்தை யிழந்த பாவியேன் எனதாவி நில்லாதே.
5. திருவிலேன் ஒன்றும் பெற்றிலேன் எல்லாம் தெய்வநங்கை யசோதை பெற்றாளே.
6. வண்ணச் செஞ்சிறு கைவிரலனைத்தும் வாரிவாய்க்கொண்ட அடிசிலின் மிச்சல் உண்ணப் பெற்றிலேன் ஓ கொடுவினையேன்!
7. வாயிலே முலையிருக்க என் முகத்தே யெழில்கொள் நின்திருக்கண்ணிணை நோக் கந் தன்னையுமிழந்தே னிழந்தேனே.
8. அழுகையு மஞ்சிநோக்கு மந்நோக்கும் அணிகொள் செஞ்சிறுவாய் நெளிப் பதுவும் தொழுகையுமிவை கண்டவசோதை தொல்லையின்பத் திறுதி கண் டாளே.
9. வென்றிசேர் பிள்ளை நல்விளையாட்டமனைத்திலும் அங்கென்னுள்ளமுள்குளிர ஒன்றுங் கண்டிடப் பெற்றிலேனடியேன்!

என்றிங்ஙனேயாயிற்றுத் தேவகி புலம்பல். இது வஸுதேவருடைய புலம்பலுக்கும் உப லக்ஷணம். இனி நந்தகோப யசோதைகளின் பாக்கிய பரிபாகப்ராஞுளிகளை என் சொல்லு வது. ஒரு மஹாகவி நந்தகோபரைப்பற்றிக் கூறினர்—

> "ச்ருதிமபரே ஸ்ம்ருதிமபரே பாரதமபரே பஜந்து பவபீதா:,
> அஹமிஹ நந்தம் வந்தே யஸ்யாளிந்தே பரம் ப்ரஹ்ம."

என்ருர். ச்ருதிகளோ ஸ்மிருதிகளோ பாரதமோ பாகவதமோ எதுவும் எனக்கு வேண்டா. நந்தகோபனொருவனையே தஞ்சமாகப் பற்றுவன் நான்; அவன்றனக்கு வந்த ஏற்ற மென் னென்னில்;

[பரம் ப்ரஹ்ம யஸ்ய அளிந்தே] கண்டுஷம் செய்கிற வாசல் தீராங்கிக்கு அளிந்த மென்று பெயர். நந்தகோபனுடைய மனைவாசல் தீராங்கியிலன்றே பரம புருஷன் தவழ்ந்து விளையாடிப் புரண்டுகிடந்தான். இந்தபாக்கியம் வேறுயார்க்கு எட்டும்? என்ருர். நம்மாழ் வார் நந்தகோபனை நிதியெடுத்தவனென்கிருர். "எடுத்தபேராளன் நந்தகோபன்றன் இன்னு யிர்ச் சிறுவனே!" என்றன்றே கண்ணனை விளிக்கின்ருராழ்வார். உண்மையில் நந்தகோப னுக்குக் கண்ணபிரான்கிடைத்தது ஜன்ம தரித்ரனுக்கு நவநிதிகிடைத்தது போலவேயன்றே? அவனுக்குக்கண்ணன் கிடைத்தன னென்பது மட்டுமேயோ? அவனைத் தன்னிஷ்டப்படி நிய மிக்கும் பாக்கியமுமன்றே பெற்றிருந்தான். ஒருநாள் மாலைப் பொழுதில் கண்ணன் தெரு விலே சென்று நின்ருன்; அப்போது யசோதை கண்ணனை நோக்கி "வானிடைத் தெய்வங்கள் காண அந்தியம்போது அங்கு நில்லேல் ஆழியங் கையனே வாராய்" என்று உள்ளே வருமாறு

அழைத்தாள். அவனோ விளையாட்டில் பராக்காலே வந்திலன்; அப்போது சொல்லுகிறாளவள்—"உந்த மடிகள் முனிவர் உன்னை நான் என் கையில் கோலால், நொந்திட மோதவுங் கில்லேன்" என்று. பயலே! இப்படி நீ துருதுருக்கையாய் வர்த்திப்பதை உன் ஸ்வாமி கண்டால் உன்னை வெறுமனே விடுவாரா? சீறிச் சிவந்து பொடிந்து நிற்பரே, நானும் உன்னையடிக்கக் கோலிக் கையில் கோலையெடுக்கிறேன், ஆனாலும் என் குழகனே அழகனே! உன்னையடிக்கக் கைவரவில்லையே! என்கிறாள். கண்ணனை ஸர்வஸ்வாமியென்று தெரிந்து கொண்டிருந்துமிவள் அவனுக்கும் ஸ்வாமியாக நந்தகோபனை வைத்து "உந்தமடிகள்" என்று சொன்ன அழகு என்னே!

## ஒருதலையில் இழவும் ஒருதலையில் பேறுமானவிதற்கு ஹேது

வஸுதேவதேவகிகள் பெற்றும் பேறிழந்தது ஏன்? நந்தகோப யசோதைகள் அசிந்திதமாக நிகரில்லாப்பேறு பெற்றது ஏன்? என்று சிந்திப்பார்க்குச் சொல்லுகிறோம். வஸுதேவ தேவகிகள் நெடுங்காலம் தவம் புரிந்தனர்—எம்பெருமானே எமக்குப் புதல்வனாகப் பிறக்கவேணுமென்று பலவாண்டு கிடந்து நோன்பு நோற்றனர். இத்தகைய ஸாதநாநுஷ்டானத்தை எம்பெருமான் ஸஹிக்குமவனல்லன். தனது நிர்ஹேதுகக்ருபைக்கு வெற்றியையன்றோ அவன் விரும்புவான். சில விடங்களில் அல்பவ்யாஜமாத்திரத்தை எதிர்பார்ப்பதுமுண்டு. மிகக் கனத்த ஸாதநாநுஷ்டானம் காணுமிடத்து அவத்யம் காட்டி நிற்பது அவன் செயல். வஸுதேவருடைய தீவிரமான ஸாதநாநுஷ்டானம் கண்ணபிரானுடைய திருமுகத்திலே விழிக்குமளவுக்கு உதவிற்று. அவனது தவம் அவ்வளவிலே உபக்ஷீணமாயிற்றென்க. "இருகரையுமழிக்கும் க்ருபாப்ரவாஹ முடையவன்" என்று ப்ரஸித்தனான பெருமான் அந்த அருள்வெள்ளத்தை உடனே திருவாய்ப்பாடியில் மடைமாறினன். "நிர்ஹேதுகக்ருபையின் பிரபாவம் இங்ஙனேயாயிற்று இருப்பது!" என்று காட்டினது திருவாய்ப்பாடியிலே.

## இவ்வர்த்தத்தில் வேதபுருஷனுடைய ஸம்வாதம்

வேதம் ஓதுகின்றது—"அந்நவான் அந்நாதோ பவதி" என்று. "அந்நவாந் பவதி" என்றாலே போதுமே; 'அந்நாதோ பவதி' என்றும் தனிப்பட ஓதவேணுமோ? அன்னம் கிடைக்கப் பெற்றவன் அந்நவான். அவன் தனக்குக் கிடைத்த அன்னத்தைப் புஜிக்கமாட்டானோ? அதைப் புஜிப்பவனாகவுமாகிறானென்று தனிப்படச் சொல்லுவது ஏதற்காக? என்று சங்கிக்க நேரும். இந்த சங்கையைப் பரிஹரிக்கவே வஸுதேவரும் நந்தகோபரும் தோன்றினர். *அந்நவாந் பவதிக்கு வஸுதேவர் இலக்காய் நின்றார். *அந்நாதோ பவதிக்கு நந்தகோபர் இலக்காய் நின்றார். *அந்நம் ப்ரஹ்மேதி வ்யஜாநாத்* என்ற சுருதியின்படி அன்னமாகிய பரப்ரஹ்மத்தை வஸுதேவர் வெறுமனே பெற்றாரேயல்லது புஜிக்கப் பெற்றிலர்; அது பெற்றவர் நந்தகோபரேயாவர். இவற்றுக்கு ஹேது, ஒரு தலையில் ஸாதநாநுஷ்டாநப்ராவண்யமும் மற்றொரு தலையில் அஃதில்லாமையுமேயாம். ஸாதநாநுஷ்டானம் செய்யுமாறு சாஸ்த்ரமே விதித்திருக்க அதனைப் பொல்லாங்காகக் கருதுவது கூடுமோ எனின்; எம்பெருமானைப் பெறுதற்கு ஸாதனானுஷ்டானம் சாஸ்திர ஸம்மதமன்று. *நாஸௌ புருஷகாரேண நசாபி அந்யேந ஹேதுநா, கேவலம் ஸ்வேச்சயைவாஹம் ப்ரேக்ஷே கஞ்சித் கதாசந* என்று பகவான் சொல்லி வைத்திருக்கின்றான். காலவிசேஷத்திலே ஒரு அதிகாரி விசேஷத்தைத் தானே தன் இச்சையேயடியாகக் கடாக்ஷிப்பதாகக் கூறி யிருப்பதொன்றே வெற்றிபெறும். "கோஸலகோகுல சராசரம் செய்யுங் குண மொன்றின்றியே அற்புதமென்னக் கண்டோம்" என்கிற ஆசார்யஹ்ருதய சூர்ணையின் வியாக்கியானம் ஸேவித்துத் தெளிவது.

## கண்ணபிரானுடைய சேஷ்டித போக்யதை

திருவயோத்தியில் திருவவதரித்த இராமபிரானுடைய சரிதையைப் பன்னிரண்டு பிராயமளவும் ஒன்றுமறியப் பெறுகின்றிலோம். விச்வாமித்திர முனிவனது வேள்வி காத்தது முதலாகவே இராமபிரானது சரிதை ஆரம்பமாகின்றது. அப்போது இராமனுக்குப் பன்னிரண்டு வயது. அதற்கு முந்தின சரிதைகள் தெரியவருகின்றில. கண்ணபிரானுடைய சரிதைகள் பிறந்தவன்றே தொடங்கி அபரிமிதங்கள். அதிலும் பன்னிரண்டு பிராயமளவும் பேரின்பமும் இன்சுவையும் வடிவெடுத்த சரிதைகள். பிராயம் முதிர்ந்த பிறகு செய்தருளின கீதோபதேசம், பாரதயுத்த நிர்வஹணம் முதலான பெருஞ்செயல்கள் கிடக்க. நம் ஆழ்வார்களின் ஈரச்சொற்களை அப்ரமேயமாக விளைவித்தவை கண்ணபிரானுடைய சிறுச் சேவகங்களேயன்றோ. கண்ணபிரானுடைய திவ்வியசேஷ்டிதங்கள் இத்தனை அற்புதமாக அமைந்திலவென்றால் ஆழ்வார்களின் அருளிச் செயல்கள் இத்தனையழகு பெற்றிருக்க விரகில்லையே. ஆண்டாள் தன்னுடைய திருப்பாவைக்குக் கண்ணபிரானுடைய கதைகளை இலக்காகக் கொண்டிலளென்றால் "கோதை தமிழ் ஐயைந்துமைந்து மறியாத மானிடரை வையஞ் சுமப்பதும் வம்பு" என்னும்படியான ஏற்றம் அதற்கு ஏற்றிராதே.

## கண்ணபிரானும் பலராமனும்

கண்ணபிரானுடைய திவ்விய சேஷ்டிதங்கள் இவ்வளவு ரஸ்யமாக அமைந்ததற்குக் காரணம் நம்பிமூத்தபிரானோடு [ஸ்ரீபலராமனோடு] சேர்க்கையேயென்று வேதாந்தவாசிரியர் திருவுள்ளம்பற்றுகின்றார். தசாவதார ஸ்தோத்ரத்தில் பலராமஸ்துதி பத்யத்தில்,

> "க்ஷீரம் சர்க்கரயேவ யாபிரப்ருதக்பூதா: ப்ரபூதைர் குணை:
> ஆகௌமாரகமஸ்வதந்த ஜகதே க்ருஷ்ணஸ்ய தா: கேலய:"

என்று பணித்தது காண்க. கண்ணபிரானோடு பலராமன் கூடியிருந்திலனாகில் கண்ணபிரானுக்கு அபாயங்கள் அபரிஹார்யமாகுமென்று பட்டர் திருவுள்ளம் பற்றுகிறார். ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தரசதகத்தில் பலராம ஸ்துதி பத்யத்தில்,

> "யத்விச்லேஷலவோபி காலியபுவே கோலாஹலாயாபவத்"

என்றருளிச் செய்தது காண்க. ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் காளியமர்த்தநம் சொல்லத் தொடங்கிய பராசர பகவான் "ஏகதாது விநா ராமம் க்ருஷ்ணோ ப்ருந்தா வநம் யயௌ" என்றார். கண்ணபிரான் நாடோறும் பலராமனோடு கூடவே விருந்தாவனம் செல்வது வழக்கம்; ஒரு நாள் அவனை விட்டுத் தனியே சென்றான். அன்றுதான் காளியன்பொய்கை கலங்கப் பாய்ந்திட்டது. "தமையன் ஒருநாள் பேரநிற்க, தம்பி பாம்பின் வாயிலே புகும்படியாயிற்று" என்பது பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்தி. இதையே காட்டுவது மேலே யுதாஹரித்த பட்டர் ஸ்ரீஸூக்தி.

நம்பிமூத்தபிரான் ஆதிசேஷாம்சமாகையாலே வெண்ணிறத்தன். கண்ணபிரானோ *கண்ணனென்னுங் கருந்தெய்வம்* என்று ப்ரஸித்தன். திருவாய்ப் பாடியில் இவ்விருவரும் முன்னும் பின்னுமாக நடந்து செல்லுமழகு, வெள்ளிமலைக் குட்டியொன்று முன்னே செல்ல, நீலமணி மலைக்குட்டியொன்று அதன் பின்னே செல்லுகின்றதோ! என்றெண்ணலாம் படியிருந்ததாம். பெரியாழ்வார் திருமொழி (1—7—5) காண்க.

பலராமனுக்குத் திருவாய்ப்பாடியில் நல்ல பெயர்; அவன் வம்பு தும்பு சேஷ்டைகளொன்றும் செய்வதில்லையென்று ப்ரஸித்தி; இதனை

> 'மைந்நம்பு வேற்கண்ணல்லாள் முனனம்பெற்ற வளைவண்ண நன்மாமேனி
> தன்னம்பிநம்பியு மிங்குவளர்ந்தது அவனிவைசெய்தறியான்"(பெரிய திருமொழி 10-7-4)

என்று ஆய்ச்சிகள் சொல்லுவர்கள். *அண்ணற்கண்ணானோர் மகனைப்பெற்ற அசோதை நங்காய்!* என்று யசோதைப்பிராட்டியை விளிப்பர்கள். 'அண்ணற் கண்ணான்' என்பதற்கு இருவகையாகப் பொருள்பணிப்பர்; 'அண்ணல் கண்ணான்' என்று பிரித்து 'இவனே ஸர்வ

ஸ்வாமியென்று கோட்சொல்லித்தரவல்ல திருக்கண்களையுடையவன் என்பதொன்று. 'அண்ணாற்கு அண்ணான்' என்று பிரித்து அண்ணலான பலராமனுடைய பிரகிருதிக்குச் சேர்ந்திராதவன் என்பது மற்றொன்று. தீம்புசெய்ய அறியானவன்; தீம்பிலே தகணேறுமவன் இவன். நந்தகோபாலனுக்கு ஏற்றம் சொல்லுகிற ஆண்டாள் *கொந்தளமாக்கிப் பரக்கழித்துக் குறும்பு செய்வானோர் மகனைப் பெற்ற நந்தகோபாலன்* என்கிறாள்.

கண்ணபிரான் தீமைகள்செய்ய ஆயர்மனைகளிலே புகுவன்; வீட்டிலுள்ளார் புழைக் கடைப்பக்கமாக இருக்கும் ஸமயம் பார்த்து தயிர் பால் நெய் வெண்ணெயுள்ள அறையிலே புக்கு சேஷ்டை பண்ணுவன். சத்தம்கேட்டு ஓடி வந்து 'பயலே! யார் நீ? என்று கேட்டால் 'பலராமன் தம்பிநான்' என்பனும் கண்ணன். 'பலராமன் யோக்யனாகையாலே இவனும் யோக்யனாகவேயிருப்பன்' என்றெண்ணிக்கொண்டு போய்விடட்டுமவர்கள்' என்பது கண்ணன் கருத்துப் போலும். "பட்டிமேய்ந்தோர் காரேறு பலதேவற்கோர் கீழ்க்கன்றாய்" என்ற ஆண்டாளருளிச்செயல் ஆண்டாளொருத்தியே பேசத்தகுவதன்றோ. இங்கு கர்ணாமிருதமான ச்லோகமொன்றைச் சிறிதுரைப்போம் :

"கஸ் தவம் பால!, பலாநுஜ:, கிமிஹ தே, மந்மந்திராசங்கயா,
யுக்தம் தத் நவநீத பாண்டகுஹரே ஹஸ்தம் கிமர்த்தம் ந்யதா : ?
மாத : கஞ்சந வத்ஸகம் ம்ருகயிதும், மாகா விஷாதம் க்ஷணாத்
இத்யேவம் வகவல்லவீபிருதித : க்ருஷ்ணஸ்ஸ புஷ்ணாது ந :."

**[ஒருத்தியின் வீட்டினுள்ளே புகுந்து வெண்ணெய்க் குடத்தினில் கையிட்ட கண்ணனைக் கண்டு கோபி கேட்பதும் கண்ணன் விடையிறுப்பதும்].**

கோபி :—(கஸ் த்வம் பால!) பயலே! யாரடா நீ?

கண்ணன் :—(பலாநுஜ:) நான் தெரியாதா? நான் பலராமன் தம்பியல்லவா?

கோபி :—(கிமிஹ தே?) அப்படியா? ஸரி; இங்கு எதற்காக வந்தாய்?

கண்ணன் : (மந்மந்திராசங்கயா) இப்பாடியில் மனைகளெல்லாம் ஒரேசாயலாயிருப்பதால் என்மனையென்று மயங்கி வந்துவிட்டேன்.

கோபி :—(யுக்தம் தத்! நவநீதபாண்ட குஹரே ஹஸ்தம் கிமர்த்தம் ந்யதா:?) உன் மனையாக மயங்கி வந்துவிட்டது ஸரிதான்; உள்ளே வந்து பின்பு இது உன்மனையன்று என்று தெரிந்திருக்குமே; அப்படியிருக்க, வெண்ணெய்த் தாழியினுள் கைவைத்தாயே, ஏன் ?

கண்ணன் :—(மாத :! கஞ்சந வத்ஸகம் ம்ருகயிதும்) ஆய்ச்சீ? அதைப்பற்றிக் கேட்கிறாயோ? உண்மையுரைக்கின்றேன் கேள். நான் கன்று கறவைகளை மேய்ப்பவனென்பது உனக்குத் தெரிந்திருக்குமே; அக்கன்றுகளில் ஒரு கன்று எங்கேயோ தவறிவிட்டது; அது இங்கே புக்கு ஒளித்திருக்கின்றதோ வென்று தேடிப்பார்க்க இந்தத் தாழியில் கையிட்டேனத்தனை; வேறொன்றுமில்லை.

(இதைக்கேட்ட கோபியானவள் 'பயலே! நீ சொல்வது வெகு நன்றாயிருக்கிறது; கன்று குட்டி கெட்டுவிட்டதாம், அதை வெண்ணெய்த்தாழியில் தேடுகிறாயாம். செய்தி வெகு நன்றாயிருக்கிறது' என்று சொல்லிக்கொண்டே ஓங்கியடிக்கப் புகுந்தாள். உடனே கண்ணன் அழத்தொடங்கினான். அதுகண்ட கோபி இது யசோதைக்கு எட்டுமாகில் என்னாகுமோ என்றஞ்சி.)

கோபி : (மா கா விஷாதம் க்ஷணாத்) பயலே! அழேலழேல்; உனக்கு வேண்டிய வெண்ணெய் தருகிறேன், பெற்றுக்கொண்டு அழாதே செல்வாயாக என்றாள். கண்ணன் வெண்ணெயைப் பெற்று உண்டு மிக்க மகிழ்ச்சியோடு வெளியேறினான். ... ... *

---

ஸ்ரீரஸ்து.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

காஞ்சீபுரம் தேவப்பெருமாள் ஸன்னிதியின்
வைதிக லௌகிக பௌராணிக வரலாறுகளை
யெல்லாம் ஸப்ரமாணமாக விவரிக்கும்



# வரதன் ஸன்னிதி வரலாறு.





ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்

## அண்ணங்கராசாரியர்

எழுதியது.

ஸ்ரீராமாநுஜன் வெளியீடு.

காஞ்சீ ஸ்ரீ வெங்கடேச்வர பிரெஸ்ஸில் அச்சிட்டது.

விலை ரூ. 1.

கிடைக்குமிடம்:

க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.

1—6—1955.



ஸ்ரீகாஞ்சி பிரதிவாதி பயங்கரம்

அண்ணங்கராசாரிய ஸ்வாமி

ஸ்ரீ:
பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.
ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.



# வரதன் ஸன்னிதி வரலாறு.

**தேவப்பெருமாள் ஸன்னிதியில், தீர்த்த மரியாதையும்
அத்யாபக மிராசுமுடையவரான
ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் எழுதியது.**

மங்களாசரணம்

"திவ்யாவயவ ஸௌந்தர்ய திவ்யாபரண ஹேதயே.
தந்தாவளகிரீசாய தேவராஜாய மங்களம்."

[மணவாளமாமுனிகள்.]

## முதல் அத்யாயம்.

1. உபய விபூதிநாதனென்று உலகம் போற்றநின்ற எம்பெருமான் நித்யவிபூதியான ஸ்ரீவைகுண்டத்திற் காட்டிலும் லீலா விபூதியான இம்மண்டலத்திலே அநுக்ரஹம் மிகுந்தவனென்பதை நம்மாழ்வார் *கடல் ஞாலத்து அளிமிக்கான்* (திருவாய் 4-8-5) என்கிற பாசுரத்தினால் வெளியிட்டருளினார். நித்ய ஸூரிகளும் முக்தர்களும் நிரந்தர ஸேவை பண்ணப் பரிபூர்ணாநுபவம் நடைபெறுமிடமான த்ரிபாத் விபூதியிற்காட்டிலும் இவ்விருள்தருமா ஞாலத்திலே எம்பெருமானுக்கு மிகுந்த ஆதரமுண்டாவதற்குக் காரணம்—ஸம்ஸாரிகள் படுமிழவைப் போக்கவேண்டியிருத்தல் என்பதுதவிர, இம்மண்ணுலகில் திவ்ய தேசங்கள் திசைதொறும் மலிந்திருப்பதே முக்கிய காரணமாகும். இங்கு நூற்றுக்கணக்கான திவ்ய தேசங்கள் திகழ்ந்தாலும் "கோயில் திருமலை பெருமாள்கோயில்" என்று மூன்று திவ்ய தேசங்கள் மிக முக்கியமாகக் குலாவப்படுகின்றன. ஸ்ரீரங்கம் திருவேங்கடமலை ஸ்ரீகாஞ்சீ என்னுமிவையே கோயில் திருமலை பெருமாள்கோயில் என்று ஸம்ப்ரதாய முறையில் வழங்கப்படுகின்றன.

2. ஸகலதிவ்யதேசங்களுக்குள்ளும் இம்மூன்று திவ்யதேசங்களுக்கு விசேஷமான ஏற்றம் எதனாலுண்டாயிற்றென்னில்; நம்மாழ்வார் தம்முடைய முதற்பிரபந்தமான திரு

விருத்தத்தில் இம்மூன்று திவ்யதேசங்களைமட்டுமே மங்களாசாஸனம் செய்தருளினபடியாலே யென்று பெரியார் கூறுவர். "பொருநீர்த்திருவரங்கா வருளாய்" (28) என்று ஸ்ரீரங்கத்தையும், "பெருமான்மலையோ திருவேங்கடமென்று கற்கின்ற வாசகமே" (60) என்று திருவேங்கடமலையையும், "விண்ணோர் தொழுங்கண்ணன் வெஃகாவுது" (25) என்று ஸ்ரீ காஞ்சியையும் மங்களாசாஸனம் செய்திருப்பது காணத்தக்கது. இம்மூன்று திவ்ய தேசங்கள் தவிர வேறொரு திவ்யதேசம் ப்ரதமப்ரபந்தமான திருவிருத்தத்தில் போற்றப்பட்டிலாமையினாலே ஆழ்வார்திருவுள்ளத்தினால் இம்மூன்று திவ்ய தேசங்களுக்கே முக்கியத்வம் கொள்ளப்பட்டதென்று கொண்டு ஸ்ரீவைஷ்ணவப் பேராசிரியர்கள் இவற்றுக்கே தலைமை கொடுத்து வழங்கிவருகின்றார்கள்.

3. மேலே குறித்த மூன்று தலங்களுக்குள்ளும் ஸ்ரீ காஞ்சீபுரிக்கே மிகவும் ப்ராதான்யம் ப்ரஸித்திபெற்றுள்ளது. அதற்கும் காரணம் ஆழ்வாருடைய ஸ்ரீ ஸூக்தியே. நம்மாழ்வார் முதற் பிரபந்தத்தின் முதற்பாட்டிலும் சரமப்ரபந்தமான திருவாய்மொழியின் முதற்பாட்டிலும் நம் தேவப்பெருமாளையேயன்றோ போற்றியுள்ளார். திருவிருத்தத்தின் முதற்பாட்டில் "இமையோர்தலைவா! மெய்ந்நின்று கேட்டருளாய்" என்றார். தேவாதிராஜன் என்னுந்திருநாமத்தையே உட்கொண்டு *இமையோர் தலைவா! என்றது; திருவாய்மொழியின் முதற்பாட்டில்*அமரர்களதிபதியென்றதும் தேவப்பெருமாளைத் திருவுள்ளத்திற்கொண்டே; ப்ரணதார்த்திஹரனென்ற திருநாமத்தையுட்கொண்டு *துயரறுசுடரடியென்றுமருளிச்செய்தது. "ப்ரதமசதகே வீக்ஷ்ய வரதம்" என்று வேதாந்த வாசிரியர் வகுத்திருப்பதும் இந்த நிர்வாஹத்தை நிலைநாட்டித் தரும்.

4. இத்தலத்தைப் பெருமாள்கோயிலென்று வழங்கிவருவதுகொண்டும் இதன் ப்ராதான்யத்தை யுணரலாம். உலகில் எல்லாதிவ்யதேசங்களுமே பெருமாள்கோயிலாயிருக்க, இதனைமட்டும் பெருமாள்கோயிலென அநாதிகாலமாக வழங்கிவருவது குறிக்கொள்ளத்தக்கது. சாரீரகமீமாம்ஸையென்கிற ப்ரஹ்மஸூத்ரத்திற்குப் பலபாஷ்யங்கள் தோன்றியுள்ளன. இதரபாஷ்யங்களை சங்கரபாஷ்யமென்றும் மத்வபாஷ்யமென்றும் நீலகண்ட பாஷ்யமென்றும் கர்த்தாக்களின் பெயரையிட்டு வ்யவஹரித்துவருகிறார்கள். ஸ்வாமி யருளிச்செய்த பாஷ்யத்தை மாத்திரம் ராமாநுஜ பாஷ்யமென்னாமல் ஸ்ரீபாஷ்ய மென்றே உலகமெல்லாம் வழங்கிவருகின்றது. அதுபோலவேயாம் இத்தலத்தை மாத்திரம் பெருமாள்கோயிலென்பது.

5. இன்னமும் இத்தலத்தின் சிறப்பைக் கேண்மின். வெளியூரிலிருந்து புறப்பட்டு இவ்வூர்க்கு வருகிறவர்கள் அங்கேபுறப்படும்போது பெருமாள்கோயிலுக்குப் போவதாகச் சொல்லுவதும்; இவ்வூர்வந்துசேர்ந்து க்ருஹத்தினின்றும் ஸன்னிதிக்குப் போம்போது கோயிலுக்குப் போவதாகச் சொல்லுவதும், கோயிலுக்குள்ளே போனபிறகு ஸ்ரீஹஸ்திசைல சிகரோஜ்ஜ்வலபாரிஜாதனை ஸேவிக்கவேண்டித் திருமலைக்குப் போவதாகச் சொல்லுவதும் வ்யவஹாரத்தில் காண்கையாலே கோயில் திருமலை பெருமாள்கோயிலென்னும் மூன்று திவ்ய தேசங்களும் இவ்விடத்தே யுள்ளன வென்று கொள்ளத் தகுதியுண்டு.

6. இங்ஙனே சிறப்புப்பெற்ற இத்தலத்தின் வரலாறுகளை உள்ளபடியுணர விரும்புமவர்கள் எங்குமுள்ளார்கள். அன்னவர்கட்கு ஸகலபாஷைகளிலும் இத்தலத்தின் வரலாறுகளை விளக்கிப் புத்தகங்கள் அச்சிட்டு உதவவேண்டுவது மிக முக்கியமானது. ஹஸ்திகிரீ

மாஹாத்மியம் என்கிற புராணநூல்கொண்டு தெரிந்து கொள்ளக்கூடிய வரலாறுகளை நாம் வடமொழி, தென்மொழி, தெலுங்கு பாஷைகளில் ஸாரமாகவெழுதிப் பலவாண்டுகட்கு முன்னமே வெளியிட்டிருக்கிறோம். [அவை இந்நூலின் அநுபந்தமாகவும் வெளியிடப்பெறும்.]

7. புராண வரலாறுகள் தவிர, பிற்காலத்து வைதிக லௌகிக வரலாறுகள் பலவற்றையும் தெரிந்துகொள்ள விரும்புவது நவநாகரிகர்களுக்கு இயற்கையாதலால் அன்னவர்களையும் த்ருப்திசெய்விக்க இந்நூலெழுதப்படுகின்றது. ஸமீபகாலத்தில் [இரண்டு மூன்று வாரங்களுக்கு முன்பு] "காஞ்சீபுரம் தேவராஜஸ்வாமி தேவஸ்தான வரலாறு" என்றொரு சிறுபுத்தகம் (27 பக்கமுள்ளது) தேவஸ்தான வெளியீடாக வெளியிடப்பட்டு நமதுபார்வைக்கு வந்தது. இந்த தேவஸ்தானத்தில் தற்காலம் எக்ஸிக்யூடிவ் டிரஸ்டி பதவியிலிருந்துவரும் ப்ரஹ்மஸ்ரீ விச்வநாதய்யரவர்கள் ஒரு அட்வகேட்டுக்கு நியமனம் தந்ததாகவும், அவர் மேலேசொன்ன வரலாற்றை யெழுதிக்கொடுத்ததாகவும், அதை தேவஸ்தான மூலமாக அச்சிட்டு வெளியிட்டதாகவும் காண்கிறது.

8. தேவஸ்தானத்தின் வரலாறுகளை வெளியிட விருப்பமும் அவசியமும் ஏற்பட்டால் இந்த தேவஸ்தானத்தின் நீண்டகால அநுபவமுள்ளவராய், கக்ஷிகளில் மனத்தைச் சிறிதும் செலுத்தாமல் நடுநிலையில் நிற்பவராய், அப்ராமாணிகவிஷயங்களை நெஞ்சாலும் நினையாதவராய், ப்ராமாணிக விஷயங்களையே ஸஹ்ருதய ஹ்ருதயங்கமமாக எழுதுமியல்வினராய் விளங்குமவர்களை நாடிப் பிரார்த்திக்கவேணுமேயல்லது கக்ஷிபேதங்களை வளரச் செய்வதொன்றிலேயே கண்ணுங்கருத்துமானவர்களைப் பிரார்த்திப்பதும் அன்னவர்களெழுதித்தரும் புத்தகங்களை தேவஸ்தான மூலமாக வெளியிடுவதும் மெச்சத்தக்கதாகாது. வீணான மாச்சரியத்தை வளர்க்கும் இத்தகையபுத்தகங்களினால் உலகுக்குயாதொரு நன்மையும் செய்யப்பட்டதாகாது. நன்மை செய்யப்படாததோடு தீமையும் செய்யப்பட்டதாகும். ப்ரஸ்தாவித்த வரலாற்றுச் சுவடியில் உண்மையான விஷயங்கள் பல விடுபட்டும், உண்மைக்குமாறான விஷயங்கள் பல பல புகுத்தப்பட்டு மிருக்கின்றன. லோகாபிராமமாக எழுதிவருகையில் "இக்காஞ்சிமாநகர் சென்னைக்குத் தென்மேற்காய் 45 மைல் தூரத்திலுள்ளது ; ஸதரன் ரைல்வேயில் செங்கற்பட்டு—அரக்கோணம் கிளைப்பிரிவில் அதன் நடுவேயுள்ளது. காஞ்சீபுரம் ரைல்வேஸ்டேஷன் பெரிய காஞ்சீபுரத்திற்குச் சமீபமானது. இது செங்கற்பட்டு ஜில்லாவைச் சேர்ந்தது. இங்கே பஸ்ஸுகள் ஏராளம். கடைகள் கடைவீதிகள் விசேஷம். நெசவுத்தொழில்கள் அபாரம்" "இக்கோவில் கோபுரம் மிகவும் உயரமானது ; மேலண்டை கோபுரத்தைவிட கீழண்டை கோபுரம் அதிகவுயரம் ; வெகுதூரத்திலிருந்து பார்த்தாலும் கோபுரம் கண்ணுக்குத் தெரியும்" என்றிப்படி எழுதியுள்ளவை சிறிதும் ஆக்ஷேபிக்கத் தகாதவை. இவ்வண்ணமாகவே 100, 200 பக்கங்களும் எழுதிக்கொண்டே போகலாம். அதனால் நூலின் கௌரவத்திற்குச்சிறிதும் ஹானியில்லாமலேயிருக்கும். இந்த அபூர்வார்த்த ப்ரகாசனங்களோடு நின்றிருந்தால் மிகவழகியதே.

9. உலகில் சிலர் ராமாயணம் சொல்லுகிறேனென்று ஆரம்பித்து வாய்போனபடி யதேஷ்டமாக அபார்த்தங்களை யெல்லாம் கலந்து பொழிவதுண்டு; சிலரோவென்னில், உட்பொருள்களில் பிரவேசியாமல் "ராமாயணம் மிகவுயர்ந்தநூல் ; இதை த்ரிமதஸ்தர்களும் கொண்டாடுகிறார்கள் ; இதற்கு த்ரிமதஸ்தர்களும் வியாக்கியானங்கள் செய்திருக்கிறார்கள். இது பல லிபிகளில் பலதடவை அச்சிடப்பட்டிருக்கிறது. இதற்குப் பல பாஷைகளில்

மொழிபெயர்ப்புகள் தோன்றியிருக்கின்றன." என்றிப்படி மணிக்கணக்காகப் பெசிக் கொண்டு போவதுண்டு. "அபார்த்தங்கள் சொல்லி அனர்த்தத்தை விளைப்பதிற் காட்டி லும் இங்ஙனே பேசிக்கொண்டு போவது தேவலை" என்று அவ்வுபந்யாஸங்களை மஹான்கள் கொண்டாடுவதுண்டு. அவ்வண்ணமாகவே இந்த வரலாற்று நூலெழுதப்புகுந்தவரும் காஞ்சீ புரத்தின் அகல நீளங்களை வருணிப்பது, கடைவீதிகளின் காட்சிகளை விவரிப்பது, ஸன்னிதியில் நூற்றுக்கால் மண்டபம் முதலானவற்றிலுள்ள சிற்பங்களின் சிறப்புக் களைச் செப்புவது, தேவப்பெருமாளுக்கு உத்ஸவங்கள் நடக்கிறவிதம் வெகு ஆச் சரியம், மிகமிகவற்புதம், இப்படி எங்குமே ஸேவித்ததில்லையென்று கண்ணீர்மழை பொழிந்து எழுதுவது ; ஆக இப்படிப்பட்ட தொண்டு செய்வதோடு நின்றிருந்தால் உண் மையில் மிகமிக மெச்சும்படியாகவேயிருக்கும். புத்தகமும் விசேஷமாக விற்பனையாகும்.

10. இந்த தேவாலயத்தில் இடையில் பல வருஷங்கள் தலைவிரித்தாடி 25, 30 வருஷங் களாக சாந்தமாயிருக்கின்ற கலாவிவாதங்களை மீண்டும் கிளப்புவதற்கென்றே எழுதப்பட்ட விவாத வரலாற்றுச்சுவடியை தேவஸ்தான வெளியீடாகக் காட்டுவதும், தேவஸ்தானத்தில் விற்பனை செய்யப்படுவதாகத் தெரிவிப்பதும் தகுதியற்றது. "ஆத்தான் ஜீயர், வடகலை ஸம்பிரதாயத்தைச் சேர்ந்த இந்தக்கோயிலில் தமது தென்கலையாசாரியரது பத்யத்தை யநு ஸந்தித்துப் பிரபந்த ஸேவாகாலம் தொடங்க அனுமதி பெற்றார்" என்பது முதலான அஸம் பத்த விஷயங்கள் மலிந்த விவாத வரலாற்றுச்சுவடியானது இந்த தேவஸ்தானத்திற்கு வெகு தூரத்தளவிலே நிற்கத்தக்கதென்பதை நாம் விரிவுக்கு அஞ்சாது விபுலமாகவே நிரூபிப்போம்.

முதலத்யாயம் முற்றிற்று.

---

## இரண்டாவது அத்யாயம்.

11. இந்த நமது நூலுக்கு விவாதவரலாற்றுச் சுவடியின் மறுப்புரைத்தல் ப்ரதான லக்ஷ்ய மன்று. இந்த தேவஸ்தானத்தின் மஹிமைகளையும் சரித்திரங்களையும் ருஜுவான ஆதாரங்க ளுடன் ப்ராமாணிகர்கள் உகக்கும்படியாயும், அப்ராமாணிகர்களுக்கும் வாய்திறக்க இட மில்லாதபடியாயும் விவரிப்பதுதான் இந்த நமது நூலுக்கு ப்ரதானலக்ஷ்யம். விவாத வர லாற்றுச்சுவடியிலுள்ள, "தாதாசாரியர்களுடைய வம்சஸ்தர்களே வெகுகாலம் தர்மகர்த்தாக்க ளாக யிருந்துவந்தார்கள்" என்ற வாக்கியத்தில் "ஆகயிருந்து" என்ற சொல்தொடையைக் காணும் இலக்கணவிலக்கியப் புலவர்கள் எப்படி வெறுப்பர்களோ, அப்படியேதான் விஷயங் களைக் காணும் விவேகிகளும் மிகமிக வெறுப்பர்களென்பதில் ஐயமில்லை. கக்ஷி விஷயங்களில் ஸம்பந்தப்படாமல் ஸாதாரணமாக எழுதியிருக்கும் விஷயங்களிலுங்கூட விபரீதங்களே மிக மலிந்து கிடக்கின்றன. கேண்மின் ;—

12. "தெப்போத்ஸவத்துக்காக வருஷத்துக்கு இருமுறை பெருமாள் வெளியூருக்கு எழுந்தருளுகிறார். தென்னேரிக்கும், ராய்ஜீகுளத்துக்கும் எழுந்தருளி அங்கே தெப்போத்ஸ வம்" என்றெழுதப்பட்டுள்ளது. தென்னேரித்தெப்பம் இடையில் ஆரம்பித்துச் சில வரு ஷங்கள் நடந்து அறவே நின்றுபோய் அனேக வருஷங்களாயிற்று. இதைப்பற்றி எழுத வேண்டிய முறை இதுவா? (2 "வனபோஜன உத்ஸவம் தற்காலம் தைமாதச்ரவணத்தில் நடந்துவருகிறது" என்றெழுதப்பட்டுள்ளது. 30, 40 ஆண்டுகட்கு முன்பு இவ்வுத்ஸவம் ச்ரவணத்தில் நடந்துவந்ததுண்டு. இவர் தற்காலம் என்று குறிப்பிட்டு ச்ரவணத்தில் நடந்து

வருவதாக எழுதுவது தவறு. ஒரு ஞாயிற்றுக்கிழமை பார்த்து அதிலேயே நியமமாய் நடத்தப்பட்டு வருகிறது. அந்த நாளில் ச்ரவண நக்ஷத்திரம் யாத்ருச்சிகமாகக் கூட இதுவரை சேர்ந்ததில்லை. நிகழும் மன்மத வருஷத் தைமாதத்தில் திருவோணம் ஞாயிற்றுக்கிழமையோடு சேர்ந்துவருகிறது; ஆனுல் அதில் வனபோஜன உத்ஸவம் நடத்தமாட்டார்களென்பது திண்ணம். பார்க்கலாமே. இப்படிப்பட்ட சிறு விஷயங்களும் அஸம்பத்தமாக எழுதப்படும்போது மற்ற விஷயங்களில் கேட்கவேணுமோ? பாஷையின் வ்யுத்பத்தியிலும் குறைகள் பல. (பக்கம் 3-ல்) பஞ்சப்பிராகாரங்கள் என மகுடமிட்டு "இக்கோயிலுக்குப் பிராகாரங்கள் ஐந்து; மாடவீதி எனப்படும் மடவிளாகம் வெளிப்பிராகாரம்" என்றெழுதியுள்ளது. ப்ராகார மென்று திரு மதிளுக்குப் பெயரேயொழிய திருவீதிக்குப் பெயரன்று. மாடவீதிகளில் காட்சிதருவது வெளிப்பிராகாரம் என்றெழுதி யிருக்கவேணுமேயொழிய, மாடவீதியையே வெளிப்பிராகாரமாக எழுதியிருப்பது மருள். இத்தகைய விஷயங்களை நாம் எழுதுவதற்கு இவரை லக்ஷ்யமாகக் கொள்வது பொருத்தமற்றதென விடுப்போம்.

13. திவ்யதேசங்களுக்கு ப்ரபாவம் முக்கியமாக ஆழ்வாராசாரியர்களின் ஈடுபாடு பற்றியேயாகும். நம் தேவப்பெருமாள்ஸன்னிதிக்கு ஆசாரியர்களின் ஈடுபாடு விசேஷமாக இருந்தாலும் ஆழ்வார்களின் பாடல் கிடையாதென்று சில அறிவிலிகள் பிரசாரம் செய்து போருவதுண்டு. இதைப்பற்றி விசார நூல்களும் பலவாண்டுகட்கு முன் வெளிவந்துள்ளன. பலஆழ்வார்களால் பாடப்பட்டதலமிது வென்று ஸித்தாந்தம் செய்யப்பட்டிருக்கிறது. விவாத வரலாற்று நூலில் (பக்கம் 18-ல்) இலக்கியப்பகுதி யென்று தொடங்கி இத்தலத்தைப் பாடியவர்களைப் பற்றி ஏதோ எழுதப்பட்டுள்ளது. ஆழ்வார்கள்யாவரும் ஆளவந்தார் முதலான ஆசாரியர்களுக்கு மிக முற்பட்டவர்களாதலால் அப்படிப்பட்ட ஆழ்வார்களின் பாடலைப்பற்றியே முன்னம் விரிவான நிரூபணம் செய்யவேண்டும். விவாதவரலாற்றில் அஃது அடியோடு செய்யப்படவில்லை. "சுமார் 900 வருடங்களுக்குமுன் ஆளவந்தாரென்கிற ஆசார்ய ச்ரேஷ்டர் வரதனைக்குறித்து ஒரே ஒரு ச்லோகம் பாடினர்" என்று இலக்கியப்பகுதி ஆரம்பம் செய்யப்பட்டிருக்கின்றது. "ஸ்தோத்ரரத்ந மென்கிற ஆளவந்தார் ஸ்தோத்ரம் தேவப்பெருமாள் விஷயமேயென்பது பெரியோர் கொள்கை" என்று, ஸம்ப்ரதாய ஸரணியில் நடையாடாத வொருவிஷயம் நூதநமாக ப்ரஸ்தாவிக்கப்படுகிறது. அபிமானவிசேஷத்தினுல் இங்ஙனே யெழுதுவதில் தவறு ஒன்றுமில்லையாதலால் இதுகிடக்க.

14. ஆளவந்தார்பாடலையறிவித்த பிறகு ஆழ்வார்பாடலைப்பற்றிச் சில வார்த்தைகளெழுதப்பட்டுள்ளன. "ஆழ்வார்களால் பாராட்டப் பெற்று பாடல்பெற்ற ஸ்தலமிது என்பதே தொன்றுதொட்டு எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட விஷயம்........ இத்திருக்கோயில் ஒரு திருப்பதியன்று, திவ்யதேசமன்று என்று சொல்லப் பிராமாணிகர்களால் இயலாது" என்கிற வார்த்தைகளைக் காண்கிறோம். ஆரியர்காள்!, இத்தலத்தைப் பாடின ஆழ்வார்களின் திருநாமங்களையும் அவ்வாழ்வார்களின் பாசுரங்களையும் எடுத்துக்காட்டி ஆனந்தமாக அநுபவிக்க வேண்டியது ப்ராப்தமாயிருக்க இவ்வண்ண மெழுதுவது பக்தர்களுக்குத் தகுமா? பிரபலகவியான பிள்ளைப் பெருமாளையங்கார் இத்தலத்தைப் பாடியிருக்கிற படியாலே ஆழ்வார்கள் பாடினுரென்பது ஸித்தமாகிறதென்று அட்வகேட் முடித்திருப்பது மிகவும் வருந்தத்தக்கது. இத்தலத்திற்கு ஆழ்வார் பாடல் கிடையாதென்று கூறுகின்ற பிரதிவாதிகளைக் கண்டனம் செய்ய வேண்டும்போது ஐயங்கார் பாடலையெடுத்துக் காட்டுவது

ஏற்கும். உண்மையை யுணர்த்தப் புகுந்த நூலில் இன்னின்ன ஆழ்வார்கள் இத்தலத்தைப் பாடினர்களென்று விவரிக்கவேண்டியிருக்க, அதைப்பற்றி ப்ரஸ்தாவலேசமும் செய்யாதிருப்பது ஹ்ருதயத்தில் ஆர்ஜவமில்லையென்றுதானே காட்டும். அருந்ததிபோன்றவொரு மாதரசியைப் புகழத் தொடங்கினவர் "இவள் பதிவ்ரதையல்லளென்றும் ஸ்வைரிணி யென்றும் சொல்ல இயலாது" என்று பேசுவது முண்டோ? அப்படி பேசப்படுமாயின் அது குறை கூறுதற்கே யிட்டவழியென்பது வெளிப்படையல்லவா? ஆழ்வார்பரிஜனங்களின்மீது இவர்க்கு உள்ளுறையும் மாச்சரியமே (அல்லது) அநுராகமே இங்ஙனமெழுதுவித்த தென்னத் தட்டுண்டோ? அஃதில்லையென்னில், அசட்டுத்தன மென்றிசைய வேண்டும்.

15. இத்தலத்தைப்பாடின ஆழ்வார்களையும் அவர்களது பாசுரங்களையும் ஸ்பஷ்டமாகத் தெரிந்து கொள்ளவும் தெரிவிக்கவும் ஆற்றலில்லாமலிருக்கலாம். அப்படியாகில் ஒன்று செய்திருக்கவேணும். (அதாவது) இந்நகருக்கு வடமொழியில் காஞ்சீ என்று வழங்கிவரும் பெயரானது "க இதி ப்ரஹ்மணோ நாம தேந தத்ராஞ்சிதோ ஹரி:, தஸ்மாத் காஞ்சீதி விக்க்யாதா" என்கிற புராணச்லோகத்தின்படி நான்முகனால் ஆராதிக்கப்பட்ட தலம் என்பதுபற்றியே தோன்றியதாதலாலும், இத்தகைய விசேஷம் ஸ்ரீஹஸ்திகிரிக்கே உள்ளபடியாலும், தமிழில் கச்சி யென்னுஞ் சொல் காஞ்சீ என்கிற வட சொல்லின் விகாரமேயாதலாலும், கச்சியென்று திவ்யப்ரபந்தங்களில் எங்குவந்தாலும் அங்கெல்லாம் தேவப்பெருமாள்தலத்தின் மங்களாசாஸனமே யென்று கொள்வதில் குறையில்லை—என்று இவ்வளவு எழுதியிருந்தாலும் போதும். இவ்வண்ணமாக எழுதாமலும், இன்னின்ன பாசுரங்கள் இத்தலத்திற்கு உரியன என்று காட்டாமலும் "இத்தலத்தை திவ்யதேச மன்றென்று சொல்ல இயலாது" என்றெழுதிவைப்பதானது என்னகருத்தினாலென்பதை விவேகிகள் உய்த்துணர்க.

இரண்டாமத்யாயம் முற்றிற்று.

---

## மூன்ருமத்யாயம்.

## தேவப்பெருமாளும் மணவாளமாமுனிகளும்.

16. இதற்கடுத்தபடியாக "வடமொழி நூல்கள்" "தென்மொழி நூல்கள்" என மகுடமிட்டுத் தேவப்பெருமாள்விஷயமாக வடமொழி தென்மொழிகளில் அவதரித்துள்ள நூல்களைக் குறிப்பிட்டு வருகையில், ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் சேராதவர்களும் விஷ்ணுத்வேஷிகளுமானவர்கள் இயற்றிய நூலையும், ஆசார்ய கோஷ்டியில் சேராத நவீந விகட கவிகள் இயற்றிய நூலையும், களத்தூர் வீரராகவமுதலியாரியற்றிய நூலையும் குறிப்பிட்டிருக்குமிவர்க்கு ஆசார்யஸார்வபௌமரான மணவாளமாமுனிகள் இயற்றியருளின தேவாதிராஜ மங்கள நூல் நினைவுக்கு வரவில்லைபோலும்; இந்த மங்கள நூல் இந்த தேவஸ்தானத்திற்கு அபூர்வமானதன்று. இதைப்பற்றி நியாயாலய மறிந்த இதிஹாஸம் கேண்மின்;

17. ஸ்ரீவைஷ்ணவ தேவாலயங்களுக்கு மிகவும் முக்கியமானது அத்யயநோத்ஸவம். அது ஸகல ஆழ்வார்களையும் ஆசாரியர்களையும் எழுந்தருளச் செய்து இருபத்தொருநாள் நடத்து முத்ஸவம். முற்காலத்தில் இந்த தேவஸ்தானத்தில் தர்மகர்த்தம் பார்த்துவந்த வடகலை தாதாசாரியர்களுக்கு இம்மஹோத்ஸவம் தலைவேதனையாயிருந்தபடியால் எழுபது எண்பது வருஷங்களுக்கு முன்பு இவ்வத்யயநோத்ஸவத்தை அடியோடு நிறுத்திவிட்டார்கள். ஆழ்வாராசாரியர்களுக்கு மாஸ திருநக்ஷத்ரம் வருஷ திருநக்ஷத்ரம் முதலான எந்த விசேஷமும் நடத்தாமல்

அறவே நிறுத்திவிட்டார்கள். அப்போது தென்கலையார்கள் இதைப்பற்றி நீதிமன்றங்களில் அடிக்கடி முறையிட்டுக்கொண்டே யிருந்தார்கள். சில ஸமயங்களில் மாஜிஸ்ட்ரேட்டாக வருகிற அதிகாரிகள் தர்மகர்த்தாக்களை யழைத்து "வைஷ்ணவக் கோவில்களுக்கு மிகவழகிய அனுஷ்டானமாகிய அத்யயநோத்ஸவத்தை எதுக்கு நிறுத்துகிறீர்கள்? இது நன்ருயில்லை; நடத்துங்கள்" என்று சொல்ல, அப்படியே நடத்துகிருேமென்று அவ்வதிகாரிகளிடமொப்புக் கொண்டு, திருமங்கையாழ்வார், ஆளவந்தார், ஸ்ரீராமாநுஜர், கூரத்தாழ்வான், தேசிகர் ஆகிய இவ்வைந்து திருநாமங்களை மாத்திரம் எழுந்தருளச் செய்து அவ்வுத்ஸவத்தை நடத்துவதாக நிச்சயித்திருந்தார்கள். இந்த திவ்ய தேசத்தில் க்ரந்த நிர்மாண முகத்தாலோ கைங்கர்ய முகத்தாலோ ஈடுபட்டவர்கள் இவ்வைந்து திருநாமங்களே யென்றும், இவர்களை மாத்திரமே கொண்டு இவ்வுத்ஸவத்தை நடத்துவது யுக்தமென்றும் வாதிக்கத் தலைப்பட்டார்கள். தேவராஜாஷ்டகமருளிச்செய்தவரும் அநந்யஸாமாந்யமான அத்தாணிச்சேவகம் செய்தவரு மான திருக்கச்சிநம்பிகளை இந்த ச்ரேணியில் அவர்கள் சேர்க்காததற்குக்காரணமாக அவர் (தென்கலையானதுபற்றி) இந்த தேவஸ்தானத்தைச் சேர்ந்தவரல்லரென்று பொய் சொல்லப் பட்டது. அது பொய்யுரையே யென்று நீதிபதிகளே முடித்திட்டார்கள்.

18. அப்போது நீதிமன்றத்தில் பிரபலமான விசாரணை எற்பட, தென்கலையார்கள் மணவாளமாமுனிகளின் வைபவநூலாகிய யதீந்த்ரப்ரவண ப்ரபாவ மென்கிற வசனநூலை கோர்ட்டில் தாக்கல் செய்து, மணவாளமாமுனிகளும் தேவப்பெருமானை தேவாதிராஜமங்கள மென்கிற மங்களாசாஸநஸ்துதியினுல் பாடினவரே யென்பதை நிரூபிக்க, இதை தர்மகர்த்தாக் கள் மறுக்க முடியாமல் திகைத்துநிற்க, அதிகாரிகளால் தீர்ப்பு செய்யப்பட்டதாவது, "இத்தலத்தைப் பாடினவர்களை மாத்திரமே கொண்டு அத்யயநோத்ஸவம் நடத்துவதென்று வடகலை டிரஸ்டிகள் கூறும் வாதம் விசித்திரமாயிருக்கிறது; அப்படியே ஒப்புக்கொண்டாலும், இத்தலத்தைப் பாடினவர்களுள் மணவாளமாமுனிகளும் சேர்ந்தவராகத் தீர்மானிக்கப்படுகிற படியாலே அவரில்லாமல் நடத்தவிருக்கும் பகல்பத்திராப்பத்து உத்ஸவமானது கலஹாஸ்பத மாகையாலே **144** ஸெக்ஷன்படி தடைசெய்யப்படுகிறது" என்று.

19. இவவண்ணமாக ஒரு முறையன்று, இரண்டு முறை தாதாசார்ய டிரஸ்டிகளின் முயற்சி நீதிபதிகளால் தடைசெய்யப்பட்டிருக்கிறது. இவ்விஷயங்களை இந்த அட்வகேட் அறியாதவரல்லர். நன்கு அறிந்தவரே. மணவாளமாமுனிகளின் அந்த மங்களாசாஸந நூலை வியாக்கியானத்தோடுங்கூட பலகால் ஸேவித்தவரே. யதார்த்தங்களை மறைத்து அயதார்த் தங்களையே ஸங்கோசமில்லாமல் எழுதிவரவேண்டுமென்பது இவருடைய தீக்ஷையாதலாலும், பல வருஷங்களாக இந்த தீக்ஷையையே இவர் அடிக்கடி பரிபாலநம் செய்து கொண்டு வருவ தாலும், வெளிவரும் மறுப்புரைகளினுல் தாமெழுதியது அப்ராமாணிகமேயென்று நெஞ்சார அறிந்து வைத்தும் திருப்பித் திருப்பிப் பழைய அபத்தங்களையே ஓயாமல் எழுதி மறுபதிப்பும் செய்துவருமியல்வினராதலாலும், தம்முடைய உக்திகளில் சிலபாமரர்களாவது மயங்கட்டுமே யென்றெண்ணியிருப்பவராதலாலும் இத் தன்மைகளுக்கேற்பக் காரியம் செய்து வருகின்ருர்.

20. இந்த தேவாதிராஜமங்களம் இந்த தேவஸ்தானத்தில் ப்ரஹ்மோத்ஸவாதி ஸமயங் களில் நிகழும் "அர்ச்சகர்களின்படிப்பு" என்று ப்ரஸித்தமான விஜ்ஞாபனத்தில் இன்றளவும் இடையறுது அர்ச்சகர்களினுல் விஜ்ஞாபனம் செய்யப்பட்டுவருகிறது. கூரத்தாழ்வான் போல்வார் வரதராஜஸ்தவாதிகள் அருளிச்செய்திருந்தாலும் மங்களாசாஸநரூபமாக ஒரு

ஆசார்யரும் ஒரு ச்லோகமும் அருளிச்செய்யவில்லையே யென்று குறைபட்டு, அக்குறைதீரவே மணவாளமாமுனிகள் இந்த மங்களாசாஸனஸ்துதியை யருளிச்செய்தது. பேரருளாளனும் இந்த ஸ்துதியினால் ப்ரஸந்நனாகியே இந்த தேவஸ்தானத்தில் மாமுனிகளுக்கும் அவரடியார்களுக்கும் பலவாண்டுகள் எதிரிகளிழைத்த இன்னல்களை அறவே அகற்றி அந்நாள் தொடங்கி இந்நாள்வரை கைவிடாது காத்தருள்வது.

19. மணவாளமாமுனிகள் தேவப்பெருமாளைப்பற்றியும், தேவப்பெருமாள் ஸன்னிதியிலுள்ள ஸந்நிவேசங்களைப்பற்றியும், ஸ்ரீ காஞ்சியிலுள்ள மற்றும் ஸகல ஸன்னிதிகளைப் பற்றியும் அருளிச்செய்துள்ள ச்லோகரூபமான ஸ்ரீ ஸூக்திகள் அவருடைய வைபவ நூல்களிலிருப்பவை உரையோடுங்கூட எற்கெனவே பலகால் அச்சிடப்பட்டிருந்தாலும், ஸகலபக்தர்களும் அநுஸந்தித்து உய்வதற்காக இதுதன்னிலும் மேலே அநுபந்தமாகச் சேர்க்கப்படுகிறது. மாத்ஸர்ய மலிநஹ்ருதயரானவர்களுக்கு இதனால் பலனொன்றும் விளையாதாயினும் உண்மைபக்திமான்களுக்குப் பேருதவியாகுமென்பது எமது துணிபு.

20. இவர்தாமே நேற்று நந்தன வருஷத்தில் நடந்த வைசாகோத்ஸவ விசேஷங்களைப் பற்றி 'நந்த னோத்ஸவம்' என்று ஒரு சிறுநூல் வெளியிட்டுள்ளார். அதுவும் இந்த தேவஸ்தான கார்யாலயத்தில் கிடைப்பதாக வெளியிடப்பட்டிருக்கின்றது. அதில், மூன்றாவது திருநாளாகிய கருடோத்ஸவதினத்து விசேஷங்களை யெழுதிவருமிவர்க்கு, அன்று நம்மாழ்வாருடைய சாத்துமுறை யென்பதும், வேதப்பெருமாள் அன்று நம்மாழ்வார் ஸன்னிதிக்கெழுந்தருளி ஆறுமணிகாலம் ஆச்சரியமாக விபவங்கள் கண்டருளுகிறாரென்பதும் நினைவுக்கே அணுகவில்லையன்றோ? அஃதொன்றுகொண்டே இவருடைய பக்தியின்கனத்தையும் பரமப்ராமாணிகத்வத்தையும், தடஸ்தபாவத்தையும் உலகம் மிக மெச்சுகின்றதன்றோ. இவருடைய உள்ளூறிய பகைக்கு மணவாளமாமுனிகளோடு நம்மாழ்வாரோடு அவரடியார்களோடு வாசியில்லை. அதன்காரணத்தை நாம் விவரிக்கவேணுமோ? இப்போது இவர் விவாத வரலாற்றுச்சுவடியை வெளியிட்டது உண்மையில் உலகுக்குப் பெரும்பாக்கியமே. பல நூற்றுக்கணக்கான மருமங்களை உள்ளபடி உலகம் உணர்ந்துகொள்வதற்கு ப்ரஸக்தியை விளைத்தாரென்று உகப்போம்.

மூன்றாவது அத்யாயம் முற்றிற்று.

---

## நான்காமத்யாயம்—தேவஸ்தானமும் ஆழ்வார்கள் ஸன்னிதிகளும்.

21. விவாதவரலாற்றுச் சுவடியில் "3. பஞ்சப் பிராகாரங்கள்" என்ற பகுதியின் கீழ் எழுதியுள்ளதாவது— "முற்காலத்தில் (ஆழ்வார்திருவீதி) பிராகாரத்தின் வடபுறத்தில் பெரியாழ்வாருக்கு ஒரு ஸன்னிதியும், தொண்டரடிப் பொடிகள் திருப்பாணாழ்வார் இருவர்களுக்கும் ஒரு ஸன்னிதியும் ஆக இரு ஸன்னிதிகள் இருந்ததாகவும், இப்பிராகாரத்தின் தென்கிழக்கு மூலையில் மேற்குப்பார்த்தபடி திருமங்கையாழ்வாருக்கு ஒரு ஸன்னிதியும், பிராகாரத்தின் தென்புறத்தில் திருமழிசைப்பிரானுக்கும் குலசேகராழ்வாருக்கும் சேர்ந்து ஒரு ஸன்னிதியும் முதலாழ்வார்கள் மூவருக்கும் மற்றொரு ஸன்னிதியும் இருந்ததாகவும் தெரியவருகிறது. அவ்வைந்து ஸன்னிதிகளும் இப்போது இடிந்து போய் வெகு சிலமாகக் காண்கின்றன" என்று.

22. மனமாரத்தெரிந்த உண்மைகளை மறைத்து எழுதப்பட்ட வாசகங்களன்றோ இவை. இவ்விடத்து வரலாறுகள் கேண்மின். மேலே குறித்த ஐந்து ஸன்னிதிகள் இருந்ததாகத்

தெரியவருகிறது — என்றெழுதியிருப்பது என்னவார்த்தை. குறிப்பிட்ட ஸன்னிதிகள் ஐந்தும் நாளைக்கும் ப்ரத்யக்ஷமாகக் காணப்படுமவை. மண்கட்டிடமல்ல, செங்கல் கட்டிடமல்ல; கற்பாந்தமான கருங்கல் கட்டிடங்கள். ஸன்னிதிகள் சிறியவையல்ல; ஒவ்வொரு ஸன்னிதியும் பெரிதே. இடிந்துபோய் வெகுகிலமாகக் காண்கிற தென்பதும் தவறு. ஸன்னிதிக்குள்ளே போக்குவரத்துக்கு ப்ரஸக்தியில்லாதபடி முன்னிருந்த வடகலைட்ரஸ்டிகள் செய்தமையாலே உட்புறங்களில் புற்றும் புதரும் உண்டாகி ஸர்ப்பங்களுக்கு வாஸஸ்தானமாயிராநின்றதத்தனை.

23. கி. பி. 1842ல் இந்த தேவஸ்தானமானது அரசாங்கத்தாரால் வடகலை தாதாசாரியர்களிடம் ஒப்பிக்கப்பட்ட பிறகு தர்மஹர்த்தாக்களான ஷை தாதாசாரியர்கள் மிகச்சில வருஷங்களுக்குள்ளாகவே பல அதற்கணச் செய்கைகளைச் செய்யத்தலைப்பட்டு, முதன் முதலாக ஆழ்வார்களை உள்ளேயடக்கி அவர்களுடைய ஸன்னிதிகளில் வாசலில் மண்சுவரெழுப்பி முள் ளடைத்து வைத்திட்டார்கள். ஸமீபகாலத்தில் 35 வருஷங்களுக்கு முன் வில்லியம்பாக்கம் பையாகண்ணு தாதாசாரியர் என்பவரும், மேல்மா கிருஷ்ணஸாமி தாதாசாரியரென்பவரும் இந்த தேவஸ்தானத்தில் தர்மஹர்த்ரு பதவியை வஹித்திருந்தபோது “இந்த கோவிலில் எந்த ஆழ்வாருக்கும் ஒரு உத்ஸவமும் கிடையாது, ஒரு மரியாதையும் கிடையாது” என்று எழுத்து மூலமாக நியாயாலயத்தில் ஆக்ஷேபித்திருப்பதும், ஒரு ஆண்டாள் திருக்கல்யாணத்தில் பெரியாழ்வார்க்குப் பரிவட்டம்கட்ட, அதை மேலே சொன்ன பையாகண்ணுதாதாசாரியர் தட்டிப்போட்டதும், அவ்விதமாகவே திருப்பாணாழ்வாரிடத்திலும் அபசாரப்பட்டதும் இங்ஙனே மற்றும் பல சரிதைகளும் ரிகார்டுகளில் ஏறிக்கிடக்கிறன. இந்த ஸன்னிதியில் ஆழ்வாராசாரியர்களுக்கு அத்யயநோத்ஸவமே கிடையாதென்று மூன்று கோர்ட்டுவரை வியாஜ்ஜியமாடித் தோற்றவர்களு மிவர்களே. இப்படி ஒவ்வொரு திவ்ய தேசத்திலும் உதாஹரிக்கத்தக்க சரித்திரங்கள் மஹாபாரத ராமாயணாதிகளுக்கும் மேலாகவுண்டு.

24. இந்த தேவஸ்தானத்தில் தாதாசாரியர்கள் விசேஷமான திருப்பணிகள் செய்திருப்பதாக விவாத வரலாற்றுச்சுவடியில் எழுதப்பட்டிருக்கிறதல்லவா ? மேலே விவரித்த திருப்பணிகளே உண்மையில் இந்த தேவஸ்தானத்தில் தாதாசார்யர்கள் செய்தவை. நாம் தெரிவிக்கும் எந்த விஷயமும் நியாயஸ்தான ரிகார்டுகளைக்கொண்டு ரூதலிக்கக்கூடியதே என்பது மத்யஸ்தர்களின் மனத்தில் திடமாகப் பதிந்திருக்கும். தாதாசார்யர்களுக்கு சிஷ்யரென்று ப்ரஸித்தரானவிவர் ஸ்வாசார்ய குடும்பத்திற்குப் பெருமையை ரக்ஷித்து வைக்கவேணுமென்று பாடுபடுகிறார். அவர்களின் பெருமைகள் ஸ்ரீ பெரும்பூதூர், திருப்புட்குழி முதலான விடங்களில் நடந்த நீண்டகாலத்து வியாஜ்ஜியங்களிலேற்பட்ட ரிகார்டுகளிலுங்கூட குன்றத்திட்ட விளக்குப்போல் ப்ரகாசிக்குமவை.

25. ப்ரஸங்காத் முக்கியமான விஷயம் கேண்மின். கடைசியாக ஸ்ரீபெரும்பூதூர் ஜட்ஜ்மெண்டில்தான் தாதாசாரியர்களின் பிரபாவம் மிக விளங்கிற்று. அவ்விடத்தில் ஒருவித மான கலஹமுமில்லாமல் நடந்துவந்துகொண்டிருக்கையில் வெகுநாள் கழித்து வடகலையார் சண்டைகளைக் கிளப்ப அபரிமிதமான வியவஹாரங்கள் நடந்தன. ப்ரஹ்மஸ்ரீ V. கிருஷ்ணஸாமி ஐயர் என்கிறவொரு பிரபல அட்வகேட் அங்கு வடகலையார்களுக்கு வக்கீலாக இருந்தார். அப்போது ஸ்ரீபெரும்பூதூர் வியாஜ்ஜியம் கடைசியாக ஹைகோர்ட்டில் இருந்தது.

அந்த ஸமயத்தில், மேலே சொன்ன வடகலையார் வக்கீலான ஸ்ரீ கிருஷ்ணஸாமி ஐயரவர்கள் ஹைகோர்ட் ஜட்ஜ் ஸ்தானத்தில் அமர்ந்தார். அப்போது ஹைகோர்ட்டிலிருந்த ஸ்ரீபெரும்பூதூர் ஸன்னிதி வ்யவஹாரத்தின் அப்பீல் அந்த கிருஷ்ணஸாமி ஐயருடைய பெஞ்சில் வந்தது. ஏற்கெனவே பல வருஷங்கள் வடகலையார்க்கு வக்கீலாயிருந்த இவருடைய பெஞ்சில் இந்த அப்பீல் நடக்கத்தகாதென்றும், இவரிடம் நடந்தால் நியாயம் தேருதென்றும் தென்கலையார் ஆக்ஷேபிக்கத் தீவிரமான முயற்சி செய்தும் பலிக்கவில்லை. அவரே விசாரிப்பதாக கேஸை எடுத்துக்கொண்டார். வடகலையார் நமக்கே வெற்றியென்று நிச்சயித்து ஆனந்தமாயிருக்கிறார்கள்; தென்கலையார் கவிழ்தலையிட்டு வருந்திக்கிடக்கிறார்கள். ஜட்ஜ் கிருஷ்ணஸாமி ஐயரவர்கள் கேஸையெடுத்துக் கொண்டு அன்றே அலம்பிக் கவிழ்த்துவிட்டார். அவர் நெடுநாள் வடகலையார்களுக்கு வக்கீலாயிருந்தபடியால் எல்லா ரிகார்டுகளையும் ஒன்று விடாமல் முற்றிலும் பார்த்தவராகையாலே ப்ராமாணிகராய் மனச்சாட்சியை மீறமாட்டாமல் எழுதினர்—

> "தாதாசார்ய குடும்பஸ்தர்கள் தங்களுக்குக் குலபரம்பரையாக வந்த ஸ்ரீசைலேச மந்த்ரத்தை விட்டு வடகலை மந்த்ரத்தை ஆதரிக்கத் தொடங்கினதுதான் இவ்வளவுக்கும் காரணம்; இதிலிருந்தே தாதாசாரியர்கள் தங்கள் கௌரவங்களை இழக்க நேர்ந்தது" என்று.

26. இந்த விஷயத்தை இதுகாறும் நாம் பல புத்தகங்களில் பல தடவை எழுதியிருக்கிறோம்? மேலே குறித்த வாசகம் போன்ற பலபல வாசகங்களை த்வீபாந்தரஸ்தர்களான பெரிய பெரிய ஜட்ஜிகள் திருமலை திருப்பதி ப்ரிவிகவுன்ஸில் தீர்ப்பு முதலியவைகளில் அபரிமிதமாக எழுதியிருந்தாலும் அதைவிட மேலே உதாஹரித்த ஸ்ரீ. கிருஷ்ணஸாமி ஐயர் திருவாசகத்திற்கு மஹத்தான கௌரவமுண்டு. எதனால்? அவர் பத்தெட்டு வருஷகாலம் வடகலையார்களுக்கு அந்தரங்க வக்கீலாயிருந்து, அவர்களிடம் பல ஆயிரக்கணக்கான ரூபாய்களைப் பெற்றிருந்து ரிகார்டுகளை எழுத்தெழுத்தாகப் பார்த்திருந்தவராகையாலே உள்ளதை உள்ளபடி தெரிந்து கொண்டு எழுதினர்; இது அவராகவா எழுதினது? தெய்வமன்றோ எழுதுவித்தது. இதைக் கண்டுவைத்தும், அந்த தாதாசார்ய குடும்பஸ்தர்களுக்கு மணவாளமாமுனிகளின் திருவடிகளில் அபசாரபுத்தி இன்னமும் நீங்கவில்லை. அவர்களை ஆசார்யராகக் கொண்டவிவர்க்கு வேறுவகை எங்ஙனே வரும்?

நான்காமத்யாயம் முற்றிற்று.

---

## ஐந்தாம் அத்யாயம்—நடாதூரம்மாள் கோஷ்டி.

27. இந்த தேவாலயத்தில் நடாதூரம்மாளென்னும் ஆசார்யர் ஸ்ரீபாஷ்ய ப்ரவசனம் நடத்தியருளினரென்பது ப்ரஸித்தம். அந்த ப்ரவசந கோஷ்டி நடந்தது எவ்விடத்திலென்னில், திருமலைக்கு ஏறும் போது படிக்கட்டு இரண்டு பத்தியாக இருக்கிறதல்லவா? எந்தபத்தியில் ஸத்ஸம்ப்ரதாயஸ்தர்களான மஹான்கள் அந்நாள் தொடங்கி இந்நாள்வரையில் அடியிடுவதில்லையோ அந்த பத்தியில்தான் நடந்தது. அது ஸ்ரீபாஷ்யகாலக்ஷேபம் நடந்த விடமென்கிற கௌரவம் தோற்ற அவ்விடத்தை நோக்கி அஞ்ஜலி செய்துவிட்டு மற்றொரு பத்தியின் வழியாகவே திருமலைக்கு ஏறுவதும் இறங்குவதும் தொன்றுதொட்டு நிகழும் வழக்கம். கோவில்களெல்லாம் அவைதிகங்களென்று பழித்துக்கொண்டு விலகியிருந்த வகுப்பினர்கள் காரணர்த்தமாகக் கோவிலில் பிரவேசிக்க ஆரம்பித்து தேசிக ஸம்பந்தத்தையும் ஆவாஹநம்

செய்துகொண்ட பிறகு அனேக விபர்யாஸங்கள் செய்யத் தலைப்பட்டு இந்த அம்மாள் கோஷ்டி விஷயத்திலும் ஒரு விபரீத ப்ரசாரம் செய்யத் தொடங்கினர்கள். ஹஸ்திகிரியின் மேலே வையமாளிகை ப்ரதக்ஷிணத்தில் அம்மாளுடைய ஸ்ரீபாஷ்யப்ரவசந கோஷ்டி நடந்ததாக ஒரு கல்பனை ஏற்பட்டது.

28. அவ்விடத்தில் இருந்து ப்ரவசநம் நடத்துவதற்கு ஒருவித ஸௌகர்யமும் கிடையாது; ஸர்வாத்மநா அஸௌகரியமே. ஒளிபரந்த கீழ்ப்படியில் நடந்த கோஷ்டியை மேலே இருட்டிடத்தில் நடந்ததாக ப்ரசாரம் செய்யத்தொடங்கினதற்குக் காரணம் — கீழே சித்திரமெழுதுவதற்கு ஸௌகரிய மில்லாமையும், மேலே அதற்கு ஸௌகரியமிருந்ததுமேயாம். திருமலையில் பெருமாளை ஸேவிக்கப் போகிறவர்களெல்லாரும் முதன் முதலாக அந்தபக்கம் திரும்பிச் சென்று நமஸ்கரிப்பது 900 வருஷத்திய வழக்கம். மணவாளமாமுனிகளருளிச் செய்த மங்களாசாஸனத்தில் "ஸ்ரீ காஞ்சீபூர்ணமிச்ரேண ப்ரீத்யா ஸர்வாபிபாஷிணே; அதீதார்ச்சா வ்யவஸ்தாய ஹஸ்த்யத்ரீசாய மங்களம்" என்றருளிச் செய்தபடி திருக்கச்சிநம்பிகளோடு அர்ச்சாவதார ஸமாதியைக்கடந்து கலந்து பரிமாறினவிடம் அது — என்பது பற்றியே அங்குள்ள கச்சிவாய்த்தான் திருமண்டபத்தை நோக்கிப் பெரியார்கள் நமஸ்கரிப்பது. அம்மாள் கோஷ்டி அவ்விடத்தில் நடந்ததென்பது அத்யந்த நவீநப்ரவாதம்.

29. * துஷ்யது ந்யாயேந அவ்விடத்திலேதான் அம்மாள் கோஷ்டியென்று இசைந்தாலும், ஸ்வாமிதேசிகனுக்கு அம்மாள் கோஷ்டியில் உண்மையாக நடந்த ஆசீர்வாதம் அவ்விடத்திலன்று என்பது நிர்விவாதமான விஷயம். தேசிக திவ்ய சரித்ரத்தைத் தெரிவிக்கும் நூல்களில் வேதாந்தாசார்ய விஜயமென்கிற ஆசார்ய சம்பூக்ரந்தம் தலைமை பெற்றது; மிகவும் ப்ராமாணிகமானது. அதில் மூன்றாவது ஸ்தபகத்தில் (பக்கம் 28ல்) ஆறாவது கத்யத்தில் "[illegible]...............[illegible]—ஒருநாள் கிடாம்பியப்புள்ளார் நடாதூரம்மாளுடைய திருமாளிகைக்குப் புறப்பட்டார்" என்றும், முப்பத்தொன்பதாம் ச்லோகத்தில் "[illegible]— அப்புள்ளாரும் (சிறுவயதினரான) தேசிகரும் அம்மாளுடைய திருமாளிகையைச் சேர்ந்தார்கள்" என்றும் ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அம்மாள் தேசிகனை ஆசீர்வதித்ததும் அதில் உடனே எழுதப்பட்டிருக்கிறது. இதனால் தேசிகர் அம்மாளுடைய ஆசீர்வாதம் பெற்றது அவருடைய திருமாளிகையிலேயேயல்லது ஹஸ்திகிரியின் மேலன்று என்பது ப்ரபல ப்ரமாணஸித்தமாயிற்று.

30. இவ்வுண்மையை நாம் தெரிவிப்பதற்குக் காரணம் தேசிகத்வேஷமென்று நவீனர்கள் நினைத்தாலும், சரித்திரத்தை உள்ளது உள்ளபடியே உணர்த்தவேணுமென்பது தவிர வேறில்லை. ஸ்ரீராமாநுஜர் ஹஸ்திகிரியில் எழுந்தருளியிருந்து ஸ்ரீ பாஷ்யமருளிச்செய்தாரென்று சிலர் எழுதினால் அதையும் நாம் கண்டிக்கத்தான் நேரும். அது ஸ்ரீராமாநுஜ த்வேஷத்தினால் என்று யோக்யர்கள் சொல்லார்கள். அப்ராமாணிக கதைகளை யெழுதுவதனால் தேசிகபக்தி ஸித்திக்கமாட்டாது; அப்படிப்பட்ட தப்புக் கதைகளைக் கண்டிப்பதனால் தேசிகத்வேஷம் வந்துபுகாது.

31. விவாத வரலாற்றுச் சுவடியெழுதினவர் பெரும்பாலும் தவறான பொய்யான ஐதிஹ்யங்களையே எழுதக்கற்றவராதலாலும், அவற்றை ஒருகாலன்றிக்கே பலகாலுமெழுது

கிறவராதலாலும் மேலே ப்ரஸ்தாவித்த பொய்க்கதையை இதுவரை இவர் பலதடவை யெழுதி வெளியிட்டுள்ளார்; அப்போதப்போது மறுப்பும் வெளிவந்தேயிருக்கிறது. நேற்று கார்த்திகைமீ பரணி தீபத்தன்று இவர் வெளியிட்டவொரு சிறுபுத்தகத்திலும் இந்த பொய்க் கதையுள்ளது. அப்போதே அதே மாதத்திலேயே அம்ருதலஹரி 136ல் விரிவாக இது மறுக்கப்பட்டு முடிந்திருக்கிறது. அதை இவர் பார்த்ததற்கு ஒரு பலன் கண்டோம். அதாவது, ஷ பொய்க்கதையை இப்போது எழுதுகையில் "அம்மாள் தமது சிஷ்யர்களுக்கு ஸ்ரீ பாஷ்யத்தை இந்த ப்ராகாரத்தின் இந்தக் கிழக்கு பார்சுவத்தில்தான் காலக்ஷேபமாகச் சொல்லிக்கொண்டு வந்தாராம்" என்று எழுதியுள்ளார். 'வந்தாராம்' என்பதனல் இந்தக் கதையைக் கல்பனை செய்தவர் தாமல்லவென்று காட்டுகிறபடி.

ஐந்தாம் அத்யாயம் முற்றிற்று.

---

## ஆறும் அத்யாயம். தேவஸ்தான நிர்வாஹ விஷயம்.

32. விவாத வரலாற்றுச் சுவடியில் (பக்கம் 17-ல்) கோயில்நிர்வாஹம் என்ற மகுடத்தின் கீழ் — இந்த தேவஸ்தானத்தில் தாதாசார்ய வம்சஸ்தர்களுக்கு நிர்வாஹகத்வம் ஏற்பட்ட விதமும் அதுகழிந்தவிதமும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. கி. பி. 1842-ஆம் வருஷத்திலிருந்து 1907-ஆம் வருஷம் வரை (65 வருஷகாலம்) தாதாசார்ய வம்சஸ்தர்கள் தர்மகர்த்தாக்களாக இருந்தார்களென்றும், பிறகு ஸ்கீம்ஸூட் போடப்பட்டு கோவில் ஒரு ரிஸீவர் வசம் ஒப்பு விக்கப்பட்டதென்றும், அப்போது ஒருவிதமான முடிவு ஏற்பட்டதென்றும், மறுபடியும் ஸ்கீம்வழக்கு தொடுக்கப்பட்டு தேவஸ்தானம் மீண்டும் மற்றொரு ரிஸீவரிடம் ஒப்புவிக்கப்பட்டதென்றும், 1941-ஆம் ஸு அந்த வழக்கு சென்னை ஹைகோர்ட்டில் முடிவுபெற்று வைஷ்ணவரல்லாதவொரு பிராமணர் நிர்வாஹ டிரஸ்டியாயிருக்கவேண்டுமென்று தீர்ந்ததென்றும், அது முதல் அவ்விதமாகவே நடந்து வருகிறதென்றும் வெகு சுருக்கமாக எழுதி முடிக்கப்பட்டிருக்கிறது.

33. தாதாசாரியர்களின் கதைகளைச் சிறிதும் தொடாமல் விட்டிருந்தால் மிகநன்றே. அதை ப்ரஸங்கித்துவிட்டு முக்கியமான சரித்திரங்களை மறைத்திட்டு மழப்பியெழுதிச் சுருக்கமாக முடித்துவிடுவதனல் உண்மைவிஷயங்கள் மறைந்து போகுமோ? ஒரு தடவைக்கு இரு தடவையாக தாதாசாரியர்களின்மேல் ஸ்கீம்ஸூட்டுகள் தொடர்ந்ததாகவும், தேவஸ்தானம் அவர்களிடமிருந்து பறிக்கப்பட்டதாகவும், முடிவாக அறவேபறிக்கப்பட்டதாகவும் எழுதினவர் இதற்கு இன்னது காரணமென்று காட்டியிருக்க வேண்டியது அவசியமல்லவா? இந்த லிடிகேஷன்களில் அடியோடு தலையிடாமல் தடஸ்தராய் பகவத் ஸௌந்தர்ய லாவண்ய—மஹோத்ஸவாத்யநுபவத்தளவிலே நின்றிருந்தால் மிகவழகியதேயாகும் 'தேவஸ்தான நிர்வாஹ விஷயத்திலே நாம் தலையிட்டெழுதுவது அபாயம்' என்று தெரிந்துகொள்ளக் கூடியவராயிருந்தும், உண்மை விஷயங்கள் க்ரமேண வெளிவரட்டுமென்றே இதில் தலையிட்டுக் கோடிகாட்டி விட்டார் போலும். ஸ்வாசார்ய குடும்பத்தின் ஊழல்களைத் தமது திருக்கையால் எப்படி யெழுதுவர் பாவம்!

34. இவரெடுத்துக் கொண்ட விஷயத்திலே நாம் ஸத்யமும் ஸாரமுமாக அவசியமானவற்றைத் தெரிவிக்கிறோம். புராதந தாதாசார்ய சரித்ரமென்றும் நூதந தாதாசார்ய சரித்ர

மென்றும் இருவகையான சரித்திரமுண்டு. அறுபத்தைந்தாவது வயதிலிருக்கும் என்னுடைய அநுபவத்திற்கு எட்டின சரித்திரங்கள் நூதந தாதாசார்ய சரித்திரமாகும். எனக்கு நேராகத் தெரியாமல் உண்மையான ரிகார்டுகளைக்கொண்டு தெரியவந்த சரித்திரங்கள் புராதந தாதா சார்ய சரித்ரமாகும். நூதந தாதாசார்ய சரித்ரத்தை முன்னம் எழுதுகிறேன். இந்த தேவஸ்தானத்தில் சிலகாலம் ஏகதேசமாக தர்மகர்த்ரு பதவியை வஹித்து வந்த தாதாசார்ய வம்சஸ்தர்கள் தர்ம பரிபாலனங்களை ஒழுங்குபாடாகச் செய்வதில்லையென்றும் அவர்களை விலக்கி நியாயம் செலுத்தவேண்டுமென்றும் சுமார் 45 வருஷங்களுக்கு முன் வியவஹாரம் (ஸ்கீம்கேஸ்) ஆரம்பமாயிற்று. இந்த ஸ்கீம்ஸுட் போட்டவர்கள் ஷை தேவஸ்தானத்தில் கைங்கர்ய பரர்கள் பலர் எனினும் தென்கலையார்களே முக்கியமாக நின்றார்கள். அப்போது தேவஸ்தான நிர்வாஹம் ஒரு ரிஸீவர் மூலமாக நடந்துவந்தது. நல்ல புகழ்பெற்ற தோணுங் குளம் ராமாநுஜாசாரியரென்பவரே அப்போது பல வருஷங்கள் ரிஸீவராயிருந்தவர். அந்த ஸ்கீம் வியாஜ்ஜியம் சென்னை ஹைகோர்ட்டாரவர்களால் ஒருவாறு முடிவு செய்யப்பட்டது, தாதாசார்ய வம்சஸ்தர்களில் ஐந்து பேர்கள் தர்மகர்த்தாக்களாயிருக்கவேண்டு மென்றும். ஒவ்வொரு வருஷத்தில் ஒவ்வொருவர் எக்ஸிக்யூடிவ் டிரஸ்டியாக இருந்து அதிகாரம் செலுத்தி வரவேண்டியதென்றும், இவர்கள் அநீதியாக நடந்துகொண்டால் அதைப் பரிசீலனை செய்து நியாயம் செலுத்துவதற்காக இவர்களுக்கு மேல் ஒரு ட்ரஸ்டு போர்டு இருக்கவேண்டிய தென்றும், அந்த டிரஸ்டு போர்டில் ஒரு தென்கலை ஸ்ரீ வைஷ்ணவர், (தாதாசார்யரல்லாத) ஒரு வடகலை ஸ்ரீ வைஷ்ணவர், ஸ்ரீ வைஷ்ணவரல்லாத ஒரு ப்ராஹ்மணர் ஆக மூவர் அதிகாரிகளாக இருந்து தணிக்கை செய்யவேண்டியதென்றும்; அவசியம் நேருங்காலங்களில் இந்த ஸ்கீமை மாறுதல் (மாடிபிகேஷன்) செய்யலாமென்றும் முடிக்கப்பட்டது. அவ்விதமாகவே சுமார் இருபது வருஷகாலம் நடந்து வந்தது.

35. அதிலும் தரும நிர்வாஹங்கள் மிகவும் சீர்கேடாகவேயிருந்ததனால் ஸ்கீம் மாடிபி கேஷன் செய்யப்பட வேணுமென்று மறுபடியும் தென்கலை ஸம்ப்ரதாயஸ்தர்களால் வியாஜ் ஜியம் தொடுக்கப்பட்டது. அப்போதும் ஐந்தாறு வருஷ காலம் ஷை தாதாசார்ய வம்சஸ்த தர்மகர்த்தாக்கள் விலக்கப்பட்டு ஸ்மார்த்த ப்ராஹ்மணரொருவர் ரெஸீவராக ஜில்லா கோர்ட் டாரால் நியமிக்கப்பெற்று தேவஸ்தான பரிபாலனம் நடந்து வந்தது. அந்த வியவஹார மானது விசேஷபலனைப் பெறுவியாமலே முடிந்திட்டதனால் மறுபடியும் ஷை தாதாசார்ய வம்சஸ்தர்களே ஐந்து பேர்கள் தர்மகர்த்தர்களாக இருந்துவர நேர்ந்தது. வாதிகளான தென்கலையார்களால் சென்னை ஹைகோர்ட்டில் அப்பீல் செய்துகொள்ளப்பட்டிருந்தது. அந்த அப்பீல் 17—1—1941 தேதியில் கனம் ஜட்ஜ் வார்ட்ஸ்வொர்த் துரையவர்களாலும் ப்ரஹ்மஸ்ரீ. கனம் ஜட்ஜ் பதஞ்சலிசாஸ்திரியவர்களாலும் பரிஷ்காரமாக முடிவு செய்யப் பட்டது. இந்த முடிவின் ஸாராம்சங்களை மேலே விளக்கிக் காட்டுகிறோம். (இடையில்)

36. ஷை தாதாசாரியர்களுக்குண்டான இந்த தர்மகர்த்ருத்வஹக்கானது பரம்பரை மிராசா ? அன்றா ? என்கிற ஒரு வியாஜ்ஜியமும் தனிப்பட நடந்தது. பரம்பரை மிராசுதான் என்று முன்னம் ஜில்லாகோர்ட்டில் முடிந்திருந்தது. அதன் பேரில் தென்கலையார் ஹை கோர்ட்டில் அப்பீல் செய்துகொள்ள, பரம்பரை மிராசு அல்ல என்று தீர்மானிக்கப்பட்டுக் கீழ்க் கோர்ட்டுத் தீர்ப்பு வலிதாக மறுக்கப்பட்டது.

37. கடைசியான முடிவு என்னவென்றால்; "ஸ்ரீ வைஷ்ணவரல்லாத ஒரு ப்ராஹ்மணர் (ஸ்மார்த்தர் அல்லது மாத்வர்) ஸர்வாதிகார ஸம்பந்நரான மேனேஜிங் டிரஸ்டியாக நூறு ரூபாய் சம்பளத்தில் நியமிக்கப்படவேண்டும். தேவஸ்தான ஸம்பந்தமான லௌகிக வைதிக ஸகல அதிகாரங்களும் அவரொருவர்க்கே அதீனம். தாதாசார்ய வம்சஸ்தர்களில் கீழண்டை வகுப்பிலும் மேலண்டை வகுப்பிலுமாக இரண்டு பேர்கள் ஒருவிதமான அதிகாரமுமின்றிக்கே நாமமாத்ரமான (ஹானரரி) டிரஸ்டிகளாக இருக்கவேண்டியது. மேனேஜிங் டிரஸ்டியின் நடவடிக்கைகளின் மீது தணிக்கை பார்க்கவேண்டிய அதிகாரம் முழுவதும் ரிலிஜியஸ் எண்டோமெண்டு போர்டைச் சேர்ந்தது. ஷை ஸ்கீம் கேஸ் அப்பீல் வாதிகளான ஸ்ரீ காஞ்சி P. B. அண்ணங்கராசாரியர் ஆகிய அடியேன் முதவான எழு தென்கலையார்களுக்கு கோர்ட்டு காஸ்டு சுமார் ரூ. 450 வரையில் தேவஸ்தானத்திலிருந்து செலுத்தவேண்டியது" என்பது தீர்ப்பின் ஸாராம்சம். இது இப்படியே நிறைவேற்றப்பட்டது.

38. ஷை தீர்ப்பை கோர்ட்டார் வெளியிட்டவளவில் அப்போது தர்மகர்த்தாக்களாக இருந்து வந்த தாதாசாரியர்கள் "நாளது வைகாசி மாதத்தில் நடைபெற வேண்டிய ப்ரஹ்மோத்ஸவம் வரையில் நாங்களே யிருந்து அநுபவித்துவிட்டு உடனே விலகிப் போய் விடுகிறோம்; கோர்ட்டார் தயவு செய்து அந்தப்படிக்கு உத்தரவு அளிக்கவேணும்" என்று கேட்டுக்கொண்டார்கள். அதைக் கோர்ட்டார் சிறிதும் அநுமதிக்கவில்லை. "நாளது மார்ச்சு மாதம் 17வக்குள் இந்த ஆர்டர் ஆசாரத்திற்கு வரவேண்டியது அவசியம்" என்று முடிவு செய்திட்டார்கள். அப்படியே அன்று முதலாகவே ஆசாரத்திற்கு வந்து விட்டது.

39. பகவத் ஸந்நிதிகளில் தர்மகர்த்தாக்கள் என்கிற பதவி கிடைப்பது ஸாமான்யமல்ல; ஜந்மாந்தர ஸஹஸ்ரநற்றவப்பயன் என்னவேணும். அப்படி அலப்ய லாபமான பதவியைப்பெற்றவர்கள் உண்மையில் தர்மகர்த்தாக்களாகவே இருந்து வந்தால் ஒரு பங்கமுமடையாமல் நீடூழி வாழ்வர்களென்பதில் ஐயமில்லை. தர்மகர்த்தாக்களாக நியமிக்கப்பட்டு வந்து சேர்ந்த அன்றைக்கே தர்மஹர்த்தாக்களாகத் துணியுமவர்களைப் பற்றி நாம் தெரிவிக்க வேண்டியது என்ன இருக்கிறது? இந்த தேவஸ்தானமானது பலவகையிலும் ப்ரஸித்தி பெற்றது. இதற்கு நிகரான திவ்ய தேசம் வேறென்றில்லை. இப்படிப்பட்ட திவ்ய தேசத்தில் ஸ்ரீ வைஷ்ணவ ஆலயங்களுக்கு உரிய லக்ஷணங்கள் நெடுநாளாக மிகவும் பங்கமடைந்திருந்தன. ஆழ்வார்களுக்குத் திருநக்ஷத்திரங்கள் கொண்டாடுவதும், பகல் பத்து, இராப் பத்து என்கிற அத்யயனோத்ஸவத்தை விபவமாக நடத்துவதும் முதலியவை விஷ்ணுவாலயங்களுக்கு விசேஷ லக்ஷணங்கள் என்பது நாம் சொல்லவேண்டுமோ? ஆழ்வார்கள் இருக்குமிடம் தெரியாமல் மூலையிலொடுக்கிவைத்திட்டு, அவர்களுடைய ஸந்நிதிகளின் வாசல்களில் மண் சுவரெழுப்பி முள்ளடைத்து.................இப்படியாகச் செய்து வைத்திருந்தார்கள் முன்னே யிருந்த டிரஸ்டிகள். கோஷ்டியின் பெருமைகளோ, ஆழ்வாராசார்யோத்ஸவ பரிபாலன வைபவங்களோ எல்லாம் தென்கலை வகுப்பினருடையதாகவே யிருக்கின்றன வென்கிற நிர்வேதத்தினால் தேவாலய லக்ஷணங்களை யெல்லாம் சீர்குலைத்து நடத்தி வந்தார்கள். மணவாளமாமுனிகளில்லாமல் அத்யயனோத்ஸவம் நடத்தக்கூடாதென்கிற நியாயாலயத்தீர்ப்பு வலிதாக இருந்ததனாலே அறுபதெழுபது வருஷ காலம் அத்யயனோத்ஸவத்தையே அடியோடு அடக்கியிருந்தார்கள். இப்படிப்பட்ட சில்விஷமங்கள் பன்னியுரைக்குங்கால் பாரதமாம்.

40. ஆதியில் தாதாசார்யவம்சத்தவர்களுக்கு ஏற்பட்ட பெருமைகளெல்லாம் மணவாள மாமுனிகளிடத்தில் பக்தி ஸம்பத்தினாலேயே என்பது பிஷ்டபேஷணம். என்றைக்கு இவர்கள் மணவாள மாமுனிகளிடத்தில் பகை கொண்டு நடக்க ஆரம்பித்தார்களோ அன்றைக்கே இவர்களுடைய ஸ்ரீ க்ஷயிக்கத் தொடங்கிற்று. ஸ்ரீ பெரும்பூதூர் எம்பெருமானார் ஸந்நிதியில் இவர்களுக்கு எப்படிப்பட்ட மரியாதைகள் இருந்தன! காஞ்சீ க்ஷேத்திரத்து ஸகல தேவாலயங்களிலும் எப்படிப்பட்ட மரியாதைகள் இருந்தன! அந்தோ! எல்லா மழிந்தன. இதற்கு என்னகாரணமென்பது இவர்களுக்குத் தெரியாமலா இருக்கிறது? எல்லாம் ரிகார்டுகளிலன்றோ எறிவிளங்குகின்றது. இதர ஸன்னிதிகளில் இவர்களுக்கு தர்மகர்த்த ஹக்கு இல்லாமல் போனாலும் ஸ்ரீசைலேசதயாபாத்ரம் தொடங்கி அதற்கு மரியாதையாக முதல்தீர்த்தமநுபவிக்கிறமிராசு இருந்தது. தொடங்குவதில் விபரீதம் செய்து மரியாதைகளை இழந்தார்கள். அதற்குப்ரதிக்ரியை பண்ணமாட்டாமல் தங்களுக்கு தர்மகர்த்த ஹோதாவுள்ள இந்த தேவஸ்தானத்தில் தென்கலையார்களுடைய தீர்த்தமரியாதைகளை யெல்லாம் நிறுத்தினார்கள். ஒவ்வொரு தீர்த்தகாரரும் வியாஜ்ஜியமாடி ஸ்தாபித்துக்கொண்டார்கள். தென்கலையான சாத்துப்படி மிராசுதாரரை விலக்கினார்கள்; அவரும் வியாஜ்ஜியமாடி ஸ்தாபித்துக்கொண்டார். இப்படிப்பட்ட விஷயங்கள் பல பல. வடகலை நாமம் போட்டுக்கொண்டால்தான் உங்கள் மிராசுகளை யநுபவிக்கலாமென்று சில மிராசுதாரர்களை நிர்ப்பந்தித்தார்கள்; அதற்கு முதலியார்கள் கணக்குப் பிள்ளைகள் முதலானோர் சிலர் இசைந்தார்கள். ஆழ்வார் ஸன்னிதிக்காரரையும் இப்படி நிர்பந்தித்தார்கள்; இசையாமற்போகவே பட்டம் பகலில் பகற்கொள்ளைக் காரர்களைப்போல் வாயில் துணியையடைத்து ஹிம்ஸைகளைப் பண்ணி மூன்று கோர்ட்டுவரை இதற்காக வியாஜ்ஜியம் நடந்து வாசாமகோசரமாக பங்கமடைந்தார்கள். இப்படிப்பட்ட தப்புவியாஜ்ஜியங்களை அநாவச்யகமாகக் கிளப்பி, அவற்றுக்குச் செலவுசெய்ய தேவஸ்தானப் பணம் அப்போது இவர்களுக்கு ஸ்வாதீனமாயிருந்தபடியால் அந்தப்பணத்திற்கு இப்படிப்பட்ட விநியோகங்களே செய்துவந்தார்கள்.

41. இந்தப்பெருமைகளெல்லாம் அட்வகேட்டின் வரலாற்று நூலில் விளங்கவேண்டியது அவசியமல்லவா? இன்னமும் கேண்மின்; 1842-ஆம் வருஷத்தில் தாதாசாரியர்கள் இந்த தேவஸ்தான நிர்வாஹத்தை ஒப்புக்கொண்டபின் இரண்டு மூன்று வருஷகாலம் ஸாத்விகர்களாயிருந்தார்கள் போலும். பிறகு முதற்காரியம் ஆழ்வார்களின் ஸன்னிதிகளை யெல்லாம் பாழ்படுத்தியது. அதற்கடுத்த காரியம் நம்மாழ்வார் ஸன்னிதிக்காரர்களோடு வியாஜ்ஜியம் தொடங்கியது. [அது 1850-ஆம் வருஷத்தில்.] அதுதான் தாதாசாரியர்கள் ஆரம்பித்த முதன் முதலான வியாஜ்ஜியம். "ஆழ்வாரைத் தொட்டுத் திருவாராதனம் செய்ய உங்களுக்கு அதிகாரமில்லை; நீங்கள் வெறும் பரிசாரகர்களே யொழிய அர்ச்சகர்களல்ல; தேவஸ்தான அர்ச்சகர்களே அங்கும் பூஜை செய்ய வேண்டும்" என்று வியாஜ்ஜியம் தொடங்கி ஆழ்வார் ஸன்னிதி திட்டங்களை யெல்லாம் நிறுத்தி மூன்று கோர்ட்டு வரை நீண்டகாலம் வழக்காடித் தோல்வி யடைந்து நின்றார்கள்.

42. பிறகு பல வருஷங்கள் கழித்து, அந்த ஆழ்வார் ஸன்னிதிக்காரர்களுள் ஒருவரான (Late) திருமணி ராகவாசாரிய ரென்பவரை வதம் செய்வதாகவும் துணிந்து, யானைக்கு மதம் பிடித்திருப்பதாக ஒரு பொய்யான ப்ரவாதத்தைக் கிளப்பி இரண்டு கோபுர வாசற்கதவுகளையும் பகலிலேயே அடைத்து, அந்த ராகவாசாரியர் ஆழ்வாருக்குக் காலைத்

திருவாராதனம் செய்து கொண்டிருக்கையில் அவரை வெளியில்தள்ளிக் கைகால்களைக்கட்டி வாயிலும் துணியையடைத்து ஆழ்வார் மதுரகவிகள் நாதமுனிகள் மூவரையும் திருமலைமேல் கொண்டு சேர்த்துத் திருமணை மாற்றுவதாக இருக்கையில் போலீஸ் ப்ருந்தம் நூற்றுக்கணக்காக மலைமேல் வந்து சேர்ந்து பிறகு க்ரிமினல் கோர்ட்டுகளிலும் ஸிவில் கோர்ட்டுகளிலும் நடந்த நடவடிக்கைகள் பாரத ராமாயணாதிகளைப் போலே அச்சாகி யிருக்கின்றன வென்பதை உலகமறியும். இவற்றில் இவர்களுக்கு நேர்ந்த பராஜயங்கள் பேச்சுக்குநிலமன்று.

ஆறும் அத்யாயம் முற்றிற்று.

---

### ஏழாமத்யாயம்—தாதாசாரியர்களின் அத்புத சரித்ரங்கள்.

43. இந்த தேவஸ்தானத்தில் ஒரு நூறுவருஷகாலம் ஏகதேசமாக தர்மகர்த்தம் பார்த்துவந்த தாதாசாரிய குடும்பஸ்தர்கள் அதிகாரத்திலிருந்து அறவே நீக்கப்பட்டது ஹைகோர்ட்டு அதிகாரிகளாலென்று உலகம் நினைத்திருக்கிறது; நாமும் அவ்விதமாகவே எழுதினோம். ஆனல் உள்ளபடி சொல்லுமளவில், மணவாளமாமுனிகளே நீக்கிவைத்தாரென்பது ஸத்யம். *𑌯𑌦𑌨𑌨𑍍𑌤𑌰𑌂 𑌯𑌦𑍍𑌭𑌵𑌤𑌿 𑌤𑌤𑍍 𑌤𑌸𑍍𑌯 𑌕𑌾𑌰𑌣𑌮𑍍—யதநந்தரம் யத்பவதி தத் தஸ்ய காரணம்* என்று சாஸ்த்ரஜ்ஞர்கள் கூறுவர்கள். அதன்படி பார்த்தால் நாம் தெரிவிக்கின்ற உண்மை ஒவ்வொருவருடைய வுள்ளத்திலும் நன்கு பதியும். இவர்கள் தர்ம கர்த்ரு பதவியி லிருந்து விலக்கப்படுவதற்கு நெருங்கின முன்னாட்களில் நடந்த இவர்களது நடத்தைகளைச் சுருக்கமாக நிரூபிப்போம். உலமறிந்தவற்றையே இப்போது நினைப்பூட்டுகிறோமத்தனை.

44. கனம் ஹைகோர்ட்டு ஜட்ஜ் (Late)ஸ்ரீ. ஸுந்தரமையரவர்கள் ஒரு வருஷத்தில் ஐப்பசி மாதத்தில் ஏதோ கார்யவசமாகக் காஞ்சீபுரம் வந்திருந்து அன்றிரவு 7-மணிக்குத் தேவப்பெருமாளை ஸேவிக்க வந்திருந்தார். உபயகலையாரும் அவரை வரவேற்று உபசாரங்கள் செய்து பெருமாள் தாயார் ஸேவைகளைச் சிறப்பாகச் செய்வித்தார்கள். அவரும் ஆனந்தமாக ஸேவித்துத் திரும்புகையில், அப்போது மணவாளமாமுனிகளுத்ஸவம் நடந்துகொண்டிருந்தபடியால் வெளிப்புறப்பாட்டுக்காக அதிர்வெடிபோட, அதுகேட்ட ஜட்ஜ் அவர்கள் என்னவிசேஷமிப்போது? என்றுகேட்க, மணவாளமாமுனிகளுத்ஸவம் நடந்துகொண்டிருக்கிறது; வெளியில் பந்தலில் பத்தியுலாத்தப் புறப்பாடு ஆரம்பமாகிறது; அதற்காக அதிர்வெடி" என்று சொல்லிவிட்டு "தாங்களும் அங்கே ஐந்து நிமிஷம் விஜயம்செய்தால் நன்றாயிருக்கும்" என்று தென்கலைத்தலைவர்கள் சொல்ல, அவரும் "அதற்கென்ன? அவசியம் வருகிறேன்" என்று சொல்லி பெருந்திரளுடனே மணவாளமாமுனிகள் ஸன்னிதி பக்கமாகத் திரும்பினவாறே அப்போது தேவஸ்தானத்தில் தர்மகர்த்தாவாயிருந்த பெருங்கட்டூர் குமார தாதாசாரியரென்பவர் அப்பெருங் கூட்டத்தைத் தள்ளிக்கொண்டு முன்னே ஓடிவந்து ஸத்யோவைதவ்யமடைந்தவளைப்போல் சரேலென்று நிலத்தில் விழுந்து வாயிலும் வயிற்றிலு மடித்துக்கொண்டு "ஐயோ! தங்களை சாக்ஷிபோடுவதற்கென்றே இன்று புதிதாக இந்த புறப்பாட்டை ஆரம்பிக்கின்றார்கள், நீங்கள் அங்கே சென்றால் ப்ரேதங்கள் விழுகிற வேடிக்கையைத்தான் பார்க்கவேண்டும்" என்று கத்தினர். ஜட்ஜ் அவர்கள் திகைத்துப்போய் உடனே திரும்பிப்போய்விட்டார். அந்த குமாரதாதாசாரியருடைய சாதுர்யத்தை வடகலையார்கள் மிகவும் மெச்சி உடனே அவரைத் தேவப்பெருமாளிடம் கொண்டுபோய் மாலை மரியாதைகள் செய்வித்து பேஷ்! பேஷ்! என்று குலைமடித்தார்கள். பிறகு அந்த குமாரதாதாசாரியருக்கு நேர்ந்த கதியைக்கேளுங்கள். இரண்டுமூன்று மாதங்களுக்குள்ளே உடலெல்லாம் புழுத்து

நடமாட்டமுமிழந்திருந்து துன்பக்கடலுள் துவண்டு இப்படி நாலைந்துவருஷம் யாதனைகள் பட்டு, சரமகாலத்திலே வேஷ்டியால் ஏணைகட்டி அதிலே தன்னைக் கொண்டுபோய் திருமலையிலே பெரியபெருமாளைத் தாம் ஸேவிக்கும்படி செய்விக்கவேணுமென்று சிலரை வேண்டிக் கொண்டு அப்படியே ஏணையிலே தூக்கிக்கொண்டுபோகப்பட்டு, திருமலையிலே சேவித்துத் திரும்புகையில் ஆழ்வார் திருவீதிவலமாக அந்த ஏணையைக்கொண்டுபோகச் சொல்லி மணவாளமாமுனிகள் ஸன்னிதிவாசல்வந்தவாறே அங்கு இறக்கச்சொல்லி "ஸ்வாமிந்! முன்பு திருப்புட்குழி ஸ்வாமியின் அபசாரங்களை க்ஷமித்தருளினதுபோல அடியேனுடைய அபசாரங் களையும் க்ஷமித்தருளவேணும்" என்று கதறிக்கதறிக் கத்திக்கத்தியழுது க்ருஹம் வந்துசேர்ந்து அன்று மாலையே பரலோகம் சென்று சேர்ந்தாரென்பது ஜகத்ப்ரஸித்தம். [இங்கே திருப்புட் குழி ஸ்வாமிப்ரஸ்தாவம் வந்திருக்கிறது; அந்த விஷயம் மேலே விளங்கும்.]

45. மேல்பாக்கம் குமாரதாதாசாரியாரென்பவர் ஸ்வல்பகாலம் தர்மகர்த்த நடன மாடினர். பதவிக்கு வந்தவுடனே தென்கலையார்களை வரவழைத்து "உங்களில் நாலாயிர அத்யாபகர்கள் எத்தனை பேர்கள்? சிலசிலபாகம் தெரிந்த அத்யாபர்கள் எத்தனை பேர்கள்? எல்லாம் விலேவாரியாக எழுதிக் கொடுத்துவிட்டே கைங்கர்யம் பார்க்கவேணும்" என்று சில அட்டஹாஸங்கள் செய்தார். அடுத்தவாரத்தில் கைசிகத்வாதசி ப்ராப்தமாக, அன்று அந்த குமாரதாதாசார் புராணம் வாசிப்பதாக வந்து பரிவட்டங்கட்டிக்கொண்டு கோலப்படி பக்கத்திலேயே போலீஸ் பந்தோபஸ்துடன் பகல் 12 மணி வரை நாற்றிசையும் நோக்கி விழித்திருந்து பரிவட்டத்தைத் தாமே களைந்து கொடுத்துவிட்டு வீடு சேர்ந்து ட்ரஸ்டி பதவிக்கு ராஜிநாமா கொடுத்துவிட்டு அன்றிரவே சென்னைமாநகர் போய்ச் சேர்ந்து நாளடை வில் அங்கிருந்தே பெரியபரஞ்சோதி புக்கார்.

46. சாமா திருமலை தாதாசாரிய ரென்பவர் மணவாளமாமுனிகளையும் அவரடியார் களையும் வாசாமகோசரமாக நிந்தித்து சிவசனபூஷணச் சீர்கேடு முதலான அபத்தபஞ்சாங்கங் களை வெளியிட்டுக் கொண்டிருந்தார்; அதே ஸமயத்தில் தர்மகர்த்த பதவிக்கும் பிரபல முயற்சி செய்து நிற்க, "இந்த ஸ்தானத்திற்கு இவர் வந்தால் கோவிலே குட்டிச்சுவராய் விடும்" என்று தாயாதிகளே வெளிப்படையாகவந்து ஆக்ஷேபிக்கும்படியாகி அந்த பதவி கிடைக்காததோடு பலவகைப்பட்ட பங்கங்களையடைந்து பரிதாபநிலைகளை யெய்தி முடிந்தார்.

47. பூந்தி தாதாசாரி யென்பவர் சில நாட்கள் தர்மகர்த்தக் கூத்தாடினர்; அப்போது அவர் சாவுநீட்டுடனே மணவாளமாமுனிகள் ஸன்னிதியிலேவந்து, மாமுனி களின் திருமுற்றப்பந்தல் பத்திபுலாத்தல் ஸமயத்தில் தண்டைப்பிடித்துத் தள்ளிச் சில அதர்க் கண சேஷ்டைகள் செய்ய "தெய்வம் நின்றுகொல்லும்" என்கிற பழமொழியும் பழுதாகி அடுத்த நாளிலேயே அவர் "வானோ மறிகடலோ மாருதமோ தீயகமோ கானோ வொருங் கிற்று" என்ன வேண்டும் படியான சோசநீயஸ்திதிகளை யடைந்த சரிதைகளை ஒருவரும் மறந்திருக்க முடியாது.

48. சோணன்தாதாசாரிய ரென்பவரும் சிலகாலம் தர்மகர்த்த ந்ருத்த மாடினர். ஒருவருஷம் வைசாகோத்ஸவத்தில் த்வாதசாராதனத்தினன்று திருவபிஷேக மண்டபத்தின்கீழ் இருநூறு ஸ்வாமிகள் எழுந்தருளி யிருந்து திருவாய்மொழி ஸேவித்துக் கொண்டிருக்கிறார்கள். பெருமாளுக்கு அலங்காரமாகி த்வாதசாராதனம் நடைபெறவேணும். திருத்திரை சேர்த்

திருக்கிறது. "இன்று த்வாதசாராதனமும் கிடையாது, த்ரயோதசாராதனமும் கிடையாது; பெருமாளைக் கண்ணுடியறையிலேயிட்டுக் கதவைப்பூட்டும்" என்று மணியகாரருக்கும் அர்ச்சகபரிசாரகர்களுக்கும் கட்டளையிட்டார் ஷை சோணன் தர்மஹர்த்தா. பெருமாள் உள்ளே போய்ச் சேர்ந்துவிட்டார். பிறகு நடந்த வியாஜ்ஜியத்தில் 200 ரூ. (இருநூறு) அபராதம் செலுத்தவேணுமென்றும் இதை தேவஸ்தானப்பணத்திலிருந்து செலுத்தாமல் கைவிட்டுக் கட்டவேணு மென்றும் கட்டளையாயிற்று. பிக்ஷாடனம்பண்ணிக் கட்டிவிட்டு விலகினர். இந்த தாதாசாரியரே மணவாளமாமுனிகள் ஸன்னிதியில் பந்தல் போடுவதை ஆக்ஷேபித்தும் பலவாயிரக் கணக்கான ரூபாய்களை தேவஸ்தானத்திலிருந்து அநியாயச் செலவு செய்து மூன்று கோர்ட்டுவரை வழக்காடித் தோற்றொழிந்தார்.

49. இந்த தாதாசாரியர்கள் தேவஸ்தானப்பணத்தை இவ்விதமாக அநியாயச் செலவுகள் செய்ததைக் கணக்கிட்டால், உண்மையில் இந்த தேவஸ்தானம்போல் இரண்டு மூன்று தேவாலயங்கள் கட்டுவதற்குப் போதுமான பணம் செலவாகியிருக்குமென்பதில் ஸந்தேஹமில்லை. பலர்க்கோ சிலர்க்கோ பாபப்ராசுர்யத்தாலெ பெற்றதாயினிடத்திலேயே நிஷ்காரணமான பகையுண்டாவது போல, இவர்களுக்கு மணவாளமாமுனிகளிடத்திலே பகை தோன்றியதுதான் ஆச்சரியம். மாமுனிகளின் உத்ஸவத் திருமேனியைக் களவாடிப் பொற்றாமரையிலே பலகாலம் எழுந்தருளப்பண்ணிவைத்த மஹாநுபாவர்கள் இவர்கள். இந்த தேவாலயத்தில் அநந்த புஷ்கரிணியொன்றே புண்யதீர்த்தமென்றும், பின்புறத்திலிருக்கிற பொற்றாமரைக்குளம் சில நூற்றாண்டுகட்கு முன்னம் தோண்டப்பட்டதாகையாலே அது ஸாதாரண தடாகமென்றும் எண்ணியிருந்தோம். அதையும் புண்ய தீர்த்தமாக அட்வகேட் எழுதியிருப்பது எதனாலேயென்று ஆலோசித்தோம். தன்னுடைய ஆசார்ய குடும்பம் மணவாளமாமுனிகளைப் பலகாலம் இந்த தடாகத்திலே எழுந்தருளப்பண்ணிவைத்ததனால் இதையும் புண்யதீர்த்தமாகப் பரிகணநம் செய்தாரென்று தத்துவமுணர்ந்தோம்.

50. இவர்களில் தலைவராக எழுந்தருளியிருந்த திருப்புட்குழிப்பாஸ்வாமியே இப்படிப்பட்ட அதிமாநுஷ சேஷ்டிதங்களுக்கு ப்ரவர்த்தகராக விளங்கியருளினாராம். நியாயாலயத்தில் சென்று "இந்த தேவஸ்தானத்தில் மணவாளமாமுனிகள் மூலவிக்ரஹம் மாத்திரமுண்டேயல்லது உத்ஸவ விக்ரஹம் கிடையாதென்று அகோரப்ரமாணம் பண்ணுவேன்" என்று அதிகாரிகள் முன்னிலையில் நாற்காலியில் வீற்றிருந்து திருவாய்மலர்ந்தருளினாராம். பெரும்புளுகரிவரென்று அதிகாரிகளால் அறுதியிடப்பட்டு அவஜ்ஞையுடன் க்ருஹம் திரும்பின மஹான் அவர். அகோரப்ரமாணாசார்யரென்றே விருது பெற்றிருந்தார். மணவாள மாமுனிகள் விஜயஸ்ரீயுடன் நியாயஸ்தானத்திலிருந்து யதாஸ்தானமெழுந்தருளின பின்பு இந்த திருப்புட்குழி ஸ்வாமி [விவேகியாகையாலே] மாமுனிகளின் ஸன்னிதிக்குவந்து ஸுக்ருதப்ரணமமென்று சொல்லிக்கொண்டு பன்னிரண்டுமுறை நமஸ்கரித்து புந: புந: க்ஷமித்தருளவேணுமென்று அஞ்ஜலிமுத்ரையுடன் விஜ்ஞாபித்து மீண்டனராம்.

51. ப்ரக்ருதவிஷயத்தை நிகமனம் செய்கிறோம். தேவப்பெருமாள் ஸன்னிதியை ஆண்டுவந்த பழைய டிரஸ்டிகள் ஷை ஸன்னிதியில் மணவாள மாமுனிகளுக்கும் மற்றுமுள்ள ஆழ்வாராசாரியர்களுக்கும் இழைத்த தீங்குகள் உண்மையாகவே ராமாயணமும் பாரதமும் போன்றது. அவை பல புத்தகங்கள் மூலமாக வெளிவந்துமிருக்கின்றன. கோர்ட்டு ரிகார்டுகளிலும் எறிக்கிடக்கின்றன. அப்படிப்பட்ட தீங்குகள் அற்றொழிய

வேணுமென்றே இந்த தேவஸ்தானத்தில் ஸ்ரீ வைஷ்ணவர்களல்லாத பிராமணர்கள் அதிகாரம் செலுத்தும் டிரஸ்டியாக நியமிக்கப்பட்டார்கள். 17—3—41 தேதி முதலாக மேலேகுறித்த பிராமணர்களின் அதிகாரத்திலேயே இந்த தேவஸ்தான நிர்வாஹம் நடைபெற்று வருகின்றது. ஆழ்வாராசார்யர்களின் திருநக்ஷத்திரோத்ஸவ பரிபாலனங்களும் அத்யயநோத்ஸவமும் மணவாளமாமுனிகளின் திருநக்ஷத்ரோத்ஸவமும் இந்த தேவஸ்தானத்தில் பல வருஷங்களாகவே நிறுத்தப்பட்டு அதுவே ஒரு மாமூலாக வந்திருந்தபடியால் மத்யஸ்தர்களான புது டிரஸ்டிகள் நியமிக்கப்பட்டுங்கூட அநாதி மாமூல்படி உத்ஸவாதிகளை நடத்துவிக்க ஸௌகரியமில்லாமற் போகவே அவைகளுக்காகவும் தனி வியாஜ்ஜியங்கள் நடத்தி அநாதி மாமூல்கள் அநேகமாகப் புதுப்பிக்கப்பட்டன; அவை பத்து வருஷ காலமாகவே ஒழுங்காக நடந்து வருகின்றன. அவை நடக்க ஆரம்பித்தபிறகுதான் இந்த தேவஸ்தானத்தை விஷ்ணுவாலயமென்று சிறப்பித்துச் சொல்ல அவகாசமுண்டாயிற்று. ப்ரஹ்மஸ்ரீ S. நரஸிம்ஹய்யரவர்களென்பவர் இவ்வாலயத்தில் 4, 5 வருஷங்கள் எக்ஸிகியூடிவ் டிரஸ்டியாயிருந்து நல்ல புகழ் பெற்றார். ஒருதலைக்கு வசப்பட்டிருத்தல் முதலான தீயகுணங்கள் அவரிடம் இடம்பெறாமலிருந்தன. ஸகல பக்தர்களும் அவரையே அடிக்கடி நினைக்கிறார்கள்.

ஏழாமத்யாயம் முற்றிற்று.

---

### எட்டாமத்யாயம்—இந்த தேவஸ்தானத்தின் தென்கலையாசாரங்கள்.

52. இந்த தேவஸ்தானம் வடகலை சம்ப்ரதாயத்தைச் சேர்ந்ததென்று சிறிதும் கூசாமல் (பக்கம் 25ல்) எழுதப்பட்டிருக்கிறது. ப்ரத்யக்ஷமாகக் காண்கிற பலபலசெய்திகளினால் இந்த தேவஸ்தானம் தென்கலை ஸம்ப்ரதாயமே யென்பது சிறுவர்களும் நன்கு தெரிந்துகொள்ளும்படி மூதலிக்கப்படுகிறது. திருமண்காப்பு விஷயமாக மேலே விரிவாக எழுதப்படும். மற்றபடி கோவில் ஆசாரங்களெல்லாம் தென்கலை ஸம்பிரதாயத்திற்கே ஆதிக்யமளிப்பவை யென்பதை மத்யஸ்தர்கள் மதிக்க நிரூபிக்கிறோம். ஸ்ரீராமநவமி, ஸ்ரீ க்ருஷ்ணஜயந்தி என்னுமிவை சாஸ்த்ரஸித்தங்களான மிகச்சிறந்த விரதங்கள். இதில் தென்கலையார்க்கும் வடகலையார்க்கும் அநுஷ்டானபேதமிருப்பது ஜகத்ப்ரஸித்தம். ஸ்ரீராமநவமியை யனுஷ்டிப்பதில் மாஸமே வேறுபடுகிறது. ஸ்ரீ ஜயந்தியை யநுஷ்டிப்பதில் மாதம் ஒத்திருந்தாலும் நாள் வேறுபடுகிறது. [அநேக வருஷங்களுக்கு ஒரு முறைதான் மிகவும் அபூர்வமாக நாள் ஒத்துவரும்; நிகழும் மன்மத வருஷத்தில் அப்படி வருகிறது.] ஆக, ஸ்ரீராமநவமியும் ஸ்ரீஜயந்தியும் இந்த தேவஸ்தானத்தில் தென்கலையாருடைய அனுஷ்டானப்படி அநாதிகாலமாக நடந்துவருகிறதேயொழிய வடகலையாருடைய அநுஷ்டானப்படி கிடையாது. இதை எப்படியாவது மாற்றிவிட வேணுமென்று தாதாசாரியர்கள் தங்களுக்கு ஸ்வாதந்திரியமிருந்த காலத்தில் பிரபலப்ரயத்னம் செய்தும் பலிக்கவில்லை. நாளைவரையில் தென்கலையனுஷ்டானப்படியேதான் இவை நடந்துவருகின்றன.

53. இந்த துக்கம் நம் அட்வகேட்டின் மனதில் மிகவும் வேலை செய்து கொண்டிருப்பதனாலேயே விவாதவரலாற்றுச் சுவடியில் புதியனவும் இல்லாதனவுமான உத்ஸவங்களைக் குறிப்பிட்டவர் புராதனமான இவ்வுத்ஸவங்களை ஒரு மூலையிலும் குறிக்கவில்லை. பிரம்மோத்ஸவம், வெளியூருத்ஸவங்கள், மற்ற உத்ஸவங்கள் என்றிப்படி மகுடமிட்டு ஸகலோத்ஸவங்களையும் தெரிவித்துவருமிவர், தைமாதம் தொடங்கிவிசேஷோத்ஸவங்களைக் குறிப்பிட்டு வரும்போது சித்திரை

மாதத்தில் ஸ்ரீராமநவமியைத் தொட்டவரல்லர்; ஆவணி மாதத்தில் ஸ்ரீஜயந்தியையும் உறியடி யுத்ஸவத்தையும் தொட்டவரல்லர். மார்கழி மாதத்தில் அனுஷ்டானகுள உத்ஸவமொன்று தான் இவர்க்குத் தெரியுமாம். பூலோகவைகுண்டமென்னும்படி 21-நாள் அற்புதமாக அநுப விக்கப்படுகிற பகல்பத்திராப்பத்தென்னும் திருவத்யயநோத்ஸவத்தில் ஸ்வாசார்ய குடும்பத் திற்கு இருந்த தலைவேதனை இவர்க்கு இன்னமுமிருந்து வருகிற தென்பது நிராக்ஷேபமாக விளங்கிவிட்டது. ஒரு வருஷம் முழுதும் இவ்வூரில் தங்கியிருந்து எல்லாவுத்ஸவங்களையும் அநுபவிக்க வேணுமென்கிற ஆசம்ஸையை (பக்கம் 14ல்) காட்டியிருக்குமிவர், ஸ்ரீராமநவமீ ஸ்ரீஜயந்தி திருவத்யயநோத்ஸவங்களில் இவ்வூரை விட்டு வெளியூருக்குப் போய்விடவேணு மென்று தெரிவித்தவராகிறார். அஹஹ! என்ன ஹ்ருதய வைசால்யம்.

54. ஸன்னிதி வரலாறுகளை இவர் ப்ராமாணிகமாக எழுதுகிறவராயிருந்தால் திரு வத்யயநோத்ஸவம் என்று மிகப்பெரிய எழுத்தில் மகுடமிட்டு அவ்வுத்ஸவத்தின் வைகரிகளை குறைந்தபக்ஷம் இரண்டு பக்கமாவது எழுதியிருக்கவேண்டாவா? ஸ்ரீ வைஷ்ணவாலயங் களுக்கு இவ்வுத்ஸவந்தான் தலையானதென்றும், முன்னேயிருந்த தாதாசார்ய டிரஸ்டிகள் பல வருஷங்கள் இம்மஹோத்ஸவத்தைப் பாழ்படுத்தியிருந்தார்களென்றும், இதைப்பற்றிப் பலவாண்டுகள் நியாயாலயங்களில் வழக்குகள் நடந்து 10, 12 வருஷமாகவே நல்ல தீர்ப்புகள் ஏற்பட்டு ஒழுங்கானமுறையில் இவ்வுத்ஸவம் லோகோத்தரமாக நடந்துவருகின்றதென்றும், தாதாசார்யர்கள் கோவில் நிர்வாஹத்திலிருந்து விலக்கப்பட்டதற்கு இம்மஹோத்ஸவத்தை அநியாயமாய் நிறுத்தினதும் ஒரு நிமித்தமென்றும்............இப்படி உண்மைகளைக் கண்ணீர் பெருக எழுதியிருக்கவேண்டாமா? இவ்வுத்ஸவங்கள் இந்த தேவஸ்தானத்தில் இன்னமும் நடைபெறுவது கிடையாதென்று ஸமயவிசேஷங்களில் வாதிக்கவேணுமென்கிற ஆசாமோதக மன்றோ இவருள்ளத்தில் குடிகொண்டிருக்கிறது. இந்த தேவஸ்தானத்தின் வரலாற்றை யெழுதுவதற்கு இவர் தகுந்த அதிகாரிதானா? என்பதை மத்தியஸ்தர்களே விமர்சிக்க.

55. மேல் விஷயங்களையுங் கேண்மின். தேவப்பெருமாள், ஸன்னிதிவீதிக்கு மாத்திர மெழுந்தருளித் திரும்புகிற புறப்பாடுகள் பலபலவுண்டு. அப்போது நியமேந திருவடி ஸன்னிதியில் பஹுமானமாகித் திருமபுகையில் இயல்கோஷ்டி தொடங்குவது. அதற்கு அங்கமாக சுருளமுது [வெற்றிலைபாக்கு] அமுது செய்யப்பண்ணுவதென்று அநாதிகாலமாக தேவஸ்தானதிட்டமாகவே ஏற்பட்டிருக்கிறது; நடந்தும் வருகிறது. இதைப்பற்றி மணிய காரர்களையும் ஸன்னிதி பரிஜனங்களையும் விசாரித்தால் பல மருமங்கள் தெரியவரும்.

56. வைகாசிமீ நடைபெறும் வஸந்தோத்ஸவத்தில் கோஷ்டிக்கு சாத்துப்படியும் வஸந்தமும் விநியோகம் செய்யும்படி தேவஸ்தான தஸ்திக்கிலேயே ஏற்பட்டிருக்கிறது. அநாதிகாலமாக இன்றளவும் நடந்துவருகிறது. இந்த விநியோகம் எவ்விடத்தில் நடக்கிற தென்பதை பக்தர்கள் கவனிக்கவேணும். ஸன்னிதியை விட்டுப் பெருமாள் புறப்படும் போதே வேதபாராயண கோஷ்டி ஆரம்பமாகிறது. விநியோகம் செய்வதற்கு கோஷ்டி தானே வேண்டியது; வேதகோஷ்டி ஆரம்பித்தவுடனே இந்த சந்தன வஸந்த விநியோகம் ஆகலாமே. இந்த கோவில் ஏற்பட்ட நாள்முதல் ஒரு நாளாவது அப்படியுண்டோ வென்று கேட்கவேணும். இயல்கோஷ்டி ஆரம்பிக்கும்போதுதான் பெருமாளுடைய ஸாந் நித்யமே ஏற்படுகிறதென்று ப்ராசீனர்களின் அக்ருத்ரிமமான கொள்கை இருந்தபடியால் அந்தப்ராசீனர்கள் நியமித்த கட்டளை இற்றைக்கும் அழியாது அநுவர்த்தித்து வருகிறது.

இதே வஸந்தோத்ஸவத்தில் ஸமாப்தி தினத்தன்று [குதிரைநம்பிரானுத்ஸவம்] நாலுமாடவீதி புறப்பாடாகையால் அன்று ஸன்னிதியிலேயே இயல்கோஷ்டி தொடக்கமாகிறது; சந்தன வஸந்த விநியோகமும் அன்று அப்போதேயாகிறது. ஸ்ரீஜயந்திக்கு மறுநாள் கண்ணன் திருவீதிப்புறப்பாட்டில் எண்ணெய்காப்பு விநியோகமும் இயல்கோஷ்டி தொடங்கும்போது தான் ஏற்பட்டிருக்கிறது.

57. மார்கழித்திங்களில் ஆண்டாளுத்ஸவம் நாலு மாடவீதி புறப்பாடு பத்து நாளுண்டு; ஸன்னிதிவீதியின் கோடியில் திருவடி ஸன்னிதி பக்கத்தில் இயல்கோஷ்டி தொடக்கம். அதுவரையில் ஆண்டாள் தேவதேவ திவ்ய மஹிஷீத்வத்திற்குச்சேர பீதாம்பரத்தினால் அவகுண்டனங்கொண்டே மாடவீதிகளெழுந்தருள்வது. இயல் தொடங்கும்போது "பிடாத்தை விழவிட்டு அத்யாபகர்களுக்கு ஸர்வஸ்வதானம் செய்வது" என்கிற முறையில் இயலுக்கு மரியாதையாக அவகுண்டனத்தைக் களைந்துவிடுவது. பிராசீன வழக்கங்கள் பலபல மாறிப்போய் மேலே குறித்த சிலசிலவே இற்றைக்கும் நடந்துவருவதால் அநுபவத்தில் காணுமவற்றை எழுதலானோம்.

58. ஸ்ரீ வைஷ்ணவக் கோவில்களில் திவ்யப்ரபந்த கோஷ்டிக்கே ஏற்றமென்பதும், எல்லாச் சிறப்புகளும் அந்த கோஷ்டிக்கே பூருவர்களால் நியமிக்கப்பட்டனவென்பதும் அபலபிக்க முடியாத விஷயங்கள். இயல் தொடங்கும் போதும் சாற்றும்போதும் கோஷ்டிக்கு ஸ்ரீசடகோபன் ஸாதிப்பதென்பது கோயில் திருமலை முதலான பெரிய திவ்ய தேசங்களில் மாத்திரமே யல்லாமல் ஸாமான்யக் கோவில்களிலுங்கூட அநாதிவழக்கமாக அமைந்திருக்கின்றது. அது இந்த தேவஸ்தானத்திலு மிருந்ததே. தாதாசாரியர்கள் ஒழுங்கான முறையில் இருந்து ஒழுங்காக நடந்துகொண்டவரையில் மேலே சொன்ன கோஷ்டி மரியாதையானது நிர்விவாதமாக நடத்தப்பட்டு வந்தது. அவர்கள் கோஷ்டியில் சில விஷமங்கள் செய்ய ஆரம்பித்து அனேகவித பங்கங்களை அடைய நேர்ந்தபின்பு, இயல் கோஷ்டிக்கிருந்த இந்த மரியாதையை நிறுத்தி வேதபாராயண கோஷ்டிக்குச் செய்ய முயன்றார்கள். தேவப்பெருமாள் அப்போது அர்ச்சகர்களின்மேல் ஆவேசித்து இந்த புதிய செய்கையைத் தடுத்துவிட்டார். இதற்காக அர்ச்சகர்களை ஸன்னிதி கைங்கரியத்திலிருந்து எழெட்டு வருஷங்கள் விலக்கிவைத்து வழக்காடித் தோற்ற பின்பும் வீணான கலஹங்களை யுண்டுபண்ணி அனேகமான கிரிமினல் விவகாரங்களைக் கிளப்பி அபரிமிதமான தேவஸ்தான த்ரவ்யத்தைப் பாழ்படுத்தியது மிகவும் சோசநீயமான சேஷ்டிதம். சாஸ்த்ரங்களில் பகவதபசார பாகவதாபசாரங்களுக்குமேல் அஸஹ்யாபசாரமென்று ஒன்று சொல்லப்படுகிறது; அதற்கு ப்ரதான லக்ஷ்யம் இவர்களே யென்பது பேரருளாளன் திருவுள்ளமறிந்ததோருண்மை.

எட்டாம் அத்யாயம் முற்றிற்று.

---

## ஒன்பதாம் அத்யாயம்—வைசாகோத்ஸவ வாஹனக்ரமங்கள்.

59. வையங்கண்ட வைகாசித்திருநாளில் கண்டருளும் வாஹனங்களுங்கூட திவ்ய ப்ரபந்த ஸேவைக்கு அநுகுணமாகவே ஆதிகாலத்தில் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அதையும் விவரிப்போம். முதல்நாள் காலை வாஹனஸேவை ஒன்றுமில்லை. திருப்பல்லாண்டு தொடக்கம் கேட்டருள்வதற்காக வாஹனாரோஹணத்தைத் தவிர்த்து ஸேவை ஸாதிக்கிற

க்ரமம். மாலை சிங்கவாஹனம் ; அப்போது பெரியாழ்வார் திருமொழி முதற்பத்து ஸேவை ; அதில் * என்தொண்டைவாய்ச் சிங்கம் வா * என்று எம்பெருமானைச் சிங்கமாக வரும்படியழைத்த பாசுரம் வருவதால் அதை நோக்கிச் சிங்கவாஹன ஸேவை.

60. இரண்டாந்திருநாள் காலை * ஞானச் சுடர் விளக்கேற்றினேன் * என்று ஞான நூலைக் கொடுப்பதாகத் தொடங்கி * மறையாங்கென வுரைத்தமாலை * என்று எம்பெருமானும் ஜ்ஞான ப்ரதானம் பண்ணினதைச் சொல்லுகிற இரண்டாந்திருவந்தாதி ஸேவையாகையாலே, அன்னமாய் நூல் பயந்த அருளாளனுக்கு அன்னவாஹனஸேவை அமைக்கப்பட்டது. அன்றியும், முதல் நாளிரவு பெரியாழ்வார் திருமொழி ஸேவை முடிவுபாகத்தில் * பின்னிவ்வுலகினில் பேரிருள்நீங்க, அன்று அன்னமதானனே* என்று வருதலால் அதைக் கொண்டும் உடனே ஹம்ஸவாஹன ஸேவை மிகவும் பொருத்த மாயிற்று. அன்று மாலை பெரியாழ்வார் திருமொழி இரண்டாம்பத்து ஸேவையில் * அரவணையாயாயரேறே அம்மமுண்ணத் துயிலெழாயே—இன்னு முச்சி கொண்டதாலோ * என்று ஸூர்யோதய ப்ரஸ்தாவம் பண்ணிக் கண்ணனை யெழுப்புகிற பாசுரம் வருகையாலே ஸூர்யப்ரபை வாஹனம் அமைந்தது. இரவிலே ஸூர்யப்ரபையாவதற்கு இதுவே நிமித்தம்.

61. மூன்றாந்திருநாள் காலை மூன்றாந்திருவந்தாதி ஸேவையில் * பொலிந்த கருடன் மேல்கொண்டகரியான் கழலே * என்று வருதலால் கருடவாஹனஸேவை அமைந்தது. அன்றிரவு பெரியாழ்வார் திருமொழி மூன்றாம்பத்து ஸேவையில் * அடங்கச் சென்றிலங்கையை யீடழித்த அனுமன் புகழ்பாடி* என்றும் * சீராரும் திறலனுமன் தெரிந்துரைத்தவடையாளம்* என்றும் சிறிய திருவடி ப்ரசம்ஸை வருதலால் சிறியதிருவடி வாஹன ஸேவை அமைந்தது.

62. நான்காந்திருநாள் காலை நான்முகன் திருவந்தாதி ஸேவையில் * ஆங்காரவாரமது கேட்டு அழலுமிழும் பூங்காரரவணையான் * என்றும் * விரித்துரைத்தவெந் நாகத்துன்னை * என்றும் ஆதிசேஷனுடைய ப்ரஸ்தாவம் வருதலாலும் *வைகுந்தச் செல்வனார் சேவடிமேல் பாட்டு * என்று வைகுண்டநாதன் திருவடிகளில் அவ்வாழ்வார் பாசுரம் பாடினதாகச் சொல்லுகையாலும் சேஷவாஹனத்தில் பரமபதநாதன் திருக்கோல ஸேவை அமைந்தது. அன்றிரவு பெரியாழ்வார் திருமொழி நான்காம்பத்து ஸேவையில் * நளிர்மாமதியைச் செஞ்சுடர் நாவளைக்கும் * என்று சந்திரனுடைய ப்ரஸ்தாவம் பண்ணியிருக்கையாலே சந்த்ரப்ரபை வாஹந ஸேவை அமைந்தது.

63. ஐந்தாந்திருநாள் காலை திருவிருத்தம் ஸேவை ஆழ்வார் தாமான தன்மையை விட்டு நாச்சியார் திருக்கோலம் பூண்டு அருளிச்செய்த திவ்யப்ரபந்தமதுவாகையாலே அதற்குச் சேர பேரருளாளன் நாச்சியார் திருக்கோலம் பூண்டு ஸேவை ஸாதிக்கிறபடி. திருவிருத்தம் என்பதற்கு, திரு—நாச்சியாருடைய, விருத்தம்—வ்ருத்தாந்தம் என்று பொருள். நாச்சியார் திருக்கோலம் பூண்ட ஆழ்வாருடைய செய்திகளைச் சொல்லும் ப்ரபந்தமென்றபடி. இதற்கு மிகவும் பொருத்தமாகவே அன்று நாச்சியார் திருக்கோலம் அமைந்தது. வேறு காரணமில்லை. அன்றிரவு யாளிவாஹனஸேவை ஏற்பாடு செய்திருக்கிறவர்களின் அபிப்ராயத்தை ஆழ்ந்து பார்க்கையில் வெகு ஆச்சரியமுண்டாகிறது. திவ்யப்ரபந்தங்களில் யாளியைப்பற்றின பேச்சுக்கள் சிலவிடங்களில் வருகின்றன. எங்கு வருகின்றன வென்று பார்த்தால் பெரிய மலைகளை வருணிக்கு மிடங்களில்தான் வருகின்றன. அஹோபிலம்

திருவேங்கடம் திருமாலிருஞ்சோலை பதரிகாச்ரமம் என்னுமித்தலங்களை வருணிக்கும்போது தான் யாளிகளைப்பற்றிப் பேசுவது வழக்கம்; * நன்மணி வண்ணனூர் ஆளியுங் கோளரியும்* *செங்கணாளி யிட்டிறைஞ்சும்* இத்யாதி பாசுரங்கள் காண்க. ஐந்தாந்திருநாளிரவு திவ்ய ப்ரபந்த ஸேவையில் பதரிகாச்ரம மார்க்கத்திலுள்ள தேவப்ரயாகை யென்கிற கண்டமென்னுங் கடிநகர்ப் பாசுரங்களும், * துக்கச் சுழலையைச் சூழ்ந்துகிடந்த * என்று தொடங்கித் திருமாலிருஞ் சோலைப் பாசுரங்களும் * சென்னியோங்கு தண்திருவேங்கடமுடையான் பாசுரங் களும் ஸேவிக்கப்படுவதால் அந்த திவ்யதேசங்களுக்கும் யாளிக்குமே ஸம்பந்தமுள்ள தென்றுகொண்டு யாளிவாஹன ஸேவையை அப்போது ஏற்படுத்தினர்கள். இவ்வளவு ஆழ்ந்து ஏற்பாடு செய்தவர்களின் புத்தி சாதுரியம் மிகவும் மெச்சத்தக்கதாக வுள்ளது.

64. ஆறுந்திருநாள் காலை திருச்சந்தவிருத்தம் ஸேவை. அதில் * ஒன்றிரண்டு தீயுமாகி ஆயனுயமாயனே * என்றும் * ஆயனுகி ஆயர்மங்கைவேயதோள்விரும்பினுய் * என்றும் * ஆனைகாத்தொரானைகொன்று அதன்றியாயர்பிள்ளையாய் ஆனமேய்த்தி ஆநெயுண்டி * என்றும் * ஆதியாகி ஆயனுய மாயமென்ன மாயமே * என்றும் கொள்ளை கொள்ளையாக கோபாலக்ருஷ்ண ப்ரசம்ஸை வருதலால் அதற்குச் சேர கோபாலக்ருஷ்ணன் திருக்கோலம் பூண்டு ஸேவை ஸாதிக்கிறபடி. அன்றிரவு யானைவாஹனஸேவை. அது நாச்சியார் திருமொழி ஸேவைக்கு மிகவும் பொருத்தமாக அமைந்தது. நாச்சியார் திருமொழியில் * மங்கலவீதி வலஞ்செய்து—அங்கு ஆனைமேல் * என்கிற பாசுரம் ஸேவிக்கப்படுவதற்குப் பொருத்தமாகவே இது அமைந்தது. இதில் மற்ரெரு விசேஷமும் கவனிக்கவேண்டும்; அதாவது—ஆனைவாஹனப் பாசுரமாக மேலேயெடுத்துக்காட்டின பாட்டில் * குங்குமமப்பிக் குளிர்சாந்தம் மட்டித்து * என்று சூர்ணபிஷேகம் சொல்லியிருக்கையாலே இதுவும் அன்று காலை வைதிகச் சடங்காக நடத்தப்பட்டுவருகிறது.

65. எழாந்திருநாள் திருத்தேர். திருமங்கையாழ்வார் திருத்தேர்ப் பிரபந்தமாகத் திருவெழுகூற்றிருக்கை ஸாதித்தது உலகமறியும். அது ரதபந்தத்தில் அமைந்தது. அந்த திவ்யப்ரபந்த ஸேவைக்குச் சார்பாக ரதோத்ஸவம் வெகு பொருத்தமாக அமைந்தது. திருத்தேர் நிலை சேர்ந்தபின்பு பெருமாள் ஸன்னிதிக்கு எழுந்தருளுகையில் திருமடல் முடிந்தபின் நாச்சியார் திருமொழியின் சேஷம் ஸேவிப்பது வழக்கம். * கருப்பூரம் நாறுமோ * என்கிற ஒரு பதிகம் ஸேவித்து முடிப்பர்கள். அதில் * செங்கண்மால் தன்னுடைய வாய்த் தீர்த்தம் பாய்ந்தாடவல்லாய் * என்கிற பாசுரம் வருவதை நோக்கி அன்று பகலில் திருப்பாய்ந்தாடித் திருமஞ்சனமென்று நடத்தப்பட்டு வருகிறது.

66. அன்றிரவு திருமங்கையாழ்வார் பெரியதிருமொழி திவ்யப்ரபந்தத் தொடக்கம். அவ்வாழ்வாருடைய சரிதையிலுள்ள வேடுபறிகதைக்கு அநுகுணமாகவே பாதிவழியில் திருமங்கையாழ்வாரை யெழுந்தருளப்பண்ணி அவர்க்கு மரியாதைச்சிறப்புகள் நடத்தி திவ்யப்ரபந்தத் தொடக்கம் செய்வது நாளைக்கும் வழக்கத்திலுள்ளது. * ஆடல்மாவலவன் கலிகன்றிக்காகவே பெருமாளும் ஆடல்மா வென்னும் குதிரைவாஹனம் கண்டருள்வது.

67. திவ்யப்ரபந்தங்களில் ஆழ்வார்களுடைய அநுபவப்ரகாரங்களில், நாச்சிமார்கள் எம்பெருமானை வெறுத்துத் தள்ளுதல் [மட்டையடி] என்பது ஒரு விலக்ஷணநுபவம். நம்மாழ்வார், குலசேகராழ்வார், திருமங்கையாழ்வார் ஆகிய மூவரும் இதுவிஷயமாக மூன்று பதிகங்கள் பாடியுள்ளார்கள். இவ்வநுபவம் ஒன்பதாநாள் காலையில் ஒரு நாடகமாக அபிநயம் செய்யப்பட்டு வருகிறது. பெருமாள் தனியே யெழுந்தருளிப் பட்டிமேய்ந்து வருவதாகவும்,

நாச்சிமார்கள் இவரை உள்ளே புகவொட்டாமல் தடுப்பதாகவும் நடந்துவருவது ஆழ்வா ரநுபவமேயாகும்.

68. மறுநாள் திருவாய்மொழி ஆயிரத்தையும் கேட்டருள்வதற்காகப் பன்னிரண்டு திருவாராதனங்கள் கண்டருளி இரவு இராமானுச நூற்றந்தாதிக்காக சிசிரோபசாரப் புறப் பாடு கண்டருளி உத்ஸவஸமாப்தியாகிறது. ஆக இப்படிகளை ஊன்றிநோக்குமளவில் திவ்ய ப்ரபந்த ஸேவையை யநுஸரித்தே வாஹனப் புறப்பாடுகளில் நியதி ஏற்பட்டிருக்கின்ற தென்பது கல்வெட்டாகத் தேறும்.

69. இப்படி நாம் நிரூபணம் செய்வதைக் காண்கின்ற பிறர் ஸஹஸா ஒரு வார்த்தை சொல்லி விடக்கூடும்; பெருமாள் வாஹனஸேவைகள் கொண்டருளுகிறபடிக்குத் தகுதியாக இவர்கள் திவ்யப்ரபந்த ஸேவைகளை அமைத்துக் கொண்டார்களே யல்லது, திவ்யப்ரபந்த ஸேவைகளுக்குத் தகுதியாக வாஹநஸேவை ஏற்படுத்தப்படவில்லை—என்று.

70. இது பொருத்தமான வார்த்தையாகாது; திவ்யப்ரபந்த ஸேவை இஷ்டமானபடி பொறுக்கிப்பொறுக்கி யெடுத்து அமைத்திருக்கவில்லை; காலைவேளைகளில் இயற்பாஸேவை வரிசையாகவும், மாலை வேளைகளில் முதலாயிரம்ஸேவை வரிசையாகவும் நடந்துவரு வதால், வாஹனஸேவைகளுக்குத் தக்கபடி பாசுரஸேவையை அமைத்துக்கொண்டதாகச் சொல்வதற்கு அவகாசமேயில்லை. இதர திவ்யதேசங்களில் வாஹனக்ரமங்கள் வேறுவேறு விதமாக இருப்பினும், தேவப்பெருமாள் ஆழ்வார் ஸ்ரீஸூக்திக்கென்றே இட்டுப் பிறந்தவராத லாலும், அந்த ஸ்ரீ ஸூக்தியில் வியாமோஹம் காரணமாகவே உடையவரையும் இழுந்தவராத லாலும் இத்தேவப்பெருமாள்ஸன்னிதி ஸம்பந்தப்பட்டவரையில் நாமிங்கு நிரூபித்த திவ்ய ப்ரபந்தப் பொருத்தங்களும் ஏற்றங்களும் அசைக்கமுடியாதவை.

ஒன்பதாம் அத்யாயம் முற்றிற்று.

---

## — பத்தாம் அத்யாயம் —

### வைஷ்ணவக்கோவில்களுக்கு நிர்வாஹ அதிகாரிகளாக வருகிறவர்கள் கவனிக்கவேண்டிய விஷயங்களை விளக்குகின்றோம்.

71. இந்த தேவஸ்தானத்தில் இதுவரையில் 6, 7 டிரஸ்டிகள் வேலைபார்த்து விலகி னார்கள். இப்போது சில மாதகாலமாக ப்ரஹ்மஸ்ரீ V. R. விச்வநாதர் அவர்கள் வந்து சேர்ந்து வேலை பார்த்து வருகிறார். இவர் யுவாவாயும் புத்திமானாயுமிருப்பதால், நாம் நல்ல எண்ணத்துடன் தகுந்த ஆதாரங்கள் முன்னிலையாக யதார்த்தமாய்த் தெரிவிக்கும் விஷயங்கள் இப்பெரியார்க்கும், க்ரமேண இவருடைய பதவியை அலங்கரிக்க வரும் மஹான்களுக்கும் மிகவும் பயன்படுமென்று நம்புகிறோம். பொதுவாக விஷ்ணுகோவில்களுக்கெல்லாம் திவ்ய ப்ரபந்தமே உயிர் நிலையாயிருந்தாலும், இந்த தேவராஜஸ்வாமி தேவஸ்தானத்திற்கு விசேஷித்து அதுவே உயிர் நிலையானதென்பதை தேவஸ்தான அதிகாரிகள் பெரியார்கள்வாய்க் கேட் டுணரவேணும்.

72. இந்த ஸ்தல விஷயமாகப் பிரபந்தம் பாடின வேதாந்த தேசிகர் அதன் முடிவில் "தொண்டைமண்டலவேதியர் வாழவே தூயதேன்மறைவல்லவர் வாழவே" என்று, தமிழ்மறை வல்லவர்களே தொண்டமண்டலவேதியரென்று நிரூபித்து அப்படிப்பட்ட தமிழ்வேதம் வல்ல வர்கள் நீடூழி வாழ்ந்திருக்க வேணுமென்று வாழ்த்தியுள்ளார். அந்தவாழ்த்துதான் ஒரு நாளும் பழுதுபடாமல் அந்நாள் தொடங்கி இந்நாள் வரை ஓங்கி விளங்கி வருகிறது.

73. பகவான் ஐந்து நிலைமைகளையுடையனாக சாஸ்த்ரங்களில் கூறப்படுகின்றான். பர வ்யூஹ விபவ அந்தர்யாமி அர்ச்சாவதாரங்க ளென்னுமிவையே ஐந்து நிலைமைகளென்று ப்ரஸித்தம். ப்ரமேயங்களில் தலைமைபெற்ற எம்பெருமான் தன்னை இங்ஙனே ஐந்து வகையாக வகுத்துக் கொண்டது போல ப்ரமாணங்களில் தலையான வேதமும் இவ்வைந்து ப்ரகாரங்களுக்குப் பொருத்தமாகத் தன்னையும் ஐந்துவகையாக வகுத்துக் கொண்டது. இதனைச் சிறிது விவரிப்போம்.

74. எம்பெருமான் பரமபதத்தில் எழுந்தருளியிருக்கும் நிலை (1) பரத்வம் எனப்படும். க்ஷீராப்தியில் வாஸுதேவ ஸங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்தரூபேண வகுப்புண்டு நிற்கும் நிலை (2) வ்யூஹம் எனப்படும். ஸ்ரீராமக்ருஷ்ணாதிரூபேண அவதரித்து நிற்கும் நிலை (3) விபவம் எனப்படும். *கரந்தெங்கும் பரந்துளன்* என்று உள்ளே பதிந்து நிற்கும் நிலை (4) அந்தர்யாமித்வம் எனப்படும். கோவில்களிலும் க்ருஹங்களிலும் * தமருகந்த தெவ்வுருவமவ்வுருவமாய் நிற்கும் நிலை (5) அர்ச்சாவதார மெனப்படும். இவை, ப்ரமேயபூதனான பகவானுடைய பஞ்சப்ரகாரங்கள்.

75. இனி, ப்ரமாணத்தின் பஞ்ச ப்ரகாரங்களைக் கேண்மின்; (1) வேதம் பலவிடங்களிலும் எம்பெருமானுடைய பரத்வநிலையைப் பேசுகையாலே பரத்வத்திற்குச் சேர்ந்த ப்ரமாண நிலை வேதம். (2) எம்பெருமானுடைய வ்யூஹாவஸ்தையின் குணம் ரூபம் க்ருத்யம் முதலானவற்றைப் பேசுகைக்காக வேதமே பஞ்சராத்ரமாக வடிவெடுத்ததாகையாலே, பகவானுடைய வ்யூஹாவஸ்தைக்குச் சேர்ந்த ப்ரமாண நிலை—பஞ்சராத்ரம். (3) எம்பெருமானுடைய அந்தர்யாமித்வமானது அக்கி இந்திரன் வருணன் முதலான தேவதைகள் பக்கலிலேயுமுள்ளது; அவ்வோ தேவதைகளைக் குறித்து நாம் பண்ணுகிற கருமங்களானவை அந்தர்யாமியான எம்பெருமானைச் சேருகின்றன வென்பது வேதாந்திகளின் கொள்கை. ஆகவே எம்பெருமானுடைய அந்தர்யாமித்வம் கருமானுஷ்டானத்திற்கு உரியதென்று தேறிற்று. அப்படிப்பட்ட கர்ம கலாபங்களை விவரிக்க மநுஸ்மிருதி முதலான தரும சாஸ்த்ரங்களாக அந்த வேதமே அவதரித்த படியாலே, அந்தர்யாமித்வத்திற்குச் சேர்ந்த ப்ரமாண நிலை—ஸ்மிருதிகள். (4) அப்பெருமானுடைய ராமக்ருஷ்ணாதி விபவாவதார சேஷ்டிதங்களைப் பேசுவதற்காக அந்த வேதமே ஸ்ரீராமாயணம் மஹாபாரதம் முதலிய இதிஹாஸங்களாக ஆவிர்ப்பவித்ததாகையாலே எம்பெருமானுடைய விபவத்திற்குச் சேர்ந்த பிரமாண நிலை — இதிஹாஸபுராணங்கள். (5) விபவாவதாரங்களைச்செய்து ரக்ஷித்தருளும்பெருமான் அவதாரத்திற்குப் பிற்பட்டவர்களும் இழவாதபடி மிகவும் ஸுலபனாக அர்ச்சாவதாரமானவளவில் அதன் பெருமையைப் பேசுவதற்காக அந்த வேதமே தானும் ஸர்வஸுலபமாய் ஸர்வாதிகாரமாகைக்குறுப்பாகத் தமிழ் வடிவாய்க் கொண்டு ஆழ்வார்கள் பக்கலிலே திவ்யப்ரபந்தமாகத் திருவவதரித்தது.

76. ஸ்ரீராமாயண பாராயணம் செய்பவர்கள் யாவரும் * வேதவேத்யே பரே பும்ஸி ஜாதே தசராதாத்மஜே, வேத: ப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷாத் ராமாயணாத்மநா * என்கிற ச்லோகத்தை அநுஸந்தித்து வருவது நிர்விவாதம். வேத ப்ரதிபாத்யனான பரம புருஷன் சக்ரவர்த்தி திருமகனாய் அவதரித்தவளவில் அபௌருஷேயமான வேதமும் ஸ்ரீவால்மீகிபகவானிடத்தில் நின்றும் ஸ்ரீராமாயணமாகத் திருவவதரித்ததென்று இந்த ச்லோகத்தில் சொல்லப்பட்டுள்ளது. அதை ஒரு ந்யாய சிக்ஷையாகக் கொண்டு நம்முடைய பூர்வாசார்யர்கள் நிர்வஹித்த கட்ட

ளையையே நாம் கீழேவிவரித்தோம். ப்ராமாணிகர்கள் இதில்ஸந்தேஹிக்கவோ ஆக்ஷேபிக்கவோ இடமில்லை.

77. பராத்பரனை எம்பெருமானுடைய பரத்வப்பெருமைகளை நாம் தெரிந்து கொள்ளவேண்டுமானால் வேதத்தைக்கோண்டே தெரிந்து கொள்ளவேண்டும். அப்பெருமானுடைய வ்யூஹாவஸ்தையில் விசேஷங்களைத் தெரிந்து கொள்ளவேண்டுமானால் பஞ்சராத்ரத்தைக் கோண்டே தெரிந்துகொள்ளவேண்டும். விபவாவதார வ்ருத்தாந்தங்களைத் தெரிந்து கொள்ளவேண்டுமானால் இதிஹாஸபுராணங்களைக் கோண்டே தெரிந்துகொள்ளவேண்டும். அந்தர்யாம்யாராதநரூப கர்ம கலாபங்களைப் பற்றித் தெரிந்து கொள்ளவேண்டுமானால் மநுஸ்ம்ருதி முதலிய தர்மசாஸ்த்ரங்களைக்கோண்டே தெரிந்துகொள்ளவேண்டும். அர்ச்சாவதாரப் பெருமைகளைத் தெரிந்துகொள்ளவேண்டுமானால் ஆழ்வார் ஸ்ரீ ஸூக்திகளாகிய திவ்ய ப்ரபந்தங்களைக் கோண்டே தெரிந்துகொள்ளவேண்டும். ஆகவே திவ்ய ப்ரபந்தங்கள் அர்ச்சாவதார வேதமென்றே குலாவப்பட்டு வருகின்றன. உண்மையில், ராமக்ருஷ்ணாதியவதாரங்களுக்குப் பிற்பட்டவர்களான நமக்குத் தஞ்சமான கோயில் திருமலை பெருமாள்கோயில் முதலான திவ்ய தேசங்களின் [நூற்றெட்டுத் திருப்பதிகளின்] அநுபவம் நமக்கு திவ்யப்ரபந்தங்களாலல்லது வேறொன்றினாலும் ஸாத்யமன்றே. ஆழ்வார்களோ திவ்ய ஸூரிகள். அவர்கள் பாடின நூல்களோ திவ்ய ப்ரபந்தங்கள். அப்பிரபந்தங்களுக்கு விஷயமோ திவ்ய தேசங்கள். இப்படி எல்லாம் திவ்யமாக அமைந்த அமைப்பு யாரறிவார்?

78. ஆழ்வார் திவ்யப்ரபந்த மருளிச்செய்யாதிருந்தால் விஷ்ணுவாலயங்களில் நடைபெறும் உத்ஸவங்கள் அந்தோ! அழகிழந்து கிடக்குமே யென்று கம்பர் சடகோபரந்தாதியில் * அந்தமிலா மறையாயிரத்தாழ்ந்த அரும் பொருளைச் செந்தமிழாகத் திருத்திலனேல் நிலத் தேவர்களும் தந்தம் விழாவு மழகு மென்னும் * என்கிற செய்யுளினால் கல்வெட்டாகக் கூறுகின்றார். வ்யாஸ பராசர வால்மீகி ப்ரப்ருதிகளான மஹர்ஷிகள் இதிஹாஸ புராணங்களை மிகவும் விசேஷமாக இயற்றியிருந்தும் அவர்களை எந்த இடத்திலும் எந்த கோவிலிலும் விக்ரஹ ப்ரதிஷ்டை செய்து ஆராதிப்பது காண்கின்றிலோம். விஷ்ணு கோவில் ஒன்று தப்பாமல் ஆழ்வார்களையும் ஆசாரியர்களையும் விக்ரஹ ப்ரதிஷ்டை செய்து பகவானுடைய வைபவத்திற் காட்டிலும் அவர்களுடைய வைப்வமே ஓங்கும்படி செய்திருப்பதைக் காண்கின்றோம். இப்படி ஆழ்வார்களை ப்ரதிஷ்டை செய்து ஆராதிக்குமிக் காரியம் ஏதோ ஸமீப காலத்தில் ஏற்பட்டதோ வென்று சங்கிக்க இடமில்லாதபடிக்கும், இது மிகவும் புராதனமே யென்று நிச்சயிக்கும்படிக்கும் ஸ்ரீராமாநுஜர் காலத்திய நூல்களில் இது பொறிக்கப் பெற்றுள்ளது.

79. இவ்விஷயத்தைப்பற்றி ஒன்றே எடுத்துக் காட்டுவோ மிங்கு. கூரத்தாழ்வானுடைய திருக்குமாரரான பட்டர் உடையவர்காலத்தில் திருவவதரித்து உடையவர் ஸ்தானத்தில் அபிஷிக்தர் என்பது ஜகத்ப்ரஸித்தம். அவர் தாம் அருளிச் செய்த ஸ்ரீரங்க ராஜஸ்தவத்தில் நாற்பத்தோராவது ச்லோகத்தில் * [illegible] —பராங்குசாத்யா: ப்ரதமே புமாம்ஸோ நிஷேதிவாம்ஸோ தச மாம் தயேரந் * என்றுள்ளது. சந்திர புஷ்கரிணியின் கீழ்த்திசையில் பரவாஸுதேவப் பெருமாள் ஸன்னிதியில் ஆழ்வார்கள் பதின்மரும் பிரதிஷ்டை செய்யப்பட்டு எழுந்தருளியிருப்பதை மேலேகுறித்த பட்டர் ஸ்ரீஸூக்தி விளக்கியுள்ளது. ஆகவே ஆயிரமாண்டுகட்கு முன்னமே ஸ்ரீரங்கம் கோவிலில் ஆழ்வார்கள் ப்ரதிஷ்டை பெற்றிருந்தார்களென்பது பேர்க்கவும் பேராதபடியுள்ளது. கீழே நாம் விரிவாக நிரூபணம் செய்தபடி அர்ச்சாவதார வேத

மாகிய திவ்ய ப்ரபந்தங்களுக்கே ஏற்றமானது பற்றியே விஷ்ணு வாலயங்களில் ஆழ்வார்களுக்கு இவ்வளவுவைபவம் அமைந்தது.

80. பெரியார்கள் ஆழ்வார்களின் பாடல் பெருத விஷ்ணு கோவில்களில் பிரவேசிக்கத் தயங்குவது போலவே, ஆழ்வார்களின் விக்ரஹப்ரதிஷ்டையும் திவ்யப்ரபந்தாநுஸந்தானமுமில்லாத கோவில்களில் பிரவேசிக்கவும் தயங்குவர்கள். ஆழ்வார்களின் ஸ்ரீஸூக்திகளில் பிரவேசமில்லாதவர்களுக்கு மோக்ஷமே கிடையாதென்பதை ஸ்ரீமத் வேதாந்த தேசிகன் பாதுகாஸஹஸ்ரத்தில் கூசாது கூறுகின்ருர். ஒரு ச்லோகமே இங்கெடுத்துக் காட்டுகின்றேன்;— “ [illegible] த்ரமிடோபநிஷந்நிவேச சூந்யாநபி லக்ஷ்மீரமணய ரோசயிஷ்யந்” என்பது. இந்த ச்லோகத்தின் தாற்பரிய மென்னவென்ருல், ஆழ்வார் ஸ்ரீ ஸூக்திகளில் பிரவேச பாக்யமில்லாதவர்களைத் திருவுள்ளம் பற்றுவதில்லையென்று எம்பெருமான் விரதம் கொண்டிருப்பவனும். இப்படி யிருந்துவிட்டால் இவ்வுலகில் பலபல பேர்கள் எம்பெருமானுடைய திருவுள்ள வுகப்பை இழந்தே போகவேண்டிவரும். ஏனென்ருல், ஆழ்வார் ஸ்ரீ ஸூக்திகள் தமிழ்ப் பாஷையில் அவதரித்திருப்பதாலும் அந்தப் பாஷையை அறியாதவர்களே உலகில் அதிக அதிக ஸங்க்யையாக இருப்பதாலும் அவர்களெல்லாரும் எம்பெருமானுடைய திருவுள்ள வுகப்பைப் பெறுவதற்கு ப்ரஸக்தியில்லையாய் விடுகிறது. உலகில் ஒருவர் தப்பாமல் எல்லாருமே எம்பெருமானுடைய இன்னருளுக்கிலக்காகி உய்வு பெறவேண்டுமென்று விசாலமான திருவுள்ளங்கொண்ட நம்மாழ்வார் ஒரு உபாயம் செய்தாராம். அவர் பாதுகையில் ஆவேசித்து சடகோபனென்றும் சடாரியென்றும் தம்முடைய திருநாமத்தையே பாதுகைக்கு ஆக்கி, பெருமாளருகே வருகிற எல்லாருடைய தலையிலும் ஏறி வீற்றிருந்து, இவ்வழியினலே எல்லாரும் ஒருவாறு ஆழ்வார் ஸம்பந்தம் பெற்றவர்களாகி உஜ்ஜீவிக்கும்படி செய்துவிட்டாராம். இப்படி யருளிச்செய்தவர் வேதாந்தவாசிரியர். இதனல், ஏதேனுமொருவிதமாக ஆழ்வாருடைய ஸம்பந்தம் பெற்றவர்களுக்கே ஸத்கதியுண்டென்றும் அது பெருதவர்களுக்கு ஸத்கதிகிடையாதென்றும் ஸ்ரீ வைஷ்ணவ பரமாசார்யர்களின் ஸித்தாந்தம் கல்வெட்டாக இருந்ததென்று யாரும் காணலாம். எம்பெருமானுடைய திருவடி நிலைக்கு ஆழ்வார் திருநாமமன்றேயுள்ளது.

81. இப்படி ஆழ்வார்களாலும் ஆழ்வார் ஸ்ரீ ஸூக்திகளாலுமே மேன்மை பெற்ற விஷ்ணுவாலயங்களில் தரும பரிபாலனம் செய்யுமதிகாரபதவியை ஆளுமவர்கள் முக்கியமாக கவனிக்கவேண்டிய விஷயம் எதுவென்பதை இனி நாம் விவரிக்கவேண்டிய அவசியமுளதோ? ஆழ்வார்களின் திருநக்ஷத்ரபரிபாலனதிகள் செவ்வனே நடைபெறுகின்றனவா? என்பதையே முக்கியமாக முன்னம் கவனிக்கவேண்டும். அவ்வாழ்வார்களின் ஸ்ரீ ஸூக்திகளை ஓதுமதிகாரம் பெற்ற பெரியார்களைப் புரஸ்கரிக்கவேண்டிய முறைகளில் வழுவொன்றும் நேராதபடி கவனித்துக்கொள்ளவேண்டியதும் முக்கியம். இப்போது விஷ்ணுவாலயங்களில் பெரும்பாலும் ஸ்ரீ வைஷ்ணவர்களல்லாத ஸ்மார்த்தர்களும் மாத்வர்களுமே எக்ஸிக்யூடிவ் டிரஸ்டி பதவியில் நியமனம் பெறுகிருர்கள். உண்மையில் இவர்கள் விஷ்ணு த்வேஷமற்றவர்களாயும் விஷ்ணு பக்தியுக்தர்களாயுமிருப்பதால் விஷ்ணுவாலயங்களில் தர்ம பரிபாலக பதவிக்கு உரியவர்களேயாவர். ஆனல் இவர்கள் தங்களுடைய உரிமையை முழுதுமுணர்ந்து செவ்வனே செலுத்துதல் வேண்டும். ஆழ்வார்களிடத்திலும் ஆழ்வார் ஸ்ரீ ஸூக்திகளிடத்திலும் ஸ்ரீஸூக்தி வல்லவர்களிடத்திலும் இவர்களுக்கு ஸ்வத: பக்தியிருக்கக்

காரணமில்லையானாலும் ஆலய தர்ம பரிபாலனஞ்செய்ய நியமனம்பெற்று வந்துவிட்டபடியால் அந்தந்த ஆலயங்களின் நிபந்தனைகளுக்குப் பணிந்து ஒழுங்கான முறையில் நடக்கவேண்டியது கடமையாகும். ஒரு பெண் ஒருவர்க்கு இரண்டாவது மனைவியாக வாழ்க்கைப் படுகிறாள். இறந்துபோன மூத்தமனைவிக்குச் சில மக்கள் இருந்தால் அந்த ப்ரஜைகளின் போஷணையும் இந்த இளையமனைவிக்கே கடமையாகிறது. உண்மையில் அந்த ப்ரஜைகளிடத்தில் இவளுக்கு அன்புநிலை அஸம்பாவிதமானாலும் கைப்பிடித்த கணவனது முகமலர்ச்சிக்காக அந்த ப்ரஜைகளிடத்தில் மிக்க அன்பு காட்டிக் கணவனேடொப்ப அக்குழந்தைகளையும் போஷித்து நல்ல புகழ் பெறுகின்றாள். அதே முறைமையை இங்கும் ஆவாஹனம் செய்துகொள்ளவேண்டும்.

82. பிராமாணிகர்களாய் கம்பீரப்ரக்ருதி வாய்ந்தவர்கள் தாம் ஏற்றுக்கொண்ட பதவியைச் சிறிதும் பழிப்புக்கிடமில்லாதபடியே யசஸ்கரமாகவே நடத்திக்கொண்டுவருகிறார்கள். ஒரு நிதர்சனம் காட்டுகிறோம். ஸ்ரீவைஷ்ணவர்களுக்கே அஸாதாரணமான திவ்யப்ரபந்த பாராயணம் முதலிய சிலவிஷயங்களில் வழக்குகள் உண்டாகி நியாயாலயங்களுக்குப் போக நேர்ந்திருக்கிறது; முன்ஸீப் கோர்ட்டு ஜில்லாகோர்ட்டு ஹைகோர்ட்டு பார்லிமெண்டு என்னப்படுகிற எல்லா நீதிமன்றங்களிலுமே ஷை வழக்குகள் சென்றிருக்கின்றன. ஒவ்வொரு நீதிமன்றத்திலும் வழக்குகளைப் பரிஷ்காரம் செய்தவர்கள் பெரும்பாலும் ஸ்ரீவைஷ்ணவரல்லாதாரும் பிராமணரல்லாதாருமே. அவர்களெல்லார்க்கும் திவ்யப்ரபந்தங்களில் அப்ரதிபத்தியும் விப்ரதிபத்தியும் இயற்கையாகவுண்டு. கோவில்களில் திவ்யப்ரபந்த பாராயணங்களை அறவே நீக்கிவிடவேணுமென்கிற அபிப்ராயமுடையாரது வகுப்பில் சேர்ந்தவர்களே அவர்கள் பெரும்பாலும். ஆயினும், நீதிபதி ஸ்தானத்தை வஹிக்கின்ற நாம் நியாயப் பழுதாக நடந்துகொள்வது கூடாது என்கிற தருமத்திற்குக் கட்டுப்பட்டே அவர்கள் திவ்ய ப்ரபந்தங்களுக்கு விஷ்ணுவாலயங்களிலுண்டான கௌரவத்தைச் சிறிதும் போக்காமல் அநாதியான வழக்கங்களை உண்மையான ரிகார்டுகளினாலும் பல முகாந்தரங்களினாலும் தெரிந்துகொண்டு நீதி நன்னெறியையே செலுத்தியுள்ளார்கள். திவ்யப்ரபந்த பாராயண விஷயமாக கோர்ட்டுகளில் வழக்கு உண்டாகப்பெறாத விஷ்ணுவாலயங்கள் மிகச் சிலவேயாகும். உண்டான வழக்குகளைத் தீர்த்தவர்கள் ஸ்மார்த்தர்களும் மாத்வர்களும் ஹூணர்களும் யவனர்களும் கிறிஸ்தவர்களுமே பெரும்பாலுமாவர். அவர்கள், தங்களுடைய சொந்தக்கொள்கைக்கு மதிப்புக்கொடுத்து நீதிநன்னெறிக்குமாறாக ஜட்ஜ்மெண்டுகள் எழுதியிருந்தார்களாகில் திவ்யப்ரபந்தங்கள் மறைந்தே போயிருக்கும். அவ்வதிகாரிகள்யாவரும் திவ்யப்ரபந்தமே அர்ச்சாவதார வேதமென்கிற உண்மையை உள்ளபடி உணரப்பெற்று எள்ளளவும் நியாயவிபரீதம் செய்யாமல், தங்களுடைய சொந்தக் கொள்கையை வெகு தூரத்தில் விலக்கி உண்மையான நீதிபதிகளாய் நடந்துகொள்ளவேதான் திவ்யதேசங்களில் திவ்ய ஸூரிகளின் பெருமைகளும் திவ்யப்ரபந்தங்களின் பெருமைகளும் "படிக்குப்பாதி" என்கிற முறையிலாவது விளங்கிக்கொண்டிருக்கின்றன.

83. அப்படிப்பட்ட ஆலயங்களுக்கு தர்ம நிர்வாஹகர்களாய் நியமிக்கப்பட்டு வந்து கைங்கரியம் பார்க்கின்ற டிரஸ்டிகளும் அந்த நியாயத்திற்குக் கட்டுப்பட்டு அந்தப்பெருமைகளுக்குச் சிறிதும் குறை ஏற்படாதபடிக்கு தர்ம பரிபாலனஞ் செய்துபோகவேண்டியதே நன்மையாகும்; கடமையுமாகும். .... .... .... ... *

பத்தாவது அத்யாயம் முற்றிற்று.

## பதினோராவது அத்யாயம்—அத்யாபக வ்யவஹாரதத்வம்.

84. கி. பி. 1842ல் இந்த தேவஸ்தான நிர்வாஹத்தை ஏற்றுக்கொண்ட தாதாசாரியர்கள் 1865 ஆம் வருஷத்தில் அத்யாபகஸம்பந்தமாக விஷமங்கள் செய்ய ஆரம்பித்தார்கள். அப்போது, ஸர்க்கார் மதவிஷயங்களில் பிரவேசிப்பதில்லையென்றுகொண்டு அதை பஹிரங்கப் படுத்தியிருந்தார்கள். அதனால், நாம் எது செய்தாலும் கேட்பாரில்லையென்று துணிவு பூண்ட தாதாசாரியர்கள் 1865ல் ராமாநுஜாபாத்ரம் சொல்லி தாங்கள் தனியாகவே பிரபந்த சேவா காலம் செய்ய ஆரம்பித்தார்கள். அப்போது தென்கலையார்கள் தாவா செய்ய, ஜாயிண்டு மேஜிஸ்ட்ரேட் மிஸ்டர் பர்னல்துரை "தர்மகர்த்தாக்களிஷ்டம்" என்று சொல்லி தாவாவைத் தள்ளிவிட்டார். அதன்மேல் ஹைகோர்ட்டில் அப்பீல் செய்யப்பட்டது. 1867ஞு கி. ரெ. 66ல் ஜட்ஜுகள்—மிஸ்டர் ஹால்வே, மிஸ்டர் யன்னீஸ் துரையவர்கள், "தர்மகர்த்தாக்களுக்கு கோவில் கட்டிடங்களைக் காப்பாற்றவும் உப்புபுளி வாங்கிப்போடவும் அதிகாரமேயொழிய வழக்கவிரோதமான காரியங்களைச்செய்யவோ செய்விக்கவோ அநுமதிக்கவோ உரிமையில்லை; ஆதலால் இந்த தாவாவை ஸரியாய் விசாரித்து முடிவு செய்யவேண்டியது" என்றெழுதி விசாரணைக்கு ரிமாண்டு செய்தார்கள். ஜாயிண்ட் மேஜிஸ்ட்ரேட் ஏதோ சாக்கு சொல்லி மறுபடியும் தாவாவைத் தள்ளிவிட்டார். பிறகு தென்கலையார் செங்கற்பட்டு ஜில்லா கோர்ட்டில் தாவா செய்ய, ஜில்லாஜட்ஜும் மதவிஷயத்தில் தலையிடமாட்டோமென்று தள்ளிவிட்டார். ஹைகோர்ட்டாரும் அதைக் காயம் செய்துவிட்டார்கள்.

85. பிறகு தென்கலையார் சீமைக்கோர்ட்டில் அப்பீல் செய்துகொள்ள ஹைகோர்ட்டாரிடம் ஸாங்ஷன் கேட்க, அதுவும் அநுமதிக்கமுடியாதென்று தள்ளப்பட்டது. பிறகு தென்கலையார் நேரே பார்லிமெண்டில் அப்பீல் செய்துகொண்டார்கள். அப்போது திருப்புட்குழியப்பா தாதாசார் ஸ்வாமிகள் வைகுண்ட அப்பீல் என்று பரிஹாஸம் செய்துகொண்டிருந்தாராம். அந்த சீமையப்பீலுக்காக ஸம்மன்வந்து அவரிடம் ஸார்வு செய்யப் போனபோது 'இது என்ன?' என்று அவர் கேட்க, "வைகுண்ட அப்பீலென்று ஸாதித்ததே; அந்த வைகுண்டத்திலிருந்து நித்யமுக்தர்கள் இது கொண்டுவந்திருக்கிறார்கள்; திருவெழுத்து சாத்தி ஸ்வீகரித்தருளவேணும்" என்று ஸ்ரீமத். ஈச்சம்பாடி நரஸிம்ஹாசாரியர் ஸ்வாமி ஸாதிக்க, திருப்புட்குழி ஸ்வாமி திருவெழுத்து சாத்தி ஸம்மனை ஸ்வீகரித்தார். ஷை பார்லிமெண்டு அப்பீலில் என்ன முடிந்ததென்றால் "தென்கலையாருடைய அத்யாபகமிராசானது வருமானமுள்ளதென்று தெரியவருகிறபடியால் வரும்படியுள்ள மிராசு பாத்தியங்களை ஸர்க்கார் காப்பாற்றிக்கொடுக்கவேண்டியது அவசியமே; ஆதலால் இதை பூர்த்தியாக விசாரணை செய்து நியாயம் செலுத்தவேண்டியது" என்று முடித்து புநர் விசாரணைக்கு ரிமாண்டு செய்யப்பட்டது.

86. அப்போது வடகலை தாதாசாரியர்கள் விசித்திரமான ஆன்ஸர் போட்டார்கள்; "காஞ்சீபுரத்துத் தென்கலையார் எல்லாருக்கும் அத்யாபகபாத்யதை இல்லை, நாலைந்து பேர்களுக்குத்தானுண்டு; அதுவும் பெருமாள் ஸன்னிதியில் மட்டுமேயுள்ளது. மற்றவிடங்களில் இல்லை; சிலகாலங்களில் இல்லை; அவ்வளவு வருமானம் கிடையாது; அவர்களை நாங்கள் தள்ளியும்விட்டோம்" என்று இதுமுதலானவற்றைக்கண்டு ஆன்ஸர் கொடுத்தார்கள். [இடையில் ஒரு விஷயம்.] அதற்கு முன்னே தென்கலையாரை உள்ளேவிடாமல் தடுப்பதும் செய்தார்

கள். அப்போது தேவஸ்தானத்திலிருந்து வருஷம் இரண்டாயிரம் ரூபா செலவு செய்து 10 போலீஸ் கானிஸ்டேபில்களை கோபுரவாசலில் 4-வருஷ காவல் வைத்திருந்தார்கள். பார்லிமெண்டில் ரிமாண்டு செய்யப்பட்டபிறகே போலீஸ்காவல் எடுபட்டது.

87. பிரிவிகவுன்ஸில் அத்யாபக அப்பீல் 22—3—1879ல் கீழ்க்கோர்ட்டுக்கு ரிமாண்டு செய்யப்பட்டவகையில் கோர்ட்டு காஸ்ட் 140 பவுன், 13 ஷி. 4 பென்சு.

88. இதன் பிறகு ஹைகோர்ட்டு வரையிலுள்ள ஸகல நியாயாலயங்களிலும் ஸிவில் கிரிமினல் ஆகிய இரண்டுவழிகளிலும் முடிவுபெற்ற வியாஜ்ஜியங்கள் அனேகங்கள். அவைகளில் தென்கலையார்களே வாதிகளாகச் சென்று, தாதாசாரியர்களாலும் இதரர்களாலும் நேர்ந்த கஷ்டங்களை முறையிட்டு நியாயம் பெற்றார்கள். ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளை நாமும் ஆனந்தமாக அநுபவிப்போமென்கிற நல்லெண்ணம் சிறிதுமில்லாமல் ஹிம்ஸைபண்ணித் தொலைக்கவேணுமென்கிற கெட்ட எண்ணங்கொண்டும், மாமூல் வழக்கங்களை மாறுபடுத்தி யதேஷ்டமாக நடந்துகொள்ளவேணுமென்று கருதியும் துராக்ருதமாகவே நடந்துகொண்டதாக அதிகாரிகளால் கண்டுபிடிக்கப்பட்டு இது பல ரிகார்டுகளில் எழுதப்பட்டிருக்கிறது. ஆகவே இவர்களுக்கு எந்தவழியிலும் பங்கமேயாயிற்று. கடைசியாக அத்யாபகவ்யவஹாரம் முடிந்தவிதம் இனி ஸங்க்ரஹிக்கப் படுகிறது.

89. அனேக வருஷகாலம் மும்மரமாக நடந்து கொண்டு வந்த இந்த அத்யாபக வ்யவஹாரமானது 13—9—1938 தேதியோடு நிச்சேஷ சாந்தி பெற்றதாயிற்று. தூப்புல் விளக்கொளி ஸன்னிதியுட்பட ஸ்ரீ தேவராஜஸ்வாமி ஸன்னிதியில் காஞ்சீபுரம் ஸ்திரவாஸிகளான ஸகலதென்கலையார்களும் அத்யாபககைங்கரியமிராசுதாரர்களென்றும், ஸ்ரீசைலேசதயாபாத்ரமந்த்ரம் தான் அநுஸந்திக்கத்தக்கதென்றும், வடகலையார்கள் விரும்பினால் இந்த கோஷ்டியில் ஸாதாரண ஸேவார்த்திகளாய்க்கலந்து தென்கலையார்களுடைய கட்டுதிட்டங்களுக்குட்பட்டு அவர்கள் ஸேவிக்கிற மந்த்ரப்ரபந்தங்களையே ஸேவிக்கலாமே தவிர, வேறு தனிகோஷ்டியாக திவ்யப்ரபந்தம் ஸேவிக்கக்கூடாதென்றும் 38 வருஷங்களுக்கு முந்தியே ஹைகோர்ட்டு தீர்ப்பு ஏற்பட்டது. அதன்பிறகு வடகலையார்கள் ஷை தென்கலை கோஷ்டியில் சேர ஆரம்பித்துப் பல விண்கலஹங்களை யுண்டுபண்ண, அதனடியாக அனேக கிரிமினல் கேஸுகளுக்கு இடமுண்டாயிற்று. ஷை கேஸ்களிலும் வடகலையார்பலர்க்கு அபராதங்களும் தேஹதண்டனையும் ஏற்பட்ட பின்பு ஒருவாறு கலஹம் சாந்தமாயிற்று. பிறகு வடகலையார்கள் காஞ்சி. டி. மு. கோர்ட்டில் ஒரு தாவா தொடுத்தார்கள். இதில் முக்கியமானவை மூன்று விஷயங்கள்:— (1) தென்கலை அத்யாபககோஷ்டியில் முன்வரிசைகளில் நாங்களும் கலந்துசெல்ல பாத்யதை உடையவர்கள்; இப்படியிருந்தும் எங்களை க்ரிமினல் கோர்ட்டார் அடிக்கடி 144 ஸெக்ஷன்படி ஆர்டர்களினால் தடைசெய்து எங்களைக் கஷ்டப்படுத்துகிறார்கள்; இந்த கஷ்டத்தை நிவ்ருத்தி செய்யவேணும். (2) தென்கலையார்கள் ஸ்ரீ சைலேச தயாபாத்ரம் என்கிற தனியனை மாத்திரம் சொல்லி உடனே ஆழ்வார்களின் பிரபந்தங்களை ஸேவிக்கவேணுமேயல்லது, மற்ற ஆழ்வாராசாரியர்களின் தனியன்களையாவது, மணவாளமாமுனிகளின் உபதேசரத்தினமாலை முதலிய திவ்ய ப்ரபந்தங்களையாவது, மணவாளமாமுனிகள் விஷயமான வாழித் திருநாமத்தையாவது சொல்லக் கூடாதென்று தடையுத்தரவு பிறப்பிக்கவேண்டும். (3) தென்கலையார்கள் எந்தவேளையிலும் திவ்யப்ரபந்த ஸேவா காலமென்று பிரபந்தத்தைச்சொல்லி இதர கைங்கர்

யங்களுக்கு இடைஞ்சல் உண்டுபண்ணுகிறார்கள். அப்படி செய்யாதபடி பிரபந்த சேவா காலத்திற்கு காலநியமம் பண்ணவேணும்." என்பதாக.

90. இந்த மூன்று விஷயங்களில் பரிஹாரமடைவதற்காகவே வடகலையார்கள் தாவா பண்ணினார்கள். இந்த விஷயங்களில் பரிஹாரம் கொடுக்க நியாயமில்லையென்றும், தென்கலை கோஷ்டியில் முன் இரண்டு வரிசைகளில் வடகலையார்கள் பிரவேசிக்கக்கூடாதென்றும், மிராசுதாரர்களான தென்கலையார்கள் உபதேசரத்தினமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி, ஸகல தனியன்கள், வாழித்திருநாமங்கள் எல்லாம் மாமூல் வழக்கப்படி ஸேவிக்க அதிகார முள்ளவர்களாகையால் அதைத் தடைசெய்ய முடியாதென்றும், திருவாராதனத்திற்காக மணியடித்ததுமுதல் தீர்த்தப்ரஸாத விநியோகம் வரையில் திவ்யப்ரபந்த ஸேவை பண்ணு வதற்குக் காலமென்று முன்னமே தீர்ந்திருக்கிறபடியால் இதில் இப்போது விசாரம் எடுத்துக் கொள்ளவேண்டிய பிரமேயமேயில்லையென்றும் ஏற்கெனவே இரண்டு கோர்ட்டுகளில் தீர்ப்பாகி வடகலையாருடைய தாவா கோர்ட்டுகாஸ்டுடன் தள்ளுகடை செய்யப்பட்டிருந்தது. அது சென்னை ஹைகோர்ட்டில் ஸெகண்டு அப்பீலாக வந்திருந்து கனம் ஜட்ஜ் வார்ட்ஸ்வோர்த் துரையவர்களால் பரிசீலனை செய்யப்பட்டு கீழ்க்கோர்ட்டுகளில் முடிவானபடிகளை விரிவாக எழுதி 13-9-38ல் கோர்ட்டு காஸ்டுடன் அப்பீல் தள்ளப்பட்டது. ஸ்ரீ வி. வி. ஸ்ரீநிவாஸய்யங்கார் வடகலைதரப்பிலும், ஸ்ரீ ஸி. நரஸிம்ஹாசாரியர் தென்கலை தரப்பிலும் வாதித்தார்கள்.

91. கீழே முடிந்த ஹைகோர்ட்டு தீர்ப்புக்குப் பிறகு அத்யாபக கைங்கரிய விஷயத்தில் விவாதம் அடங்கிவிட்டது எனினும் "ஏதத் தத் புநரபி தைவதுர்விபாகாத் ஆலர்க்கம் விஷமிவ" என்று உத்தரராமசரிதத்திலே பவபூதி சொல்லுகிற ரீதியில் சிற்சில ஸமயங்களில் நாய்க்கடி விஷம்போல் தலைகாட்டிவருவதுண்டு. நேற்று ஜயஹு புரட்டாசி மாதத்தில் தேசிகன் சாத்துமுறையன்று அதர்க்கண சேஷ்டிதமொன்று ஆரம்பித்து எண்டோமெண்டு போர்டில் உத்தமாதிகாரிகளால் இது தவறான செயல் என்று கண்டிக்கப்பட்டிருக்கிறது. எதாவது கலஹத்தை உண்டுபண்ணிக்கொண்டிருக்கவேணுமென்றே தீக்ஷையுடனிருப்ப வர்கள் சிலருளர். தேசிகன் "நன்றே வருவதெல்லாம் நமக்குப் பரமொன்றிலதே" என்பதை அமிருதரஞ்சனியிலும் அத்திகிரிமாகாத்மியத்திலுமாக இருமுறை பேசியிருப்பது கண்டிருப்பார்க்குக் கவலை எதுமில்லை. அதற்கணக்கிளர்ச்சி எது தோன்றினாலும் க்ஷேமாயவே. இது நெடுநாளாக அநுபவத்தில்கண்ட விஷயம்.

பதினோராம் அத்யாயம் முற்றிற்று.

---

## பன்னிரண்டாமத்யாயம்—ஸர்க்கார் ரிகார்டுகளால் உண்மையை விளக்குதல்.

92. இதுகாறும் நம்முடைய ஸொந்த வார்த்தைகளால் இந்த வரலாற்றுநூல் எழுதப் பட்டு வந்தது; ஆனாலும் ஒவ்வொரு விஷயமும் ஸப்ரமாணமாகவே நிரூபிக்கப்பட்டிருப்ப தால் மத்யஸ்தர்கள் எந்த விஷயத்திலும் அத்ருப்தியடையக் காரணமில்லை. சில முக்கியமான விஷயங்களுக்கு நியாயஸ்தான ரிகார்டுகளை அப்படியப்படியே எடுத்துக்காட்டினால் இன் னமும் பரமத்ருப்தி எற்படுமென்று தோன்றி இனிச் சில ரிகார்டுகள் காட்டி அவற்றின் ஸாராம்சங்களையும் மொழிபெயர்த்தெழுதுகிறோம். இவற்றால், இந்த தேவஸ்தானத்தை முன்பு நிர்வஹித்துவந்த தாதாசாரியர்களின் பிரபாவங்களும் மற்றும் பல மருமங்களும் நன்கு வெளியாகும். இதுவே வியாஜமாக மற்றும் பல ரிகார்டுகள் க்ரமேண வெளிவரும்.

## 93. நம்மாழ்வார் சன்னிதியை வடகலையாக்க முயன்றபோது.

## In the Court of the additional Dt. Munsiff of Chingleput,

O. S. Nos. 6 & 7 of 1912.

Present:—M. R. Ry. R. V. Krishna Ayyar M. A, B. L.,
Additional Dt. Munsiff.

Monday 31—8—1914.

Paras 106 to 113 களில் உள்ள விஷயம்.

"In this connection, the facts which immediately gave rise to and culminated in this litigation become pretty important. ......................The plaintiff's case is that at a time when the outer gates of the temple were closed for the purpose of restraining a temple elephant which had gone mad, the Vadagalais forcibly entered the suit shrine and carried away the Utsavar idols of Nammalwar and his attendants with a view to alter their namams. The defendants, on the otherhand, state that in connectlon with Pagalpathu festival ...............it was usual to take Nammalwar idols up the hill every year and that it was in accordance with the custom, and not for any sinister purpose that the idols were removed from the suit shrine.......... The parties have consequently adduced a very considerable body of evidence in respect of the events of the 27th of December 1908 and the following days.

It appears to me to be unnecessary to discuss this evidence at length, and I will content myself with stating a few facts established by it.

There were immediately complaints by the plaintiffs to the Police and Mag'strate against the Vadagalais whose motives were then and there attacked as improper. The police forthwith appeared on the scene with Sub-Inspector Neelakanta Iyer, P. W. I, at their head. Neelakanta Iyer discovered the idols in the uphill-shrine and on the same day drew up the mahazar, Exhibit A, in the presence of the Vadagalai Receiver and several others. In that mahazar, there is reference to the fact that, though the idols, for the time being, wore Vadagalai Namams, yet, when washed out and inspected they contained doubtful Thengalai traces. As regards the Plaintiff's complaint to the Magistrate it ended in the conviction of several of the Vadagalais Exibit N. One of the grounds on which the conviction was upheld on appeal was that the vehicle called Tholukkinian on which, if the idols had been removed in connection with the festival they must have been carried, was found on inspection to have been totally unused. Now

all these facts, the immediacy of the Plaintiff's complaints, the alleged Thengalai traces on the idols, the unused character of the Tholukkinian greatly probablise the Plaintiff's version of a forcible removal.

Side by side with these facts there is also the incredibility of the justification attempted by the Defendants for the removal of the idols in question. From exibits L, EE. GG. and RR and from the oral evidence in the case it is clear, that, **for long years**, the Alwars and Acharyars have never taken part in the Pagalpattu festival at Conjeeveram. As regards the suit year itself, the receiver had **admittedly** not given any permission to carry the idols up hill. It is therefore impossible to suppose that the Defendants' removal of the idols from the Nammalwar shrine was a bonafide act done in the ordinary course of the Pagalpathu festival.

On 28—12—1908 the idols were restored to the suit shrine by an order of the stationary Sub-Magistrate of Conjeeveram.

But the police continued to guard the shrine until 6—1—1909. On that day, the shrine itself was handed over to the Plaintiffs and a mahazar, Exhibit T, was drawn up. In that mahazar it is stated that the Moolavar of the Nammazhwar had clearly visible Thenkalai Namam on his forehead, that Thenkalai Namams were also found on various articles and vessels within the shrine and on the Brindavanam opposite to it and that the namams on Mathurakavi and Nathamuni were not clearly visible. It is agreed, by the way, that Mathurakavi and Nathamuni could not have namams different from what Nammalwar wore.

.... .... .... .... .... ...

It is unnessary to discuss the Namam question further.

From all the facts and the circumstances of the case, it is conclusively established that the namams customarily worn by Nammalwar and his attendant deities were only Thengalai namams and not Vadagalai namams."

---

இதன் ஸாரமான கருத்து கீழ்வருமாறு:—

94. இந்த சந்தர்ப்பத்தில் இந்த வியாஜ்ஜியம் ஏற்பட்டதற்கு முன் நடந்த விஷயங்களைக் கவனிக்கவேண்டியது முக்கியமாகிறது. (தென்கலை) வாதிகளின் வழக்கு என்னவென்றால்:— "கோவிலின் யானைக்கு மதம்பிடித்து கோபுரவாசலின் கதவுகளை மூடியிருந்தபோது வடகலையார்கள் பலவந்தமாக நம்மாழ்வார் சன்னிதிக்குள் நுழைந்து, திருமண்காப்புகளை மாற்றுவதற்

காகவே நம்மாழ்வாருடையவும் அவருடன் சேர்ந்திருந்தவர்களுடையவுமான" (நாதமுனிகள் மதுரகவிகள்) விக்ரஹங்களை அப்புறப்படுத்திக் கொண்டு போய்விட்டார்கள். இதற்கு மாருக பிரதிவாதிகள் (வடகலையார்) பகல்பத்து உத்ஸவம் நடத்துவதற்கே வழக்கம்போல் ஷை விக்ரஹங்களை எள்ளப்பண்ணிக்கொண்டு போனதாகச் சொல்லுகிருர்கள். இருதரத்தாரும் 27—12—1908ல் நடந்த சம்பவத்தைப்பற்றி அனேக சாக்ஷியங்களையும் ரிகார்டுகளையும் கொடுத்திருக்கிருர்கள். இவைகளால் ருஜுவான விஷயங்கள் கீழ்வருமவை:— அன்றைய தினம் உடனே போலீசாரிடத்திலும் மாஜிஸ்ட்ரேட் முன்னிலையிலும் வடகலையாரின் பேரில் பிராதுகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. சப் இன்ஸ்பெக்டர் நீலகண்டய்யர் உடனே சில போலீஸார்களுடன் கலகம் நேர்ந்தவிடத்திற்குச் சென்றிருக்கிருர். நீலகண்டய்யர் பிரஸ்தாப விக்ரஹங்களை ஷை தேவஸ்தானத்தின் மலைமேல் கண்டு பிடித்தார். உடனே ஒரு மஹஜர் (exibit A.) வடகலை ரெஸீவர் (தோ. ரா.), சில பிரமுகர்கள்முன்பாக தயார் செய்தார். அந்த மஹஜரில் அந்தசமயம் தாற்காலிகமாக பிரஸ்தாப விக்ரஹங்களில் வடகலை நாமம் சாற்றப்பட்டிருந்தாலும் விக்ரஹங்களை அலம்பி பரிசோதித்தபோது தென்கலை யென்று சந்தேஹிக்கக் கூடிய சின்னங்களிருந்தன வென்று எழுதப்பட்டிருக்கிறது. இந்த கேஸில் அனேக வடகலையார்கள் தண்டிக்கப்பட்டிருக்கிருர்கள். இது அப்பீலிலும் காயமானதற்கு முக்கியமான காரணம் என்னவென்ருல், ப்ரஸ்தாப விக்ரஹங்களை எள்ளப்பண்ணிக்கொண்டு போவதற்காக உபயோகிக்கப்பட்டதாய்க் காட்டப்பட்ட தோளுக்கினியான் வெகுநாட்களாக உபயோகப்படுத்தாமலிருந்ததாக நிரூபிக்கப்பட்டதும், உடனுக்குடனே பிராது கொடுக்கப்பட்டதும், தென்கலை சின்னங்கள் காணப்பட்டதுமாம்." இவைபோன்றவைகளைக் கவனித்தால் பலவந்தமாக ஷை விக்ரஹங்களை அபஹரித்ததாகவே கொள்ளவேண்டியிருக்கிறது. இந்த விஷயங்களோடு இதையும் கவனிக்கவேண்டும். Exibit L, EE, GG, and RR. இந்த ரிகார்டுகளிலிருந்தும் வாக்குமூலங்களிலிருந்தும் ஆழ்வார் ஆசாரியர்களின் பகல் பத்து உத்ஸவம் அனேக வருஷங்களாக நிறுத்தப்பட்டிருந்தது ஏற்படும்; ப்ரஸ்தாப வருஷத்திலேயும் விக்ரஹங்களைக் கொண்டுபோய் பகல்பத்து உத்ஸவத்தை நடத்தும்படி உத்தரவிடவில்லை யென்றே ரிஸீவர் ஒப்புக்கொண்டிருக்கிருர். ஆகையல் பகல்பத்து உத்ஸவத்திற்கு இந்த விக்ரஹங்களைக் கொண்டுபோனதாகச் சொல்வது அடியோடு நம்ப முடியாது. காஞ்சீபுரம் ஸ்டேஷனரி சப்மேஜிஸ்ட்ரேட்டின் உத்தரவின்பேரில் 28—12—1908ல் அந்த விக்ரஹங்கள் நம்மாழ்வார் ஸன்னிதிக்கே திரும்பக்கொண்டுபோய்ச் சேர்க்கப்பட்டிருக்கின்றன; ஷை ஸன்னிதியைப் போலீஸார் 6—1—1909 வரையில் பாராபோட்டு காத்துக்கொண்டிருந்தார்கள். அன்றையதினம் வாதிகளிடம் ஷை ஸன்னிதி ஒப்புவிக்கப்பட்டபோது ஒரு மஹஜர் தயார் செய்யப்பட்டது. அந்த மஹஜரில் நம்மாழ்வாரின் மூலவருக்குத் தென்கலை திருமண்காப்பே வெகு ஸ்பஷ்டமாகப்பார்க்கலாம்படி இடப்பட்டிருந்ததென்றும், மற்றும் பாத்திரங்கள், சாமான்கள் முதலியவற்றில் தென்கலை நாமங்களே இருந்தன வென்றும், ஆழ்வார் ஸன்னிதியிலுள்ள (கருங்கல்) ப்ருந்தாவனத்தில் தென்கலை திருமண்காப்பே யிருந்ததென்றும் கூறப்பட்டிருக்கிறது.

இதற்குமேல் இந்த நாம விஷயத்தைப்பற்றி விவரிப்பது அனுவசியம். நடந்த விஷயங்களையும் சூழ்நிலைகளையும் கொண்டு நம்மாழ்வாரும் அவரைச்சேர்ந்த விக்ரஹங்களும் தொன்று தொட்டுள்ள ஆசாரப்படி தென்கலையே என்பது முடிவாக நிர்ணயிக்கப்பட்டு விட்டது. இவை வடகலை யல்ல.

ஆழ்வாராசாரியர்களின் பகல்பத்து உத்ஸவாதிகளேயும் புறப்பாட்டு உத்ஸவங்களேயும் வடகலே தாதாசார்ய தர்மகர்த்தாக்கள் நிறுத்தியகாரணம் S. A. Nos. 137, 138 and 269 of 1902 (on the file of the High Court)ல் T. M. ஸ்வாமிநாத அய்யர் நிர்ணயம் (finding) பாரா 17ல் கூறியுள்ளது யாதென்ருல், ஆழ்வாராசாரிய விக்ரஹங்களுக்கு புறப்பாடு உத்ஸவம் நடத்தி மணவாளமாமுனிகளுக்கு உத்ஸவம் நடத்தாவிட்டால் விரோதமாகவும் சங்கடமாகவும் இருக்குமே என்ற காரணத்தைக் கொண்டே எல்லா பக்த விக்ரஹங்களுக்குமே ஷை உத்ஸவத்தை இக்கோவிலில் நடத்துவதை நிறுத்திவிட்டார்கள். ("It is also clear that seeing how strange and unsound the theory that Manavala Mahamuni is not entitled to any procession will look when the other Alwars and Acharyas has such processions The plaintiffs (Vadagalai Thathachar trustees) have evidently thought it best to stop such processons to all for the present" இது ஹைகோர்ட்டில் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. .... (12.)

---

### பதின்மூன்ரும் அத்யாயம்—இதுவும் ரிகார்டுகள் காட்டுவது.

### தேவராஜஸ்வாமி சன்னிதியிலுள்ள தென்கலே பாத்யதைகள் விஷயம்.

# In the High Court of Madras.

. A. S No. 212 of 1909.

## JUDGMENT 26–4–1912.

by Hon'ble Mr. Justice Abdur Rahim &
,, ,, ,, Sundara Iyer.

பதினேராவது பேஜில் இரண்டாவது பாராவில் கூறியுள்ளவை:—

"We are, however, of opinion that, having regard to the past management of the temple, it is desirable to provide some authority to supervise the administration by the trustees. Several members of the Thengalai community hold offices in the temple, and the Thengalai, as a body, have important interests connected with it It has been decided that the invocation before the recitation of the Prabandam or Thirvoimozhi in the temple should be addressed to the Thengalai Saint, Manavala Mahamuni. The Thengalais possess the right to the Adhyapakam office. These rights led to long litigation between the Thengalai and Vadakalai communities (see Krishnaswami Thathachariar V. Krishnamachar I L. R, 5 Madras 313). There is a shrine of Manavalamahamuni within the precints of the temple as well as a shrine of Nathamuni,............. The Thengalai own the right to a good proportion of the Thirtam offices. Many of the Namams in the temple are Thengalai namams. The Thengalais have also the right of Asirvadam and a Thengalai is entitled to the office of Mulji Dharmakarta. All these have led to constant disputes and litigation between the communi-

ties and it is complained with reason that the fact that all the trustees are Vadagalais has tended to impede the vindication of the rights of the Thengalais and the Thengalai office holders. ... .. ....

It is also urged that the Thathachar Dharmakartas have repeatedly attempted to introduce innovations contrary to the interests of the Thengalais. They attempted to introduce an idol of Thathachar but the attempt failed. ... .... .... ... .... ...

We have therefore considered it desirable, in appointing a Board of Supervision, to provide that one of the members of the Board should be a Thengalai gentleman not holding any office in the temple."

இதனுடைய ஸாராம்சம்வருமாறு:— (தமிழ் மொழிபெயர்ப்பு.)

முதலில் தோன்றிய ஸ்கீம்ஸூட்டை முடிவு செய்த ஹைகோர்ட்டு ஜட்ஜுகளான (கனம்) அப்துல் ரஹிம் & ஸுந்தரமையர் இவர்கள் எழுதியிருப்பது—

"தேன்கலையாருக்கு அனேக முக்கியமான பாத்யதைகள் ஷை தேவஸ்தானத்தில் இருக்கின்றன. திருவாய்மொழி முதலிய ப்ரபந்தங்கள் தொடங்கும்போது தேன்கலை யாசார்யராகிய மணவாளமாமுனிகளின் தனியனைச் சொல்லியே எப்போதும் தொடங்கவேண்டியதென்று கோர்ட்டுகளில் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. அத்யாபக ஆபீஸ் தேன்கலையார்களுடையதே. தேவஸ்தானத்திற்குள்ளேயே தேன்கலை ஆசார்யர்களான மணவாளமாமுனிகளின் ஸன்னிதியும் நம்மாழ்வார் ஸ்ரீமன் நாதமுனிகளின் ஸன்னிதியும் இருக்கின்றன. தீர்த்த மிராசு பாத்யதைகளில் ஒரு பெரும்பாகம் தேன்கலையார்களுடையதே. ஷை தேவஸ்தானத்திற்குள்ளிருக்கும் திருமண்களில் அனேகம் தேன்கலை திருமண்காப்புகள் உள்ளன. அனேக தேன்கலையருக்கு ஆசீர்வாத பாத்யதைகளும் உண்டு. மல்ஜிதர்மகர்த்ருத்வம் ஒரு தேன்கலை ஸம்பிரதாயஸ்தரையே சேர்ந்தது. தேன்கலையாருக்கு இவ்வளவு பாத்யதைகள் ஷை தேவஸ்தானத்தில் இருப்பதாலும் தர்மகர்த்தாக்கள் எல்லாரும் வடகலையாயிருப்பதாலும் தேன்கலையார்கள் தங்களுடைய பாத்யதைகளைச் சரிவர அனுபவிக்கமுடியாமல் இருக்கும்படி தடைசெய்யப் படுகிறார்கள் என்று தகுந்த காரணத்துடன் நிரூபணத்துடன் குறை கூறப்படுகிறது இது அனேக கிளர்ச்சிகளுக்கும் கோர்ட்டு விவகாரங்களுக்கும் இடம் தந்திருக்கிறது. தேன்கலையார்களின் பாத்யதைகளுக்கு விரோதமாக அனேக புதிய ஆசாரங்களை வடகலை தாதாசார்ய தர்மகர்த்தாக்கள் நுழைக்க அடிக்கடி முயற்சி செய்கிறார்களென்று வற்புறுத்தப்படுகிறது. ஒரு தாதாசார்ய விக்ரஹத்தை புதியதாய் கோவிலில் ஸ்தாபிக்கச் செய்த முயற்சி பலிக்கவில்லை. இக்காரணங்களைக்கொண்டு தாதாசார்ய தர்மகர்த்தாக்களுக்குமேல் நாங்கள் ஏற்படுத்தவிருக்கும் Board of Supervisionல் ஒரு தேன்கலை சம்ப்ரதாயஸ்தர் இருக்க வேண்டுமென்று கருதி அப்படியே தீர்மானித்திருக்கிறோம்".

95. கனம் ஹைகோர்ட் ஜட்ஜ்கள் இந்த தேவஸ்தான ரிகார்டுகளை யெல்லாம் ஆர அமரப் பரிசீலனை செய்தே மேலே குறித்த வாசகங்களை எழுதியுள்ளார்கள். அவர்கள் எழுதியிருக்கிற விஷயங்களெல்லாம் நடைமுறையில் நன்கு காண்பவையே. "தீர்த்த மிராசு பாத்யதைகளில் பெரும்பாகம் தென்கலையாருடையதே" என்றதில் ஐயமுண்டோ? பிற்காலத்தில் கலாவிபர்யயமடைந்த தாதாசாரியர்கள் தவிர மற்ற ஸகல தீர்த்தகாரர்களும் தென்கலையார்களே. மலையாளநாச்சியார் ஸன்னிதிக்கு எதிரில் திருமலை ப்ராகாரத்தில் ஒரு கல்வெட்டு இருப்பதை நாளைக்கும் யாவரும் எளிதில் காணலாம்; அதாவது, வாதிபீகர ரக்ஷாசக்ரம் என்று மகுடம் கொடுத்து பிரதிவாதி பயங்கரம் ஸ்ரீரங்காசாரியர்க்கு முதல் தீர்த்த அருளப்பாடு என்று ஸ்பஷ்டமான எழுத்திலுள்ளது. இது உயரத்திலில்லை. தரையில் நின்றுகொண்டு சுகமாக வாசிக்கலாம். இது கோர்ட்டு தஸ்தாவேஜுகளில் ஏறியிருப்பதால் இதை யழிக்க முயன்றும் பயனில்லை. தாதாசாரியர்களுக்கு இங்கே தீர்த்தமிராசு எப்போது கிடைத்தது எவ்வண்ணம் கிடைத்தது என்பது பற்றின நிரூபணங்கள் அடுத்த பிரசுரத்தில் விரிவாக வெளிவரும். அவற்றை அட்வகேட் அவர்களே வெளியிட்டிருக்கலாம்.

96. மேலே குறித்த கனம் ஹைகோர்ட் ஜட்ஜுகளின் தீர்ப்பில் அடுத்த வாக்கியம் என்னவென்றால் "ஷை தேவஸ்தானத்திற்குள்ளிருக்கும் திருமண்களில் அனேகம் தென்கலைத் திருமண்காப்புகள் உள்ளன" என்பதே. அந்த தாவாவில் எக்ஸிபிட்டாக தாக்கல் செய்யப்பட்ட திருமண் ரிகார்டுகள் பலவற்றையும் ஜட்ஜ்கள் பரிசீலனை செய்தன்றோ இவ்வண்ணம் எழுதியிருக்கிறார்கள். இதைப்பற்றின தத்துவங்களை இப்போது நாம் விவரிப்பதில் பலன் இல்லையாயினும் பழைய வரலாறுகளைத் தெரிவிக்கவே இந்நூல் அவதரிப்பதால் அதைப்பற்றிச் சுருக்கமாக மேலே தெரிவிப்போம்.

பதின்மூன்றாமத்யாயம் முற்றிற்று.

---

## பதினான்காமத்யாயம்—இந்த தேவஸ்தானத்தின் கலையைப்பற்றி.

97. "தேவராஜஸ்வாமி தேவஸ்தானம் வடகலை" என்று கோவிலில் சில விடங்களில் திருமணாலும் சிமைச்சுண்ணாம்பாலும் வர்ணத்தாலும் எழுதியிருப்பதுண்டு. உலகில் வடகலைக்கோவில், தென்கலைக்கோவில் என்று வழங்கி வருவதானது எதைக்கொண்டு என்பதை விமர்சிக்கவேண்டும். கலை என்கிற சொல்லுக்கும் புண்ட்ரத்திற்கும் யாதொரு ஸம்பந்தமும் கிடையாது. ஆனாலும் ஒரு ரூடியான வ்யவஹாரம் நிகழ்ந்துவருவதால் அதையொட்டிப் பேசுவோம். இங்கு மதில்களிலும் சுவர்களிலும் தூண்களிலும் வடகலை நாமங்களைப் போட்டிருப்பதால் இது வடகலை தேவஸ்தானமேயென்பதில் என்ன தடையென்று பலர் நினைக்கலாம். தேவப்பெருமாள் மூலவர் திருநெற்றியிலும் சில வாஹனங்களிலும் இந்த புண்ட்ரம் ஏறியிருப்பதால் இப்போது இது வடகலை தேவஸ்தானமன்று என்று சொல்லுவது ப்ராமாணிகமாகமாட்டாது. இதைப்பற்றின தத்துவங்களை உலகம் தெரிந்துகொள்ளவேண்டியது மிக அவசியமென்று கருதி ரிகார்டுகளின் வழியைச் சிறிதும் மீறாமல் அதையொட்டியே சரித்திரங்கள் தெரிவிக்கப்படுகின்றன.

98. முன்னம், இக்கச்சிமாநகரிலேயே உள்ளதான விளக்கொளி கோவிலென்கிற தீபப்ரகாசர்ஸன்னிதியைப்பற்றினவொரு வரலாறு தெரிவிக்கப்படுகிறது. அதனால் இந்த

தேவஸ்தானத்தின் மருமங்களை எளிதாக வுணர்ந்துகொள்ளமுடியும். தேசிகனுடைய திருவவதாரஸ்தலமாகிய தூப்புல் விளக்கொளி தேவஸ்தானம் நெடுநாளாக கைக்கோளர்களின் பரிபாலனத்திலிருந்துவருகிறதென்பதும் அந்த தேவஸ்தானத்திற்கு அவர்களே தருமகர்த்தாக்களென்பதும் நாடறிந்தவிஷயம். இற்றைக்கும் இது மாறுபாடு அடையவில்லை. இந்த கோவிலின் நிர்வாஹம் அவர்களுக்குப் பரம்பரைமிராசென்று சொல்லப்படுகிறது. தாதாசாரியர்கள் தூப்புல் தேசிகன் ஸன்னிதிக்கு மட்டும் நாங்களே தர்மகர்த்தாக்களென்று விவாதிக்க ஆரம்பித்தார்கள். அப்போது கைக்கோளர்கள் நீதிமன்றத்தில் தாவா செய்ய நேர்ந்தது. அதில் தாதாசாரியர்களின் எதிர் வாதம் என்னவென்றால்—இங்கு தேசிகர் ஸன்னிதியானது தீபப்ரகாச தேவஸ்தானத்தைச் சேர்ந்ததன்று; இது தனிப்பட்ட கோவில். தீபப்ரகாச தேவஸ்தானத்திற்கு கைக்கோளர்களே டிரஸ்டிகளென்பதை நாங்கள் ஆக்ஷேபிக்கவில்லை; தேசிகர் கோவிலின் நிர்வாஹத்தில் அவர்களுக்கு யாதொரு ஸம்பந்தமும் கிடையாது. நாங்களே நெடுநாளாக நிர்வாஹிகள்—என்று தாதாசாரியர்கள் ஆன்ஸர் கொடுத்தார்கள். இந்த வ்யவஹாரத்தில் தென்கலையார்களுக்கு யாதொரு ஸம்பந்தமும் இருந்ததில்லை. கைக்கோளர்களுக்கும் தாதாசாரியர்களுக்கும் மட்டுமே நடந்ததிது.

99. இந்த தாவா முன்சீப்கோர்ட்டு, ஜில்லா கோர்ட்டு, ஹை கோர்ட்டு ஆகிய மூன்று கோர்ட்டுகளிலும் சென்று முடிவு பெற்றது. முதல் முன்ஸீப் கோர்ட்டில் கைக்கோளர்கள் பக்ஷத்தில் வெற்றி ஏற்பட்டது. இரண்டாவதாக ஜில்லா கோர்ட்டில் அது மாறுபட்டு தேசிகர் ஸன்னிதி நிர்வாஹம் தாதாசாரியர்களுடையதே யென்று முடிந்தது. பிறகு சென்னை ஹை கோர்ட்டில் 19—4—1883ல் பரிஷ்காரமாக முடிவுபெற்றது. மிஸ்டர். இன்னிஸ் துரையும், ஸுப்ரஸித்தரான முத்துஸ்வாமி அய்யரவர்களும் ஆக இருவரும் ஜட்ஜுகளாயிருந்து பரிபூர்ண விசாரணைகள் செய்து முடித்தார்கள். அது ஆங்கிலத்திலும் தமிழிலும் விரிவாக வெளியிடப்பட்டிருக்கிறது. அதிலிருந்து ஸாரமாக ஒரே விஷயம் காட்டுகிறோம்.

> "தூப்புல் தேசிகர் ஸன்னிதியானது விளக்சொளி தேவஸ்தானத்தைச் சேர்ந்ததே; அந்த கோவிலின் வாஹன மண்டபமே தேசிகர்கோவிலாக ஆக்கப்பட்ட தென்று தெரியவருகிறது. விளக்கொளிதேவஸ்தானத்திற்கு யார் டிரஸ்டிகளோ அவர்களே அதைச் சேர்ந்த தேசிகர் கோவிலுக்கும் டிரஸ்டிகளாயிருக்கத்தக்கவர்களென்பதில் என்ன ஸந்தேஹம்? ஆகவே முன்சீப் கோர்ட்டு தீர்ப்பையே நாங்கள் ஊர்ஜிதப்படுத்துகிறோம். இதற்கு முக்கியமான காரணம் ஒன்று கவனிக்க வேண்டும் — விளக்கொளி கோவிலைப்போல் தேசிகர் கோவிலும் தென்கலை ஸம்பிரதாயத்தை யநுஸரித்திருக்கிற விஷயம் ஸ்பஷ்டமாக விருக்கிறது; தாதாசாரியர்களே தேசிகர்கோவிலுக்கும் டிரஸ்டிகளாக இருந்திருப்பார்களானால் அவர்கள் இங்கு தென்கலை ஸம்பிரதாயம் தொடர்ந்து வந்திருக்கும்படி பார்த்துக் கொண்டிருக்கமாட்டார்கள் என்பதே."

என்று ஷை ஜட்ஜுகளால் எழுதிமுடிக்கப்பட்டிருக்கிறது. இது நாம் இந்திரஜாலமாகக் காட்டுவதன்று. மூன்று கோர்ட்டுகளில் நடந்த இந்த வியவஹாரத்தின் ரிகார்டுகள் — முக்கியமாக ஹை கோர்ட்டு ஜட்ஜ்மெண்டு மறைக்கவோ மாற்றவோ முடியாதது. ஸ்வல்ப பரிச்ரமத்தினால் யாவரும் காணக்கூடிய ரிகார்டே இது. மேலே நாம் எழுதியுள்ள வாசகங்கள் அந்த ஜட்ஜ்மெண்டில் இல்லையென்று நிரூபிக்கத் துணிவுடையவர்கள் நிரூபிக்கவேணும். ஷை ஹை கோர்ட் ஜட்ஜிமெண்டின்படி 1883-ம் ௵ வரையில் தேசிகன் ஸன்னிதியுட்பட தீபப்ரகாச தேவஸ்தானம் தென்கலை ஸம்பிரதாயமாக விளங்கி வந்த தென்பது நிஸ்ஸந்தேஹ

மாகத் தேறியிருக்கிறது. 1883-ம் ஸ்ரீ என்பது இற்றைக்கு (72) எழுபத்திரண்டு வருஷங்களுக்கு முந்தியதே யொழிய அதிக காலமாகவில்லை.

100. வருஷம் 1883க்கு முன்னே (8, 9 வருஷங்களுக்கு முன்னே) 1874-ம் ஸ்ரீத்தில் வடகலை வகுப்பினர் ஷெ தேசிகர்கோவிலிலிருந்த (பெரிய) காரைக்கட்டிடமான தென்கலைத் திருமணை இடித்துத் தள்ளிவிட்டார்களென்று அப்போதே செங்கற்பட்டு ஜாயிண்டு மேஜிஸ்டிரேட் கோர்ட்டில் தாவா நடந்திருக்கிறது. அந்த தாவாவின் நம்பர். 72. அதில் பிரதிவாதியா யிருந்த (அக்யூஸ்டு) திருப்புட்குழியப்பா தாதாசார்ஸ்வாமி கொடுத்திருக்கிற வாக்குமூலம் (அதாவது) 19—8—1874ல் கலெக்டர் மிஸ்டர். குருல்துரை முன்னிலையில் கொடுத்த ஸ்டேட்மெண்டு

"விளக்கொளி தேசிகன் ஸன்னிதிவாசலில் தேன்கலை திருமண்தான் இருந்தது. 6, 7 மாதத்திற்கு முன் நான் வெளியூர் போயிருந்தபோது யாரோ வடகலையார் அதை இடித்துவிட்டதாக கேள்விப்பட்டேன்.........அந்த தேசிகன் ஸன்னிதியிலுங்கூட தேன்கலையார்களே தேன்கலை மந்திரம் சொல்லியே திவ்யப்ரபந்த ஸேவை செய்து வருகிறுர்கள்; அங்கு வடகலையார் வடகலை மந்திரம் சொல்லிவாக்காணேம்". என்று

101. அந்த வாக்குமூலம் அச்சாகி விளங்குகின்றது. அது 1874-ம் வருஷத்தில் என்பது ஸ்பஷ்டம். அதன்பிறகு எழு வருஷங்கள் கழித்தே கைக்கோளர்களின் வழக்கு ஹை கோர்ட்டில் (1881-ல்) முடிந்திருக்கிறது. 1874-ல் வெளியிலிருந்த காரைக்கட்டிடமான தென்கலைத் திருமண்காப்பை இடித்துவிட்ட போதிலும், மற்றும் அழிக்கப்படாமலிருந்த திருமண்களைக்கொண்டு தென்கலை ஸம்பிரதாயமே அங்கு ஓங்கியிருப்பதாக ஹை கோர்ட் ஜட்ஜுகளிருவர் எழுதிவைத்திருப்பதிலிருந்து அறிகிறேம்.

102. ஸமீபகாலத்தில் தாதாசாரியர்களில் ஒருவர் வெளியிட்டிருக்கிற ஸம்ப்ரதாய ப்ரதீப மென்னும் புத்தகத்தில், இங்கு நாம் மேலே குறித்த திருப்புட்குழி ஸ்வாமியின் வாக்குமூலத்தைப்பற்றி ஒரு விஷயம் தெரிவிக்கப் பட்டிருக்கிறது. அதாவது—தூப்புல் தேசிகர் ஸன்னிதியில் இருந்த தென்கலைத்திருமண்காப்பை திருப்புட்குழி ஸ்வாமி போல்வார் இடித்துத் தள்ளினது யுக்தமே யென்றும்; பல வருஷங்களுக்கு முன்னே வடகலையாயிருந்த ஸன்னிதிகளை இடையில் தென்கலையார் ஆக்ரமித்துக்கொள்ள, அதை மறுபடியும் முன்போல் திருத்தவேண்டியது அவசியமாகிற தென்றும், திருப்புட்குழி ஸ்வாமி போல்வார் அந்த கைங்கரியத்தில் முனைந்து நின்றது யுக்தமே யென்றும் கெண்டாடி யெழுதியிருக்கிறது.

103. எல்லா ஸன்னிதிகளும் ஆதிகாலத்தில் வடகலையாகவே யிருந்ததாகவும் இடையில் தென்கலையாரால் ஆக்ரமிக்கப்பட்டதாகவும் தத்துவம் கண்டு பிடித்து எழுதியுள்ள இந்த தாதாசாரியர், திவ்யதேசங்கள் வடகலையாயிருந்தகாலம் எது? தென்கலையாக மாற்றப்பட்ட காலம் எது? என்பதையும் கண்டுபிடித்து எழுதியிருக்கிறுர். ஆனல் அவர் காஞ்சீபுரத்தைப் பற்றி விசேஷித்து எழுதவில்லை; திவ்யதேசங்களில் தலையாய் பூலோக வைகுண்டமான ஸ்ரீரங்க தேவஸ்தானத்தைக் குறித்து ஸ்பஷ்டமாக எழுதுகிறுர். அவ்விடத்தில் நிர்ப்பந்தத்தினலேயே புண்ட்ரம் மாறுபடுத்தப்பட்டதென்று (பக்கம் 65ல்) எழுதுகிறுர். அப்படி நிர்ப்பந்தத்தினல் மாறுபட்டதென்பது எங்ஙனம் தெரிகிறதென்பதையும் விவரிக்கிறுர். ஸ்ரீராமாநுஜர் ஸ்ரீரங்கம்

சென்று சேர்ந்த காலத்தில் அந்த தேவஸ்தாநநிர்வாஹம் முழுவதும் பெரியகோயில்நம்பி யென்று மறு பெயருடைய திருவரங்கத்தமுதனுக்கு ஸ்வாதீனமாக இருந்தது. அந்த ஆதீனத்தைக் கைப்பற்றிக்கொள்ள ஸ்ரீராமாநுஜர் அவகாசம் பார்த்திருந்தார்; இருக்கையில் அவ்வமுதனுருடைய தாயார் பரகதியடைய, ஏகாஹ நிமந்த்ரணத்திற்கு ஒருவரையனுப்பும்படி அமுதனுர் ஸ்ரீராமாநுஜரிடம் வந்து வேண்டினர். அவர் தமக்கு ஸர்வாத்மநாவிதேயரான கூரத்தாழ்வானை நிமந்த்ரணத்திற்குப் போகும்படி நியமித்தார். அவர் ஸ்வாமி ராமாநுஜருடைய குறிப்பறிந்து அப்படியே நிமந்த்ரணத்திற்குச் சென்று போஜநமுடிவில் த்ருப்தி சொல்லுகிற ப்ரகரணத்தில் கோவில் திறவுகோலை ஸ்வாமிக்கு ஸமர்ப்பித்துவிட்டால் ஸகலம் ஸம்பூர்ணம் சொல்லுவதாகக் கூறி அப்படியே திறவுகோலைப் பெற்றுக்கொண்டாரென்றும், அதுமுதலாகத் தென்னரங்கர் செல்வம்முற்றும் ஸ்வாமிராமாநுஜர்க்கு அதீனமாய்விட்டதென்றும், க்ரமேண அந்த தேவஸ்தானத்தில் பல திருத்தங்களை ஸ்வாமி செய்தருளினரென்றும் வாஸ்தவமான ஐதிஹ்யமுள்ளது. மேலே ப்ரஸ்தாவித்த தாதாசாரியர் இந்த ஐதிஹ்யத்தை ப்ரபல ஆதாரமாகக்கொண்டார்; உடையவர்வாழிதிருநாமத்தில் "தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்திவைத்தான் வாழியே" என்றிருப்பதையும் குறிக்கொண்டார், அநாதிகாலமாக வடகலையாயிருந்த தேவஸ்தானத்தைத் தென்கலையாக்குவதற்காகவே ஸ்ரீராமாநுஜர் இந்த சூழ்ச்சி செய்தாரென்றுகொண்டு எழுதியுள்ளார். அவருடைய பங்க்திகள் வருமாறு;—"[illegible]............" இத்யாதி. இதைப்பற்றி விரிவாகத் தெரிந்துகொள்ள விருப்பமுள்ளவர்கள், ஸமீப காலத்தில் நாம் வடமொழி தென்மொழிகளில் தனித்தனியே யெழுதி வெளியிட்டிருக்கிற ஸத்ஸம்ப்ரதாய பாஸ்கர நூலில் கண்டுகொள்வது.

104. இனி இந்த தேவஸ்தானத்தில் புண்ட்ர விஷயமாகத் தெரிவிப்போம். இங்கிருந்த தென்கலைத் திருமண்களையெல்லாம் ஒவ்வொன்ருக மாற்ற ஆரம்பம் செய்தார்கள். தென்கலையார் நீதிமன்றங்களில் முறையிட்டுக்கொண்டதன்மேல் வடகலையாக்கப்படாத தென்கலைத்திருமண்களுக்கு கோர்ட்டுமனிதர்களே நேரில்வந்து லிஸ்டு எடுத்தார்கள். அப்போது, தேவப்பெருமாள் மூலவர்க்கு மாத்திரம் திருமண் மாற்றப்பட்டுப் போயிற்றென்றும் மற்ற பல விடங்களில் பழையபடியே யிருந்தனவென்றும் கண்டு 42 தென்கலைத் திருமண்களுக்கு ஜாபிதா எடுக்கப்பட்டது. மற்றொரு அதிகாரி வந்து இன்னமும் சோதனைகள் செய்து 18 தென்கலைத் திருமண்களுக்கு ஜாபிதா எடுத்தாராம். அப்போது மதவிஷயத்தில் ஸர்க்கார் பிரவேசிப்பதில்லையென்று இருந்தபடியால் மாற்றப்பட்டுப்போன திருமண்களை புநராவாஹநம் செய்விக்க முடியாமற் போயிற்று. அதனாலென்ன? மற்ற திவ்ய தேசங்களிற்போல் இந்த தேவஸ்தானத்திலும் புராதனமாக தென்கலைத் திருமண்காப்புகளே திகழ்ந்துவந்தனவென்பது ரிகார்டுகளினால் தேறியிருக்கிறது. அந்த ரிகார்டுகளெல்லாம் ஸ்கீம் ஸூட்டில் தாக்கல் செய்யப்பட்டபடியால்தான் சனம் அப்துல்ரஹிம் & ஸுந்தரமையரவர்கள் எழுதிய (ஷை ஸூட்) ஜட்ஜ்மெண்டில் "ஷை தேவஸ்தானத்திற்குள்ளிருக்கும் திருமண்களில் அனேகம் தென்கலைத்திருமண்கள் இருக்கின்றன" என்றும் "தென்கலையார்களின் பாத்யதைகளுக்கு விரோதமாக அனேக புதிய ஆசாரங்களை வடகலை தாதாசார்ய தர்மகர்த்தாக்கள் நுழைக்க அடிக்கடி முயற்சி செய்கிருர்கள்" என்றும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

நெ. 1



தாயார் ஸன்னிதி வாசலுக்கு மேலண்டை பக்கத்திலுள்ள
திருமுற்றத்தில் இந்த குத்துக்கல் ஸேவிக்கத்தக்கது.

நெ. 2



அபிஷேகமண்டபவாசற் கொடுங்கையில்
இந்த திருமண்காப்பு ஸேவிப்பது

நெ. 3



தேவப்பெருமாள் கங்கைகொண்டான்
மண்டபத்தில் சிறிய திருவடியின் தலைமேல்
புராதன திருமண்காப்பு ஸேவிக்க.

105. பெருமாளுக்கு தினப்படியாக உபயோகப்பட்டுவருகிற கடதீப [வடிதீப]த்தி லும் தீர்த்தக்குடங்கள் மூன்றிலும்தென்கலைத் திருமண்காப்பே காணலாம். வைசாகோத்ஸவத் தில் இரண்டு வேளையும் மண்டபப்படிகண்டருளும் கங்கைகொண்டான் மண்டபத்திலும் தென் கலைத்திருமண்காப்புதான் விளங்குகின்றது. வாஹனங்களில் யாளிவாஹனம்; மணிகளில் பெரியதிருமணி; அபிஷேகமண்டபக் கொடுங்கைத்திருமண்; தாயார்ஸன்னிதி முன்மண்டபத் திருமண், நூற்றுக்கால் மண்டபத்தில் கூர்மத்திற்கும், மேலே நான்கு கருடாழ்வார்களுக்கும் திருமண், யானைக்குத்திருமண், பல ஆழ்வாராசாரியர்கட்குத் திருமண் என்றிப்படி அனேக திருமண்கள் தீர்ப்புபெற்றவை. சில திருமண்காப்புகளுக்கு ஆப்டோன் ப்ளாக்கெடுத்து இதில் வெளியிடப்படுகிறது. அதனால் இப்போது ஸாத்யாம்சம் ஒன்றுமில்லையெனினும், கக்ஷிகளில் கலந்துகொள்ளாத மத்யஸ்தர்கள் உண்மையைத் தெரிந்துகொள்வர்கள்.

பதினான்காமத்யாயம் முற்றிற்று.

---

## பதினைந்தாம் அத்யாயம்—ஆத்தான்ஜீயரைப்பற்றி

106. தேவப்பெருமாளுக்கு ஆத்தான் ஜீயர்செய்த விசேஷத் தொண்டுக்குப் பிரதிபலனாக இந்த தேவஸ்தானத்தில் ஸ்ரீசைலேசதயாபாத்ரத்தனியன் அநுஸந்திக்கும்படியாக அநுமதி யளிக்கப்பட்டதென்று எழுதியிருக்கின்ற அட்வகேட், இதற்குமுன்பு இங்கே ராமாநுஜபாத் ரம் சொல்லப்பட்டு வந்தது போலவும், பிற்காலத்தில் ஸ்ரீசைலேசபாத்ரம் ஒரு காரணார்த்த மாக வந்து புகுந்துகொண்டதுபோலவும் காட்டி ஆப்யாயமடையப்பார்க்கிறார். பாத்ரத் தனியன் என்பது மணவாளமாமுனிகளின் காலத்தில்தான் அவர் விஷயமாகத்தான் அவ தரித்து ஸ்ரீபகவதாஜ்ஞயா ஏககாலத்தில் திவ்யதேசமெங்கும் ஒருகுறையுமின்றிக்கே நித்யஸ்ரீர் நித்யமங்களமாக விளங்கிவருகின்றது. இடையில் சண்டைக்காகவே ராமாநுஜபாத்ரச்லோ கம் கற்பனை செய்யப்பட்டு அது சொல்ல ஆரம்பித்த இடங்களிலெல்லாம் தடையுத்தரவுகளும் ராஜதண்டனைகளும் அபரிமிதமாக ஏற்பட்டுவந்திருக்கின்றன. இத்தகைய பல தத்துவங்களை நாம் வெகு விசதமாக விளக்கி ஸகல பாஷைகளிலும் * ராமாநுஜதயாபாத்ர பத்யசரித்ரமென் னும் விரிவான நூலை வெளியிட்டிருக்கிறோம். அது உலகமெங்கும் பரவியுள்ளது. அதனால் பிராமாணிகர்கள் யாவரும் உண்மையையுணர்ந்து தெளிந்திருக்கின்றார்கள், ஆதலால் இங்கு நாம் அதைப்பற்றி விரிவாக எழுத அவசியமில்லை.

107. ஆத்தான்ஜீயர் விசேஷத்தொண்டு செய்தது தேவப்பெருமாள் தேவஸ்தானத்தி லொன்றிலேயேயன்றி தூப்புல் தலத்திலாவது, ஸ்ரீபெரும்பூதூரிலாவது, திருப்புட்குழியிலா வது, திருவெள்ளூரிலாவது [மற்றெவ்விடத்திலாவது] உண்டோ? கிடையாது. தேவப்பெருமாள் ஸன்னிதியில் தொண்டு செய்தசற்காக ஸகல திவ்யதேசங்களிலும் ஸ்ரீசைலேசதயாபாத்திரம் சொல்லிக்கொள்ள அநுமதிகொடுக்கப்பட்டதென்றால் இது எவ்வளவு பொருத்தமானதென் பதை ப்ராமாணிகர்களே பரிசீலிக்கவேணும். ஸ்ரீபெரும்பூதூர் விவஹாரத்தில் முடிவாக ஏற் பட்ட ஜட்ஜ்மெண்டில் வடகலைபாருடைய நெடுநாளைய வக்கீலும், பிறகு ஹைகோர்ட் ஜட்ஜ் பதவியை அலங்கரித்துத் தீர்ப்புசெய்தவருமான ஸ்ரீ. கிருஷ்ணஸாமி அய்யரவர்கள் "தாதா சாரியர்கள் தங்களுக்குக் குலபரம்பரையில் வந்த ஸ்ரீசைலேசதயாபாத்ரத்தனியனில் மாச்சரி யம் கொண்டது காரணமாகவே கௌரவங்களையிழந்து மரியாதைகளையுமிழக்க நேரிட்டது" என்று சிலாசாஸனம் செய்திருப்பதை நாடோறும் முச்சந்தியும் பாராயணம் செய்துவரலாம்.

108. இருநூறு வருஷங்களுக்குமுன் மைஸூரிலிருந்த ஒரு பரகாலஸ்வாமி ராமாநுஜதயாபாத்ரத்தனியனைச் செய்து திருநாராயணபுரத்தில் சொல்ல ஆரம்பித்துவிட்டு, தெற்கிலும் சில திவ்யதேசங்களிலாவது இதை நுழைக்கவேணுமென்கிற அவாவுடன் தக்ஷிணயாத்திரை புறப்பட்டுக் காஞ்சீபுரம் வந்து தாதாசாரியர்களை இதற்கு நிர்ப்பந்திக்க அவர்கள் இசையாமல் மறுத்துவிட சாபோதகமிட்டுப் போய்விட்டாரென்பது யாவருமறிந்த சரிதை. அந்த பரகால ஸ்வாமியால் தூண்டப்பட்ட வேறு சில வடகலையார்கள் இங்கே சில வருஷங்கள் பொறுத்து ராமாநுஜாபாத்ரம் சொல்ல ஆரம்பித்ததும் அது தடைபட்டுப்போனதும் கீழே விவரிக்கப்பட்டது கோவில்களில் சண்டை ஆரம்பமானகாலம் ரிகார்டுகளில் ஸ்பஷ்டம். பல கோவில்களில் ஏககாலத்திலேயே சண்டை ஆரம்பமாயிற்றென்பதும் ஸ்பஷ்டம். அப்படி சண்டை ஆரம்பமாவதற்கு இரண்டு மூன்று வருஷங்களுக்கு முன்புதான் ராமாநுஜபாத்ரத் தனியன் தோன்றினது. தோன்றின நாள் முதல் எங்கும் பாதுகாஸஹஸ்ரபாக்யமே.

109. இந்த தேவஸ்தானத்தில் ஸ்ரீ சைலேச தயாபாத்ர தனியன் ஆத்தான் ஜீயர் காலத்தில் புதியதாக வந்து புகவில்லை !யென்பதுபற்றின விவரணங்களை ரிகார்டு மூலமாகக்காட்டுவோமினி.

110. கி. பி. 1711ல் லக்ஷ்மீகுமார திருமலை தாதாசாரியரால் ஆத்தான் திருவேங்கடராமாநுஜ ஜீயருக்கு எழுதிக்கொடுக்கப்பட்ட உடன்படிக்கை. (இது A. S. No. 175 of 1910-ல் Exhibit A வாக எடுக்கப்பட்டிருக்கிறது.)

## EXHIBIT A.

**Sreemathe Ramanujaya namaha.**

Odambadikka (agreement) executed on the 18th day of Chitri month of the current Khara year, being the 1633rd year of Swasti Sri Vijabhyadaya Sali Vahana Sakam and 4812 of the Kali (yuga) and 24th after Prabhava, to Srimat veda marga pratishtapana acharyobaya........Athan Thiruvenkata Ramanuja Jeeyangar, Sakala Sri Karyatharandharulu of the Sannidhi of Sri...........Devarajaswami of...........Kanchi...........by Srimat.........Yedurumbadi Lakshmi Kumara Thirumala Thathacharyulu, in the presence of Maharaja Rajastri Lala Thondarmul Srinivasa dasagaru is to the following effect:—We shall, as has been done under existing mamul for a very long time of beginning with "Srisylaisa dayapathram" (Srisailesathayapatram Thodangi) for Divya Prabandham Thodakkam (at the commencement of the recital of the prabandam) during Nithya Niyamithika Varashochavams daily, periodical and yearly Ochavams in Sri Devaraja Swami and other 18 Divya Dhesulu (temple), in the Sanidhis (temples) of Nammalwar and all other Alwar Acharyalu, and and in those of Srimath Thiruukkachi Nambi, Koorathal-

wan, Velakkadi Emberuman and that of Vedantacharyulu Varu situated in front of the Sannidhi Gopuram (temple tower) and then of performing all Oothsavams, get Srisailesathayapatram commenced, as at the Koil (temple), by Sriramaiyengr in our Thirumaliga (house) and then perform all Oochavams torn. Besides this I shall get Srisailesa thayapatram commenced, as at the Koil, by Sriramaiyengar at the auspicious and inauspicious ceremonies in the Thrumaligais (house) of our people.........and all servants, as is done in the koil, and we shall get our maryad such as Agra Tamboolam (first betal nut) done to us. To this effect is the Odambadikkai got executed and delivered with consent in Nammalwar Sannidhi.

111. இந்த உடன்படிக்கை ஸ்ரீதேவராஜஸ்வாமி தேவஸ்தானத்தில் மாத்திரமல்ல, காஞ்சீபுரத்தில் மற்றுமுள்ள 18 திவ்யதேசங்களிலும் ஸ்ரீ வைஷ்ணவ ஆழ்வார் ஆசார்யர்கள் ஸன்னிதிகளிலும் ஸகல ஸ்ரீவைஷ்ணவர்களின் க்ருஹங்களிலும் வெகுகாலமாக மாமூலாக ஸ்ரீசைலேசதயாபாத்ர தனியனே ஆசாரத்தில் இருந்ததான உண்மையை விளக்குகின்றது.

EXHIBIT B. (dated 16-10-1770)

Agreement executed on the 16th Arpisi of the year Vikriti (............) to Chakravarti Venkatachariar, Venkatachariar son Prathivatibayankaram Rangachariar, Prabakaram Thirumalachariar, and Pullavagam Venkatachariar and other Thennacharyars by Adyapagam Sreeramaiyengar to wit:-

According to the rules laid down by Srimatu Thirumalai Thathacharyar and Athan Jeer, from the time of Araiyar we have been for a long time in the habit of going to the houses of Adhyabagars, Archakar, Paricharagar, Swayambaki, Mudali and Karnam during the performance of auspicious and inauspicious ceremonies and commencing the recital of the verse Srisailesadayapatram. Accordingly, after the death of our father, Thirumancholai Iyengar, while we were conducting his Thiruvatyanam ceremony in our house commencing in the same manner with the recital of the verse Srisailesadayapatram, Srimathu Thathachariar, with a mob forcibly conducted the ceremony commencing with the recital of the verse "Ramanujathayapatram. Consequently I was removed as being unworthy to conduct the Thodakkam (commencement) in this temple in as much as I failed to abide by the rules and conduct Thodakkam in our house according to the long standing practice obtaining in the temple of Sri Devaraja Swami Lord of the universe, and other temples, 18 in all, and in the Alwars, and Acharyas' Sannidhis attached thereto. I have therefore resumed the Thodakkam with the recital of the verse "Srisailesathayapatram", conducted Thiruvadyanam according to the custom observed for a long time and

भोगापवर्गयोरेकं वाञ्छद्भ्यो ददते द्वयम् । श्रीमद्वरदराजाय महोदाराय मङ्गलम् ॥ ९ ॥

ஸ்ரீமத்வரதராஜாய மஹோதாராய மங்களம்.

போகாபவர்க்கயோரேகம் வாஞ்சத்ப்யோ தததே த்வயம்,
ஸ்ரீமத்வரதராஜாய மஹோதாராய மங்களம். 9

* இருள் தருமா ஞாலமாகிய இவ்வுலகத்தில் போகமென்றும் * நலமந்தமில்லதோர் நாடாகிய நித்யவிபூதியில் போகமென்றும் போகம் இருவகைப்படும். ஐஹிகத்தை விரும்புவார் சிலர்; ஆமுஷ்மிகத்தை விரும்புவார் சிலர்; இங்ஙனே ஒரொன்றை விரும்பினாலுங்கூட, தம்முடைய ஔதார்ய விசேஷத்தாலே * அவன் நாடுநகரமும் நன்குடன் காண நலனிடை யூர்திபண்ணி, வீடும் பெறுத்தித் தன் மூவுலகுக்குந் தருமொரு நாயகமே * என்னும் கணக்கிலே இரண்டையுமளித்தருள்பவர் பேரருளாளப் பெருமாளென்கிறது. ... ... ... (9)

मतङ्गजाद्रितुङ्गाग्रशृङ्गशृङ्गारवर्ष्मणे । महाकृपाय मद्रक्षादीक्षितायास्तु मङ्गलम् ॥ १० ॥

மதங்கஜாத்ரிதுங்காக்ரச்ருங்கச்ருங்காரவர்ஷ்மணே,
மஹாக்ருபாய் மத்ரக்ஷாதீக்ஷிதாயாஸ்து மங்களம். 10

ஸ்ரீ ஹஸ்திகிரியின் மிகவுயர்ந்த உச்சிக்கு அலங்காரமான திருமேனியையுடையவரும் என்போல்வாரைக் காத்தருள்வதில் தீக்ஷைகொண்டவருமான பேரருளாளப் பெருமாளுக்குப் பல்லாண்டு. *ச்ருங்காரோ கரிபூஷணம்* என்று மேதிநீ கோசம். யானையினுடைய பூஷணம்போலவே பூஷண ஸாமாந்யத்தையும் இச்சொல் சொல்லும். ஹஸ்திகிரியாதலால் கஜபூஷண மென்னும் பொருளையே இங்குக் கொள்ளவுமாம். வர்ஷ்ம—மேனி. ... .... ... (10)

श्रीकाञ्चीपूर्णमिश्रेण प्रीत्या सर्वाभिभाषिणे । अतीतार्चाव्यवस्थाय हस्त्यद्रीशाय मङ्गलम् ॥ ११ ॥

ஸ்ரீகாஞ்சீபூர்ணமிச்ரேண ப்ரீத்யா ஸர்வாபிபாஷிணே,
அதீதார்ச்சாவ்யவஸ்தாய ஹஸ்த்யத்ரீசாய மங்களம். 11

அர்ச்சாவதார ஸமாதியைக்கடந்து திருக்கச்சிநம்பிகளோடு பரமப்ரீதியுடன் வார்த்தையாடி யருளின தேவப்பெருமாளுக்குப் பல்லாண்டு. தேவப்பெருமாள் திருக்கச்சி நம்பிகள் மூலமாக உடையவர்க்கு ஆறு வார்த்தை யருளிச் செய்தது ப்ரஸித்தம். அவ்வளவு மாத்திரமேயன்று; நம்பிகளோடு அநவரதமும் வார்த்தையாடினதுண்டு என்கிறது ஸர்வாபிபாஷிணே என்பதனால். அதீத என்பது கர்த்தரிக்தமாகவுள்ளதுபோலவே கர்மணிக்தமாகவு முண்டாதலால் அதிலங்கிதமென்கிற பொருளிலே இங்கு ப்ரயுக்தம். அர்ச்சாவ்யவஸ்தையாவது—அர்ச்சாவதாரத்தில் யாரோடும் பேசுவதில்லையென்று கொண்ட நியமம். ... ... (11)

अस्तु श्रीस्तनकस्तूरीवासनावासितोरसे । श्रीहस्तिगिरिनाथाय देवराजाय मङ्गलम् ॥ १२ ॥

அஸ்து ஸ்ரீஸ்தநகஸ்தூரீ வாஸநாவாஸிதோரஸே,
ஸ்ரீஹஸ்திகிரிநாதாய தேவராஜாய மங்களம். 12

* கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பழியப் புகுந்து ஒருநாள் தங்குமேல் என்னாவி தங்குமென்றுரையீரே *என்று ஆண்டாளைப்போலவே பாரிக்கவேண்டாமல் பெரிய பிராட்டியார் அநவரதமும் திருமார்போடே அணைந்திருக்கையாலே அவளுடைய திருமுலைத் தடத்தில் சாத்தின கஸ்தூரிக்காப்பின் நறுமணம் கமழாநின்ற திருமார்பையுடையவரான ஸ்ரீ ஹஸ்திகிரி நாதர்க்குப் பல்லாண்டு. ... (12)

मङ्गलशासनपरैः मदाचार्यपुरोगमैः । सर्वैश्च पूर्वैराचार्यैः सत्कृतायास्तु मङ्गलम् ॥ १३ ॥

மங்களாசாஸநபரை: மதாசார்யபுரோகமை:,
ஸர்வைச் ச பூர்வைராசார்யை: ஸத்க்ருதாயாஸ்து மங்களம். 13

பல்லாண்டு பாடுவதையே தொழிலாகக்கொண்ட அஸ்மதாசார்யர் முதலான ஸகல பூர்வாசார்யர்களாலும் போற்றப்பெற்ற பெருமானுக்குப் பல்லாண்டு. முன்னோர்களுடைய முறைமையைப் பின்பற்றியே அடியேனும் இந்தஸ்துதியினல் பல்லாண்டு பாடினேனென்று அருளிச்செய்து தலைக்கட்டினாராயிற்று. ... (13)

மணவாள மாமுனிகளருளிச் செய்த
ஸ்ரீதேவராஜமங்களம் முற்றிற்று
ஜீயர் திருவடிகளே சரணம்.

---

மணவாளமாமுனிகளருளிச் செய்த

# காஞ்சீதிவ்யதேச ஸங்க்ரஹச்லோகமாலிகை.

---

## தேவப்பெருமாள் ஸந்நிதி விஷயமான முக்தக ச்லோகங்கள்

*மணவாளமா முனிகள் திவ்யதேச யாத்திரையடைவில் முதல்பர்யாயமாகப் பெருமாள் கோயிலுக் கெழுந்தருளினபோது அருளிச்செய்தவை.*

श्रीमद्द्वारवरं महर्द्धि बलिपीठाग्र्यं फणीन्द्रह्रदं गोपीनां रमणं वराहवपुषं श्रीभट्टनाथं मुनिम् ।
श्रीमन्तं शठवैरिणं कलिरिपुं श्रीभक्तिसारं मुनिं पूर्णं लक्ष्मणयोगिनं मुनिवरानाद्यानथ द्वारपौ ॥
श्रीमन्मज्जनमण्डपं सरसिजां हेतीशभोगीश्वरौ रामं नीलमणिं महानसवरं तार्क्ष्यं नृसिंहं श्रियम् ।
सेनान्यं करिभूधरं तदुपरि श्रीपुण्यकोट्यां हरिं तन्मध्ये वरदं रमासहचरं वन्दे तदीयैर्वृतम् ॥

ஸ்ரீமத் த்வாரவரம் மஹர்த்தி பலிபீடாக்ர்யம் பணீந்த்ரஹ்ரதம்
கோபீநாம் ரமணம் வராஹவபுஷம் ஸ்ரீ பட்டநாதம் முநிம்,
ஸ்ரீமந்தம் சடவைரிணம் கலிரிபும் ஸ்ரீ பக்திஸாரம் முநிம்
பூர்ணம் லக்ஷ்மணயோகிநம்முநிவராந் ஆத்யாந் அத த்வாரபௌ.
ஸ்ரீமந்மஜ்ஜநமண்டபம் ஸரஸிஜாம் ஹேதீசபோகீச்வரௌ
ராமம் நீலமணிம் மஹாநஸவரம் தார்க்ஷ்யம் ந்ருஸிம்ஹம் ச்ரியம்,
ஸேநாந்யம் கரிபூதரம் ததுபரி ஸ்ரீ புண்யகோட்யாம் ஹரிம்
தந்மத்யே வரதம் ரமாஸஹசரம் வந்தே ததீயைர் வ்ருதம்.

தேவப்பெருமாள் ஸந்நிதியினுட் புகுந்ததுமுதல் மங்களாசாஸநம் செய்யப்பட்ட ஸகலஸந்நிவேசங்களும் இந்தச்லோகத்தில் அருளிச்செய்யப்பட்டன. 1. கோயில் திருவாசல். 2. மஹாபலிபீடம். 3. திருவனந்த புஷ்கரிணி. 4. வேணுகோபாலன். 5. ஞானப்பிரான். 6. பட்டர்பிரான் (பெரியாழ்வார்). 7. நம்மாழ்வார். 8. கலியன். 9. திருமழிசைப்பிரான். 10. எம்பெருமானர். 11. முதலாழ்வார்கள். 12. த்வாரபாலகர்கள். 13. அபிஷேக மண்டபமென்று வழங்கப்படுகிற திருமஞ்சன மண்டபம். 14. பெருந்தேவித்தாயார். 15. திருவாழியாழ்வான். 16. திருவனந்தாழ்வான். 17. சக்கரவர்த்தி திருமகன். 18. கரிய மாணிக்கப்பெரு

மாள். 19. திருமடைப்பள்ளி. 20. பெரிய திருவடி. 21. அழகிய சிங்கர். 22. சூடிக் கொடுத்த நாச்சியார். 23. ஸேநாபதியாழ்வான். 24. திருவத்திமாமலை. 25. அத னுச்சியில் புண்யகோடி விமானத்தில் அடியார்கள் புடைசூழ் நின்று காட்சிதரும் பெருந்தேவி மணவாளனை பேரருளாளன். ஆக இவர்களை யெல்லாம் தொழுத படி சொல்லிற்றாயிற்று.

ஸ்ரீ காஞ்சீபுரியிலுள்ள அஷ்டாதச திவ்யதேசங்களென்று ப்ரஸித்தமான பதினெட்டு திவ்ய ஸ்தலங்களை மங்களாசாஸநம் செய்தருளின ச்லோகங்கள்.

देवाधीशनृसिंह पाण्डवमहादूतप्रवालप्रभान् श्रीवैकुण्ठपतिं त्रिविक्रमहरिं नीरेशमेघेश्वरौ ।
नीलव्योमविभुं महोरगहरिं ज्योत्स्नेन्दुवक्त्रं हरि चोरेशं कृतचिन्तभक्तहृदयावासं मुकुन्दाह्वयम् ॥
कामावासपतिं नृकेसरिवरं दीपप्रकाशप्रभुं श्रीयुक्ताष्टभुजास्पदेशमनघं श्रीमद्यथोक्तक्रियम् ।
इत्यष्टादशदिव्यमङ्गलवपुर्देवान् सरोयोगिना साकं निस्तुलकाञ्चयभिख्यनगरीनाथान् नमामस्सदा ॥

தேவாதீச ந்ருஸிம்ஹ பாண்டவமஹாதூத ப்ரவாலப்ரபாந்
ஸ்ரீவைகுண்டபதிம் த்ரிவிக்ரமஹரிம் நீரேச மேகேச்வரௌ,
நீலவ்யோமவிபும் மஹோரகஹரிம் ஜ்யோத்ஸ்நேந்துவக்த்ரம் ஹரிம்
சோரேசம் க்ருதசிந்தபக்தஹ்ருதயாவாஸம் முகுந்தாஹ்வயம்.
காமாவாஸபதிம் ந்ருகேஸரிவரம் தீபப்ரகாசப்ரபும்
ஸ்ரீயுக்தாஷ்டபுஜாஸ்பதேசமநகம் ஸ்ரீமத்யதோக்தக்ரியம்,
இத்யஷ்டாதச திவ்யமங்கலவபுர்தேவாந் ஸரோயோகிநா
ஸாகம் நிஸ்துலகாஞ்ச்யபிக்யநகரீநாதாந் நமாமஸ் ஸதா.

காஞ்சியில் ஆழ்வார் பாடல்பெறாத புராணஸ்தலங்களும் சிலவுண்டு; அவற் றையும் சேர்த்தே "கச்சியில் பதினெட்டு திவ்ய க்ஷேத்ரங்கள்" என்றொரு மூதுரை வழங்குகின்றது. அந்தப் பதினெட்டு ஸ்தலங்களும் இவ்விரண்டு ச்லோகங்களில் அநுஸந்திக்கப்பட்டிருக்கின்றன. முதலாழ்வார்களில் முதல்வரான பொய்கை யாழ்வார் அவதரித்ததும் காஞ்சியிலேயாதலால் அவ்வாழ்வாரோடு சேர்த்து மங்களாசாஸநம் செய்திருக்கிறபடி.

1. தேவப்பெருமான். 2. அழகிய சிங்கர். 3. பாண்டவதூதர். 4. பவழ வண்ணர். 5. வைகுண்டநாதன் (பரமேச்சுரவிண்ணகரம்). 6. உலகளந்த பெரு மாள். 7. நீரகத்தான். 8. காரகத்தான். 9. கார்வானத்துள்ளான். 10 ஊரகத் தான். 11. நிலாத்திங்கள் துண்டத்தான். 12. கள்வர். 13. உள்ளுவாருள்ளத் தான். முகுந்தப் பெருமாள். 15. வேளுக்கை ஆளழகிய சிங்கர். 16. விளக்கொளி யெம்பெருமான். 17. அட்டபுயகரத்தான். 18. சொன்ன வண்ணஞ் செய்த பெரு மாள் (திருவெஃகா) ஆகப் பதினெண் பெருமான்களையும் பொய்கை யாழ்வாரையும் எஞ்ஞான்றும் இறைஞ்சுகின்றோ மென்றதாயிற்று. ... ... *

## காஞ்சீ திவ்யதேச ஸ்ங்க்ரஹ ச்லோகமாலிகை

முற்றிற்று.

மணவாளமாமுனிகள் திருவடிகளே சரணம்.

---

வெண்பா.

"உண்மை யுரைப்பார்மேல் உள்ளம் சினங்கொள்வர்
உண்மை நெறிதன்னி லூக்கமிலார்.—திண்மையுடன்
உண்மை யுரைத்தே உலகிற் புகழ்பெற்றார்
அண்ணங்க ராசாரி யர்"

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்

**அண்ணங்கராசாரிய ஸ்வாமி**

தமது அறுபத்திரண்டு திருநக்ஷத்ர பூர்த்திக்கு ஸ்மாரகசின்னமாக எழுதியருளின

அறுபத்திரண்டு அமுதக்களஞ்சியம்

# 1. எம்பெருமானாறுபத்திரண்டு
# 2. சாரீரகமீமாம்ஸையறுபத்திரண்டு
# 3. பகவத்கீதையறுபத்திரண்டு

அறுபத்திரண்டு உபந்யாஸமாலை தனிப்புத்தகம்

அதன் விலை 1—8—0

இவை ஸ்ரீராமாநுஜன் & அம்ருதலஹரி வெளியீடு.

கிடைக்குமிடம் :

**க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.**

P. B. ANNANGARACHARYA,

Editor, Granthamala Kancheepuram.

விலை 1—4—0

1953

Wraper printed at Sri Venkateswara Press, L. Kancheepuram.

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம்

**அண்ணங்கராசாரிய ஸ்வாமி**

தமது அறுபத்திரண்டு திருநக்ஷத்ர பூர்த்திக்கு ஸ்மாரகசின்னமாக எழுதியருளின

அறுபத்திரண்டு அமுதக்களஞ்சியம்

# 1. எம்பெருமானாரறுபத்திரண்டு

# 2. சாரீரகமீமாம்ஸையறுபத்திரண்டு

# 3. பகவத்கீதையறுபத்திரண்டு

அறுபத்திரண்டு உபந்யாஸமாலை தனிப்புத்தகம்

அதன் விலை 1—8—0

இவை ஸ்ரீராமாநுஜன் & அம்ருதலஹரி வெளியீடு.

கிடைக்குமிடம் :

**க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.**


P. B. ANNANGARACHARYA,

Editor, Granthamala Kancheepuram.


விலை 1—4—0

1953


Wraper printed at Sri Venkateswara Press, L. Kancheepuram.

ஸ்ரீ:
ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.



# எம்பெருமானாரறுபத்திரண்டு

(ஸ்ரீ காஞ்சீ. ப்ர. அண்ணங்கராசாரியர்)

[எம்பெருமானார் விஷயமாக அறுபத்திரண்டு வார்த்தைகளை விஜ்ஞாபிக்கும் முகத்தால் அவருடைய பலவகைப்பெருமைகளை வெளியிட்டு மகிழ்வேன்.]

1. "ஆழ்வார்கள் தாங்கள் அவதரித்த நாள்களிலும் வாழ்வான நாள் நமக்கு மண்ணுலகீர்!—எழ்பாருமுய்ய வெதிராச ருதித்தருளும் சித்திரையில் செய்யதிருவாதிரை," என்ற மணவாளமாமுனிகளின் திவ்ய ஸ்ரீஸூக்தியை முந்துற அநுஸந்தித்து, சித்திரையில் திருவாதிரையைச் சிறிது சிந்தனை செய்வோம். இந்த நன்னாளின் சிறப்பை நம் மணவாள மாமுனிகள் தாமே ஒரு சீரிய செய்யுளினால் ஆர்த்திப் பிரபந்தத்தில் வெளியிட்டருளியுள்ளார். அதுதன்னில் ஸ்வாமியின் பெருமைகள் பெரும்பாலும் அடங்கியுள்ளன.

2. "சங்கரபாக்கரயாதவபாட்ட ப்ரபாகரர்தங்கள்மதம்
சாய்வுற வாதியர் மாய்குவரேன்று சதுமறைவாழ்ந்திடுநாள்
வெங்கலியிங்கினி வீறுநமக்கிலையேன்று மிகத்தளர் நாள்
மேதினி நஞ்சுமையாறுமெனத் துயர்விட்டு விளங்கிய நாள்
மங்கையராளி பராங்குசமுன்னவர்வாழ்வு முளைத்திடுநாள்
மன்னிய தென்னரங்காபுரி மாமலைமற்றுமுவந்திடுநாள்
செங்கயல்வாவிகள்சூழ் வயல்நாளுஞ்சிறந்த பெரும்பூதூர்ச்
சீமானிளையாழ்வார் வந்தருளியநாள் திருவாதிரை நாளே." என்பதேயது.

(இப்பாசுரத்தின் தாற்பரியத்தைச் சுருங்க வுரைப்போமிங்கு.)

3 எம்பெருமானார் திருவவதரிப்பதற்கு முன்னே பலபல மாய மதத்தவர்கள் இவ்வுலகில் மலிந்து வேதங்களுக்கு ஏலாத பொருள்களை ஏறிட்டுரைத்துத் தத்துவார்த்தங்களை க்ஷோபப்படுத்தியிருந்தார்கள்; அதனால் வேதங்களும் "நமது கதி இப்படியாயிற்றே!" என்று சாலவும் வருந்திக்கிடந்தன. எம்பெருமானார் திருவவதரித்தவன்றே அவற்றின் வருத்தம் தொலைந்து அவை வாழ்ச்சிபெறத் தொடங்கிவிட்டன. "நாரணனைக்காட்டிய வேதம் களிப்புற்றது" என்றார் அமுதனாரும். இதனால் ஸ்ரீமத்வேதமார்க்க ப்ரதிஷ்டாபனாசார்யத்வம் ஸ்வாமியொருவர்க்கே தகுமென்றதாயிற்று.

4. அன்றியும், இங்கிலவுலகில் கலிபுருஷன் நெடுநாளாகச் செங்கோல் செலுத்திக்கொண்டு தனது பராக்ரமமே ஓங்கி வளருமாறு அரசாட்சி புரிந்து வந்தான்; அன்னவனும்

எம்பெருமானார் திருவவதரித்தவன்றே "கலியுங் கெடுங் கண்டுகொண்மின்!" என்ற மூதுவர் மொழி பலிக்குங்காலம் வாய்த்ததுபோலுமென்று துணிந்து இனிநாம் மாள்வதன்றி வாழ்வதற்கில்லையென்று தளர்ச்சி யெய்தத் தொடங்கிவிட்டான். "இறந்தது வெங்கலி" என்றார் அமுதனாரும். "கலிகோலாஹலக்ரீடாமுதாக்ரஹபாஹரத்" என்றார் பட்டரும்.

5. அன்றியும், பூமிப்பிராட்டியானவள் 'ஸர்வம்ஸஹா' என்று பெயர்பெற்றிருந்தாலும், நல்லார்கள் பலபல கோடிக்கணக்காகத் தன்மீது வாழப்பெற்றாலும் அவர்களைப் பஞ்சுச்சுருள்போல் சிறிதும் ஆயாஸமின்றித் தாங்கி நின்று, தீயவர் ஒருவரிருவர் இருப்பினும் இரும்பு மூட்டை தாங்குவதனல்போல் மிகமெலிந்து நிற்பள். உடையவர் திருவவதாரத்திற்கு முன்னே நல்லவர்கள் மிக மெலிந்து தீயவர்களே மிக மலிந்திருக்கப்பெற்றதனால் பூமிப்பிராட்டி பொறுக்கொணாச் சுமையினால் மிகவும் துயருற்றுக் கிடந்தாள்; அன்னவள் எம்பெருமானார் திருவவதரித்தவன்றே, 'இனி இவ்வுலகில் தீயார் ஒருவருமின்றிக்கே அனைவரும் நல்லவராகவே வாழ்ச்சி பெறுவர்கள்' என்று சிக்கெனத்துணிந்து இனி நமக்குப் பொறுக்கவொண்ணாத பாரம் சிறிதுமிராதென்று தேறித் துயர்விடத் தொடங்கினள். "பல்கலையோர் தாம் மன்னவந்த இராமானுசன்" என்றார் அமுதனாரும்.

6. அன்றியும் பல ஆழ்வார்களும் ஆசாரியர்களும் திருவவதரித்த, அருமருந்தன்ன ஸ்ரீஸூக்திகளை உதவியருளியிருந்தாலும் அவற்றுக்கு ஸர்வதோமுகமான ப்ரசாரம் ஏற்படாமலும் அழகிய வியாக்கியானங்கள் அமையாமலுமிருந்ததனால் "நம்முடைய அரிய பெரிய காரியங்கள் உலகுக்குப்பெரிதும் பயன்படவில்லையே" என்று அவர்களெல்லாரும் களிப்பின்றியே குன்றியிருந்தனர்; எம்பெருமானார் திருவவதரித்தவன்றே "இனி ஸ்ரீபாஷ்ய பகவத் விஷயாதி க்ரந்தங்கள் ஓங்கி வளரப்பெறுமாதலால் நமக்கொரு குறையில்லை; நாம் செய்திருந்த காரியங்களெல்லாம் சதசாகமாகப் பணைக்குப்படியான பாக்கியம் வாய்க்கு நற்சமயம் வந்துவிட்டது" என்று துணிந்து அன்னவர்கள் அளவிலாத ஆனந்தமெய்தத் தொடங்கினர். "தென்குருகை வள்ளல் வாட்டமிலா வண்டமிழ்மறை வாழ்ந்தது" என்றார் அமுதனாரும்.

7. அன்றியும், எம்பெருமான் தான் பரமபதத்தில் பரவாஸுதேவனாக வீற்றிருந்து ஏழுலகும் தனிக்கோல் செலுத்தியிருக்குமிருப்பிலும், திருப்பாற்கடலில் அடியார்கள் கூக்குரல் செவிப்படுமாறு *வெள்ளை வெள்ளத்தின் மேலொருபாம்பை மெத்தையாக விரித்திருந்து அதைவிட்டுப் புறப்பட்டு ராவண கும்பகர்ண கம்ஸ சிசுபாலாதிகளைத் தொலைத்திட்டு உலகை வாழ்விக்க ராமகிருஷ்ணாதி விபவாவதாரங்கள் செய்தவற்றிலும், கருதரிய உயிர்க்குயிராய்க் கரந்தெங்கும் பரந்துறைபுமிருப்பிலும் சருப்தி பெறாதே, கோயில் திருமலை பெருமாள் கோயில் திருநாராயணபுரம் முதலான திருப்பதிகளிலே * பின்னானார் வணங்குஞ் சோதியாய் ஸந்நிதி பண்ணியிருந்து, அந்தத் திருப்பதிகளைத் திருத்திப் பணிகொள்வாரில்லாமையாலே அர்ச்சாவதாரமும் பயனற்றதாக ஆய்விட்டதே! என்று வருந்தவேண்டியிருந்தது எம்பெருமானார் திருவவதரிப்பதற்கு முன்னே. இப்பெரியார் இவ்வுலகினிற் போந்தவன்றே—"ஸர்வ தேச தசாகாலேஷு அவ்யாஹத பராக்ரமா, ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாமபிவர்த்ததாம். ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா ப்ரதிவாஸர முஜ்வலா, திகந்த வ்யாபிநீ பூயாத் ஸா ஹி லோகஹிதைஷிணீ" என்று நீடூழியூழி நாடெங்கும் போற்றும்படியாக ஸகல திவ்ய தேசங்களிலும் அற்புதமான சீர்திருத்தங்களும் கைங்கர்ய அபிவிருத்திகளும் இனி ஒளிமல்குமென்று துணிந்து அர்ச்சாவதார எம்பெருமான்கள் குறை தீர்ந்து மகிழத்தொடங்கினர். ஆக இங்ஙனம் வேதவேதாந்தங்கள் களிப்புறவும், கலிபுருஷன் தேய்வுறவும், மண்மாது மகிழ்

வுறவும், பூருவர்கள் யாவரும் பொலிவுறவும்,' எம்பெருமான் தானும் இன்புறவும் அமைந்த நன்னாள் சித்திரையில் செய்ய திருவாதிரை யொன்றேயாம்.

8. இத்திருநன்னாளிலே தோன்றிய பேராசிரியர் ஆதிசேஷனுடைய அவதாரமென்றும் மற்றும் பலவாறுகவும் பெரியோர் பணிப்பர். நூற்றந்தாதியில் "அடையார் கமலத் தலர்மகள் கேள்வன் கையாழி யென்னும் படையோடு நாந்தகமும் படர்தண்டும் ஒண் சார்ங்க வில்லும் புடையார் புரிசங்கமும் இந்தப் பூதலங் காப்பதற்சென் றிடையே இராமாநுசமுனியாயின விந்நிலத்தே." என்னும் பாசுரத்திலும், "ப்ரதயங் விபக்ஷே தீக்ஷ்ண பாவம் ப்ரபுரஸ்மத் பரிரக்ஷிண யதீந்த்ர:, அப்ருதக் ப்ரதிபந்ந யந்மயத்வைர் வவ்ருதே பஞ்சபிராயுதைர் முராரே:" என்ற யதிராஜ ஸப்ததி ஸூக்தியிலும் "எம்பெருமானார் பஞ்சாயுதாழ்வார்களின் அவதாரம் என்னும் விஷயம் காட்டப்பட்டுள்ளது. "விச்வம் த்ராதும் விஷய நியதம் வ்யஞ்ஜிதா நுக்ரஹஸ் ஸந் விஷ்வக்ஸேநோ யதிபதிரபூத் வேத்ரஸாரஸ் த்ரிதண்ட:" என்கிற யதிராஜ ஸப்ததி ஸூக்தி யொன்றில் விஷ்வக்ஸேநாவதாரமென்னும் விஷயம் கூறப்பட்டுள்ளது.

9. திருவனந்தாழ்வானுடைய திருவவதாரமென்னும் விஷயத்தைப் பற்பல ஆசிரியர்கள் பேசியுள்ளார்கள். அதனை சேஷாவதாரச் சிறப்புநூலில் விரியவுரைத்தோம். அங்கே கண்டுகொள்வது. எம்பெருமானாருடைய பூர்ண கடாக்ஷ பாத்ரபூதராய் அவர் திறத்துத் தேவு மற்றறியாதே ஈடுபட்டிருந்த மஹாப்ராஜ்ஞரான கருட வாஹன பண்டிதர் பணித்த திவ்ய ஸூரி சரிதமென்னும் மஹா காவ்யத்தில் பதினேழாவது ஸர்க்கத்தில் ஸ்ரீராமாநுஜ வைபவம் சொல்லப்புகுந்தவிடத்து "பௌஜங்கம் வபுரபஹாய சேஷபோகீ யத்ரூபம் த்ரிபுவநவந்திதம் ஜகாம" என்று பணித்திருப்பதும், உடையவருடைய அந்தரங்க சிஷ்யர்களில் ஒருவரான வடுகநம்பி பணித்த யதிராஜ வைபவ க்ரந்தத்தில் "வேதாந்த ஸித்தாந்த ஸமர்த்தநாய பாஹ்யாந்தரப்ராந்த பதாபநுத்த்யை, சேஷாம்சக: கேசவயஜ்வதேவ்யாம் தேஜோநிதி: கச்சிதிஹாவிராஸீத்" என்றுள்ளதும் முக்கியமாக இங்கு அநுஸந்தேயங்கள்.

10. இராமாநுச நூற்றந்தாதியில் "நல்லார் பரவுமிராமாநுசன்" என்ற எண்பதாம் பாசுரத்தின் வியாக்கியானத்தில்—"அநந்த: ப்ரதமம் ரூபம் லக்ஷ்மணஸ்து தத:பரம், பலபத்ரஸ் த்ருதீயஸ்து கலௌ ராமாநுஜஸ் ஸ்ம்ருத:" என்கிற ஆர்ஷவசனம் உதாஹ்ருதமாகக் காண்கிறது. இந்த ச்லோகத்தில் "கலௌ கச்சித் பவிஷ்யதி" என்கிற பாடமாகவும் கடையடி காண்கிறது. இப்பாடமே பொருத்தமானதென்பர்.

11. இப்பேராசிரியருடைய ப்ரபாவ விசேஷங்களைப் பார்க்குமிடத்து, நித்யமுக்தர்களனைவரும் திரண்டுவந்து திருவவதரித்தரடியோ! என்றும் சங்கிக்கலாயிருக்கும். அபரிச்சேத்ய ப்ரபாவங்கள் மிகுந்த இவ்வாசார்ய சிகாமணி தம்முடைய திருவடி ஸம்பந்தத்தினால் பிற்பட்ட ஆசாரியர்களுக்கும், தம்முடைய திருமுடி ஸம்பந்தத்தினால் முற்பட்ட ஆசார்யர்களுக்கும் உஜ்ஜீவனம் தந்தருளியதாக அக்காலத்திலிருந்த மஹான்கள் உபச்லோகித்துள்ளார்கள். இதைச்சிலர் அதிசயோக்தியென்று கொண்டாலும் அங்ஙனம் சிறப்பித்துக் கூறுவதற்கு ஏற்ற பெருமேன்மை இப்பெரியார் பக்கல் நிரம்பியிருந்ததென்று கொள்ளத் தட்டில்லையாயிற்று. [இதைப்பற்றி மேலே விவரிப்போம்.]

12. எம்பெருமானாருடைய திருமேனியின் தோற்றமே அநுபவ ரஸிகர்களுக்குத் தேனும் பாலுமமுதுமாக உள்ளுந்தோறு முள்ளம் தித்திக்கும். "காணிலுமுருப்பொலார்"

என்னும்படி யிராநின்ற யதிகளின்படியன்றியே எம்பெருமானாருடைய பரம விலக்ஷணமான திவ்யமங்கள விக்ரஹ ஸந்நிவேச அமைதியை "காஷாய சோபி கமநீயசிகாநிவேசம் தண்டத்ரயோஜ்ஜ்வலகரம் விமலோபவீதம், உத்யத்திநேசநிப முல்லஸதூர்த்வ புண்ட்ரம் ரூபம் தவாஸ்து யதிராஜ! த்ருசோர் மமாக்ரே" என்றும், "உபவீதிநமூர்த்வ புண்ட்ரவந்தம் த்ரிஜகத் புண்யபலம் த்ரிதண்ட ஹஸ்தம், சரணாகதஸார்த்தவாஹமீடே சிகயா சேகரிணம் பதிம் யதீநாம்" என்றும் பூருவர்கள் பரம போக்யமாகப் பேசி யநுபவித்துப்போந்தார்கள்.

13. இவ்வடிவழகுவிஷயமாக இன்சுவையே வடிவெடுத்ததென்னலாம்படி எம்பார் அருளியுள்ள பாசுரம், "பற்பமெனத்திகழ் பைங்கழலுன்றன் பல்லவமே விரலும், பாவனமாகிய பைந்துவராடை பதிந்தமருங்கழகும், முப்புரிநூலொடு முன்கையிலேந்திய முக்கோல் தன்னழகும், முன்னவர்தந்திடு மொழிகள் நிறைந்திடு முறுவல் நிலாவழகும், கற்பகமேவிழி கருணைபொழிந்திடு கமலக்கண்ணழகும், காரிசுதன்கழல் சூடியமுடியும் கனநற்சிகைமுடியும், எப்பொழுதும் எதிராசன் வடிவழ கென்னிதயத்துளதால் இல்லையெனக்கெதி ரில்லையெனக்கெதி ரில்லையெனக்கெதிரே." என்பதாம்.

14. இவ்வாசிரியர்க்கு ராமாநுஜத் திருநாமம் எதனால் இடப்பட்டதென்று ஆராயுமளவில், முன்னோர்களுடைய நூல்களிலிருந்து இங்ஙனே அறியலாகிறது;—ஸ்ரீராமாநுஜனென்னுஞ் சொல் ஸ்ரீராமபிரானுடைய தம்பி யென்னும் பொருள்கொண்டது. தசரதாத்மஜனான இராமபிரானுக்கு இளையோனாக அவதரித்த லக்ஷ்மணன் என்றபடி. இவன் இடைவிடின்றிக் கைங்கரியமே போதுபோக்காக இருந்தது போல ஸ்வாமி உடையவரும் கைங்கர்யத்தையே பெருஞ் செல்வமாகக் கொண்டிருக்கப் போகிறாரென்பதை அவதார ஸமயத்திலேயே யோகத்ருஷ்டியினாலறிந்தவரும் இவர் தமக்கு மாதுலருமான திருமலை நம்பியென்னுமாசிரியர் இவர்க்கு ஸ்ரீராமாநுஜனென்று நாமகரணஞ் செய்தருளினர்—என்பதாக.

15. ஸ்ரீராமபிரான் கைகேயியின் வரப்ரார்த்தனையை நிறைவேற்றும் வியாஜமாகக் கானகஞ் செல்லப் புறப்படும்போது இளையோனான இலக்குமணன் தானும் நிர்ப்பந்தித்துத் தன்னையும் உடனழைத்துச் செல்லும்படி வேண்டினன். தானும் காட்டுக்கு வர விரும்பியது எதற்காகவென்னில்; * பவாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா கிரி ஸாநுஷு ரம்ஸ்யதே, அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரதஸ் ஸ்வபதச் ச தே * என்பது அப்போது இவ்விளைய பெருமாளுடைய வார்த்தையாக ஸ்ரீராமாயணத்தில் உலகறிய நிற்கும் ச்லோகம். "தேவரீர் பிராட்டியோடுகூட சித்திரகூடத்தாழ்வரை முதலான விடங்களில் இன்புறும் போது அடியேன் ஒழிவில்காலமெல்லாமுடனாய்மன்னி வழுவிலாவடிமைகள் செய்யப்போகிறேன்" என்பது மேலே குறித்த ச்லோகத்தின் கருத்து இப்படியே அவ்விளையோன் தன்னுடைய வாழ்நாள் முழுவதையும் அடிமையெனும் அத்தாணிச் சேவகஞ் செய்தே கழித்தனன். அதுபோலவே ஸ்வாமி உடையவரும் தம் வாழ்நாள் முழுவதையும் தொண்டுபூண்டே கழித்தருளினரென்பது அவரது திவ்ய சரிதையினால் மிகப் பிரசித்திபெற்ற விஷயம். தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்திவைத்ததும் மாறனுரை செய்த தமிழ்மறை வளர்த்ததும் முதலானவை ஒப்புயர்வற்ற கைங்கரியங்களன்றோ. ஆக இக்காரணம் பற்றியே ஸ்வாமிக்கு ராமாநுஜனென்னுந் திருநாமமிடப்பட்டதென்பது மிகப் பொருத்தம். லக்ஷ்மண முனியென்றும் இளையாழ்வாரென்றும் வழங்குகின்ற அவரது திருநாமங்களும் இதனை வற்புறுத்தி நிற்கும்.

16. இனி, ராமாநுஜனென்ற திருநாமம் லக்ஷ்மணனுக்குப்போலவே கண்ணபிரானுக்கும் பொருந்தியதே. 'பலராமனுடைய தம்பி' என்னுங்காரணத்தினால் கண்ணபிரானை

ராமாநுஜனென்னக் குறையில்லையன்றோ. ஆனதுபற்றியே முகுந்தமாலையென்னும் உலக மறிந்த ஸ்தோத்ரத்தில் "ஹே ராமாநுஜ ஹே ஜகத்த்ரய குரோ! ஹே புண்டரீகாக்ஷ மாம் ஹே கோபீஜநநாத! பாலய" என்று ராமாநுஜனென்ற திருநாமத்தினாலே கண்ணபிரான் அழைக்கப் பட்டுள்ளான். ஆகவே கண்ணபிரானுடையதான அந்தத்திருநாமமே ஸ்வாமி உடைய வர்க்குச் சாத்தப்பட்டதென்று கொள்ளுகிற ஸம்பிரதாயமும் ஒன்றுண்டு. ஸ்ரீநிகமாந்த தேசிகன் பணித்த யதிராஜ ஸப்ததியில் "சமிதோதய சங்கராதிகர்வ: ஸ்வபலாத் உத்த்ருதயாதவ ப்ரகாச:, அவரோபிதவாந் ச்ருதேரபார்த்தாந் நநு ராமாவரஜஸ் ஸ ஏஷ பூய:" என்ற ச்லோகம் இதற்கு ஆதாரமாக அவதரித்ததாகும்.

17. கண்ணபிரானுக்கும் உடையவர்க்குப் பலபடிகளாலும் ஸாம்யமுண்டு. கண்ண பிரானாகத் தோன்றின பகவான் செய்த செயல்களும் ஸ்ரீராமாநுஜர் செய்தருளின செயல் களும் ஒத்திருக்கையாகிற ஒற்றுமைநயம் ஈண்டு நிரூபிக்கப்படுகிறது. மேலே யெடுத்துக் காட்டிய *சமிதோதய சங்கராதிகர்வ: இத்யாதியான யதிராஜஸப்ததிச்லோகரத்னத்தில் கண்ண னுக்கும் உடையவர்க்கும் ஸாம்யம் சிலேடையினால் நிர்வஹிக்கப்பட்டுளது: அது வட மொழிக்கடலில் ஆழ்ந்தவர்கட்கே ரஸிக்கக்கூடியது. அதைப்பற்றிப்பிறகு விரியவுரைப் போம்; இப்போது இங்கு நாம் நிரூபிக்கும் ஒற்றுமை சரித்திரப்போக்கில் ஸம்பந்தப்பட்ட தாகும். கேண்மின் ;—

(கண்ணனுக்கும் ஸ்ரீராமாநுஜர்க்கும் பதினாறு வகையான ஒற்றுமைகள்.)

18. கண்ணபிரான் திருவவதாரஞ் செய்த இடம் சிறைக் கூடம் என்பது உலக மறிந்தது. ஸ்ரீராமாநுஜர் அவதரித்த இடமும் சிறைக்கூடமே. எப்படியெனில்; *அமர ரோடு உயர்விற் சென்று அறுவர்தம் பிறவி யஞ்சிறையே* [திருவாய்மொழி 1—3—11] என்ற நம்மாழ்வார் திருவாக்கின்படி இந்த ஸம்ஸார மண்டலமே ஒரு சிறைக்கூடமன்றோ. இஃது * இருள்தருமா ஞாலமாதலால் இருள் மலிந்த விடத்தே வந்து பிறந்தார் உடையவர். கண்ணனும் * இருள் நாள் பிறந்த வம்மான் * என்ற திருமங்கையாழ்வார் பாசுரத்தின்படி யும் *வேண்டித்தேவரிரக்க—வீங்கிருள்வாய் வந்து பிறந்ததும்* என்ற நம்மாழ்வார் பாசுரத் தின்படியும் இருள்மலிந்த போழ்தன்றோ வந்து பிறந்தது.

19. கண்ணபிரான் அவதரித்தபோது * ஜாதோஸி தேவதேவேச சங்கசக்ரகதாதர !* என்கிறபடியே சங்கொடு சக்கரமேந்தும் தடக்கையனாகவே சுடர்விளக்கத்தோடு திருவவ தரித்தான். ஸ்வாமி அவதரிக்கும்போதும் நமபோலியரைப்போலே அழுதல் அரற்றுதல் செய்யாதே மிக்க ஞான வெள்ளச் சுடர் விளக்கத்தையே காட்டிக்கொண்டு அனைவரும் வியப்புறுமாறு அவதரித்தார். கண்ணபிரான் பிறந்த விடம் ஒன்று; இளமையில் வளர்ந்த விடம் வேறொன்று; பிறகு வளர்ந்தவிடம் மற்றொன்று. (அதாவது) வடமதுரையிலே பிறந்தது; திருவாய்ப்பாடியிலே இளமையில் வளர்ந்தது; பிறகு முதுமையில் த்வாரகை முதலான விடங்களில் வளர்ந்தது. ஆசாரியரும் பிறந்தது ஸ்ரீபெரும்பூதூரில்; இளமையில் வளர்ந்தது காஞ்சீபுரியில்; பிறகு வளர்ந்தது ஸ்ரீரங்கம், திருநாராயணபுரம் முதலான விடங் களில். [மற்றொரு வகையுமுண்டு;] "திருமந்திரத்திலே பிறந்து த்வயத்திலே வளர்ந்து" என்கிற நம்முன்னோர்களின் முதுமொழியின்படியே திருவஷ்டாக்ஷர மஹா மந்திரத்தினால் ஸ்வரூபவுணர்ச்சி பெறுதலாகிற பிறவியைப்பெற்று, த்வயம் என்கிற மந்த்ரரத்னத்தின் அநு ஸந்தானத்தையும் அதன்படி அனுஷ்டானத்தையுமே செல்வவாழ்ச்சியாகக் கொண்டிருப்பவ ரென்க. பிறக்குமிடம் திருமந்த்ரம்; வளருமிடம் த்வயம்—ஆகையாலே இதனால் கண்ண னோடு ஒப்புமை.

20. கண்ணபிரான் பிறந்த வயிற்றில் இவனொருவனே பிறக்கவில்லை; *மக்களறுவரைக் கல்லிடை மோத இழந்தவள் தன் வயிற்றில், சிக்கென வந்து பிறந்து நின்றாய் * [பெரியாழ்வார் திருமொழி 5-3-1.] என்கிறபடியே மற்றும் பல மக்கள் பிறந்தாருண்டு; ஆனால் அந்தப் பிள்ளைகளினால் உலகுக்கு யாதொரு உதவியும் நேர்த்ததில்லை; அவர்கள் பிறந்ததும் இறந்ததுமே தெரியவருகின்றது. இதுபோல, எம்பெருமானார் திருவவதரித்த இவ்வுலகத்தில் மற்றும் பலபேர்களும் ஒக்கப்பிறக்கின்றார்களெனினும் அவர்களால் உலகுக்கொரு நன்மையுமில்லையாயிற்று. அவர்களின் பிறப்பும் இறப்புமேதான் உலகுக்குத்தெரியும்.

21. கண்ணபிரான் வடமதுரையில் நின்றும் திருவாய்ப்பாடிக்கு எழுந்தருளும்போது "வசுதேவோ வஹந் க்ருஷ்ணம் ஜாநுமாத்ரோதகோ யயௌ" என்னும்படி பேராழமான பெருவெள்ளமும் முழந்தாளளவாக வற்றிப்போயிற்றென்று தெரியவருகிறது. அதுபோல, ஆசாரியர் சிறிது ஸஞ்சரிக்கத் தொடங்கும்போதே "பிறவியென்னுங் கடலும் வற்றிப் பெரும்பதமாகின்றதால்" என்ற பெரியாழ்வார் திருவாக்கின்படியே ஸம்ஸாரமாகிற பெருங் கடலும் வற்றத் தொடங்கிற்றென்க.

22. பராத்பரனான பெருமான் தனது பெருமைகளை யெல்லாம் மறைத்து அடக்கிக் கொண்டு நீறு பூத்த நெருப்புப்போலேயாகி இடக்கை வலக்கை யறியாத ஆயர்களோடே கலந்து பழகினான்; அதுபோல எம்பெருமானாரும் மிகுஞானச் சிறுகுழவியாய்த் தமது ஞான சக்திப்பெருமைகளையெல்லாம் மறைத்துக்கொண்டு அறிவிலா மனிசரோடே கலந்து பழகியிருந்தனர். கண்ணன் இடையர்களோடு மாத்திரம் கலந்து பழகியிருந்தானல்லன்; தன்னை வதைக்க வழிபார்த்திருந்த ஆஸுரப்ரக்ருதிகளோடும் கலந்திருந்து காலங் கழித்தனன். எம்பெருமானாரும் தம்மை மாய்க்கவெண்ணின யாதவப்ரகாசர்போல்வாரிடத்திலும் கலந்திருந்து காலங்கழித்ததுண்டே.

23. வளர்ந்தருளுமிடத்தில் தீயபுந்திக் கஞ்சனால் ஏவப்பட்ட பூதனை தாய்வேஷம் பூண்டுவந்து நஞ்சு தீற்றிய முலையை உண்ணக் கொடுத்துக் கண்ணனைக் கொல்ல முயன்று தானே முடிந்துபோனாள். இந்தப் பூதனையின் வரலாற்றைப் பேசுகின்ற தேசிகர் யாதவாப்யுதயத்தில் * கம்ஸப்ரயுக்தா கில காபி மாயா * என்று மாயை என்கிற சொல்லால் கூறினர். மாயை யென்று மூலப்ரக்ருதிக்குப்பெயர். அது உண்மையில் விஷப் போன்றதாயிருக்கச் செய்தேயும் தன்னிடத்தில் போக்யதா புத்தியை யுண்டுபண்ணிக்கொண்டு தன் பக்கலிலே யீடுபடுத்தி நம்போலவாரை முடிக்கப்பார்க்கிறது. இப்படியே ஆசாரியரையும் முடிக்கப் பார்க்கையில் அவரை முடிக்கமாட்டாமல் அவரது அளவற்ற பெருமையினால் தானே முடிந்து நின்றது.

24. * கள்ளச் சகடங் கலக்கழியக் காலோச்சி * [திருப்பாவை—6] என்றபடி அஸுராவேசம் பெற்றவொரு சகடத்தைக் கண்ணன் திருவடிஸ்பர்சத்தால் நொறுக்கி முறித்து முடித்தனன் என்பது ப்ரஸித்தம். எம்பெருமானாரும் தமது திருவடி ஸ்பர்சத்தினால் சகடபங்கஞ் செய்தவரே. (எப்படியெனில்) ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குக் கொண்டுபோகும் ஸாதனம் சகடமெனப்படுவது. இங்கிருந்து நாம் அப்பால் செல்லப் பல வழிகளுண்டு; நரகம் சுவர்க்கம் முதலானவற்றின் வழிகளிற் கொண்டு செல்லுவது கள்ளச் சகடமாகும்; ஆசாரியருடைய திருவடி ஸம்பந்தத்தினால் அது தொலைந்தொழிந்ததேயாம். அர்ச்சிராதி மார்க்கமாகிய நல்வழியிற் செல்லும் ஸாதனமே மேம்பட்டுத் தீயவழிகளில் செல்லும் ஸாதனம் சிதைந் தொழிந்ததென்க.

25. கயிற்றினல் கட்டி ஒருரலிலே பிணித்துவிடப்பெற்ற கண்ணன் அவ்வுரலையு மிழுத்துக்கொண்டு தவழ்ந்து இரட்டை மருதமரங்களின் நடுவே யெழுந்தருளியபொழுது அவ்வுரல் குறுக்காய் நின்று இழுக்கப்பட்டபடியினலே அந்த இரட்டை மரங்களிரண்டும் முறிந்து விழுந்தனவாக யமளார்ஜுன பங்க விருத்தாந்தமுள்ளது. இணைபிரியாதே நின்ற இரட்டை மருத மரங்கள்போல இணைபிரியாது நின்று நம்மை நலியுமவை பலவுண்டு; பகவத் கீதையில் நான்காவது அத்யாயத்தில் * த்வந்த்வாதீதோ விமத்ஸர: * என்றும், ஏழாவது அத்யாயத்தில் * த்வந்த்வமோஹேந பாரத * என்றும், பதினைந்தாமத்யாயத்தில் * த்வந்த்வைர் விமுக்தாஸ் ஸுக துக்கஸம்ஜ்ஞை: * என்றும் இப்படிப் பலவிடங்களில் த்வந்துவம் (இரட்டை) என்று பல சொல்லப்பட்டுள்ளன; இன்பு துன்பு. அஹங்கார மமகாரம், காம க்ரோதம், புண்ணிய பாபம்...என்னுமிவையெல்லாம் இரட்டைகளாம். இவையெல்லாம் எம்பெருமானுர் திருவடி ஸம்பந்தம் பெற்றவளவிலே இற்றொழிந்தனவென்க.

26. * வையமேழுங் கண்டாள் பிள்ளைவாயுளே * என்றும் * வாயுள் வையகங் கண்ட மட நல்லார் * என்றும் சொல்லுகிறபடியே கண்ணபிரான் தனது திருவாயில் ஏழுலகங்களையும் அன்பர்களுக்குக் காட்டினன். அதுபோல எம்பெருமானுரும் 1. ச்ருதிகள் 2. ஸ்மிருதிகள், 3. இதிஹாஸங்கள், 4. புராணங்கள், 5. பாஞ்சராத்ரங்கள், 6. ஆழ்வாருளிச்செயல்கள், 7. ஆசார்ய திவ்யஸூக்திகள் ஆகிய ஏழையும் தமது திருவாக்கில் அன்பர்கட்குக் காட்டினர்

27. யமுனையாற்றில் ஓர் மடுவில் இருந்துகொண்டு அம்மடு முழுவதையும் தன் விஷாக்னியினுல் கொதிப்படைந்த நீருள்ளதாக்கிப் பெருங்கேடு விளைத்த காளியனென்னுங் கொடிய நாகத்தைக் கண்ணபிரான் கொழுப்படக்கினன். இவ்வரலாற்றை யாதவாப்யுதய காவியத்தில் தேசிகர் கூறுமிடத்து (4-125) ஸ்ரீராமாநுஜர் செய்தருளின செயலையே உவமையாகக் காட்டியருளினர். ஐந்தலைவாய் நாகமாகிய காளியன் யமுனையாற்றைக் கலக்கிக் கெடுத்தது—விஷவாக்குக்களான புறமதத்தவர்கள் மனம்போனபடியெல்லாம் கூறும் தவருன பொருள்களாலே வேதங்களைக் கெடுத்தபடியாம். அந்தக் கெடுதியைக் கண்ணபிரான் நீக்கி யமுனையை எல்லாரும் இனிமையாகப் பருகும்படி செய்தது—ஸ்வாமி தவருன பொருள்களை நீக்கி நல்ல பொருள்களை வெளியிட்டு வேதத்தை ஸத்துக்களுக்கு உபஜீவ்யமாக ஆக்கின படியாம். யமுனையின் ஸ்தானத்தில் வேதம்; காளியன் ஸ்தானத்தில் குதர்க்கவாதிகள்; கண்ணன் ஸ்தானத்தில் ஆசாரியர். தூயபெரு நீர் யமுனைத் துறைவனை * என்னும்படி யமுனையாறு இடையருத பகவத் ஸம்பந்தத்தை யுடையதாயிருந்தது போல வேதமும் பகவத் ஸம்பந்தத்தை நியதமாக வுடைத்தாயிருக்குமிறே.

28. காளியன் ஐந்து தலைகளாலும் நஞ்சை யுமிழ்ந்து நாசம் விளைவித்ததுபோல புறமதத்தவர்கள், ஐந்துவிதமான துர்வாதங்களாலே நாசத்தை விளைவிக்கின்றனர்; (எப்படியென்னில்) 1. ஈச்வரனே யில்லையென்னுதல், 2. ஈச்வரன் உண்டெனினும் அவன் அனுமானத்தால் ஸித்திப்பவனேயன்றி சாஸ்த்ரத்தால் ஸித்திப்பவனல்லன் என்னுதல்; 3. சாஸ்த்ரங்களைக்கொண்டே ஈச்வரனை யங்கீகரித்தும் அவனுக்குக் குணங்களும் விக்ரஹமும் இல்லையென்னுதல்; 4. ஈச்வரன் ஒருவனே யென்பதில்லை, பல ஈச்வரர்கள் உண்டென்னுதல், 5. பிரபஞ்சமேயில்லை—ஸர்வம் சூன்யம் என்னுதல் ஆக இப்படிப்பட்ட ஐவகையான அபார்த்தங்களினுல் புறமதத்தவர்கள் வேதங்களைக்கெடுக்க, அந்தக் கெடுதல்களை எம்பெருமானுர் போக்கியருளினர், காளியன் தலையிலே கண்ணபிரான் அடியிட்டு நடனம் புரிந்தாப்போலே

* நாவலிட்டுழிதருகின்றோம் நமன் தமர் தலைகள்மீதே * (திருமாலை—1) என்ற கணக்கிலே கூத்தாடப்பெறுதலுங்காண்க.

29. குதிரை வடிவங்கொண்டு மஹாபயங்கரனாகவந்த கேசி யென்னு மஸுரனைக் கண்ணபிரான் தொலைத்தருளினன்; அதுபோல நம்பேராசிரியர் *இந்த்ரியாணி ஹயாநாஹு:* என்ற உபநிஷத்தின்படியே குதிரைகளாகச் சொல்லப்பட்ட இந்திரியங்களின் வலியை யடக்கி ஜிதேந்த்ரியராய் * காமாதிதோஷஹர மாத்மபதாச்ரிதாநாம் * என்றும் *மதநகதநைர் ந க்லிச்யந்தே யதீச்வரஸம்ச்ரயா:* என்றும் சொல்லும்படி வாழ்ந்தவர்.

30. கம்ஸனல் ஏவப்பட்ட அசுரர்களில் ஓரசுரன் விளாமரத்தின் வடிவமாய், தன் கீழே கண்ணன் வரும்போது மேல்விழுந்து கொல்வதாக எண்ணிவந்து நிற்கவும், மற்றோ ரசுரன் கண்ணனை முட்டிக்கொல்லும்பொருட்டுக் கன்றின் வடிவங்கொண்டு நிற்கவும் இவற்றையறிந்த கண்ணபிரான் "விளவின்காய் கன்றினல் வீழ்த்தவனே". "கன்றுகொண்டு விளங்கனியெறிந்து" என்கிறபடியே கன்றைச்சுழற்றி விளவின்மீதெறிந்து இரண்டையும் ஒருசேரமுடித்தருளினன் என்ற வரலாறு முள்ளைக்கொண்டே முள்ளைக் களைகின்றபடி யைக் காட்டுகின்றது. இதுபோலவே ஸ்வாமி ஸ்ரீ பாஷ்யகாரர் புறமதங்களை கண்டிக்கு மிடத்து அவை பரஸ்பரவ்யாஹதங்களாயிருக்கும்படியை நன்கு நிரூபித்துக்காட்டி அவை களைக்கொண்டே அவற்றை மறுத்தொழிப்பவர்.

31. இடையர்கள் வழக்கப்படி இந்திரனுக்கு பூஜைசெய்யப் பற்பல வண்டிகளால் சோறும், தயிரும், நெய்யும், காய்கறிகளும் சேகரிப்பதைக்கண்டு கண்ணன் அப்பூசனையனைத் தையும் கோவர்த்தனமலைக்கே இடும்படி கட்டளையிட்டுத் தானே ஒரு தேவதா ரூபங் கொண்டு அவற்றை முற்றும் அமுதுசெய்தருள. இந்திரன் பசிக்கோபத்தினல் மேகங்களை ஏவிக் கடுரமான கல்மழையை ஏழுநாள் பெய்விக்க, அதனல் யார்க்கும் யாதொரு தீங்கும் நேரிடாதபடி கண்ணன் அம்மலையையே குடையாக வெடுத்துப்பிடித்து நின்றனன் என்பது ப்ரஸித்தமான கதை: தேவதாந்தரத்திற்கு வழிபாடு செய்வதைப் பொறாத தன்மையும் அந்தவழிபாடுகளையெல்லாம் தானே ஏற்றுக்கொள்ளும் தன்மையும், அதனல் எதிரி என்ன தீங்கு செய்ய நினைத்தாலும் அதற்குப் பிரதியாகத் தீங்கிழைக்க நினையாத பெருந்தகவும், தன்னையடுத்தவர்களைத் தான் ரக்ஷித்துக்கொண்டு நிற்றலுமாகிய விஷயங்கள் இவ்விதிஹாஸத் தில் கிடைக்கின்றன. *மறந்தும் புறந்தொழாமாந்தர்* என்றிருக்குமாசிரியர் தேவதாந்தர பஜனத்தைச் சிறிதும் ஸஹியார். "திருவில்லாத் தேவரைத் தேறேல்மின் தேவு" என்று துணிந்து உபதேசிப்பர். *ஸாக்ஷாத் நாராயணோ தேவ: க்ருத்வா மர்த்யமயீம் தநும், மக்நாநுத் தாதே லோகாந் காருண்யாத் சாஸ்த்ரபாணிநா* என்றும் *பீதகவாடைப்பிரான் பிரமகுருவாகி வந்து* என்றுஞ் சொல்லுகிறபடியே எம்பெருமானே ஆசார்யனுக வந்து பிறந்ததனல் ஆராதனைகளெல்லாம் ஆசார்யனுக்கே சேரும். "குற்றஞ்செய்தவர்கள் பக்கல் பொறையும் க்ருபையும் சிரிப்பும் உகப்பும் உபகாரஸ்ம்ருதியும் நடக்கவேணும்" [ஸ்ரீவசனபூஷணம் 305] என்றிருப்பவர் ஆசார்யராகையாலே தீங்கிழைப்பார் திறத்திலும் ப்ரதியாகத் தீங்கிழைக்க நினையார். பெருமழையில் நின்றும் கண்ணன் காத்தருளினதுபோல *அவிவேக கநாந்த திங்முகே பஹுதா ஸந்ததது:க்கவர்ஷிணி பவதுர்த்திநே* [ஸ்தோத்ரரத்னம் 49] என்னப்பட்ட பெருமழையில் நின்றும் (அதாவது, ஸம்ஸாரத் துயர்ப் பெருமழையினின்றும்) காத்தருளி னர். கண்ணன் ஏழுநாள் காத்தனன். ஆசிரியர் காப்பதும் ஏழேழ் பிறவிக்கும்.

32. கண்ணன் நப்பின்னைப் பிராட்டியை மணஞ்செய்துகொள்ளுதற்காக, அவளது தந்தை கந்யாசுல்கமாகக் குறித்தபடி அஸுராவேசம்பெற்ற எழு எருதுகளை வலியடக்கி அப்பிராட்டியை மணஞ்செய்துகொண்டனன். நம் பரமாசார்யர் "எட்டிழையாய் மூன்று சரடாயிருப்பதொரு மங்கள ஸூத்ரம்போலே திருமந்த்ரம்" [முமுக்ஷுப்படி 113] என்கிறபடியே திருமந்த்ரமாகிற திருமங்கலியத்தை சேதநர்களுக்குக் கட்டி விவாஹம் நடத்துகைக்கு அங்கமாக, காமம். குரோதம், லோபம், மோஹம் மதம் மாத்ஸர்யம் அஸூயை என்கிற எழு விரோதிகளையும் தொலைத்தருளினர்.

33. கண்ணன் இரண்டு மல்லர்களை மடித்ததுபோல ஆசிரியர் * நீர் நுமதென்றிவை வேர்முதல் மாய்த்து* என்கிறபடியே அஹங்கார மமகாரங்களை அடியறுத்தவர். கண்ணன் குவலயா பீடமென்கிற மதயானையை முடித்தாப்போலே "மதக்களிறைந்தினையும் சேரி திரியாமல் செந்நிறீஇ" என்கிற பொய்கையார் பாசுரத்தின்படியே மதகளிறுகிய இந்திரியத்தின் துஷ்டத்தன்மையைத் தொலைத்தவர். கண்ணன் மாலாகாரர் திருமாளிகைக் கெழுந்தருளி அவர் தந்த பூவைப்பெற்று உகந்ததுபோல நம் ஆசிரியர் *அஹிம்ஸா ப்ரதமம் புஷ்பம் புஷ்பமிந்த்ரிய நிக்ரஹ:,ஸர்வபூததயா புஷ்பம் க்ஷமா புஷ்பம் விசேஷத:. ஜ்ஞாநம் புஷ்பம் தப: புஷ்பம் த்யாநம் புஷ்பம் ததைவச, ஸத்யமஷ்டவிதம் புஷ்பம் விஷ்ணோ: ப்ரீதிகரம் பவேத் * என்னப் பட்ட எண்பகர் பூவையும் சிஷ்யர்கள் பக்கலிலே செழித்து வளரக்காணப்பெற்றுக் களித்தவர்.

34. கண்ணபிரான் கம்ஸ சிசுபால கௌரவ ப்ரப்ருதிகளை முடித்துப் பஞ்ச பாண்டவாதிகளை வாழ்வித்ததுபோல நம் பரமாசார்யர் * தற்கச் சமணரும் சாக்கியப்பேய்களும் தாழ்சடையோன் சொற்கற்ற சோம்பரும் சூனியவாதரும் நான்மறையும் நிற்கக் குறும்பு செய்நீசரும் மாண்டனரென்னும்படியாக *நாட்டிய நீசச் சமயங்களை மாள்வித்து அர்த்த பஞ்சகம் முதலிய விசேஷார்த்தங்களை எங்கும் விளங்கச் செய்தனர். இங்ஙனே மற்றும் பலவும் காண்க.

35. மணவாளமாமுனிகள் யதிராஜவிம்சதியில் இரண்டாவது ச்லோகத்தில் எம்பெருமானாரை ஹம்ஸமாகவும் வண்டாகவும் அருளிச்செய்துள்ளார்: *ஸ்ரீரங்கராஜ சரணாம்புஜராஜஹம்ஸம் என்றும் *ஸ்ரீமத்பராங்குசபதாம்புஜப்ருங்கராஜம் என்றும் (அதாவது) ஸ்ரீரங்கநாதனுடைய திருவடித்தாமரைகளிலே ராஜஹம்ஸமாயிருப்பவர்; நம்மாழ்வாருடைய திருவடித்தாமரைகளிலே சிறந்த வண்டாக இருப்பவர் என்று கூறியவாறு. எம்பெருமானார் * தென்னத்தியூர் கழலிணைக்கீழ்ப் பூண்டவன்பாளன் * [இராமாநுச நூற்றந்தாதி—31] என்கிறபடியே தேவப் பெருமாள் திருவடிவாரத்திலே பேரன்பு பூண்டவராயிருந்தப் ஸ்ரீரங்கநாதனால் விசேஷ கடாக்ஷம் செய்தருளப்பெற்றுத் தென் திருவரங்கம் சென்று சேர்ந்து *யாவச்சரீரபாதம் அத்ரைவ ஸ்ரீரங்கே ஸுகமாஸ்வ* இவ்வுடல் விழுந்தனையும் இந்தத் திருவரங்கம் பெரிய கோயிலிலேயே இனிது வாழக்கடவீர்—சரணாகதி கத்யம்-19.] என்று திருவரங்கச் செல்வனால் அநுக்ரஹிக்கப்பட்டு அப்பெருமானுடைய திருவடிவாரத்தின் கீழேயே இனிது வாழ்ந்தபடியினால் ஸ்ரீரங்கராஜ சரணாம்புஜ ராஜஹம்ஸம் என்றருளிச் செய்யலாயிற்று. இனி ஸ்ரீமத் பராங்குச பதாம்புஜப்ருங்கராஜம் என்ற விசேஷணத்தினால்—ஸ்வாமி நம்மாழ்வாரது திருவடித்தாமரைகளிலே வண்டுபோல் படிந்திருப்பவரென்றது.

36. ஆகவிப்படி ஸ்வாமியை ஹம்ஸமாகவும் வண்டாகவும் கூறினதிலிருந்து தேறுகின்ற ஸ்வாமியினது சில பெருமைகளை ஸ்வாபதேசார்த்தாநுபவப்ரணாளியாலே வெளியிடுகிறோமிங்கு. ஆழ்வார்கள் தமது திவ்யப்ரபந்தங்களிலே அன்னங்களையும் வண்டுகளையும் தூது விடுவதாக அருளிச்செய்வதுண்டே; அங்கு எம்பெருமானார் போல்வாரான மஹாசார்யர்களையே தூது விடுவதாக உள்ளுறை பொருளாகையாலே அதைத் திருவுள்ளம்பற்றி ஸ்வாமியையிங்கு அன்னமாகவும் வண்டாகவுமருளிச் செய்வது மிகப்பொருத்தம். அன்னத்தின் படிகளும் வண்டின் படிகளும் ஸ்வாமி பக்கலிலே நிரூபிக்கப்படுகிறபடியைக் காணீர் ;—

37. ஹம்ஸத்திற்குள்ள தன்மைகள் ஸ்வாமி பக்கலிலே குறையற்றிருக்கின்றன. எங்ஙனே யென்னில் ; (1) நீரையும் பாலையும் கலந்துவைத்தால் அவற்றைப் பிரிக்கவல்லமையுடையது ஹம்ஸம் என்று ப்ரமாணங்களினாலறிகின்றோம் ; *ஹம்ஸோ யதா க்ஷீரமிவ அம்புமிச்ரம்* என்பது முதலான வசநங்கள் காண்க. இதனால் ஹம்ஸமானது ஸாராஸாரவிவேகத்தில் மிகுந்த வல்லமையுடையது என்பது தேறும். ஸ்வாமி தாமும் * அஸாரமல்பஸாரஞ்ச ஸாரம் ஸாரதரம் த்யஜேத், பஜேத் ஸாரதமம் சாஸ்த்ரே * என்றபடி ஸாராஸாரமிச்ரமாயிருந்த சாஸ்திரங்களிலே அஸாரமாயும் அல்பஸாரமாயுமுள்ளவற்றை யெடுத்துத்தள்ளி மிகவும் ஸாரமானவற்றையே கைக்கொண்டவர். பாஹ்யமதங்களையும் குத்ருஷ்டி மதங்களையும் நிரஸித்து ஸ்ரீமத்வேதமார்க்கப்ரதிஷ்டாபநாசார்ய உபயவேதாந்தப்ரவர்த்தந ப்ரவீணராயெழுந்தருளியிருந்து ரஹஸ்யார்த்தங்களில் பஹிரங்கமான அர்த்தங்களைத் தள்ளி அந்தரங்கமான அர்த்தங்களைக் கொண்டருளினர் என்பது இங்கு விவக்ஷிதம்.

38. அப்படிப்பட்ட அர்த்தங்களில் ஒன்று இங்கு எடுத்துக்காட்டுவோம் ;-திருவாய்மொழி வியாக்கியானத்தில் பல விடங்களில் எம்பெருமானாருடைய நிர்வாஹமென்று விலக்ஷணமான அர்த்தங்கள் எடுத்துக்காட்டப்படுகின்றன. அவற்றுள் ஒன்று கேண்மின்; *உயர்வறவுயர்நலம்* என்கிற முதற்பாட்டினீற்றடியில் துயரறுசுடரடி என்றுள்ளவிடத்திற்கு " அடியார்களுடைய துக்கங்களையெல்லாம் அறுக்கிற [அதாவது போக்கடிக்கிற] திருவடி " என்று எம்பெருமானார்க்கு முன்புள்ள ஆசாரியர்கள் அருளிச் செய்தார்களாகவும், எம்பெருமானார் அப்படியன்றிக்கே [அதாவது, துயரறுக்குஞ் சுடரடி யென்று கொள்ளாமல்] ' துயரறும் சுடரடி ' என்றுகொண்டு தனக்குண்டான துயரைத் தான் தவிர்த்துக்கொள்ளுந் திருவடியென்று பொருளருளிச் செய்ததாகவும் வியாக்கியானமுள்ளது. பூருவர்கள் பணித்த அர்த்தத்திற்காட்டிலும் ஸ்வாமிபணித்த அர்த்தத்தில் என்ன சிறப்பு? என்பதை ஆராய்ந்து அறியவேணும். எம்பெருமான் அடியார்கள் படுந்துயரைத் தீர்க்கிறானென்பது இதிஹாஸ புராணாதிகளில் தேறின அர்த்தமே ; அது மறுக்கத்தக்கதன்று. எம்பெருமானார் அதைத் தள்ளி வேறு பொருள் பணித்ததானது அப்பொருள் அஸம்பத்தம் என்கிற திருவுள்ளத்தினாலன்று; அதிற்காட்டிலும் மிகுந்த ஸ்வாரஸ்யம்பெற்று நெஞ்சைப் புருக்கும்படியான அர்த்தம் இது என்பதே ஸ்வாமியின் திருவுள்ளம். அடியவர்கள் துயருறுங்காலத்தில் எம்பெருமான் தானும் துயருற்றிருப்பதாக இதிஹாஸங்களினாலறிகின்றோம். துயருறுவது என்பது ஹேயகுணமாயிற்றே ; ஸமஸ்த கல்யாண குணாத்மகனான எம்பெருமானிடத்தில் இந்த ஹேயகுணமிருப்பதாக இசையலாமோ வென்று சங்கிப்பாருடைய சங்கையைப் போக்கிக்கொண்டே வால்மீகி பகவான் ஸ்ரீராமாயணத்தில் அயோத்யாகாண்டத்தில் நகரத்து ஜனங்கள் இராமனுடைய திருக்குணங்களைப்புகழ்ந்து கூறுவதாக இட்ட ஸர்க்கத்தில் * பஹவோ ந்ருப கல்யாண குணா: புத்ரஸ்ய ஸந்தி தே * என்று திருக்கல்யாண குணங்களையே தாங்கள் தசரத சக்ரவர்த்தியிடம் எடுத்துக் கூறப்போவதாக ப்ரதிஜ்ஞை செய்வதை முன்னம் காட்டிவிட்டு,

மேலே "வ்யஸநேஷு மநுஷ்யாணும் ப்ருசம்பவதிது:க்கித:*என்று [மனிதர்கள் துயருறுமிடத்து இராமபிரான்தான் மிகமிகத் துயருறுவதாகச்] சொல்லி இதையொரு கல்யாண குணமாக நாட்டிவைத்தார். அடியார்கள் படுந்துயரை அறுக்கின்றுன் பகவான் என்பது இருக்கட்டும்: அவ்வடியார்கள் துயர் தீரும்வரையில் தானும் துயருற்றவனுகவேயிருந்து அவர்கள் துயரற்றபிறகே தானும் துயரற்றவனுகுகை என்னுமிப்பொருள் பகவத்குணுநுபவரஸிகர்களுடைய நெஞ்சையுருக்குமாதலால் இச்சிறந்த பொருளை எம்பெருமானுர் திருவுள்ளம்பற்றினரென்க. இத்திருக்குணத்தை வால்மீகிபகவான் ஸ்ரீராமாயணத்தில் ஓரிடத்திலன்று, பலவிடங்களிலும் மூதலிக்கிறபடி காணீர்: *அபிஷிச்ய ச லங்காயாம் ராக்ஷஸேந்த்ரம்விபீஷணம், க்ருதக்ருத்யஸ் ததா ராமோ விஜ்வர: ப்ரமுமோத ஹ * (ஸம்க்ஷேபரா-85.) என்ற ச்லோகத்தில் விஜ்வர: என்கிறபதம் உயிரானது; விபீஷணுழ்வான் துயர்தீர்ந்து முடிசூடும்வரையில் பெருமாள் தாம் துயருற்றிருந்ததாகவும் அவனை முடிசூட்டியே தாம் துயர்தீரப்பெற்றதாகவும் நன்கு விளக்குகின்றதன்றே விஜ்வர: என்னுமிப்பதம். இப்படிப்பட்ட ஸாரப்பொருள்களை விவேகித்து வெளியிடுவதனுல் ஸ்வாமி ஹம்ஸமென்னத்தகுந்தவர்.

39. இன்னமும், சாந்தோக்ய உபநிஷத்தில் ஜானச்ருதியின் உபாக்யானமொன்று ஓதப்பட்டிராநின்றது. ஜாநச்ருதியென்கிற க்ஷத்ரியன் மிக்க பெருஞ்செல்வம் படைத்தவனுகையாலே அன்னதானம் முதலியன விசேஷமாகச் செய்துகொண்டிருந்தான்; ஆனல் அவனுக்கு ப்ரஹ்மஜ்ஞானமென்பது சிறிதுமில்லாமலிருந்து பல்ல பல்லாக்ஷ ரென்கிற இரண்டு மஹரிஷிகள் அவனிடத்திலே இரக்கங்கொண்டு இவனுக்கு ப்ரஹ்மஜ்ஞானத்தையுண்டாக்கவேணுமென்றெண்ணி இரண்டு ஹம்ஸரூபிகளாய் அவன்மேலே பறந்துகொண்டு போகையில் பல்ல னென்கிற ஹம்ஸம் பல்லாக்ஷ னென்கிற ஹம்ஸத்தைப்பார்த்து 'ஜாநச்ருதிமஹாப்ரபுவின் மேலே நிழல்படாதபடி கவனித்துப்போ' என்று சொல்லிற்று. அது கேட்ட அந்த ஹம்ஸம், "இவன்மேல் நிழல் பட்டாலென்ன? அதனுலென்ன கெடுதல்? இவன் ரைக்வரைப்போல் ப்ரஹ்மஜ்ஞாநியா என்ன? ஞானஹீநனனவிவனை நாம் கௌரவிக்க வேணுமோ?" என்று அவஹேளனமாகச் சொல்லிற்று. அதைக்கேட்ட ஜாநச்ருதி துக்கங்கொண்டவனுய் அந்த ரைக்வரைத்தேடிச்சென்று அநுவர்த்தித்து ப்ரஹ்மவித்யையை உபதேசிக்கவேணுமென்று பிரார்த்தித்து அவரிடத்தில் உபதேசம் பெற்றுனென்பது உவ்வுபாக்கியானத்தின் ஸாரம். இக்கதையின்படி ப்ரஹ்மஜ்ஞான ப்ராப்திக்கு ஹம்ஸம் ப்ரேரகமானதுபோல எம்பெருமானுர் தாமும் அதற்கு ப்ரேரகர் என்பது அறியத்தக்கது. "பாருலகிலாசையுடையோர்க்கெல்லாம் ஆரியர்காள் கூறுமென்று பேசி வரம்பறுத்தார்பின்" என்று உபதேச ரத்தினமாலையிலருளிச் செய்தபடி ஸ்வாமி நியமனம் தந்தருளாவிடின் இவ்வுலகில் ப்ரஹ்மஜ்ஞானப்ரசாரத்திற்கு வழியேயில்லையாமன்றே.

40. எம்பெருமான் வேதசாஸ்திரங்களை வெளியிடத் திருவுள்ளம்பற்றியபோது ஹம்ஸரூபத்தைப் பரிக்ரஹித்தருளினதாக சாஸ்த்ரங்களினுலறிகிறேம், * அன்னமாய் நூல் பயந்தான் * என்றும் * அன்னமதாயிருந்து அங்கு அறநூலுரைத்த * என்றும் ஆழ்வார்களுமருளிச் செய்கிருர்கள். சாஸ்த்ரோபதேசத்திற்கு ஹம்ஸமாயிருத்தல் அவசியமாயினபடியாலே சாஸ்த்ரங்களை யுபதேசித்தவர்களில் தலைவரான எம்பெருமானுரை ஹம்ஸமென்றது பொருத்தமே.

41. ஹம்ஸத்தினுடைய இயல்வைச் சொல்லுமவர்கள் * ந பத்நாதி ரதிம் ஹம்ஸ: கதாசித் கர்தமாம்பஸி * என்கிருர்கள்; அதாவது ஹம்ஸம் ஒருகாலும் சேற்று நீரில் கால்

பொருந்தாதென்றபடி. அப்படியேயன்றோ எம்பெருமானார்படியும். திருவிருத்தத்தின் முடிவு பாசுரத்தில் "அழுந்தார் பிறப்பாம் பொல்லாவருவினை மாயவன்சேற்றள்ளல் பொய்ந்நிலத்தே" என்று இந்த ஸம்ஸாரநிலமே சேற்றுநிலமாகச் சொல்லப்பட்டுள்ளது; இதில் கால்பொருந்தாதவர்களில் தலைவராயிற்று எம்பெருமானார்.

42. திவ்ய தேசங்களை வருணிக்கும்போது ஆழ்வார்கள் அன்னம் மாதர்களின் நடையைப் பின்சென்று நடப்பதாகக் கூறுகிறார்கள்; * பெடையோடன்னம் பெய்வளையார்தம் பின்சென்று நடையோடியலி * என்று திருமங்கையாழ்வார் திருநறையூர்ப்பதிகமொன்றில் கூறியுள்ளது காண்க. ஸ்வாமி தாமும் * அன்னநடைய வணங்கான பிராட்டியினுடைய நடையைப் பின் செல்பவர். (அதாவது—) பிராட்டியின் நடையாவது நடத்தை: சேதனர்களைக்குறித்து எம்பெருமானிடத்தில் மன்றாடிப் பேறு பெறுவிப்பதே பிராட்டியினுடைய முக்கியமான நடத்தையாகும். அதை ஸ்வாமி தாமும் அநுஸரிக்கையாவது-தாமும் அப்படியே எம்பெருமானிடத்தில் மன்றாடி இன்றிருக்கும் நம்போல்வார்க்கும் பேறு பெறுவித்ததேயாம் இவ்விஷயத்தை ஸ்ரீமத் வேதாந்ததேசிகன் ந்யாஸதிலகத்தில் * உக்த்யா தநஞ்ஜய விபீஷண லக்ஷ்யயா தே ப்ரத்யாய்ய லக்ஷ்மணமுநேர் பவதா விதீர்ணம், ச்ருத்வாவரம் * என்றச்லோகத்தினாலும், மணவாளமாமுனிகள் யதிராஜ விம்சதியில் * காலத்ரயேபி.......... க்ஷேமஸ் ஸ ஏவ ஹி யதீந்த்ர பவச்ச்ரிதாநாம் * என்ற ச்லோகத்தினாலும் வெளியிட்டருளினர்கள். அவற்றின் வியாக்கியானங்களிலே விரியவுரைத்தோம், கண்டுகொள்வது. பொதுவாகவே ஆசார்யர்களின் புருஷகாரமில்லாமல் எம்பெருமான் பேறுதரமாட்டானென்பதை * தத்தே ரங்கீ நிஜமபி பதம் தேசிகாதேச காங்க்ஷீ * (ந்யாஸதிலகே) என்ற ஸ்ரீஸூக்தியினால் கல்வெட்டாக வருளிச்செய்தார். எம்பெருமானார்க்கு இது விசேஷ நிரூபகமென்றுணர்க. இங்ஙனே மற்றும் பலவகையான பொருத்தங்களும் உய்த்துணர்க.

43. இனி, "ஸ்ரீமத் பராங்குச பதாம்புஜ ப்ருங்கராஜம்" என்று வண்டாக அருளிச்செய்த்தன் பொருத்தங்களை நிரூபிப்போம். வண்டு மதுவ்ரத மென்று பேர்பெற்றிருக்கும்; தேன்தவிர வேறொன்றைக் கொள்ளாது என்றபடி. அதுபோல * உளங்கனிந்திருக்கும்படியவர்தங்களுள்ளத்தூறியதேன் * என்றும் * தேனை நன்பாலைக் கன்னலையமுதை * என்றும் * எனக்குத் தேனே பாலே கன்னலே யமுதே * என்றும் பல விடங்களிலும் தேனாகச் சொல்லப்பட்ட எம்பெருமானையே விரும்பி மற்றொன்றைக் கண்ணெடுத்தும் பாராமல் பகவதனுபவத்தையே விரதமாகக் கொண்டிருந்தவர் எம்பெருமானார்.

44. * வண்டினங்கள் காமரங்களிசைபாடும் * என்று குலசேகராழ்வாரும், * யாழினிசை வண்டினங்கள் ஆளம் வைக்கும் * என்று பெரியாழ்வாரும், * வரிவண்டுதேதென வென்றிசைபாடும் * என்று திருமங்கையாழ்வாரும் இப்படி மற்றும் பலரும் பணித்தபடியே யாழிசைபோன்ற இசைகளைப்பாடுவதையே இயல்வாக உடையதாயிருக்கும் வண்டு; ஸ்வாமிதாமும் * யாழினிசை வேதத்தியல் * பண்ணார் பாடலாயிரம் * என்னப்பட்ட திருவாய்மொழி முதலிய திவ்யப்ரபந்தங்களின் கானத்தையே போதுபோக்காகவுடையராயிருந்தவர். " தமிழ் மறைகளாயிரமும் மொய்ப்பால் வளர்த்த இதத்தாய் இராமானுசன் " " பண்டரு மாறன் பசுந்தமிழானந்தம் பாய்மதமாய் விண்டிட வெங்களிராமானுசமுனிவேழம் " என்றவை காண்க.

45. வண்டு வடமொழியில் சஞ்சரீக மென்று பேர்பெற்றிருக்கும்; ஓரிடத்தில் தங்கியிராது; மதுவுள்ளவிடமெங்கும் பறந்து திரியுமது. அதுபோல் ஸ்வாமி தாமும் * ஸ்ரீ ரங்கம்

கரிசைலமஞ்ஜநகிரிம் தார்க்ஷ்யாத்ரி ஸிம்ஹாசலௌ ஸ்ரீகூர்மம் புருஷோத்தமஞ் ச பதரீநாராயணம் நைமிசம், ஸ்ரீமத்த்வாரவதீ ப்ரயாக மதுராயோத்யா கயா புஷ்கரம் ஸாலக்ராமகிரிம் நிஷேவ்ய ரமதே ராமாநுஜோயம் முநி: *என்கிறபடியே * பதியேபரவித்தொழுந்தொண்டர்களில் தலைவராயிருந்தார்.

46. வண்டு எந்த சமயத்தில் எங்குச் செல்லவேணுமென்று நினைத்தாலும் தட்டுத் தடங்கலின்றியே புகுந்து ரமிக்கும்; ஸன்னிதியில் கர்ப்பக்ருஹங்களினுள்ளும் எம்பெருமான் திருமுடிமீதும் தாராளமாகப் புகக்காணுநின்றோம். அதுபோல, * பின்னிட்ட சடையானும் பிரமனுமிந்திரனும் துன்னிட்டுப் புகலரிய * என்னும்படி திருவாசல்களிலே ஸேவாபரரானவர்கள் நிறைந்து தலை நுழைக்கவொண்ணாதபடி நெருக்க, * மன்னிய தென்னரங்காபுரி மாமலை மற்றுமுவந்திடுநாள் * என்னும்படியவதரித்தருளின எம்பெருமானுர், கோயில் திருமலை பெருமாள்கோயில் முதலான எந்த திவ்யதேசங்களிலும் தடையும் சங்கையுமொன்று மின்றிக்கே அதிகாரச் செல்வத்துடனே உள்ளே புகுந்து ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்து வாழ்ந்தவர் காண்மின்.

47. வண்டு சோலைகளிலே சுழலமிடும்; எம்பெருமானுர் தாமும் * ஆராமஞ் சூழ்ந்தவரங்கம் * சிந்து பூ மகிழுந்திருவேங்கடம் * விரையார்பொழில் வேங்கடம் * என்னும்படியாகச் சோலைகள்மிக்க தலங்களிலேயே சுழலமிட்டவர். இப்படி மற்றும் பல பொருத்தங்களும் காண்க.

48. காடு நகரமும் நன்கறிய எங்கும் அநுஸந்திக்கப்பட்டு வருகின்ற ஆண்டாள் வாழித்திருநாமத்தில் "பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள் வாழியே" என்றுள்ளது. இதனால் பெரியாழ்வார் திருமகளாரான சூடிக்கொடுத்த நாச்சியார் எம்பெருமானுர்க்குத் திருத்தங்கையாரென்று தெரியவருகின்றது. பெரியாழ்வாருடைய காலத்திற்கும் எம்பெருமானுர் காலத்திற்கும் இடையே எவ்வளவோ காலவ்யவதாநமுள்ள தென்பதை உலகமறியும். ஆண்டாளுக்குப்பின் ஆயிரக்கணக்கான வருஷங்கள் கடந்தபிறகு அவதரித்தவரான எம்பெருமானுர் அவ்வாண்டாளுக்குத் திருத்தமையனாக எப்படியாக முடியும்? என்கிற சங்கை ஸம்ப்ரதாய இதிஹாஸவிசேஷ மறியாதவர்களுக்குத் தோன்றக்கூடியது, அவ்விதிஹாஸ மறிந்தவர்களுக்கு இந்த சங்கை தோன்ற நியாயமில்லை. அவ்விதிஹாஸத்தை இங்குச் சுருக்கமாக வரைகின்றோம். எம்பெருமானுர் திருவரங்கம் பெரியகோயிலில் உபயவேதாந்த க்ரந்த காலக்ஷேபம் நிர்வஹித்தருளுகிற நாளிலே நாச்சியார் திருமொழி காலக்ஷேபம் நடவாநிற்க, அதில் * நாறு நறும் பொழில் மாலிருஞ் சோலை நம்பிக்கு நான், நூறுதடாவில் வெண்ணெய் வாய்நேர்ந்து பராவிவைத்தேன், நூறு தடாநிறைந்த அக்கார வடிசில் சொன்னேன், ஏறு திருவுடையான் இன்று வந்திவை கொள்ளுங் கொலோ * [9—6.] என்கிற பாசுரத்தின் பொருளை விவரித்தருளுகையில் "திருமாலிருஞ்சோலையழகர்க்கு நூறு தடாநிறைந்த வெண்ணெயும் அக்காரவடிசிலும் ஸமர்ப்பிக்க ஆண்டாள் மனோரதித்துப் பாசுரம் பாடினாள்; அதை நாம் அநுஷ்டாநபர்யவஸாயியாக நிறைவேற்றிவைப்போம்" என்று கோஷ்டியிலேயருளிச்செய்து உடனே ஸகல சிஷ்யர்களையும் கூட்டிக்கொண்டு மதுரைக் கெழுந்தருளி அங்கே ஸம்பாரங்களைச் சேகரித்துக் கொண்டு திருமாலிருஞ்சோலைக்கெழுந்தருளிப் பாசுரப்படியே நிறைவேற்றிவைத்து அழகருடைய பேரருளைப் பெற்று மகிழ்ந்து, அங்கு நின்றும் ஸ்ரீ வில்லிபுத்தூரிலே ஆண்டாளையும் மங்களாசாஸனஞ் செய்துவருவதாகத் திருவுள்ளம்பற்றி அங்கேற வெழுந்தருளி ஸன்னிதிக்குள் செல்லுகையில் ஆண்டாள் ஆனந்தம் பூரித்து அர்ச்சாவ

தார ஸமாதியைக் கடந்து எதிர்கொண்டு வந்து "எம் அண்ணரோ நீர்" என்று சோதிவாய் திறந்தருளிச் செய்து ஆரத்தழுவியருளினுள். தான் மனோரதித்து வாசிகமாகச் சொல்லி வைத்ததை ஸ்வாமி ஸாக்ஷாத்தாக நிறைவேற்றிவைத்தபடியினால், தங்கை மனோரதித்ததைத் தமையனார் நிறைவேற்றிவைக்கிற கணக்கிலே யானதாகக் கொண்டு ஆண்டாள் இங்ஙனம் கூறியது மிகவும் பொருத்தமானது. அன்று முதலாக எம்பெருமானார்க்கு அண்ணரென்கிற ப்ரஸித்தியும் ஆண்டாளுக்கு *பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாளென்கிற ப்ரஸித்தியு முண்டாயிற்று.

49. ஸ்ரீமங்கிகமாந்த மஹாதேசிகன் அருளிச்செய்த யதிராஜ ஸப்ததியில் முதல் ஒன்பது ச்லோகங்கள் குருபரம்பராநுபவத்தில் சென்றன. 1. பெரிய பெருமாள், 2. பெரிய பிராட்டியார், 3. ஸேனை முதலியார், 4. நம்மாழ்வார், 5. ஸ்ரீமந்நாதமுனிகள், 6. உய்யக்கொண்டார், 7. மணக்கால் நம்பி, 8 ஆளவந்தார், 9. பெரியநம்பி — ஆக, இப்படி குருபரம்பராநுபவம் செய்து தலைக்கட்டிய பின் *ப்ரணமம் லக்ஷ்மணமுனி:* என்கிற ச்லோகம் முதலாக எம்பெருமானாருடைய குணாநுபவத்திலே இறங்கியுள்ளார். மேற்குறித்த ஆரம்ப ச்லோகத்தில் லக்ஷ்மணமுநி: என்று ஸ்வாமியின் திருநாமத்தை வ்யபதேசித்த படியினால், ஸ்வாமிக்கு அமைந்த ராமாநுஜர் என்னும் திருநாமம், தசரதாத்மஜனான ஸ்ரீராமனுடைய தம்பியாகிய இளையபெருமாளைக் குறிக்கொண்டதாபென்று விளக்கப்பட்டதாயிற்று. ராமாநுஜ னென்கிற திருநாமம், 'செம்பொற் கழலடிச் செல்வா பலதேவா!' என்னப்பட்ட நம்பிமூத்தபிரா னென்னும் பலராமனுடைய தம்பியான கண்ணனையும் சொல்லக்கடவ தென்பது முகுந்த மாலையில் *ஹேராமாநுஜ ஹே ஜகத்த்ரயகுரோ ஹேபுண்டரீகாக்ஷ* என்கிற ஸுப்ரஸித்தமான ச்லோகத்தினால் அனைவரு மறிந்ததேயாம். ஆகவே ஸ்வாமிக்கு அமைந்த ராமாநுஜ ரென்னும் திருநாமம் கண்ணபிரானைக் குறிக்கொண்டதாகவும் கொள்வதற்கு இடமிருப்பதால், கண்ணபிரானுக்கும் ஸ்ரீராமாநுஜர்க்குமுள்ள ஒற்றுமையை கீழே நாம் பதினாறு வகையாக விவரித்து நிரூபித்திருக்கின்றோம். அது, சரித்திரப்போக்கில் ஸ்வாபதேசார்த்த முறையில் நிரூபிக்கப்பட்ட ஸாம்யம். வேதாந்த தேசிகன் யதிராஜ ஸப்ததியில் சப்த ச்லேஷ வகையினால் நிரூபித்தருளின ஸாம்யம் ஈண்டு விவரிக்கப்படுகிறது. (அந்த ச்லோகம் வருமாறு:—)

50. "சமிதோதய சங்கராதி கர்வ: ஸ்வபலாத் உத்த்ருதயாதவப்ரகாச: ।
அவரோபிதவாந் ச்ருதேரபார்த்தாந் நநு ராமாவரஜஸ் ஸ ஏஷ பூய: ॥"

இந்த ச்லோகத்தில் மூன்று வகைகளினால் கண்ணபிரானுக்கும் எம்பெருமானார்க்கும் ஸாம்யம், வடமொழி வல்லுநர்க்கு மிகவும் ரஸிக்கக்கூடிய ச்லேஷாலங்கார பர்யாயத்தினால் [சிலேடை யணியில்] அருளிச்செய்யப்பட்டுள்ளது, பல பொருள்படச் சொல்லுவது ச்லேஷம் [சிலேடை] எனப்படும். அது அபங்க ச்லேஷ மென்றும் ஸபங்க ச்லேஷமென்றும் இருவகைப்படும். பதங்களை யொடித்துப் பொருள்கொள்ளவேண்டாமல் நாநார்த்த பதங்களையிட்டுப் பல பொருள்களைப் பெறுவிப்பதானது அபங்க ச்லேஷ மெனப்படும். அப்படியல்லாமல், பதங்களை யொடித்துப் பல பொருள்கொள்ளுமாறு ப்ரயோகம் செய்வதானது ஸபங்க ச்லேஷ மெனப்படும். இப்போது நாமெடுத்துக்கொண்ட * சமிதோதய * என்னும் யதிராஜ ஸப்ததி ச்லோக ரத்னத்தில் முதலிரண்டு பாதங்களில் அபங்க ச்லேஷம்; மூன்றாவது பாதத்தில் மாத்திரம் ஸபங்க ச்லேஷம்.

இனி, ச்லோகத்தின் கருத்து விவரிக்கப்படுகிறது.

51. [1. சமிதோதய சங்கராதிகர்வ:] இது கண்ணனுக்கும் உடையவர்க்கும் பொதுவான விசேஷணம். 'சங்கரன் முதலானாருடைய செருக்கை யடக்கினவர்' என்பது இதன் பொருள். கண்ணபிரான் பரமாகப் பொருள் கொள்ளும்போது சங்கரன் என்பதற்குச் சிவபிரானென்று அர்த்தம். ஆதிபதத்தினால் அப்பிரானைச்சேர்ந்த கார்த்திகையான் கரிமுகத்தான் முதலானாரை [ஸுப்ரஹ்மண்ய விநாயகாதிகளைக்] கொள்வது. கண்ணபிரான் பாணாஸுர யுத்தத்தில் சங்கரன் முதலானாருடைய செருக்கை யடக்கினது இதிஹாஸ புராண ப்ரஸித்தம். உடையவர் *சங்கர பாக்கர யாதவ பாட்ட ப்ரபாகரர் தங்கள் மதஞ் சாய்வுற* என்றும் *கா சங்கா சங்கராதே:* என்றும் சொல்லுகிறபடியே, சங்கரகுரு ப்ரப்ருதிகளான புறமதத்தவர்களின் செருக்கைப் போக்கினவர் என்பது சரித்ர ப்ரஸித்தம். ஆகவே இந்த விசேஷணம் கண்ணனுக்கும் உடையவர்க்கும் ஸாம்யத்தை நிரூபித்ததாயிற்று. கண்ணபிரான் சங்கராதிகளின் செருக்கையடக்கின வரலாறு இங்குச் சுருங்க எழுதப்படுகின்றது; பலிசக்ரவர்த்தியின் ஸந்ததியிற் பிறந்த பாணாஸுரனென்பான் ஒருகால் நடராஜனான சிவபெருமானுடைய நடனத்திற்குப் பொருத்தமாகத் தாளம் போட்டனன்; அதனால் மிக்க மகிழ்ச்சிகொண்ட சிவபெருமான் அந்த ஸந்தோஷாதிசயத்தினால் அந்த பாணாஸுரனுக்கு ஆயிரங் கைகளை வரப்ரஸாதமாகத் தந்து, தானும் தன் பரிவாரங்களும் அவனது பட்டணத்தைக் காவல் செய்துகொண்டிருக்கும்படியான அநுக்ரஹமும் செய்தருளினன். அந்தப் பாணாஸுரனுக்கு உஷையென்று ஒருமகள் இருந்தாள். அவள் ஒரு நாள் ஒரு பரமஸுந்தரனான புருஷனோடு தான் கூடியிருந்ததாகக் கனாக்கண்டு, தன் உயிர்த்தோழியான சித்ரலேகைக்கு அச் செய்தியைத் தெரிவித்தாள். அவள் உலகிலுள்ள பல ஸுந்தர புருஷர்களின் வடிவங்களைச் சித்திரத்தில் எழுதிக்காட்ட, க்ருஷ்ணனுடைய பௌத்திரனும் ப்ரத்யும்நனது புத்ரனுமாகிய அநிருத்தனே தன்னோடு கூடியிருந்தனனாக உஷை சுட்டிக்காட்டி, அவனைப்பெறுவதற்கு உபாயஞ் செய்யவேண்டுமென்று அத்தோழியை வேண்டினாள். அவள் தன் யோகஸித்தி மஹிமையினால் த்வாரகைக்குச்சென்று அநிருத்தனைத் தூக்கிக்கொண்டு வந்து அந்தப்புரத்திலே விட, உஷை அவனோடு போகங்களை யநுபவித்து வந்தாள். இச்செய்தியைக் காவலாளரா லறிந்த அந்தப் பாணன் தன் சேனையுடன் அநிருத்தனை யெதிர்த்து மாயையினால் பொருது நாகாஸ்த்ரத்தினால் கட்டிப் போட்டிருந்தான். த்வாரகையிலே அநிருத்தனைக் காணாமல் யாதவர்க ளெல்லாருங் கலங்கி யிருந்தபோது, நாரத முனிவனால் செய்தி யுணரப்பெற்ற ஸ்ரீ க்ருஷ்ணபகவான், கருடாரூடனாய்ப் பலராமன் முதலானாரோடு கூட பாணபுரமாகிய சோணிதபுரத்திற் கெழுந்தருளும்போதே, அங்கு அருகில் காவல் காத்துக்கொண்டிருந்த சிவபிரானது ப்ரமத கணங்கள் எதிர்த்துவர, அவர்களையெல்லாம் அழித்து. பின்பு சிவபெருமானா லேவப்பட்டதொரு ஜ்வரதேவதை மூன்று கால்களும் மூன்று தலைகளு முள்ளதாய் வந்து பாணனைக் காப்பாற்றும்பொருட்டுப் போர்புரிய, அதனையும் துரத்தி, பாணாஸுரனது கோட்டையைச் சூழ்ந்துகொண்டு காத்திருந்த சிவபிரானது அநுசரர்களான அக்நிதேவர்கள் ஐவரையும் நாசஞ்செய்து, பாணாஸுரனோடு போர் செய்யத்தொடங்குகையில், அவனுக்குப் பக்கபலமாகச் சிவபெருமானும் ஸுப்ரஹ்மண்யன் முதலான பரிவாரங்களுடன் வந்து எதிர்த்துப் போராட, கண்ணன் தான் ஜ்ரும்பணாஸ்த்ரத்தை ப்ரயோகித்துச் சிவன் ஒன்றுஞ் செய்யமாட்டாமல் கொட்டாவி விட்டுக்கொண்டு சோர்வடைந்துபோம்படி செய்து, ஸுப்ரஹ்மண்யனையும் கணபதியையும் ஹுங்காரங்களால் ஒறுத்து ஓட்டி, பின்னர் சக்ராயுதத்தை யெடுத்து ப்ரயோகித்து அப்பாணனது ஆயிரந் தோள்களையும் தாரை தாரையாய் உதிரமொழுக அறுத்து அவனுயிரையும் சிதைப்பதாகயிருக்கையில், பரமசிவன் அருகில்வந்து வணங்கிப் பலவாறு ப்ரார்த்தித்ததனால் சிவபஜனஞ்

லால் அநுமாநம் ஈச்வர ஸாதனத்தில் சக்தியுடையதன்று; ஆகவே சாஸ்த்ரமே பரப்ரஹ்மஸித்தியில் ப்ரபலப்ரமாணமாகக்கடவது. அப்படிப்பட்ட சாஸ்த்ரம் வேதாந்த சாஸ்த்ரமே. அதைக்கொண்டு ப்ரஹ்ம விசாரம் செய்வது நன்ருகப் பொருந்தும் என்றதாயிற்று.

34. இனி நான்காவதான ஸமந்வயாதிகரணம்பற்றிப் பேசுவோம். பரப்ரஹ்மமானது சாஸ்த்ரம் தவிர வேறொரு பிரமாணத்தினுல்ப்ராப்தமாகக் கூடியதன்று என்றே கொண்டாலும் அந்த ப்ரஹ்மமானது ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளுக்கு விஷயமல்லாமையினுல் அப்படிப்பட்ட ப்ரஹ்மத்தை ப்ரதிபாதநம் செய்வதில் பலனென்று மில்லாமையினுல் அந்த ப்ரஹ்மத்தினிடத்தில் சாஸ்த்ரத்திற்கு ப்ராமாண்யம் ஸம்பவிக்கமாட்டாததலால் அந்த ப்ரஹ்மம் சாஸ்த்ர ப்ரதிபாத்யமாவதற்கு வழியில்லை என்றொரு ஆக்ஷேபம் தோன்ற, அதற்குப்பரிஹாரமாக இந்த அதிகரணம் அவதரிக்கின்றது. இவ்வதிகரணத்திற்கு ஸூத்ரம் *தத் து ஸமந்வயாத்* என்பது. இந்த ஸூத்ரத்தில், பரஹ்மண; என்றொரு பதமும் 'சாஸ்த்ரேண' என்றொருபதமும் அத்யாஹாரம் செய்துகொள்ளவேண்டும். (அதாவது, வருவித்துக் கொள்ளவேண்டு மென்றபடி.) தத்—கீழ் ஸூத்ரத்தில் சொல்லப்பட்ட சாஸ்த்ரப்ரமாணகத்வமானது என்றபடி. ஸமந்வயாத்—நன்ருகப் புருஷார்த்தமாக அந்வயிக்கிறபடியினுல் என்றபடி. புருஷார்த்தத்வேந ஸம்பந்தமே ஸமந்வயமாவது. பரப்ரஹ்மமானது சாஸ்த்ரத்தினுல் புருஷார்த்தமாக ப்ரதிபாதிக்கப்படுகிறபடியினுலே அந்த ப்ரஹ்மத்திற்கு சாஸ்த்ரப்ரமாணகத்வம் ஸம்பவிக்கக் குறையில்லை என்றதாக ஸூத்ரத்தின் பொருள் தேறிற்று.

35. இங்குப் பூர்வபக்ஷம் :—பரப்ரஹ்மத்தை சாஸ்த்ரம் ப்ரதிபாதிக்க வேண்டுமாறுல் அது வேறொரு ப்ரமாணத்தினுல் அறியப்படாம லிருக்கவேணு மென்பது தவிர மற்றொரு தன்மையும் அதில் இருக்கவேணும். அது என்னென்னில்; தெரிந்துகொள்ள விரும்பக்கூடியதாயிருத்தல் என்கிற தன்மையாம். தெரிந்துகொள்ளவேணு மென்கிற விருப்பம் எந்தவஸ்துவில் உண்டாகின்றதில்லையோ அந்தவஸ்துவைப்பற்றி சாஸ்த்ரம் ப்ரதிபாதநம் செய்யமாட்டாதன்றே. பரப்ரஹ்மம் இதரப்ரமாணத்தினுல் தெரிந்து கொள்ள முடியாததென்பதை ஒப்புக்கொள்வோம். தெரிந்துகொள்ள விரும்பக்கூடியதாயிருத்தல் என்கிற தன்மை ப்ரஹ்மத்தினிடத்தில் இருக்கமுடியாதே, ஏனென்னில்; தெரிந்துகொள்ளவேணுமென்கிற விருப்பமானது உலகில் ப்ரயோஜநவத்தான விஷயத்தில்தான் உண்டாகும். இஷ்டப்ராப்தி அநிஷ்டபரிஹாரம் என்கிற இரண்டோ இரண்டத்திலொன்றோ உலகில் ப்ரயோஜன மென்னத் தகுந்தது. இஷ்டப்ராப்தியானது ப்ரவ்ருத்தியினுலே விளையக்கூடியது. [யாகமென்கிற காரியத்தில் ப்ரவ்ருத்தியுண்டானுல் ஸ்வர்க்கமென்கிற இஷ்டம் ப்ராப்தமாகிறது.] ப்ரவ்ருத்தியினுல் இஷ்டப்ராபதியாவது போல், நிவ்ருத்தியினுல் அநிஷ்டபரிஹார முண்டாகிறது. [மாம்ஸபக்ஷணமென்கிற காரியத்தில் நிவ்ருத்தியுண்டானுல் அநிஷ்டபரிஹாரமுண்டாகிறது.] ப்ரக்ருதத்தில், பரப்ரஹ்மமானது ப்ரவ்ருத்திக்கோ நிவ்ருத்திக்கோ இலக்கன்றே. (வஸ்துவே கண்ணுக்குத் தெரியாமையினுல்.) ஆகவே ப்ரயோஜநவத்த்வம் சொல்லமுடியாது. ஆதலால், தெரிந்துகொள்ள விரும்பக்கூடியதாயிருத்தல் என்கிறதன்மை பரப்ரஹ்மத்திற்கு ஸம்பவிக்க முடியாதாகையாலே அந்த ப்ரஹ்மத்தை சாஸ்த்ரம் ப்ரதிபாதிக்கவல்லதல்ல; ஆகவே சாஸ்த்ரத்தைக் கொண்டு ப்ரஹ்மவிசாரம் செய்யப்புகுவது ஒவ்வாது—என்று பூர்வபக்ஷம் ப்ராப்தமாக;

36. இதன்மேல் ஸித்தாந்தம் வருமாறு:—பரப்ரஹ்மத்திற்கு ப்ரயோஜநாந்தாவத்த்வம் ஸம்பவியாமற்போனுலும், பலபல வேதாந்தவாக்யங்களினுல் அதுதானேஸ்வயம் ப்ரயோஜநம்—பரமபுருஷார்த்தம் என்று அறிவிக்கப்படுகிறது. "புத்ரஸ்தே.ஜாதஃ" (உனக்குப் பிள்ளை பிறந்தது) என்றும், "தவ க்ருஹே நிதிரஸ்தி" (உன்வீட்டில் நிதியுள்ளது) என்றும் சொன்னுல் இந்தவாக்யங்களானவை பரமானந்தஹேதுவான புத்ர ஜன்

மத்தையும் நிதிஸத்பாவத்தையும் தெரிவிப்பதுபோல வேதாந்தவாக்யங்கள் பரமாநந்த
ஹேது பூதமும் பரமாநந்தஸந்தோஹஸ்வரூபமுமான பரப்ரஹ்மத்தை ப்ரதிபாதனம்
பண்ணுவது ஸமஞ்ஜஸமேயாகும், அவை அபௌருஷேயங்களாகையாலே புருஷபுத்தி
யடியாக வரக்கூடிய ப்ரமப்ரமாத விப்ரலிப்ஸைகள் அங்கு எண்ணத்தகாதவை. ஆகவே
பொய்சொல்லி வஞ்சிக்கும் பேச்சுக்களல்ல வேதாந்த சாஸ்த்ரங்கள். அப்படிப்பட்டவ
றைக்கொண்டு ப்ரஹ்மவிசாரம் செய்வது பொருத்தமே யென்றதாயிற்று. இந்த அதி
கரணத்தின் ப்ரமேயத்தையுட்கொண்டு பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தர சதகத்தில்
(21) * அந்ராஸ்நே நிநிரிநிவத்...ரங்கேச ந்வயி ஸகலாஸ் ஸமந்வயந்தே * என்கிற ச்லோக
தையருளிச் செய்துள்ளார், அங்கு எம்முடைய வியாக்கியானம் நோக்கத்தக்கது.

37. கீழ் விளக்கப்பட்ட நான்கு அதிகரணங்களும் நான்கு ஸூத்ரங்கள்
இவையே சதுஸ்ஸூத்ரியென்று வழங்கப்பெறும். இவை சாஸ்த்ராரம்ப ஸமர்த்தன
பரங்களென்றும், இனிமேல்தான் சாஸ்த்ராரம்பமாகிறதென்றும் நம் ஆசாரியர்களின்
கொள்கை. எம்பெருமானார் திருவடிகளிலேயே ஆச்ரயித்தவரான ஸோமாசியாண்ட
னென்பவர் முதல் ஸூத்ரமொன்று மாத்திரமே சாஸ்த்ராரம்ப ஸமர்த்தநபரமென்று
('ஜந்மாத்யஸ்ய யதஃ' என்கிற) இரண்டாவது ஸூத்ரம் முதற்கொண்டே சாஸ்த்ரா
ரம்பமாய் விட்டதென்றும் அபிப்ராயப்படுகிருர். சதுஸ்ஸூத்ரியும் சாஸ்த்ராரம்ப
ஸமர்த்தனபரமென்பதே ஸித்தாந்தமாகக் கொள்ளத்தக்கது. சாரீரகமீமாம்ஸையெ
கிற இந்த சாஸ்த்ரம் ஆரம்பிக்க அவசியமில்லையென்று கிளர்ந்த சங்கைகள் கீழே
நான்கு ஸூத்ரங்களினலும் பரிஹரிக்கப்பட்டன வென்றதாயிற்று. இனிமேல் ஒ
வோரதிகரணத்தின் ப்ரமேயத்தையும் நாம் விவரித்துக்கொண்டு போக இச்சிறு நூலி
அவகாசமில்லாமையால் முக்கியமான சில அதிகரணங்களின் ப்ரமேயத்தை மாத்திர
மூதலித்துக்கொண்டு மண்டூகப்லுதியில் செல்லுவோம்.

38. ஆனந்தமயாதிகரணத்தைப்பற்றிப் பேசுகிறோம். இவ்வதிகரணமான
முதலத்யாயத்தின் முதற்பாதத்தில் ஆறுவது அதிகரணமாகவுள்ளது. இதற்குக் கீழே
ஈக்ஷத்யதிகரணமுள்ளது. அதில் ஜகத்காரணவஸ்துவுக்கு ஸங்கல்ப விசேஷம் ஓத
பட்டிருத்தலால் அந்த ஸங்கல்பம் கௌணமன்றிக்கே முக்யமாகவே நிர்வஹிக்கப்ப
வேண்டுதலால் அப்படிப்பட்ட ஸங்கல்பத்திற்கு ஆச்ரயபூதமான ஜகத்காரணவஸ்
அசேதநமான ப்ரதாநமாயிருக்க முடியாதென்று நிரூபிக்கப்பட்டது. இனி, அசேத
வஸ்து ஜகத்காரணமாக வேண்டா; ஜீவனே ஜகத்காரணமாயிருக்கட்டுமே; அவனுக்
ஸங்கல்பமாகிற ஈக்ஷணம் முக்யமானதே ஸம்பவிக்குமன்றோவென்று சங்கையு
டாக; அதற்குப் பரிஹாரமாய் இந்த அதிகரணம் அவதரிக்கின்றது. இதற்குத் த
யான ஸூத்ரம் "आनन्दमयोऽभ्यासात् ஆநந்தமயோப்யாஸாத்" (1-1-13) என்பது.
ஆநந்தமயஃ அப்யாஸாத் என்று பதவிபாகம். இதற்குமேலுள்ளதான அந்தரதிகரண
தின் இரண்டாவது ஸூத்ரமான * பேதவ்யபதேசாச்சாந்யஃ * என்கிற ஸூத்ரத்திலிருந்
அந்யஃ என்னும் பதமொன்று இங்கே வருவித்துக் கொள்ளவேண்டும். ஆகவே
ஆநந்தமயஃ அந்யஃ அப்யாஸாத் என்றதாயிற்று. ஆநந்தமய:—ஆநந்தமய சப்தத்தின
குறிக்கப்பட்ட புருஷன், (அந்யஃ)—ஜீவாத்மாவிற்காட்டிலும் வேறுபட்ட பரமா
மாவேயாகக் கடவன்; ஏனென்னில்; அப்யாஸாத்—அளவு கடந்ததாக வோதப்பட்
ஆனந்த முடைமையானது துக்க மிச்ரனான ஜீவாத்மாவுக்கு இணங்கமாட்டாம
பரமாத்மாவுக்கே இணங்குமதாகையாலே. என்பது ஸூத்ரத்தின் பொருள். தை
திரீயோபநிஷத்தில் ஆநந்தவல்லி யென்பது ஒரு பகுதி; அதில் ஆநந்தமயவித்யா ப்ர
ணத்தில் * தஸ்மாத்வா ஏதஸ்மாத் விஜ்ஞாநமயாத், அந்யோந்தர ஆத்மா ஆநந்தமயஃ * என்கி
வாக்யத்தினல் ஆநந்தமயனை ஆத்மாவை ப்ரஸ்தாவித்து, அதற்குமேல் * ஸை
ஆநந்தஸ்ய மீமாம்ஸா பவதி * என்று தொடங்கி * தே யே சதம் ப்ரஜாபதேராநந்தாஃ, ஸ ஏ
ப்ரஹ்மண ஆநந்தஃ; ச்ரோத்ரியஸ்ய சாகாமஹதஸ்ய * என்னுமளவாக ஆனந்தமயனை

மாவுக்குள்ள ஆனந்தத்திற்கு அளவு கூறுமடைவில் 'நான்முகனுக்கு யாதொரு ஆனந்தமோ, அதிற்காட்டிலும் நூறு மடங்கு அதிகமான ஆனந்தம் பரப்ரஹ்மத்திற்கு ஓர் ஆனந்தம்' என்று சொல்லி *ச்ரோத்ரியஸ்யச அகாமஹதஸ்ய* என்கிற வாக்யத்தினுல் முக்தனுக்கும் அப்படிப்பட்ட ஆனந்தமுடைமை சொல்லிற்று; அகாமஹதனென்றது விஷய விரக்தனென்றபடி. ச்ரோத்ரியனென்றது வேதாந்த ச்ரவணம் பண்ணினவனென்றபடி. வேதாந்த ச்ரவணம் செய்து ப்ரஹ்மோபாஸனத்தினுல் முக்தி பெற்றவனென்று தேர்ந்த பொருள். நூறு மடங்காகப் பெருக்கப்பட்ட சதுர்முகாநந்தமானது முக்தனுக்கு ஒரு ஆனந்தம் என்று சொல்லிற்ருயிற்று. இங்கு முக்தனுக்குச்சொல்லப்பட்ட ஆனந்தமானது பரப்ரஹ்மத்தின் உபாஸனத்தினுல விளைவது என்று [ச்ரோத்ரிய பதத்தினுல்] சொல்லப்பட்டுள்ளது. ஆகவே முக்தாநந்தமானது உபாஸநப்ரீதனை பகவானுடைய ஸங்கல்பத்தினுல் உண்டுபண்ணப்பட்டதென்னுமிடம் தேறுகின்றது. [முக்தாநந்தம் நிருபாதிகமன்று, ஸோபாதிகம் என்றதாகத் தேறுகிறது.] *ஸ ஏகோ ப்ரஹ்மண ஆநந்தஃ* என்கிற விடத்திலோ வென்னில், 'காரணமொன்றும் சொல்லப்பட்டிராமையினுல் பரப்ரஹ்மத்தினுடைய ஆனந்தமானது வேறொருவருடைய ஸங்கல்பாதீநமன்றிக்கே இயற்கையானதென்னுமிடம் நன்கு தெரியவருகிறது. நிருபாதிகமான ஆனந்தமுடைமை பரப்ரஹ்மத்திற்கேயொழிய வேறொருவற்குமில்லை யென்று தேறுதலால் அப்படிப்பட்ட ஆனந்தமுடையதாக ஆனந்தமய சப்தத்தினுல் நிர்தேசிக்கப்பட்டவஸ்து ஜீவனிற் காட்டிலும் வேறான பரப்ரஹ்மமே என்றபடி.

39. தைத்திரீயோபநிஷத்திலுள்ள ஆனந்தவல்லியை 'ஆநந்தமயவித்யா' என்று வேதாந்திகள் வழங்குவர். அந்த வித்யையில் *को ह्येवान्यात् कः प्राण्यात्, यदेष आकाश आनन्दो न स्यात्, एष ह्येवानन्दयाति*. [கோஹ்யேவாந்யாத் கஃ ப்ராண்யாத், யதேஷ ஆகாச ஆநந்தோ ந ஸ்யாத். ஏஷஹ்யேவாநந்தயாதி.] என்று ஓதப்பட்டிருக்கின்றது. இதன் பொருளாவது—கீழே சொல்லப்பட்ட ஆகாச சப்தவாச்யமான வஸ்துவானது நிருபாதிகமாயும் அபரிச்சிந்நமாயுமிருக்கிற ஆநந்தத்தை உடையதல்லாமல் இருக்குமானுல், பிரமன் முதற்கொண்டு எறும்புவரையிலுள்ள ஜந்துஸமூஹங்களில், கோ வா அந்யாத்=எந்த ஜந்துதான் ப்ராக்ருதமான ஆனந்தத்தையடைய முடியும்? கோ வா ப்ராண்யாத்=எந்த ஜந்துதான் மோக்ஷானந்தத்தையடைய முடியும்? ஏஷ ஏவ ஹி=இந்த ஆனந்தமயனுன ஆத்மாவேயன்றோ, ஆநந்தயாதி—ப்ராக்ருதமாயும் அப்ராக்ருதமாயுமுள்ள எல்லாவிதமான ஆனந்தத்தையும் விளைவிக்கின்றது. [ஆநந்தயதி என்கிற சொல்வடிவத்தில் யகாரம் நீண்டிருப்பது சாந்தஸமென்றுணர்க.] இங்கே இப்படிச் சொல்லியிருப்பதும் தவிர, உத்தரநாராயணநுவாகத்திலும் *तमेवं विद्वानमृत इह भवति, नान्यः पन्था विद्यतेऽयनाय*. தமேவம் வித்வாந் அம்ருத இஹ பவதி, நாந்யஃ பந்தா வித்யதே அயநாய* என்பதனுலும் இவ்வர்த்தமே நிலைநாட்டப்பட்டிருக்கின்றது. ஏவம் தம் வித்வாந்—இவ்விதமாக அந்த மஹாபுருஷனை உபாஸிப்பவன், அம்ருதோ பவதி—மோக்ஷாநந்தத்தைப் பெற்றவனுகிருன், அயநாய—அந்த மோக்ஷானந்த ப்ராப்தியின் பொருட்டு, அந்யஃ பந்தா ந வித்யதே—அந்த மஹாபுருஷனைத் தவிர்த்து வேறு உபாயமில்லை. என்பது இந்த ச்ருதிவாக்யத்தின் பொருள். *ஏஷஹ் யேவாநந்தயாதி* என்ற ச்ருதிவாக்யத்தில் அந்வயமுகேந தெரிவிக்கப்பட்ட அர்த்தமே *நாந்யஃ பந்தா வித்யதே அயநாய* என்கிற ச்ருதிவாக்யத்தில் வ்யதிரேகமுகேந தெரிவிக்கப்பட்டிருக்கின்றது என்னுமித்தனையே வாசி. ஆக உபயச்ருதிகளும் ஏகார்த்தமாயிருக்கையினுலே, உத்தர நாராயணநுவாக வாக்யம் லக்ஷ்மீபதியையே விஷயமாகக் கொண்டிருப்பது போலவே ஆநந்தமய வித்யையிலும் அப்பெருமானே விஷயபூதன் என்னுமிடம் அறிய வெளிது.

இன்னமும், ஆநந்தமய வித்யையில் *स यश्चायं पुरुषे, यश्चासावादित्ये। स एकः* [ஸ யச்சாயம்

புருஷே, யச்சாஸாவாதித்யே. ஸ ஏகः] என்கிற வாக்யத்தினால் ஆனந்தமயனையும் ஆதித்ய மண்டலத்தினுள்ளேயுள்ள புண்டரீகாக்ஷனையும் ஒன்றாகச்சொல்லி யிருப்பதனாலே அந்த புண்டரீகாக்ஷனே ஆநந்தமயன் என்று தேறிநிற்கிறது. ஆக இப்படிப்பட்ட அடையாளங்களினால் ஆநந்தமய வித்யாவேத்யனும் புண்டரீகாக்ஷனுமானவன் பரம புருஷனே யென்று தேறிற்றாகிறது.

40. பூர்வபக்ஷம் :—ஆனந்த வல்லியில் * ब्रह्मविदाप्नोति परम् * [ப்ரஹ்மவிதா நோதி பரம்] என்று ப்ரஹ்மத்தை ப்ரஸ்தாவித்து * ஸத்யம் ஜ்ஞாந மநந்தம் ப்ரஹ்ம * என்று அந்த ப்ரஹ்மத்தின லக்ஷணங்கூறி [தஸ்மாத் வா ஏதஸ்மாதாத்மந ஆகாச ஸம்பூதः.] இத்யாதி வாக்யத்தினால் அந்த ப்ரஹ்மம் ஆத்மாவென்னுமிடத்தையும் அதில் நின்றும் ஆகாசாதி பதார்த்தங்களின் உத்பத்தியையுஞ் சொல்லி, * [தஸ்மாத் வ ஏதஸ்மாத் விஜ்ஞாநமயாத். அந்யோந்தர ஆத்மா ஆநந்தமயः] என்றவளவால் உபக்ராந் மான ஆத்மோபதேச பரம்பரையானது ஆனந்தமயனில் ஸமாப்தி செய்யப்பட்டிரு கிறது. ஆகவே உபக்ரமிக்கப்பட்ட ப்ரஹ்மம் ஆநந்தமயனை ஆத்மாவே யென்று நிச்சயிக்கப்படுகிறது. அந்த ஆனந்தமய ஆத்மாவுக்கு [தஸ்யைஷ ஏவ சாரீர ஆத்மா] என்ற உத்தரவாக்யத்தில் சரீரஸம்பந்தித்வமாகிற சாரீரத்வம் சொல்லப்பட்டிருக்கின் றது. கர்மபரவசனை ஜீவாத்மாவுக்கே கர்மபலாநுபவார்த்தமாக சரீர ஸம்பந்தம் ஸம்பவிக்கும்; அகர்மவச்யனை பரமபுருஷனுக்கு அது ஸம்பவிக்க நியாயமில்லை. ஆகவே சரீரஸம்பந்த முடையவனாக ஓதப்பட்ட இந்த ஆனந்தமயனை ஆத்ம ஜீவாத்மாவென்றே நிச்சயிக்கலாகிறது.

41. என்கிற பூர்வபக்ஷத்தின் மேல் ஸித்தாந்தம். நிருபாதிகமான ஆனந் முடைமை முதலிய குணங்கள் ஜீவாத்மாவுக்கு ஸம்பவிக்கமாட்டாவாகையாலும் ஸகல சராசரங்களையும் சரீரமாகக் கொண்டவனாக வோதப்படுகின்ற பரமாத்மாவுக்கு அப்படிப்பட்ட ஸகல சரீரகத்வமாகிற சாரீரத்வம் நன்றாக ஸம்பவிக்கக் கூடியதாதலா நிருபாதிக ஆனந்த சாலியாகக்கடவன். ஆநந்தமயः என்றவிடத்திலுள்ள மயட்ப்ரத் யத்திற்கு விகாரம் அர்த்தமாகையாலே விகார மற்றவனை பரமாத்மாவுக்கு ஆநந் விகாரத்வம் பொருந்தமாட்டாதென்கிற வாதமும் அநுபபந்நம்; மயட்டுக்கு விகாரமே அர்த்தம் என்கிற நிர்ப்பந்தமில்லை; "அந்நமயோ யஜ்ஞः" என்று சொன்னால் அ விகாரமென்று பொருளன்றே; இங்கு மயட்டுக்கு ப்ராசுர்யமேயன்றோ பொருள் (ப்ராசுர்யமாவது—மலிவு.) அன்னம் மலிந்த வேள்வி என்பது தானே பொருள கிறது. இப்படியே இங்கும் 'ஆனந்தம் மலிந்தவன் பரமாத்மா' என்றே பொரு படக் குறையில்லாமையாலே விகாரவாதம் அப்ரஸக்தம். அடுத்தபடியாக * யதே வாசோ நிவர்த்தந்தே, அப்ராப்ய மநஸா ஸஹ, ஆநந்தம் ப்ரஹ்மணோ வித்வாந், நபிபேதி குதச்சந என்று வாக்குக்கும் நெஞ்சுக்கு மெட்டாதபடி அப்ரமேயமான ஆனந்தமுடையன வோதப்பட்ட பரமாத்மாவினிடத்திலேயே யன்றோ மலிந்தஆனந்தமுடைமை தேற கூடியது.

42. இதற்குமேல் ஒருவாதம் தோன்றக்கூடும்; ஆநந்த ப்ராசுர்யமாவது ஆன தத்தினுடைய ஆதிக்யமேயாகும். ஆனந்தம் அதிகமென்று சொன்னால் ஆநந்த ப்ர கோடியான துக்கம் சிறிது உண்டென்று தோன்றியே தீருமல்லவா? [ஆதிக்யமெ பது ப்ரதியோகியை அபேக்ஷித்திருக்குமாகையாலே எதைக்காட்டிலும் அதிகமென் சொல்லியாக வேண்டுமாகையாலே ஆநந்தமயனென்று கொள்ளப்பட்ட பரம புரு னிடத்தில் துக்க ஸம்பந்தம் இசையப்பட்டதாகவேயாயிற்று—என்றபடி.] ஏவஞ் அகில ஹேயப்ரத்யநீக கல்யாணைகதாந மென்னப்படுகிற பரப்ரஹ்மத்தினிடத்தி சிறிதளவுகூட ஹேயஸம்பந்தம் ஸம்பவிக்கமாட்டாதாகையாலே, ப்ரசுராநந்த சாலித் மென்று பரிஷ்கரிக்கப்பட்ட ஆநந்த மயத்வமும் அங்குச் சொல்லுவதற்கில்லை என்

தாக.—இதுவும் பிசகு. அந்த ஆனந்த ப்ராசுர்யத்தை விவரிக்கப் புகுந்த *ஸைஷா ஆநந்தஸ்ய மீமாம்ஸா பவதி* இத்யாதியான ஆநந்தமீமாம்ஸையில் *தே யே சதம் ப்ரஜாபதே ராநந்தாः* என்கிற வளவாக ப்ரஸ்தாவிக்கப்பட்ட சதுர்முகபர்யந்த ஸகல ஜீவர்களின் ஆனந்தத்திற் காட்டிலும் நூறுமடங்கு அதிகமாயிருக்கையாகிற ப்ராசுர்யமே ஆநந்தமய சப்தத்தினுல் விவக்ஷிதமாக விவரித்திருக்கையாலே ப்ரஸ்துதனை ஆநந்தமய ஆத்மாவில் ஆநந்தமயனென்கிற சொல்லிலிருந்து துக்க ஸம்பந்தம் ப்ரஸங்கிக்க விரகில்லை.

43. இவ்விடத்தில் ப்ராஸங்கிகமாக வொருவிஷயம் எழுதவேண்டியதாகிறது. மேலே அநுவதிக்கப்பட்டதொரு ஆக்ஷேபத்தைப் பரிஹரிக்கையில் பரம புருஷனுக்கு ஸ்வல்பதுக்க ஸம்பந்தமும் கிடையாதென்று இங்கே நிர்வஹித்துவிட்டு, அந்தப் பரம புருஷனுடைய தயை யென்னும் குணத்தை நிரூபணம் செய்யுமிடத்து எம்பெருமான் அடியார்களின் துக்கத்தை யநுஸந்தித்துத் தானும் துக்கிப்பதுதான் தயாளுத்வமென்று ஸ்வாமி பாஷ்யகாரரே அருளிச் செய்ததாகக் காணப்படுகிறதே; இது எப்படி பொருந்தும்? எம்பெருமானிடத்தில் துக்கமுமுண்டு என்று இசைந்தால் ஆநந்தமயத்வம் கொள்வதற்கு இடமில்லாமலன்றே இருக்கிறது—என்பதாக ஒரு சங்கை தோன்றக் கூடியதுண்டு. இதற்குப் பரிஹாரம் தெரிந்து கொள்ளவேண்டியது வேதாந்திகளுக்கு மிக அவசியமே. இப்படியொரு சங்கை தோன்றுமென்று ஸ்வாமி பாஷ்யகாரர் தாமே திருவுள்ளம்பற்றி இவ்வதிகரண ஸ்ரீபாஷ்யத்தில் சில பங்க்திகளையருளிச் செய்திருக்கிறூர்; அவற்றை அநுவதித்துக் காட்டிப் பொருளும் விவரித்துத் தெளிவு பிறப்பிக்கின்றோம். இவ்வதிகரணத்தில் இரண்டாவது ஸூத்ரம் [விகாரசப்தாந் நேதி, சேந்ந ப்ராசுர்யாத்] என்பது. இந்த ஸூத்ரத்தின் ஸ்ரீ பாஷ்யத்தில் மேல்வரும் பங்க்திகள் உள்ளன;—

" यदुक्तम्—आनन्दप्राचुर्यमल्पदुःखसद्भावमवगमयतीति, तदसत्। तत्प्रचुरत्वं हि तत्प्रभूतत्वम्; तच्च इतरस्य सत्तां नावगमयति, इतरसद्भावासद्भावौ तु प्रमाणान्तरावसेयौ। इह च प्रमाणान्तरेण तदभावोऽवगम्यते * अपहतपाप्मेत्यादिना। तत्रैतावदेव वक्तव्यम्-ब्रह्मानन्दस्य प्रभूतत्वम् अन्यानन्दस्याल्पत्वमपेक्षत इति। उच्यते च तत् * स एको मानुष आनन्द इत्यादिना जीवानन्दापेक्षया ब्रह्मानन्दो निरतिशयदशापन्नः प्रभूत इति ॥ " என்று. இந்த ஸ்ரீ ஸூக்திகளின் தாற்பரிய மென்ன வென்றல்; பரப்ரஹ்மத்தினிடத்தில் ஆனந்தம் அதிகமாக இருக்கிறது என்று சொல்வதனுல் சிறிது துக்கமிருப்பதாகச் சொன்னதாகிறது என்கிற வாதம் பிசகு. ப்ரஹ்மத்தினுடைய ஆனந்தம் அபரிமிதம் என்றுல் இவனுடைய ஆனந்தம் பரிமிதம் என்று இவ்வளவுதான் ஏற்படுமேயொழிய ப்ரஹ்மத்தினிடத்தில் ஸ்வல்பதுக்க மிருக்கிறது என்றும் சொன்னதாகத் தேறுவதற்கு வழியே யில்லை. துக்கம் இருக்கிறதோ இல்லையோ அது வேறு ப்ரமாணத்தினுல் ஏற்படவேண்டுமே யொழிய ஆநந்த ப்ராசுர்யத்தைத் தெவிக்கிற ஆநந்தமய பதத்தினுல் அது ஏற்படாது. ஆனந்தத்திற்கு ப்ரதி கோடியான வஸ்து ப்ரஹ்மத்தினிடத்தில் இல்லையென்பது * அபஹதபாப்மா * இத்யாதியான வேறு ச்ருதியினுல் தெரிய வருகிறது. அதைப் பற்றி இங்கென்ன? இங்குத் தெரிந்து கொள்ளவேண்டிய விஷயம் இவ்வளவே-பரப்ரஹ்மத்தின் ஆனந்தம் அளவு கடந்ததென்றுல் மற்றையோருடைய ஆனந்தம் இப்படியல்லாமல் அற்பமானது என்பதே தேறி நிற்கும்; அது ஆனந்த வல்லியில் ஸ்பஷ்டமாகவே தெரிவிக்கப்படுகிறது.—என்பதாக.

இங்கு ஸ்வாமி * அபஹதபாப்மா* என்கிற ச்ருதிவாக்கியத்தை யெடுத்துக் காட்டியுள்ளார். அதன் கருத்தை ச்ருதப்ரகாசிகாசார்யர் நன்கு விவரித்துள்ளார். அதை உபநிஷத்பாஷ்யகாரரான ரங்கராமநுஜஸ்வாமி, சாந்தோக்ய உபநிஷத்தில் * அபஹதபாப்மா விஜரோ விம்ருத்யுர் விசோக: * என்னுமிடத்துத் தம்முடைய பாஷ்யத்தில் விளக்கியுள்ளார்.

46. இனி, க்ருத்ஸ்நப்ரஸக்தி யதிகரணத்தின் ப்ரமேயம் விளக்கப்படுகிறது: இதுவும் இரண்டாமத்யாயத்தின் முதற்பாதத்திலுள்ளது. * कृत्स्नप्रसक्तिर्निरवयवत्वशब्दकोपो वा * என்பது பூர்வபக்ஷ ஸூத்ரம். *ச்ருதேஸ் து சப்தமூலத்வாத்* என்பது ஸித்தாந்த ஸூத்ரம். ப்ரஹ்மம் ஜகத்காரணம் என்னும் வாதத்தில் ப்ரஹ்மமே ஜகத்தாகப் பரிணமிப்பதாய்த் தேறுகிறது. ப்ரஹ்மமோ நிரவயவமானது; அது ஜகத்தாகப் பரிணமிக்கும்போது ப்ரஹ்மம் முழுவதுமே காரியப்பொருளாகப் பரிணமிக்க வேண்டிய தாகிறது. ஏகதேசேந பரிணமிக்கிற தென்னும் பக்ஷத்தில் ப்ரஹ்மம் நிரவயவமென்று சொல்லுகிற ச்ருதி விரோதிக்கும். ஆகையாலே ப்ரஹ்மம் ஜகத்காரணமாகவொண்ணாது—என்கிற பூர்வபக்ஷமே முந்தின ஸூத்ரத்தின் பொருள். (இதைச் சிறிது விவரிப்போம்.) கீழே உபஸம்ஹாராதிகரணத்தில் * क्षीरवद्धि * என்று க்ஷீரத்ருஷ்டாந்தம் கொடுக்கப்பட்டிருக்கிறது. க்ஷீரத்ருஷ்டாந்தம் பொருந்தாது. க்ஷீரம் ஸாவயவமாகையாலே அதுபோல ப்ரஹ்மமும் ஸாவயவமென்ன வேணும். அப்படி கொண்டால் நிரவயவத்வ ச்ருதி கோபிக்கும்; நிரவயவமாகில் ப்ரஹ்மம் க்ருத்ஸ்நபாகத்தாலும் பரிணாமமடைந்ததாக வேணும். ஆகட்டுமேயென்னில், க்ருத்ஸ்நமும் ஒரு கார்யப் பொருளாகப் பரிணமித்தபோது மற்றொரு காரியப்பொருளாகப் பரிணமிக்க ப்ரஸக்தியில்லை. ஆகையாலே ப்ரஹ்மகாரணத்வவாதம் ஒவ்வாது—என்பதாகப் பூர்வபக்ஷம்.

47. இதன்மேல் ஸித்தாந்தமுணர்த்தும் ஸூத்ரம்—*ச்ருதேஸ் து சப்தமூலத்வாத்* என்பது. துசப்தம் பூர்வபக்ஷத்தை வ்யாவர்த்திப்பிக்க வந்தது. ப்ரஹ்மம் நிரவயவமென்பதும், அது கார்யப்பொருளாகப் பரிணமிக்கிற தென்பதும் ஆகிய இரண்டும் ச்ருதிஸித்தமான அர்த்தங்கள். ப்ரஹ்மமோ சப்த ப்ரமாணமொன்றினாலேயே அறியப்படுமது; ஆகையாலே கீழே தோன்றின பூர்வபக்ஷம் யுக்தமன்று என்பதாக ஸூத்ரார்த்தம். இதைச்சிறிது விவரிப்போம். ஸாவயவமான வஸ்துதான் ஏகதேசத்தாலே பரிணமிக்க முடியுமென்றும், நிரவயவமான வஸ்துவானது அப்படி ஏகதேசத்தாலே பரிணமிக்கமாட்டாமல் க்ருத்ஸ்நாம்சத்தாலும் பரிணமித்தாக வேணுமென்றும் ஒரு நியதி சொல்லுவதானது லௌகிக பதார்த்த த்ருஷ்டியினால்தானே. இப்படியொரு வ்யாப்தி கல்பிக்க வேணுமானால் பரப்ரஹ்மம் தவிர மற்ற வஸ்துக்களில் மாத்திரமே கல்பிக்கலாம். ப்ரஹ்மத்தினிடத்திலும் இந்த வ்யாப்தி கொள்ள அவசியமில்லை. ஏனென்னில், ப்ரஹ்மத்தை நாம் சாஸ்த்ரங்கொண்டே அறிகிறோம். அந்த சாஸ்த்ரமானது ப்ரஹ்மத்திற்கு நிரவயவத்வத்தையும் பஹூபவநத்தையும் [அதாவது, நானா வஸ்துக்களாகப் பரிணமிப்பதையும்] ஓதியிருக்கின்றது. அது ப்ரஹ்மத்தினுடைய அநிர்வசநீயமான சக்தி விசேஷத்தைப் பொறுத்தது. அத்புத சக்தியுக்தமான ப்ரஹ்மத்தினிடத்திலே நாம் லௌகிகவஸ்து த்ருஷ்ட்யா சோத்யம் செய்வது தகாது. ஒன்று பாருங்கள். கண்ணுடையவன்தான் காணமுடியும், காதுடையவன்தான் கேட்கமுடியும்; கண்ணிலாதான் காணகில்லான்; செவியிலாதான் கேட்ககில்லான்—என்று ஒரு வ்யாப்தி சொல்ல நினைத்தால் பரப்ரஹ்மந்தவிர மற்ற பேர்களிடத்தில்தானே இப்படி சொல்ல முடியும். * पश्यत्यचक्षुः स शृणोत्यकर्णः, अपाणिपादो जवनो ग्रहीता * என்று ஓதப்படுகிற பரமபுருஷனிடத்திலே இந்த வ்யாப்தி பயன் பெறுதன்றே. ஆகவே உலகில் காணும் நியாயத்தைக் கொண்டு ப்ரஹ்மத்தினிடத்தில் சோத்யம் செய்வது கூடாது.

48. வேதாந்திகள் இங்கு விசேஷித்துக் குறிக்கொள்ளவேண்டிய விஷயமுண்டு: பரப்ரஹ்மத்திற்கு ஜகதாத்மநா பரிணாமம் போலவே ப்ரதிவஸ்து பூர்த்வமும் ச்ருதிஸித்தமாயிருக்கின்றது. நிரவயவமான ப்ரஹ்மம் வஸ்துதோறும் எங்ஙனே பரிஸமாப்ய வர்த்திக்கமுடியும்? என்று சிலர் சோத்யம் செய்வதுண்டு. அந்த சோத்யமும் * ச்ருதேஸ்து சப்தமூலத்வாத் * என்கிற இந்த ஸூத்ரத்தினால் சிக்ஷிக்

பட்ட ந்யாயத்திலேயே மடிந்தொழிகின்றது. இவ்விஷயத்தை ஸ்ரீமத் வேதாந்த தேசிகன் ந்யாயஸித்தாஞ்ஜநத்தில் வெகு சதுரமாக அருளிச்செய்து முடித்திருக்கிறார். அப்படியிருந்தும் இதில் இன்னமும் சிலர் தெளிவுபெறாமல் கலங்கியிருக்கிறார்கள். பகவான் ஒரு வஸ்துவிலே பரிஸமாப்ய வர்த்தித்துவிட்டால் அவ்வளவோடு பகவான் உபக்ஷீணனாய் விடுகிறபடியால் மற்றொரு பொருளில் வியாபிக்க எப்படி முடியுமென்று இந்த சோத்யத்தையே திருப்பித்திருப்பிச் செய்துகொண்டு காலங் கழிக்கிறார்கள். அந்தோ! அன்னவர்கள் * ச்ருதேஸ் து சப்தமூலத்வாத் * என்கிற ஸூத்ரம் என்ன சிக்ஷிக்கிறதென்பதையும் இந்த ஸூத்ரத்தின் ஸ்ரீபாஷ்யத்தில் ஸ்வாமி என்ன அருளிச்செய்கிறாரென்பதையும் சிறிதும் நோக்கமாட்டிற்றிலர். * शब्दैकप्रमाणकत्वेन सकलेतरवस्तुविसजातीयत्वा_दस्यार्थस्य विचित्रशक्तियोगो न विरुध्यते * என்பது ஸ்ரீபாஷ்யஸூக்தி. இதைப்பற்றின விரிவுகளை நம்முடைய ப்ரஹ்மவ்யாப்தி பரிஷ்க்ரியா, அத்புதசக்தி முதலான க்ரந்தங்களிலே காண்க.

49. இனி, ப்ரயோஜநவத்த்வாதிகரணத்தின் ப்ரமேயம் பற்றிப் பேசுவோம். கீழே விவரித்த அதிகரணத்திற்கு அடுத்த அதிகரணமே இது. பரமபுருஷன் ஸர்வசக்தியுக்தனுகையாலும் ஸத்ய ஸங்கல்பனுகையாலும் அவன் ஸங்கல்பமாத்ரத்தாலே ஜகத்தை ஸ்ருஷ்டிப்பதாகச் சொல்லப்படுகிற விஷயம் ஸம்பாவிதமன்று; ஏனென்னில்; ப்ரஹ்மம் ஜகத்தை ஸ்ருஷ்டிக்கும் போது ஏதேனுமொரு ப்ரயோஜனம் இருந்து தீர வேண்டும். உலகில் ஒருவன் ஒரு காரியத்தைச் செய்யும்போது நிஷ்ப்ரயோஜநமாகச் செய்யமாட்டான். ப்ரயோஜன மென்பது தன்னையுஞ் சேரும், பிறரையும் சேரும். ப்ரக்ருதத்தில் அவாப்தஸமஸ்தகாமனான பகவானுக்கு ஸ்ருஷ்டியினால் ஒரு ப்ரயோஜநமும் உண்டாக விரகில்லை. உண்டாகுமாகில் அவனை அவாப்தஸமஸ்தகாமனென்னப் போகாது. ஸ்ருஷ்டியினால் பகவானுக்கு ப்ரயோஜனமில்லையாகிலும் நம் போன்ற ஜீவர்களுக்கு ப்ரயோஜனமாகிற தென்னவும் இடமில்லை. ஆத்யாத்மிகாதி துக்கங்களுக்கே ஹேதுவாகின்ற ஸ்ருஷ்டியானது ஜீவர்களுக்கு ப்ரயோஜநப்பட விரகில்லையன்றோ. பகவானுக்குப் பக்ஷபாதித்வம் நிர்தயத்வமாகிற தோஷங்களை சங்கிக்கச் செய்வதாயுமுள்ளது ஜகத்ஸ்ருஷ்டி. ஆகவே பகவான் ஸ்ருஷ்டிகர்த்தாவாக இருக்க முடியாதென்று பூர்வபக்ஷம் செய்வதாகவுள்ளது இவ்வதிகரணத்தில் முதல் ஸூத்ரம் * ந ப்ரயோஜநவத்த்வாத் * என்பது. இங்கு ஸ்ருஷ்டே: என்றொருபதம் வருவித்துக்கொள்ள வேணும். ஸ்ருஷ்டியானது ப்ரயோஜனத்தோடு கூடியிருக்கவேண்டியதாகையாலே ப்ரஹ்மம் ஸ்ருஷ்டிகர்த்தாவாக இருக்கமுடியாதென்று ஸூத்ரத்திற்குப்பொருள். இதன் மேல் ஸித்தாந்த ஸூத்ரம் * லோகவத் து லீலா கைவல்யம் * என்பது. உலகில் ஸார்வபௌமனுயிருக்கு மோரரசன் ப்ரயோஜநாந்தர மொன்றையும் கணிசியாமலே லீலையாகவே பந்துவிளையாடல் முதலியன செய்யக் காணுநின்றோம். அதனால் அவனுடைய அவாப்தஸமஸ்தகாமத்வத்திற்குக் கொத்தை யொன்றுமில்லை. அதுபோலவே பரமபுருஷனும் லீலார்த்தமாகவே ஜகத்ஸ்ருஷ்டி பண்ணக்குறையில்லை யென்றபடி. * மன் பல்லுயிர்களுமாகிப் பலபல மாயமயக்குக்களால், இன்புறுமிவ் விளையாட்டுடையான் * என்று நம்மாழ்வாரும், * நாட்டைப் படையென்று அயன் முதலாத்தந்த நளிர்மாமலருந்தி வீட்டைப் பண்ணி விளையாடும் விமலன் * என்று ஆண்டாளு மருளிச்செய்தவை இங்கே அநுஸந்தேயம். விஷமஸ்ருஷ்டி காண்பதனாலே பகவானுக்குப் பக்ஷபாதித்வமும் நிர்தயத்வமும் சங்கிக்க நேர்கின்றதே யென்னில், அந்த சங்கை * வைஷம்ய நைர்க்ருண்யே ந ஸாபேக்ஷத்வாத் ததா ஹி தர்சயதி * என்கிற அடுத்த ஸூத்ரத்தினால் பரிஹரிக்கப் படுகிறது. அந்தந்த ஜீவர்கள் செய்த கருமங்களுக்குத் தக்கபடி நீசோச்ச ஸ்ருஷ்டிகள் ஏற்படுகிறபடியாலே பரமபுருஷனுக்கு வைஷம்யமோ நைர்க்ருண்யமோ ப்ரஸங்கிக்கமாட்டாதென்றபடி. இதன்மேலும் தோன்றுகிற சங்கைக்கு அடுத்த ஸூத்ரம் பரிஹாரமுணர்த்துகின்றமை கண்டுகொள்வது.

50. இனி இரண்டாமத்யாயத்தின் இரண்டாவது பாதத்தில் ஸர்வதாநுபபத்த்யதிகரணத்தின் ப்ரமேயம் நிரூபிக்கப்படுகிறது. ஸர்வசூந்யத்வவாதிகளான பௌத்த ஏகதேசிகளின் பக்ஷம் இங்கு நிரஸிக்கப்படுகிறது. பரப்ரஹ்மமே ஜகத்காரண மென்று நன்கு நிலைநாட்டத் தோன்றிய இந்த அத்யாயத்தில் ஸர்வசூந்யத்வ வாதத்தை நிரஸிக்க என்ன ப்ரஸக்தியென்று சிலர் நினைக்கக்கூடும். ஜகத்காரணவஸ்து ப்ரதாநமா? பரமாணுவா? பரப்ரஹ்மமா? என்கிற விசாரம் எப்போது பொருந்துமென்னில்; உண்மையில் ஜகதுத்பத்தி யென்பதொன்று நிரூபிக்க முடியுமானால் அப்போது பொருந்தும். அடியோடு இல்லாதவொரு பிள்ளைக்கு மாதாபிதாக்களைப்பற்றி விசாரம் செய்வதுண்டோ? ஜகதுத்பத்தியே நிரூபிக்கமுடியாததாயிருக்க, எது ஜகத்காரணம்? என்கிற சர்ச்சை ஏதுக்கு? உத்பத்தியானது भाव (பாவ) த்திலிருந்து அங்கிகரிக்கப்படுகிறதா? அபாவத்திலிருந்து அங்கிகரிக்கப்படுகிறதாவென்று கேட்கிறோம். भाव த்திலிருந்து என்பது சேராது; மண்பிண்டத்திலிருந்து பானை முதலியன உண்டாகின்றனவென்றால் மண்பிண்டத்தை உபமர்த்தித்துக் கொண்டுதானே யுண்டாகின்றன. எந்த காரியப் பொருளும் காரணப்பொருளை உபமர்த்தியாமல் உண்டாவதில்லை யென்பதைக் காணுகின்றோம். காரணாகாரத்தின் விநாசந்தானே உபமர்த்தமாவது; அதுதான் அபாவமே. ஆக भाव த்தில் நின்றும் உத்பத்தியில்லை யென்று தேறிற்று. அபாவத்தில் நின்றுங்கூட உத்பத்தியில்லையென்பது அநாயாஸமாகத் தெரியவரும். அபாவத்திலிருந்து भावோத்பத்தி ஸம்பவிக்கமாட்டாதன்றோ. ஆக உத்பத்தியே நிரூபிக்க முடியாதிருப்பதால் உத்பத்திக்குப் பிற்பட்டனவான விகாரங்கள் எதுவுமே கிடையாவென்பது ஸித்தம். லோகவ்யவஹாரமெல்லாம் ப்ரம மூலகமே. ஆக சூந்யமே தான் தத்துவம்=என்பவர்கள் இங்கு நிரஸிக்கப்படுகிறார்கள். * सर्वथाऽनुपपत्तेश्च * [ஸர்வதாநுபபத்தேச்ச] என்பது ஸூத்ரம். ப்ரமேயங்களோ ப்ரமாணங்களோ எதுவும் உண்டாகிலுமாம், இல்லையாகிலுமாம்; பூர்வபக்ஷிக்கு அபிமதமான சூந்யத்வம் தேறாதாகையாலே மாத்யமிகதர்சநம் அஸமஞ்ஜஸ மென்றபடி. 'ஸர்வம் சூந்யம்' என்று சொல்லுபவர்கள் தங்களுக்கு அபிமதமான இவ்வர்த்தத்தை ஸாதித்துத் தரும்படியான ப்ரமாணமொன்று உண்டென்று இசையும் பக்ஷத்தில் ப்ரமாண ஸத்பாவத்தை யிசைந்தபோதே ஸர்வசூந்யவாதம் தொலைந்தது. ப்ரமாணமில்லையென்னும் பக்ஷத்தில், ப்ரமாணமில்லாமையினாலேயே தங்களுக்கு அபிமதமான அர்த்தம் அஸித்தமென்று முடிந்தது. மேலும், 'ஸர்வம் சூந்யம' என்கிற விந்தவார்த்தையினால் நாஸ்தித்வந்தானே விவக்ஷிதமாக வேணும். ஒரு ரூபத்தை விட்டு மற்றொரு ரூபத்தையடைவதே நாஸ்தி பதார்த்தமாகையாலே ரூபாந்தரத்தாலே அஸ்தித்வமே சொல்லப்பட்டதாக முடிகிறது. மண்ணுண்டையொன்று இருந்தது. அது நசித்தவளவிலே 'ம்ருத்பிண்டோ நாஸ்தி' என்று சொல்லுகிறான். இந்த வ்யவஹாரத்தில் பானையென்கிற அவஸ்தைதானே விஷயமாகிறது.

51. உலகில் அஸ்தி நாஸ்தித்வங்களை வழங்குகிறவர்கள் 'இப்போது மண்ணுண்டையிருக்கிறது, இப்போது மண்ணுண்டையில்லை; இங்கு மண்ணுண்டையிருக்கிறது, இங்கு மண்ணுண்டையில்லை? என்றிப்படி இடத்தையும் காலத்தையும் உட்படுத்தியே வ்யவஹரிக்கிறார்கள். தேச காலங்களைச் சேர்க்காமல் வெறுமனே 'மண்ணுண்டையில்லை' என்கிற ப்ரதீதியோ வ்யவஹாரமோ எங்கும் காண்பதில்லை. 'இப்போது ம்ருத்பிண்டமிருக்கிறது' என்றோ 'இங்கு ம்ருத்பிண்டமிருக்கிறது' என்றோ ஒருவன் வ்யவஹரித்தால் மண் என்னும் த்ரவ்யத்திற்கு பிண்டத்வாவஸ்தை விஷயம். 'இப்போது ம்ருத்பிண்டமில்லை' என்றோ 'இங்கு ம்ருத்பிண்டமில்லை' என்றோ வ்யவஹரித்தால் பிண்டத்வாவஸ்தையின் நாசமாகிய घट (கட) த்வாவஸ்தை விஷயம். ஆக நாஸ்தித்வவ்யவஹாரம் பண்ணினாலுங்கூட வேறொரு ஆகாரத்தாலே அஸ்தித்வமே தேறி நிற்கிறதென்பதை ஸர்வாநுபவஸாக்ஷிகமாகக் காணலாம். இன்ன வஸ்து இங்கில்லை என்றால் மற்றோரிடத்திலுள்ளதாகத் தேறியே தீரும். இப்போதில்லையென்று

லும் மற்றொருபோதில் உண்டென்றதாகத் தேறியேவிடும். ஆகவே ஒருபடியாலும் ஸர்வசூந்யவாதம் ஸித்தியாது என்றதாயிற்று. ஸூத்ரத்தின்மேலே பொருள் காண்பது எங்ஙனே யென்னில்; ஸர்வதா—ஸர்வப்ரகாரத்தாலும், 'அநுபபத்தே:—ஸ்வாபிமதமான ஸர்வசூந்யவாதம் உபபந்நமாகாமையினாலே என்றபடி. 'ஸர்வப்ரகாரத்தாலும்' என்றதை ஸ்ரீ பாஷ்யாதிகளில் ஸ்வாமி விவரித்தருளும் போது " सदितिप्रतिज्ञायाम् असदितिप्रतिज्ञायां च " என்றருளிச்செய்கிறார். சங்கரபாஷ்யத்தில் இவ்விதமாக அர்த்தம் செய்யப்படவில்லை. ' देवदत्तः सर्वथा अयोग्यः, यज्ञदत्तः सर्वथा मूर्खः ' என்றால் இதற்கு எவ்விதமாகப் பொருள் கொள்கிறோமோ அவ்விதமாகவே சங்கராசாரியர் பொருள் கொண்டார். நம்ஸ்வாமி கொண்ட பொருள்தான் உண்மையில் ஸமஞ்ஜஸமானது. ஸ்வாமிக்கு இப்பொருள் தோன்றினது எதனாலென்னில்; திருவாய்மொழியில் (1—1—9) * உளனெனிலுளன் அவனுருவ மிவ்வுருவுகள், உளனலனெனில் அவனருவ மிவ்வருவுகள், உளனெனவிலனெனவிவைகுண முடைமையின், உளனிருதகைமையோ டொழிவிலன் பரந்தே * என்ற பாசுரங்கொண்டே இந்த ஸூத்ரத்தின் பொருளை ஸ்வாமி அறுதியிட்டருளினாரென்பது நிஸ்ஸந்தேஹம். அப்பாசுரத்தின் ஆறாயிரப்படியை ஸேவித்தால் இஃது எளிதிற் புலனாம். அப்பாட்டிற்குத் தமிழ் மொழியாலெழுதப் பட்டுள்ள பொருள்தான் ஸ்ரீபாஷ்யத்தில் வடமொழியாலெழுதப்பட்டுள்ளதென்க.

52. இனி மூன்றா மத்யாயத்தில் சிறிது செல்வோம். கீழ்க்கழிந்த இரண்டு அத்யாயங்களுள் முதலத்யாயத்தினால்—ஜகஜ் ஜந்மாதி காரணமாய் ஸர்வ சேஷியான வஸ்து பரப்ரஹ்மமே யென்றும், நான்முகன் சிவன் இந்திரன் முதலானவர்கள் அப் பரம புருஷனாலேயே தன்னுடைய லீலைக்காக ஸ்ருஷ்டிக்கப்பட்டு உபஸம்ஹரிக்கப்படுகிறார்களென்றும், அந்த பரமபுருஷன் ப்ரக்ருதி மண்டலத்திற்குப் புறம்பாய் நித்யஸூரி ஸேவிதமான ஸ்தாநவிசேஷத்திலே ஸ்வேச்சையினாலே சுடரொளி மயமான திவ்ய மங்கள விக்ரஹத்தைப் பரிக்ரஹித்து அப்ரமேயமான ஆனந்தத்தை யுடையனாய் தன்னடிபணிந்தார்க்கும் அபரிமிதமான ஆனந்தத்தை யளிப்பவனாய் ஸம்ஸாரபந்தத்தில் நின்றும் விடுபட்ட முக்த புருஷர்களினால் அநுபவிக்கப்பட்டுக் கொண்டிரா நின்றானென்றும் தெரிவிக்கும் முகத்தினால்—ஸம்ஸாரிகளுக்கு பகவதநுபவ குதூஹலத்தை யுண்டாக்குவதற்காக பரம புருஷார்த்தமான பகவத்ஸ்வரூப ஸ்வபாவாதிகள் நிரூபிக்கப் பட்டன. பிறகு இரண்டாமத்யாயம் செய்ததென்னென்னில்; முதலத்யாயத்தினால் நிரூபிக்கப்பட்ட அர்த்தம் ஸர்வாத்மநா அசைக்கமுடியாததென்று பரபக்ஷப்ரதிக்ஷேப பூர்வகமாக ஸாதித்ததுடன் ஸ்ரீ பாஞ்சராத்ர மென்கிற பகவத் ப்ரணீத சாஸ்த்ர விசேஷத்தினால் தேறிய பொருளென்றும் நிரூபித்து ஸகல சேதநாசேதநப் பொருள்களும் பரமபுருஷகார்யபூதங்களே யென்பதை நன்கு சோதிக்கும் முகத்தால் கார்ய ஸாமாந்யமும் பரப்ரஹ்ம கார்யமே யென்பதும் ஸ்தாபிக்கப்பட்டது. ஆக இரண்டத்யாயங்களாலும் புருஷார்த்த ஸ்வரூபம் நிச்சயிக்கப் பட்டதாகத் தேறிற்று. இப்படி புருஷார்த்த ஸ்வரூபம் நிச்சயிக்கப்பட்டாலும், அநாதிவாஸநா பலத்தாலே க்ஷுத்ர புருஷார்த்தங்களையே நச்சிக்கிடக்கும் ஸம்ஸாரிகளுக்குப் பரமபுருஷார்த்த ப்ராப்தியில் பதற்ற முண்டாகாமைக்குக் காரணம்—தாங்கள் விரும்பிய புருஷார்த்தங்கள் அல்பாஸ்திரங்களென்பதை ஆராய்ந்துணராமையே யென்று கருதிய சாஸ்த்ரகாரர், அந்த ஸம்ஸாரிகளுக்கு இதர புருஷார்த்தங்களில் வைராக்யத்தையும் பரம புருஷார்த்தத்தில் மிகுந்த ருசியையு முண்டாக்குவதற்காக கர்மபலங்களெல்லாம் க்ஷயிஷ்ணுக்களென்றும் பரமபுருஷ உபாஸநபலமான அபவர்க்கமொன்றே நித்ய புருஷார்த்தமென்றும் தெரிவித்து இவ்வழியாலே பரமபுருஷார்த்த ப்ராப்தியில் த்வராதிசயத்தை யுண்டாக்கவே பின்னிரண்டு அத்யாயங்களை அவதரிப்பிக்கின்றார். ஏற்கெனவே கர்மவிசாரம் செய்து அதன்பலன்களை நச்வரங்களென்றறிந்து வைராக்யம் பெற்றவனுக்கே ப்ரஹ்மமீமாம்

ஸையில் அதிகாரமென்று ஜிஜ்ஞாஸா ஸூத்ரத்திலேயே நிரூபிக்கப்பட்டிருப்பதனுல் மறுபடியும் வைராக்யத்தை யுண்டாக்குவதற்காக இந்த ப்ரயத்நம் வீணல்லவோ வென்று சிலர் சங்கிக்கவுங் கூடும்; ஆகிலும் கேண்மின்; பஞ்சாக்நி வித்யா நிரூபணத்திலுல் விஷயங்களில் எப்படிப்பட்ட வைராக்யம் உண்டாகுமோ அது கர்ம விசாரத்திலுல் உண்டாகமாட்டாதென்று கருதியே இங்கு புநஃப்ரயத்நம் கொள்ளப்படு கிறது. ஆகவே இது நிஷ்ப்பலமன்று, ஸபலமே. இந்த மூன்றுமத்யாயத்தின் முதற் பாதத்தில் பஞ்சாக்நி வித்யா நிரூபணம் செய்து கர்ம பலன்களெல்லாமும் நச்வரங்க ளென்றும் நரகதுல்யங்களென்றும் தெரிவிக்கப்படுகிறது. மூன்றுமத்யாயமானது பரம புருஷப்ராப்திக்கு உபாயத்தைத் தெரிவிப்பதென்றும், நான்காமத்யாயமானது உபாய பலமான உபேயத்தைத் தெரிவிப்பதென்றும் நெஞ்சிற்கொள்க.

53. உபய லிங்காதிகரணத்தின் ப்ரமேயம் நிரூபிக்கப்படுகிறது. இது மூன்று மத்யாயத்தின் இரண்டாவது பாதத்திலுள்ளது. ஜீவாத்மாவானவன் ஜாக்ரத் ஸ்வப்ந ஸுஷுப்தி மூர்ச்சாதி அவஸ்தைகளுக்கு ஹேதுவான நாநா சரீரங்களை ஏற்றுக்கொண்டு அவ்வவஸ்தைகளில் ஸுகதுக்கங்களை யநுபவிக்கிறு னென்னுமிடம் கீழே நிரூபிக்கப் பட்டது. அப்படிப்பட்ட ஜீவனுலே அதிஷ்டிதமான சரீரத்தில் பரமாத்மாவும் ஸம்ப தப்பட்டிருந்தாலும் தத்ப்ரயுக்தமான ஸுகதுக்காதி அபுருஷார்த்தலேசமும் தன்னிட தில் ஒட்டப்பெறுமலிருக்கிறுனென்பதையும் கல்யாணகுணக்கடலாயிருக்கிறுனென்ப தையும் நிரூபிக்க இவ்வதிகரணம் தோன்றியது. * न स्थानतोऽपि परस्योभयलिङ्गं सर्वत्र हि * [ந ஸ்தாநதோபி பரஸ்யோபயலிங்கம் ஸர்வத்ர ஹி] என்பது இவ்வதிகரணத்திற்குத் த யானஸூத்ரம். பரஸ்ய-பரமபுருஷனுக்கு, ஸ்தாநத: அபி-ஜீவாதிஷ்டித நாநாசரீரங்களில் இருப்பு இருந்தாலும், ந—அபுருஷார்த்த ஸுகதுக்க ஸம்பந்தம் கிடையாது. (இதற்கு ஹேதுவென்னெனில்;) ஸர்வத்ர ஹி உபயலிங்கம்—பரமபுருஷன் ஸர்வச்ருதிஸ்மிருதிகளி லும் ஹேயப்ரத்யநீகத்வம் கல்யாணகதாநத்வம் என்கிற இரண்டு அஸாதாரண தர்மங் ளோடு கூடியவனுக ப்ரதிபாதிக்கப்படுகையாலே—என்பது ஸூத்ரத்தின் பொருள்

இதைச்சிறிது விவரிப்போம். * अपहतपाप्मा विजरो विमृत्युर्विशोको विजिघत्सोऽपिपासस्सत्यकामस्स त्यसंकल्पः * இத்யாதிச்ருதிகளும், *परः पराणां सकला न यत्र क्लेशादयस्सन्ति परावरेशे* இத்யாதி ஸ்ம்ருதிகளிலும் பரமபுருஷன் இயற்கையாகவே ஹேயப்ரத்யநீகனுயும் கல்யாணகுண கரனுயுமிருக்கிறுனென்று சொல்லப்படுகையாலே ஹேயப்ரதிபடனுன அப்பரமபுருஷ னிடத்தில் சரீரஸம்பந்தமானது அபுருஷார்த்த ஸுகது:க்காபத்திக்கு ஹேதுவாகமாட் டாது. அவன் அபஹதபாப்மாவெனப்படுகிறுன். அபஹதபாப்மத்வமாவது இன்ன தென்பதைக் கீழே ஆநந்தமயாதிகரணத்தில் விவரித்திருக்கிறேம். புண்யபாபரூப கரு மங்களின் பலன் ஸ்பர்சிக்கப்பெறுதிருத்தலே அபஹதபாப்மத்வமாம். அதாவது, புண்ய பாப ஸஜாதீயங்களான கருமங்களைத்தான் செய்தாலும் அவை பலன் கொடுக்கும்ப யான சக்தியைப் பெறுதபடி அந்த சக்தியைத் தொலைத்திடுகையேயாம். ஹேயப்ரத் நீகத்வமென்பதும் இதுவே. இப்படி விலக்ஷணசக்தியுக்தனுன பரமபுருஷனிடத்தில் ஹேயதேஹஸம்பந்த முண்டானுலும் அது அபுருஷார்த்த ஸுகதுக்க ஸமுத்பாதகமா ஆகமாட்டாது. ஹேயதேஹஸம்பந்தமானது கர்மாதீநமன்றிக்கே ஸ்வேச்சாக்ருதம கையாலே. இதற்குமேல் ஒரு சங்கைதோன்றும்: பரமபுருஷனுக்கு தேஹஸம்பந்த கர்மப்ரயுக்தமன்றிக்கே ஸ்வேச்சாக்ருதமாகவே யிருக்கட்டும். ஹேயஸம்பந்தமான வஸ்துஸ்வபாவத்தாலே அபுருஷார்த்தாபாதகமாகியே தீருமன்றே. மாம்ஸாஸ்ருக்பூ விண்மூத்ரவெள்ளத்தில் ஒருவன் ஸ்வேச்சையினுலே அமிழ்ந்தாலும் ஹேயஸம்பந் முண்டாகித்தானே தீரும்—என்று சங்கிக்கக்கூடும். இங்கு உணரவேண்டிய தத்துவம வது—ஹேயத்வமென்பது கர்மக்ருதமேயொழிய வஸ்துஸ்வபாவப்ரயுக்தமன்று. ஸ

ஸாரதசையில் எந்தவஸ்துவும் அநுகூலமாகத் தோன்றுவதும் ப்ரதிகூலமாகத்தோன்றுவதும் வஸ்துஸ்வபாவத்தாலன்று. அப்படியாகில் எதுவும் எவனுக்கும் அநுகூலமாகவேயோ ப்ரதிகூலமாகவேயோ இருந்து தீரவேணும். இப்படி எங்கும் காணப்படவில்லை. இன்று அநுகூலமானதே நாளைக்கு ப்ரதிகூலமாகிறது. அதுதானே மற்றொருநாள் அநுகூலமாகிறது. ஆகவே எந்த வஸ்துவும் ஸம்ஸார தசையில் அநுகூலமாயிருப்பதும் ப்ரதிகூலமாயிருப்பதும் கர்மக்ருதமேயாதலால் அகர்மவச்யனான பரமபுருஷனுக்கு ஸர்வவஸ்துக்களும் தன் விபூதியாய்க்கொண்டு அநுகூலமாகவேயிருக்குமென்று கொள்ளக்கடவது. ஆகவே ஹேயபூத தேஹஸம்பந்தம் பரமபுருஷனிடத்தில் அபுருஷார்த்தாபாதகமாகாதென்க. இந்த சாரீரக மீமாம்ஸையிலேயே முதலத்யாயத்தின் இரண்டாவது பாதத்தில் * संभोगप्राप्तिरितिचेन्न वैशेष्यात् * भोक्त्रापत्तेरविभागश्चेत्स्याल्लोकवत् * என்கிற ஸூத்திரங்களில்—பரமாத்மாவுக்கு ஜீவாதிஷ்டித சரீர ஸம்பந்தமிருந்தாலும் அகர்மவச்யனாகையாலே ஸுகதுःக்காதிரூப கர்மபலஸ்பர்சமில்லை யென்னுமிடம் நிரூபிக்கப்பட்டே யிருப்பதால் இவ்வதிகரணம் அத்தோடு புநருக்தமாகிறதே யென்று சிலர் சங்கிக்கக் கூடும். அவ்விடத்துப் பூர்வபக்ஷ சரீரம் வேறு, இவ்விடத்துப் பூர்வபக்ஷ சரீரம் வேறு என்பதை ஸூக்ஷ்மேக்ஷிகையாலுணரவேணும். இங்கு விரிவுக்கு அஞ்சி நிற்கிறோம்.

54. இனி, மூன்றுமத்யாயத்தின் கடைசி பாதத்திலுள்ள ஸர்வாந்நாநுமத்யதிகரணம் பற்றிப் பேசுவோம். இதற்கு முந்தின அதிகரணத்தில் ப்ரஹ்மவித்யா நிஷ்டனுக்கு சமம் ஆவச்யகமென்று சொல்லிற்று. போஜந நியமமாகிற சமவிசேஷம் ப்ரஹ்மவித்துக்கு உண்டா இல்லையா என்பதை விசாரித்து நிர்ணயிக்க இவ்வதிகரணம் தோன்றியது. * सर्वान्नानुमतिश्च प्राणात्यये तद्दर्शनात् * [ஸர்வாந்நாநுமதிச்ச ப்ராணாத்யயே தத்தர்சநாத்] என்பது ஸூத்ரம். சசப்தமானது அவதாரணப்பொருளது. ப்ராண வித்யா நிஷ்டன் எந்த அன்னத்தையும் புஜிக்கலாமென்று அனுமதிப்பது ப்ராணாபத்தசையைப்பற்றியதேயாம்; ப்ரஹ்மவித்தான அதிகாரியின் விஷயத்தில் ப்ராணாபத் விஷயமாகவே காண்கையாலே—என்று ஸூத்ரார்த்தம். இங்கு பூர்வபக்ஷம்; சாந்தோக்யத்தில் ஐந்தாவது ப்ரபாடகத்தில் ப்ராண வித்யாப்ரகரணத்தில் * न ह वा एवंविदि किञ्चन अनन्नं भवति * என்று ஓதப்பட்டிருக்கிறது. ப்ராண வித்யா நிஷ்டனுக்கு அன்னமாகாதது எதுவுமில்லை யென்று இதற்குப் பொருள். ப்ராண வித்யா நிஷ்டனுக்கு நிஷித்தாந்ந போஜனமும் ஸர்வதா கூடுமென்றும், வித்யா மாஹாத்மியத்தினால் இதில் தவறில்லை யென்றும் சொல்லுவதாகத் தெரிகிறது. அல்ப சக்திகனான ப்ராண வித்யா நிஷ்டனுக்கே நிஷித்தாந்ந போஜனம் அனுமதிக்கப்படுமானால் ப்ரஹ்ம வித்யா நிஷ்டனுக்கு அந்த அநுமதி கைமுதிக ந்யாய ஸித்தமே—என்று பூர்வபக்ஷம். இதன்மேல் ஸித்தாந்தம் வருமாறு:—ப்ரஹ்ம வித்யா நிஷ்டனான உஷஸ்தன் ப்ராணாபத் தசையில் ஒரு யானைப் பாகன் உண்டு மிகுந்த காருமணியை புஜித்து அதனால் உயிர்தரிக்கப் பெற்றானென்றும், பிறகு அந்த ஆனைப்பாகன் கொடுத்த பானத்தை அவன் [உஷஸ்தன்] ஏற்றுக்கொள்ளவில்லையென்றும் சாந்தோக்யத்தில் முதல் ப்ரபாடகத்தில் (கண்டம்-9) உஷஸ்த வ்ருத்தாந்த ப்ரகரணத்தில் காண்கிறது. இதனால், மஹா மஹிமசாலியான ப்ரஹ்மவித்துக்கும் நிஷித்தாந்நபக்ஷணம் ஆபத்விஷயமென்று தெரிவதனாலும், * आहारशुद्धौ सत्त्वशुद्धिः ; सत्त्वशुद्धौ ध्रुवा स्मृतिः * என்று ஆஹார சுத்தி ஆவச்யகமென்று தெரிவதாலும், * प्राणसंशयमापन्नो योऽन्नमत्ति यतस्ततः । लिप्यते न स पापेन पद्मपत्रमिवाम्भसा * என்று ப்ராஹ்மண ஸாமாந்யத்திற்கும் ஆபத்காலத்தில் ஸர்வாந்நமும் அநுமதிக்கப்படுவதாகக் காண்கையாலும் ப்ரஹ்மவித்தான அதிகாரி விசேஷத்திற்கும் ஸர்வாந்நாநுமதியானது ஆபத்கால மாத்ரவிஷயகமென்று ஸித்திக்கும்போது, அல்பசக்தியான ப்ராணோபாஸகனுக்குக் காணும் ஸர்வாந்நாநுமதியும் ஆபத் விஷயகந்தானென்பது பற்றிச் சொல்லவேணுமோ?

55. இனி நான்காவது அத்யாயத்திற்குச் செல்வோம். பெரும்பாலும் உபாஸநபரமாகச் சென்றது மூன்றுமத்யாயம். உபாஸநத்தின் பலனை நிரூபிக்க அவதரிக்

கின்றது நாலாமத்யாயம். இதில் முதலதிகரணம் ஆவ்ருத்த்யதிகரணம். மோக்ஷத்திற்கு உபாயபூதமான பகவதுபாஸநம் அஸக்ருதாவ்ருத்தி ரூபம் (அதாவது); தைலதாராவத் அவிச்சிந்ந ஸ்ம்ருதி ஸந்தான ரூபம் ; ஏனென்னில், * ब्रह्मविदाप्नोति परम् * இத்யாதிகளில் விதிக்கப்பட்ட வேதநமானது அவிச்சிந்ந ஸ்ம்ருதி ஸந்தாந ரூபத்யாநத்வாவஸ்தையை யுடையதென்று சாஸ்த்ரம் சொல்லுகையாலே—என்னும் பொருளதான ஸூத்ரம் * आवृत्तिरसकृदुपदेशात् * [ஆவ்ருத்தி ரஸக்ருதுபதேசாத்] என்பது முதல் ஸூத்ரம். இங்கு பூர்வபக்ஷம் ;—* ज्योतिष्टोमेन स्वर्गकामो यजेत * இத்யாதிகளில் ஸ்வர்க்க ஸாதநமாக விதிக்கப்பட்ட யாகாதிகள் ஸக்ருத்கரணத்தாலேயே எப்படி ஸ்வர்க்காதி பல ஸாதகமாகிறதோ அப்படி இங்கும் *ப்ரஹ்மவிதாப்நோதி பரம்* இத்யாதிகளில் மோக்ஷஸாதநமாக விதிக்கப்பட்ட பகவச்சிந்தநரூபமான வேதநமும் ஸக்ருதநுஷ்டாநத்தாலேயே மோக்ஷ ஸாதகமாகக் கூடுமாதலால் அது ஒருகாலே செய்யப்பட வேண்டுமென்று. இப்பூர்வ பக்ஷத்தின்மேல் ஸித்தாந்தம் வருமாறு :—வேதாந்த சாஸ்த்ரங்களில் மோக்ஷஸாதநமானதைச் சொல்லி வருமடைவுகளில் வேதநம், உபாஸநம், த்யாநம், த்ருவாஸ்ம்ருதி, ஸாக்ஷாத்காரம், பக்தி என்கிற சப்தங்கள் காணப்படுகின்றன. இவையெல்லாம் பர்யாயபதங்களென்று நிச்சயிக்கப்படுமிடத்து தைலதாராவத் அவிச்சிந்ந ஸ்ம்ருதி ஸந்தாந ரூபமானதென்றே அறுதியிட வேண்டியதாகிறது. ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் (6—7—91). * तद्रूपप्रत्यये चैका सन्ततिश्चान्यनिःस्पृहा । तद्ध्यानं प्रथमैः षड्भिरङ्गैर्निष्पाद्यते नृप * இத்யாதி ச்லோகங்களும் *பக்த்யா த்வநந்யயா சக்ய: அஹமேவம் விதோர்ஜுந* இத்யாதி கீதா ச்லோகங்களும் இதையே வற்புறுத்துகின்றன. மேலே ஆறுவதாக ஆப்ரயாணாதிகரண முள்ளது. *ஆப்ரயாணாத் தத்ராபி ஹி த்ருஷ்டம்* என்பது ஸூத்ரம். மோக்ஷஸாதநமான ப்ரஹ்மோபாஸநமானது மரணாந்தமாக அநுஷ்டிக்கப்பட வேண்டுமென்று அதில் நிகமிக்கப்படுகின்றமையறிக.

56. இனி, தததிகமாதிகரணத்தின் ப்ரமேயம் நிரூபிக்கப்படுகிறது. * तदधिगम उत्तरपूर्वाघयोरश्लेषविनाशौ तद्व्यपदेशात् * [தததிகம உத்தரபூர்வாகயோரச்லேஷவிநாசௌ தத்வ்யபதேசாத்] என்பது ஸூத்ரம். ப்ரஹ்மவித்யாநிஷ்டனுக்கு ஸாக்ஷாத்காராவஸ்தையையடைந்த ப்ரஹ்மவித்யா நிஷ்பத்தியுண்டாகுமளவில் ப்ரஹ்மவித்யாமஹிமையினாலே பூர்வபாபங்களுக்கு விநாசமும் உத்தரபாபங்களுக்கு அச்லேஷமுமாகும்; ச்ருதிகளில் அப்படி சொல்லியிருப்பதனாலே—என்பது ஸூத்ரார்த்தம். ப்ரஹ்மஜ்ஞானத்திற்கு முன்புசெய்த பாபங்கள் நசித்துப் போய்விடும் ; பிறகு அபுத்தி பூர்வகமாக நேரும் பாபங்கள் தாமரையிலையில் தண்ணீர்போல ஒட்டமாட்டா என்றபடி. சாந்தோக்யச்ருதியில் உபகோஸல வித்யாப்ரகரணத்தில் * यथा पुष्करपलाशे आपो न श्लिष्यन्ते एवमेवंविदि पापं कर्म न श्लिष्यते " என்றும், அவ்விடத்திலேயே வைச்வாநரவித்யாப்ரகரணத்தில் * यथेषीकतूलमग्नौ प्रोतं प्रदूयेत एवं हास्य सर्वे पाप्मानः प्रदूयन्ते * என்றும் ப்ரஹ்மவித்யையின் பலன் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆகையாலே உத்தரபாபங்களுக்கு அச்லேஷமும் பூர்வபாபங்களுக்கு விநாசமும் சொல்லப்படுகிற தென்கை. இங்குப் பூர்வபக்ஷம் ; * नाभुक्तं क्षीयते कर्म कल्पकोटिशतैरपि * [நாபுக்தம் க்ஷீயதே கர்ம கல்பகோடிசதைரபி] என்று பலனை யநுபவித்தே கருமங்களைத் தொலைக்க வேணுமென்று ப்ரஹ்மவைவர்த்தத்தில் சொல்லியிருக்கையாலே கர்மபலன்களை அநுபவித்தே தீரவேண்டும் ; ப்ரஹ்மவித்யையினாலேயே கருமங்கள் தீர்ந்து போவதாகச் சொல்லுவது ப்ரசம்ஸாபரமான வார்த்தையாமத்தனை—என்று. இதன்மேல் ஸித்தாந்தம் வருமாறு ; பூர்வபாபங்களுக்கு விநாசமும் உத்தரபாபங்களுக்கு அச்லேஷமும் ப்ரஹ்மவித்யா ப்ரபாவத்தாலே நேருவதாகப்பல உபநிஷத்துக்கள் கூறியிருப்பது அபலபிக்க முடியாதது. *நாபுக்தம் க்ஷீயதே கர்ம* என்ற வசனமும் யுக்தமானதே ; அது ப்ரஹ்மவித்துக்களல்லாத ஸாமாந்யர் விஷயமாக ஓதுக்கத்தகும். ஆகவே இவை பரஸ்பர அவிருத்தங்களான வசனங்களேயாம். 'நெருப்பு வீட்டைக் கொளுத்தியே தீரும்

என்று ஒருவன் சொல்லுகிறான் ; 'பற்றியெரிகிற நெருப்பைத் தண்ணீர் அணைத்தே தீரும்' என்று மற்றொருவன் சொல்லுகிறான். இவற்றில் பரஸ்பரவிரோதம் சிறிதேனு முண்டோ? தண்ணீர் இல்லையானால் படர்ந்தெரிகிற நெருப்பு வீட்டைக் கொளுத் தியே தீருமென்றும், தண்ணீரையிட்டு அணைத்தால் நெருப்பு ஓய்ந்துவிடுமென்றும் அர்த்தமாகவில்லையோ. அதுபோல, ப்ரஹ்மவித்யை இல்லாதவளவில் கர்மங்கள் பல னைக் கொடுத்தேதீருமென்றும், ப்ரஹ்மவித்யையுண்டாகில் கருமங்களின் சக்தி ப்ரதி ஹதமாய் விடுமென்றும் எளிதாக அர்த்தமாகுமன்றோ.

57. இனி நிசாதிகரணத்தைப் பற்றிப் பேசுவோம். * निशि नेतिचेन्न संबन्धस्य यावद्देहभावित्वात् दर्शयति च * என்கிற ஒரு ஸூத்ரமே கொண்டது இவ்வதிகரணம். இரவில் இறந்தவற்கு ப்ரஹ்மப்ராப்தி உண்டா இல்லையா என்று விசாரிக்கப்படு கிறது. நிசி மரணத்தைப்பற்றி சாஸ்த்ரங்களில் இழிவாகச் சொல்லப்பட்டிருப் பதனால் பரமபுருஷார்த்தமான மோக்ஷமானது ஸம்பவிக்கமாட்டாது. பகலில் மரணமே சாஸ்த்ரங்களில் ப்ரசஸ்தமாகக் காண்கிறது. நிசாமரணம் இதற்கு விபரீதமானது. * दिवा च शुक्लपक्षश्च उत्तरायणमेव च। मुमूर्षतां प्रशस्तानि विपरीतं तु गर्हितम्॥ * என்று ஸ்பஷ்டமாக சாஸ்த்ரமிருப்பதால் நிசிமரணம் அதமகதிக்கே ஹேதுவாகுமாத லால் இரவில் இறப்பவற்கு ப்ரஹ்மப்ராப்தி ஸம்பவிக்கமாட்டாது என்று பூர்வபக்ஷம் ப்ராப்தமாக, இதன்மேல் ஸித்தாந்தம் வருமாறு :—ப்ரஹ்மவித்துக்களுக்கு கர்மஸம்பந் தம் தேஹமுள்ள வரைக்குமேயாதலால் நிசிமரணம் ப்ரஹ்மவித்துக்களுக்கு பாதக மாகாது. (இதைச்சிறிது விவரிப்போம்.) பாபகருமங்கள் ஆரப்தகார்யங்களென்றும் அநாரப்தகார்யங்களென்றும் இருவகைப்படும். இன்னமும் பூர்வபாபங்களென்றும் உத்தரபாபங்களென்றும் இருவகைப்படும். பலன் கொடுக்கத் தொடங்கிவிட்ட கருமங்கள் ஆரப்தகார்யங்களெனப்படும். இவையே ப்ராரப்த கர்மமென்று வழங்கப் பெறும். பலன் கொடுக்கத் தொடங்காத தீவினைகள் அநாரப்தகார்யங்களெனப்படும். ஸஞ்சிதகர்மமென்பது இதுவே. ப்ரஹ்மவித்யையை ஸம்பாதிப்பதற்கு முன்னே செய் யப்பட்ட பாபங்கள் பூர்வபாபங்களெனப்படும். அதற்குப் பிறகு புத்திபூர்வமான பாபங்கள் நேருவதற்கு ப்ரஸக்தியில்லாமையாலே அபுத்திபூர்வமாகவும் அகதிகமாகவும் நேருமவை உத்தரபாப மெனப்படுமென்று இதை முன்னமே சொன்னோம். இவற்றுள் அநாரப்த கார்யங்களான கருமங்கள் ப்ரஹ்மவித்யாஸம்பந்த முண்டானவன்றே தொலைந்து போயினவாதலாலும், உத்தரபாபங்கள் ப்ரஹ்மவித்துக்களிடத்தில் ஒட்ட மாட்டாவென்று சொல்லப்படுகையாலும் ப்ராரப்த கர்மமொன்றே சேஷித்து நிற்கிறது. அக்கருமம் சரமதேஹத்தோடு கழியுமாதலால் பந்தஹேதுவாகமாட்டாது. ஆகவே ப்ரஹ்மவித்துக்களுக்கு நிசிமரணம் நேர்ந்தாலும் பரமபுருஷார்த்தமான ப்ரஹ்மப்ராப்திக் குக் குறையில்லையென்றதாயிற்று. *திவா ச சுக்லபக்ஷச் ச* என்று கீழே காட்டின வசனம் ப்ரஹ்மவித்துக்களல்லாதார் விஷயமென்றும் முடிந்தது.

58. இதற்கு மேலுள்ள தக்ஷிணாயநாதிகரணத்தின் ப்ரமேயமும் விவரிக்கப் படுகிறது. * अतश्च अयनेऽपि दक्षिणे * என்கிற ஒரு ஸூத்ரமே கொண்டது இவ்வதி கரணமும். நிசிமரணமடைந்தாலும் ப்ரஹ்மப்ராப்திக்குக் குறையில்லையென்பதற்கு, முந்தின அதிகரணத்தில் எந்த ஹேது சொல்லப்பட்டதோ, அந்த ஹேதுவினாலேயே தக்ஷிணாயநத்தில் மரணமடைந்தவற்கும் ப்ரஹ்மப்ராப்தியில் குறையில்லை யென்பது ஸித்தமே. ஆனாலும் இவ்வதிகரணத்தில் அதிகப்படியான சங்கை என்னவென்றால், தைத்திரீய உபநிஷத்தில் * अथ यो दक्षिणे प्रमीयते पितृणामेव महिमानं गत्वा चन्द्रमसस्सायुज्यं गच्छति * என்று, தக்ஷிணாயநத்தில் மரணமடைந்தவற்கு சந்த்ரப்ராப்தி சொல்லப் படுகிறது ; சந்த்ரப்ராப்தி பெற்றவர்களுக்குப் புநராவ்ருத்தியும் சொல்லப்படுகிறது. பீஷ்மர் முதலான சில ப்ரஹ்மவித்துக்களும் உத்தராயணப்ரதீக்ஷை பண்ணினதாகத் தெரியவருகிறது. ஆக இக்காரணங்களினால் தக்ஷிணாயனத்தில் இறந்தவற்கு ப்ரஹ்ம ப்ராப்தி ஸம்பவிக்க ஔசித்யமில்லை—என்பதாம். இதற்குப் பரிஹாரமாவது, சந்த்ர ப்ராப்தியினால் புநராவ்ருத்தியென்பது ப்ரஹ்மவித்துக்களல்லாதார்க்கேயொழிய ப்ரஹ்ம

வித்துக்களுக்கன்று. ப்ரஹ்மவித்துக்களுக்கும் சந்த்ரப்ராப்தியுண்டானாலும் அது இடையில் இளைப்பாறும் ஸ்தானமாகுமத்தனை. பந்தஹேதுவான கருமம் தொலைந்து விட்டதென்கிற பூர்வோக்த ஹேதுவுக்குக் கண்ணழிவில்லாமையாலே ப்ரஹ்மப்ராப்தி அவர்ஜநீயமாகவே தேறும். பீஷ்மர் உத்தராயணப்ரதீக்ஷை பண்ணினாரென்ற விஷயத்தில் அறியத்தக்கதொன்றுண்டு. அவர் மதுவித்யாநிஷ்டர். மதுவித்யா ப்ரபாவத்தினால் ஸ்வச்சந்த மரணத்வமுள்ளது. அதனாலும், உத்தராயணத்தின் மேன்மையைக் காட்டவேண்டியும் அவர் உத்தராயணப்ரதீக்ஷை பண்ணினவளவால் தக்ஷிணாயனத்தில் மரணமடைந்தவர்களுக்கு ப்ரஹ்மப்ராப்தியில் கண்ணழிவு சொல்லமுடியாது. ஆக இவ்வளவால், ப்ரஹ்மவித்துக்களுக்கு நிசிமரணமோ க்ருஷ்ணபக்ஷமரணமோ தக்ஷிணாயநமரணமோ நேர்ந்தாலுங்கூட பரமபுருஷார்த்த ப்ராப்தியில் குறையில்லையென்றதாயிற்று.

59. இனி, சாரீரக மீமாம்ஸையில் முடிவான அதிகரணமாகிய ஜகத்வ்யாபாரவர்ஜாதிகரணத்தின் ப்ரமேயம் தெரிவிக்கப்படுகிறது. முக்த புருஷனுக்கு ஜகத்ஸ்ருஷ்டியில் அதிகாரமில்லையென்பதும் பரம பதத்தினின்று மீட்சியில்லையென்பதும் இவ்வதிகரணத்தில் தெரிவிக்கப்படுகின்றன. இவ்வதிகரணத்திற்கு * जगद्व्यापारवर्जं प्रकरणादसन्निहितत्वाच्च * என்பது முதல் ஸூத்ரம்; * अनावृत्तिश्शब्दादनावृत्तिश्शब्दात् * என்பது முடிவான ஸூத்ரம். முதல் ஸூத்ரத்தின் அர்த்தமாவது, முக்தனுடைய ஐச்வர்யம் ஜகந்நியமனத்தைத் தவிர்த்தேயாம். ஏனென்னில்; பரப்ரஹ்மத்தைக் குறித்துச் சொல்லும் ப்ரகரணங்களிலேயே ஜகத்ஸ்ருஷ்டி முதலானவற்றைச் சொல்லியிருக்கிறபடியாலும், அவற்றைச் சொல்லும் ப்ரகரணங்களில் ஜீவன் ப்ரஸ்துதனாக இல்லாமையாலும்—என்பதாம். இங்கு பூர்வபக்ஷம் வருமாறு;—முண்டகோபநிஷத்தில் *यदा पश्यः पश्यते रुक्मवर्णं कर्तारमीशं पुरुषं ब्रह्मयोनिम् । तदा विद्वान् पुण्यपापे विधूय निरञ्जनः परमं साम्यमुपैति * என்று முக்தனுக்குப் பரப்ரஹ்மத்தோடு ஸாம்யம் ஓதப்பட்டுள்ளது. இன்னமும் சாந்தோக்யோபநிஷத்தில் * स यदि पितृलोककामो भवति संकल्पादेवास्य पितरस्समुत्तिष्ठन्ति * இத்யாதி வாக்யங்களாலே முக்த புருஷனுக்கு ஸத்ய ஸங்கல்பத்வமும் ஓதப்படுகிறது. இவ்விரண்டும் முக்தனுக்கு ஜகந்நியாமகத்வரூபமான ஜகதீச்வரத்வமிருந்தாலொழியப் பொருந்தமாட்டாது. முக்தனுக்கு ஈச்வரத்வமில்லையானால் ப்ரஹ்மத்தோடு பரமஸாம்ய முண்டாவதாகச் சொல்வது சேராது. ஆகையாலே முக்தனுக்கும் பரப்ரஹ்மத்திற்குப் போலவே ஜகந்நியாமகத்வரூபமான ஈச்வரத்வத்தை அவசியம் இசைந்து தீரவேண்டும். ஆனது பற்றியே முக்தனைப்பற்றி ஓதுமிடங்களில் *स स्वराड् भवति ; तस्य सर्वेषु लोकेषु कामचारो भवति । * என்றும் * इमान् लोकान् कामान्नी कामरूप्यनुसञ्चरन् * என்றும் சொல்லப்படுகிற ஸர்வலோக ஸஞ்சாரமும் காமாந்நித்வமும் காமரூபித்வமும் பொருந்துகின்றன. ஸர்வலோக ஸஞ்சாரமென்பது ஸர்வலோக நியமனத்திற்காகத்தானே; அது தவிர மற்றொரு பலனும் தேறுகின்றதில்லையாகையாலே ஜகந்நியமனம் முக்தனுக்கு ஸித்தித்தே தீரும். காமாந்நித்வாதிகள் சொன்னபோதே லோகங்கள் அவனுக்கு அதீன மென்பது தேறி நிற்கும். ஆனால் இதற்கு மேல் ஒன்று சொல்லலாம்; முக்தனுக்கு ஸர்வலோக ஸஞ்சாரமானது ஆங்காங்கு போக்ய பதார்த்தங்களை அநுபவிப்பதற்காகவேயொழிய உலகங்களை நியமிப்பதற்காகவன்று என்று சொல்லலாம்; இதுவும் சொல்லமுடியாது; விகாராஸ்பதங்களாகையாலே ஹேயங்களாயிருக்கின்ற லோகங்களையும் அவற்றிலுள்ள பொருள்களையும் போக்யமாகக் கொள்ள ப்ரஸக்தியில்லையன்றோ, அவை ஹேயங்களானாலும் ஸ்வாமியான பரமபுருஷனுடைய விபூதியாகையாலே அவற்றில் போக்யதாபுத்தி ஸம்பவிக்கலாமாகையாலே அவற்றை புஜிக்கைக்காகவே அவ்வோ லோகங்களில் ஸஞ்சாரம் ப்ராப்தமாகிறது என்கிற வாதமும் ஒவ்வாது. சாந்தோக்யத்தில் * ஸ ஸ்வராட் பவதி * என்று ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கையாலே முக்தனுக்கு வேறு யாரும் அதிபதியல்லரென்று நன்கு அறியலாகிறது. முக்திதசையில் முக்தனைக்குறித்து பரப்ரஹ்மம் சேஷியன்று என்று தேறுவதால் ஸ்வாமியின் விபூதிகளையநுபவிப்பதற்காக ஸர்வலோக

ஸஞ்சாரமென்பது பொருந்தாது; அது நியமனார்த்தமாகவே தான்; ஆகவே முக்தனுக்கும் ஜகத்வ்யாபாரமுண்டு—என்பதாகப் பூர்வபக்ஷம் ப்ராப்தமாகிறது.

60. இதன்மேல் ஸித்தாந்தம் வருமாறு :— *யதோ வா இமானி பூதானி ஜாயந்தே* இத்யாதியுபநிஷத் வாக்யத்தில் ஜகத்ஸ்ருஷ்ட்யாதி ரூபமான நியாமகத்வத்தைப் பரப்ரஹ்ம லக்ஷணமாகச் சொல்லியிருக்கையாலே அது பரப்ரஹ்மத்திற்கு அஸாதாரண மானதென்று விளங்குகிறது. அஸாதாரண தர்மந்தானே லக்ஷணமாயிருக்க முடியும் ஆகவே பரப்ரஹ்மத்திற்கு அஸாதாரணதர்மமாக ஓதப்பட்ட ஜகந்நியாமகத்வரூபமான ஜகதீச்வரத்வமானது முக்தனுக்கு ஸம்பவிக்கமாட்டாது. ஸம்பவிக்குமாகில் அது பரப்ரஹ்மத்திற்கு அஸாதாரண லக்ஷணமாக வழியில்லை. * भीषाऽस्माद्वातः पवते....* एतस्य वा अक्षरस्य प्रशासने गार्गि सूर्याचन्द्रमसौ विधृतौ तिष्ठतः * இத்யாதிச்ருதிகளாலும் ஜகந்நியாமகத்வம் பரப்ரஹ்மத்திற்கே அஸாதாரணமென்று காண்கிறது. * एकः शास्ता न द्वितीयोऽस्ति शास्ता * என்று பரமாத்மா தவிர மற்றையோர்க்கு நியாமகத்வமில்லையென்று ஸ்பஷ்டமாகவும் சொல்லப்படுகிறது. ஆகவே முக்தனுக்கு ஜகந்நியாமகத்வரூபமான ஜகதீச்வரத்வம் ஸம்பவிக்கமாட்டாது. * பரமம் ஸாம்ய முபைதி * என்று பரமபுருஷனோடு முக்தனுக்கு வெறும் ஸாம்யம் சொல்லாதே பரமஸாம்யாபத்தி சொல்லியிருக்கையாலே அவனுக்குள்ளதெல்லாம் இவனுக்கும் ப்ராப்தமானாலொழிய பரமஸாம்யம் நிர்வஹிக்க வழியில்லையேயென்றதற்குச் சொல்லுகிறோம். * तदा विद्वान् पुण्यपापे विधूय निरञ्जनः परमं साम्यमुपैति * என்றவிடத்தில் யாரோடே எந்த அம்சத்தில் ஸாம்யமென்று விசாரிக்குமளவில், "வித்வாந் புண்யபாபே விதூய நிரஞ்ஜநः பரமம் ஸாம்யமுபைதி" என்ற சொற்செறிவால் என்ன கிடைக்கிறதென்னில், வித்யா ஸாத்யமான யாதொரு புண்யபாப விதூநநமுண்டோ, அதனாலாகும்பலனில் ஸாம்யமென்று ஏற்படுகிறது. வித்யையென்பது ப்ரஹ்மப்ராப்தி ப்ரதிபந்தகமான புண்ணிய பாபரூபகருமத்திற்கு ப்ராயச்சித்தமானது. ஏவஞ்ச, புண்யபாபரூப கர்மவிதூநந ஸாத்யமான பலன் ப்ரஹ்மாநுபவமேயென்று தேறிற்று. அதில்தான ஸாம்யம் விவக்ஷிதமாகும். முன்னே பரமபுருஷ ப்ரஸ்தாவமிருக்கையாலே அவனோடுதான் ஸாம்யமென்றும் நிச்சயிக்கப்படுகிறது. இந்த ஸாம்யத்தில் பாரம்யமாவது, ப்ரஹ்மாநுபவம் செய்யுமிடத்து தத்குணங்களிலும் தத்விபூதிகளிலும் ஏகதேசத்தையும் விடாமல் பூர்த்தியாக அநுபவிப்பதேயாம். ஆக ஸமஸ்த கல்யாணகுண விபூதிவிசிஷ்ட ப்ரஹ்மாநுபவத்தில் ஸாம்யமென்று தேறிற்று. இந்த ஸாம்யந்தான் * सोऽश्नुते सर्वान् कामान् सह ब्रह्मणा विपश्चितेति* என்றவிடத்திலும் சொல்லப்படுகிறது. ஆக முக்தனுக்கு பரிபூர்ண ப்ரஹ்மாநுபவம் ஸித்தித்தபோது ஆநந்த ஸாம்யமும் இந்த ச்ருதியினாலேயே ஸித்தம். * स स्वराड् भवति * [ஸ ஸ்வராட் பவதி] என்றதும் கர்மவச்யத்வமில்லாமையைச் சொல்லுகிறதத்தனை. * ஏஷ ஹ்யேவாநந்தயாதி * இத்யாதி ச்ருதிகளாலே முக்தனுடைய ஸத்தாஸ்திதிப்ரவ்ருத்திகளெல்லாம் பரமபுருஷாதீந மென்று தேறுகையாலும், முக்தனுக்கு ஸத்ய ஸங்கல்பத்வம் இயற்கையாயிருந்தாலும் கருமங்களினால் மறைந்திருந்தவது பரமபுருஷனுடைய அநுக்ரஹத்தாலேயே ஆவிர்ப்பவிப்பதாக ஓதுகையாலும் முகத்தைச்வர்யம் முழுவதும் பகவதிச்சாதீநமாயறுகையாலே பரம புருஷனுடைய அஸாதாரணதர்மமான ஜகந்நியமனரூபஜச்வர்யம் முக்தனுக்கு இல்லையென்று முடிந்தது.

61. இப்படி முக்தனுடைய ஐச்வர்யம் பரமபுருஷாதீநமாகில் அந்த பரமபுருஷன்தான் ஸ்வதந்த்ரனாகையாலே அவன் தனது ஸங்கல்பத்தாலே ஒருஸமயம் முக்தனைப் பரமபதத்தில் நின்றும் இந்நிலத்திற்குத் திருப்பியனுப்பிவிடவுங் கூடுமாகையாலே மோக்ஷபுருஷார்த்தமும் அநித்யமாக வேண்டிவருமே என்கிற சங்கை அடுத்தபடியாக உண்டாகக் கூடியது. அந்த சங்கைக்குப் பரிஹாரமாக * अनावृत्तिः शब्दादनावृत्तिः शब्दात् * [அநாவ்ருத்திச் சப்தாத் அநாவ்ருத்திச் சப்தாத்] என்கிற சரமஸூத்ரமவதரிக்

இறது. சங்காபரிஹாரப்ரகாரம் யாதெனில்; அநந்யதாஸித்தமான ச்ருதிவாக்யங்களைக் கொண்டே அறியக்கடவதான பொருளை சாஸ்த்ரம் சொன்னபடியே தான் அறிய வேண்டும். பரம புருஷனொருவனுளனென்பதை நாம் எந்த சாஸ்த்ரங்கொண்டு அறிகிறோமோ அந்த சாஸ்த்ரமே முக்தர்களுக்கு மீட்சியில்லை யென்பதையுமறிவிக்கின்றது; * स खल्वेवं वर्तयन् यावदायुषं ब्रह्मलोकमभिसंपद्यते न च पुनरावर्तते नच पुनरावर्तते * मामुपेत्य तु कौन्तेय पुनर्जन्म न विद्यते * இத்யாதி சாஸ்த்ரங்கள் காண்க.

62. முக்தர்களுக்கு மீட்சியில்லையென்பதை ஸூத்ரகாரர் சாஸ்த்ரத்தைக்காட்டி ஸ்தாபித்தார். பகவானே கேட்பாரற்ற ஸ்வதந்திரன். சாஸ்த்ரத்தையும் மீறிச்செய்வதற்கு அவன் அசக்தனல்லன். * स्वातन्त्र्यमैश्वरमपर्यनुयोज्यमाहुः * என்னப்பட்ட ஸ்வாதந்திரியத்தாலே ஈச்வரன் ஒன்று செய்யப்புகுந்தால் சாஸ்த்ரம் குறுக்கே நிற்குமோ? என்று சோத்யம் பண்ணினால் இதற்கு ஸூத்ரகாரர் சொன்ன ஸமாதானம் த்ருப்தியை விளைக்காது. சங்கராசார்யரும் தம்முடைய பாஷ்யத்தில் சாஸ்த்ரத்தை யெடுத்துக் காட்டினவளவோடு நின்றுவிட்டார். ஸ்வாமி யெம்பெருமானார் ஆழ்வாரருளிச்செயற் கடலில் ஆழ்ந்து அரும்பெரும் பொருள்களை யறிந்தவராகையாலே அவ்வருளிச்செயல் பரிமளம்கமழ இங்கு அருளிச்செய்திருக்கும் அர்த்தவிசேஷம் ஸ்ரீபாஷ்யத்திற்குச் சிகரமாக விளங்குகின்றது. அவ்வர்த்த விசேஷம் கேண்மின்; ஈச்வரன் ஸ்வதந்திரனேயானாலும் உன்மத்தனல்லன், மூர்க்கனல்லன், அரஸிகனல்லன். ஸத்ய ஸங்கல்பனென்று பேர்பெற்றவன். தன்னுடைய மநோரதத்திற்கு மாறுபாடாக நடந்து கொள்பவனல்லன். ஒரு சேதநனைப் பெறுவதற்கு அப்பரமபுருஷன் என்ன பாடுபடுகிறான்! எவ்வளவு க்ருஷிபண்ணுகிறான்! தெரியுமோ? அவன் ஸ்ருஷ்டிபண்ணுவதும் அவதாரங்கள் பண்ணுவதும் சேதநரை லபிக்கைக்காகவன்றோ. எவ்வளவோ தவப்பயனாக ஒரு சேதநன் வந்துசேர, அவனை லபித்த பின்பும் இழப்பனோ? என்னுமபிப்ராயத்தை * न च परमपुरुषः सत्यसंकल्पः अत्यर्थप्रियं ज्ञानिनं लब्ध्वा कदाचिदावर्तयिष्यति * என்கிற இன்சுவையே வடிவெடுத்த திவ்யஸூக்தியாலே காட்டியருளி சங்காபரிஹாரத்தை மிகவழகாகத் தலைக்கட்டினார். இதில் "பரமபுருஷஃ ஜ்ஞாநிநம் லப்த்வா" என்கிற ஸ்ரீஸூக்தி விந்யாஸமானது எம்பெருமானார் திருவுள்ளத்தில் திருவாய்மொழி யமுதக்கடல் அலையெறிகிற படியை நன்கு காட்டுகின்றது. *யானொட்டியென்னுள் இருத்துவமென்றிலன், தானொட்டிவந்தென் தனி நெஞ்சை வஞ்சித்து, ஊனொட்டி நின்று என்னுயிருள்கலந்து, இயல்வானொட்டுமோ இனி யென்னை நெகிழ்க்கவே (2747) * என்றும், *வாரிக் கொண்டுன்னை விழுங்குவன் காணிலென்று, ஆர்வுற்ற வென்னையொழிய என்னில் முன்னம் பாரித்து, தானென்னை முற்றப்பருகினான், காரொக்கும் காட்கரையப்பன் கடியனே (3621) *என்றுமுள்ள திருவாய்மொழிப் பாசுரங்களின் திவ்யார்த்த ஸௌரபத்தோடே ஸ்ரீபாஷ்யம் தலைக்கட்டப்பட்டிருக்கின்றதென்பதை உபய வேதாந்த ரஸிகர்களே அறியவல்லார். ... ... ... ... ... *

इत्थं द्विषष्टिवार्ताविन्यसनेन प्रधानपरमार्थान्। शारीरकमीमांसाभाष्यात्संगृह्य लिखितवानस्मि ॥

काञ्चीवादिभयङ्करवंशीयाणण्ङ्गरार्यदासोऽहम्। इह यदि गुणलवलेशः स्यात्तेन परं बुधाः प्रमोदन्ताम्।

ஸ்ரீகாஞ்சி பிரதிவாதிபயங்கரம்

**அண்ணங்கராசாரியர்**

எழுதிய

**அறுபத்திரண்டு வார்த்தாமாலை**

முற்றிற்று.

விஜய பங்குனி விசாக நன்னாள்.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# பகவத்கீதை யறுபத்திரண்டு.

[ஸ்ரீகாஞ்சீ, ப்ர. அண்ணங்கராசார்யர்.]

द्विषष्टितमहायनव्यपगमस्य लक्ष्मास्त्विति द्विषष्टिविषयावली विलसिता कृतीर्भूयसीः।
व्यलेखिषमुदारधीविलसितात्मनां शासनात् प्रकाशमिह नीयते प्रथमजा कृतिस्तत्र च ॥

1. ஸர்வேச்வரன் உபயவிபூதிநாதனென்று கொண்டாடப்படுகிறுன். லீலாவிபூதியும் நித்யவிபூதியுமாகிய மண்ணுலகும் விண்ணுலகும் உபய விபூதிகளெனப்படும். *அருளார் திருச்சக்கரத்தால் அகல் விசும்பும் நிலனும் இருளார் வினைகெடச் செங்கோல் நடாவுதிர்* என்று (திருவிருத்தத்தில்) நம்மாழ்வாரும், *பொங்கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுஞ் சோராமே யாள்கின்றவெம் பெருமான்* என்று (நாச்சியார் திருமொழியில்) ஆண்டாளும் எம்பெருமானுடைய உபயவிபூதி நிர்வாஹகத்வத்தைப் பற்றிப் பேசின பாசுரங்கள் அறியத்தக்கன. நித்யவிபூதிக்கு எதிராயிருக்கின்ற இந்த லீலாவிபூதியை மாஜ்ஞானிகள் 'இருள் தருமாஞாலம்' என்று வழங்குகிறுர்கள். இம்மண்ணுலகம் இருளே மலிந்ததென்று சொல்லப்படுகிறது. ஸூர்யன் சந்திரன் அக்னி முதலிய சுடர்ப்பொருள்களால் போக்க முடியாத அகவிருள் [அஜ்ஞாநாந்தகாரம்] இங்கு இருளெனப்படுகிறது. "अन्धं तम इवाज्ञानम्- அந்தம் தம இவாஜ்ஞாநம்" என்று ஸ்ரீபராசரமஹர்ஷியும் சொல்லிவைத்தார்.

2. இப்படிப்பட்ட அகவிருளை அகற்றுவதற்காகப் பேரருளாளனுன எம்பெருமான் *கலைகளும் வேதமும் நீதிநூலும் கற்பமும் சொற்பொருள்தானும் மற்றை நிலைகளும் வானவர்க்கும் பிறர்க்கும் நீர்மையினாலருள் செய்து* என்று திருமங்கையாழ்வாரருளிச் செய்தபடியே ச்ருதிஸ்ம்ருதீதிஹாஸ புராணுதிகளான நாநாசாஸ்த்ரங்களை யுபகரித்தருளினுன். அப்படி உபகரித்தவிடத்தில் ஸத்வாரகமாகப் பலநூல்களையும் அத்வாரகமாகச் சில நூல்களையும் இவ்வுலகில் அவதரிப்பித்தருளினன். வ்யாஸபராசர வால்மீகி ப்ரப்ருதிகளான மஹர்ஷிகளை த்வாரமாகக் கொண்டு அவர்கள் வாயிலாக வெளியிட்டவை ஸத்வாரகமெனப்படும். அப்படி யன்றிக்கே தானே ஸாக்ஷாத்தாக வெளியிட்டவை அத்வாரகமெனப்படும். இப்படிப்பட்ட அத்வாரக சாஸ்த்ரங்களுள் பகவத் கீதாசாஸ்த்ரமென்பது தலைசிறந்து விளங்குகின்றது.

3. *वेदेषु पौरुषं सूक्तं धर्मशास्त्रेषु मानवम्। भारते भगवद्गीता पुराणेषु च वैष्णवम्— வேதேஷு பௌருஷம் ஸூக்தம் தர்மசாஸ்த்ரேஷு மாநவம், பாரதே பகவத்கீதா புராணேஷு ச வைஷ்ணவம் *வேதங்களுக்குள்ளே புருஷஸூக்தமும், தர்மசாஸ்த்ரங்களுக்குள்ளே மநுஸ்ம்ருதியும், மஹாபாரதத்திற்குள்ளே ஸ்ரீ கீதையும், புராணங்களுக்குள்ளே ஸ்ரீ விஷ்ணுபுராணமும் சிறந்தவை யென்று சொல்லிற்று. பஞ்சம வேதமாகப் புகழப் படுகின்ற மஹாபாரதத்தினுள்ளே கீதோபநிஷத்தென்று குலாவப்

படுகின்ற பகவத்கீதையானது பெரும்பாலும் ஸகலமதஸ்தர்களாலும் உச்சிமேல் வைத்து மெச்சப்படுகின்றதென்பது உலகமறிந்தது. உபநிஷத்துக்களின் அரிய பெரிய பொருள்களெல்லாம் இதுதன்னில் அடங்கிக் கிடக்கின்றமையால் எப்படிப் பட்ட பண்டிதர்களுக்கும் வியாக்கியானங்களின் உதவியின்றி இதன்பொருள் அறிய முடியாததாயிருக்கும். ஆனதுபற்றியே பலபல மஹான்களும் மஹாசார்யர்களும் மேதாவிகளும் இதற்கு அனேக வியாக்கியானங்கள் இயற்றியுள்ளார்கள். மூலத்தின் மேல் ப்ரதிபதவியாக்கியானமாகவும் பொழிப்புரையாகவும், கருத்துரையாகவும், உபந்யாஸ ரூபமாகவும், ஆராய்ச்சி யுருவமாகவும் மற்றும் பலவிதமாகவும் கீதைக்கு அமைந்திருக்கின்ற விவரணங்கள் எண்ணுதற்கரியன. இவை இரண்டொரு பாஷை களிலல்ல; ஐந்தாறு பாஷைகளிலுமல்ல; உலகில் எத்தனை பாஷைகள் நடையாடு கின்றனவோ, அத்தனை பாஷைகளிலும் தோன்றியுள்ளன. இது கொண்டே இதன் ஒப்புயர்வற்ற மஹிமை அறியற்பாலது.

4. எத்தனை வியாக்கியானங்கள் அவதரித்திருந்தாலும் 'மதத்ரய பாஷ்யம்' என்று ப்ரஸித்தமாக வழங்கப் பட்டு வருகின்ற மூன்று பாஷ்யங்களே வைதிகவுலகில் அதிகமான ப்ரஸித்தியை யடைந்திருக்கின்றன. வட இந்தியாவில் வல்லபமதத்திற்கு அதிகப்ரசாரம் காண்பதனுல் ஆங்கே வல்லபாசார்ய வியாக்கியானமும் சிறந்ததாகக் குலாவப்படும். நமது நாட்டில் சங்கராசார்யரியற்றிய அத்வைதபரமான பாஷ்யமும், ஸ்வாமி யெம்பெருமானுரியற்றியருளின விசிஷ்டாத்வைதபரமான பாஷ்யமும், ஸ்ரீமத் ஆனந்த தீர்த்த ரென்னும் மத்வாசார்யரியற்றிய த்வைத பரமான பாஷ்யமும் இவற்றுக்கு சிஷ்யகோடிகள் இயற்றிய டீகைகளும் ப்ரஸித்திபெற்று விளங்குகின் றன. பகவத்ராமாநுஜர் அருளிச் செய்த பாஷ்யமும் அதற்கு வேதாந்த தேசிகனரு ளிய தாத்பர்யசந்த்ரிகை யென்னும் டீகையும் ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் மிக வுயர்ந்த ஸ்தானத்தை யலங்கரித்து வருகின்றன.

5. மதத்ரய பாஷ்யங்களென்று குலாவப்படுகின்ற மேலே குறித்த மூன்று பாஷ்யங்களும் ஸம்க்ஷேபமான முறையில் அவதரித்தவை யெனினும், மத்வாசார்ய பாஷ்யமானது மிகவும் ஸம்க்ஷிப்தமாகத் தோன்றியது. சங்கராசார்ய பாஷ்யமானது அதைவிட சிறிது விரிவாகத் தோன்றியது. பகவத் ராமாநுஜ பாஷ்யமானது ஆவச் யக விஷயங்களைச் சிறிதும் விடாமலும் அநாவச்யக விஷயங்களை அடியோடு ஏற்றுக் கொள்ளாமலும் பரம போக்யமான பத்ததியில் அவதரித்துள்ளது. உலகில் அவரவர்கள் தம்தம் ஸம்பிரதாய நூல்களைப் புகழப் பிறந்தவர்களாதலால் அதற்குச் சேர நாம் பகவத் ராமாநுஜ பாஷ்யத்தை ப்ரசம்ஸிப்பதாகச் சிலர் நினைக்கவுங்கூடும். வஸ்து ஸ்திதியில், எந்த மதத்தைச் சேர்ந்தவரும் பகவத் ராமாநுஜ பாஷ்யத்தைக் கண்டு ஈடுபடுவதை நாம் காண்கிரோம். மூலத்திலுள்ள ஒரு பதத்திற்கும் அர்த்தம் செய்வதை விடாமலும் பொருத்தமான அந்வயக்ரமங்களையும் அர்த்தங்களையும் காட் டியும் அருளிச்செய்யப்பட்ட பாஷ்யம் இஃதொன்றே யென்று நாம் கூசாமல் கூற லாம். இது அபிமானத்தினுல் சொல்லப்படுகிற வார்த்தை யென்று பிறர் நினைத்தா லும் நினைத்திடுக. விவேகிகளான யாவருடைய மனமும் ஒருங்கே இசையக்கூடிய வார்த்தையே இது என்பது வஸ்துஸ்திதி.

6. அடியேன் ஒரு ஸமயம் இம்மூன்று பாஷ்யங்களையும் டீகைகளுடனும் பூர்த்தியாக ஸேவிக்கவும் ஆராய்ச்சி செய்யவும் ப்ராப்தமாயிற்று. அப்போது பகவத் ராமாநுஜ பாஷ்யத்தை தாத்பர்ய சந்த்ரிகையுடன் ஆர அமர அநுபவிக்க நேர்ந்தது. அப்போதே எழுத நினைத்த இந்த வியாஸம் பகவத் ஸங்கல்ப விசேஷத்தினால் இப்போ தெழுத ப்ராப்தமாகிறது. இதற்கு முன்பும் ஸமய விசேஷங்களில் அடியேனெழுதி யுள்ள பலவகைப்பட்ட வியாஸங்களில் கீதைக்கு ஸம்பந்தப் பட்டதாக எழுதியுள்ள விஷயங்களைப் பெரும்பாலும் இதில் சேர்த்துக் கொள்வேன். மிக விரிவாக எழுத வேண்டிய பலபல விஷயங்கள் நெஞ்சில் தோன்றி யிருந்தாலும், வாசகர்கள் எளிதாக வாசித்து உணர்ந்து இன்புறவேணு மென்னும் நோக்கத்தினால் அதிகஸம்க்ஷேபவிஸ் தரங்களின்றி யெழுதுகிறேன். ஒவ்வொரு க்ரந்தத்திற்கும் அவதாரிகையுண்டு. ஆனால் அந்த அவதாரிகையானது பெரும்பாலும் வியாக்கியானகாரர்களால் விவரிக் கப் படும். அது மூலக்ரந்தத்தில் இல்லாமலிருக்கும். திருவாய்மொழிக்கு முதல் ச்ரிய:பதியென்றும் இரண்டாம் ச்ரிய:பதியென்றும் மூன்றாம் ச்ரிய:பதியென்றும் அவதரித்துள்ள அவதாரிகைகள் வியாக்கியான காரர்களினால் அமைக்கப்பட்ட வையேயன்றி மூலமான திருவாய்மொழியில் அவதாரிகையாக ஓரக்ஷரமும் கிடை யாது. கீதையில் அப்படியன்றிக்கே முதலத்யாயம் முழுதும் அவதாரிகையாகவே தோன்றியுள்ளது. 'இந்த நூல் எதற்காக அவதரிக்கின்றது' என்பதை விசதமாக நிரூபிப்பதுதானே அவதாரிகை. அதனை நாம் பிறர் வாயினால் தெரிந்துகொள்ள வேண்டாமல் கீதையைக் கொண்டே நன்கு தெரிந்து கொள்ளுகிறோமாதலால் இதற்கு அவதாரிகையும் இதிலேயே பொருந்தியிருக்கிறதென்று சொல்லத் தட்டில்லை.

7. கண்ணபிரான் பாண்டவர்கட்காகத் துரியோதனாதியரிடம் தூதுசென்று ஸமாதான வழிகள் பல பேசியும் "வீரபோக்யா வஸுந்தரா" ஆகையாலே போர்க் களத்தில் வீரத்தனத்தைக் காட்டி வெற்றி பெறுமவர்களே ராஜ்யமாளக் கடவர்கள் என்று த்ருதராஷ்ட்ர வகுப்பினர் கூற, பிறகு யுத்தமே நடத்தக் கடவதாக முடிவு பெற்றது. இருவகுப்பினரும் படைத்துணை வேண்டிக் கண்ணபிரான் பக்கலிலே வந்தார்கள். துரியோதனன் கண்ணபிரானைத் துணையாக விரும்பவில்லை. *कृष्णाश्रयाः कृष्णबलाः कृष्णनाथाश्च पाण्डवाः— க்ருஷ்ணாச்ரயா: க்ருஷ்ணபலா: க்ருஷ்ணநாதாச்ச பாண் டவா:* என்னும் புகழ் பெற்ற பாண்டவர்களுக்கே கண்ணபிரான் துணைவனாக நிற்க வேண்டிற்று. பக்த பரதந்திரனான ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மா தன்னுடைய பரமபக்த னான அர்ஜுனனுக்குத் தேர்ப்பாகனாயிருந்து கொண்டு குருக்ஷேத்திரமென்னுமிடத் தில் வந்து போர் புரிய அணிவகுத்து நின்றனன். அப்பொழுது அர்ஜுனன் கண்ண பிரானை நோக்கி 'பெருமானே! இந்தப் போரில் யான் யாருடன் போர் புரிவது தகுதியானது? துர்ப்புத்தி வாய்ந்த துரியோதனனுக்குத் துணைபுரிவதற்காக யார் யார் வந்திருக்கிறார்களென்பதை நான்கண்டு தெரிந்து கொள்ளுமாறு தேரை இரண்டு சேனைகளினிடையில் நிறுத்த வேணும்' என்று கூற, அப்படியே கண்ணபிரான் இரண்டு படைகளினிடையே தேரை நிறுத்தி 'அர்ஜுனா! இவ்விரு படைகளிலு மிருக்கின்ற போர்வீரர்களைப் பாராய்' என்றனன்.

8. அப்போது அர்ஜுனன் போர்க்களத்தில் வந்து நின்றிருக்குமவர்கள் தந்தைகளாயும் புத்திரர்களாயும் பேரன்மார்களாயும் தோழன்மார்களாயு மிருப்பது கண்டு அவர்களிடத்து இரக்கங் கொண்ட மனத்தனாய் ஸ்ரீக்ருஷ்ணனை நோக்கி 'கண்ணா! போர்புரிய ஆயத்தர்களாயிரா நின்ற இந்த உற்றாருறவினரைக் காணவே எனது காண்டீவ தனுசு கையில் நின்றும் சோருகின்றது; என்னுடல் எரிகின்றது; மயிர்க்கூச்செறிகின்றது; தேஹம் நடுங்குகின்றது; நான் நிற்கமாட்டேன்; என் மனம் குழம்புகின்றது; அபசகுனங்கள் காண்கின்றன; அமர்க்களத்தில் இவ்வுறவினர்களைக் கொன்று நான் என்ன நன்மையடையப் போகிறேன்? எனக்கு யுத்தமும் வேண்டா, யுத்தத்தில் வெற்றியும் வேண்டா; இராச்சியமும் வேண்டா, இன்பமும் வேண்டா; உற்றாருறவினர்களோடு கூடிக் களித்து வாழ்வதற்காகவன்றோ பொருட்செல்வம் விரும்பப்படுகின்றது; அன்னவர்களனைவரும் உடலையும் உயிரையும் செல்வத்தையும் பொருள்படுத்தாது போர்புரிய வந்து நிற்கின்றனரே. அவர்களை வென்று கொன்ற பின்பு இந்த ராஜ்யத்தினாலுண்டாகு மின்பம் யாதோ? பிறகு நான் பிழைத்திருந்துதான் என்ன பயன்? மூவுலகவின்பமும் கிடைப்பதாயிருந்தாலும் நான் இவர்களைக் கொல்லமாட்டேன். இந்த அற்ப பூமிக்காக இவர்களைக் கொல்ல நினைப்பதும் ஏலாதது. நெருப்பிட்டுக் கொல்பவர்கள், விஷமிட்டுக் கொல்பவர்கள், பிறருடைய தனங்களையும் பூமியையும் மாதரையும் கொள்ளை கொள்பவர்களான ஆததாயிகளைக் கொலை செய்வதில் குற்றமில்லையாகையாலே அப்படிப்பட்டவர்களில் தலைவர்களான இத்துரியோதனாதியர் கொலை செய்யத் தகுந்தவர்களேயானாலும் இவர்களைக் கொல்ல நான் விரும்புகின்றிலேன். இந்த பந்துக்களைக் கொன்று நான் எப்படி ஸுகமடைவேன்? க்ருஷ்ணா! ராஜ்ய ஸுகங்களுக்காக உறவினரைக் கொல்வது பெரும்பாதகமல்லவோ? ஆகையால் அஸ்த்ர சஸ்த்ரங்களை நான் பிரயோகிக்கப் போகிறதில்லை! பிரயோகியாமல் வாளா நிற்குமென்னைத் துரியோதனாதிகள் கொன்றபோதிலும் அதனால் எனக்கு வருத்தமில்லை; அது எனக்கு க்ஷேமமேயாகும்— என்று கூறி வில்லைக் கீழே போகட்டு வருத்தமும் கலக்கமும் மிகப் பெற்றுத் தேரிடையே உட்கார்ந்து விட்டான்; என்கிற விதுவே நாற்பத்தேழு சுலோகங்கள் கொண்ட முதலத்யாயத்தின் பிரமேயம்.

9. இப்படி அஸ்தானே கலங்கின அர்ஜுனனுடைய கலக்கத்தைப் போக்கி அவனை யுத்தத்திலே மூட்டுவதற்காகக் கண்ணபிரான் இரண்டாமத்யாயத்திலிருந்து பல பல வுபதேசங்களைச் செய்தருள அவனும் தெளிவு பெற்று "स्थितोऽस्मि गतसंदेहः करिष्ये वचनं तव– ஸ்திதோஸ்மி கதஸந்தேஹ: கரிஷ்யே வசனம் தவ" என்று சொல்லிப் போர் புரிய இசைந்தானென்பது கீதையின் முழுப்பொருள். இவ்விஷயத்தில் புத்திமான்கள் முக்கியமாக ஆலோசிக்கத் தக்கவை இரண்டு விஷயங்களுண்டு. யுத்தத்திற்குக் குதூஹலியாய்வந்து சேர்ந்த அர்ஜுனன் யுத்தாடம்பரம் செய்ய வேண்டியிருக்க அது செய்யாமல் தேர்ப்பாகனாயிராநின்ற தேவனை நோக்கி உபயஸைன்யங்களிலுமிருக்கிற பந்துக்களை இன்னாரின்னாரென்று பார்ப்பதற்காக இந்தத் தேரைச் சிறிது முன்னே கொண்டு போய் உபயஸேனைகளின் முன்னே நிறுத்து என்றானே; இப்போது அர்ஜுனன் இப்படிச் சொல்லவேண்டிய அவச்யமேயில்லை. ஏற்கெனவே இவன் தெரிந்துகொள்ளாத அம்சம் என்ன இருக்கிறது? யுத்தத்தில் எதிரிகளாக

வரப்போகிறவர்கள் அல்லது வந்திருக்கிறவர்கள் இன்னாரின்னாரென்பதை அர்ஜுனன் இதற்குமுன் தெரிந்து கொள்ளாமல் இனிமேலா தெரிந்து கொள்ளப்போகிறான்; இல்லையே. அவர்களை யெல்லாம் வதைத்தொழிக்க வேணுமென்கிற ஊக்கங் கொண்டே போர்புரிய ஆயத்தனாய் வந்துநின்றவன் இப்போது இன்னாரின்னார் போர் புரிய வந்திருக்கிறார்களென்பதைக் கண்டறிந்து கொள்ளவேணுமென்றது சிறிதும் பொருத்தமாக இல்லையே. இது எப்படி பொருந்தும்? இது முதன்முதலாக ஆலோசிக்க வேண்டிய விஷயம். இனி மற்றொரு விஷயமாவது, யுத்தம் பண்ணமாட்டேனென்ற அர்ஜுனனை யுத்தஞ்செய்ய இசைவிக்க வேண்டியதுதானே கண்ணபிரானுக்குக் கர்த்தவ்யம்; அதற்கு இவ்வளவு விஸ்தாரமான கீதாசாஸ்த்ரம் வேணுமோ? ‘அப்பா! நீ க்ஷத்ரியனாகையாலே யுத்தஞ்செய்யக் கடமைப்பட்டவனாகிறாய்’ என்கிற விவ்வளவை உபத்திகளுடன் சொன்னாற்போதும்; இதற்கு ஒரு அத்யாயமே அதிகம். அத்தனையத்யாயங்கள் வளர்த்தியிருப்பது எதற்காக?; என்பது. ஆக இவ்விரண்டு விஷயங்களையும் ஆலோசித்துப் பொருத்தமான முடிவுகட்டவேண்டியது அவச்ய மாயிருக்கின்றது.

10. மேலே ப்ரஸ்தாவித்த இரண்டு விஷயங்களுள் முந்தின விஷயத்திற்கு முன்னம் ஸமாதானம் தெரிவிக்கின்றோம். பகவான் ஸ்ரீ ராமாவதாரஞ்செய்து * தச வர்ஷஸஹஸ்ராணி தச வர்ஷசதாநிச, ராமோ ராஜ்யமுபாஸித்வா * என்றபடி பதினோராயிரமாண்டு இந்நிலவுலகில் வாழ்ந்திருந்தும் ஸம்ஸாரி சேதநோஜ்ஜீவனார்த்தமாக ஒரு சாஸ்த்ரமும் இட்டருளவில்லை; தன்னடிச் சோதிக்கு எழுந்தருளினபிறகு திருவுள்ளத்தில் இக்குறை மிகவும் தோன்றிற்று. அப்போதே திடமாக ஸங்கல்பம் செய்து கொண்டான்—அடுத்தபடி மண்ணுலகில் அவதாரம் செய்யும்போது மிகச் சிறந்ததொரு சாஸ்த்ரத்தை அவதரிப்பித்தே தீருவேனென்று. சாஸ்த்ரத்தை அவதரிப்பித்தலென்றால் ஓலைப்புறத்திலே எழுதிவைப்பதன்று. அப்படியெழுதி வைத்தால் மஹர்ஷிப்ரணீதங்களான இதிஹாஸபுராணாதிக்ரந்தங்கள் போலே இதுவுமொன்று என்று நினைக்கும்படியாகுமத்தனை. ஒரு உத்தமாதிகாரிக்குத் தன் திருவாக்காலே நேராக உபதேசித்து அம்முகத்தாலே உலகில் பரவ வைக்க வேணுமென்று திருவுள்ளம் பற்றியிருந்தான்.

11. ஸ்ரீவசநபூஷணத்தில் “ஜிதேந்த்ரியரில் தலைவனாய் ஆஸ்திகாக்ரேஸரனாய் * கேசவஸ்யாத்மாவென்று க்ருஷ்ணனுக்கு தாரகனாயிருக்கிற அர்ஜுனனுக்கு” என்று பிள்ளை லோகாசார்யர் புகழும்படியான பெருமைவாய்ந்த அர்ஜுனனையே உபதேசஸத்பாத்ரமாகத் திருவுள்ளம்பற்றினான் கண்ணபிரான். அரும்பெரும் பொருள்களை சிஷ்யனானவனுக்கு உபதேசிக்கலாமே யல்லது மற்றையோர்க்கு உபதேசிக்கத் தகாது. அர்ஜுனன் இப்போது நண்பனென்னும் முறையிலுள்ளானே யன்றி சிஷ்யனென்னும் முறையிலில்லை. * अतिपरिचयादवज्ञा सन्ततगमनादनादरो भवति। मलये भिल्लपुरन्ध्री चन्दनतरुकाष्ठमिन्धनं कुरुते– அதிபரிசயாதவஜ்ஞா ஸந்ததகமநாத் அநாதரோ பவதி, மலயே பில்லபுரந்த்ரீ சந்தநதருகாஷ்டமிந்தநம் குருதே. * என்று ஒரு ஸுபாஷிதமுண்டே. மலயபர்வதத்தில் வாழும் குறத்திகள் சந்தனக் கட்டைகளை விறகாக உபயோகப்படுத்திக் கொள்ளுகிறார்களாம்; எதனாலே? அவ்விடத்தில்

சந்தனகாஷ்டங்கள் மலிந்துகிடக்கின்றன. அவற்ரேடே அவர்களுக்குப் பரிசயம் அதிகம். அதிக பரிசயமுள்ளவிடத்தில் அவஜ்ஞை தோன்றுவது இயல்வு. ஆகவே அவர்கள் சந்தனக்கட்டைகளின் பெருமையை யுணராமல் அவற்றை யிட்டுச் சமையல் செய்வதும் குளிர்காய்வது மாயிருக்கிருர்கள். அதுபோல, கண்ணன்பக்கலில் அதிக பரிசயமுள்ள அர்ஜுனனுக்கு சிஷ்யத்வமிருக்க ப்ரஸக்தியில்லையன்ரே. சிஷ்யவ்ருத்தி செய்யாதவனுக்கு உபதேசிக்கக் கூடாதாதலால் இவ்வர்ஜுனனை எப்படியாவது சிஷ்யனுக்கிக்கொண்டு இவனுக்கே கீதாசாஸ்த்ரத்தை யுபதேசிக்கவேணுமென்று திருவுள்ளம் பற்றினுன் கண்ணபிரான்.

12. "கண்ணபிரானே! உனக்கு நான் சிஷ்யனுயிருக்கின்றேன், எனக்குத் தத்வோபதேசம் செய்தருளவேணும்" என்று பிரார்த்திக்கும் படியாக அர்ஜுநனைச் செய்து பிறகு அவனுக்கு உபதேசிக்கவேணும். சிஷ்யத்வமென்பது எளிதாக உண்டாய்விடுமோ? * परीक्ष्य लोकान् कर्मचितान् ब्राह्मणो निर्वेदमायात्... तद्विज्ञानार्थं स गुरुमेवाभिगच्छेत्..." இத்யாதியுபநிஷத்தின்படி நிர்வேத முண்டானுலல்லது சிஷ்யத்வ முண்டாக மாட்டாதாகையாலே அர்ஜுனனுக்கு சிஷ்யத்வ ப்ராப்திக்கு அங்கமாக நிர்வேத முண்டாகவேண்டியது அவசியமாயிற்று. அந்த நிர்வேதத்தை யுண்டாக்குவதற்கு ஸமயமெதிர்பார்த்திருக்கிருன் கண்ணபிரான்.

13. இப்பெருமான் ஸந்திபண்ணிவைப்பதாகப் புகுந்து, முடிவில் போர்செய்வதையே திடப்படுத்திக்கொண்டு, ஸமயத்தில் கீதாசாஸ்த்ரத்தையுபதேசிக்க இடம் பெறுவதற்காக அர்ஜுநனேடு ஸாமாநாதிகரண்யம் [சேர்த்தி] ஸித்திக்கும் பொருட்டு அவனுடைய தேரில் இருப்புப் பெறுவதற்குத் தேர்ப் பாகனுயிருக்க இசைந்து அவனேடும் அவனுடையாரோடுங்கூட குருக்ஷேத்திரம் வந்து சேர்ந்து, யுத்தத்தைத் தொடங்குவதற்கு முன்னே பந்துக்களைக் கண்டு மோஹிப்பதென்ன; அதனுல் சோக விஷாதங்களை யடைவதென்ன ஆகிய இவற்றை யுண்டாக்கி, ஆக இவ்வளவால் சிஷ்யத்வத்திற்கு அங்கமான நிர்வேதத்தை யுண்டாக்குவதாகத் திருவுள்ளம்பற்றி, மேலே பத்தாவது அத்தியாயத்தில் * अहं सर्वस्य प्रभवो मत्तस्सर्वं प्रवर्तते– அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்தஸ் ஸர்வம் ப்ரவர்த்ததே * என்று தானே யருளிச்செய்கிறபடியே தனக்கு அஸாதாரணமாக விருக்கும் சக்தியினுல்-இப்போது போர்புரிய வந்து நிற்கும் உற்ருருறவினர்களைப் பார்க்கவேணு மென்பதோராசையை அர்ஜுனனுக்கு உண்டு பண்ணினுனுயிற்று.

14. இரண்டாமத்யாயத்தில் பதினேராவது ச்லோகமாகிய "अशोच्यानन्वशोचस्त्वं प्रज्ञावादांश्च भाषसे। गतासूनगतासूंश्च नानुशोचन्ति पण्डिताः– அசோச்யாந் அந்வசோசஸ்த்வம் ப்ரஜ்ஞாவாதாம்ஸ்ச பாஷஸே, கதாஸூந் அகதாஸூம்ச்ச நாநுசோசந்தி பண்டிதா:" என்கிற ச்லோகந்தான் உபதேசத்தின் உபக்ரமமாகவுள்ளது. இதற்கு முன்னே அர்ஜுனன் வாயில் "शिष्यस्तेऽहं शाधि मां त्वां प्रपन्नम्– சிஷ்யஸ் தேஹம் சாதி மாம் த்வாம் ப்ரபந்நம்" என்று வெளிவந்திருக்கிறது. 'கண்ணு! எனக்கு தர்மாதர்மங்கள் தெரியவில்லை; எனக்கு ச்ரேயஸ்ஸென்று நீ அறுதியிட்ட பொருளை எனக்கு உரைப்பாயாக. உனக்கு நான் மித்திரன் மாத்திரமல்லேன்; சிஷ்யனுமாகிறேன்;

இதோ உன் திருவடிகளில் வீழ்ந்து யாசிக்கிறேன்காண்; எனக்கு ஹிதா ஹிதங்களை யுபதேசிப்பாயாக' என்று அர்ஜுநன் சொல்லும்படி செய்து விட்டான் கண்ணபிரான். இந்த ப்ரார்த்தனையைப் பெறுமல் சிறந்த சாஸ்த்ரத்தை யுபதேசிப்பது தகுதியன்றுதலாலும், நிர்வேத மில்லாதவனது வாயில் இந்த பிரார்த்தனை வெளிவராதாகையாலும் இத்தனையும் கண்ணபிரான் செய்துவைத்த வொரு நாடகம் என்பது அறியத்தக்கது. ஆகவே அர்ஜுனனுக்குண்டான வ்யாமோஹம் அவன்றன்னுடைய ஸ்வபாவத்தாலுண்டானதன்று, மாயப் போர்த் தேர்ப்பாகனுடைய மாயமந்திரம் செய்வித்த செயல் என்றதாயிற்று. இல்லையாகில் கீதாசாஸ்த்ரம அவதரிக்க அவகாசமே யிராதன்றே.

15. போர்புரிய மாட்டேனென்ற அர்ஜுனனைப் போரில் மூட்டுவதற்கு இந்த கீதாசாஸ்த்ரத்தில் சொல்லப்படுகிற விஷயங்களித்தனையும் வேணுமோ? க்ஷத்ரியதர்மோபதேச மொன்று போதுமே; ப்ரக்ருதத்திற்கு அநபேக்ஷிதங்களான அதிகவிஷயங்களை இதில் பரக்கக்கூறி யிருப்பது ஏன்? என்கிற இரண்டாவதான ஆலோசனைக்கு இனிச் சொல்லுகிறோம். ஏதோ வொரு வ்யாஜத்தையிட்டு அரியபெரிய சாஸ்த்ரார்த்தங்களை வெளியிட வேணுமென்று துணிந்த கண்ணபிரானது திருவாக்கில் இது ஆவச்யகம், இது அநாவச்யகம் என்று வரையறுக்க நாமார்? விஷயங்களானவை ப்ரஸக்தம் அநுப்ரஸக்தம் என்று இருவகைப்படுமன்றே. எந்த சாஸ்த்ரமும் ப்ரஸக்த விஷயங்களோடு மட்டும் நிற்காது. அநுப்ரஸக்த விஷயங்களும் சேர்ந்தே நிற்கும். ஸ்வாமி யெம்பெருமானுர் தம்முடைய கீதாபாஷ்ய அவதாரிகையின் முடிவில் "पाण्डुतनय युद्धप्रोत्साहनव्याजेन परमपुरुषार्थलक्षणमोक्षसाधनतया वेदान्तोदितं स्वविषयं ज्ञानकर्मानुगृहीतं भक्तियोगमवतारयामास" என்றருளிச் செய்துள்ள ஸ்ரீ ஸூக்திகளை இங்கே அநுஸந்திப்பது. அர்ஜுநனை யுத்தத்தில் உத்ஸாஹப்படுத்துவது என்பது வ்யாஜமாத்ரமென்றும், பரமபுருஷார்த்தமான மோக்ஷத்திற்கு ஸாதனமாக வேதாந்தங்களில் ஓதப்பட்டதாய் ஜ்ஞானகர்மங்களை அங்கமாக வுடைத்தாயிருந்துள்ள பக்தியோகத்தை அவதரிப்பிப்பதுதான் இந்த கீதாசாஸ்த்ரத்திற்கு ப்ரதாந லக்ஷ்யமென்றும் தெரிவித்தருளினுராயிற்று. ஆகவே முமுக்ஷுக்களுக்கு ஜ்ஞாதவ்யங்களான ஸகலார்த்த ஸாரங்களும் இந்த கீதாசாஸ்த்ரத்தில் தெள்ளமுதாக அமைந்துள்ளன வென்றதாயிற்று.

16. இந்த கீதாசாஸ்த்ரமானது அர்ஜுனனுக்கும் கண்ணபிரானுக்கும் ஸம்வாதரூபமாக அவதரித்திருக்கச்செய்தேயும் த்ருதராஷ்ட்ரனுக்கும் ஸஞ்ஜயனுக்கும் ஸம்வாதரூபமாகவும் அவதரித்ததாயிற்று. கீதை தொடங்கும்போதே "த்ருதராஷ்ட்ர உவாச" என்று அவன் பெயரைத்தான் நினைக்கவும் சொல்லவும் ப்ராப்தமாகிறது. த்ருதராஷ்ட்ரன் ஸஞ்ஜயனை நோக்கிக் கேட்க, குருக்ஷேத்ரத்தில் நடந்த செய்திகளையெல்லாம் அவனுக்கு ஸஞ்ஜயன் சொல்லுவதாகவும், கீதாசாஸ்த்ரமும் ஸஞ்ஜயன் வாயிலாகவே வெளிவருவதாகவும் அமைந்திருக்கின்றது. பதினெட்டாமத்தியாயத்தில் எழுபத்து மூன்ருவது ச்லோகத்தோடு க்ருஷ்ணர்ஜுநஸம்வாதம் முடிந்து விட்டது. அதற்குமேலுள்ள ஐந்து ச்லோகங்களும் த்ருதராஷ்ட்ரனுக்கு ஸஞ்ஜயன் சொல்லி முடிப்பதாக அமைந்திருக்கின்றன.

17. பாண்டவர்களும் கௌரவர்களுமாகிற இருவகுப்பினருடையவும் சேனைகள் போர்புரிய ஆயத்தமாயிருந்த வளவில் வேதவ்யாஸ பகவான் தன் புதல்வனை த்ருதராஷ்ட்ரனிடம் வந்து 'மன்னவனே! இனி நடக்கப்போகிற யுத்தத்தில் உனது புத்திரர்கள் தவறுது விநாசமடையப் போகிறார்கள்; அந்த யுத்தத்தை நீ நேரில் காண விரும்புகின்றாயாகில் அதைக் காண்பதற்கேற்ற சக்ஷுஸ்ஸை உனக்கு அளிப்பேன்' என்றார். அதுகேட்ட த்ருதராஷ்ட்ரன் 'நான் அதைக் காண விரும்புகின்றிலேன்; உள்ளபடி அனைத்தையும் கேட்பிக்க வேணும்' என்றான். அப்போது வேதவ்யாஸர் தம்முடைய சிஷ்யனும் த்ருதராஷ்ட்ர ஸாரதியுமான ஸஞ்ஜயனையழைத்து யுத்தவிஷயத்தில் அவன் ஸர்வஜ்ஞனும்படி அநுக்ரஹம் செய்து, 'ஆதியோடந்தமாக யுத்த விருத்தாந்தங்கள் முழுவதையும் த்ருதராஷ்ட்ரனுக்கு நீ சொல்லக்கடவாய்' என்று நியமித்து (வியாஸர்) தம் இருப்பிடம் சென்று சேர்ந்தார். பிறகு ஸஞ்ஜயன் யுத்தரங்கத்தில் வந்து, அர்ஜுநனுக்கு கீதோபதேசம் செய்தருளாநின்ற ஸ்ரீ க்ருஷ்ண பரமாத்மாவின் முகாரவிந்தத்தில் நின்றும் கீதாம்ருதத்தை ஸாக்ஷாத்தாக ச்ரவணம் பண்ணி வியாஸருடைய அநுக்ரஹத்தினுல் கிடைத்திருந்த திவ்யஜ்ஞானத்தாலே விவித விசித்ர யுத்த விருத்தாந்தங்களெல்லாவற்றையும் தனக்கோர் அபாயமின்றிக்கே கரதலாமலகமாகக் கண்டுணர்ந்து அந்த யுத்தரங்கத்தில் நின்றும் போய் த்ருதராஷ்ட்ரனிடம் சேர்ந்து யுத்தத்தைப்பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்த அவனுக்கு யுத்தச்செய்திகளை முதலே பிடித்துச் சொன்னான். ஆக இந்த ஸம்வாதம் கீதாசாஸ்த்ரமாக உலகில் பரவி அனைவரையும் புனிதமாக்கிக்கொண்டு வருகின்றது.

18. ஸ்ரீ க்ருஷ்ணபரமாத்மா வாஸ்தவமாகத் திருவவதாரம் செய்து, வாஸ்தவமான அர்த்தங்களை நிரப்பி வாஸ்தவமாக கீதாசாஸ்த்ரத்தை யவதரிப்பித்தருளினதாக ஸ்ரீ பகவத் ராமாநுஜனடியார்களான நாம் நம்பியிருக்கிறோம். ஸ்வாமியிட்டருளின கீதாபாஷ்யத்தின் அவதாரிகையிலும் மேலே பலச்லோகங்களின் பாஷ்யத்திலும் இந்த நம்பிக்கையே நமக்கு ஊர்ஜிதமாக்கப்படுகின்றது. ஸ்ரீமத் சங்கராசார்யஸ்வாமிகளியற்றிய பாஷ்யத்தின் ப்ரக்ரியை இதற்கு மாறாகவுள்ளது. அவர் தம்முடைய பாஷ்ய அவதாரிகையில் "भगवान्…स्वमायया देहवानिव जात इव च लोकानुग्रहं कुर्वन् लक्ष्यते" [பகவாந் …ஸ்வமாயயா தேஹவாநிவ ஜாத இவ ச லோகாநுக்ரஹம் குர்வந் லக்ஷ்யதே] என்றெழுதிவைத்திருக்கக் காண்கிறோம். இதனால், பகவான் உண்மையில் தேஹபரிக்ரஹம் செய்தருளவில்லையென்றும், உண்மையான அவதாரம் செய்தருளவில்லையென்றும், மாயையினால் ஏதோ ஜனங்களை மயக்கிக் காட்டினதாகவும் சங்கராசாரியர் அபிப்ராயப் படுவதாக விளங்குகின்றது. இப்படி இவர் அபிப்ராயப்படுவதற்கு ஒரு காரணுபாஸ முண்டு; அதாவதென்னென்னில்; மேலே நான்காமத்யாயத்திலே பகவான் தானே தன்னுடைய அவதாரத்தைப்பற்றிப் பேசிவருகையில் (4-6) "अजोऽपि सन्नव्ययात्मा भूतानामीश्वरोऽपि सन्। प्रकृतिं स्वामधिष्ठाय संभवाम्यात्ममायया ॥" என்றதில் 'ஆத்ம மாயயா ஸம்பவாமி' என்றுள்ளது. இதற்கு உண்மையான பொருள் எதுவோ அது பகவத் ராமாநுஜ பாஷ்யத்தில் ப்ரமாண ப்ரதர்சந புரஸ்ஸரமாக நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. "आत्ममायया— आत्मीयया मायया। *माया वयुनं ज्ञानम्* इति ज्ञानपर्यायोऽत्र मायाशब्दः। तथा चाभियुक्तप्रयोगः— *मायया सततं वेत्ति प्राणिनां च शुभाशुभम्* इति।

आत्मीयेन ज्ञानेन— आत्मसंकल्पेनेत्यर्थः ॥" என்பன கீதாபாஷ்யத்தில் அங்கு ஸ்வாமியருளிச் செய்துள்ள ஸ்ரீஸூக்திகள். வைதிகநிகண்டுவையும் அதையநுஸரித்த அபியுக்த ப்ரயோகத்தையும் காட்டி ஸங்கல்பரூபஜ்ஞானமே இங்கு மாயா சப்தார்த்தமென்று ஸ்வாமி நிர்ணயித்திருக்கிறார். இதுதான் மஹர்ஷிகளின் அபிப்ராயத்திற்கு மிகவு மிணங்கிய ப்ராமாணிகமான பொருள். ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் (6–5–84) * इच्छा-गृहीताभिमतोरुदेहः– இச்சாக்ருஹீதாபிமதோருதேஹ: * என்று, மாயாசப்தஸ்தானத்தில் இச்சாசப்தத்தை நிஸ்ஸந்தேஹமாக இட்டு, பகவான் தன்னுடைய இச்சையினாலே தனக்கு அபிமதமான பல திவ்யமங்கல விக்ரஹங்களைப் பரிக்ரஹித்துக்கொண்டு அவதரிப்பதாகச் சொல்லப்பட்டுள்ளது.

19. இங்கு சங்கராசார்யர் "संभवामि— देहवानिव भवामि ; जात इव, आत्ममायया— आत्मनो मायया, न परमार्थतः लोकवत्" என்று எழுதியுள்ளார். கானலானது தன்னிடத்தில் தண்ணீர் இல்லாமலிருக்கச் செய்தேயும் அது இருப்பதுபோல் காட்டுகிறதல்லவா? அப்படியே பகவானும் தான் உண்மையில் தேஹபரிக்ரஹம் பண்ணுதவனாகையாலே தன்னிடத்தில் தேஹமில்லாதிருக்கச் செய்தேயும் இருப்பதுபோல் மாயையினால் காட்டிக் கொண்டு நிற்கிறான் என்பது சங்கராசார்யருடைய அபிப்ராயம். மாயா என்னுஞ் சொல்லுக்கு பொய்யென்பதே இவர் கொண்ட பொருளாகும். அந்த நாலாவது அத்யாயத்திலேயே மேல் ஒன்பதாவது ச்லோகத்தில் * जन्म कर्म च मे दिव्यमेवं यो वेत्ति तत्त्वतः । त्यक्त्वा देहं पुनर्जन्म नैति मामेति सोऽर्जुन ॥ * [ஜந்ம கர்ம ச மே திவ்யம் ஏவம் யோ வேத்தி தத்த்வத:, த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி ஸோர்ஜுந.] என்பதில் பகவான் தானே தன்னுடைய அவதாரத்தையும் அவதார சேஷ்டிதத்தையும் ஸத்யமாக எவன் அறிகிறானே அவன் வர்த்தமாந தேஹத்தை விட்டொழித்து மறு பிறவியடையாமல் தன்னையே யடைவதாகச் சொல்லியிருக்கின்றான். 'மே ஜந்ம கர்ம ச ய: தத்த்வத: வேத்தி' என்றிருப்பதை ஸ்வமதப்ராதிகூலமாக நினைத்த சங்கராசார்யர் வெகு சாதுர்யமாய் வேறுவிதமாக அந்வயம் காட்டியுள்ளார். தத்த்வத: என்பதை 'யோ வேத்தி' என்பதில் கூட்டாமல் 'தத்த்வத: தேஹம் த்யக்த்வா' என்று உத்தரார்த்தத்திலே அந்வயித்துப் பொருளுரைத்தார். அவர் இவ்வளவு ச்ரமம் எதற்காகப் படுகிறாரென்றால், 'ஸம்பவாமி ஆத்மமாயயா' என்றுள்ள விடத்தில் மாயா சப்தத்திற்குத் தாம் கொண்ட பொருளே பொருளென்கிற வொரு அபிநிவேசத்தினால் தான்.

20. ப்ராமாணிகர்கள் இங்கு மத்யஸ்த நிலையில் நின்று ஒன்று குறிக்கொள்ள வேண்டும். தைத்திரீய யஜுர்ப்ராஹ்மணத்தில் காடக (काठक) ச்ருதியில் மூன்றும் ப்ரச்நத்தில் "यावन्तः पाँसवो भूमेः संख्याता देवमायया" என்று ஓதப்பட்டிருக்கின்றது. பூமியிலுள்ள மண்துகள்களெல்லாம் தேவர்களின் மாயையினால் கணக்கிடப் பெற்றவையாக இதில் சொல்லப்படுகிறது. இங்கு மாயையென்பதற்கு பிறர் கூறும் பொருள் பொருந்தமாட்டாதென்பது வெளிப்படை. பூமியிலுள்ள மண்துக்கள்கள் மனிதர்களின் ஞானத்தினால் கணக்கிட முடியாதவையாயினும் தேவர்களின் ஞானத்தினால் கணக்கிடக்கூடியவையே யாதலால் இங்கு 'தேவமாயயா' என்றதற்கு 'தேவர்களின் ஞானத்தாலே' என்பதுதான் பொருளென்று யாவரும் நிராக்ஷேபமாக இசை

யத்தக்கதாகும். வித்யாரண்யர் முதலான வேதபாஷ்யகாரர்களும் இப்படித்தான் இங்குப் பொருள் வரைந்துள்ளார்கள். ஆகவே (மாயா) என்பதற்கு 'மித்த்யா' என்று பொருள்கொள்வது பொருத்தமற்றதென்று தெளியக்கடவது.

21. அஸுரராக்ஷஸாதிகள் செய்கிற செயல்களை மாயை யென்று சொல்லுவதுண்டு. அங்கும் மித்த்யா என்கிற அர்த்தம் கிடையாது. ஆச்சர்யகரம் என்பதுபற்றியே அங்கு மாயாசப்த ப்ரயோகம் பண்ணுவது. பிள்ளை லோகாசார்யர் தத்வத்ரயத்தில் அசித் ப்ரகரணத்தில் (10) "மாயையென்கிறது விசித்ரஸ்ருஷ்டியைப் பண்ணுகையாலே" என்றருளிச் செய்த விடத்து வியாக்கியானத்தில் மணவாள மாமுனிகள் "அஸுரராக்ஷஸாதி க்ரியைகளை ஆச்சர்யகரத்வத்தைப் பற்ற மாயாசப்தத்தாலே சொல்லுகிறாப்போலே இத்தையும் [ப்ரக்ருதியையும்] மாயை யென்கிறது விசித்ர ஸ்ருஷ்டியைப் பண்ணுகையாலே. அதாவது, ஒன்றுபோலொன்றன்றிக்கே விஸ்மயநீயங்களான கார்யங்களை ஜனிப்பிக்கை" என்றருளிச் செய்ததும் இங்கே அநுஸந்தேயம். "தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா" (7–14) என்ற கீதா ச்லோகத்தின் பாஷ்யத்தில் ஸ்வாமி வெகு விசதமாக நிரூபித்தருளுகிறார். "अस्या माया-शब्दवाच्यत्वम् आसुरराक्षसास्त्रादीनामिव विचित्रकार्यकरत्वेन ··· अतो मायाशब्दो न मिथ्यार्थवाची। ऐन्द्रजालिकादिष्वपि केनचिन्मन्त्रौषधादिना मिथ्यार्थविषयायाः पारमार्थिक्या एव बुद्धेरुत्पादकत्वेन मायावीति प्रयोगः। तथा मन्त्रौषधादिरेव च तत्र माया" இத்யாதி திவ்யஸூக்திகள் அங்கு ஸேவிக்கத் தக்கவை. மாயாசப்தத்தின் உண்மைப் பொருளையுணராதே தவறான பொருளைக் கொண்டதன் பயனாகவே மாயாவாதிகளின் வாதங்கள் மிக மிக வளர்ந்துவிட்டன.

22. கண்ணபிரான் அவதரித்ததும் பொய், தேஹபரிக்ரஹம் பண்ணினதும் பொய் என்று சொல்லும் பக்ஷத்தில் கீதாசாஸ்த்ரம் அவதரித்ததும் பொய்யென்றே சொன்னதாகத் தேறிவிடும். பொய்யான சாஸ்த்ரம் நம்முடைய உஜ்ஜீவனத்திற்கு எப்படி ஸாதனமாகும். வேங்கடாத்வரி இயற்றிய விச்வகுணாதர்சத்தில் வேதாந்தி வர்ணனத்தில் "दृश्यं मिथ्या द्रष्टिकर्ता च मिथ्या दोषो मिथ्येत्येव या धीरमीषाम्। साऽधिष्ठानांशेऽपि किं नेति चिन्ता साधिष्ठानां पण्डितानामुदेति ॥" என்றொரு ச்லோகம் வெகு அற்புதமாகக் காண்கிறது. 'பார்க்கப்படுகிற பொருள்களெல்லாம் பொய், பார்க்கிறவனும் பொய், அவித்யையாகிற தோஷமும் பொய் என்று கொள்ளுகிற இந்த மாயாவாதிகள், இவற்றுக்கு ஆச்ரய பூதமான ப்ரஹ்மமும் பொய்யென்று முடித்திருக்கலாமே; ஏன் அதை மாத்திரம் ஸத்யமென்று கொண்டார்களோ தெரியவில்லை—என்பதே இந்த ச்லோகத்தின் கருத்து. பொய்யன் சொல்லுகிற வார்த்தைகளும் பொய்யாகு மாகையாலே தம்மைப் பொய்யரென்று நிலைநாட்டிக் கொள்ளுகின்ற இந்த மாயாவாதிகள் சொல்லுமதெல்லாம் பொய்யே என்பது இவர்கள் தம்மாலேயே ஸ்தாபிக்கப்பட்டுத் தீருவதனால் இவர்களைக் கண்டிக்க நாம் சிறிதும் ப்ரயாஸம் கொள்ளவேண்டியதில்லை யென்றும் ஒரு ரஸிக பண்டிதர் எழுதிவைத்திருக்கக் காண்கிறோம்.

23. கீதையின் இரண்டாமத்யாயத்தின் பன்னிரண்டாவது ச்லோகத்திலிருந்தே சாஸ்த்ராரம்பமென்று சொல்லலாம். அதற்குக் கீழுள்ள பாகங்களெல்லாம் அவதாரிகையாக நிற்கிறது. அந்த பன்னிரண்டாவது ச்லோகம் எவ்விதமாகவுள்ள

தென்று பார்க்கவேணும். "न त्वेवाहं जातु नासं न त्वं नेमे जनाधिपाः। न चैव न भविष्यामः सर्वे वयमतः परम्" [ந த்வேவாஹம் ஜாது நாஸம் ந த்வம் நேமே ஜநாதிபா:, ந சைவ நபவிஷ்யாமஸ்ஸர்வே வயமத: பரம்] என்பதே அந்த ச்லோகம். இதன் பொருள் யாதெனில், ஸர்வேச்வரனாகிய நானும் இதற்கு முன்கழிந்த அநாதிகாலத்திலும் இருந்தவனே; அர்ஜுநா! நீயும் இந்த அரசர்களுமான க்ஷேத்ரஜ்ஞர்களுங்கூட முன்பும் இருந்தவர்களே. முன்பு இருந்தது மாத்திரமேயன்றிக்கே மேலுள்ள காலமுமெல்லாம் நானும் நீங்களும் இருக்கப்போகிறவர்களே என்பதாம். ஸர்வேச்வரனாய் பரமாத்மாவான நான் நித்யன் என்பதில் எப்படி ஸந்தேஹமில்லையோ, அப்படியே க்ஷேத்ரஜ்ஞர்களாய் ஜீவாத்மாக்களான நீங்களும் நித்யர்களென்பதில் ஸந்தேஹமில்லையென்று பகவான்தானே சோதிவாய்திறந்து பணித்துளன். இதனால் ஸர்வேச்வரனை பகவானிடங்காட்டிலும் ஜீவாத்மாக்களுக்குண்டான பேதமும், அந்த ஜீவாத்மாக்களுக்குப் பரஸ்பரமுண்டான பேதமும் பாரமார்த்திகமென்று பகவான் தானே வ்யக்தமாகத் தெரிவித்ததாய்த் தேறுகிறது. இந்த ச்லோகம் விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கு அடிப்படையாக வுள்ளதென்று நன்குணரலாம். நமது பாஷ்யகாரர் இந்த ச்லோகத்திற்கு இட்டருளியிருக்கின்ற பாஷ்யம் மிகவும் விபுலமாக வுள்ளது.

24. கீழே அர்ஜுனன் (2-7.) *पृच्छामि त्वा धर्मसंमूढचेताः। यच्छ्रेयस्स्यान्निश्चितं ब्रूहि तन्मे शिष्यस्तेऽहं शाधि मां त्वां प्रपन्नम्* என்று, தத்வார்த்தம் தெரியாமையினாலே தான் தளும்பியிருப்பதாகவும் தன்னுடைய கலக்கம் தீர தத்வார்த்தத்தை அறுதியிட்டு அருளிச்செய்யவேணுமென்றும் சொல்லித் திருவடிகளில் விழுந்து யாசித்திருக்கிறான். அப்படிப்பட்டவனுக்கு தத்வோபதேசம் செய்யவே இந்த கீதாசாஸ்த்ரம் அவதரித்தது. கீதாசார்யன், கலங்கினவனுக்குச் சொல்லும்போது தெளிவான பொருளைச் சொல்லுவனேயல்லது கலங்கின பொருளையே சொல்லமாட்டானன்றோ. ஆகவே இந்த சாஸ்த்ரத்தில் கூறப்படும் பொருள்கள் யாவும் ஸர்வாத்மநா பாரமார்த்திகமென்றே வைதிகர்கள் கொள்ளக்கடவர்கள். அதிலும் ஆரம்ப ச்லோகமான விதனில் கூறப்படும் விஷயம் உபநிஷதாதிகளில் வடிக்கட்டின பொருளாகவேயிருக்கத்தகும். இதில் ஜீவாத்ம பரமாத்மபேதம் முதலியன தெரிவிக்கப்படுமவை அபாரமார்த்திகமாக இருக்கச் சிறிதும் ஔசித்யமில்லை. ஆக இந்த நிரூபணங்களினால் ஸ்வாமி யெம்பெருமானார் உபநிஷத்து, ப்ரஹ்மஸூத்ரம், கீதை முதலானவற்றின் பொருள்களை ஆர்ஜவத்துடன் அறிந்து அறுதியிடுபவர் என்பது நிஷ்பக்ஷபாதர்களுக்குக் கையிலங்கு நெல்லிக்கனியாகும். இப்பெருமை பொலியவே யதிராஜஸப்ததியில் "यथाभूतस्वार्थो यतिनृपतिसूक्तिर्विजयते-யதாபூதஸ்வார்த்தா யதிந்ருபதிஸூக்திர் விஜயதே" என்று பொருத்தமாகப் பேசப்பட்டது.

25. இனி ப்ரக்ருதத்திலே செல்லுவோம்; *நத்வேவாஹம் ஜாது நாஸம்* என்கிற ச்லோகத்திலே ஜீவாத்ம பரமாத்ம பேதமும் ஜீவர்களுக்குப் பரஸ்பரபேதமுமாகிற விவை காட்டப்பட்டது போல அதற்கடுத்த (13) ச்லோகத்தில் *देहिनोऽस्मिन् यथा देहे कौमारं यौवनं जरा। तथा देहान्तरप्राप्तिः धीरस्तत्र न मुह्यति* என்பதில் ப்ரக்ருத்யாத்ம விவேகமும் காட்டப்பட்டது. அசேதநம் வேறு, சேதநன் வேறு என்கிற பகுத்துணர்வே ப்ரக்ருத்யாத்ம விவேகமெனப்படும். நிர்விசேஷ சின்மாத்ரமான ப்ரஹ்ம

மொன்று தவிர வேறு சேதநா சேதநங்கள் உண்மையில் கிடையா என்கிறவாதம் இங்கு நிராகரிக்கப்பட்டதாகிறது. *अन्तवन्त इमे देहाः* न जायते म्रियते वा कदाचित्* वासांसि जीर्णानि यथा विहाय * இத்யாதிகளான ச்லோகங்களினால் ஆத்மா நித்யனென்றும், தேஹம் அநித்யமென்றும் பரக்கச் சொல்லுகிற முகத்தாலும் சேதநா சேதநங்களின் ஸத்பாவம் பாரமார்த்திகமாகவே ஸமர்த்திக்கப்பட்டதாகிறது. ஆக, கீதாசாஸ்த்ரம் விசிஷ்டாத்வைதிகளுக்கே நிதியானதென்றும் மற்றையோர்க்கு இதுகொண்டு பணியில்லையென்றும் சொல்லிற்றாயிற்று. இனி அத்யாயக்ரமேண சில விசேஷார்த்தங்களை விளக்குவோம்.

26. (2-27.) *जातस्य हि ध्रुवो मृत्युः ध्रुवं जन्म मृतस्य च। तस्मादपरिहार्येऽर्थे न त्वं शोचितुमर्हसि ॥* உத்பந்நனுக்கு மரணம் நிச்சயம்; மரணமடைந்தவனுக்கு புநர் ஜன்மம் நிச்சயம்; ஆகவே பரிஹாரமற்ற இவ்விஷயத்தில் நீ சோகிக்கக்கடவையல்லை-என்று இந்த ச்லோகத்தினால் சொல்லப்படுவதாகக் கொண்டு சிலர் சங்கிப்பதொன்றுண்டு; அதாவது, உத்பந்நனுக்கு மரணம் நிச்சயம் என்பது நிராக்ஷேபமான விஷயந்தான்; ஆயினும் உடனே "த்ருவம் ஜந்ம ம்ருதஸ்ய ச" என்றிருக்கிறதே, இது எப்படி பொருந்தும்? மரணமடைந்தவனெல்லாம் மறுபடியும் பிறந்தே தீருகிறானென்று சொன்னால் அபுநராவ்ருத்தி லக்ஷணமான மோக்ஷம் இல்லையென்று தேறிவிடுமல்லவா? "त्यक्त्वा देहं पुनर्जन्म नैति मामेति सोऽर्जुन! —த்யக்த்வா தேஹம் புநர் ஜந்ம நைதி மாமேதி ஸோர்ஜுந!" இத்யாதிகளான பல ச்லோகங்களாலே கீதையில் பலகால் சொல்லப்படுவதும், "மீட்சியின்றி வைகுந்தமாநகர் மற்றது கையதுவே" இத்யாதிகளான பல பாசுரங்களும் பழுதாமே என்று சங்கிக்க நேர்கின்றது. இந்த சங்கை சிறிதும் யுக்தமன்று. 'ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருத்யு:' என்றதும் ஆத்மாவைப்பற்றினதன்று; 'த்ருவம் ஜந்ம ம்ருதஸ்ய ச' என்றதும் ஆத்மாவைப் பற்றினதன்று. ஆத்மாவுக்கு உத்பத்தி விநாசங்களிரண்டும் இல்லையென்று பலகால் சொல்லப்பட்டிருக்கிறது- (2—20) "न जायते म्रियते वा कदाचिन्नायं भूत्वा भविता वा न भूयः। अजो नित्यः शाश्वतोऽयं पुराणो न हन्यते हन्यमाने शरीरे॥" என்கிற ச்லோகத்தினால் ஜநநமரணாதிகளெல்லாம் அசேதநமான தேஹத்தின் தருமங்களேயொழிய நித்யனாய் அபரிணாமியாயிருக்கிற ஆத்மாவின் தருமங்களல்லவென்று அறுதியிடப்பட்டிருக்கிறது. ஆகவே, 'ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருத்யு:' என்றதும் அசேதநமான தேஹத்திற்கே; 'த்ருவம் ஜந்ம ம்ருதஸ்ய ச' என்றதும் அதற்கே. ஆதலால் முன் சொன்ன சங்கைக்கு இடமில்லை.

27. "த்ருவம் ஜந்ம ம்ருதஸ்ய ச" என்றதில் மற்றொரு சங்கை தோன்றும். நஷ்டமாய்ப்போனது மறுபடியும் எப்படி உத்பத்தியையடைய முடியும்? நம்முடைய சரீரமானது ச்மசானத்தில் கொளுத்தப்பட்டு நீறாகி யொழிகின்றது. அது மறுபடியும் உத்பத்தியடைகின்றதென்றால் இது எப்படி ஸம்பாவிதமாகும்? என்று சங்கிக்க நேரும். இதற்குச் சொல்லுகிறோம். உத்பத்தியாவது என்ன? விநாசமாவது என்ன? என்பதை முதலில் நன்கு தெரிந்து கொள்ளவேண்டும். புதிதாக ஒரு வஸ்து உண்டாவதும் கிடையாது, உள்ளவஸ்து அடியோடு நசித்துப்போவதும் கிடையாது. ஸத்தான த்ரவ்யத்திற்கு அவஸ்தாவிசேஷங்களே உத்பத்தி விநாசங்

களாகும். தேஹம் உண்டாயிற்றென்றால் என்ன? ப்ருதிவி அப்பு தேஜஸ்ஸு வாயு ஆகாசம் என்கிற பஞ்சபூதங்களின் அம்சங்கள் ஒன்று சேர்ந்து ஒருவிதமான அவஸ்தையை யடைந்த தென்றபடி. "மண்ணும் நீ ரெரிகால் மஞ்சுலாவுமாகாசமுமாம் புண்ணுராக்கை" என்றும், "மஞ்சுசேர் வானெரி நீர் நிலம் காலிவை மயங்கிநின்ற அஞ்சு சேராக்கை" என்றும் திருமங்கையாழ்வாரருளிச் செய்தபடியே பாஞ்சபௌதிக பிண்டமான தேஹம் புதிதாக ஆகாசத்திலின்றும் குதித்து விட்டதன்றே. ஸூக்ஷ்மாவஸ்தையை விட்டு ஸ்தூலாவஸ்தையை பஜிப்பதுதான் உற்பத்தியாகும். மறுபடியும் ஸ்தூலாவஸ்தையை விட்டு ஸூக்ஷ்மாவஸ்தையை பஜிப்பதுதான் விநாசமாகும். வஸ்த்ரம் என்கிற ஒரு வஸ்துவை யெடுத்துக் கொள்வோம். நூல் முதலான சில த்ரவ்யங்கள் ஏற்கெனவே இருந்தவைகளே ரசனாவிசேஷத்தாலே வஸ்த்ரமென்னும் பெயரையடைகின்றன. இங்கு நூற்களின் சேர்க்கை தவிர வேறொரு த்ரவ்யம் உள்ளதா வென்று பார்க்கவேணும். பார்க்குமிடத்து வேறொரு த்ரவ்யம் காண்பரிது. "उत्पत्तिविनाशादयः सतो द्रव्यस्य अवस्थाविशेषाः" என்கிற கீதாபாஷ்ய ஸ்ரீ ஸூக்தியை இங்கே அநுஸந்திப்பது. தென்மொழியால் 'உள்ளது, இல்லது' என்றும், வடமொழியால் 'ஸத், அஸத்' என்றும் வ்யவஹரிக்கப்படுவன—ஸ்தூலாவஸ்தையைப் பற்றவும் ஸூக்ஷ்மாவஸ்தையைப் பற்றவுமே யென்று உணர்க. வேதாந்திகளுக்கு ஸத்கார்யவாதிகளென்று பெயர். "सदेव नीयते व्यक्तिम्— ஸதேவ நீயதே வ்யக்திம்" என்கிற ப்ரமாணத்தைத் திடமாகக் கொள்க.

28. (2-45.) *त्रैगुण्यविषया वेदाः निस्त्रैगुण्यो भवार्जुन!* [த்ரைகுண்யவிஷயா வேதா: நிஸ்த்ரைகுண்யோ பவார்ஜுந!] இங்கு சங்கராசார்யருடைய பாஷ்யத்தில், த்ரைகுண்யமாவது ஸம்ஸாரம் என்றும், 'நிஸ்த்ரைகுண்யோ பவ' என்பதற்கு (நிஷ்காமோ பவ) என்று பொருளென்றும் எழுதப்பட்டிருக்கிறது. ஸ்ரீராமாநுஜ பாஷ்யத்தில் மிக விளக்கமும் விரிவுமுள்ளது. ஸத்வம் ரஜஸ் தமஸ் என்கிற முக்குணங்கள் மலிந்த புருஷர்கள் இங்கு த்ரைகுண்ய சப்தத்தினால் சொல்லப்படுகிறார்கள். அன்னவர்களைப்பற்றியவை வேதங்கள் என்றபடி. வேதங்களானவை கேவலம் ஸாத்விகர்களுக்கே வழிகாட்டுகின்றன வென்றில்லை. உலகிலுள்ள சேதநர்கள் சிலர் ஸாத்விகர்களாயும் பலர் ராஜஸர்களாயும் தாமஸர்களாயுமிருக்கக் காண்கிறோம்; வேதங்கள் எல்லார்க்கும் வழிகாட்டியாக வேண்டும். பலசரக்குக் கடைகளில் சர்க்கரை வெல்லம் குங்குமப்பூ கடுகு மிளகு சீரகம் முதலிய எல்லாப் பொருள்களும் (நேர்வாளமுட்பட) விற்கப்படுவது போல, வேதங்கள் முமுக்ஷுக்களுக்கும் வழிகாட்டுகின்றன; புபுக்ஷுக்களுக்கும் வழிகாட்டுகின்றன; பரஹிம்ஸைக்குரிய உபாயங்களையும் காட்டுகின்றன. ஆனால் வேதம் காட்டுகின்றவற்றை யெல்லாம் நாம் கொள்ள வேணுமென்பது கிடையாது. கடையில் விற்கப்படுகிற விஷத்தையுமா நாம் வாங்கிக்கொள்ளுகிறோம்; இல்லையே. அதுபோல, ராஜஸர்களுக்கும் தாமஸர்

களுக்கும் வேதம் காட்டுகிற வழிகளை நாம் பற்றலாகாது. [நிஸ்த்ரைகுண்யோ பவ அர்ஜுந!] இதற்கு ஸ்வாமியினுடைய பாஷ்யம் அற்புதமானது. "इदानीं सत्त्वप्रचुरस्त्वं तदेव वर्धय। नान्योन्यसंकीर्णगुणत्रयप्रचुरो भव। न तत्प्राचुर्यं वर्धयेत्यर्थः।" என்பது பாஷ்ய ஸூக்தி. 'நிஸ்த்ரைகுண்யோ பவ' என்கிற மூலத்தை நோக்கும்போது 'ஸத்வ குணமுட்பட ஒரு குணத்தையும் நீ கைக் கொள்ளாதே' என்று கண்ணபிரானருளிச் செய்வதாகத் தோன்றும். "முக்குணத் திரண்டவை யகற்றி, ஒன்றினிலொன்றி நின்று" என்று திருமங்கையாழ்வார் திருவெழுகூற்றிருக்கையிலருளிச் செய்தபடியே ரஜஸ்தமோ குணங்களை விட்டு ஸத்வகுண மொன்றிலேயே ஊன்றியிருக்கக்கடவாய்—என்று ஸ்வாமி பாஷ்ய மருளிச் செய்வதற்கு மூலத்தில் ஆதாரமில்லை போல் தோன்றும். மேலே உத்தரார்த்தத்தில் 'நித்ய ஸத்வஸ்த:' என்று ஸ்பஷ்டமாகச் சொல்லியிருப்பதற்குச் சேரவே ஸ்வாமி உரைத்தருளினரென்று கொள்ளவேணும். ஆனாலும் 'நிஸ்த்ரைகுண்ய:' என்பதற்கு முக்குணங்களு மில்லாதவனென்று தானே பொருள் படும்; ஸத்வகுண ப்ரசுரன் என்று பொருள்பட வழியுண்டோ வென்று கேள்வி தோன்றும். கேண்மின். (நிஸ்த்ரைகுண்ய:) என்பதற்கு மூன்று குணங்களும் பிசிறியிருக்கப் பெறாதவன் என்பதே அக்ஷரஸ்ப்யமான பொருள். 'अन्योन्यसंकीर्णगुणत्रय-प्रचुरो न भव' என்று ஸ்வாமியருளிச் செய்தது பொருத்தமானதே. வேதங்களில் ராஜஸதாமஸர்களுக்குக் காட்டியுள்ள உபாயங்களில் கண்வையாதே ஸாத்விகர்களுக்குக் காட்டியுள்ள உபாயங்களில் மாத்ரமே நீ கண்வைக்கக் கடவாய் என்றதாகத் தேறிநின்றது.

29. (2—47.) * कर्मण्येवाधिकारस्ते मा फलेषु कदाचन ॥ * [கர்மண்யேவாதிகாரஸ்தே மா பலேஷு கதாசந.] நித்யம் நைமித்திகம் காம்யம் என்று சொல்லப்படுகிற கருமங்களைச் செய்வதில் மாத்திரம் நீ அதிகரிக்கலாமே யல்லது அவற்றின் பலனில் அதிகரிக்கலாகாது-என்பதாக இதற்குப் பொருள். பலனை விரும்பக்கூடாதென்று சொல்லப்படுகிறதா? அன்றி, பலன்கிடைத்தாலும் அதனை அநுபவிக்கலாகாதென்று சொல்லப்படுகிறதா வென்று இங்கு விமர்சிக்க நேர்கின்றது. * प्रयोजनमनुद्दिश्य न मन्दोऽपि प्रवर्तते— ப்ரயோஜநமநுத்திச்ய ந மந்தோபி ப்ரவர்த்ததே * என்று, பலனை விரும்பாமல் மூடன்கூட ஒரு காரியத்தில் கைவைக்க மாட்டானென்று சாஸ்த்ரமே சொல்லுகையாலே பலனை விரும்பக் கூடாதென்கை பொருந்தாது. பலன் கிடைத்தால் அதையநுபவியாமல் விட்டுவிடுவது புருஷதந்த்ரமன்றே, ஸுகமோ துக்கமோ எது நேர்ந்தாலும் அநுபவித்துக்கொண்டு தானே யிருக்கிறோம். அநுபவிப்பதும் விட்டிடுவதும் நம்மிஷ்டமன்றே. ஆகவே, பலன் கிடைத்தாலும் அதனை யநுபவிக்கலாகாதென்று சொல்லப் படுவதாகக் கொள்வதற்கும் ஔசித்யமில்லை. பின்னை யாது பொருளென்னில்; செய்கிற காரியங்களுக்குப் பலன் கிடைத்தே தீரும்; பலனை நீ கோலாதே. உன்னுடைய அற்பபுத்தியினால் நீ கோலுவாயாகில் க்ஷுத்ரபலனுக்கு மேற்பட உத்தம பலனைக் கோலுவதற்கு உனக்குத் தெரியாது.

ளாகும். தேஹம் உண்டாயிற்றென்றால் என்ன? ப்ருதிவி அப்பு தேஜஸ்ஸு வாயு ஆகாசம் என்கிற பஞ்சபூதங்களின் அம்சங்கள் ஒன்று சேர்ந்து ஒருவிதமான அவஸ்தையை யடைந்ததென்றபடி. "மண்ணும் நீ ரெரிகால் மஞ்சுலாவுமாகாசமுமாம் புண்ணாக்கை" என்றும், "மஞ்சுசேர் வானெரி நீர் நிலம் காலிவை மயங்கிநின்ற அஞ்சு சேராக்கை" என்றும் திருமங்கையாழ்வாரருளிச் செய்தபடியே பாஞ்சபௌதிக பிண்டமான தேஹம் புதிதாக ஆகாசத்தினின்றும் குதித்து விட்டதன்றே. ஸூக்ஷ்மாவஸ்தையை விட்டு ஸ்தூலாவஸ்தையை பஜிப்பதுதான் உற்பத்தியாகும். மறுபடியும் ஸ்தூலாவஸ்தையை விட்டு ஸூக்ஷ்மாவஸ்தையை பஜிப்பதுதான் விநாசமாகும். வஸ்த்ரம் என்கிற ஒரு வஸ்துவை யெடுத்துக் கொள்வோம். நூல் முதலான சில த்ரவ்யங்கள் ஏற்கெனவே இருந்தவைகளே ரசநாவிசேஷத்தாலே வஸ்த்ரமென்னும் பெயரையடைகின்றன. இங்கு நூற்களின் சேர்க்கை தவிர வேறொரு த்ரவ்யம் உள்ளதா வென்று பார்க்கவேணும். பார்க்குமிடத்து வேறொரு த்ரவ்யம் காண்பரிது. "उत्पत्तिविनाशादयः सतो द्रव्यस्य अवस्थाविशेषाः" என்கிற கீதாபாஷ்ய ஸ்ரீ ஸூக்தியை இங்கே அநுஸந்திப்பது. தென்மொழியால் 'உள்ளது, இல்லது' என்றும், வடமொழியால் 'ஸத், அஸத்' என்றும் வ்யவஹரிக்கப்படுவன—ஸ்தூலாவஸ்தையைப் பற்றவும் ஸூக்ஷ்மாவஸ்தையைப் பற்றவுமே யென்று உணர்க. வேதாந்திகளுக்கு ஸத்கார்யவாதிகளென்று பெயர். "सदेव नीयते व्यक्तिम्— ஸதேவ நீயதே வ்யக்திம்" என்கிற ப்ரமாணத்தைத் திடமாகக் கொள்க.

28. (2-45.) *त्रैगुण्यविषया वेदाः निस्त्रैगुण्यो भवार्जुन!* [த்ரைகுண்யவிஷயா வேதா: நிஸ்த்ரைகுண்யோ பவார்ஜுந!] இங்கு சங்கராசார்யருடைய பாஷ்யத்தில், த்ரைகுண்யமாவது ஸம்ஸாரம் என்றும், 'நிஸ்த்ரைகுண்யோ பவ' என்பதற்கு (நிஷ்காமோ பவ) என்று பொருளென்றும் எழுதப்பட்டிருக்கிறது. ஸ்ரீராமாநுஜ பாஷ்யத்தில் மிக விளக்கமும் விரிவுமுள்ளது. ஸத்வம் ரஜஸ் தமஸ் என்கிற முக்குணங்கள் மலிந்த புருஷர்கள் இங்கு த்ரைகுண்ய சப்தத்தினால் சொல்லப்படுகிறார்கள். அன்னவர்களைப்பற்றியவை வேதங்கள் என்றபடி. வேதங்களானவை கேவலம் ஸாத்விகர்களுக்கே வழிகாட்டுகின்றன வென்றில்லை. உலகிலுள்ள சேதநர்கள் சிலர் ஸாத்விகர்களாயும் பலர் ராஜஸர்களாயும் தாமஸர்களாயுமிருக்கக் காண்கிறோம்; வேதங்கள் எல்லார்க்கும் வழிகாட்டியாக வேண்டும். பல சரக்குக் கடைகளில் சர்க்கரை வெல்லம் குங்குமப்பூ கடுகு மிளகு சீரகம் முதலிய எல்லாப் பொருள்களும் (கேர்வாளமுட்பட) விற்கப்படுவதுபோல, வேதங்கள் முமுக்ஷுக்களுக்கும் வழிகாட்டுகின்றன; புபுக்ஷுக்களுக்கும் வழிகாட்டுகின்றன; பரஹிம்ஸைக்குரிய உபாயங்களையும் காட்டுகின்றன. ஆனால் வேதம் காட்டுகின்றவற்றை யெல்லாம் நாம் கொள்ளவேணுமென்பது கிடையாது. கடையில் விற்கப்படுகிற விஷத்தையுமா நாம் வாங்கிக்கொள்ளுகிறோம்; இல்லையே. அதுபோல, ராஜஸர்களுக்கும் தாமஸர்

களுக்கும் வேதம் காட்டுகிற வழிகளை நாம் பற்றலாகாது. [நிஸ்த்ரைகுண்யோ பவ அர்ஜுந !] இதற்கு ஸ்வாமியினுடைய பாஷ்யம் அற்புதமானது. "इदानीं सत्त्वप्रचुरस्त्वं तदेव वर्धय। नान्योन्यसंकीर्णगुणत्रयप्रचुरो भव। न तत्प्राचुर्यं वर्धयेत्यर्थः।" என்பது பாஷ்ய ஸூக்தி. 'நிஸ்த்ரைகுண்யோ பவ' என்கிற மூலத்தை நோக்கும்போது 'ஸத்வ குணமுட்பட ஒரு குணத்தையும் நீ கைக் கொள்ளாதே' என்று கண்ணபிரானரு ளிச் செய்வதாகத் தோன்றும். "முக்குணத் திரண்டவை யகற்றி, ஒன்றினி லொன்றி நின்று" என்று திருமங்கையாழ்வார் திருவெழுகூற்றிருக்கையிலருளிச் செய்தபடியே ரஜஸ்தமோ குணங்களை விட்டு ஸத்வகுண மொன்றிலேயே ஊன்றியிருக்கக்கடவாய்—என்று ஸ்வாமி பாஷ்ய மருளிச் செய்வதற்கு மூலத்தில் ஆதாரமில்லை போல் தோன்றும். மேலே உத்தரார்த்தத்தில் 'நித்ய ஸத்வஸ்த:' என்று ஸ்பஷ்டமாகச் சொல்லியிருப்பதற்குச் சேரவே ஸ்வாமி உரைத்தருளினரென்று கொள்ளவேணும். ஆனாலும் 'நிஸ்த்ரைகுண்ய:' என்பதற்கு முக்குணங்களு மில்லாதவனென்று தானே பொருள் படும்; ஸத்வகுண ப்ரசுரன் என்று பொருள்பட வழியுண்டோ வென்று கேள்வி தோன்றும். கேண்மின். (நிஸ்த்ரைகுண்ய:) என்பதற்கு மூன்று குணங்களும் பிசிறியிருக்கப் பெருதவன் என்பதே அக்ஷரலப்யமான பொருள். 'अन्योन्यसंकीर्णगुणत्रय-प्रचुरो न भव' என்று ஸ்வாமியருளிச் செய்தது பொருத்தமானதே. வேதங்களில் ராஜஸதாமஸர்களுக்குக் காட்டியுள்ள உபாயங்களில் கண்வையாதே ஸாத்விகர்களுக்குக் காட்டியுள்ள உபாயங்களில் மாத்ரமே நீ கண்வைக்கக் கடவாய் என்றதாகத் தேறிநின்றது.

29. (2—47.) * कर्मण्येवाधिकारस्ते मा फलेषु कदाचन ॥* [கர்மண்யேவாதிகாரஸ்தே மா பலேஷு கதாசந.] நித்யம் நைமித்திகம் காம்யம் என்று சொல்லப்படுகிற கருமங்களைச் செய்வதில் மாத்திரம் நீ அதிகரிக்கலாமே யல்லது அவற்றின் பலனில் அதிகரிக்கலாகாது-என்பதாக இதற்குப் பொருள். பலனை விரும்பக்கூடாதென்று சொல்லப்படுகிறதா? அன்றி, பலன்கிடைத்தாலும் அதனை அநுபவிக்கலாகாதென்று சொல்லப்படுகிறதா வென்று இங்கு விமர்சிக்க நேர்கின்றது. * प्रयोजनमनुद्दिश्य न मन्दोऽपि प्रवर्तते— ப்ரயோஜநமநுத்திச்ய ந மந்தோபி ப்ரவர்த்ததே * என்று, பலனை விரும்பாமல் மூடன்கூட ஒரு காரியத்தில் கைவைக்க மாட்டானென்று சாஸ்த்ரமே சொல்லுகையாலே பலனை விரும்பக் கூடாதென்கை பொருந்தாது. பலன் கிடைத்தால் அதையநுபவியாமல் விட்டுவிடுவது புருஷதந்த்ரமன்றே, ஸுகமோ துக்கமோ எது நேர்ந்தாலும் அநுபவித்துக்கொண்டு தானே யிருக்கிறோம். அநுபவிப்பதும் விட்டிடுவதும் நம்மிஷ்டமன்றே. ஆகவே, பலன் கிடைத்தாலும் அதனை யநுபவிக்கலாகாதென்று சொல்லப் படுவதாகக் கொள்வதற்கும் ஔசித்ய மில்லை. பின்னை யாது பொருளென்னில்; செய்கிற காரியங்களுக்குப் பலன் கிடைத்தே தீரும்; பலனை நீ கோலாதே. உன்னுடைய அற்பபுத்தியினால் நீ கோலுவாயாகில் க்ஷுத்ரபலனுக்கு மேற்பட உத்தம பலனைக் கோலுவதற்கு உனக்குத் தெரியாது.

அந்தப் பொறுப்பை என்னிடமே விட்டுவிடுவாயானால் என் கருத்தால் உத்தமமான பலனே உனக்குக் கொடுக்கப்படும்— என்று இங்ஙனம் திருவுள்ளம்பற்றியே "மா फलेषु कदाचन" என்றருளிச் செய்ததாகக் கொள்க.

30. "या निशा सर्वभूतानां तस्यां जागर्ति संयमी। यस्यां जाग्रति भूतानि सा निशा पश्यतो मुनेः— யா நிசா ஸர்வபூதாநாம் தஸ்யாம் ஜாகர்த்தி ஸம்யமீ, யஸ்யாம் ஜாக்ரதி பூதாநி ஸா நிசா பச்யதோ முநே:" (2-69.) என்னுமிந்த ச்லோகம் புதிர் போலுள்ளது. ஸர்வப்ராணிகளுக்கும் எது இரவோ அவ்விரவில் ஜிதேந்த்ரியனானவன் விழித்துக் கொண்டிருக்கிறான்; ஸர்வப்ராணிகளும் கண்விழித்துக் கொண்டிருக்கும்படியான பகலானது ஜிதேந்த்ரியனுக்கு இரவாகிறது, என்பது இந்த ச்லோகத்தின் கருத்து. நாம் கண்ணெடுத்துப் பார்க்க விரும்பாமல் வெறுத்திருக்கும் விஷயத்தை ஜிதேந்த்ரியர்கள் விரும்பிப் பார்க்கிறார்களென்றும், நாம் விரும்பிப்பார்க்கும் விஷயங்களை அவர்கள் காணகில்லாமல் வெறுத்திருக்கிறார்களென்றும் சொல்லப்பட்டதாகிறது. பகவத் பாகவத விஷயங்களை நாம் விரும்பிப் பாராமல் வெறுப்புக் கொண்டிருக்கிறோம்; அவ்விஷயங்களையே ஸாதுக்கள் விரும்பிப் பார்க்கிறார்கள். லௌகிக விநோதங்களை நாம் விரும்பிப் பார்க்கிறோம்; அவற்றைக் காணக் கண்கூசியிருக்கிறார்கள் ஸாதுக்கள். நம்முடைய பகல் ஸாதுக்களுக்கு இரவாகிறது; ஸாதுக்களின் பகல் நமக்கு இரவாகிறது. ஸ்வரூபாநுரூபங்களான விஷயங்களில் கண்ணோட்டம் செலுத்தாமல் ஸ்வரூபநாசகங்களான விஷயங்களிலேயே நாம் கண்ணோட்டம் செலுத்தியிருப்பது வர்ஜிக்கத் தகுந்தது என்னுமிடம் இதனால் சிக்ஷிதமாகிறதென்று கொள்க.

31. யாவரும் தினப்படியாக தேவதாராதனம் செய்து நிவேதனம் செய்து தச்சேஷத்தைக் கொண்டே தேஹதாரணம் பண்ணவேணுமென்பது ஸகல சாஸ்த்ரங்களின் கொள்கை. இவ்வர்த்தம் மூன்றாமத்யாயத்தில் பலச்லோகங்களில் தெரிவிக்கப்படுகின்றது. 10, 11, 12 ச்லோகங்கள் இவற்றுள் மிக முக்கியமானவை. (10) *सहयज्ञैः प्रजास्सृष्ट्वा पुरोवाच प्रजापतिः। अनेन प्रसविष्यध्वम् एष वोऽस्त्विष्टकामधुक्— ஸஹ யஜ்ஞை: ப்ரஜாஸ் ஸ்ருஷ்ட்வா புரோவாச ப்ரஜாபதி:, அநேந ப்ரஸவிஷ்யத்வம் ஏஷ வோஸ்த்விஷ்டகாமதுக்.* இந்த ச்லோகத்தில் "ஸஹயஜ்ஞா: ப்ரஜா:" என்று சங்கரபாஷ்ய பாடம். அப்பாடத்தில் 'ஸஹயஜ்ஞா:' என்பது ஏகபதம். 'யஜ்ஞஸஹிதா: ப்ரஜா;' என்று சங்கரபாஷ்யம். "सहयज्ञा इति शंकरयादवप्रकाशीयपाठस्तु अप्रसिद्धेरनादृतः" என்பது தாத்பர்ய சந்த்ரிகாஸூக்தி. அன்றியும் (ப்ரஜாபதி:) என்பதற்கு நான்முகனே பொருளாக சங்கரபாஷ்யம் காட்டுகிறது. ஸர்வேச்வரனே நிருபாதிக ப்ரஜாபதியாகையால் ஸ்ரீமந் நாராயணனே இங்கு ப்ரஜாபதி சப்தார்த்தமென்று பகவத் ராமாநுஜ பாஷ்யமுள்ளது. இதில் ஸ்வாரஸ்யமேதென்னில்; இங்குச் சொல்லப்படுகிற அர்த்தம் நான்முகனுட்பட ஸம்ஸாரவசவர்த்திகளான ஸகல ப்ராணிகளையும் நோக்கியது. அவர்களையும் நோக்கியே இக்கட்டளை இடப்படுகிறபடியால் நான்முகனை ஆஜ்ஞாபக கோடியில் சேர்ப்பது உசிதமன்று; ஆஜ்ஞாப்ய கோடியில் சேர்ப்பதுதான் உசிதம் என்று ஸ்வாமியின் திருவுள்ளம். நான்முகனையும் இங்கு ப்ரஜைகளின் கோடியிலே சேர்த்துப் பொருள் செய்வதுதான் பொருத்தமானது. ப்ரளயத்திற்கடுத்தபடியாக ஸ்ருஷ்டிகாலத்தில் பகவான் யஜ்ஞங்களோடு

கூடவே ப்ரஜைகளைப் படைத்து இங்ஙனே சொன்னுன்—இந்த யஜ்ஞத்தைக் கொண்டே நீங்கள் அபிவிருத்தியடையக் கடவீர்கள் ; இந்த யஜ்ஞமானது உங்களுக்குப் பரம புருஷார்த்தமான மோக்ஷமென்கிற காமத்தையும் அதற்குச் சார்பான மற்ற காமங்களையும் பூர்த்திசெய்யக் கடவது-என்று ச்லோகத்திற்குப்பொருள். * யஜ— தேவபூஜாயாம் * என்று தாதுவாகையாலே பகவதாராதனந்தான் யஜ்ஞமெனப் படுகிறது. பகவதாராதனம் செய்தே அவரவர்கள் அபிவிருத்தியடைய முடியுமென்றும், பகவதாராதனத்தினுல்தான் அபீஷ்டகாமங்கள் நிறைவேறுமென்றும் சொல்லிற்றுயிற்று. இது தன்னை அடுத்த ச்லோகம் விவரிக்கிறது ; (11) * देवान् भावयताऽनेन ते देवा भावयन्तु वः। परस्परं भावयन्तः श्रेयः परमवाप्स्यथ— தேவாந் பாவயதாநேந தே தேவா பாவயந்து வ:, பரஸ்பரம் பாவயந்த: ச்ரேய: பரம் அவாப்ஸ்யத. * பகவதாராதநமான இந்த யஜ்ஞத்தினுலே எனக்கு சரீர பூதர்களான தேவர்களை ஆராதியுங்கள் ; அப்படி ஆராதிக்கப்பட்ட அந்த தேவர்கள் மேன் மேலும் தங்களுடைய ஆராதனைக்கு வேண்டிய பொருள்களினுல் உங்களைப் போஷிக்கக் கடவர்கள். இப்படி பரஸ்பரம் த்ருப்தி பெறுவித்துக் கொண்டு சிறந்த ச்ரேயஸ்ஸான மோக்ஷத்தை அடைவீர்கள்-என்பது இந்த ச்லோகத்தின் கருத்து. இதில் பூர்வார்த்தம் இப்படியிருக்கலாமோ? வேறு விதமாக இருக்கவேண்டாவா? ‘நீங்கள் என்னை ஆராதியுங்கள் ; நான் உங்களை த்ருப்தி செய்விக்கிறேன்’ என்று சொல்லவேண்டியிருக்க, தன்னிற்காட்டில் நீசர்களான தேவதைகளை ஆராதிக்கும்படி நியமிப்பதும், அந்த தேவதைகள் உங்களுக்குப் பலன் கொடுப்பர்களென்று சொல்லுவதும் எதற்காக? என்று சங்கை தோன்றும். கேண்மின். விஷயங்களைப் படிப்படியாகத் தானே சொல்ல வேண்டியிருக்கிறது. மேலே ஒன்பதாமத்யாயத்தில் (22) * அநந்யாச் சிந்தயந்தோ மாம் யே ஜநா: பர்யுபாஸதே * என்கிற ச்லோகத்தினுல் தன்னையே உபாஸிக்கும்படி சொல்லி, அதற்கடுத்த (23) ச்லோகத்தில் * ये त्वन्यदेवता भक्ता यजन्ते श्रद्धयाऽन्विताः। तेऽपि मामेव कौन्तेय ! यजन्त्यविधिपूर्वकम्— யே த்வந்யதேவதா பக்தா யஜந்தே ச்ரத்தயாந்விதா:, தேபி மாமேவ கௌந்தேய யஜந்த்யவிதிபூர்வகம் * என்று, இதரதேவதைகளை பஜிப்பவர்களும் ஒருவாறு தன்னையே பஜித்து ஆராதனை செய்கிறுர்களென்று சொல்லி, அதற்கடுத்த (24) ச்லோகத்தில்— * अहं हि सर्वयज्ञानां भोक्ता च प्रभुरेव च— அஹம் ஹி ஸர்வயஜ்ஞாநாம் போக்தா ச ப்ரபுரேவச * என்று, எந்த தேவதையை நோக்கி எந்த ஆராதனம் செய்தாலும் அதெல்லாம் தன்னையே சேருகிறதென்றும் அதற்குப் பலனும் தானே (ஸத்வாரகமாகக்) கொடுப்பதாகவும் சொல்லி யிருப்பதால் “देवान् भावयतानेन ते देवा भावयन्तु वः” என்றவிதில் யாதொரு குறையுமில்லையென்றுணர்க.

32. இனி ப்ரக்ருத விஷயத்திற் செல்வோம். (3—12.) * इष्टान् भोगान् हि वो देवा दास्यन्ते यज्ञभाविताः। तैर्दत्तानप्रदायैभ्यो यो भुङ्क्ते स्तेन एव सः— இஷ்டாந் போகாந் ஹி வோ தேவா தாஸ்யந்தே யஜ்ஞபாவிதா:, தைர்தத்தாந் அப்ரதாயைப்யோ யோ புங்க்தே ஸ்தேந ஏவ ஸ: * இந்த ச்லோகத்தின் கருத்தாவது—உங்களுடைய யஜ்ஞங்களாலே ஆராதிக்கப்பட்டவர்களும் என்னுடைய சரீர பூதர்களுமான தேவர்கள் உங்களுக்கு அபேக்ஷிதங்களான போகங்களைக் கொடுப்பர்கள், ஆராதநோபகரணங்களாக உங்களிடமுள்ள பொருள்களெல்லாம் அந்த தேவர்களாலேயே கொடுக்கப்பட்டவைகளாத

லால் அவற்றை அவர்களுக்கு அர்ப்பணம் செய்யாமல் புஜிப்பவன் கள்வனேயா வன், நரகமேயவனுக்குப் பலிக்கும்—என்றபடி. இதில் [நைர் தத்தாந்] என்றது குறிக் கொள்ளத்தக்கது. தைத்திரீயஸம்ஹிதையில் மூன்ருவது காண்டத்தில் இரண்டா வது ப்ரச்நத்தில் "इतः प्रदानं देवा उपजीवन्ति अमुतः प्रदानं मनुष्याः" என்று ஓதப்பட்டுள் ளது. இதன் கருத்தாவது, தேவதைகளுக்கு ஆகவேண்டிய உணவு இங்கிருந்து செல் லுகிறது; மனிதர்களான நமக்கு ஆகவேண்டிய உணவு அங்கிருந்து வருகிறது என்ப தாம். * முந்திவானம் மழைபொழிய மூவாவுருவின் மறையாளர், அந்திமூன்று மன லோம்புமணியார்வீதி யழுந்தூரே * என்று திருமங்கையாழ்வாரருளிச் செய்தபடியே இங்கிருக்கும் நாம் யஜ்ஞயாகங்களைச் செய்து தேவர்களை ஸந்த்ருப்தி பண்ணிவைத் தால் திருப்தர்களான அவர்கள் அங்கிருந்து மழையையனுப்பி நம்மை ஜீவிக்கச் செய் கிருர்களென்கை. ஆகவே நாம் தேவதாராதனம் பண்ணுமல் வெறுமனே வயிற்றை வளர்த்தால் ஜீவிப்பதும் அரிதாம் என்றதாயிற்று. பலபேர்கள் தேவதாஸத்பாவத் தையே அங்கீகரியாதவர்களாயும் அவர்களுக்கு ஆராதனம் செய்யாதவர்களாயும் உண்டுடுத்துத் திரியவில்லையா? அவர்கள் சுகமாக ஜீவிக்கவில்லையா? என்கிற ஆக்ஷே பத்தை இங்குச் சிலர் செய்யக்கூடும். அவர்கள் "अधर्मेणैधते तावत् ततो भद्राणि पश्यति। शनैरावर्तमानस्तु कर्तुर्मूलानि कृन्तति॥" என்கிற மநுமஹர்ஷிவசனத்தை நோக்கித் தெளி யக்கடவர்கள். அதர்மம் செய்பவர்கள் மேன்மேலும் க்ஷேமங்களை யடைவதாக உல கில் நாம் காண நேர்ந்தாலும், அகர்மம் உடனே ஹாநியை விளைத்திடாமல் நாள டைவில் மூலஹாநியை விளைத்திடுமென்று கொள்ளவேணும். இதை மநுமஹர்ஷி பல ச்லோகங்களால் விரிவாகச் சொல்லியிருக்கிருர்.

33. இனி (3—21) * यद्यदाचरति श्रेष्ठः तत्तदेवेतरो जनः। स यत्प्रमाणं कुरुते लोकस्तदनुवर्तते— யத் யதாசரதி ச்ரேஷ்டஸ் தத் ததேவேதரோ ஜநः, ஸ யத்ப்ரமாணம் குருதே லோகஸ் ததநுவர்த்ததே. * என்னும் ச்லோகம் சிஷ்டாசாரத்தின் சிறப்பைத்தெரி விப்பது. ஸம்ஸ்க்ருதஜ்ஞர்களுக்கு அநாயாஸமாகப் பொருள்படக்கூடிய ச்லோக மிது. இதன் உத்தரார்த்தத்திற்கு பாஷ்யமிட்ட சங்கராசார்ய ஸ்வாமிகள் "सः श्रेष्ठः यत् प्रमाणं कुरुते- लौकिकं वैदिकं वा; लोकः तत् अनुवर्तते- तदेव प्रमाणीकरोतीत्यर्थः" என்று ரைத்தார். ச்ரேஷ்டரா யிருப்பார் யாதொன்றை ப்ரமாணமாகக் கொள்ளுகிருர் களோ, அது தன்னையே லோகமும் ப்ரமாணமாகக் கொள்ளுகிறது என்பதாகப் பொருள் காட்டப்பட்டதாயிற்று. மத்வாசார்யரான ஆனந்ததீர்த்த ஸ்வாமிகளும் இவ்வண்ணமாகவே பொருளுரைத்தார். "स यद्वाक्यादिकं प्रमाणीकुरुते- यदुक्तप्रकारेण तिष्ठतीत्यर्थः" என்பது அவருடைய பாஷ்யபங்க்தி. ஆக இவற்ருல் "யத்ப்ரமாணம்" என்றவிடத்தில் பதச்சேதம் இவர்களுக்கு விவக்ஷிதம் என்று தேறிற்று. யத் என் பது தனிப்பதமென்று முடிந்தது. இனி நம் ஸ்வாமியின் பாஷ்ய ப்ரக்ரியையைப் பார்ப்போம். அவர் இங்கு இரண்டு பதங்களாகத் திருவுள்ளம் பற்றுமல் (யத்ப்ர மாணம்) என்று பஹுவ்ரீஹி ஸமாஸங் கொண்ட ஓரே பதமாகத் திருவுள்ளம் பற்றி பாஷ்யமிட்டருளியுள்ளார். பூர்வார்த்தத்தில் "ச்ரேஷ்ட: யத்யத் ஆசரதி" என்றதற்கு— ச்ரேஷ்டராயிருப்பார் எந்தெந்த கருமத்தை யநுஷ்டிக்கிருரோ என் பதாகப் பொருளாதலால் அந்த கர்மத்தைப் பற்றியே உத்தரார்த்தமும் சொல்லு

கிறதென்று ஸ்வாமியின் திருவுள்ளம். சிஷ்டர்கள் தாங்களனுஷ்டிக்கிற கருமத்திற்கு எவ்வளவு அவதி வைத்துக் கொள்ளுகிறார்களோ அவ்வளவு அவதியையே பிறரும் வைத்துக்கொள்ளுகிறார்கள் என்றபடி. இதை தாத்பர்யசந்த்ரிகையில் வேதாந்த தேசிகன் விவரித்துள்ளார். 'பெரியோர்கள் அனுஷ்டிக்கிற கருமத்தையே பிறரும் அனுஷ்டிக்கிறார்கள்' என்று இவ்வளவு மாத்திரமே சொன்னால் போதாது. அவர்கள் அக்கருமத்தை எந்த விதமாக அநுஷ்டிக்கிறார்களோ அந்த விதமாகவே பிறரும் அநுஷ்டிக்கிறார்கள் என்றும் சொல்லவேண்டியது இங்கு ஆவச்யகமாதலால் அதற்குச் சேர ஸ்வாமியின் பாஷ்யம் மிகப் பொருத்தமாக அவதரித்துள்ளது. பெரியார் எதை ப்ரமாணமாகக்கொள்ளுகிறாரோ அதையே பிறரும் ப்ரமாணமாகக் கொள்ளுகிறாரென்பது ப்ரக்ருதத்தில் அபேக்ஷித மாதலால் இதர பாஷ்யகாரர்களை நம் ஸ்வாமி பின் செல்ல வில்லை. 'யத் ப்ரமாணம் குருதே' என்றதற்கு இங்ஙனே பொருள் கொண்டால் "லோகஸ் தததநுவர்த்ததே" என்ற மேல் வாக்யத்தில் தத் என்றது ஸ்வரஸமாகப் பொருள் தருமோவென்று ஒரு சங்கை தோன்றும். இதற்குத் தாத்பர்ய சந்த்ரிகையிலேயே தகுந்த பரிஹாரமுள்ளது, கண்டு கொள்க. இதர பாஷ்யகாரர்களுக்குத் தோன்றாத அர்த்தம் இங்கு நம் ஸ்வாமிக்குத் தோன்றினது எதனாலென்னில்; திருப்பாவை ஜீயரென்று ப்ரஸித்தி பெற்றிருந்ததனாலேயே என்னலாம். திருப்பாவையில் *மாலே மணிவண்ணா* என்கிற பாசுரத்தில் "மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல்" என்றுள்ளது. இங்கு "மேலையார் செய்வனகள் கேட்டியேல்" என்னுமளவே போதுமாயிருக்க இடையில் 'வேண்டுவன' என்று ப்ரயோகித்தது குறிக்கொள்ளத் தக்கது.

34. இதற்கடுத்த ச்லோகம் (3–22) *न मे पार्थास्ति कर्तव्यं त्रिषु लोकेषु किञ्चन। नानवाप्तमवाप्तव्यं वर्त एव च कर्मणि— ந மே பார்த்தாஸ்தி கர்த்தவ்யம் த்ரிஷு லோகேஷு கிஞ்சந, நாநவாப்தமவாப்தவ்யம் வர்த்த ஏவ ச கர்மணி* என்பது. இதில் பகவான் தானும் கர்மாநுஷ்டானத்தில் ஊன்றியிருப்பதாக வற்புறுத்திச் சொல்லப் பட்டுள்ளது. க்ருஷ்ணாவதாரத்திற்கு முந்தின அவதாரமான ஸ்ரீ ராமாவதாரத்தில் இது தன்னை ஸுஸ்பஷ்டமாகக் காணலாம். விச்வாமித்ர முனிவன் தசரத மன்னவனிடம் வந்து *அஹம் வேத்மி மஹாத்மாநம்* இத்யாதிகளைச் சொல்லி ஸ்ரீராமபிரானைக் கொண்டு சென்றான். *ஊந ஷோடச வர்ஷோ மே ராமோ ராஜீவ லோசந:* என்று சக்ரவர்த்தி சொன்னபடி இராமன் செந்தாமரைக் கண்ணனாகையாலே ஸூர்யன் அஸ்தமித்தவாறே தாமரை முகுளிதமாகுங் கணக்கிலே இராமனும் கண் மூடினான். பிறகு ஸுப்ரபாத காலத்திலே முனிவன் "கௌஸல்யா ஸுப்ரஜா ராம! பூர்வா ஸந்த்யா ப்ரவர்த்ததே" என்று சொல்லித் துயிலுணர்த்துகிறான். "இராமா! எழுந்திரு; நாம் சீக்கிரமாக ஆச்ரமம் சென்று சேர்ந்து யாகம் தொடங்கவேணும்" என்று சொல்லவேண்டியிருக்க, அங்ஙனே சொல்லாதே "உத்திஷ்ட நரசார்தூல! கர்த்தவ்யம் தைவமாஹ்நிகம்" என்றான் முனிவன். ப்ராதஸ் ஸந்த்யாநுஷ்டானம் வழுவாமற் செய்யவேண்டுமே, அதற்காக எழுந்திராய் என்று சொன்னவிதனால் எம்பெருமானுடைய அவதாரம் முக்கியமாக தர்மாநுஷ்டானத்திற்காகவே யென்பது நன்கு விளங்கும். மேலே பிராட்டியைப் பிரிந்து வருந்திக் கிடக்கிற காலங்களிலும்

பெருமாள் ஸந்தியாகாலங்களில் தவறாது ஸந்தியாவந்தனம் அனுட்டித்தபடியை வான்மீகி பகவான் அனேகத் கூறியிருக்கின்றார். ஆகவே பகவான் * वर्त एव च कर्मणि * என்று சொன்னது மிகப்பொருந்தும்.

35. இனி நான்காமத்யாயத்தைப் பற்றிச் சிறிது விரிவாக வுரைக்க விரும்புகிறோம். கீதையில் 'अर्जुन उवाच, भगवानुवाच' என்னுமிவை மாறி மாறி வருவதைக் காணலாம். அர்ஜுநன் கேள்வி கேட்பன்; அதற்குக் கண்ணபிரான் விடை கூறுவன். வினவுக்குப் பிறகு விடை, விடைக்குப் பிறகு வினா—என்றிப்படி மாறி மாறி நடந்து செல்லும். மூன்றாமத்யாயத் தொடக்கத்தில் 1, 2 ச்லோகங்கள் அர்ஜுநனுடைய வினா. அதன்பிறகு 3 முதல் 35 ச்லோகம் வரை பகவானுடைய விடை. அதன் பிறகு முப்பத்தாறுவது ச்லோகமொன்று அர்ஜுநனுடைய வினா. பிறகு 37 முதல் 43 வரை அத்யாயம் பூர்த்தியாக பகவானுடைய விடை. அவ்வளவோடு அத்யாயம் முடிந்திருக்கிறது. இனி, மேல் விஷயம் நடைபெறவேணுமானால் நான்காமத்யாயத்தின் தொடக்கத்தில் [அர்ஜுந உவாச] என்று அர்ஜுநனுடைய வினா ஆரம்பமாகவேணும். கீழே பகவானுடைய விடை முடிந்திருப்பதால் அதற்குமேல் அர்ஜுநன் வினவினாற் பகவான் விடை கூறவேணும். அப்ரஷ்டோத்தரமாகச் சொல்லத்தகாதன்றோ. அர்ஜுநனே ஒன்றும் கேட்டிலன். அப்படியிருந்தும் நான்காமத்யாயம் [ஸ்ரீபகவாநுவாச] என்றே தொடங்குகிறது. இதை ஆழ்ந்து விமர்சிக்குமளவில் ஒன்று தோன்றுகிறது. கீழே கர்மயோகத்தைப்பற்றி விரிவாகச் சொல்லக் கேட்ட அர்ஜுநனுக்குத் தலைவேதனையுண்டாயிற்றுப் போலும். அதனால் கீதை கேட்டது போதுமென்றெண்ணித் தலைகுனிந்து வாளாவிருந்தான்; 'நாம் ஏதாவது கேட்டால் தானே கண்ணன் வாய்திறக்கப்போகிறான், நாம் வாய்மூடிக் கிடந்தோமாகில் தானே நிற்கிறான்; கீதையும் ஸமாப்தமாகிறது' என்று நினைத்தான் போலுமர்ஜுநன். இன்னுமெவ்வளவோ அர்த்தவிசேஷங்களைச் சொரிய நினைத்திருக்கிற கண்ணபிரான் எங்ஙனம் வாய்மூடி நிற்பன்? இவ்வளவோடு கீதையை எப்படி முடித்திடுவன்? "चातकस्त्रिचतुरान् पयःकणान याचते जलधरं पिपासया। सोऽपि पूरयति विश्वमम्भसा हन्त हन्त! महतामुदारता॥" என்கிறான் பண்டிதராஜன். கேட்பவர்கள் சிறிதே கேட்டாலும் மஹோதாரர்கள் தாராளமாகவன்றோ கொட்டுவர்கள். அதுபோல் கண்ணபிரானும் "यच्छ्रेयस्स्यान्निश्चितं ब्रूहि तन्मे शिष्यस्तेऽहं शाधि मां त्वां प्रपन्नम्" என்று முந்துற முன்னம் அர்ஜுநன் பிரார்த்தித்ததையே குவாலாகக் கொண்டு இடையிடையே அவனுடைய அபேக்ஷையை ப்ரதீக்ஷியாமல் திருவுள்ளத்தில் தோன்றுகிற அரும்பெரும் பொருள்களையெல்லாம் தானே ப்ரஸக்தியிட்டுக்கொண்டு, வெளியிடுகிறானாயிற்று. இப்படி மேலும் பல விடங்களிற் காணலாம். அர்ஜுநன் கேளாமலிருக்க பகவான் தானாகவே அடியிட்டுச் சொல்லுகிற அத்யாயங்கள் மேலேயும் பலவுள.

36. இப்போது நான்காமத்யாயத் தொடக்கத்தில் "इमं विवस्वते योगं प्रोक्तवानहमव्ययम्। विवस्वान्मनवे प्राह मनुरिक्ष्वाकवेऽब्रवीत्॥ एवं परम्पराप्राप्तमिमं राजर्षयो विदुः। स कालेनेह महता योगो नष्टः परन्तप। स एवायं मया तेऽद्य योगः प्रोक्तः पुरातनः। भक्तोऽसि मे सखा चेति रहस्यं ह्येतदुत्तमम्॥" என்று பகவான் சொன்னான். எப்படியாவது அர்ஜுநன் வாய்திறந்து

கேள்வி கேட்கும்படி செய்யவேணுமென்றே கண்ணன் இது கூறினன். இந்த ச்லோகங்களின் பொருள் யாதெனில்; அப்பா அர்ஜுநா! இப்போது நான் உனக்குக் கர்மயோகத்தைப்பற்றி விரிவாகச் சொன்னேனே. இது கேவலம் யுத்தப்ரோத்ஸாஹநத்திற்காக இப்போது புதிதாய்ச் சொல்லப்பட்டதென்று நினையாதே; மந்வந்தரத்தின் ஆதியிலேயே ஸகல ஜகதுத்தாரணார்த்தமாக பரம புருஷார்த்தமான மோக்ஷத்திற்கு ஸாதநமாய் இந்த யோகத்தை நானே விவஸ்வானுக்குச் சொன்னேன்; விவஸ்வான் மனுவுக்குச் சொன்னார்; மநு இக்ஷ்வாகுவுக்குச் சொன்னார்; இப்படியாக ஸம்ப்ரதாய பரம்பரயா ப்ராப்தமான இந்த யோகத்தை பூருவர்களான ராஜர்ஷிகள் உபதேசமுறையில் தெரிந்து கொண்டார்கள்; அப்படிப்பட்ட யோகம் இடையில் நெடுங்காலம் தகுந்த அதிகாரிகளில்லாமையாலே விநஷ்டப்ராயமாயிருந்தது; அந்த புராதந யோகமே தான் இப்போது உன்னுடைய பக்தியும் நேசமும் காரணமாக உனக்கு என்னாலுபதேசிக்கப்பட்டது. இதை நான் தவிர வேறொருவரும் தெரிந்து கொள்ளவும் சொல்லவும் முடியாது; இது வேதாந்தோதிதமான உத்தமரஹஸ்யமன்றோ—என்பதாம். பகவான் இப்படி சொன்னதில் எவ்விதமான அநுபபத்தியுமில்லை; உண்மையான இவ்விஷயத்தில் எவ்விதமான ஆக்ஷேபமும் ஆஸ்திகர்கள் செய்ய ப்ரஸக்தியில்லை. ஆனாலும் அர்ஜுநன் இதில் ப்ரபலமான ஆக்ஷேபம் செய்திருக்கிறான். அது அடுத்த ச்லோகத்தில் தெரிவிக்கப்படுகிறது— "अवरं भवतो जन्म परं जन्म विवस्वतः। कथमेतद्विजानीयां त्वमादौ प्रोक्तवानिति ॥" என்று. இதன் பொருள் யாதெனில்; கண்ணா! நீயோ என்னோடு ஸமகாலத்தில் ஜனித்து என்னைப்போலவே சிறு வயதுடையவனா யிராநின்றாய்; எந்த விவஸ்வானுக்கு நீ உபதேசித்ததாகச் சொல்லுகிறாயோ, அந்த விவஸ்வான் இருபத்தெட்டு சதுர்யுகங்களுக்கு முன்னே யிருந்தவனாதலால் மிகமிக முற்பட்டவன். அவனுக்கு நீ உபதேசித்தாயென்பது அஸம்பாவிதமாகவன்றோவுள்ளது. இதை நான் எப்படி நம்புவது? என்பதாம்.

37. மேலே யெடுத்த * அவரம் பவதோ ஜந்ம * என்கிற அர்ஜுந ப்ரச்நமான ச்லோகத்திற்கு பாஷ்யம் செய்யாநின்ற சங்கராசார்யரும் மத்வாசார்யரும் வாளா சென்றார்கள். நம் ஸ்வாமி யெம்பெருமானார் இங்கு தமது பாஷ்யத்தில் விசேஷ சர்ச்சை செய்தருளுகிறார். கண்ணபிரானை நோக்கி அர்ஜுநன் இப்படி கேள்வி கேட்டிருக்கிறானே, இது ஸம்பாவிதமான கேள்வியாக இல்லை. ஏனெனில்; அர்ஜுநனானவன் கண்ணபிரானை வெறும் இடைப்பிள்ளையாக நினைத்திருக்கிறானா? அல்லது ஸாக்ஷாத் பரமபுருஷனாக நினைத்திருக்கிறானா? என்பதை முன்னம் விமர்சித்து முடிக்க வேண்டும். கேவலம் இடைப்பிள்ளையாகவே நினைத்திருந்தானாகில் இங்ஙனம் கேள்வி கேட்க ஔசித்யமுண்டு. ஸாக்ஷாத் பரம புருஷனாகவே நினைத்திருக்கிறானென்று தேறுமாகில் இங்ஙனம் கேள்வி கேட்க இடமே கிடையாது. பரமபுருஷன் எப்போதுமுள்ளவனாகையாலே அவன் விவஸ்வானுக்கு உபதேசிப்பதில் அஸம்பவமொன்றுமில்லையாகையாலே 'அவரம் பவதோ ஜந்ம பரம் ஜந்ம விவஸ்வத:' என்று வாய்திறக்கவே வழியில்லை. ஆகவே அர்ஜுநன் கண்ணனை கேவலம் இடைப்பிள்ளையாகவே கொண்டு இங்ஙனம் கேள்வி கேட்டிருக்கிறானென்று கொள்ளவேணும். இது முன்பின் ஸந்தர்ப்பங்களுக்கு அடியோடு ஒவ்வாது. தர்மபுத்ரருடைய ராஜஸூயாதிகளில்

பீஷ்மர்போல்வாரிடத்தில் "कृष्ण एव हि लोकानामुत्पत्तिरपि चाप्ययः। कृष्णस्य हि कृते भूतमिदं विश्वं चराचरम् ॥" இத்யாதிகள் பலவும் கேட்டிருக்கிறுனர்ஜுனன். மேலே பத்தாவது அத்யாயத்தில் இவ்வர்ஜுனன் தானே கண்ணபிரானை நோக்கி "परं ब्रह्म परं धाम पवित्रं परमं भवान् । पुरुषं शाश्वतं दिव्यमादिदेवमजं विभुम् ॥ आहुस्त्वामृषयस्सर्वे देवर्षिर्नारदस्तथा । असितो देवलो व्यासः स्वयं चैव ब्रवीषि मे ॥" என்று கூறுகிருன். கண்ணன் பரமபுருஷனென்பதைப் பலரிடத்தில் பலகால் தான் கேட்டிருப்பதாக ஸ்பஷ்டமாகக் கூறியுள்ளான். இப்படியிருக்கும்போது 'அவரம் பவதோ ஜந்ம' என்கிற கேள்வி உதிக்க ப்ரஸக்தியே கிடையாது என்பதை ஸ்வாமி உபபாதித்துக் காட்டியுள்ளார். அஸம்பாவிதமான ப்ரச்நம் எப்படி தோன்றிற்று? என்னில்; இதற்கு ஸமாதானமும் ஸ்வாமி வெகு பொருத்தமாக அருளிச் செய்துள்ளார்; அதை உபபாதிக்கிறேம் கேண்மின்.

38. இங்கு ஸ்வாமியின் கீதாபாஷ்ய ஸூக்தி பரமரஸகனமாகையாலே கண்டபாடம் செய்து தரிக்கப்படவேண்டுமென்பதற்காக அதை அப்படியே எடுத்துக் காட்டுகிறேம் ;— "अत्रोच्यते। जानात्येवायं भगवन्तं वसुदेवसूनुं पार्थः। जानतोऽपि अजानत इव पृच्छतः अयमाशयः; निखिलहेयप्रत्यनीककल्याणैकतानस्य सर्वेश्वरस्य सर्वज्ञस्य सत्यसंकल्पस्य अवाप्तसमस्तकामस्य कर्मपरवशदेवमनुष्यादिसजातीयं जन्म किमिन्द्रजालादिवन्मिथ्या? उत सत्यम्? सत्यत्वे च कथं जन्मप्रकारः? किमात्मकोऽयं देहः? कश्च जन्महेतुः? कदा च जन्म? किमर्थं च जन्म? इति परिहारप्रकारेण प्रश्नार्थो विज्ञायते ॥"
என்பன கீதாபாஷ்ய பங்க்திகள். இவற்றின் ஸாரமான கருத்து என்னவென்றால் அர்ஜுனன் கண்ணபிரானை ஸாக்ஷாத் பரமபுருஷனுகவே தான் உறுதி கொண்டிருக்கிருன். அப்படியிருந்தும் அவனது பெருமையை அறியாதவன்போல் கேள்விகேட்டிருப்பது ஏனென்னில், மேலே கண்ணபிரான் இவனுக்கு விடை கூறுகின்ற ப்ரகாரங்களை நோக்குமிடத்து, அர்ஜுனன் என்ன அபிப்ராயங்கொண்டு இக்கேள்வி கேட்டிருக்கிருனென்பதை எளிதாக நிர்ணயிக்கலாம். மேலே பகவான் நாலைந்து ச்லோகங்களாலே விடை கூறுவதில், தன்னுடைய அவதாரம் இந்திர ஜாலாதிகள் போலே அஸத்யமன்று, ஸத்யமேயென்பதையும், தன்னுடைய அவதாரப்ரகாரத்தையும் திவ்ய மங்கள விக்ரஹத் தன்மையையும் அவதார ஹேதுவையும் அவதாரகாலத்தையும் அவதார ப்ரயோஜநத்தையும் அருளிச் செய்திருக்கிருன். இவையெல்லாம் அப்ருஷ்டோத்தரமாகக் கூடாது. அர்ஜுனன் கேளாத அம்சங்களுக்குக் கண்ணன் விடை கூறுவதாகத் தேறினல் அது மிகவும் அஸமஞ்ஜஸமாகும். இத்தனையும் அர்ஜுனனுடைய உள்ளத்திலுறைந்தவை; அவன் கேள்வி கேட்கத் தொடங்கினபோதே இவ்வளவும் இவன் கேட்க நினைத்திருக்கிருனென்று கண்ணபிரான் தெரிந்துகொண்டு அவனை வாயடக்கி தாம் விரிவாக விடையிறுக்கிறார். இல்லையாகில் "பஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி" என்ற அடுத்த வாக்யமொன்றேடே கண்ணன் தன் விடையை முடித்திருக்கவேண்டுமே. 'அப்பா அர்ஜுனா! நீ நினைக்கிறபடி நான் இப்போதாகப் பிறந்தவனல்லேன்; அநாதிகாலமாகப் பல பிறப்பும் பிறந்துகொண்டிருக்கிறேன்; ஆகவே முன்னெரு பிறப்பில் விவஸ்வானுக்கு உபதேசித்தேனென்பது அஸம்பாவிதமன்று காண்' என்று இவ்வளவே யன்றே சொல்லி முடித்திருக்கவேண்டும். அப்படியில்லையே. இதற்கு மேலுள்ள விஷயங்களைச் சொல்லுவதற்கு என்ன ப்ரஸக்தி

யென்று பார்க்கவேணுமே. பார்க்குமளவில், அர்ஜுநன் இவ்வளவையும் அறிந்து கொள்ள விரும்பியே அக் கேள்வி கேட்கத் தொடங்கினனென்பது அநாயாஸலப்ய மாகும்--என்பது எம்பெருமானார் திருவுள்ளம்.

39. மேல் ச்லோகமானது (4–5.) * बहूनि मे व्यतीतानि जन्मानि तव चार्जुन * என்றுள்ளது. இதனால் பகவானுடைய அவதாரம் இந்த்ரஜாலாதிகளைப் போல் அஸத்யமன்று, ஸத்யந்தானென்பது தெரிவிக்கப்பட்டதாகிறது. இங்கே தேசிகனுடைய தாத்பர்யசந்த்ரிகையில் நன்கு விளக்கமுள்ளது. "सत्यत्वे हि बहुत्वादीनि स्वरसानि। जन्मानीति चोक्तम्, न जन्मप्रतिभासा इति। तव चेति अपृष्टस्यार्थस्योपादानमपि एतत्सत्यत्वदृष्टान्ताभिप्राय-मन्तरेण न घटते। न ह्यर्जुनस्य जन्म मिथ्या ... ..." இத்யாதி தாத்பர்ய சந்த்ரிகா ஸூக்திகள் காண்க. இதில் முக்கியமான விஷயம்- 'அர்ஜுநா! எனக்கும் உனக்கும் பல ஜன்மங்கள் கடந்திருக்கின்றன' என்கிறான் கண்ணன். ஜன்மங்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறதேயொழிய ஜன்ம ப்ரதிபாஸங்களென்று செல்லப்பட்டிருக்கவில்லை. தவிரவும், அர்ஜுநனுடைய ஜன்மத்தைப் பற்றி ப்ரஸ்தாவிக்கவேண்டுவது அப்ரஸக்தமாயிருக்க 'तव चार्जुन' என்று அவனுடைய பிறப்புகள் த்ருஷ்டாந்தமாக வெடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன. 'அப்பா! உன் பிறப்பு எப்படி ஸத்யமோ அப்படியே என் பிறப்பும் ஸத்யங்காண்' என்று தெரிவிக்கப்பட்டதாகத் தேறுகின்றது. இதற்கடுத்த (4-6.) * अजोऽपि सन्नव्ययात्मा भूतानामीश्वरोऽपि सन्। प्रकृतिं स्वामधिष्ठाय संभवाम्यात्ममायया * என்கிற ச்லோகத்தினல்-அவதார ப்ரகாரமும், அவதாரங்களில் பரிக்ரஹிக்கிற திவ்யமங்கள விக்ரஹத்தின் உண்மைத் தன்மையும் அவதார ஹேதுவுமாகிற மூன்று விஷயங்கள் தெரிவிக்கப்படுகின்றன. அஜத்வம் அவ்யயத்வம் ஸர்வேச்வரத்வம் ஆகிற இந்த பரமேச்வரத் தன்மையை விடாமலே பிறக்கிறேனென்கையாலே அவதாரப்ரகாரம் சொல்லிற்று. "ப்ரக்ருதிம் ஸ்வாம் அதிஷ்டாய ஸம்பவாமி" என்று, அப்ராக்ருத திவ்யமங்கள விக்ரஹத்தையே கொண்டு அவதரிப்பதாகச் சொல்லுகையாலே திவ்யமங்களவிக்ரஹத்தின் உண்மைத்தன்மை சொல்லிற்று. இனி 'ஆத்மமாயயா' என்றதைப்பற்றிக் கீழேயே மிக விரிவாக நிரூபணம் செய்திருக்கிறோம். என்னுடைய ஸங்கல்பத்தினலேயே அவதரிக்கிறேனென்று பொருளாகையாலே இச்சைதான் அவதாரஹேதுவென்று சொல்லிற்றாயிற்று. இதற்கடுத்த (4-7.) * यदा यदा हि धर्मस्य ग्लानिर्भवति भारत। अभ्युत्थानमधर्मस्य तदात्मानं सृजाम्यहम् * என்கிற ச்லோகத்தினல் அவதாரகாலம் சொல்லிற்று.

40. இந்த ச்லோகத்தில் "ததா ஆத்மாநம் ஸ்ருஜாம்யஹம்" என்ற விடத்தில் ரஸ்யமும் ரஹஸ்யமுமான ஒரு விசேஷார்த்தமுண்டு மேலே ஏழாமத்யாயத்தில் "ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்" (18) என்று கீதாசார்யன் தானே ஜ்ஞானிகளைத் தனக்கு ஆத்மாவாகச் சொல்லுகையாலே இங்கு "ஆத்மாநம் ஸ்ருஜாமி" என்றதற்கு ஞானிகளை அவதரிப்பிக்கிறேன் என்பதும் அந்தரங்கமான பொருளாகும். அதர்மம் தலையெடுத்து தர்மம் தலைமடிந்து நிற்குங் காலங்களில் பகவான் தான் வந்து அவதரிப்பதிற்காட்டிலும் ஞானிகள் அவதரிப்பதில் ப்ரயோஜநாதிசயமுண்டு. இராமாநுச நூற்றந்தாதியில் (41) * மண்மிசை யோனிகள் தோறும் பிறந்து எங்கள் மாதவனே கண்ணுற நிற்கிலும் காணகில்லா வுலகோர்களெல்லாம் அண்ணலிராமாநுசன்

தில் ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்க, அதற்குக் கண்டனம் செய்கிற முறையில் இந்த பாஷ்யம் அவதரித்திருக்கின்றது. * லோகவத் து லீலாகைவல்யம் * என்கிற ப்ரஹ்ம ஸூத்ரமானது பகவான் செய்கிற ஜகத்ஸ்ருஷ்டியைப்பற்றினதே யொழிய பகவதவதாரத்தைப்பற்றிய தன்றென்பது நிர்விவாதம். அதை இங்கெடுத்தெழுது வது ஸூதராம் அப்ரஸக்தம். இது கிடக்கட்டும். நம் ஸ்வாமியின் பாஷ்யத்திலுள்ள இன்சுவைப் பொருள்களை யநுபவிப்போம். அந்தரதிகரண ஸ்ரீபாஷ்யத்தில் * அன்த-ஸ்தத்தர்மோபதேஶாத் * (1-1-21,) என்கிற ஸூத்ரத்தின் பாஷ்யத்தில் 'பரித்ராணாய ஸாதூநாம்' என்கிற இந்த ச்லோகத்தை ப்ரஸக்தாநுப்ரஸக்தமாக வுதாஹரித்து "ஸாதவோ ஹி உபாஸகா:; தத்பரித்ராணமேவோத்தேஶ்யம்; ஆநுஷங்கிகஸ்து துஷ்க்ருதாம் விநாஶ:, ஸங்கல்பமாத்ரேணாபி ததுபபத்தே:" என்றருளிச் செய்யப்பட்டிருக்கிறது. ஸாதுபரித்ராணத்திற்காகவே முக்கியமாக அவதாரம் செய்தருளிற்றென்றும், துஷ்டநிரஸநமானது ஸங்கல்பத்தாலுங்கூட ஸாத்யமாகக் கூடியதாதலால் அவதாரத்திற்கு அது ப்ரதாநோத்தேச்யமன்று என்றும் மேலெடுத்த ஸ்ரீபாஷ்ய ஸ்ரீஸூக்தியினால் தெரிவிக்கப்படுகிறது. ஸாதுபரித்ராணம் மாத்திரம் ஏன் ஸங்கல்பத்தினாலாகக் கூடாது? 'ஸாதவ: பரித்ராதா பவந்து' என்று ஸங்கல்பித்தால் ஆகமாட்டாதோ? என்று ஆக்ஷேபமுதிக்கக்கூடும். இதற்குப் பரிஹாரம் கீதாபாஷ்யத்தில் நன்கு உள்ளது. அதை விவரிக்கிறோம்.

42. 'ஸாதூநாம் பரித்ராணாய' என்றதில் ஸாதுக்களாவார் இன்னாரென்பதை விவரிக்கிற முகத்தால் அவர்களுடைய பரித்ராணம் ஸங்கல்பஸாத்யமாகாதென்றும் கண்காண வந்து தோன்றியே செய்யத்தக்கதாமென்றும் தெளிவித்தருளுகிறார் ஸ்வாமி.

"ஸாதவ: உக்தலக்ஷணதர்மஶீலா வைஷ்ணவாக்ரேஸரா: மத்ஸமாஶ்ரயணே ப்ரவ்ருத்தா: மந்நாமகர்மஸ்வரூபாணாம் வாங்மனஸாகோசரதயா மத்தர்ஶநாத்விநா ஸ்வாத்மதாரணபோஷணாதிகமலபமானா: க்ஷணமாத்ரகாலம் கல்பஸஹஸ்ரம் மன்வானா: ப்ரஶிதிலஸர்வகாத்ரா பவேயுரிதி மத்ஸ்வரூபசேஷ்டிதாவலோகநாலாபாதிதாநேன தேஷாம் பரித்ராணாய" என்பன ஸ்ரீ கீதா பாஷ்ய ஸ்ரீ ஸூக்திகள். இப்பங்க்திகளின் காம்பீர்யம் வாசாமகோசரம். ஸ்ரீவைஷ்ணவாக்ரேஸரர்களான நம்மாழ்வார் போன்ற பரம பக்தர்களையே திருவுள்ளத்திற்கொண்டு இப்பங்க்திகள் அருளிச் செய்யப்பட்டிருக்கின்றன. * எங்கே காண்கேன் ஈன்துழாயம்மான் தன்னை யானென்றென்று * என்றும் * காணவாராயென்றென்று கண்ணும் வாயும் துவர்ந்து * என்றும் * கூராராழி வெண்சங்கேந்திக் கொடியேன்பால் வாரா யொருநாள் * என்றும் * தாமரைநீள் வாசத்தடம் போல் வருவானே! ஒருநாள் காணவாராயே * என்றும் கதறுகின்றவர்களாய் * ஒரு பகலாயிர மூழியாலோ * என்றும் * தெய்வங்காள் என் செய்கேன் ஓரிரவு ஏழூழியாய் * என்றும் * ஊழியில் பெரிதால் நாழிகையென்னும் * என்றும் ஒரு நொடிப் பொழுதை கல்பஸஹஸ்ரமாக நினைப்பவர்களாய், * காலுமெழா கண்ணநீரும் நில்லா உடல்சோர்ந்து நடுங்கிக் குரல்மேலு மெழா மயிர் கூச்சுமறா * என்றும், * காலாழும் நெஞ்சழியும் கண் சுழலும் * என்றும் * உள்ளெலா முருகிக் குரல்தழுத் தொழிந்து உடம்பெலாம் கண்ணநீர் சோர * என்றும் ஸர்வாவயவ சைதில்யமுடையவர்களாயிருப்பவர்கள் ஆழ்வார்களைத் தவிர்த்து வேறு யாருமிலரே. அவர்களின் ஸ்ரீ ஸூக்திகளையேயன்றோ ஸ்வாமி ஸம்ஸ்க்ருதத்தில் மொழிபெயர்த்திருக்கிறார், அவர்கள்

தன்னைக்காணவேணுமென்றும் தன்னோடு பேசவேணு மென்றும் தன்னைத் தழுவ வேணு மென்றும் காதலித்தால் எம்பெருமான் நேராக வந்தாலொழிய அவர்களின் காதல் நிறைவேறுதன்றே. ஸங்கல்பம் இங்கு என்ன பண்ணக்கூடும்? *மழுங்காத வைநுதிய சக்கர நல் வலத்தையாய் தொழுங்காதல் களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே, மழுங்காத ஞானமே படையாக மலருலகில், தொழும் பாயார்க்களித் தால் உன்சுடர்ச்சோதி மறையாதே* (3—1—9) என்ற திருவாய்மொழிப் பாசுரத் தையே ஸ்வாமி நிதியாகக் கொண்டு பாஷ்யம் செய்தருளி யிருக்கிறார். ஆக 'பரித்ரா ணாய ஸாதூநாம்' என்றவிடத்தில் ஸாது சப்த விவக்ஷிதர்கள் ஆழ்வார்கள் போன்ற வர்களென்றும், அவர்கள் எம்பெருமானை நேரில் கண்டாலல்லது தீராத காதலையு டையவர்களாகையாலே அவர்களுக்காக வந்து, தோன்றியேயாகவேணுமென்றும், அவர்களுடைய காதல் ஸங்கல்பத்தினால் ஒருகாலும் தீர்க்கமுடியாதென்றும் காட்டி சங்காபரிஹாரம் நன்கு செய்தருளினாராயிற்று. இனி ஐந்தாமத்யாயத்திற் செல் வோம்.

43. (5—18) *विद्याविनयसंपन्ने ब्राह्मणे गवि हस्तिनि। शुनि चैव श्वपाके च पण्डिताः समदर्शिनः॥* இதில் 'வித்யாவிநயஸம்பந்நே' என்பதை விசேஷணமாகக் கொண்டு 'ப்ராஹ்மணே' என்கிற விசேஷ்யத்தில் இதை அந்வயித்து, வித்யா விநயங் களோடு கூடியிருக்கிற உத்தம ப்ராஹ்மணனிடத்தில் என்பதாகப் பொருள் விவ ரித்தார் சங்கராசாரியர். ஒரு விதமான அர்த்தமும் செய்திலர் மத்வாசாரியர். நம் ஸ்வாமியோ வென்னில், 'வித்யாவிநயஸம்பந்நே' என்பதைத் தனி விசேஷ்யமாகவும் 'ப்ராஹ்மணே' என்பதைத் தனி விசேஷ்யமாகவுங்கொண்டு பாஷ்யமிட்ட ருளினார். வித்யாவிநய ஸம்பந்நனான உத்தம ப்ராஹ்மணனொருவன்; அவனிடத்தி லும். அவையொன்றுமில்லாத கேவல ப்ராஹ்மணனொருவன்; அவனிடத்திலும்— என்று இரண்டு வார்த்தையாக ஸ்வாமி திருவுள்ளம்பற்றினபடி. இதுதான் மிகவும் உசிதமானதென்று தாத்பர்ய சந்த்ரிகையில் நன்கு காட்டப்பட்டிருக்கிறது. எங்ஙனே யென்னில், கவி, ஹஸ்திநி, சுநி, ச்வபாகே என்று மேலுள்ளவற்றில் ஒரு விசேஷணமு மிடப்படவில்லை. அப்படியிருக்க ப்ராஹ்மணே விசேஷணவைய்யர்த்யமில்லை. அன்றி யும், வித்யாவிநயஸம்பந்ந ப்ராஹ்மணனைச் சொல்லி இவனுக்கு எதிரிடையான நபரை நிர்தேசியாமலிருப்பது குறையுமாகும். ஆகவே வித்யா விநய ஸம்பந்நனிடத்தி லும் கேவல ப்ராஹ்மணனிடத்திலும் என்றுதான் பொருள் கொள்ளப் பொருந்தும் என்று. இந்த ச்லோகத்தில் "பண்டிதாஸ் ஸமதர்சிந:" என்றிருப்பது கொண்டு, 'ஜாதிபேதம் முதலானவற்றை யிட்டு ஏற்றத்தாழ்வு காண்பவர்கள் பண்டிதர்களல் லர், பாமரர்களே' என்கிற அபார்த்தம் நவீந ஸம்ஸ்காரகர்களின் வாக்கில் உலாவி வருகிறது. அது சிறிதும் பொருந்தாது. "पण्डिताः आत्मयाथात्म्यविदः; ज्ञानैकाकारतया सर्वत्र समदर्शिनः। विषमाकारस्तु प्रकृतेः नात्मनः। आत्मा तु सर्वत्रज्ञानैकाकारतया सम इति पश्यन्तीत्यर्थः" என்பது பாஷ்யஸூக்தி. பசுவினாலாகிற காரியம் யானையினாலாகாது, யானையினா லாகிற காரியம் பசுவினாலாகாது. பால்வேண்டும் போது பசுவைத் தேடுவதும் மஹோத்ஸவங்களுக்கு யானையைத் தேடுவதும் யாவரிடத்துங் கண்டவியல்பு. गवि हस्तिनि समदर्शनम् லோகவ்யவஹார ரீதியில் எங்ஙனே பண்ணமுடியும்? 'ஸர் வத்ர ஸமதர்சிந:' என்றதற்கு நவீநர்கள் சொல்லுகிற பொருள் பொருந்தவேணு

மாகில், யானைக்குச் செய்கிற அலங்காரங்களை நாய்க்குச் செய்யவேண்டும்; நாய்க்குச் செய்யுமவற்றைக் குதிரைக்குச் செய்யவேண்டும். இப்படிப்பட்ட ஆபத்திகளைப் பரிஹரிக்கைக்காக 'ஸர்வத்ர ஸமதர்சிந:' என்பதற்குப் பொருத்தமான பொருள் காணவேண்டும். அதுதான் பாஷ்யத்தில் காண்பது. அன்றியும், இதற்கு மேல் மூன்றுவது ச்லோகத்தில் (5-20) * न प्रहृष्येत्प्रियं प्राप्य नोद्विजेत् प्राप्यचाप्रियम् * என்று சொல்லப்பட்டிருக்கின்றது. ப்ரியமானது கிடைத்தால் ஸந்தோஷிக்கக் கூடாது; அப்ரியமானது கிடைத்தால் வெறுப்புக்கொள்ளலாகாது என்று இதற்குப் பொருள். இப்படியிருக்கவல்லவனுக்குத்தான் ஸர்வத்ர ஸமதர்சந ரூபமான ஜ்ஞாந விபாக முண்டாகுமென்று பாஷ்யகாரர் அருளிச் செய்கிறார். அப்படிப்பட்ட ஓர் அதிகாரி தேறுவனுகில் அவனுடைய ஸர்வத்ரஸமதர்சித்வம் எப்படிப்பட்டதென்று நேராகக் கண்டு கொள்ளலாம்.

41. (6-5.) * उद्धरेदात्मनात्मानं नात्मानमवसादयेत् । आत्मैव ह्यात्मनो बन्धुरात्मैव रिपुरात्मनः = உத்தரேதாத்மநாத்மாநம் நாத்மாநமவஸாதயேத், ஆத்மைவ ஹ்யாத்மநோ பந்து: ஆத்மைவ ரிபுராத்மந:* என்கிற விந்த ச்லோகம் ஒவ்வொருவருடைய நெஞ்சிலும் அநவரதமும் ஊன்றியிருக்கத்தக்கது. தன்னைக்கொண்டே தான் கடைத்தேறவேணுமென்றும், தன்னைத்தானே கெடுத்துக் கொள்ளலாகாதென்றும், தனக்குத் தானே உறவு, தனக்குத்தானே பகைவன் என்றும் இந்த ச்லோகத்தில் சொல்லப்படுகிறது. ஒருவன் கடைத்தேறுவதற்குப் பல பல ஸாதனங்கள் வேண்டியிருக்கின்றன. ஸத்ஸஹவாஸம் வேணும், ஆசார்யோபஸேவை வேணும், பிராட்டியை முன்னிட்டு எம்பெருமான் திருவடிகளைத் தஞ்சமாகப் பற்றுதல்வேணும் .........என்றிப்படியாக உஜ்ஜீவனத்திற்கு வேண்டியவை பல இருந்தாலும் இவற்றுள் மிக முக்கியமான ஸாதனம் மனம் ஒன்றேயாம். அதை விஷயாந்தரங்களில் யதேஷ்டமாகச் செல்லவிட்டு வைத்தால் அது தன்னைத்தானே மாய்த்துக் கொண்டபடியாகும். மனத்தை விஷயக்ராமங்களில் புகவிடாமல் ஆத்மோஜ்ஜீவனத்திற்கு அபிமுகமாக்குமளவில் அந்த மனத்தைக்கொண்டு தான் வாழ்ந்தவனுவன். ஆகவே, மனமானது உறவாயுமிருக்கும், பகையாயுமிருக்கும். உறவாகக்கொண்டு வாழ்வதே விவேகிகளின் பணி; பகையாகக்கொண்டு பாழாய்ப் போக வேண்டாமென்று கீதாசார்யன் வெகு பொருத்தமாக உபதேசித்தருளுகின்றான். ஆனதுபற்றியே ஆழ்வார்கள் அடிக்கடி நெஞ்சைக் கொண்டாடுகிறார்கள்; * நெஞ்சமே! நல்லை நல்லை உன்னைப் பெற்றுலென் செய்யோம், இனி யென்ன குறைவினம்? * என்றும், * ஊனில்வாழுயிரே! நல்லை போவுன்னைப் பெற்று * என்றும், * முயற்றி சுமந்தெழுந்து முந்துற்ற நெஞ்சே! இயற்றுவாயெம்மொடு நீ கூடி * என்றும் நம்மாழ்வாரருளிச் செய்கிறார். ஆனால் நெஞ்சை அனுகூலமாக்கிக் கொள்வதென்பது மிகவும் அரிதான செயல். * நின்றவாநில்லா நெஞ்சினையுடையேன் என்செய்கேன் * என்கிறார் திருமங்கையாழ்வார். அதுநிற்க, ஜிதேந்த்ரியரில் தலைவனான அர்ஜுனனே மனத்தை வசப்படுத்த வேணுமென்று அடிக்கடி கூறுகின்ற கண்ணபிரானை நோக்கிச் சொல்லுகிறான்- (6-34.) * चञ्चलं हि मनः कृष्ण ! प्रमाथि बलवद्दृढम् । तस्याहं निग्रहं मन्ये वायोरिव सुदुष्करम्— சஞ்சலம் ஹி மந: க்ருஷ்ண! ப்ரமாதி பலவத் த்ருடம், தஸ்யாஹம் நிக்ரஹம் மந்யே வாயோரிவ ஸுதுஷ்கரம் * என்கிறான். கண்ணா! காற்றைப் பிடித்துக் கரகத்தி

னுள்ளே அடைக்கவேணுமென்னுமாபோலே மனத்தைப் பிடித்து நிலை நிறுத்த வேணுமென்கிறாய் நீ; மனமோ இயற்கையாகவே சஞ்சலமானது. ஒரு நொடிப் பொழுதுகூட ஒரு விஷயத்தில் ஏகாக்ரமாக ஒருவனாலும் நிலைநிறுத்த முடியாது; விஷயாந்தரங்களிலுங்கூட ஒன்றில் ஒன்றிநிற்க மாட்டாத நெஞ்சை நல்விஷயத்தில் ஒன்றவைப்பதென்பது மிகவுமரிது என்று நான் நினைக்கிறேன்; மனோநிக்ரஹத்திற்குரிய உபாயத்தை உரைக்கவேணும் என்றான் அர்ஜுநன். இதற்குக் கண்ணபிரான் கூறிய மறுமொழி என்னவென்று பார்த்தாலோ, (6–35) * असंशयं महाबाहो! मनो दुर्निग्रहं चलम्। अभ्यासेन तु कौन्तेय! वैराग्येण च गृह्यते॥ —அஸம்சயம் மஹாபாஹோ! மநோ துர்நிக்ரஹம் சலம், அப்யாஸேந து கௌந்தேய! வைராக்யேண ச க்ருஹ்யதே.* என்பதுதான் கண்ணனுடைய மறுமாற்றம். மனத்திற்கு சஞ்சலத்வம் இயற்கைக் குணமாதலால் அதைப் போக்கி அதனை ஒன்றில் ஒன்றவைப்பதென்பது முடியாத காரியந்தான்; இதில் ஸந்தேஹமேயில்லை; ஆனாலும் விஷயதோஷங்களைக் காணக் காண வைராக்ய முண்டாகக் கூடுமாதலால் மனத்தை யடக்கப் பழக்கம் செய்து நாளடைவில் ஸாதிக்கவேணும்—என்பது கண்ணனுடைய பதில். இவ்விடத்தில் "அஸம்சயம்" என்பதற்கு சங்கரபாஷ்யம்—"नास्ति संशयो हि महाबाहो! मनो दुर्निग्रहं चलमित्यत्र।" என்றுள்ளது; அப்படியன்றிக்கே தாத்பர்ய சந்திரிகையில் "असंशयमित्येतत् सत्यमितिवत् अर्धाङ्गीकारपरम्" என்றுள்ளது ரஸிக்கத்தக்கது.

45. இனி ஏழாவது அத்யாயத்திற் செல்வோம். இவ்வத்யாயத்தை யிட்டு கீதைக்கு ஒரு அபக்யாதி விளைந்திருப்பதுண்டு; ஓரூரில் ஒரு பண்டிதர் கீதா ப்ரவசனம் செய்து கொண்டிருந்தாராம். பலர் கேட்டுக்கொண்டிருந்தார்கள். ஒருவர் மாத்திரம் அந்த கோஷ்டியில் அந்வயிப்பதில்லை. ஆப்தர்கள் அவரை வெகு நிர்ப்பந்தித்து ஒருநாள் கீதாகாலக்ஷேபகோஷ்டியில் அந்வயிப்பித்தார்கள். அவர் வந்து சேர்ந்த தினத்தில் ஏழாமத்யாயத்தில் பதினைந்தாம் ச்லோகம் ஆரம்பிக்கப்பட்டதாம். அதாவது— * न मां दुष्कृतिनो मूढाः प्रपद्यन्ते नराधमाः। माययाऽपहृतज्ञाना आसुरं भावमाश्रिताः— ந மாம் துஷ்க்ருதிநோ மூடா: ப்ரபத்யந்தே நராதமா:, மாயயாபஹ்ருதஜ்ஞாநா: ஆஸுரம் பாவமாச்ரிதா:* என்பது. இந்த ச்லோகம் முழுவதும் நிந்தையே நிறைந்திருப்பதால் பாஷ்யாதிகளையும் அநுஸரித்து அந்த நிந்தைகளை வெகு விரிவாக உபந்யஸித்தார் ப்ரவசநகாரர். அன்றே புதிதாகக் கேட்க வந்தவர் இந்த கீதையில் இப்படிப்பட்ட நிந்தகள்தாம் நிறைந்திருப்பன போலும் என்றெண்ணி மிகவும் வெறுப்படைந்தாராம். மறுநாளும் 'இன்றைக்கு விஷயம் எப்படி யிருக்கிறது பார்ப்போம்' என்று பரீக்ஷார்த்தமாகக் காலக்ஷேப கோஷ்டிக்கு வந்தாராம்; அன்று அதற்கடுத்த ச்லோகம்—(7-16.) * चतुर्विधा भजन्ते मां जनाः सुकृतिनोऽर्जुन। आर्तो जिज्ञासुरर्थार्थी ज्ञानी च भरतर्षभ॥ சதுர்விதா பஜந்தே மாம் ஜநாஸ் ஸுக்ருதிநோர்ஜுந. ஆர்த்தோ ஜிஜ்ஞாஸு ரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ ச பரதர்ஷப. * என்பது விரிவாக உபந்யஸிக்கப்பட்டதாம். முன் ச்லோகத்தில் நிந்தை நிறைந்தது; இந்த ச்லோகத்தில் ஸ்துதி நிறைந்தது. இரண்டும் பிசகுதானே. அதனால் அந்த ச்ரோதா 'கீதையில் வீணான நிந்தையும் ஸ்துதியும் தவிர வேறு கிடையாது' என்று முடிவு செய்துகொண்டு மூன்றாநாள் தொடங்கிக் காலக்ஷேபத்திற்கு வருவதை நிறுத்திக் கொண்டாராம்.

ஏன் வருவதில்லை யென்று கேட்பவர்களுக்கு "கீதையில் என்ன இருக்கிறது; பரநிந்தை பத்தத்யாயம்; ஆத்மஸ்துதி ஆறத்யாயம்; இன்னு மேதாவது விஷயங்கள் இரண்டத்யாய மிருக்கும்." என்றாராம். இது இவருடைய மருள் இருந்தபடி. திருவாய்மொழியில் (3-5) * மொய்ம்மாம்பூம்பொழிற் பொய்கைப் பதிகமும் இந்த ஏழாமத்யாயமும் ஒரு நிகராக நினைக்கப்படலாம். அப்பதிகத்தின் ஸாரத்தை நூற்றந்தாதியிலருளிச் செய்த மணவாள மாமுனிகள் "அன்பாலாட் செய்பவரையாதரித்தும், அன்பிலா மூடரை நிந்தித்தும் மொழிந்தருளும் மாறன்பால்" என்கிறார். நிந்திக்க வேண்டியவர்களை நிந்திப்பதும் ஸ்துதிக்க வேண்டியவர்களை ஸ்துதிப்பதும் ப்ராப்தந்தானே. அது நிற்க. "சதுர்விதா பஜந்தே மாம்" என்கிற ச்லோகத்தில் ஆர்த்த:, ஜிஜ்ஞாஸு:. அர்த்தார்த்தி, ஜ்ஞாநீ என்று நால்வகை யதிகாரிகள் கூறப்படுகிறார்கள். இவர்களை விவரிக்கின்ற சங்கராசார்யர் தமது பாஷ்யத்தில் "आर्तः— तस्करव्याघ्ररोगादिना अभिभूतः आपन्नः; जिज्ञासुः— भगवत्तत्त्वं ज्ञातुमिच्छति यः; अर्थार्थी— धनकामः; ज्ञानी— विष्णोस्तत्त्ववित्" என்று எழுதியுள்ளார். மத்வபாஷ்யகாரரான ஆனந்த தீர்த்தர் ஒரு விவரணமு மெழுதவில்லை. சங்கராசாரியர்—திருடர் புலி பிணி முதலியவற்றால் துன்பமடைந்தவனை ஆர்த்தனென்றும், பகவானையறிய விரும்புகிறவனை ஜிஜ்ஞாஸுவென்றும், தனம் பெற விரும்புமவனை அர்த்தார்த்தி யென்றும், விஷ்ணுதத்த்வமறிந்தவனை ஞானி யென்றும் விவரித்திருக்கின்றார். நமது பாஷ்யகாரரான ஸ்வாமி யெம்பெருமானார்—ப்ரஷ்டைச்வர்ய காமனை ஆர்த்த னென்றும், அபூர்வைச்வர்யகாமனை அர்த்தார்த்தி யென்றும், கைவல்ய காமனை ஜிஜ்ஞாஸுவென்றும், ஸ்வஸ்வரூபமுணர்ந்தவனை ஞானியென்றும் விவரித்தருளுகிறார். இவற்றுள் எந்த விவரணத்தில் பொருத்தமுள்ளதென்பதைப்பற்றி நாம் இங்கு விமர்சிக்க விரும்பவில்லை. இங்ஙனே விலக்ஷணமான விவரணத்தை நம் ஸ்வாமி செய்தருளியதற்கு மூல மென்ன? என்று விமர்சிக்க ப்ராப்தம். இதை விமர்சிக்குமளவில், ஆழ்வார்களின் ஸ்ரீஸூக்தியை அடியொற்றிப் பேசவேணு மென்று ஸ்வாமி கொண்டிருந்த உறுதிதான் இதற்கு மூலமென்று நன்கு புலப்படும். திருப்பல்லாண்டில், * வாழாட்பட்டு நின்றீருள்ளீரேல் * என்கிறபாசுரத்தினால் ஞானிகளை யழைத்தும், * ஏடுநிலத்திலிடுவதன் முன்னமென்கிற பாசுரத்தினால் கைவல்யார்த்திகளை யழைத்தும்,* அண்டக்குலத்துக் கதிபதியாகி யென்கிற பாசுரத்தினால் அபூர்வைச்வர்ய காமர்களையும் ப்ரஷ்டைச்வர்ய காமர்களையு மழைத்தும் உபதேசம் தந்தருளியிருப்பது ஸுஸ்பஷ்டம். இதுவன்றியும் திருவாய்மொழியில் * ஒருநாயகமாய் * என்கிற பதிகத்தில் இந்நால்வகை யதிகாரிகளும் தெரிவிக்கப்பட்டிருப்பதும் ப்ரஸித்தம். கீதையிலுள்ள * சதுர்விதா பஜந்தே மாம் * என்னுமிந்த ச்லோகத்தை யடியொற்றியே அந்தப் பாசுரங்கள் திருவவதரித்தனவாக ஸம்ப்ரதாய மாகையாலே * மாறனுரை செய்ததமிழ் மறை வளர்த்தவரான ஸ்வாமி யெம்பெருமானார் திவ்யப்ரபந்தச் சாயையிலேயே அருளிச்செய்தாரென்பது இங்குக் குறிக்கொள்ள வேண்டிய பரமார்த்தம்.

மற்று மொரு விசேஷமிங்கு நெஞ்சிற் பதிய வைத்துக் கொள்ளத்தக்கதுண்டு. ஸ்ரீவசநபூஷணத்தில் (73) "அஹமர்த்தத்துக்கு ஜ்ஞாநாநந்தங்கள் தடஸ்தமென்னும்படி தாஸ்யமிறே அந்தரங்க நிரூபகம்" என்ற சூர்ணையின் வியாக்கியானத்தில்—

"திருக்கோட்டியூர் நம்பி ஸ்ரீ பாதத்திலே ஆழ்வான் ஆறுமாஸம் ஸேவித்து நின்று மஹாநிதியாகப்பெற்ற அர்த்த மிதுவேயிது" என்று மணவாளமாமுனிகள் அருளிச் செய்கிறார். எம்பெருமானார் கோஷ்டியில் ஒருநாள் 'ஜீவாத்மாவுக்கு அந்தரங்க நிரூபகம் ஜ்ஞாத்ருத்வமா? சேஷத்வமா?' என்று விசாரமுண்டாக, எம்பெருமானார் கூரத்தாழ்வானைத் திருக்கோட்டியூர் நம்பி பக்கலில் விடை கொண்டு இதையறிந்து வருமாறு நியமித்தருள, ஆழ்வான் அப்படியே விடை கொண்டு ஆறுமாஸம் ஸேவித்திருந்து சேஷத்வமே அந்தரங்க நிரூபகமென்று தெளிந்து மீண்டதாக ஐதிஹ்ய முள்ளது. அப்படி மஹாநிதியாகப் பெற்று வந்த மஹார்த்தத்தை ஸ்வாமி யெம்பெருமானார் எவ்விடத்திலாவது பதிய வைத்திருப்பதுண்டோ வென்று சிலர் கேட்பதுண்டு. அவர்களுக்குச் சொல்லுவோம்; * சதுர்விதா பஜந்தே மாம் * என்கிற இந்த கீதா ச்லோகத்தின் பாஷ்யத்தில் ஜ்ஞாநீ என்பதற்கு அர்த்தம் செய்தருளுமிடத்து "ज्ञानी च-* इतस्त्वन्यां प्रकृतिं विद्धि मे पराम् * इत्यादिनाऽभिहितभगवच्छेषतैकरसात्मस्वरूपवित्" என்றருளியுள்ளார். விஷ்ணுதத்த்வத்தை யறிந்தவனை ஜ்ஞாநி யென்றார் சங்கராசாரியர்; ஜீவாத்மஸ்வரூபத்தை யறிந்தவனை ஜ்ஞாநியென்கிறார் நம் ஸ்வாமி. அந்த ஜீவாத்மாவுக்கு விசேஷணமிடுகிறார் [பகவச்சேஷதைகரஸ] என்று. ப்ரஹ்மஸூத்ரகாரர் * ज्ञोत एव * என்கிற ஸூத்ரத்தினால் ஆத்மாவுக்கு ஜ்ஞாத்ருத்வத்தை ஸ்தாபித்திருக்கிறார். ஜ்ஞாதா என்பதற்கு 'அறியுமவன்' என்று பொருள். எதை அறியுமவன்? என்று கேள்வி வரில், தான் பகவச்சேஷபூதன் என்பதை யறியுமவன் என்று பொருள் சொல்லவேண்டு மென்பது ஸ்வாமி திருவுள்ளம் போலும். "भगवच्छेषतैकरसात्मस्वरूप" என்னும் சொல்தொடர் இதரர்களின் க்ரந்தங்களொன்றிலும் வர்ஷசதம் தேடினாலும் கிடைக்கமாட்டாது. இப்படி விலக்ஷணமான ஸ்ரீ ஸூக்தியை அஸக்ருத் அருளிச் செய்திருக்கின்ற நம் ஸ்வாமி, திருக்கோட்டியூர் நம்பி பக்கலில் நின்றும் ஆழ்வான் கொணர்ந்த நிதியைப் பெற்றவரென்பதில் ஸந்தேஹமுண்டோ?

இதற்கடுத்த (7–17.) * தேஷாம் ஜ்ஞாநீ நித்யயுக்த: * என்னும் ச்லோகத்தின் உத்தரார்த்தம் "ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோத்யர்த்தமஹம் ஸ ச மம ப்ரிய:" என்றுள்ளது. இங்கு நம் ஸ்வாமி "ஜ்ஞாநிந: அஹம் அத்யர்த்தம் ப்ரிய:" என்று க்ரமாந்வயத்தையே திருவுள்ளம்பற்றி பாஷ்யமிட்டருளினர். இவ்வந்வயக்ரமத்தில்–ஞானிக்குத்தன்னிடத்தில் ப்ரீதி அதிகம் என்றதாக விளங்குகிறது. உண்மையில், பகவானிடத்தில் ஞானி வைத்திருக்கிற ப்ரீதி அதிகமா? ஞானியினிடத்தில் பகவான் வைத்திருக்கிற ப்ரீதி அதிகமா? என்று ஆராய்ந்து பார்க்குமளவில் ஞானியினிடத்தில் பகவான் வைத்திருக்கிற ப்ரீதிதான் அதிகமென்னத் தகும். ஆகவே இந்த ச்லோகத்தில் [அத்யர்த்தம்] என்பதை 'அஹம் ப்ரிய:' என்பதிலே கூட்டுவதை விட 'மம ப்ரிய:' என்பதிலே கூட்டுவதுதான் ரஸவத்தரமென்று திருவுள்ளம் பற்றின ஸ்வாமி ஸ்ரீ பாஷ்யத்தில் சரமஸூத்ரமான * அநாவ்ருத்தி ஸூத்ரத்தின் பாஷ்யத்தில் "अत्यर्थप्रियं ज्ञानिनं लब्ध्वा" என்கிற அநர்க்கமான வாக்யத்தினால் அந்த அந்வய க்ரமத்தையும் காட்டியருளினர். அந்த ஸ்ரீபாஷ்ய ஸூக்தியின்படி ப்ரக்ருத கீதாச்லோகாந்வயம் எப்படி கொள்ளவேணு மென்னில்; "ஜ்ஞாநிந: அஹம் ப்ரிய:; ஸ ச மம அத்யர்த்தம் ப்ரிய:" என்றிங்ஙனே கொள்ளவேணும்.

46. இனி எட்டாமத்யாயத்தில் ஒரு மஹாநிதி காட்டுவோம். ஸம்ஸாரிகளின் விஷயோபபோக ப்ரவ்ருத்தியானது நிஷித்த விஷயபோகமென்றும் விஹித விஷய போகமென்றும் இரண்டாகப் பிரிக்கப்படுகிறது. சாஸ்த்ரங்களில் கர்ஹிக்கப்பட்ட பரதார போகமானது நிஷித்தவிஷய போகமாகவும், சாஸ்த்ர ஸம்மதமான ஸ்வதார போகமானது விஹித விஷய போகமாகவும் கூறப்படுகிறது. விஹித விஷயபோக மானது க்ருஹஸ்தாச்ரம தர்மமாகையாலே ப்ராப்தமென்று கொள்ளப்படுகிறது. ஆனல், அநந்யார்ஹ சேஷத்வ அநந்ய சரணத்வங்களோடு கூட அநந்ய போக்யத்வ மென்கிற விலக்ஷணமான தன்மையையும் பெற்றிருக்கின்ற விசேஷாதிகாரிக்கு இந்த விஹித விஷயபோகம் அருவருக்கத்தக்கதாய் த்யாஜ்யமேயாகு மென்பது ஸத்ஸம் ப்ரதாய நிஷ்டர்களின் ஸித்தாந்தம். சாஸ்த்ரங்களில் ஸ்வதார போகம் நியமமாக விதிக்கப்பட்டு, அது தவிர்ந்தால் தோஷமும் பிரதிபாதிக்கப்பட்டிருக்கையாலே விஹித விஷய நிவ்ருத்தி அசாஸ்த்ரீயமென்று பிறருடைய கொள்கை காண்கிறது. ஸ்ரீ வசந பூஷணத்தில் இரண்டு மூன்றிடங்களில் உத்தமாதிகாரிக்கு விஹிதவிஷய நிவ்ருத்தி யைத் தன்னேற்றமாக வருளிச் செய்கிருர் பிள்ளை லோகாசார்யர். அவ்விஷயம் கீதையில் (8–3) ச்லோகத்தின் பாஷ்யத்தில் ஸ்பஷ்டமாக அருளிச் செய்யப்படுகிறது. அதனை விவரிப்போமிங்கு ;—

கீழ் ஏழாவது அத்யாயத்தின் முடிவில் கண்ணபிரான் * ஜராமரண மோக்ஷாய * என்கிற இருபத்தொன்பதாம் ச்லோகத்தில் * ते ब्रह्म तद्विदुः कृत्स्नमध्यात्मं कर्म चाखिलं * என்று ஒருவார்த்தை சொன்னுன். அதுகேட்ட அர்ஜுநன் அந்த வார்த் தைக்கு உண்மையான பொருளைத் தெரிந்து கொள்ள வேண்டிக் கண்ணனையே கேள்வி கேட்கிருன் எட்டாம் அத்யாயத்தின் 1, 2-ச்லோகங்களினுல். * किंतद्ब्रह्म किमध्यात्मं किं कर्म पुरुषोत्तम–, கிம் தத் ப்ரஹ்ம கிமத்யாத்மம் கிம் கர்ம புருஷோத்தம * என்று தொடங்கிக் கேள்விகள் உள்ளன. மூன்ருவது ச்லோகம் தொடங்கிக் கண்ணபிரா னுடைய விடை வெளிவருகின்றது. கிம் கர்ம என்ற கேள்விக்குக் கண்ணனுடைய விடை. * भूतभावोद्भवकरो विसर्गः कर्मसंज्ञितः— பூதபாவோத்பவகரோ விஸர்க்க: கர்மஸம் ஜ்ஞித: * என்பது. இங்கு விஷயமென்னவென்ருல், கேண்மின்.

சிலவற்றை அறியவேண்டும் என்று பகவான் நியமித்துவருகையில் கருமத்தை அறியவேண்டும் என்று சொல்லியிருந்ததனுல் கருமமென்ருல் எது? என்று அர்ஜுநன் கேட்க நேர்ந்தது. அதற்கு பகவான் விடை கூறியுள்ளார். ஒருவன் ஒன்றை யறிவதானது, பற்றுவதற்காகவும் ஆகலாம், விடுவதற்காகவும் ஆகலாம். நல்லதா யிருந்தால் பற்றுவது, கெட்டதாயிருந்தால் விடுவது. ஆகவே நல்லதையும் தெரிந்து கொள்ள வேண்டும் கெட்டதையும் தெரிந்துகொள்ள வேண்டும். இங்கே தெரிந்து கொள்ளவேண்டியதாகக் கூறப்பட்ட கருமம் நல்லதன்று, கெட்டது— என்பதாக பகவானுடைய விடையினுல் தெரிகின்றது. * பூதபாவோத்பவகரோ விஸர்க்க: கர்ம ஸம்ஜ்ஞித : * என்பதற்கு நம்முடைய ஸ்ரீ பாஷ்யகாரர் அருளிச் செய்திருக்கிற அர்த் தம் வருமாறு :—

"भूतभावः— मनुष्यादिभावः; तदुद्भवकरो यो विसर्गः * पञ्चम्यामाहुतावापः पुरुषवचसो भवन्तीति श्रुतिसिद्धो योषित्संबन्धजः; स कर्मसंज्ञितः। तच्चाखिलं सानुबन्धम् उद्वेजनीयतया परिहरणीयतया

च मुमुक्षुभिः ज्ञातव्यम् । परिहरणीयता च अनन्तरमेव वक्ष्यते * यदिच्छन्तो ब्रह्मचर्यं चरन्तीति ॥'' என்பது கீதா பாஷ்ய ஸ்ரீ ஸூக்தி. இதன் கருத்தாவது—ஸ்த்ரீ புருஷஸம்யோகமென்பதுதான் இங்கே கருமமென்கிறது. இது மிகவும் அருவருக்கத் தக்கதாகையால் விடத்தக்கதாக இதனை யறியவேண்டும். இதை விடவேண்டுமென்பது மேலே பதினோராவது சுலோகத்திலும் காட்டப்படுகிறது என்பதாம். இதனால் நாம் தெரிந்து கொள்வது, க்ருஹஸ்தாச்ரம தருமமாக விஹித விஷயபோகம் ப்ராப்தமே யானாலும் அது விசிஷ்டாதிகாரிக்கு ஜுகுப்ஸநீயமேயென்று. ஆகவே இவ்விஷயத்தில் ஸ்ரீவசநபூஷண ஸித்தாந்தம் நிரவத்யமென்றுணர்க. இவ்விடத்தில் சங்கர பாஷ்யத்திலோ மத்வபாஷ்யத்திலோ இவ்வர்த்தம் காண ப்ரஸக்தியேயில்லை.

47. இனி ஒன்பதாமத்யாயத்தில் ஸாரமானதைச் சிறிது அனுபவிப்போம் — * पत्रं पुष्पं फलं तोयं यो मे भक्त्या प्रयच्छति । तदहं भक्त्युपहृतमश्नामि प्रयतात्मनः— பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோ மே பக்த்யா ப்ரயச்சதி, ததஹம் பக்த்யுபஹ்ருதமச்நாமி ப்ரயதாத்மந: * (9-26.) என்கிற ச்லோகத்தினால் கண்ணபிரான் தான் ஆராதனைக் கெளியன் என்னுமிடத்தை வெகு அழகாக அருளிச் செய்கிறான். இதர தெய்வங்களிற் காட்டில் எம்பெருமான் எத்தனையோ விதங்களால் நெடுவாசி பெற்றிருப்பது போல இவ்வகையாலும் நெடுவாசிபெற்றிருக்கிறான். 'ஆடு பலி கொடு, கோழி பலி கொடு' என்று அநந்தேவைகளையிட்டு மஹாபரிச்ரம ஸாத்யங்களான ஆராதனைகளை அபேக்ஷித்திருக்கும் தேவதாந்தரங்கள். எம்பெருமான்படியோ அப்படியன்று. நாம் இட்டது கொண்டு த்ருப்தியடைவதே அவனது ஸ்வரூபம். எம்பெருமானுக்கு நாம் சில பொருள்களை ஸமர்ப்பிப்பதானது அவனுக்கு ஏற்கெனவே யில்லாததொரு பூர்த்தியை யுண்டாக்குவதற்காகவா? நாம் ஸத்தை பெறுவதற்காகவா? என்று ஆராயவேண்டும். அவனோ அவாப்த ஸமஸ்தகாமன்; அன்னவன் குறையுற்றிருந்து நாமிட்டது கொண்டு பூர்த்தியடைகிறானென்பது அஸம்பாவிதம். கடலிலே மேகம் வர்ஷிப்பது கடல் நிரம்புவதற்காக வன்றே. * वर्षबिन्दोरिवाब्धौ संबन्धात् स्वात्मलाभः— வர்ஷபிந்தோரிவாப்தௌ ஸம்பந்தாத் ஸ்வாத்மலாப: * என்று (ஸ்ரீரங்கராஜஸ்தவே) பட்டர் அருளிச் செய்தபடியே மேகம் தான் ஸத்தை பெறுவதற்காகவே கடலிலும் வர்ஷிக்கின்றதென்பது பரமார்த்தம். அது போலவே ஸ்வத: பரிபூர்ணனான பரமபுருஷன் திறத்தில் நாம் சில பொருள்களை ஸமர்ப்பிப்பது நமது ஸ்வரூபம் நிறம்பெறுவதற்கேயன்றி அவனை நிரப்புவதற்கன்று என்பது வெளிப்படை. ஆகவே நாம் சிறந்த பெரும் பொருள்களைத் தேடியிட வேணுமென்பதில்லை. இடுகிற பொருள் எதுவாயினும் இடுவது ப்ரேம பூர்வமாக வேணுமென்பதொன்றிலேயே நியதியுள்ளது. திருமங்கையாழ்வார் * கள்ளார் துழாயும் கணவலரும் கூவிளையும் முள்ளார் முளரியுமாம்பலுமுன் கண்டக்கால் புள்ளாயோ ரேனமாய்ப் புக்கிடந்தான் பொன்னடிக் கென்று, உள்ளாதாருள்ளத்தை யுள்ளமாக் கொள்ளோமே * என்று பெரிய திருமொழியில் (11—7—6) அருளிச் செய்கிறார். திருத்துழாய் முதலிய எந்த வஸ்துவைக் கண்டாலும் 'இது எம்பெருமானுக்குச் சாத்தத் தக்கது' என்று அத்யவஸாயங் கொள்ளாதாருடைய நெஞ்சை நெஞ்சாகக் கொள்ள மாட்டோம் [நஞ்சாகவே கொள்ளுவோம்] என்று உரைக்கின்ற இப்பாட்டில், எம்பெருமானுக்கே உரித்தான திருத்துழாயோடு விஜாதீய வஸ்துக்களும் கூட்டியெடுக்

கப்பட்டிருத்தலால், எம்பெருமானுக்கு ஸமர்ப்பிக்கவேணு மென்கிற சுத்தபாவத்துடனே கொள்ளுகிற புஷ்பம் எதுவாயிருந்தாலும் குற்றமில்லை; * செண்பக மல்லிகையோடு செங்கழுநீரிருவாட்சி * என்று சிறப்பித்துச் சொல்லப்படுகிற புஷ்பங்களாகவே யிருக்கவேணு மென்கிற நியதியில்லை, ஏதேனுமொரு புஷ்பமாக இருக்கலா மென்பதும், பக்திப் பெருங்காதலே முக்கியமான தென்பதும் தோற்றுவிக்கப்பட்டன. * பத்ரம் புஷ்பம் * என்று மேலே யெடுத்த கீதா ச்லோகமும்—'இடுகிற பொருளில் வாசி பார்ப்பதில்லை; இடுகிறவன் னெஞ்சில் ஈரமுள்ளதா என்பதொன்றையே பார்ப்பேன், என்று ஸ்பஷ்டமாகக் காட்டுகின்றது. பூர்வார்த்தத்தில் 'யோ மே பக்த்யா ப்ரயச்சதி' என்று சொல்லிவைத்து உத்தரார்த்தத்திலும் 'தத் பக்த்யுபஹ்ருதம்' என்று மீண்டும் சொல்லியிருக்கிறதல்லவோ? தத் என்றாலே போதுமாயிருக்க 'பக்த்யுபஹ்ருதம்' என்றது அநாவச்யகமேயன்றோ. தாத்பர்யசந்த்ரிகையில் இஃது எடுத்துக் காட்டப்படுகிறது—"भक्त्युपहृतमिति पुनः कीर्तनम् भगवदादरणीयत्वे हेतुरयमेवेति ज्ञापनार्थम् तथा च स्वयमेवाह-❀ अण्वप्युपहृतं भक्तैर्मम भोगाय कल्पते। भूर्य्यप्यभक्तोपहृतं न मे भोगाय जायते ❀ इति ॥" என்று.

48. இனி, பத்து பதினொன்று: ஆகிய இரண்டத்யாயங்களின் ஸாரங்களைச் சேர்த்து அநுபவிப்போம். பத்தாவது அத்யாயத்திற்கு விபூத்யத்யாயமென்று பெயர்; பதினோராமத்யாயத்திற்கு விச்வரூபாத்யாய மென்று பெயர்; பத்தாமத்யாயத்திற்கு ஸ்வாமி யெம்பெருமானாருடைய அவதாரிகை வருமாறு:— கீழே பக்தியோகம் ஸாங்கமாக விவரித்துரைக்கப்பட்டது; இப்பொழுது. பக்தியுண்டாவதற்காகவும் அது வளருவதற்காகவும் எம்பெருமானுடைய [தன்னுடைய] நிகரற்ற ஐச்வர்யம் முதலிய திருக்கல்யாணகுணங்களின் திரள் அளவு கடந்திருக்கிறபடியையும், உலகமெல்லாம் தனக்கு சரீரமாயிருக்கையாலே அவனுருவாய் அவன் ஏவச் செல்லும்படியாயிருக்கின்றமையும் விஸ்தரித்துச் சொல்லப்படுகின்றன—என்று. இடையிடையில் அர்ஜுநன் கேள்வி கேட்டால் அதற்குமேல் கண்ணன் விடை கூறுவது என்கிற முறையை இவ்விடத்தில் வைத்துக்கொள்ளாமல் தானாகவே ❀ भूय एव महाबाहो! शृणु मे परमं वचः—பூய ஏவ மஹாபாஹோ! ச்ருணு மே பரமம் வச: ❀ (10-1) என்று, மீண்டும் நான் சொல்லுவதைக் கேளப்பா! என்று ஆரம்பித்துச் சொல்லுகிறான்; இப்படி அப்ருஷ்டோத்தரமாகச் சொல்லுவது கூடுமோ வென்று சங்கிக்க இடமில்லாதபடி உத்தரார்த்தத்தில் * यत्तेऽहं प्रीयमाणाय वक्ष्यामि हितकाम्यया-யத் தேஹம் ப்ரீயமாணாய வக்ஷ்யாமி ஹிதகாம்யயா * என்று, ச்ரோதாவான அர்ஜுநனுடைய முகத்தில் ப்ரீதி விசேஷத்தைக்கண்டு இவனுக்கு இன்னமும் விரிவாகச் சொல்லியே யாகவேண்டு மென்று திருவுள்ளம்பற்றிச் சொல்லுவதாகக் காட்டப்படுகிறது. விஷயம் கேட்கிறவன் சிறிது வெறுப்போடிருப்பதாகத் தெரியவந்தாலும் வக்தாவுக்கு மேன்மேலும் சொல்ல வாயெழும்பாது; ச்ரோதா ப்ரஸந்நமுகனாகத் தென்பட்டால் அபூர்வமான விஷயங்களும் 'என்னைக்கொள் என்னைக்கொள்' என்று முற்பட்டு நினைவுக்கு வந்து நிற்கும். அவற்றை யெல்லாம் சொல்லியே தீரவேண்டியதாகும். இங்கு 10, 11. ஆகிய இரண்டத்யாயங்களிலும் சொல்லப்புகுகிற விஷயங்கள் கீதா சாஸ்த்ரத்தினுள் ஸாரங்களாயிருப்பதால் இவற்றைச் சொல்லத் தொடங்கும்போதே அர்ஜுநன் தன்னுடைய அவாவை அதிகமாகக் காட்டினனென்பது "ப்ரீயமாணய

தே” என்பதனால் விளக்கப்படுகிறது. அவன் ப்ரீதனாகத் தென்படாமற் போனாலுங் கூட அவனுடைய ஹிதத்தை யுத்தேசித்துத் தான் சொல்லியே தீரப்போகிறதாகக் காட்டப்படுகிறது “வக்ஷ்யாமி ஹிதகாம்யயா” என்பதனால். ஆக, இவ்விரண்டத்யாயங்களிலும் தெரிவிக்கப்படுகிற அர்த்தங்கள் ப்ரியங்களுமாய் ஹிதங்களுமாயிருக்குமென்று ஆரம்பத்திலேயே அறிவிக்கப்பட்டதாயிற்று. (10—19.) * हन्त ! ते कथयिष्यामि विभूतीरात्मनः शुभाः– प्राधान्यतः कुरुश्रेष्ठ ! नास्त्यन्तो विस्तरस्य मे– ஹந்த தே கதயிஷ்யாமி விபூதீராத்மநச் சுபா:, ப்ராதாந்யத: குருச்ரேஷ்ட! நாஸ்த்யந்தோ விஸ்தரஸ்ய மே * என்று, அர்ஜுநா! என்னுடைய மிகவழகிய விபூதிகளை உனக்குச் சொல்லுகிறேன்; எல்லாவற்றையும் சொல்லுவதென்றால் அவற்றுக்கு முடிவே கிடையாமையாலே சொல்லப் போகாது; உன்னால் கேட்கவும் போகாது; ஆகையாலே முக்கியமாகச் சிலவற்றைச் சொல்லுகிறேன் கேளாய் என்று சொல்லி, (21) * आदित्यानामहं विष्णुः– ஆதித்யாநாமஹம் விஷ்ணு: * என்று தொடங்கி முப்பத்தொன்பதாவது ச்லோகமளவும் சொன்னான். இவையெல்லாம் கேட்ட அர்ஜுநன் (11—1ல்) * यत्त्वयोक्तं वचस्तेन मोहोऽयं विगतो मम–யத் த்வயோக்தம் வசஸ் தேந மோஹோயம் விகதோ மம * என்று, கண்ணா! நீ சொன்னவற்றையெல்லாம் கேட்டு என்னுடைய மோஹமெல்லாம் தொலைந்தது என்று சொல்லி, (11-3ல்) * द्रष्टुमिच्छामि ते रूपमैश्वरं पुरुषोत्तम– த்ரஷ்டுமிச்சாமி தே ரூபமைச்வரம் புருஷோத்தம * என்று பகவானுடைய அஸாதாரண ரூபத்தைக் காண்பதிலே தனக்கு விருப்பமிருப்பதாக வெளியிட்டான். அவனுக்குக் கண்ணபிரான் விச்வரூபம் காட்டியருளத் திருவுள்ளம்பற்றி அதை ஊனக்கண்ணாலே காண முடியாதாகையால் அதுகாண்கைக்காக திவ்ய சக்ஷுஸ்ஸைக் கொடுத்தருள விரும்பி, * दिव्यं ददामि ते चक्षुः पश्य मे योगमैश्वरम्–திவ்யம் ததாமி தே சக்ஷு: பச்ய மே யோகமைச்வரம் * என்று சொல்லி திவ்ய சக்ஷுஸ்ஸைக் கொடுத்து விச்வரூபத்தை அற்புதமாகக் காட்டியருளினான். ஆக, பத்தாமத்யாயத்தில் விபூதி விஸ்தாரத்தைப் பேசி, பதினோராமத்யாயத்தில் விச்வரூபத்தைக் காட்டியருளினானாயிற்று. இவையெல்லாம் எம்பெருமானுடைய உடைமைகள். இவை அஸத்யமென்பது அத்வைதிகளின் கருத்து. உண்மையாக அஸத்யமாகில், இவற்றைக் கண்ட அர்ஜுநன் முடிவாகச் சொல்லுகிற வார்த்தை அப்படியிருக்கமுடியாது. அந்த வார்த்தை ஏதென்னில்; (11-40) * अनन्तवीर्यामितविक्रमस्त्वं सर्वं समाप्नोषि ततोऽसि सर्वः– அநந்த வீர்யாமிதவிக்ரமஸ் த்வம் ஸர்வம் ஸமாப்நோஷி ததோஸி ஸர்வ: * என்பது. இவ்விடத்திலே நம் ஸ்வாமியினுடைய பாஷ்யத்திலுள்ள ஸ்ரீஸூக்தியை மேலே யெடுத்துக் காட்டுவோம்; அந்த ஸ்ரீஸூக்தியிருக்கட்டும்; மூலத்தை மாத்திரமே பார்ப்போம்; பார்க்குமளவில் * सर्वं खल्विदं ब्रह्म * ऐतदात्म्यमिदं सर्वम् * तत्त्वमसि श्वेतकेतो * என்பன முதலான உபநிஷத்வாக்யங்களை விசிஷ்டாத்வைதிகள் எவ்விதமாக நிர்வஹிக்கிறார்களோ அவ்விதமாகத் தான் நிர்வஹிக்கவேண்டுமென்பது கீதாசார்ய ஸம்மதமாகத் தேறுகின்றது. மேலே குறித்த ச்ருதிவாக்யங்களை நம்மவர்கள் நிர்வஹிக்கும் ப்ரகாரத்தை பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவ—உத்தரசதகத்தில் (23) * स्थित्युत्पत्तिप्रवृत्ति–ஸ்தித்யுத்பத்தி ப்ரவ்ருத்தி * இத்யாதிச்லோகத்தில் சுருங்கக் காட்டியுள்ளார். அங்கு எம்முடைய வியாக்கியானத்தில் விரிவு காணலாம். அந்தச்லோகத்தின் உத்தரார்த்தத்தில் மேலே குறித்த உபநிஷத்வாக்யங்கள் மூன்றையும் அடைவே யெடுத்துக்காட்டி “एवमाद्या व्याख्याता रङ्गधामप्रवण !

विजयिभिर्वैदिकैस्सार्वभौमैः" என்று தலைக்கட்டியுள்ளார். ப்ரக்ருத கீதா ச்லோகத்தில் * ஸர்வம் ஸமாப்நோஷி ததோஸி ஸர்வ: * என்றதற்குப் பொருள் யாதெனில்; பகவானே! உலகிலுள்ள ஸகல பதார்த்தங்களையும் நீயேயாக வேதங்களிற் சொல்லியிருப்பதற்குக் காரணம் எல்லாவற்றிலும் நீ ஆத்மாவாக வியாபித்திருப்பதுதான்—என்பதாம். இங்கு கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்தி வருமாறு— "......वायुर्यमोऽग्निरित्यादि सर्वसामानाधिकरण्यनिर्देशस्य आत्मतया व्याप्तिरेव हेतुरिति सुव्यक्तमुक्तम्..." என்று கண்ணபிரான் சொன்ன விபூதி விஸ்தாரங்களைக் கேட்டும், காட்டின விச்வரூபத்தைக் கண்டும் நின்ற அர்ஜுநன் "கண்ணா! உண்மையில் இல்லாதவற்றையெல்லாம் எடுத்துச் சொல்லுகிறாயே, உண்மையாக இல்லாதவற்றையெல்லாம் ஏறிட்டுக் காட்டுகிறாயே!" என்று சொல்லியிருக்கவேண்டும் அத்வைதிகளின் கொள்கை உண்மையாயின். அர்ஜுநன் அப்படிச் சொல்லாமல் (ச்லோ. 38ல்) *त्वया ततं विश्वमनन्तरूप— த்வயா ததம் விச்வமநந்தரூப * என்றும். * सर्वं समाप्नोषि ततोऽसि सर्वः— ஸர்வம் ஸமாப்நோஷி ததோஸி ஸர்வ: * என்றும் சொல்லியிருக்கையாலே ப்ரபஞ்சமெல்லாம் ஸத்யமென்றும் ஒன்றுகூட பொய்யல்லவென்றும் நிஸ்ஸந்தேஹமாகத் தேறுகின்றது. ஆக இவ்வத்யாயங்களிரண்டும் அத்வைதிகளின் வாதத்தை நிராதாரமென்று நிரூபிக்கப் போதும்.

49. இனி பன்னிரண்டாமத்யாயத்திற் சிறிது அநுபவிப்போம். இதில் 18, 19 ச்லோகங்கள் ஸாரமானவை. அவையாவன—* समः शत्रौ च मित्रे च तथा मानावमानयोः। शीतोष्णसुखदुःखेषु समः सङ्गविवर्जितः ॥ तुल्यनिन्दास्तुतिर्मौनी सन्तुष्टो येन केनचित्। अनिकेतः स्थिरमतिः भक्तिमान्मे प्रियो नरः— ஸமச் சத்ரௌ ச மித்ரே ச ததா மாநாவமாநயோ:, சீதோஷ்ண ஸுக துக்கேஷு ஸமஸ் ஸங்கவிவர்ஜித:, துல்ய நிந்தாஸ்துதிர் மௌநீ ஸந்துஷ்டோ யேந கேநசித், அநிகேத: ஸ்திரமதிர் பக்திமாந் மே ப்ரியோ நர:. * என்பன. பகைவனிடத்திலும் நண்பனிடத்திலும் ஒரேவிதமான பாவனையுள்ளவனும், பஹுமானம் நேர்ந்தாலும் அவமானம் நேர்ந்தாலும் அவற்றையும் துல்யமாகவே பாவிப்பவனும், சீதோஷ்ணங்களையும் ஸுகதுக்கங்களையும் ஸமமாக நினைப்பவனும், எதிலும் பற்றில்லாமலிருப்பவனும், பிறர் நிந்திப்பதையும் துதிப்பதையும் துல்யமாக நினைப்பவனும், ஒருவரோடும் பேசாமலிருப்பவனும், ஏதேனுமொன்றினால் ஸந்துஷ்ட சித்தனாயிருப்பவனும் உறுதியும் பக்தியுமுடையவனுமானவன் எனக்குப் பரம ப்ரீதிபாத்ர பூதன் என்று சொல்லுகிறான் கண்ணபிரான். இப்படிப்பட்ட அதிகாரி உலகில் மிகவும் துர்லபனேயாயினும் இப்படியிருக்க ஆசைப்படவேணுமென்பதற்காகவே இஃது அருளிச் செய்தபடி.

50. இனி பதின்மூன்றாமத்யாயத்திற்குச் செல்வோம். இதில் முதல் ச்லோகமும் இரண்டாம் ச்லோகமும் சிறிது விபரீதவுணர்ச்சியை உண்டாக்குவது போலுள்ளது. இங்கு ஸ்வாமியினுடைய பாஷ்யமும் அதற்கு டீகையான தாத்பர்ய சந்த்ரிகையும் மிகமிக விரிவாக அமைந்திருக்கின்றது. மூல ச்லோகங்களாவன— * इदं शरीरं कौन्तेय ! क्षेत्रमित्यभिधीयते। एतद्यो वेत्ति तं प्राहुः क्षेत्रज्ञ इति तद्विदः॥- இதம் சரீரம் கௌந்தேய க்ஷேத்ரமித்யபிதீயதே, ஏதத் யோ வேத்தி தம் ப்ராஹு: க்ஷேத்ரஜ்ஞ இதி தத்வித: * என்பது முதல் ச்லோகம். இனி இரண்டாவது ச்லோகமாவது- क्षेत्रज्ञं चापि मां विद्धि सर्वक्षेत्रेषु भारत। क्षेत्रक्षेत्रज्ञयोर्ज्ञानं यत्तज्ज्ञानं मतं मम- க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம்

வித்தி ஸர்வக்ஷேத்ரேஷு பாரத!, க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோர் ஜ்ஞாநம் யத் தத் ஜ்ஞாநம் மதம் மம * என்பது. இங்கு (ஆபாதப்ரதீதியில்) மேல்நோக்கில் என்ன தோற்றுகிறதென்றால், க்ஷேத்ரமென்னப்படுகிற அசேதநமும், க்ஷேத்ரஜ்ஞனென்னப்படுகிற சேதநனும் ஆகிய இரண்டையும் அர்ஜுநா! நானாக அறிந்துகொள் என்னப்படுகிறது பூர்வார்த்தத்தில்; க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞர்களாகிற சேதநாசேதநங்களை யறிந்து கொள்வதென்பது யாதொன்றுண்டோ, அதுதான் என்னையறிந்து கொள்வதாகும் என்கிறது உத்தரார்த்தத்தில். இவற்றால் அத்வைதவாதம் ஸித்திக்கிறதென்று கருதிய சங்கராசாரியர் தமது பாஷ்யத்தில் அக்கருத்தை விளக்கியிருக்கின்றார். அதற்கு விரிவான மறுப்பு ஸ்வாமியின் கீதாபாஷ்யத்திலுள்ளது; மிகமிக விரிவான மறுப்பு தாத்பர்யசந்த்ரிகையிலுள்ளது. அதன் ஸாரத்தை மிகவும் சுருக்கமாகத் தெரிவிக்கிறோமிங்கு. தேஹத்திற்காட்டிலும் ஆத்மா வேறுபட்டவன் என்பது தெரிந்திருக்கச்செய்தேயும் 'தேவோஹம் மநுஷ்யோஹம்' என்று வ்யவஹாரம் செய்துவருகிறோம். அஹம் என்பதற்கு ஆத்மா அர்த்தமேயொழிய தேஹம் அர்த்தமன்று; தேவத்வமோ மநுஷ்யத்வமோ சரீரத்திலுள்ளதேயன்றி அஹமர்த்தமான ஆத்மாவிலுள்ளதன்று. அப்படியிருந்தும் 'தேவ: அஹம், மநுஷ்ய: அஹம்' என்று ஸமாநாதிகரணமாக ப்ரயோகிப்பது எப்படி பொருந்துகிறதென்றால் கேண்மின். ஆத்மாவும் சரீரமும் ஒன்றைவிட்டொன்று தனித்து நிற்பனவல்ல. தேஹமானது ஆத்மாவுக்கு அப்ருதக்ஸித்தவிசேஷணமாய்க்கொண்டேயிருப்பதால் இந்தச் சேர்த்தியையிட்டு 'தேவ: அஹம், மநுஷ்ய: அஹம்' என்று வ்யவஹரிக்கப்பட்டு வருகிறது. இதற்கு அர்த்தம் என்னவென்றால், தேவ சரீரக: அஹம், மநுஷ்ய சரீரக: அஹம்—என்பதேயாம். ஏவஞ்ச, சரீராத்மபாவரூபமான ஸம்பந்தத்தைக்கொண்டு பொருத்தப்பட்டதாயிற்று. இவ்வண்ணமாகவே "क्षेत्रज्ञं चापि मां विद्धि— க்ஷேத்ரஜ்ஞஞ் சாபி மாம் வித்தி" என்றதும் சரீராத்ம பாவ ஸம்பந்த நிபந்தமாகவே பொருந்தக் குறையில்லை. அசேதநமான தேஹமானது ஜீவாத்மாவுக்கு சரீரமாயிருப்பது போல, இவ்விரண்டும் சேர்ந்து பரமாத்மாவுக்கு சரீரமாயிருக்கும் விஷயம் ஸுபாலோபநிஷத்து முதலானவற்றில் ஸுப்ரஸித்தமா யிருப்பதால் க்ஷேத்ரத்தையும் க்ஷேத்ரஜ்ஞனையும் பரமாத்மாவாக நினைப்பதென்பது "क्षेत्रक्षेत्रज्ञशरीरकः परमात्मा—க்ஷேத்ரத்தையும் க்ஷேத்ரஜ்ஞனையும் சரீரமாகக் கொண்டவன் பரமாத்மா" என்று நினைப்பதாகவே முடிந்து நிற்கும். இவ்விஷயம் பலபல உபபத்திகளுடன் ஸ்வாமி பாஷ்யத்தில் விரித்துரைக்கப் பட்டிருப்பது காண்க.

51. பதினான்காமத்யாயத்தில் (24, 25ல்) * गुणातीतस्स उच्यते-குணாதீதஸ் ஸ உச்யதே* என்று ஓர் உத்தமாதிகாரி சொல்லப்படுகிறான். இவனுக்கு குணாதீதனென்று பெயர். குணங்களைக் கடந்தவனென்று பொருள். ஸகலகுணங்களுக்கும் கொள்கலமாக இருப்பவனன்றோ உத்தமாதிகாரி; குணங்களைக் கடந்தவன் எப்படி உத்தமாதிகாரியாவன்? என்று கேள்வி பிறக்கக்கூடும். இங்கு விவக்ஷிக்கப்படுகிற குணங்கள் சமதமாதிகுணங்களல்ல; ஸத்வ ரஜஸ் தமோகுணங்கள். * முக்குணத்து வாணியத்து இரண்டிலொன்று நீசர்கள்* என்று திருமழிசைப்பிரானும். *முக்குணத்திரண்டவையகற்றி, ஒன்றினிலொன்றி நின்று* என்று திருமங்கையாழ்வாரும் அருளிச் செய்கிறபடி ரஜஸ் தமோகுணங்களிரண்டுதானே ஹேயங்கள்; ஸத்வகுணம் உபாதேயம்

தானே; அதுவுங்கூட ஹேயமென்று தோன்றும்படியுள்ளதேயென்று நினைக்க வேண்டா; சுத்தஸத்வம் என்பது உபாதேயமே. ரஜஸ் தமஸ்ஸுக்களோடு கலசின ஸத்வம் உபாதேயமன்று, அது ஹேயமே. ஆக, தமோகுணமும் ரஜோகுணமும் ரஜஸ்தமோமிச்ரஸத்வகுணமுமாகிய முக்குணங்களையுங் கடந்தவன் குணாதீதனெனப் படுவான். இவனை நாம் எப்படித் தெரிந்துகொள்வதென்றால் அவனுடைய நிலைமை யைக் கொண்டு தெரிந்துகொள்ளலாம். அந்த நிலைமை தெரிவிக்கப்படுகிறது இரண்டு ச்லோகங்களினால். * समदुःखसुखस्स्वस्थः समलोष्टाश्मकाञ्चनः। तुल्यप्रियाप्रियो धीरस्तुल्यनिन्दात्मसंस्तुतिः॥ मानावमानयोस्तुल्यः तुल्यो मित्रारिपक्षयोः। सर्वारम्भपरित्यागी गुणातीतस्स उच्यते—ஸமதுக்க ஸுகஸ் ஸ்வஸ்த: ஸமலோஷ்டாச்ம காஞ்சந:, துல்யப்ரியாப்ரியோ தீரஸ் துல்யநிந் தாத்ம ஸம்ஸ்துதி:; மாநாவமாநயோஸ் துல்யஸ் துல்யோ நிந்தாரிபக்ஷயோ:, ஸர்வா ரம்பபரித்யாகீ குணாதீதஸ் ஸ உச்யதே* என்னுமிவ்விரண்டு ச்லோகங்களும் அநவர தம் கண்டபாடம் செய்யத்தக்கன. ஸுகம் வந்தாலும் துக்கம் வந்தாலும் ஒரேவித மான சித்தவ்ருத்தியையுடையனாயிருக்கவேணுமென்கிறது 'ஸமதுக்கஸுக:' என்ப தனால். அதன்மேல் [ஸ்வஸ்த;] என்கிறது. இதற்கு இவ்விடத்தில் அபூர்வமான வ்யுத்பத்தியைக் காட்டியருளுகிறார் ஸ்வாமி யெம்பெருமானார். 'स्वस्मिन् स्थितः=स्वस्थः' (தன்னிடத்திலேயே யிருப்பவன்) என்கிறார். உடனே அதை விவரிக்கிறார்—"स्वात्मैकप्रियत्वेन तद्व्यतिरिक्त पुत्रादिजन्ममरणादि सुखदुःखयोः समचित्त इत्यर्थः" என்று உலகில் ஸுகதுக் கம், ப்ரியாப்ரியம் என்னும் சப்தங்கள் விசேஷமான பொருள்வாசியையுடையன வல்ல; பர்யாயசப்தங்கள் போலவேகாணும். ஆனாலும் விஷய பேதத்தாலே பொருள் பேதித்திருக்கும். ஸ்வஸ்த: என்பதற்கு "स्वात्मनि स्थितः प्रसन्नः" என்பது சங்கரபாஷ் யம். அதையே நன்கு விவரித்துக் காட்டுகிறது ராமாநுஜபாஷ்யம். இதற்குமேல் "ஸமலோஷ்டாச்மகாஞ்சன:" என்கிறது. லோஷ்டத்தையும் கல்லையும் பொன்னையும் துல்யமாக நினைப்பவன். இப்படியாக மேன்மேலும் சொல்லப்படுகிற தன்மைகள் இந்நிலத்தில் நம் போன்ற பாமரர்களுக்கு எவ்வளவு பழக்கம் செய்தாலும் வாய்க் கக்கூடியவையல்ல. இத்தகைய நலம் வாய்ந்தவர்கள் பூலோகம் முழுவதற்குள்ளும் ஒருவரிருவர் தேறுவதும் அருமையென்னலாம். ஆயினும் இப்படிப்பட்ட ச்லோ கங்களை நாம் மனனம் செய்துகொண்டேயிருந்தால் பெரிதும் பயன்படும் என்றிவ் வளவே சொல்லலாம்.

52. இனி பதினைந்தாமத்யாயத்திற் புகுவோம். இதில் விமர்சதோரணையில் தெரிவிக்கும் ஸாரமான விஷயமொன்றைக் குறிக்கொண்மின். நமது ஸ்ரீபாஷ்ய காரர் பெரும்பாலும் ஆழ்வாருடைய ஸ்ரீஸூக்திகளைத் தழுவியே ஸ்ரீபாஷ்யம் கீதா பாஷ்யம் முதலியவற்றை அருளிச்செய்ததாக நம்முன்னோர்கள் திருவுள்ளம்பற்றி யிருக்கிறார்கள். 'பாஷ்யகாரர் இதுகொண்டு ஸூத்ரவாக்யங்களொருங்கவிடுவர்' என்று ஆசார்யஹ்ருதயத்தில் ஸ்பஷ்டமாகவும் பணிக்கப்பட்டுள்ளது. இதற்குச் சான்றாக நாம் பலவிடங்கள் காட்டியிருக்கிறோம். இப்போது இவ்வத்யாயத்தில் ஒரு நுட்பம் காட்டுகிறோம். இங்கு (15–18) * யஸ்மாத் க்ஷரமதீதோஹம் * என்கிற ச்லோ கத்தில் * அதோஸ்மி லோகே வேதே ச ப்ரதித: புருஷோத்தம: * என்றுள்ளது. இங்கு "லோகே வேதே ச" என்றதற்கு லோகத்திலும் சாஸ்த்ரத்திலும் என்று பொருள் சாதாரணமாக எல்லார்க்கும் தோன்றக் கூடியது. இதர பாஷ்யகாரர்கள் இப்படித்

தான் அர்த்தம் செய்திருக்கக் காண்கிறோமிங்கு. ஸ்வாமி யெம்பெருமானாரோ வென்னில், தமது பாஷ்யத்தில் அங்ஙனம் பொருள் பணிக்கவில்லை. "वेदार्थावलोकनात् लोक इति स्मृतिरिहोच्यते ; श्रुतौ स्मृतौ चेत्यर्थः— வேதார்த்தாவலோகநாத் லோக இதி ஸ்ம்ருதிரிஹோச்யதே; ச்ருதௌ ஸ்ம்ருதௌ ச இத்யர்த்த:" என்பது கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்தி. லோகம் என்பதற்கு கரணே வ்யுத்பத்தியினால் சாஸ்த்ரமென்றே பொருள் கொள்ளப்பட்டிருக்கிறது. இப்படித்தான் கொள்ளவேணுமென்று தாத்பர்ய சந்த்ரிகையில் வேதாந்த தேசிகனும் உபபாதநம் செய்தருளியிருக்கிறார். லோகமென்னும் சொல்லுக்கு இப்படி சாஸ்த்ரமென்கிற பொருளைக் கொண்டவர்கள் வேறு யாருமில்லை. லோக சப்தத்திற்கு சாஸ்த்ர மென்று அர்த்தமுள்ளதாக கோசங்களிலும் காணப்படவில்லை. "लोकस्तु भुवने जने— லோகஸ்து புவநே ஜநே" என்று தான் அமரகோசத்திலுள்ளது. இதர கோசங்களிலும் இங்ஙனமே காண்கிறது. இப்படியிருக்க நம் ஸ்வாமி பாஷ்யகாரர் லோக பதத்தை சாஸ்த்ர பர்யாயமாகக் கொண்டு பொருளருளிச் செய்ததற்கு நிதானமென்ன? என்று பராமர்சிக்க வேணும். நம்மாழ்வாருடைய வொரு ஸ்ரீஸூக்தியே இதற்கு மூலகாரண மென்கிற தத்துவத்தை இங்கு நாம் நிரூபிக்க விரும்புகிறோம்.

53. நம்மாழ்வார் திருவாய்மொழியில் * ஒன்றுந் தேவு முலகு முயிருமென்று தொடங்கும் பதிகத்தில் (4–10–6) * போற்றி மற்றோர் தெய்வமென்னும் பாசுரத்தில் * எல்லீரும் வீடுபெற்றால் உலகில்லை யென்றே * என்றருளிச் செய்துள்ளார். இப்பதிகத்தில் ஸ்ரீமந் நாராயணனுடைய பரத்துவத்தை உபபாதித்து வந்த ஆழ்வாரை நோக்கி 'ஸ்ரீமந் நாராயணனே ஸர்வேச்வரனாகில் அவன் தன்னையே ஆச்ரயிக்கும்படி எங்களைப் பண்ணாமல் இதர தெய்வங்களைத் தொழுமாறு எங்களைச் செய்து வைத்தது ஏன்?' என்று சிலர் கேட்பதாகக் கொண்டு அவர்களுக்கு விடை கூறுவதாக இப்பாசுரமமைக்கப்பட்டுள்ளது. இப்பாசுரத்தில் "எல்லீரும் வீடுபெற்றால் உலகில்லை யென்றே" என்பது தான் உயிராக வுள்ளது. எல்லாரும் ஸ்ரீமந்நாராயணனையே தொழப் பெற்றால் எல்லாருமே வீடு பெறுவார்கள்; அப்படி எல்லாரும் வீடுபெற்று விட்டால் உலகு இல்லையாய் விடும்; (அதாவது லீலாவிபூதி அடியற்றுப் போய் விடும்;) அங்ஙனம் ஆகாமைக்காகவே எம்பெருமான் உங்களை இதர தேவதாபஜனம் பண்ணி ஸம்ஸாரிகளாய்த் தொலைந்து போம்படி செய்து வைத்தான்— என்பதாக இப்பாசுரத்திற்கு ஆபாத ப்ரதீதியில் பொருள் தோன்றக் கூடும். தசோபநிஷத் பாஷ்யகாரரான ரங்கராமாநுஜ ஸ்வாமி வடமொழியில் (திருவாய் மொழிக்குத்) தாம் பணித்த ஒன்பதினாயிரப்படி வியாக்கியானத்தில் இவ்விதமான பொருளையே எழுதியுள்ளார். "भवादृशानां सर्वेषां मोक्षलाभे लीलाविभूत्यन्तर्भूतलोकानाम् उच्छेद एव स्यादिति मत्वैव भगवता स्वविषये भक्तिमनुत्पाद्य देवतान्तरविषये भक्तिरुत्पादितेति भावः।" என்பவை அந்த ஸ்வாமியினுடைய வியாக்கியான் பங்க்திகள்.

54. ஆனால், திருக்குருகைப்பிரான் பிள்ளான், நம்பிள்ளை முதலான பூருவாசாரியர்கள் தம் வியாக்கியானங்களில் வெளியிட்டருளின பொருள் இங்ஙனே யல்ல, எங்ஙனே யென்னில்; 'உலகில்லையென்றே' என்றவிடத்தில், உலகு என்பதற்கு சாஸ்த்ர மென்று பொருள்; ப்ரபல பாபம் செய்து வைத்த நீங்களும் ப்ரபல ஸுக்ருதிகளுக்கே

பெறக்கூடியதான மோக்ஷத்தைப் பெற்று விட்டீர்களாகில் சாஸ்த்ர மர்யாதையே அழிந்துவிடுமென்று நினைத்தே எம்பெருமான் உங்களை தேவதாந்தர ப்ரவணர்களாக ஆக்கிவைத்திருக்கிறான்; அவரவர்கள் பண்ணின புண்ய பாபரூப கருமங்களுக்குத் தக்கபடியே பலன் கொடுப்பதென்று ஒரு சாஸ்த்ர மர்யாதை ஏற்பட்டிருக்கிறது; நீங்கள் முற் பிறவிகளில் பிரபலமான தீவினைகளைச் செய்திருக்கிறபடியால் அவற்றின் பலனாக இப்பிறப்பில் க்ஷுத்ரதேவதா பஜநம் பண்ணும்படியாக உங்களை உபேக்ஷித்திடலாயிற்று. கொடிய பாவங்கள் செய்த உங்களையும் புண்யாத்மாக்களைப் போலே ஸ்ரீமந்நாராயண ஸமாச்ரயணமே செய்யும்படி பண்ணிவிடுவரானால் அப்போது முன் சொன்ன சாஸ்த்ர மரியாதை அழிந்துவிடுமன்றோ; அங்ஙனம் அழியாமைக்காகவே உங்களை இங்ஙனே நிறுத்திவைத்தது— என்பதாகவே ஆழ்வார் திருவுள்ளம் பற்றிய பொருள் என்று பூருவாசாரியர்கள் உபபாதிக்கருளுகிறார்கள். வேதாந்த தேசிகனும் த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளியில் * तत्तत्कर्मानुरूपं फलवितरणत:— தத்தத் கர்மாநுரூபம் பலவிதரணத:* என்று இவ்வர்த்தத்தையே வெளியிட்டருளினர். ஆகவே ஆழ்வார் திருவுள்ளத்தால் உலகு என்பதற்கு சாஸ்த்ர மென்னும் பொருள் தேறிவிட்டபடியால் இதையடியொற்றியே ஸ்வாமி பாஷ்யகாரர் ப்ரக்ருத கீதாச்லோகத்தில் [* அதோஸ்மி லோகே வேதே ச *] என்றவிடத்தில் லோக சப்தத்தை சாஸ்த்ர பரமாக நயிப்பித்தருளினாரென்று அறியக் கிடக்கிறது. இந்த கீதா ச்லோகத்தை அப்பாசுரத்தின் வியாக்கியானத்தில் பெரியவாச்சான் பிள்ளையும் வடக்குத் திருவீதிப் பிள்ளையும் எடுத்துக் காட்டியு மிருக்கிறார்கள்.

55. எம்பெருமானார்க்கு முன்னே ஆளவந்தாரும் லோக சப்தத்தை சாஸ்த்ர மென்னும் பொருளில் ப்ரயோகம் செய்தருளினார். ஸ்தோத்ரரத்நத்தில் (23) * न निन्दितं कर्म तदस्ति लोके— ந நிந்திதம் கர்ம ததஸ்தி லோகே * என்றவிடத்திற்கு வியாக்கியானஞ் செய்தருளா நின்ற பெரியவாச்சான்பிள்ளை "ஆயிரமடங்க என்னால் பண்ணப்படாதது யாதொரு நிந்திதகருமமுண்டு அதிபாதகமஹாபாதகாதிகள். அது சாஸ்த்ரத்திலுமில்லை;...... அநுஷ்டாதாக்கள் பக்கல் இல்லாத நிஷித்தங்களும் சாஸ்த்ரத்தில் காணலாமிறே" என்று அருளிச் செய்திருக்கிறார். தேசிகனும் ஸ்தோத்ரபாஷ்யத்தில் அவ்விடத்தில், "लोक्यते अनेनेति लोकः—प्रमाणम्; तस्मिन्नास्ति; अप्रामाणिकमित्यर्थः। अत्र शास्त्ररूपप्रमाणविशेषविवक्षा" என்றருளிச் செய்தார். இவற்றால் ஆளவந்தாரும் லோக சப்தத்தை சாஸ்த்ரபரமாகவே கொண்டாரென்று விளங்காநின்றது. இப்படி ஆளவந்தாரும் எம்பெருமானாரும் கொண்டது ஆழ்வாரருளிச்செயலை அடியொற்றியேயென்பது நிஸ்ஸந்தேஹம், ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளில் ப்ரவேசமற்ற மற்றையோர்கள் எங்கும் லோகசப்தத்தை இங்ஙனே உபதேசங் கொள்ளக் காணாமையாலே. இனி அடுத்த அத்யாயத்திற்குச் செல்வோம்.

56. பதினாறு மத்யாயத்தில் தேவாஸுரவிபாகம் முக்கியமானது. தைவப்பிறப்பு அஸுரப்பிறப்பு என்று பிறப்பிலேயே இருவகையுண்டு. (16–6.) * द्वौ भूतसर्गौ लोकेऽस्मिन् दैव आसुर एव च— த்வௌ பூதஸர்கௌ லோகேஸ்மிந் தைவ ஆஸுர ஏவ ச * என்று, உலகத்திலுள்ள பிராணிவர்க்கங்களை யெல்லாம் இரண்டே வகுப்பாக வகுக்கிறான் கீதாசார்யன். தைவவகுப்பு ஒன்று, அஸுரவகுப்பு மற்றொன்று. இதைப்பற்

றிச் சுருக்கமாகத் தெரிந்து கொள்ள வேணுமானால் *दैवी सम्पद्विमोक्षाय निबन्धायासुरी मता—தைவீ ஸம்பத் விமோக்ஷாய நிபந்தாய ஆஸுரீமதா * (16—5.) என்கிறவொரு பாதிச்லோகத்தை மனனம் பண்ணினாற் போதும். ஸம்ஸாரபந்தத்தில் நின்றும் விடுபட்டு ஸத்கதியை யடையும் வழியைச் சிந்தனை செய்யும் வகுப்புதான் தெய்வவகுப்பெனப் படுவது. அப்படிப்பட்ட சிந்தனையின்றிக்கே அதோகதியை யடையும் வழியைத் தேடும் வகுப்புதான் ஆஸுர வகுப்பெனப்படுவது. இங்ஙனே சொன்னதைக் கேட்டவுடனே அர்ஜுநனுடைய முகத்தில் துக்கக் குறி காணப்பட்டது. நம்மைக் கண்ணபிரான் தைவவகுப்பில் சேர்த்திருக்கிறானோ ஆஸுரவகுப்பில் சேர்த்திருக்கிறானோ தெரியவில்லையே யென்று அர்ஜுநன் கவலையுற்று நின்றான். அதை யறிந்த கண்ணபிரான் உடனே யருளிச் செய்கிறான் — *माशुचः सम्पदं दैवीमभिजातोऽसि पाण्डव— மா சுசஸ் ஸம்பதம் தைவீம் அபிஜாதோஸி பாண்டவ! * என்கிறான். அப்பா! நீ கவலை கொள்ளாதே, நீ தெய்வ வகுப்பில் சேர்ந்தவனே யென்று கூறி அவனைப் பரமானந்தப்படுத்துகிறான். தான் செய்யும் உபதேசங்களை அவன் ருசிவிச்வாஸங்களோடு கேட்டுக் கொண்டிருப்பது பற்றியே அவனைத் தைவஸம்பத்து வாய்ந்தவனாக அறுதியிட்டருளினன் கண்ணபிரான். நமக்கு ஆஸ்திக்ய முள்ளதா? நாஸ்திக்ய முள்ளதா? என்பது உலகில் அவரவர்களுடைய நெஞ்சுக்குத் தெரியுமன்றோ. ஆஸ்திக்ய முண்டாகில் நம்முடைய பிறப்பு தெய்வப்பிறப்பு என்று தானே நிச்சயித்துக் கொள்ளலாம். அஃதில்லையாகில் ஆசுரப் பிறப்பே நமக்கு வாய்த்ததென்று நிச்சயித்துக் கொள்ள என்ன தடை? இத்திய பிறப்பின் தன்மைகளை மேலே பல ச்லோகங்களினால் கண்ணபிரான் தானே நன்கெடுத்துக் கூறுகின்றான். *न शौचं नापि चाचारो न सत्यं तेषु विद्यते। असत्यमप्रतिष्ठं ते जगदाहुरनीश्वरम्॥ —ந சௌசம் நாபி சாசாரோ ந ஸத்யம் தேஷு வித்யதே, அஸத்யமப்ரதிஷ்டம் தே ஜகதாஹுரநீச்வரம் * இத்யாதிகள் காண்க.

57. இனி, பதினேழாமத்யாயத்திற் செல்வோம். இதில் மூவகையான தபஸ்ஸுக்களைக் கூறுகின்றான் கண்ணன். அவை சாரீர தபஸ்ஸென்றும், வாங்மய தபஸ்ஸென்றும், மாநஸ தபஸ்ஸென்றும் வழங்கப்படுவன. *ஊன் வாட வுண்ணா துயிர்காவலிட்டு உடலிற்பிரியாப் புலனைந்தும் நொந்து, தான்வாட வாடத் தவஞ்செய்ய * என்றும், * காயோடு நீடுகனியுண்டு வீசு கடுங்கால் நுகர்ந்து நெடுங்காலம் ஐந்து தீயூடு நின்று தவஞ்செய்ய * என்றும் ஆழ்வார்கள் ஒருவிதமான உடல்தவத்தை யருளிச் செய்துள்ளார்கள். கீதாசார்யன் அருளிச்செய்வது அதனில் வேறுபட்டது. *देवद्विजगुरुप्राज्ञपूजनं शौचमार्जवम्। ब्रह्मचर्यमहिंसा च शारीरं तप उच्यते॥* என்பது காயிகதபஸ்ஸைத் தெரிவிக்கும் ச்லோகம். பகவானையும் அந்தணர்களையும் ஆசாரியர்களையும் பண்டிதர்களையும் வழிபாடு செய்வது, புண்ய தீர்த்தங்களில் குடைந்தாடுவது, நெஞ்சில் நினைத்தபடியே அனுஷ்டித்துக் காட்டுவது, மாதர்களைக் கண்டு காதல் கொள்ளாமை, ப்ராணி பீடைகள் செய்யாமை ஆகிய இவை காயிகதபஸ்ஸெனப்படும். *अनुद्वेगकरं वाक्यं सत्यं प्रियहितं च यत्। स्वाध्यायाभ्यसनं चैव वाङ्मयं तप उच्यते॥—அநுத்வேககரம் வாக்யம் ஸத்யம் ப்ரியஹிதம் ச யத், ஸ்வாத்யாயாத்யயநம் சைவ வாங்மயம் தப உச்யதே* என்பது வாங்மயமான தபஸ்ஸைத் தெரிவிக்கும் ச்லோகம். பிறரை நோவச் செய்யாத வார்த்தைகளைச் சொல்லுவது, உண்மையைச் சொல்லுவது, ப்ரியமும் ஹிதமுமான

வற்றைச் சொல்லுவது, வேத மோதுவது ஆகியவிவை வாசிகதபஸ்ஸெனப்படும். * मनः प्रसादस्सौम्यत्वं मौनमात्मविनिग्रहः । भावसंशुद्धिरित्येतत्तपो मानसमुच्यते —மந: ப்ரஸாதஸ் ஸௌம்யத்வம் மௌனமாத்மவிநிக்ரஹ:, பாவஸம்சுத்திரித்யேதத் தபோ மானஸ முச்யதே * கோபம் முதலியன கொள்ளாமையாகிற மனத்தெளிவு, பிறர்க்குத் தீங் கிழைக்க நினையாமையாகிற ஸௌம்யத்வம்; வாய்திறந்து பேசாமை, ஸதா தியானிக் கத் தகுந்த பரமபுருஷன் விஷயத்திலே நெஞ்சைச் செலுத்துகை, வேற்றுவிஷயங்க ளில் சிந்தனை கொள்ளாமை ஆகிய இவை மாநஸதபஸ் ஸெனப்படும். இங்ஙனம் மூவகைப் பட்ட தபஸ்ஸு மறுபடியும் மூவகையாக வகுக்கப்படுகிறது; ஸாத்விக மென்றும் ராஜஸமென்றும் மாநஸ மென்றும்.

58. இப்படி மூன்று மூன்ருக வகுக்கப்படும் விஷயங்கள் பதினெட்டாமத்யா யத்திலும் பல கூறப்படுகின்றன. அதில் ஸுகமானது ஸாத்விகமென்றும் ராஜஸமென் றும் தாமஸ மென்றும் மூன்ருகப் பிரிக்கப்படுகிறது. எந்த ஸுகமானது உபக்ரம தசையில் விஷம் போல விருந்து பரிணமத்தில் அம்ருதம்போலாகிறதோ அது ஸாத்விக ஸுகமாம். யோகம் தொடங்கும்போது வெகு ஆயாஸஸாத்யமாகையாலே துக்கம் போல் தோற்றும்; விபாகதசையில் அப்யாஸ பலத்தாலே அதுவே அம்ருதம்போலா கும். இதுதான் ஸாத்விகஸுகம். * यत्तदग्रे विषमिव परिणामेऽमृतोपमम् । तत्सुखं सात्त्विकं प्रोक्तमात्मबुद्धिप्रसादजम् ॥ * யத் ததக்ரே விஷமிவ பரிணமே அம்ருதோபமம், தத் ஸுகம் ஸாத்விகம் ப்ரோக்தம் ஆத்மசுத்தி ப்ரஸாதஜம் * (18–37.) என்கிற ச்லோகத்தை இங்கே அநுஸந்திப்பது.

59. இதற்கடுத்த ச்லோகம்—* विषयेन्द्रियसंयोगात् यत्तदग्रेऽमृतोपमम् । परिणामे विषमिव तत्सुखं राजसं स्मृतम् ॥— விஷயேந்த்ரியஸம்யோகாத் யத்ததக்ரே அம்ருதோபமம், பரிண மே விஷமிவ தத்ஸுகம் ராஜஸம் ஸ்ம்ருதம் * என்பது. இந்த ச்லோகத்தை நம் மாழ்வார் திருவாய்மொழியில் (7-1-8) * இன்னமுதெனத் தோன்றி ஓரைவர் யாவரையும் மயக்க * என்கிற பாசுரத்தினல் மொழிபெயர்த்திருக்கிரு ரென்னலாம். இந்திரியங்கள் சிற்றின்பங்களைப்பற்றி யநுபவிக்கும் ஸுகம் அநுபவவேளையில் அமு தம்போல் தோன்றிப் பிறகு நரகஹேதுவாகையாலே விஷமாகப் பரிணமிக்கும். இது தான் ராஜஸ ஸுகமென்பது.

60. இதற்குமேல் தாமஸஸுகமென்பது எத்தகைத்தென்னில்; * यदग्रे चानुबन्धे च सुखं मोहनमात्मनः । निद्रालस्यप्रमादोत्थं तत्तामसमुदाहृतम् ॥ —யதக்ரே சாநுபந்தே ச ஸுகம் மோஹநமாத்மந:, நித்ராலஸ்ய ப்ரமாதோத்தம் தத் தாமஸமுதாஹ்ருதம் * (18—39.) இந்த ச்லோகத்தினுல் தெரிவிக்கப்படுமது, கீழ்ச் சொன்னவற்றில், அநுபவ வேளை யிலோ விபாகதசையிலோ ஏதேனுமொரு போதிலே அமுதமாகுமாகார முண்டு. இஃது அங்ஙனன்றிக்கே இரண்டு தசையிலும் விஷமாகவே காண்பது. உறங்குவது, சோம்பேறியாயிருப்பது, செய்யவேண்டிய வற்றிலே கவனிப்பில்லாமலிருப்பது ஆகிய இவை உபயதசையிலும் விஷமானதே.

61. இப்படியாகச் சொல்லிக்கொண்டுபோய், ப்ராஹ்மண ஜாதிக்குரிய தரும மின்னது, க்ஷத்ரிய ஜாதிக்குரிய தருமமின்னது, வைச்ய ஜாதிக்குரிய தருமமின்னது,

சதுர்த்த ஜாதிக்குரிய தருமமின்னது என்று சொல்லுகையில் *शौर्यं तेजो धृतिर्दाक्ष्यं युद्धे चाप्यपलायनम् । दानमीश्वरभावश्च क्षात्रं कर्म स्वभावजम् ॥ - சௌர்யம் தேஜோ த்ருதிர்தாக்ஷ்யம் யுத்தே சாப்யபலாயனம், தானமீச்வரபாவஸ்ச க்ஷாத்ரம் கர்ம ஸ்வபாவஜம் * என்கிற ச்லோகத்தினால் க்ஷத்ரியதருமத்தை நெஞ்சிலே யூன்ற வருளிச் செய்தான். இதில் பூர்வார்த்தத்தில் ஐந்து குணங்கள் க்ஷத்ரியனுக்குச் சொல்லப்படுகின்றன. இவற்றுள் சௌர்யமாவது-போர்க்களத்தில் சிறிதும் கூசாமே புகுவதற்குரிய வல்லமை. தேஜஸ்ஸாவது-பிறரால் அசைக்கவும் முடியாமை. த்ருதியாவது-தொடங்கின காரியத்தை எத்தனையிடையூறுகள் மிடைந்தாலும் சிலைக்காமல் நிறைவேற்றியே தீருப்படியான மனவுறுதி. தாக்ஷ்யமாவது-எந்தகாரியத்தையும் இனிது நிறைவேற்ற வல்லனாகை. [யுத்தே சாபி அபலாயநம்] போர்புரியவந்து நின்றபின் தனக்கு மரணமே ஸம்பவிக்குமென்று தோன்றினாலுங்கூட முதுகுகாட்டிபோடாமை. அர்ஜுநன் க்ஷத்ரியஜாதியிலே பிறந்தவனாதலால் அவனுக்கு ஸ்வஜாதிதர்மமாகிய யுத்தத்தை வழுவறச்செய்கை ஆவச்யகமென்பதை மேன்மேலும் வற்புறுத்திச் சொல்லி, தான் சொன்னபடியே கேட்டாக வேண்டுமென்றும் தன்னையே தஞ்சமாகப் பற்றியாகவேண்டுமென்றும் வாழைப்பழத்தில் ஊசியேற்றுவது போலுரைத்து, கடைசியாக அவன் வாக்கிலிருந்து *नष्टो मोहः स्मृतिर्लब्धा त्वत्प्रसादान्मयाऽच्युत ! । स्थितोऽस्मि गतसंदेहः करिष्ये वचनं तव— நஷ்டோ மோஹ: ஸ்ம்ருதிர் லப்தா த்வத்ப்ரஸாதாத் மயாச்யுத, ஸ்திதோஸ்மி கதஸந்தேஹ; கரிஷ்யே வசநம் தவ.* என்று சொல்லுவித்துக் கீதையைத் தலைக்கட்டினானாயிற்று. கண்ணா! உனது திருவருளால் என்னுடைய விபரீதஜ்ஞானமெல்லாம் தொலைந்தது: உண்மைப் பொருளுணர்ச்சி உண்டாயிற்று; மனதிலிருந்த கல்மஷங்களெல்லாம் தீர்ந்து ஒரு நிலையில் நின்று விட்டேன்; இனி நீ சொன்னபடி கேட்கிறேன் என்று சொன்னானென்கிற இவ்வளவையும் த்ருதராஷ்ட்ரனுக்கு ஸஞ்ஜயன் சொல்லி நின்றான்.

62. கீதையுபதேசம் கேட்பதற்கு முன்பு அர்ஜுநன் இருந்த இருப்பு என்ன? இப்போது நின்றநிலை என்ன? என்பதே ஸாரமாக இங்கு உய்த்துணரத் தக்கது. நான் யுத்தம் செய்யமாட்டேனென்று வில்லையும் அம்புகளையும் விட்டெறிந்து தேர்த்தட்டிலே உட்கார்ந்து விட்டான் என்பது முதலத்யாயத்தின் முடிவில் சொல்லப்பட்டது. நீ சொன்னபடியே செய்கிறேனென்று சொல்லி யுத்தத்திற்கு உடன்பட்டு நின்றானென்பது பதினெட்டாமத்யாயத்தின் முடிவில் சொல்லப்பட்டது. அவரவர்களுக்கு ஸ்வதர்மத்தில் ருசியையுண்டாக்குவதே கீதையின் முழுநோக்கு என்றதாயிற்று. இந்த கீதாசாஸ்த்ரம் அவதரித்திருக்கிற ரீதியை ஊன்றி நோக்குமிடத்து வெகு ஆச்சரியமாகவேயிருக்கிறது. திருவாய்மொழியில் (4-8-6.) * அறிவினால் குறைவில்லா அகல் ஞாலத்தவரறிய, நெறியெல்லாமெடுத்துரைத்த நிறைஞானத்தொரு மூர்த்தி* என்கிற பாசுரத்தின் பெருமை ஸாரமாக அருளிச் செய்யப்பட்டது. இதன் அருமைபெருமையைக் கண்ணபிரான் தானே முடிவில் *इदं ते नातपस्काय नाभक्ताय कदाचन । न चाशुश्रूषवे वाच्यं न च मां योऽभ्यसूयति— இதம் தே நாதபஸ்காய நாபக்தாய கதாசந, ந சாசுச்ரூஷவே வாச்யம் ந ச மாம் யோப்யஸூயதி * என்கிற வொரு ச்லோகத்தினால் அற்புதமாகப் பேசினான். அர்ஜுநா! நான் உனக்குச் சொன்ன இந்த பரம குஹ்யமான சாஸ்த்ரத்தை அதபஸ்கனுக்குச் சொல்லாதே, அபக்தனுக்குச் சொல்லாதே,

அசுச்ரூஷுவுக்குச் சொல்லாதே, என்னிடத்தில் அஸூயை யுள்ளவனுக்குச் சொல் லாதே யென்று கட்டளையிடுகிறுன் கண்ணபிரான். இங்கு "ந ச மாம் யோப்யஸூ யதி" என்ற விடத்திற்கு நம் பாஷ்யகாரர் பாஷ்யமிட்டருளுகிறுர்; காணக் கண் ணுயிரம் வேண்டும்; கேட்கக் காதாயிரம் வேண்டும். நவில நாவாயிரம் வேண்டும். "मत्स्वरूपे मदैश्वर्ये मद्गुणेषु च कथितेषु यो दोषमाविष्करोति न तस्मै वाच्यम्" என்று பாஷ்ய ஸூக்தியுள்ளது. என்னுடைய ஸ்வரூபத்தையும் என்னுடைய ஐச்வர்யத்தையும் என்னுடைய குணங்களையும் ஒருவர் எடுத்துரைத்தால் அவற்றில் தோஷாவிஷ்கரணம் செய்பவனே என்னிடத்தில் அஸூயை கொண்டவன், அவனுக்கு நீ ஒன்றும் சொல் லாதே— என்று கண்ணபிரான் கட்டளை யிடுவதாக ஸ்வாமி பாஷ்யம் செய்தருளு கிறுர். பகவத் குணங்களை எத்தனை உயர்த்தியாகச் சொன்னுலும் அத்தனையும் ஒக் கும்! ஒக்கும்!! என்றிராதே அவற்றில் அஸம்பாவிதத்வத்தை உபபாதிக்கிறேம் கேண்மினென்று, தங்களுக்குண்டான பாண்டித்யத்தை யெல்லாம் பகவத் குணங் களை இல்லைசெய்வதிலும் இறக்குவதிலுமே உபயோகப்படுத்துகிறவர்கள் பகவத் கீதைக்கு வெகுதூரத்திலே நிற்கவேண்டுமென்பது ஸ்வாமி திருவுள்ளமாகக் காண் கிறது.

❈ यत्र योगेश्वरः कृष्णो यत्र पार्थो धनुर्धरः ।
तत्र श्रीर्विजयो भूतिर्ध्रुवा नीतिर्मतिर्मम ॥ ❈

ஸ்ரீகாஞ்சி பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர் எழுதிய
**பகவத்கீதை யறுபத்திரண்டென்னும் கீதாஸாரஸங்க்ரஹம்**
முற்றுப் பெற்றது.



2-7-49

ஸ்ரீராமாநுஜன் வெளியீடு நெ.5.

ஸ்ரீரஸ்து.

ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியரால்
ஸ்ரீபதரிகாச்ரம த்விதீய யாத்ரையில்
பஞ்சவடீ க்ஷேத்ர தபோவனத்தில் எழுதப்பட்டு
ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி திருமலை திருப்பதி
சின்ன ஜீயர் ஸ்வாமி ஸந்நிதிக்கு அனுப்பப்பட்டு
அந்த ஸ்வாமி திருக்கண் சாத்தி யுகந்தருளி

# ஸ்ரீ வைஷ்ணவ மஹாநிதி

என்று பெயரிடப் பெற்றது.

1. முப்பத்திரண்டு மொழிமாலை.
2. ஸாது ஸாத்விக ஸம்வாதம்.
3. மாமுனிவன் மேற்கோள் விளக்கு.

சென்னை அட்வொகேட். K. திருவேங்கடாசார்யரால்
சென்னை ரத்னம் அச்சுக்கூடத்தில் அச்சிடப்பட்டது.

இதன் விலை 0—12—0. 16-11-73.

15-6-49.

ஸ்ரீ:

# மதுரை ஸத்ஸம்ப்ரதாய ஸபையின் நிரந்தர அக்ராஸனரும் "மநீஷிமான்ய" பிருதாலங்க்ருதருமான ஸ்ரீமான் உ. வே. ராவ்பஹதூர். R. நரஸிம்ஹய்யங்கார் ஸ்வாமிகளின் ஸ்ரீமுகம். (2—6—49)

ஸ்ரீ ராமாநுஜன் பத்திரிகை—நிர்வாஹ ஆசிரியர்க்குத் தெரிவித்துக்கொள்வது. ஸ்ரீ. உ. வே. ஆசார்யஸ்வாமிகள் பதரிகாச்ரமயாத்திரை யெழுந்தருளியிருப்பதால் தற்காலம் ஸ்வாமிகளின் விலாசம் எனக்குத் தெரியாததால் இதை உங்களுக்கு எழுதுகிறேன். ஸாத்யமானல் இந்த சிறுவிண்ணப்பத்தை அடுத்த ஸ்ரீராமாநுஜனில் பிரசுரம் செய்ய ஏற்பாடு செய்யவேணும். ஷோடசாத்யாயி புஸ்தகம் அடியேனுக்கு பத்திராதிபர் அனுப்பியுள்ளார். படித்தேன். நேராகவும் மறைவாகவும் அவர் வர்ஷித்திருக்கிற கடுஞ்சொற்களின் குவியலைப் படித்தேன், ஆராயப்புகுந்தேன். அவர் வெளியிட்ட பரந்தாஹஸ்யத்தை V. P. மூலமாகத்தருவித்து அதையும் படித்தேன். இரண்டு முகவுரைகளையும் 44-ம் பக்கம் குறிப்பையும் கவனித்தேன். இவைகளைப் பார்க்கவே அப்புஸ்தகம் தருவிக்கப்பட்டது. அடியேனுக்குத் தோன்றினது சரியோ தப்போ, அந்தக்கரண சுத்தியுடன் உலகுக்கு இதை உணர்த்துகிறேன். "கி. ஸ்ரீநிவாஸய்யங்காரவர்களால் பரிசோதிக்கப்பட்டு" என்று கண்டிருப்பதில் ஸ்ரீஸ்வாமிகளின் ஸம்பந்தத்தை அடியோடு விலக்கியது மிகவும் தப்பு. K. ஸ்ரீநிவாஸய்யங்கார் பதிப்பாசிரியர் என்ற ஸ்தானத்தில் மாத்திரமே நின்றிருக்கவேண்டும். அவர் அதிகப்படியான கியாதிகளுக்கு ஆசைப்பட்டு மிகவும் அநாவச்யகமாக பாகவதாபசாரத்தில் தலை நின்றுவிட்டார். இதைத் தெரிவிப்பதற்காக எனக்கும் வேண்டிய ஸம்பாவனைகள் செய்யவே போகிறார். அதற்காக நான் சிரமப்படமாட்டேன். உண்மையை உலகுக்குத் தெரிவிக்கவேண்டியது என்போல்வாருடைய கடமை. ஷோடசாத்யாயியுடன் சூட் கோட்டிசும் வெளியிட்டிருப்பது ஓர் கூத்து என்றே சொல்லுவேன் இவருக்கு ஒரு டாமேஜும் தெரியவில்லையே. ஸ்வாமிக்கு இவர் செய்திருக்கும் அக்ரமம் கணக்கில் அடங்காதவையே. சுவாமிகள் அவைகளில் கொஞ்சமும் கண்செலுத்தாமல் அடியேனைப்போன்ற சாதகபக்ஷிகள் எதிர்பார்க்கும் விஷயங்களுக்கு மாத்திரம் மதுரமான பதில் அமுதமொழிகளை அருளிச்செய்து ஸ்ரீ வைஷ்ணவவுலகைக் குளிரச் செய்தருளப் போகிறார்களென்று நம்பியிருக்கிறேன்.

இங்கே, உலகம் போற்றும் காரப்பங்காடு சிங்கப்பெருமாள் சுவாமி, தற்காலம் திருப்பதி சின்ன ஜீயர் பதவியை அலங்கரித்திருக்கின்ற மஹாவித்வான் ஸாது. ராமாநுஜாசார்ய ஸ்வாமி போன்ற பெரியார்களிடம் காலக்ஷேபம் கேட்ட மஹான்கள் பலர் உண்டு. அவர்களில் ஒருவரும் K. ஸ்ரீநிவாஸய்யங்காருடைய விஷய விசாரத்தை நம்பவில்லை. தத்வத்ரய வியாக்கியானத்திலுள்ள விசதவாக் சிகாமணிகளின் ஸ்ரீ ஸூக்தியை ஷோடசாத்யாயியில் விபரீதமாக்கி யிருப்பதற்கு வித்வான்கள் வருந்துகிறார்கள். அது ஸரிதானென்று நிரூபணம் செய்ய எந்த வித்வான் துணிந்து வெளிவருவாரோ, அதுதான் பார்க்கவேண்டும்.

அடியேன்,

**R. நரஸிம்ஹன் (வக்கீல், மதுரை.)**

ஸ்ரீ:

ஸ்ரீமத் பரம ஹம்ஸேத்யாதி. திருமலை திருப்பதி

# சின்னஜீயர் ஸ்வாமியின் திவ்ய ஸ்ரீமுகம்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



ஸ்ரீமத் வரவரமுநயே நம:.

நம்முடைய ஸத்ஸம்ப்ரதாயத்தில் ஊற்றமுள்ள மஹான்களுக்கு அடியேன் இதனால் விஜ்ஞாபிப்பது :—

ஸ்ரீகாஞ்சி. பிரதிவாதிபயங்கரம் ஸ்வாமி சிலமாதங்களுக்கு முன் வெளியிட்டருளின ஆச்சான்பிள்ளை யஷ்டாத்யாயி யென்னும் ஸ்ரீகோசத்தைப் பற்றி அடியேனுடைய அக்ருத்ரிமமான அபிப்ராயத்தை முன்னமே விஜ்ஞாபித்துக்கொண்டேன். அதன்மேல் ஏதேனும் பிரதிவாதங்கள் தோன்றினலும் அதைப் பொருள்படுத்தி ஸ்வாமி ஒன்றுமே யெழுதக்கூடாதென்றே அடியேன் ப்ரார்த்தித்திருந்தேன். வ்ருதாவான தூஷணைகள் வெளிவருமே யொழிய விஷயமென்பது ஈஷத்தும் வெளிவராதென்கிற திடமான எண்ணத்தினுல் தான் அடியேன் அப்படி ப்ரார்த்தித்தது. எண்ணினபடியே எதிர்வாத புஸ்தகம் வெளிவந்தது........ஸ்ரீகாஞ்சி ஸ்வாமி பஞ்வடீ க்ஷேத்ரத்திலிருந்து முப்பத்திரண்டு மொழிமாலை, ஸாது ஸாத்விக ஸம்வாதம் என்கிற இரண்டு விஷயங்களை யெழுதி கையெழுத்துப் பிரதியாகவே அடியேனுக்கனுப்பி, இவை யுக்தமாகத் திருவுள்ளத்தில் பட்டால் அச்சுக்கு நியமிப்பது என்று மெழுதியிருந்தார். இரண்டையும் பூர்த்தியாக வாசித்துப் பார்த்ததில் விஷயங்கள் யாவும் மிகவும் ஸம்ப்ரதிபந்நங்களாயும் ஸாத்விக போக்யங்களாயும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அவச்யஜ்ஞாதவ்யங்களாயும் தோன்றினபடியால் ஸ்ரீவைஷ்ணவ மஹாநிதி யென்று திருநாமஞ்சாத்தி, ஸ்வாமி தெரிவித்திருந்தபடி அச்சுக்கும் அனுப்பலாயிற்று. விவாத விஷயங்களில் நோக்கில்லாதவர்களும் இதினுடைய போக்யதையை அவச்யம் அனுபவிக்கவேணு மென்பது அடியேனுடைய அவா.

ஸ்ரீராமாநுஜ. சின்ன ஜீயர், திருப்பதி.




ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானர் ஜீயர் திருவடிகளே சரணம்.

# முப்பத்திரண்டு மொழிமாலை.

(ப்ர—அ.)

மன்னு மணவாள மாமுனிவன் மாமலர்த்தாள்
என்னுடைய நற்செல்வ மென்றிசையும்—துன்னுபுக
ழாரியர்கள் தாளை யனவரத மேத்துதலாங்
காரியமே நந்தமக்குக் கண்.

முப்பத்திரண்டு மொழிமாலை யென்றிட்டுச்
செப்பஞ் செழிக்கச் சிறந்துரைக்கேன்—துப்புடையார்
கண்ணாரக் கண்டுகந்துங் காதாரக் கேட்டுகந்தும்
திண்ணார வோர்வார் தெரிந்து.

1. ஒன்றுபேசினுலு மெழுதினுலும் அது உலகம் உகந்து ஏற்கும்படியும் நீடூழி நின்று புகழ்பெறும்படியும் அமையவேணும். மானிடர்க்குப் பரஸ்பரம் மாச்சர்யம் மீதூர்ந்து நிந்தைகளைப் பொழிந்துகொள்ளுதல் இவ்விருள்தருமா ஞானத்திற்கு மிகவு மேற்ற இயல்பாம். அப்படிப்பட்ட நிந்தை மலிவிந்தைகளைப் பத்திரிகைகளிலும் புத்தகங் களிலும் பரவவிடுவதனுல் சில பாமரர்கள் களிக்கலாமத்தனை. பண்டிதர்களும் பெரியாரும் மிகவுமருவருக்கும்படியான அத்தகைய நிந்தைகளுக்கு அடியேன்பால் ஈஷத்தும் எதி ரொலி தோன்றுதபடிக்கு பகவத்பாகவத க்ருபாகடாக்ஷத்தைப் பிரார்த்திக்கின்றேன்.

2. அடியேனை நோக்கிப் பொய்யனென்றும் வஞ்சகனென்றும் இனைய ஸத்கார ஸூக்திகளைப் பெரியார் எவ்வளவு அநுக்ரஹித்தாலும் அதில் இறையும் வெருப்போ வெகுளியோ விளையாது. ஸ்ரீராம ப்ராவண்யமே வடிவெடுத்த பரதாழ்வான் விஷயத்தில் குஹப்பெருமாளும் பரத்வாஜமுனிவரும் இளைய பெருமாளும் பேசினவை ஸ்ரீராமாயண ப்ரஸித்தம். அவற்றால் அப்பரதனுடைய புகழ்ப் பெருமைக்கு என்ன மாசு வந்திட்டது. * தாமேவ இக்ஷ்வாகு நாதஸ்ய பரதஸ்ய கதாம் குரு * என்று சக்ரவர்த்தி திருமகனர் இடைவிடாது வாய்வெருவும்படியன்றோ அமைந்தது அவன்றன் பெரும்புகழ்.

3. பரந்த ரஹஸ்ய மருளிச்செய்த ஆசிரியரின் திருநாமத்தை மணவாளமாமுனி களின் திவ்ய ஸூக்திகளைச்கொண்டு நிஷ்கர்ஷிக்கவேண்டிய தொன்றே நல்லார்க்குற்ற நற் பணி. 1. மாமுனிகளுக்கு முற்பட்ட ஆசிரியர்களின் திருவாக்கு, 2. பிற்பட்டவர்களின் திருவாக்கு, 3. மாமுனிகளின் திருவாக்கு—என மூன்றுவகுப்பாக்கி முதலிரண்டு வகுப்பு களைத் தள்ளி மூன்றுவது வகுப்பொன்றையே நாம் முக்கியமாகக் கொண்டோம்; இதற் குக் காரணமும் விரியவுரைத்தோம் பண்டே; மீண்டும் சிறிது நினைப்பூட்டுகிறோம்; சிறிய வாச்சான்பிள்ளை தோன்றுதகாலத்தில் (பெரிய) என்னும் விசேஷணத்திற்கு விசேஷ ப்ரயோ ஜனமில்லாமையாலே முற்பட்டவர்கள் ஆச்சாபிள்ளையென்றே சொல்லிப் போந்தாலும் எழுதிப்போந்தாலும் அதனுல் விவாதாஸ்பத விஷயத்தில் ஒரு நிர்ணயம் பெற இயலாது. பிற்பட்டவர்கள் இருள் தயக்குமயக்குகளில் நம்மோடொத்தவர்களே யாதலால் அன்ன வர்களது வாக்குக்களைக்கொண்டும் நாம் ஒரு நிஷ்கர்ஷம் பெற வழியில்லை. இப்படியன் றிக்கே மணவாளமாமுனிகளின் திருவாக்கு எவ்விதமான ஸந்தேஹ விபர்யயங்களுக்கும் ஈஷத்தும் ஆஸ்பதமன்றிக்கே தெள்ளறிவை யூட்டத் தோன்றியதாதலால் ப்ரக்ருத விஷ யத்தில் அஃதொன்றே நமக்குத் தஞ்சம்.

4. பரந்த ரஹஸ்யம் ஆச்சான்பிள்ளை யருளிச்செய்ததே யன்றிப் பெரியவாச்சான் பிள்ளையருளிச் செய்ததன்று என்பதை அடியேன் பலபல சான்றுகளால் தெரிந்துகொண்டே னாயினும் அவற்றுள் ஒன்றேயொன்றுதான் தலைமைபெற்றுளது. அதைத்தான் அஷ்டாத் யாயிக்கு ஆருயிராக அடியே னெடுத்துக் காட்டியுமிருப்பது. மற்றவற்றில் விசாரங்களை அடியோடு மறந்திட்டு இஃதொன்றில் மாத்திரம் முந்துற விசாரம் செய்வோம். இதில் அடியேன் மருள்கொண்டவனென்று மத்யஸ்தர்களான மஹநீயர்கள் கூறிவிடுவரேல், வேறு பல ப்ரமாணங்கள் அடியேனுக்கு எவ்வளவு ஸாதகங்களா யிருந்தாலும் அவற்றை யெடுத் துப் பேசுவது தவிர்ந்து கைகூப்பி நிற்பேனென்பது திண்ணம். மணவாளமாமுனிகளின் திவ்ய க்ரந்தங்களைத் திருவரங்கம் பெரியகோயில் ஸ்ரீபுல்லிபுத்தூர் வானமாமலை ஆழ்வார் திருநகரி திருவாலி திருநகரி முதலான திவ்யதேசங்களில் அந்நாள்தொடங்கி இந்நாள் வரையில் ஸத்ஸம்ப்ரதாய பரம்பரையாக ப்ரவசநம் செய்துபோரும் பெரியார் பலர் எழுந் தருளியிருக்கின்றார்களன்றோ. அவர்கள் பரந்த ரஹஸ்யத்தைப் பற்றின விசாரத்தில் சிறி தும் ப்ரவேசிக்கவேண்டா; அடியே னெடுத்துக்காட்டும் மணவாளமாமுனிகளின் திவ்ய ஸ்ரீஸூக்தி யொன்றைப் பெரியார்கள் எங்ஙனே நிர்வஹித்துப் போருவது என்பதொன்றி லேயே அவர்கள் கருத்தைச் செலுத்துக.

5. தத்வத்ரயத்தில் அசித்ப்ரகரணத்தில் "ஸ்பர்சதந்மாத்ரை தொடக்கமான" இத்யாதி சூர்ணைக்கு மணவாளமாமுனிகளின் வியாக்கியானம் மிகவிரிவானது. அங்குப் பிள்ளைலோகாசார்யர் (மூலத்தில்) சிலவிஷயங்கள் அவச்யம் அருளிச்செய்யவேண்டியிருந்தும் ஸம்க்ஷேபமாக அருளிச் செய்கிற க்ரமமாகையாலே அருளிச்செய்யாது விட்டிட்டா ரென்று மாமுனிகள் முடிக்கிறார். அங்கு அவச்யமருளிச் செய்யவேண்டிய விஷயங்கள் எவை என் பதை மாமுனிகள்தாமே விரிவாகக் காட்டியருளுகிறார். (அதையிங்குச் சிறிது விவரிக் கிறேன்.) பூதாதியென்று சொல்லப்படுகிற தாமஸாஹங்காரத்தில்நின்றும் சப்ததந்மாத்ரை பிறக்கும்; இதில்நின்றும் ஆகாசமும் ஸ்பர்சதந்மாத்ரையும் பிறக்கும்; இதில்நின்றும் வாயுவும் ரூபதந்மாத்ரையும் பிறக்கும்; இதில்நின்றும் தேஜஸ்ஸும் ரஸதந்மாத்ரையும் பிறக்கும்; இதில் நின்றும் அப்பும் கந்ததந்மாத்ரையும் பிறக்கும்; இதில் நின்றும் ப்ருதிவி பிறக்கும்—என்று முந்துற வொருவிதமாக உத்பத்திக்ரமத்தையருளிச் செய்து, உடனே "ஸ்பர்சதந்மாத்ரை தொடக்கமான நாலு தந்மாத்ரைகளும் ஆகாசந் தொடக்கமான நாலு பூதங்களுக்கும் கார்யமாய் வாயுதொடக்கமான நாலுபூதங்களுக்கும் காரணமாயிருக்கு மென்றுஞ் சொல்லுவர்கள்" என்று பக்ஷாந்தர மொன்றையும் அருளிச்செய்துவைத்தார் (மூலத்தில்) பிள்ளைலோகாசார்யர்.

6. இங்கு முக்கியமாக ஒருவிஷயம் சொல்லப்பட வேண்டும்; அதாவது—கார் யோத்பாதகங்களான தத்வங்களானவை தம்தம் காரண வஸ்துக்களினால் ஆவரணம் பெற்றே உத்பாதநம் செய்கின்றன என்பது சொல்லப்படவேண்டும். த்வக்கு இல்லாத பீஜத்திற்கு உத்பாதநசக்தி (அங்குரசக்தி) யில்லாதாப்போலே ஸ்வஸ்வகாரணாவரணமற்ற தத்வங்கள் உத்பாதநம் செய்யமாட்டா என்பது சாஸ்த்ரங்களின் கொள்கை.

7. இதை மணவாளமாமுனிகள் ப்ரமாண விசேஷங்களைக் கொண்டு நிரூபித்தருளி, முடிவில் "இது தத்வத்ரய விவரணத்தில் ஆச்சான் பிள்ளையருளிச்செய்த க்ரமம்" என்று அருளிச் செய்து, உடனே "இங்ஙனன்றிக்கே தத்வநிரூபணத்திலே ஜீயரருளிச் செய்தது மொரு க்ரமமுண்டு" என்று தொடங்கி விரிவாக வொருக்ரமத்தை யெடுத்துக்காட்டியருளி, இவ்விரண்டு க்ரமங்களுக்கும் அந்யோந்ய விரோதமில்லை யென்பதையும் உபபாதித் தருளினார்.

8. பிறகு நிகமனஞ் செய்தருளுமிடத்து, ஆச்சான் பிள்ளை தத்வத்ரயவிவரணத்தில் தந்மாத்ரத்துக்கு ஆவரணம் சொன்னாப்போலே அதன்விசேஷத்துக்கும் ஆவரணம் சொல்லி யிருக்கவேண்டும்; ஆனாலும் அதுவும் சொல்லப்பட்டதாகவே கொள்ளவேணும். அப்படி

கொள்ளப்படாவிடில் உத்பத்தியே ஸங்கதமாகாதன்றோ—ஆகையால் இரண்டுங் கொள்ள வேணும்—என்று ஒருவிஷயம் முடித்தருளினர்.

9. இதற்குமேல் வாதிகேஸரி ஜீயருடைய தத்வ நிரூபண க்ரந்தத்தில் இப்படி ஒன்றை உபலக்ஷண மர்யாதயா கொள்ளவேண்டாமல் இரண்டும் வ்பக்தமாகவே சொல்லப்பட்டிருப்பதாகத் தெரிவித்தருளி, ஆனாலும் அவருடைய திருவாக்கில் விசேஷத்தினுடைய உத்பத்திக்கு முன்னே தந்மாத்ரத்துக்கு ஆவரணம் கொள்ளவேணும்—என்றருளிச் செய்தார். ஆக, ஆச்சான் பிள்ளை க்ரந்தத்தையும் வாதிகேஸரி க்ரந்தத்தையுங்கொண்டு மாமுனிகள் நிகமனஞ் செய்தருளினது பூததந்மாத்ரஸ்ருஷ்டி சொல்லுகிற விந்த ஸ்தலத்தில் ஆவரணக்ரமமும் சொல்லியே யாகவேணுமென்று.

10. ஆனால் பிள்ளை லோகாசார்யர் மூலத்தில் ஆவரணக்ரம ப்ரஸ்தாவமே செய்தருளவில்லை. இது அநபேக்ஷிதமாகையாலே அருளிச் செய்யப்படவில்லை யென்று சிலர் எண்ணிவிடக்கூடுமென்று கருதிய மாமுனிகள் "இப்படி பூததந்மாத்ரஸ்ருஷ்டி சொல்லுகிறவிடத்திலே ஆவரணக்ரமம் வக்தவ்யமாயிருக்கச் செய்தேயும் அருளிச்செய்யா தொழிந்தது அபேக்ஷிதமல்லாமையன்று; ஸங்கோசேந உத்பத்திக்ரமத்தையருளிச் செய்தாரித்தனை" என்றெழுதியருளினர். சொல்லவேண்டியது அவச்யமாயிருந்தும் ஸங்க்ரஹருசியாலே சொல்லாது விட்டிட்டாரென்றபடி.

அதற்கடுத்த வாக்கியம்—

"பெரிய வாச்சான் பிள்ளையும் இப்படியிறே யருளிச்செய்தது" என்பதாம்.

ஸங்க்ரஹேண உத்பத்திக்ரமத்தைச் சொல்லுகையினாலேயே ஆவரணக்ரமத்தைச் சொல்லாது விட்ட பிள்ளைலோகாசாரியர்போலவே பெரிய வாச்சான் பிள்ளையும் அதைச் சொல்லாது விட்டிருக்கின்றார் என்பதே இதற்குப் பொருள். வேறுவகையான பொருள் ஸர்வாத்மநா அஸம்பாவிதம்.

11. இங்குப் பிறர் சொல்லும் பொருள் யாதெனில், கீழே ஆச்சான் பிள்ளை யென்கிற சொல்லினால் குறிக்கொள்ளப்பட்ட ஆசிரியரேதான் முடிவில் பெரியவாச்சான் பிள்ளை யென்ற சொல்லால் விளக்கப்பட்டாரென்று. இது ஒரு விதத்திலும் பொருந்தக் கூடியதன்று. ஆவரணக்ரமத்தைச் சொல்லியிருப்பவராக நன்கு நிரூபிக்கப்பட்ட ஆச்சான் பிள்ளை யானவர் தத்ப்ரஸ்தாவமும் செய்தருளாத பிள்ளை லோகாசார்யரோடு எப்படி ஸாம்யம் பெற முடியும்? இந்த ஸாம்யம் நெஞ்சிலும் நினைக்கமுடியாததன்றோ.

12. ஆச்சான் பிள்ளை ஆவரணக்ரமத்தின் ஒரு பாகத்தைச் சொன்னரேயொழிய மற்றொருபாகத்தைச் சொல்லவில்லை யென்பது தெளிவாக விளங்குகிறது என்று இதை உபஷ்டம்பகமாகக் கொண்டு பிறர் எழுதுவது சாஸ்த்ரஜ்ஞ ஸரணிக்குச் சேராது. சாஸ்த்ர வாஸனை யில்லாதவர்கள் இதை அவகாஹித்துக் கொள்வதுமரிது. முன்னே மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்தி எங்ஙனே யுள்ளதென்று பார்க்கவேணும்; "(ஆச்சான் பிள்ளை) தந்மாத்ரத்துக்கு ஆவரணம் சொன்னதுபோலே தத்விசேஷத்துக்கு ஆவரணம் சொல்லிற்றில்லையே யாகிலும் அது உபலக்ஷணமாமித்தனை;..........இரண்டுங் கொள்ள வேணும்" என்று மாமுனிகள் அருளிச் செய்துள்ளார். "உபலக்ஷணமாமித்தனை" என்றதன் தேறுதலை சாஸ்த்ரஜ்ஞர்களே யன்றோ அறியமுடியும்.

13. 'ஆச்சான் பிள்ளை மற்றொரு பாகத்தையும் சொல்லாது விட்டவரல்லர்; சொல்லியே யுள்ளார்' என்பதன்றோ மாமுனிகளின் முடிவு. இவ்விதமான முடிவு பிள்ளை லோகாசார்யருடைய மூல ஸ்ரீஸூக்தி விஷயத்தில் கிடையாதே. சொல்லவேண்டிய ஆவரணக்ரமத்தை அடியோடு ப்ரஸ்தாவியாத லோகாசார்யருக்கும் அதைப் பூர்த்தியாகச் சொன்னவராகவே நிகமிக்கப் பெற்ற ஆச்சான் பிள்ளைக்கும் ஸாம்யம் ஒரு படியாலும்

பொருந்தாது. "பிள்ளை லோகாசார்யர் ஸங்கோசேந உத்பத்தி க்ரமத்தையருளிச் செய்தாரித்தனை" என்றிவ்விதமாகப் பங்க்தியை மாமுனிகள் அருளாமல் "உபலக்ஷணமர்யாதயா இங்கு ஆவரணமும் சொல்லிற்றாகக் கொள்ளக்கடவது" என்று இங்ஙனே பங்க்தியருளிச் செய்திருந்தாராகில் ஆச்சான் பிள்ளைக்கும் லோகாசார்யர்க்கும் இவ்விஷயத்தில் ஒருவாறு ஸாம்யம் நெஞ்சிலாவது நினைக்கமுடியும். அப்போதும் "பெரியவாச்சான் பிள்ளையு மிப்படியிறே அருளிச் செய்தது" என்கிற வாக்யத்திற்கு ஸமந்வய லேசமுங் கிடையாது பிறர் கூறும் பொருளில். கீழ்ச்சொன்ன ஆச்சான் பிள்ளையைப் பற்றியே இது சொல்வதானால் அவருடைய நிரூபண விஸ்தாரத்தைக் கீழே விவரித்திருக்கவே வேண்டா.

14. தவிரவும், பெரியவாச்சான் பிள்ளையையே ஆச்சான் பிள்ளையென்று மாமுனிகள் திருவுள்ளம்பற்றி ஸ்ரீஸூக்திஸாதிப்பவராகில், பெரியவாச்சான் பிள்ளை என்கிற ஸவிசேஷநிர்தேசத்தை முந்துறமுன்னம் செய்துவிட்டு ஆச்சான்பிள்ளையென்கிற நிர்விசேஷ நிர்தேசத்தைப் பின்னே பின்னே செய்தருளியிருப்பர். இதுதான் க்ராந்திகஸரணி. அதே ப்ரகாரத்தில் நடுவில்திருவீதிப்பிள்ளைபட்டருடைய ஸ்ரீஸூக்திகளைப்பலகால் உதாஹரித்தருளாநின்ற மாமுனிகள் முதன்முதலான நிர்தேசத்தில் 'நடுவில் திருவீதிப்பிள்ளைபட்டர்' என்று ஸவிசேஷமாக எழுதியருளி, பின்னே பின்னே 'பட்டர்' என்று மாத்திரம் நிர்விசேஷமாக எழுதியுள்ளபடியைப் பல்காலுங்காணா நின்றோம்.

15. க்ராந்திகஸரணியென்று கொண்டு தெரிவிக்கப்படும் இவ்விஷயம் நிற்க. அர்த்தஸ்திதியை நோக்கிச் சொல்லுமிடத்தும் "பெரியவாச்சான் பிள்ளையுமிப்படியிறே யருளிச் செய்தது" என்கிற பங்க்திக்குப் பிறர் ஏறிடும் பொருள் சிறிதும் ஏறமாட்டாததன்றோ. ஏறும், ஏறாது என்பதை நிர்ணயிக்கவேண்டிய பொறுப்பு வாதிப்ரதிவாதிகளுடையதன்று, மத்யஸ்தமஹநீயர்களுடையதேயாகும். உபய வேதாந்தக்ரந்த காலக்ஷேபப்ரவணர்களான ப்ரவீணர்களுக்கே இந்தப்பொறுப்பை நாம்விட்டிருக்கிறோம். அப்படிப்பட்ட மஹநீயர்கள் ஒருமிடறாகத் தம் தம் திருவுள்ளத்தை வெளியிட்டாயிற்று. இனி, "மாமுனிகளின் திருவுள்ளம் இப்படியன்று, நீ கொண்டது பிசகு" என்று நிரூபிக்கவல்ல பெரியாருளரேல் நன்கு நிரூபித்தருளி அடியேனைத்தெளிவிக்கலாம். இந்தப் பொறுப்பு மத்யஸ்தமஹநீயர்களுக்கே விடப்பட்டிருக்கின்றதென்பதை புந: புநரபி விஜ்ஞாபயே.

16. இதற்குமேல், பெரியவாச்சான் பிள்ளை அப்படி ஸம்க்ஷேபேண அருளிச் செய்தது இன்னவிடத்தில் என்பதை மாமுனிகள் காட்டியருளாதது குறையன்றோ என்கிற வாதம் தோன்றியுள்ளது. கேண்மின்; அவ்விடத்திலேயே (103) "ஸ்பர்சதந்மாத்ரை தொடக்கமான" என்று தொடங்கியுள்ள சூர்ணையின் வியாக்கியானத்தில் "...ஸ்ரீபராசர பகவானுக்கு விவக்ஷிதமென்று நினைத்து வ்யாக்யாதாக்கள் வ்யாக்யானம் பண்ணி வைக்கையாலே" என்று மாமுனிகளின் ஸூக்தி காண்கிறோம். எந்த வ்யாக்யாதா என்பதை தெளிவிக்கவில்லையே யென்று குறைகூறலாகுமே? தெரிந்தவர்களுக்கு எளிதாகத் தெரியக்கூடியதேயென்கிற திருவுள்ளத்தினால் மாமுனிகளும் விசதப்படுத்தியருளாமல் விட்டிடு மிடங்களுமுண்டே.

17. முமுக்ஷுப்படியில் "அத்ர பகவத்ஸேநாபதிமிச்ரர் வாக்யம்" என்ற விடத்து வியாக்கியானத்தில், அந்த ஸேநாபதிஜீயர் யார்? எக்காலத்திலிருந்தவர்? யார் திருவடிகளில் ஆச்ரயித்தவர்? அந்த வாக்கியம் யாரை நோக்கி எப்போது அவர் ஸாதித்தது? என்று இவற்றை விசதீகரித்தருளவில்லையே யென்று குறைநினைக்கவொண்ணுமோ? தத்வத்ரயத்திலேயே (70) "*ஆச்ரயாதந்யதோ வ்ருத்தே: ஆச்ரயேண ஸமந்வயாத், த்ரவ்யத்வஞ்ச குணத்வஞ்ச ஜ்ஞாநஸ்யைவோபபத்யதே* என்றிறே ஆளவந்தார் அருளிச்செய்தது" என்றருளியுள்ளார் மாமுனிகள். இன்ன க்ரந்தத்திலென்பதைக் காட்டியருளவில்லையே யென்று குறை கூறவொண்ணுமோ ?

அன்றியும், "கட்டிப்பொன்போலே சேஷத்வம், பணிப்பொன் போலே பாரதந்த்ர்யம் என்னக்கடவதிறே!" என்றும், "ஆனந்தம் அவன் ப்ரீதியைத் தளிரெழுப்ப என்கிறபடியே" என்றும் இப்படி சில ஸ்ரீஸூக்திகளும் மாமுனிகளின் வியாக்கியானங்களில் காண்கின்றன; இந்த மேற்கோள்கள் எவ்விடத்திலுள்ளனவென்பது விசதவாக் சிகாமணிகளால் விசதீகரிக்கப்பட வில்லையேயென்று குறை கூறவொண்ணுமோ? அக்காலத்திலிருந்த ப்ரஸித்தி விசேஷங்களைப்பற்ற விசதீகரணம் வேண்டாவென்று விடுத்தருள்வதுண்டு என்பதுதான் நன்கு தெளிவாகிறது.

19. மிகமுக்கியமாக வொன்று தெரிவிப்போமிங்கு; மாமுனிகள் பட்டருடைய ஸ்ரீஸூக்திகளையெடுத்தருளிச் செய்யுமிடங்களிலெல்லாம் "என்று பட்டரருளிச் செய்தார்" "என்று பட்டராலுமருளிச் செய்யப்பட்டது" என்று அருள்வதே இயல்பு. ஓரிடத்தில் மாத்திரம் "பெரியபட்டர் அருளிச்செய்தார்" என்கிறார். எங்கே யென்னில், ஸ்ரீவசநபூஷணத்தில் ஐந்தாவது சூர்ணையின் வியாக்கியானத்தில்—"பெரியபட்டரும் ஸ்ரீஸஹஸ்ரநாமபாஷ்யோபோத்காதத்திலே * ஸ்ரீராமாயணவத் மஹாபாரதம் சரணம் * என்றருளிச் செய்தாரிறே" என்றுள்ளது காணலாம்; மற்றவிடங்களிலெல்லாம் பட்டர் பட்ட ரென்றே அருளிச் செய்து போந்தவர் இவ்வோரிடத்தில் மாத்திரம் பெரியபட்டர் என்றருளிச் செய்வானேன்? என்று சங்கை தோன்றினால், அங்கேயே முன் பங்க்தியை ஸேவித்தால் செவ்வனே தெளிவு பிறக்கும். "இதுவும் நடுவில் திருவீதிப் பிள்ளை பட்டர்தாமே யருளிச் செய்தார்" என்பது அந்த முன்னே யுள்ள ஸ்ரீஸூக்தி; உடனே ஸ்ரீபராசர பட்டருடைய ஸ்ரீஸூக்தியையும் எடுத்துக்காட்ட நேர்ந்தது; முன்னே காட்டிய பட்டரைக் காட்டிலும் வேறுபாடு தோன்றுவதற்காகவே "பெரிய பட்டரும்" என்று அருளிச் செயலாயிற்று. இது தவிர வேறு காரணம் கிடையாது.

20. மணவாள மாமுனிகளருளிச் செய்த நான்கு ரஹஸ்யங்களின் வியாக்கியானங்களுக்குள் பெரியவாச்சான் பிள்ளை யென்று ப்ரயோகம் செய்தருளியுள்ள விடம் ஒன்றே யொன்றுதான். அதுதான் கீழே நிரூபித்தவிடம். அங்கு, ஆச்சான் பிள்ளை ஆச்சான் பிள்ளை யென்றே முன்னே அருளிச் செய்து வந்தபடியாலே அந்த ஆசிரியரைக் காட்டிலும் வேறுபாடு தெரிவிப்பதற்காகவே உடனே பெரிய வாச்சான் பிள்ளை யென்று பணித்தது. இவ்வளவு ஆராய்ச்சியின்றிக்கே, 'முன்னே ஆச்சான் பிள்ளை யென்று நிர்தேசித்தவரையேதான் பின்னே பெரிய வாச்சான் பிள்ளை யென்று நிர்தேசித்தது' என்று கூறுவது ஸதாசார்ய ஸேவாரஸிகர்களுக்கு ஏற்குமோ வென்பதை விவேகிகள் விமர்சிப்பது.

21. இந்த சர்ச்சையிலீடுபட்டபோது, மணவாளமாமுனிகளின் வியாக்கியானக்ரந்தங்களில் ஆளவந்தார் முதலான நம் பூர்வாசார்யர்களின் ப்ரஸ்தாவமும் அவர்களது பொன்னே போன்ற மொழிகளின் உதாஹரணமுமுள்ள விடங்களை யாவரும் கண்ணாடிபோல் காண்பதற்கு ஓர் உபாயம் செய்யவேணு மென்று தோன்றியதனால் மாமுனிவன் மேற்கோள் விளக்கு என்கிற சிறுநூலைச் சேகரித்து வெளியிட்டுள்ளேன். அதனையுற்றுநோக்குவார்க்குப் பல விஷயங்கள் தெரியவரும். இப்படியே மற்றும்சில ஆசாரியர்களின் ஸ்ரீஸூக்திகளிலிருந்தும் மேற்கோள் விளக்கு அடைவே வெளியிடப்பெறும்.

22. அதுநிற்க. இப்போது வெளியிடப்பட்டுள்ள மாமுனிவன் மேற்கோள் விளக்கில் மநுஷ்யஸஹஜமான ப்ரமாதவசத்தினால் ஒன்றிரண்டு மேற்கோள் விடுபட்டிருக்கவுங் கூடும். கூடுமானவரை விடுபடாதபடி சேகரித்திருப்பதாகவே எண்ணம். பெரியார்கள் மாமுனிகளின் வியாக்கியான க்ரந்தங்களிலேயே நேராக அவகாஹித்துப் பரிசீலித்து, மாமுனிகள் ஆச்சான் பிள்ளையையும் பெரியவாச்சான் பிள்ளையையும் ஒரேவ்யக்தியாகத் திருவுள்ளம் பற்றியிருக்கிறாரா? தனிப்பட்ட வ்யக்தித்வமாகத் திருவுள்ளம்பற்றி யிருக்கிறாரா? என்பதை விவேகித்து வெளியிடுவது உலகுக்கு மஹோபகாரமாகும்.

23. பரந்தரஹஸ்யம் ஆச்சான் பிள்ளை யருளியதேயல்லது பெரியவாச்சான் பிள்ளை யருளியதன்று என்கிற ஸ்தாபனத்திற்கு உயிராகக் கொண்ட விஷயத்தை அடியேன் விசதமாக நிரூபித்தாயிற்று. இஃதொன்றையே பரமப்ரமாணமாகக் கொண்டிருக்கின்றேன். மற்றுள்ள ப்ரமாணங்களைப்பற்றி விசாரமேவேண்டா. இஃதொன்றில் பெரியார்களின் திருவுள்ளம் வேறாயிருந்தால் வெளிவரட்டும்.

24. பெரியவாச்சான் பிள்ளை யென்கிற சொல்லைச் சிலர் பேரியவாய்ச் சாண்பிள்ளை என்று கூறி, 'சாண்பிள்ளையாயிருந்தாலும் வாய்பெரியர்' என்று அர்த்தமுரைப் பதுண்டு; ஆனல் அது பண்டித கோஷ்டிகளில் பரிசுபெறாது; சிலபாமரர்க்கு ரஸ்யமாயிருக்கும். அப்பொருளையே நெஞ்சிற்கொண்ட பிறர், தத்வத்ரய வியாக்கியானத்தில் மாமுனிகள் ஆச்சான் பிள்ளையென்றே முன்னம் சொல்லிவந்து முடிவில் பெரியவாச்சான் பிள்ளையென்றது—'விரிவாகச் சொல்லுகிற அவரே சுருங்கச் சொன்னபோது லோகாசார்யர் சுருங்கச் சொன்னது அதிசயமன்று என்று காட்டுவதையே உள்ளுறையாகக் கொண்டது, இது மஹாமேதாவிகளுக்கே ஸூக்ஷ்மமாக அறியக் கூடிய விசேஷார்த்தம்' என்று கூறுவதன் பொருத்தத்தை ப்ராஜ்ஞர்களே பார்க்கவேணும். பேரிய என்கிறசொல் எதில் விசேஷணமாக அந்வயிக்கிறது? என்று கேட்டால் ஸமஞ்ஜஸமாக விடை கூறவேணுமே. அந்த விசேஷணமானது, திருமலை பெரியஜீயர்' என்பதுபோன்ற வ்யவஹாரங்களிற்போல் வ்யக்தியின் வேறுபாட்டை மாத்திரமே காட்டவந்ததேயல்லது வேறு எந்தவிசேஷத்தையும் காட்டவந்ததன்று. பட்டர் காலத்திலே நஞ்சீயர் பெரியஜீயரென்று வழங்கப்பட்டுவந்தாரென்று தேசிகனுடைய ரஹஸ்யத்ரயஸாரத்தினலறிகிறோம். மணவாளமாமுனிகள் பெரியஜீயரென்று வழங்கப்பட்டுவந்தாரென்பது ஸர்வஸம்ப்ரதிபந்நம். இந்த வ்யபதேசங்களில் பேரிய என்பது சிறியவொரு ஜீயரை வ்யாவர்த்திக்கு மத்தனையேயல்லது வேறோர் பொருட்டன்று. ஆகவே இங்குப் பிறருடைய விசேஷார்த்த கல்பநம் ஆகாசதாண்டவமென்று முடிந்தது.

25. அஷ்டாத்யாயியில் (பாரா 8-ல்) "உபதேசரத்தினமாலையில் திருநாமப்ரஸித்தி தெரிவதற்காக மூன்றுபாசுரங்களில் பெரிய வாச்சான்பிள்ளை யென்று பெயரையிட்டுக் கூறினாராயினும் மற்றவிடங்களில்......" என்று அடியேனெழுதியிருப்பதனைக் கண்ட பிறர்—"உபதேசரத்தினமாலையில் திருநாமப்ரஸித்தி தெரிவதற்காக ஓரிடத்தில் பெயரைச் சொல்லிக் குறித்தால் போதுமே; மற்ற இரண்டிடங்களிலும் பூர்வர்களென்றே மாமுனிகள் ஏன் குறிக்கவில்லை யென்று கேட்டால் என்னபதில் சொல்லமுடியும்?" என்கிறார்கள். இது உபதேசரத்தினமாலையைக் கனவிலுங் காணாதாருடைய அட்டஹாஸமன்றோ அங்குள்ள மூன்று பாசுரங்களிலும் பெரியவாச்சான் பிள்ளையென்ற பெயரிட்டுச் சொல்லியாகவேண்டிய நிர்ப்பந்தமிருப்பதை நிரூபிக்கக் கேண்மின்; * பிள்ளான் நஞ்சீயர் பெரியவாச்சான்பிள்ளை தெள்ளார் வடக்குத் திருவீதிப்பிள்ளை, மணவாளயோகி திருவாய்மொழியைக் காத்த குணவாளரென்று நெஞ்சேகூறு." என்பது முதலிடம். திருவாய்மொழிக்கு வியாக்கியானஞ் செய்தருளின ஆசிரியர்களை யெல்லாம் பெயரிட்டுக்காட்டுகிற பாசுரமிதுவாகையால் இதில் பெரியவாச்சான்பிள்ளை யென்றே சொல்லியாகவேண்டிற்று.

26 பிறகு, * நம்பிள்ளை தம்முடைய நல்லநுளாலேவியிடப், பின் பெரியவாச்சான் பிள்ளையதனல்......இருபத்தினலாயிரம் * என்றது இரண்டாவதிடம். இன்ன பெயருள்ள வியாக்கியானத்தை இயற்றினரென்று விவரித்துவருகிற ப்ரகரணமாகையாலே இங்கும் பெரியவாச்சான்பிள்ளை யென்றே சொல்லியாகவேண்டிற்று. இங்கு 'பூர்வர்கள் இட்டது இருபத்தினலாயிரம்' என்றால் அந்வயிக்குமோ?

27. பிறகு * பெரியவாச்சான்பிள்ளை பின்புள்ளவைக்குந் தெரிய வியாக்கியைகள் செய்வால் * என்பது மூன்றாவதான இடம். திருவாய்மொழி தவிர்ந்த மற்ற மூவாயிரத்திற்கும் பெரியவாச்சான்பிள்ளை தாம் வியாக்கியானம் செய்தருளினரென்று சொல்லுகிற விடமிதுவாதலால் இங்கும் பெரியவாச்சான்பிள்ளையென்றே சொல்லியாகவேண்டிற்று.

இங்கு 'பின்புள்ளவைக்கும் பூர்வர்கள் வியாக்கியான மிட்டார்' என்றால் அந்வயிக்குமோ? ஆகவே மூவிடங்களிலும் பெரியவாச்சான்பிள்ளை யென்று பெயரையிட்டுச் சொல்லியே யாகவேண்டிய அவசியத்தை நிரூபித்தோமானோம்.

28. 'பரந்த ரஹஸ்யம் பெரியவாச்சான் பிள்ளையின் க்ருதியன்று' என்று நாம் ஸித்தாந்தம் செய்வதுபோல, 'பெரியாழ்வார் திருமொழி ஸ்வாபதேச வியாக்கியானம் திருவாய்மொழிப்பிள்ளை பணித்ததன்று' என்று ஸித்தாந்தம் செய்திருக்கவில்லை. நெஞ்சிலே தோன்றிய ஆராய்ச்சியை உபபத்திகளுடன் வெளியிட்டவத்தனை. "இப்படித்தானென்று ஸ்தாபிக்கவேணுமென்று நமக்கோரு ஆக்ரஹமில்லை" என்றே எழுதியிருக்கிறேன். * மாற்றுத்தாய் சென்று * (3—9—4.) என்ற பெரியாழ்வார் திருமொழிப்பாசுரத்தின் மாமுனிகளது வியாக்கியானத்தில் "பிள்ளை யிட்டருளின வியாக்கியான ப்ரக்ரியை" என்றுள்ள பங்க்தியை நாம் மறைத்துவிட்டதாகப் பிறர் கூறுகின்றனர். "P. B. A. ஸ்வாமி.....பங்க்திகளைக் காணக் கண்ணிட்டிருப்பதன் மருமத்தை விவேகிகள் உணர்ந்துகொள்வார்கள்" என்றும், "மாமுனிகளுக்கு முன்னால் திருவாய்மொழிப்பிள்ளை வியாக்கியான மருளவில்லை யென்பதை ஸ்தாபிப்பதற்காக உள்ளபங்க்திகளை மறைத்திருப்பதற்கும் காரணமென்ன........." என்றும் எழுதியுள்ள பிறர்க்கு ப்ராமாணிகத்வம் எவ்வளவுள்ளது என்பதை யாவரும் உணரலாம்.

29. * பச்யதி பரேஷு தோஷாந் அஸதோபி, ஸதோபி நைவ குணாந், விபரீதமிதம் ஸ்வஸ்மிந் மஹிமா மோஹாஞ்ஜநஸ்யைஷ: * என்ற ஸுபாஷிதம் இங்கு ஸ்மரிக்கத்தகுதியுண்டு. திருவாய்மொழிப் பிள்ளை வியாக்கியான விஷயமாக நாம் பன்னிரு திங்களநுபவ நூலில் 124, 125 பக்கங்களில் விரிவாக எழுதியிருந்ததைச் சுருக்கி அஷ்டாத்யாயியில் மூன்றுமத்யாயத்தில் எழுதினோம். "பிள்ளை யிட்டருளின வியாக்கியான ப்ரக்ரியை" என்கிற மாமுனிகளின் ஸ்ரீஸூக்தியை ஸ்பஷ்டமாக எடுத்துக்காட்டி அதனால் விளைபக்கூடிய சங்கையையும் தத்பரிஹாரத்தையும் முதனூலில் விரிவாக எழுதியே வெளியிட்டிருக்கிறோம்.

30. அது காணமலோ, கண்டும் குறைகூற விரும்பியோ பிறர் எழுதியுள்ள அகாண்டதாண்டவ வார்த்தைகளினால், நம்முடைய நூல்களில் ஆழ அவகாஹித்து உண்மையுணர்ந்துள்ள விவேகிகள் ஒருபோதும் கலங்கார்கள்.

31. நம்பிள்ளையினுடைய திருவடிகளுள் பெரிய வாச்சான் பிள்ளைக்குத் தலைமையா? வடக்குத் திருவீதிப் பிள்ளைக்குத் தலைமையா? மணவாள மாமுனிகள் பெரியாழ்வார் திருமொழி வியாக்கியானம் அருளிச்செய்தது கண்டு அன்பர்கள் கூறின ப்ரசம்ஸோக்தியின் ஸ்வரூபம் எப்படிப்பட்டது? என்பது முதலான ப்ராஸங்கிக விஷயங்களுக்கெல்லாம் ப்ராமாணிக ஹ்ருதயங்கமமான உண்மையுரைகள் ஸம்வாத வியாஸமுகமாக வெளிவரும்.

32. பஞ்ச வடியென்னும் பாங்காம் தவவனத்தில்
மஞ்சுலவு சோலைதனில் வாழ்ந்திருந்து,—நெஞ்சுருகும்
நல்லார்க் குணவாக நானிதனை நல்கினேன்
அல்லாதார் தீதெனினென் ஞம்.

ஸ்ரீ காஞ்சி அண்ணங்கராசாரியருடைய

விஜ்ஞாபனமாகிய

**முப்பத்திரண்டு மொழிமாலை முற்றிற்று.**

---

ஸ்ரீ:

# ஸாது ஸாத்விக ஸம்வாதம்.

(ப்ர—அ.)

## —இரண்டு ஸத்புருஷர்களின் ஸம்பாஷணையில் பலபல அரும்பெரும் பொருள்கள் வெளிவருகின்றன—

ஸாது—ஸாத்விகஸ்வாமிந்! இன்று தேவரீரிடத்தில் பலஸந்தேஹ பரிஹாரங்கள் பெற விரும்பிவந்திருக்கின்றேன்; அவகாசமிருக்குமோ?

ஸாத்விகர்—அவகாச மில்லாமலென்ன? வேண்டிய அவகாசமுண்டு. "*போதயந்த: பரஸ்பரம்*" என்று கீதையில் சொன்ன கணக்கிலே போதுபோக்க நேர்ந்தால் பரமானந்தமன்றோ! கேள்; தெரிந்தவரையில் சொல்லுகிறேன்.

ஸாது—நம்பிள்ளை சிஷ்யர்களுக்குள் பெரியவாச்சான் பிள்ளைக்கு ப்ராதாந்யமா? வடக்குத் திருவீதிப் பிள்ளைக்கு ப்ராதாந்யமா? என்றொரு விசாரம் நேர்ந்திருக்கின்றது; இதில் தேவரீருடைய திருவுள்ள மெப்படி?

ஸாத்விகர்—இந்த சர்ச்சை முன்னமே என்காதில் விழுந்திருக்கிறது. இதில் பெரியோர்களின் திருவுள்ளத்தை உபபத்தியுடன் சொல்லுகேன் கேளாய். நமக்கு ஸமாச்ரயண பரம்பரையென்றும் க்ரந்த பரம்பரையென்றும் இரண்டு பரம்பரைகளுண்டு. ஸமாச்ரயண பரம்பரையில் வடக்குத் திருவீதிப்பிள்ளைக்கு ப்ராதாந்யமும், க்ரந்தபரம்பரையில் பெரியவாச்சான் பிள்ளைக்கு ப்ராதாந்யமும் ஸகல ஸஜ்ஜநஸம்மதம். ஓராண்வழியான ஆசார்யபரம்பரையை நாம் தினப்படி அநுஸந்திப்பது [அதாவது குருபரம்பரைத் தனியன்களைச் சொல்லிவருவது] ஸமாச்ரயண பரம்பரையை யொட்டியேயாம். க்ரந்த பரம்பரையைக்காட்டிலும் ஸமாச்ரயணபரம்பரையே முக்கியமானதென்று ஸத்ஸம்ப்ரதாயஸித்தாந்தம். ஸ்ரீவசநபூஷணத்தில் "நேரே ஆசார்யனென்பது ஸம்ஸாரநிவர்த்தகமான பெரிய திருமந்த்ரத்தை யுபதேசித்தவனே" என்றருளிச் செய்திருக்கையாலே பஞ்சஸம்ஸ்காரப்ரத குருபரம்பரையே சிறந்தது. மணவாளமாமுனிகளுக்கு ஆசார்யர் திருவாய்மொழிப்பிள்ளை; அவர்க்கு ஆசார்யர் பிள்ளை லோகாசார்யர்; அவர்க்கு ஆசார்யர் வடக்குத் திருவீதிப்பிள்ளை; அவர்க்கு ஆசார்யர் நம்பிள்ளை— என்றிப்படித்தான் நித்யாநுஸந்தேய குருபரம்பரையுள்ளது. வடக்குத்திருவீதிப்பிள்ளை போலவே பெரியவாச்சான் பிள்ளையும் நம்பிள்ளை திருவடிகளிலே ஆச்ரயித்தவராயிருந்தாலும், நாலாயிர திவ்யப்ரபந்தங்களுக்கும் வியாக்கியான மருளிச் செய்தவரென்கிற பெருமையை விசேஷித்துப் பெற்றவராயிருந்தாலும் ஆசார்யபரம்பரையிலே அடுத்தவராய் விளங்குகின்ற பிள்ளைலோகாசார்யர்க்கு அவர் ஆசார்யரல்லாமையாலும், அப்பெரியவாச்சான் பிள்ளையின் சிஷ்யரான வொருவரையிட்டு மேலே குருபரம்பரை நிகழாமையாலும் தொடர்சங்கிலியான ஆசார்யபரம்பரையிலே நம்பிள்ளைக்கும் பிள்ளைலோகாசார்யர்க்கும் இடையில் வடக்குத் திருவீதிப்பிள்ளைக்கு ஸ்தானம் ப்ராப்தமாயிருக்கின்றதேயன்றி பெரியவாச்சான் பிள்ளைக்கு ப்ராப்தமாகவில்லை. ஆளவந்தார் திருவடிகளிலே ஆச்ரயித்த பல மஹான்களும் உடையவர்க்கு அரியபெரிய உபதேசங்களைச் செய்தருளினவர்களாயிருந்தும், உடையவர்தாமும் பலகால் தேடியோடிவரும்படியான மிக்க பெருமையைப் பெற்றவர் திருக்கோட்டியூர் நம்பியாக இருந்தும், குருபரம்பரைத் தொடர்சங்கிலியில் திருக்கோட்டியூர்நம்பி திருமலைநம்பி திருமாலையாண்டான் முதலானோரில் ஒருவர்க்கும் ப்ரவேசமின்றிப் பெரியநம்பி யொருவர்க்கே யாயிற்று. என்னகாரணமிதற்கு? ஸ்வாமிக்குப் பஞ்சஸம்ஸ்காரமளித்தவர் இவரேயன்றோ.

நம்பிள்ளை திருவடிகளில் ஆச்ரயித்தவர்களுக்குள் பின்பழகிய பெருமாள் ஜீயர்க்குள்ள பெருமை வேறு ஒருவர்க்குமே கிடையாதென்பது மணவாள மாமுனிகளின் திருவுள்ளத்தினால் ஸித்தம். இது உபதேசரத்தினமாலையில் ஸ்பஷ்டமன்றோ! அப்படிப் பெருமை பெற்றவர்க்கு குருபரம்பரைத் தொடர் சங்கிலியில் ப்ரவேசம் விளையவில்லை; ஏனென்னில்; பிள்ளைலோகாசார்யர்க்கு அவர் ஆசார்யரல்லாமையினாலேயே. ஆக, குருபரம்பரையில் போற்றுதற்குரித்தாக நம்பிள்ளைக்கு ப்ரதான சிஷ்யர் வடக்குத் திருவீதிப்பிள்ளையேயாயினர். பெரியவாச்சான் பிள்ளை நாலாயிரத்திற்கும் வியாக்கியான மருளிச் செய்திருந்தாலுங்கூட "ஸகல வித்தியாதிகவேதம் போலே இதுவும் திவ்ய ப்ரபந்தப்ரதாநம்" என்ற

ஆசார்யஹ்ருதய ஸ்ரீஸூக்தியின் படியே நாலாயிரத்திற்குள்ளும் திருவாய்மொழி யாயிரத்திற்கே ப்ராதாந்யமாகையாலும், அந்தத் திருவாய்மொழிக்கு வியாக்கியானங்கள் பல இருந்தாலும் * தெள்ளியதா நம்பிள்ளை செப்பு நெறிதன்னை, வள்ளல் வடக்குத்திருவீதிப்பிள்ளை, இந்த நாடறிய மாறன் மறைப்பொருளை நன்குரைத்தது, ஈடு முப்பத்தாறாயிரம் * என்று மாமுனிகளால் போற்றப்பட்ட ஈட்டுக்கே ஸர்வாநுபவ ஸாக்ஷிகமான ப்ராதாந்ய மாகையாலும் நம்பிள்ளை திருவடிகளுக்குள் வடக்குத் திருவீதிப் பிள்ளையே ப்ரதாநராவர்.

ஸாது—இப்படியானால் தேவரீர் முதலில் ஸாதித்தது ஸங்கதமாகவில்லை போல் தோன்றுகிறதே; ஸமாச்ரயணபரம்பரையில் வடக்குத் திரு வீதிப் பிள்ளைக்கு ப்ராதந்ய மென்றும், க்ரந்த பரம்பரையில் பெரியவாச்சான் பிள்ளைக்கு ப்ராதாந்ய மென்றும் ஸாதித்ததே; இப்போது, க்ரந்த பரம்பரையிலுங்கூட வடக்குத் திருவீதிப் பிள்ளைக்கே தான் ப்ராதான்யமென்று ஸாதிப்பதாக விளங்குகிறதே.

ஸாத்விகர்—நீ க்ரஹித்தது பிசகு; அப்படி கொள்ளாதே; திருவாய்மொழிக்கு இருவரும் வியாக்கியானம் ஸாதித்தவர்களே; ஆனாலும், முற்பட வியாக்கியான மிட்டருளினவர் பெரிய வாச்சான் பிள்ளை; அநந்தரம் வியாக்கியான மிட்டருளினவர் வடக்குத் திருவீதிப் பிள்ளை. ஆகவே க்ரந்த மருளிச்செய்யும் முகத்தாலே உபகரித்தவர்களில் முற்பட்டவர் பெரிய வாச்சான் பிள்ளையாகையாலே க்ரந்த காலக்ஷேப ஸமயங்களில் அவருடைய தனியனை ஸேவித்த பிறகுதான் வடக்குத் திருவீதிப் பிள்ளை தனியனை ஸேவிப்பது ஸம்ப்ரதாயம். * “ஸ்ரீக்ருஷ்ண பாதபாதாப்ஜே” * என்பது வடக்குத் திருவீதிப் பிள்ளை தனியன்; * “ஸ்ரீமத் க்ருஷ்ண ஸமாஹ்வாய * என்பது பெரிய வாச்சான் பிள்ளை தனியன். பகவத் விஷய காலக்ஷேப ஸமயத்தில் தனியன்கள் அநுஸந்திக்கு மிடத்து * ஸ்ரீமத் க்ருஷ்ண ஸமாஹ்வாய * அநுஸந்தித்த பிறகே * ஸ்ரீக்ருஷ்ண பாத பாதாப்ஜே * அநுஸந்தித்து வருகிறோம். குருபரம்பரா நித்யாநுஸந்தாந ஸமயத்தில், நம்பிள்ளை தனியனானதும் வடக்குத்திரு வீதிப்பிள்ளை தனியன், அதன் பிறகு பிள்ளை லோகாசார்யர் தனியன், அதன் பிறகு திருவாய் மொழிப்பிள்ளை தனியன்...............இங்ஙனேயாகிறது. இவ்வடைவில் பெரியவாச்சான் பிள்ளைதனியன் புகவேயில்லை. நமது ஸம்ப்ரதாயத்தில் ஸமாச்ரயண பரம்பரையே முக்கியமான தென்பதை முன்னமே மூதலித்தேனாகையால் நம்பிள்ளை திருவடிகளுள் பெரியவாச்சான் பிள்ளையை விட வடக்குத் திருவீதிப்பிள்ளைக்கே ப்ராதாந்ய மென்பது தேறுகின்றது. ஆகவே ஸ்ரீ காஞ்சீ புரியில் நம்பிள்ளை ஸன்னிதியில் நம்பிள்ளையின் வலபுறத்தில் வடக்குத் திருவீதிப்பிள்ளையையும் இடபுறத்தில் பெரியவாச்சான் பிள்ளையையும் பெரியார் எழுந்தருளப் பண்ணியிருப்பது மிகப் பொருத்தமானது.

ஸாது—தேவரீருடைய இந்த நிரூபணம் மனத்தில் மிக்க தெளிவையுண்டாக்கிற்று. பூருவர்களருளிச் செய்த ஆழ்வாராசார்யர்களின் வாழித் திருநாமம் நித்யாநுஸந்தான புத்தகங்களிலெல்லாம் அச்சிடப்பட்டுள்ளது. அதில், பட்டர் நஞ்சீயர் நம்பிள்ளை வடக்குத்திருவீதிப்பிள்ளை பிள்ளைலோகாசார்யர் என்றிவர்களுக்கு இவ்வடைவில் வாழித் திருநாமம் காண்கின்றதே யொழிய பெரிய வாச்சான் பிள்ளைக்கு வாழித் திருநாமம் காணப்படவேயில்லை; பத்தெட்டு பதிப்புகளை யெடுத்துப் பார்த்தேன், ஒன்றிலுங் காணவில்லை; இதற்கு என்ன காரணமென்று வெகுகாலமாக விமர்ச மிருந்துவந்தது. இன்று தெளிவாயிற்று மிகமுக்கியமாகக் கொண்டாடப்படும் ஸமாச்ரயண பரம்பரையில் வடக்குத் திரு வீதிப் பிள்ளைக்கேயல்லது பெரியவாச்சான் பிள்ளைக்கு ப்ரவேச மில்லாமையாலே குருபரம்பரையில் நம்பிள்ளைக்குப் பிறகு வடக்குத் திரு வீதிப்பிள்ளைக்கே நிவேசமாயிற்றென்கிற வுண்மையை இன்று தெளியப் பெற்றேன்.

“ஸாத்விகர்”—பெரியவாச்சான் பிள்ளைக்கு வாழித்திருநாமம் அடியோடு ஏற்படாமலிருக்கவில்லை. சிலபுத்தகங்களில் அதுவும் சேர்க்கப்பட்டிருக்கிறது. உடையவர் திருவடிகளுள் கூரத்தாழ்வானுக்கு ப்ராபல்யம் ஸர்வஸம்ப்ரதிபந்நமானது; “* ஸோயம் ராமாநுஜமுநிரபி ஸ்வீயமுக்திம் கரஸ்தாம் யத்ஸம்பந்தாதமநுத கதம் வர்ண்யதே கூராநாத:” * என்னும்படியான பெருமையன்றோ ஆழ்வானுடையது. ஆனதுபற்றியே மணவாளமாமுனிகளும் “* ஸ்ரீவத்ஸசிஹ்நசரணம் யதிராஜமீடே *” என்று விம்சதியில் விசேஷித்து அருளிச்செய்யலாயிற்று. அத்தகைய பெருமை அவர்க்கிருந்தும் குருபரம்பரைத் தொடர்சங்கிலியில் எம்பெருமானார்க்குப்பிறகு எம்பார்க்கேயன்றோ நிவேசமாயிற்று. அதற்கென்ன காரணம் தெரியுமோ? பட்டர்க்கு அவர் திருவிலச்சினையிட்ட ஆசார்யர் என்பதேயாம். பட்டர்தாமும் ஸஹஸ்ரநாமபாஷ்யோபக்ரம மங்களச்லோகத்தில் “* வந்தே கோவிந்ததாதௌ *” என்றார். இங்கு “* அல்பாச்தரம் பூர்வம்” * என்ற வியாகரண நியமப்படி ‘தாதகோவிந்தௌ’ என்று நிபந்திக்கவேண்டியிருந்தும் பட்டர் ‘அப்யர்ஹிதம் பூர்வம்’ என்றதைக்கொண்டே ‘கோவிந்

ததாதௌ ’ என்றருளிச் செய்தார். ஒரு ஸந்நிதியில் ஆழ்வான் எம்பார் ஆகிய இருவரோடு கூட எம்பெருமானாரை ப்ரதிஷ்டிப்பிக்க நேர்ந்தால் வலபுறத்தில் எம்பாரையும் இடபுறத்தில் ஆழ்வானையும் ப்ரதிஷ்டிப்பிக்க நேருமேயல்லது வேறுவிதமாக ப்ராப்தமாகாது. இப்படி, திருக்கோட்டியூர்நம்பி பெரியநம்பி என்கிற இருவரோடுகூட ஆளவந்தாரை ப்ரதிஷ்டிப்பிக்கநேர்ந்தால், வலபுறத்தில் பெரியநம்பியையும் இடபுறத்தில் திருக்கோட்டியூர் நம்பியையும் ப்ரதிஷ்டிப்பிக்க நேருமேயல்லது வேறுவிதமாக ப்ராப்தமாகாது, ஆசார்யஹ்ருதயத்தில் * ம்லேச்சனும் பக்தனானால் * இத்யாதி சூர்ணையில் “ ஜவரில் நால்வரில மூவரில் முற்பட்டவர்கள் ” என்றவிடத்து மூவரில் முற்பட்டவர் இன்னாரென்பதை அவ்விடத்து வியாக்கியானத்தில் விவரித்தருளாநின்ற மணவாளமாமுனிகள்—“ பெரியநம்பி திருக்கோட்டியூர் நம்பி பெரியதிருமலை நம்பியென்று ஸப்ரஹ்மசாரிகளாய்க் கொண்டு ஆளவந்தார் திருவடிகளிலே ஸேவிக்கையாலும் உடையவர்க்கு ஆசார்யர்களாகையாலும் ப்ரஸித்தரான நம்பிகள் மூவரிலும் “ ப்ரதாநரான பெரியநம்பி ” என் றருளிச் செய்தார். பெரிய நம்பிக்கு எதனாலே ப்ராதாந்ய மென்னில், உடையவர்க்குத் திருவிலச்சினை ஸாதித்தாரென்பதனாலேயாம். எம்பார்க்கு ப்ராதாந்யமும் பட்டர்க்குத் திருவிலச்சினை ஸாதித்தது பற்றியேயாம். இவ்வடைவிலே வடக்குத் திருவீதிப் பிள்ளைக்கு ப்ராதாந்யமும் பிள்ளை லோகாசார்யர்க்குத் திருவிலச்சினை ஸாதித்தது பற்றியேயாம். பெரியநம்பிக்கும் பட்டர்க்கும் ப்ராதாந்யம் கொள்வதனால் திருக்கோட்டியூர் நம்பி முதலான பேராசிரியர்களுக்கும், ஆழ்வான் ஆண்டான் முதலான பேராசிரியர்களுக்கும் ஒருவிதமான தாழ்வுமில்லாதாப் போலே வடக்குத் திருவீதிப் பிள்ளைக்கு ப்ராதாந்யங் கொள்ளுமளவால் பெரியவாச்சான் பிள்ளை பின்பழகிய பெருமாள்ஜீயர் முதலான பேராசிரியர்கட்கு எவ்விதமான தாழ்வும் வாராதென்பது அறியத்தக்கது. வடக்குத் திருவீதிப் பிள்ளையானவர் பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளிலும் பல விசேஷார்த்தங்களைக் கேட்டிருக்கலாம் ; அவர்மாத்திரமல்லர் ; பிள்ளைலோகாசார்யருங்கூட பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளிலும் பல கேட்டிருக்கலாம். இதில் விப்ரதிபத்தி லேசமுமில்லையே. பெரிய வாச்சான் பிள்ளையினுடைய ஜ்ஞாநாநுஷ்டாந பூர்த்திகளில் யாரேனும் குறை நினைப்பாருளரோ ? லுப்தமாய்ப் போயிருந்த நாலாயிரத்தையும் அரும் பெரும் பாடுகள் பட்டுப்புநருத்தாரம் செய்தருளின ஸ்ரீமந்நாதமுனிகளின் தனியனை திவ்ய ப்ரபந்த பாராயண ப்ராரம்ப ஸமாப்திகளில் நியமேந அநுஸந்திக்க வேண்டியது ஆவச்யகமா ? அன்றா ? என்று கேட்டால் அன்றென்று சொல்ல ஒருவர்க்காவது நா எழுமா ? அத்யாவச்யகமேயென்று தான் ஒவ்வொருவரும் சொல்லக்கூடும். * “ யோ நித்யமச்யுத ” என்ற உடையவர்தனியனை அநுஸந்திக்க நியமித்தருளின பேராசிரியர்கள் ஸ்ரீமந்நாத முனிகளின் தனியனை ஓரிடத்திலுமநுஸந்திக்க நியமித்தருளவில்லை யென்று காண்பதனால் நாதமுனிகளுக்கு ஏதேனும் தாழ்வுவந்திடுமோ? ரஹஸ்யார்த்த ரத்னம் திருக்கோட்டியூர் நம்பிவழியாகவே ப்ராப்தமாயிருந்தும், அந்நாள் தொடங்கி இந்நாள்வரையில் ரஹஸ்யக்ரந்த காலக்ஷேபம் செய்வார்க்கு அந்த நம்பியினுடைய தனியன் இன்னதென்றே தெரியாமலிருக்கிறது. அதனால் அவர்க் கென்ன தாழ்வு ? எதற்கும் ஸம்ப்ரதாய மென்பதன்றோ தலைசிறந்து நிற்கிறது. அதையன்றோ நாம் பரிபாலனம் செய்யக் கட்டுப்படிருக்கிறோம். நம்பிள்ளைக்கும் பிள்ளை லோகாசார்யர்க்கு மிடையில் பெரியவாச்சான் பிள்ளையைத் தள்ளி வடக்குத் திருவீதிப் பிள்ளையை வைத்தது நாமோ ? ஓராண்வழிப் பரம்பரை எப்படியுள்ள தென்பதை உலக மெல்லாமறியுமே.

ஸாது—ஒருவர் எழுதியிருக்கிறார்—‘பெரிய வாச்சான் பிள்ளை பூர்வசிக ஸ்ரீவைஷ்ணவ குலத்தைச் சேர்ந்தவர் ; வடக்குத் திருவீதிப் பிள்ளை அபரசிக ஸ்ரீவைஷ்ணவ குலத்தைச் சேர்ந்தவர் என்னும் பக்ஷபாதத்தினாலேயே பெரிய வாச்சான் பிள்ளைக்கிருந்த ப்ராதாந்யத்தைக் குலைத்து வடக்குத் திருவீதிப் பிள்ளைக்கு ப்ராதாந்யம் கொடுக்கிறார்கள் ; பூர்வாசார்யர்கள் காலத்தில் இப்படிப்பட்ட குறுகிய நோக்கம் கிடையாது ; நவீந காலத்தில் சிலர் பூர்வசிக ஸ்ரீவைஷ்ணவர்களை இழித்துரைக்கவும் அக்குலத்தைச் சேர்ந்த ஆசாரியர்களின்மேல் அவதூறு சொல்லவும் தலைப்பட்டிருக்கிறார்கள்’ என்று. இப்படிப்பட்ட வார்த்தைகளுக்கு ப்ரக்ருதத்தில் ஏதேனும் விஷய முண்டோ ? அருள் கூர்ந்து ஸாதிக்கவேணும்.

ஸாத்விகர் — மிகவும் அசடான வார்த்தைகளன்றோ இவை. பூர்வசிகை அபரசிகை யென்ற விரண்டும் சாஸ்த்ர ஸித்தங்களாய் அநாதியாகவுள்ளவை. போதாயந ஸூத்ரிகள் ஆபஸ்தம்ப ஸூத்ரிகளை இழிவாக நினைப்பதும், ஆபஸ்தம்ப ஸூத்ரிகள் இதர ஸூத்ரிகளை இழிவாக நினைப்பதும் அஸம்பாவிதம். எந்த வகுப்பிலுமே அசடுகளும் தோன்றியிருப்பதுண்டாகையால் அப்படிப்பட்டவர்கள் தங்களை மிக உச்சஸ்தானத்தில் நினைத்துக்கொள்வதும், இதரர்களை மிக நீசஸ்தானத்

தில் நினைத்துக்கொள்வது முண்டாகையாலே அப்படிப்பட்ட அசடுகளின் நினைவுகளை ப்ராமாணிகர்களும் ப்ராஜ்ஞர்களும் பொருள் படுத்தமாட்டார்கள். ஆழ்வார்கள் கோஷ்டியிலும் ஆசார்யர்கள் கோஷ்டியிலும் பூர்வசிகிகளான பல பெரியார்கள் உத்துங்கஸ்தான நிவிஷ்டர்களாக விளங்குவது அபலபிக்க முடியாதது. இன்று வரையில் பூர்வசிகி ஸ்ரீவைஷ்ணவர்கள் பக்கலிலே ஒரு விவேகியும் தாழ்வு நினைத்ததாகத் தெரியவில்லே. "அபரசிகிகள் தாம் அப்யர்ஹிதர்கள்; பூர்வசிகிகள் புரஸ்கரிக்கத் தகாதவர்கள்" என்று யாரேனுமொருவர் ஒரு மூலேயிலாவது எழுதியிருந்தால் எடுத்துக்காட்டலாம். அப்படியொருவர் எழுதியிருக்கிறார், அல்லது பேசிவருகிறார் என்றே வைத்துக்கொள்வோம்; அவரை கேவலம் துராக்ரஹியென்று ப்ராமாணிகர்கள் கூறுவர்களே யல்லது உசிதவாதியென்று ஒருவரும் நினையார். அஸ்து. இக்காலத்தவர்களுக்குள் ஏற்றத்தாழ்வு நினைவுகள் எப்படியிருந்தாலென்ன? பெரியாழ்வார் தொண்டரடிப்பொடியாழ்வார் ஸ்ரீமதுர கவிகள் என்கிற பூர்வசிகிகளான ஆழ்வார்களிடத்திலும், திருவாய்மொழிப் பிள்ளை பெரிய வாச்சான் பிள்ளை எங்களாழ்வான் திருக்கோட்டியூர் நம்பி உய்யக்கொண்டார் போல்வாரான பல பூர்வசிகியாசார்யர்களிடத்திலும் அப்ரதிபத்தியோ விப்ரதிபத்தியோ கொள்வார் எவரேனு முளரோ? கொண்டார்களாகில் அவர்களுக்கென்று தனி நரகமன்றோ ஸ்ருஷ்டிக்கப்படவேண்டும். இப்படிப்பட்ட அஸம்பாவிதமும் அஸம்பத்தமுமான கொள்கைக்கு இதுவரையிலும் ப்ரஸக்தி லேசமுமில்லாதிருக்கவும். இதைச் சிலர் வாயால் பேசியும் எழுத்தில் எழுதியும் போருவதானது நவீனமாகவொரு கிளர்ச்சியையுண்டாக்கி அபரசிகிகளிடத்திலே பூர்வசிகிகளான மஹான்களுக்குள்ள ப்ரதிபத்திவிசேஷங்களைக் குலைக்கவேணுமென்கிற அசடான எண்ணத்தினாலேயே யாகும். தற்காலம் பூர்வசிகி ஸ்ரீவைஷ்ணவர்களுக்குள் திருக்கோட்டியூர் தங்கமையங்கார் ஸ்வாமியும், பம்பாய் நகரத்தில் வாழும் ஸம்ப்ரதாய ப்ரவசன துரந்தர. வி. வி ஐயங்கார் ஸ்வாமியும், தென் திருப்பேரை. ஸ்ரீராம சந்த்ராசார்ய ஸ்வாமியும் ஜ்ஞானாநுஷ்டானங்களில் மிகச் சிறந்து விளங்கும் விலக்ஷண மஹநீயர்கள். இம்மூவரும் ஆச்சான் பிள்ளை யஷ்டாத்யாயியை ப்ரசம்ஸித்து பாந்தரஹஸ்யம் பெரிய வாச்சான் பிள்ளையின் க்ருதியன்று என்கிற ஸித்தாந்தத்தைச் சேமித்தவர்களாதலால் இப்படிப்பட்ட உத்தம புருஷர்களின் திருவுள்ளத்திலே ஏதேனுமொரு விப்ரதிபத்தியையுண்டாக்கிக் களிப்போம் என்கிற அசட்டெண்ணம் தவிர வேறு யாதும் நினைக்கமுடியாது. உண்மையில் மிக உதாரஹ்ருதயர்களும் யதார்த்தஜ்ஞான நிதிகளுமான அவர்கள் இப்படிப்பட்ட அஸம்பாவித பாஷணங்களினால் ஒருபோதும் கலங்கார்கள். இதைவிட்டு வேறு விஷயத்திற் செல்வாயாக.

ஸாது—மிகவும் த்ருப்திகரமாக ஸமாதான மடைந்தேன்; அடுத்த விஷயம் விஜ்ஞாபிக்கிறேன். பெரியாழ்வார் திருமொழிக்குப் பெரியவாச்சான் பிள்ளை யருளிச்செய்திருந்த வியாக்கியானம் நானூறு பாசுரங்கள் வரை கரையானுக்கு இரையாகி லுப்தமான படியாலே அவ்வளவுக்கு மணவாள மாமுனிகள் இட்டருளின வியாக்கியானத்தை அன்பர்கள் ஸேவித்து 'அந்தோ! நாலாயிர வியாக்கியானமும் கரையானுக்கு இரையாகியிருந்தால் நலமாயிருக்குமே; இங்ஙனே தேனும் பாலும் அமுதுமன்ன வியாக்கியானத்தை மாமுனிகள் பூர்த்தியாக இட்டருளும்படியான பாக்யம் நேர்ந்திருக்குமே' என்று பரஸ்பரம் வியந்து உவந்து பேசிக்கொண்டதாகப் பெரியார்கள் சொல்லக் கேட்கிறோம். இது கர்ணகடோரமான வார்த்தை யென்றும் பெரிய வாச்சான் பிள்ளைக்கு மிகவும் பழிப்பானவார்த்தை யென்றும் ஒருவர் கோஷிக்கிறாரே; இதன் தத்துவமென்ன? அருள் கூர்ந்து அருளிச்செய்யவேணும்.

ஸாத்விகர்—இப்படி கோஷிப்பதும் ஒரு அசட்டுத்தனமேயொழிய வேறென்ன? மணவாள மாமுனிகளிட்டருளின பெரியாழ்வார் திருமொழிவியாக்கியானத்தை நோக்கி அக்காலத்தில் ஒரு விதமான ப்ரசம்ஸையும் நேரவில்லை என்றே வைத்துக் கொள்வோம். பின்புள்ளார் கல்பனைசெய்து எழுதுகிறார்கள் என்றும் வைத்துக் கொள்வோம். அதில் ஔசித்யமுள்ளதா? அநௌசித்ய முள்ளதா? என்பதுதான் விவேகிகளால் விமர்சிக்கப்படவேண்டும். 'பெரியவாச்சான் பிள்ளையருளிய வியாக்கியானம் முழுவதும் கரையானுக்கு இரையாயிருந்தால் நன்றாயிருக்குமே' என்று ஒருவர் சொன்னால், இவர்க்கும் பெரியவாச்சான் பிள்ளையிடத்தில் பகையென்றாவது, அவருடைய ஸ்ரீஸூக்திகளில் மாச்சரியமென்றாவது, இதனால்பெரியவாச்சான் பிள்ளைக்குப் பழிப்பு விளைகின்றதென்றாவது ஒரு விவேகி நினைப்பனோ? மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளிலுள்ள மாதுர்ய மொன்றேயன்றோ வெளியிடப்பட்டதாகுமிதனால். இதில் உனக்கு நல்லதெளிவு பிறக்க விரிவாகவே சொல்லுகிறேன். ஸ்ரீவசன பூஷணத்தில் சரமபர்வநிஷ்டா நிரூபணத்தில்—"உண்டபோதொருவார்த்தையும் உண்ணாதபோதொரு வார்த்தையும் சொல்லுவார் பத்துப்பேருண்டிறே; அவர்கள் பாசுரங்கொண்டன்று இவ்வர்த்த மறுதியிடுவது; அவர்

களைச் சிரித்திருப்பாரொருவருண்டிறே; அவர்பாசுரங் கொண்டு இவ்வர்த்த மறுதியிடக்கடவோம்'' என்கிற ஸ்ரீஸூக்தியுள்ளது. இதில் ஆழ்வார்கள் பதின்மர்க்கும் தூஷணமும் மதுரகவி யொருவர்க்கு பூஷணமும் வ்யக்தமாகவுள்ளது. உண்டபோதொருவார்த்தையும் உண்ணுதபோதொருவார்த்தையும் சொல்லுமவர்கள் பாமரர்களன்றோ; அவர்களுடைய ஸ்தானத்திலா ஆழ்வார்களைவைத்துப் பேசுவது? இது இருக்கட்டும். "அவர்களைச் சிரித்திருப்பாரொருவருண்டிறே" என்று அடுத்தபடியுள்ளது. இங்கு மாமுனிகளின் வியாக்கியானம்—"ஆழ்வார்கள் பதின்மரையும் பரிஹஸித்திருக்கும் ஸ்ரீமதுரகவியாழ்வா ரொருவருண்டிறே" என்று. ஆழ்வார்களையெல்லாம் பரிஹஸிக்கவா மதுரகவிகள் தோன்றினர்? எந்த ஆழ்வாரை எங்கேபரிஹஸித்தார்? * தேவுமற்றறியேன் * என்று ஆழ்வார்திருவடிகளில் ப்ராவண்யமே வடிவெடுத்துப்படுமாடு கிடந்த மதுரகவிகளை நோக்கி 'இவர் ஆழ்வார்களைப் பரிஹஸித்தவர்' என்றால் இது ஆழ்வார்களுக்கும் தூஷணமாய் மதுரகவிகளுக்கும் அஸஹ்யதூஷணமாய் முடியுமதன்றோ. "உன்னில் திகழ் வசன பூடணத்தின் சீர்மை ஒன்றுக்கில்லை" என்று போற்றப்பட்ட ஸ்ரீவசந பூஷண திவ்யசாஸ்த்ரத்தில் இப்படிப்பட்ட வார்த்தை இருக்கத்தகுமா? ஆழ்வார்களைக் கனவிலும் பரிஹஸித்தறியாத வொருவரை பரிஹஸித்தவராகக் கூறுதல் பச்சைப்பசும் பொய்யல்லவா? மற்றும் கேளாய்; * "கச்சதா மாதுலகுலம் பரதேந ததா அநக: * என்கிற ஸ்ரீராமாயண ச்லோகத்தில் "அநக:" என்பதற்கு "ராமபக்தியாகிற பாபமில்லாதவர்" என்று பெரியவாச்சான் பிள்ளை அர்த்தம் செய்தருளுகிறார். ஜன்மாந்தர ஸஹஸ்ர நற்றவங்களாலே விளையக்கூடிய பகவத் பக்தியையா பாபமென்பது—இதைவிட வேறொருபாதகமு முண்டா? ராமபக்தர்களான பரத லக்ஷ்மண குஹஸுக்ரீவ ஹநுமத் விபீஷணுதிகளனைவரையும் பாபிகளென்றன்றோ பெரியவாச்சான் பிள்ளைமுடிக்கிறார். இது என்ன அநியாயம்! இப்படியெல்லாம் கர்ணகடோரமாக எழுதியுள்ள க்ரந்தங்களையா காலக்ஷேபக்ரந்த மென்று கொண்டாடுவது? என்று சிலர் தூஷிக்கப் புறப்பட்டால் இக்காலத்து மேதாவிகள் வாய்திறக்கமுடியுமா? "பெரியவாச்சான் பிள்ளை ஸாதிப்பதிலும் பிள்ளை லோகாசார்யர் ஸாதிப்பதிலுமா துராக்ஷேபம் செய்கிறாய்" என்று வாயும் கையும் வீசலாமேயொழிய ஆக்ஷேபம் செய்தவர்களை த்ருப்திகரமான பதிலுரையாலே அடக்கமுடியுமா? மேற்கூறிய ஆக்ஷேபம் செய்பவர்கள் வித்வான்களல்லர், விவேகிகளல்லர்; சாமானியர்களே. ஆனாலுமென்ன? பதில் சொல்லியாக வேண்டுமே. இவ்வாக்ஷேபங்கள் எதிரிகளின் நூல்களிலே சிலாலிகிதமாக எறியுமிருக்கின்றனவே. 'சொற்சுவை பொருட்சுவையறியாத அரஸிகர்களின் ஆக்ஷேபங்களிவை' என்று இவ்வளவு சொல்லி சிரிக்க முடியுமே யொழிய வேறு என்சொல்லித் தெளிவிக்கமுடியும்? இவ்வண்ணமாகவே, "பெரிய வாச்சான் பிள்ளையின் வியாக்கியானங்களெல்லாம் கரையானுக்கிரையாகி யிருக்கலாகாதா?" என்று கூறின யதீந்த்ர ப்ரவண ஸூக்திப்ரவணர்களின் பரம பக்தி பரீவாஹமான ஸூக்தியில் அவத்யம் நினைப்பாரை அவிவேகிகளென்றோ அஸூயுக்களென்றோ சொல்லவேணுமேயல்லது வேறொன்றும் சொல்லப்போகாது. செவியும்மூக்குமறுப்புண்டு கதறியழுதோடுகின்ற சூர்ப்பணகை அரக்கர் கோமானை நோக்கிப் புலம்பிப்பேசுகையில் "நின் செருப்படியில் பொடியொவ்வா மானிடரைச் சீறுதியோ" என்று பேசினதாக இட்டுக் கம்பர் செய்யுளியற்றி விட்டார். இதைப்பற்றி முற்காலத்திலேயே ஹாஹாகாரம் செய்தவர்களுண்டு; "தருணௌ ரூபஸம்பந்நௌ ஸுகுமாரௌ மஹாபலௌ, புண்டரீக விசாலாக்ஷௌ" என்று போற்றப்பட்ட ஸ்ரீராமலக்ஷ்மணர்களை ராக்ஷஸப் பையலினுடைய செருப்படியிற் பொடியொவ்வா மானிடரென்று கூறியதாகக் கூறுதல் அநியாயமல்லவா வென்று கோஷிப்பார் பலருளரன்றோ. சூர்ப்பணகை இப்படிச சொல்லும்போது கம்பர் கேட்டுக் கொண்டிருந்தாரா? எந்த மஹர்ஷி எந்த புராணத்தில் சொல்லியிருக்கிறார்? எதைக் கொண்டு கம்பர் கூறினர்? என்று கேட்டால் வாய் திறப்பாரில்லையே. அது எப்படியாவது கிடக்கட்டும். மதுரகவிகள் ஆழ்வார்களை யெல்லாம் பரிஹஸித்தாரென்றும், ஸ்ரீராமனிடத்தில் செய்யும் பக்தி பாபமென்றும் கூறியுள்ள நம் பேராசிரியர்களின் திருவாக்கைப் பொருந்த விட்டுப் பாமரர்களை த்ருப்தி படுத்தியாக வேண்டுமே.

ஸாது—தேவரீருடைய இந்த அத்புத நிருபணங்களைக் கேட்டபிறகு அடியேனுக்கும் பல ஸ்ரீஸூக்திகள் நினைவுக்கு வருகின்றன. பெரியவாச்சான்பிள்ளை திருப்பாவைவியாக்கியானம் தொடங்கும்போது "தேஹாத்மாபிமாநிகளான ஸம்ஸாரிகளுக்கும் ஆத்மஸ்வரூபம் கைவந்திருக்கும் மஹர்ஷிகளுக்கும் பர்வதபரமாணுவோட்டைவாசி போரும்" என்றார்; இது வாஸ்தவமே. உடனே, அந்த மஹர்ஷிகளுக்கும் ஆழ்வார்களுக்கும் அத்தனைவாசிபோருமென்றார். ஆழ்வார்களிடத்தில் பாமப்ராவண்யமுடைய நாம் இதையும் வாஸ்தவமாகக் கொள்வோம். உடனே ஆழ்வார்களுக்கும் பெரியாழ்வாருக்கும் அத்தனைவாசிபோரு மென்கிறார். இதை ஸ்ரீவைஷ்ணவர்கள் வாஸ்தவமென்று மதிக்க முடியுமா? பெரியாழ்வாராகிற பெருமலையின் முன்னிலையில் நம்மாழ்வார் முதலான மிகப்பெரிய ஆழ்வார்கள் சிறுபரலாகவா நிற்கிறார்கள்? இஃது உண்மையுரையாகுமா? ஆழ்வார்களையெல்லாம் இப்படி

கர்ணகடோரமாக தூஷிக்கவா பெரியவாச்சான் பிள்ளை அவதரித்தார்? என்று ஒருவர் கேட்டுவிட்டால் இந்த மஹாமேதாவிகளெல்லாம் வாய்திறக்க முடியுமா? ஏதோ வயிற்றெரிச்சல் பொறுக்கமாட்டாமல் அஸூயைதூண்ட எழுதுகிறவித்தனை; விஷயமறியாத சில பாமரர்களை மயக்குதற்காக எழுதுகிற வித்தனை; "* அசக்தாஸ் தத்பதம் கந்தும் ததோ நிந்தாம் ப்ரகுர்வதே *" என்கிற ஸுபாஷிதத்தை நினைப்பூட்ட எழுதுகிற வித்தனை—என்று நன்கறிந்தேன். ஸ்வாமிந்! வேறொரு விஷயம் வினவலாமோ?

ஸாத்விகர்—ஒரு விஷய மென்ன? ஒன்பதினாயிரம் விஷயங்களும் வினவலாம்.

ஸாது—ரஹஸ்யப்ரஸ்தானத்தில் முதன் முதலாக விசேஷக்ரந்த நிர்மாணம் செய்தருளின பெருமை பிள்ளை லோகாசாரியர்க்கே அஸாதாரணமென்று பெரியார்கள் கூறுகின்றார்கள்; அவர்க்கு முற்பட்ட ஆசாரியர்களும் பரந்தரஹஸ்யம் போன்ற பல க்ரந்தங்களை விரிவாக அருளிச் செய்திருப்பதாய்ச் சிலர் சொல்லுகிறார்கள். இவ்விஷயத்தில் தேவரீருடைய ஆராய்ச்சியைத் தெரிவித்தருள வேணும்.

ஸாத்விகர்—ரஹஸ்யப்ரஸ்தானத்தில் முதன் முதலாக விசேஷக்ரந்த நிர்மாணம் செய்தருளின பெருமை ஸ்ரீபிள்ளைலோகாசார்ய ரொருவர்க்கே தான் அஸாதாரணமானது. இதில் என்ன ஸந்தேஹம்? முற்பட்ட ஆசார்யர்களும் ரஹஸ்யார்த்த விசதீகரண விசக்ஷணங்களான பல க்ரந்தங்களைச் செய்தருளியிருக்கிறார்களென்பது நவீந கல்பனையே யொழிய சிறிதும் விச்வஸநீயமன்று; ஸங்கதமுமன்று. பட்டர் "அஷ்டச்லோகி" யருளிச் செய்திருப்பதுபோல அவ்வளவு ஸங்க்ரஹமாகவும் அதைவிட ஸங்க்ரஹ மாகவும் இரண்டொரு ஏடுகளில் அடங்கின தாகவும் சில ஆசார்யர்கள் (தமிழில்) ரஹஸ்யங்களருளிச் செய்திருந்தார்களென்பது யாவருமிசைந்ததே. வடக்குத் திருவீதிப் பிள்ளை "அஷ்டாக்ஷர தீபிகை" யென்றொரு க்ரந்த மருளிச் செய்திருப்பதாக அர்வாசீநர்கள் எழுதியிருப்பதுண்டு. அது மணவாள மாமுனிகளுக்கு உபலப்தமாயிருந்தால் வாதி கேஸரி முதலானருடைய க்ரந்தங்களை அஸக்ருத் உதாஹரித்தருளுமவர் அதனையும் உதாஹரித்தருளியேயிருப்பர். உதாஹரிக்கக் கூடிய விசேஷவிஷயங்களில்லாமே அதிஸம்க்ஷிப்தமாக இருந்திருக்கும். கூரத்தாழ்வானும் ஒரு ரஹஸ்ய மருளிச் செய்திருந்ததாக தேசிகனுடைய ரஹஸ்யத்ரய ஸாரத்தினால் தெரியவருகிறது. இத்தகைய க்ரந்தங்களெல்லாம் அஷ்டச்லோகீநிர்விசேஷங்களே யல்லது ரஹஸ்யவ்யாக்யானக்ரந்தங்களென்று சிறப்பித்துச் சொல்லக்கூடிய நிலைமையில் அமைந்திருக்கவில்லை.

ஸ்வாமியெம்பெருமானார்க்கு முன்பு ஸ்ரீமந்நாதமுனிகள் ந்யாயதத்வமென்றொரு சாஸ்த்ரமருளிச் செய்திருந்தும், ஆளவந்தார் ஸித்தித்ரயம் முதலான க்ரந்தங்களையருளிச் செய்திருந்தும் நம்முடைய தர்சநத்திற்கு "நாதமுநிதர்சநமென்றாவது யாமுநாசார்யதர்சநமென்றாவது வ்யபதேசம் விளையவில்லையே; அந்த க்ரந்தங்களைப் பற்றுக் கோடாகக் கொண்டு ஸ்ரீபாஷ்யாதிகளையருளிச் செய்த ஸ்வாமியையிட்டன்றோ "எம்பெருமானார்தரிசன" மென்று வழங்கலாயிற்று. ஸ்ரீபாஷ்யாதிகள்போன்ற விபுலக்ரந்தங்கள் ஸ்வாமிக்கு முற்பட்டவர்களின் காலத்திலேயே வெளிவந்திருக்குமாயின் எம்பெருமானார்தரிசனமென்றும் ஸ்ரீ ராமாநுஜதர்சநமென்றும் வழங்குதற்கு ப்ரஸக்தியே யிராதன்றோ. பிள்ளை லோகாசார்யர்க்கு முற்பட்டவர்கள் யாரும் ரஹஸ்யார்த்தங்களை விபுலமாக ப்ரஸாதித்தருளாமையினாலும், இவர்தாமே முற்பட அங்ஙனே விபுலமாக ப்ரஸாதித்தருளினபடியாலுமே ரஹஸ்யப்ரஸ்தானத்தில் இப்பிள்ளைலோகாசார்யர்க்கே அதிதரஸாதாரணமான ப்ரக்யாதி விளைந்தது. ஆகவே பரந்த ரஹஸ்யம் இவ்வாசிரியருடைய திவ்யக்ரந்தங்களுக்குப் பின்பே அவதரித்ததென்பது சிலாசாஸனமாகத் தேறும். ஆனால், யுக்திவாதங்களில் இதுவொன்று என்றே நினைக்கநேரும். எப்போதும் யுக்திவாதம் நிலைநிற்காது. * தர்க்காப்ரதிஷ்டாநாத் * என்றார் ஸூத்ரகாரரும். மணவாள மாமுனிகளின் ஸுஸ்பஷ்ட ஸ்ரீஸூக்தியினால் பரந்த ரஹஸ்யம் பெரியவாச்சான் பிள்ளையருளிச் செய்ததன்று என்று தேறுகின்றவதுவே நமக்கு ப்ரபலப்ரமாணம்.

ஸாது—பரந்த ரஹஸ்யம் பெரிய வாச்சான் பிள்ளை ஸாதித்ததன்று என்று கண்டோக்தியாக மணவாளமாமுனிகள் ஸாதித்திருப்பதுண்டோ?

ஸாத்விகர்—அதிலென்ன ஸந்தேஹம்? ஆச்சான் பிள்ளை வேறு, பெரிய வாச்சான் பிள்ளை வேறு என்பதை தத்வத்ரய வியாக்கியானத்தில் (103-சூர்ணையில்) நிஸ்ஸந்தேஹமாகக் காட்டிவிட்டார். பரந்த ரஹஸ்யம் தத்வத்ரய விவரணம் மாணிக்கமாலை ஜிதந்தே வியாக்கியானம் இவை

யெல்லாம் ஆச்சான் பிள்ளை யருளியவை என்பதையும் பலமுறை காட்டி விட்டார். கண்டோக்தி யென்பது இதைவிட வேறு எவ்விதமாக இருக்கும். பெரிய வாச்சான் பிள்ளை, நாயனாராச்சான் பிள்ளை, நாலூராச்சான் பிள்ளை என்று மூன்று ஆச்சான பிள்ளைகள் உள்ளார்கள். இவர்களுள் பெரிய வாச்சான் பிள்ளையை மாத்திரம் பெரிய வாச்சான் பிள்ளை யென்றே யருளிச்செய்பவர் மாமுனிகள். வ்யக்தி ஸந்தேஹம் வ்யக்தி விபர்யாஸம் முதலிய அவத்யங்களுக்கு ஈஷத்தாவது அவகாச மளிக்குமோ மாமுனிகளின் திவ்ய ஸூக்திகள். இதில் பிஷ்ட பேஷணம் வேண்டாதபடி ப்ராமாணிக ப்ராஜ்ஞர்கள் நெஞ்சிலே நன்கு தேக்கிக்கொள்ள ஒரே விஷய முரைக்கின்றேன் கேளாய்; "மாமுனிகளின் திருவாக்குக்களில் ஆச்சான் பிள்ளை யென்று எங்கெங்கு வருகிறதோ அங்கெல்லாம் பெரிய வாச்சான் பிள்ளையென்றே அர்த்தம்; வேறு வ்யக்தி அர்த்தமல்ல" என்று ப்ரதிஜ்ஞை செய்ய ஒரு ப்ராஜ்ஞர் முன்வருவரானால்—அந்த ப்ரதிஜ்ஞை அவ்யபிசரிதமாக நிற்குமேயானால்— "பரந்த ரஹஸ்யத்தில் ஆச்சான் பிள்ளை அருளிச் செய்தார்" "மாணிக்கமாலையில் ஆச்சான் பிள்ளை யருளிச்செய்தார்" "ஜிதந்தாவ்யாக்யானத்தில் ஆச்சான் பிள்ளை யருளிச்செய்தார்" என்னுமிடங்களிலெல்லாம் "ஆச்சான் பிள்ளை யென்றது பெரிய வாச்சான் பிள்ளையையே" என்று வித்தாந்தம் செய்யத்தடையே கிடையாது. ஆச்சான் பிள்ளை யென்பதற்கு ஓரிடத்தில் ஒரு வ்யக்தி அர்த்தம்; மற்றோரிடத்தில் மற்றொரு வ்யக்தி அர்த்தம் என்று சொல்ல வேண்டி வருமாகில், இப்படிப்பட்ட அஸமஞ்ஜஸ அஸம்பத்த வ்யவஹாரங்களுக்கு இடங்கொடுத்து எழுதுகிறவர் மணவாள மாமுனிகளல்லர் என்று திண்ணமாக எண்ணவேணும். மாமுனிகள் தவிர மற்றையோருடைய க்ரந்தங்களில் எல்லாவிதமான கந்த்ரகோளங்களும் ஏராளமாகவிருக்கும். அதில் ஸந்தேஹமே வேண்டாம். இந்நிலவுலகில் ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் க்ரந்த மருளிச் செய்தவர்களுள் மணவாள மாமுனிகளொருவரே ஒருவிதமான அவத்யத்திற்கும் ஆஸ்பதமல்லாதபடி ஆச்சரியமாக எழுதினவர். இதை ஆயிரந்தடவை சொன்னாலும் புநருக்தியாகாது. ஆனால் மாமுனிகளின் திவ்யஸூக்திகளை ஆழ்ந்து நோக்குவார் மிகச் சிலரேயாதலால் அந்த ஸூக்திகளின் காம்பீர்யமும் ஔதார்யமும் * "அநாக்ராதாவத்யம் பஹுகுண பரீணாஹி மநஸோ துஹாநம் ஸௌஹார்தம் *" என்றதற்கு முக்கியமான கொள்கலமாயிருக்கப் பெற்ற அதிசயமும் நுனிப்புல்மேய்வார்க்கு நிலமன்று. அப்படிப்பட்ட அருமை பெருமை பொலிந்த திவ்யஸூக்திகளில் ஆச்சான் பிள்ளை யென்கிற ஒரு வாசகமே ஓரிடத்தில் ஒரு வ்யக்தியையும் மற்றோரிடத்தில் மற்றொரு வ்யக்தியையும் தெரிவிப்பதாக விழுந்திருக்கின்றதென்று சொல்ல நேர்ந்தால் இதைவிட வேறு அவத்யமுண்டோ மாமுனிகளுக்கு? சாந்தம் பாபம் சாந்தம் பாபம்! என்று செவி புதைக்க வேண்டிய விஷயமன்றோ இது.

ஸாது—தேவரீர் ஸாதிப்பதத்தனையும் உண்மையே; மாமுனிகளின், ஸ்ரீஸூக்திகளில் ஆச்சான் பிள்ளை யென வருமிடங்களிலெல்லாம் பெரியவாச்சான் பிள்ளை யொருவரே தாம் விவக்ஷிதர் என்று ப்ரதிஜ்ஞை செய்தால் இது அவ்யபிசரிதமாக இராதோ?

ஸாத்விகர்—ஒருகாலும் இராது; ரஹஸ்யவியாக்கியானங்களுக்குள் மணவாளமாமுனிகளின் திருவாக்கில் ஆச்சான்பிள்ளை யென்றுவந்த விடங்கள் இருபத்திரண்டு; பெரியவாச்சான் பிள்ளை யென்று வந்தவிடம் ஒன்றேயொன்று. அந்தவோரிடம் இல்லாமலிருந்தால் ஆராய்ச்சிக்கு இடமேயிராது. இதனாலேயே மாமுனிகள் பெரிய வாச்சான் பிள்ளையைக் காட்டிலும் ஆச்சான் பிள்ளை வேறுபட்டவர் என்பதைக் கையிலங்கு நெல்லிக்கனி யாகக்காட்டி விட்டார். இதைவேறு படுத்தவோ அசைக்கவோ முடியாதபடி ஒரு ஸ்ரீஸூக்தியைத் தந்தருளியுள்ளார்; அது எது வென்னில்; ஸ்ரீவசந பூஷணம் பதினோராவது சூர்ணையின் வியாக்கியானத்திலே "இவ்வுபதேச க்ரமம் இவர் தாமருளிச்செய்த பரந்தபடியிலும் ஆச்சான்பிள்ளையருளிச் செய்த பரந்த ரஹஸ்யத்திலும் விஸ்தரேண காணலாம்" என்றருளிச் செய்தார். இதனால் பிள்ளைலோகாசார்யருடைய பரந்தபடிக்குப் பிற்பட்டதே பரந்தரஹஸ்ய மென்று நிஸ்ஸந்தேஹமாக நிரூபிக்கப்பட்டு விட்டது. மாமுனிகளின் திருவுள்ளத்தினால் பரந்தரஹஸ்யம் பிள்ளைலோகாசாரியர்க்கு முற்பட்டதென்று க்ருஹீதமாயிருந்தால் "இவ்வுபதேசக்ரமம் ஆச்சான்பிள்ளையருளிச் செய்த பரந்த ரஹஸ்யத்திலும் இவர்தாமருளிச் செய்த பரந்தபடியிலும் விஸ்தரேண காணலாம்" என்றே ஸ்ரீஸூக்திவிந்யாஸம் அமைந்திருக்குமென்பதில் ஸந்தேஹமுண்டோ?

ஸாது—இப்படியன்றோ பரமத்ருப்திகரமாக பதில் கேட்கப் பெறவேணும். அஷ்டாதஶ்யாயியில், மாமுனிகள் நடுவில் திருவீதிப் பிள்ளைபட்டரை முன்னே நிர்தேசித்துப் பிறகு ஆச்சான் பிள்ளையை நிர்தேசித்திருக்கையிலே இந்த ஆச்சான்பிள்ளை பெரிய வாச்சான் பிள்ளையாயிருக்கத் தகுதியேயில்லை யென்று சதுரமான நிரூபணத்தைச் செய்ததற்குப் பிறர் சொல்லும் பதில் அநுவதிக்கவும் தகாத

தாயிருக்கின்றது ; 'க்ரமவிவக்ஷையின்றிக்கே மாமுனிகள் அருளிச் செய்தார்' என்று இந்த ஒரே வார்த்தையில் அடித்திருந்தால் அது வொரு வழியாயிருக்கும்; மாமுனிகள் க்ரமம் தவறாமலே யருளிச் செய்பவரே யென்பதை மறுக்கமாட்டாமல் இசைந்து கொண்டு, நடுவில் திருவீதிப் பிள்ளை பட்டர்க்குப் பிறகு தான் பெரியவாச்சான் பிள்ளையை நிர்தேசிக்க வேண்டுமென்றும், அவர் பட்டர் ஸந்ததியில் தோன்றிய வரா கையாலே பெரியவாச்சான் பிள்ளையைக் காட்டிலும் சிறந்தவராதலால் அவர்க்கே புரஸ்காரமுரியது என்றும் வெள்காமல் எழுதிவைக்கிறார்கள். அப்படிப்பட்ட மேதாவிகள், பெரியவாச்சான் பிள்ளை தனியனுக்கு முன் வடக்குத் திருவீதிப்பிள்ளை தனியனைப் பெரியார் அநுஸந்தித்து வருவதிலும், நம்பிள்ளைக்கு தக்ஷிண பார்ஶ்வமாக வடக்குத் திருவீதிப்பிள்ளை அமர்ந்திருப்பதிலும் கூசாமல் ஆக்ஷேபம் கூறுகிறார்கள். அஸூயா பிண்டமாய்ப் பல காலம் நம்பிள்ளையை தூஷித்துக் கொண்டு அணுகாமலிருந்த நடுவில் திருவீதிப்பிள்ளை பட்டர்க்கும், பரிமளத்துடனே அங்குரிக்கும் திருத்துழாய் போலே நம்பிள்ளை திருவடிகளில் பக்தியே வடிவெடுத்த பெரியவாச்சான் பிள்ளைக்கும் அஜகஜாந்தர முண்டென்பதை அனைவருமறிவர். ஆகவே ஒரு நிலையில் நில்லாமலும் மனம்போன போக்காகவும் பேசுகின்ற பிறரைப் பற்றி நமக்குக் கவலையில்லை. விஷய தத்துவங்களை உள்ளபடி நாம் தெரிந்துகொள்வதும் ப்ராமாணிகர்கள் உகக்கத் தெரிவிப்பதுமே நமக்கு உற்றது. அடைவு தப்பாமல் அருளிச் செய்யும் முறையில் நிகரற்ற மணவாள மாமுனிகள் நடுவில் திருவீதிப்பிள்ளை பட்டரை நிர்தேசித்தபிறகு ஆச்சான்பிள்ளை யென்று நிர்தேசித்திருக்கையாலே அவர் பெரியவாச்சான் பிள்ளையாயிருக்கச் சிறிதும் ஔசித்யமில்லையென்று காட்டினதற்கும் மேற்பட்ட மிகச் சிறந்த ப்ரமாணமாக "பிள்ளை லோகாசார்யரை நிர்தேசித்த வனந்தரமும் ஆச்சான் பிள்ளையை நிர்தேசித்துள்ளார்" என்று எடுத்துக் காட்டினவிது ப்ராமாணிகமத்யஸ்தர்களை நன்கு தெளிவிக்கக் கூடியதன்றோ. இதை நன்றாக வற்புறுத்த அடியேனுக்கும் நினைவுக்கு வந்த தோரிடத்தை விஜ்ஞாபித்துக் கொள்ளுகிறேன்.

ஸாத்விகர்—நீ விஜ்ஞாபிக்கப் போவதை நானறிவேன்; எத்தனைசொன்னாலும் 'மாமுனிகள் அடைவுதப்பாமல் அருளிச்செய்பவர்' என்கிற பரமார்த்தத்தைத் தானே ஸ்தாபித்து நிற்கும். பிள்ளை லோகாசார்யருங்கூட ஸ்ரீவசநபூஷணதிகளில் ஓரேயிடத்தில் பலப்ரமாணங்களை யெடுக்கும்போது அடைவுதப்பாமல் எடுக்கலாமாயிருக்க அடைவில் நோக்கின்றியே திருவுள்ளத்தில் ஸ்புரிக்கிறபடியே எடுத்துவிடுவதுண்டு; (ஸ்ரீவசநபூ. 384.) "ஜ்ஞானவான்கள் * இன்றென்னைப் பொருளாக்கித்தன்னை யென்னுள்வைத்தான் * எந்நன்றி செய்தேனாவென்னெஞ்சில் திகழ்வதுவே * நடுவேவந்துய்யக் கொள்கின்றநாதன் * அறியாதனவறிவித்த வத்தாநீ செய்தனவடியேனறியேனே * பொருளல்லாத வென்னைப் பொருளாக்கியடிமை கொண்டாய் * என்னைத் தீமனங்கெடுத்தாய் * மருவித் தொழும்மனமேதந்தாய் * என்று ஈடுபடாநிற்பர்கள்" என்கிற சூர்ணையில் எழு பாசுரங்கள் எடுக்கப்பட்டுள்ளன; இவை ஒரடைவிலே எடுக்கப்படாமல் முன்னது பின்னதாகவும் பின்னது முன்னதாகவுமே யெடுக்கப்பட்டிருக்கின்றன. இங்ஙனே பலகாட்டலாம். மணவாளமாமுனிகளின் ரீதியோ ஓரிடத்திலுமிப்படிப்பட்டதன்று. சிறிதும் அடைவுதவறமாட்டார். மூலமுள்ள அடைவிலேயேதாம் வியாக்கியானம் செய்தருளவேண்டுகையாலே மேற்காட்டிய இடம்போன்ற விடங்களில் வியாக்கியானங்களில் அவர் பரதந்திரராய்ச் செல்ல நேருகின்றது. பராதீனதையின்றிக்கே தாம் ஸ்வச்சந்தமாக அருளிச்செய்யுமிடங்களில் மாமுனிகள் தழுவிப்போருகிற அடைவு மற்றொருவர்க்கும் நிலமன்று. இதற்கு ஓரிடமேகாட்டுகின்றேன்; முமுக்ஷுப்படியில் "இத்தை வேதங்களும் ரிஷிகளும் ஆழ்வார்களும் ஆசார்யர்களும் விரும்பினார்கள்" என்ற சூர்ணையின் வியாக்கியானத்திலே திருமந்த்ரத்தை ஆழ்வார்கள் விரும்பினபடியை நிரூபித்தருளுமிடத்து பதினாறு பாசுரங்களையெடுத்துக் காட்டியருளுகிறார் மாமுனிகள்; அங்கு எவ்விதமான அடைவைத் திருவுள்ளம் பற்றியிருக்கிறாரென்பதை நோக்குங்கால் மெய்சிலிர்க்கின்றது. பிறர் அவ்விடந்தன்னை யெடுத்துப்பார்த்தால் அவர்களுடைய புத்திக்கு அவ்வடைவின் அழகு சிறிதும் புலனாகாது. வேணுமாகில் பரீக்ஷையாகவே கேட்டுப்பார்க்கலாம். ஸதாசார்யபாத ஸேவாவைதேசிகர்களான அப்படிப்பட்டவர்களுடைய துர்வாதங்களை யெல்லாம் நீ செஞ்சிற்கொண்டு கேட்பதும் உனக்கு நான் விடையிறுப்பதும் யுக்தமன்றே. ஆனாலும் நீ எதுகேட்டாலும் நானசொல்லுவதாக முன்னம்வாக்களித்துவிட்டபடியால் எதற்சும்பதில் சொல்லியே தீருவேன். இன்னமும் கேளாய் சீமானே!

ஸாது—சீறியருளாமல் கருணையோடு அருளிச் செய்யவேணும். இன்னுமொன்றே யொன்று கேட்டுத் தற்காலம் முடித்துக் கொள்ளுகிறேன். திருவாய்மொழியில் (2—2—4.) * தேவனெம்பெருமானுக்கல்லால் பூவும் பூசனையுந்தகுமே * என்றவிடத்தில் ஈட்டில் "சிக்குத்தலையனுக்குப் பூத்தகாது; பிச்சையுண்ணிக்குப் பூசனைதகாது" என்கிறவார்த்தைகளை மணவாளமாமுனிகள் ஸேவிக்கையில் 'பரம

பவித்திரமான இந்ததிவ்யக்ரந்தத்தில் இந்தவார்த்தைகள் அவ்வளவு அவசியமோ’ என்று தம்முள்தாம் பேசி, இதைச் சொல்ல நமக்கென்ன அதிகாரமென்றும் உடனேயருளிச் செய்தாரென்று பெரியார் சொல்லிவருகிறார்களே ; இது தேவரீர் கேட்டதுண்டோ? இதற்கு எதாவது ஆதாரமுண்டோ? இது நவீனர்களால் ஸ்வகபோல கல்பிதமானதென்றும், நம்பிள்ளைக்கும் ஒரு தாழ்வை ஸ்தாபிக்குமதான அநியாயவார்த்தையென்றும் பிறர் கூறுகின்றார்களே. இதைப்பற்றி தேவரீருடைய திருவுள்ளமென்ன ?

ஸாத்விகர்—அந்த ஈட்டு ஸ்ரீஸூக்தி விஷயமாக மணவாள மாமுனிகள் இப்படி குறையெண்ணினதாகச் சொல்லுகிற வார்த்தைக்கு ஆதாரமுண்டா? என்பது ஒரு விசாரம். இது நம்பிள்ளைக்குத் தாழ்வை ஸ்தாபிக்கிற அநீதியான வார்த்தைதானு வென்பது மற்றொரு விசாரம். உன்னுள்ளம் த்ருப்தியடையும்படி சொல்லுகேன் கேளாய். இந்த வார்த்தை அநீதியானதுதான் என்று தேறிவிடுமானல் இவ்வைதிஹ்யத்திற்கு எவ்வளவு ஆதாரமிருந்தும் பயனில்லை. இது அநீதியன்று, யுக்தமானதே யென்று தேறிவிடுமானல் ஒரு ஆதாரமுமில்லையானுலும் ஹானியில்லை. இதற்கு ஆதாரங் காட்டவேணுமேயானல் மாமுனிகளுக்குப் பிற்பட்டவர்களின் வாக்கிலிருந்துதானே காட்ட முடியும். அன்னவர்கள் எழுதி வைத்திருப்பதை யெல்லாம் நாம் நம்புவதென்றால் பல கஷ்டங்கள் நேரும். பெரியார்களுக்கு அது உடன்பாடுமன்று. குருபரம்பராப்ரபாவாதிகளில் பின்னுருடைய கைச்சரக்குகள் எவ்வளவோ கலந்து விட்டனவென்று தெரிகிறது. யதீந்த்ரப்ரவணப்ரபாவம் ஒன்றல்ல ; ஆசார்ய புருஷர்களின் திருமாளிகை தோறும் ஒவ்வொருவிதமான ஓலைச்சுவடி காண்கிறது இது நிற்க. பெரிய வாச்சான் பிள்ளையின் நாலாயிர வியாக்கியானங்களிலும் ஈட்டிலும் ஆளவந்தார் தொடங்கிப் பல ஐதிஹ்யங்கள் அருளிச்செய்யப்பட்டிருக்கின்றன அவை யெல்லாம் கல்பனையான ஐதிஹ்யங்களே யொழிய ஒன்றுகூட வாஸ்தவமல்ல என்று இதர ஸம்ப்ரதாயஸ்தர்கள் கூசாமல் சொல்லுவதோடு நிற்கவில்லை, எழுதியும் வைத்திருக்கிறார்கள். பெரிய பரகால ஜீயரென்பவர் எழுதிவைத்த பதினெண்ணுயிரப்படியில் இது விசேஷமாகக் காணலாம். *‘புரிவதுவும் புகைபூவே * என்ற விடத்து ஈட்டில் நஞ்சீயர் பட்டரை யொன்று கேட்டதாகவும் அதற்கு பட்டர் ஒரு பதில் ஸாதித்ததாகவு முள்ளது. அதை ரஸிக ப்ராஜ்ஞ ப்ராமணிகர்களனைவரும் ஆனந்த பாஷ்பம் பெருக நின்று சொல்லியும் கேட்டும் மெய்சிலிர்த்துக் களிக்கின்றார்கள். அப்படிப்பட்டவகனை அந்த பரகாலஜீயர் அவலீலையாக தூஷித்திருக்கிறார் ; அந்த ஸம்வாதமே ஸர்வாத்மநா அஸங்கதமென்று முடித்திருக்கிறார். இது ஓரிடமே யன்று. இப்படி நூறிடங்கள் காட்ட முடியும். திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகையுரையில் அதெல்லாம் எடுத்து மறுக்கப்பட்டிருக்கின்றனவென்பது நிற்க. பெரிய வாச்சான் பிள்ளை போல்வார் ஸாதித்திருப்பதெல்லாம் பொய்யான ஐதிஹ்யங்கள், அஸங்கதமான ஸம்வாதங்கள் என்கிற வாதம் எதிர்த்தலையிலுள்ள தென்பது மறைக்க முடியாதது. அரசாணிபாலை வேங்கடாத்வரி *“விதுஷாமபி மோஹமாவஹதோ விததைதிஹ்ய ஸஹஸ்ரவர்ணநே * என்று ச்லோகமெழுதிப் பரவவைத்துப் போய்விட்டார். “ஆளவந்தார் இப்படி யருளிச்செய்வர் ; எம்பெருமானுரிப்படி யருளிச்செய்வர்” என்று அடிக்கடி வியாக்கியானங்களில் வருமிடத்து “ஆளவந்தாரும் எம்பெருமானுரும் ஸாதிக்கும்போது இவர்களிருந்து கேட்டார்களோ? அக்காலத்திலிருந்தவர்களில் ஒருவரு மெழுதிவைக்காத விஷயங்களை இருநூறு முந்நூறு ஆண்டுகட்குப் பின்னே யுள்ளவர்கள் எது கொண்டு தெரிந்து கொண்டார்கள்?” என்றிப்படி சிலர் ஜ்ஞானலவதுர்விதக்தர்களாய் இற்றைக்கும் ஆக்ஷேபஞ் செய்து நிற்கக் காணு நின்றோம். *“தோவ லோக்ய க்ருதிந: பரிபுஞ்ஜதே தம் தத்ரைவ கேபி சபலாச் சலபீபவந்தி” * என்று பட்டரருளிச் செய்த கணக்கிலே நம்பி வாழ்வாரும் எசி வீழ்வாருமாயிருக்கின்றார்கள். வேதத்தில் *“பூர்வே பூர்வேப்யோ வச ஏத தூசு:” * என்றோதியிருக்கிறபடியே பரம்பரையாக வருகிற வார்த்தைகள் பலவுண்டென்பது எந்த மதஸ்தரும் இசைய வேண்டியதாயிருக்கின்றது. பஹுச்ருதர்களென்றும் ஸதாசார்ய பரம்பரையிலே படிந்து காலக்ஷேபம் கேட்டவர்களென்றும் கொண்டாடப்படுகிற பெரியார்கள் எக்காலத்திலுமுளர் ; எந்நாட்டிலுமுளர் ; எம்மதத்திலு முளர். இதிஹாஸ புராணங்களிற் காணுத புராதந கதைகள் நாளைக்கும் கர்ணபரம்பரையாகவே வருவன பலபலவுண்டன்றே. அப்படியே ப்ரக்ருதவார்த்தையும் பஹுச்ருதர்களின் பரம்பரைகளிலே வருகிறதென்றால் சில கூபமண்டூகங்கள் எதையாவது சொல்லிக் கொண்டிருக்கட்டுமே ; அதனுலென்ன? இதற்கு ஒரு ஆதாரம் காட்டினுலும் அதற்கும் தூஷணந்தானே உடனே யேற்படப்போகிறது. சோழனுடைய உபப்லவத்தில் உடையவர் வெள்ளை சாத்திக்கொண்டெழுந்தருளினர் ; ஆழ்வான் காஷாயமணிந்து ராஜ ஸபைக்கு எழுந்தருளினுரென்றால் இதை ஆக்ஷேபிப்பவர்களுக்கு உடையவர் காலத்திலேயே அவதரித்த (கருடவாஹந பண்டிதருடைய) திவ்யஸூரி சரிதத்தையும் (வடுக நம்பியினுடைய) யதிராஜ வைபவத்தையும் அசைக்க முடியாத ப்ரமாணமென்று காட்டினுலுங்கூட

அவற்றையும் அஸத்யமென்றே அஸங்கதமென்றே தூஷிக்கத்தானே தலைப்படுகிறார்கள். இப்படி பல்லாயிரம் காட்டுவேன். ஆகவே இந்த ஐதிஹ்யத்திற்கு ஆதாரமென்ன? என்கிற கேள்வியை விட்டிடு; பஹுச்ருதர்கள் பரம்பரையாகச் சொல்லி வருவதே ப்ரபலமான ஆதாரம். அது அவிச்சின்ந பரம்பரையாய் நீடூழி நிலவுதற்காக ஒரு பெரியார் எழுதி வைத்தால இதில் ஆக்ஷேபமும் தூஷணையும் எதற்கு?

ஸாது—அஸங்கதமான விஷயமென்று தோன்றினல் ஆக்ஷேபியாமலிருப்பார்களோ?

ஸாத்விகர்—இது வாஸ்தவம்; விஷயம் ஸங்கதமா அஸங்கதமா? என்கிற விசாரம் அவச்யம் செய்யத் தக்கதே. அது செய்தே தீருவோம். முன்ன மொன்றுரைக்கின்றேன் கேள். * சிக்குத்தலையனுக்கித்யாதி ஸ்ரீஸூக்தி விஷயமான ப்ரக்ருத ஐதிஹ்யத்தை நானே இன்று கல்பித்துச் சொல்லுகிறேனென்றே வைத்துக்கொள். இதை எதற்காகச் சொல்லுகிறேனென்பதை முன்னம் விமர்சிக்க வேண்டும். பரதாழ்வான் அபரிமிதமான ஆர்த்தியோடு எப்படியாவது பெருமாளை மீட்டு எழுந்தருளப் பண்ணிக் கொண்டு போகவேணு மென்கிற பரமபக்தியோடே வருகிறான்; அவனை குஹப் பெருமாள் பார்த்து ஒருக்ஷணம் ஸ்வல்பம் அதிசங்கித்ததாக வால்மீகி ராமாயணத்திலுள்ளது. இவ்விஷயத்தைக் கம்பர் சண்ட ப்ரசண்டங்களான பதினைந்து செய்யுள்களினல் பெரும் புராணமாக வளர்த்திருக்கிறார். "அஞ்சன வண்ண னென்னுருயிர்நாயக னுளாமே வஞ்சனையா லரசெய்திய மைந்தரும் வந்தாரே, செஞ்சரமென்பன தீயுமிழ்கின்றன செல்லாவோ, உஞ்சிவர் போய்விடின் நாய்க்கு கனென்றெனை யோதாரோ" "ஆழ நெடுந்திரையாறு கடந்திவர் போவாரோ, வேழநெடும்படை கண்டுவிலங்கிடும் வில்லாளோ, தோழமையென்றவர் சொல்லியசொல்லொரு சொல்லன்றே, ஏழைமைவேட னிறந்கில னென்றெனை யேசாரோ" என்றிப்படி மிகமிகக் கொடிய பேச்சுக்களைப் பெய்து கம்பர் கதையை மிக விரித்து விட்டார். ஒரு ராமாயணத்திலாவது இவ்வளவுக்கு ஆதாரமுண்டோ? பரமபாகவத சிகாமணியான பரதாழ்வான் மீது குஹன் இவ்வளவு த்ரோஹபுத்தி கொண்டானென்றால் புது நரகமன்றே படைக்கவேணும். பரதாழ்வானுக்கும் ராம த்ரோஹியென்கிற அபக்க்யாதியைப் பரப்பி, குஹனுக்கும் பாகவதா பசாரப் படுகுழியை வளர்த்தி இப்படி எதுக்குக் கம்பர் பாட்டுக்களைப் பணித்தார்? என்று கேட்டால் வாய்திறக்க முடியுமோ பிறர்க்கு? குஹன் இராமனிடத்து வைத்திருந்த அன்பு அளவுகடந்தது என்கிற வொரு விஷயத்தை நிலை நாட்டுதற்கே கம்பர் இத்தனை கற்பனை பண்ணினர் என்று சொல்லவேண்டியது தவிர வேறில்லையே. மேலே விபீஷண பரிக்ரஹ ப்ரகாணத்தில் பெருமாள் ஸுக்ரீவ மஹாராஜரை நோக்கி ஒன்று சொன்னதாக [வான்மீகத்திலில்லாததை] கம்பர் கூறியுள்ளார்; * ஆதலாலபய மென்ற பொழுதத்தே * என்ற செய்யுளில் "என்பால் வைத்த காதலால் இனி வேறெண்ணக் கடவதென் கதிரோன் மைந்த!" என்றுள்ளது காண். ஸ்ரீராமபிரானிடத்துள்ள பக்திபெருங் காதலினல்தான் ஸுக்ரீவன் விபீஷணாழ்வானை அதிக்ஷேபித்தானென்று காட்டினரன்றே. இங்ஙனே குஹனுக்கும் ஸ்ரீராம பக்தி மிகப்பெரிதென்று காட்டுதற்காகவே கம்பர் விசேஷகற்பனை செய்தார் என்று சொல்வதை இங்கு நிதர்சனமாகக் கொள்ளாய்.

ஸாது—அடியேன் மனத்தில் நன்கு பதியும்படி இன்னமுஞ்சிறிது விவரித்தருளிச் செய்ய வேணும்.

ஸாத்விகர்—'பரமபவித்திரமான ஈட்டிலே * சிக்குத்தலையனுக்கித்யாதிவார்த்தைகள் இல்லாமலிருந்தால் நன்றாயிருக்குமே' யென்று மணவாளமாமுனிகள் திருவுள்ளம்பற்றினரென்றால், இதனல் ஈட்டுக்கு ஒரு அவத்யம் எற்படுகிறதென்றாவது நம்பிள்ளைக்கொரு குறை விளைகின்ற தென்றாவது சொல்ல ப்ரஸக்திலேசமுங்கிடையாது. 'ஒருவருடைய மனமும் சிறிதும் புண்படாதபடி ஸ்ரீஸூக்திகள் அமைந்திருக்கவேணுமென்று நினைப்பவர் மணவாளமாமுனிகள்' என்று அவரொருவர்க்கே அஸாதாரணமாகவுள்ள பெரும்புகழ் ஒன்றேதான் இந்த கற்பனையால் தேறும். [கற்பனையென்றது தூஷகர்களின் நினைவாலே. "தர்மமென்கிறது ப்ரமித்தவர்ஜுனன் கருத்தாலே" என்றது போல.]

ஸாது—ஆனலும் மஹாவ்யாபகரான நம்பிள்ளைஸாதித்த உயர்ந்தஸூக்தியிலே, பரமப்ராமாணிகராய் * முன்னோர்மொழிந்த முறைதப்பாமற் கேட்டுப்பின்னோர்ந்து தாமதனைப் பேசுவதையே விரதமாகக் கொண்டவரான மாமுனிகள் ஒரு குறை கூறினரென்றால் இதனலேற்படுகிற பெரும்புகழ் இருக்கட்டும்; இதுவே அவர்க்கொரு அவத்யமன்றே.

ஸாத்விகர்—இத்தனைநாழிகை நான்சொன்னதையெல்லாம் அரண்யருதிதமாகவும் கடலோசையாகவு மாக்கிவிட்டீனேயே; இது நீ உன்னபிப்ராயத்தினல் கேட்கிற கேள்வியன்று, விஷயத்தை வாங்கிக்கொள்ளாமல் சிலர் மூர்க்கத்தனமாகத் தம்வாதத்தையே செய்துகொண்டிருப்பர்களென்று நீ காட்டுகிருய் போலும். இன்னமுஞ் சொல்லுகேன் கேளாய். ஸ்ரீவசநபூஷணம் 234—சூர்ணையின் வியாக்கியானத்திலே எம்பெருமானர் ஸ்வாசார்யரான பெரியநம்பியை எதிர்த்துப் பேசினதாக ஒரு ஐதிஹ்யம் மாமுனிகளால் அருளிச்செய்யப்பட்டுள்ளது. பெரியநம்பி மாறனேர்நம்பியை ஸம்ஸ்கரித்து எழுந்தருளினுராம்; அத்தை உடையவர் கேட்டருளி பெரிய நம்பி ஸ்ரீபாதத்திலேவந்து 'ஸ்வாமிந் மர்யாதை கிடக்கக் கார்யஞ் செய்யவேண்டாவோ? தேவரீரே இதைச் செய்யவேணுமோ? யாரேனுமொருவரையிட்டுச் செய்திருக்கக் கூடாதா?' என்று ஆக்ஷேபித்ததாகவும் அதற்குத் தக்கவிடை பெரியநம்பி விடுத்ததாகவும் ஸாதிக்கப்பட்டிருக்கிறது. அவர் விடுத்த விடை கிடக்கட்டும்; எம்பெருமானர்க்குத் தெரியாத விஷயத்தை அவர் அபூர்வமாக வொன்றும் சொல்லி விடவில்லை. எம்பெருமானர் அவரிடம் சென்று ஏதோ ஆக்ஷேபித்ததாக எழுதப்பட்டிருக்கிறதே, இது ஸ்வாமியின் ப்ரக்ருதிக்குச் சேருமா? ஸ்வாசார்யர் அவிவேகியல்லரே; அவர் ஒன்று செய்தாரென்றால் அதையாக்ஷேபிக்க இவர்க்கு அதிகாரமுண்டோ! ஆக்ஷேபத்தை நெஞ்சால் நினைக்கத்தான் ப்ரஸக்தியுண்டோ? தைத்திரீ யோபநிஷத்தில் "அத யதி தே கர்மவிசிகித்ஸா வா வ்ருத்தவிசிகித்ஸா வா ஸ்யாத்" என்று தொடங்கி "யதா தே தத்ர வர்த்தேரந், ததா தத்ர வர்த்தேதா:" என்று ஓதிற்றேயொழிய அவர்கள் செய்வதை ஆக்ஷேபித்துக் கொண்டுகிட' என்று ஓதிற்றில்லையே; ஏதோ காரணர்த்தமாக ஸ்வாமி ஆக்ஷேபித்திருந்தாலும் அதை அம்பலத்தில் அவிழ்த்துவிடலாமோ? ஆசார்யஹ்ருதயத்தில் "புரோடாசமாகச் செய்த புத்ரக்ருத்யமும்" என்றது போலே முக்கியமானதைச் சொல்லிவிட்டு ஆக்ஷேபத்தை மறைத்து விடலாகாதா? பெரிய திருமொழியில் * கண்சோர வெங்குருதி ப்ரவேசத்திலும் ஸ்வாமி ஸ்வாசார்யரை ஆக்ஷேபித்ததாகவே பெரியவாச்சான் பிள்ளை ஸாதித்திருக்கிருர். இவ்வளவோடும் நிற்கவில்லை; ஆளவந்தார் ஸ்ரீபாதத்திலே நேராகக் கேட்ட திருமாலையாண்டான் ஸாதித்த அர்த்தங்கள் பலவற்றையும் எம்பெருமானர் ஆக்ஷேபித்து, * விச்வாமித்ர ஸ்ருஷ்டியென்று அவர்தாமே வருந்திப் பேசும்படியும் காலக்ஷேபமும் நின்றுபோகும்படியும் ஸ்வாமி யெம்பெருமானர் பல பல பேசியிருப்பதாக வாசிக்கிறோம். பெரிய திருமொழியில் * அரக்கராட்டழைப்பாரில்லை நாங்களஞ்சினோம் * என்றவிடத்தில் நஞ்சீயர் ஸாதித்த வொருபொருளை நம்பிள்ளை கேட்டு "அப்படியா அர்த்தம் சொல்வது, இப்படிச் சொல்லவேண்டாமா? என்றதாகவும் "ஆமாம், நீர் சொல்லுகிறபடித்தான் சொல்லவேண்டும்" என்று நஞ்சீயர் தழுவிக்கொண்டதாகவும் பெரியவாச்சான் பிள்ளை பணித்துள்ளார். * கரியமாமுகிற் படலங்கள் கிடந்து அவை முழங்கிடக் களிறென்று பெரியமாசுணம் வரையெனப் பெயர்தரு பிரிதி * என்ற விடத்து வியாக்கியானத்தில் ஐதிஹ்யமுங் காணலாம். அவையெல்லா மொருபுறமிருக்கட்டும். ஸ்வாமி யெம்பெருமானருடைய விஷயங்களை யெடுத்துரைத்தேனே; அவற்றைப் புறமதத்தவர்கள் கண்டுங் கேட்டும் என்ன சொல்லுகிருர்களென்பதையறிவாயோ?

ஸாது—இப்படிப்பட்ட விஷயங்களை தேவரீருடைய திருவாக்கில் கேட்கவேணுமென்றுசை கொண்டே அடியேன் வினவினேன். நம்முடைய ஸம்ப்ரதாய க்ரந்தங்கள் ஒரு பக்கமிருக்க; உலகமெல்லாம் போற்றும் ஸ்ரீராமாயணத்தினுள்ளே புகுவோம். பாதாழ்வானைப் பற்றிப் பேசுகின்ற வான்மீகி முனிவர் * "விலலாப ஸபாமத்யே ஜகர்ஹே ச புரோஹிதம் * என்கிருர். ஞானுனுட்டான நிதியாய்ப் பரமாசார்யரான வஸிஷ்டரை மிக்க செருஞ்சபை நடுவே பாதன் வாய்வந்தபடியெல்லாம் வைது அஸஹ்யாபசாரப் பட்டதாக வான்மீகி யெழுதுகிருர். "விலலாப ஸபாமத்யே பரதச் சோககர்சித:" என்றுப்போலே ச்லோகமிட்டிருந்தால் எவ்வளவு அழகாயிருக்கும். அச்சமாக கர்ஹிக்கும்படி வஸிஷ்டபகவான் அவ்வழக்காக என்ன பேசி விட்டான்? யுக்தமானதையே யன்றோ அவன் சொல்லியிருப்பது. அது பாதாழ்வானுக்கு மிகவும் அஸஹ்யமாயிருந்ததென்பது வாஸ்தவம். அதனுல் அவன் ஆசார்ய நிந்தை பண்ணவேண்டிய அவசியமில்லையே. *"ராஜ்யஞ்சாஹஞ் ச ராமஸ்ய தர்மம் வக்துமிஹார்ஹஸி" * என்ற விநயமஸ்ருண வார்த்தையோடு நிற்பதன்றோ அழகு. * ஸபாமத்யே ஜகர்ஹேச புரோஹிதம் * என்னும்படியான அஸந்தர்ப்பவார்த்தைகள் எதுக்கு அதைரிக்கவேணும்? இப்படிப்பட்ட பலகோடி நூறுயிரம் விஷயங்களைச் சிறிதும் விமர்சியாமல், காகிதமும் பேனவும் கைவசமுள்ளதென்று மூர்க்க ஜனங்கள் எதையேனும் எழுதிவைக்கவும் அதைக் கண்டு சில ஜடங்கள் ஹாஹா என்னவும் சேர்ந்துவிடுகிறது. பரமபவித்திரமான ஈட்டில் சிக்குத் தலையனுக்கித்யாதி வார்த்தைகள் இருக்கத் தகவே தகாதென்று மாமுனிகள் விசித்தாந்தஞ் செய்து முடித்திட்டதாக ஐதிஹ்ய சரீரமில்லை; அப்படியிருந்தால்கூட ஆக்ஷேபிக்க இடமே கிடையாது. நம்பிள்ளையோ பட்டரோ

எம்பெருமானுரோ நாதமுனிகளோ நம்மாழ்வாரோ யாவரும் * தஸ்ய நார்ஹந்தி கலாம் கோடிதமீபபி * என்றாப்போலே மணவாளமாமுனிகளின் ப்ரக்ருதிக்கு ஏகதேசமு மொவ்வார் என்பது பொய்ம்மை யொன்றில்லாத மெய்ம்மைப் பெருவார்த்தை. அவருடைய திருவாக்காகச் சொல்லபபடும் வார்த்தை ஸம்பாவிதமா அன்று என்பதை * என் நெஞ்சினால் நோக்கிக் காணீர் * என்றாப்போலே அவருடைய திருவுள்ளததாலன்றோ நோக்கிக் காணவேணும். ஈட்டு ஸ்ரீஸூக்திகளைக் கண்டபாடஞ் செய்திருந்த மாமுனிகள் சிக்குத்தலையனுக் கித்யாதி ஸூக்திகளைப் பாடத்திற் கொள்ளாது விட்டிட்டாரென்று யாரேனு மெழுதிற்றுண்டோ? அது இல்லையே.

ஸாத்விகர்—அப்படிகூட எழுதிவைத்திருக்கவேண்டுமென்றே நான் சொல்லுவேன். ஆசார்ய ஹ்ருதயத்தில் (69) "உதாத்தாதி பதக்ரம ஜடாவாக்ய பஞ்சாதி" இத்யாதி சூர்ணையின் மாமுனிகள் வியாக்கியானத்தை யெடுத்துப்பார். மூலத்தில் "பந்தம்" என்றும் "தளை" என்றும் இரண்டு சொற்கள் உள்ளன; மாமுனிகள் "பந்தமும் தளையுமொன்றாகையால் இங்கே பந்தமென்றும் மேலே தளையென்றும் சொல்லுமளவில் புநருக்தமாகையாலே இரண்டத்தொன்று வர்ஜிக்கவேணும்" என்றருளிச்செய்கிறார். நான்கு வரிகளுக்குமேலே "துறை என்கிற விதுவும் இனத்தின் வகையிலொன்றாகையாலே புநருக்தமாம்" என்கிறார். இவற்றால் மூலத்தில் இரண்டு சொற்களை வர்ஜித்துப் பாடஞ்செய்யவேணுமென்று மாமுனிகள் நியமிப்பதாகத் தேறுகின்றது. 'இப்படி யெழுதலாமா இவர்?' என்று ஒருவன் கேட்டுவிட்டால்' "வாய்திறக்கவுண்டோ வழி" என்ன வேண்டியதே. வையாகரண கோஷ்டியிலே சென்றால் "மஹா பாஷ்யே ப்ரத்யாக்க்யாதம்" என்று பல்லாயிரம் முறை காதிலும் கண்ணிலும் விழுகிறது. பதஞ்சலி மஹர்ஷிக்கு மிக முற்பட்டவர் பாணினிமஹர்ஷி. அப்படிப்பட்டவருடைய ஸூத்ரங்களைத் தள்ளி விடுவதற்குப் பதஞ்சலி யாரிடமிருந்து அதிகாரம் பெற்றாரென்று கேட்டறிய வேணும். நேற்றுவரை ஸம்ப்ரதாய வாஸனையே யறியாமற் கிடந்து "புதுத் தெய்வங்கொண்டாடுந் தொண்டர்" என்று திருமங்கையாழ்வாரழைக்க, நாயிந்தே யென்னத் தகுதியுடையார் வயிற்றெரிச்சல் தாங்கமாட்டாமல் எதையோ எழுதிவைத்தால்......போதும்.

ஸாது—க்ருபையுடன் க்ஷமித்தருளவேணும். இன்னுமொன்றேயொன்று கேட்டு நிற்கிறேன். அவகாசமளிக்கலாமோ?

ஸாத்விகர்—ஒன்றல்ல, ஒன்பதல்ல, ஒன்பதினாயிரமுங் கேள் என்று முன்னமே சொல்லி யிருக்கிறேன். ஒன்று மாத்திரம் நினைப்பூட்டுகிறேன்; ஸர்வஜ்ஞரும் பரம ரஸிகருமான பெரிய வாச்சான் பிள்ளை சாஸ்த்ரார்த்தங்களை அத்புதமாக அருளிச்செய்வதுபோலே ஹாஸ்யரஸபுஞ்ஜமான வேடிக்கை வார்த்தைகளும் ஊடேயெழுதிவைப்பதுண்டு; அவருடைய வியாக்கியானங்களில் "ஸாமான்ய னென்று இடுமீடெல்லாம் இடுங்கோளென்றிருந்தான்" என்றும் "ஸாமான்யனென்று இடுமீடெல் லாம் இடவமையும் என்பாரைப்போலே" என்றும் காண்கிறது. இதை விவரிக்கின்ற அரும்பத வுரைகாரர்கள் அழகர் திருமலையில் சோழியர்க்கும் ஸாமாந்யர்க்கும் நடந்த சண்டைக் கதையே இங்கு விஷயமென்று வேடிக்கையான கதையொன்றைக் காட்டுகிறார்கள். அப்படிப்பட்ட மல்லர் களோடே பொரகில்லோம் நாம். விஷயங்கள் எவ்வளவும் சொல்லவல்லோம்.

ஸாது—அடியேன், அது தெரிந்ததே. பரந்த ரஹஸ்ய ஸ்ரீஸூக்திகள் தேசிகக்ரந்தங்களுக்கு விடைகூறுகிறமுறையில் அமைந்திருக்கின்றன வென்பதைக்காட்டி, இதனாலும் பரந்த ரஹஸ்யம் பிள்ளை லோகாசார்யருடைய திவ்ய க்ரந்தங்களுக்குப் பிற்பட்டதே யென்று நன்கு நிஷ்கர்ஷிக்கப் படுமென்று பெரியார் கூறுகின்றனர். இதற்கு பதில் சொல்லப் புகுந்த பிறர் "தேசிகருடைய கொள்கைக்கு மாறுபட்ட அபிப்ராயங்கள் நம்பிள்ளை முதலியோரருளிய ஸ்ரீஸூக்திகளிலும் காணப் படுகின்றன. பரந்தரஹஸ்யத்தில் மட்டுமென்ன? பெரிய வாச்சான் பிள்ளையின் திவ்யப்ரபந்த வியாக்கியானங்களிலும் எவ்வளவோ பங்க்திகள் தேசிக க்ரந்தங்களுக்கு விடைகூறுகிற முறையில் அமைந்திருக்கின்றன; ரஹஸ்ய விவேக க்ரந்தமே இதற்குப்போதுமான சான்று" என்கிறார்கள். இவ்விஷயத்தில் தேவரீருடைய திருவுள்ளமறிய விரும்புகிறேன்.

ஸாத்விகர்—நம்மாழ்வார் திருவிருத்தத்தில் * வணங்குந்துறைகள் பலபலவாக்கி, மதிவிகற்பால் பிணங்குஞ்சமயம் பலபலவாக்கி * என்றருளிச் செய்திருக்கையாலே அநேகமதக் கோட்பாடுகள் அநாதிகாலமாகவேயுண்டென்பதை யாவருமறிவர். பிராட்டிக்குப் புருஷகாரத்வமேயொழிய உபாயத்வ மில்லையென்கிற பகவச்சாஸ்த்ர ஸித்தாந்தத்திற்கு மாறாக அவளுக்கு உபாயத்வமுமுண்டென்கிற மதம்

தேசிகர்க்கு முற்பட்டவர்களின் காலத்திலுமுண்டென்பதை நிராக்ஷேபமாக இசைந்து கொள்வோம். அந்த மதத்தை அவலம்பித்தவர்கள் யாவரும ஒரே விதமான யுக்தி ப்ரமாணங்களைப் பேசமாட்டார்கள். ஒவ்வொருகாலத்திலே ஒவ்வொரு புலவர் ஒவ்வொருவிதமான யுக்தியையும் ப்ரமாணத்தையுங்கொண்டு வாதம் நிகழ்த்துவர்கள். அப்படிப்பட்ட ப்ரமாண ப்ரதர்சக யுக்திவாத விசேஷங்களைக்கொண்டும் அவற்றுக்கு பதில் கூறியிருக்கிற ப்ரணிகளைக்கொண்டும் நிஷ்கர்ஷிக்கப்படு முண்மை அசைக்க முடியாதது. ப்ரக்ருதத்தில், * வேரிமாறாத பூமேலிருப்பாள் வினைதீர்க்குமே * என்கிற ஆழ்வார் பாசுரத்தை ப்ரபல ஆதாரமென்று கொண்டு, பிராட்டியின் உபாயத்வத்தை இதுகொண்டு ஸ்தாபிக்க வந்தவர் தேசிகரொருவரே. அவர்க்குமுன் யாரும் இந்த ப்ரமாணத்தைக்கொண்டு வாதிக்கப் புகுந்த தில்லை, இந்தவாதம் பெரியவாச்சான் பிள்ளை காலத்திலேயே தோன்றியிருந்தால்—அவர் பரந்த ரஹஸ்யமருளிய ஆசிரியராயுமிருந்தால் திருவாய்மொழியில் அந்தப்பாசுரத்திற்கு வியாக்கியான மருளிச் செய்யு மிடத்திலும் பரந்தரஹஸ்யத்திற்போல் மறுப்பு எழுதியிருப்பர். அவ்விடத்து ஸ்ரீஸூக்தியை ஸேவித்தால், இந்தப்பாசுரத்தை உபஷ்டம்பகமாகக் கொண்டு ஒரு வாதம் தோன்றியிருக்கிற தென் பதைப் பெரியவாச்சான் பிள்ளையறிந்திலர் என்று ஸ்புடமாகவுணரலாம். ஒரு வாதம் விளைந்தால் அதில் எது உயிரான விஷயமோ அதைச்சுருங்கக்ராஹிகயா கொள்ளவும் அதற்கு ஸமஞ்ஜஸமான விடையிறுக் கவும் பிறர்க்கு ஆற்றல் எது? சைலீவாதத்தில் அனேகமருமங்கள் உண்டு. "இவர்கள் சைலி சைலி யென்று கூச்சலிடுவதனல் என்னப்ரயோஜனம்?" என்பவர்கள் சைலியைப்பற்றி மத்யஸ்தர்கள் எவ் விதமாகக் கூறுகின்றார்கள் என்பதைச் சிறிதுமறியாதவர்கள்; அறியவும் ஆற்றலற்றவர்கள். ஸம்ப்ர தாய ப்ரவசநதுரந்தரரென்று உண்மைப்புகழ்பெற்ற (பம்பாய்மகாநகர.) வீ. வீ. ஐயங்கார் ஸ்வாமிகள் எவ்வளவு அழகாக விஷயத்தை க்ரஹித்திருக்கிறார்! "பெரியவாச்சான் பிள்ளையின் ஸூக்திகள் போன்ற சிறுவாக்யங்களும் அஸாதாரணமான பங்க்திகளும் மனத்தையுருக்குமே; அந்த பந்தா எங்கே, பரந்தரஹஸ்யத்தின் பந்தா எங்கே?" என்று நிஷ்பக்ஷபாதமாக வெளியிட்டவர் அந்தவொரு ஸ்வாமியே யன்றோ. அந்தமஹான் பரமக்ருபையுடன் நேரில்ஸேவை ஸாதிக்க நேற்றே ஸ்ரீரங்கமெழுந்தருளி னர். அவர்திருவடிகளிற்பணிந்து தினவடங்கக் கேட்டுத் தெளியட்டும்.

ஸாது—அப்படியா? அந்த மஹான் இப்போது இந்த ப்ராந்த மெழுந்தருளியிருக்கிறாரா? அநி யாயமாய் இந்த சிசுபாலவாக்குக்கு அந்தமஹானும் இரையானவரே. * மின்னிடை மடவாரில் ஏழாம் பாட்டின் ஈற்றடியின் காரியமும் நடந்துவிடுமோவென்று மிகவஞ்சுகிறேன். அந்த விலக்ஷணவ்யக்தி விசேஷத்திற்கு ஸ்ரீவைஷ்ணவவுலகமெல்லாங் கூடிப்பல்லாண்டு பாடவேண்டியது மிக அவசியம். இரா மாநுசநூற்றந்தாதியில் * பொருந்தியதேசும் பொறையும் திறலும் புகழும் நல்ல திருந்திய ஞானமும் செல்வமுஞ் சேரும் எங்களிராமானுசனையடைபவர்க்கே * என்று கூறப்பட்ட அரும்பெரும் பேறுக ளெல்லாம் அந்த மஹானிடத்தில் ப்ரத்யக்ஷமாகக் குடிகொண்டிருக்கக்காண்கிறோம். அடியேனும் அவர்க் கே பல்லாண்டு பாடவிடைகொள்ளுகிறேன். நியமித்தருளவேணும் அடியேனுக்கு ஸந்தேஹபரிஹா ரங்களை தேவரீர் அநுக்ரஹித்தருளினல் இந்தமஹோபகாரம் அடியேனளவில் சுவறிப் போகாது; உல குக்கெல்லாம் மஹோபகாரமாகத் தலைக்கட்டும். விடைகொள்ளுகிறேன்.

இருவரும் பிரிந்தனர்.

ஸ்ரீகாஞ்சீ, ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர் அமைத்த
**ஸாது ஸாத்விக ஸம்வாதத்தில்**
முதல் ஆஹ்நிகம் முற்றிற்று.

ஸ்ரீ:
ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்,

# மாமுனிவன் மேற்கோள்விளக்கு.

(ஸ்ரீகாஞ்சி. அண்ணங்கராசாரியர் தொகுத்தது.)

மணவாளமாமுனிகள் அருளிச்செய்த நான்கு ரஹஸ்ய வியாக்கியானங்களில் ஆளவந்தார்முதல் வாதிகேஸரி அழகியமணவாளச்சீயர்வரையிலுமுள்ள ஆசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளை மேற்கோளாக எடுத்துக்காட்டியிருக்குமிடங்களின் விவரணம்.

## 1. ஆளவந்தார்.

(ஸ்ரீவசநபூ.) 182. அநந்தரம் பரமாசார்யரான ஆளவந்தார்வசனத்தை யருளிச்செய்கிறார் * ந தேஹம் ந ப்ராணாந்.......*

259. ஆகையிறே நாதமுனிகளுடைய திவ்ய வைபவத்தை யருளிச்செய்கிற ஆளவந்தார் * அசிந்த்யாத்புதாக்லிஷ்டஜ்ஞாந வைராக்யராசயே—அகாதபகவத்பக்தி ஸிந்தவே * என்றருளிச்செய்தது.

323. * மாதா பிதா யுவதயஸ் தநயா விபூதி: * என்று ஐஹிகபோகங்களையும், ஸர்வம் என்று அநுக்த ஸகல கதநத்தாலே மந்த்ர தேவதாபலாதிகளையுமெடுத்து இத்தனையும் ஆழ்வார் திருவடிகளே யென்று......இவ்வர்த்தத்தைப் பரமாசார்யரான ஆளவந்தாருமருளிச்செய்தார்.

380. இப்படி ஆழ்வாரருளிச்செய்த இவ்வர்த்தத்தை * நிராஸகஸ்யாபி ந தாவதுத்ஸஹே......என்று அளவந்தாரருளிச்செய்தாரிறே.

(தத்வத்ரய) 3. * சிதசிதீச்வரதத்ஸ்வபாவ * என்று ஆளவந்தாரும்......

45. * நிவாஸசய்யாஸந......சேஷ இதீரிதே ஜநை: * என்றிறே ஆளவந்தாருமருளிச்செய்தது. (மற்றுமுள்ள ததீயரைப்போலே அநியமமாயிராதே ஸர்வேச்வரன் அமுது செய்த சேஷமொழிய அமுது செய்யாத நியமத்தைப்பற்ற சேஷாசநரென்று ஸேனை

குறிப்பு. 182. 259. என்றிப்படி குறிக்கும் லக்கங்களெல்லாம் அந்தந்த க்ரந்தங்களிலுள்ள சூர்ணைகளுக்கான லக்கங்கள். ஆங்காங்கு மணவாள மாமுனிகளின் வியாக்கியானத்தில் இவை காண்க.

முதலியாரை நிரூபிக்கிறது.) * த்வதீயபுக்தோஜ்ஜித சேஷ போஜிநா * என்றுரிறே ஆளவந்தாரும்.

70. * ஆச்ரயாதந்யதோ வ்ருத்தே ராச்ரயேண ஸமந்வயாத், த்ரவ்யத்வஞ்ச குணத்வஞ்ச ஜ்ஞாநஸ்யைவோபபத்யதே * என்றிறே ஆளவந்தாரருளிச்செய்தது.

92. இந்த மதநிராகரணார்த்தமாகவிறே ஆளவந்தார் * குண: ப்ரதாநம் * என்று பிரித்தருளிச்செய்தது.

(ஆசார்யஹ்ருத.) 66. பாஷ்யகாரர் அப்படி செய்தருளுகைக்கடி *விதயச் ச வைதிகாஸ் த்வதீயகம்பீர மநோநுஸாரிண: * என்று......இவ்வாழ்வார் போல்வார் நினைவை சாஸ்த்ரங்கள்தான் பின்செல்லுமதாகப் பரமாசார்யரான ஆளவந்தார் அருளிச்செய்த வசனம்.

87. * தவ தாஸ்யஸுகைகஸங்கிநாம் பவநேஷ் வஸ்த்வபி கீடஜந்ம மே * என்று.......பெரிய முதலியார் ப்ரார்த்தித்தார்.

151. ஸாம்ஸாரிக ஸகலஸங்கமுமற்று உத்தமாச்ரமிகளாய்ப் பரமஹம்ஸ சப்தவாச்யரான நாதமுனிகள் யாமுன முனிகள் போல்வாரையும்......அன்னமென்று சொல்லும்.

## 2. பெரியநம்பி.

(ஸ்ரீவசந பூ.) 234. அபிமாநஹேதுவான ஜன்மவ்ருத்தாதிகளின்றிக்கே ஆளவந்தார்ஸ்ரீபாதத்தையுடையராய் அத்யாத்மஜ்ஞாந பரிபூர்ணராயிருக்கிற மாறனேரி நம்பி தம்முடைய அந்திமதசையிலே 'ஆளவந்தார் அபிமானித்தருளின இத்தேஹத்தை ப்ராக்ருத பந்துக்கள் ஸ்பர்சிக்கில் செய்வதென்?' என்று அதிசங்கைபண்ணி ஸப்ரஹ்மசாரியான பெரிய நம்பியைப்பார்த்து 'புரோடாசத்தை நாய்க்கிடாதே கிடீர்' என்றருளிச்செய்து திருநாட்டுக்கெழுந்தருள, பெரிய நம்பியும் அப்படியே பிறர் கையில் காட்டிக்கொடாதே தாமே பள்ளிபடுத்துவந்தெழுந்தருளியிருக்க, இத்தை உடையவர் கேட்டருளி பெரியநம்பி ஸ்ரீபாதத்திலே வந்து 'ஜீயா! மர்யாதை கிடக்கக் கார்யஞ்செய்ய வேண்டாவோ? தேவரீர் செய்தருள வேண்டிற்றோ?' என்ன, 'ஆளிட்டந்திதொழுவோ? நான் பெருமாளிற் காட்டில் உத்க்ருஷ்டனோ? இவர் பெரியவுடையாரிற்காட்டில் அபக்ருஷ்டரோ? * பயிலுஞ் சுடரொளி, நெடுமாற்கடிமை கடலோசை யோபாதியோ? ஆழ்வாரருளிச் செய்த அர்த்தத்தைச் சிறிது குறையவாகிலும் ஆசரிக்க வேண்டாவோ?' என்று (பெரிய நம்பி) அருளிச்செய்த வார்த்தை.

(ஆசார்யஹ்ருத.) 85. ப்ரஸித்தரான நம்பிகள் மூவரிலும் ப்ரதானரான பெரியநம்பி மாறனேரி நம்பிக்கு......செய்த புத்ரக்ருத்யமும்.

## 3. திருக்கோட்டியூர் நம்பி.

(முமுக்ஷுப்படி. சரமச்லோ. அவதாரிகை.) இதிலர்த்தம் கேட்கைக்காகவிறே எம்பெருமானார் பதினெட்டு பர்யாயம் திருக்கோட்டியூர் நம்பி பக்கல் எழுந்தருளிற்று. நம்பிதாமும் இதில் அர்த்தத்தினுடைய கௌரவத்தையும் இதுக்கு அதிகாரிகளில்லாமையையும் பார்த்திறே இவருடைய ஆஸ்திக்யாதர பரீக்ஷார்த்தமாகவும் பலகால் நடந்து துவளப்பண்ணி சூளு(ழ)றவு கொண்டு மாஸோபவாஸங்கொண்டு அருமைப்படுத்தியருளிச் செய்தருளிற்று.

## 4. எம்பெருமானர்.

(ஸ்ரீவசந பூ.) 96 * க்ஷமா ஸத்யம் தமச் சமஃ * என்கிற விடத்தில் * தமோ பாஹ்யகரணாநாம் அநர்த்த விஷயேப்யோ நியமநம் ; சமஃ அந்தஃகரணஸ்ய ததா நியமநம் * என்றிறே பாஷ்யகாரருமருளிச்செய்தது.

146. ஸர்வாபராதங்களுக்கும் ப்ராயச்சித்தமாயிறே ப்ரபத்திதானிருப்பது. இப்படியிருந்துள்ள ப்ரபத்தியை * த்வத்பாதாரவிந்தயுகளம் சரணமஹம் ப்ரபத்யே * என்று பண்ணியருளின பாஷ்யகாரர்க்கு ஸ்வபூர்வவ்ருத்தத்தை யநுஸந்தித்தவாறே அதுதானும் அபராத கோடியிலேயாய் * த்வமேவ மாதா ச * என்று தொடங்கி இத்தலையிலபராதத்தைப் பொறுக்கைக்குறுப்பான பந்த விசேஷங்களை யெல்லாம் விண்ணப்பம் செய்துகொண்டு * தஸ்மாத் ப்ரணம்ய * இத்யாதியாலே இப்படி திருமுன்பே கூசாமல் வந்து நின்று ப்ரபத்தி பண்ணின இவ்வபராதத்தைப் பொறுத்தருளவேணுமென்று க்ஷாமணம் பண்ண வேண்டும்படி நில்லா நின்றதிறே யென்கை.

160. ........பாஷ்யகாரர் கத்பத்தில் உத்தர கண்டார்த்தம் அநுஸந்தித்தருளின க்ரமத்திலே...

180. உத்தரவாக்யத்தில் நமஸ்ஸிலே புருஷார்த்தத்துக்கு இடைச்சுவரான விரோதிகளெல்லாம் தள்ளுண்ணுமென்னுமிடம் தோற்றவிறே *மநோவாக்காயைஃ* என்று தொடங்கி மூன்று சூர்ணையாலே ஸகலவிரோதி நிவ்ருத்தியையும் பாஷ்யகாரரருளிச்செய்தது.

234. காண்க. [முன்னே "2. பெரியநம்பி" என்றதன்கீழ்விவரணமுங் காண்க.]

274. பாஷ்யகாரர்க்குக் காலக்ஷேப ப்ரகாரமருளிச் செய்கிறவிடத்தில் * த்வயம் அர்த்தாநுஸந்தாநேந ஸஹ ஸதா ஏவம் வக்தா * என்றிறே பெரிய பெருமாளருளிச்செய்தது.

385. "பாஷ்யகாரர் காலத்திலே ஒருநாள் பெருமாள்" இத்யாதி.

(தத்வத்ரய.) 3. * அசேஷ சிதசித்வஸ்து சேஷிணே * என்று பாஷ்யகாரரும்...

10. இதுதன்னை பாஷ்யத்திலே * ஏவம் ஹி ஸூப்தோத்திதஸ்ய பராமர்சஃ ..... அதத்ரூபத்வாத் ப்ரதிபத்தேஃ * என்று பாஷ்யகாரரருளிச்செய்தார்.

15. (இதுதான் * குணத்வா லோகவத் * என்கிற ஸூத்ரார்த்தம்.) "வா சப்தோ மதாந்தரவ்யாவ்ருத்த்யர்த்தஃ........ப்ரதமஸூத்ரே ஸ்தாபிதம்" என்றிறே இதுக்கு பாஷ்யம்.

18. "ச்சேதநாதியோக்யாநி கடபடாதீநி வஸ்தூநி........இதி அவ்யக்தஃ" என்றிறே பாஷ்யகாரருமருளிச்செய்தது.

34 இதெல்லாம் * கர்த்தா சாஸ்த்ரார்த்த வத்த்வாத் * என்கிற ஸூத்ரத்திலே பூர்வபக்ஷ ஸித்தாந்த ரூபேண பாஷ்யகாரர் தாமே விஸ்தரேண வருளிச்செய்தார்.

35. * க்ருதப்ரயத்நாபேக்ஷஸ் து * என்கிற ஸூத்ரத்திலே இதெல்லாம் பாஷ்யகாரர்தாமே யருளிச்செய்தார்.

37. "ஜ்ஞாநமாத்ரவ்யபதேசஸ்து........உபபத்யதே * என்றிறே தீபத்திலே பாஷ்யகாரருமருளிச்செய்தது.

40. * பரகதாதிசயாதாநேச்சயா உபாதேயத்வமேவ யஸ்ய ஸ்வரூபம் ஸ சேஷஃ பரச் சேஷீ * என்று சேஷ சேஷி லக்ஷணம் பாஷ்யகாரராலே அருளிச்செய்யப்பட்டது.

41. * அயமேவாத்மசரீரபாவஃ........என்றும் ; யஸ்ய சேதநஸ்ய யத் த்ரவ்யம்........ என்றும் வேதார்த்த ஸங்க்ரஹத்திலும் ஸ்ரீபாஷ்யத்திலும் ஆத்ம சரீரபாவலக்ஷணமாக

பாஷ்யகாராருளிச்செய்த நியந்த்ரு நியாம்யபாவம் ஆதாராதேயபாவம் சேஷசேஷிபாவ மாகிற மூன்றும்........

45. பாஷ்யகாரரும் இவர்களுடைய வைபவத்தை * ஸ்வச்சந்தாநுவர்த்தி * இத்யாதியாலே ஸ்ரீகத்யத்திலே பரக்கவருளிச்செய்தார்.

79. இதுதன்னை பாஷ்யகாரர் ஸ்ரீவைகுண்ட கத்யத்திலே * திவ்யாவரண சதஸஹஸ்ராவ்ருதே....என்று தொடங்கி விஸ்தரேண அருளிச்செய்தாரிறே.

(அங்கேயே, மேல்) * தேஷாமபி இயத்பரிமாணம் இயதைச்வர்யம் ஈத்ருசஸ்வபாவமிதி பரிச்சேத்துமயோக்யே * என்று நித்யரால் பரிச்சேதிக்க வொண்ணாதென்று ஸ்ரீவைகுண்ட கத்யத்திலே பாஷ்யகாரர் அருளிச்செய்த விது...........

(அங்கேயே, மேல்) * அநந்தாச்சர்யாநந்த மஹாவிபவ * என்றாரிறே பாஷ்யகாரர்.

85. * பகவத் ஸ்வரூப திரோதாநகரீம் விபரீதஜ்ஞாநஜநநீம் * என்று இதுதன்னை பாஷ்யகாரர் அருளிச்செய்தாரிறே.

92. * ஸத்வரஜஸ்தமாம்ஸி த்ரயோ குணா:........* என்றிறே பாஷ்யகாரரும்.......

117. இப்படி ஸ்ரீபாஷ்யத்திலே * யதக்நே ரோஹிதம் ரூபம்........என்று பாஷ்யகாரருமருளிச்செய்தார்.

129. * நச ப்ருதிவ்யாத்யபாவமாத்ரம் ஆகாச இதி வக்தும் சக்யம் * என்றிறே பாஷ்யகாரராருளிச்செய்தது.

130. இதுதன்னை * ஆகாசே சாவிசேஷாத் * என்கிற ஸூத்ரத்திலே “ஆகாசே ச நிருபாக்யதா ந யுக்தா........ச்யேநாதிபதந தேசத்வேந” என்று தொடங்கி பாஷ்யகாரர் விஸ்தரேண அருளிச்செய்தார்.

132. இதுதன்னை * அண்டாந்தர்வர்த்திநச்ச ஆகாசஸ்ய......என்று பாஷ்யகாரருமருளிச்செய்தார்.

141. * அகில ஹேய ப்ரத்யநீக........ஸ்வரூப! * என்றிறே எம்பெருமானாருளிச்செய்தது.

(அங்கேயே, மேலே) ஆதிசப்தத்தாலே குண சூர்ணையில் எம்பெருமானாருளிச்செய்த குணங்களையெல்லாம் சொல்லுகிறது.

(அங்கேயே, மேலே) * ஆர்த்த:—ப்ரதிஷ்டாஹீந: ப்ரஷ்டைச்வர்ய: புநஸ் தத் ப்ராப்திகாம:.............என்று சதுர்விதாதிகாரி வேஷத்தையும் ஸ்ரீகீதாபாஷ்யத்திலே அருளிச்செய்தாரிறே.

(அங்கேயே, மேலே) * ஸ்வாபிமதாநுரூபைகரூபாசிந்த்ய......என்று திவ்ய மங்கள விக்ரஹ வைலக்ஷண்யத்தை அருளிச்செய்தாரிறே எம்பெருமானார்.

(அங்கேயே, மேலே) * ஸ்வாபிமதநித்ய நிரவத்யாநுரூப......பூமி நீளாநாயக! * என்றிறே எம்பெருமானாருளிச்செய்தது.

195. “ஸாதவ:—உக்த லக்ஷண தர்மசீலா வைஷ்ணவாக்ரேஸரா:......” என்றிறே இந்த ச்லோகத்துக் கர்த்தம் பாஷ்யகாரராருளிச்செய்தது.

(முமுக்ஷுப்படி.) 97. திவ்யபூஷணங்களாவன—ஆபரண சூர்ணையிலே பாஷ்யகாரர் அருளிச்செய்தபடியே.......

183. ஆகையிறே த்வய விவரணமான கத்யத்திலே........இத்யாதி சூர்ணையாலே ப்ரக்ருதிஸம்பந்த நிவ்ருத்தியையும் பாஷ்யகாரர் ப்ரார்த்தித்தருளிற்று.

(சமரச்லோ. அவதாரிகை.) இதிலர்த்தம் கேட்கைக்காகவிறே எம்பெருமானார் பதினெட்டு பர்யாயம் திருக்கோட்டியூர்நம்பிபக்கல் எழுந்தருளிற்று.

(அங்கேயே, மேலே) அதிகாரி துர்லபத்வத்தாலும் அர்த்த கௌரவத்தாலும் இத்தை வெளியிடாதே மறைத்துக்கொண்டு போந்தார்கள் எம்பெருமானுர்க்கு முன்புள்ளார்; ஸம்ஸாரிகள் துர்க்கதி கண்டு பொறுக்கமாட்டாதபடி க்ருபை கரைபுரண்டிருக்கையாலே அர்த்தத்தின் சீர்மை பாராதே அநர்த்தத்தையே பார்த்து வெளியிட்டருளினர் எம்பெருமானுர்.

243. * ஆக்ஷேபதஃ ப்ராப்தாத்......என்றிறே பாஷ்யகாரருமருளிச்செய்தது.

274. தத்வ நிர்ணயம் பண்ணின உய்யக்கொண்டார் பக்தி நிஷ்டராயிருக்கையாலே அவரை ப்ரபத்திநிஷ்டராம்படி பண்ணவேணுமென்று அவருக்கு இந்த (சரம) ச்லோகார்த்தத்தை யருளிச்செய்தவளவிலே 'அர்த்தஸ்'திதி அழகியதாயிருந்தது, ஆகிலும் அத்தை விட்டு இத்தைப்பற்றத்தக்க ருசி எனக்கில்லை என்ன, "வித்வானுகையாலே அர்த்தத்துக்கிசைந்தாய், பகவத் ப்ரஸாத மில்லாமையாலே ருசி பிறந்ததில்லை" என்று அவர் விஷயமாக உடையவர் அருளிச்செய்தவார்த்தை.......

(ஆசார்யஹ்ரு.) 36. அடியார் தொண்டரென்கிற ப்ரபந்நஜநங்களுக்குக் கூடஸ்தர்... எம்பெருமானுர் முதலான ஆசார்யர்களும்.

65. பாஷ்யகாரர் ஸ்ரீபாஷ்யம் பண்ணியருளும்போது ஸூத்ரவாக்யங்களில் ஸந்திக்தங்களான அர்த்தங்களெல்லாம் இப்ப்ரபந்தத்தில் ஸூக்திகளைக்கொண்டு நிர்ணயித்து ஒருங்கவிட்டருளுவர்.

66. பாஷ்யகாரர் அப்படிசெய்தருளுகைக்கடி * விதயச் ச வைதிகாஸ் த்வதீய கம்பீரமநோநுஸாரிணஃ * என்று.......இவ்வாழ்வார் போல்வார் நினைவை சாஸ்த்ரங்கள்தான் பின்செல்லுமதாகப் பரமாசார்யரான ஆளவந்தாரருளிச் செய்த வசனம்.

85. த்யாகமண்டபமான பெருமாள் கோயிலில் திருவாலவட்டமும் கையுமாய்ப் பெருமாளுக்கு அந்தரங்கராய் நின்ற திருக்கச்சிநம்பியை வைதிகோத்தமரான உடையவர் அநுவர்த்தித்த க்ரமமும்.

(அங்கேயே, மேலே) யாகசப்தவாச்யமான திருவாராதனத்தில் பிள்ளையுறங்கா வில்லிதாஸர் ஸ்பர்சத்தாலே காயசுத்திபண்ணின உடையவரும்.

91. [கலியுங் கெடும்போலே ஸூசிதம்.] இவர்தாம் மயர்வற மதிநலம் பெற்றவராகையாலே "கலியுங்கெடும்" என்று திருமங்கையாழ்வார் உடையவர் போல்வார் அவதரித்து கலியுகஸ்வபாவமும் கழியு மென்று மேல்வருமம்சத்தை தர்சித்தருளிச் செய்தாப்போலே.

99. * அபயம் ஸத்வஸம்சுத்திஃ * என்றும் *ஸத்வாநுரூபா ஸர்வஸ்ய ச்ரத்தா பவதி* என்றும் சொல்லுகிற விடங்களில் "ஸத்வம் அந்தஃகரணம்" என்று ஸத்வசப்தம் அந்தஃகரணவாசியாக பாஷ்யகாரர் அருளிச் செய்தாரிறே.

153. இராமானுசனுடையா ரென்றே நிரூபகமாம்படி உடையவர்க்குப் பாதந்த்ரரான ஆழ்வான் ஆண்டான் எம்பார் அருளாளப் பெருமாளெம்பெருமானுர் முதலானவர்கள் போல்வாரைக் கிளியென்றும் பூவையென்றும் குயிலென்றும் மயிலென்றும் சொல்லும்.

155. எம்பெருமானுர் போல்வாரை மேகமென்று சொல்லும்.

162. பாஷ்யகாரர் பக்கலிலே வேதாந்தார்த்தம் கேட்டு சிஷ்யனுய் 'நாமும் நம்மிராமானுசனை யுடையோம்' என்கையாலே ஸ்ரீவைஷ்ணவநம்பியென்று திருநாமமாய்..........

204. இப்படி அதிகாரம் பாராமல் அவர்கள் துர்க்கதியைப்பார்த்து உபதேசித்தருளும் ஸ்வபாவராய் * பாமன்னுமாறனடிபணிந்துய்ந்தவன் * என்று நிரூபகமாயிருக்கு மெம்பெருமானுர்க்குமே........

224. புராணவித்தமராகையாலே பௌராணிகரான பாஷ்யகாரர் கத்யத்திலே இவ்வசநப்க்ரியையாலே த்யாஜ்யங்களினுடைய த்யாகபூர்வகமான சரணவரணத்தைப் பண்ணுகையாலும்.

228. இது, வீடுமின்முற்றத்தையும் பக்திபரமாக்கி யோஜித்தருளின எம்பெருமானர் நிர்வாஹக் கட்டளையைப் பிடித்தருளிச் செய்தார் ......இது எம்பெருமானர் யோஜனையாய் பின்புள்ளா ரெல்லாருமருளிச் செய்துகொண்டு போந்த மர்யாதையைப் பற்ற.....

233. * பரபக்திபரஜ்ஞாந பரமபக்த்யேக ஸ்வபாவம் மாம் குருஷ்வ * என்று ப்ரார்த்தித்த பாஷ்யகாரரைக் குறித்து *மத் ஜ்ஞாநதர்சந ப்ராப்திஷு நிஸ்ஸம்சயஸ் ஸுகமாஸ்வ* என்று சேரபாண்டியனிலுமவனருளிச் செய்த ஜ்ஞாநதர்சந ப்ராப்த்யவஸ்தைகள்.

## 5. எம்பார்.

(முமுக்ஷுப்படி.) 286. "ஆஸ்திகனுய் இவ்வர்த்தத்தில் ருசி விச்வாஸங்களுடையனுய் உஜ்ஜீவித்தல், நாஸ்திகனுய் நசித்தலொழிய நடுவில் நிலையில்லையென்று பட்டருக்கு எம்பார் அருளிச்செய்த வார்த்தை.''—இவ்வர்த்தத்தில் [சரமச்லோகார்த்தத்தில்] அங்கிதனுனவன் பகவத்ப்ரபாவத்தால் இது ஸத்யமென்று ஆஸ்திகனுய் இவ்வர்த்தத்தில் ருசியும், இதுதப்பாதென்கிற விச்வாஸமுமுடையனுய் உஜ்ஜீவித்தல், சாஸ்த்ரங்களெல்லா மொருதலையும் இது ஒரு தலையுமாய் இப்படியிருப்பதொன்றுண்டோ வென்று நாஸ்திகனுய் இத்தை அநாதரித்து நசித்தலித்தனையொழிய நடுவொருநிலையில்லை யென்று ஸகலசாஸ்த்ர வித்தமரான பட்டருக்கு ஆப்ததமரான எம்பார் அருளிச்செய்த வார்த்தை.

## 6. வங்கிப்புரத்து நம்பி.

(முமுக்ஷுப்படி.) 276 இந்த சரமச்லோகம் அநுவாதத்தினுடைய கோடியிலே யென்று ஆப்ததமரான வங்கிப்புரத்து நம்பியருளிச் செய்யும் வார்த்தை.

## 7. ஆழ்வான்.

(ஸ்ரீவசந பூ) 73. திருக்கோட்டியூர் நம்பி ஸ்ரீபாதத்திலே ஆழ்வான் ஆறுமாஸம் ஸேவித்து நின்று மஹாநிதியாகப் பெற்ற அர்த்தமிறே இது.

203. பிள்ளைப் பிள்ளையாழ்வானை (ஆழ்வான்) அங்கீகரித்தநாளிலே இவர் ஆபிஜாத்யாதிகளாலே உத்க்ருஷ்டராகையாலே பாகவத விஷயங்களில் அவிநயமாக வர்த்தித்துக் கொண்டு போருகிறபடியைக்கண்டு "இவர்க்கு இப்பாகவதாபசாரம் இவருடைய ஜ்ஞாநாநுஷ்டானங்களெல்லாவற்றையும் கீழ்ப்படுத்தி தானே மேலாய் விநாசபர்யந்தமாக்கிவிடும், அதுக்கு வேலி இட்டுவைக்கவேணும்" என்று திருவுள்ளம்பற்றி ஓரயனத்தினன்று நீராடி யேறினவளவிலே இவரைப் பார்த்து "எல்லாரும் தானம் பண்ணுகிற காலத்திலே நீரும் நமக்கொருதானம் பண்ணமாட்டீரோ" என்ன, அடியேன் எத்தை தானம்பண்ணுவது, எல்லாம் அங்குத்தையதாயிருந்ததே. என்ன, 'அர்த்தஸ்திதியன்றே அது, அவ்வளவு போராது, கரணத்ரயத்தாலும் பாகவதாபசாரம் பண்ணுமல் வர்த்திக்கக்கடவேன் என்று நம் கையிலே உதகம் பண்ணித்தரவேணும்' என்ன; அப்படி இவருமுதகம் பண்ணிக் கொடுத்த வனந்தரம் ஒருநாள் பாகவத தோஷத்தைப் பூர்வ வாஸனையாலே நினைத்து 'நாமினி

முடிந்தோம்' என்று பயப்பட்டு மூடிக்கொண்டு தம்திருமாளிகையிலே கண்வளர, இவர் முன்பு வருகிற காலத்தில் வரக்காணாமையாலே ஆழ்வான், இவர் திருமாளிகையிலே எழுந்தருளி 'என்தான்? முசிப்பென்? என்று வினவியருள, தாம் மனஸ்ஸால் நினைத்ததை விண்ணப்பம் செய்து 'காரணத்ரயத்தாலும் அபசாரம் புகுராதபடி இத்தேஹத்தோடு வர்த்திக்கை அரிதா யிராநின்றது, என் செய்யக்கடவேன்?' என்று திருவடிகளைக் கட்டிக்கொண்டு கிடந்து க்லேசிக்க, இத்தனை அநுதாபமிவர்க்குண்டாகப்பெற்றோமே என்று உகந்தருளி 'மனஸ்ஸாலே நினைத்ததுக்கு அநுதாபமுண்டாகவே ஈச்வரன் க்ஷமித்தருளும்; ப்ரத்யக்ஷதண்ட பயத்தாலே காயிகமாக ஒருவரையும் நலியக்கூடாது, ஆன பின்பு அவை யிரண்டுமுமக்குக் கழித்துத்தந்தோம்; இனி வாக்கொன்றையும் நன்றாகக் குறிக்கொண்டு வர்த்தித்துப்போரும்' என்றருளிச்செய்தது.

411. காண்க.

(தத்வத்ரய.) 45. * வநாத்ரிநாதஸ்ய ஸௌஸௌந்தரஸ்ய வை ப்ரபுக்தசிஷ்டாச்யத ஸைங்யஸத்பதி: * என்று ஆழ்வானுமருளிச்செய்தார்.

79. ஸீமையில்லாததொன்றுக்கு ஸீமையறியாமை ஸர்வஜ்ஞதைக்கு அநுகுணமென்னுமிடம் * தேவி! த்வந்மஹிமாவதிர் ந ஹரிணா......என்று ஸ்ரீஸ்தவத்திலே ஆழ்வானருளிச்செய்தார்.

148. * யேஷ்வேகஸ்ய குணஸ்ய விப்ருடபி வை......வநாத்ரீச்வரம் * என்கிற ச்லோகத்திலே குணங்களினுடைய நித்ய நிஸ்ஸீம நிஸ்ஸங்க்யத்வங்களை அருளிச்செய்தாரிறே ஆழ்வான்.

185. * குணௌஷ் ஷட்பிஸ்த்வேதை:....அகணித மஹாமங்கள குண: * என்று இது தன்னை ஆழ்வானருளிச்செய்தாரிறே.

194. * இயம் வையூஹீ வை......என்றும் * ஏவம் ஸ்திதே...என்றும் அவதார ஹேது இச்சையென்னுமிடத்தை ஆழ்வான் விசதமாகவருளிச்செய்தாரிறே.

195. * யே பக்தா பவதேகபோகமநஸ:..........என்றிறே ஆழ்வானுமருளிச்செய்தது.

## 8. அமுதனார்.

(ஸ்ரீவசந பூ.) 426. ஆகையிறே பிள்ளை யமுதனார் * பேறொன்று மற்றில்லை நின் சரணன்றி அப்பேறளித்தற்கு ஆறொன்று மில்லை மற்றச்சரணன்றி * என்று ப்ராப்யப்ராபகங்களிரண்டும் ஏகவிஷயமேயாக அருளிச்செய்தது.

## 9. உய்யக்கொண்டார்

(உடையவர் காலத்தவர்.)

(ஸ்ரீவசந பூ.) 3. * அத இதிஹாஸ புராணயோ: இதிஹாஸா: பலீயாம்ஸ:... என்று தொடங்கி தத்வநிர்ணயத்திலே உய்யக்கொண்டாராலும் ப்ரதிபாதிக்கப்பட்டது.

(முமுக்ஷுப்படி.) 274 காண்க.

## 10. பட்டர்.

(ஸ்ரீவசந பூ.) 3. * மஹாபாரதம் ஹி பரிக்ரஹ விசேஷாவஸிதம் * என்று தொடங்கி.. ....என்னுமளவாக பரிக்ரஹாதிசயத்தாலும் மத்யஸ்ததையாலும் புராணங்களிற் காட்டில் இதிஹாஸ விசேஷமான மஹாபாரதத்துக்குண்டான ப்ராபல்யம் ஸ்ரீஸஹஸ்ரநாம பாஷ்யத்திலே பட்டராலும் ப்ரதிபாதிக்கப்பட்டதிறே.

5. பெரிய பட்டரும் ஸ்ரீஸஹஸ்ரநாம பாஷ்ய உபோத்காதத்திலே "ஸ்ரீராமாயணவத் மஹாபாரதம் சரணம்" என்றருளிச்செய்தாரிறே.

8. ஆகையிறே * யதுதாங்யதுதாஹரந்தி ஸீதாவதாரமுகமேததமுஷ்ய யோக்யா * என்று பட்டருமருளிச்செய்தது.

38. * அர்ச்சகபராதீநாகிலாத்மஸ்திதிः* என்றருளிச்செய்தாரிறே பட்டர்.

306. * பவதஸஹரீயாகஸி ரதः * என்றிறே பட்டரருளிச்செய்தது.

(தத்வத்ரய.) 28. அஹமிதமபிவேத்மீதி...என்று பட்டரும் இப்படியிறே பௌத்தமத நிராகரணம் பண்ணுகிற விடத்தில் அருளிச்செய்தது.

45. * அஹ்ருதஸஹஜதாஸ்யாஸ் ஸுஹ்ரயஸ் ஸ்ரஸ்தபந்தாः * என்றாரிறே பட்டர்.

148. * தோஷோபதாவதி.......அநர்க்கயந்தி * என்கிற ச்லோகத்திலே இவையித் தனையும் பட்டரருளிச்செய்தாரிறே.

150: * க்ஷமா ஸாபராதே....என்றிறே பட்டரருளிச்செய்தது.

160. * ப்ரளயஸமயஸுப்தம்......ஸ்ரீஸமக்ஷம் * என்றிறே பட்டரருளிச் செய்தது.

179. * நிம்நோந்நதஞ்ச...ச்ருதயோ க்ருணந்தி * என்று இதுதன்னை பட்டரருளிச்செய்தாரிறே.

202. * ஆஸ்தாம் தே குணராசிவத்......சீலாத் ஜடீபூயதே * என்று அவதாரங்களை யருளிச்செய்தவனந்தரத்திலே அர்ச்சாவதாரவைபவத்தை ஸங்க்ரஹேண ஒரு ச்லோகத்தாலே அருளிச்செய்தாரிறே பட்டர்.

(முமுக்ஷுப்படி.) 2. * தேஹாஸக்தாத்மபுத்திர் யதி பவதி...சதுர்த்தீம் ப்ரபந்நः * என்று பட்டரருளிச்செய்தபடியே...

46. ப்ரஸுநம் புஷ்யந்தீமபி...என்கிறவிடத்திலே ஈச்வரனை புஷ்பஸ்தாநேயாகவும் பிராட்டியைப் பரிமள ஸ்தாநேயாகவும் பட்டரருளிச்செய்கையாலே...

(ஆசார்யஹ்ரு) * காருணிகோ ததாதி * என்று பட்டரருளிச்செய்ததுக்கும் சேரும்

## 11. ஸ்ரீஸேநாபதி ஜீயர்.

(முமுக்ஷுப்படி.) 41. ஜ்ஞாநாதிகரான ஸ்ரீஸேநாபதி ஜீயர் அருளிச் செய்யும் வார்த்தை—* அகல கில்லேனிறையும் * என்று அவன் திருமார்விலே நித்யவாஸம் பண்ணு

மிவள் அம்மார்பை விட்டுப் பிரியிலாயிற்று அவனுக்கு ப்ரதிபாதகமான இவ்வக்ஷரத்தை விட்டுப் பிரிவதென்று.

## 12. கிடாம்பிப் பெருமாள்.

(ஸ்ரீவசந பூ.) 385. ஸகல வேதாந்த தாத்பர்யார்த்தங்களெல்லாம் ஸம்சய விபர்யயமற நடந்துசெல்லுகிற நல்லடிக்காலமான பாஷ்யகாரர் காலத்திலே, ஒரு நாள் பெருமாள் புறப்பட்டருளுந்தனையும் பார்த்துப் பெரிய திருமண்டபத்துக்குக் கீழாக ஜ்ஞாநாதிகரான முதலிகளெல்லாரும் திரள விருந்தவளவிலே ஒரு ஸ்ரீவைஷ்ணவர் 'இதுநெடுங்காலம் ஆர்வாசலிலே அவர்கள் புறப்பாடு பார்த்திருந்தோமோ! என்று தெரியாது; இன்று வகுத்த சேஷியான பெருமாள் புறப்பாடு பார்த்து வந்திருக்க என்ன ஸுக்ருதம் பண்ணினோம்!' என்ன, தத் ப்ரஸங்கத்திலே நித்ய ஸம்ஸாரியாய்ப் போந்தவனுக்கு பகவத்விஷயத்திலே ருசி பிறக்கைக்கு அடியென்? என்று விசாரிக்கச் செய்தே, யாத்ருச்சிகஸுக்ருதமென்ன அஜ்ஞாதஸுக்ருதமென்னப்பிறந்ததாய், அவ்வளவிலே கிடாம்பிப் பெருமாளிருந்தவர் 'நமக்கு பகவத் விஷயம்போலே ஸுக்ருத தேவரென்றும் ஒருவருண்டோ ஆச்ரயணீயர்?' என்ன, பிள்ளை திருநறையூரரையர் 'ஸுக்ருதமென்று சொல்லுகிறதும் நினைக்கிற விஷயந்தன்னைக்காண்' என்றருளிச்செய்ய, ஆக இப்படி பின்பு பிறந்தவார்த்தைகளை இவ்விடத்திலே நினைப்பது.

## 13. முதலியாண்டான்.

(ஸ்ரீவசந பூ.) 411. "வடுக நம்பி ஆழ்வானையும் ஆண்டானையும் இருகரையரென்பர்" என்றவிடத்து ஐதிஹ்யம். அதாவது—ஆழ்வார் திருவடிகளில் ஸ்ரீமதுரகவிகளிருந்தாப்போலே ப்ராப்யப்ராபகங்களிரண்டு மெம்பெருமானார் திருவடிகளே யென்று ப்ரதிபத்திபண்ணி * தேவுமற்றறியேனென்றிருக்கும் வடுகநம்பி, எம்பெருமானார்க்கு நிழலுமடிதாறும்போலே அவிநாபூதராய்......உபாயோபேயங்கள் அவர் திருவடிகளும் அத்திருவடிகளில் பண்ணும் கைங்கர்யமுமென்றிருக்கும் கூரத்தாழ்வானையும் தாத்ருசரான முதலியாண்டானையும் ஸம்ஸாரத்திலிருப்பில் அடிக்கொதிப்பால் வந்த ஆர்த்தியின் மிகுதியாலே கலங்கி காதாசித்கமாகப் பெருமாள்பக்கலிலுஞ் சென்று பல்காட்டுவது, தத்வைலக்ஷண்யங் கண்டவாறே ப்ரவணராய்ப் போருவதாமிவ்வளவைக் கொண்டு "எம்பெருமானார் திருவடிகளே ப்ராப்யமும் ப்ராபகமுமானால் * தேவுமற்றறியேனென்றிருக்க வேண்டாவோ? அங்ஙனன்றிக்கே சரமாவதியிலும் ப்ரதமாவதியிலும் கைவைத்து நிற்கிறவிவர்கள் இருகரையர்—என்றருளிச் செய்வர்.

## 14. பிள்ளை திருநறையூரரையர்.

இவர் விஷயமான ஐதிஹ்யம் (ஸ்ரீவசந பூ.) 84, 385. சூர்ணைகளிற் காண்க.

## 15. வடுக நம்பி.

(ஸ்ரீவசந பூ.) 411. ஆழ்வார் திருவடிகளில் ஸ்ரீமதுரகவிகளிருந்தாப்போலே ப்ராப்ய ப்ராபகங்களிரண்டும்......இத்யாதியை முன்னே "முதலியாண்டான்" என்றபகுதியிற்காண்க.

## 16. எங்களாழ்வான்.

(தத்வத்ரய.) 103. "...... பூர்வ பூர்வதந்மாத்ரம் உத்தரோத்தரதந்மாத்ரம் தத் விசேஷஞ்ச ஆவ்ருணோதீதி தர்சிதம்" என்று பிள்ளை யெங்களாழ்வான் வ்யாக்யானம் பண்ணுகையாலும்.

106. இதுதன்னை ஸ்ரீவிஷ்ணுபுராண வ்யாக்யானத்திலே * அயமத்ர இந்த்ரிய ஸ்ருஷ்டிக்ரம:......மநஸ: ஸ்ருஷ்டிரிதி * என்று பிள்ளையெங்களாழ்வானு மருளிச்செய்தார்.

109. * அஹங்காரஸ்ய இந்த்ரியாணி ப்ரதி நிமித்தத்வமேவ......ததா நிர்தேசோப பத்தே: * என்று பிள்ளையெங்களாழ்வா னெடுத்துக் கழித்தது.

## 17. நஞ்சீயர்.

(ஸ்ரீவசநபூ.) 69. நஞ்சீயர் தம்முடைய ஸ்ரீபாதத்திலே யுள்ளாரொரு ஸ்ரீவைஷ்ண வரை கோவறிகைக்காகச் சென்று எழுந்தருளியிருக்கிறவளவிலே அந்த ஸ்ரீவைஷ்ணவர் 'அடியேனுக்கு அந்திமகாலத்துக்குத் தஞ்சமாயிருப்பதொன்று அருளிச் செய்யவேணும்' என்ன, "அந்திமகாலத்துக்குத் தஞ்சம் நமக்கிப்போது தஞ்சமென்? என்கிற தன்னுடைய ஸ்வரக்ஷண சிந்தை குலைகைகாணும்" என்று (நஞ்சீயர்) அருளிச்செய்த வார்த்தை.

192. "ஸங்கல்பமாத்ரத்தாலே ஸர்வத்தையும் நிர்வஹிக்கவல்ல ஸர்வசக்தியான ஸர்வேச்வரன் தன்னையழிய மாறி இதர ஸஜாதீயனாய் அவதரித்துக் கைதொட்டுநின்று செய்த ஹிரண்ய ராவணாதி நிரஸநரூப அத்யதிமாநுஷ சேஷ்டிதங்களெல்லாம் ப்ரஹ்லா தன் மஹர்ஷிகள் தொடக்கமான அவ்வோ பாகவதவிஷயங்களில் அவ்வவர் பண்ணின அபசாரம் ஸஹியாமையாலே யென்று ஆப்ததமரான நஞ்சீயர் அருளிச் செய்வரென்கை.

(தத்வத்ரய.) 142. ...... ஒரு யோஜனையுமுண்டிறே கத்யவ்யாக்யானங்களிலே நஞ்சீ யர் ஆச்சான்பிள்ளை முதலான ஆசார்யர்கள் அருளிச்செய்தது.

## 18. நம்பிள்ளை.

(ஸ்ரீவசநபூ.) 31. வேல்வெட்டிப்பிள்ளை (யென்பவர்), பெருமாள் கடலை சரணம் புகுகிறவிடத்தில் ப்ராங்முகத்வாதி நியமோபேதராய் சரணம் புகுருகையாலே இதரோ பாயங்களோபாதி ப்ரபத்திக்கும் சில நியமங்கள் வேண்டியிருக்கிறதோ' வென்று நம் பிள்ளையைக் கேட்க, "பெருமாள் பக்கல் கண்ட நியமம் இவ்வுபாயத்துக்கு உடன் வந் தியாயிருப்பதொன்றன்று; உபாய பரிக்ரஹம் பண்ணினவனுடைய ஸ்வபாவத்தாலே வந்ததித்தனை. பெருமாள்தமக்கு * ஸமுத்ரம் ராகவோ ராஜா சரணம் கந்துமர்ஹதி *

என்று உபதேசித்தான் ஸ்ரீவிபீஷணாழ்வானிறே ; அவன்தான் பெருமாளை சரணம் புகுகிற விடத்தில் கடலிலேயொரு முழுக்கிட்டுவந்தானென்றில்லையே ; இத்தால் சொல்லிற்றாயிற்றது—பெருமாள் இக்ஷ்வாகு வம்ச்யராய் ஆசாரப்ரதாநராயிருக்கையாலே தம்முடைய நியமங்களோடே சரணம்புக்கார் ; இவன் ராக்ஷஸஜாதீயனாகையாலே நின்ற நிலையிலே சரணம் புக்கான் ; ஆகையால் யோக்யனுக்கு அயோக்யதை ஸம்பாதிக்கவேண்டா; அயோக்யனுக்கு யோக்யதை ஸம்பாதிக்கவேண்டா ; நின்ற நின்ற நிலைகளிலே அதிகாரிகளாமித்தனை" என்று நம்பிள்ளை யருளிச்செய்த வார்த்தை.

347. * மண்ணும் விண்ணுமெல்லா முடனுண்ட * என்கிறவிடத்தில் "ரக்ஷணம் அவனுக்கு தாரகமாயிருக்கையாலே உண்ட என்கிறது ; இல்லையாகில் காக்கும் என்னவமையும்" என்றிறே நம்பிள்ளையருளிச் செய்தது.

(ஆசார்யஹ்ரு.) 85. அநுயாகசப்த வாச்யமான 'ப்ரஸாதஸ்வீகாரத்தில் பிள்ளை யேறு திருவுடையார் தாஸர் கரஸ்பர்சத்தாலே அங்கசுத்தி பண்ணின நம்பிள்ளையும்.

## 19. ச்ருதப்ரகாசிகா பட்டர்.

(ஸ்ரீவசநபூ.) 381. "திவி இதி அப்ராக்ருதம் ஸ்தாநமுச்யதே. த்ரிபாத்வஞ்ச......... ஸம்பவதி" என்று ச்ருதப்ரகாசிகையிலே பட்டருளிச் செய்தபடியே.

(தத்வத்ரய.) 49. இதுதான் ச்ருதப்ரகாசிகையிலே ஆதிபாத சதுச்ச்லோகீ வ்யாக்யானோப க்ரமத்திலே * ப்ரஹ்மாத்வைதம் ஜீவாத்வைதஞ்சேதி அத்வைதம் த்விவிதம் சாஸ்த்ரப்ரதிபாத்யம் * என்று தொடங்கி ஸ்ரீவேதவ்யாஸபட்டராலே விஸ்தரேண ப்ரதிபாதிக்கப்பட்டது.

89. * குணத்ரய வைஷம்யஸ்ய அநந்தர பூர்வாவஸ்தா குணஸாம்யம்.........அங்குர ஸ்தாநீயோ மஹாந் இதி விவேகஃ * என்று ஸுபாலோபநிஷத் வ்யாக்யானத்திலே ச்ருதப்ர காசிகாகாரர் இதினுடைய அவஸ்தா விசேஷங்களை ஸுஸ்பஷ்டமாக வருளிச்செய்தார்.

103. .. ..ஸங்கல்ப சப்தத்தாலே தத்காரணமான மநஸ்ஸு லக்ஷிக்கப்படுகிறதென்று ஸுபாலோபநிஷத் வ்யாக்யானத்திலே ச்ருதப்ரகாசிகாகாரராலே வ்யாக்யாதமாயிற்று.

109. இதுதான் ஸுபாலோபநிஷத் வ்யாக்யானத்திலே * க்ராணாதீநாம் இந்த்ரியாணாம் ஹி இத்யாதிஷு * என்று ச்ருதப்ரகாசிகாகாரராலே அபிஹிதமாயிற்று.

116. ச்ருதப்ரகாசிகாகாரர் சுகபக்ஷீயத்திலே * தேஜோவாரிம்ருதாம் யதா விநிமயஃ * என்கிறவிதுக்கு [விநிமயஃ—பரஸ்பரஸம்மிச்ரீகரணம்] என்றாரிறே.

148. ஸ்ரீபாஷ்யத்தில் * ஸ்வபாவதோநிரஸ்த........புருஷோத்தமஃ அபிதீயதே * என்கிறவிடத்துக்கு வ்யாக்யானம்-பண்ணுகிற ச்ருதப்ரகாசிகாகாரர் அநவதிகாதிசயபதத்தாலே நித்யஸித்தரை வ்யாவர்த்திக்கிறதென்று முந்துறவொரு யோஜனைபண்ணி........... இத்யாதி........க்ரியா—நியமநம் என்றிறே இதுக்கும் ச்ருதப்ரகாசிகாகாரர் வ்யாக்யானம் பண்ணிற்று

## 20. வடக்குத் திருவீதிப் பிள்ளை.

(ஸ்ரீவசநபூ) 443. "பரமதயாளுவான ஆசார்யன் இவன் நம்முடையவனென்று அபிமாநித்திருக்குமந்த அபிமாநமொழிய வேறு உஜ்ஜீவநோபாயமில்லை யென்று ஸகல

சாஸ்த்ரஸாரவிதக்ரேஸரான நம்பிள்ளை திருவடிகளிலே பழுக்க ஸேவித்து ததேகபாரதந்த்ர ராய் ஸகல சாஸ்த்ர தாத்பர்யங்களையும் அவரருளிச் செய்யக் கேட்டு தந்நிஷ்டராயிருக்கும் நம்முடைய ஆசார்யரான பிள்ளை தஞ்சமாகப் பலகாலுமருளிச்செய்யக் கேட்டிருக்கையா யிருக்குமென்றபடி.

(ஆசார்யஹ்ரு.) 228.......ஈட்டிலும் ப்ரதாநயோஜனையாயிருக்குமது......* வணக் குடைத்தவநெறி யென்கிறவிது ப்ரபத்திபரமாகவும் ஒரு யோஜனை ஈட்டிலே தோன்றி யிருக்கையாலே.

## 21. பெரியவாச்சான் பிள்ளையும்,

ஸ்பஷ்டமாகத் திருநாமம் தெரியாத ஆசார்யர்களும்.

(ஸ்ரீவசநபூ.) 53. ராமவிஜயம் தமக்கு இஷ்டமாகையாலே அந்த விஜயத்துக்கு இலக்காய்த் தோற்ற ராக்ஷஸர்தசை பிறந்து, பிராட்டிமார்தசை பிறந்து பேசுமாபோலே தாமானதன்மை தோற்றுதே, தோற்ற ராக்ஷஸர் பாசுரத்தாலே விஜயத்தைப் பேசியநுபவிக் கிறார்' என்றிறே அத்திருமொழிக்கு வியாக்யானம் பண்ணியருளுகிற ஆசார்யர்கள் அருளிச் செய்வது.

321. அஸூயாப்ரஸவபூः * என்கிறவிதுக்கு 'ஹிதம் சொன்னவனுடைய உத்கர்ஷ மேயாயிற்றுப் பொறுதது' என்றிறே பூர்வர்கள் அருளிச்செய்தது.

385. இக்கதைதான் * தருதுயரந்தடாயேல் * என்கிற பாட்டின் வியாக்யானத் திலே ஸங்க்ரஹேண பூர்வர்கள் அருளிச்செய்து வைத்தார்களிறே.

$ (தத்வத்ரய.) 103. பெரியவாச்சான் பிள்ளையும் இப்படியிறே [ஸங்கோசேந உத் பத்தி க்ரமம்] அருளிச் செய்தது.

(ஆசார்யஹ்ரு.) 1. பூர்வர்களிட்ட வ்யாக்யானத்துக்குச் சேரும்.

99. பூர்வர்கள் வ்யாக்யானம் பண்ணிவைத்தார்களாகிலும்.

228. முன்புள்ளார், பின்புள்ளார், ஸகல வ்யாக்யானங்கள்......

(ஸ்ரீவசந பூ.) 307. "இரக்கமுபாயம், இனிமை உபேயம்" என்னக்கடவதிறே.

399. * எதிர்சூழல்புக்கு * என்கிறது அவதாரபரமாக மற்றுள்ளாராலே வ்யாக் க்யாதமாயிற்றாகிலும் இப்போதிவர் இவ்விடத்தில் வ்யாப்திபரமாக வருளிச் செய்கிறார். அநேக யோஜனைகளுண்டாயிறே யிருப்பது.

(தத்வத்ரய.) * இச்சயா யதுபாதேயம் யஸ்யாதிசயஸித்தயே, உபயாநுபயைகைக ஜுஷா தௌ சேஷசேஷிணௌ. * என்று சேஷ சேஷிலக்ஷணத்தை அபியுக்தரானவர்களும் சொல்லிவைத்தார்கள்.

(ஆசார்யஹ்ரு) 21. "கட்டிப்பொன்போலே சேஷத்வம்; பணிப்பொன்போலே பாரதந்த்ர்யம்." என்னக் கடவதிறே.

25. "ஆனந்தம் அவன் ப்ரீதியைத் துளிரெழுப்ப" என்கிறபடியே.

50. வ்யாக்யானங்களில் 'பண்புடை வேதம்' என்றொழிய 'பண்புரை வேதம்' என்று பாடமும் இசை கோள் வேதம் என்கிறதுக்கு ஸாமவேத பரத்வமும் கண்டதில்லை யேயாகிலும் ஆப்ததமரான இவர் இப்ப்ரபந்தத்திலே இப்படியருளிச் செய்கையாலே இப்படியும் கொள்ளவேணும்.

104. "கர்ம ஸம்பந்தமறுகையாலே ஸூக்ஷ்ம சரீரமிருக்கைக்கு ஹேதுவில்லாமை யால் இங்கே கழித்துவிடலாயிருக்கச் செய்தே விரஜாபர்யந்தம் இவனுக்கு கமநஸாதந

$ பெரியவாச்சான் பிள்ளை யென்கிற ஸ்பஷ்டநிர்தேசமுள்ளது இவ்விடமொன்றே.

மாக ஈச்வரன் தன்னிச்சையாலே வைத்து விரஜையிலே உள்புக்கவாறே கழித்துவிடும்" என்றிறே நம் ஆசார்யர்கள் அருளிச்செய்வது.

## 22. நடுவில் திருவீதிப்பிள்ளை பட்டர்.

(ஸ்ரீவசநபூ.) 5. * இதுதன்னை நடுவில் திருவீதிப்பிள்ளை பட்டர் தத்வத்ரய ப்ரபந்தத்தில் ப்ரமாணாதிகாரத்திலே அருளிச் செய்தாரிறே ("இதுதன்னை" என்றது—மற்ற இதிஹாஸங்களிற் காட்டில் ஸ்ரீராமாயணத்திற்குண்டான ப்ராபல்யத்தை என்றபடி.)

(அவ்விடத்திலேயே மேலே) (அநேக புராண ப்ரசஸ்தமாயிருந்துள்ள மஹாபாரதமும் ஸ்ரீராமாயணத்தோபாதி ப்ரபல ப்ரமாணம்.) இதுவும் நடுவில் திருவீதிப்பிள்ளை பட்டர் தாமேயருளிச் செய்தார்.

(தத்வத்ரய) அவதாரிகை—நடுவில்திருவீதிப்பிள்ளைபட்டர் ஆச்சான்பிள்ளை முதலான பூர்வாசார்யர்களுடைய ப்ரபந்த நிர்மாணத்துக்கும் கருத்து இதுவிறே.

120. இதுதன்னை நடுவில்திருவீதிப்பிள்ளைபட்டர் "நிமேஷம் பதினைந்துகொண்டது காஷ்டை..........ப்ரஹ்மாயுஸ்ஸுக்குப் பரமென்று பேராம்" என்று ஸுவ்யக்தமாக வருளிச்செய்தார்.

151. ஸத்யகாமனுகையாவது—ஸாந்தீபநிபுத்ரனைக் கொண்டுவந்தாப்போலே ஸகலாபேக்ஷிதங்களும் முடிக்கவல்லனுகை. என்றிறே நடுவில் திருவீதிப்பிள்ளைபட்டர் தத்வத்ரயத்திலே அருளிச் செய்தது.

(அங்கேயே, மேலே) க்ருதியாகையாவது—ஆச்ரிதருடைய அபேக்ஷிதம் பூர்ணமானல் தான் க்ருதக்ருத்யனுகை. என்றிறே (நடுவில் திருவீதிப்பிள்ளை) பட்டருமருளிச் செய்தது.

(அங்கேயே, மேலே) க்ருதஜ்ஞனுகையாவது—ஆச்ரிதருடைய ஸுக்ருதலவமொன்றையுமே நினைத்து தான் செய்த நன்மைகளொன்றும் பாராதேயிருக்கை என்று இதுவும் (நடுவில் திரு—.) பட்டர் அருளிச்செய்தார்.

160. "அவர்ஜநீயமான ராகமோ" என்று நடுவில்திருவீதிப்பிள்ளைபட்டரருளிச் செய்ததாமித்தனை.

(ஆசார்யஹ்ருு.) உத்தரவீதி குடிபுகுருகிறபோது பிள்ளை வானமாமலைதாஸர் ஸஞ்சரணத்தாலே ஸ்தலசுத்தி பண்ணின நடுவில் திருவீதிப் பிள்ளை பட்டரும்.

## 23. ஆச்சான் பிள்ளை.

(ஸ்ரீவசநபூ.) 11. இவ்வுபதேசக்ரமம் இவர்தாமருளிச்செய்த பரந்தபடியிலும் ஆச்சான் பிள்ளையருளிச்செய்த பரந்தரஹஸ்யத்திலும் விஸ்தரேண காணலாம்.

49. ஜிதந்தாவ்யாக்யாநோபோத்காதத்திலே 'ப்ரபத்திக்கு அதிகாரிகள் அஜ்ஞரும் ஸர்வஜ்ஞரும் பக்திபரவசருமென்று த்ரிவிதராக பட்டரருளிச் செய்தாரிறே' என்று தொடங்கி........என்று ஆச்சான் பிள்ளையருளிச் செய்தார்.

332. "ஆசார்யன் அர்த்தகாமங்களிலே நசையற்றவனுகையாலே அவை ஹேதுவாகப் பொறுக்கவும் வெறுக்கவும் ப்ராப்தியில்லை; இனி இவனுடைய ஹித ரூபமாக வெறுத்தானுகில் அதுவும் ப்ராப்யாந்தர்க்கதமாகக் கடவது" என்று இதுதன்னை மாணிக்கமாலையிலே ஆச்சான்பிள்ளையருளிச் செய்தாரிறே.

(தத்வத்ரய) அவதாரிகை—நடுவில்திருவீதிப்பிள்ளைபட்டர் ஆச்சான்பிள்ளை முதலான பூர்வாசார்யர்களுடைய ப்ரபந்த நிர்மாணத்துக்கும் கருத்து இதுவிறே.

3. நடுவில்திருவீதிப்பிள்ளை பட்டரும் ஆச்சான்பிள்ளையும் முதலான ஆசார்யர்கள் தத்வத்ரயமருளிச் செய்கிறவிடத்தில் அசித்துபக்ரமமாக அருளிச்செய்தார்கள்.

35. "இவனுடைய புத்திமூலமான ப்ரயத்நத்தையபேக்ஷித்து ஈச்வரன் அநுமதிதானம் பண்ணுகையாலே அந்த க்ரியாநிபந்தநமான புண்யபாபங்களும் சேதநனுக்கேயாகிறது" என்று விவரணத்தில் ஆச்சான் பிள்ளையும்....

103. "கார்யோத்பாதகங்களான தத்வங்கள் ஸ்வஸ்வகாரணாவ்ருதங்களாய்க் கொண்டே உத்பாதிக்கிறதென்று கொள்ளவேணும்" என்று தத்வத்ரய விவரணத்திலே ஆச்சான் பிள்ளை.......

(அங்கேயே, மேலே) "இது தத்வத்ரய விவரணத்தில் ஆச்சான் பிள்ளையருளிச் செய்த க்ரமம்.

(அங்கேயே, மேலே) தத்வத்ரய விவரணத்தில் தந்மாத்ரத்துக்கு ஆவரணம் சொன்னவோபாதி.......

124. இதுவிறே தத்வத்ரயவிவரணத்தில் ஆச்சான் பிள்ளை ப்ராதாந்யேந அருளிச் செய்தது.

142. ......ஒரு யோஜனையுமுண்டிறே கத்யவ்யாக்யானங்களிலே நஞ்சீயர் ஆச்சான் பிள்ளை முதலான ஆசார்யர்களருளிச் செய்தது.

149. "எம்பெருமானுடைய திவ்யாத்ம குணங்களாவன—ஜ்ஞாந சக்த்யாதி ஷட்குணங்களும் அதிலேபிறந்த ஸௌசீல்யாதிகளும்" என்கிற இவ்வாக்யத்துக்கு அர்த்தமெழுதுகிற வளவில் "அதிலேபிறக்கையாவது—வஸ்தூத்கர்ஷாபாதக ஷாட்குண்யாயத்தகுணபாவமாகை" என்றிறே விவரணத்தில் ஆச்சான் பிள்ளையருளிச் செய்தது.

181. ......இது கரசரணாத்யவயவயோகியாகாநிற்கச் செய்தேயும் நித்யமாயேயிருக்கும் என்றிப்படி விவரணத்திலே ஆச்சான் பிள்ளையருளிச் செய்தாரிறே.

(முமுக்ஷுப்படி) ·12. "ஷடக்ஷரி வ்யாப்ய பதார்த்தங்களையும் வ்யாபகப்ரகாரத்தையும்..........அவற்றிற்காட்டில் இதுக்கு அர்த்தபௌஷ்கல்ய நிபந்தநமான ஆதிக்யமுண்டு" என்று.........ஸுஸ்பஷ்டமாக ஆச்சான் பிள்ளையருளிச் செய்தாரிறே.

97. இதுதான் நடுவில்திருவீதிப் பிள்ளைபட்டர் ஆச்சான் பிள்ளை இவர்களருளிச் செய்தப்ரபந்தங்களிலே ஸுஸ்பஷ்டம்.

(அங்கேயே, மேலே) "லக்ஷ்மீப்ரப்ருதி மஹிஷீவர்க்கங்களும்" என்றிறே ஆச்சான் பிள்ளையருளிச் செய்தது.

(அங்கேயே, மேலே) "பஞ்சோப நிஷந்மயமாகையாலே பரமபதமும் ஸமூஹாத்மகமாயிருக்கும்" என்றிறே ஆச்சான்பிள்ளையருளிச் செய்தது.

(அங்கேயே, மேலே) "குணத்ரயாத்மிகை யாகையாலே மூலப்ரக்ருதியும் ஸமூஹாத்மிகையாயிருக்கும்" என்றிறே இதுக்கும் ஆச்சான் பிள்ளையருளிச் செய்தது.

(அங்கேயே, மேலே) "அஹோராத்ராதி விபாகங்கள் அநேக மாகையாலே காலமும் ஸமூஹாத்மகமாயிருக்கும்" என்றிறே இதுக்கும் ஆச்சான் பிள்ளையருளிச் செய்தது.

99. "தன்குணங்களிலே ஈச்வரன் வ்யாபிக்கும் போது.......வ்யாபிக்கவேணும்; ஆகையாலே அநவஸ்தாதுஸ்ஸ்தமாம்" என்று இதுதன்னை ஸுஸ்பஷ்டமாக ஆச்சான் பிள்ளை அருளிச் செய்தாரிறே.

(த்வயப்ரகரணாவதாரிகை.) ஆச்சான் பிள்ளை ஜீயர் முதலானாரும் இந்த ப்ரகாரமிறே அருளிச்செய்தது.

(ஆசார்யஹ்ருத.) 99. (விவேகவிவரணத்தில்) ஆகையிறே "விவேகமாவது *ஆஹார சத்தௌ ஸத்வசுத்தி:* என்கிறபடியே அந்தஃகரணசுத்திக்கடியான அந்ந சுத்தியென்று ஆச்சான்பிள்ளையருளிச் செய்தது.

## 24. அழகிய மணவாளப் பெருமாள் நாயனர்.

(ஸ்ரீவசந பூ.) 159. ("உத்தரவாக்யத்தாலே ப்ராப்யஞ் சொல்லுகிறது, ப்ராப்யாந்தரத்துக்கு அன்றென்கை" இத்யாதியாலே முமுக்ஷுப்படியிலும் இவர்தாமேயருளிச் செய்தாரிறே.) "* திருமாலைக் கைதொழுவர் * அடியாரைச் சேர்தல்தீர்க்குந் திருமாலை * என்கிறபடியே புருஷகாரம் முன்னாகப் பற்றி ப்ரயோஜனங்களைக் கொண்டகலாதே அவற்றையொழிந்து ஒண்டொடியாள் திருமகளுமவனுமான சேர்த்தியிலடிமையைப் பேறென்று கீழ்ச் சொன்ன உபாயபலத்தைக் காட்டுகிறது பிற் கூறு" என்றிறே இவர்திருத்தம்பியாரும் அருளிச்செயல் ரஹஸ்யத்திலருளிச்செய்தது.

(தத்வத்ரய.) 46. இவருடைய திருத்தம்பியாரும் ஆசார்ய ஹ்ருதயத்திலே அவித்யாகாரணம் அநாத்யசித்ஸம்பந்த மென்று அருளிச் செய்தாரிறே.

(முமுக்ஷுப்படி) 129. "........விளைவதறியாதே முறுவலுக்குத் தோற்றுச் சொல்வழிபோமவனைப் பொறுப்பிக்கு மென்னுமிடம் சொல்லவேண்டா விறே" என்று இது தன்னை இவர் திருத்தம்பியாருமருளிச்செய்தாரிறே.

(ஆசார்யஹ்ருத.) 103. இந்த யோஜனையைப் பற்றவும் பூர்வயோஜனையே இதினுடைய பட்டோலையான பெரியபடிக்குச் சேருவது.

113. இந்த யோஜனை இதன்பட்டோலையான க்ரந்தத்தில் இவரருளிச் செய்த மர்யாதைக்குச் சேரும்.

127. விசிந்தன மென்கிறவிதுக்கு இப்படி வ்யாக்யானம் பண்ணிற்று இதின்பட்டோலையானதிலே "உறுமோவென்று நித்யசத்ருவை வென்று புலன் கொள்வடிவை விசிந்தயகாயிருக்கும்" என்று விசிந்தயங் என்றொருவசன முண்டாகவுமெடுத்து இப்படி இவர் தாமே அருளிச் செய்துவைக்கையாலே.

## 25. வேதாந்ததேசிகர்.

(தத்வத்ரய.) 39. (இப்படி தார்ய வஸ்துக்களை ஸ்வரூபஸங்கல்பங்களிரண்டாலும் தரிக்கு மென்னுமிடம் அபியுக்தராலே விஸ்தரேண ப்ரதிபாதிக்கப்பட்டது. எங்ஙனேயென்னில்;) "ஈச்வரன் தன்ஸ்வரூப நிரூபகதர்மங்களுக்கும்.......ஸங்கல்பாச்ரித மென்னக் கடவது" என்றிப்படி ரஹஸ்யத்ரயஸாரத்திலே ப்ரதிபாதிக்கையாலே.

80. *இஹ ஜடாம் ஆதிமாம் கேசிதாஹு:* என்றிறே அபியுக்தரும் சொல்லிற்று.

82. இதுதான் அபியுக்தராலே விஸ்தரேண ப்ரதிபாதிக்கப்பட்டது. எங்ஙனேயென்னில், த்ரிவிதாசேதநங்களென் றெடுத்து......ப்ரமாண ப்ரதிபந்நார்த்தத்துக்கு யுக்தி விரோதம் சொல்லவழியில்லை" என்றிப்படி ரஹஸ்யத்ரயஸாரத்திலே ப்ரதிபாதிக்கையாலே.

## 26. வில்லிபுத்தூர்ப்பகவர்.

(ஆசார்யஹ்ரு.) 32. திருவயிந்திர புரத்திலே வில்லிபுத்தூர்ப்பகவரென்பா ரொருவர்...எல்லாருமொருதுறையிலே அநுஷ்டானம் பண்ண, தாம் தனியே ஒரு துறையிலே அநுஷ்டானம் பண்ணுவாராய், ஒருநாள் அநுஷ்டானம்பண்ணி மீளாநிற்கச்செய்தே இருந்த ப்ராஹ்மணர் 'ஜீயரே! எங்கள் துறையிலே அநுஷ்டானம்பண்ண வாராதொழிகிறதென்?' என்ன; * விஷ்ணுதாஸா வயம் யூயம் ப்ராஹ்மணா வர்ணதர்மிணஃ, அஸ்மாகம் தாஸவ்ருத்தீநாம் யுஷ்மாகம் நாஸ்தி ஸங்கதிஃ* என்று துறை வேறிட்டுப் போனாராயிற்று.

## 27. வேதாசார்யபட்டர்.

(ஆசார்யஹ்ரு.) 53. காண்க. ["வேதகுருபதேசம்" என்று மூலம்.

## 28. வாதிகேஸரி அழகிய மணவாளச் சீயர்.

(ஸ்ரீவசந பூ.) 6. மற்றைப் பிராட்டிமார்க்கும் ஸூரிகள் முதலான ததீயர்க்கும் இவள் ஸம்பந்தமடியாக வருகிற புருஷாகாரத்வமிறேயுள்ளது; இவளைப்போலே ஸ்வதஸ் ஸித்தமன்றே. ஆகையிறே * ஏதத்ஸாபேக்ஷஸம்பந்தாத் அந்யேஷாமமலாத்மநாம், தேவீஸூரிகுரூணஞ்ச கடகத்வம் நது ஸ்வதஃ* என்று தீபஸங்க்ரஹத்திலே ஜீயரருளிச் செய்தது.

381. "இந்த விபூதித்வய விஷயமான பாத சப்தமும் த்ரிபாச்சப்தமும் அல்பத்வ மஹத்த்வங்களுக்கு உபலக்ஷண மித்தனையொழிய பரிச்சேதபரமன்று; லீலாவிபூதியிலண்டங்கள்தானே அஸங்க்யாதங்களாயிறே யிருப்பது" என்று தீபப்ரகாசத்திலே ஜீயரருளிச் செய்கையாலே......

(தத்வத்ரய.) 35. "இப்படி கர்த்ருத்வம் பரமாத்மாயத்தமானாலும்......ஸர்வப்ரவ்ருத்திகளிலும் சேதநனுடைய ப்ரதமப்ரயத்நத்தை அபேக்ஷித்துக் கொண்டு பரமாத்மா ப்ரவர்த்திப்பியா நிற்குமென்றதாய்த்து" என்று தீபப்ரகாசத்திலே ஜீயருமருளிச் செய்த அர்த்தங்கள் இவ்விடத்திலே அநுஸந்தேயங்கள்

103. தத்வநிரூபணத்திலே ஜீயரருளிச் செய்தது மொருக்ரமமுண்டு; அதாவது—பூதாதியில் நின்றும் சப்ததந்மாத்ரை பிறக்கும்.......

(அங்கேயே, மேலே) * பூர்வபூர்வதந்மாத்ரம் உத்தரோத்தர தந்மாத்ரத்தையும் தத்விசேஷத்தையும் ஆவரிக்கும்" என்று ஜீயரருளிச் செய்கையாலும்....

(அங்கேயே, மேலே) தத்வநிரூபணத்தில் தந்மாத்ர தத்விசேஷங்களிரண்டுக்கும் ஆவரணம் சொல்லுகிறவளவில்.......

(முமுக்ஷுப்படி) 75......என்று தீபப்ரகாசத்திலும்......என்று ரஹஸ்யத்ரயார்த்த விவரணக்ரமமருளிச் செய்த ப்ரபந்தத்திலும் விவரண லக்ஷணத்தை ஜீயரருளிச் செய்தாரிறே.

(த்வயப்ரகரணவதாரிகை.) ஆச்சான் பிள்ளை ஜீயர் முதலானாரும் இந்த ப்ரகாரமிறே அருளிச் செய்தது.

ஸ்ரீகாஞ்சீ அண்ணங்கராசாரியர் தொகுத்த
**மாமுனிவன் மேற்கோள்விளங்கு முற்றிற்று.**

ஜீயர் திருவடிகளே சரணம்.

ரத்னம் அச்சகம், 11, பத்திரையன் வீதி, மதராஸ்-1.

ஸ்ரீ:

## ஆழ்வார் திருநகரியைச் சார்ந்த பெருங்குளம் மிராசுதாரர்

## ஸ்ரீ.உ.வே. S. R. மாயக்கூத்தய்யங்கார் ஸ்வாமியின்

## ஸ்ரீமுகம். (31—5—49)

திருச்சியிலிருந்து ஷோடசாத்யாயி யென்ற ஸஞ்சிகை ஸ்ரீராமாநுஜன் சந்தாதாரர்களுக்கு புத்தூர் வக்கீல் அனுப்பியிருக்கிறார். அடியேனுக்கும் ஒன்று வந்திருக்கிறது. ஷி வக்கீல் தொழிலுக்கு ஏற்றபடி கோபம் ஆத்திரம் முதலிய மகாகுணங்களின் உச்சத்தை படைந்து நேர்வழியை அறவேவிட்டு அபத்த வார்த்தைகளைக் கொட்டியிருக்கிறார். தென்னாசார்ய ஸ்ரீவைஷ்ணவ ஸமூஹத்தில் பூர்வசிகை அபாசிகை என்கிற கக்ஷிபேதத்தை பிரபலப்படுத்தி அதன் மூலமாகவே தம்முடைய கக்ஷியை ஸ்தாபித்துக் கொள்ளலாமென்று எண்ணங்கொண்டுவிட்டாரிவர். பூர்வசிகி ஸ்வாமிகளில் பல மஹநீயர்கள் நம்ஸ்வாமியை தெய்வமாகக் கொண்டிருப்பதை உலக மெல்லாமறிந்து விட்டதால் அதில் ஸஹிக்க முடியாத பொறாமை கொண்ட இந்த வக்கீல் தப்புவழியில் நுழைந்து அட்டஹாஸம் செய்கிறார். இவர் கடுஞ் சொற்களை அடியோடு காட்டாமல் அஷ்டாத்யாயியை கொஞ்சமாவது பின்பற்றி விஷயங்களை மாத்திரம் அழகாக எழுதியிருந்தாராகில் ஏதோ இவரிடத்திலும் விஷய மிருக்கிறதென்று உலகம் மயங்குவதற்காவது ஆஸ்பத முண்டாகும். “நான் அண்ணங்கராசாரியரை வாய்வந்தபடி தூஷிக்கவே போகிறேன்” என்று வெட்ட வெளிச்சமாக அவதாரிகை போட்டுக்கொண்டு ஒவ்வொரு பேஜிலும் 4 தடவைக்குக் குறையாமல் P. B. A. ஸ்வாமி ஸங்கீர்த்தனம் செய்திருக்கிறார். நம்மாழ்வார் “கேட்பார்கள் கேசவன் கீர்த்தியல்லால் மற்றுங்கேட்பரோ..........திருவடி தாட்பாலடைந்த தன்மையறிவாரை யறிந்துமே” என்று ஸாதித்தபடி எம்பெருமானுடைய பரிபூர்ண க்ருபைக்கு இந்த வக்கீல் ஸ்வாமிகளும் (அந்தப் பாசுரத்தின் பின்னடிகளின் பிரகாரம்) அவச்யம் பாத்திரமாவர் என்று சந்தோஷிக்கலாம்.

தாஸன்,

**S. R. மாயக்கூத்தன்.**

☞ இப்புத்தகத்தை ஆஸ்திகர்கள் ஆங்காங்கு ஸபை கூட்டி வாசிக்கவேணும்.

# தீண்டாமைதொலையாமை.

(முதல் அத்தியாயம்.)

காஞ்சீபுரம் P. B. அண்ணங்கராசாரியர் எழுதியது. (10-3-47.)

முக்கியமாக இது ஸ்ரீமான் திவான்பஹதூர் வி. பாஷியமையங்காருடைய வியாஸத்திற்கு விடையளிப்பாகவே யெழுதி வெளியிடப்பட்டது. இதில் கண்ட விஷயங்களுக்கு ருஜுவான வழியில் யார் பதில் வெளியிட்டாலும் அவர்களுக்கு நான் அடிமை என்கிற சபதத்துடன் இதை வெளியிட்டிருக்கிறேன். முழுதுங்காண்க.

---

மிகவும் முக்கியமான ஒரு வார்த்தை. ஷ V. பாஷியமையங்கார் ஒரு பெரிய தேவஸ்தானத்திற்குப் பல வருஷமாக ட்ரஸ்டியாக இருந்து வருபவர். தர்மகர்த்தாவின் கடமைகளைச் செலுத்த வேண்டியவர். அர்ச்சகர் பரிசாரகர் முதலானவர்களை தப்புகள் காரணமாக விலக்கவும் அதிகாரம் பெற்றவர். அவர்களை விலக்கவேண்டிய காரணங்களில் எது முக்கியமென்றால், சாஸ்த்ரப்படி திருவாராதனம் முதலியன செய்யாமை, சாஸ்த்ர வரம்பைமீறி மனம்போனபடி செய்கை...ஆக இப்படிப்பட்டவையே யாகும். அர்ச்சகரோ மணியகாரரோ மற்றும் யாராவதும் தீண்டாதாரை தெரிந்தோ தெரியாமலோ கோவிலுக்குள் புகவிட்டால் அதற்காக அவர்களுக்கு தண்டனையை விதித்து, கோவிலுக்கு ப்ராயச் சித்தங்களையும் செய்விக்கவே இவர் கடமைப்பட்டவர். இதற்கு விபரீதமாக இவர் நடந்து கொண்டால் தர்மகர்த்தா என்கிற பெயருக்கே அர்த்தமில்லையாகும். தர்மஹர்த்தா எனத்தகும். இவ்விஷயம் இவர்க்கு இது வரையிலேயே நன்கு தெரிந்திருக்கும். இதுவரை தெரியாதென்னில் இப்போது விசதமாகத்தெரிந்து கொண்டவராவர். இனியாகிலும் தமது கடமையை யுணர்ந்து ருஜுவான வழியில் நிற்பதழகு. சாஸ்த்ரங்களை மீறி நடந்தால் அனர்த்தமே.

இதுவரையில் அதர்க்கணமாகவும் அநியாயமாகவும் தீண்டாதார்க்குத் திறந்துவிடப்பட்ட ஆலயங்களின் அலங்கோலம் எப்படிப் பட்டதாகவுள்ள தென்பதைக் காணவும் கண்ணில்லையோ ?

---

காஞ்சீபுரம் ஸ்ரீ ஸுதர்சன அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.

இதன் விலை 0—6—0.

30—3—1947.

# சண்டாள ஜாதியைப்பற்றின சாஸ்திர விசாரம்.

வேதங்களின் தலையான உபநிஷத்துக்களில் மிக முக்கியமாகக்
கொண்டாடப்படுகிற சாந்தோக்ய மென்னும் உபநிஷத்தில் 5-10-7, 5.
விசாலமனம் படைத்தவரென்று கொண்டாடப்படுகிற ஸ்ரீ ராமாநுஜரால்
ப்ரஹ்மஸூத்ர பாஷ்யத்தில் [மூன்றுவது அத்யாயம் முதற்பாதத்தில்]
எடுத்து விவரிக்கப்பட்டது.

"தத் ய இஹ ரமணீயசரணு அப்யாசோஹ யத் தே ரமணீயாம் யோநிமாபத்யேரந், ப்ராஹ்
மண யோநிம் வா க்ஷத்ரியயோநிம் வா வைச்யயோநிம் வா: அத ய இஹ கபூயசரணு அப்யாசோஹ
யத் தே கபூயாம் யோநி மாபத்யேரந் ச்வயோநிம் வா ஸூகரயோநிம் வா சண்டாளயோநிம் வா"
என்று ப்ரஸித்தமானது, த்ரிமதஸ்தர்களான பாஷ்யகாரர்களாலும் அடிக்கடி எடுத்
தாளப் பட்டது. இதில் ப்ராஹ்மணுதி யோனிகளைப் போலவே சண்டாள யோநியையும்
பேசியிருப்பது கவனிக்கத்தக்கது. தற்காலம் சண்டாளர்களென்று அவர்கள் தம்மாலும்
பிறராலும் அனைவராலும் வழங்கப்பட்டு வரும் வகுப்பினர் அக்ரஹாரங்களுக்குள்ளும்
தேவாலயங்களுக்குள்ளும் புகாமல் கிராமங்களுக்கு வெளியில் வசித்துவருவது அநாதியாக
ப்ரத்யக்ஷஸித்தம். தீண்டாவகுப்பின ரென்பார் தனிப்பட்ட வொரு ஜாதியே யென்பது
சாஸ்திரங்களாலும் பிரத்யக்ஷத்தாலும் அபலபிக்க முடியாதது.

மேல்ஜாதி ஸ்த்ரீயினிடத்தில் கீழ்ஜாதியனுக்குப் பிறந்தவர்களே சண்டாளர்கள்
என்று ஒரு மஹர்ஷி சொல்லியிருப்பதாக எடுத்துக்காட்டிச் சிலர் வாதம் செய்வதற்கும்
பதில் சொல்லுகிறேம். அப்படிப்பட்டவர்களல்லர் இக்காலத்துப் பஞ்சமர்கள். சண்டாள
ஸ்த்ரீயினிடத்தில் சண்டாளனுக்குப் பிறந்தவர்களாகவன்றே இவர்கள் காணப்படுகிறர்கள்.
இதற்குமேல் என்ன சொல்லக்கூடு மென்னில், நம்முடைய புத்திக்கெட்டாத முற்காலத்தில்
பிராமண ஸ்த்ரீயினிடத்தில் சூத்ரனுக்குப் பிறந்தவர்கள் சண்டாளர்களென்ற விலக்கப்
பட்டார்கள்; அப்படி விலக்கப்பட்ட சண்டாள ஜாதியிற் பிறந்தவர்களே யிவர்கள் என்று
சொல்லக்கூடும். இதனுல் இவர்களுக்கு என்ன லாபமென்றுல், இப்படிப்பட்ட ஸங்கர
ஜாதிகள் இக்காலத்திலும்கூட நமக்குத் தெரிந்தும் தெரியாமலும் ஆங்காங்கு ஏராளமாக
இருக்கலாமாதலாலும், அவர்கள் யாராலும் ஒதுக்கப்படாமல் கலந்தே பழகுகிறபடியாலும்
அப்படியே இந்த சண்டாளர்களும் கலந்து பழகுவதில் பிசகு ஒன்றுமில்லை—என்கிற வாதமே
லாபமாகும். இங்கே கவனிக்க வேண்டியதாவது—நம்முடைய புத்திக்கு எட்டாத காலம்
முதல் இச்சாதியர் ஒதுங்கியே யிருக்கிறுர்க ளென்பது யாராலும் மறுக்க முடியாத விஷயம்.
எக்காலத்தில் யாரால் எதற்காக ஒதுக்கப்பட்டார்களென்று ஒருவராலும் சொல்ல முடியாம
லிருக்கிறது. இக்காலத்திலும் ஸாங்கர்யங்கள் (கலப்பு) ஏற்பட்டாலும் அவர்களை விலக்க முன்
வருவார் ஆருமில்லை. கலந்துபழக விருப்ப மற்றவர்கள் தாங்கள் விலகிப் போகலாமே யொழிய
அவர்களை விலக்குவதற்கு சக்தியோ அதிகாரமோ உள்ளவர்கள் யாருமில்லை. ஆகவே இக்
காலத்து ஸாங்கர்யத்தைப் பற்றிப் பேசுவதில் பயனில்லை. அநாதிகாலமாக ஒதுங்கியே—வில
கியே—தீண்டாமலே யிருந்து வருகின்ற ஜாதியாரின் தீண்டாமையை யொழித்துவிட
வேணுமென்றுல் தலைகீழாக நின்று தவம் புரிந்தாலும் இது ஆகாது. தீண்டும் வகுப்பிற்
சேர்ந்தவர்களை ஏதோ தோஷங்கள் காட்டி விலக்கவோ ஒதுக்கவோ எப்படி இக்காலத்தில்
ஒருவராலும் முடியாதோ அப்படியே யிருப்பவர்களான தீண்டாதாரைச் சேர்த்துக்கொள்ள
வும் முடியாதென்பது திண்ணம். சேர்த்துக்கொள்ளும்படியாக நாங்கள் ஏற்பாடு பண்ணி

☞ இதன் தொடர்ச்சி ராப்பர் நாலாவது பக்கம் காண்க.

ஸ்ரீ:

# தீண்டாமை யொழியுமா தொலையுமா தீண்டாமை?
# தீண்டாமை யொருநாளு மொழியாது தொலையாது.

காஞ்சீபுரம் P. B. அண்ணங்கராசார்யர்

## முன்னுரை

தீண்டாமையை யொழிக்கும் பிரசாரம் எங்கும் தலையெடுத்து நிற்கின்றது. அதர்க்கணமான அநீதிச் செயல்களும் எங்கும் பரவிவருகின்றன. இவை மிகவும் தவறான இயக்கமென்பதை லௌகிகர்களுக்கும் வைதிகர்களுக்கும் த்ருப்திகரமாக யுக்திகளாலும் சாஸ்த்ரங்களாலும் விரிவாக நிரூபிக்கின்றேன். சமீபத்தில் (8—3—47ல்) வெளி வந்த தினமணி பத்ரிகையில் திவான்பஹதூர் வி. பாஷ்யமையங்கார் பெயரால் அவரது உருவப் படத்துடனும் வெளிவந்திருக்கின்ற வியாஸம் மிகத்தவறு, மிக மிகத் தவறு என்பதை முன்னம் நிரூபித்து விட்டுப் பிறகு பல விஷயங்களும் விவரிக்கின்றேன். இப்படி விவரிக்கப்படும் விஷயங்களுக்கு நிந்தனை சிறிதுமில்லாமல் அனைவர்க்கும் த்ருப்திகரமாக பதிலை வெளியிட்டு விட்டால் தீண்டாமை யொழிந்தது! தீண்டாமை தொலைந்தது! என்று நாமும் மனமுவந்து பறைசாற்றுவோம். அதுவுமல்லாமல் வி. பாஷியமையங்கார் போல்வார்க்கே நாளும் தொண்டனா யிருந்து காலம் கழிப்பேன். இந்த சபதமொழி ஸத்யமானது. இந்த வகையில் என்னை அடிமைப் படுத்திக்கொள்ளத் துணிவிருந்தால் நான் பதில் சொல்ல முடியாதபடி விஷயங்களை விளக்கமாகஎழுதி பதில் வெளியிடட்டும். தீண்டாமை யொழிய வேணுமென்றோ தீண்டாமை யொழிந்த தென்றோ அப்போது பறை சாற்றுவது அழகு.

V. B. ஐயங்கார் சிறந்த நீதிபதியாக விளங்கினவர் என்று சொல்லப் படுகிறார். எந்த கேஸ்களிலும் அவற்றுக்குச் சம்பந்தப்பட்ட ரிகார்டுகளைக் கவனித்தே ஒரு முடிவுக்கு வரவேணு மென்பது இவர்க்குத் தெரியாததன்று. ஒரு ரிகார்டுமில்லாமல் அடாவடியாக வாயடிக்கும் வக்கீல்களின் அட்டகாசங்களைக் கொண்டு எதையும் முடிவு செய்யலாகா தென்பது இவருடைய அநுபவத்தில் விளங்கியிருக்குமே. ஆகவே தகுந்த ரிகார்டுகளைக் கொண்டும் லாபைண்டுகளைக் கொண்டும் இப்போது நாம் வாதிக்கும் விஷயங்களை இவர் நன்றாகப் பரிசீலனை செய்து ருஜுவான வழியில் தம்முடைய முடிவை வெளியிடட்டும். ஒருவாரம் அல்லது இரண்டு வாரம் தவணையிடுகிறோம். விரும்பினால் ஒரு மாதமும் தவணை கொள்ளட்டும். அதற்குள்ளாக இவருடையவோ இவரைச் சார்ந்தவர்களுடையவோ ருஜுவான பதில் வெளிவரவேண்டும். அஃதில்லையேல், சில பாமர ஜனங்களை வஞ்சித்து இவர்கள் செய்யும் பிரசாரங்கள் பயனற்றவை யென்று முடியும்.

நாலாறு மாதங்களுக்கு முன்பு இந்த பாஷியமையங்காருக்கு 71-வது ஆண்டு நிறைவு விழா வந்ததாம். அப்போது அதைச் சிறப்பாக நடத்தச் சில பஞ்சமாபிமானிகள் சென்னையில் ஒன்று கூடினார்கள். அப்போது விச்வப்ரஸித்த ப்ரபல அட்வகேட்டான

கனம். வெங்கடராம சாஸ்திரியாரவர்கள் ஷடி கூட்டத்தின் சார்பாக எனக்கொரு வேண்டு கோள் கடிதம் அனுப்பினர். அரிஜன ஆலய ப்ரவேச விஷயமாய் ஸம்ஸ்கிருதபாஷையில் சிறந்ததோர் வியாஸமெழுதுபவர்க்கு 100 ரூ. பரிசளிக்கத் தீர்மானித்திருப்பதாகவும் அந்தப் பரிசை நான் பெற வேண்டுமென்று கேட்டுக் கொள்வதாகவும் அதில் தெரிவிக்கப்பட்டிருந்தது. உடனே அப்பெரியார்க்கு நான் பதில் எழுதி "சண்டாள ஆலயப்ரவேசத்தைக் கண்டித்து எழுதவேணுமா? ஆதரித்து எழுதவேணுமா?" என்று கேட்டேன். தயவு செய்து அதை ஆதரித் தெழுதவேணு மென்று கேட்டுக் கொள்வதாக உடனே பதில் கிடைத்தது. நியாயத்திற்குச் சிறிதும் ஒவ்வாததான விஷயத்தைக் கண்டிப்பது தவிர ஆதரிப்பது அஸாத்ய மாதலால், கண்டனமாக வடமொழியில் எழுதப்பட்டு ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டு அச்சிடப்பெற்றதுமான எனது வியாஸத்தை உடனே அவர்க்கு அனுப்பி 'இந்த நமது வியாஸத்தின் மீது பிசகிருந்து நிரூபிக்கவல்லவர்களுக்கு 200 ரூ. பரிசளிக்கக் காத்திருக்கிறேன்' என்றும் தெரிவித்துக் கொண்டேன். பிறகு ஒரு பதிலும் கிடைத்திலது. அந்த நமது ஸம்ஸ்கிருத வியாஸம் தமிழிலும் தெலுங்கிலும் ஹிந்தியிலும் ஆங்கிலத்திலும் மொழிபெயர்க்கப்பட்டு நமது நான்கு பாஷைப் பத்திரிகைகளில் வெளிவந்து மிருக்கின்றது. அது இதிலும் அநுபந்தமாகச் சேர்க்கப்படும். முன்னுரை முற்றிற்று.

**இனி, வி. பாஷியமையங்காருடைய தினமணி வியாஸத்திற்கு பதில்.**

1. இவர் தம்முடைய வியாஸம் தொடங்கும் போதே "ஸநாதன தர்மத்தை அடிப்படையாகக் கொண்ட நம்முடைய ஹிந்துமதம்" என்கிறார். ஸநாதன தர்மமாவது என்ன? அதை இவர் எது கொண்டு தெரிந்து கொண்டார்? சாஸ்த்ரங்களைக் கொண்டு தெரிந்து கொண்டாரா? அல்லது பெரியோர்களின் அனுஷ்டானங்களைக் கொண்டு தெரிந்து கொண்டாரா? அல்லது இவை யிரண்டாலும் தெரிந்து கொண்டாரா? என்கிற கேள்வி அவசியம் எழுகின்றது. சாஸ்த்ரங்களையும் பெரியோர்களின் அனுஷ்டானங்களையும் புறக் கணித்து சில குயுக்திவாதங்களையே பற்றுக் கோடாகக் கொண்டு இவர் பதில் சொல்லப் புகுவாராயின் இவர் கைப்பற்றிய கேஸ் ரிகார்டுபலமற்ற தென்று முதலிலேயே விளங்கின தாகும். அனுஷ்டானம் சில காலமாய் தவறுதலாக வந்து விட்டதென்றும் ஆகவே இக் காலத்துப் பெரியோர்களுடைய ஆசாரங்களை நான் சரியென்று கொள்ளமாட்டே னென்றும் இவர் தெரிவிப்பரேல் தற்காலம் இவ்விஷயத்தை விட்டுவைத்து முதல் விஷயத்தை யெடுத்துக் கொள்வோம். வேதங்கள் உபநிஷத்துக்கள் பாஞ்சராத்ர ஸம்ஹிதைகள் தருமசாஸ்த்ரங் கள் பகவத் கீதை இவற்றின் பாஷியங்கள் முதலானவற்றை இவர் பிரமாணமாக இசை கின்றாரா இல்லையா? என்று கேட்கிறோம். 'அவசியம் இசைகின்றேன்' என்றே இவர் பதில் சொல்லக் கூடுமென்கிற நம்பிக்கையினால் நான் இது எழுதுகின்றேன்.

2. ஹிந்துமதம் என்கிறார். புராதன காலத்தில் இச்சொல் ஒருவருடைய வாயி லும் வந்ததன்று. ஒருவருடைய எழுத்திலும் கண்டதன்று. ஹிந்து என்கிற சொல்லுக்கே அர்த்த மில்லாதபோது ஹிந்து மதம் என்று சொல்லக் கூடிய ஒரு மதம் தேறுவதற்கு வழியேயில்லை. இதைப் பற்றியும் பிறகு விசாரம் வைத்துக்கொள்வோம்.

3. V. B. "தீண்டாமை யென்னும் கொடியபழக்கத்தின் முடிவுகாலம் மிகவும் நெருங்கி விட்டது" என்கிறார். இதைப் பற்றியே நாம் விரிவாக விமர்சனம் செய்ய விரும்பு கிறோம். தீண்டாமை என்கிற சொல் முடிந்து விடுகிறதா? தீண்டாமை என்கிற செய்கை முடிந்து விடுகிறதா? என்று கேட்கிறோம். எதுவும் முடியமாட்டாது. தீண்டல், தீண்டாமை,

தீண்டாதார் என்கிற சொற்கள் இன்று நேற்று உண்டானவையல்ல. சந்திர ஸூரியர்கள் உண்டான காலம் முதல் இவையுண்டு. உலகில் எத்தனை பாஷைகள் உள்ளனவோ அத்தனை பாஷைகளிலும் அந்தந்த பாஷைக்குரிய சொற்களால் இவை வழங்கப்பட்டு வருகின்றன. பிளயத்திலும் அழியமாட்டாதவை இவை. நாளைக்கும் இவர்களுடைய வாக்கிலும் தீண்டாமை, தீண்டாதார் என்று பல்லாயிரம் முறை வெளிவந்து கொண்டேயிருக்கின்ற இச்சொற்கள் எங்ஙனம் அழியும்? ஒருகாலும் அழியமாட்டா?

4. 'ஈசுவரன் இல்லை' என்று சொன்னவர்களை நோக்கி ஈச்வரவாதிகள் என்ன பதில் சொல்லியுள்ளார்களென்பது இவர்க்கும் தெரிந்திருக்குமே. ஈச்வரன் என்கிற சொல்லை வாயினாற் சொன்னபோதே அந்த வஸ்து அவசியம் இருந்து தீரவேணுமே என்கிறார்கள் மஹாமேதாவிகள். இல்லாதவஸ்துவை யாரும் வாயினால் உச்சரிக்க முடியாதல்லவா? "மலடிமகன், முயற் கொம்பு, ஆகாசத்தாமரை என்று நாம் வாயினால் உச்சரிக்கவில்லையா? உண்மையில் இவை இல்லாத பொருள்கள்தானே" என்று கேட்பவர்கள் கவனிக்கவேண்டும். 'மலடிமகன்' முதலிய சொற்களானவை இரண்டு பதங்கள் சேர்ந்தவை. உலகில் மலடியுமுண்டு, மகனுமுண்டு. முயலுமுண்டு கொம்புமுண்டு. ஆகாசமுமுண்டு தாமரையுமுண்டு. இவற்றில் இல்லாத வஸ்து எதுவுமில்லை; பின்னை இல்லாதது எதுவென்னில் மலடிக்கும் மகனுக்கும் ஸம்பந்தமில்லை; முயலுக்கும் கொம்புக்கும் ஸம்பந்தமில்லை; ஆகாசத்திற்கும் தாமரைக்கும் ஸம்பந்தமில்லை என்பதன்றோ இங்குச் சொல்லப்படுகிறது. ஆகவே இரண்டு பதங்களின் சேர்க்கையான சொற்களை யெடுத்துக் காட்டி ஆக்ஷேபம் செய்வது தகாது என்பதை ஸ்ரீ பாஷ்யம் முதலிய கிரந்தங்களில் பரிசயம் செய்தவர்கள் எளிதாக உணருவார்கள். தீண்டாமை, தீண்டாதார் என்கிற சொற்கள் அப்படிப்பட்டவையல்ல. ஆகவே இவற்றின் பொருள் என்றைக்குமிருந்தே தீரும், ஒரு நாளுமழியாதென்க.

5. உலகில் பகவத் ஸ்ருஷ்டியை கவனித்தால் எல்லாம் த்வந்த்துவமாகவே காணப்படும். அதாவது, ஒவ்வொன்றும் பிரதிகோடியோடு கூடியேயிருக்கும். சிறியது—பெரியது. கறுத்தது—வெளுத்தது, யோக்யன்-அயோக்யன், நல்லது-தீயது, வெளிச்சம்-இருட்டு, சுகம்-துக்கம், உணர்ச்சி-உறக்கம்; செல்வம்-தரித்திரம், நட்பு-பகை, அமுதம்-விஷம், இன்பம்-துன்பம், தெளிவு—கலக்கம், வெய்யில்—நிழல், அநுக்ரஹம்-நிக்ரஹம், நகரம்-குக்ராமம், வித்வான்-மூடன், புண்ணியம்-பாவம், சேர்க்கை- பிரிவு, நினைப்பு-மறப்பு, உண்மை-பொய்ம்மை, நேர்மை-கோணல், இளமை-முதுமை, புதுமை-பழமை, வெளிப்படை-மறைவு, உகப்பு-வெறுப்பு, சீதேவி- மூதேவி, புகழ்ச்சி-பழிப்பு, குறுமை-நெடுமை, கனவு-நனவு.................இப்படி எவ்வளவு காட்டலாம். எதை யெடுத்துக் கொண்டாலும் அதற்குக் கட்டாயம் பிரதிகோடியிருந்தே தீருமென்பது திண்ணம். தீண்டுவாரும் தீண்டுகையும் இருக்கும் வரையில் தீண்டாதாரும் தீண்டாமையும் இல்லாமற்போகுமோ? இருந்தே தீரும்.

6. "சமீபகாலம்வரை "பஞ்சமர்கள்" என்றும் "தீண்டாதவர்கள்" என்றும் இழிந்த பெயர்களால் குறிக்கப்பட்டு வந்து" என்றெழுதியுள்ளார் V.B. இது அடியோடு அர்த்தமில்லாத வார்த்தை. பஞ்சமர்கள் என்பதும் தீண்டாதவர்கள் என்பதும், மற்றும் சண்டாளர்கள் பறையர்கள் என்றாலும் இவை இழிவான பெயர்களல்ல. தேளைத் தேளென்கிறோம்; பாம்பைப் பாம்பென்கிறோம். சாஸ்த்ரங்களாலும் அநாதிவ்யவஹாரங்களாலும் ஏற்பட்டுள்ள பெயர்கள் உள்ளதையுள்ளபடி சொல்லுவனவேயன்றி ஒருகாலும் இழிவுரையாகாது. உண்மையில் மூடனான வொருவனை நாம் மூடனென்றாலும் இது உலகில் இழிவுரையேயாகின்றது. ஏனென்

ருல், மூடனென்று ஒரு ஜாதிகிடையாது. அது பழிப்புச்சொல்லாகவே உலகில் வழங்கி வருவது. அதனல் மூடனென்பது இழிவுரையாகின்றது. பஞ்சமன் பறையன் தீண்டாதவன் என்பவை ஜாதியைக் குறிக்கும் சொற்களேயல்லது இழிவு காட்டும் சொற்களல்ல. சண்டாள ஜாதியிற் பிறவாதவர்களை கோபதாபங்களினல் சண்டாளனென்றும் கர்மசண்டாளனென்றும் பலர் வழங்குவதுண்டு; இது இழிவுரையே. அதைப் பற்றி இங்கு விசாரமில்லை. பஞ்சமஜாதியில்- சண்டாளஜாதியில்- தீண்டாவகுப்பில் தோன்றியவர்களைப் பஞ்சமர்களென்றும் சண்டாளரென்றும் தீண்டாதாரென்றும் குறிப்பதானது ஒருகாலும் இழிவுரையாகாது. இவ்வகுப்பினர் நாலைக்கும் "ஐயா! நான் தீண்டாதவன், ஐயா! நான் பஞ்சமன்" என்று சொல்லிக் கொண்டு தாங்களே விலகிச் செல்வதை யாரும் காணலாமே.

7. தீண்டாமையை யொழிக்குமாறு கொடிய கடிய சட்டம் ஏற்பட்டு விட்டதென்றே வைத்துக்கொள்வோம். அப்போதும் லக்ஷக்கணக்கான பஞ்சமர்கள் தங்களுடைய ஸாத்விகபாவத்தை விடாமல்-அநாதியான தங்களுடைய ஒழுக்கத்தை விடாமல்- கொடிய நரகம் சென்று சேர விரும்பாமல், ஐயா! நான் தீண்டாதவன் என்று சொல்லிக் கொண்டு விலகிப் போவதோ, விலகிப் போகும்படி பெரியார்களுக்குச் சொல்லுவதோ இது என்றைக்கும் நடந்தே வரும். 100-ல் 10 பேர்களாவது இதை விடவேமாட்டார்களென்பதை காருள்ளளவும் கடல் நீருள்ளளவும் வேதமுள்ளளவும் வேதகீதனுள்ளளவும் காணலாம்.

8. ஜாதிகள் நான்கே யொழிய ஐந்து கிடையாதென்றும், பஞ்சம ஜாதி யென்று வழங்குவதே பிசகு என்றும் சிலர் கூறுவது தவறு. நமது யஜுர்வேதத்தில் முதற் காண்டத்தில் ஆறுவது பிரச்னத்தில் கடைசி அநுவாகத்தில் "யா தே ஜநேஷு பஞ்சஸு" என்றுள்ளது. ஆயிரம் வருஷங்களுக்கு முன்பு வேதபாஷ்யம் செய்த மஹாசார்யர்கள் இங்கு ஜநசப்தத்தை ஜாதிவாசகமாகக் கொண்டு "பஞ்சஸு ஜநேஷு— பஞ்சஸு ஜாதிஷு" என்று அர்த்தம் செய்திருப்பதை அந்த பாஷ்யங்களிற் காணலாம். இப்படி பல்லாயிரம் பிரமாணங்களுண்டு. இங்கு அது பற்றிய விரிவு வேண்டா வென்று ஒன்றே காட்டி நிற்கிறேன். சாஸ்த்ரம் கிடக்கட்டும். வீடுமனைக்கிரயபத்திரம் முதலானவை ரிஜிஸ்டர் செய்வதென்கிற முறை வெகு காலமாக நடந்து வருகிறது. அதில் ஜாதி மதம் முதலானவையும் குறிப்பிடப் பெறுகின்றன. பிராமண ஜாதி வைச்ய ஜாதி என்று குறிப்பிடுவதுபோல் தீண்டாவகுப்பினர் பஞ்சமஜாதி யென்றே நெடுநாளாகக் குறிப்பிடுவதைப் பல ஸப்ரிஜிஸ்ட்ரார்கள் வாயிலாக நாம் கேட்டிருக்கிறோம், பத்திரங்களையும் கண்ணல் பார்த்திருக்கிறோம். [விஷ்ணு மதம் சிவமதம் ஜினமதம் என்று குறிப்பிடுவதுபோல் ஹிந்துமதம் என்று குறிப்பிடுகிற வழக்கம் கிடையாதென்பதையும் இங்கு ஞாபகப்படுத்துகிறோம்.] பஞ்சமர்கள் என்கிற சொல் இழிவானதென்று அற்பஞானமுள்ளவர்களும் கொள்ளக் காரணமில்லையே. ஒருவர்க்கு ஐந்து பிள்ளைகள் பிறந்திருந்து ஐந்தாவது பிள்ளையைத் தந்தை சுட்டிக் காட்டி 'இவன் எனது ஐந்தாவது மகன்' அல்லது 'இவன் ஐந்தாவன்' என்று சொன்னல் இதில் என்ன இழிவு நினைக்கமுடியும்? ஒன்றுமில்லை. அப்படியே தான் 'பஞ்சமன், பஞ்சமர்கள்' என்று வழங்குவதும். "ம்ருத்யுர் தாவதி பஞ்சம இதி" என்கிற உபநிஷத்தையும் இங்கு நினைக்க.

9. "இதுவரையில் பஞ்சமர்கள் என்று இழிவாக வழங்கப்பட்டு இப்போது காந்திஜீயின் பெருங்கருணையால் ஹரிஜன மென்னும் புனிதநாமத்தால் அழைக்கப்படுகிற" என்ற V. B. அவர்களின் வாக்கியத்தில் முற்பகுதி மிகத்தவறுன எண்ணமென்று நன்கு நிரூபித்

தாயிற்று [தீண்டாவகுப்பினர் இழிவான முறையில் ஒருவராலும் வழங்கப்படவில்லையென்பதாக.] இனி, காந்திஜீ ஹரிஜனமென்று புனிதநாமமிட்டதாகச் சொல்வது பற்றிப் பேசுகிறோம். நம்போல்வார்க்கு தனியாக ஒரு வ்யக்திக்குப் பெயரிட அதிகாரமுள்ளதேயல்லது ஒரு பெருங் கூட்டத்திற்குப் பெயரிட யாருக்கும் அதிகாரமில்லை. யதேச்சையாக அவரவர் களிஷ்டப்படி பெயரிட்டால் அதைச் சிலர் ஆதரிக்கலாம். ஹரிஜனமென்கிற பெயருக்கு அர்த்தமென்ன? பகவானைச் சேர்ந்த ஜனங்கள் என்றுதானே அர்த்தம். பகவானைச் சேராத ஜனமெதுவுமில்லையே. பிராமணோத்தமர்கள் முதற்கொண்டு துருஷ்க யவன ஹூணபர்யந்தமாக யாரையுமே ஹரிஜனமென்று சொல்லலாம். வடமொழியில் பங்கஜம் என்றொரு சொல் உள்ளது. அதற்கு சேற்றில் முளைப்பதென்று பொருள். ஆனாலும் சேற்றில் முளைக்கிற எல்லாவற்றையும் பங்கஜமென்று வழங்குவதில்லை. தாமரையை மாத்திரமே பங்கஜமென்கிறோம். இதை யோகரூடி அல்லது இடுகுறி காரணப் பெயர் என்று அறிஞர் கூறுவர். இவ்விதமாக தீண்டா வகுப்பினரை மாத்திரம் ஹரிஜனமென்கிறோமென்றால், இப்படி யோகரூடியான பெயரை இடுவதற்கு பகவான் தவிர வேறு யார்க்கும் அதிகாரமில்லையென்பது புகநக்கும். ஹரிஜனமென்னாமல் அரிஜனமென்றால் தற்கால நடவடிக்கைக்கு மிகவும் பொருந்தும். இவ்விஷயம் எப்படியாவது இருக்கட்டும். இந்தப் பெயரால் அவர்களுக்கு யாதொரு புதிய பெருமையும் விளையமாட்டாதென்பது திண்ணம். பகவானிடத்தில் பக்தியுள்ளவர்களுக்குப் பெருமை யுண்டென்பது யாவரும் இசைந்தது. இதற்கும் ஜாதிக்கும் யாதொரு ஸம்பந்தமுமில்லை. உயர்ந்த ஜாதியிற் பிறந்தவர்கள் பகவத் பக்தியற்றவர்களாய் இகழ்வு அடையலாம். நீச ஜாதியிற் பிறந்தவர்கள் பக்திமான்களாய்ப் புகழ் பெறலாம். இவ்விஷயத்தைப் பற்றிப் பிறகு விரிவாகப் பேசுவோம்.

10. "இந்த அரிஜனங்கள் ஹிந்து சமூகத்தைச் சேர்ந்தவர்களென்பதில் யாதொரு சந்தேகமுமில்லை, ஆக்ஷேபமுமில்லை; ஆக்ஷேபிக்கவும் முடியாது" என்று இவர் (V.B.) எழுதியிருப்பதும் அர்த்தமற்றதே. ஹிந்து சமூகமென்கிற சொல்லே பொருளற்றதென்று முன்னமே சொன்னோம். ஹிந்துக்கள் என்பவர் யாவர்? ஹிந்துமத கர்த்தா யார்? என்று கேள்வி கேட்டால் யாரும் பதில் சொல்லகில்லார். ஸம்ஸ்கிருதம் தமிழ் தெலுங்கு ஹிந்தி முதலிய ஒரு பாஷையிலும் இந்தச் சொல் கிடையாது. பழைய தஸ்தாவேஜுகளிலும் இச் சொல் காணப்படுவதில்லை. ஹிந்து என்கிற இச் சொல் எப்போது தோன்றியது? எவ்விதமாகத் தோன்றியது? எப்பொருளில் தோன்றியது? என்பதைப்பற்றி ஆழ்ந்து விசாரம் செய்ய வேண்டும். ஸகாரத்தை ஹகாரமாகவே உச்சரிக்கும் ஒரு வகுப்பினர் [அல்லது ஒரு தேசத்தினர்] ஸிந்து என்பதற்கு பதிலாக ஹிந்து என்று வழங்கினர் என்பர். ஒரு வடமொழிப் புலவர் ஹிந்து என்பதை வடமொழியாகவே வைத்துக் கொள்வோமென்று "ஹிம்ஸயா தூயதே இதி ஹிந்து:" என்று விற்பத்தி கூறினர். ஜீவஹிம்ஸையினால் மனம் நோகிறவர்கள்— அதாவது ஜீவஹிம்ஸையில் மனம் செலுத்தாதவர்கள் ஹிந்துக்கள் என்றபடி. இரவும் பகலும் ஜீவஹிம்ஸையிலேயே போது போக்குமவர்களாய் இது காரணமாகவே ச்வபச: என்றும் ச்வபாக: என்றும் இயற் பெயர் பெற்றவர்களாயிருக்கின்ற வகுப்பினர்களை ஹிந்துக்களென்று விவேகிகள் இசையார்கள். பகவத் கீதையில் இவரும் இவரைப் போன்றவர்களும் அடிக்கடி யெடுத்தாள்கின்ற "பண்டிதாஸ் ஸமதர்சிந:" (5–18) என்கிற சுலோகத்தில் "சுநி சைவ ச்வபாகே ச" என்றிருப்பது யாவருமறிந்ததே. ச்வபாக: என்கிற சொல்லுக்குப் பொருளானவர்கள் இவர்களால் சிறப்புப் பெயரிடப்பெற்ற

அவர்களே யென்பதும் மறைக்க முடியாதது. அச்சொல்லினால் தெரியவரும் தொழில் அவர்களுக்கே அஸாதாரண மென்பதும் மறுக்க முடியாதது. மிகச் சிறந்தவொரு வடமொழிப்புலவர் "ஹிம்ஸயா துனோதி இதி ஹிந்து:" என்கிற விற்பத்தியே மிகப் பொருத்தமான தென்றார். அதாவது ஜீவஹிம்ஸையைப் பண்ணி அதனால் உலகைத் துன்பப்படுத்துகிறவர் ஹிந்து—என்றபடி. இவ்வாறு கொள்ளும் பக்ஷத்தில் தீண்டாதவர்களுக்கும் அவர்களைக் கொண்டு இப்போது உலகைப் படுகொலையடிக்கின்ற இவர்களுக்கும் மாத்திரமே ஹிந்துவென்கிற பெயர் அஸாதாரணமாகப்பொருந்து மென்பதில் ஸந்தேஹமில்லை.

11. "இப்படி ஹிந்து சமூகத்தைச் சேர்ந்திருந்தும் இதுவரையில் ஹரிஜனங்கள் இரக்கமின்றி ஒதுக்கப்பட்டும் தாழ்த்தப்பட்டும் இகழப்பட்டும் வந்திருக்கிறார்கள்" என்று இவர் (V. B.) எழுதியிருப்பதும் பொருளற்றதே. அவசியமில்லாமல் ஒருவரை யொருவர் ஒதுக்குவதென்பது அஸம்பாவிதம். நாற்கால் விலங்குகளில் பூனை நாய் பன்றி கழுதை மாடு முதலியவை நமது வீடுகளிலும் தெருக்களிலும் நம் கண்முன்னே திரிகின்றன. நரி புலி கரடி முதலியவை ஒதுங்கி வாழ்கின்றன. பல்லி பாச்சை முதலியன நம்மோடு கலந்து பழகுகின்றன; தேள் பாம்பு முதலியவை ஒதுங்கி யொடுங்கி ஓடுகின்றன. இப்படி பலவற்றையு மெடுத்துக் காட்டலாம். ஒதுங்கி நிற்கும் ஜந்துக்களை நாமா ஒதுக்கினோம். கலந்து பழகும் ஜந்துக்களை நாமா தாம்பூலமிட்டழைத்தோம். அதில்ஸ்ருஷ்டி முதல் பகவானுடைய கட்டளையன்றோவிது. கோவில்களிலோ கூட்டங்களிலோ ஆண்மக்கள் முன்னே நிற்பதும் ஆரவாரிப்பதும், பெண்மக்கள் அடங்கியொடுங்கி நாணிக் கவிழ்ந்து பேசாதிருப்பதும் இன்று வரையில் எங்கும் காண்பதாகும். இது எதனாலேயென்று விசாரிக்க முடியுமோ? அநியாயமாய் ஸ்த்ரீகள் ஒதுக்கப்பட்டார்கள் என்று பிராமணிகர்கள் சொல்லுவதுண்டோ? ஆங்காங்கு பறைச் சேரிகள் இருக்குமிடம் யாவருமறிந்ததே. இதை நாமா கட்டிவைத்தோம்? ஊரிலிருந்து அவர்களை நாமா ஓட்டினோம்? இல்லையே. தச்சன் கன்னான் கருமான் தட்டான் நாபிதன் வண்ணான் குயவன் என்னுமிச்சாதியர் பலரும் எங்கும் தந்தமக் கென்று ஒவ்வோரிடம் அமைத்துக் கொண்டு ஆனந்தமாக வாழ்கிறார்கள். அப்படியே தீண்டாரும் அநாதிகாலமாகத் தாமாகவே வெளியே ஒதுங்கி வாழ்கிறார்களே யல்லது ஒருகாலத்தில் ஒருவரால் ஒதுங்கினவர்களல்லர். ஒதுக்கப்பட்டே ஒதுங்கினார்களென்று கொண்டாலும் இது இரக்கமில்லாத செயல் என்று சொல்ல இடமுண்டோ? தனக்கு ஏதோ தீட்டு நேர்ந்திருக்கிற தென்று தெரியாதவொருவன் கூட்டத்தில் கலந்து பழகும்போது அவனுக்குத் தீட்டை யுணர்த்தி ஒதுங்கும்படி செய்தால் இது இரக்கமில்லாமல் செய்த செயல் என்னத் தகுமோ? பெண்டிர்கள் எவ்வளவு உயர்ந்த பதவியிலிருந்தாலும் ரஜஸ்வலா காலத்தில் ஒதுக்கப்படுகிறார்கள். இரக்கமில்லாமல் ஒதுக்கினதாகச் சொல்லுவதுமுண்டோ? இவருடைய க்ருஹத்தில் ரஜஸ்வலைகளோடு கலந்து பழகுகிற முறையுள்ளதாக நாம் கேள்விப்படவில்லை, அன்புக்குரிய மனைவியரும் புதல்விகளும் எதற்காக வொதுக்கப் படுகிறார்கள்.

12. தீட்டு முதலிய காரணவசத்தால் ஒரு காலவிசேஷங்களில் ஒதுக்கப்படுவது பற்றி ஆக்ஷேபமில்லை யென்றும், பிறந்தது முதல் இறக்கும் வரையில் ஒருகாரணமுமில்லாமல் ஒதுக்கியே வைப்ப தென்பது அநியாயமான—கேள்வியற்ற—மனச்சாட்சிக்கு ஒவ்வாத—வீண் பிடிவாதமான காரியமல்லவா? என்றும் இவரைப்போன்றவர்கள் பலர் நினைப்பதுண்டு, பேசுவதுண்டு. இதைக் கேட்டு ஆஸ்திகர்களுங் கூடப் பலர் கலங்குவதுண்டு. இங்கே தினவடங்கச் சொல்லுகிறோம். உலகில் காணும் காரியங்களானவை (1) மனிதர்கள்

செய்யும் காரியங்க ளென்றும் (2) தெய்வம் செய்யுங் காரியங்க ளென்றும் இருவகைப் பட்டுள்ளன. ஒருவனை யொருவன் தடியெடுத்து அடித்தால் அல்லது அடிக்க வேணு மென்று கை தூக்கினுலுங் கூட உடனே அவன் கோர்ட்டில் பிராது கொடுக்கப் போவதும் பிரதி செய்வதும் காண்கின்ரும். ஒருவன் தெருவில் சென்று கொண்டிருக்கும்போது தென்னை மரத்திலிருந்து தானுக ஒரு மட்டை அவன் தலையில் விழுந்து எவ்வளவு கஷ்டம் நேர்ந்தாலும் அவன் தெய்வத்தை நொந்து கொள்வது தவிர வேறென்றும் செய்வதில்லை யென்பதும் எங்கும் கண்ட விஷயம். வீதியில் சென்றுகொண்டிருக்கிற ஒருவன்மீது நாமாகத் தண்ணீரை வாரி யிறைத்தால் அமர்க்களமாகிறது. திடீரென்று மழை பெய்து அவனை அலமரச் செய்தால் சிரித்துக் கொண்டே ஓடுகிருனே யொழிய ஒருவர் மேலும் கோப தாபங்கள் காட்டுவதில்லை. நம்முடைய வீட்டில் ஒரு விசேஷம் நடந்து அதில் ஒருவர்க்கு ஒரு ரூபாயும் மற்ருெருவர்க்கு ஒரு அணுவும் தக்ஷிணை கொடுத்தால், ஒரு அணு பெற்றவர் உடனே ரோஷம் மேலிட்டுப் பலவும் பேசுகிருர். அவரே தம் பக்கத்து வீட்டுக்காரர் லக்ஷாதிகா ரியாகவும் தான் பிக்ஷாதிகாரியாகவு மிருப்பதை நோக்கும்போது வாயைத் திறக்க முடியாம லிருப்பதையும் எங்கும் காண்கிருேம். "நிம்நோந்நதமிதம் ஜகத்" என்றபடி இவ்வுலகம் எவ் வளவு மேடு பள்ளமாக இருக்கிற தென்பதை நாம் எடுத்துக் காட்ட வேணுமோ? ஒருவன் தரித்ரன் ஒருவன் குபேரன்; ஒருவன் ப்ருஹஸ்பதி ஒருவன் வநஸ்பதி; ஒருவன் ஸுரூபன் ஒருவன் குரூபன். ஒருவன் ஸந்தான ஸம்ருத்தன் ஒருவன் ஸந்ததியற்றவன். ஒருவன் மாடமாளிகையில் வாழ்பவன் ஒருவன் தங்க நிழலில்லாது தவிக்குமவன். ஒருவன் பல்லக் கேறுமவன் ஒருவன் பல்லக்கு சுமப்பவன். ஒருவன் பெருவள்ளல் ஒருவன் பிச்சையாண்டி. இங்ஙனமாக எங்கும் உலகிற்காணும் வேற்றுமைகளை யெடுத்துக் காட்டி யெழுதினுல் இது ஒரு பெரிய பாரதமாகும். இந்த வேற்றுமைகளை நாமா செய்தோம். அந்தோ இதை ஆலோசிக்க வல்லமை யில்லையோ? திருப்பதி மலையேறும்போது வழி முழுவதும் ஆயிரக் கணக்கான பிறவிக் குருடர்கள் இருந்து வருந்துவதைக் கண்ணுரக் காண்கிருேம். ஆயுள் முழுவதும் கண்ணில்லாமலே தவிக்கும்படியாக இப்படியும் செய்து விடலாமா? என்று யாரும் சொல்வதில்லை, யாருடைய நெஞ்சிலும் தோன்றுவதுமில்லை. தோன்றினுலும் அதற்குப் பயனென்றுமில்லை.

13. பள்ளிக்கூடத்தில் ஒருவர் 1889-ஆம் வருஷத்தில் முதல் வகுப்பு வாத்தியாராகப் போய்ச் சேர்ந்தார். அப்போது அவர்க்குச் சம்பளம் ரூ-7. இப்போது பஞ்சப்படி முதலானவை சேர்ந்து 25 ரூ. கிடைக்கிற தென்று வைத்துக் கொள்ளுங்கள். இவரிடத்தில் படித்தவர்கள் பல நூற்றுக் கணக்கானவர்கள். அவர்கள் பெரும்பாலும் டிஸ்ட்ரிக்ட் முன்ஸீபாகவும் தாசில்தாராகவும் ஜில்லா ஜட்ஜ்களாகவும் ஹைகோர்ட்டு ஜட்ஜ்களாகவும் இன்னமும் உயர்ந்த பதவியாளர்களாகவு மிருந்து நூற்றுக் கணக்கிலும் ஆயிரக்கணக்கிலும் சம்பாதித்து வருகிருர்கள். இது நாம் வேடிக்கையாக எழுதுவதன்று. எங்கும் கட் கூடாகக் காண்பதிது. வாழ்நாள் முழுவதும் ஒருவர் முதல்வகுப்புக்கே வாத்யாராக இருந்து கஷ்ட ஜீவனம செய்வது சரியா என்று எனக்குத் தோன்றினுல் இதற்குப் பரிஹாரம் செய்ய வல்லாரு ளரோ? நமது பாஷ்யமையங்காரோ காந்திஜீயோ இதற்குப் பரிஹாரம் செய்ய நினைக்கலாம்; அந்தோ! நினைக்கவில்லையே.

14. ஒருவர்க்கு எட்டு பிள்ளைகள் பிறந்தார்கள். தகப்பனுர் படாத பாடுகள் பட்டு அந்த எட்டு பிள்ளைகளுக்கும் பல வழிகளிலும் கல்விப் பயிற்சிகள் செய்வித்தார். முடிவில்,

ஒரு பிள்ளை வக்கீலாக ஆனார். ஒரு பிள்ளை வக்கீல் குமாஸ்தாவாக ஆனார். ஒரு பிள்ளை ஹோட்டல்களில் தோசை வடைக்கு அரைப்பவ ராஞர். ஒரு பிள்ளை ரைல்வே பிரயாணி களுக்குக் குடி தண்ணீர் வார்ப்பவராஞர். ஒரு பிள்ளை ந்யூஸ் பேபர்கள் விற்பவராஞர். ஒரு பிள்ளை போலீஸ் சேவகராஞர். ஒரு பிள்ளை துறவியாகி மடாதிபதியாஞர். ஒரு பிள்ளை கோவில்களில் ஸேவார்த்திகளை வரவேற்பவராஞர். எல்லாரும் ஆனந்தமாக ஜீவித்துக் கொண்டு தானிருக்கிறார்கள். அவரவர்களுடைய வாழ்நாள் அவ்விதமாவே கழிந்து வருகிறது. இவர்களில் ஒருவர்க் கொருவர் மிக்க ஏற்றத் தாழ்வு உள்ளதுதான். அதற்கு யார் என்ன பண்ணுவது? இந்த ஏற்றத் தாழ்வைத் தகப்பஞர் உண்டு பண்ணிஞரா? தாங்களே உண்டு பண்ணிக் கொண்டார்களா? நம் போன்ற சிலர் உண்டு பண்ணிஞர்களா? என்பதை நமது பாஷியமையங்காரே நிர்ணயிக்க வேண்டும்.

15. இவர் நெடு நாள் நீதிபதிஸ்தானம் வஹித்தவராயிற்றே. தமது உத்யோக முறைக்கேற்ப குற்றவாளிகளுக்கு ஏராளமான தண்டனைகளை விதித்திருப்பரே. ஆயுள் முழுவதும் அநுபவித்துத் தீரவேண்டிய கஷ்டங்களையும் பலர்க்கு விதித்திருப்பரே. இவர் உத்யோகத்தில் நின்றும் விலகி எத்தனையோ வருஷங்களாஞலும் இவரால் ஜீவிதாந்த தண்டனை விதிக்கப்பட்டவர்கள் இன்னமும் கடுமையான கஷ்டங்களை யநுபவித்துக் கொண்டே யிருப்பர்களே. ஏதோ சிலநாள்கணக்கில் கஷ்டாநுபவம் கொடுப்பதை விட்டு ஆயுளுள்ள வரையிலும் கஷ்டாநுபவமே யாகும்படி இப்படியும் விதிக்கலாமா என்று யாரேனும் வசை கூறுவாருண்டோ? இவருடைய ஆத்மாவுக்குத் தான் அநுதாபம் தோன்றி னதுண்டோ? இரக்கமில்லாமல் இப்படி செய்யப்பட்ட தென்று சொல்ல ப்ரஸக்தியுண்டோ? மனிதர்கள் செய்யும் காரியங்களே இப்படி யிருந்தால் தெய்வச் செயல் பற்றிக் கேட்க வேணுமோ? பிறவிக்குருடர்களைப்படைத்த பகவானேயன்றோ பஞ்சமர்களையும் படைத்தது.

16. இந் நிலவுலகில் வந்து பிறப்பதைச் சிறை வாழ்க்கையாகவே மஹான்கள் கருதியும் கூறியுமுள்ளார்கள். "அறுவர்தம் பிறவியஞ்சிறையே" என்றார் ஒரு ஆழ்வார். "கஸ்மை ஸ்வதேத ஸுக ஸஞ்சரணேத்ஸுகாய காராக்ருஹே கநக ச்ருங்கலயாபி பந்த:" என்றார் வேதாந்த தேசிகர். இதனால், மீட்சியுள்ள மேலுலகங்களில் வாழ்வதுங் கூட சிறை யிருப்பாகத் தெரிவிக்கப்பட்டது. சிறைக்கூடங்களில் அவரவர்களுடைய தாரதரங்களுக் கிணங்க கௌரவ வாழ்க்கையும் லாகவ வாழ்க்கையும் உண்டென்பதை ஸமீபகாலத்தில் ராஜ்ய க்ஷேமத்திற் கென்று சிறை புகுந்திருந்த மஹநீயர்கள் நன்கறிவார்கள். சிறையிருப்பில் சிலர் ஆனந்தமாக வாழ்வதையும் சிலர் கஷ்டமாக வாழ்வதையுங் கொண்டு இரக்கமில் லாமையை யார்மீது ஏறிட்டுக் கூறுவது? இப்படி நாம் விவரிக்கப் புகுந்தால் 'இதெல்லாம் யாவருக்கும் தெரிந்த விஷயந்தானே, யாவருமிசைந்தது தானே; எதற்காக வீண் விரிவாக இதையெல்லாம் எடுத்துக் காட்டுவது? என்பர்கள் நமது மேதாவிகள். இதுவரையில் தீண்டா வகுப்பினர் இரக்கமின்றி யொதுக்கப்பட்டிருந்ததாக பாஷியமய்யங்கார் எழுதியிருப்பது மருள் என்பதை நெஞ்சிற் பதிய வைப்பதற்காகவே இவ்வளவு விவரித்தது. ஒதுக்கப் பட்டு என்றதோடு நில்லாமல் "தாழ்த்தப்பட்டும் இகழப்பட்டும் வந்திருக்கிறார்கள்" என்றும் எழுதுகிறார். அந்தோ! இது மஹான்கள் பேசும் பேச்சா? யாரும் தாழ்த்தவில்லை, யாரும் இகழவில்லை. ஒருவரை ஒருவர் இகழ்ந்தால் அவர் நீதிமன்றத்தில் சென்று பரிஹாரம் தேடக் காண்கிறோமல்லவா? அப்படியே அந்த ஜனங்களும் எங்களை இன்னார் இகழ்கிறார் இன்னார் தாழ்த்துகிறார் என்று சொல்லி நீதி மன்றத்தில் முறையிடலாமே. ஒதுங்கியிருக்க

வேண்டுந் தன்மையோ தாழ்வுற்று இருக்க வேண்டுந் தன்மையோ தங்களுக்கு ஜன்மஸித்தம் என்றன்றோ அவர்கள் உள்ளபடி யுணர்ந்து நெஞ்சில் சிறிதும் விகாரமற்றிருக்கின்றார்கள். அவர்களைக் கண்டு நாம் ஒதுங்குவதும் நம்மைக் கண்டு அவர்கள் ஒதுங்குவதும் இன்று நேற்றோ ஏற்பட்டது? இந்த பாஷ்யமையங்காரும் இந்த வீண்வம்புக் கக்ஷியில் தலையிடுவதற்கு முன்பு எத்தனையோ வருஷகாலம் ஒதுக்கியும் ஒதுங்கியும் இருந்தவர் தானே. அது ஒரு நாளும் கிடையவே கிடையாதென்று அபலாபம் செய்துவிட்டாலும் இவருடைய தாய்தந்தையர்களும் அவர்களினும் மேம்பட்ட தமது ஆசாரியர்களும் கொண்ட ஆசாரத்தை இவர் அபலாபம் செய்யமுடியாதே. அவர்கள் கண்மூடித் தனமாகச் செய்து வந்தால் .... .... என்று பூஜ்யர்களையுங்கூட நிந்திக்கவேண்டியது தவிர இவர்க்கு வேறு கதியில்லையே.

17. ஒன்றே ஒன்று கேட்கிறேன். மனச்சாட்சியை மீறாமல் பதில் சொல்லட்டும். குப்பை வாருவது மற்றொன்று வாருவது என்கிற தொழிலில் அநாதிகாலமாக இன்றைக்கும் நாளைக்கும் ஈடுபட்டிருப்பது யார்? அதை இக்காலத்திய சீர்திருத்தக்காரர்கள் இழிதொழிலாக நினைக்கிறார்களா? கௌரவத் தொழிலாக நினைக்கிறார்களா? எப்படியாவது நினைக்கட்டும். இந்தத் தொழிலை ஒவ்வொருவருடைய வீட்டிலும் செய்வது யார்? ஒரு நாள் வந்து செய்யாவிடின் பிணநாற்றம் நாறுகிறதே யென்று இவர்களும் சீறிவிழுபவர்கள் தானே. சில மாதங்களுக்கு முன்பு சென்னை முதலிய பல மகாநகரங்களில் இந்த ஜனங்கள் ஏதோ காரணங்காட்டி ஒரு வாரம்வரை தங்கள் தொழிலைச் செய்யாது விலகியிருக்க அப்போது அவ்விடங்கள் பட்டபாடு தெரியுமே. அவர்களிடத்து உள்ளூர இரக்கங் கொண்டிருக்கும் மஹான்கள் ஒரு நாளாவது அத்தொழிலைத் தாங்கள் செய்ய முன் வந்தார்களோ? முன் வருவார்களோ? சன்மசன்மாந்தரமாக உலகுக்கு இத்தகைய சேவையைச் செய்து வருகின்ற அவர்களுடைய வீடுகளிற் சென்று ஒரு நாளாவது அத் தொழிலைச் செய்ய ஸம்மதிக்கும் தாராள நெஞ்சினர் உளரோ? தங்களுடைய கௌரவத்திற்கு யாதொரு குறைவும் ஏற்படக் கூடாதென்று இருப்பவர்கள்தானே இவர்களும். அவர்களிடத்தில் இவர்களுக்கு உண்மையான இரக்க மிருந்தால் அதை இவர்கள் தங்கள் ஆற்றலுக்குத் தகுந்த முறையில் அவசியம் காட்ட வேண்டாமா? காட்டுகிறோமென்னில், மனக்கோட்டை கட்டுவதும் கூட்டங்களில் எதையோ பேசி விடுவதும் ந்யூஸ் பேப்பர்களில் எழுதிவிடுவதும் தவிர, அத் தீண்டா வகுப்பினர்க்குக் கைகண்ட பலனாக இவர்கள் ஏதேனும் நன்மை செய்திருப்பதுண்டோ? காலக்ரமத்தில் எல்லாம் செய்யவே போகிறோ மென்பர்கள். அவசியம் செய்யத் தக்கதே. நன்மைசெய்வ தென்பது அவரவர்களுடைய தன்மைக்குத் தக்கபடியே யிருக்கவேணும். “ஸம்ஸாரிகளுக்கு விரோதி சத்ரு பீடாதிகள், அபேக்ஷிதம் அன்னபானாதிகள்” என்று ஆசாரியர்கள் கூறியிருப்பது உலகில் யாவரும் இசையக் கூடியதே. அந்தவகையில் மிகவும் தகுதியாகச் செய்யும்நன்மை இன்னதென்று தெளிந்து செய்யவேணும். அதற்கு நேர்விரோதமாகவே இவர்கள் செய்துவருகிறார்கள். அவர்கள் கனவிலும் விரும்பாததையே இவர்கள் வலிகட்டாயமாகச் செய்து வருகிறார்கள். கருணை பூண்ட விசால மனதுடன் செய்வதாயிருந்தால் இரண்டு காரியம் முன்னம் செய்தாக வேண்டும். (1) அநாதி காலமாக அந்த ஜனங்கள்செய்து வரும் தொழில்களை விலக்கி அவர்களை நல்ல அந்தஸ்தில் வைப்பது. (2) பல்லாயிரம் வருஷகாலமாக அவர்கள் செய்து வந்த சேவையைச் சில நாள்களாவது தாங்கள் அவர்கள் விஷயத்தில் செய்து

தங்களுடைய விசால மனோபாவத்தையும் நன்றியறிதலையும் காட்டுவது. இவை செய்யாமலிருப்பது தருமமோ? இவை செய்யாதவளவில் இரக்கமில்லாமை யென்கிறபாவம் இவர்களையே சாருமன்றோ. அவர்கள் பழைய தொழில்களையே செய்து கொண்டிருக்க இவர்களும் சம்மதித்திருந்து, பிறரை இரக்க மில்லாதவர்களென்று வைவதில் அர்த்தமுண்டோ?

18. இப்படி நாம் தெரிவித்ததற்காக குப்பை வாருந் தொழில் முதலியவற்றில் இனி அந்த ஜனங்கள் ஈடுபட வேண்டாமென்று இவர்கள் சட்ட திட்டங்கள் செய்து விலக்குவதாக வைத்துக் கொள்வோம். அந்த வேலைகள் அவசியம் நடந்து தீர வேண்டியவையாதலால் வேறு யாரையாவது அத்தொழிலில் நியமித்துத்தானே யாகவேண்டும். இரக்கமில்லாமல் நடந்து கொள்வதை அப்போது வேறு வகுப்பினர் மீது காட்டித்தானே யாகவேண்டும். எல்லாப் பிராணிகளிடத்திலுமே நாம் இரக்கம் காட்டக் கடமைப் பட்டவர்களல்லவா? இனி எந்தத் தொழில்களிலும் ஒரு நபரையும் நியமிக்காமல் மிஷின்களைக் கொண்டே காரியம் பார்க்கவேண்டும். மேதாவிகள் எதற்கும் மிஷின்களைக் கண்டு பிடித்துவிடலாம்; ஆனல் மிஷின்களும் மனிதர்களின் உதவியின்றி வேலை செய்யமாட்டாவாதலால் அப்போதும் அரிஜனங்களையோ பரிஜனங்களையோ கஷ்டப்படுத்தாமல் சுகமனுபவிக்கமுடியாதல்லவா? இரக்கமில்லாமையை யார் மீதாவது காட்டியே தீரவேண்டுமென்பது அசைக்கமுடியாதது.

19. பெரிய மனிதர்கள் ஒவ்வொருவரும் தங்களுடைய சுகானுபவத்திற்சாகப் பல சிப்பந்திகளை எங்கும் வைத்துக் கொண்டேயிருக்கிறார்கள். அந்த சிப்பந்திகளுள் கௌரவமான காரியங்களைச் செய்பவர்களுமுண்டு, லாகவமான காரியங்களைச் செய்பவர்களுமுண்டு. அவரவர்களுக்கு ப்ராப்தமான செய்கைகள் இழிதொழிலாக இருந்தாலும் செய்து தீரவேண்டியவையேயாகின்றன. மாதம் லக்ஷம் ரூபாய் சம்பாதிக்கும் டாக்டர்களும் ஆபரேஷன் முதலியன செய்யும்போது சில தொழில்களை அருவருப்பில்லாமல் தாங்களே செய்ய நேர்கின்றது. சீழ் ரத்தம் முதலியவற்றை நம்போல்வார் கண்ணல் காணவும் கூசுகிறோம். அவர்களுக்குக் கையால் தொடுவதிலும் அருவருப்புண்டாவதில்லை. அவற்றை இழிதொழில்களென்று நினைப்பாரில்லை. அவர்களும் நினைக்கவில்லை, பிறரும் நினைக்கவில்லை.

20. இங்கு நாம் ஸாரமாகத் தெரிவிப்பதைக் கவனிக்கவேணும். பகவான் விசாலமான நோக்கமும் விசித்திரமான சக்தியும் வாய்ந்தவர். சாதாரணமாக ஒருசிறு வீடு கட்டுவதற்கும் அதை ஆள்வதற்கும் பல வகையான சாமான்களும் பலவித வேலைக்காரர்களும் வேண்டியிருப்பது போல், மொத்தமாக உலகம் முழுவதையும் நிர்வஹிப்பதற்கு எண்ணிறந்த சாமான்களும் எண்ணிறந்த வேலைக்காரர்களும் வேண்டியிருப்பதனல் இவ்வளவையும் குறைவில்லாமல் அப்பகவான் படைத்திருக்கின்றார். மேலெழுந்த நோக்கில் சில வேலைகள் இழிவாகத் தோன்றினலும் மெய்யுணர்வினரான மகான்கள் எதையும் இழிவாக நினையார்கள். ஒன்று பாருங்கள்; உலகில் சிலரை ஏளனமாகவும் பழிப்பாகவும் பேசும் ஜனங்கள் "அடா குசவா! அடா அமட்டா" என்றிப்படி லேசாகச் சொல்லிவிடுவதை எங்கும் காண்கிறோம். இதனல் குயவன் வேலையும் அம்பட்டன் வேலையும் மிக நீசத்தொழில் போல் அர்த்தமாகிறதல்லவா? ஆனல் குயவர்கள் செய்கிற வேலை வேறொருவரால் செய்யமுடியுமா? அவர்கள் செய்கிற வேலை நடைபெறவில்லை யென்றல் நம்மால் ஒரு நாள் போதைப் போக்க முடியுமா? இவ்விதமாகவே நாபிதர் விஷயத்திலும் மற்றும் எந்த வேலைக்காரர் விஷயத்திலும் பார்த்துக்

கொள்ளலாம். இப்படி பலபல வேலைகள் இழி தொழில் என்னும்படி யிருந்தாலும் அவை உலகில் ஒவ்வொருவர்க்கும் அவசியம் வேண்டியவையாகவேயிருப்பதனாலும் உலக நன்மைக்காக கருணாமூர்த்தியான பகவானாலேயே ஒவ்வொரு தொழிலும் தொழிலாளிகளும் ஏற்படுத்தப்பட்ட படியாலும் யார் மீதும் நாம் இழிவாக நினைக்க ஹேதுவில்லை.

21. மாம்பழங்களையும் பலாப்பழங்களையும் படைத்த பகவான் வேப்பங்காய் எட்டிக்காய் கடுக்காய் முதலியவற்றை எதற்குப் படைக்க வேணும்? என்று சிலர் லேசாகக் கேட்டு விடுவதுண்டு. உலகில் நாம் மாத்திரமே யிருக்கின்றோமென்றும் நமக்கு வேண்டிய பொருள்கள் மாத்திரமே உலகில் இருக்க வேண்டுமென்றும் நினைப்பவர்களினுடைய கேள்விகளன்றோ இவை. நம்மைப் போல் ஈயெறும்பு எண்ணாயிரம் ஜாதிகளையும் காரணார்த்தமாகவே படைத்திருக்கின்ற பகவான் எல்லா வகுப்புக்கும் வேண்டிய பொருள்களையே படைத்திருப்பதனால் எந்தப் பொருளும் அவசிய மற்றதாகவோ இழிவாகவோ நினைக்கத் தக்க தன்று. இவ்வகையில் பஞ்சமர்களும் கருணா நிதியான கடவுளால் அவசியமாகவே படைக்கப் பட்டவர்களாதலால் அவர்களையோ அவர்களது தொழிலையோ இழிவாக யாரும் நினைக்கலாகாது, நினைக்கவும் மாட்டார்கள்.

22. தொழில் செய்வதென்றால் எந்தத் தொழிலும் சிரமப்பட்டுச் செய்ய வேண்டியதாகவே யிருக்கும். அவரவர்களுடைய நிலைமைகளுக்குத் தகுந்தபடி சில தொழில்கள் பார்வைக்கு அருவருப்பாகவும் சில தொழில்கள் விநோதமாகப் பார்க்கும் படியாகவும் இப்படி பலவிதமாக இருக்கும். இதற்கெல்லாம் நாம் தனித்தனி த்ருஷ்டாந்தங்கள் எடுத்துக் காட்ட வேண்டிய அவசியமே யில்லை. உலகில் எங்கும் யாவரும் கண்ணாரக் காண்கிற விஷயங்களே யாதலால். எதைக் காணும்போதும் பகவானுடைய சக்திவிசேஷமொன்றுதான் கொண்டாடப்படும். "ஹாஹா! ஒருவர்கண்ணுக்கும் புலப்படாமலே பகவான் உலகுக்கு ஆகவேண்டிய காரியங்களை ஒழுங்காக நிர்வஹிக்க எத்தனை ஜாதிகளைப் படைத்து என்ன ஆச்சரியமாக நடத்திக் கொண்டு போகிறார்!" என்று விவேகிகள் ஒவ்வொருவரும் வியந்து உருக வேண்டுவதொன்று தவிர ஒரு ஜாதியிலும் ஒரு வஸ்துவிலும் இழிவு காண்பதற்கு ஈஷத்தும் ஹேதுவில்லை. அமட்டன் என்று இலேசாகச் சிலர் சொல்லி விட்டாலும் அந்த ஜாதி ஒரு ஊரில் இல்லையென்றால் ஒரு சுபமும் ஒரு அசுபமும் சாஸ்த்ரோக்தமாக நிறைவேறாதென்பதை நாம் சொல்லவேணுமோ? இதே வகையில் பஞ்சமர்கள் செய்துவரும் பலவகைப்பட்ட தொழில்கள் உலக நன்மைக்காகவே பகவானது கட்டளையினாலேயே அநாதிகாலமாக அமைந்தவையாதலால் அவர்களையும் அவர்களது தொழில்களையும் இழிவாக நினைப்பது விவேகிகளுக்கு உற்றதன்று. ஆனால் பலரோ சிலரோ இழிவாக நினைப்பதும் பேசுவதுமாக இருக்கிறார்களே யென்னில், பகவானையும் பாகவதோத்தமர்களையுங் கூட இழிவாக நினைப்பவர்களும் பேசுகிறவர்களும் மலிந்த இவ்வுலகில் இதை யொரு விஷயமாகப் பேசுவது புத்திமான்களுக்கு உற்றதல்ல. ஸங்கல்பஸூர்யோதயத்தில் ஆச்சரியமான ச்லோகம் "மயி தத்தாவதாநாயாம் விச்வ தோஷாபஹாரிணி, ந சக்ய மீச்வரேணாபி நிரவத்யேந வர்த்திதும்" என்பது. இக்கணக்கில் எப்படிப்பட்ட மேம்பட்டவர்களுங் கூட உலகர் வாயில் அரைபடும் போது பிறரைப் பற்றிப் பேச்சு என்ன?

23. * வந்தே ஹஸ்திகிரீசஸ்ய வீதீ சோதககிங்கராந் என்கிற ரத்னமான ச்லோகமொன்று நாளைக்கும் ப்ராம்மணோத்தமர்களால் அநுஸந்திக்கப்பட்டு வருவதை இவரும் அறிவர்.

இது ஸாதாரணமான பேர்வழிகளின் பேச்சல்ல. வேதாந்த தேசிகர் தமது புனிதமான கிரந்தத்தில் பொறித்ததன்றோவிது. தேவப்பெருமாளுடைய திருவீதிகளில் அசுத்தங்களைப் போக்கி சுத்தப்படுத்துந் தொழிலாளரை வணங்குகிறேனென்பது இந்த ச்லோகத்தின் பொருள். பெருமாளுடைய அருகேயிருந்து உபய வேத பாராயணம் செய்பவர்களைக் கூட வணங்குகிறேனென்று சொல்லவில்லை. “தொண்டை மண்டல வேதியர் வாழவே தூய தென்மறை வல்லவர் வாழவே” என்று வாயால் வாழ்த்தினது மாத்திரமேயுள்ளது. திருவீதிகளில் அலகிடுமவர்களை வந்தே என்று சொல்லியிருப்பதும், அதை நாம் நித்யபாராயணம் செய்து கொண்டு வருவதுமான இப்படிப்பட்ட கௌரவம் கண்டு உகக்கலாகாதா ? யாரோ சிலர் தாழ்வாகப் பேசினால் அதை மஹான்கள் நெஞ்சிலிட்டு எண்ணலாமோ ?

24. “இப்படி சொல்லிவிடமுடியுமோ ? இழிவாக நினைத்திருப்பதன் காரியம் உலகில் வெட்ட வெளிச்சமாகத் தெரிகின்றதே ; அந்த ஜாதிக்காரர்கள் அருகே வரக் கூடாதென்றும் ஒரு கால் வந்து விட்டாலும் முழுக்கிடவேணுமென்றும் இப்படி வாயாற் சொல்லுவதும் நடத்தையிலும் காட்டுவதுமாகி இருப்பது தப்புதானே. இழிவான நினைவினாலன்றோ இதெல்லாம் நடந்து வருகின்றது. அவர்களிடத்தில் இழிவான நினைவு இல்லையென்னில் இதையெல்லாம் மாற்றிக் கொள்ளவேண்டியது அவசியமல்லவா? என்கிற வாதம் அடுத்தபடியாக விளையக்கூடியது. இந்த விஷயத்தைப்பற்றி நாம் ஆராயும்போது சாஸ்த்ரங்களை அவசியம் கைவிளக்காகக் கொள்ளவேண்டியதாகிறது. பகவத்கீதையில் அடிக்கடி சாஸ்த்ர ப்ராபல்யம் வற்புறுத்தப்பட்டிருக்கின்றது. * தஸ்மாத் சாஸ்த்ரம் ப்ரமாணம் தே கார்யாகார்ய வ்யவஸ்திதௌ * (16-24) [ஒன்றைச் செய்யவேணுமானாலும் ஒன்றை விடவேணுமானாலும் சாஸ்த்ரந்தான் கதி] என்று ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. அதற்கு முன்னே (16—23) “ யச் சாஸ்த்ரவிதிமுத்ஸ்ருஜ்ய வர்த்ததே காமகாரத:, ந ஸ ஸித்திமவாப்நோதி ந ஸுகம் ந பராம் கதிம் ”—எவன் சாஸ்த்ரக்கட்டளையை மீறி மனம் போனபடியெல்லாம் நடந்து கொள்ளுகிறானோ அவன் ஒரு விதமான நன்மையையும் அடைய மாட்டான் என்றும் கல்வெட்டாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இதைப்பற்றி இங்கு நாம் விரிவாக எழுதவேண்டிய அவசியமில்லையென்றே நினைக்கிறோம். ஏனென்றால், நமது பாஷ்யமையங்கார் சாஸ்த்ரங்களை ப்ரமாணமென்று இசையாதவரன்றே. இவர் நாடோறும் ஸந்தியாவந்தனம் முதலியன செய்து வருபவரே. ச்ராத்தம் முதலியவைகளும் ச்ரத்தையோடு செய்து வருபவரே. அவற்றையெல்லாம் விட்டுவிட்டதாக இதுவரையில் நமது காதில் விழவில்லை. அது நிற்க. நெற்றியில் திருமண்காப்பு உள்ளது. தோளில் பூணூலுமுள்ளது. விவாஹஸம்பந்தாதிகளும் ஒழுங்கான முறையில் செய்து வருகிறார். இவற்றுக்கெல்லாம் என்ன ஆதார மென்று கேட்டால் சாஸ்த்ரத்தையோ பரம்பரையான வழக்கத்தையோ இரண்டையுமோ ஆதாரமாகக் கூறுவர். இவ்விரண்டில் அவர் எதை ஆதாரமாகக் கூறினாலும் சரியே. வேறொன்றை இவரால் ஆதாரமாகக் கூறமுடியாதென்பது திண்ணம். எந்த புத்தகத்தையெடுத்துக் கொண்டாலும் அதில் சாஸ்த்ரங்களுக்கும் பரம்பரையான வழக்கங்களுக்குமே ஏற்றம் கொடுக்கப்பட்டிருக்கிறது. கீதையிலும் “யத் யத் ஆசரதி ச்ரேஷ்ட: தத்ததேவ இதரோ ஜந: ” என்று பெரியாருடைய வொழுக்கத்திற்குப் பெருமை கூறப்பட்டுளது. சாஸ்த்ரங்களைக் காட்டிலும் பெரியார்களுடைய வொழுக்கங்களுக்கே அதிகமான ஏற்றம் கூறப்பட்டுள்ளது. “ தர்மஜ்ஞஸமய: ப்ரமாணம் வேதாச்ச” என்றார் ஆபஸ்தம்ப முனிவர். உண்மையில், முதன் முதலாக ஏற்பட்டது ஆசாரம். அதை யநுஸரித்துத் தான் சாஸ்த்ரம் ஏற்பட்டது. “ இலக்கியங் கண்டதற்கு இலக்கணமியம்பலின் ” என்றதுபோல

ஆசாரங்களாகிற லக்ஷியத்திற்கு சாஸ்த்ரமாகிற இலக்கணம் ஏற்பட்டதென்று கொள்ளலாம். ஆங்காங்கு வழி ஏற்பட்ட பின்பு ஜனங்கள் அதில் நடக்க ஆரம்பித்தார்களா? அல்லது ஜனங்கள் நடந்து தேஞ்ச வழிகளில் பிறகு ஒழுங்குபாடுகள் செய்தார்களா? என்று ஆராய்ந்தால் என்ன ஸித்தாந்தமாகுமோ அதுவே தான் இங்கும் ஸித்தாந்தம். கிம் பஹுனா ? சாஸ்த்ரம் ஆசாரம் இரண்டும் பிரமாண மென்பது ஸநாதநதர்ம ஜீவாதுவானது. V. B. இன்றைக்கும் நாளைக்கும் செய்து வருகின்ற காரியங்களுக்கும், செய்யத்தகா தென்று விலக்கியிருக்கின்ற காரியங்களுக்கும் எதை பிரமாணமாகக் காட்டுகிருரோ அது கொண்டே தீண்டாமை யென்பது அசைக்க முடியாமல் ஸித்திக்குமன்ரே. இவ்விஷயத்தில் சாஸ்த்ரமும் ஆசாரமும் அநாதியாகவே ஒற்றுமைப்பட்டன்ரே இருக்கின்றது. நாம் வீடுகளிலும் தெருக்களிலும் தீண்டாமையை அநாதிகாலமாகவே ஆசாரத்தில் கண்டு வருகிரே மென்பது மறுக்க முடியாதது. இதுவே தருமசாஸ்திரங்களிலும் நிபந்தனை செய்யப்பட்டுளது.

25. இவருடைய (V. B.) வியாஸத்தில் மகாத்மா காந்தியடிகளின் கருணைத் திறம் மிகவும் பாராட்டப் பட்டிருக்கிறது. நற்குணங்களுள்ள விடத்தில் நாமும் ஈடுபடத் தடையே கிடையாது. அவரைப் பற்றி நானெழுதி உலகமெல்லாம் பரவ விட்டிருக்கிற வியாஸங்களை யாவரும் மெச்சுகின்றர்களே தவிர யாரும் ஆக்ஷேபிக்கவில்லை. அவற்றுள் ஸாரமான விஷயங்களை இங்கு வெளியிடுகின்றேன். [முன்னுரையின் முடிவில் தெரிவித்த அநுபந்த மிது.]

## மஹாத்மாவின் மஹத்துவம்.

26. உலகமெல்லாம் ஒரு வ்யக்தி விசேஷத்தை மஹாத்மாவென்று சிறப்பித்துக் கூறிவருவது நாடு நகரமும் நன்கறிந்ததே அவரிடத்தில் நமக்குப் பகையோ பொருமையோ எதுவுமில்லை. பல நற்குணங்கட்கு நிதியாயிருப்பவர் அவர் என்று பலர் கொண்டிருக்கிற நம்பிக்கை ஆதாரமற்றதாக இருக்குமோ ? முக்கியமாக ஸத்யம் அஹிம்ஸை என்கிற இரண்டு சீரிய தருமங்களைக் கடைப் பிடித்தவர் அவர் என்று இதையிட்டே அவரை உலகம் போற்றுகின்றது. இவ்விரண்டும் உண்மையில் இவரிடத்து இருப்பனவாயின் அவரைத் தெய்வ மென்றே போற்றத் தட்டில்லை.

27. ஸத்யமாவது என்ன ? அஹிம்ஸையாவது என்ன ? என்று ஆழ்ந்து ஆராய வேண்டும். ஸத்யவாதி யென்று ஒருவரை நாம் புகழவேண்டுமானல் அவர் எப்படிப் பட்டவராயிருக்க வேண்டுமென்று நன்கு ஆலோசித்தல் வேண்டும். உள்ளதை உள்ளபடியே யறிந்து உள்ளபடியே சொல்லுகிருரொருவர் என்று வைத்துக் கொள்வோம். அவரை ஸத்யவாதியென்று சொல்லிவிட முடியுமா ? முடியாது. ஏனென்னில் ; * ஸத்யம் பூதஹிதம் ப்ரோக்தம் * என்கிற வ்யாஸஸ்மிருதி வசனத்தை மேலையார் எடுத்துக் காட்டுகின்றனர். ஆகவே பிராணிகளுக்கு ஹிதமானவற்றைச் சொல்லுபவரையே ஸத்யவாதி யென்று புகழ ப்ராப்தம். பகவத் கீதையில் பத்தாவது அத்யாயத்தில் * புத்திர் ஜ்ஞாநமஸம்மோஹ: க்ஷமா ஸத்யம் * என்றவிடத்து பாஷ்யத்தில் "ஸத்யம்—யதாத்ருஷ்டவிஷயம் பூதஹிதரூபம் வசநம்" என்று பகவத் ராமாநுஜரால் அருளிச் செய்யப்பட்டதும் இங்கு நினைக்கத்தக்கது. ஒருவர் உள்ளதை உள்ளபடியே சொல்லிவிட்டாலும் அது ப்ராணிகளுக்கு அஹிதமாயிருக்குமானல் அவர் ஸத்யவாதியென்று பாராட்டப் பெறமாட்டா ரென்பதுதான் நூற்கொள்கை.

28. இப்படியே, ஒருவரை அஹிம்ஸாவிரதமுடையவரென்று புகழவேணுமானால் அவர் எப்படியிருக்கவேண்டுமென்று பரிசீலனை செய்யவேண்டும். பிறருடைய உடலில் பீடையை உண்டுபண்ணுவதே ஹிம்ஸையென்றும் அதனையுண்டு பண்ணாமலிருப்பதே அஹிம்ஸையென்றும் சிலரோ பலரோ நினைத்திருப்பதுண்டு. வஸ்துஸ்திதி இது வல்ல. ஏதேனுமொரு விதமாகப் பிறர்க்கு ஸங்கடத்தை யுண்டுபண்ணுவது ஹிம்ஸை; அங்ஙனம் ஒருவிதமாகவும் ஸங்கடத்தை யுண்டுபண்ணாமை அஹிம்ஸை—என்பதே சாஸ்த்ரங்களின் கோட்பாடு. இதுவும் கீழெடுத்துக் காட்டிய கீதா ச்லோகத்தின் பாஷ்யத்திலுள்ளது. "**அஹிம்ஸா—பரதுக்க அஹேதுத்வம்**" என்பது அவ்விடத்து ஸ்ரீஸூக்தி.

29. அன்பர்களே; இவ்விதமாக நிஷ்கர்ஷிக்கப்பட்ட ஸத்யமும் அஹிம்ஸையும் அந்த மஹாத்மாவிடத்தில் பிராமாணிகர்களிசையக் கூடியதாக விளங்குகின்றனவாவென்று பக்ஷபாதமின்றிப் பரிசீலனை செய்யவேணும். செய்யுமளவில், அந்த மஹாத்மாவிடத்தில் அன்பர்கள் கூறும் ஸத்யவாதித்வமும் அஹிம்ஸாசீலத்வமும் மேல்நோக்காகத் தேறுமேயல்லது ஆழ்ந்த நோக்கில் தேறுமதன்று என்று சொல்ல நேர்கின்றது. தருமவுலகுக்கு அஹிதமான வார்த்தைகளையே அல்லும்பகலும் அறைகின்றவர்க்கு ஸத்ய வாதித்வம் எங்ஙனே பொருந்தும்? எண்ணிறந்த ஆஸ்திகர்களுக்கு அபரிமிதமான துயரத்தை ஓய்வின்றி உண்டு பண்ணிக் கொண்டிருக்குமவர்க்கு அஹிம்ஸாசீலத்வம் எப்படிப் பொருந்தும்?

30. ஜாதிபேத பாவனையானது உலகுக்கு மஹத்தான அநர்த்தத்தை விளைவிப்பதாதலால் ஸகல மனிதர்களும் அதனை அறவே ஒழித்துவிடவேண்டும் என்கிற விதுவே மஹாத்மாவும் அவரது சுற்றுப் பரிவாரங்களும் ஆங்காங்கு ப்ரஸங்க மேடைகளில் பறைசாற்றுவதாம். இது பத்ரிகைகளிலும் பெரும்பாலும் பிரசுரமாகி வருகின்றது. சாஸ்த்ர வரம்பை மீறி இங்ஙனம் மனம்போனபடி பேசுவதனால் உலகம் முழுமைக்கும் அபரிமிதமான அஹிதமன்றோ செய்யப்பட்டதாகிறது. இப்படிப்பட்ட ப்ரஸங்கங்கள் காதில் பட்டவுடனே எத்தனை கோடி ஆஸ்திகர்கள் பரிதபிக்கிறார்கள் தெரியுமோ?

31. ஜாதிபேத பாவனை கூடாதென்கிற இவ்வுபதேசம் பொருளற்றது; உலகமெல்லாம் தலைகீழாவதற்கு ஹேதுவானது. மஹாத்மாவும் அவரைச் சேர்ந்தவர்களும் கீதா சாஸ்த்ரத்தில் முழுநம்பிக்கை கொண்டிருக்கிறார்களென்று கேள்விப்படுகிறோம். இது உண்மையானால், அந்த கீதாசாஸ்த்ரத்தின் உயிரான இரண்டு சுலோகங்களை இவர்கள் இடைவிடின்றிச் சிந்தனை செய்ய வேண்டுமே. * ய: சாஸ்த்ர விதிமுத்ஸ்ருஜ்ய வர்த்ததே காமகாரத:, ந ஸ ஸித்திமவாப்நோதி ந ஸுகம் ந பராம் கதிம். * தஸ்மாத் சாஸ்த்ரம் ப்ரமாணம் தே கார்யாகார்யவ்யவஸ்திதௌ, ஜ்ஞாத்வா சாஸ்த்ரவிதாநோக்தம் கர்ம கர்த்துமிஹார்ஹஸி." என்பன அவை. எதையும் சாஸ்த்ரங்களைப் பின்பற்றியே பேசவேண்டுமென்றும் அப்படியல்லாமல் மனம் போனபடியே பேசுகிறவர்களுக்கு இஹபரலோகங்களில் ஒரு சுகமுமில்லையென்றும் இப்படி கல்வெட்டாகக் கூறியிருப்பது கண்டும் தங்களுடைய பித்தப்பேச்சுக்களே பரம சாஸ்த்ரமென்று கொண்டு தம் மனத்தில் தோன்றினவற்றையெல்லாம் கூசாது கூறுவதும் அதையெல்லாம் சட்டமாக்கிவிடவேணுமென்பதுமாயிருக்கின்ற இவர்கள் ஸத்யம் என்பதைக் கனவிலுமறியாதவர்களென்றன்றோ சொல்லவேண்டியிருக்கின்றது. பூதஹிதம் என்பதைத் தள்ளி 'உள்ளதை உள்ளபடியே பேசுவது ஸத்யம்' என்று இவ்வளவே கொண்டாலுங் கூட இவ்விதமான ஸத்யமும் இவர்களிடத்தில் தலைகாட்டுவதன்றே.

32. அந்த கீதாசாஸ்த்ரத்திலேயே நான்காவது அத்யாயத்தில் * சாதுர்வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம் குணகர்மவிபாகச:'' என்றுள்ளது. மேலே பதினெட்டாவது அத்யாயத்திலும்* ப்ராஹ்மண க்ஷத்ரியவிசாம் சூத்ராணாஞ்ச பரந்தப!, கர்மாணி ப்ரவிபக்தாநி ஸ்வபாவப்ரபவைர் குணை:'' என்று தொடங்கி "பரிசர்யாத்மகம் கர்ம சூத்ரஸ்யாபி ஸ்வபாவஜம்.'' என்பதீறான ச்லோகங்களினால் ஜாதிவ்யவஸ்தைகள் காட்டப் பட்டிருப்பதை நன்கு காணலாம். இவை தவிர, இடையிடையில் * உத்ஸீதேயுரிமே லோகா :.....ஸங்கரஸ்ய ச கர்த்தா ஸ்யாமுபஹந்யா மிமா: ப்ரஜா:'' என்றும் அதில் அருளிச் செய்யப்பட்டுளது. லோகக்ஷேமம் விளைந்துவிடப் போகிறதேயென்று பகவான் மிக மிக அஞ்சுகிறார், அவ்வச்சம் இவர்களுக்குச் சிறிது மில்லை. அந்த கீதாசார்யனுடையவும் அவனது உக்திகளையே உணவாகக் கொண்டிருக்கிற பரம ஆஸ்திக பாகவதர்களுடையவும் உள்ளத்தைப் புண்படுத்துகின்ற உக்தி விஷங்களைக் கக்கி தர்ம தேவதையைக் கொலை செய்வது கூடாதென்று ஒரு விவேகியின் மனத்திலும் தோன்றவில்லையே. அந்தோ! பகற் கொள்ளையும் படுகொலையுமாயிருக்கிறதே!.

33. அஹிம்ஸையே பரமதர்மமென்று கூறுகின்ற இவர்களுடைய கருத்துத்தான் என்ன? பிராணிகளின் சரீரங்களில் நலிவை உண்டுபண்ணலாகாது என்கிற விவ்வளவேயோ இவர்கள் கருதியது. அந்தோ! உடலில் எவ்வளவு நலிவை விளைவித்தாலும் ஒரு நொடிப் பொழுதில் மருந்திட்டு ஆற்றி விடலாமே. மஹர்ஷிகள் போன்ற பல மஹான்களின் ஹ்ருதய மர்மஸ்தானங்களில் பரிஹாரமற்ற தீவ்ரமான சோகசங்குவையன்றோ இவர்கள் நாட்டுகின்றார்கள். இதிற்காட்டிலும் வேறு ஹிம்ஸையுமுளதோ?

34. ஜாதிபேத பாவனை கூடாதென்கிற பேச்சு சாஸ்த்ரங்களிலுமுண்டு, சாஸ்த்ர வித்துக்களான மஹான்களின் வாக்குகளிலுமுண்டு. ஆனால் தாற்பரியம் வாசிபட்டிருக்கும். பகவத் பக்தர்கள் தாழ்ந்த ஜாதியிற் பிறந்தவர்களாயிருந்தாலும் அந்த ஜாதியை யிட்டு அவர்களைக் குறைய நினைக்கலாகாதென்பதில் யார்க்கும் * விவாதமில்லை. அநாசாரான் துராசாரான் அஜ்ஞாத்ரூன் ஹீநஜந்மந:, மத்பக்தான் ச்ரோத்ரியோ நிந்தந் ஸத்யச் சண்டாள தாம் வ்ரஜேத் * என்பது முதலிய பல பல ப்ரமாணங்களை அபலாபம் செய்வாராருமில்லை. இதைக்கொண்டு வர்ணாச்ரம வ்யவஸ்தைகளைக் குலைக்க நினைப்பது உன்மத்த க்ருத்யமே யாகுமன்றோ.

35. ஜாதி வரம்பென்பது இன்று நேற்று ஒருவர் ஏற்படுத்தியதன்று. சந்திரஸூரியர்கள் ஏற்பட்ட காலம் முதலாகவே உள்ள தன்றோ இது. அற்ப காரணங்களைக் கொண்டு இதைக் குலைக்க முயல்வது உலகுக்கு மிகவும் ஆபத்தேயாகும்.

36. இங்கு இவர்களுடைய வாதம் என்னவென்றால்; ஜாதி வரம்பை நாங்கள் குலைக்கவில்லை; காலக் கொடுமையினால் அது தானாகவே குலைந்து விட்டது; சூத்ர ஜாதியொன்றே இப்போதுள்ளதாகக் காண்கிறது. மற்ற மூன்று ஜாதிகளும் உள்ளபடி எங்கும் காணமுடியாமலிருக்கின்றன. "ஜந்மநா ஜாயதே சூத்ர: கர்மணா ஜாயதே த்விஜ:'' என்றபடி வேதமோதுதல் ஓதுவித்தல், வேள்விகளைச் செய்தல் செய்வித்தல் முதலிய தொழில்களினால் த்விஜர்களென்று சொல்லக் கூடியவர்கள் எங்குமேயில்லையன்றோ. ஆகவே சூத்ரர்களுக்கும் மற்றையோர்களுக்கும் வாசி தெரிவரிதாக இருப்பதனால் 'ஜாதிவரம்பு' என்கிற பேச்சுக்கே பொருளில்லையன்றோ—என்று இப்படி யொருவாதம் கிளம்பியுள்ளது.

37. இது மிகவும் தவருன வார்த்தை. ஏதோ லௌகிகமுறைகளில் சிக்கிக்கொண்டவர்கள் ஒருவாறு இருந்தாலும், ஜாதிதருமங்களை ஏறக்குறைய அநுஷ்டித்து வருகின்ற த்விஜர்கள் ஆங்காங்கு இல்லாமற் போகவில்லை. இதை அபலாபம் செய்வது தவறு. முக்ய வ்ருத்தியாலும் கௌண வ்ருத்தியாலும் ஜாதி தருமங்களை அநுஷ்டித்து வருகின்ற த்விஜர்கள் இல்லையென்ருல் அன்றே இவ்வுலகம் பிரளயமடைந்திருக்கும். கீதாசார்யனும் கீதையில்— "யதா யதா ஹி தர்மஸ்ய க்லாநிர் பவதி" என்ருரேயன்றி 'தர்மஸ்ய நாசோ பவதி' என்ருரில்லை. ஜாதி தர்மங்கள் அடியோடு தலைமடிவதென்பது ஒருநாளும் நேராது. "காயத்ரீஜபம் மாத்திரமாவது செய்து வருபவர்களுக்கும் ப்ராஹ்மண்யத்தில் குறையில்லை" என்றும், "புருஷஸூக்தம் மாத்திரமாவது ஓதினவர்களையும் ச்ரோத்ரியர்களாகவே மானிக்க வேண்டும்" என்றும் பல இதிஹாஸங்களினுல் அறிகிருேம். இப்படிப்பட்டவர்களும் மேம்பட்டவர்களுமான த்விஜர்கள் ஆங்காங்கு எண்ணிறந்தே யுள்ளார்கள்.

38. உண்மையான த்விஜர்கள் ஒருவருமில்லை யென்றே வைத்துக்கொள்வோம். இந்த நிலைமையில் மஹாத்மாக்கள் செய்யவேண்டிய தொண்டு என்னவென்ருல், "அவரவர்கள் தம் தம் ஜாதி தர்மங்களை வழுவாமல் பாதுகாத்துக் கொள்ளவேண்டும்" என்று தீவ்ரமான ப்ரசாரங்களைச் செய்ய இவர்கள் முன்வர வேண்டுமேயல்லது 'ஏற்கெனவே தருமங்கள் குலைந்திருப்பதால் இன்னமும் அவற்றை அடியோடு குலைக்கிருேம்' என்று தர்மநாசத்திற்கு முயல்வது தகுதியே யன்று. ஜீர்ணமாயிருப்பதை உத்தாரம் செய்யப் பார்ப்பதன்ருே அழகு.

39. சில பாமரர்களை ஏமாத்தும் முறையில் இவர்கள் சொல்வது என்னவென்ருல், நாங்கள் ஜாதிவரம்பைக் குலைப்பது நன்மைக்காகவே யன்றித் தீமைக்காகவல்ல. ஸகல ஜனங்களிடத்திலும் ஒரு நிகரான அன்பைக் காட்டவேண்டுமல்லவா? பேதபாவனையிருக்கும்போது அப்படி அன்பைக் காட்ட முடியாததலால் அதற்காகவே ஜாதி பேதபாவனையை யொழிக்க முயல்கிருேமென்று. இந்தப் பேச்சினுல் விவேகிகள் ஒருநாளும் வஞ்சிக்கப்பட மாட்டார்கள். எல்லாரிடத்திலும் அளவுகடந்த அன்பைக் காட்டவேண்டியது மிக அவசியமே யென்பதை யாரும் மறுக்கமாட்டார்கள். எல்லாரிடத்திலும் அளவு கடந்த அன்பைக் காட்டவேண்டியது மிக அவசியமே யென்பதை யாரும் மறுக்கமாட்டார்கள். நூல் வரம்புகளை மீருமல் அன்பைக் காட்டுவதற்கு ஒரு தடையுமில்லை. ஓர் அளவுக்கு உட்பட்ட அன்பைக் காட்டுவதாயிருந்தால் நூல் வரம்புக்கு உட்பட்டுக் காட்ட வேண்டி யிருக்குமென்றும், அளவுகடந்த அன்பைக் காட்டக் கருதுமவர்கள் நூல் வரம்பைக் கடந்துதானுகவேண்டுமென்றும் இவர்கள் கூறத் தலைப்படுவர்கள். இது மிகவும் அஸம்பத்தமானது. ஒரு விதமான வ்யவஸ்தையையும் கொள்ளாமல் நூல் வரம்பை மனம் போனபடி கடப்பதென்ருல், தாய் மகள் தங்கை என்று ஒருவகையான வாசியும் இல்லையாகும். பதிவிரதை ஸ்வைரிணி என்கிற பாகுபாடும் இல்லையாகும். அந்த வரம்புகளைக் காக்கவே வேணுமென்ருல் அப்போது அன்பு குன்றி விடுமன்ருே. அந்த வரம்பும் வேண்டாவே என்றும் இவர்கள் தாராளமாகக் கூற முற்படுவர்கள். அத்தகைய கேடுகள் இன்னும் பல்லாயிரம் வருஷங்கள் கடந்த பின்பு வரப்போகிறதென்று கேட்டிருந்தோம்; அது இப்போதே வந்து விடுமாயின் கல்கியவதாரமும் இப்போதே ஆயிடுகவென்று பகவானை வேண்டுவது தவிர வேறில்லை நமக்குப் புகல்.

40. உலகத்தையே அல்லது தர்மதேவதையையே தலைகீழாக்கி விடவேணுமென்று பாடு படுகின்ற இப்பெரியார்களுக்கு எல்லாரிடத்திலும் உண்மையான அன்பு உளதாகில் இவா

கள் முக்கியமாகச் செய்யவேண்டிய காரியம் ஒன்றுண்டு. மூடர்களாகவும் ஏழைகளாகவும் பல ஜனங்கள் பிறந்து. மிக மிகப் பரிச்ரமப்பட்டுக் கொண்டிருப்பதை நாம் பார்த்துக் கொண்டிருக்கிறோம். இவர்களுடைய மூடத்தன்மையையும் ஏழைமையையும் அறவே யொழிப்பதற்கு இவர்கள் முயன்றால் உலகுக்கு மிகுந்த க்ஷேமமுண்டு. காந்திமகானும் ராஜாஜீயும் இவர்களைப் போன்ற மற்றும் பலரும் தம்தமக்கு ஆக வேண்டிய பலவித வேலைகளைச் செய்வதற்கு எத்தனையோ வேலைக்காரர்களை அமர்த்திக் கொள்ளுகிறார்கள். அற்ப சம்பளத்திற்காக அவர்கள் எவ்வளவு தேகச்ரமப்படுகிறார்களென்று பார்க்கவேணும். பலர் 4, 5 மணி காலம் மாத்திரமே தளுக்காக உட்கார்ந்து மாதம் பல நூற்றுக் கணக்காகவும் பல ஆயிரக் கணக்காகவும் சம்பளம் பெறுகிறார்கள். இந்த வேலைக்காரர்களோவென்னில் இரவு பகல் அறுபது நாழிகையும் ஓயாது தேக ச்ரமப் பட்டு அரை வயிற்றுக் கஞ்சியும் பெற மாட்டாது வருந்துகின்றார்கள். இப்படி அவர்கள் வருந்துவதை இப்பெரியார்கள் கண்டு சகித்திருக்கலாமா? முக்கியமாக இப்படிப்பட்டவர்களிடத்திலன்றோ அன்பு காட்டவேண்டும். உடம்பு நோவ வேலை செய்யாதவர்கள் அபரிதமான சம்பளம் பெறுவதும் ஸகல அவயவங்களும் நோவ இரவு பகலாக வேலை செய்பவர்கள் அற்ப சம்பளம் பெறுவதுமான இந்த விபரீதங்களை யொழித்தாலன்றோ எல்லாரிடத்திலும் உண்மையான அன்பு காட்டப்பட்டதாகும். ஜட்ஜ்களுக்கு 5000 ரூ. சம்பளம் கொடுக்கவும் ஒரு நிமிஷமும் ஓய்வின்றிப் பங்கா இழுப்பவனுக்கு 10 ரூ. சம்பளம் கொடுக்கவும் யார் ஏற்பாடு செய்தது. இப்படிப்பட்ட கொடிய வித்தியாசங்களை யன்றோ முன்னம் தொலைக்கவேண்டும்.

41. அன்றியும், இழிதொழில்களை இழிபிறப்பாளர் அநாதிகாலமாகச் செய்து வருகிறார்கள். இந்த மகாத்மாக்களும் அவ்விழி தொழில்களில் அவர்களையே ஏவிக் காரியங் கொள்ளுகிறார்கள். இது எவ்வளவு துக்க ரூபமான காரியம்! இதை இவர்கள் எப்படி ஸஹித்திருக்கிறார்கள். முதன் முதலாக அத்தகைய வேலைக்காரர்களிடத்திலன்றோ அன்பு காட்டவேண்டுமிவர்கள். க்ருத ப்ரதிக்ருதமாக ஒரு நாளாவது, ஒரு வேளையாவது இவர்கள் அத்தொழிலைச் செய்யமுடியுமா? ‘அது செய்ய அவர்கள் பிறந்திருக்கிறார்கள், நாங்கள் பிறக்கவில்லை’ என்பர்கள். அப்போது, ஈசனே பண்ணிவைத்த ஏற்றத் தாழ்வை நாம் மாற்ற முயல்வது தகுதியற்றதென்று தேறிநிற்கும். இந்த ஏற்றத் தாழ்வுகளுங்கூட குருட்டுப் பரம்பரையாக வந்தவையே யென்றும், இவற்றையும் ஒழிக்கவேண்டியது அவசியந்தானென்றும் சொல்லுவார்களாகில், நன்று நன்று மிக நன்று. இவற்றை யெல்லா மொழித்து நல்ல சீர்திருத்தங்களை முந்துற முன்னம் செய்யட்டும்.

42. நாம் பஞ்சபக்ஷ்ய பரமான்னங்களை யுண்ணவேணுமென்றும் பசுக்களும் பறவைகளும் புல்லையும் பூண்டையும் தின்னவேணு மென்றும் இது என்ன நியமம். சோறுண்பதில் அவற்றுக்கும் விருப்பமில்லையா? சில வேளைகளில் அவற்றுக்கு நாம் சோறு முதலியன இட்டால் அவற்றை யுண்டு அவை எவ்வளவோ களிப்பதைக் காண்கிறோமே. எல்லாவுயிர்களிடத்தும் நாம் அன்பு காட்டவேண்டியது அவசியமல்லவா? அவையும் நல்ல அன்னம் பெற்றுக் களிக்கும்படியான முயற்சிகளை முன்னம் செய்க.

43. சாஸ்த்ரங்கள் சீறாதபடிக்கும் ஸத்துக்கள் வருந்தாதபடிக்கும் உறுப்பான இத்தகைய காரியங்களைச் செய்து தங்களுடைய ஹ்ருதய வைசால்யத்தை இவர்கள் காட்டு

வார்களாயின் அதுவே இவர்களுக்கும் நன்மை, உலகுக்கும் நன்மை. இதைவிட்டு தரும வரம்புகளையும் ஜாதி வ்யவஸ்தைகளையும் குலைக்கிறோமென்று இவர்கள் பேசுவது உண்மையான ஸத்யத்திற்கும் உண்மையான அஹிம்ஸைக்கும் ஒவ்வாதென்பதை இவர்களே வீண் பிடிவாதத்தை விட்டுச் சிறிது ஆலோசித்தால் நன்குணர்வார்கள்.

## மிகவும் முக்கியமான வார்த்தை.

44. உலகில் மஹாத்மா துராத்மா என்று இரண்டுபெயர்கள் அநாதிகாலமாகவே வழங்கி வருகின்றன. இவை சாஸ்த்ர ஸித்தமான பெயர்கள். யாரை மஹாத்மா வென்பது? யாரை துராத்மா வென்பது? என்றால் "**மநஸ்யந்யத் வசஸ்யந்யத் கர்மண்யந்யத் துராத்மநாம், மநஸ்யேகம் வசஸ்யேகம் கர்மண்யேகம் மஹாத்மநாம்.**" என்றது சாஸ்திரம். அதாவது, மனதிலுள்ளது ஒன்று, வாயாற் சொல்வது வேறொன்று, காரியத்திற் காட்டுவது மற்றொன்று—ஆக இப்படி எவர்களுக்கு உள்ளதோ அவர்கள் துராத்மாக்கள். இப்படிக் கல்லாமல் மனமொழி மெய்கள் மூன்றும் வாசிபட்டிராமல் ஒற்றுமைப் பட்டிருக்கப் பெற்றவர்கள்—நெஞ்சிலுள்ளதையே வாயாற் சொல்லி, வாயாற் சொல்வதையே நடத்தையில் காட்டுமவர்கள் தாம் மஹாத்மாக்கள் என்றபடி. இதை யாரும் ஆக்ஷேபிக்கமுடியாது. இக்காலத்து மஹாத்மாக்களிடத்தில் இந்த நிலைமைதான் உண்மையாகவுள்ளதென்று உலகம் நம்பியிருக்கிறது; இதுநமக்குப் பரமஸந்தோஷமே.

45. காந்தியடிகள் ஸமீபகாலத்தில் நவகாளியில் ஓர் பெரிய மகம்மதிய ஜனக்கூட்டத்தில் பேசினவொரு பேச்சு எங்கும் வெளிவந்திருக்கின்றது. விக்ரஹ பூஜையில் மகமதியர்களுக்குப் போலவே தமக்கும் நம்பிக்கை கிடையாதென்பதை வெளியிட்டிருக்கிறார். இதற்கடுத்தபடி மற்றொரு வார்த்தையும் சொல்லியிருக்கிறார். அதாவது—விக்ரஹ பூஜையில் தனக்கு நம்பிக்கையில்லாவிட்டாலும் நம்பிக்கையுள்ளவர்களுக்கு த்ரோஹம் செய்யக் கூடாதாகையாலே விக்ரஹங்களை உடைத்து விடுவதோ ஆலயங்களைச் சீரழிப்பதோ இப்படிப்பட்ட தப்புக்காரியங்களைச் செய்யவும் இப்படிப்பட்ட கொள்கையைக் கைப்பிடிக்கவும் தாம் விரும்பவில்லை யென்றும் பேசியிருக்கிறார். இப்போது நடந்து வருகிற காரியமென்ன வென்று பார்க்கவேணும். காங்கிரஸ் தலைவர்கள் யாவரும் காந்திஜீயின் தொண்டர்களாகவே தம்மைச் சொல்லிக் கொள்ளுகிறார்கள். இவர்கள் காந்தியின் கருத்தையே வேத சித்தாந்தமாகக் கொண்டவர்களென்றும் தெரிய வருகிறது. இப்படிப்பட்டவிவர்கள் தாங்களும் காந்தியின் கருத்தின்படி விக்ரஹ பூஜையில் நம்பிக்கை சிறிதுமில்லாதவர்களாகவே யிருக்கவேண்டும். ஆகவே இவர்களுக்குக் கோவிலைப் பற்றின ஞாபகமே வருவதற்குப் பிரஸக்தியில்லை. வி. பாஷியமையங்கார் தமது தினமணி வியாஸத்தின் முடிவு பாகத்தில் "கோவில்களில் நம்பிக்கையில்லாதவர்கள் கோவில்களைப் பற்றிக் கவலைப்படுவானேன்?" என்று எழுதியுள்ளார். இது யாரை நோக்கிச் சொல்லுகிற வார்த்தை யென்பது தெரிய வேணும். காந்தியையே கோவாகக் கொண்டவர்கள்தாம் கோவில்களில் நம்பிக்கையில்லாதவர்களென்று கீழே நன்கு விளக்கப்பட்டது. அப்படிப்பட்டவர்கள் கோவில்களைப் பற்றின பேச்சையே எடுக்கத்தகாதென்பதை இவரே ஒப்புக் கொண்டு தீண்டாதாரைக் கோவில்களில் புகவிடவேணு மென்கிற கொடிய பிரசாரம் செய்வது எப்படி பொருந்தும்.

46. இதற்கு இவர்கள் என்னபதில் சொல்லவேண்டு மென்றால், எங்கள் கோவான காந்திஜீக்கு விக்ரஹ பூஜையில் அடியோடு நம்பிக்கையில்லாதபடியால் வீணன விக்ரஹ

பூஜையைப் பறிமுதல் செய்வதற்காகவே நாங்கள் பாடு படுகிறோம் என்றே பதில் சொல்ல வேண்டும். உண்மையில் இதுவே கருத்துத்தான் இவர்களுக்கு என்பதை உலகம் அறிந்தே யிருக்கின்றது. இதை இவர்கள் வெளிப்படையாகச் சொல்லி வேலை செய்தால் அது வொரு ஒழுங்கான முறையாயிருக்கும். "ஆலயங்களைச் சீரழிப்பதாகிற தப்புக் காரியத்தில் தலையிடமாட்டேன்" என்று காந்திஜீ மகமதியக் கூட்டத்தில் பேசியிருக்கிற பேச்சுக்கும் இவர்களது நடத்தைக்கும் சிறிதாவது பொருத்தமுண்டோ? இப்போது நடந்து வருவதைவிட வேறு விதமான ஆலயச்சீரழித்தல் இனிக் காணமுடியுமோ?

47. கோவில்களில் தமக்கு நம்பிக்கைகிடையாதென்று வெட்ட வெளிச்சமாகச் சொல்லியான பிறகு இவர்கள் செய்யவேண்டிய காரியம் ஒன்றே. அதாவது, மூட நம்பிக்கையினால் கோவிலுக்குப் போகிறவர்களையும் கோவில்களில் பணச் செலவு செய்பவர்களையும் தங்களாலியன்ற உபதேச மொழிகளினால் தடை செய்யப்பார்ப்பது. இக்காரியமொன்று தவிர வேறு எதுவும் இவர்கள் செய்யத் தகாது. இது செய்ய இஷ்டமில்லை யென்றால், கோவில் என்று ஒன்றிருப்பதாகவும் அங்கு விக்ரஹ பூஜை நடப்பதாகவும் நெஞ்சிலும் நினையாமல் வாளாவிருப்பது. இரண்டையும் விட்டு, உலகம் பெரும்பாலும் வயிறு குமுறும்படியான அதர்க்கண அநீதிச் செயல்களை எங்கும் பலாத்காரத்தினாலேயேயன்றோ செய்து வருகிறார்கள்.

## ஸ்ரீ ராமாநுஜர் விஷயம்.

48. "ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்திற்குத் தலைவரானஸ்ரீ ராமாநுஜர் மற்றவர்களைப்போல் குறுகிய மனம் படைத்தவரல்லாமல் மிக விசாலமான மனம் படைத்தவரா யிருந்தார். ஜாதி பேதங்களையிட்டு இகழ்வது கூடாதென்கிற நற் கொள்கையை மிகவும் பாராட்டினவர் ஸ்ரீ ராமாநுஜரே யாவர். திருநாராயணபுரத்தில் நாளைக்கும் ப்ரத்யக்ஷமாகக் காணும்படியானதோர் தீண்டாமை யொழித்தலை அந்த ராமாநுஜரே முன்னின்று ஏற்பாடு பண்ணி வைத்தாரென்று இதிஹாஸ நூல்கள் கூறுகின்றன. அப்படிப்பட்ட ஸ்ரீ ராமாநுஜருடைய ஸம்பிரதாயத்தை தென்னாசாரியர்கள் என வழங்கப்படுகின்ற தென்கலை வகுப்பினரே உண்மையாக மேற்கொண்டவர்களெனத் தெரிகின்றது. ஏனென்றால், ஜாதி போய்விடும் என்கிற வாதம் தென்கலை ரஹஸ்யங்களான ஸ்ரீ வசந பூஷணம், ஆசார்ய ஹ்ருதயம் முதலான நூல்களில் விரித்துரைக்கப் பெற்றுளது. மற்ற ஸம்பிரதாயஸ்தர்களின் கொள்கை எப்படியிருந்தாலும் ஸ்ரீ ராமாநுஜருடையவும் அவரைச் சார்ந்த தென்கலையார்களுடையவும் கொள்கையானது தீண்டாமையை யொழிப்பதில் மிகவும் நோக்குடையதாகக் காண்கிறபடியால், தீண்டாதாரின் ஆலயப் பிரவேசத்தை இவர்களாவது ஆமோதிக்க வேண்டாமா? இதனை மற்றையோர்கள் தடுத்தாலுங்கூட, ஸ்ரீராமாநுஜரைச் சார்ந்தவர்களும் அதிலும் தென்கலை ஸம்பிரதாயஸ்தர்களுமான ஸ்ரீ வைஷ்ணவர்கள் தடுக்க நியாயமில்லையே" என்று இவ்விஷயங்களைப் பிரசங்கமேடைகளில் நின்று நமது பாஷியமையங்கார் போல்வார் வாதிக்கின்றார்களாம். அதனைக் கேட்கும்போது "இந்த பிரஸங்கம் சிறிதும் மறுக்கக்கூடியதாக இல்லையே" என்று மிக்கவேதியர்களுக்கும் தோன்றிவிடுகிறதாம். அப்படித் தோன்றாதபடிக்குத் தத்துவத்தை யுணர்த்தவேணும்—என்பது சில பெரியார்களின் கோரிக்கை.

49. இதைப்பற்றி நம்முடைய சிற்றறிவிற்கு எட்டியவரை உள்ளவாறு உணர்த்துகின்றோம். ஸ்ரீ ராமாநுஜர் மற்றவர்களைப்போல் குறுகிய மனம் படைத்தவரல்லரென்பதும் மிக விசாலமான திருவுள்ளம் படைத்தவரென்பதும் உண்மையே. இதை மறுக்க அவகாசமு

மில்லை, அவசியமுமில்லை. உபதேசரத்தின மாலையில் ஸ்ரீ ராமாநுஜரைப் பற்றி மணவாள மாமுனிகள் அருளிச் செய்துள்ள ஒரு பாசுரம் அவருடைய திருவுள்ளத்தின் விசாலத் தன்மையை நன்கு புலப்படுத்துகின்றது. அப்பாசுரமாவது—

“ ஓராண்வழியாய் உபதேசித்தார் முன்னோர், ஏராரெதிராச ரின்னருளால்—பாருலகில்
ஆசையுடையோர்க் கெல்லாம் ஆரியர்காள் கூறுமென்று பேசி வரம்பறுத்தார் பின்.”

என்பதாம். மற்ற ஆசிரியர்கள் மிகவும் ரஹஸ்யமாக வைத்துக்கொண்டிருந்து சாலவும் அருமைப் படுத்தி உபதேசித்த பொருள்களை ஸ்ரீ ராமாநுஜர் மிக எளிமையாகத் தாம் உபதேசித்தும் தம் அடியார்களைக் கொண்டு உபதேசிப்பித்தும் போந்ததனால் அவர் விசாலமான மனம் படைத்தவரென்று போற்றப்படுவது வாஸ்தவமே.

50. சாஸ்திரவச்யர்களான மஹான்கள் தங்களுடைய தயாகுணத்தை சாஸ்த்ர விரோதமின்றியில் சாஸ்திரம் அநுமதித்த வழியில் காட்டுவர்களே யல்லது யதேச்சையாக சாஸ்த்ரங்களைக் கடந்து காட்டடார்கள். சாஸ்த்ரங்களுக்குக் கட்டுப்பட்டவர்களில் ஸ்ரீ ராமாநுஜர் தலைவர்.

51. அர்த்த விசேஷங்களை அருமைப் படுத்தியே உபதேசிக்க வேணுமென்று சாஸ்த்ர மிருக்கச் செய்தேயும், முலைக்கடுப்பாலே தரையிலே பீச்சுவாரைப் போலே அபேக்ஷா நிரபேக்ஷமாக உபதேசித்தவர்களும் உண்டென்று சாஸ்த்ரங்களைக் கொண்டே நாம் அறிகின்றோம். ஸீதை, ப்ரஹ்லாதன், விபீஷணன் முதலான வ்யக்திவிசேஷங்களிடத்திலே அந்நிலையை சாஸ்திரங்கள் நிரூபித்திருக்கின்றன. அவ்வழியை ஸ்ரீ ராமாநுஜரும் பின்பற்றினாரென்றால் இது சாஸ்த்ர விரோதமாக யதேஷ்டமாய்ச் செய்த காரியமன்று என்பதை நன்கு உணரவேண்டும். இத்தகைமை பற்றியே ஸ்ரீ ராமாநுஜரை விசாலமான மனம் படைத்தவரென்று உலகம் போற்றுவது. “ தாய்க்கும் மகனுக்கும் தம்பிக்கும் இவர்க்கும் இவரடி பணிந்தவர்க்குமே யிவையுள்ளது” என்கிற ஆசார்ய ஹ்ருதய ஸ்ரீ ஸூக்தியும் காண்க.

52. ஜாதி பேதங்களை யிட்டு இகழ்வது கூடாதென்கிற நூல்கொள்கையை ஸ்ரீ ராமாநுஜரே மிகவும் பாராட்டினர் என்கிற வார்த்தைக்கு அர்த்தமென்ன ? என்று ஆராயவேண்டும். மஹர்ஷிகளின் வசனங்களிலும் ஆழ்வார்களின் திருவாக்குகளிலும் பக்தர்களின் பெருமை வெகு அழகாகக் கூறப்பட்டிருக்கின்றது. * ச்வபசோபி மஹீபால ! விஷ்ணு பக்தோ த்விஜாதிக:, விஷ்ணுபக்தி விஹீநஸ்து யதிச்ச ச்வபசாதம:.” என்றிது முதலான பிரமாணங்கள் இருப்பது வாஸ்தவம். சண்டாளனுயிருந்தாலும் விஷ்ணுபக்தியுடையவனுயிருந்தால் அந்தணனைக் காட்டிலும் அவன் அதிகன் என்றும், விஷ்ணுபக்தியில்லாதவன் உத்தமாச்ரமியாயிருந்தாலும் சண்டாளனிற் காட்டில் தண்ணியன் என்றும் மேலே குறிப்பிட்ட ச்லோகம் கூறுகின்றது. பக்தியுடையவன், பக்தியற்றவன் என்கிற சொற்களின் பொருளை நிர்த்தாரணம் செய்யவேண்டுவது அவசியமாயிருக்கிறது.

53. பன்னிரண்டு திருமண்காப்புகளைச் சாத்திக்கொண்டு திருமணித் தாவடங்களை யணிந்து கொண்டால் பக்தன் ; பகவானுடைய திருநாமங்களை உத்கோஷித்துக் கொண்டு ஸஸம்ப்ரம நர்த்தனங்கள் செய்தால் பக்தன் ; என்றிப்படி பலவாறு சொல்லக்கூடும். இவையுடையனை சண்டாளனை இவையில்லாதவனான யதியைக் காட்டிலும் மிகச் சிறந்தவனாகக் கொள்ள

வேணுமென்றால் இது ஸம்பாவிதமாகுமா? என்று ஆராய்ந்து பார்க்கவேணும். வால்மீகி என்கிற ஒரு மஹர்ஷியை யெடுத்துக் கொள்ளுவோம். இவர் எத்தனையோ வருஷகாலம் புற்று மூடிக் கிடந்தாரென்று சொல்லப்படுகிறது. முன்னம் சொன்னபடி பக்தியின் வெளி யாடம்பரம் ஒன்று கூட இவரிட மில்லாமலிருந்தது. இப்படி எத்தனையோ மஹான்கள் நாளைக்கும் ஆடம்பரமற்ற மஹா பக்தர்களாகக் காணப்படுவதுண்டு. நம்போன்றவர்களால் அவர்கள் பக்தர்களென்று அறிந்து கொள்ளவே முடியாதபடி யிருக்கும். போலியான வெளிவேஷங்களைக் கண்டு சிலரை பக்தர்களென்று மயங்கி விடவும் கூடும். ஆகவே இன்னார் பக்திமான்கள், இன்னார் பக்தி யில்லாதவர்கள் என்பதை நிர்த்தாரணம் செய்ய ஒருபடி யாலும் நமக்கு வல்லமையுமில்லை; அதிகாரமுமில்லை.

54. ஆலயத்திற்குள் சென்று பெருமாளைச் சேவிக்க வேண்டுமென விரும்புமவர்கள் பக்தி யில்லாதவர்களாக இருப்பார்களா? எவ்வளவோ பக்தி தலையெடுத்தல்லவோ இத்தகைய விருப்பம் விளைகின்றது. ஆகவே இங்ஙனே விரும்புமவர்களைப் பற்றி நமக்கு ஏன் சந்தேகம் உண்டாக வேண்டும்? அவர்களுடைய ஆசையைக்கொண்டே அவர்களை நாம் மஹா பக்தர் களாக நிர்த்தாரணம் செய்யத் தடை யில்லையே என்று சிலர் கூற முற்படுவார்கள். தீண்டா வகுப்பினர் தாங்கள் ஆலயங்களினுட் புகுந்து பெருமாளைத் தரிசிக்க வேணுமென்று இது வரையில் நினைத்தவர்களல்லர். ஆங்காங்கு எம்பெருமான்கள் உத்ஸவங் கொண்டாடி வீதி களில் எழுந்தருளும்போது அவர்கள் வந்து தொழுவதற்கு இடையூறு இல்லாமலிருந்துங் கூட பெரும்பாலும் அவர்கள் தொழ வருவதில்லை. இப்போது அவர்களுக்குப் பணம் காசு கொடுத்து வலிகட்டாயமாகப் பிடித்திழுத்து வீண் பிடிவாதமாகவே அதர்க்கணமாகச் செய்விக்கப் படுகிற தொழுகை உலகறிய நின்றது. இது கிடக்கட்டும்.

55. ஸ்ரீ ராமாநுஜருடைய கொள்கை எப்படி இருந்தது? அவரைச் சார்ந்த தென்கலை ஸம்பிரதாயஸ்தர்களின் ரஹஸ்ய நூல்களின் முடிபு எப்படிப்பட்டது என்பதைப்பற்றி ஆராய் வோம். திருமங்கையாழ்வார் அருளிச்செய்த பெரிய திருமொழியில் (7—4) * கண்சோர வெங்குருதி * என்பது ஒரு பதிகம். இது பாகவதர்களின் பெருமையை நிரூபணம் செய்வ தற்காகவே அவதரித்ததாகும். ஸ்ரீவசந பூஷணத்திலும் பிள்ளைலோகாசாரியர் இந்தப் பதி கத்தை யெடுத்துக்காட்டி பாகவத வைபவத்தை இதிலே கண்டு கொள்ளுமாறு அருளிச் செய்திருக்கின்றார். அந்தப் பதிகத்திற்குப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம் செய்தருளி யிருப்பது ப்ரஸித்தம். அங்கு அவதாரிகையில் ஸ்ரீ ராமாநுஜரைப் பற்றி ஒரு ஐதிஹ்யம் அருளிச் செய்திருக்கின்றார். அதைத் தெரிந்துகொள்ள வேண்டியது முதற் காரியம். அங்குள்ள பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திகளை அப்படியே உதாஹரித்துக் காட்டுகிறோம்;—

"பெரியநம்பி, ஜன்ம வ்ருத்தாதிகளால் குறைய நின்றாரொருவர் திருநாட்டுக்கு நடந் தாராய் அவரை அநுகமனம் பண்ணித் தீர்த்தமாடாதே வந்தெழுந்தருளி யிருக்க, இத்தை எம்பெருமானார் கேட்டருளி, பெரியநம்பிபாடே வந்து 'மரியாதை கிடக்கக் காரியஞ் செய்ய வேண்டாவோ' என்ன; * பயிலுஞ் சுடரொளி,* நெடுமாற்கடிமை கடலோசையோ? சிறிது குறையவாகிலும் ஆசரிக்க வேண்டாவோ?' என்றருளிச் செய்தார்" என்று.

56. இங்கே பெரியநம்பி செய்த காரியம் என்ன? அதைப்பற்றி ஸ்ரீ ராமாநுஜர் ஆக்ஷேபித்தபடி என்ன? என்று தெரிந்துகொள்ள வேண்டும். உயர்ந்த ஜாதியிற் பிறவாத ஒரு பக்தர் பரமபத மடைந்து விட்டாராம். அவரைத் திருப்பள்ளிப்படுத்த எழுந்தருளப் பண்ணிக் கொண்டு போனபோது பெரிய நம்பி உடன் சென்று தீர்த்த மாடாதே யிருந்தாரென்று சொல்லப்பட் டிருக்கின்றது. உத்தமாச்ரமிகள் திருநாட்டுக் கெழுந்தருளினால் அவர்களை

அநுகமநம் செய்பவர்களுக்கு ஆசௌசம் கிடையாது என்பது பெரியோர்களுடைய கொள்கை. அதன்படியே பெரியநம்பி அந்த மஹா பக்தரிடத்தில் உத்தமாச்ரமியோடொக்க ப்ரதிபத்தி கொண்டு அநுகமநம் பண்ணி ஆசௌசம் கொண்டாடாமலிருந்ததாக விளங்குகின்றது.

57. இது சாஸ்த்ர மர்யாதையை மீறிச்செய்த காரியமென்று ஸ்ரீ ராமாநுஜர் திருவுள்ளம்பற்றி அப்பெரிய நம்பியை ஆக்ஷேபித்ததாகத் தெரியவருகின்றது. பிராமணரல்லாதவொரு பாகவதரை அநுகமநம் பண்ணினதற்காக ராமாநுஜர் ஆக்ஷேபித்தாரா? அல்லது தீர்த்தமாடாமலிருந்ததற்காக ஆக்ஷேபித்தாரா? என்பது இங்கே விமர்சிக்கத் தகுந்தது. அநுகமநம் பண்ணினதைப்பற்றியே ஆக்ஷேபம் என்பர் பலர்; தீர்த்தமாடாமலிருந்ததைப் பற்றியே ஆக்ஷேபம் என்பர் சிலர். இஃது எங்ஙனேயாயினு மாயிடுக. ஆக்ஷேபம் என்று ஒன்று ஏற்பட்டிருக்கின்றது. அவ்வாக்ஷேபம் செய்தவர் விசாலமான மனம் படைத்த ஸ்ரீ ராமாநுஜரென்றும் ஸ்பஷ்டமாகக் காணப்படுகின்றது. சாஸ்த்ர மர்யாதையை மீறி எப்படி நடக்கலாம்? என்று ஸ்ரீ ராமாநுஜர் ஆக்ஷேபித்திருப்பதாகக் காண்கிறது.

58. இங்கே மற்ற விஷயங்களில் நெஞ்சைச் செலுத்தாமல், சாஸ்த்ர மர்யாதையைச் சிறுதும் நழுவவிடாமல் பரிபாலனம் செய்யவேணுமென்பதில் ஸ்ரீ ராமாநுஜருக்கு எவ்வளவு ஊக்கமிருந்தது என்பதொன்றை விமர்சிப்பதிலே நெஞ்சைச் செலுத்தவேணும். தம்முடைய ஆசாரியர் செய்தருளின காரியத்தையே அவர் ஆக்ஷேபித்ததாகக் காண்கிறது. பெரியநம்பி அருளிச் செய்த ஸமாதானம் ஸ்ரீ ராமாநுஜருக்குத் தெரியாததன்று. அபூர்வமாக ஒரு ஸமாதானமும் பெரியநம்பி அருளிச் செய்துவிடவில்லை.

59. இந்த ஐதிஹ்யத்தைத் தென்னாசார்யர்களில் தலைவரான பெரிய வாச்சான் பிள்ளை எதற்காக எழுதி வைத்தருளினர் என்றும் சிறிது ஆராய்ச்சி செய்யவேண்டும். ஸ்ரீ ராமாநுஜர் ஆக்ஷேபித்தாரென்பதைக் காட்டாமலே ஒருவாறு அந்த ஐதிஹ்யத்தை அவர் எழுதி வைத்திருக்கலாம். இந்த ஐதிஹ்யம் இவ்விடத்தில் தவிர வேறிடத்திலுள்ளதாகவும் தெரியவில்லை. பாகவத வைபவங்கள் அபாரமாகச் சொல்லப்பட்டாலுங் கூட சாஸ்த்ர வரம்பை மீறி அநுஷ்டானத்தில் காட்டலாகாது என்பது ராமாநுஜருடைய கொள்கை—என்கிற விதனைக் காட்டுதற்காகவே இந்த ஐதிஹ்யம் இங்கு இந்த நடையில் பெரிய வாச்சான்பிள்ளையினால் அருளிச் செய்யப்பட்டிரா நின்றதென்று நன்றாக உணரவேண்டும். பெரியநம்பி பிரமாதமான காரியம் ஒன்றும் செய்து விடவில்லை. அச்சிறு காரியந்தன்னையே ஸ்ரீ ராமாநுஜர் இப்படி ஆக்ஷேபித்தாரென்றால் அவருக்கிருந்த சாஸ்த்ரஸரணிப்ரதிபத்தியைப்பற்றி அதிகமாக நாம் என்ன விளக்கவேண்டும்?

60. ஸ்ரீ ராமாநுஜர் மற்றவர்களைப்போல் குறுகிய மனம் படைத்தவரல்லாமல் மிக விசாலமான மனம் படைத்தவராயிருந்தார் என்பதில் விவாதப்படுவோமல்லோம். சாஸ்திரம் இணங்கக்கூடிய வழியில் தம் மனோவைசால்யத்தைக் காட்டலாமே யன்றி, சாஸ்திரங்களை மீறி ஸ்வதந்த்ரமாக மனோவைசால்யத்தைக் காட்டுவதற்கு அவகாசமேயில்லை. அப்படி காட்டியிருந்தால் அவர் ஆசாரிய பதவியில் ஏறியிருக்கவே முடியாது. *ஆசிநோதி ஹி சாஸ்த்ரார்த்தாந் ஆசாரே ஸ்தாபயத்யபி, ஸ்வயமாசரதே யஸ்மாத் தஸ்மாதாசார்ய உச்யதே* என்பது ஆசார்ய லக்ஷணம் கூறும் வசனம். நூற்கொள்கையை உள்ளபடி யறிந்து அப்படியே தாம் அநுட்டித்தும் பிறர்களை அநுட்டிக்கச் செய்தும் போருகின்றவரே ஆசாரியர் என்று இந்த வசனம் நன்கு நிரூபிக்கின்றது. அத்தகைய லக்ஷணம் ஸ்ரீ ராமாநுஜர் பக்கலில் பரிபூர்ணமாகக் குடி கொண்டிருந்தபடியினாலேயே அவர் ஆசாரிய பதவியில்

ஓங்கி நின்றார். தம்முடைய மநோவைசால்யத்தையும் சில விஷயங்களில் வெகு அழகாகக் காட்டி நின்றார். எப்படி காட்டினாரென்றால், சாஸ்திர விரோதம் சிறிதும் சங்கிக்கக்கூடாத வழியிலே காட்டினாரே யல்லது தாந்தோன்றியான முறையிலே காட்டினாரல்லர்.

61. திருநாராயணபுரத்தில் ஏதோ அவர் செய்து விட்டாரென்று சொல்லி வருகிறார்கள். அதை நன்றாக விமர்சிக்கவேணும். ஸ்ரீ ராமாநுஜர் அந்த திவ்ய க்ஷேத்திரத்தை ஸமுத்தாரம் பண்ணப் புகுந்த காலத்தில் தீண்டாதாருடைய ஓர் உதவி அபரிமிதமாக நேர்ந்தது. அது நேர்ந்திராவிடில் அந்த க்ஷேத்திரத்தை இழக்கவே நேர்ந்திருக்கும். அப்படிப்பட்ட பேருதவிக்கு ஒரு கைம்மாறு செய்யவேண்டி, குறிப்பிட்ட வொரு கால விசேஷத்தில், குறிப்பிட்ட வொரு ஸ்தான விசேஷத்தில் அவர்களுக்கு பகவத் ஸேவையை நியமித்தருளினார். இதுவும் பகவானுடைய நியமனம் பெற்றே நியமிக்கப்பட்டது. உடனே அதற்குரிய ப்ராயச்சித்தங்களையும் செய்யும்படி நியமிக்கப்பட்டு அன்று முதல் இன்றறுதியாக அந்த ப்ராயச்சித்தமும் நியமேந நடைபெற்று வருகின்றது. இதுகொண்டே அந்தக் காரியத்தின் தத்துவத்தை எளிதில் உணரலாம்.

62. பெருமாள்கோயிலென்கிற காஞ்சி க்ஷேத்திரத்தில் நாபிதனும் வண்ணானும் தேவப்பெருமாளுக்குச் சில நன்மைகள் ஏற்பட்டன. அதற்காக அவர்களுக்குச் சிறந்த மரியாதை நியமிக்கப்பட்டிரா நின்றது. நவராத்ரி மஹோத்ஸவத்தில் அவர்கள் வாஹனத்தின் மீது ஏறிக் கொண்டு ஸந்நிதியினுள்ளே புகுந்து நூற்றுக்கால் மண்டபத்தினெதிரே வந்து சேருவதும், அப்பொழுது அங்கே யெழுந்தருளியிருக்கிற பெருமாள் அவர்களுக்கு மரியாதை செய்தருள்வதும் வெகு அற்புதமான காட்சி. நவராத்ரி முடிந்து மறு நாள் விஜயதசமி பரிவேட்டைக்காகத் தேவப்பெருமாள் திரு வீதியில் புறப்பட்டருளுங் காலத்தில் வண்ணான் யானை வாஹனத்தின்மீது ஏறிக்கொண்டு கோஷ்டிக்கெதிரே செல்லுவது, ஓரிடத்தில் அவனுக்கு மரியாதை செய்து திருப்புவது—என்றிப்படியெல்லாம் ஏற்பட்டிருக்கின்றது. பெரிய பெரிய மடாதிபதிகளும் விசேஷப்படியாகத் தங்களுக்கு ஏற்பட்டிருக்கிறமரியாதைகளைப் பெறவேண்டின காலத்தும், தங்கள் வாஹனங்களையும் பிருதாவளிகளையும் கோபுரத்வாரத்திற்கு வெளியிலேயே நிறுத்திவிட்டு அஸ்மதாதிகளைப்போல் ஸாதாரணமாகவே உள்ளே புகவேணுமென்கிற நியதி ஏற்பட்டிருக்கின்றது. வண்ணானும் நாபிதனும் வாஹனத்தின் மீதேறிக் கொண்டு உள்ளே புகுந்து வந்து தொழுது மரியாதை பெறும்படியான கட்டளை ஏற்பட்டிருக்கின்றது. அர்ச்சாவதாரத்தில் ஸமய விசேஷங்களில் அவரவர்களால் நேர்ந்த பேருதவிக்குக் கைம்மாறாக இப்படிப்பட்ட சில நிபந்தனைகள் சில க்ஷேத்திரங்களில் ஏற்பட்டிருக்கின்றனவென்றால், இவற்றை நவீந ஸ்வதந்த்ரக்ஷேபங்களுக்கு ஆதாரமாகக் காட்டப் புகுவது பயன்படுமோ?

63. திருநாராயணபுரத்தில் ஸ்ரீ ராமாநுஜர் தீண்டாதார்க்கு ஒரு சிறப்பு நியமித்தருளின அக்காலத்தில் அந்த ஸந்நிதியின் ஸந்நிவேசம் இருந்த விதம் வேறு; இப்போது இருக்கிற விதம் வேறு. அதாவது, கட்டிடமில்லாமலிருந்த இடத்திலேயே அப்போது அவர்கள் வருவதும் தொழுவதும் நியமிக்கப் பட்டிருந்தது. அவ்விடத்தில் பிறகு வெகு காலம் கடந்த பின்பே கட்டிடம் ஏற்பட்டது. அந்த க்ஷேத்திரத்தில் ஸ்ரீ ராமாநுஜர் செய்தருளின ஏற்பாடு எவ்வளவோ ஜாகரூகதையுடன் செய்யப்பட்டிருப்பதே யல்லது, யதேஷ்டமான க்ஷேபங்களுக்கு இடமளிக்கும்படியான முறைமையில் செய்யப்பட்டிருக்கவில்லை.

64. "தீண்டாதார்" "தீண்டாமை" என்கிற பதங்கள் இன்று நேற்று புதிதாக நம்மால் ஆக்கப்பட்டவையல்ல. சந்த்ர ஸூர்யர்கள் ஏற்பட்ட காலம் முதலாகவே அந்தச் சொற்களும்

ஏற்பட்டிருக்கின்றனவென்பதில் ஆர்க்கும் விவாதமிராது. அதை மாற்றிவிட யாருக்கு என்ன அதிகாரம்? நெருப்பின் சுடுகையை மாற்றிவிட யாருக்காவது அதிகாரமுண்டோ? தண்ணீரின் குளிர்ச்சியை மாற்றிவிட யாருக்காவது அதிகாரமுண்டோ? எந்த எந்த வஸ்துக்களுக்கு எது எது தன்மையாக ஆதிகாலத்தில் பகவானால் அமைக்கப்பட்டதோ; அந்தந்த தன்மைகள் சாச்வதமாயிருக்கக் கூடியவைகளேயல்லது இடையில் ஒருவரால் அழிக்கக் கூடியவையல்ல. மஹாராஜ மஹிஷியாயிருந்தாலும் ரஜஸ்வலேயாய் விட்டால் தீண்டாமையை ஏற்றுக்கொண்டு கடக்க நிற்கவேண்டியது தலைவிதியாய் நிற்கின்றது. சாஸ்த்ரோக்தமான ஆசௌசங்களை எந்த ஜாதியாரும் விடாது பரிபாலனம் செய்துவரக் காணா நின்றோம். இத்தகைய விஷயங்களில் மனோவைசால்யங் கொண்டு யார் என்ன செய்துவிடமுடியும்?

65. ஸ்ரீ வசநபூஷணம் ஆசார்ய ஹ்ருதயம் முதலிய தென்னாசார்ய ரஹஸ்ய நூல்களில், ஜாதியைப் பற்றிக் கணிசிக்க வேண்டியதில்லை யென்றும் பக்தியே முக்கியமாக நோக்கத் தக்கதென்றும் அருளிச் செய்யப்பட்டிருப்பது உண்மையே. அதனால் வர்ணாச்ரம தர்ம வ்யவஸ்தைகளை அவ்வாசிரியர்கள் அழித்துவிட்டதாகக் கொள்ள வடுக்குமோ? அந்த ஸ்ரீ வசநபூஷணந் தன்னிலேயே, ப்ரபந்ந திநசர்யா ப்ரகரணத்தில் "பகவதபசாரமாவது" என்று தொடங்கி அருளிச் செய்யுமளவில் "வர்ணாச்ரம விபரீதமான உபசாரமும்" என்று ஸ்பஷ்டமாக அருளிச் செய்யப் பட்டிராநின்றது. ஜாதிக்கு விருத்தமாகவும் ஆச்ரமத்திற்கு விருத்தமாகவும் நடந்துகொள்வது பகவதபசாரம் என்று காட்டப்பட்டது. இதனால், வர்ணாச்ரம தர்மநியதிகள் அழியக் கூடாதென்னும் விஷயத்தில் தென்னாசார்யர்களுக்குள்ள உறுதி நன்கு விளங்கியதேயாகும். நம்மாழ்வார் திருமங்கையாழ்வார் போல்வாரான சில ஆழ்வார்களிடத்திலே விப்ரதிபத்தி பண்ணினவர்களுக்குத் தெளிவு பிறப்பிக்கவேண்டி "ஜாதி உபயோகமற்றது, பக்தியே சிறந்தது" என்று நிரூபித்தருளினர்களே தவிர இக்காலத்தவர்களுடைய எல்லைக் கடந்த க்ஷேப ப்ரவ்ருத்திகளுக்கு இடம் கொடுக்கும்படியான ஒரு வார்த்தையும் ஸ்ரீ வசநபூஷணத்திலாவது ஆசார்ய ஹ்ருதயத்திலாவது கிடையாது. இந்த க்ஷேபங்களைக் கண்டிக்கும்படியான திருவாக்குக்களே தென்னாசார்ய திவ்ய க்ரந்தங்களில் மலிந்துள்ளன.

66. "ச்ருதிஸ் ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா யஸ்தாமுல்லங்க்ய வர்த்ததே, ஆஜ்ஞாச்சேதீ மம த்ரோஹீ மத்பக்தோபி ந வைஷ்ணவ:" *என்கிற பகவானுடைய தூய் வாய்மொழியை அடிக்கடி எடுத்தாண்டு வருகின்ற நம் பூருவாசாரியர்கள் எம்பெருமானது ஆணையாகிய ச்ருதி ஸ்ம்ருதிபத்ததியை க்ஷேபம் செய்ய ஒருபோதும் நெஞ்சிலும் நினைத்தவர்களல்லர். மேலே உதாஹரித்த ச்லோகத்தின் பொருளை ஒவ்வொருவரும் திடமாக நெஞ்சிற் கொள்ள வேணும். அது வடமொழி பயிலாதவர்க்குங்கூட எளிதில் பொருள் படும்வகையில் அமைந்துள்ளதாதலின் அதன் பொருளை நாம் விவரித்துரைக்க வேண்டாவாயிருந்தது.

67. "பக்திரஷ்டவிதா ஹ்யேஷா யஸ்மிந் ம்லேச்சேபி வர்த்ததே, தஸ்மை தேயம் ததோ க்ராஹ்யம் ஸச பூஜ்யோ யதா ஹ்யஹம்." * என்று பகவான்தானே யருளிச் செய்திருப்பதையும், இதையுட்கொண்டே ஆசார்ய ஹ்ருதயத்திலும் "ம்லேச்சனும் பக்தனானால்........பாவந தீர்த்த ப்ரஸாதனும் என்கிற திருமுகப்படியும்" என்றருளிச் செய்திருப்பதையும் வலிதாகப் பிடித்துக்கொண்டு சிலர் குதர்க்கங்கள் செய்வது பயனற்றது. மேற்குறித்த ப்ரமாணங்களை இல்லைசெய்வாராருமில்லை. அந்த பகவதுக்தியில் மத்பக்த ஜநவாத்ஸல்யம் என்று தொடங்கி எட்டு விதமான பக்தி சொல்லப்பட்டு அப்படிப்பட்ட பக்தியை யுடையவர்கள் விஷயத்தில் குலதெய்வத்தோடொக்கப் பூஜை புரியவேணுமென்று சொல்லப்பட் டிருக்

கின்றது. ஒரு ராஜத்வாரத்தில் "சதுச்சாஸ்த்ர வித்வான்களுக்கு இங்கே ஆயிரம் பொன் பரிசளிக்கப்படும்" என்று பலகை போட்டிருந்தால், அதில் 'ஆயிரம் பொன் பரிசளிக்கப் படும்' என்பதை மாத்திரம் பார்த்து விட்டு கண்டவர்களும் உள்ளே புகுந்து மடியேற்க முடியுமோ? சாஸ்த்ராதிகாரிகளன்றோ அங்குப் புகமுடியும். அஷ்டவித பக்தி யென்றால் இன்னது என்றுகூட அறியகில்லாதவர்கள் 'நாங்கள் மஹா பக்தர்கள்' என்று சொல்லிக் கொள்வதும், அன்னவர்களைக் குறித்துச் சிலர் பக்திப்ரசம்ஸை பண்ணுவதும் மிக ஆச்சர்ய மான விஷயம். இது ஒருபுறமிருக்க, தீண்டாதார்க்கு ஆலயப் பிரவேச அனுமதி யளிக்க வேணு மென்று விரும்புகின்றவர்களில் ப்ராஹ்மணர்களும் பலர் சேர்ந்தவர்களல்லவா? அவர்கள் வைதிக ச்ரத்தையை விடாமல் ச்ராத்தம் முதலானவற்றை நாளைக்கும் செய்து வருகிறார்க ளல்லவா? பக்திமான்களென்று தாங்கள் கொண்டாடும் தீண்டாதவர்களில் இரண்டொருவரை * ச்ராத்தத்தில்நிமந்த்ரித்து தத் பாதாம்பு அதுலம் தீர்த்தம் தஸ்யோச் சிஷ்டம் ஸுபாவநம்* என்கிற சாஸ்த்ரார்த்தத்தை முந்துற முன்னம் தாங்கள் அனுஷ்டித்து உய்வு பெறலாமே. இப்படி ஒருவரும் செய்து போரக் காண்கின்றிலோமே. 'விசேஷ க்ருத்யங்களுக்கு விசிஷ்டசிஷ்டர்களே அர்ஹதை யுள்ளவர்கள்' என்கிற கொள்கை அவர் களுக்கே மாறவில்லையே.

68. V. B. தினமணி வியாஸத்தில் "சாஸ்திர ஆதாரமில்லை" என்றொரு மகுடமிட்டு அதன் கீழ் எழுதியுள்ளார்—" உண்மையில் நம் சமூகத்தில் கூத்தாடி வந்திருக்கும் தீண் டாமை சாஸ்திரங்களில் சொல்லப் பட்டதன்று. விசால மனதையும் உயர்ந்த நோக் கத்தையும் படைத்த நம்முடைய மதகர்த்தர்கள் இத் தீண்டாமையை ஏற்படுத்தவுமில்லை; அங்கீகரிக்கவுமில்லை. இது அப் பெரியோர்களின் கொள்கைகளுக்கும் உபதேசங்களுக்கும் முற்றிலும் மாறானது. ஞான ஸங்கோசத்தாலும் துர்ப்புத்தியாலும் மத்ய காலத்தில் ஏற்பட்டதே தவிர வேறில்லை" என்று.

69. இந்த வார்த்தைகளால் பாமரர்களும் ஏமாற்றமடையார்கள். ஆனால் இவருடைய இந்த வார்த்தைகளில் ஒன்று மிகவும் மெச்சத் தகுந்தது. "தீண்டமையானது சாஸ்த் ரங்களில் குருட்டுத் தனமாகச் சொல்லப் பட்டது" என்றிவர் சாஸ்த்ரங்களையும் சேர்த்து தூஷித்து விடாமல் சாஸ்த்ரங்களுக்கு கௌரவம் கொடுத்து எழுதியிருக்கிறாரே, அது உகக் கத் தக்கதே. தீண்டாமையைப் பற்றிச் சொல்லாத சாஸ்த்ரமே கிடையா தென்று பிராமாணிகர்கள் எடுத்துக்காட்டிவிட்டால் பிராமாணிகரானவிவர் ஒப்புக் கொண்டு கைகூப்பி நிற்கக் கூடியவரே யென்று விளங்கி விட்டது. ஒரு மஹாபண்டிதர் பகவத் கீதையில் க்ருஷ்ண: என்கிற பதம் வருகிறதே யொழிய ராம: என்கிற பதம் வருவது கிடை யாதென்றும் அது வருவதற்கு ப்ரஸக்தியே யில்லை யென்றும் சொன்னால், கீதையில் அந்தப் பதம் வருமிடத்தை யெடுத்துக் காட்டி விட்டால் அவர் ஜிதோஸ்மி யென்று சொல்லி வணங்க வேண்டியது தவிர வேறில்லை. * ராமச் சஸ்த்ர ப்ருதாமஹம் என்று கீதையில் ஸ்பஷ்ட மாக இருப்பதை யெடுத்துக் காட்டியான பிறகு 'இந்த ச்லோகம் கீதையிலுள்ளதன்று, நுழைத்தது' என்றோ 'இதை நான் ஒப்புக் கொள்ள முடியாது' என்றோ அவர் சொன்னா ராகில் அவரை எந்த கோஷ்டியில் சேர்க்கவேணுமென்பதை V. B. தாமும் நன்கறிவா ரன்றோ. அது போல சாஸ்த்ரங்களில் தீண்டாமையும் தீண்டாதாருடைய ஸம்பர்க்கம் ஏற்பட்டால் செய்ய வேண்டிய பிராயச்சித்தங்களும் சொல்லப் பட்டிருப்பதை நாம் எடுத்துக் காட்டி விட்டால் இவர் என்ன செய்ய வேண்டியவர்? சாஸ்திர ஆதாரமில்லை யென்ற மருளை மாற்றிக்கொள்ள வேண்டியவர். சாஸ்திர ஆதாரங்களை இதன் முடிவில் தனிப்பட நிரூபித்திருக்கிறேன்.

70. ஆகவே தீண்டாமைக்கு சாஸ்திர ஆதாரமில்லை யென்று இவரெழுதியது பிசகு என்று முடிந்தது. "விசாலமனதையும் உயர்ந்த நோக்கத்தையும் படைத்த நம் மதகர்த்தர்கள் இத் தீண்டாமையை ஏற்படுத்தவுமில்லை, அங்கீகரிக்கவுமில்லை" என்கிறரே; இதற்கு நேர் நின்று ஸரியான பதில் சொல்லுவரா: மதகர்த்தாக்களென்று இவர் கருதுவது யாரை? பெயரைக் குறிப்பிடாமல் பொதுவாகச் சொல்லுவது வஞ்சகமன்றோ. காந்திஜீ, C. R போல்வாரையே இவர் மத கர்த்தர்களாகக் கருதி யெழுதுகின்றார் போலும். சாஸ்த்ர காரர்கள் என்று அனைவரும் இசைய நின்ற மஹர்ஷிகள் தீண்டாமையையும் அதன் விலக்கையும் ஸ்பஷ்டமாகக் கூறியிருக்க, அதற்குமுரணுகஇவர்எழுதுமதுவஞ்சகமேயாகும்.

71. இவர் சில பிரஸங்க மேடைகளில் நின்று ஸ்ரீ ராமாநுஜர் பிள்ளை லோகாசார்யர் போன்ற ஸ்ரீ வைஷ்ணவ ஆசாரியர்களை விசால மனம் படைத்தவர்களாகக் கூறி அவர்கள் தீண்டாமையை ஸஹித்திருந்தவர்களல்லர் என்று கூறுவதுண்டாதலால் இங்கு இவர் மத கர்த்தாக்களென்று அவ்வாசிரியர்களையே நினைக்கிறார் என்று எண்ண இடமுள்ளது. அப் பேராசியர்கள் வர்ணுச்ரம வரம்பையோ சாஸ்திர மரியாதைகளையோ சிறிதும் கடந்தவர் களல்லர் என்பதை மிகவும் விரிவாக நிரூபித்திருக்கிறேன். அவர்களுடைய காலத்தில் தீண் டாமை ஒழுங்காகப் பரிபாலிக்கப்பட்டே வந்த தென்பது மறுக்கமுடியாதது.

72. திருப்பாணுழ்வார் ஸ்ரீ ராமாநுஜருடைய காலத்திற்கு மிக முற்பட்டவர். அவர் தம்முடைய குலத்திற்குத் தக்கபடி ஒதுங்கியே வாழ்ந்திருந்து வழிபாடுகள் செய்து வந்தவ ரென்பது சரித்திர நூல்களால் சிறிதும் அசைக்க முடியாதபடி தெரியவருகிறது. அவர் பரமவிலக்ஷணரான அவதார புருஷர் என்பதையும் மற்ற சாமானியர்களோடொக்க நினைக்கத் தகாதவர் என்பதையும் பகவான் உலகுக்குக் காட்டவேண்டிச் செய்தருளின காரியம் வேறெரு வ்யக்தியினிடத்திலும் நடந்ததன்று. கோவிலுக்குள் அவர் காலால் நடந்து செல்லவுமில்லை; உள்ளே சென்றவர் திரும்பி வெளியில் வரவுமில்லை. ஸ்ரீ ரங்கநாதருடைய திருமேனியிலேயே ஐக்கியப்பட்டு விட்டாரென்று உள்ளது. அப்படிப்பட்ட பிரபாவ விசேஷம் இப்போது யாரிடத்திலும் இருக்க முடியாதென்று நாம் நினைக்கவில்லை. இருக்க லாம். அப்படிப்பட்டவர்கள் திருப்பாணுழ்வார் போல் பகவத் பாகவத மூலமாக மேன்மை பெறுவார்களாகில் அதை யார் தடுக்க முடியும்? அவ்வாழ்வார் லோகஸாரங்க மஹா முனி யின் வாயிலாக பகவானுடைய நியமனத்தைப் பெறுவதற்கு முன்பு ஸ்ரீரங்க வீதிகளிலாவது உலாவின துண்டோ? அப்போது தீண்டாமை பரிபாலிக்கப்பட்டுத்தான் வந்த தென்பதை இவரும் ஒப்புக்கொண்டு தீரவேண்டுமே.

73. அடுத்தபடியாக ஸ்ரீ ராமாநுஜர் காலத்திலும் தீண்டாமை இருந்து வந்த தென் பதை இவர்களே கூறும் இதிஹாஸம் கல்வெட்டாகக் காட்டுகின்றது. நானைக்கும் ஒவ் வொரு கோவிலிலும் *ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாம் அபிவர்த்ததாம்* என்று போற்றப்பட்டு வருவதால் ஸ்ரீராமாநுஜரே ஸகல திவ்ய தேசங்களையும் சீர்திருத்திச் சிறப் புறச் செய்தருளினவர் என்று புலப்படுகிறது. அப்படிப்பட்ட ராமாநுஜர் ஒரு ஆலயத்தி லாவது தீண்டாதார் பிரவேசத்தை அனுமதித்ததுண்டோ? அனுமதித்திருந்தால் அது அப்படியே பரம்பரையாக நடந்துவரத் தடையிராதே. கர்ணுடக தேசத்தில் குறிப்பிட்ட வொரு காலவிசேஷத்தில் காரணுர்த்தமாக அனுமதித்து உடனே ஏராளமான பிராயச் சித்தங்களையும் செய்வித்து வருவதானது விவேகிகளால் ஆராயப்பட்டால் தீண்டாமை யொழிப்பு ராமாநுஜருக்கு அபிமதம் என்று வாய்திறக்கவும் வழியுண்டோ?

74. தீண்டாதார் ஆலயத்தினுள் ப்ரவேசிப்பதனால் ஒரு கெடுதலுமில்லை யென்றும் இதனால் மூர்த்திகளில் பகவானுடைய ஸன்னிதானத்திற்கு ஒரு குறைவும் ஏற்படமாட்டாதென்றும், இப்படிப்பட்ட அற்ப காரணங்களினால் பகவானுடைய சக்தி போய்விடுமென்றால் இது பகவானிடத்தில் நம்பிக்கையில்லாதவர்களின் துர்ப்புத்தியினாலாகிய வார்த்தையேயாகுமென்றும் இவரைப்போன்றவர்கள் பேசுவதும் எழுதுவதும் மிகவும் தவறு. இதற்கு நம்முடைய பதிலை நன்றாக கவனிக்கவேண்டும். ஒரு கோவிலில் கோபுரத்திலும் மதிள்களிலும் மண்டபங்களிலும் கணக்கில்லாத பகவத் பிம்பங்கள் அநாதியாகவுள்ளன. அந்த பிம்பங்களில் யாரும் யாதொரு வழிபாடும் செய்வதில்லை, தொழுவதில்லை. கை கூப்புவதுமில்லை, வெறுமனே வேடிக்கைபார்ப்பதற்கு மாத்திரமே அவை உபயோகப்படுகின்றன. எந்த பிம்பங்களை நாம் அநாதியாகத் தொழுதுவருகிறோமோ அவற்றில் மாத்திரமே பகவானுடைய ஸன்னிதானமுள்ளதென்றும் சக்தியுள்ளதென்றும் நம்பியிருக்கிறோம் இது எதனாலேயென்பதை ஆராய்ந்து பார்க்க அதிகமான புத்தி வேண்டியதில்லை. பாஞ்சராத்ரம் ஆகமம் என்னப்படுகிற சாஸ்த்ரங்களை யொட்டியும் பெரியார்களுடைய நடவடிக்கைகளைப் பின் பற்றியுமே ஒவ்வொருவருடைய நம்பிக்கையுமுள்ளது. சாஸ்த்ரங்களில் ப்ராயச்சித்தங்களுக்கு நிமித்தங்கள் பல பல கூறப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு ஸம்ஹிதையாக எடுத்துக்கொண்டு அட்டவணைகளை மாத்திரம் வாசித்துப் பார்த்தாலும் அவை தெரியவரும். அந்த சாஸ்த்ரங்களைத் தழுவியே நாளதுவரையில் யாவரும் நடந்து வருகிறார்கள்.

75. பஞ்சமர்கள் கிடக்கட்டும். நமக்கே ஒரு ஜனன மரணத்தீட்டுவந்து அத்துடன் நாம் கோவிலுக்குள் சென்றுவிட்டால் ப்ராயச்சித்த ஸம்ப்ரோக்ஷணை நடக்கும்வரையில் பகவானைத்தொழுவதற்கு யாரும் செல்வதில்லை. அப்போது பகவானுடைய ஸன்னிதானம் அங்கு இல்லை யென்பது தானே அர்த்தம். சாஸ்த்ரமே கைவிளக்காக அறியவேண்டிய விஷயங்களில் எவ்விதமான குதர்க்கங்களையும் செய்வதற்கு யார்க்கும் அதிகாரமில்லை. இவ்விஷயங்களைப்பற்றி நாம் அடுத்த அத்யாயத்தில் விரிவாகப் பேசுவோம்.

76. கீழே விவரிக்கப்பட்டபடி சாஸ்த்ரங்களும் பெரியார்களுடைய நடவடிக்கைகளும் குருட்டுத்தனமாக ஏற்பட்டவையென்று உடனே கூசாது சொல்லிவிடவும் இவர்கள் துணிந்தவர்களே என்பதை நாம் அறிவோம். அதைப்பற்றி நமக்கு வருத்தமில்லை; இந்த வாதம் செய்பவர்கள் விக்ரஹபூஜைகளே—ஆலய வழிபாடுகளே குருட்டுத்தனமாக ஏற்பட்டவைகளென்று தெளிந்து ஆலயங்களைப் பற்றின ஞாபகமே யில்லாதவர்களாகவன்றோ இருக்கவேண்டும். அங்கு பகவானுடைய ஸன்னிதானமுள்ளதென்று இவர்களும் நம்புகிறவர்களாக இருந்தால் இதுவரையில் எவ்வழியான நம்பிக்கை எல்லாராலும் பாராட்டப்பட்டு வந்திருக்கிறதோ அவ்வழியான நம்பிக்கைக்கு எவ்விதமான லோபமும் செய்யக்கூடாதென்பது கல்வெட்டு. ஒரு மருத்துவனிடம் மருந்து கொண்டால், அது நமக்குப் பயனளிக்க வேணுமானால் அவன் சொல்லுகிற முறைகளை யெல்லாம் நாம் கைப்பற்றியாக வேண்டி யிருக்கிறதன்றோ. சிறிது தவறினாலும் பயனில்லாமற் போவதோடு விபரீதமுமாகிறதன்றோ? அது போலவேதான் பகவானும். "மனுசொன்னதெல்லாம் மருந்து." என்றன்றோ பழமொழி.

77. எதிலும் தாம் நம்பிக்கை யில்லாதவர்களென்று வாய்விட்டுக் கூட்டந்தோறும் கூப்பாடு போடுமிவர்கள் நம்பிக்கை யுள்ளவர்களான பல கோடி நூறாயிரம் ஜனங்கள் வயிறெரியும் படியாகவும் கண்ணீர் பெருக நின்று கதறும்படியாகவும் நடந்து கொள்வது தகுமோ? **தகாது தகாது தகாது.**

78. தங்கள் கையில் கேட்பாரற்ற சுதந்திரமோ அதிகாரமோ இருக்கிறதென்று இப்படி படுகொலையடிப்பது தகுதியோ? முறையோ? நியாயமோ? தருமமோ? தகவோ? நம்முடைய மதத்திற்கு மிகவும் புறம்புபட்டவர்கள்—வெகு தூரத்திலுள்ளவர்கள் கூட இத்தகைய தர்ம த்ரோஹங்களைச் செய்யவில்லை, செய்ய நினைக்கவுமில்லை. அவர்கள் தங்களாலியன்ற வுதவிகளையுஞ் செய்து நமது மதக் கோட்பாடுகட்குக் காப்பே செய்து வந்தார்கள்.

79. தீண்டாதாருடைய ஆலய ப்ரவேசங்களை பலாத்காரமாகச் செய்யவில்லையென்றும் பொது ஜனங்களுடையவும் ஆலய அதிகாரிகளுடையவும் சம்மதியைக் கேட்டுப் பெற்றே செய்து வருகிறோமென்றும் இவர்கள் சொல்லுவார்களேல், இது மனச் சாட்சிக்கு மாறான வார்த்தையே யாகும். கோவில் டிரஸ்டிகள் தாங்கள் ஏகதேசத்தில் அபிப்ராயங் கொடுக்க அதிகாரமற்றவர்கள். (கடலூர் ஜில்லா) திருவஹீந்திபுரம் தேவஸ்தான ட்ரஸ்டிகள் அச்சிட்டு வெளியிட்டிருக்கிற மறுப்பு எங்கும் பரவியுள்ளது. அது எவ்வளவு அமைதியாகவிருக்கின்ற தென்பதை விவேகிகள் உணர்வார்கள். ஒவ்வொரு கோவில் ட்ரஸ்டிகளும் அப்படிப்பட்ட பதிலைத் தெரிவிப்பதன்றோ யோக்யமானது. அச்ச முறுத்துதல் முதலிய வழிகளினால் டிரஸ்டிகளை வசப்படுத்தியும் ஆயுதபாணிகளான ரிஸர்வ் போலீஸ் அதிகாரிகளைக் கொண்டு தெருவடைத்து வழியடைத்து பஹிரங்கமாகச் செய்த அநீதிகள் பகற்கொள்ளைக்குச் சமமானவை யென்பதை நெஞ்சார அறிந்திருந்தும் வேறுவகையாக வெளியிட்டு வருவது வஞ்சகம். இது புதிய காரியமென்பதும் தப்பான காரியமென்பதும் உலகமே தலை கீழாவதற்கு ஹேதுவான காரிய மென்பதும் இவர்களுடைய நெஞ்சுக்குத் தெரியாத தன்று. நன்றாகத் தெரிந்தும் பலவகையான கெட்ட எண்ணங்களை நெஞ்சிற் கொண்டு, காசுக்குமுதவாத குதர்க்கங்களைச் செய்து கொண்டு வீண் பிடிவாதமாகவே நடத்தி வருகிறார்களென்பது ஸ்பஷ்டம். இவ்விஷயத்தில் அபிப்ராயம் கொடுக்கக் கடமைப்பட்டவர்கள் மடாதிபதிகளும் வித்வான்களும் தினப்படியாகக் கோவில்களில் வந்து தொழும் பக்தர்களும் அர்ச்சக பரிசாரகாதி மிராசுதாரர்களும் தீர்த்தகாரர்கள் முதலிய ஸ்தலத்தார்களும் உபயங்கள் நடத்திவரும் பக்தர்களுமே யாவர். இப்படிப்பட்டவர்கள் எங்கும் இவ்வநீதிச் செயலுக்குச் சம்மதியளிக்கவுமில்லை ; அளிக்கவும் மாட்டார்கள். சில வழிப்போக்கர்களின் அபிப்ராயம் இதில் என் செய்ய ? மிகவஞ்சகமான வழியன்றோ இவர்களது.

80. பஞ்சமர்களை ஆலயப் பிரவேசம் பண்ணி வைக்காவிடில் அவர்கள் புறமதங்களிற் சார்ந்து விடுவார்களென்றும் இந்து மதத்தினரின் லக்கம் வரவரக் குறைந்து விடுமென்றும் இதையே இவர்கள் பெரிய காரணமாகக் கூறுகின்றார்கள். நம் வீட்டிற் பிறந்த பிள்ளைகள் வேசிகளின் வீடுகளிற் சென்று பணத்தை வீணாகச் செலவழித்து விடுகிறார்களென்று கண்டு அதைத் தடுக்க வேண்டி நம் வீட்டிற்பிறந்த பெண்களையே அப்பிள்ளைகளுக்கு மனைவியராக்கிவிடுவோம் ; இப்படியாயின் பணமும் நம் வீட்டைவிட்டுப் பெயராமலிருக்கும் என நினைப்பது போலவே இதுவுமொன்று. தகுதியல்லாத செயலைச் செய்வித்து அதனால் ஒரு நன்மையைத் தேடிக்கொள்ள நினைப்பது புத்திமான்களின் பணியாகுமோ? சாஸ்த்ர வரம்பு எப்படிப்பட்டதென்கிற ஆராய்ச்சியே நமக்கு வேண்டா. இவ்வுலகில் தொன்று தொட்டு நடந்துவரும் ஆசார வரம்புகள் ஒருவரால் அழிக்கக் கூடியனவாகுமோ? அதர்க்கணமாக தங்களிடத்துள்ள மிடுக்கின் செருக்கினால் அழிக்கப் பார்த்தால் இது தேசத்திற்குப் பெருங் கேடாகவே விளையுமென்பதில் என்ன சந்தேகம்? எதையும் அனுபவத்திற் காணநேரும்.

81. நம் வீட்டில் பிறக்கும் பெண்களை அசல் வீடுகளில் மணம் புரிவித்துக் கொடுப்பதும் அவ்வீடுகளில் அப்பெண்கள் பலவகைக் கஷ்டங்களை யடைந்தும் மாமியார் மாமனா

ரிடங்களில் அடிபட்டும் கண்டாரிகழ்வனவே காதலன் தானும் செய்யப்பெற்றும் வருந்தும்
படியாகப் பார்த்துக் கொண்டிருப்பதும், நாம் சிரமப்பட்டு ஈட்டின பொருள்களை அவ்வயல்
வீடுகளில் அநாவச்யகமாகப் புகவிடுவதும் எதற்காக ? நமது பெண்களை நமது வீடுகளிலேயே
யிருத்த வேண்டியதுதான்......என்று இப்படி யெல்லாம் நினைத்து இவ்வண்ணம் ஜனங்களைக்
கட்டுப்படுத்தும் ஆக்டுகள் தோன்றினாலும் அற்பர்களான நாம் அழுவதும் அலற்றுவதுந்
தவிர வேறு என்ன செய்யகிற்போம். * அரணமாவர் அற்றகாலைக் கென்று அமைக்கப்
பட்டவர்களே விபரீதமானால் என் செய்வோம் யாம் ? வேலியே பயிரை மேய்கிறதே !

82. தெய்வமே கிடையாது, தேவாலயங்களும் வீண்; கோவில்களை யெல்லாம் வயல்
களாகவோ ஆஸ்பத்திரிகளாகவோ வேறு கட்டிடங்களாகவோ மாற்றவே வேண்டுமென்று
முடிவு செய்தாலும் நாம் என்ன செய்யப்போகிறோம். தெய்வமே கண்திறந்து பார்க்குங்
காலம் குறுகாதோ வென்று இந்த வொரு நம்பிக்கை கொண்டே பரம ஆஸ்திகர்கள் உயிர்
மாயாது வாழ்ந்திருக்கின்றார்கள்.

83. தலைதான் பூச்சூடவேணு மென்றும் கால்தான் நடக்கவேணுமென்றும் என்ன
ஏற்பாடு ! வாய்தான் உண்ணவேணு மென்றும் மற்றொன்றுதான் மற்றொன்று செய்ய
வேணுமென்றும் என்ன ஏற்பாடு ? இதுவரையில் நடந்தவிதம் போதும் ; இனி வேறு
விதமாக மாற்றி லோக யாத்திரையை நடத்துவோம் என்று துணிந்து கால்களில் பூச்சூடவும்
ஆஸனவாயினால் அன்னபானங்கள் கொள்ளவும்...........இப்படிப்பட்ட பலபல சீர்திருத்தங்
களைச் செய்யவும் இந்த மஹான்கள் முற்படுவர்கள் போலும். எதுதான் செய்ய முடியாது.

## முடிவுரை

84. இந்தியாவில் பெரும்பான்மையோர் சைவம் வைஷ்ணவம் சாக்தம் என்கிற மதங்
களைத் தழுவினவர்கள். சைவ வைஷ்ணவங்களே பிரபலமானவை. இம்மதத்தினர்க்கு
வேதம் பாஞ்சராத்ரம் ஆகமம் ஸ்மிருதி இதிஹாஸ புராணங்கள் பிரமாணமானவை. பௌத்
தமதம் வேதசாஸ்திர புராண ஆகமாதிகளுக்குப் புறம்பானது. அதைச் சார்ந்தவர் காந்திஜீ.
அரசியல் முதலிய பொதுநன்மைகளில் மாத்திரம் நம்முடைய மதத்திற்கு பாதகமல்லாத
மொழிகளைக் கேட்கலாமேயொழிய நமது மதத்திற்கு விரோதமானவைகளை அவரிடமிருந்து
கேட்பதும் அப்படியே நடத்த முயல்வதும் தவறு. இப்போது காங்கிரஸ் கட்சிக்காரர்கள்
நம்முடைய மதத்தையே மாற்ற முற்பட்டு நம்மை ஏமாற்றுகிறார்கள். இவர்களுடைய
கொள்கைகளெல்லாம் பச்சையாகவே சாஸ்திரவரம்புகளை மீறினவை என்பதை உணர அதிக
மூளை வேண்டுமோ? ஸகோத்ரவிவாஹம் கலப்புமணம் விதவாவிவாஹம் ஸ்த்ரீகளுக்கு ஸம
வுரிமை பஞ்சமர்களை ஆலயங்களில் பிரவேசிப்பித்தல் இவைபோல்வன பல. இவர்கள் இப்
படிச்செய்வதைவிட, லீக் மதத்திலேயே நாமெல்லோரும் சேர்ந்துவிட்டால்.............என்று
இத்தகைய பிரஸங்கங்களைச்செய்து வெற்றி பெறுவது மிக நன்று. மற்றும்பல விஷயங்களை
அடுத்த அத்யாயத்தில் விவரிப்போம்..... ... .... .... ... .... .... .... ... .... ...

காஞ்சீபுரம்
அண்ணங்கராசாரியர் எழுதிய
**தீண்டாமைதொலையாமையின்**
முதல் அத்யாயம்
முற்றிற்று.

யாய் விட்டதே யென்னில்; இப்படிப்பட்ட தான்தோன்றி ஏற்பாடுகள் யதேஷ்டமாகப் பலவும் செய்யலாம். பிச்சைக்காரர்கள் யாவரும் பணக்காரர்கள் வீட்டினுள் புகுந்து பகற் கொள்ளையும் இராக் கொள்ளையும் அடிக்க வேண்டியதென்று சட்டம் பண்ணினாலும் தடை செய்வாரார்? சாஸ்த்ரங்களின் கோட்பாட்டையும் நியாயத்தையும் எடுத்துக் காட்டவே இங்கு நாம் வந்தோம். சாஸ்திரப்படி அநாதிகாலமாக வெறுக்கப்பட்ட பஞ்சம—சண்டாள ஜாதி யுண்டென்பது அசைக்கமுடியாதது. ஒவ்வொரு சாஸ்த்ரத்திலும் * ஸத்யச் சண்டாளதாம் வ்ரஜேத் * என்கிற வார்த்தை பன்முறையும் காணப்படுகிறது. த்ரிசங்கு என்கிற க்ஷத்ரியன் ஆசார்யாவமானமாகிற அதிபாபத்தைப் பண்ணின காரணத்தினால் சண்டாளனாகும்படி சாபம் பெற்றதாக ஸ்ரீ ராமாயணத்தில் ஸ்பஷ்டமாகக் காணப்படுகிறது. இவற்றின் தாற்பரியம் என்னவென்பதை விமர்சிக்க V. B. அசக்தரோ? இந்த சாஸ்திரங்களெல்லாம் கட்டுக்கதைகள் என்கிறோமென்னில்; இது வழியைவிட்டு விலகிச் செய்யும் வாதமாகும். ஏனென்றால், தீண்டாமைக்கு சாஸ்த்ராதாரம் கிடையவே கிடையாதென்று எழுதினவிவர் சாஸ்த்ரங்களை யொப்புக்கொண்டவரே யாதலால், நாம் சாஸ்த்ரம் காட்டியான பிறகு "சாஸ்த்ரங்களெல்லாம் கட்டுக்கதைகள்" என்று சொல்வது நியாயமற்றதே யாம்.

இனி, பஞ்சமர்களிடம் தீண்டாமையை எவ்வளவு பரிபாலிக்க வேணுமென்பது பற்றியுள்ள சாஸ்த்ரங்களையும் காட்டுகிறோம். "யுகம் யுகத்வயஞ் சைவ த்ரியுகஞ்ச சதுர்யுகம், சண்டாள ஸூதிகோதக்யா பதிதாநாம் அத: க்ரமாத்." என்பது பராசரஸ்மிருதி வசனம். ப்ரஷ்டர்களுக்கு ஒரு நுகத்தடி தூரமும், ரஜஸ்வலைகளுக்கு இரண்டு நுகத்தடி தூரமும், பிரஸவித்தவர்களுக்கு மூன்று நுகத்தடி தூரமும், சண்டாளர்களுக்கு நான்கு நுகத்தடி தூரமும் ஒதுங்க வேணுமென்று இவ்விஷயம் பல ஸ்மிருதிகளில் ஒரேவிதமாகச் சொல்லப் பட்டிருக்கிறது.

கோவில்களில் சண்டாள ஸ்பரிசம் நேர்ந்து விட்டால் அதற்காகச் செய்ய வேண்டிய சடங்குகளைப் பாஞ்சராத்ரஸம்ஹிதைகள் பலவும் கூறியிருக்கின்றன. மிகவும் ப்ரஸித்தமான ஈச்வர ஸம்ஹிதையில் 19 ஆவது அத்யாயத்தில் 677 ஆவது சுலோகம் முதலாக—"அஸ்ப்ருச்யைச் சாபி ஸம்ஸ்ப்ருஷ்டே உதக்யா ஸூதிகாதிபி:, சண்டாளைர் வா ஸங்கீர்ணே ஸ்ப்ருஷ்டே ஸூதகிபிர் நரை:—ஸர்வாங் கும்பாங் பரித்யஜ்ய........." இத்யாதிகள் காண்க. சண்டாளர்களும் மற்றுள்ள தீண்டாதாரும் அருகே வந்தாலும் தொட்டாலும் சட்டிபானைகளை யெல்லாமெடுத் தெறிந்து புதிய பாத்திரங்கள் சேகரித்து பிறகு செய்யவேண்டிய பிராயச்சித்தங்களும் சொல்லப்பட்டிருக்கின்றன.

ஸ்ரீ ப்ரச்நஸம்ஹிதையில் 50-வது அத்யாயத்தில் 170-வது சுலோகம் முதல் காண்க; "சண்டாள புல்கஸௌ வாபி........ம்லேச்சோ வா ப்ரவிசேத் அந்த:........ஸம்ப்ரோக்ஷணம் தத: குர்யாத் சாஸ்த்ர த்ருஷ்டேந வர்த்மநா." என்றுள்ளது. மேலே 186-வது ச்லோகம்—"ப்ரதமாவரணாத் தேவி! த்வஜஸ்தம்பாவஸாநகம். சண்டாளாதிஷு யாதேஷு நவபி: கலசைர்ஹரிம்." என்பது முதலியவற்றால்—தீண்டாதார் த்வஜஸ்தம்பம் வரையில் வந்துவிட்டாலும் சாந்தி ஹோமம் முதலானவை செய்யும்படி விரிவாகச் சொல்லப்பட்டுள்ளது. பாத்ம ஸம்ஹிதையில் சர்யாபாதத்தில் இன்னமும் விரிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது. தற்காலம் இவை சுருக்கமாகத் தெரிவிக்கப்பட்டன. அவசிய மேற்படும்போது விரிவாக எடுத்துக் காட்டுவோம்.

P. B. Annangaracharyar, Conjeeveram.

ஸ்ரீ

# ஆழ்வாராசாரியர்கள் திருவடிகளே சரணம்.

---

தமிழ் வேதமென்று போற்றப்படும் திவ்யப்பிரபந்
தங்களிற் பாடங்களைத் திருத்தியும் திவ்யப்ரபந்
தவ்யாக்யானப் பேராசிரியர்களைத் தமிழ்
அறியாதாரென்று நிந்தித்தும் சிலர்
எழுதி வெளியிட்ட சுவடியை
ஆராயத் தோன்றிய நூலிது.

---

## 1. நான் கண்ட நல்லது.

## 2. திவ்யார்த்த தீபிகைச் சிறப்பு.

(ஸ்ரீ ராமாநுஜன் வெளியீடு.)
கிடைக்குமிடம்; க்ரந்தமாலா ஆபீஸ்

சின்ன காஞ்சீபுரம்.

விலை ஒரு ரூபா.

1949.

Wrapper Printed at The Model Press Madras—1

ஸ்ரீ

ஆழ்வாராசாரியர்கள் திருவடிகளே சரணம்.

---

தமிழ் வேதமென்று போற்றப்படும் திவ்யப்பிரபந்தங்களிற் பாடங்களைத் திருத்தியும் திவ்யப்ரபந்தவ்யாக்யானப் பேராசிரியர்களைத் தமிழ் அறியாதாரென்று நிந்திக்கும் சிலர் எழுதி வெளியிட்ட சுவடியை ஆராயத் தோன்றிய நாலிது.

---

# 1. நான் கண்ட நல்லது.

# 2. திவ்யார்த்த தீபிகைச் சிறப்பு.

(ஸ்ரீ ராமாநுஜன் வெளியீடு.)
கிடைக்குமிடம்; க்ரந்தமாலா ஆபீஸ்

சின்ன காஞ்சிபுரம்.

விலை ஒரு ரூபா.

1949.

## முக்கியமான அறிவிப்பு

இப்போது நாம் ஆராய்ச்சி செய்ய எடுத்துக்கொண்ட நூலில் இரண்டு குற்ங்கள் மிகப்பெரியன; அவையாவன—திவ்யப்பிரபந்தங்களுக்கு வியாக்கியானங்கள் செய்தருளின பூருவாசாரியர்களைத் தமிழறியாதாரென்று பல விடங்களில் பலவாறு ந்தித் திருப்பதொன்று. திவ்யப்ரபந்தப் பாசுரங்களிலுள்ள பாடங்களை மனம் பானபடி திருத்தி 'இப்படித்தானிருக்கவேண்டும், இப்படி யிருந்தால்தான் எதுகை மோனை நயம் சிறக்கும்' என்றெழுதி யிருப்பது மற்றொன்று. இவ்விரண்டு செயல் ளும் சிறிதும் அடாதவை என்பதை நாம் விரிவான நிரூபணங்களினால் தெரிவிப்பது வ்விர, கீர்த்தி மூர்த்தியான மஹாமஹோபாத்யாய. சாமிநாதையரவர்களின் கட்டுரை ளினாலும் உலக முகக்கத் தெரிவிக்கவேண்டி அவருடைய புத்தகத்திலிருந்து அருமையான இரண்டு கட்டுரைகளை யெடுத்து இங்குப் பதிப்பித்திருக்கின்றோம்.

சாமிநாதையரவர்களுங் கொண்டாட நின்ற பாண்டித்தியம் பெற்ற தியாக ாச செட்டியாரைத் தமிழுலகம் நன்கறியும். அவருடைய இரண்டு சரிதைகளை யெடுத்து உலகமெல்லாமறியக் காட்டியுள்ள சாமிநாதையரவர்களுக்கு திவ்யப்ரபந்த வியாக்கியானப் பேராசிரியர்களிடத்து இருந்த மதிப்பு அளவிட வொண்ணாதது ாிருக்கின்றது. நம்பிள்ளை முதலான அவ்வாசாரியர்களின் படிப்பின் அளவு சிறி தேனும் உலகுக்குத் தெரியாதென்பதும், அவர்கள் வடமொழி தென்மொழிகளிரண் டிலும் சிறந்த புலமையுடையவர்களென்பதும், அவர்களுடைய வியாகயொனங்களி னாலேயே திவ்யப்ரபந்தங்களுக்குப் பெருமை ஏற்பட்டதென்பதும் முதற் கட்டுரை யினால் விளங்கும். இதனால், அப்பேராசிரியர்களின் தமிழறிவில் குறைகூறி நிந்தித் தும், அவர்களது வியாக்கியானங்களினால் திவ்யப்ரபந்தங்களின் தமிழ்ப் பெருமை போய்விட்டதென்று தூஷித்து மெழுதுகின்றவர்கள் வீண்பொறாமையாளர்களே யென்பது தேறிநின்றது.

வேதங்களோடொத்த நூல்களில் பொருளின்பம் பிரதானமே யொழிய எதுகை மோனை முதலியவற்றின் நயம் அவசியமன்றென்றும் எதுகை மோனை நயத்தை விரும்பி ஆன்றோரது பாடங்களைத் திருத்துமவர்கள் போப்பையரிலக்கணம் படித்தவர்களேயாவர் என்றும் அன்னவர்களது முகத்தில் விழிப்பதுங்கூடப் பாவம் ன்றும் இரண்டாவது கட்டுரையினால் காட்டிநின்றபடியால் பிரகிருதத்தில் பூருவா சாரியர்களைவிடத் தம்மை மகாமேதாவிகளாக நினைத்து அவர்கள் உரையிட்டருளின பாடங்களிற் குறைகூறித் திருத்துமவர்கள் போப்பையரிலக்கணத்திற்குமேல் படி ாதவர்களென்பதும் அவர்களது சுவடியைப் பார்ப்பதுங் கூடப் பாவம் என்பதும் தேறி நின்றது. நூலினுள்ளே விரிவு காண்க.

---

ஸ்ரீமத்மகாமகோபாத்யாய. தாக்ஷிணாத்ய கலா நிதி. டாக்டர். உ,
வே. சாமி நாதையரவர்கள் 1939- ஆம்வருடத்தில் எழுதி அச்
சிட்டு வெளியிட்ட நல்லுரைக் கோவை நாலாம் பாகத்தில்,
வித்துவான் தியாகராச செட்டியார் அவர்களின் சரிதை
யெழுதிவருகையில் அதில் 159- ஆம் பக்கத்தில் ஆரம்ப
மாகி 163- ஆம் பக்கத்தில் முடிகின்ற ஓர்
பகுதி எடுத்து வெளியிடப்படுகின்றது.

"பிறருடைய குறையைக் கண்டவிடத்துக் கண்டிக்கும் இயல்புடைய தியாக ாச செட்டியார் தம்முடைய நிலையை நன்றாக உணர்ந்திருந்தார். தம்முடைய அள க்கு மிஞ்சிய காரியத்தைப் பிறர் வற்புறுத்தினாலும் செய்யார்; இது சிலரிடத்தில்

மாத்திரம் காணப்படும் அருமையான குணம். திருச்சிராப்பள்ளியிலும் வேறு இடங்களிலும் சிரஸ்தேதாராகவும் டிப்டி கலெக்டராகவும் இருந்து விளங்கிய திரு. பட்டாபிராம பிள்ளை யென்பவர் தமிழபிமானம் மிக்கவர்; தமிழ்ப் புலவர்களை ஆதரித்துப் பாதுகாக்கும் இயல்பினர்; மகா வித்துவான் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களை நன்கு அறிந்தவர்; ஸ்ரீ தியாகராச செட்டியாரிடத்தில் மிக்க அன்பு பூண்டவர்; அறிவாளிகள் நிலையான காரியங்கள் செய்ய வேண்டுமென்பது அவருடைய விருப்பம். திவ்யப் பிரபந்தங்களுக்குப் பெரியோர்களால் வடமொழி தென் மொழியிற் செய்யப்பெற்ற வியாக்கியானங்கள் இருப்பது போலத் தேவார திருவாசகங்களுக்கு இல்லையே யென்ற வருத்தம் அவருக்கு உண்டு. அதனால் சைவமடாதி பதிகளையும் சைவ வித்துவான்களையும் சந்திக்கும் பொழுதெல்லாம் திரு முறைகளுக்கு ஓர் உரை எழுதும்படி வற்புறுத்திக் கூறுவார். கேட்பவரிற் பெரும் பாலோர் இயன்றவரையில் உழைத்துப் பார்ப்போ மென்றே விடை பகர்ந்து வந்தார்கள்.

தியாகராச செட்டியார் உபகாரச் சம்பளம் பெற்றுத் திருவானைக்காவில் சில ஆண்டுகள் இருந்த போது பட்டாபிராமபிள்ளை அவர் வீட்டிற்கு அடிக்கடி சென்று பார்த்து வருவார். அப்போது அவரைத் திருவாசகத்திற்கு உரை எழுத வேண்டுமென்று வற்புறுத்திக் கூறுவார். அன்றியும் அங்கங்கே நிகழும் கல்லியாணங்களை விசாரிக்கப் போன காலங்களிலும் மற்ற இடங்களுக்குச் சென்றிருந்த காலங்களிலும் அவரைச் சந்தித்தபோதெல்லாம் மேலும் மேலும் கூறுவார்; "எழுத ஆரம்பித்தீர்களா ? எவ்வளவு ஆயிற்று" என்று கேட்பார்; அருகிலுள்ள கனவான்களிடம், "இவரிடம் எவ்வளவு நாளாகச் சொல்லி வருகிறேன்; கேட்க மாட்டேனென்கிறாரே !" என்று சொல்லுவார். ஒரு நாள் செட்டியார் திருச்சிராப்பள்ளியிலுள்ள உறவினரொருவர் வீட்டில் நிகழ்ந்த ஒரு துக்கத்துக்காக அங்கே சென்று விசாரித்து நீராடி விட்டு ஈரத்துணியோடு மீண்டு காவிரி யாற்றுப் பாலத்தின் மேல் நடந்து வந்தார். அப்பொழுது நடுப்பகல் பன்னிரண்டு மணி நேரம். செட்டியார் வெயிலாலும் பசியாலும் மிகவும் களைப்படைந்திருந்தார். அச்சமயம் பட்டாபிராம பிள்ளை ஸ்ரீ ரங்கம் சென்று பெருமாளைத் தரிசனம் செய்து விட்டு மார்பிற் சந்தனம் விளங்க உத்ஸாகமாக எதிரே ஒரு வண்டியில் வந்தார். செட்டியாரைக் கண்டவுடன் அவர் வண்டியை நிறுத்திக் கீழே இறங்கினர்; செட்டியாரை யணுகி க்ஷேம சமாசாரம் விசாரித்த பின்பு வழக்கம் போலவே 'திருவாசகவுரை எவ்வளவாயிற்' றென்று கேட்டார். நீண்டநாளாக இந்த விஷயத்தைப் பற்றி எவ்விடத்திலும் கேட்டு வந்ததனாலும் அப்பொழுது தமக்கு இருந்த தளர்ச்சியினாலும் செட்டியாருக்குக் கோபம் உண்டாயிற்று; "நீங்கள் கொஞ்சமாவது திருவாசகத்தின் பெருமையை அறிந்து கொள்ளவே யில்லை யென்று நிச்சயமாய்ச் சொல்லுவேன். அதற்கு என்னால் உரை எழுத முடியுமா? திருவாசகம் எவ்வளவு ! என்னுடைய படிப்பு எவ்வளவு ! அதற்கு உரையெழுத வேண்டுமென்றால் வேதம், உபநிஷதம், ஆகமங்கள், புராணங்கள், யோக சாஸ்திரங்கள் முதலியவை தெரிய வேண்டாமா ? தமிழில் உள்ள இலக்கண இலக்கியங்களையும் சில சைவ சித்தாந்த சாஸ்திரங்களையுமே படித்த நான் எப்படி எழுத முடியும் ?" என்றார்.

அதற்குப் பட்டாபிராம பிள்ளை:— "திவ்யப் பிரபந்தத்திற்கு அவர்கள் வியாக்கியானம் செய்ய வில்லையா ?" என்று கேட்க, அதற்குச் செட்டியார் "என்ன ஐயா ! உங்களுக்கு அவர்களுடைய படிப்பின் அளவு சிறிதேனும் தெரியாது போல் இருக்கிறது; அவர்கள் வடமொழி தென்மொழி இரண்டிலும் சிறந்த புலமையுடையவர்கள்; அவர்களது உரையினாலல்லவா நூலின் பெருமை அதிகமாகின்றது ? நான் உரை எழுதினால் திருவாசகத்திற்கு எவ்வளவு குறைவு உண்டாகும் தெரியுமா ? என்னுடைய உரையினால் அதற்குக் குறைவு ஏற்பட வேண்டுமென்பது தங்கள் எண்ணமோ ? எங்கே கண்டாலும் நச்சு நச்சென்று என் படிப்பின் அளவு தெரியாமல் திருவாசகத்துக்கு உரையெழுதும் படி சொல்லிச் சொல்லி என்னை வருத்துகின்றீர்கள். இனி மேலும் இப்படித் தொந்தரவு செய்வதாயிருந்தால், இதோ இந்தக் காவிரியில்

ஸ்ரீ:

# நான் கண்ட நல்லது.

(காஞ்சி. அண்ணங்கராசாரியர்.)

1. உணர்ந்த மெய்ஞ்ஞானிகளில் தலைவரான நம்மாழ்வார் தமது திருவிருத்தத்தில் * மதி விகற்பால் பிணங்குஞ் சமயம் பல பலவாக்கி * என்றருளிச் செய்துள்ளபடி விஷய விசாரங்களில் மதிவிகற்பால் பிணக்க முண்டாவது இயல்பே. “பிணங்கி யமரர் பிதற்றும்” என்ற ஆழ்வார் திருவாக்கின்படி பரமபதத்திலும் பிணக்கமுண்டென்று அறியக்கிடக்கும் போது இவ்வுலகில் அது விளைவது வியப்பன்றே.

2. சொற்களையும் பொருள்களையும் ஆராய்ச்சி செய்வது அறிவிற் சிறந்தார்க்கு அணிகலமே. அவ்வாராய்ச்சியில், தாம் தாம் கண்ட அரிய பெரிய மேற்கோள் முதலியவற்றை யெடுத்துக்காட்டி “இங்ஙனே பாடம் யுக்தமாகத் தோன்றுகின்றது; இங்ஙனே பொருள் பொருத்தமாகக் காண்கின்றது; இதனை அறிவுடையார் ஆராய்ந்து ஏற்றுக்கொள்வாரென்று நம்புகிறோம்” என்று மதுரமான வார்த்தைகளை அமைப்பதே அழகியது. அங்ஙனமன்றி, “சதிரமென்று தம்மைத் தாமே சம்மதித்து” என்று நம்மாழ்வாரருளிச் செய்தபடி தாம் கொண்ட கொள்கையே மிகச்சிறந்ததாகத் தாமே மதித்துச் செருக்கி உலகமெல்லாம் புகழும் பேராசிரியர்களைப் பழிப்பது பரந்த ஞானமுடையார் தம் பணி யன்று.

3. காஞ்சீபுரத்தில் வாழும் ஒரு பெரியார் [வே. மு. ஸ்ரீநிவாச முதலியாரென்பார்] “திவ்யப் பிரபந்தமும் திவ்யார்த்த தீபிகையும்” என்றொரு புத்தக மெழுதி யச்சிட்டு அதனைப் பரவச்செய்து வருகிறாராம். திவ்யப் பிரபந்தங்கட்கு உரையாக அடியேனெழுதி வெளியிட்டுள்ள திவ்யார்த்த தீபிகையில் குற்றங்குறைகளை விளக்குதற் கென்றே அப்புத்தகம் தோன்றியுள்ளதாம். அவ்வளவோடு நில்லாமல், அத்தீபிகைக்கு மூலமான பூருவாசாரியர்களின் வியாக்கியானங்களையும் வரம்புமீறி நிந்தித்திருக்கின்றது அப்புத்தகம். இது நமக்கு நேராக வந்திலது. சென்னையில் நமது உபந்யாஸ மஹாஸபையில் ஒரு பெரியார் இப்புத்தகத்தை நம்மிடம் தந்து “இதில் ஸ்ரீ வைஷ்ணவ மஹாசார்யர்களைப் பற்றிப் பொறுக்கொணாத நிந்தனைகள் மலிந்துள்ளன; தேவரீர் ஆராய்ந்தருளி யுக்தமானது செய்வது” என்று கூறினர்.

4. இப்புத்தகத்தைப்பற்றி அடியேன் சின்னாள் முன்னமே கேட்டிருந்தபடியால் அதைப் பார்க்கவும் பதிலெழுதவும் சிறிதும் ஊக்கமுண்டாயிற்றில்லை. பலபெரியாருடைய வேண்டுகோளுக்கும் கட்டளைக்குமிணங்கி அதனைப்பார்த்தேன். எனது தீபிகையுரையிலுள்ள குற்றங்குறைகளை மாத்திரம் எழுதியிருந்தாராகில், ஏற்கெனவே தீபிகையில் பலகாலும் “குற்றங் குறைகண்டு கூறுங் குரவர்கட்கு எற்றைக்குங் கைம்மாறு மென்தலையே” என்று வெளியிட்டிருக்கிறபடியே *தலையல்லால்கைம்மாறிலே னென்று உகந்திடுவேன். என்னளவிலே நில்லாது, ஸர்வஜ்ஞர்களாய் *காருள்ளளவும் கடல்நீருள்ளளவும் வேத முள்ளளவும் வேத கீதனுள்ளளவு மழியாத பெரும்புகழுடையவர்களான பூருவாசாரியர்களை யெல்லாம் வாய் வந்தபடி நிந்தித் திருக்கையாலே முதலியாரது புத்தகத்தின் தன்மையை உலகுக்கு உணர்த்த

வேண்டியது அவசியமேயென்று தோன்றி ஒரு மஹா ஸபையில் அதன் ஆராய்ச்சியாகப் பல விஷயங்களை யெடுத்துரைத்தேன். அப்போது அவற்றைக் குறிக்கொண்ட அன்பர் சிலர் ஒரு புத்தகமாக அமைத்து அதனை ஸ்ரீராமாநுஜனில் வெளியிடத்தந்தனர். அது விரிவு பெரிதுடைத்தாயிருந்ததனுல் பூர்த்தியாகப் பத்திரிகையில் வெளியிடமுடியாதென்று சொல்ல நேர்ந்தது. அப்பெரிய நூலில் உலகம் உண்மை தெரிந்து கொள்வதற்குப் போதுமானவளவு வெளியிடப்படுகின்றது.

5. அதைப்பற்றி நாம் சொந்தமாகத் தெரிவிக்க விரும்பிய சிலவற்றை ஈண்டு வரைகின்ரேம். முதலியார் அளவுகடந்த நிந்தைகளைப் பொழிந்திருக்கின்ருரென்று பெரியார் பலர் மிக்க பரிதாபங் கொண்டாலும் எமது உள்ளத்தில் சிறிதும் பரிதாபமில்லை. அவர் எழுதி யுள்ளதடங்கலும் நல்லதென்றே நாம் திண்ணமாகவெண்ணுகிரேம். குற்றங்குறைகளைப் பலர் ஆங்காங்கு வாய்மொழியாகச் சொல்லிப் போதுபோக்குவதுண்டு; அவை பிரகாச மடையாததனுல் தத்துவமுணர்த்த அவகாசமில்லையாகிறது. குற்றங்குறைகளை ஏகாந்த மாகக் கூறுகின்றவர்களும் கேட்கின்றவர்களும் உண்மையுணர முடியாமற்போகிறது. அப்படியல்லாமல் பகிரங்கப் புத்தகமாக வெளிவந்துவிடுமேல், தத்துவமுணர்ந்தவர்களும் தத்துவமுணர்த்த விருப்பமுடையவர்களுமான விவேகிகள் உண்மையுணர்த்தித் தெளிவு பெறுத்த ப்ராப்தமாகின்றதன்ரே. ஆனதுபற்றியே நான்கண்ட நல்லதென்று மகுடமிட்டேன்.

6. பூருவாசாரியர்கள் உபயவேதாந்த ப்ரவர்த்தகர்களாக விளங்கி வடமொழி தென் மொழிக் கடல்களிலே ஆழ அவகாஹித்து உபய சாஸ்த்ரங்களிலும் நிகரற்ற வல்லமை பெற்றவர்கள். அவர்களது கல்வியறிவுகளில் குறை கூறுமவர்கள் கதிரவனெளியிற் குறை கூறுவாரோடொப்பர். அவர்களிட்டருளின வியாக்கியானங்களின் பண்பைக்கண்டு உயர்ந்த மேதாவிகள் உருகாநிறபர் நீராயே. ஆழ்வார்களது திவ்யப் பிரபந்தங்கட்கு மாத்திரமல்ல; ஸ்ரீராமாயணாதி ச்லோகங்களுக்கும் அப்பேராசிரியர்கள் பொருள்காணு மழகும் அதனை விலக்ஷணவாக்ய ஸன்னிவேசங்களினல் பொறித்திடுமழகும் நினைதோறும் சொல்லுந்தோறும் நெஞ்சிடிந்துகும். அவற்றிலீடுபடும் பாக்கியம் எல்லார்க்குமே எளி தாகக் கிடைக்குமதன்று. ஸ்ரீவைஷ்ணவ குலத்திற் பிறந்தார்க்குள்ளும் இப்பாக்கியம் பெறுவார் மிகச் சிலரே. கீர்த்திமூர்த்தியான ப்ரஹ்மஸ்ரீ சாமிநாதையரவர்களோடனு பவம் நமக்குப் பெரிதுமுண்டு. அவர்கள் நம்முடைய உபந்யாஸ நிலயங்களுக்குப் பலகால் விஜயஞ் செய்ததுமுண்டு; அப்போதெல்லாம் முடிவில் தாமெழுந்து பேசுகையில் நம்பிள்ளை பெரியவாச்சான்பிள்ளைகளின் வியாக்கியான திவ்ய ஸ்ரீஸூக்திகளைப் பந்திபந்தியாகப் பொழிந்து கண்ணுங்கண்ணீருமாயிருந்து உருகிநிற்பர். அதற்குச் சான்ருக அவருடைய அரியபெரிய நூற்பதிப்புகளிலெல்லாம் அப்பரமாசாரியர்களின் திருவாக்குப்பெருமை பெரும்பாலும் பொலிந்திருக்கக் காண்கின்றதுலகம்.

7. சென்னை யூனிவர்ஸிடிப்பதிப்பாக லெக்ஸிகன் கோசம் வெளிவந்துளதே; இதனைச் சேகரித்த சைவவைணவத் தமிழ்ப்புலவர் யாவரும் திவ்ய ப்ரபந்த வியாக்கியானங்களை உடன் வைத்துக்கொண்டு அந்நூல்களை இலக்கியமாகக் கொள்ளாமல் இலக்கணமாகவே கொண்டு ஆங்காங்கு அவற்றை மேற்கோளாகவுங் காட்டியுள்ளார்கள். விவாத முதலியார் தமது புத்தகத்தில் தவறென்று காட்டுகிற பாடங்களோ பொருள்களோ, பெரும்பாலும் அக்கோசத்தில் நன்கு ஏறிக்கிடக்கின்றன. 'பட்டரருளிச் செய்த பொருள், நம்பிள்ளை யருளிச் செய்த பொருள், பெரியவாச்சான்பிள்ளையருளிச் செய்த பொருள்' என்ருல்

இன்னாரினையாரென்கிற வாசியின்றிக்கே செந்தமிழ்கற்றார் யாவரும் தலைமேல் கைகூப்பி ஆதரிக்கும்படியுள்ளதே யன்றி அவற்றைச் சாமானியமாக நினைப்பார் சாமானியரேயாவர்.

8. மஹர்ஷிகளுள், பாணினி வரருசி பதஞ்ஜலி என்னும் மூவர் வடமொழி வியாகரண சாஸ்த்ர ப்ரவர்த்தகர்கள். இவர்களுள் பாணினியென்பவரே ஸூத்ரமியற்றின பெரியார். அவரே முற்பட்டவர். பதஞ்ஜலியென்பவர் கடைப்பட்டவர். அவர் பாஷ்யமியற்றினவர். ஆயினும், பாணினிஸூத்ரத்திற்கு முரணாக இவர் பதப்ரயோகங்கள் செய்திருந்தாலும் அதையே சிறந்த சாஸ்த்ரமாகக் கொள்வது வழக்கம். ஸூத்ரகாரரான பாணினியின் கட்டளைக்கு விருத்தமாக ப்ரயோகம் செய்து விட்டாரென்று பழிப்புக் கூறும் வழக்கம் பண்டிதர் திரளில் கிடையாது. ஏன்? பதஞ்ஜலி முனிவர் ப்ரயோகித்தாரென்றால் அது தான் உயர்ந்த இலக்கணமென்று நம்பிக்கையுள்ளது. இது போலவே நம்பிள்ளை பெரிய வாச்சான்பிள்ளைகள் பொருள் அருளிச் செய்தார்களென்றால் அதற்கு எது ப்ரமாணமென்று ஆராயவேண்டிய அவசியமில்லை. ப்ரமாணமில்லாமலோ ப்ரமாண விருத்தமாகவோ அவர்கள் உரைத்தருளார்களென்கிறவுறுதி ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு மாத்திரமல்ல, பிராமாணிகர்களான தமிழர்கள் யாவர்க்குமே யுள்ளது. ஆனது பற்றியே, லெக்ஸிகன் கோசம் சேகரித்த பெரியார்களும், உயர்திரு. சாமிநாதையரவர்கள் போல்வாரும் அவ்வாசிரியர்களின் திருவாக்குக்களை இலக்கணத்தானத்திலே யெடுத்துக் காட்டுகின்றார்கள்.

9. திவ்யப்ரபந்த வியாக்கியானங்கள் யாவற்றிலும் வடமொழிகளும் வடமொழித் தொடர்களும் பலவாகக் கலந்திருப்பதைப் பெரியகுற்றமாக வெழுதுகின்றார் முதலியார். திவ்யார்த்த தீபிகையுரையிலும் இக்குற்றம் விட்டபாடில்லை யென்கிறார். வடமொழிபயிலாத தமிழ் மக்களுக்குப் பயன்படாத வகையில் அவ்வுரைகள் உள்ளனவென்று இதற்காக அடிக்கடி நிந்தனைகள் பொழிகிறார். இங்குக் குறிக்கொள்க. திவ்யப்ரபந்தங்களானவை நளவெண்பா நைடதம் நாலடியார் திருக்கோவையார் போன்ற பிரபந்தங்களல்ல. வேதாந்த விழுப் பொருள்கள் நிரம்பியவை. ஆனதுபற்றியே "செய்யதமிழ்மாலைகள் நாம் தெளிய வோதித் தெளியாத மறை நிலங்கள் தெளிகின்றோமே" என்று வேதாந்த வாசிரியர் அருளிச் செய்யநேர்ந்தது. வடமொழியினலாய உபநிஷத்துக்களிலே போது போக்க வேண்டிய அந்தணர் தலைவரும் மறையவர்சிகாமணிகளும் அவ்வுபநிஷத்துக்களிற் காட்டிலும் இந்த த்ரமிடோ பநிஷத்துக்களிலேயே மிக்க அபிநிவேசம் கொண்டது 'திவ்யப்பிரபந்தங்கள் வேதாந்தவிழுப்பொருள் நிரம்பியவை' என்பதுபற்றியே. ஆக, வேத வேதாந்த இதிஹாஸ புராண பஞ்சராத்ராதிஸம்ஸ்க்ருத ப்ரமாண வுதவிகொண்டே திவ்யப்பிரபந்தங்களை ரஸித்து அநுபவிக்க வேண்டியிருப்பதால் வடமொழிகளையும் வடமொழித்தொடர்களையும் கலக்க வேண்டியது இன்றியமையாததாயிற்று. ஒன்று பார்க்க;

10. திருமழிசையாழ்வார் தமது திவ்யப் பிரபந்தத்தில் "ஐந்துமைந்துமைந்துமாய், ஆறு மாறுமாறுமாய், ஏழுமேழுமேழுமாய், எட்டு மெட்டு மெட்டுமாய்" என்றிப்படி இலக்கங்களையிட்டு அடுக்குகின்றார். வடமொழிநூல் வழக்குக்களைக் கொண்டே இவற்றின் பொருளையறிய வியலும். வெறுந்தமிழ் மொழியால் உரையிடக்கூடிய சந்தர்ப்ப மில்லை. இதைப் பற்றி இங்கு இவ்வளவு விவரித்தது போதும். வடமொழி பயிலாத வெறுந்தமிழர்க்குப்பயன் படுவதில்லையே யென்பது உண்மை. அது யார்குற்றம்? அகநானூறு, புறநானூறு, பரிபாடல் குறுந்தொகை போன்ற நூல்கள் செந்தமிழாயிருந்தும் தமிழ்கற்றார் யாவர்க்கும் பயன் படவில்லையே. வல்லார்வாய்க் கேட்டுணர்தல் என்னும் மரியாதையில் மதிப்பற்றவர்கள்

அரும்பெரும் பொருள்களை இழக்கவேண்டியது தானே. வியாக்கியானங்களையும் குருமுகமாகக் கேட்டேயுணரவேணு மென்பதறியாமல் தம்முடைய சிற்றறிவுக்குத் தெரியவில்லையே யென்று வீணாகச் சீறுமிவர் தம் சீற்றத்தை ஆசார்யநிந்தைகளில் கொண்டு முடித்தார். முதலியாரது சுவடியில் (பக்கம் 26-ல்) வடமொழி சுலோக மொன்று அச்சிடப் பெற்றுள்ளது. அந்தோ அந்தக் கோரம் எழுதிமுடியாது. கண்ணுடையார் காணவேணுமத்தனை. (ஃ) என்று விஸர்க்கமிடவேண்டுமிடத்து (ஃஹ) என்றெழுதியிருக்குமழகு ஒன்று போதும். இவ்வளவு ஆச்சரியமான அறிவுபெற்றவர் ஸர்வஜ்ஞர்களான ஆசாரியர்களை வரம்புகடந்து நிந்தித்தது நலமன்று. வடமொழிபயிலாதவர்களும் அம்மொழியில் பகையுள்ளவர்களும் திவ்யப்ரபந்த வியாக்கியானத்தருகும் செல்லலாகா தென்கிற பெரியாருபதேசத்தைப் பேணியுய்க.

11. வேதாந்தப் பொருள்கள் கிடக்க; பொதுவாகத் தமிழர்கள் யாவரும் எளிதாகத் தெளிந்து கொள்ளலாம் விஷயங்களிலும் முதலியாருடைய மதி செவ்வனே செல்லாமல் திரிபுணர்ச்சியே பெற்றுத் திகைக்கின்ற திறங்களைச் சிறிது விவரிப்போமிங்கு. திவ்யப்பிரபந்த மூல பாடங்களிலும் வியாக்கியானப் பொருள்களிலும் இவர் கூறும் அவத்தங்கள் ஒன்று கூட உண்மையன்றென்பதையும் இவர் தம்முடைய அதிகாரத்தை மீறிச் சென்றிருக்கின்றா ரென்பதையும் செந்தமிழறிஞர்கள் தேறுமாறு தெரிவிப்போம்.

12. முதலியார் தமது சுவடியில் (பக்கம் 111-ல்) நாச்சியார் திருமொழி முதற் பாசுரத்தை யெடுத்துக் கொண்டு மூலத்தைத் திருத்தியிருப்பதும் வியாக்கியானங்களைப் பழித்திருப்பதும் மிக வருந்தத்தக்கன. அங்கு "உன்னையும் உம்பியையுந் தொழுதேன்" என்றவிடத்து வியாக்கியானப் பேராசிரியர்கள் "காமன்தம்பிசாமன்" என்றருளியிருப்பது ஸ்ரீபாகவத தசமஸ்கந்த ஸித்தமாயிருக்கவும், புராணம் வல்ல பெரியார்களை அடிபணிந்து கேளாமலும், ஒருவரைக்கேட்க வேண்டாதபடி நாம் நமது நூல்களில் எழுதிவைத்துள்ளவற்றை முற்ற நோக்காமலும் திரிபுணர்ச்சியைத் தாங் கொண்டதோடு நில்லாமல் 'பேராசிரியர்கள் கூறிய பொருளும் பிசகு, கொண்டபாடமும் தவறு' என்றெழுதி, காது கொண்டு கேட்க வொண்ணாததோர் அபத்த பாடத்தைக் கூசாமல் வெளியிடுவது என்ன துணிவு!. காமனுக்கொரு தம்பி யிருப்பதாகப் புராணவரலாறு இல்லை யென்றும் வைத்துக்கொள்வோம்; அதற்காகத் தன்மனம் போனபடி பாடத்தை மாற்றத் துணிவதுமுண்டோ? கல்வியாளரின் காரியமோ இது? உலகம் போற்றும் பேராசிரியர்கள் உரைசெய்ததாய் உலகமெல்லாம் ஓதுகின்றதான பாடத்தைமாற்ற அறிவொன்றுமில்லாத அஹங்காரிகளுக்கு என்ன அதிகாரம்? ஆழ்வார்களருளிச் செய்துள்ள கதைகளுக்கெல்லாம் இவர் புராணம் கண்டிருக்கிறாரோ? திவ்யப்ரபந்தத் திருப்பாற்கடலில் ஸகல புராணப்ரவீணர்கட்கும் இன்னமும் ஆகரம் தெரிய கில்லாத கதைகள் எத்தனையிருக்கின்றன தெரியுமோ?

13. பெரிய திருமொழியில் *ஏழையேதலன்* என்ற பதிகத்தில் *வாதமாமகன் மற்கடம் விலங்கு* என்ற இரண்டாம் பாட்டில் இராமன் அனுமனோடுடனிருந்து உணவு அருந்தினதாக ஒரு கதை அருளிச் செய்யப்படுகிறது. இது எந்தப் புராணத்திலுள்ளது தெரியுமோ? அது தன்னிலே *மாகமாநிலம் முழுதும் வந்திறைஞ்சும்* என்ற ஐந்தாம்பாட்டிலே எங்குங் கேளாத தொரு வரலாறு கூறப்பட்டுளது. கோவிந்தஸ்வாமி யென்பானொருவனது கதை யென்று வியாக்கியானவாசிரியர் விவரித்தருளுகிறார். இந்தக் கதையும் அந்தப் பெயரும் எந்தப்புராணத்திலுள்ளது தெரியுமோ? பெரிய திருமொழி

மூன்றும்பத்தில் காழிச்சீராமவிண்ணகரப்பதிகத்தின் இரண்டாம்பாட்டிலே “ நான்முகனுள்......உரோமசனல் ” என்று ரோமசரென்பவர் நான்முகனது செருக்கைத் தொலைத்ததாக அருளிச் செய்யப்படுகிற கதை எந்தப் புராணத்திலுள்ள தென்றறிவரோ இவர் ? பெரியாழ்வார்திருமொழியில் (3—10—2) “எல்லியம்போ தினிதிருத்த லிருந்ததோரிட வகையில், மல்லிகைமாமாலை கொண்டங்கார்த்தது மோரடையாளம் ” என்று இராமபிரானைச் சீதை மல்லிகைமாலையினால் கட்டிப்போட்டதாகக் கூறப்பட்டுள்ள கதை எப்புராணத்திலுள்ள தென்றறிவரோ ? (3—10—6) * சித்திர கூடத்திருப்பச் சிறு காக்கை முலைதீண்ட * என்று தொடங்கி அனுமான் சீதைக்குக் காகாசுரன் கதையை அடையாளமாகக் கூறுவதாய்க் காட்டப்பட்டுள்ளவரலாறு இவ்விதமாக எங்குள்ளதென் றுணர்வரோ ? பொய்கையாழ்வார் * ஆபேயமரர்க்கு * என்கிற பாட்டிலும், பேயாழ்வார் * ஆய்ந்த வருமறையோன் * என்கிற பாட்டிலும், திருமழிசையாழ்வார் * கொண்டு குடங்கால்மேல் * என்கிற பாட்டிலும்—பிரமனிடம் மறைந்து வந்த இராவணனைத் திருமால் காட்டிக் கொடுத்ததாகவொரு கதை அருளிச்செய்துளர்; இது எங்கேனுங் கண்டதுண்டோ கேட்டதுண்டோ இவர் ? மஹர்ஷிகளைப்போலே ஆழ்வார்களும் பல கதைகளை எம்பெருமானது நிர்ஹேதுக கிருபையினால் ஸாக்ஷாத்கரிக்கப் பெற்றதாகப் பெரியவாச்சான்பிள்ளை * உன்னுடைய விக்கிரமமொன்றொழியாமலெல்லா மென்றவிடத்து வியாக்கியானத்திலே அருளிச் செய்துள்ளார். எது எங்ஙனேயாயினும் காரணாபாஸங்களைக் கொண்டு பாடத்தைத் திருத்துவதும் பேராசிரியர்களைப் பழிப்பதும் அடாத செயல். இதற்கு இவரா அதிகாரி ?

14. பெரியாழ்வார் திருமொழியில் (2—7—8) * சீமாலிகனவனோடு தோழமைக் கொள்ளவும் வல்லாய், சாமாறவனை நீ யெண்ணிச் சக்கரத்தால் தலை கொண்டாய் * என்ற பாசுரத்திற்குப் பூருவாசாரியர்கள் பொருத்தமான வரலாறொன்றினைப் பொறித்திருக்கவும் அதை நன்கு காணாது பழித்து இங்குச் சீமாலிகனவனோடென்ற பாடத்தை மாற்றி “ அது கோமாறியவனோடு என இருத்தற்பாலது ” என்று இறைப்புங் கூசாதெழுதியுள்ள முதலியார் தாமொரு புதுக்கோயில் கட்டித் தாம் திருத்தியமைத்த பாடங்களை யெல்லாம் அங்கு ஓதுவித்துக் களித்தல் நலம். மோனைத் தொடைமுரணைநோக்கி இங்ஙனம் திருத்த வேண்டியது அவசிய மென்கிறார். பெரியாழ்வாருடைய பாடல் இது. அவரது திருமொழியின் முதற் பாடலில் இரண்டாமடி “ கண்ணன் கேசவன் நம்பி பிறந்தினில் ” என்பது. இதிலும் மோனைத் தொடைமுரண் காண்பதனால் திருத்தம் அவசியமேயா மிவர்க்கு. “ பிறையேறு சடையானும் நான்முகனு மிந்திரனும் ” “ சுட்டுரைத்த நன்பொன்னுன் திருமேனியொளி யொவ்வாது ” என்றிவை முதலான பல நூறடிகள் மோனைத்தொடை சிதைந்து வந்துள்ளன. நம்மாழ்வாருடைய முதற்பிரபந்தமாகிய திருவிருத்தத்தின் முதலிலே “ குழற்கோவலர் மடப்பாவையும் மண்மகளும் திருவும் ” என மோனைத் தொடையில் நோக்கில்லாமை காண்கிறது. அது தன்னிலே (5.) * பனிப்பியல்வாகவுடைய தண்வாடை* என்ற பாட்டின் ஓரடியிலும் மோனைத் தொடை யென்பது தலை காட்டிற்றில்லை. இந்நிலைமை திவ்வியப் பிரபந்தங்களில் மாத்திரமல்ல ; பக்தசிகாமணிகளின் பிரபந்தங்கள் பலவற்றிலும் மிகையாகக் காணலாகும். நான் கண்ட முயலுக்கு மூன்றே கொம்பென்பார்க்கு இவை யொன்றும் கண்ணில் படாது. அன்றியும், “சீமாலிகன் கதை எவ்வாழ்வாராலும் தம் திருப்பாக்களில் அமைத்தருளப்படாத தொன்றென்பது நினைவிலிருத்தற்பாலது” என்று மெழுதுகிறார் முதலியார். வேறு ஓராழ்வாராலும் அருளிச் செய்யப்படாமல்

ழ்வாரே யருளிச் செய்தவையான கதைகள் திவ்யப்பிரபந்தங்களிற் பலவுள்ளன வென்பதை யறிய இவர் பிறந்தாரல்லரே.

15. பெரியாழ்வார் திருமொழியில் மூன்று பாசுரங்களில் மூன்று சொற்கள் திவ்யமாகத் தோன்றியுள்ளன. (1) முத்தமிருந்தவா காணீரே. (2) சிறுச்சண்ணம் துள்ளஞ்சோர. (3) வட்டுநடுவே வளர்கின்ற மாணிக்கமொட்டு. இப்பாசுரங்களில் முத்தம், சண்ணம், மொட்டு என்ற மூன்று சொற்களும் கண்ணபிரானுடைய ஆண் குறியைச் சொல்லுவன வென்பது பூருவர்களின் வியாக்கியானமும் திவ்யார்த்ததீபிகை யுரையும். இவற்றைப் பழித்து மறுக்கின்ற முதலியார்திறத்து மாண்மதியோர் வருந்துவர் களேயன்றி மறுப்புரைக்க நினையார். லெக்ஸிகன் கோசத்தில் (பக்கம்3251-ல்) "முத்தம்—ஆண்குறி. அச்சுதன் முத்த மிருந்தவாகாணீரே (திவ். பெரியாழ் 1—2—6)" என்றுள் ளது. அது தன்னிலே (பக்கம் 3374-ல் "மொட்டு—ஆண்குறியின் நுனி" என்றுள்ளது. அது தன்னிலே (பக்கம் 1246-ல்) "சண்ணம்—ஆண்குறி. சிறச்சண்ணம் துள்ளஞ்சோர. (திவ். பெரியாழ் 1—7—10.)" என்றுள்ளது.

16. இவற்றால், முத்தம் மொட்டு சண்ணம் என்னுஞ் சொற்களுக்கு ஆண்குறி யென்பது பொருள் என்றிவ்வளவேயன்று கிடைப்பது. பெரியாழ்வார் திருமொழிப் பிரயோகங்கள் இப்பொருளிலே யாயின வென்பதும் கல்வெட்டாகக் காட்டப்பட்ட தென்றுணர்க. "முத்தமிருந்தவாகாணீரே" என்பதற்கு பல் இருக்கும் படியைக் காண்மி னென்று முதலியார் பொருள் கூறுகின்றார். இஃதொன்று கொண்டே இவருடைய மதியின் வீறு அறியற்பாலது. *சீதக்கடலுள்* என்ற பதிகத்தில் ஆறுவது பாட்டிலுள்ளது 'முத்த மிருந்தவா' என்பது. இப்பதிகம் கண்ணபிரானது திருவடி தொடங்கித் திருக்குழலளவாக வரிசைக்கிரமமாய்க் காட்டிக்கூறுவது. கீழ் ஐந்து பாட்டுக்களில் முறையே "பாதக் கமலங்கள் காணீரே, பத்து விரலும் மணிவண்ணன் பாதங்கள், கணைக்கால்... முழந்தாள்... குறங்குகளை வந்து காணீரே" என்று அடிதொடங்கித் துடையளவும் காட்டியாயிற்று. ஏழாம்பாட்டு முதல் மருங்கு, உந்தி, உதரம், திருமார்பு, தோள்கள், கைத்தலங்கள், கண் டம் இவை காட்டியான பிறகு, பதினொன்காவது பாட்டிலே "இச்செந்தொண்டைவாய் வந்து காணீரே" என்று திருவாய் காட்டப்படுகிறது. அப்போது காட்டவேண்டிய பற் களைத் துடைக்கும் மருங்குக்குமிடையே காட்டினதாகக் காட்டும் முதலியாருடைய ஆராய்ச்சி வல்லமை எத்தகைத் தென்பதையறிய ஈதொன்று போதுமே. அசந்தர்ப்பமான அசட்டு வாதங்களல்லவா? இன்னமும் பல காட்டுவோம்.

17. நாச்சியார் திருமொழியில் (3—9.)* கஞ்சன் வலைவைத்தவன்று காரிருளெல்லில் பிழைத்து * என்றவிடத்தை இவர் எடுத்துக்கொண்டு (பக்கம் 102-ல்) எழுதியிருப்பதைப் பாருங்கள்; இப்பாசுரத்தின் திவ்யார்த்த தீபிகையுரையில் "எல்லில்—இரவில்" என் றெழுதியுள்ளதாம். எல் என்பது பகலைத் தான் குறிக்குமென்றும் இருட்டையுடைய இரவைக் குறிக்காதென்றுங்கூறி அல்லும் பகலு மென்ற உலகவழக்குக்குச் சேர "காரிருள் அல்லில் பிழைத்து" என்றே பாடத்தைத் திருத்தியாக வேண்டுமென்று மெழுதுகிறார். அந்தோ! ஈதென்ன மதிமாண்பு! தமிழகராதிப்பதிப்புகள் பலவுண்டே; ஏதேனு மொன்றை யாவது எடுத்துப் பார்க்கலாகாதா? "எல்—இரவு, சூரியன்." "எல்—இராத்திரி, இரவி" என்றெழுதாத நிகண்டு இல்லையே. லெக்ஸிகன் கோசத்திலும் (பக்கம் 534-ல்) எல் என் றெடுத்து ஏழு பொருள்கள் விளக்கப்பட்டன; அவற்றுள் ஏழாவது பொருளாக "Night;

இரவு'' என்றுள்ளது. "எல்லிற்கருங்கொண்மூ வாய்திறந்த மின்னுப்போல்" என்ற நாலடியார்ப் பிரயோகமும் இராப்பொருளுக்கு எடுத்துக் காட்டப்பட்டுளது. மிகச் சிறுவிஷயமான இதனையுமறியாத விவரா திருத்தவருபவர்.

18. குறுந்தொகை முதலான உயர்ந்தநூல்களில் எல் என்னுஞ் சொல் ஒளி, சூரியன், பகல், இரவு என்னும் பொருள்களில் அடிக்கடி பிரயோகிக்கப் பட்டுள்ளது. அதில் 275 ஆம் பாவில் "எல்லூர்ச் சேர்தரு மேறுடையினத்து" என்றுளது. எல்—மாலைக்காலத்திலே, ஊர்சேர்தரும்—ஊரைவந்தடைகின்ற, என்பது உரைவாக்கியம். அன்றியும், மலைபடுகடாம் 416. "எல்லினிர்புகினே" என்ற விடத்து நச்சினார்க்கினியர் "இராக் காலத்தையுடையிராய்" என்றெழுதியுள்ளார். அந்தோ! முதலியார் தாம் காணவேண்டிய நூல்களில் ஏகதேசமுங்காணாது, தாம் தலையிடவேண்டாத நூல்களில் தலையிட்டுப் பெரியாரைப் பழிப்பது பெரும்பாவம்!

19. முதலியார் (பக்கம் 102-ல்) மற்றொன்று மெழுதுகிறார்; "அம்மண மென்பது உடையையுடுத்தாத மக்கள் உருவைச் சுட்டாது. 'நக்னம்' என்பதே உடையையுடுத்திலாத மக்களுருவைச் சுட்டும். ஆதலால் தீபிகையுரைகாரர் அம்மணம் என எழுதிவைத்த பொருள் போலிப் பொருளென்க" என்று. இது பேதைமையின் பணியா? பிடிவாதத்தின்பணியா என்பதறிகிலோம். தமிழ்க்கோசங்கள் பலவற்றிலும் "அம்மணம்—நிர்வாணம்" என்றுள்ளது. லெக்ஸிகன் கோசத்திலும் (பக்கம் 98-ல்) "அம்மணம்—Nakedness, Nudity; நிருவாணம்" என்றுள்ளது. தமிழ் நாட்டிற் பிறந்து வளருமவர்கட்கு எடுத்துக் காட்டக் கூடியதோ இது. 'நக்னம் என்பதே' என்று எழுதுகின்ற முதலியாரைப் பற்றி நாம் என்ன சொல்லுவது? நக்ந என்பது கொழுத்த வட சொல். அதற்கேற்ற தமிழ்மொழி யொன்றுகிடையாதா? தமிழ்ப் பேரறிவாளர்களையெல்லாம் தமிழறியாத மக்களென்று பழிக்குமிவர் உலகறிதமிழ் மொழியை யுதறித்தள்ளி வட சொல்லைப் பிச்சைவாங்கிக் கொள்வது எதற்கோ?

20. நாச்சியார் திருமொழியில் (3—9.) "வஞ்சகப்பேய்ச்சி பாலுண்ட மசுமையிலீ கூறைதாராய்" என்றவிடத்து மசுமையிலீ யென்பது தப்புப்பாடமென்றும் மகிமையிலீ யென்று திருத்தத்தக்கதென்றும் (பக். 103-ல்) எழுதுகின்றார். இதுவுமொருமருள். லெக்ஸிகன் கோசத்தில் (பக்கம் 3006-ல்) "மசிமையிலி—Shameless Person; லஜ்ஜையில்லாதவன். வஞ்சகப்பேய்ச்சி பாலுண்ட மசிமையிலீ (திவ். நாய்ச். 3. 9.)" என்று பிரசுரஞ் செய்யப்பட்டுள்ளது. மசுமை என்று சிலரும், மசிமை என்று பலரும் சொல்லுவர். இடைப் போலி யென்பர். "மசுமை யென்றிருத்தல் கூடாது, மசிமையென்றிருக்க வேண்டும்" என்றிவ்வண்ணமாகத் திருத்தியிருந்தால் ஒருவாறு ஏற்றுக்கொள்ளலாம். அங்ஙனன்றி, மகிமை என்கிற சொல்தவிர மசிமையென்கிற சொல்லே கிடையாதென்று மருண்டு திருத்தியதோடு நில்லாது, இவ்விடத்தில் ஸ்ரீ வைஷ்ணவாசாரியர்களைத் தூஷித்திருப்பது எல்லைகடந்தது. அந்தத் தூஷண வாக்கியங்களை அப்படியே இங்கெடுத்துக் காட்டுகிறோம்;—இவர் வீண்பொறாமையாளரே யென்பது வெளியாவசற்கு.

21. "மசுமைஇலீ என்ற பெயர் வடமொழியாலாய பெயரும் அன்று, தென்மொழியாலாய பெயரும் அன்று; மற்று எம்மொழியாலாய பெயர் என்னின்; கருவேப்பிலையை கொடையும் குறத்திமொழிப் பெயர்போலும். அன்றிக் குடங்கள் எடுத்தேறவிட்டுக் கூத்தாடவல்ல சாத்தர் மொழிப்பெயர் என்னலுமாம். என்னை? பார்ப்பனருள் தென்கலையார்

எனவும் ஸ்ரீ வைஷ்ணவர் எனவும் தம்மைச் சொல்லிக்கொள்ளும் செந்தமிழின் மிலேச்சராய ஒருவகைக் கூட்டத்தார் செந்தமிழராய திரு ஆழ்வார்கள் அருளிய செந்தமிழ்ப் பாக்களைச் செந்தமிழின் மிலேச்சராய கல்லுடைக்கும் ஒட்டத்தி மொழியாகத் திருத்திக்கொண்டு மண் மாற்றும் உப்பாத்தி மொழியால் உரையெழுதி வைத்துக்கொண்டு கருவேப்பிலை நொடையும் குறத்தி மொழியால் உபந்நியசிப்பவர் — விரித்துரைப்பவர்........." என்று. இவ்வளவோடும் நிற்கவில்லை. இன்னமும் பல இழிவுரைகள் கள்ளுண்ட பேய்மொழியாய் வளர்ந்து சென்றிருக்கின்றன. இப்படி ஓரிடத்திலன்று; தொட்ட தொட்ட விடங்கள்தோறும் இத்தகைய புன்மொழிப் பொழிவைக் கங்குகரையின்றிக் காணலாம். இவற்றைப் பொருள் படுத்திப் பதிலெழுதுவதா நம்பணி. "வம்பார் வினைச்சொல்லவோ எம்மை வைத்தது இவ்வான்புனத்தே" என்ற நம்மாழ்வார் பாசுரத்தையே நினைப்பூட்டி நிற்கிறோம்.

22. நாச்சியார் திருமொழியில் (14—1.) * பட்டிமேய்ந்தோர் காரேறு பலதேவற்கோர் கீழ்க்கன்றாய் இட்டீறிட்டு விளையாடி இங்கே போதக்கண்டீரே * என்ற பாசுரத்தில் இட்டீறிட்டு என்ற பாடம் பிழைப்பாடமென்றும்; இட்டி இட்டு என்றிருக்கவேண்டுமென்றும் எழுதியுள்ளது (பக்கம் 168ல்). இதுவும் லெக்ஸிகன் கோசத்தினால் மறுப்புண்டதே. அதில் (பக்கம் 276ல்) "இட்டீறு—Action proceeding from one's haughtiness or arrogance; செருக்காற் செய்யுஞ்செயல். இட்டீறிட்டு விளையாடி. (திவ். நாய்ச். 14—1.)" என்றுள்ளது. இதனால் இட்டீறிட்டென்கிற தமிழ்ச் சொல்லுக்குப் பொருள் விளக்கப்பட்டதோடு நாய்ச்சியார் திருமொழியிற் பாடமும் இதுவேயென்று காட்டப் பட்டதாயிற்று.

23. திருச்சந்த விருத்தத்தில் (56.) *இலங்கை மன்னனைந்தொடைந்து* என்ற பாட்டின் மூன்றாமடியில் 'விலங்குநூலர்' என்றதற்கு—"உடம்பிலே யஜ்ஞோபவீதத்தையுடையர்" என்றுள்ள வுரையை மறுக்கின்றார் (பக்கம் 69ல்). விலங்கு என்பதற்கு மக்களுடம்பு என்பது பொருளன்று" என்கிறார். இதுவும் லெக்ஸிகன் கோசத்தால் மறுக்கப்பட்டதேயாம். அதில் Supplement என மகுடமிட்டு வெளியிட்ட இறுதிப் பகுதியில் (பக். 414ல்) விலங்கு— உடல்; (திவ். திருச்சந்த விருத்தம் 56)" என்றெழுதப்பட்டு வியாக்கியானமும் மேற்கோளாகக் காட்டப்பட்டுளது.

24. பெரியாழ்வார் திருமொழியில் (4—3—5.) * பல பல நாழஞ் சொல்லி * என்ற பாட்டில் நாழம் என்ற சொல்லின் உண்மையையுணரப் பெறாத முதலியார் (பக்கம் 80ல்) நாழம் என்பது பிழைப்பாடம், அது தாழம் என்றிருக்கத்தக்கது என்கிறார். இதுவும் லெக்ஸிகன் கோசத்தினால் தள்ளுண்டதே. அதில் (பக்கம். 2231ல்) "நாழம்—Abuse; வசவு. பலபலநாழஞ் சொல்லிப்பழித்த சிசுபாலன். (திவ், பெரியாழ், 4—3—5)" என்றுள்ளது. இதனால், நாழம் என்ற சொல்லின் மெய்ப்பொருள் காட்டப்பட்டதோடு பாசுரத்திற் பாடவுண்மையும் தெளிவிக்கப் பட்டதாயிற்று. திவ்யப்பிரபந்தங்களில் நாழ், நாழம், நாழ்மை என மூன்று வகைச் சொற்கள் கலந்துவருவன. "அன்னைநாழிவளோ வென்னும்" என்பது திருவிருத்தம். "நாமாமிகவுடையோம் நாழ்" "நாழாலமர் முயன்ற." பெரியதிருவந்தாதி. "நாழ்மைபல சொல்லி"—திருவாய்மொழி. "பல பல நாழஞ் சொல்லி." பெரியாழ்வார் திருமொழி.

25. மேலெடுத்த பாசுரத்திலே இரண்டாமடியில் "அலவலைமை தவிர்த்த" என்றுள்ளது. இதை யெடுத்துக்கொண்டு முதலியாரெழுதும் அஸங்கதங்கள் (பக். 80ல்) பல.

அவையும் லெக்ஸிகன் கோசத்தினாலே பங்கமடைந்தவை. அதில் (பக். 146ல்) "அலவலைமை—வெகுவாகப் பேசுகை. சிசுபாலன்றன்னை யலவலைமை தவிர்த்தவழகன். (திவ். பெரியாழ். 4. 3. 5.)" என்றுள்ளது. இப்பொருளே திவ்யார்த்த தீபிகையில் ' கண்ணனென்றால் பொறாது நிந்திக்கும்படியான அற்பத்தனம்." என்று விரித்துரைக்கப்பட்டது. அக்கோசத்திலே அலவலை என்ற பெயரிலும் பார்க்க.

26. முதலியாரது சுவடியில் இரண்டு விஷயங்கள் மிகுந்த ஆக்ரஹத்துடன் எழுதப்பட்டிருக்கக் காண்கின்றன; (1) பெரிய திருமொழியில் (6—6—8) * இருக்கிலங்கு திருமொழிவா யெண்டோளீசற்கு எழில் மாடமெழுபது செய்துலக மாண்ட திருக்குலத்து வளச்சோழன் * என்ற விடத்து உரையைப் பழித்தல். (2) பெரிய திருமொழி 10—2—4. * அஞ்ச லோதியைக் கொண்டு நடமின் * என்ற விடத்து அஞ்சிலோதியென்பதே பொருத்தமான பாட மென்று தாபிக்கப் பார்த்தல். ஆக இவ்விரண்டு விஷயங்களிலும் இவரது மருளைச் சிதைத் தொழிப்போம்.

## —:: எண்டோளீசன் சிவபெருமானே ::—

27. சிவபிரானுக்கு எழுபது ஆலயங்கள் கட்டிவைத்து முதலில் சிவபக்தனாயிருந்து பிறகு பகவத் பக்தனாகப்பெற்ற சோழன் சேர்ந்த கோயில் திருநறையூர்த் திருப்பதி—என்னு மிவ் விஷயம் அசைக்க முடியாதது. இதைப்பற்றி நாம் நமது தீபிகையுரையில் சந்தேகத்திற்கு இட மின்றியே விளக்கியிருக்கின்றோம். இச் சோழன் முற் பிறவியில் சிலந்தியாய்ப் பிறந்து திருவானைக் காவிலுள்ள சிவலிங்கத்திற்குத் தன்னூலாலிழைத்து வந்த மேல் விதானத் திருப்பணியை யழித்துவந்த யானை நுழையா வண்ணம் சிவபிரானுக்கு மாடக்கோயில் பல கட்டி வழி பட்டவ னென்பது தேவார முதலிய வற்றானு மறியப்படு மென்ப. சோழ மண்டலத்தின் கூறுகளாக அமைந்த ஒவ்வொரு நாட்டுக்கும் ஒரு சிவாலயம் இச் செங்கணானாற் கட்டப் பட்ட தென்பர் சேக்கிழார். ' செங்கணான், அந்த மில் சீர்ச் சோணாட்டி லகனாடுதொறு மணியார், சந்திர சேகரனமருந் தானங்கள் பல சமைத்தான் ' என்பது பெரிய புராணம். இங்ஙனம் சிவ தொண்டினைச் சிறப்பப் புரிந்த இச்சோழன் முடிவில் திருநறையூர்த் திருமாலுக்கு அடியனாய்ச் சிறப்புற்றா னென்க. என்றிவ்வளவும் பண்டே யெழுதிவைத் திருக்கிறோம். இதில் வாயைக்கையை அசைக்க இடமில்லை யென்பது சிலாலிகிதம். சிவபிரான் இருக்கிலங்கு திருமொழி வாயனல்ல னென்றாவது எண்டோளீசனல்ல னென்றாவது சொல்ல முடியாது. அச் சோழன் சிவபிரானுக்குப் பல ஆலயங்கள் கட்டிவைக்கவில்லை யென்றுஞ் சொல்ல முடியாது; "சந்திரசேகர னமருந் தானங்கள் பல சமைத்தான்" என்கிற பெரிய புராணச் செய்யுள் மறைக்க முடியாததாயிற்றே. சந்திர சேகர னென்னும் பெயர் சிவபிரானுக்கன்று என்னத் தான் முடியுமோ? அஞ்சலி செய்து நிற்க வேண்டு மத்தனை. பெரிய திருமொழிப் பாசுரத்தின் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம்— " வேதத்தில் ஸ்ரீபுருஷஸூக்தாதிகளை உச்சரியா நின்றுள்ள வாயையுடையராய் எட்டுத் தோள்களையு முடையராயிருக்கிற தேவர்க்கு" என்றிவ்வளவுள்ளதே யன்றிச் சிவபிரானுக் கென்று விரித்துரைத்திலது. அவ்விடத்து அரும்பதவுரைகாரர் "தேவர்க்கு என்றது ருத்ரனுக் கென்றபடி " என்றுரைத்தார். சேக்கிழார் கூறியிருப்பதையும் பெரிய புராணப் பாடலையு மெடுத்துக் காட்டி நமது திவ்யார்த்த தீபிகையே விவரித்துரைத்தது.

28. எண்டோளீச னென்று ஸ்ரீமந் நாராயண மூர்த்தியையும் சொல்லலாமானலும் கதை அப்படியில்லையே. இங்கு முதலியாரது வாதம் மிகப் புல்லிது. ஆழ்வார் சிவபிரானை இகழுமவராம்; அப்படித் தம்மாலிகழப்பட்ட சிவபெருமானர்க்கு எழுபது திருக்கோயில்களைக் கட்டுவித்து அச்சிவனைத் தெய்வமாகக் கொண்டு வணங்கின வனுகிய ஒரு சோழனை ஆழ்வார் பாடவே மாட்டார் என்று (பக். 40-ல்) எழுதுகிருர். ஆழ்வார் சிவபெருமானை இகழுமவ ரென்பதைத் தாபிக்க ஏழெட்டுப் பாசுரங்களை யெடுத்துக் காட்டுகிருர். அந்தோ! இவை யெல்லாம் மருளினுலாய இருள் வெள்ளங்கள். இவரெடுத்துக் காட்டிய பாசுரமொன்றிலும் சிவபிரானுடைய இகழ்வு சிறிது மில்லை. சிவபிரான் எம்பெருமானைத் தொழுது சாபம் நீங்கப் பெற்றுனென்றும், பிரளய காலத்தில் சிவபிரானும் எம்பெருமானது திருவயிற்றினுள்ளே யொடுங்கிக் கிடந்தா னென்றும் கூறியவிவை இதிகாச புராணங்களில் பலவிடங்களிற் பொலியுமவை யாகையால் உள்ளது கூறலேயன்றி இல்லது கூறி யிகழ்தலல்ல. "பிணங்களிடு காடதனுள் நடமாடு பிஞ்ஞகன்" "சுடலையில் சுடுநீறன்" "வெந்தா ரென்பும் சுடுநீறும் மெய்யில் பூசி" "அக்கும் புலியினதளுமுடையாரவ ரொருவர்" "உடலம் நீறும் பூசி யேறூறு மிறையேன்" "ஆலமமர் கண்டத்தரன்" என்னுமிப் பாசுரங் களிலுள்ள தெல்லாம் சிவபிரானது யதார்த்தமான நிலையைக் கூறுவதே யன்றி ஒன்றும் இகழ்ந்துரையன்று. சிவனடியார்கள் பாடிய தேவாரத் திருமுறைகளிலும் இவை விளங்கக் காணலாம். சிவபெருமானது திருவாலயங்களில் பிக்ஷாடனேத்ஸவம் என்று ஒரு திருவிழா சிறப்புற நடத்தி வருவதை எங்குங் காணலாம். பிச்சையாண்டார் கோயி லென்றே ஒரு திருத்தலமும் திகழ்கின்றது. சிவபிரானது ஸஹஸ்ரநாமஸ்துதி முதலான வற்றிலும் பேர்க்கவும் பேராதபடி விளங்குகின்ற அடை மொழிகளை யிட்டே ஆழ்வார்கள் பாசுரங்கள் பாடியுள்ளார்கள். சிவபிரானது கையை விட்டகன்ற பிரமகபாலம் வதரியாச் சிரமத்தில் இன்றைக்குமுள்ளதே.

29. லெக்ஸிகன் கோசத்தில் (பக்1836ல்) தாமசபுராணம் என்றெடுத்து "தமோ குணப்பிரதானரான சிவபிரானைப்பற்றிய சைவம் இலிங்கம் காந்தம் ஆக்கினேயம் மச்சம் கூர்மம் என்ற புராணத்தொகுதி" என்றெழுதி அதற்குப் பிரமாணமும் காட்டியுள்ளது. அதிலே (பக். 1362ல்) சாத்துவிகபுராணம் என்றெடுத்து "சத்துவகுணப்பிரதானமாய் விஷ்ணுவைத் துதிக்கும் வைணவம் பாகவதம் நாரதீயம் காருடம் பதுமம் வராகம் என்ற ஆறுபுராணங்கள்" என்றெழுதி இதற்கும் பிரமாணம் காட்டியுள்ளது. இதனுல், லெக் ஸிகன் கோசம் சேகரித்த பெரியார்களைச் சிவத்வேஷிகளாகவும் விஷ்ணு பக்ஷபாதிகளா கவும் கொள்ளலாகுமோ? உள்ளதை உள்ளபடி எழுதுகின்றவர்களன்ருே பிராமாணி கர்கள். திரிபுரஞ் செற்றது திருமாலின் பிரபாவமே யென்று தெளிந்து கூறியுள்ள ஆழ் வார்களும் சிவபிரானைத் "திரிபுர மூன் றெரித்தான்" "திரிபுரஞ் செற்றவன்" என்று பெய ரிட்டுப் புகழக் காணுகின்ருேம்; அன்னவர்களைச் சிவத்வேஷிகளென்று பழித்தல் பொருந்தாது. இப்பழிப்பு நாயன்மார்களையுஞ் சாரும்.

30. சிவபக்தர்களாயிருந்தவர்கள் விஷ்ணுபக்தர்களாவதும், விஷ்ணுபக்தர்களாயிருந் தவர்கள் சிவபக்தர்களாவதும் அஸம்பாவிதமன்று; ஆங்காங்குக் கதைகளிற் காண்பதே யாம். இற்றைக்கும் நகரத்துச் செட்டிமார்கள் பலர் சிவபெருமானுக்குப் பல கோவில் கள் கட்டிவைப்பதும் திருமாலுக்குச் சில கோவில்கள் கட்டிவைப்பதும் கட்கூடாகக் காணுகின்ருேம். இரண்டு தெய்வங்களையும் சமமாக வழிபடுவார் சிலர். அப்படியிருந்து

ஒரு தெய்வத்தைத் தள்ளி மற்றொரு தெய்வத்தையே தெய்வமாகக் கொண்டு தொழுவார் சிலர். சிவத்தொண்டராயிருந்த வொருசெட்டியார் வைஷ்ணவராகிக் காஞ்சீபுரத்தில் ஸ்ரீ வேதாந்த தேசிகர்க்குத் தூப்புலில் கோவில் திருப்பணி செய்திருப்பது சமீபகாலச் சம்பவம். இங்ஙனே பல சான்றுகள் காட்டப் பாங்காகும். ஆகவே முதலியார் இங்கு வீணைகச் சம்பிரமங் கொண்டு எழுதியுள்ளதத்தனையும் மற்றைய எழுத்துக்களோடிணங்கியவையே. இதைப்பற்றி மறுமுறை மிக விரிவாக வரைவோம்.

## —:: அஞ்சலோதியே ; அஞ்சிலோதியன்று ::—

31. இனி (2) அஞ்சலோதியில் தெளிவு பெறுத்துவோம். இதில் வீண்விரிவு பெரிதுடைத்து முதலியாரது சுவடி. இங்கு நமது திவ்யார்த்ததீபிகை பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியானத்தை மறுத்தும் பழித்து மிருக்கின்றதென்றது சில அறிவிலிகளை மயக்குமத்தனை. நடுநிலைமைநிற்கும் விவேகிகள் உகக்க வுரைப்போமிங்கு. அஞ்ச லோதியென்பதுதான் ஆழ்வார் திருவாக்கில் அவதரித்தபாடம். அஞ்சிலோதியென்பது ஐம்பது காதத்தளவு அகற்றத்தக்க தப்புப்பாடம். முதலியார் சுவடியில் பக்கம் 129 முதல் 155 வரையுள்ள விரிவுமுழுதும் ஆழ்வாரது திவ்யஸூக்திப் பொருள் நிர்வாஹத்திற்குச் சிறிதும் பயன்படாத வீண்விரிவு. முந்துறவொரு சிறுகிஷயங் கேண்மின். வடமொழியில் 'ஹிரண்மய' என்றொரு சொல். பொன்மய மென்று இதற்குப்பொருள். இச்சொல் லோகத்திற்போலவே வேதத்திலும் வருவது. ஆனால் வேதத்தில் ஹிரண்மய மென்றல்லாமல் ஹிரண்யய மென்று வருவதுமுண்டு. ஸந்தியாவந்தன மந்திரத்தில் 'ஹிரண்யயேந' என்று ஓதப்பட்டுவருகின்றது. வடமொழிப்புலவரொருவர் ஹிரண்யய மென்னுஞ் சொல் வடமொழிவழக்குக்கு மாறுயதென்றும் இடைச்செருகலாய் வந்ததென்றுங் கொண்டு 'ஹிரண்மயேந' என்றே பாடம்பண்ணிக் கண்டனமு மெழுதிவிட்டாரென்று இங்ஙனே கேட்டிருந்த பலகதைகள் நினைவுக்கு வருகின்றன. வடமொழி வேதத்திற்கு லௌகிக வியாகரணமும் ஸாஹித்யநூல்களும் பயன்படாதவாறு போல இத்தமிழ் வேதத்திற்கும் பிறருடைய இலக்கணவிலக்கியங்கள் பயன்படா. வடமொழி வேதத்திலும் பொருந்துமிடங்கட்கு லௌகிகவ்யாகரணாதிகளைத் துணைகொள்வது போல இத்தமிழ்வேதத்திலும் பொருந்து மிடங்கட்கு இலக்கண விலக்கியங்களைத் துணைகொள்வது ஒக்கும். இரண்டு வேதங்களிலும் அநாதியான பாடபரம்பரையே சரணம். ஸ்ரீமந்நாதமுனிகளுக்குக் கிடைத்தபாடம் பெரியவாச்சான்பிள்ளைபோல்வாருடைய வியாக்யானங்களிற் பொலிகின்றது. வடமொழிவேதத்திலும் பாடபேதங்கள் பாஷ்யகாரர்களாலேயே காட்டப்பட்டிருத்தல் போல இத்தமிழ் வேதத்திலுமுள. முன்னோருரைகளாலும் குருகுலவாஸஞ்செய்த பெரியாருடைய பரம்பரையினாலும் பயில்கின்ற பாடங்கள் தவிர, அவரவர்கள் மனம் போனபடி ஊஹிப்பதும் கற்பிப்பதும் நலிந்துவலிந்து கூறுவதுமான பாடங்கள் "தொண்டை மண்டல வேதியர்வாழவே தூயதென்மறை வல்லவர் வாழவே" என்று வேதாந்ததேசிகரால் மங்களாசாஸனம் செய்யப் பெற்ற தமிழ்வைதிகர்கள் செவியேற்கத் தக்கவையல்ல.

32. தமிழர்களின் வழக்கு 'அஞ்சிலோதி' என்றேயிருக்கட்டுமே. அது தவறென்றுவது அதை மாற்ற வேண்டு மென்றுவது மொழிவாராருமில்லை. நூல்களில் பெண்டிரைப் பற்றின பேச்சுக்கள் பலவாய் நிகழ்கின்றன. மிகச் சிறு பிராயத்திலுள்ள பெண்களைப் பற்றிப் பேசு மிடங்களிற் கூறும் முறைமை வேறு; வயது முதிர்ந்த பெண்களைப் பற்றிக் கூறும் முறைமை வேறு. சிறு பிராயமாக வைத்துப் பேசும்

போது "வாயிற் பல்லு மெழுந்தில மயிரும் முடி கூடிற்றில" "முள்ளெயிறேய்ந்தில கூழை முடிகோடா" "முலையோ முழுமுற்றும் போந்தில மொய் பூங்குழல் குறிய" என்றிங்ஙனம் ஆழ்வார்கள் கூறுவதுண்டு. இத்தகைய பிரகரணங்களில் அஞ்சலோதி யென்னுஞ் சொல் வந்து, அதனை அஞ்சிலோதி யென்று திருத்துகிறோ மென்றால் சிலர் இசையவுங்கூடும். ஏன்? அஞ்சிலோதி = அம் சில் ஓதி; அழகிய சிலவான கேசத்தை யுடையவள் என்று பொருள் படுதலால். இளம்பருவத்திற்குரிய வழக்கேயிது.

33. திருமங்கையாழ்வார் திருவாக்கில் அஞ்சலோதி யென்று வந்துள்ள விடம் அசோகவனத்தில் வாழும் சீதா பிராட்டியை நோக்கியது. அப்போது பிராட்டியின் வயது முப்பத்திரண்டென்று ஸ்ரீராமாயணத்தினால் தெளிய வெளிது. அங்கிலைமையில், சிலவான கூந்தலை யுடையளாக அவளைக் குறித்தல் நேர்மையன்று. அஸம்பாவிதமிது.

34. அஞ்சிலோதி யென்று மாதர்க்குப் பொதுவாக வழங்கும் பெயராதலால் அதனையிட்டுப் பிராட்டியைக் குறித்தலில் பழுதில்லை யென்று சொல்ல வருவர். கேண்மின்; மங்கை மடந்தை அரிவை தெரிவை என்னுஞ் சொற்கள் போல அஞ்சிலோதி யென்பது மகளிர் பொதுப் பெயராக வழங்குமதன்று. வழங்குமதென்றே கொண்டாலும் அது தமிழருடைய வழக்கமாயிருக்கட்டும். ஆழ்வார் 'அஞ்சு அல் ஓதியை' என்றே திருவுள்ளம் பற்றிப் பிரயோகம் செய்தருளினர் என்பது அசைக்கமுடியாதபடி எம்மால் செந்தமிழா ராய்ச்சியில் நிரூபணம் செய்யப்பட்டுளது. பெரிய திருமொழியில் "ஐம்பாலணையுமழுந் தாரே" என்றும், திருவெழுகூற்றிருக்கையில் "ஐம்பாலோதியை யாகத்திருத்தினை" என்றும் இவ்வாழ்வார்தாமே அருளிச்செய்திருத்தலால் ஓதியைப்பற்றிப்பேசுமிடத்து அஞ்சென்னும் இலக்கம் இவ்வாழ்வார் திருவுள்ளத்தில் குடிகொண்டுள்ளதென்பது திண்ணமாகத்தேறுகிற்கும். அந்த அஞ்சுவகைகள் எவையென்னில், அப்பாகுபாடு ஒரேவிதமாகத்தான் இருக்க வேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை. திருச்சந்த விருத்தத்தில் வருகிற 4, 5, 6, 7, 8 முதலிய லக்கங்களுக்குப் பலவகையாகவும் பொருள்பணிப்பதுபோல இவ்வஞ்சையும் பலவகையாகப் பகரலாம்.

35. ஐம்பால் என்னுஞ் சொல்லுக்குப் பொருள் விவரிக்குமவர்கள் கூந்தலி னுள்ள ஐவகைக் குணங்களை யெடுத்துக்கூறுவர் சிலர்; கூந்தலை வாரிக்கட்டி யெடுத்து முடிக்குமிடத்து ஐந்துவகையான அலங்காரங்களுண்டென்று கொண்டு அவற்றைக் கூறுவர் சிலர். ஐவகைக்குணங்களை வகுக்குமிடத்திலும் வாசியுள்ளது. அவ்வைந்தனுள் கருமையையும் சேர்த்துக்கொண்டாலும் அல் என்பதனால் புனருக்தி வாராது. ஏனென்னில்; பஞ்சசயனம் என்னுஞ்சொல் ஐவகைத்தன்மைகொண்ட படுக்கையைக் கூறுகின்றது. அழகு, குளிர்ச்சி, மார்த்தவம், பரிமளம், வெண்மை என்பதாக ஐவகைத்தன்மைகளை விவரித்து "மெத்தென்ற பஞ்சசயனத்தின் மீதேறி" என்ற திருப்பாவைப் பிரயோகத்தையும் எடுத்துக் காட்டியுள்ளது லெக்ஸிகன் கோசம். ஐவகைகளுள் மெத்தென்றிருப்பதும் [மார்த்தவம்] ஒன்றாயிருக்க "மெத்தென்ற" என்று தனிப்படவுஞ் சொன்னது கூறியது கூறல் என்பாரில்லை. புநருக்திதோஷம் சங்கிப்பாரில்லை. ஸமுதாயத்தினுள் சேர்ந்ததையே தனிப் படவுஞ் சொன்னதனால் அக்குணம் சிறந்திருக்கு மென்பது தேறும்.

36. நூற்களில் புநருக்திசங்காபரிஹாரம் இரண்டுவகையாகச் செய்வதுண்டு. மேலே நிரூபித்தபடி யொன்று. புநருக்திப்ரஸ்தாவத்திற்கே இடமில்லாதபடி விவரணம் செய்திடுதல் மற்றொன்று. இரண்டும் சாஸ்த்ரஜ்ஞர்களுக்கு உடன்பாடேயாதலால் 'அஞ்சு அல்

ஓதியை' என்றவிடத்து எம்முடைய விரிவுரை எவ்வகையினும் வழுவுறாது. முதலியார் (பக்கம் 132-ல்) "திவ்யார்த்ததீபிகையாசிரியர் தமக்கு முன் உரையெழுதிய ஆசிரியரைப் பழித்தவராயினாரன்றோ, ஆம்; மறுத்தவரே பழித்தவரேயாவர்" என்றும், மேலே (பக்கம் 133-ல்) "கூறியது கூறலென்னுங்குற்றமாகும் என்பதனை அவ்வுரைகாரர்கள் மறந்தனர் போலும்" என்றும் எழுதியுள்ளதானது – ஒன்றையும் நேர்மையாக அறிய மாட்டாமையையே நிலைநாட்டிநிற்கும்.

37. "இங்குப் பெரியவாச்சான்பிள்ளை ஓதி என்பதற்கு முடியென்றெழுதிவைத்த பொருளை, கூந்தலென்று பொருளுரைத்த திவ்யார்த்த தீபிகையுரையாசிரியர் மறுத்தவரேயாவர்" என்று (பக்கம் 132-ல்) எழுதியிருப்பதும் மிக்கமருள். பெரியவாச்சான்பிள்ளை ஓதிக்கு முடியென்று பொருளுரைத்தாரல்லர்; ஓதி—மயிர்முடி என்றே யெழுதியுள்ளார். மயிர் முடியென்பதற்கு முடிந்தமயிர் என்பதே பொருள். சூடாமணி கண்டுதெளிக.

38. இவ்விடத்து, "அவ்வுரைகாரர்கள் எழுதி வைத்த சுருட்சி யென்பது கூந்தலுக்கு அழகைத்தாராது, கூந்தலினழகை யழிக்கும்" என்று (பக்கம் 133-ல்) எழுதியது—ஒன்றும் பாராமை. ஸ்ரீவேதாந்த தேசிகர் பகவத்த்யாந ஸோபானத்தில் "குப்யச் சோளீ வசந குடிலை: குந்தலை:" என்றருளிச் செய்தது காண்க. பலபடியாலும் வழுநிறைந்த இவ்விசாரத்தை முதலியார் மிகவும் விரித்தது வீணன விரிவே.

39. என்னைப்பற்றி முதலியார் செய்துள்ள நிந்தனைகளில் தமிழிலக்கணமறியாதவரென்னும் வார்த்தை பல தடவை வந்துள்ளது. இதற்குப் பிறர் எழுதுகிற பதிலைக் காட்டிலும் நானே யெழுதும்பதில் மிக முக்கியமென்று நினைக்கிறேன். "தோன்றா தோற்றித் துறை பல முடிப்பினும், தான் தற்புகழ்தல் தகுதியன்றே" என்று கூறிய நன்னூலாசிரியர் தாமே "தன்னுடையாற்றலுணராரிடையினும் தன்னை மறுதலைபழித்த காலையும் தன்னைப் புகழ்தலும் தகும் புலவோற்கே." என்றும் கூறியிருத்தலால் உள்ளவாறுரைக்கின்றேன். எமக்குத் தமிழாசிரியரும் திராவிடவேதாந்த வாசிரியரும் [பூர்வாச்ரமத்தில் மாதா மஹரும்] ஆன ஸ்ரீமத்பரமஹம்ஸ. அழகியமணவாள ராமாநுஜஜீயர் ஸ்வாமி தமிழில் உலகமறிந்த மஹா வித்வான். அவருடைய திருவடிநிழலிற் சார்ந்து இலக்கணவிலக்கியங்களை வரியடைவே கற்றதுண்டு. உலகம் நிறைந்த புகழாளரான வை. மு. சடகோபராமாநுஜாசாரியர் ஸ்வாமி ஒரு ஸமயம் காஞ்சீபுரம் வந்து சில மாதங்கள் அங்குவாழ்ந்திருந்த காலை அவரிடத்து யாப்பிலக்கணவகைகளும் வாசிக்கப் பெற்றதுண்டு. [ஆறு வருஷங்கட்கு முன் நாம் வெளியிட்டுள்ள செந்தமிழாராய்ச்சி நூலிலும் இவ்விஷயம் பரக்கப் பேசப்பட்டுள்ளது.] இன்னமும் நாம் பெறவேண்டிய இலக்கண விலக்கிய ஞானம் அபரிமிதமாகவுண்டெனினும் இந்த முதலியார் குறைகூறத்தக்கவளவிலே நிற்பதன்று நம்முடைய ஞானம்—என்பதை உலகம் நன்குணரும். போப்பையரிலக்கணப்படிப்பளவிலே நின்ற முதலியார், தமிழுலகமுற்றும் போற்றநின்ற பூர்வாசாரியர்களையே தமிழறியாதாரென்று நிந்திக்கும்போது நம்மை நிந்திப்பது வியப்பன்று. அவரது நிந்தைகளை மாத்திரங்கண்டு மகிழ்வெய்துவாரெய்துக. அந்த நிந்தை நம்மைச் சிறிதும் சாராதென்பதை நாலிரண்டு விஷயங்களை மூதலித்துத் தெரிவிப்போம்.

40. நமது உரைகளில் 'எம்பெருமானுலேயே, விடியற்காலத்திலேயே' என்பன போன்ற பிரயோகங்கள் இலக்கணவழுவாகவுள்ளனவென்று (பக். 59-ல்) ஏசுகின்றார்.

மிகவுயர்ந்த வித்துவான்களின் செந்தமிழ்வசன நூற்களிற் பழக்கமுடையார் இங்ஙனம் குறைகூறுர். உயர்திரு. சாமிநாதையரவர்களின் கட்டுரைகளில் இத்தகைய பிரயோகங் களைக் கடல் போலக் காணலாம். சிலவிடங்களையாவது நாம் எடுத்துக் காட்டவேண்டு மல்லவா ? நல்லுரைக்கோவை நாலாம் பாகத்தில் (பக். 70-ல்) "அவள் தன் வீட்டிலேயே இருந்தாள்." (பக் 106.) "அரசர் உண்மையிலேயே சிவபக்தர்." 'அங்கேயே, இங்கேயே' என்றிப்படி பல்லாயிரமுறை யெழுதியுள்ளார். இலக்கணமறியாதாரென்கிற பழிப்பு அவரையும் சாருமோ ? தேற்றப்பொருளேகாரத்தின்மேல் ஏகாரச்சாரியைபெற்று உலக வழக்கிற் காண்கின்ற விவை உரைநடைக்குப் பொருந்தும், செய்யுள் நடைக்குப் பொருந்தா வென்பது ஆராய்ச்சியாளர்களின் கருத்து.

41. தளைதட்டல் தளைதட்டாமை யென்பதுபற்றி முதலியார் (பக். 158-ல்) ஆராயப் புகுந்து "தட்டல்—பொருந்தல் ; தட்டாமை—பொருந்தாமை" என்றெழுதி, இந்த மருமம் நாமறியாது நேர்மைக்குமாருக எழுதிவிட்டோமென்று வசைமொழிகளைப் பொழிந் திருக்கின்ருர். இங்கு இவரைத் தெளிவிக்கிறேம் ; யாப்பருங்கலக்காரிகை—குணசாகர ருரையில் (24.) "ஈரடிவெண்பாக்குறள்" செய்யுட்கு அவதாரிகை வருமாறு—"...எனவுங் கிடந்த பாவிகற்பங்களுள் செப்பலோசையுடைத்தாய் ஈற்றடி முச்சீராய் ஏனையடி நாற் சீராய் வெண்சீரும் இயற்சீரும் வந்து வெண்டளைதட்டு வேற்றுத்தளை விரவாது..." என்று. இதில் தட்டு என்றதற்குப் பொருந்தி (அல்லது) இசைந்து என்று பொருள். இதுதான் முதலியாருடைய மருளுக்கு மூலமாயிற்று. தட்டு என்னும் வினையெச்சத்திற்கு வினைப் பகுதி தடு என்பதேயாம். தடுதல்—இசைதல் என்பதில் விவாதமில்லை. "தளை தட்டிக் கிடக்கிறது" "தளைதட்டுதலால்" என்னும் வழக்குக்களில் தடு என்னும் வினைப்பகுதி யுள்ளதாக நல்லாசிரியர் மாட்டுத் தமிழ் கற்ற நல்லறிஞர் நினையார். அடு அட்டு என்ற இரண்டு வினைப்பகுதிகளை நினைத்துக்கொள்க. "அட்டுக்குவிசோற்றுப்பருப்பதமும்" என்ற பாசுரத்தில் அட்டு என்ற வினையெச்சத்தின் பொருள் வேறு. "புட்டியிற் சேறும் புழுதியுங்கொண்டு வந்து அட்டியமுக்கி" என்ற பாசுரத்தில் அட்டியின் பொருள்வேறு. "இடகிலேனென்றட்டகில்லேன்" என்றவிடமுங் காண்க. அடகில்லேனும் அட்டகில் லேனும் ஒன்ருகுமோ? வேறல்லவா ? அடுதல் வேறு, அட்டுதல் வேறு என்பதையறியாத வர்களைப்போலவே தடுதல்வேறு, தட்டுதல்வேறு என்பதனையுமறியாத இம் முதலியார் தாம் நேர்மையான முறையில் இலக்கணம் பயிலாத குற்றத்தை உண்மையறிவாளர்மீதேற்றி இழித்துரைப்பது என்னே ! தளைதட்டுகின்றதென்னும் வழக்கு தளை சிதைகின்றதென்னும் பொருளில் காண்கின்றதேயன்றி தளைபொருந்தியிருக்கிறதென்னும் பொருளில் காணப்பட வில்லை. 'தளைதட்டு' என்பதை மாத்திரம் கண்டு இச்சொல்லின் சொரூபத்தையுணராது வீணுரவாரஞ்செய்கின்ற இவரை நோக்கி நாம் நூலெழுதத்தகுமா ?

42. சில வருஷங்களுக்குமுன் ஸ்ரீமான் உ. வே. மு. இராகவய்யங்கார் சுவாமிகளுக் கும் நமக்கும் நேர்ந்த விவாதத்தில் "கண்டுகொள்கிற்குமாறு" என்ற திருமழிசையாழ்வார் ஸ்ரீஸூக்தியில் தளை பிறழ்ந்திருப்பதாக அப்பெரியார் எடுத்துக் காட்டினபோது நாம் பதி லெழுதுகையில், இங்குத் தளை பிறழவில்லையென்றும் 'கண்டுகொள் கிற்குமா—று' என்று சீர் பிரித்துக் கொள்கவென்றும் எழுதியிருந்தோம். இந்த முதலியார் அதை யெடுத்துக்கொண்டு நமக்கு வெண்பாவிலக்கணம் சிக்ஷிக்க வருகிருர். இங்குச் சுருக்கமாக வெழுதுகிறேம். யாப்பருங்கல விருத்தியில்(பவானந்தம் பிள்ளையவர்கள் பதிப்பு. பக்கம் 220-ல்) "நுண்மை சால்கேள்வி நுணங்கியோர் சொல்லையாய், தொன்மைசால் நன்மருந் து" எனத் தனிக்

குறில் நேரசை இறுதிக் கண் வந்ததாயினும் சிறப்பின்மை புச்சரித்துக் கண்டுகொள்க." என்று சிறப்பின்மை காட்டிற்றேயல்லது தவறென்று காட்டிற்றில்லை. உள்ளபாடம் பொருந்துவதா யிருக்க, "கண்டு கொளகிற்கு மால்" என்று நான் பாடத்தைத் திருத்து கிறேனெனக் கூசாது கூறுமிவர் தியாகராச செட்டியாரவர்கள் ஐரோப்பியர்க்குக் கூறிய தையே சன்மானமாகப் பெறத்தகும். "உன்னுமவர்க்குள்ளமுருகும்" என்ற மணவாள மாமுனிகளின் பாடலையும் "உள்ள முருகு" என்று திருத்துகிறேனென்பதும் இவரது அதிகமான பிரசங்கங்களில் தலையானதாகும். அந்தச் செய்யுளினருகே "உள்ளினர்க்குத் தீங்கையறுக்கும்" என்னுமடியும் திகழ்கின்றது. அதனையும் திருத்தவேண்டியதே. உள்ளி வெங்காயங்களைத் திருத்துந் தொழிலிலே ஊன்றி நிற்றலொன்றே இவர்க்கு உறும்.

43. முதலியார் (பக்கம் 105ல்) * அஞ்சிறையமடநாராயளியத்தாய்* என்ற திரு வாய்மொழிப் பாசுரத்தில் 'அளியத்தாய்' என்ற சொல்லை எடுத்துக்கொண்டு விண்விரிவு மிகமிகச்செய்து "அளியுத்தாய் என்று திருத்திக்கொள்ளவேணும்; அது அளியுற்றாய் என்ப தன் விகாரமொழி" என்று எழுதியிருப்பது தமிழ்நாட்டில் நடையாடத்தகாதது. திருவாய் மொழியில் அளியத்தாய்போலே திருமாலையில் அளியத்தேனுள்ளது. இவர் காட்டுகிற திருத்தம் சிறிதும் அவசியமில்லை. கம்பராமாயணத்தில் யுத்தகாண்டத்தில் இரணியன் வதைப்படலத்தில் "உந்தையையுன்முன்" என்ற செய்யுளில் மூன்றாமடி—"அந்தமிலாவன் பென்மேல் வைத்தாய் அளியத்தாய்" என்பது. நாகபாசப் படலத்தில் "இத்தலையின்ன வாற்ற" என்ற செய்யுளில் மூன்றாமடி "அத்தலைக் கொடியனென்னை யட்டிலனளியத்தே னன்" என்பது. அளி—பகுதி; அத்து—சாரியை. ஆய் என் என்பன முன்னிலை தன்மை யொருமை விகுதிகள். இங்கு மற்றும் பலவகையாராய்ச்சிகள் காட்டவேண்டியவையுள் ளன. தமிழறியாமக்களிடம் காட்டிப் பயனென்கொல்? முதலியார் (பக்கம் 3ல்) எழுதி யதும் மிகத்தவறென்க.

44. திருமாலையில் "சலமிலாவணிலும் போலேன் என்பது உடன்பாடேயன்றி எதிர் மறையன்றென" எழுதுமவர்க்குத் தமிழறிவு எத்தகைத்து என்பதை ஆராய்வதற்கு அதிகப் படிப்பு வேண்டா. உடன்பாட்டில், போல்வான் போல்வாய் போல்வேன் என்றன்றோ வரும். சொல்லேன் கொல்லேன் நில்லேன் என்பனபோல் போலேன் என்பதும் எதிர் மறையே. போல்—இடைச்சொல். (அதுவே பகுதி.) ஏன்—விகுதி. எதிர்மறையாகா ரம் புணர்ந்து கெட்டது. போலேனென்பது உடன்பாட்டுப் பொருள்படுதற்கு நியாயமில்லை. மனம்போனபடியெல்லாம் எழுதிவைத்திட்டுச் சிலரை வஞ்சித்துச் சிறப்புரையும் பெற்று வெளியிட்டதுதான் வியப்பு. சிறப்புரை தாராதாரை வைதிருப்பது மிகநன்று.

45. முதலியாருடைய மருள் ஒப்பற்றது. திவ்யப்ரபந்தவுரையாசிரியர்கள் யாவ ரும் வடமொழி தென்மொழிக் கடலில் ஆழ்ந்தவர்களாயிருக்க, ஒரு மொழியையும் கல்லாத விவர் அவர்களை அடிக்கடி அருவருக்கத்தக்க புன்மொழிகளாற் பழித்திருப்பது பெரும் பாதகம். அவ்வாசிரியர்களது திவ்ய ஸூக்திகளில் ஸ்நிக்ததை என்றொரு சொல் உள்ளது; அதன் வடிவமும் பொருளும் ஒன்றுமறியாதவிவர் அதை யெடுத்துப் பழிக்கிறார். அவர்கள் அருளிய சொல் ஸ்நிக்ததை என்றே யொழிய வேறுவகையல்ல; அச்சுப்பிழையுமில்லை. அதனை இவர் ஸ்நிக்தை என்றே யெடுத்துப் பலவிடங்களிலும் எழுதுகிறார். [பக்கம் 47, 152 முதலியன காண்க.] ஸ்நிக்தை யென்பது தோழிக்குப் பெயராகும். அப்பொருளுக்கு இங்கு ப்ரஸக்தியேயில்லை. மற்றொன்றும் கேண்மின். நமது தீபிகையுரையில் "முத்த

மிருந்தவா" என்ற விடத்து "பாலிசர்களின்" என்றொரு பதம் நாம் எழுதியிருக்கிறோம். அதன் உருவமும் பொருளும் இவர்க்குத் தெரிய வழியில்லை. ஆதலால் அச்சொல்லை 'பாலிகர்களின்' என்றே அடிக்கடி யெடுத்துக் காட்டுகிறார். (பக்கம் 121, 122 முதலியன காண்க.) பாலிகர் என்றொரு சொல் எங்கேனுங் கேட்டதுண்டோ? திருமங்கையாழ்வார் "சூழ்கழல் சூட நின்ற" என்றொரு பாசுரம் திருவெவ்வுளூர்ப் பதிகத்தில் அருளிச் செய்துள்ளார். இதை இவர் 'சூழ் கடல் சூட நின்ற' (பக்கம் 40) என்றெடுத்துக் காட்டுகிறார். சிவபிரான் சூடிய கடல் எதுவோ? இப்படிப்பட்ட இவரது மருள் வெள்ளத்தைப் பன்னியுரைக்குங் காற் பாரதமாம். இவைகிடக்க.

46. பரமரஸிகர்களான அறிஞர்கட்கு முக்கியமானவை சில உணர்த்துகின்றோம். தமிழில் நம்பி என்பதான ஒரு சொல் யாவருமறிந்தது. இதற்கு ஆண்களிற்சிறந்தவன் என்றிவ்வளவே பொருளறிவர் சாமானியர். நம் பேராசிரியர்கள் 'நிறைந்தவர்' என்று சிறப்புப் பொருள் கூறுகின்றனர். அதனைப் பற்றியே லெக்ஸிகன் கோசத்தில் நம்பி என்பதற்குப் பூரணன் என்னும் பொருளும் எழுதப்பட்டுள்ளது. பெரிய நம்பி—மஹா பூர்ணர்; திருக்கச்சிநம்பி—காஞ்சி பூர்ணர்; திருமலை நம்பி —ஸ்ரீசைல பூர்ணர். திருக்கோட்டியூர் நம்பி —கோஷ்டி பூர்ணர். என்றிப்படிப்பட்ட வ்யபதேசங்கள் பல்லாயிரம். நம்பி என்பதற்கு நேரான பொருள்—நிறைந்தவரென்பது. அப்பொருளில் பெண்பாற் பெயர் நங்கை யென்பதாம். இவ்வாறே வியாக்கியானங்கள் அருளிச் செய்து வருகின்றார்கள். பகவானை நம்பி யென்னும்போது அவரிடத்தில் நிறைந்திருப்பது எது வென்னில், ஷாட்குண்யபரிபூர்ணனையே பகவானென்பராதலால் திருக்குணங்களால் நிறைவுதான் கருதப்படும். ஆகவே நம்பியென வருமிடங்களில் திருக்குணம் நிறைந்தவர் என்றே பெரும்பாலும் உரை செய்தருள்வர். இனி, மேலே கவனிப்பது.

47. பெரியாழ்வார் திருமொழியில் (2—8—9.) * தருக்கேல் நம்பி சந்தி நின்று தாய் சொல்லுக் கொள்ளாய் சிலநாள் * என்ற விடத்து நம்பி என்ற அண்மைவிளிக்கு—தீம்பு நிறைந்தவனே! என்று மணவாளமாமுனிகளால் பொருளருளிச் செய்யப்பட்டது. நம்பி என்னுஞ் சொல்லுக்கே தீம்புநிறைந்தவனென்று பொருளன்று. நிறைந்தவனென்பதே பொருள். அந்த நிறைவைச் சந்தர்ப்பங்களுக்குத் தகுதியாகக் கொள்வது அழகியதாதலால், 'கண்ணா! தாய்சொல்லைக்கேளாமல் கண்டபடி செய்து திரியாதே' என்று சிக்ஷிக்கிற பிரகரணமானதுபற்றி அதற்குச் சேர, தீம்புநிறைந்தவனே! என்று உரைத்தலே ஏற்கும். பெரியதிருமொழியில் (10-4-3.) * தெருவில் திரிகின்ற நம்பீ! செய்கின்ற தீமைகள் கண்டிட்டு * என்ற விடத்துப் பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்யானமே மணவாளமாமுனிகளுக்கு வழிகாட்டியாயமைந்தது. இரண்டிடமும் தீம்புசெய்தலைக் கண்டிக்கிற இடமாதலால் இப்பொருளே ஏற்றிருக்குமென்று மஹா ரஸிகர்களான ஆசாரியர்கள் திருவுள்ளம் பற்றினர். இந்தச்சுவையையறிந்து உருகுங்குடியிலே முதலியார் பிறந்தாரல்லரே. இப்பொருளுக்குச் சாமிநாதய்யரவர்கள் ஊற்றின்கண் நுண்மணல்போலுருகாநிற்பர் நீராயே. இதைப்பற்றி இவர் (பக்கம் 57ல்) அம்பு தொடுக்கிறார்.

48. அன்பர்களுக்கு இங்கு ஒன்று நினைப்பூட்டவேண்டியது அவசியமாகிறது. சிறியதிருமடலின் முடிவில் "எண்ணருஞ்சீர்ப் பேராயிரமும் பிதற்றி, பெருந்தெருவே ஊராரிகழினும் ஊராதொழியேன்நான், வாரார்பூம்பெண்ணைமடல்." என்றுள்ளது. இங்கு, ஊராரிகழும்படியான காரியமொன்று செய்யப்புகுவதாக வெளிப்படையாய்க் கூறப்பட்

டது. அதாவது எம்பெருமானைத் தெருவேறப் பழித்துக்கொண்டு புறப்படுதல். இக்காரியஞ் செய்யும்போது எண்ணருஞ்சீர்ப் பேராயிரமும் பிதற்றுகை எதற்கு? மடலூர்வதற்கு ஸஹஸ்ரநாமபாராயணம் மந்த்ரமா என்ன? அன்றே. அப்படியிருக்க "பேராயிரமும் பிதற்றி" என்று எதற்காகச் சொல்லிற்று? என்று ஆராய வேண்டுமே. இதன் மருமத்தை ஒரு தமிழ்ப்புலவரும் கண்டறியகில்லார். இற்குப் பேராசிரியர் பணித்தருள்வது பாரீர்;—"[எண்ணருஞ்சீர்ப் பேராயிரமும் பிதற்றி] குணகதனம் பண்ணுகைக்கு ஒரு ஸஹஸ்ரநாமமுண்டிறே; அப்படி குணஹானிக்கும் ஒரு ஸஹஸ்ரநாமம் பண்ணுகிறேன்." என்பது பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செயல். எனவே இங்கு மூலத்தில் பேராயிரமென்றது எம்பெருமானது குணக்கேடுகளைத் தெரிவிக்கிற புதியதொரு ஸஹஸ்ரநாமமென்றதாயிற்று. எதிர் மறையிலக்கணையிற் பொருள்கொள்ள அவசியமுளதே. இதன் சுவடறியாதார் இதை தூஷிக்கவேண்டியதுதவிர வேறென்ன? இதெல்லாம் முதலியார் கண்ணிற் படவில்லை போலும். சோம்பலை அகற்றி முழுதும் பார்வையிட்டுச் சுமை சுமையாகத் தூஷிக்கலாமே.

49. நூலறியாமையோடு சுவையறியாமையும் [அரஸிகத்வமும்] பெரிதுமுள்ளது பிறர்பால். * ஊருண்கேணியுண்டுறை * என்னும் குறுந்தொகைப்பாவுக்கு யாம் பொருளெழுதுகையில், தோவுழி தோடுவுழி—தொட்டவிடத்தில்; விடுவுழி விடுவுழி—விட்டவிடத்தில் என்று பொருளெழுதிவிட்டோமாம். இதனால் பெரிய அனர்த்தம் விளைந்துவிட்டதாம். கணவன் தன் காதலியை நெற்றியைத்தொட்டால் அவளுடைய நெற்றியில் பரவியிருந்த பசலைமட்டும் நீங்கி அவளுடைய தோள் மார்பு முதலிய வுறுப்புகளில் பரந்துகிடந்த பசலை நீங்காது கிடக்கும் என்று சொல்லவேண்டி வந்துவிடுமாம். இதனை 195 முதலிய பக்கங்களில் பன்னிப்பன்னிப் பிரசங்கித்துப் பழிக்கிறார். யாமெழுதியவுரையில் இங்ஙனே தோன்ற ப்ரஸக்தியே யில்லை. தொடுமிடத்தில் விடுமிடத்தில் என்றால் தொடுங்கால் விடுங்கால் என்று பொருள்படாதோ? நூற்பிரயோகங்கள் இப்படியே யன்றோவுள்ளன. திருமங்கையாழ்வார் "கள்ளுநும் பைந்துழாய் மாலையானைக் கனவிடத்தில் யான்காண்பன்" என்கிறார். கனவிடத்திலென்றதற்குக் கனவு காலத்திலென்பதன்றோ பொருள்.

50. இப்பொருள் வேண்டா; தூஷிப்பவர் நினைத்த பொருளே யாகுக. ஓர் அவயவத்தைத் தொட்டபோது அந்த ஓரவயவத்தில் மாத்திரம் பசலை நீங்கி மற்ற அவயவங்களிற் பசலை படர்ந்திருக்குமென்று கொண்டால் என்ன குடி கெட்டுப்போம்? * ஊருண்கேணி யென்கிற விந்தச் செய்யுள் உயர்வுநவிற்சியணியில் [அதிசயோக்தியில்] தானே அமைந்தது. அவ்வதிசயோக்திக்கு ஓர் எல்லையுண்டோ? பல்லிநுண்பற்றாக ஸர்வாங்க ஸம்ச்லேஷம் பண்ணினாலொழியப் பசலை அறவே நீங்காது என்று தேறுவது மிக்க சிறப்பேயன்றோ. இதனைக் குறையாகக் கருதிப் பழித்தல் பொருந்துமோ? காதலியின் மூக்கையோ கண்ணையோ காதலன் தொட்டுவிட்டாற்போதுமோ? அப்படியாயின் இருவரும் ஒரு வீட்டினுள்ளேயிருந்து தனிக்கிடை கிடந்தாலும் போதுமே. பிரிவில்லாமைதானே வேண்டுவது. காதலியைப் பிரிந்து காதலன் வெளியூர்க்குச் செல்லாமலிருந்தாலும் போதும் போலும்.

51. நாச்சியார் திருமொழியில் (12—2-ல்) * பண்டு பண்டாக்கவுறுதிராகில் * என்றும், பெரிய திருமொழி (11—1—9-ல்) * என்னிறம் பண்டுபண்டுபோலொக்கும் * என்றுமுள்ளவிடங்களில் ஒருவருடையமதிக்கும் எட்டாததாய் பூருவாசாரியர்கட்கே கிலமான விசேஷார்த்தம் தீபிகையுரையில் மிக விரித்துரைக்கப்பட்டுளது. அதனைச் சிறிது

மறியகில்லாதவிவர் (பக்கம் 101-ல்) "பண்டு பேண்டாக்க" என்றே பாடமிருத்தற் பாலதென்று திருத்தம் காட்டுகிறார். பண்டு பெண்டு—பழைய பெண் என்று பொருளாம். அந்தோ! ஈதென்னதிரிபுணர்ச்சி!. அப்பொருளாயின் 'பண்டைப் பெண்டு' என்றாகுமேயல்லது பண்டுபெண்டென்று கிடவாதென்பதைப் போப்பையரிலக்கணம் படித்தவனும் எளிதினுணர்வானே. சொற்சுவை பொருட்சுவைகளில் ஒன்றுமறிய கில்லாதவிவர் மயர்வறமதிநல மருளப் பெற்ற ஆழ்வார்களையும் அவர்களினும் மேம்பட்ட ஆசாரியர்களையும் நெஞ்சினாலணுகுதவற்கு முரியரல்லர். திருவிருத்தத்தில் (பா. 48-ல்) "கொள்வதோவுண்டு பண்டு பண்டே."

52. இம்முதலியார் ஸ்ரீ வைஷ்ணவ மஹாசார்யர்களின் ஞானத்தைப்பற்றியும் அவர்களது உரைநடையைப்பற்றியும் எவ்வளவு பழித்தாலும் அத்தனையும் ஓங்குகதிரோன்மீது உமிழ்வதோடொக்கும். தமிழ்நாடு முழுவதும் சந்திரஸூரியர்களுள்ளவரையில் ஸ்ரீ சாமிநாதய்யரவர்களைப் போற்றுமேயல்லது இவரையும் இவரைப்போன்றவர்களையும் நெஞ்சாலும் நினையாது. அகத்தியரின் அபராவதாரமென்னநின்ற அப்பெரியார் திவ்யப்ரபந்த வியாக்யானப் பேராசிரியர்கள்பால் எவ்வளவு கௌரவ புத்தியுள்ளவரென்பதை உலகம் நிச்சலும் நினைத்துய்ய இந்நூலின் முகப்பில் அவரது இரண்டு கட்டுரைகளை நல்லுரைக்கோவையிலிருந்தெடுத்து வெளியிட்டிருக்கின்றோம். அதைப்பற்றி இன்னமுஞ் சிறப்பாகத் தெரிவிக்கவேண்டியதுமுண்டு; அதனை இங்கே தெரிவிக்கின்றோம்.

53. தியாகராச செட்டியாரென்னும் தமிழ்ப்பேராசிரியருடைய சரிதையை வெளியிடும் பிரகரணத்திலன்றோ ஐயரவர்கள் திவ்யப்ரபந்த வியாக்யானவாசிரியர்களின் புலமையைப் பாராட்டி வெளியிட்டிருக்கிறார். அந்த செட்டியாருடைய சரிதை நல்லுரைக்கோவை நாலாம் பாகத்தில் சுருக்கமாக உள்ளது. அங்ஙனல்லாமல் "வித்துவான் தியாகராச செட்டியார்" என்றே பெயரிட்டு ஒரு பெரிய புத்தகம் எழுதி வெளியிட்டிருக்கின்றார் சாமிநாதையரவர்களே. அது கலைமகள் வெளியீடு. 208 பக்கங்கள் கொண்டது. 1947 ஆம் வருடத்தில் வெளிவந்த இரண்டாம்பதிப்பு உலகம் பரவியுள்ளது. அவர் வீரசைவரென்பது அப்புத்தகத்திற் பல விடங்களிற் பேசப்படுகிறது, அவரைப்போன்ற தமிழ்ப்புலவரைத் தமிழுலகம் பெறுவது அருமை என்று அப்புத்தகத்தின் முடிவு வாக்கியமுள்ளது. தமிழறிவில் ஒத்தாரும் மிக்காருமில்லாதவரென்று உலகம் போற்றும் சாமிநாதய்யரவர்களே தம் கையால் இப்படியெழுதினாரென்றால் அந்தச்செட்டியாருடைய தமிழறிவின் கனம் எத்தகைத்தாயிருக்கவேண்டும். அந்தச் செட்டியாருக்குத் திவ்யப்பிரபந்த வியாக்யானங்களின் பெருமை எப்படித் தெரிந்தது? அவரே புத்தகங்களைப் பார்த்து அறிந்தனரா? அல்லது ஒரு மூட நம்பிக்கை கொண்டு வைணவ நூல்களைப் புகழ்ந்தனரா? என்பதை நாம் ஆராய வேண்டுமே. மேலே குறித்த புத்தகத்தில் பக்கம் 58-ல் இவ்விஷயம் சாமிநாதையரவர்களாலேயே விளங்கக் காட்டப்பட்டுளது.

54. அதாவது, தியாகராச செட்டியார் ஸ்ரீரங்கத்தில் வாழ்ந்துவந்தபோது அவர் குடியிருந்த விடத்திற்கருகில் திவ்யப்பிரபந்தத்திலும் அதன் வியாக்யானங்களிலும் வைஷ்ணவமத கிரந்தங்களிலும் தேர்ச்சிபெற்ற ஸ்ரீ வைஷ்ணவப்பெரியார் சிலர் இருந்தனர். வியாக்யானங்களினால் பல அரிய விஷயங்கள் தெரியவருமாதலின் இவர் [செட்டியார்] அடிக்கடி அவர்களிடம் சென்று விஷயங்களைக் கேட்டு மகிழ்ந்து பாராட்டி வருவார். இவர் தீவிரமான சைவராயினும்

தமிழின் நயத்தை எவ்வாறெல்லாம் தெரிந்து கொள்ளலாமோ அவ்வாறு தெரிந்து கோள்வதில் எப்போதும் ஆர்வம் உள்ளவராக இருந்தார்...என்று உண்மை விளக்கப்பட்டுள்ளது.

55. இதன் விவரத்தை நாம் விசாரித்ததில் ஸ்ரீரங்கத்தில் மஹாவ்யாபகராய் உபய வேதாந்தப் பேராசிரியராய் எழுந்தருளியிருந்த கபிஸ்தலம் அனந்தாசாரியர் ஸ்வாமியின் பகவத்விஷய காலக்ஷேப கோஷ்டியிலே செட்டியார் அந்வயித்துக் கேட்டுவந்தாரென்றும் அதனால்தான் இவர்க்கு திவ்யப்ரபந்த வ்யாக்கியானங்களில் அளவுகடந்த மதிப்பு உண்டா யிற்றென்றும் தெரியவந்தது. இப்பெரியாரை சைவப்பிரபந்தங்களுக்கு உரையெழுதும்படி அடிக்கடி நிர்ப்பந்தித்துவந்த பட்டாபிராம பிள்ளையென்பவர் வைஷ்ணவ மதத்தவராம். வைஷ்ணவராயிருந்தும் அவர் திவ்ய ப்ரபந்தவியாக்கியானங்களின் பெருமையை யறியா திருந்தாராம். அதனாலேயே அவர் இந்த செட்டியாரிடம் அடிக்கடி "திவ்ய ப்ரபந்த வியாக்கியானங்கள் போலவே நீரும் சைவப்பிரபந்தங்களுக்கு ஏன் உரையெழுதக் கூடாது" என்று சொல்லிவந்தாராம். கடைசியாக ஒருநாள் அவர்க்கு செட்டியார் திவ்யப்ரபந்த வியாக்யானப் பெருமையை எடுத்துரைக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டுவிட்டதாம். அப் போது அவர் சொன்ன வார்த்தைகள் நல்லுரைக் கோவையிலுள்ளவாறு முன்னம் எடுத்துக் காட்டப்பட்டன. மேலே சொன்ன 208-பக்கங்கள் கொண்ட தனிப்புத்தகத்தில் பக்கம் 144-ல் அவை இன்னமும் விரிவாகக் காண்கின்றன.

> "செட்டியார் ;—திவ்ய ப்ரபந்தங்களுக்கு வியாக்கியான மெழுதினவர் பெருமை உங்களுக் குத் தெரியாதுபோலிருக்கிறதே. அவர்கள் வடமொழி தென்மொழி யிரண்டிலும் தேர்ந்த புலமையுடையவர்கள். அவர்கள் வியாக்கியானத்தால் எவ்வளவு உயர்ந்த இரகசியங்கள் வெளிப்படுகின்றன. திவ்யப் பிரபந்தத்தால் வியாக்கியானங்களுக்குப் பெருமையா, வியாக்கி யானங்களால் அப்பிரபந்தங்களுக்குப் பெருமையா என்று எண்ணும்படியல்லவா அவை யிருக்கின்றன. உங்களுக்குத் திருவாசகத்தின் பெருமை எப்படித் தெரியவில்லையோ அப்ப டியே திவ்யப் பிரபந்தங்களின் வியாக்கியானப் பெருமையும் தெரியவில்லை யென்றுதான் நினைக்கவேண்டி யிருக்கிறது."

என்று செட்டியார் கூறியதாகச் சாமிநாதையர் கையால் எழுதப்பட்டு உலகம் பரவியுள்ளது.

56. இவர்களுக்கு உண்மையில் திவ்யப்பிரபந்த வியாக்யானங்களில் இவ்வளவு ஈடு பாட்டிற்குக் காரணம் நல்லாசிரியர்களிடத்து அவ்வியாக்கியானங்களின் சுவையை அவர் கள் அருந்தப்பெற்றதேயாமென்பது மேலே விளக்கமாயிற்று அந்தப்பாக்கியம் முதலி யாருக்கு இல்லாமைபற்றியே இப்படி நிந்தித்து அபசாரப்படுகுழியில் விழுந்துழல நேர்ந்தது.

57. 1917 ஆம் வருஷத்தில் முதன் முதலாக மதுரையிலும், பிறகு 1934 ஆம் வரு ஷத்தில் குளித்தலையிலும், பிறகு அடிக்கடி சென்னையிலும் ஐயரவர்கள் எம்முடைய உபந் யாஸ கோஷ்டியில் தலைமை வஹிக்க நேர்ந்தது. அவ்வப்போதுகளில் அவர் நம்பிள்ளை பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திகளைக் கண்டபாடஞ் செய்திருந்தவரென்பதை நேரிலறிந் தோம் யாம். ஒருமுறை நம்மைக் கண்டுபேசவே சின்னகாஞ்சீபுரத்திற்கு வந்திருந்து ஒரு நாள் முழுவதும் பேசினபோது அவர்க்கு நம்பிள்ளை ஸ்ரீஸூக்திகளில் இருந்த ஒப்புயர்வற்ற பிரதிபத்தியை விசேஷித்தறிந்து வியக்க நேர்ந்தது. எமக்குள்ள ஆசார்ய பக்திக்கும் அப் பெரியாரது பொன்மொழிகளே மூலகாரணமென்றுஞ் சொல்ல இடமுண்டு.

58. உண்மையறிவாளிகளின் போக்கு இங்ஙனமிருக்க, ஒருவரிடத்தும் ஒன்றுங்கல்லாமல் வீணான நிந்தனைக்கென்றே விரதங்கொண்ட பொறாமையாளர்கள் எது எழுதினால் தானென்ன? எத்தனை புத்தகங்கள் வெளியிட்டால்தானென்ன? மேன்மேலும் ஓயாது தமது நிந்தைமலிவிந்தைகளைப் பரவச்செய்துகொண்டே கிடக்க. இனித் தமிழுலகம் அவற்றைக் கண்கொண்டு காணாது.

“தண்டேன் நுகரா மண்டூகம் தண்டாமரையினுடன்பிறந்தே
வண்டே கானத்திடைப்பிறந்தும் வந்தே கமலமதுவுண்ணும்
அண்டே பழகியிருந்தாலும் அறியார்போல்லோர் நல்லோரைக்
கண்டே களிப்பருறவாடிக் கற்றோர் நல்லோர்பெற்றக்கால்”

என்னுஞ் செய்யுளில் முதலடிக்கும் மூன்றுமடிக்கும் இலக்காகிப் பிறந்துள்ள சிலர்க்கே அவை உகப்பாகும். ஆகுக.

ஆழ்வாராசாரியர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ காஞ்சி அண்ணங்கராசாரியர்
எழுதிய
‘நான்கண்ட நல்லது.’
முற்றிற்று.

ஸ்ரீ:

# திவ்யார்த்த தீபிகைச் சிறப்பின் முன்னுரை

(T. T. பாஷியமையங்கார்)

ஸமீபகாலத்தில் வெளிவந்த அஹோபில மடத்துப்பத்திரிகையான ந்ருஸிம்ஹப்ரியா வில் [விரோதி௵ கார்த்திகை௴ 11 ஸஞ்சிகை பக்கம் 344ல்] புத்தக விமர்சனப்பகுதியில் "பெருமையும் பொறுமையும்" என்றொரு புத்தகம் கிடைத்ததாகவும், அது ஸ்ரீமான் M. பார்த்தசாரதி யென்னும் பெரியாரொருவர் எழுதி வெளியிட்டதாகவும், 0—3—0 விலையுடையதாகவும், ஆழ்வார்களின் திவ்யப்பிரபந்தங்களுக்குப் பூர்வாசார்யர்கள் அருளிச் செய்த வியாக்யானங்களில் குறைகூறினவர்களுக்கு விடையாக அப்புத்தகம் தோன்றிய தாகவும் எழுதப்பட்டிருந்தது. உடனே அப்புத்தகத்தை வரவழைத்துப் பார்த்தோம். அது எந்த தூஷணச்சுவடிக்குக் கண்டனமாகத் தோன்றியதோ அந்த தூஷணச்சுவடியை யும் சம்பாதித்துப் பார்த்தோம். பெரிய காஞ்சீபுரத்தில் எண்ணெய்க்காரத் தெருவில் இருந்துவரும் சீனிவாச முதலியாரென்னு மொருவர் எழுதியது அது. உண்மையில் இதற்கு எவ்விதமான கண்டனம் வெளிவரவேண்டுமோ அவ்விதமான கண்டனம் வெகு அழகாக வெளிவந்துவிட்டது. இதுதான் பெருமையும் பொறுமையும் என்கிற சிறுநூல். அது 12 பக்கமேயிருந்தாலும் சொல்லித்தீரவேண்டிய விஷயங்களை வெகு அற்புதமாகவும் பிறர் வாய்திறக்கமுடியாமலும் சொல்லியிருப்பதால் அதற்குமேற்பட இன்னமும் எழுத வேண்டிய கண்டனம் யாதுமில்லை.

பண்டிதர்களின் கோஷ்டியில் ஒரு விஷயம் அவசியமாக அறிவிக்கவேண்டியதுண்டு. பழங்கள் நிறையப்பழுத்துத் தொங்கும் மரத்தின்மீது கல்லடியும் தடியடியும் விழுவது எங்குங்கண்டதாகும். மொட்டை மரத்தின்மீது கல்லெடுத்து வீசி யெறிவாருமில்லை, தடி யெடுத்தடிப்பாருமில்லை. அதுபோல, கல்விக்கனிகள் மலிந்து விளங்குகின்ற கல்ப வ்ருக்ஷ மாகிய மஹாசார்ய சிகாமணியின்மீது மூலை முடுக்குகளிலிருந்து ஒவ்வொருவராகக் கிளம் பித் தம்மாலான தொண்டுகளைச் செய்யப்பார்க்கிறார்கள், செய்தும் வருகிறார்கள். இதனா லென்னாகும். ஆனால் ஒரு விசேஷமுண்டு. பழுத்த மரத்தின்மீது கற்களை வீசியெறிகிற வன் விழுந்த கனிகளைத் தானொருவனே தின்பான். இங்கு அப்படியில்லை. இந்த கல்பவிரு க்ஷத்தை நோக்கி ஒருவன் ஒன்று செய்ய, உலகமெல்லாம் பழங்களை வாரியுண்ணும்படியா கின்றது. இப்போதும் அப்படியே ஒரு பாக்கியம் நேர்ந்திருக்கின்றது. ஸ்ரீஸ்வாமிஸன்னிதி யில் நெடுநாள் கேட்டு விஷயங்களை நன்குணர்ந்தவர்களில் தலைவரான ஸ்ரீமான். உ. வே. வித்வான். உபய பாஷாப்ரவீண. தி. ந. ச. திருவேங்கடாசாரியர் ஸ்வாமி அத்தூஷண புத்த கத்தை யாராய்ந்து வெகு நேர்த்தியாக எழுதியிருக்கின்ற திவ்யார்த்த தீபிகைச் சிறப்பென் னும் திவ்ய நூல் பண்டிதர்களனைவர்க்கும் நிதியாக வெளிவருகின்றது.

ஸ்ரீவைஷ்ணவப் பேராசிரியர்களின்மீது பொறாமையினால் எறிட்டுரைக்கும் தூஷணங் கள் அணுவளவும் எறமாட்டாவென்பதை அசைக்கமுடியாத ஆதாரங்களினால் நிரூபணஞ்

செய்வதும், தூசனங்களை எடுத்துப் பழிக்குமவருடைய தமிழறிவு மிகக் கேவலமான தென்பதை விளங்கக்காட்டுவதும் இந்நூலில் மிக மெச்சத்தக்க முறையில் அமைந்துள. ஆனால் ஒரு பெரிய துயரம் பெரியார்கட்குளதாம்; அஃதென்னெனின்; எடுத்துக் கழிக்கவுந்தகாத பேச்சுக்களைப் பொருள் படுத்தி ஒரு நூலெழுத நேர்ந்ததே யென்பதாகும். வைஷ்ணவ நூல்களைத் தூஷிப்பதோடு நில்லாமல் பொதுவான தமிழ்ப் பேராசிரியர்களை வரையுமே தூஷித்தும், ஒரு தமிழ்நூலையும் பாராமலும் ' மனமே அரசன், மதியே மந்திரி ' என்ற கணக்கிலே யெழுதுகின்ற முதலியார் எது எழுதினால்தானென்ன ? எவ்வளவு நிந்தைகளைப் பொழிந்தால்தானென்ன ? இவற்றால் ஒரு விவேகியின் உள்ளமும் சிறிதும் தளும்ப ப்ரஸக்தியில்லையாயிருக்க, அந்தப் புல்லுரைகளைப் பொருள்படுத்தி இவ்வளவெழுத வேண்டுமோவென்று வெறுப்புறுதார் மிகச் சிலரே யாவரன்றே. முதலியார் வைஷணவப் பேராசிரியர்களை மாத்திரமல்லாமல் பொதுவான தமிழ்ப் பேராசிரியர்களையும் தூஷிப்பவர் என்பதை இங்குச் சுருக்கமாகக் காட்டுகேன் காண்மின். முதலியாரது சுவடியில் (பக்கம் 153-ல்) கம்பராமாயணவுரைகாரர்களைப் போலிப் பொருளுரைத்தார்களாகப் பழித்திருக்கின்றது. அது கிடக்க. பெரியதொரு விஷயம் கேண்மின்.

தமிழில் குறுந்தொகையென்பது ஒரு சிறந்தநூல். இது நானூறு பாக்களையுடையது. இது, கீர்த்திமூர்த்தியான மஹாமஹோபாத்யாய. சாமிநாதையரவர்களால் பன்னிரண்டு வருஷங்களுக்கு முன்பு மிகச்சிறந்த முறையில் அச்சியற்றப்பெற்று வெளிவந்தது. எந்த வைணவப் பேராசிரியர்கட்குத் தமிழ் நாற்றமே தெரியாதென்று முதலியார் மொழிகின்றாரோ அந்த வைணவப் பேராசிரியர்கள் இந்தக் குறுந்தொகையினின்று 399 ஆம் பாவை எண்ணூறு வருடங்களுக்கு முன் கையாண்டிருக்கிறார்கள். நம்மாழ்வாருடைய பாசுரமொன்றில் மருட்சியினால் திருத்தங் காட்டப் புகுந்த வொரு தமிழனுக்குக் குறுந்தொகைப்பாவை யெடுத்துக் காட்டி வாய்மாளப் பண்ணி யிருக்கிறார்கள். அதை ஷை சாமிநாதையரவர்கள் பொன்னேபோல் போற்றித் தமது பதிப்பில் ஆனந்தமாக எடுத்துக்காட்டியு முள்ளார்.

அக்குறுந்தொகைப்பாவின் வடிவம்—"ஊருண்கேணி யுண்டுறை (த்) தொக்க பாசியற்றே பசலை, காதலர் தொடுவுழித் தொடுவுழிநீங்கி விடுவுழி விடுவுழிப் பரத்தலானே" என்று. இந்தப்பா பூருவாசாரியர்களின் வியாக்கியானங்களில் பூர்த்தியாக எடுத்தாளப் படாமல் "ஊருண்கேணி யித்யாதி; காதலர் தொடுவுழியித்யாதி." என்றிவ்வளவே காட்டப்பட்டிருந்தது. ஈடு முப்பத்தாறாயிரப் படிக்கு அரும்பதவுரை யெழுதின பிற்காலத்தவர்கள் இந்தப்பாவை உள்ளவாறு தெரிந்துகொள்ளாமல் ஆகரமு மறியாமல் சங்கத்தார் குறளென்று காட்டி ஒருவாறெழுதி விவரித்திருந்தார்கள். திவ்யார்த்த தீபிகையுரை யாசிரியரான ஸ்வாமி தமது திருவாய்மொழி யுரையிலும் மற்றுஞ்சில ஆராய்ச்சி நூல்களிலும் இதனை ஆழ்ந்து ஆராய்ந்து விவரித்து " இது சங்கத்தார் குறளன்று ; குறுந்தொகையிலுள்ள 399-ஆம் செய்யுள் " என்று காட்டிப் பாடத்தையும் பொருளையும் உள்ளபடி யெழுதி வெளியிட்டுள்ளார். அப்போது சாமிநாதையரவர்களது (குறுந்தொகைப்) பதிப்பு ஆயிற்றில்லை. 1937 ஆம் வருஷத்தில்தான் ஷை குறுந்தொகைப் பதிப்பு ஆயிற்று. 1914 ஆம் வருஷத்தில் ஸ்ரீ ஸ்வாமி வெளியிட்ட பெரியாழ்வார் திருமொழி திவ்யார்த்த தீபிகை யுரை—முகவுரையின் அநுபந்தத்தில் (பக்கம் 21-ல்) அக் குறுந்தொகைப் பாவின் உண்மைப் பாடம் நன்கு காட்டப்பட்டிருக்கின்றது. பிறகு இருபத்து மூன்று ஆண்டுகட்கு அப்பால் வெளியாகியுள்ள சாமிநாதய்யரவர்களது பதிப்பிலும் அவ்விதமான பாடமே அச்சேறியுள்ள தென்பதை உலகங்காணும். இப்படியிருக்க, முதலியார் (பக்கம் 197-ல்) எழுதுகிறார்—

"இக்குறுந்தொகைப்பாவில் நான்கிடங்களிலும் உழி என்றுள்ள பாடம் உரியதன்று; வழி என்றே யிருக்கவேண்டும். தொடுவழி தொடுவழி—விடுவழி விடுவழி என்றே யிருக்கவேண்டும்"—என்கிருர்.

இது ஸ்ரீ ஸ்வாமிக்குச்சேரும் கண்டனமன்று; தமிழுலகத் தெய்வமான சாமிநாதையரவர்களைக் கண்டிப்பதேயாகும். அவர் பல பிரதிகளைக் கொண்டு ஆராய்ந்து பதிப்பித்ததாக விளக்கியுள்ளார். மிகச் சிறிதான பாடபேதங் கண்டாலும் தவருது கீழே பிரதிபேத மென்று குறித்துவருகிருர். இப்பாவின் முதலடியிலும் "உண்டுறைத் தொக்க" என்றவிடத்து "உண்டுறை தொக்க" என்ற [தகர வொற்றில்லாமல் இயல்பான] பாடமும் காண்பதாகக் காட்டியுள்ளார். முதலியார் திருத்திக் காட்டுகிற 'வழிவழி' பாடம் ஒரு பிரதியிலாவது இருக்கக் கண்டிருந்தாராகில் சாமிநாதய்யரவர்கள் அதனைக் குறியாது விட்டிருப்பாரா? ஒரு புத்தகத்திலுங் காணுததும் உலகம் நிறைந்த புகழாளருள் ஒருவருடைய ஆராய்ச்சியிலும் புகாததுமான கற்பனைப்பாடத்தையே முதலியோர் தாந்தோன்றித்தனமாகப் புகுத்திப் பெரு மதிப்பினரை யெல்லாம் இளைய புன்மொழிகளால் திரஸ்கரித்தெழுதக் கற்றிருக்கின்ருரென்பதை மூதலிக்க இங்ஙனே பல விஷயங்களுண்டு. ஆனாலும் ஈண்டுக் காட்டிய விஃதொன்றே சாலும். அனைவரும் கட்கண்ணுற்கண்ட அகத்தியரென்று போற்றின சாமிநாதய்யரவர்களையே பழிக்கத் துணிவு கொண்டவிவர் வைணவாசிரியர்களைப் பழிப்பது வியப்பன்றே. "தொடுவுழி........விடுவுழி" என்ற பாடத்திற் காட்டிலும் தொடு வழி — விடுவழி என்ற பாடம் இனிதாகத் தோன்றுகின்றதென்றெழுதி யிருந்தாலும் குற்றமில்லை; உள்ளபாடத்தைத் தள்ளித் தாம் மருண்ட பாடத்தையே கொள்ள வேணுமென்று வற்புறுத்தியன்ருே எழுதியுள்ளார். அவசியம் பாடத்தை மாற்ற வேணுமானல் பிராமாணிகமான பல ஏட்டுப் பிரதிகளைக் காட்டியும் பெரியாருடைய உரைகளைக் காட்டியும் அறிஞர்களை இசைவித்துச் செய்யவேண்டிய காரியம். ஒரு நூலையும் நேராகக் காணுமல் ஓராசிரியரையும் அடிபணியாமல் மிக அற்பமான அறிவைக்கொண்டு "அதை அப்படித் திருத்த வேண்டும், இதை இப்படித் திருத்த வேண்டும்" என்று கைபோன போக்கெல்லாம் எழுதுவது அறிவாளர் செயலோ? இவர் தாம் காட்டுகிற திருத்தம் ஒவ்வொன்றும் இவர்க்குத் தமிழ்வாஸனையே கிடையாதென்பதைப் பறை சாற்றுமென்பதை மறுவாய் திறக்கமுடியாதபடி மூதலிக்கின்றது இத்திவ்யார்த்த தீபிகைச் சிறப்பு நூல். முதலியாரெழுதிய விஷயங்களுள் ஒன்றுகூட உயிர்த்திருக்க வொண்ணுதபடி உலகமறிந்த தமிழ் நூற்களைக் கொண்டு பூர்வாசார்ய வியாக்கியானங்களையும் திவ்யார்த்த தீபிகையையும் சேமித்திருக்கின்ற இச்சிறப்புநூலின் தனிப்பெருமையை அவரவர்கள் அநுபவித்தறிந்து மகிழ்க.

ஸ்ரீ வைஷ்ணவர்கள் மாத்திரமேயல்லாமல் மற்றுள்ள பண்டிதர்களும் மிக வெறுக்கும்படி தோன்றியுள்ள முதலியார்புத்தகத்தை வைணவர்களென்று பெயர் சுமக்கும் சிலர் கூலிக்குத் தலையால் சுமந்து திரிகின்ருர்களென்பதை நாம் கட்கூடாகக் காண்கிருேம். இதுவுமொரு புண்ணியமே. ஆழ்வார்களின் உட்கருத்தை உள்ளபடியுணர்ந்த திருக்குருகைப்பிரான் பிள்ளான் பெரியவாச்சான்பிள்ளை முதலான பேராசிரியர்களைப் பொருமையினுல் பழித்தெழுதியுள்ள வொரு அபத்தச் சுவடியை வைஷ்ணவர்களென்றிருப்பாருமுகக்கின்ருர்களென்ருல் இதற்கு யாது காரணமென்று விவேகிகள் விமர்சிப்பர்கள். திவ்யப்பிரபந்தங்களுக்கு அரிய பெரிய வியாக்கியானங்களையருளிச்செய்த பூருவாசாரியர்களை மாத்திரம் தூஷித்து நில்லாமல், அந்த ஆசாரியர்களோடொப்பப் போற்றத்தக்கவராய், திவ்யப்பிர

பந்த திவ்யார்த்ததீபிகையென்று உலகம் புகழும் பேருரையைப் பணித்தருளி திவ்யப்ரபந்தப் பேராசிரியரென்று விருதுபெற்றவரான ஸ்ரீமத் ஸ்வாமிகளையும் அந்தச் சுவடி தூஷித்திருப்பதனால் அதில் ஒரு பேரானந்தமடைந்து அதற்காகவே அதனைத் தலையில் சுமந்து திரிகின்றார் களாம் சிலர்.

இது எப்படி இருக்கின்றதென்றால், இரண்டு ஸஹோதரர்கள் ஒருவர்க்கொருவர் சண்டையிட்டிருக்க அவர்களுள் மூத்தவனை வேறு சிலர் விதவாபுத்திரனென்று வசைகூற இளையவனும் அதில் பரமானந்தமெய்தி அவர்களது நிந்தனையை மிக மிக மெச்சி, நம்முடைய பகைவனைப் பரிபவிக்க நல்ல அவகாசம் வாய்த்ததென்று அவர்களோடுகூடித் தானும் தன் அண்ணனை விதவாபுத்திரனென்று வசைகூறி மகிழ்வதுபோன்றுள்ளது. அவனுக்குள்ள விவேகமேயன்றோ இவர்களுக்குமுள்ளது.

“ பெரியவாச்சான் பிள்ளை முதலான பேராசிரியர்களின் திவ்வியமான திருவுள்ளத்தை அண்ணங்கராசாரியர் சுவாமிகள் உள்ளபடியுணராது தவறாக எழுதியுள்ளார் ” என்று இவ்வண்ணமாக முதலியார் எடுத்துக்காட்டி யெழுதியிருந்தாலாவது இந்த மஹா விவேகிகளின் கோலாஹலத்திற்கு உகக்கலாம். அந்தோ அப்படியில்லையே. திருக்குருகைப்பிரான் பிள்ளான் முதலான பூருவாசாரியர்களும் அண்ணங்கராசாரியரும் ஒரே பாழ்ங் கிணற்றில் விழுந்தவர்களென்று பூருவர்களையுஞ் சேர்த்துப் பழித்திருக்கின்ற சுவடியை “ கலையறக் கற்றமாந்தர் காண்பரோ கேட்பரோதான் ” என்ற திருமாலைப் பாசுரப்படியே திரஸ்கரித்திருக்க வேண்டியிருக்க, அந்தோ ! அர்த்தமற்ற மாச்சரியத்தில் தலைநின்ற மேதாவிகள் தாயைப் பழிக்கின்றவர்களோடும் தோழமை கொண்டு திரிவாரைப்போலே திரிகின்றார்களே ! இதுவுமொரு தலைவிதியே யன்றோ.

ஒன்றான நம்மிராமாநுஜர் போல்வார் அருளிச் செய்த ஸ்ரீ பாஷ்யம் முதலான திவ்ய க்ரந்தங்களையும் அந்நாள் தொடங்கி இந்நாள்வரையில் பொறாமையாளர்கள் எங்கும் பழித்துக் கொண்டு கிடக்கின்றார்களென்பது பண்டிதர்களறிந்ததாகும். பாமரர்கள் ஸ்ரீ பாஷ்யாதிகள் அவதரித்திருப்பது மறியார்கள், அவற்றுக்குப் பலபல தூஷணச் சுவடிகள் தோன்றியுள்ளன வென்பது மறியார்கள். விளக்கென்று ஏற்பட்டால் விட்டில்கள் அதில் விழுந்து மடிந்தேதீரவேண்டுவது விதியாதலால் அதுபோலவே சீனிவாச முதலியாருக்கும் நேர்பட்ட விதியில் வியப்பொன்றுமில்லை. விளக்கினால் உபயோகங்கொள்ளப் பிறந்தவர் களும் விட்டில்களோடொக்க விழுந்து மடிவதுதான் வியப்பு.

இவர்களோ, தாங்கள் வியாக்கியானமென்றோ வியாஸமென்றோ நான்கு வரியாவது எழுதக் கற்றார்களில்லை. இப்பிறவியிற்போலே இன்னும் ஏழேழ்பிறவிகளிலும் அந்த பாக்கியம் இவர்களுக்கு அணுவளவும் நேரப்போகிறதில்லை. ஸ்வாமி நான்கு பாஷைகளிலும் பல நூற்றுக்கணக்கான புத்தகங்களை யெழுதி நாற்றிசையிலும் பெரும்புகழ் பெற்று விளங்கிவருகின்றாரே யென்னும் பொறாமைப் பிசாசு இவர்களின் மீதேறி அமுக்கி என்னென்னவோ கூத்துக் காண்கிறது. காணட்டும். வடமொழியில் “ கர்த்தபகானே ஸ்ருகாலவிஸ்மய: ” என்றொரு பழமொழியுண்டு. அவ்வண்ணமாக நேர்ந்திருக்கின்ற இவ் விஷயத்தில் வியப்பொன்றுமில்லை.

உண்மையான ஸ்ரீவைஷ்ணவர்களும் செந்தமிழறிஞர்களும் நன்குகந்து போற்றுமாறு தோன்றியுள்ள இச்சிறப்புநூல் உலகுக்குப் பரோபகாரகமாய் நீடூழி வியங்கும்.

---

ஸ்ரீ:

# திவ்யார்த்த தீபிகைச் சிறப்பு.

[T. N. C. திருவேங்கடாசாரியர், காஞ்சீபுரம்.]



1. தமிழ் வேதமென்று போற்றப்படுகின்ற திவ்வியப் பிரபந்தங்களானவை வட மொழி வேதாந்தப் பொருள் நிரம்பியவை யென்பது உபய வேதாந்த ப்ரவர்த்தகாசார்யர்களுக்கன்றி மற்றையோர்க்குத் தெரிவரிது. வடமொழி பயிலாதவர்களும் வடமொழி வேதத்தில் அதிகாரமும் பிரவேசமுமற்றவர்களும் திவ்வியப் பிரபந்தங்களிலோ அவற்றின் வியாக்கியானங்களிலோ ஆராய்ச்சி செய்யத் தலையிடுவது சிறிதும் ஏலாதது. இதற்குச் சார்பாக இங்கு நூற்றுக்கணக்கான விஷயங்கள் எழுதத்தக்கவை யுள்ளனவெனினும் ஒன்றே புகல்வோ மிப்போது.

2. திருவாய்மொழியில் (1-1-8) * சுரரறிவருநிலை விண் முதல் முழுவதும் * என்றவிடத்து விண் என்னுஞ் சொல்லுக்கு மூலப்ரக்ருதி யென்னும் பொருளைப் பண்டையுரையாசிரியர் பலரும் அருளியுள்ளார்கள். தமிழ்மக்களில் ஒருவரும் அறிய இயலாத பொருள் இது. என்? வெறுந்தமிழர்க்கு வேதாந்த வாஸனையில்லையே. உபநிஷத்துக்களில் "கஸ்மிந் நு கலு ஆகாச ஓதச் ச ப்ரோதச் ச" என்கிற விடத்தில் ஆகாசமென்னுஞ் சொல் மூலப்ரக்ருதியைச் சொல்லுகிறதென்று வேதாந்திகள் அறுதியிட்டிருக்கின்றார்கள். அத்தோடொத்த பிரயோகமிதுவாதலால் அப்பொருளே இங்குங் கொள்ளவேணுமென்று பேராசிரியர்கள் ஆழ்ந்து நிரூபணங் காட்டியுள்ளார்கள். இங்ஙனே ஓரிடமல்ல. நூற்றுக் கணக்கான விடங்களுள்ளன. வடமறை முடியில் பிரவேச மற்றவர்கள் இவ்வகைப் பொருள்களைக் கனவிலுங் காணகில்லாராதலால் இத்திவ்யப் பிரபந்தவாராய்ச்சியில் அன்னவர்கள் தலையிடுவது தகுதியற்றது என்னக் குறையில்லை.

3. ஸ்ரீராமாநுஜர் காலத்தில் யஜ்ஞமூர்த்தியென்றொரு மஹாவித்வான் [அத்வைத சமயத்தவர்] வாதப்போர்புரியவந்து பதினெட்டுநாள் தர்க்கித்து முடிவில் ஸ்வாமி திருவடிகளில் ஆச்ரயித்தார். அவர் வடமொழிவேதவேதாங்கங்களில் பெரும்புலியான பண்டிதராயிருந்து தமிழிலும் நிகரற்ற பாண்டித்தியம்பெற்று ஞானஸாரம் பிரமேயஸாரம் என்கிற இரண்டு தமிழ்ப் பிரபந்தங்களை வெண்பாவிலருளிச் செய்துள்ளார். தமிழுலகத்தில் அப்படிப்பட்ட சிறப்பு வாய்ந்த தமிழ் நூல் வேறு காணக்கிடைக்கவில்லை யென்று மெய்த்தமிழ்ப்புலவர் போற்றுகின்றனர். அவர் தமிழ்கற்றது ஸ்ரீராமாநுஜர் திருவடிகளிலே. வடநூற்களைக் கல்லாதார்க்கு அவருடைய ஞானஸாரப் பிரமேயஸாரங்களின் பொருள் சிறிதும் விள்ளாது.

4. நம்மாழ்வார் திருவாய்மொழி தொடங்கும்போதே "உளன் சுடர்மிகு சுருதியுள் இவையுண்டசுரனே" என்கிறார். வடமொழி யுபநிஷத்துக்களைக் கொண்டுதான் பகவானை யுணரமுடியுமென்பது கருத்து. ஆழ்வாருடைய திவ்விய ப்ரபந்தங்களின் ஆழ் பொருள்களையும் வடமொழி வேதாந்தங்களைக் கொண்டுதான் அறியமுடியும். "அந்தமிழினின்பப் பாவினை அவ்வடமொழியை" என்று குலசேகராழ்வாரும், "செந்திறத்த தமிழோசை வட

சொல்லாகி” என்று திருமங்கைமன்னனு மருளியுள்ள பாசுரங்களை நோக்கு மிடத்து, வடமொழி வேதமும் தென்மொழி வேதமும் விரவியே பகவானை யுணர்த்தவல்லன என்பது நன்கு விளங்கும். ஆகவே வடமொழி வேத அநதிகாரிகள் தமிழ்வேதமாகிய திவ்யப் பிரபந்தங்களிலே புக நியாயமில்லை. புகுவதானால், அவற்றின் உண்மைப் பொருள்களை உணர்ந்து உணர்த்திய திருக்குருகைப்பிரான்பிள்ளான் நஞ்சீயர் நம்பிள்ளை போல்வாரான பேராசிரியர்களின் திருவடிகளைப் பேரன்புடன் சிந்தனை செய்துகொண்டே பாசுரங்களை மனப்பாடஞ் செய்து நைந்துருகி நற்போது போக்கலாமத்தனை யொழிய, அப்பேராசிரியர் களைப் பழித்துக்கொண்டு திவ்யப்பிரபந்தப் பொருளாராய்ச்சியிற் புகுவதென்பது ஸாஹ ஸங்களில் தலையான ஸாஹஸமாகும்.

5. திவ்யப்பிரபந்தங்கள் தமிழ்ப்பாஷையி லமைந்திருப்பதனால் தமிழ்நெறியை நன்கு தெரிந்துகொள்ள வேண்டியதும் உரையாசிரியர்கட்கு அவசியமாகும். திவ்யப்பிரபந்த வியாக்கியானப் பேராசிரியர்கள் யாவரும் வடமொழிக் கடலிற்போலவே தென்மொழிக் கடலிலும் ஆழ்ந்தவர்களென்பதில் இறையும் ஐயமில்லை. அவ்வாசிரியர்களைப்பற்றித் துதிக்குமிடத்து “சொல்லார் தமிழொருமூன்றும் சுருதிகள் நான்கும் எல்லையில்லாவற நெறி யாவுந் தெரிந்தவன்” [இராமானுச நூற்றந்தாதி—44.] என்று அக்காலத்தே திகழ்ந்த அறிஞர் கள் தாமனுபவித்து அறையலுற்றனர். வடமொழிவல்லுநர் என்பது அவ்வாசிரியர்கட்கு ஏற்றமாக விளங்கிற்றில்லை. தமிழ்மொழிக் கடலில் தனிச்சிறப்பெய்தினவர்களென்பதே அவர்கட்குத் தன்னேற்றமாக விருந்தது. ஆனதுபற்றியே மேலேகுறித்த செய்யுளில் முந் துறமுன்னம் * சொல்லார்தமிழொரு மூன்றும் * எனப்பட்டது. இக்காலத்துத் தமிழ்க்கலை பயின்றாருடைய அறிவுக்கும் அவ்வாசிரியர்களது அறிவுக்கும் அஜகஜாந்தரமுண்டு. அவர்க ளது நுண்மதிக்கு எளிதாக எட்டும் நுண்பொருள் இக்காலத்துப் புலவர்களது மதிக்கு வருந்தியும் எட்டாதென்று கீர்த்திமூர்த்தியான மஹாமஹோபாத்யாய, தாக்ஷிணாத்யகலாநிதி. சாமிநாதய்யரவர்கள் பல ஸபைகளில் பலகால் சொல்லியுள்ளார். தமிழாராய்ச்சியில் வல்லமை பெற்ற மஹாமேதாவி சாமிநாதையரவர்களொருவரேயென்று பொறாமையற்றவுலகம் இற் றைக்கும் போற்றுகின்றது. அவர் வைணவப் பேராசிரியர்கள் அருளிய திவ்யப்ரபந்த வியாக்கியானங்களை ஆழ்ந்து அநுபவித்துப் பொன்னேபோல் போற்றி அளவுகடந்த இன்பம் நுகர்ந்தவர். அவ்வுரைகளை அவர் உச்சிமேல் வைத்துமெச்சிக் கூத்தாடினவர். அவர் அல்லும் பகலும் உழைத்து ஆய்ந்து ஆராய்ந்து வெளியிட்ட தமிழ்நூற்களில் வைணவப் பேராசிரியர்களின் வியாக்கியானங்களிலுள்ள அருள்மொழிகளை ஆதரித்துக் கௌரவித்து ஆங்காங்கு மேற்கோளாகக் கையாண்டுள்ளார். இதற்கும் ஈண்டு ஒன்றிரண்டிடம் காட்டுவோம்,

6. அப்பெரியார் 1937 ஆம் ஆண்டில் (தாம்எழுதியவுரையுடன்) பதிப்பித்த குறுந் தொகை யென்னுஞ் சிறந்த நூலில் (பக்கம்907-ல்) மேற்கோளாட்சி யென மகுடமிட்டு

> “பட்டரை ஒரு தமிழன் ‘கேட்டிரங்கி யென்னாதே கண்டிரங்கியென்னப் பெறுமோ?’ என்ன, ‘அணைத்த கை நெகிழ்த்தவளவிலே வெளுத்தபடி கண்டால் பிரியத் தகாதென்றிருக்க வேண்டாவோ? இப்படிக் கூடுமோ? என்னில்; புல்லி இத்யாதி. காதலர் தொடுவுழி இத்யாதி, உனக்கு இத்தமிழ் போதாதோ?’ என்றார்”
> (திருவாய்மொ. 1. 4. 4, ஈடு.)

என்றெழுதியுள்ளார்.

7. அன்றியும், அந்நூலிலே (பக்கம் 53ல்) "மடலேற்றைக்குறித்த வேறுபல செய்திகளைத் திவ்யப்பிரபந்தத்திலுள்ள பெரிய திருமடல் சிறியதிருமடலென்பவற்றின் வியாக்கியானங்களால் உணரலாம்" என்று பெருமதிப்புடன் எழுதியுள்ளார். அவரைப்போன்று அரும் பெரும் புகழ்பெற்ற மகாவிவேகிகளான தமிழறிஞர் பலரும் இங்ஙனமே திவ்யப்பிரபந்த வியாக்கியானங்களில் மிகுந்த ஆதாரமும் கௌரவமுமே காட்டியுள்ளார்கள். அவற்றைச் சிலர் சிந்திக்கத் தலைப்பட்டார்களென்னில் இதில் வியப்பொன்றுமில்லை. அவரவர்கள் தம் தமது அறிவுக்குத் தக்கவாறு தானே பணிசெய்ய முடியும். அரியபெரிய அறிவுபெற்றவர்கள் தம் அறிவின் அருமை பெருமைக்குத் தக்கபடி நடந்து கொண்டால், சிற்றறிவாளர் தம் அறிவின் சிறுமைக்குத் தக்கபடி நடந்துகொள்ள முயன்று அப்பேராசிரியர்களைப் பலவாறு தூஷிக்கப் புறப்படுவதும் இயல்பேயன்றோ.

8. வே. மு. சீனிவாச முதலியாரென்னு மொருவர் "திவ்யப் பிரபந்தமும் திவ்யார்த்த தீபிகை உரையும்" என்றொரு புத்தகம் வெளியிட்டுள்ளார். இது சிறிய அளவில் இருநூற்றுச் சொச்சம் பக்கங்கள் கொண்டது. இதில் ஸ்ரீ வைஷ்ணவப் பேராசிரியர்களை வாசாமகோசரமாக நிந்தித்திருப்பதை உலகமறியும். அதிலிருந்து சில வார்த்தைகளை ஈண்டெடுத்துக் காட்டுதும்; (அதில் பக்கம் 37-ல்)

"திவ்யப் பிரபந்தத்தின் பண்டைய உரைகாரர் யாவரும் கலப்பு மொழியால் உரைநூல் எழுதிவைத்ததன் ஏது என்னை? தம்மால் முறையாகவும் முற்றுகவும் கற்கப்படாத செந்தமிழ் மொழியால் உரையெழுதிவைப்பின், செந்தமிழ் மொழியை முறையாகவும் முற்றுகவும் செவ்விதின் கற்றுள்ள செந்தமிழராய ஆசிரியன்மார், தம்மின் அறியாமைப் பண்பை அறிந்து எள்ளி நகைப்பரே என்ற எண்ணத்தால் தம் கருத்தைச் செந்தமிழர் முற்றுக அறியாதபடி — செந்தமிழ் மொழியைமட்டும் தனிமையாகக் கற்றவர்கட்குப் பொருள் விளங்காதபடி கலப்பு மொழியால் — கருவேப்பிலை கொடையும் குறத்தி மொழியுந்தமிழால் — உரையெழுதி வைத்துக்கொண்டனர். வடமொழியைக் கல்லாத செந்தமிழர்க்கு அக்கலப்புமொழியுரையால் பயனில்லை. செந்தமிழ் மொழியைக் கல்லாத வடவர்க்கும் அக்கலப்புமொழியுரையால் பயனில்லை. வடமொழி தென்மொழிகளாகிய இருமொழிகளுள் யாதேனுமொரு மொழியால் முற்றுக உரையெழுதப் பட்டிருப்பின், அவ்வுரை, வடமொழி தென் மொழிகளாகிய இருமொழிகளுள் ஒரு மொழியைக்கற்ற எவரேனும் ஒருவர்க்குப் பயனுடையதாக இருக்கும். கலப்புமொழியால் உரை யெழுதிவைத்ததனுல் அவ்வுரைகாரர்கள் தம் உரைநூலின் பயனைக் கருதாதவராயினர்கள். செந்தமிழ் மொழியுள் மணிப்பிரவாளம் எனக் கலப்பு மொழியாலாய ஒருவகை உரைநடையைப் புதிதாக உண்டாக்கிய திருச் சமணசிரியர் தம் செயலைப் பார்த்துத் தமக்கும் அச்செயலை மேற்கொண்டு நடக்க இயலும் என்பதனை விளக்குதல் பொருட்டு மணிப்பிரவாளம் என ஒரு உரைநடையைச் செந்தமிழ்மொழியுள் புதிதாகப் புகுத்தித் தென்மொழி வடமொழிகளாகிய இருமொழிகளுள் ஒரு மொழியை மட்டும் கற்றவருள் ஒருவர்க்கும் விளங்காதபடி திவ்யப்பந்தத்திற்கு அந்நூலாசிரியர்கள்கருத்துக்கட்கு மாறுகப் போலிப் பொருள்களைப் புகுத்தி— ஒருவகையுரையை எழுதிவைத்துக் கொண்டனர் பார்ப்பனருள் ஸ்ரீ வைஷ்ணவராகிய தென்கலைஞர் என்னும் ஆசிரியன்மார்." என்றெழுதிவைத்துள்ளனர். (பக்கம் 45லும்) "திரு ஆழ்வார்கள் அருளிய திவ்ய ப்ரபந்தத்தின் திவ்யார்த்ததீபிகை யுரைகாரரும் அவரின் முன்னோராகிய உரைகாரரும் திரு ஆழ்வார்கள் தம் தம் திருப்பாக்களில் அமைத்

> திருளிய பண்டைய புராண வரலாறுகளின் உண்மைகளை உள்ளபடி உணராதவராயி னர் என்பதனையறிக. அவ்வுரைகாரரால் அறியப்படாதனவாகிய பிற வரலாற்றுக் குற்றங்களையும் அவ்வுரைகாரரின் உரைநூற்களைக் கற்று அறிக."

என்று எழுதியுள்ளார்.

9. (பக்கம் 7ல்) "திரு ஆழ்வார்கள் அருளிய திவ்யப் பிரபந்தத்தின் உரைகாரர் யாவ ரும் செந்தமிழாலாய கவிகளின் கருத்துக்களை அறிவிக்கும் செந்தமிழறிவைப் பெறாதவரே. பெருமையால் தான்..........." என்றும் எழுதியுள்ளார். இங்ஙனம் பல விடங்களில் பூரு வாசாரியர்களைப் பற்றின மிகக் கொடிய தூஷணைகள் அப்புத்தகத்தின் கண் மலிந்துள்ளன. இக்காலத்து உரையாசிரியரான ஸ்ரீ காஞ்சி அண்ணங்கராசாரியர் ஸ்வாமியையும் அவ்வாசிரி யர்களோடு சேர்த்து அபரிமிதமாக நிந்தித்திருக்கின்றது.

10. அப்புத்தகத்தின் முடிவில் "திருத்தங்கள்" என்ற பகுதியில் (பக்கம் 19-ல்)— "சிற்றின மாக்கள் நேரியவினவும் விடையும் இறுக்க இயலாவிடில் வசைமொழிகளைத்தான் வழங்குவார்கள்" என்று தானே யெழுதியுள்ளபடிக் கிணங்கத்தான் நடந்து கொண்டது மிகவும் தகுதியே—என்று அறிவுடையார் கருதுகின்றனர். அந்த முதலியாருடைய நிந்தனை களில் நாம் சிறிதும் கண் செலுத்தாமல் அவர் எழுதியுள்ள விஷயங்களை மாத்திரம் எடுத்துக் கொண்டு, தமிழறிஞர் சிறிதும் இசையத் தகாதபடியன்றோ அவர் எழுதியுள்ளார் என்று நடுநிலையாளர் யாவரும் நன்குணருமாறு விளங்க வைக்கிறோமிங்கு. ஸர்வஜ்ஞர்களான மஹா சாரியர்களைத் தமிழறியாதவர்களென்று தூஷிக்குமிவர்தாம் பெற்றிருக்கும் தமிழறிவு எத்தகைத்து என்பதனைச் சிறிது ஆராய்ந்து விளக்கவேண்டுவது அவசியமல்லவா? இதனை உள்ளபடி விளக்கப் புகுமிடத்து நூல்விரிவு மிகப்பெரிதாம். ஒருபானைச் சோற்றுக்கு ஓரவிழ் பதம் பார்க்கிற முறையிலே சிறிது விளக்கினால் போதுமன்றோ.

11. முதலியார் நூலில் (பக்கம் 158ல்) 'தளைதட்டல்—தளைதட்டாமை' என்பவற்றைப் பற்றி விவரிக்குமிடத்து திவ்யார்த்ததீபிகை யுரையாசிரியரான ஸ்வாமியை விபரீத ஞான முடையவராக நிந்தித்தும் ஏசியும் எழுதியுள்ளார். இயற்பா — முதல் திருவந்தாதி — 15. * முதலாவார் மூவ ரென்னும் பாசுரத்தின் திவ்யார்த்ததீபிகை யுரையில் "தளைதட்டே லானும்" என்று ஸ்வாமி யெழுதியிருப்பது தமிழறியாமையாம்; பண்டைய செந்தமிழ ராய் பேராசிரியர்கள் யாவரும் ஒருமுகமாகத் தளைதட்டல் என்னலை நேரியதாகவும் விதிய தாகவும், தளைதட்டாமை என்னலைக் குற்றமாகவும் விதியல்லதாகவும் கொண்டிருக்கிறார் களாம்; தட்டல் என்பதற்குப் பொருந்தல் என்று பொருளாம். இதனை அண்ணங்கரா சாரியர்ஸ்வாமி விபரீதமாக கிரஹித்து விட்டாராம். அவருடைய அறிவு திரிபுடைத்தாம். இனியாவது செந்தமிழைச் செவ்வையாக அறிந்த நல்லாசிரியர்மாட்டுக் கேட்டறிந்து நல்லுணர்ச்சிபெற்று நற்புகழ்பெற முயலவேண்டுமாம். இப்படி யெழுதியிருக்கின்ற முதலி யாருக்குள்ள இலக்கண நூற்பயிற்சியை நாம் என்னென்பது!. உலக வழக்கும் நூல் வழக்கும் ஒருங்கே அமைந்துள்ளது எங்ஙனமென்று உணரும் விவேகிகள் உலகில் இல்லையோ? இதைப்பற்றி மிகத் தெளிவாக வுணர்த்துகின்றோங்காண்மின்.

12. Tamil Lexicon-Pubiished under the Authority of the University of Madras. என்று பதிப்பிக்கப்பட்டுள்ள, உலகமெங்கும் பரவியுள்ள லெக்ஸிகன் தமிழ்க் கோசம் பல சிறந்தபண்டிதர்களால் ஆக்கப்பட்டது. இலக்கணவிலக்கியங்களில் ஆழ்ந்த அறிவுபெற்றவர்களும் ஆராய்ச்சிவல்லுநர்களுமான சைவ வைஷ்ணவ வித்துவான்கள்

பலர் கூடிப் பரிசோதித்து வெளியிட்ட அவ்வகராதிகோசத்திற் காணும் நிரூபணங்களைக் கொண்டே முதலியாருடைய மருள்களையும் வஞ்சனைகளையும் அகற்றுவோம்.

13. அக்கோசத்தில் (பக்கம் 1804ல்) "தளைதட்டல்—வேறுதளை கிரவியதனால் எடுத்துக் கொண்ட செய்யுளின்தளை மாறுபடுதல்" என்றெழுதி அதற்கு யாப்பருங்கலக் காரிகையுரையினின்று ஆதாரமும் எடுத்துக் காட்டப் பட்டுள்ளது. The Twentyeth century Tamil Dictionary என்று உலகம் பரவியுள்ள தமிழகராதியிலும் (பக்கம் 702-ல்) "தளை தட்டு—தளைபிழைப்பு" "தளை தட்டுதல்—யாப்பில் தளைபிழைத்தல்" என்றுள்ளது. மற்றோரகராதியில் "தளைதட்டல்—தளைபிறழ்தல்" என்றுள்ளது. உரையாசிரியர் பலரும் தளை பிறழ்வைத் தளைதட்டுதலென்ற சொல்லாற் குறிப்பதைப் பெரும்பாலுங் காணலாம்.

14. மற்றொன்றுங்கேண்மின். திவ்யார்த்த தீபிகையில் "எம்பெருமானாலேயே" "விடியற் காலத்திலேயே" என்பன போன்ற பிரயோகங்கள் உள்ளனவாம்; இத்தொடர்களில் ஈற்றிலுள்ள ஏகாரங்கள் இரட்டித் திருத்தல் பிழையாம். தேற்றப்பொருளதான ஏகாரத்தை இரட்டித்து எழுதல் நேரிய அறிவையுடைய செந்தமிழாசிரியர் வழக்கன்றாம்; தீபிகையுரைகாரர்போலும் திரிபுணர்ச்சிக்காரர்களின் வழக்கேயாம். இதனை முதலியார் (பக்கம் 59-ல்) எழுதியுள்ளார். தமிழ் நாட்டிற் பிறந்து வளர்ந்தவர்கள் இங்ஙனமெழுதுவர்களோ? எடுத்துக்காட்டின தொடர்களில் தேற்றப் பொருளதான ஏகாரம் இரட்டித்தெழுதப் படவில்லை. ஆல் ஆலே, இல் இலே—என்றிரண்டும் பரியாயமான வேற்றுமையுருபுகளே. உன்னால் உன்னாலே, அவனால் அவனாலே, காட்டில் காட்டிலே, வீட்டில் வீட்டிலே=என்றினைய பிரயோகங்கள் தமிழ்நூற்களில் மலிந்தவை. "அஞ்சிலேயொன்று பெற்றான்" என்னும் அநுமன் துதியான கம்பர்செய்யுள் உலகமறிந்தது. இதனில் 'அஞ்சில்' என்பதற்குப் பரியாயமாகவே அஞ்சிலே என்று ஐந்துவிசை பிரயோகிக்கப்பட்டுள்ளது. "அம்பிலே சிலையைநாட்டி" (கம்பர்) என்றதுங்காண்க. இங்கு ஏகாரம் தேற்றப்பொருட்டன்று; வேற்றுமையுருபின் வடிவமேயாம். இங்ஙனே பல்லாயிர முதாரணங்கள் காட்டவியலும். 'எம்பெருமானாலேயே' 'விடியற்காலத்திலேயே' என்பன போன்ற பிரயோகங்கள் தீதற்றவையேயென்க. இங்ஙனம் பிழையல்லாதவற்றைப் பிழையென மருண்டோ வஞ்சித்தோ எழுதுமிவர் பேரறிவாளரை ஏசுவது என் கொல்?

15. இன்னமுமொன்று கேண்மின்; திவ்யார்த்ததீபிகையில் "தெளிவுடையார் பக்கல் தினவடங்கக் கேட்டுத் தெளிக" என்று சில விடங்களிலெழுதப்பட்டுள்ளது. இதைப் பற்றி முதலியார் நூலில் (பக்கம் 168, 169ல்) "தினவடங்கக் கேட்டல் தினவடங்கச் சொல்லல் என்ற சொல்தொடர்களை நற்குடியிற் பிறந்து நல்லவுணவையுண்டு வளர்ந்து...... வாழ்வார் தம்வாயால் சொல்லார், தம் கையாலெழுதார், தம் நெஞ்சால் நினைத்தலுஞ் செய்யார்......அதனால் அவர் தம்முடைய சிற்றினப்பண்பை விளங்க வைத்தார்" என்றெழுதப்பட்டுள்ளது. பூருவாசாரியர்களின் உயரிய திவ்விய நூல்களிற் பரிசயமில்லாமையும் மனமாசுமே இங்ஙனமெழுதக்காரணமென்னத் தட்டுண்டோ? நடாதூரம்மாள் என்னும் பேராசிரியர் [வேதாந்த தேசிகர்க்கு அநுக்ரஹஞ் செய்தவர்] தம்முடைய திருத்தந்தையார்பக்கல் ஸ்ரீபாஷ்யப்பொருள் கேட்டுவருகையில் அவர் பிரவசனஞ் செய்யும் முறை இவர்தமக்கு த்ருப்திகரமாக அமையாமையின் 'எனக்குத் தினவடங்கவில்லையே' என்று இவர் சொல்ல, "தினவடங்கச் சொல்லுவர் திருவெள்ளறைச் சோழியர்" என்று அவர் அருளிச்செய்ததாகவும், திருவெள்ளறையில் மஹாவித்வானாக எழுந்தருளி யிருந்த எங்க

ளாழ்வாரைச் சார்ந்து அவரது திருவடிவாரத்தில் தினவடங்கக்கேட்டு க்ருதார்த்தராயினர் என்று அவரது வைபவநூல்களில் வரையப்பட்டுள்ளது. தினவடங்க என்ற சொல் தொடர் ஒருவகையாலும் அருவருக்கத்தக்கதன்று. உடலிலுள்ள ஒவ்வோருறுப்பிலும் ஒவ்வொருவகையான தினவு உள்ளதாகும். வித்வான்களுக்கு வாயில் தினவு; வீரர்கட்குத் தோளில் தினவு. ஸ்ரீ ஸுதர்சநசதகமென்னும் மிகச்சிறந்த தோத்திரத்தின் முதல் சுலோகத்து மூன்றாவது பாதத்தில் அசுராராக்ஷஸர்கள் தோளில் தினவு கொண்டவர்களாகச் சொல்லப்பட்டனர். கதைகேட்க விருப்பமுடையார் காதில் தினவுடையா ரெனப்படுவர். ஆகவே தினவடங்கக் கேட்டுத் தெளிகவென்ற வழக்கு நல்வழக்கேயன்றி அல் வழக்கன்றென்பதைப் பரமபவித்திரங்களான நூல்களிற் பரிசயமுடையார் பாங்காகவறிவர். இதையிட்டு நிந்திக்குமவர் இழிவான தினவுதவிர வேறு தினவறியாரென்னத்தகுவாரத்தனை.

16. தாம் இலக்கணப் பிழையின்றியும் தமிழ்ச்சம்பிரதாயச் சீர்கேடின்றியும் எழுதக் கற்றவராயிருந்தாலாவது பிறரது எழுத்துமுறைமைகளைப் பழிக்க நினைக்கலாம். அந்தோ! செந்தமிழறிவுடையார் மிகமிக அருவருக்கும்படியான சொற்கள் மலிந்து கிடக்கின்றனவே தூஷகருடைய அப்புத்தகத்தில். "நூலைத் தயாரிக்க உதவி செய்தவர்" "தயாரித்தவர்" என்றிப்படி யெழுதியுள்ளவை பலபல. 'தயாரிக்க' என்பது போன்ற சொற்களைத் தமிழமுதக் கடலில் ஒருமூலையிலுங் கண்டாரில்லையே. பகுதியென்னே? விகுதியென்னே? இஃதன்றியும் "இவ்வாய்வுவுரை" "வீற்று இருக்கும்" "நூற்று எட்டுத் திருக்கோவில்கள்" என்றிப்படிப்பட்ட (பக்கம் 32, 33-களில்) எழுதல்கள் செந்தமிழறிஞரது நூல்களிற் புகத் தகாதவை யென்பதை நல்லாசிரியர் மாட்டுக் கற்றுணர்ந்த கலைவலவருணர்வர். ஆனால் மணற் சோற்றில் கல்லாராய்வது போன்ற இத்தொழில் நமக்கு விருப்பமன்று. உலகம் போற்றும் நல்லாசிரியர்களது நன்மொழிகளிலீடுபட்டு மகிழப் பாக்கிய மில்லையாயினும் அவற்றை நிந்திக்கத் தலைப் படாமலாவது இருந்திருக்கலாம். வீணான செருக்கு மழுக்காறுங் கொண்டு காரண லவலேசமுமின்றியே அவ்வாசிரியர்களையும் அவர்களது அமுத மொழிகளையும் நிந்திக்க எழுந்தவர்கள் வடமொழியறிவு இல்லாமையோடு உண்மையில் செந்தமிழறிவு மில்லாதவர்களென்கிற தத்துவத்தை உலகுக்குக் காட்டவேண்டியே இடையிடையே அவர்களது அல்வழக்குரைகளையும் எடுத்துக் காட்ட நேர்கின்றது. பெரிய வாச்சான்பிள்ளை போன்ற பேராசிரியர்களின் திருவாக்குக்களிலும் நம் ஆசிரியரது திவ்ய ப்ரபந்த திவ்யார்த்த தீபிகையிலும் அவத்தம் அணுவளவும் கிடையாதென்பதைச் செந்தமிழ் நூற்களையே கொண்டு நன்கு நிரூபிப்பதொன்றே இந்நூலின் முழுநோக்கு.

17. திவ்யப்பிரபந்தங்களில் பூர்வாசார்ய உபதேச பரம்பரையாக வருவனவும் பூர்வாசார்ய வியாக்கியானங்களில் பேர்க்கவும் பேராதபடி விளங்குவனவுமான பாடங்களை மாறுபடுத்துவது, அவர்கள் உரைத்தருளின நற்பொருள்களை ஏலாதவை யென்று பழிப்பது—என இவ்விரண்டு வழிகளில் முதலியாருடைய கைப்பணி மிகமிக நடந்துள்ளது. இவை வீணான ஆக்ரஹத்தினாலல்லது உண்மை யுணர்வினாலன்றென்பதை உலகம் முழுதும் பரவிய உயர்ந்த நூல்களைக்கொண்டு விவேகிகள் மகிழ விளம்புகின்றோம்.

18. முதலியாருடைய புத்தகத்தில் முதல் விஷயமாக எடுத்துக்கொள்ளப்பட்டது "குரங்குகள் மலையைநூக்க" என்கிற திருமாலைப் (27) பாசுரத்திருத்தம். இங்கு மூன்று நான்கு திருத்தங்கள் காட்டப்படுகின்றன. "குரங்குகள் மலையை நூக்கக் குளித்துத்தாம் புரண்டிட்டோடித் தரங்கநீரடைக்கலுற்ற சலமிலா அணிலும் போலேன்" என்பது அப்

பாசுரத்தின் முற்பகுதி. இராமபிரான் இலங்கைக் கெழுந்தருளும்போது திருவணை கட்டு கையில் குரங்குகள் மலைகளைப் புரட்டித் தள்ளித் தம்மாலான கைங்கரியம் செய்யாநிற்க, அணிற்பிள்ளைகள் கடல்நீரிலே தம்தம் உடலை நனைத்து மணலிலே புரண்டு அப்போது உடலில் ஒட்டிக்கொண்ட மணல்களைக் கடலிலேயுதிர்த்து இவ்வகையான பணியைச் செய்தன; அப்படிப்பட்டதொரு சிறு தொண்டும் செய்திலேன்யான்—என்று ஆழ்வார் மனக்குறையுற்றுக் கூறுவதாகப் பூருவர்களோடு நவீனர்களோடு வாசியற அனைவரும் உரையிட்டிருக்கின்றார்கள். ஆங்கிலப் பள்ளிக்கூடங்களில் உயர்தரப் படிப்புக்கு உடன்பாடமாகத் திருமாலைப் பாடம் வைக்கப்பட்ட காலங்களில் பல பண்டிதர்கள் [சைவர்களும் வைணவர்களும்] டெக்ஸ்ட் நோட்ஸ் வெளியிட்டுள்ளார்கள். அவர்களும் இவ்வண்ணமாகவே உரைசெய்துள்ளார்க ளென்பதை முழுவுலகுமறியும். அது கிடக்க. இங்குப் பூருவாசாரியர்கள் கொண்ட பாடமும் பொருளுந் தவிர வேறெதுவும் பொருந்தாது என்பதைப் பன்னியுரைப்போம்.

19. மேலே குறித்த லெக்ஸிகன் கோசத்தில் (பக்கம் 63-ல்) அணில் என்றெடுத்து அணிற்பிள்ளை யென்று பொருளெழுதி, உடனே அணிலம் என்று மெடுத்து ‘See அணில்’ என்றெழுதி, “தரங்கநீரடைக்கலுற்ற சலமிலாவணிலம்” (திவ். திருமாலை, 27) என்றும் பொறித்துள்ளது. இதனால், திருமாலைப்பாசுரம் பாடின ஆழ்வார் அணிற்பிள்ளை கதை கைபத்தான் திருவுள்ளம் பற்றின ரென்பது குன்றிலிட்ட விளக்காயிற்று. இக்கோசத்தைச் சேகரித்த பலபல பேரறிவாளர்களையும் இனித் தூஷிக்கவே தலைப்படுவர் முதலியார்.

20. ஈண்டு ஒரு நுட்பம் தெரிவிக்கத்தக்கதுண்டு. மேலெடுத்த திருமாலைப்பாசுரத்தில் அணிலும் என்று பாடமா? அணிலம் என்று பாடமா? என்பதோர் ஆராய்ச்சி. முதலியார் எழுதுகிறார் (பக்கம் 3ல்.) “வணிலம் போலேன் என்பது பழைய புத்தகங்களில் உள்ள பாடம்; வணிலும் போலேன் என்பது திவ்யார்த்ததீபிகையுரை நூலுள் உள்ளபாடம்” என்று. இது மருள். பழையபுத்தகங்களிலும் “அணிலும்” என்றேயுள்ளது. அணிலம் என்று சிலபுத்தகங்களிற் காண்பதுமுண்டு. 1884 ஆம் ஆண்டில் திருவல்லிக்கேணி ஸரஸ்வதீபாண்டார அச்சுக்கூடத்தில் பூர்வாசார்ய வியாக்கியானத்தோடு பதிப்பித்த திருமாலையில் “அணிலும் போலேன்” என்றே பதிப்புள்ளது. உம்மைப் பொருளும் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்திலுள்ளது. சில மூலப்பதிப்புகளில் ‘அணிலம் போலேன்’ என்றுள்ளதனால் அதைக் கண்டே லெக்ஸிகன் கோசப்பதிப்பாளர்கள் ‘அணிலம்’ என்றிட்டனர். கதவு—கதவம், புறவு—புறவம், முன்—முன்னம் இவை போலே அணில்—அணிலம் என இரண்டுமுண்டென்று லெக்ஸிகன் கொண்டது. “அணிலும் போலேன்” என்கிற பாடமே உபதேச பரம்பரையிலும பலபதிப்புகளிலுமுள்ளது. தீபிகையுரையிற் கொள்ளப்பட்ட பாடமுமிதுவே யாயிருக்க, அணில் என்கிற சொல்வடிவமுண்டேயல்லது அணிலம் என்கிற சொல்வடிவம் கிடையாது என்றெழுதச் சிரமங்கொண்டது அவசியமற்றதேயாகும். ஆழ்வார் கொண்ட பாடமும் உரையாசிரியர்கள் கொண்டபாடமும் ‘அணிலும் என்பதேயாதலால்.

21. ஆனாலும் அணிற்பிள்ளைக்கு வாசகமாக ‘அணிலம்’ என்னுஞ் சொல்வடிவமும் தட்டுத் தடையின்றியுண்டென்பதை உயர்ந்த பிரமாணங் காட்டிவிளக்கினோம். திருமாலைப் பாசுரத்தில் அணிலைப் பற்றின பேச்சே கிடையாதென்றும், பிழையான பாடங் கொண்டதனால் வந்து புகுந்த கதையே அது என்றும் வலிதாக எழுதுகின்ற முதலியார், ‘அணில் வரலாறு வடமொழி யிராமாயணங்களுள் ஒன்றிலு மில்லாதது, கம்பராமாயணத்

திலுமில்லாதது, அது நடவாத வரலாறு' என்று பலவு மெழுதுகின்றார். இங்கு நாம் விரிவுக்குஅஞ்சாது விளம்புகின்றோம். வடமொழி நூல்களைக் கனவிலுங் கண்டறியாதார் வடமொழி யிராமாயணங்களுள் ஒன்றிலு மில்லை யென்றெழுதுவது பொருளுடையதோ? கம்பராமாயணத்திலுமில்லை யென்கிறாரே; கம்பர் கூறியிருக்கும் வரலாறுகளெல்லாம் வடமொழிப் புராணங்களிலுள்ளனவோ? கம்பர் இராமாயண மெழுதத் தொடங்கும் போது "தேவபாடையினிக்கதை செய்தவர், மூவரானவர்தம்முளுமுந்திய, நாவினாருரை யின்படி நான் தமிழ்ப், பாவினாலிதுணர்த்திய பண்பரோ." (10) என்றார். அதாவது— நான் தமிழ்ப்பாவினால் இவ்விராமாயணத்தைச் செய்ததானது, வடமொழியிலே இக் கதையையருளிச் செய்த முனிவர் மூவருள்ளும் முதன்மை பெற்ற வான்மீகி முனிவர் உரைத்துள்ள வகையாகவேயாம் என்றவாறு. வான்மீகி ராமாயணத்தைத் தழுவியே நான் இவ்விராமாயண மெழுதுகின்றேனென்று கூறின அவர் வான்மீகத்திற் காணப்படாத வையும் காணப்படுங்கதைகளுக்கு மாறானவையுமான பல நூறு விஷயங்களை அவ்விராமா யணத்தில் அமைத்துள்ளாரென்பது அனைவருமறிந்தது. சிலவரலாறுகட்கு மாத்திரம் பிறபுராணங்களில் ஆதாரங் கிடைக்கின்றது. பல வரலாறுகட்கு ஓர் ஆதாரமும் புலப் படவில்லை. அதனாலென்ன? கம்பர் கூறினகதைகளெல்லாம் பிராமாணிகங்கள் என் றாவது, கம்பர் கூறாத கதைகள் அப்ராமாணிகங்கள் என்றாவது கொள்வார் யாருமிலர். 'உலகம் போற்ற நின்ற பெரியார்கள் கூறுங்கதைகள் கற்பனையாக இருக்கமாட்டா, தக்க ஆதாரத்தோடு கூடியே யிருக்கும்' என்னும் நம்பிக்கை ஆஸ்திகர்கட்குப் பொதுவாக வுள்ளது. இதிஹாஸ புராணங்களை யெல்லாம் ஆராய்ச்சி செய்யுமாற்றல் பெற்றோர் யாரு மிலராதலால் 'இது புராணத்தில் கண்டகதை, இது காணாதகதை' என்று வகுத்துக்கூற வல்லமை யார்க்குமில்லை.

22. மருளே வடிவெடுத்த முதலியாரது மதியில் மிகப்பிரசித்தமான புராண வரலா றும் தெரிகின்றதில்லையே. இதைச் சிறிது விவரிப்போம். நாச்சியார் திருமொழியில் முதற் பாட்டில் "அனங்கதேவா! உன்னையு மும்பியையும் தொழுதேன்" என்று ஆண்டாள் அருளியது. இங்குப் பாடப்பழிப்பும் பொருட் பழிப்பும் கூறவந்த முதலியார், பண்டி தர்கள் கண் கொண்டு காணத்தகாதவையும் வாய்கொண்டு அநுவதிக்கத் தகாதவையுமான வற்றை எழுதியுள்ளார். காமனையும் அவனது தம்பியான வொருவனையும் தொழுவதாக ஆண்டாள் இங்குக் கூறியுள்ளாள். "காமன் தம்பி சாமன்" என்றுள்ள பூருவாசாரிய வியாக்கியான ஸ்ரீ ஸூக்தியைக் கண்டு, இது தப்புப்பாடத்தை ஆதாரமாகக் கொண்ட போலிப் பொருளென்று பழித்திட்டு, இப்படியொரு புராணவரலாறு கிடையவே கிடை யாதென்று முழுதுணர்ந்த முதுசூரவர்போல ஆரவாரிக்கின்றார். ஸ்ரீ ஸ்வாமியால் இவ்வர லாறு புராணாதாரங்கொண்டு பரக்க நிரூபிக்கப்பட்டிருந்தும் காணக் கண்ணிலாதாராயினர். திவ்யப் பிரபந்தங்களில் "காமர்தாதை, காமவேள்தாதை, காமன்றன்தாதை" என்றிப்படி பலகாலும் அருளிச் செய்யப்பட்டுள்ளது. "காமன் தனக்கு முறையல்லேன் கடல் வண்ணனார் மாமணவாளர் எனக்குத்தானும் மகன் சொல்லில்" [பெரிய திருமொழி 11—2—7.] என்று திருமங்கையாழ்வார் விசேஷித்து மருளிச்செய்கிறார். பகவான் கண்ணபிரானாகத் தோன்றினவிடத்து ப்ரத்யும்நன் என்கிற புதல்வனொருவன் மன்மதனது அம்சமாகத் தோன்றினன். இதுபற்றியே கண்ணன் காமன்றன் தாதையாயினன். ஸாம்ப னென்பவன் அக்காமனுக்குத் தம்பியாகத் தோன்றி யிருந்தனன். இது ஸ்ரீபாகவதம் தசமஸ்கந்தம்—அறுபத்தோராவது அத்யாயம் இருபத்தோராவது சுலோகத்திலே ஐயந்திரிபற விளங்கும். வடமொழியில் ஸாம்பனே தென்மொழியில் சாமனாயினன்.

இலக்கணவினுவிடை படித்தார்க்கும் இஃது உடன்பாடாம். இந்த விவரணங்கள் இப்போதாக நாம் புதிதாகக் காட்டுமவையல்ல; ஸ்ரீ அண்ணங்கராசார்ய ஸ்வாமியின் உரையிலே விசதம். ஸ்ரீஸ்வாமியின் உரைப்புத்தகங்கள் யாவும் முதலியார்க்குக் கிடைத்தில; ஒன்றிரண்டு புத்தகங்களையே, அதிலும் முதற்பதிப்பான சுருக்கவுரைகளையே பார்த்து விட்டு சிந்திக்க வெழுந்து விட்டார்.

23. பரத்வாஜ ரென்னும் மாமுனிவர் முந்நூறு வயது வரம் பெற்று வேத மோதினதாகக் காண்கிறோம். அங்ஙனே பல நூற்றுக் கணக்கான வயதுகள் வரம் பெற்றன்றோ ஸ்ரீஸ்வாமியின் நூல்களை யெல்லாம் முற்றமுடியக் காணவேணுமொருவர். அவையனைத்தையுங் கண்டாராகில் இன்னமும் பொறுமை விஞ்சிப் பாரதம் பாரதமாகப் பழி நூல்களையெழுதிக் கொண்டிருக்கலாமே. ஏதோவொரு வியாஜத்தினால் ஸ்ரீஸ்வாமியின் ஸ்ரீஸூக்திக் கடலில் இரவும் பகலும் அவகாஹிக்கப் பாக்கியம் பெற்றாரவரே. விரிவாகக் காண்பதெல்லாம் விரிவான நிந்தனைக்கே உறுப்பா மெனினும் "ஏசினாருய்ந்து போனார்" என்கிற திருமங்கையாழ்வார் திருவாக்கின்படியே ஸ்ரீஸ்வாமியின் அருமருந்தான திவ்ய ஸூக்திகளை, பொருள் தெரிந்தோ தெரியாமலோ ஓரெழுத்து விடாமல் பூர்த்தியாகப் பார்ப்பதென்பது தனிப்பட்டதொரு ஸுக்ருதமென்று நாற்றிசையிலுமுள்ள நல்லறிவாளர் கல்வெட்டுப்போல் பொறித்திருப்பதனால் இங்கு இவ்வளவெழுத நேர்ந்தது. இது நிற்க.

24. முதலியாரது சுவடியில் ஒரு விசேடமுண்டு; நூலாராய்ச்சியற்ற மிகப்புல்லிய அறிவாளரை மயக்கும் சரக்குடைமையேயது. ஒன்றே காட்டுவோமிங்கு. இமையவர் என்னுஞ் சொல்லுக்குக் கண் இமையாதவர் என்று திவ்யார்த்த தீபிகையுரையில் பொருள் எழுதப்பட்டுளதாம். இது அனியாயமான பொருளாம். இமையவர் என்னும் உடன்பாட்டுப்பெயர்க்கு இமையாதவர் என விபரீதப் பொருளை யெழுதிவைத்தவர் திரிபுணர்ச்சியை யுடையவரே என்று (பக்கம் 170, 171ல்) நிந்தைகளை நிறைத்து எழுதியுள்ளார் முதலியார். இதைப் பார்க்கும் பாமரர்கள் 'ஆமாம், ஆமாம், இவ்வளவு தவறாக எழுதுபவரல்லவா அண்ணங்கராசாரியர்!' என்று ஆனந்தக்கூத்தடிக்க நேரும். ஸ்ரீஸ்வாமியின் உரைநூல்களனைத்தையும் ஆதியோடந்தமாகப் படித்து அவற்றிலுள்ள மணித்திரள்களை மனதில் தேக்கிக்கொண்டிருக்கும் பாக்கியமுடையார் ஒருபோதும் நிலை கலங்கார். இமையவர் என்பதற்கு இமைத்தலில் விசேஷமுடையவர்கள் என்பது உண்மைப்பொருள். இமை—கண்ணிமைத்தல்; அதுதன்னில் விசேஷமுடையவர் இமையவர். இலமையா நாட்டம் பெற்றிருத்தலேயாமது. அருந்தமிழறிந்த அறிவிற் சிறந்த பெரியார் இங்ஙனம் எழுதியிருத்தலை மேற்கோளாகக் காட்டி விரியவுரைத்திருக்கின்றது திவ்யார்த்ததீபிகையுரை. இமை—விளக்கம்; அதனையுடையவர் இமையவர் என்னும் பொருள் இச்சீரிய பொருளை மறுக்க வல்லதன்று. ஒரு சொல்லுக்குப் பல வழியிலுமுரைப்பர் பெரியோர். கடலின் பெயரான முந்நீர் என்னுஞ் சொல்லுக்கு வெவ்வேறு வழிகளுரைக்கக் காண்கிறோம். முந்நீர் என்பது தவறு, முன்னீர் என்னவேணு மென்பாருமுளர். கற்றறிந்த பெரியாரிடத்து. இங்ஙனே கருத்து வேற்றுமைகள் பலபலவுள. இராமநாதபுரம் சேதுபதி ஸம்ஸ்தான மஹா வித்வான் ரா. ராகவையங்கார், சாமிநாதய்யர் போல்வாரான பெரியார் போற்றும் பல்வகையாராய்ச்சிகள் பொலிந்த திவ்யார்த்த தீபிகையுரையின் பெருமை பரவுதற்கே ஏதுவாம் முதலியாரது சுவடி.

25. சிலவாண்டுகட்கு முன்பு ஸ்ரீமத். மு. இராகவையங்கார் சுவாமிகள் அருளிச்செயற் பாடவமைதி யென்னும் கட்டுரையை வெளியிட்டு நம் ஸ்வாமிகளின் விரிவான பதிலுரைகளை அம்ருத லஹரீ பத்திரிகை மூலமாகப் பெற்றுப் பல வுண்மைகளை யுணர்ந்து

உவந்தாரென்பதை உலகமறியும். அந்த ராகவையங்கார் சுவாமிகளுக்குப் பிரதிநிதியாக இப்போது இம் முதலியார் தாம் கிளம்பி யிருப்பதாகக் காட்டிக் கொள்ளுகிறார் தமது சுவடியில். (பக்கம் 199 முதலியவற்றில்.) அந்த ராகவையங்கார் முதன் முதலாகக் காட்டிய ஆராய்ச்சி—திருமழிசை யாழ்வாருடைய நான் முகன் திருவந்தாதியில் * தரித் திருந்தேனுகவே தாராகணப் போர் * என்னும் பாசுரத்தில் பெரிய வாச்சான் பிள்ளை யுகந்த பாடத்தையும் பொருளையும் மாறுபடுத்தித் தோன்றியது. அதற்கு நம் ஸ்வாமிகள் மிகத் தெளிவும் விரிவு முள்ள பதிலை யெழுதித் தீபிகை யுரையிலே வெளியிட்டும் தனிப் புத்தகங்களாக வெளியிட்டும் உலகுக்குப் பேருதவி செய்தருளினர். அது கண்ட ராகவையங்காரவர்களுக்கு ஸ்வாமி யிடத்தில் பக்திப் பெருஞ் செல்வமே தலையெடுத்தது. அந்த ஸ்வாமி இற்றைக்கும் இந் நிலவுலகில் பாங்காக எழுந்தருளி யிருப்பவர். அவர் தனிப்பட எழுதும் நூல்களிலும் நம் ஸ்வாமியைப் பற்றிப் பெரு மகிழ்ச்சி பொங்கியே எழுதுபவர். "செந்தமிழும் வடமொழியும் திகழ்ந்த நாவினரான அண்ணங்கரா சாரியர் ஸ்வாமி" என்று அவர் தங்கையா லெழுதிச் செந்தமிழில் வெளியிட்டதுண்டே. பாடங்களையும் பொருள்களையும் பற்றி ஸ்வாமியோடு அவர் வாதம் நிகழ்த்திய காலத்தும் "அண்ணங்கரா சாரியர் ஸ்வாமி அருமையாகக் கண்ட பாடங்களும் அர்த்தங்களும் சிறிதும் விருத்தமானவையல்ல; பாடத்தாலும் பொருளாலும் சீரியவைகளே" என்றெழுதிப் பிரசுரித்திருப்பதை முதலியாரும் கண்டிருப்பவரே. அன்ன சிறப்புரைகளையே நிச்சலுங் கண்டுகளிப்பெய்துவதே இவர் தமக்குற்றது.

T. N. C. திருவேங்கடாசாரியர், காஞ்சீபுரம்.

எழுதிய

**திவ்யார்த்த தீபிகைச் சிறப்பு**

முற்றிற்று.

ஸ்ரீராமாநுஜனில் இவ்விஷய சர்ச்சை இவ்வளவோடு முடிக்கப் பட்டது.

மேலே கண்ட கட்டுரையில் பல பாகங்களை அவகாசக்குறைவினல் அச்சிடாது நிறுத்திக் கொண்டோம்.

பத்ராதிபர்.